# மகாத்மா காந்தி

## நூல்கள்

### ஆறும் தொகுப்பு





ஏழையென்றும் அடிமையென்றும் எவனும் இல்லை ஜாதியில்,
இழிவுகொண்ட மனிதரென்பது இந்தியாவில் இல்லையே
வாழி கல்வி செல்வம் எய்தி மனமகிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒரு நிகர் சமானமாக வாழ்வமே!

—மகாகவி பாரதியார்.

# மகாத்மா காந்தி நூல்கள்

## 6

செல்வத்திற்கும் உழைப்புக்கும், முதலாளி-தொழிலாளருக்கும் இருக்கவேண்டிய சரியான உறவைக் குறித்தும், வேலை நிறுத்தங்கள், முதலாளிகளின் கடமை, தொழிலாளரின் பொறுப்பு, தொழில் உறவுக்கு இருக்கவேண்டிய முக்கியமான அம்சங்கள் ஆகியவற்றைக் குறித்தும் மகாத்மா கூறியிருப்பவைகளையெல்லாம் திரட்டிக் கொடுக்கும் தொகுப்பு இந்நூல்.

வெளியிடுவோர்:

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[ தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் ]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2

# பொருளாதார உறவு

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம்:

முதல் பாகம்:
ந. ராமரத்தினம்

இரண்டாம் பாகம்:
கு. அழகிரிசாமி

மூன்றும் பாகம்:
ரா. வேங்கடராஜுலு

# பதிப்புரை

இதற்கு முன் வந்த தொகுப்புகள் 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்', 'அகிம்சைத் தத்துவம்', 'சத்திய சோதனை', 'ஆரோக்கிய வாழ்வு', 'கதரும் கைத்தொழி லும்' முதலியன பற்றி இருந்தன. தற்காலத்திய சமூகத் தில் கைத்தொழில்கள் ஆலை முறையில் விரிவடைந்து கொண்டிருக்கும்போது, பொருளாதார அடிப்படையில் மக்களுக்குள் ஏற்படும் உறவு எல்லா விதங்களிலும் முக்கியமானதாக இருக்கிறது. எனவே, நம் ஆறும் தொகுப்பு இதைப் பற்றி இருப்பது பயனுள்ளதாக இருக்கும் என்று கருதப்பட்டது.

முதலாளிகள்-தொழிலாளிகள், இவர்களுக்கிடையே இருக்க வேண்டிய உறவு, அவர்களுடைய உரிமைகள், கடமைகள், விவசாயிகளின் நிலைமை, நிலச்சுவான்தார் களின் பொறுப்பு, பணக்காரர்கள் தங்கள் செல்வத்தை எங்ஙனம் வைத்திருந்து பயன்படுத்த வேண்டும்-இவை போன்ற விஷயங்கள் அடங்கியுள்ளது, இத்தொகுதி. ஸ்ரீ வி. பி. கேர் ஆங்கிலத்தில் 'பொருளாதார வாழ்வும் உறவும்' என்ற தலைப்பில் தொகுத்து, நவஜீவன் டிரஸ்டி னால் வெளியிடப்பட்டிருக்கும் நூலே இத்தொகுப்பிற்கு அடிப்படையாக இருந்திருக்கிறது. ஸ்ரீ கேர் தம் புத்த கத்தில், மகாத்மாவின் கருத்துக்களை அவர் வார்த்தை களிலேயே விளக்கி நல்ல முகவுரையொன்றும் எழுதி யிருக்கிறார். அம்முகவுரையும் இப்புத்தகத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருப்பது, வாசகர்களுக்குக் காந்தி அடி களின் கருத்துக்களை அறிந்துகொள்ளப் பெரிதும் பயன் படுமென்று நம்புகிறோம்.

'கடையனுக்கும் கதி மோட்சம்' என்று ஸ்ரீ ரஸ்கின் அவர்கள் எழுதிய நூலுக்கு தாம் மிகவும் கடமைப்பட்

டிருப்பதாகக் காந்தி அடிகள் கூறியிருப்பதை நண்பர்கள் அறிவார்கள். எனவே, அந்நூலும் இத்தொகுப்பின் பின்சேர்க்கையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் மகாத்மாவுக்கும் சோஷலிஸ்டுகளுக்கும் நடந்த விவாதத்தைப் பற்றி ஸ்ரீ பியாரிலால் கொடுத்திருக்கும் குறிப்புக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இதுவரை காட்டிய பேரன்பை, தமிழ் மக்கள் இதற்கும் காட்டி வரவேற்பார்கள் என்று நம்புகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்,<br>கோவை,<br>26—9—1960

தி. சு. அவினாசிலிங்கம்

# பொருளடக்கம்

## முதற்பாகம்

### பகுதி ஒன்று

### சுயராஜ்யம், சோஷலிஸம், கம்யூனிஸம்

## பகுதி இரண்டு

### உழைத்துச் சாப்பிடுவது



## பகுதி மூன்று

### பொருளாதார சமத்துவம்

பகுதி நான்கு

## தருமகர்த்தாத்தனம்



## இரண்டாம் பாகம்

பகுதி ஒன்று

## தொழில் மயமாவதும் யந்திரங்களும்

## பகுதி இரண்டு

## சுதேசி



## பகுதி மூன்று

## உற்பத்தி முறையின் அமைப்பு

## மூன்றும் பாகம்

### பகுதி ஒன்று

### வேலை, வாழ்க்கை நிலைகள்

பகுதி இரண்டு

## கூலியைப்பற்றிய பிரச்னை



பகுதி மூன்று

## தொழிலாளர், விவசாயிகள் சங்கங்கள்



பகுதி நான்கு

## மறக்கமுடியாத வேலை நிறுத்தம்

## பகுதி ஐந்து

### வேலைநிறுத்தங்களும் மறியலும்



## பகுதி ஆறு

### விவசாயிகளும் ஜமீன்தார்களும்



## பகுதி ஏழு

### தொழில் தகராறில் அமைதியான புரட்சி

## பின்சேர்க்கைப் பகுதி



## "கடையனுக்கும் கதிமோட்சம்"

# முன்னுரை

"இறுதியாகக் கூறுமிடத்து, மற்றொரு காரணத்தை முன்னிட்டும், ஒரு பெரிய சரித்திர புருடராக மகாத்மா காந்தியின் பெயர் நிலைத்திருக்கும் என்று நான் உறுதியாக நம்பு கிறேன். அதாவது, இரண்டு வெவ்வேறான யுகங்களுக்கிடையே யுள்ள தலைவாசலில் அவர் சரியானபடி நின்றுகொண்டிருக் கிறார். ஒரு புறத்தில் பார்த்தால், இந்திய சம்பிரதாயங்களின் படி காந்திஜி ஓர் அவதார புருடராக விளங்குகிறார். ஆனால், மற்றொரு புறத்திலோ, அவர் இந்தக் காலத்திற்கே உரித்தான மக்கள் தலைவராகவும் விளங்குகிறார். அந்த வகையில் சரித்திர பூர்வமான அவருடைய நிலை, ஜான் பாப்டிஸ்டின் நிலையைப் போன்றது போல் தோன்றுகிறது. மனிதனின் எதிர்காலத் தைப் பற்றி நான் அடிக்கடி குறிப்பிட்டுள்ள நிலைமையில், ஒரே அம்சத்தை மாத்திரம் கொண்ட வெறும் மகான்களுக்கு, அவர்கள் இதற்கு முன்னால் செய்து வந்த காரியங்களுக்கு அதில் இடமில்லாமலிருக்கலாம். பழையதும், புதியதும் இணைந்த ஒரு புதிய சேர்க்கையே எதிர்காலத்திற்கான முக்கிய தேவையாக இருக்கலாம். புது யுகத்தின் மனிதர்கள், ஆன்மிக மும் லோகாயதமும் சரி சமமாகக் கொண்ட முழு மனிதர்களாக இருப்பார்கள். ஆனால், இந்தப் புது மனிதர்கள் தோன்றுவ தற்கு, அந்தத் தலைவாசலில் நிற்கும் அப்பெரியாரைப் போல் அவ்வளவு சேவை செய்தவர்கள் வேறு யாருமே இருக்கமாட் டார்கள். அந்தப் பெரியாரின் பெயர்தான் காந்தி."*

—கவுண்ட் ஹெர்மன் கைஸர்லிங்.

காந்தி, யாருமே எளிதில் புரிந்துகொள்ள முடியாத ஒரு புதிர். ஒரு மகான், மக்களின் தலைவர் ஆகிய இருவரிடமும் உள்ள தன்மைகளும் அவரிடம் அமைந்திருந்தன. இத்தகைய சேர்க்கை சாத்தியமா என்பது நம்ப முடியாததாக இருக்கும். ஆனால், அதுதான் காந்திஜியின் விசேஷத் தன்மை! மதங்களைப் பற்றிய சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தால், ஆன்மிக சம்பந்த மான மதிப்புக்கள் சாதாரணமாகச் சன்யாசிகளிடமே இருக் திருக்கின்றன. மதம், விவகாரம் இரண்டும் பரஸ்பரம் ஒன்றுக் கொன்று சம்பந்தமில்லாத இரு தனித்தனித் துறைகள் என்பதே பாரம்பரியமாக இருந்து வந்துள்ள நம்பிக்கையாகும். மனித வாழ்க்கையின் ஜீவனை இந்த அம்சங்கள், இயற்கையாகவே

* 'மகாத்மா காந்தி—அவருடைய வாழ்க்கையையும், வேலைகளையும் பற்றிய கட்டுரை களும், சிந்தனைகளும்' என்ற பெயருடன் வெளியான தொகுப்பு நூல். ஆசிரியர் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் (ஜார்ஜ் அல்லன் & அன்வின்) பக்கம் - 160.

தனித்தனியானவை அல்ல; இவற்றை நாமாகத்தான் பிரித்து வைத்திருந்தோம். சரித்திரத்திலேயே காந்திஜிதான் முதன் முதலாக இந்தப் பிரிவினையை எதிர்த்தவர் என்று சொல்லலாம். மனிதனின் சாதாரண அன்றாட வாழ்க்கையில் ஆன்மிக மதிப்பீடுகளை அவர் புகுத்தினார். அறிவிற் சிறந்தவரும், பெரிய தலைவருமான லோகமான்ய திலகரே பழைய சம்பிரதாயக் கருத்துக்களை விடாமல் பற்றியிருந்தாரென்றால், அவை மறைவது எவ்வளவு கஷ்டம் என்பதை அதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். சமூகத்தில் இந்த வியாதி ஆழ்ந்து வேரூன்றியிருப்பதுபோல் தோன்றுகிறது. பகுத்தறிவுக்குப் புறம்பானதும், ஆதாரமற்றதுமான இந்த நம்பிக்கையை எதிர்த்துக் காந்திஜி போராடினார். "ராஜீயம் என்பது சாதாரண மனிதர்களின் விஷயம். இதில் சாதுக்களுக்கு இடமில்லை" என்று லோகமான்ய திலகர் கூறியதைப் பற்றிக் காந்திஜி பின்வருமாறு எழுதினார்:

"லோகமான்யரிடம் எனக்கு அதிக மரியாதை உண்டு. ஆயினும், உலகத்தில் சாதுக்களுக்கு இடமில்லை என்று நினைப்பது சிந்தனையின் சோம்பேறித்தனத்தையே காட்டுகிறது என்று கருதுகிறேன். புருஷார்த்தத்தை எய்துவதுதான் எல்லா மதங்களின் இறுதியான லட்சியமாகும். புருஷார்த்தம் என்பது சாதுவாவதற்கு வேறு வகையில்லாத ஒரு கடைசி முயற்சியே தவிர வேறொன்றுமில்லை. அதாவது, முற்றிலும் கண்ணியமுள்ள ஒரு கனவானாவது தான் அது. "ராஜீயத்தில் எல்லாம் நியாயம்தான்" என்பது பற்றி நான் எழுதினேனல்லவா? அதை நான் எழுதியபோது, அடிக்கடி அவர் குறிப்பிடும் "போக்கிரிக்குப் போக்கிரியின் வழியிலேயே திருப்பி பதில் சொல்ல வேண்டும்" என்பதை நான் மனத்தில் வைத்துக்கொண்டுதான் எழுதினேன். அது தவறான தருமமாகவே எனக்குத் தெளிவாகத் தோன்றுகிறது. லோகமான்யர் நல்ல அறிவாற்றலுள்ளவர். ஆகவே இந்தத் தத்துவம் எவ்வளவு தவறானது என்பதைத் தர்க்கரீதியாக ஒரு நாள் அவர் நிரூபிக்காமல் போக மாட்டார் என்றே நான் நம்புகிறேன். எப்படியானாலும், போக்கிரிக்குப் போக்கிரி வழி சரியல்ல என்பது என்னுடைய முப்பது வருட அனுபவம். போக்கிரியிடமும் சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதே உண்மையான நியதி."*

அனுபவ லட்சியவாதி: மேலே கூறியவற்றிலிருந்து காந்திஜி வீண் கனவு காண்பவர் என்ற எண்ணம் வாசகருக்கு ஏற்பட்டால், அது முற்றிலும் தவறானது. காந்திஜி, வீண் கனவு காண்

---

* "எங் இந்தியா' - 28—1—1920: போக்கிரிக்குப் போக்கிரியின் வழியிலேயே திருப்பிப் பதில் சொல்ல வேண்டுமென்பதைக் காந்திஜி ஒப்புக்கொள்ளவில்லை. போக்கிரியினிடமும் கூட சத்தியத்தையே கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார்.

நிர்வாண நிலையை எய்திய புத்தரும் தம்மபாதாவில் இதே கருத்தை வெளியிடுகிறார்: "வெறுப்பின் மூலம் வெறுப்பைப் போக்க முடியாது; அன்பின் மூலம்தான் வெறுப்பு மாறும். இது நிரந்தரமான சட்டம். அன்பின் மூலம் வெறுப்பையும், நன்மையின் மூலம் தீமையையும், தாராளத்தின் மூலம் பேராசையையும், உண்மையின் மூலம் பொய்யையும் சமாளிக்க வேண்டும்."

பவரல்ல. அவர் தம்மை அனுபவ சாத்தியமான லட்சியவாதி என்றே சொல்லிக்கொண்டார்.*

அறியாமையின் காரணமாகப் பொதுவாகக் காந்திஜியின் கருத்துக்களுக்குப் பெரிய அநீதி இழைக்கப்படுகிறது. பற்பல விஷயங்களைப் பற்றியும் காந்திஜியின் அபிப்பிராயங்கள் என்ன என்று நம்மில் பலருக்கு நிச்சயமாகத் தெரியாது. சாதாரண மனிதர்களுக்குத்தான் இந்த அறியாமை இருக்கிறது என்பதில்லை; கற்றறிந்தவர்களிடையேயும் இந்த அறியாமை காணப்படுகிறது. அவருடைய உபதேசங்களை முறைப்படி பரிசீலனை செய்யாததே இந்த நிலைமைக்குக் காரணமாகும் என்று சொல்லலாம்.

**அவருடைய உபதேசங்களை ஆராய்வது எப்படி ? :** காந்திஜியின் உபதேசங்களை முறைப்படி ஆராய்ச்சி செய்ய வேண்டுமானால், அவர் பேசியவைகளையும், எழுதியவைகளையும் தேதி வாரி வரிசைக் கிரமமாகத் தொகுத்துக்கொண்டு, எந்தச் சந்தர்ப்பத்தில் அவர் அந்தக் கருத்துக்களைத் தெரிவித்தார் என்று பரிசீலனை செய்வதுதான் அதற்குச் சிறந்த வழியாகும். அப்போது அவருடைய ஒவ்வொரு கருத்தையும் ஏற்ற கண்ணோட்டத்துடன் பார்க்க முடியும். இந்த முறையைப் பின்பற்றி ஆராய்வதானால், ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிப் பல ஆண்டுகளுக்கிடையே அவருடைய கருத்துக்கள் எவ்விதம் மாறி வந்திருக்கின்றன என்பதையும் கண்டறிய முடியும். சில விஷயங்களில் அவருடைய கருத்துக்களில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படவே இல்லை என்பதையும் நாம் காணலாம். அதே சமயத்தில், சில வார்த்தைகளின் வியாக்கியானம் அவருக்கு மாறியிருக்கும். ஆயினும், அவருடைய அடிப்படை நம்பிக்கைகள் பெரும்பாலும் மாறுதலில்லாமல் அப்படியே இருந்திருக்கின்றன என்பதையும் நாம் காண முடியும்.

காந்திஜியைப் போன்ற எந்தப் பெரிய மகானின் உபதேசங்களிலும் இரு அம்சங்களைக் காணலாம். அதாவது, ஒன்று மனித வர்க்கத்திற்கே பொதுவான நிரந்தர அம்சம். மற்றொன்று, அந்தக் காலத்திலிருந்த விசேஷ சூழ்நிலையைப் பற்றியது. இந்த உபதேசங்களில் நிரந்தரமானது, நிரந்தரமல்லாதது ஆகிய இரு தன்மைகளையும் நாம் தனித்தனியாக வைக்க முயற்சிக்க வேண்டும். அவற்றின் முக்கியத்தின் தாரதம்மியத்தைச் சரியானபடி கண்டறிவதற்கு இது அவசியம். நிரந்தரமானது, தாற்காலிகமானது என்ற இந்த இரு அம்சங்களும், முக்கியமாக இருபதாவது நூற்றாண்டில் இந்தியாவின் நிலைமை பற்றிய காந்திஜியின் பொருளாதாரக் கருத்துக்கள் கவனிக்கப்படும்போது பின்னர் விரிவாக விவாதிக்கப்படும்.

**அவருடைய லட்சியத்தின் முக்கிய ஊற்றுக்கள் :** இங்கே அவருடைய லட்சியத்தின் தன்மையைப் பற்றி ஆராய்வோம். மதம்

* 'யங் இந்தியா' - 11—8—1920.

பற்றிய அவருடைய கருத்துக்களாயிருந்தாலும், அல்லது சமூக, அரசியல், பொருளாதாரத் துறைகளில் அவருடைய லட்சியமாயிருந்தாலும், எல்லாவற்றிற்குமே பொதுவான சில கொள்கைகளை அவற்றில் காண்கிறோம். சுருக்கக் கூறின் அத்தத்துவங்கள் பின்வருமாறு :

கணித சாஸ்திரத்தில் உள்ள யுக்ளிட் புள்ளியை மனிதனால் வரைந்து காட்ட முடியாது. அதே போன்றதே லட்சியமும். அதை ஒரு பூரணமான அம்சமாக எடுத்துக்கொண்டால் அது கற்பனையில் தோன்றக்கூடிய ஒன்றாகத்தான் இருக்க முடியும். அதை அடைய முடியாது. இதே கருத்து ஓர் ஆங்கிலக் கவிதையிலும் வருமாறு எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது :

" தனக்கு எட்டாததையும் மனிதன் எட்டிப் பிடிக்கவேண்டும்-
இல்லையேல் சுவர்க்கம் எதற்காக ? "

லட்சியத்தை நிர்ணயித்துக்கொண்ட பிறகு, நமது சக்திக்கு எட்டிய வரையில் அதைச் செயலில் கொண்டு வருவது நமது முக்கியமான கடமையாகும். லட்சியத்தை அடைந்துவிட முடியாது என்பதற்காக, முயற்சிகளையும் நாம் செய்யாமலிருக்க வேண்டுமா ? வழியில் எவ்வளவோ கஷ்டங்களிருக்கலாம். ஆனால், மனிதத் தன்மையுடன் நாம் முயற்சி செய்ய வேண்டும். அதுதான் புருஷார்த்தம். முயற்சியில்தான் திருப்தி இருக்கிறதேயொழிய சித்தியில் அல்ல. "ஓர் இடத்திற்குப் போய்ச்சேர்ந்து விடுவதைவிட அங்கே போகப்போகிறோம் என்ற நம்பிக்கையுடன் பிரயாணம் செய்துகொண்டிருப்பது நல்லது." அதற்கான உபாயங்களையும், அவற்றைப் படிப்படியாக உபயோகிப்பதையும், பேணுவதையே முக்கியமாகக் கருத வேண்டும். லட்சியத்தை நோக்கி நாம் முன்னேற்றமடைவது, அதற்காக நாம் கையாளும் மார்க்கங்களின் புனிதத்தைப் பொறுத்த அளவில்தான் இருக்கும். இந்த வழி மிகவும் நீண்டதுபோல் தோன்றினாலும் இதுதான் சுருக்கமான வழி.

லட்சியம் எல்லையற்ற ஒன்றாகும். ஆகையால், நாம் அதை நெருங்க நெருங்க அது பின்தள்ளிப் போவதுபோல் தோன்றுகிறது. ஆனால், இரவில் அதிக இருண்ட நேரத்தை அடுத்தே பொழுது புலர்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நாம் சரியான முயற்சிகளைச் செய்தால் நமது லட்சியப் பாதையில் நீண்ட தூரம் சென்றுவிட்டவர்களாவோம். அந்த முன்னேற்றம் உண்மையானதாகவும் இருக்கும்.

**மனித இயல்பிலுள்ள குறைபாடுகள் :** லட்சியத்தை உறுதியாகப் பற்றிக்கொள்ள வேண்டுமென்று காந்திஜி நமக்குக் கூறும்போது, மனித இயல்புக்கு உள்ள குறைபாடுகள் முழுவதையும் அறிந்துகொண்டுதான் அப்படிக் கூறுகிறாரா ? அல்லது மனித இயற்கையைப் பற்றித் தவறான கருத்துக்களையே நம்பிக்கொண்

டிருக்கிறாரா? அவர் கூறியிருக்கும் பின்கண்ட வாக்கியங்களில் அவருடைய நிலை சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது :

"நான் பல சமயங்களில் ஏமாந்து போயிருக்கிறேன் என்பது உண்மையே. பலர் என்னை ஏமாற்றியிருக்கிறார்கள்; அநேகர் நான் எதிர்பார்த்தபடி இல்லை. ஆனால், அதற்காக அவர்களுடன் நான் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தது பற்றி வருத்தப்படவில்லை. ஏனெனில், எனக்கு ஒத்துழைக்கத் தெரிவது போலவே, ஒத்துழையாமை செய்யவும் தெரியும். ஒரு மனிதன் சொல்லுவது உண்மையல்ல என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுவதற்கு இடமிருந்தாலொழிய, அவன் சொல்லுவதை நம்பத்தான் வேண்டும். உலகத்தில் வேலைகளைக் கவனிப்பதற்கு இதுதான் அனுபவ சாத்தியமானதும், மிகவும் கண்ணியமானதுமான வழியாகும்."*

**தனி மனிதனுக்கும், ஒரு முறைக்கும் உள்ள வேறுபாடு :** மனித சுபாவத்தில் அவருக்கிருந்த நம்பிக்கை உண்மையானது. நெருக்கடி ஏற்பட்டபோதுகூட அவருடைய இந்த நம்பிக்கை மங்கியதில்லை. மனிதன் இயற்கையில் நல்ல சுபாவமுடையவன் என்று அவர் நம்பினார். ஆகையால், பாவத்திலிருந்து மீட்கவே முடியாதவன் என்று யாரையும் அவர் நினைத்ததில்லை. பெரும்பாலும் சந்தர்ப்பத்தினாலும், அல்லது சூழ்நிலை காரணமாகவுமே ஒருவன் தவறிழைக்கிறான். ஆகவே, மனிதன் வேறு, சூழ்நிலை அல்லது முறை வேறு என்ற வேறுபாட்டைக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது. தவறிழைப்பவனை ஒரு விரோதியாகக் கருதக் கூடாது. வாய் வார்த்தையாகச் சொல்லியும் அவனை நேர்வழிக்குக் கொண்டுவரலாம்; அல்லது அவசியமானால் சாத்விக ஒத்துழையாமை முறையையும் உபயோகிக்கலாம். இது பலனளிக்கத்தக்க வழியாகும். தவறிழைத்த ஒருவன் அதை உணர்ந்து, உண்மையாகவே அதற்காக அவன் மனப்பூர்வமாக வருந்தும்படி செய்வதற்குக் கஷ்டப்பட வேண்டியிருக்கலாம். ஆகவே, தீய முறையைத்தான் அழிக்க வேண்டுமேயொழிய தனிப்பட்ட மனிதனை அல்ல. இந்த முறையில் எதிராளியின் விரோதத்தை நாம் சம்பாதித்துக்கொள்ளுவதில்லை. ஒரு பொது நோக்கத்திற்கு அவர் நம்முடன் ஒத்துழைக்கும்படி செய்வதற்கும் இதில் வாய்ப்பு இருக்கிறது.

**மனித இயல்பில் நம்பிக்கை :** மனிதனுடைய நல்ல இயல்பிலும் அகிம்சையின் ஆற்றலிலும் அவருக்குள்ள அசையாத நம்பிக்கையும், ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கு அவர் எழுதிய பதிலில் நன்கு புலப்படுகிறது. இந்திய சுதந்திரம் பற்றி தம்முடைய கருத்து என்ன என்பதை காந்திஜியிடம் ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் சமர்ப்பித்தார். அதற்குக் காந்திஜி பின்வருமாறு எழுதினார் :

"சமஸ்தானாதிபதிகள் தமது எதேச்சாதிகாரத்தைத் தாமாகவே விட்டுக்கொடுத்துவிடுவார்கள் என்பதில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷுக்கு நம்பிக்கை இல்லை

*" எங் இந்தியா ' – 24—12—1924.

போலும்! எனக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில், முதலாவதாக அவர்களும் நம்மைப் போலவே நல்ல மனிதர்களே; இரண்டாவதாக, உண்மையான அகிம்சையின் சக்தியில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''*

மனித இயல்பில் நம்பிக்கை இருக்க வேண்டுமானால் ஒருவருக்குத் தம்மிடமும், தம் லட்சியத்தினிடமும் நம்பிக்கை இருக்க வேண்டும். இந்த இரண்டும் காந்திஜியிடம் வேண்டிய அளவு இருந்தன என்பதை யார் சந்தேகிக்க முடியும்? பின்னால் நடந்த சம்பவங்கள், காந்திஜியின் நம்பிக்கையை முற்றிலும் மெய்ப்பித்து விட்டன. சமஸ்தானாதிபதிகள், தமது அதிகாரத்தைத் தாமாகவே மனமுவந்து, ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளிடம் ஒப்படைத்த மகத்தான காட்சியை நமது கண் முன்பே பார்த்தோம். ''உங்களுடைய அகிம்சைக் கிளர்ச்சியின் பலனாக ஆங்கிலேயர் சமாதானமாக இந்தியாவை விட்டு வெளியேறிவிடுவார்களா?'' என்று வெளிநாட்டிலிருந்து வந்த ஒருவர் கேட்டார். ''ஆம்'' என்று அதற்குக் காந்திஜி உறுதியாகப் பதிலளித்தார். ''உங்களுடைய இந்த நம்பிக்கைக்கு ஆதாரம் என்ன?'' என்று அவர் அடுத்தபடியாகக் கேட்டது இயற்கையானதே. ''கடவுளிடமும், அவருடைய நீதியிலும் எனக்குள்ள நம்பிக்கையே ஆதாரம்'' என்றார் காந்திஜி.† ஒரு துப்பாக்கிக் குண்டைக்கூட வெடிக்காமல், தம்முடைய வாழ்நாளிலேயே காந்திஜி இந்தியாவின் சுதந்திரத்தைப் பெற்றார். அமைதியான முறையில் அதிகாரத்தை இந்தியர்களிடம் கொடுத்துவிட்டு ஆங்கிலேயர்கள் இந்தியாவிலிருந்து வெளியேறினார்கள். இவை இரண்டையும் உதாரணங்களுக்காகவே கூறுகிறேன். லாபநஷ்டக் கணக்குப்பார்க்கும் சாதாரண மனிதனுக்கு, ஆபத்தானது, அசட்டுத்தனமானது என்று தோன்றக்கூடிய கணக்கற்ற சம்பவங்கள் காந்திஜியின் வாழ்க்கையில் நிறைய இருந்திருக்கின்றன. ஆனால், அவற்றிலெல்லாம் வெற்றி பெற அவர் தவறியதே கிடையாது. இந்தியாவின் சமீப கால சரித்திரத்தைப் புரட்டிப் பார்ப்பவர்களுக்கு இந்த உண்மையை விளக்கும் ருசுக்கள் நிறையக் கிடைக்கும்.

மனிதர்களாய்ப் பிறந்தவர்களிடம் எவ்வளவோ குறைபாடுகள் இருக்கும் என்பதைக் காந்திஜியின் அகிம்சைக் கொள்கை ஏற்றுக் கொண்டது. பலவீனமாக உள்ள ஒருவர், நம்முடன் சேர்ந்து வர முடியாமல் பின்தங்கி நின்றால், அதற்கு இயற்கையாகவே இடம் கொடுக்கத்தான் வேண்டும். ஆனால், கொள்கைகள் விஷயத்தில் எப்படி விட்டுக் கொடுக்க முடியும்? அடிப்படைகள் சம்பந்தப்பட்ட வரையில் எதையும் விட்டுக் கொடுப்பது சாத்தியமில்லை என்பது தெளிவு. அந்த விஷயத்தில் மலை போல் உறுதியாயிருக்க வேண்டியதுதான். மேலும், தீமையுடன் எந்தவிதமான சமரசமும் செய்துகொள்ளவே முடியாது.

* 'ஹரிஜன்' – 20—4—1940. † 'ஹரிஜன்' - 13—2—1937.

ஆயினும், வளைந்து கொடுக்காமலும் இருக்கலாகாது. கொள்கை விஷயத்தில் பலவீனம் காட்டுவதோ, அல்லது பணிந்துவிடுவதோ செய்யலாம் என்று யோசனை கூறப்படவுமில்லை; அது ஆதரிக்கப்படவுமில்லை. அதே சமயத்தில், சின்னஞ் சிறு விஷயங்களைக்கூடக் கொள்கைகளாகப் பெரிதுபடுத்திவிடாமலும் உஷாராக இருக்க வேண்டும். விட்டுக் கொடுப்பதற்கு அவசியமான நிலைமைகள் எவை என்று காந்திஜி கருதினார் என்பதை அவர் கூறிய கீழ்க்கண்ட விஷயம் தெளிவாக்குகிறது :

"வாழ்க்கையில் விட்டுக் கொடுக்கும் சந்தர்ப்பங்கள் நிறைய இருக்கின்றன. அகிம்சை என்பது மிகப் பரிசுத்தமான, சுயநலமற்ற அன்பாகும். இந்தக் காரணத்தினாலேயே அகிம்சையில் விட்டுக் கொடுக்கும் அம்சமும் அடங்கியிருக்கிறது. ஆனால், இதற்கான நிபந்தனைகள் கண்டிப்பானவை. ஒருவருடைய செயல்களில் சுயநலமோ, பயமோ, பொய்யோ இருக்கக்கூடாது. அந்தச் செயல்கள் அகிம்சை லட்சியத்தின் வளர்ச்சிக்கு ஏற்றவைகளாகவும் இருக்க வேண்டும். விட்டுக் கொடுப்பது இயற்கையாகவே வருவதாயிருக்க வேண்டும்; யாரோ ஒருவர் வற்புறுத்துவதால் விட்டுக் கொடுப்பதாயிருக்கக் கூடாது."*

**அரசியல் லட்சிய வாதம்:** சுயராஜ்யம் பற்றிய அவருடைய கருத்துக்களை விரிவாக ஆராய்ச்சி செய்வதற்கு முன்பு, அவருடைய அரசியல் லட்சிய வாதத்தின் ஜீவ ஊற்றைப் பரிசீலனை செய்வது பொருத்தமாக இருக்கும். கோபால கிருஷ்ணகோகலே தான் காந்திஜியின் ராஜீய குரு. இந்திய ஊழியர்கள் சங்கத்தின் அமைப்பு விதிகளுக்கு முதலில் கோகலே எழுதியிருந்த பூர்வ பீடிகையில், ராஜீய வாழ்க்கையில் ஆன்மிகம் எவ்வளவு அவசியம் என்பதை விளக்கியிருக்கிறார். இது 1905-இல் எழுதப்பட்டது. மத சம்பந்தமான வேலைகளில் எவ்வளவு கடமை உணர்ச்சியுடன் நம்மை அர்ப்பணம் செய்துகொள்ளுகிறோமோ அதேபோலத் தேச சேவையிலும் இருக்க வேண்டும் என்பதை அவர் வற்புறுத்தியிருக்கிறார். குருநாதர் காட்டிய அந்த வழியைத் தான் அவருடைய சீடரும் (காந்திஜி) பின்பற்றினார். காந்திஜி ஏன் ராஜீயத்திற்கு வந்தார்? இந்தக் கேள்விக்கு அவரே பின்வருமாறு பதிலளித்திருக்கிறார் :

"பிரபஞ்சம் அனைத்திலும் நிறைந்து நிற்பதான சத்திய சொரூபத்தை நேருக்கு நேராக ஒருவர் தரிசிக்க வேண்டுமாயின், மிகத் தாழ்ந்த உயிரையும் தன்னைப்போலவே நேசிக்க முடிந்தவராக அவர் இருக்க வேண்டும். அந்த நிலையை அடைந்துவிட ஆசைப்படுகிறவர் யாரும், வாழ்க்கையின் எந்தத் துறையிலிருந்தும் விலகி நின்றுவிட முடியாது. அதனாலேயே, சத்தியத்தினிடம் நான் கொண்டிருக்கும் பக்தி, என்னை ராஜீயத் துறையில் இழுத்துவிட்டிருக்கிறது. சமயத் துறைக்கும் ராஜீயத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமுமே இல்லை என்று கூறுவோர், சமயம் என்பது இன்னதென்பதையே அறியாதவர்

---

* 'ஹரிஜன்' – 17—10—1936.

களாவர். இதைக் கொஞ்சமேனும் தயக்கமின்றி, ஆயினும் முழுப் பணிவுடன் கூறுவேன்."*

**மதமும் ராஜீயமும் :** மதத்தையும், ராஜீயத்தையும் வெவ்வேருகப் பிரிக்க முடியாது. மதம் இல்லையென்ருல் ராஜீயமும் உயிரற்றதாகிவிடும். மதத்திலிருந்து பிரிந்துவிட்டால் ராஜீயம் என்பது அர்த்தமற்ற சூன்யமாகிவிடும்.

'அழிந்து போகக்கூடிய இந்த மண்ணுலக ஆட்சியில் எனக்கு ஆசை கிடையாது. ஆன்மிக விடுதலையாகிய ஆண்டவன் சன்னிதானத்தை அடைய நான் முயற்சி செய்துகொண்டிருக்கிறேன். என்னைப் பொறுத்தவரையில் என் தேசத்திற்கும், மனித வர்க்கத்திற்கும் இடைவிடாமல் தொண்டு செய்து கொண்டிருப்பதே விமோசனத்திற்கு வழி என்று கருதுகிறேன். உயிர் வாழும் ஒவ்வொன்றுடனும் நான் என்னை ஒன்றுபடுத்திக்கொள்ள விரும்புகிறேன். கீதையில் சொல்லுவதுபோல், நண்பன், எதிரி என்ற பாகுபாடில்லாமல் இருவருடனுமே நேசமாக வாழ விரும்புகிறேன். ஆகவே என்னுடைய தேச பக்தி என்பது நிரந்தரமான விடுதலையையும், சாந்தியையும் தேடி நான் செய்து கொண்டிருக்கும் பிரயாணத்தில் ஒரு கட்டமேயாகும். ஆகவே, சமயம் இல்லாத ராஜீயம் என்பது எனக்குக் கிடையாது. ராஜீயம் மதத்திற்குத் துணையாக இருக்கிறது. மதம் இல்லாத ராஜீயம் மரணக் குழி போன்றது; ஏனெனில், அத்தகைய ராஜீயம் ஆன்மாவை அழித்துவிடுகிறது.''†

காந்திஜியுடன் விவாதிப்பதற்காக 1938 டிசம்பரில் வெளிநாட்டுக் கிறிஸ்தவ தலைவர்கள் சிலர் வந்திருந்தார்கள். ''நீங்கள் இந்தியாவுக்குச் செய்திருக்கும் தொண்டுகளின் அடிப்படை நோக்கம் என்ன? அது சமூகத் தன்மை வாய்ந்ததா, அல்லது ராஜீய, சமயத் தன்மை வாய்ந்ததா?'' என்று அத் தலைவர்களில் ஒருவர் கேட்டார். ''முற்றிலும் சமயத் தன்மை வாய்ந்ததே'' என்று காந்திஜி பதிலளித்தார். ஒரு ராஜீய தூது கோஷ்டியுடன் காந்திஜி சென்றபோது காலஞ்சென்ற ஸ்ரீ மாண்டேகும் அதே கேள்வியைத்தான் அவரைக் கேட்டார். ''சமூக சீர்திருத்தவாதியாகிய நீங்கள் இந்தக் கும்பலில் எப்படி வந்து சேர்ந்தீர்கள்?'' என்று கூறி ஸ்ரீ மாண்டேகு ஆச்சரியப்பட்டார். தம்முடைய சமூக சீர்திருத்த நடவடிக்கைகளின் விரிவுதான் இது என்று காந்திஜி பதிலளித்தார். மனித வர்க்கம் பூராவுடனுமே தம்மை ஐக்கியப்படுத்திக் கொண்டாலொழிய அவர் சமயத் தன்மை வாய்ந்த வாழ்க்கை நடத்த முடியாது. ராஜீயத்தில் கலந்துகொண்டாலொழிய அப்படிச் செய்வது சாத்தியமில்லை. இன்று மனிதனின் நடவடிக்கைகள் யாவுமே பிரிக்க முடியாதபடி முழுமை பெற்றதாக இருக்கிறது. சமூகம், பொருளாதாரம், ராஜீயம், சமயம் ஆகிய துறைகளில் செய்யும் வேலைகளை ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் தனித்தனியாக யாரும் பிரிக்க முடியாது. மனிதர்களின் நடவடிக்கைக்குப் புறம்பானதான வேறு

---

* மகாத்மாவின் சுயசரிதை. 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்ரும் தொகுப்பு —பக்கம் 648—649.

† 'எங் இந்தியா' - 3—4—1924.

சமயம் அவருக்குத் தெரியாது. மற்ற நடவடிக்கைகளுக்கெல் லாம் அது ஒரு தார்மிக அடிப்படையை அளிக்கிறது. இல்லா விட்டால் வாழ்க்கை என்பது 'அர்த்தமே இல்லாத வெறும் சப்தமும் கோபமும்' நிறைந்த ஒரு சிக்கலாகிவிடும்.*

**சமயம் என்பதன் பொருள்:** 'சமயம்' என்ற சொல் இங்கே நிரந்தர உண்மைகள் என்ற அர்த்தத்திலேயே உபயோகிக்கப் படுகிறதேயன்றி எந்த மதத்தின் கோட்பாடுகளையும் அது குறிக்கவில்லை. சமய சம்பந்தமான விஷயங்களில் காந்திஜியின் பரந்த மனப்பான்மையும், மற்றவர்களின் கருத்துக்களில் அவர் காட்டிய சகிப்புத்தன்மையும் யாவரும் அறிந்ததே. சத்தியமே கடவுள், கடவுளே சத்தியம் என்பது அவருடைய நம்பிக்கை. மனித அறிவுக்கப்பாற்பட்ட கடவுள் என்ற ஒரு சக்தி மனிதனை ஆட்டி வைக்கிறது என்ற உண்மையை மனிதன் உணருவதுதான் சமயம். கடவுள் என்பதைப்பற்றி காந்திஜி என்ன நினைத்தார்?:

"கடவுளைப் பரிபூர்ணமாக வர்ணிப்பது மனிதன் நாவுக்குச் சாத்தியம் என்றால், சத்தியம்தான் கடவுள் என்ற முடிவுக்கே நான் வந்திருக்கிறேன். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நான் இன்னும் ஒரு படி மேலே சென்று, சத்தியம்தான் கடவுள் என்று சொன்னேன். 'கடவுள்தான் சத்தியம்' என்பதற்கும், 'சத்தியம்தான் கடவுள்' என்பதற்கும் இடையே உள்ள நுண்ணிய வித்தியாசத்தைக் கவனிக்க வேண்டும். ஐம்பது ஆண்டுகளாக இடைவிடாமல் தொடர்ந்து சத்திய சோதனை செய்த பிறகே இந்த முடிவுக்கு நான் வந்திருக் கிறேன். அன்பின் மூலம்தான் சத்தியத்தைக் கிட்டத்தட்ட நெருங்க முடியும் என்பதை அப்போது கண்டேன். ஆனால், ஆங்கிலத்தில் 'அன்பு' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் இருக்கின்றன என்பதையும் கண்டேன். காம இச்சை என்ற அர்த்தத்தில் மனிதனின் அன்பு இழிவுத் தன்மை வாய்ந்த தாகும் என்று கண்டேன். அகிம்சை என்ற பொருளில் அன்பு செலுத்து பவர்கள் உலகத்தில் மிகச் சிலரே என்பதும் தெரிந்தது. ஆனால், சத்தியம் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு இரண்டுவிதமான பொருள்கள் தோன்றி யதே இல்லை. சத்திய சக்தியின் அவசியத்தை நாஸ்திகர்கள்கூட ஆட்சேபிக்க வில்லை. ஆனால், சத்தியத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற ஆர்வத்தில், கடவுளே கிடையாதென்று மறுக்கவும் நாஸ்திகர்கள் தயங்கியதே இல்லை. அவர்களுடைய கண்ணோட்டத்தின்படி அது சரியானதே. இதனால்தான் கடவுளே சத்தியம் என்பதற்குப் பதிலாக, சத்தியமே கடவுள் என்று சொல்ல வேண்டுமென்று நான் உணர்ந்தேன்."†

கடவுளைப் பற்றி தம்முடைய சிந்தனையைக் காந்திஜி இவ் வாறு விளக்கியிருக்கிறார். அவரிடமிருந்து வந்த சொற்கள் ஒவ்வொன்றுமே அவரிடமுள்ள சமயப் பற்றின் துணிவையும், தனித் தன்மையையும் நன்கு விளக்குகின்றன.

---

* ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்கர் தொகுத்துள்ள 'மகாத்மா' என்ற நூலில் 4-ஆம் தொகுப்பு—பக்கம் 387.

† ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்கர் தொகுத்துள்ள 'மகாத்மா' என்ற நூல்களில் 3-வது தொகுப்பு — பக்கம் 176.

**அவர் விரும்பிய சுயராஜ்யம்:** பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் விசுவாசமுள்ள பிரஜைகளில் ஒருவராக இருந்த காந்திஜி, இந்தியாவின் ராஜீய, பொருளாதார, சமூக, கலாச்சார அழிவுக்குப் பிரிட்டிஷ் ஆட்சிதான் காரணம் என்ற ராஜத் துவேஷத்தைப் பரப்பும் கிளர்ச்சிக்காரராக எப்படி மாறினார் என்பது சமீப கால சரித்திரமாகும். எந்தவிதமான சுயராஜ்யத்தைப் பெற வேண்டுமென்று அவர் தம் வாழ்க்கை பூராவையும் அர்ப்பணித்தாரோ அது, எதிர்மறைத் தன்மை வாய்ந்ததல்ல. இந்தியாவுக்கு ஆட்சி அதிகாரத்தை மாற்றிவிடுவது மட்டும்தான் சுயராஜ்யம் என்று அவர் நினைக்கவில்லை. முதல்படிதான் அது. 1947-ம் ஆண்டு 15-ம் தேதியன்று பிரிட்டிஷ் மன்னரின் கடைசிப் பிரதிநிதி (வைசிராய்), இந்திய தேசீய சர்க்காரிடம் ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்தார். அன்று தேசம் பூராவுமே ஆனந்த வெறியில் ஆழ்ந்திருந்தது. நாடெங்கும் திருவிழாப் போன்று காட்சியளித்தது. ஆனால், அன்று வார்தா முனிவர் துக்கத்திலாழ்ந்திருந்தார். நாடெங்கிலும் காணப்பட்ட வகுப்பு வெறியையும், வெறுப்பையும், சண்டைகளையும் எப்படி தணிப்பது என்று மனம் வெதும்பிக் கொண்டிருந்தார். இது யாவரும் அறிந்த விஷயமே.

**சுயராஜ்யத்தின் பொருள்:** மக்கள் தம்மைத் தாமே ஆட்சி செய்து கொள்ளத் தெரிந்துகொள்ளும் நிலையே சுயராஜ்யம். அந்தச் சுயராஜ்யத்தின் தன்மையை ஒவ்வொருவரும் தாமே உணர்ந்து அனுபவிக்க வேண்டும்:

"தன்னைத்தானே கட்டுப்படுத்திக்கொள்ளுவது என்பதுதான் உண்மையில் சுயராஜ்யம் என்பதன் பொருள். ஒழுக்க விதிகளைப் பின்பற்றி நடப்பவர், மோசம் செய்யாதவர், சத்தியத்தைக் கைவிடாதவர், பெற்றோர்களுக்கும், மனைவி, குழந்தைகளுக்கும், பணியாட்களுக்கும், அண்டை அயலார்களுக்கும் தன் கடமையைச் செய்பவர் ஆகிய இத்தன்மைகளுடையவருக்குத்தான் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளுவது சாத்தியமாக இருக்கும். அத்தகையவர் எங்கே வசித்தாலும், சுயராஜ்யத்தை அனுபவிப்பவராகிறார். ஒரு ராஜ்யத்தில் இம்மாதிரி பிரஜைகள் நிறைய இருக்கிறார்கள் என்றால், அந்த ராஜ்யம் சுயராஜ்யத்தை அனுபவிக்கிறது என்றுதான் பொருள்."*

**அவர் சுயராஜ்யத்தில் தனி மனிதனே அடிப்படை:** அவருடைய சுயராஜ்ய மாளிகைக்குத் தனி மனிதன்தான் அடிப்படை. சுயராஜ்யத்தை அனுபவிக்கும்போது நல்ல பிரஜையாயிருப்பதற்கு அவன் உண்மையாகவே தகுதியுள்ளவனாகத் தன்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும். தனிப்பட்டவர்கள் பலரை ஒன்றாகக் கொண்டதே சமூகம். ஆட்சி புரிவதற்கும், சட்டத்தைப் பரிபாலனம் செய்வதற்கும் அது ஒரு நிர்வாக அமைப்பைச்

---

* காந்திஜி, ரஸ்கினுடைய 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூலைத் தழுவி எழுதிய புத்தகத்தில் 'முடிவுகள்' என்ற அத்தியாயத்தில் உள்ளது. பக்கம் - 65. இந்நூலின் தமிழாக்கம், இத் தொகுப்பில் பின் சேர்க்கைப் பகுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சிருஷ்டிக்கிறது. எந்த ராஜ்யத்தில் நிறைய நல்ல பிரஜைகள் இருக்கிறார்களோ, அந்த ராஜ்யம் தன்னிடம் சுயராஜ்யம் இருப்பதாக உரிமை கொண்டாடலாம். தம்முடைய சொந்த லாபம் கூடப் பெரிதல்ல, நாட்டின் நலன்களே முக்கியம் என்று கருதும் விசுவாசமும் தேசபக்தியுமுள்ளவர்கள் பெரும்பான்மையோராக இருந்தால்தான் சுயராஜ்யத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்.* இந்த நிலைமை இல்லாவிட்டால், ஒரு நாட்டு மக்கள் அரசியல் சுயாட்சியை அனுபவித்தால்கூட அவர்கள் சுதந்திர மக்களல்ல. அரசியல் சுதந்திரத்தின் முக்கியத்துவம் குறைக்கப்பட்டுவிடவில்லை. உண்மையில் ஒவ்வொரு நாட்டுக்கும் அரசியல் சுதந்திரம் இருக்க வேண்டும் என்பதைக் காந்திஜி உணர்ந்துதானிருந்தார். ஒரு நாட்டினர் மற்றொரு நாட்டினரை ஆளுவது சரியல்ல என்பதையும், அன்னிய ஆட்சி ஒரு தீமையே என்பதையும் அவர் உணர்ந்துதான் இருந்தார். ஆகையால், இந்தியாவுக்கு அரசியல் சுதந்திரம் வேண்டும் என்று கோரினார். ஆயினும், பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேறும்போது, ஏதோ அற்புதம் நிகழ்ந்து யாவும் சுமுகமாக இருந்து விடாது என்பதை அறியும் நுண்ணறிவும் அவருக்கு இருந்தது. ஐரோப்பாவின் நிலைமை அவருக்கு ஓர் எச்சரிக்கையாக இருந்தது. வெறும் சுய ஆட்சியினால் மட்டும் மக்கள் தம்மைத் தாமே ஆட்சி புரிந்துகொள்ளும் நிலைமை வந்துவிடாது என்று அவர் நிச்சயமாக நம்பினார். ஒரு சிலரின் காலடிகளின் கீழ் அம்மக்கள் தொடர்ந்து நசுக்கப்பட்டுக் கொண்டுதான் இருப்பார்கள். அதனால்தான் அவர் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"இந்தியாவுக்கு அதிகாரத்தை மாற்றுவது இந்திய தேசீய வாழ்வுக்கு அத்தியாவசியமானது என்று நான் கருதினாலும், வெறும் அதிகார மாற்றம் மட்டும் எனது ஆசையைத் திருப்தி செய்யாது. ஐரோப்பிய மக்களுக்கு அரசியல் அதிகாரம் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவர்களுக்குச் சுயராஜ்யம் இல்லை. அவர்களுடைய நலன்களுக்காக ஆசிய, ஆப்பிரிக்க மக்கள் ஓரளவு சுரண்டப்படுகிறார்கள். அவர்களும், ஜனநாயகம் என்ற புனிதப் பெயரில் ஆளும் வர்க்கம் அல்லது வகுப்பினரால் சுரண்டப்படுகிறார்கள். ஆகையால், ஊன்றிப் பார்த்தால், வியாதி இந்தியாவிலிருப்பதைப் போன்றதாகவே எனக்குத் தோன்றுகிறது."†

மக்கள் சர்க்கார் என்பது மட்டும் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை என்பதை இது காட்டுகிறது. மக்களுக்கான சர்க்கார் மக்களாலேயே நடத்தப்பட வேண்டும் என்று அவர் விரும்பினார்.

**சுயராஜ்யத்தில் செல்வர்களும் பாமர மக்களும்:** சுயராஜ்ய அமைப்பில் ஒரு சிலரின் நலன்களைவிட பாமர மக்களின் நலன்களே முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும். சுயராஜ்யம்

---

* 'எங் இந்தியா' 28—7—1921

† 'எங் இந்தியா' 3—9—1925

என்பது, சுயநல உரிமைக்காரர்களின ஏகபோக உரிமையாகவோ, அவர்களுடைய வேட்டைக்கான இடமாகவோ இருக்கக்கூடாது. முடிவாகப் பார்க்கும்போது, எந்தச் சுயராஜ்ய அமைப்பிலும் எல்லாப் பாமர மக்களின் நலன்களுக்குட்பட்டதாகவே இருக்க வேண்டும். "கோடிக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளான பாமர மக்களின் நலன்களுக்கு விரோதமாக உள்ள ஒவ்வொரு நலனும் மாற்றப்பட வேண்டும்; அல்லது மாற்ற முடியாதென்றால், அமுங்கிவிடவேண்டும்."* இதனால், மத்திய தர வகுப்பினர், முதலாளிகள், ஜமீன்தார்கள் போன்ற மற்ற வர்க்கத்தினரெல்லாம் அழிந்து போய்விட வேண்டுமென்று அர்த்தமில்லை. "எல்லா வர்க்கங்களுமே ஏழைகளின் நலன்களைக் கவனிப்பவைகளாக இருக்க வேண்டும் என்பதே இதன் நோக்கம்."†

**மக்களால் நடத்தப்படும் அரசாங்கம்:** அடுத்தபடியாக, 'மக்களால் நடத்தப்படும் அரசாங்கம் என்றால் என்ன?' என்ற கேள்வி எழுகிறது. இந்தக் கேள்விக்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளிக்கிறார்:

"இந்தியாவின் அரசாங்கம் என்பது மக்களின் சம்மதத்துடன் நடத்தப்படும் ஆட்சியாகும். மக்களின் சம்மதம் என்பது, வயது வந்தவர்களில் பெரும்பான்மையோரின் கருத்தைத் தெரிந்துகொள்ளுவதாகும். இவர்கள் ஆண்களாயிருந்தாலும், பெண்களாயிருந்தாலும், இங்கேயே பிறந்தவர்களானாலும், இங்கே வந்து குடியேறியவர்களானாலும் பரவாயில்லை. இவர்கள் தமது உடலுழைப்பின் மூலம் நாட்டுக்குத் தொண்டு செய்திருக்க வேண்டும். தங்கள் பெயர்களை வாக்காளர்களாகவும் பதிவு செய்துகொண்டிருக்க வேண்டும். இவ்வாறான மக்களின் சம்மதம் பெற்று நடக்கும் ஆட்சியையே சுயராஜ்யம என்று சொல்லுகிறேன். அதிகாரத்தை ஒரு சிலர் பெறுவதன் மூலம் சுயராஜ்யம் வராது. அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படும்போது அதை எதிர்க்கும் சக்தியை எல்லோரும் பெறுவதுதான் உண்மையான சுயராஜ்யம் என்பதை ருசுப்பித்துக் காட்ட முடியும் என்று நம்புகிறேன். அதாவது, அதிகாரத்தைச் சீர்படுத்தி, ஒரு கட்டுக்குள் நாம் வைத்திருக்க முடியும் என்பதில் தம் சக்தியை மக்கள் உணரச் செய்வதின் மூலம்தான் சுயராஜ்யத்தைப் பெற முடியும்."‡

**பிரஜைகளின் உஷார்:** தங்களுடைய உரிமை, சுதந்திரம் பற்றிப் பிரஜைகள் உஷாராக விழிப்புடனிருக்கும்போது, மக்களின் தேவைகளையெல்லாம் சமாளிக்கும் கருவியாக அரசாங்கம் இராது; நியாயமாக மக்களுக்குச் சேரவேண்டிய அதிகாரங்களையும் அந்த அரசாங்கம் பறிக்காது. "அன்னிய அரசாங்கமாக இருந்தாலும் சரி, தேசீய அரசாங்கமாக இருந்தாலும் சரி, அரசாங்கத்தின் ஆதிக்கத்துக்குட்பட்டு இராமல் தனித்து

---

* 'எங் இந்தியா' - 17—9—1931

† 'எங் இந்தியா' - 16—4—1931

‡ 'ஹரிஜன்' – 17—10—1936.

நிற்பதற்குத் தொடர்ந்து முயற்சி செய்வதே சுயாட்சியாகும். வாழ்க்கையின் ஒவ்வொரு சிறு அம்சத்தையும் சீர்படுத்துவதற்கு அரசாங்கத்தை மக்கள் எதிர்பார்க்க வேண்டியிருந்தால், சுயராஜ்யம் என்பது பரிதாபகரமான ஒரு காரியமாகவே இருக்கும்.''

**மிகக் குறைந்த அளவு ஆட்சி செலுத்துவதே சிறந்த அரசாங்கம்:** விஷயம் தெரிந்தவர்கள், படித்தவர்களிடம் ராஜீய அதிகாரம் இருந்து, கட்டுப்பாடுள்ள மக்களும் அதிகாரத்தைச் சீராக ஒரு கட்டுதிட்டத்திற்குள் அடக்கி வைக்கப் பயிற்சி பெற்றுள்ள இடங்களில் அரசாங்கம் கொடுங்கோன்மையாக நடக்கும் என்ற பயமில்லை. அரசாங்க அதிகாரம் என்பது, வாடி வதங்கி வர்க்க பேதமற்ற ஒரு சமுதாயம் என்ற லட்சியத்தை அடைவதற்கு இடையூருக அந்த அதிகார ஆட்சி வேரூன்றிக்கொண்டு விடும் என்ற பயமுமில்லை. பாமர மக்கள் தமக்குரிய உரிமைகளை அனுப விக்கும் தெளிவு பெற்றுவிட்ட ஜனநாயகத்தில் தமக்குள்ள நம்பிக்கையைக் காந்திஜி பின்கண்ட வார்த்தைகளில் ஊர்ஜிதம் செய்கிருர் :

''அரசியல் அதிகாரம் என்பது என்னைப் பொறுத்தவரையில், முடிவான ஒன்று அல்ல. வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் மக்கள் தமது நிலையை உயர்த்திக்கொள்ள உதவி செய்யும் ஒரு கருவியாக அதை நான் கருதுகிறேன். தேசியப் பிரதிநிதிகளின் மூலம் தேசீய வாழ்வை சீரமைத்துக்கொள்ளும் சக்தி தான் ராஜீய அதிகாரம். வெளி உதவி இல்லாமல் தேசீய வாழ்வு தானுகவே சீராக நடத்த முடியுமென்ற அளவுக்கு அவ்வளவு செம்மையாய் இருந்தால் பிரதிநிதித்துவம் என்பதற்கு அவசியமில்லை. அப்போது விஷயம் தெரிந்த, தெளிவு பெற்ற ஓர் அராஜக நிலைமை ஏற்படுகிறது. அத்தகைய நிலைமையில் ஒவ்வொருவரும் தன்னைத் தானே ஆண்டுகொள்ளுபவராகி விடுகிருர். அவர் நடந்துகொள்ளும் விதம், எந்தச் சமயத்திலும் அக்கம் பக்கத்தில் இருப்பவருக்கு இடையூருக இராது. ஆகையால், அந்த லட்சிய ஆட்சியில் ராஜீய அதிகாரம் என்பது இராது. ஏனெனில், ஆட்சி புரியும் அரசாங்கம் என்று ஒன்று இராது. ஆயினும், அந்த லட்சியம் வாழ்க்கையில் முழுமையாக நிறைவேறுவதில்லை. அதனுல்தான் அதிகமாக அதிகாரம் செலுத்தாத அரசாங்கமே சிறந்த அரசாங்கம் என்று தோரோ கூறினர்.''†

''மக்களுக்கு ராஜீய அதிகாரம் கிடைத்துவிடும்போது, மக்களின் சுதந்திரத்தில் தலையிடுவது ஒரு குறைந்த பட்ச அளவுக்குக் குறைந்துவிடுகிறது என்பதே இதன் பொருள். அதாவது, அரசாங்கத்தின தலையீடு அதிகமாக இல்லாமல் தனது விவகாரங்களைச் சுமுகமாகவும், திறம்படவும் நடத்தும் நாட்டில் உண்மையான ஜனநாயகம் இருக்கிறது. எங்கே இந்த நிலைமை இல்லையோ, அங்கே ஜனநாயக அரசாங்கம் என்பது பெயரளவில்தான் இருக்கும்.''‡

---

* 'எங் இந்தியா' – 29—1—1925 † 'எங் இந்தியா'-2—7—1931.

‡ 'ஹரிஜன்' – 11—1—1936.

**உண்மையான ஜனநாயகம் :** கணக்கற்ற கிராம பஞ்சாயத்துக்களைக்கொண்ட ஒரு குடியரசே உண்மையான ஜனநாயகம் என்று காந்திஜி கருதினர். நிர்வாக அமைப்புக் கிராமத்தையே உறுப்பாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று காந்திஜி ஏன் வற்புறுத்தினர்? இதோ அவருடைய வார்த்தைகளிலேயே அதற்குப் பதிலும் இருக்கிறது :

"சுதந்திரம் அடியிலிருந்து ஆரம்பமாக வேண்டும். இதன்படி ஒவ்வொரு கிராமமும் முழு அதிகாரங்களுடைய ஒரு குடியரசாக, அல்லது பஞ்சாயத்தாக இருக்கும். அதாவது, ஒவ்வொரு கிராமமும் தன்னிறைவு பெற்றதாகவும், உலகமே எதிர்த்து நின்ருலுங்கூடத் தன் அலுவல்களைத் தானே கவனித்துக் கொண்டு பாதுகாத்துக் கொள்ளக்கூடிய அளவுக்கு அவ்வளவு திறமையானதாகவும் இருக்க வேண்டும். வெளியிலிருந்து ஏதாவது தாக்குதல் ஏற்பட்டால், அதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் முயற்சியில் உயிரையே விடுவதற்குக்கூடத் தயார் என்ற முறையில் கிராமம் பயிற்சியைப் பெற்றிருக்கும். முடிவில் தனி மனிதனைச் சுற்றியே எல்லாம் நடக்கும். இதனுல் பக்கத்திலிருப்பவர்களை நம்பியிருக்கவோ, அல்லது அவர்கள் மனமுவந்து அளிக்கும் உதவியை ஏற்றுக்கொள்ளவோ கூடாது என்று அர்த்தமில்லை. அவையெல்லாம் பரஸ்பரம் மனமுவந்த நடவடிக்கைகளாக இருக்கும். அத்தகைய ஒரு சமூகம் நல்ல பண்பாடுடையதாகத்தான் இருக்கும். அதிலுள்ள ஒவ்வோர் ஆணுக்கும் பெண்ணுக்கும், தனக்கு என்ன வேண்டும் என்பதும் தெரிந்திருக்கும். அதோடு மட்டுமல்ல, தம்மைப் போல் அதே அளவு வேலை செய்து மற்றவர்கள் பெற முடியாத எதையும் தாம் விரும்பக் கூடாது என்பதும் அவர்களுக்குத் தெரிந்திருக்கும்."

**சுயநலத்தை அடக்கி வைத்தல் :**—"கணக்கற்ற கிராமங்களைக்கொண்ட இந்த அமைப்பு மேற்கொண்டு விரிவடைந்துகொண்டுதான் இருக்கும். ஆனல், அது ஏற்றத் தாழ்வா யிராது. மேலே இருப்பவர்களுக்கு அடியில் உள்ளவர்தான் ஆதாரம் என்ற முறையில் அதில் வாழ்க்கை இராது. அது ஒரு பரந்த வட்டத்தைப் போலிருக்கும். மத்தியில் தனி மனிதனிருப்பான். அவன் தன்னுடைய கிராமத்திற்காக உயிரைக் கொடுக்கத் தயாராக இருப்பான். கிராமம், தன்னைச் சுற்றியுள்ள கிராமங்களுக்காக எதையும் செய்யத் தயாராயிருக்கும். இறுதியில் யாவும் தனி மனிதர்கள் கொண்ட ஒரே வாழ்க்கையாயிருக்கும். இவர்களிடம் அகம்பாவத்தின் ஆணவம் இராது. எப்போதும் தாழ்மையுடனே இருப்பார்கள். தம்மைச் சுற்றியுள்ள வட்டத்தின் உறுப்புக்கள் என்ற உணர்வில் அதன் கம்பீரத்தைத் தாமும் பகிர்ந்துகொள்ளுவார்கள்."*

**லட்சிய கிராமம் :**—"லட்சிய இந்திய கிராமம் என்பது எல்லா சுகாதார வசதிகளுக்கும் ஏற்றதாக இருக்கும். போதிய வெளிச்சமும், காற்ருேட்டமும் உள்ள குடிசைகள் நிறைந்திருக்கும். ஐந்து மைல் சுற்றளவுக்குள்ளிருந்து கிடைக்கக்கூடிய சாமான்களைக்கொண்டே அந்தக் குடிசைகள் கட்டப்பட்டிருக்கும். தம்முடைய வீட்டு உபயோகத்திற்கான காய்கறிச் செடிகளைப் பயிரிடுவதற்கும், தம் கால்நடைகளைக் கட்டிவைப்பதற்கும் குடிசைகளுக்கு முன்னல் இடம் இருக்கும். தவிர்க்கக்கூடிய எந்தப் புழுதியும் கிராமத் தெருக்

---

* 'ஹரிஜன்' - 28—7—1946.

களிலும், சந்துகளிலும் இரா. தேவைக்குத் தகுந்தவாறும், யாவரும் உபயோகிக்கக்கூடியதாகவும் கிணறுகள் இருக்கும். பொதுவான கோவில்கள், கூடிப் பேசுமிடம், கால்நடைகளுக்கு மேய்ச்சல் பூமி, கூட்டுறவுப் பால் பண்ணை, கைத்தொழில் கல்வியை முக்கியமாகக்கொண்ட ஆரம்ப, செகண்டரிப் பள்ளிகள் ஆகியவையும் இருக்கும். தகராறுகளைத் தீர்ப்பதற்கான கிராமப் பஞ்சாயத்துக்களும் இருக்கும். கிராமத்திற்கு வேண்டிய தானியங்கள், காய் கறிகள், பழங்கள், கதர் ஆகியவைகளையும் அக்கிராமமே உற்பத்தி செய்து கொள்ளும்.''*

**பஞ்சாயத்து ராஜ்யத்தில் சமத்துவம்:** அத்தகைய பஞ்சாயத்து ராஜ்யத்தில் சமூக, பொருளாதார, அரசியல், மதத் துறைகள் யாவற்றிலுமே, நாட்டிலுள்ள மிகுந்த எளியவர்களுக்கும், மிகவும் உயர்ந்தவர்களுக்கும் ஒரே விதமான சமத்துவம் இருக்கும். உடலுழைப்பிற்கே அதிகமான மதிப்பு இருக்கும். பிரஜைகள் நாணயமான வழியில் வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிப்பார்கள். அபினி, மதுபானம் போன்ற போதை தரும் பொருள்கள் அழிக்கப்படும். சுதேசியே வாழ்க்கையின் தருமமாக இருக்கும். பெண்கள் விடுதலை பெற்று மதிப்பிற்குரிய ஸ்தானம் பெறுவார்கள். பிரஜைகள் அகிம்சை வழியில் சத்தியத்தைக் காப்பாற்றவும், அவசியமேற்பட்டால் அதற்காகத் தமது உயிர்களையே கொடுக்கவும் தயாரா யிருப்பார்கள். இவை கிராமங்களின் குடியரசைத் தாங்கி நிற்கும் தூண்களாகும்.

இம்மாதிரியான ஒரு குடியரசு, ராணுவம் வைத்துக்கொண்டிருக்குமா? அது தார்மிக சுதந்திரத்திற்கு ஏற்றதாய் இருக்குமா? காந்திஜியின் வியாக்கியானத்தின்படி 'தார்மிக சுதந்திரம்' என்பது, 'ஆயுதம் தாங்கிய தற்காப்புப் படைகளிலிருந்து சுதந்திரம்' என்பதாகும். தார்மிகச் சுதந்திரத்தைப் பற்றி அவர் பின்வருமாறு வியாக்கியானம் செய்திருக்கிறார்:

"நான் உருவகப்படுத்திக்கொண்டுள்ள ராம ராஜ்யத்தில், பிரிட்டிஷ் சைன்யத்திற்குப் பதிலாக ஒரு தேசீய சைன்யம் உட்கார்ந்துகொண்டிருக்காது. ஒரு நாட்டை அதனுடைய தேசீய ராணுவமே ஆட்சி புரிந்தாலும்கூட அது ஒரு நாளும் தார்மிக சுதந்திரம் பெற்றதாய் இருக்க முடியாது. ஆகையால், அதிலுள்ள மிகவும் எளியவர் என்று சொல்லப்படுபவர் தம்முடைய முழு தார்மிக அந்தஸ்தையும் பெறவே முடியாது.''†

**எதிர்கால இந்தியாவின் ராணுவம்:** தேசீய சைன்யத்தின் ஆட்சியைக்கூடக் காந்திஜி எதிர்க்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டும். ஆனல், தொண்டர்களைக்கொண்ட ஒரு படையை அவர் ஆட்சேபிக்க மாட்டார். அந்தப் படை இந்தியாவில் கண்காணிப்பு வேலைகளைச் செய்வதாயிருக்க வேண்டும். பின்கண்ட வாக்கியங்களிலிருந்து அவருடைய கருத்து தெளிவாகிறது:

---

* ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' 4-வது தொகுப்பு - பக்கம் 144.

† 'ஹரிஜன்' - 5—6—1946.

'கடற்படையைப்பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், எதிர்கால இந்தியாவின் எதிர்கால ராணுவத்தில், இந்தியாவை அடிமைத்தனத்தில் வைத்திருப்பதற்கும், மற்ற நாடுகளின் சுதந்திரத்தைப் பறிப்பதற்கும் உபயோகிப்பதற்கான கூலியாட்கள் இருக்கமாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். ராணுவத்தில் ஆட்கள் அதிகம் குறைக்கப்பட்டிருக்கும். அதில் பெரும்பாலும் தொண்டர்களே இருப்பார்கள். இந்தியாவில் கண்காணிப்பு வேலைகளைச் செய்வதற்கே அவர்கள் பயன்படுத்தப்படுவார்கள்.''*

சுதந்திரம் பெற்றவுடன் இந்தியா ஒரு ராணுவ வல்லரசாக இருக்க முயன்றால், உலகத்தில் ஒரு ஐந்தாம் தர நாடு என்ற பெயரோடு அது திருப்தியடைய வேண்டியே இருக்கும் என்றும், மற்றவர்களுக்கு இந்தியா காட்டக்கூடிய வழி ஒன்றும் இராது என்றும், 1946–இல் பிரிட்டிஷ் மந்திரி சபை தூது கோஷ்டி இந்தியாவுக்கு வரவிருந்த சமயத்தில் காந்திஜி தேச மக்களை எச்சரித்தார். தம்முடைய அகிம்சைக் கொள்கைக்கு இன்னும் கொஞ்சம் மெருகு கொடுத்து, தொடர்ந்து அதையே பின்பற்றினால், உலகத்தை அமுக்கி வைத்துக்கொண்டிருக்கும் சுமையிலிருந்து அதை விடுவிப்பதற்கு இந்தியா தனது சுதந்திரத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாமென்றும், அதன்மூலம் உலகத்துக்கே ஓர் உதாரணம் காட்ட முடியுமென்றும் காந்திஜி கருதினார்.†

## காந்தீய லட்சிய வாதத்திற்கும், சோஷலிஸ்டு, கம்யூனிஸ லட்சிய வாதங்களுக்கும் உள்ள பேதம்

**சோஷலிஸம், ஈசோபனிஷத்திலேயே இருக்கிறது:** காந்திஜியின் லட்சிய வாதத்திற்கும், சோஷலிஸ்டு, கம்யூனிஸ்டு லட்சிய வாதங்களுக்கிடையே உள்ள பேதங்கள் யாவை? இவ்விரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசங்களைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், சோஷலிஸத்தைப் பற்றிக் காந்திஜியின் கருத்து என்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். மேல் நாடுகளிலிருந்து 'சோஷலிஸம்' இந்தியாவிற்கு வருவதற்கு முன்பே காந்திஜி தம்மைச் சோஷலிஸ்டு என்று சொல்லிக் கொண்டிருந்தார். தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதே சோஷலிஸ்டுகளின் கொள்கையை அவர் ஒப்புக்கொண்டிருந்தார். ஆனால், அவருடைய சோஷலிஸம் அவருக்கு இயற்கையானது. அவருடைய சோஷலிஸம் எந்தப் புஸ்தகத்திலிருந்தும் வந்ததல்ல. அவர் நேரில் கண்டறிந்த அனுபவங்களே அவருடைய சோஷலிஸத்தின் அடிப்படை. அகிம்சையில் அவருக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையிலிருந்து அது பிறந்தது. இந்தக் கட்டத்தில் அவர் மேற்கத்திய சோஷலிஸ்டுகளுடன் கருத்து வேறுபாடு கொள்ளுகிறார். காந்திஜி சொன்னார்:

''மூலதனத்தை முதலாளிகள் துஷ்பிரயோகம் செய்கிறார்கள் என்பது கண்டுபிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து சோஷலிஸம் தோன்றவில்லை. நான்

---

* 'எங் இந்தியா' - 9—3—1922.

† 'ஹரிஜன்' – 5—5—1946.

ஏற்கனவே கூறியிருப்பதுபோல், சோஷலிஸமும், கம்யூனிஸமும்கூட ஈசோப னிஷத்தின் முதல் சுலோகத்திலேயே தெளிவாக இருக்கின்றன. மனிதர்களின் மனத்தைத் திருப்ப முடியும் என்ற முறையில் சில சீர்திருத்தவாதிகள் நம்பிக் கையை இழந்துவிட்டபோது, சாஸ்திரோக்தமான சோஷலிஸம் தோன்றியது. இதுதான் உண்மை. சாஸ்திரோக்தமான சோஷலிஸ்டுகளின் முன்புள்ள அதே பிரச்னைகளைத் தீர்க்கத்தான் நான் முயற்சிசெய்து கொண்டிருக்கிறேன். ஆயினும், இப்பிரச்னைகளை நான் தீர்க்கும் முறை இன்றும், என்றும் கலப் பற்ற அகிம்சையை அடிப்படையாகக் கொண்டிருக்கும் என்பது உண்மை.''*

பொது லட்சியம் : 'ராஜ்யம் என்பது, வாடி வதங்கிப் போய் விட்ட வர்க்க பேதமற்ற ஒரு சமுதாயம்' என்ற கம்யூனிஸ்டுகளின் லட்சியத்தைக் காந்திஜியும் ஏற்றுக் கொள்ளுகிறார். ஆனால், அதற்கு அவர்கள் காட்டும் வழிகள் நேர் மாறாக இருக்கின்றன. ஆகையால், பிரயாணத்தின் ஆரம்பத்திலேயே இருவரும் பிரிந்து விடுகிறார்கள். மேற்கத்திய சோஷலிஸத்தையும், கம்யூனிஸத் தையும் காந்திஜி ஏன் எதிர்க்கிறார் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். '

வழி முறைகள் : அவர் சொன்னார் : "எந்த நிரந்தரமான சீர் திருத்தத்தையும் பலாத்காரத்தின் மூலம் செய்ய முடியுமென்று அவர்கள் சொல்வதில்தான் சோஷலிஸ்டுகளையும், மற்றவர்களை யும் நான் தாக்குகிறேன்.''†

'' ரஷிய பாணி கம்யூனிஸம், அதாவது மக்கள் மீது சுமத்தப் படும் கம்யூனிஸம், இந்தியாவுக்கு வெறுப்பளிப்பதாயிருக்கும். அகிம்சை பூர்வமான கம்யூனிஸத்தையே நான் நம்புகிறேன். எந்த விதமான பலாத்காரமும் இல்லாமல் கம்யூனிஸம் வந்தால், அது வரவேற்கத்தக்கதே.''‡

சோஷலிஸ்டுகளின் தன்னல மறுப்பையும், தியாக உணர்ச்சி யையும் காந்திஜி பெரிதும் பாராட்டினார். ஆனால், அவர்களுடைய வழிகளுக்கும், தம்முடைய வழிகளுக்குமிடையே உள்ள கடுமை யான மாறுபாடுகளை அவர் ஒளித்ததே கிடையாது. பலாத்காரத் தையும், அதன் விளைவுகளையும் அவர்கள் பகிரங்கமாக நம்பினார் கள். ஆனால், முழுக்க முழுக்க அகிம்சையையே காந்திஜி நம் பினார். § "இந்தியா சுயராஜ்யம் பெற வேண்டியதுதான். ஆனால், நேர்மையான முறைகளின் மூலமே அதைப் பெற வேண் டும்'' என்று அவர் கூறினார். ஏனெனில், பலாத்காரத்தின் மூலம் உண்மையான சுயராஜ்யத்தைப் பெற முடியாது.¶ பலாத்காரத்தின் மூலம் இந்தியா சுயராஜ்யம் பெற முடியும் என்று உறுதி கூறப்பட்டாலும்கூட, அதைப் பெற அவர் மறுத்து விடுவார். அது உண்மையான சுதந்திரமாக இராது.** யுத்தத்

* 'ஹரிஜன்' – 20—2—1937
† 'ஹரிஜன்' – 1—6—1947
‡ 'ஹரிஜன்' – 13—2—1937
§ 'ஹரிஜன்' – 4—8—1946
¶ 'ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற நூலைத் தழுவி காந்திஜி எழுதிய புத்தகத்தில் 'முடிவுகள்' என்ற அத்தியாயத்திலுள்ளது.
** 'ஹரிஜன்' - 13—2—1937

தினல் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பதில் வேறு ஆட்சி ஏற்படக்கூடும். ஆனல், பாமர மக்கள் சம்பந்தப்பட்ட வரையில், அது சுயாட்சியாக இராது.* பலாத்காரத்தின் மூலம் நிலையான எதையும் செய்ய முடியாது என்பது அவருடைய நம்பிக்கை.† மனிதனின் உடல் எப்படி நிலையற்றதோ அதைப் போலவே பலாத்காரமும் நிலையற்றது. பலாத்காரத்தின் மூலம் சுயராஜ்யம் பெற்ருல், புரட்சியை நடத்திய அந்தச் சிலரிடமே அதிகாரம் போய்விடுகிறது. இது தவிர்க்க முடியாத விளைவாகும். "வாளை ஏந்துபவன் வாளினலேயே மாய்வான்'' என்று ஏசுநாதர் வீணில் சொல்லவில்லை. இத்தாலியின் உதாரணம் ஒன்றை மட்டுமே பார்ப்போம். இத்தாலிய சுதந்திர யுத்தத்திற்குப் பிறகு நடந்தது இப்படித்தான் :

"இத்தாலியை இத்தாலியர் ஆளுவதால் இத்தாலிய மக்கள் சுகமாக இருப்பதாக நீங்கள் நம்புவதாயின், நீங்கள் இருளில் தடுமாறுகிறீர்கள் என்றுதான் சொல்ல முடியும். இத்தாலி சுதந்திரம் அடைந்துவிடவில்லை என்பதை முடிவாக மாஜினி காட்டியிருக்கிருர். விக்டர் எமானுவல் அந்தக் கருத்துக்கு ஒரு பொருள் கூறினர். மாஜினி ஒரு பொருள் கூறினர். எமானுவல், காவோர் ஆகியோரின்படியும், கரிபால்டியின் படியுங்கூட, இத்தாலி என்ருல் இத்தாலிய மன்னரும் அவருடைய ஆட்களும் என்றே பொருள். மாஜினியின் கருத்துப்படி, இத்தாலி என்பது இத்தாலிய மக்கள் எல்லோரையும், அதாவது அதன் விவசாயிகளையும் குறிக்கும். எமானுவல் அதன் ஊழியரே யாவர். மாஜினி கருத்தில் கொண்ட இத்தாலி இன்னும் அடிமை நிலையிலேயே இருந்து வருகிறது. தேசீய யுத்தம் என்று கூறப்பட்ட போர்க் காலத்தில், ஒருவருக்கொருவர் போட்டியான இரு மன்னர்கள் இத்தாலிய மக்களைக் காய்களாக வைத்துச் சதுரங்கம் ஆடினர். அந்நாட்டுத் தொழிலாளர் வகுப்பினர், இன்னும் துன்ப நிலையிலேயே இருக்கின்றனர். ஆகையால், அவர்கள் படுகொலைகளில் ஈடுபடுவதோடு அவர்கள் அளவில் புரட்சியும் கலவரமும் எப்பொழுதும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆஸ்திரியப் படைகள் வெளியேறிய பிறகு உருப்படியாக இத்தாலி அடைந்த பலன்கள் யாவை? பலன் பெயரளவிலேதான். எந்தச் சீர்திருத்தங்களுக்காகப் போரை மேற்கொண்டார்கள் என்று கருதப்பட்டதோ அவை இன்னும் அளிக்கப்படவில்லை. பொதுவாக மக்கள் நிலை பழைய நிலையாகவே இருந்து வருகிறது. அத்தகையதோர் நிலைமையையே இந்தியாவிலும் உண்டாக்க நீங்கள் விரும்பவில்லை என்றே நான் நிச்சயமாக எண்ணுகிறேன். அரசாங்கத்தின் கடிவாளம் உங்கள் கைக்கு வரவேண்டும் என்று நீங்கள் எண்ணவில்லை; கோடிக்கணக்கான இந்திய மக்கள் இன்புற்று வாழ விரும்புகிறீர்கள் என்றே நம்புகிறேன். அப்படித்தான் என்ருல், நாம் ஒன்றை மாத்திரமே கவனிக்க வேண்டும். கோடிக்கணக்கான மக்கள் சுயாட்சி அடைவது எப்படி என்பதையே கவனிக்க வேண்டும்.''‡

கம்யூனிஸ்டு வாதம் : தாங்களெல்லோரும் பிரத்யட்சவாதிகளென்றும், கனவுலகக் கருத்துக்கள் தங்களுக்குத் தேவையில்லை

---

* 'எங் இந்தியா' - 21—5—1925 † 'எங் இந்தியா' - 15—11—1928.

‡ மகாத்மா காந்தி எழுதிய 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலின் ஒரு அத்தியாயம். ('மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பு 675–76–ஆம் பக்கங்கள் பார்க்கவும்)

என்றும் கம்யூனிஸ்டுகள் வாதாடுகிறார்கள். சோஷலிஸ்டு புரட்சி, இன்று இருந்து வரும் மனித சுபாவத்தையே மாற்றிவிட வேண்டுமென்று விரும்புகிறார்கள். மனிதர்கள் இஷ்டப்படுவதை விடப் பெரிதும் பழக்க வழக்கங்களைக்கொண்டே வாழ்பவர்கள். அப்படி இருக்கும்போது, இப்பொழுதுள்ள பழக்க வழக்கங்களை மாற்றுவதற்குப் பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டியது அவசியமாகும். நாளடைவில் புதிய மதிப்பீடுகளை ஏற்றுக்கொள்ள மனிதர்கள் பழகிவிடுவார்கள். ஒருவருடைய சுயநலத்திற்காக வேலை செய்வதைவிட மனித சமூகத்திற்காக வேலை செய்ய வேண்டும்; முதலாளித்துவ அமைப்பிலிருப்பதைப் போல் பிறரைச் சுரண்டி வாழக்கூடாது என்பதையெல்லாம் கற்றுக் கொண்டு விடுவார்கள். இம்மாதிரியான அமைப்பை ஏற்படுத்துவதற்கு இப்போதுள்ள ஆட்சி அதிகாரத்தைப் பாட்டாளி மக்கள் பலாத்காரத்தின் மூலம் கைப்பற்ற வேண்டியிருக்கும். முதலாளித்துவ ஆட்சிக்குப் பதிலாகப் பாட்டாளி மக்களின் ஆட்சியை ஏற்படுத்துவது, பலாத்காரமான எழுச்சி இல்லாமல் சாத்தியமில்லை என்று கருதப்படுகிறது. பாட்டாளி மக்கள் வர்க்கம் என்பது ஓர் ஊன்றுகோல்தான், அதை வைத்துக்கொண்டு சமூகத்தை எந்தவிதமான சுரண்டல்களிலிருந்தும் விடுவிக்க வேண்டும். முதலாளித்துவச் சுரண்டலின் கடைசிச் சின்னம் அழிக்கப்படும் வரையில் பலாத்காரத்தை உபயோகிக்கலாம் என்று அனுமதிக்கப்படுகிறது. பாட்டாளி மக்கள் ஆட்சி என்பது தாற்காலிகமான முதல் கட்டம் என்றே கருதப்படுகிறது. சர்க்கார் ஆட்சி என்பது வாடி வதங்குவதே இறுதிக் கட்டம். முதல் கட்டத்தின் விளைவாக ஏற்படும் புரட்சிகரமான மாறுதல்களும், மக்களிடையே புகுத்தப்படும் புது மதிப்பீடுகளும் இந்த மாறுதலை உண்டாக்கி விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

**சர்வாதிகாரம், கொடுங்கோன்மையின் கருவியே :** கம்யூனிஸ்ட் கொள்கையின் வாதங்கள் பூராவையுமே காந்திஜி ஆட்சேபிக்கிறார். பலாத்காரத்தின் மூலம் ராஜீய அராஜகம் என்ற லட்சியத்தை அடைந்துவிட முடியும் என்ற கருத்தையும் அவர் ஆட்சேபிக்கிறார். பாட்டாளி மக்களின் சர்வாதிகாரமாயிருந்தாலும், மக்களின் நன்மைக்கான சர்வாதிகாரமாயிருந்தாலும், எந்தச் சர்வாதிகாரத்திலும் அவருக்கு நம்பிக்கை யில்லை. சர்வாதிகாரியிடம் அது கொடுங்கோன்மைக்கான ஒரு கருவியாகவே இருக்கும். ஆகையால், சர்வாதிகாரியினிடமோ, அரசாங்கத்தினிடமோ அவ்வளவு அதிக அதிகாரங்களை ஒப்படைக்க அவர் தயாராயில்லை. அதாவது, எந்தவிதமான சர்வாதிகாரத்தினிடமும் அவர் பாமர மக்களைப் பலியிடத் தயாராயில்லை. மனிதன் பழக்க வழக்கங்களின்படியேதான் வாழ்கிறான் என்பதை அவர் ஒப்புக் கொண்டாலும், சுரண்டலை ஒரு குறைந்த பட்ச அளவுக்குக் குறைப்பதற்கு வேண்டிய அகிம்சாபூர்வமான தார்மிக நிர்ப்பந்தத்தைச் சிருஷ்டிப்பதற்கான மனோஉறுதியை மனிதன் வளர்த்துக் கொள்ள முடியும் என்று அவர் கருதுகிறார். இது மெதுவான

தாக இருக்குமென்ருலும், இறுதியில் வெற்றி நிச்சயம். ஆமையும் முயலும் கதையில் இறுதியில் ஆமை வெற்றி பெற்றதைப் போல் இது கடைசியாக, காந்திஜியின் சுயராஜ்யம், ஒரு குறிப்பிட்ட பகுதியினர், அல்லது சில குறிப்பிட்ட வகுப்பினர்களுக்காக அல்ல. அதில் எல்லோருக்குமே இடமிருக்கிறது. ஆயினும், ஒரு முக்கிய நிபந்தனையும் இருக்கிறது. அதாவது, எல்லோரும் பாமர மக்களின் நலன்களுக்காக அதில் உழைக்க வேண்டும்.

இவற்றையெல்லாம் பற்றிக் காந்திஜி என்ன எழுதியிருக்கிருரென்பதைப் பரிசீலனை செய்வது ருசிகரமானதாக இருக்கும்.

## கம்யூனிஸ்டு வாதங்களுக்கு காந்திஜியின் பதில்கள்

I. வழிகள் பரிசுத்தமாயிருக்க வேண்டியதன் முக்கியம்: 1. "சோஷலிஸம் என்பது அழகான ஒரு சொல். எனக்குத் தெரிந்த வரையில் சோஷலிஸ அமைப்பில் சமூகத்திலுள்ள யாவரும் சமமாயிருப்பார்கள்—தாழ்ந்தவர்கள், உயர்ந்தவர்கள் என்று யாருமில்லை. ஒரு தனி மனிதனின் உடலில் தலை மேலே இருக்கிறது என்பதற்காகத் தலை உயர்ந்ததல்ல. உள்ளங்கால்கள் பூமியைத் தொடுகின்றன என்பதற்காக அவை தாழ்ந்தவையல்ல. மனிதனின் உடலில் எல்லா உறுப்புகளும் சமமாக இருப்பதைப் போலவேதான் சமூகத்திலுள்ளவர்களும் எல்லோரும் சமம். இதுதான் சோஷலிஸம்.

"இந்தச் சோஷலிஸம் தெள்ளத் தெளிவாயிருக்கிறது. ஆகையால், இதை அடைவதற்கும் களங்கமில்லாத தெளிவான வழிகளையே பின்பற்ற வேண்டும். அசுத்தமான வழிகளைப் பின்பற்றினுல் அசுத்தமான முடிவுதான் ஏற்படும். ஆகையால், ஓர் அரசனின் தலையைச் சீவிவிடுவதனுல் அரசனும், ஆண்டியும் சமமாகி விடுவதில்லை. முதலாளி, தொழிலாளி விஷயமும் இப்படித்தான். தலையைச் சீவிவிடுவதால் அவர்களுக்குள் சமத்துவம் ஏற்பட்டு விடாது. அசத்தியத்தின் மூலம் சத்தியத்தை அடைய முடியாது. சத்தியமான நடத்தையின் மூலம்தான் சத்தியத்தை அடைய முடியும் அகிம்சையும் சத்தியமும் இரட்டைப் பிறவிகளல்லவா? கண்டிப்பாக 'இல்லை' என்பதே இதற்குப் பதிலாகும். அகிம்சை சத்தியத்தில் ஆழ ஊறிக் கிடக்கிறது. அதைப் போலவே சத்தியமும் அகிம்சையில் ஊறிக் கிடக்கிறது. அதனுல் ஒரு நாணயத்தின் இரு புறங்கள் என்று சொல்லப்படுகிறது. இவ்விரண்டையும் ஒன்றிலிருந்து மற்ருென்றைப் பிரிக்க முடியாது. நாணயத்தைத் திருப்பி வாசித்துப் பாருங்கள். வார்த்தைகள் வேருயிருக்கும். ஆனுல், அதன் மதிப்பு ஒன்றேதான். அப்பழுக்கற்ற பரிசுத்தமில்லாமல் இந்த உயர்நிலையை எய்த முடியாது. உங்கள் உடலிலோ, உள்ளத்திலோ அசுத்தம் இருந்தால், உங்களிடம் அசத்தியமும் பலாத்காரமும் இருக்கின்றன என்றே அர்த்தம்.

"ஆகையால் அகிம்சை, சத்தியம், பரிசுத்த உள்ளம் ஆகியவைகளைக் கொண்ட சோஷலிஸ்டுகள்தான் இந்தியாவிலும், உலகத்திலும் சோஷலிஸ்டு சமுதாயத்தை அமைக்க முடியும். எனக்குத் தெரிந்தவரையில் உலகத்தில் முற்றிலும் சோஷலிஸ்டு நாடு என்று ஒன்றும் இல்லை. மேலே குறிப்பிட்ட முறைகளினுலன்றி அத்தகைய சமுதாயம் இயங்குவது அசாத்தியம்."*

---

* 'ஹரிஜன்' – 13—7—1947

2. ''லட்சியத்தையும், அதன் தன்மையையும் மிகத் தெளிவாய் வியாக்கியானம் செய்துவிட்டால்கூட, அதை அடைவதற்கான மார்க்கத்தை அறிந்து, அதைப் பயன்படுத்தினலொழிய லட்சியத்தை அடைய முடியாது. ஆகையால், அந்த மார்க்கங்களைக் காப்பாற்றுவதிலும், அவற்றைப் படிப்படியாக உபயோகிப்பதிலுமே முக்கியமாக நான் கவனம் செலுத்தி வந்திருக்கிறேன். மார்க்கங்களை நாம் சரிவரப் பார்த்துக் கொண்டால், லட்சிய வெற்றி நிச்சயம் என்று எனக்குத் தெரியும். நாம் லட்சியத்தை நோக்கி எவ்வளவு தூரம் போகிறோம் என்பது, பின்பற்றும் மார்க்கங்களின் பரிசுத்தத்தையே பொறுத்திருக்கிறது என்றும் நான் கருதுகிறேன். பாமர மக்களைச் சுரண்டி வாழ்க்கை நடத்தும் சமஸ்தானாதிபதிகள், ஜமீன்தார்கள் முதலியோர், நம்முடைய மார்க்கங்கள் குற்றமற்றவை என்பதை அறிந்துகொண்டால், நம்மைக் கண்டு பயப்படுவதையோ, சந்தேகப்படுவதையோ நிறுத்திவிடுவார்கள். நாம் யாரையும் நிர்ப்பந்தம் செய்ய விரும்பவில்லை. அவர்களின் மனத்தை மாற்றவே முயற்சிக்கிறோம். இந்த வழி ரொம்ப நீண்டதாகத் தோன்றலாம்; நீண்டதாகவும் இருக்கலாம். ஆனல், அதுதான் குறுக்குவழி என்று நான் உறுதியாக நம்புகிறேன்.''*

3. ''மார்க்கங்கள், வழிகளே முக்கியம் என்று நாம் வற்புறுத்துவதில் தான் வித்தியாசம் இருக்கிறது. லட்சியத்தைப் போலவே மார்க்கங்களும் அவ்வளவு முக்கியமானவை என்று நான் கருதுகிறேன். ஒரு வகையில் மார்க்கங்கள் இன்னும் அதிக முக்கியமானவை. ஏனெனில், அவை நம் சக்திக்குட்பட்டிருக்கின்றன. ஆனல், மார்க்கங்கள் நம் சக்திக்குட்பட்டில்லையென்றால் லட்சியத்திலும் சித்தி பெற முடியாது.'"†

4. ''அடுத்தபடியாக, ரகசிய முறைகளுக்கு வருவோம். ரகசிய முறைகள் தடுக்கப்பட வேண்டும் என்பதில் என்னுடைய உறுதி மாறவே இல்லை. இதற்கு என்னல் விதிவிலக்களிக்கவே முடியவில்லை. ரகசியத்தினல் எவ்வளவோ விஷமம் ஏற்பட்டிருக்கிறது. அதைக் கண்டிப்பாக அடக்காவிடில், இயக்கத்தை அது நாசம் செய்துவிடும். ரகசிய முறைகள் அவசியமாகும் சில அசாதாரண சந்தர்ப்பங்கள் இருக்கலாம். ஆனல், பயமற்று இருப்பதற்குப் பொது மக்களைப் பயிற்றுவிக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். அதற்காக அந்த ரகசிய முறைகளின் அனுகூலங்களையும் நான் கைவிட்டுவிடுவேன். குறிப்பிட்ட சில சமயங்களில் ரகசிய முறைகளைக் கையாளலாம் என்று அவர்கள் நினைக்கச் செய்து, அவர்களுடைய மனத்தைக் குழப்ப நான் விரும்பவில்லை. மக்களின் சாத்வீக எதிர்ப்புச் சக்தி வளர்ச்சி அடைவதற்கு ரகசியம் பாதகமானதாகும்.''‡

5. ''தலைமறைவாயிருந்து செய்யும் எந்த நடவடிக்கையும் எனக்குப் பிடிப்பதில்லை. கோடிக்கணக்கான மக்கள் தலைமறைவா யிருக்க முடியாது என்பது எனக்குத் தெரியும். கோடிக்கணக்கானவர்கள் அப்படித் தலைமறைவாய்ப் போக வேண்டிய அவசியமுமில்லை. தங்களுடைய நடவடிக்கைகளை ரகசியமாய்ச் செய்வதன் மூலம் மக்களுக்குச் சுயராஜ்யம் கொண்டு வந்து

---

* ஸ்ரீ. டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' தொகுப்பு 3 வது பாகம்-பக்கம் 376
† ஸ்ரீ. டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' தொகுப்பு 3 வது பாகம்-பக்கம் 384
‡ ஸ்ரீ. டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' தொகுப்பு 3 வது பாகம்-பக்கம் 377

விட முடியும் என்று குறிப்பிட்ட ஒரு சிலர் நினைக்கலாம். இது பாலூட்டி வளர்ப்பது போன்றதல்லவா? பகிரங்கமாக அறைகூவி அழைத்து, பகிரங்கமாகக் காரியங்களைச் செய்வதைத்தான் எல்லோரும் பின்பற்ற வேண்டும். உண்மையான சுயராஜ்யம் என்பது, ஆண், பெண், குழந்தை யாவரும் உணரக்கூடியதாக இருக்க வேண்டும். அதற்குப் பாடுபடுவதுதான் உண்மையான புரட்சி. உலகத்திலுள்ள சுரண்டப்படும் நாடுகளுக்கெல்லாம் இந்தியா ஓர் உதாரணமாக இருக்கிறது. ஏனெனில், நமது முயற்சி பகிரங்கமானது; ஆயுத பலமற்றது. நம்மைச் சுரண்டுபவர்களுக்குப் பாதகம் விளைவிக்காமல் நாமே தியாகம் செய்ய வேண்டுமென்று இது விதிக்கிறது. ஆயுத பலமற்ற, பகிரங்கமான இந்தப் போராட்டம் இல்லாதிருந்தால், இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் விழிப்படைந்திருக்க மாட்டார்கள். புரட்சியில் இரு வகைகள் இருக்கின்றன: ஒன்று, தலைகீழாக மாறும் புரட்சி; மற்றொன்று, நாம் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றின் விளைவாக ஏற்படும் மாறுதல்களின் முடிவில் தோன்றும் புரட்சி. நேர் வழியிலிருந்து மாறும்போதெல்லாம் இந்த இரண்டாவது புரட்சி தாற்காலிகமாகத் தடைப்பட்டுவிடுகிறது.''*

6. ''போல்ஷிவிஸம் என்பதன் முழுப் பொருளை இன்னும் நான் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். சொந்தச் சொத்தை ஒழித்துவிடுவதே போல்ஷிவிஸம் என்பதுதான் அதைப் பற்றி எனக்குத் தெரிந்த விஷயம். பற்றில்லாதிருத்தல் என்ற மனித தருமம் பொருளாதாரத் துறையில் பயன்படுத்தப்படுகிறது என்பதே இதன் பொருள். தானே மனமுவந்து, அல்லது சாத்விகமான மனமாற்ற முறைகளின் மூலம் இதை மக்கள் ஒப்புக்கொள்ளச் செய்துவிட்டால், அதைப்போல சிறந்தது வேறொன்றும் இராது. ஆனால், போல்ஷிவிஸத்தைப்பற்றி நானறிந்த வரையில், சொந்தச் சொத்தைப் பறிமுதல் செய்து, அரசாங்கத்திற்கே அது சொந்தம் என்ற உரிமையைப் பாதுகாப்பதற்குப் பலாத்காரத்தை உபயோகிக்கக் கூடாது என்று அது விலக்கவில்லை. அதற்கு மாறாக, பலாத்காரத்தை உபயோகிக்கலாம் என்று தாராளமாக அது அனுமதிக்கிறது. அப்படியானால், இப்போதுள்ள அமைப்பில் போல்ஷிவிக் ஆட்சி நீண்ட காலம் நிலைத்திருக்க முடியாது என்று சொல்லுவதில் எனக்குத் தயக்கமே இல்லை. ஏனெனில், பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டு நிரந்தரமான எதையும் அமைக்க முடியாது என்பது என்னுடைய திடமான நம்பிக்கை."†

**II. சர்வாதிகாரம், அரசாங்க சோஷலிஸத்தின் தீமைகள் :**

7. ''மக்களுக்கு நன்மையளிக்க என்றுள்ள சர்வாதிகாரத்தையோ, வேறெந்த விதமான சர்வாதிகாரத்தையோ நான் ஒப்புக்கொள்ள முடியாது. இதனால், பணக்காரர்கள் மறைந்து விடவும் மாட்டார்கள்; ஏழைகள் காப்பாற்றப்படவும் மாட்டார்கள். சில பணக்காரர்கள் கொல்லப்படுவது நிச்சயம்; சில ஏழைகளையும் ஊட்டி வளர்ப்பதுபோல் பார்த்துக் கொள்ளுவார்கள். பணக்காரர் வர்க்கம் என்பது அப்படியேதானிருக்கும். மக்களுக்கு நன்மையளிப்பதாகச் சொல்லப்படும் சர்வாதிகாரம் இருந்துங்கூட ஏழைகள் வர்க்கமும் அப்படியேதான் இருக்கும். அகிம்சாபூர்வமான ஜனநாயகமே இதற்கு உண்மையான பரிகாரம். அதாவது, எல்லோருக்கும் உண்மையான

* 'ஹரிஜன்' – 3—3—1946 † 'எங் இந்தியா' – 15—11—1928

அறிவூட்டுவது, பணக்காரர்களுக்கு தருமகர்த்தாக் கொள்கையையும், ஏழைகளுக்குத் தன்முயற்சியையும் கற்றுக்கொடுக்க வேண்டும்.''*

8. '''கடையனுக்கும் கதி மோட்சம்' என்பதே என்னுடைய சோஷலிஸத்தின் பொருள். குருடர்கள், செவிடர்கள், ஊமைகளைக் கொன்றுவிட்டு நான் உயர்வடைய விரும்பவில்லை. அவர்களுடைய சோஷலிஸத்தில் இத்தகையவர்களுக்கு இடமில்லையோ, என்னவோ! லோகாயத முன்னேற்றம் ஒன்றுதான் அவர்களுடைய நோக்கம். உதாரணமாக, ஒவ்வொரு பிரஜைக்கும் ஒரு மோட்டார் இருக்க வேண்டும் என்பதை அமெரிக்கா லட்சியமாக விரும்புகிறது. நான் அப்படி விரும்பவில்லை. என்னுடைய தனித் தன்மை பரிமளிப்பதற்கு முழு சுதந்திரம் இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். நான் இஷ்டப்பட்டால் ஸிரியஸுக்கு† மாடிப்படி கட்ட எனக்கு உரிமை இருக்க வேண்டும். இதனால், நான் அப்படிச் செய்ய விரும்புகிறேன் என்று அர்த்தமல்ல. அவர்களுடைய அந்தச் சோஷலிஸத்தில் தனி நபர் சுதந்திரம் இல்லை. உங்களுடைய உடல்கூட உங்களுக்குச் சொந்தமில்லை.'' ‡

III. பழக்கத்தாலன்றி மன உறுதியில் வாழக் கற்றுக்கொள்ளுதல் :

9. ''பழக்க வழக்கங்களை அனுசரித்தேதான் மனிதன் வாழ்க்கையை நடத்துகிறான் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும், தனது மன உறுதியைக் கொண்டே மனிதன் வாழ்வதுதான் நல்லது என்று நம்புகிறேன். சுரண்டலை ஒரு குறைந்தபட்ச அளவுக்குக் குறைத்துவிடக்கூடிய விதத்தில் மனிதர்கள் தம் மனோ உறுதியை வளர்க்க முடியும் என்று நான் நம்புகிறேன். அரசாங்கத்தின் அதிகாரம் விரிவடைந்து கொண்டே போவது எனக்குப் பெரும் திகிலாயிருக்கும். அதனால் சுரண்டல் குறைந்து நன்மை ஏற்படுவதுபோல் தோன்றினாலும், அது மிகப் பெரும் தீங்கை இழைத்து விடுகிறது. ஏனெனில், எந்த முன்னேற்றத்திற்குமே ஆணிவேர் போன்ற மனிதனுடைய தனித் தன்மையை அது அழித்து விடுகிறது.''§

10. ''இந்த நிலைமையை (அதாவது சோஷலிஸத்தை) அடைவதற்கு எல்லோரும் சோஷலிஸப் பாதையை ஒப்புக்கொள்ளும் வரையில் நாம் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என வேதாந்தம் பேசிக்கொண்டிருக்கக் கூடாது. நம்முடைய வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளாமல் நாம் பிரசங்கங்கள் செய்துகொண்டிருக்கலாம்; கட்சிகள் அமைத்துக்கொண்டிருக்கலாம்; வேட்டை நம் பக்கம் வரும்போது பருந்தைப் போல் பாய்ந்து அதைப் பற்றிக்கொள்ளலாம் இதுவல்ல சோஷலிஸம். வேட்டையாடிப் பற்றிக்கொள்ள வேண்டிய பொருளாக எவ்வளவுக்கெவ்வளவு நாம் அதைக் கருதுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அது நம்மை விட்டுத் தொலைவில் போய்க்கொண்டுதான் இருக்கும்.

''யாருக்கு முதலில் மனமாற்றம் ஏற்படுகிறதோ, அவருடன் சோஷலிஸம் ஆரம்பமாகிறது. அப்படி ஒருவர் இருந்தாலும், அந்த ஓர் எண்ணிக்கையுடன் சுன்னங்களைச் சேர்த்துக்கொண்டு போகலாம். முதல் சுன்னத்தைச் சேர்க்கும்போது, எண்ணிக்கை பத்தாகும். ஒவ்வொரு தரம் சுன்னத்தைச் சேர்க்கும்போதும் ஏற்கனவே இருந்ததைவிட அது பத்து மடங்கு அதிகமான

---

* 'ஹரிஜன்' – 8—6—1940

† ஸிரியஸ் என்பது நமக்குச் சமீபமாக ஆகாயத்தில் உள்ள ஒரு நட்சத்திரம் இது, நிலையான எல்லா நட்சத்திரங்களையும்விட அதிகப் பிரகாசமானது.

‡ 'ஹரிஜன்' – 4—8—1946

§ 'மாடர்ன் ரெவியூ'—அக்டோபர், 1935

தாகும். ஆனால், ஆரம்பமே சுன்னமாயிருந்தால், அதாவது யாருமே ஆரம்பிக்கவில்லை யென்றால், எவ்வளவு சுன்னங்களைச் சேர்த்தாலும் அதற்கு ஒரு மதிப்பும் இராது. இதை எழுதுவதற்குச் செலவாகும் காகிதமும், காலமும் வீண் வியர்த்தமே.''

11. ''மனித சுபாவத்தில் இம்மாதிரி மாறுதல் இருந்ததாகச் சரித்திரத்தில் ஏதாவது உதாரணம் இருக்கிறதா என்று கேட்கலாம். அத்தகைய மாறுதல்கள் தனி நபர்களிடம் ஏற்பட்டுத்தான் இருக்கின்றன. ஒரு சமுதாயத்தில் அத்தகையவர்களைச் சுட்டிக் காட்ட முடியாமலிருக்கலாம். இது வரையில் பெரும் அளவில் அகிம்சைச் சோதனை செய்து பார்க்கப்படவில்லை என்பதே அதற்குப் பொருள். அகிம்சை என்பது, முக்கியமாகத் தனிப்பட்ட மனிதனின் ஆயுதம் என்றும், ஆகையால், தனி மனிதர்களே அதை உபயோகிக்க வேண்டும் என்றும் எப்படியோ ஒரு தப்பெண்ணம் நம்மைப் பிடித்துக் கொண்டுவிட்டது. உண்மையில் இது சரியல்ல. அகிம்சை என்பது, சமூகத்திற்கே சிறப்பான ஒன்றுதான். இந்த உண்மையை ருசுப்படுத்துவதுதான் என்னுடைய உடனடியான முயற்சியும் சோதனையுமாகும்.''*

IV. காந்தீய வழி—அறிவூட்டுதலும், சத்தியாக்கிரகமும் :

12. ''சுயராஜ்ய யாத்திரை, மலை ஏறுவதைப்போல் சங்கடமானது. அதில் எல்லா விவரங்களையும் சரியாகக் கவனிக்க வேண்டும். காரியங்கள் நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும் திறமை நிறைய வேண்டும். கிராம வாசிகளுக்குத் தொண்டு செய்வதென்ற ஒரே நோக்கத்துடன் கிராமங்களுக்குச் செல்ல வேண்டும். அதாவது, தேசீயக் கல்வி, பாமர மக்களுக்கு அறிவூட்டுதல், மக்களிடையே தேசீய விழிப்பை ஏற்படுத்துவது என்பதே இதன் பொருள். செப்படிவித்தைக்காரன் கூடைக்குள் மாஞ்செடி முளைக்க வைப்பதைப்போல் இதைத் திடீரென்று செய்துவிட முடியாது. ஆலமரத்தைப் போல் அநேகமாக நம்மை அறியாமலேயே அது வளர்ந்து கொண்டிருக்கும். ரத்தக்களறியை உண்டாக்கும் பலாத்காரப் புரட்சியின் மூலம் இது சாத்தியமே இல்லை."†

13. ''ஆனால், இந்தச் சீர்திருத்தத்தை அவசரத்தில் செய்துவிட முடியாது என்பதையும் உணர வேண்டும். அகிம்சையின் மூலம் இதைச் செய்ய வேண்டுமென்றால், பணக்காரர்கள், ஏழைகள் ஆகிய இருவருக்குமே விஷயத்தைப் புரிய வைப்பதன் மூலம் செய்யலாம். ஒருநாளும் பலாத்காரத்தை உபயோகிக்கமாட்டோம் என்று பணக்காரர்களுக்கு உறுதி கூற வேண்டும். தம்முடைய இஷ்டத்திற்கு விரோதமாக எதையும் செய்யும்படி யாரும் உண்மையில் கட்டாயப்படுத்த முடியாது என்பதையும், அகிம்சைக் கலையை, அதாவது தாமே கஷ்டங்களை அனுபவிப்பதன் மூலம் அவர்கள் சுதந்திரம் பெறமுடியும் என்பதையும் ஏழைகள் உணரும்படி செய்ய வேண்டும். நமது நோக்கம் நிறைவேற வேண்டுமானால், நான் குறிப்பிட்டுள்ள இந்தக் கல்வி இப்போது முதலே ஆரம்பமாக வேண்டும். பூர்வாங்க நடவடிக்கையாக, பரஸ்பர மரியாதையும், நம்பிக்கையும் உள்ள ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். அந்த நிலைமையில் பணக்காரர்களுக்கும், ஏழைகளுக்கு மிடையே பலாத்காரமான மோதல் எதுவும் இருக்க முடியாது.''‡

---

* 'ஹரிஜன்' - 13—7—1947 † 'ஹரிஜன்' - 5—8—1940

‡ 'ஹரிஜன்' – 25—8—1940

14. ''பிறரைத் தம் வழிக்குத் திருப்புவதே அகிம்சா ஊழியரின் நோக்கமாக இருக்க வேண்டும். ஆயினும், முடிவே யில்லாமல் அவர் காத்துக் கொண்டிருக்கவும் கூடாது. ஆகையால், ஓர் எல்லையை அடைந்தவுடன் சில ஆபத்துக்களுக்கும் அவர் தயாராக வேண்டும். தீவிரமான சத்தியாக்கிரக நடவடிக்கைகளை அவர் திட்டமிட வேண்டும். இந்த நடவடிக்கைகள் சட்ட மறுப்பு போன்றவைகளாகவும் இருக்கலாம். தன்னுடைய கொள்கையை விட்டுக் கொடுத்து விடும்படி அவருடைய பொறுமை ஒரு நாளும் சோர்ந்து விடாது.''*

15. ''தீவிரமான அகிம்சையைப் பின்பற்றும் யாரும், சமூக அநீதி எங்கு இழைக்கப்பட்டாலும், அதை எதிர்த்து ஆட்சேபிக்காமலிருக்க முடியாது. துரதிருஷ்டவசமாக, எனக்குத் தெரிந்த வரையில், மேல்நாட்டு சோஷலிஸ்டுகள், சோஷலிஸ்டு கொள்கைகளை அமுலாக்குவதற்குப் பலாத்காரத்தின் அவசியத்தை நம்புகிறார்கள். மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ள வர்களின் விஷயத்தில்கூட, பலாத்காரத்தின் மூலம் சமூக நீதி கொஞ்சம்கூட சாத்தியமில்லை என்றே எப்பொழுதும் நான் கருதி வந்திருக்கிறேன். மேலும், சரியான பயிற்சியளிக்கப்பட்டால், மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள் கூட, அகிம்சை முறைகளின் மூலம் தமக்கிழைக்கப்படும் தவறுகளுக்குப் பரிகாரம் பெறுவது சாத்தியம் என்றும் எப்போதும் நான் சொல்லி வந்திருக் கிறேன். சாத்விக ஒத்துழையாமையே அந்த முறையாகும். சில சமயங் களில் ஒத்துழைப்பைப் போலவே ஒத்துழையாமையும் ஒரு கடமையாகி விடுகிறது. தனக்குக் கேடு விளைவிக்கக்கூடிய ஒன்றுடனே, அல்லது தன் னுடைய அடிமைத்தனத்துக்கோ யாரும் ஒத்துழைக்கவேண்டும் என்பதில்லை. மற்றவர்களின் முயற்சிகளினால் கிடைக்கும் சுதந்திரம் எவ்வளவுதான் நன்மை யளிப்பதா யிருந்தாலும், அந்த முயற்சிகள் இல்லாமற் போய்விடும்போது அதைக் காப்பாற்ற முடியாது. அதாவது, அத்தகைய சுதந்திரம் உண்மை யான சுதந்திரம் அல்ல. ஆனால், சாத்விக ஒத்துழையாமையின் மூலம் அதை அடையும் வித்தையைக் கற்றுக்கொண்டு விட்டால், மிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர்கள்கூட அதன் பெருமையை உணர முடியும்.''†

16. ''தகுதியுள்ள எந்தக் காரியத்தையும் சத்தியாக்கிரகத்தின் மூலம் அடைய முடியும் என்று பயமின்றியும், உறுதியாகவும் நான் கூறுகிறேன். இது மிகவும் உயர்தரமானதும், தோல்வியே இல்லாததுமான வழியாகும்; மிகச் சிறந்த சக்தியுமாகும். வேறு எந்த வழியினாலும் சோஷலிஸத்தை அடைய முடியாது. ராஜீயம், பொருளாதாரம், தார்மிகம் ஆகிய எல்லாத் துறை களிலும் உள்ள கேடுகளைச் சத்தியாக்கிரகம் சமூகத்திலிருந்து அகற்றிவிடும்''‡

சோஷலிஸ யுகத்தை ஸ்தாபிப்பதற்குக் காந்திஜி கூறும் பரிகாரம் இரு விதமானது: (1) பாமர மக்களுக்கு விஷய அறிவை ஊட்டுவது. (2) சத்தியாக்கிரகம். முதலாவது, நீண்ட கால வழி. இரண்டாவது, குறைகளைப் போக்குவதற்கு உடனடியான, பலனளிக்கத்தக்க வழி.

---

* 'ஹரிஜன்' - 20—4—1940 † 'எங் இந்தியா' – 6—2—1930

‡ 'ஹரிஜன்' – 20—4—1940

**சத்தியாக்கிரகத்தின் உண்மையான தன்மை :** சத்தியாக்கிரகத்தின் உண்மையான தன்மை என்ன என்பதைப் பல வருடங்களுக்கு முன்பு கோபால கிருஷ்ண கோகலே விவரித்திருக்கிருர். "அது முக்கியமாகத் தற்காப்புத் தன்மை வாய்ந்ததாகையால், தார்மிக, ஆன்மிக ஆயுதங்களுடன் போராட்டம் நடக்கிறது...... தானே கஷ்டங்களை அனுபவிப்பதன் மூலம் கொடுங்கோன்மையுடன் போராடுகிறது. மிருக பலத்திற்கெதிராக ஆன்மிக பலம் நிறுத்தப்படுகிறது ; அடக்குமுறைக்கு எதிராகக் கஷ்டத்தை அனுபவிப்பதையும், வல்லமைக்கெதிராக மனச்சாட்சியையும், அநீதிக்கெதிராக நம்பிக்கையையும், தவறுக்கெதிராக நியாயத்தையும் அது கொண்டு வந்து நிறுத்துகிறது." சத்தியாக்கிரகம் அல்லது சத்திய சக்தியில், சத்தியத்தைக் காப்பாற்றுவதற்கான எல்லா சாத்விக எதிர்ப்புகளும் அடங்கியிருக்கின்றன. ஒத்துழையாமையையும், சட்ட மறுப்பையும், தனி நபர் நடத்தினலும், சர்வஜன அடிப்படையில் நடத்தப்பட்டாலும், அவையெல்லாம் சத்தியாக்கிரகத்தின் கிளைகளே. அகிம்சை என்ற தோட்டத்திலுள்ள இந்தக் கன்றுகளெல்லாம், சத்தியாக்கிரகத்திலிருந்து பிறந்தவைகளே. அவற்றின் தன்மை, பிரயோகம் ஆகியவைகளை விரிவாக விவாதிப்பதற்கு இங்கு இடமில்லை. ஆயினும், அவை யாவும் தீங்கற்றவை. அவற்றில் சில, மற்றவைகளைவிட அவ்வளவு சக்தி வாய்ந்தவைகளாய் இல்லாமல் இருக்கலாம். ஆனல், அவற்றைச் சாமர்த்தியமாகத்தான் கையாள வேண்டும். எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் உபயோகித்துவிடவும் கூடாது. சத்தியாக்கிரகம் என்பது பலவீனர்களின் ஆயுதமாகக் கருதப்படவில்லை என்பது இதிலிருந்து தெளிவாகும். சத்தியாக்கிரகியின் அகராதியில் தோல்வி என்ற சொல்லுக்கே இடமில்லை.

**நடைமுறையில் வித்தியாசங்கள் :** நடைமுறையில் இந்திய சோஷலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகளின் கொள்கைகளை காந்திஜி எதிர்த்ததற்கு நியாயமான, உண்மையான காரணங்கள் இருந்தன. *1934*-இல் காங்கிரஸில் சோஷலிஸ்டுக் கட்சி ஏற்பட்டதைக் காந்திஜி வரவேற்ருர். ஆனல், பின்கண்ட காரணங்களுக்காக அவர்களுடைய வேலைத்திட்டத்தை அவர் ஆதரிக்கவில்லை: (*1*) இந்தியாவிலுள்ள நிலைமையை அவர்களுடைய திட்டம் கவனிக்கவில்லை. (*2*) பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமிடையே, தொழிலாளருக்கும் முதலாளிக்குமிடையே முரண்பாடுகள் இருக்கத்தான் செய்கின்றன ; அவர்கள் பரஸ்பர நன்மைக்காக ஒரு போதும் வேலை செய்ய முடியாது என்ற ஒரு கருத்து அவர்களுடைய திட்டங்கள் பலவற்றிலும் காணப்படுகிறது. (*3*) தொழிலாளர்களின் கடமைகளைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் அவர்களுடைய உரிமைகளைப் பற்றி அளவுக்கு மீறி வற்புறுத்தப்பட்டிருக்கிறது. (*4*) ஒரு கட்சி என்ற முறையில் அவர்கள் அவசரப்படுகிருர்கள். (*5*) முடிவைத்தான் சோஷலிஸ்டுகள் முக்கியமாகக் கருதுகிருர்கள். ஆனல், காந்திஜி முடிவை அடைவதற்கான வழிகளே முக்கியம் என்று கருதினர்.

இந்தக் காரணங்களெல்லாம் இந்தியக் கம்யூனிஸ்டுகள் விஷயத்திலும் பொருந்தும். "கம்யூனிஸ்டுகள் நியாயம், அநியாயம், சத்தியம், பொய் ஆகியவைகளிடையே ஒரு வித்தியாசமும் காட்டவில்லை." இரண்டாவதாக, அவர்களுக்கு இந்த நாட்டைத் தாண்டி வெளியிலும் விசுவாசம் இருந்தது. சுயமரியாதை, கௌரவம் இரண்டுக்கும் இது மிகுந்த அவமானம் என்று காந்திஜி கருதினார். வெளிநாட்டினரின் பிச்சையை நம்பியிருக்க வேண்டிய ஒரு நாடு, இருப்பதற்கே தகுதியில்லை. வெளிநாட்டினரின் கொள்கைகளுக்கும் இது பொருந்தும். இந்திய நிலைமைகளுக்கேற்றவாறு இவற்றை மாற்றிக்கொண்டால் காந்திஜி ஏற்றுக்கொள்ளுகிறார்.

## உழைத்துச் சாப்பிடுவது

**நம்முடைய வாழ்வின் அடிப்படைச் சட்டம்:** காந்திஜி எண்ணும் பஞ்சாயத்து ராஜ்யத்தில் ஒரு பிரஜை, தன்னுடைய உடலுழைப்பினால் யோக்கியமான ஜீவனத்திற்குச் சம்பாதிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற நூலை வாசித்த பிறகு காந்திஜி, உடலுழைப்பு என்ற கொள்கைக்கு மதிப்புக் கொடுக்க ஆரம்பித்துவிட்டார். டால்ஸ்டாயின் நூல்களையும் படித்த பிறகு இது அவருக்கு ஒரு சட்டத்தைப் போலாகிவிட்டது. ஒரு ஆணோ, பெண்ணோ வாழ வேண்டுமானால், தன் சொந்த உடலுழைப்பினால் வேலை செய்து சம்பாதிக்கவேண்டும் என்று டி.எம். பான்டரெப் என்ற ஒரு ரஷிய அறிஞர் கூறியிருக்கிறார். டால்ஸ்டாய் இதை ஏற்றுக்கொண்டு பிரபலப்படுத்தினர். "ஆரோக்கியமாக உள்ள ஒவ்வொருவரும் தன் வயிற்றுக்கு வேண்டிய அளவு சம்பாதிப்பதற்கு வேலை செய்ய வேண்டும். வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிப்பதற்காகவோ, செல்வம் திரட்டுவதற்காகவோ ஒருவருடைய அறிவைப் பயன்படுத்தக்கூடாது. அந்த அறிவை மனித வர்க்கத்திற்குத் தொண்டு புரிவதற்கே பயன்படுத்தவேண்டும் என்பதே இச்சட்டத்தின் உட்கருத்து."* இதுவே நமது வாழ்வின் அடிப்படைச் சட்டம்.

**"கடையனுக்கும் கதி மோட்சம்" என்பதிலுள்ள உபதேசங்கள்:** பிழைப்புக்காக உழைப்பு என்பது, ஏதாவது ஓர் உபயோகமான உடலுழைப்பாக இருக்கலாம். இந்த விஷயங்களில், "கடையனுக்கும் கதி மோட்சம்" என்ற நூலிலுள்ள உபதேசங்கள் காந்திஜிக்கு வழிகாட்டிகளாயிருந்தன. அவர் அறிந்தபடி அவை இவையே:

(அ) எல்லோருடைய நலனில்தான் தனிப்பட்டவரின் நலனும் அடங்கியிருக்கிறது.

---

* 'ஹரிஜன்' - 14—11—1948

(ஆ) தங்கள் உழைப்பினுல் ஜீவனேபாயத்தைத் தேடிக்கொள்ளுவதற்கு எல்லோருக்குமே ஒரே மாதிரியான உரிமை இருப்பதால், க்ஷவரத் தொழிலாளியின் வேலைக்கு இருக்கும் அதே மதிப்புத்தான் வக்கீலின் வேலைக்கும் உண்டு.

(இ) ஒரு பாட்டாளியின் வாழ்க்கையும், அதாவது நிலத்தில் உழுது பாடுபடும் குடியானவரின் வாழ்க்கையும், கைத்தொழில் செய்பவரின் வாழ்க்கையுமே வாழ்வதற்கு உகந்த மேன்மையான வாழ்க்கைகள்.*

**விவசாயமே லட்சிய வேலை :** உண்மையில் பார்க்கப்போனுல், பிழைப்புக்காக உழைப்பது என்பது விவசாயத்திற்குச் சம்பந்தமுள்ளதாகத்தான் இருக்க முடியும். ஆனுல், ஒவ்வொருவருமே அதை மேற்கொள்ளும் நிலைமையில் இல்லாததால், சிலர் நூற்கலாம், அல்லது நெய்யலாம், அல்லது தச்சு வேலை செய்யலாம், அல்லது கருமான் தொழில் நடத்தலாம். நிலத்தை உழுவதற்குப் பதிலாக இவற்றில் ஒன்றைச் செய்யலாம். ஆனுல், விவசாயம் தான் லட்சிய வேலையாகக் கருதப்படுகிறது. மேலும், ஒவ்வொருவரும் தனக்குத் தானே தோட்டியாக இருக்க வேண்டும். தன்னுடைய மலத்தைத் தானே அப்புறப்படுத்த வேண்டும். அதாவது, மனிதனுக்கு அத்தியாவசியமான பொருள்களின் உற்பத்தியும், அத்தியாவசியமான தொழில்களில் வேலைசெய்வதும் பிழைப்புக்காக உழைப்பு எனப்படும்.

**அவசியமான நிபந்தனைகள் :** உடலுழைப்பு என்பதற்காக அதற்கு அதனளவில் தனி மதிப்பு ஒன்றுமில்லை. உற்சாகமோ, அக்கறையோ இல்லாமல், ஏதோ கடனுக்காகச் செய்து தொலைக்கிறும் என்ற மனப்பான்மையில் வேலை செய்யலாம். அது அடிமை நிலையாகும். ஆகையால், மனமுவந்து வேலை செய்வதே பிழைப்புக்காக உழைப்பதன் முக்கியமான முதல் நிபந்தனையாகும். வேலை செய்யவேண்டும் என்பதற்காகப் பெரும்பாலோர் தம்மை வேலையில் ஈடுபடுத்திக்கொள்ளமாட்டார்கள். தம்முடைய வாழ்க்கைக்காக வேலை செய்தாக வேண்டும் என்று இருந்தாலொழிய அதற்கு ஊக்கம் பிறக்காது. காந்திஜியைப் போல், தாமாகவே மனமுவந்து தொழிலாளியாக வேண்டுமேயன்றிச் சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தத்தினுல் ஆகக்கூடாது.

காந்திஜி பின்வருமாறு கூறியிருக்கிறுர் : "வலுக்கட்டாயத்தின்மீது ஓர் எஜமானனுக்குக் கீழ்ப்படிவது அடிமைத்தன்மையேயாகும். மனமுவந்து தகப்பனுருக்குக் கீழ்ப்படிவது, மகனுக்குப் பெருமையாகும். அதேமாதிரி பிழைப்புக்காக உழைப்பு என்று நிர்ப்பந்தத்தின் மீது வேலை செய்வது, வறுமை, வியாதி, அதிருப்தி ஆகியவைகளை வளர்க்கிறது. அது அடிமை நிலையே

---

* மகாத்மா காந்தி எழுதிய 'சுய சரித்திரம்'—4 வது பாகம், 18 வது அத்தியாயம் ('மகாத்மா காந்தி நூல்கள்' மூன்றும் தொகுப்பு 393-ஆம் பக்கம் பார்க்கவும்).

ஆகும். மனமுவந்து அதற்குக் கீழ்ப்படிவது திருப்தியையும், ஆரோக்கியத்தையும் அளிக்கிறது."*

பிழைப்புக்காக உழைப்பு என்பது புத்திசாலித்தனமானதாகும் என்பது அதனுடைய மற்றொரு சிறப்பாகும். புத்திசாலித்தனத்தையும், உழைப்பையும் பிரிக்க முடியாது. இந்தக் கொள்கையை அனுசரிக்கத் தவறியதால் இந்தியாவிலுள்ள கிராமங்கள் படுமோசமாகப் புறக்கணிக்கப்பட்டுவிட்டன.

"புத்திசாலித்தனமான உழைப்பு என்று சொல்லுவதன் பொருள் என்ன? உழைப்பு ஒரு சமூக சேவையா யிருக்க வேண்டுமானால், குறிப்பிட்ட அந்த நோக்கம் அந்த உழைப்பில் இருக்கவேண்டுமென்பதே அதன் அர்த்தம். இல்லாவிடில், ஒவ்வொரு தொழிலாளியுமே சமூக சேவை செய்வதாகச் சொல்லி விடலாம். ஒரு வழியில் அவர்கள் சமூக சேவையே செய்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், இங்கே குறிப்பிடுவது அதைவிட அதிகமானது. எல்லோருடைய நன்மைக்காகவும் வேலை செய்யும் ஒருவர், சமூகத்திற்குத் தொண்டு செய்கிறார். அவருக்குரிய ஊதியத்தை அளிக்க வேண்டும். ஆகையால் பிழைப்புக்கான அத்தகைய உழைப்பு சமூக சேவையிலிருந்து மாறுபட்டதல்ல."†

பிழைப்புக்காக உழைப்பு என்ற கொள்கை சமூக சேவைக்கு முரண்பட்டதல்ல என்பது இதிலிருந்து தெளிவாகிறது. "பிழைப்புக்காகப் புத்திசாலித்தனமான முறையில் உடலுழைப்பு செய்வது, என்றுமே மிகவும் உயர்ந்த சமூக சேவையாகும்.‡ இதனால், தேசத்தின் பிரயோசனமான செல்வம் அதிகமாகிறது.

பிழைப்புக்கான உழைப்பு பொது நன்மைக்காகச் செய்யப்படுகிறதென்பது, அதனுடைய மூன்றாவது சிறப்பாகும். ஆசை இல்லாமலும், தொண்டு, தியாக உணர்ச்சியுடனும் அந்த உழைப்பு அளிக்கப்படுகிறது. பிழைப்புக்கான உழைப்பின் நியதிக்குக் கீழ்ப்படிவது, சமூகத்தின் அமைப்பில் வெளிக்குத் தெரியாமல் ஒரு புரட்சியை உண்டாக்கி வருகிறது. வாழ்க்கைப் போராட்டத்திற்குப் பதிலாகப் பரஸ்பரம் தொண்டு புரிவதற்குப் போராட்டம் ஏற்படுகிறது. காட்டுத்தனமான சட்டத்திற்குப் பதிலாகத் தொண்டு செய்யும் நியதி ஏற்படுகிறது. தம்மை அர்ப்பணித்துக்கொண்டிருக்கிறோம் என்ற உணர்ச்சியுடன் வேலை செய்பவர்கள், தமது உழைப்பினால் ஜீவனத்திற்கு வேண்டியதைப் பெறுகிறார்கள் என்பது உண்மையே. ஆனால், ஜீவனோபாயம் அவர்களுடைய முக்கியமான நோக்கமல்ல. அவர்கள் செய்யும் வேலையின் ஒரு விளைவுதான் அது. "தியாக வாழ்வே கலையின் சிகரம்; அதில்தான் முழு மகிழ்ச்சியும் நிறைந்திருக்கிறது."§ நல்லொழுக்கத்தைப் போலவே தொண்டுதான் தொண்டுக்கு வெகுமதி.

* 'ஹரிஜன்' - 29—6—1935 † 'ஹரிஜன்' – 1—6—1935

‡ 'ஹரிஜன்' – 1—6—1935

§ மகாத்மா எழுதிய 'எரவாடா மந்திர்' – அத்தியாயங்கள் 14, 15.

**இந்திய சமூகத்தில் உழைப்புக்குள்ள கேவலம்:** துரதிருஷ்ட வசமாக உடலுழைப்பு செய்பவர்களுக்கு ஹிந்து சமூகத்தில் ஒரு தாழ்ந்த நிலை கொடுக்கப்பட்டிருக்கிறது. உடலை உழைத்து வாழ்பவர்களைத் தமக்குச் சமமானவர்களாக உயர்ந்த வகுப்பினர் கருதுவதில்லை. இன்று இந்தியாவில் பணக்காரர்களும், உயர் வகுப்பினர் என்று சொல்லப்படுபவர்களும் உடலுழைப்பை ஏள னமாக எண்ணுகிறார்கள். ஆகையால், உடலுழைப்பு கௌரவ மானது என்பதை வற்புறுத்துவது மிகவும் அவசியம் என்று காந்திஜி கருதினார். "நாணயமாகச் சம்பாதிக்க விரும்புபவருக்கு எந்த வேலையும் இழிவானதல்ல. கடவுள் நமக்குக் கொடுத்துள்ள கைகளையும், கால்களையும் நாம் உபயோகிக்கத் தயாராயிருக்க வேண்டும் என்பதே முக்கியம்."* "உடலுழைப்பில் ஈடுபடுவது அவமானம் என்று தவறாக நினைக்கப்படுகிறது. இதை ஒழிக்க முடிந்துவிட்டால், சராசரி புத்திசாலித்தனம் உள்ள ஆண்களுக்கும், பெண்களுக்கும் வேண்டிய வேலை இருக் கிறது."† ஆரோக்கியமாக உள்ள ஒருவர், தம்முடைய ஜீவனத் திற்காக ஏதாவது வேலை செய்யவில்லை யென்றால் அவருக்கு இலவசமாக உணவளிக்கக் காந்திஜியின் அகிம்சை இடம் கொடுக்காது.

**புத்திபூர்வமான உழைப்புக்கும் உடலுழைப்புக்கும் முரண்பாடு இல்லை:** புத்தி பூர்வமான உழைப்பும் உடலுழைப்பும் ஒன்றுக் கொன்று முரணானவை என்று இந்த நாட்டில் பொதுவான நம்பிக்கை இருந்துவருகிறது. புத்திசாலித்தனத்தின் வளர்ச்சி என்பது என்ன என்று நமக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டால், அத்தகைய முரண்பாடு எதுவும் இராது. "பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மைகள் தெரிந்திருப்பதே அறிவு வளர்ச்சி என்று கருதப்படுகிறது." இது உண்மையான அறிவாகாது. பிறர் கருத்தைப் புரிந்துகொள்ள முடிவதும், பாகுபாடு செய்யத் தெரி வதுமே அறிவு வளர்ச்சியைக் காட்டுகிறது.

"புத்தகங்களின் மூலம்தான் அறிவு பெற முடியும் என்று நினைப்பது முற்றிலும் மூடநம்பிக்கையாகும். இந்தத் தவறை நாம் நீக்க வேண்டும். புத்தகங்கள் படிப்பதற்கு வாழ்க்கையில் ஓர் இடம் உண்டு. ஆனால், ஓரள வுக்குத்தான் அதனால் உபயோகமுண்டு. உடலுழைப்பைப் புறக்கணித்து விட்டு, புத்தக அறிவை வளர்த்தால், அதை நாம் எதிர்த்துப் புரட்சி செய்ய வேண்டும்......உண்மையான அறிவு வளர்ச்சிக்குக்கூட பிரயோசனமான ஏதாவது ஓர் உடலுழைப்பில் நாம் ஈடுபட வேண்டும்."‡

பிழைப்புக்கான உழைப்பினால், புத்திசாலியான ஒருவரு டைய உற்பத்தியின் தரம் உயருகிறது என்ற அதே கருத்து பின் கண்ட வாக்கியங்களிலும் காணப்படுகிறது :

"புத்தி பூர்வமான வேலை முக்கியமானதே. வாழ்க்கையில் அதற்கு ஓர் இடமுண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால், உடலுழைப்பின் அவசி

---

* 'ஹரிஜன்' – 19–12–1936 † 'ஹரிஜன்' – 1–3–1935
‡ 'ஹரிஜன்' – 28–11–1948

யத்தையே நான் வற்புறுத்துகிறேன். அந்தப் பொறுப்பிலிருந்து யாருக்குமே விலக்கு இருக்கக்கூடாதென்று நான் நினைக்கிறேன். புத்திபூர்வமான வேலையின் தரத்தையேகூட உயர்த்துவதற்கு உடலுழைப்பு உதவியாயிருக்கும்.''*

புத்திபூர்வமான வேலையும், பிழைப்புக்கான உழைப்பும் தமக்குரிய இடங்களில் சேர்ந்து செயல்பட முடியும். ஒன்றின் இடத்தை இன்னொன்று நிரப்ப முடியாது. பின்கண்ட பகுதியில் இந்தக் கருத்து தெளிவாக விளக்கப்படுகிறது:

''புத்திபூர்வமான வேலையின் மதிப்பை நான் குறைத்துக் கூறவில்லை. ஆனால், அந்தத் துறையில் எவ்வளவுதான் வேலை செய்தாலும் அது உடலுழைப்புக்குச் சமானமானதாகாது. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும், பொது நன்மைக்காக அதைச் செய்தேயாக வேண்டும். உடலுழைப்பைவிட புத்திபூர்வமான வேலை பல சமயங்களில் மிகவும் உயர்ந்ததா யிருக்கலாம்; உயர்ந்த தாயுமிருக்கிறது. ஆனால், அது ஒருநாளும் உழைப்பிற்கு மாற்றாயிருக்க முடியாது. நாம் சாப்பிடும் தானியங்களைவிட அறிவு வளர்ச்சிக்கான உணவு ரொம்ப உயர்வானது. ஆயினும், அந்த அறிவு வளர்ச்சி, உணவு தானியங்களுக்கு மாற்றாக இருக்க முடியுமா? பூமியில் விளையும் பொருள்கள் இல்லாமல் அறிவு வளர்ச்சி என்பது அசாத்தியமே.''†

புத்திபூர்வமான உழைப்பு உள்ளத்தின் திருப்திக்காக; அதுவேதான் அதனுடைய வெகுமதியும் கூட. ஆகையால், ஒரு லட்சிய ராஜ்யத்தில் டாக்டர்கள், வக்கீல்கள் போன்றவர்கள், சமூக நன்மைக்காக உழைப்பவர்களாகக் கருதப்படுகிறதேயொழிய சொந்த நலன்களுக்காக உழைப்பவர்களாகக் கருதப்படவில்லை.

உழைப்பு, பண்பாடு ஆகிய இந்த இரண்டையும் பிரிக்க முடியாது. உழைப்பில்லாத பண்பாடு கரட்டு பூமியைப் போன்றது. எவ்வளவோ படித்துக்கொண்டிருப்பதன் மூலம் மாத்திரம் மனிதன் தன் அறிவை வளர்த்துக்கொள்ள முடியாது. ஏதோ ஒரு நோக்கத்துடன் சிறிதளவு படித்தாலும் அதனால் பலனேற்படும்.

உழைப்பினால் அறிவு வளர்ச்சி பாதிக்கப்படுவதில்லை: அதனால் அலுப்பும் ஏற்படுவதில்லை. பிழைப்புக்கான உழைப்பு புத்திபூர்வமான உழைப்பின் தரத்தை உயர்த்துகிறது என்பது ஏற்கனவே எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. ஒரு வேலையும் இல்லாமல் சோம்பேறித்தனமாய் இருக்கும்போது ஏற்படும் அலுப்பைப்போல், உடலுழைப்பில் ஏற்படுவதில்லை. ஒன்றை உற்பத்தி செய்கிறோம் என்ற உற்சாகத்தைக் கைவிடாமலிருந்தால், ஒரே மாதிரியான மாமூல் வேலையிலும் அலுப்புத் தட்டுவதில்லை. ஏதாவது சில காசுகளைச் சம்பாதிக்க வேண்டுமே என்பதற்காக உடலுழைப்பில் ஈடுபடும்போது, அது உற்சாகமற்றதாய்ப் போய்விடக்கூடியது சாத்தியம். நிர்ப்பந்தமின்றியும், புத்திசாலித்தனத்துடனும் வேலை செய்யும் போது அப்படி ஏற்படுவதில்லை. ஒரு

* 'ஹரிஜன்' - 23—2—1947 † 'எங் இந்தியா' – 15—10—1925

காரியம் ஏன் செய்யப்படுகிறது, எப்படி செய்யப்படுகிறது என்று ஒருவருக்குத் தெரிந்து, அவருடைய ஆவல் திருப்தியாகி விட்டால், அவருடைய வேலையும் சுவாரஸ்யமுள்ளதாகிவிடுகிறது. புத்திசாலித்தனம், உற்சாகம், கடவுளிடம் பக்தி ஆகியவைகளோடு, அல்லது ஓர் உயர் நோக்கத்திற்காகச் செய்யப்படும் எல்லா வேலைகளும் உல்லாசமானதாகவும், புதிய மறு சிருஷ்டிகளாகவும் ஆகிவிடுகின்றன.

**பிழைப்புக்கான உழைப்பின் பலன்கள்:** பிழைப்புக்கான உழைப்பின் பலன்கள் வெகுவாக இருக்கும். எல்லோருமே இதைச் செய்ய ஆரம்பித்துவிட்டால் உலகத்தில் சமத்துவம் ஏற்படும், பட்டினி ஒழிந்துவிடும். உலகம் பல பாபங்களிலிருந்தும் காப்பாற்றப்படும். சோம்பல், நயவஞ்சகம், குற்றம் ஆகியவைகளெல்லாம் தவறான எண்ணங்களிலிருந்தே ஏற்படுகின்றன. இவையெல்லாம் மறைந்துவிடும். நல்ல காரியம் என்று நாம் தவறாக நினைப்பவைகளால் தேசத்தின் செல்வ வளமோ, ஆன்மிக வளமோ பெருகுவதில்லை. நாம் தான தருமம் செய்தோம் என்று கொடுப்பவனுக்கு ஒரு தவறான பெருமையை ஏற்படுத்திவிடுகிறது. வேலைக்கு ஒன்றுபடுத்தும் சக்தி இருக்கிறது. சமப்படுத்தும் சக்தியும் அதற்கிருக்கிறது. எல்லோருமே பிழைப்புக்கான உழைப்பைச் செய்ய ஆரம்பித்தால் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பேதங்களெல்லாம் மறைந்துவிடும். முதலாளிக்கும் தொழிலாளிக்குமிடையே உள்ள முரண்பாடுகளும், ஏழைக்கும் பணக்காரனுக்கும் இடையே உள்ள முரண்பாடுகளும் ஒடுங்கிவிடும். "அப்போதும் பணக்காரர்கள் இருக்கத்தான் செய்வார்கள். ஆனால், அவர்கள் தம்முடைய சொத்துக்குத் தாமே தருமகர்த்தாக்கள் என்றே நினைப்பார்கள். தம் சொத்தை முக்கியமாகப் பொது நலன்களுக்காகவே உபயோகிப்பார்கள்."

## பொருளாதாரச் சமத்துவம்

**பொருளாதாரச் சமத்துவத்தில் உள்ளதென்ன?:** பொருளாதாரச் சமத்துவம் என்ற லட்சியத்தின் அர்த்தமென்ன? வக்கீலோ, டாக்டரோ, உபாத்தியாயரோ, தோட்டியோ யாராயிருந்தாலும், ஒருவருடைய யோக்கியமான ஒரு நாள் உழைப்புக்குச் சம ஊதியம் கிடைக்க வேண்டுமென்பதே அது. அத்தகைய சமத்துவத்தை அடைவதற்கு மிகவும் உயர்ந்த பயிற்சி வேண்டும்.† ஆகையால், காந்திஜி கூறிய பொருளாதார சமத்துவம், எல்லோரிடமும் ஒரே அளவு தொகை இருக்கும், அல்லது யாவருக்கும் சமமான ஆஸ்திகள் இருக்கும் என்பதல்ல. சமூகத்தில் பல்வேறு விதமான தேவைகள் இருக்கின்றன என்பதை

---

* மகாத்மா காந்தி எழுதிய 'எரவாடா மந்திர்' லிருந்து — 9-வது அத்தியாயம்.

† 'ஹரிஜன்' – 10—8—1947.

அனுபவத்தால் அறிந்திருக்கிறோம். மிருகங்களின் தேவைகளை மதிப்பிடுவது போல், மனிதர்களின் வெவ்வேறு விதமான தேவைகளைத் திட்டமாக மதிப்பிடுவது சாத்தியமில்லை. பணக்காரர்களுக்கும், ஏழைகளுக்குமிடையே உள்ள வித்தியாசத்தைக் குறைப்பதுதான் சாத்தியம். இவ்விருவருக்குமிடையே உள்ள மாறுபாடு வெட்கித் தலைகுனிய வேண்டியதாக இருக்கிறது. தேசத்தின் செல்வம் பூராவும் ஒருசில பணக்காரர்களிடம் குவிந்திருக்கிறது. இதைச் சமப்படுத்த வேண்டும். அதே சமயத்தில் கோடிக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளான மக்களின் நிலைமையையும் உயர்த்த வேண்டும். மேலும், ஒவ்வொருவருக்கும் ஆரோக்கியத்திற்கு அவசியமான உணவு, வசிப்பதற்கு ஒரு நல்ல வீடு, போதிய ஆடைகள், குழந்தைகளின் கல்விக்கு வசதிகள், போதிய வைத்திய வசதிகள் கிடைக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவருடைய அத்தியாவசியமான, இயற்கையான தேவைகளுக்குப் போதுமான அளவு கிடைக்க வேண்டும் என்பதே சம விநியோகத்தின் உட்கருத்தாகும். ஆகையால், "அவரவர்களுடைய தேவைகளுக்குத் தகுந்தவாறு" என்பதே பொருளாதாரச் சமத்துவத்தின் உண்மையான பொருளாகும். எல்லோருடைய அத்தியாவசியமான தேவைகளும் திருப்தி செய்யப்பட்ட பிறகு, குறைந்த பட்சத் தேவைகளுக்கு மேற்பட்ட எதுவும் தடை செய்யப்படவில்லை. மிகவும் புத்திசாலிகளாயுள்ள தொழிலாளர்களும் விவசாயிகளும், மற்றவர்களைவிட அதிகம் சம்பாதிக்கக்கூடும். எந்த மனிதனும் தன்னுடைய திறமையை முடிந்த அளவுக்கு உபயோகிப்பதற்கு இடமில்லாதவாறு செய்யும் ஓர் உயிரற்ற சமத்துவத்தைச் சிருஷ்டிக்க காந்திஜி விரும்பவில்லை. ஏனெனில், அப்படி அமைக்கும் சமூகத்தின் அமைப்பிலேயே அதனுடைய அழிவுக்கான விதைகளும் அடங்கியிருக்கும்.

"உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வித்தியாசத்தை அழிப்பதென்றால், அராஜகத்திற்கும், மனம் போனவாறு நடப்பதற்கும் அனுமதித்து விடுவதாகும் என்று பலர் நினைக்கிறார்கள். ஆனால், மிகச் சிறந்த கட்டுப்பாடே வித்தியாசங்களை ஒழிப்பதன் உண்மையான பொருளாகும். ஏனெனில், அந்த நிலையில் நாமிருக்கும் சமூக வாழ்வின் சட்ட திட்டங்களுக்கு நாமாகவே மனமுவந்து கீழ்ப்படிவோம். அதனால்தான் அதுவே நமது வாழ்வின் நியதியாக இருக்கும்."*

பணக்காரர்கள் தம்மிடமுள்ள சொத்தை ஏழைகளுக்கான தரும நிதி என்ற மனப்பான்மையுடன் வைத்திருக்க வேண்டும். அல்லது, ஏழைகளுக்காக அதைக் கொடுத்துவிட வேண்டும் என்று காந்திஜி விரும்பினர். பலாத்காரத்தின் மூலம் பணக்காரர்களிடமுள்ள செல்வத்தைப் பறிப்பதால் பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்திவிட முடியாது, பலாத்காரத்தின் மூலம் ஏற்றத் தாழ்வுகளை ஒழிப்பதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள்

* 'எங் இந்தியா' - 3—5—1928

எங்குமே, ரஷியாவிலும்கூட, வெற்றி பெறவில்லை. பலாத்கார நடவடிக்கை சமூகத்திற்கு நன்மை அளிப்பதில்லை. ஏனெனில், செல்வத்தை உற்பத்தி செய்து, அதைப் பெருக்கும் சக்தியுள்ள ஒருவரின் சேவையை சமூகம் அதனுல் இழந்துவிடுகிறது.

**அகிம்சை வழியின் உயர்வு:** *பலாத்கார வழியைவிட அகிம்சை வழியே உயர்வானது.* வெறுப்புக்கு எதிராக அன்பு உணர்ச்சிகளைத் திரட்டி, அகிம்சை வழியின் மூலம் பொருளாதாரச் சமத்துவத்தை ஏற்படுத்த முடியும். "இந்த லட்சியத்தைத் தம் வாழ்க்கைத் தருமமாக ஏற்றுக்கொண்டிருப்பவர், தம்முடைய வாழ்க்கையிலேயே அவசியமான மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டியது முதல் படியாகும்."* சமூகம் பூராவும் மாறுதலடையும் வரையில் காத்துக்கொண்டிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஒருவர் தாமாகவே முதலில் அதை ஆரம்பித்துவிடலாம். கூட்டு முயற்சியும், அகிம்சையின் மூலம் மக்களுக்குக் கிடைக்கும் பலத்தைத் திரட்டுவதும், தம்முடைய அடிமைத்தனத்துடன் ஒத்துழைப்பதற்குப் புத்திசாலித்தனமாக மறுப்பதும், சமத்துவ நிலையை உண்டாக்கிவிடும்.

## தருமகர்த்தாத்தனம்

"தம்மிடமுள்ள தேவைக்கு அதிகமான செல்வத்தைத் தாம் தருமகர்த்தாக்களைப் போல்தான் வைத்துக்கொண்டிருக்கிறோமென்ற கருத்தே இந்தச் சமவினியோகக் கொள்கையின் அடிப்படையாயிருக்க வேண்டும். ஏனெனில், இந்தக் கொள்கையின்படி ஒருவர், தம் பக்கத்து வீட்டுக்காரரை விட ஒரு ரூபாய்கூட அதிகம் வைத்துக்கொண்டிருக்கக் கூடாது......பணக்காரர்களுடைய செல்வம் அவர்களிடமே விட்டுவைக்கப்பட்டிருக்கும். தம்முடைய சொந்தத் தேவைகளுக்கு நியாயமாக எவ்வளவு வேண்டுமோ அதை மட்டும் அவர்கள் செலவிடுவார்கள். மீதமுள்ளவற்றை தருமகர்த்தா மாதிரி வைத்துக்கொண்டிருப்பார்கள். அது சமூகத்திற்குச் செலவிடப்பட வேண்டியது. தருமகர்த்தாவாயிருப்பவர் நாணயமாய் நடந்துகொள்ளுவார் என்ற கருத்துடனேயே இந்த வாதம் சொல்லப்படுகிறது."†

என்னதான் முயற்சி செய்தாலும், பணக்காரர்கள் தம் சொத்துக்குத் தாமே தருமகர்த்தாக்களாய் இருக்க மறுத்துவிட்டால் என்ன செய்வது? சாத்விக ஒத்துழையாமையே இதற்குச் சரியான பரிகாரமும் உரிமையுமாகும் என்று காந்திஜி கூறுகிறுர். ஏனெனில், சமூகத்திலுள்ள ஏழைகளின் ஒத்துழைப்பு இல்லாமல் பணக்காரர்கள் பணம் சேர்க்க முடியாது.

**இயற்கையின் ஓர் அடிப்படை விதி:** அன்ருடம் நமக்கு என்னென்ன தேவையோ அதை இயற்கை உற்பத்தி செய்கிறது என்பது இயற்கையின் அடிப்படையான வழிகளில் ஒன்ருகும். இதற்கு விலக்கே கிடையாது. ஆகையால், ஒவ்வொருவரும் தமக்கு

* 'ஹரிஜன்' - 25—8—1940

† 'ஹரிஜன்' – 24—8—1940

வேண்டியதற்கு அதிகமாக எடுத்துக்கொள்ளாமலிருந்தால், இந்த உலகத்தில் யாரும் பட்டினியால் சாகமாட்டார்கள். தம்முடைய குறைந்த பட்சத் தேவைகளுக்கு அதிகமாக எடுத்துக் கொள்ளுபவர்கள், திருட்டுக் குற்றத்தைச் செய்தவர்களாகிருர்கள். தனக்குத் தேவையில்லாததையோ, தன் தேவைக்கு அதிகமாகவோ வைத்துக்கொண்டிருப்பது, இந்தக் கொள்கையை மீறுவதாகும். பற்றில்லாமை என்ற லட்சியம் பரிபூர்ணமாக நிறைவேற்றப்பட வேண்டுமானல், பறவைகளைப் போல் மனிதனும் அடுத்த நாளைப் பற்றி நினைக்கக்கூடாது. கடவுளின் கருணையில் முழு நம்பிக்கை வைத்தால், எல்லாம் அவனுக்குக் கிடைக்கும்.

**உடைமையின்மை, ஒரு மனோநிலை:** உடைமை இல்லாமலிருப்பது என்பது ஒரு மனோநிலைதான். எந்த மனிதனும் முற்றிலும் ஒன்றுமே இல்லாமலிருக்க முடியாது. நம்முடைய உடல்கூட எப்போதும் நம்மிடையே இருக்கும் ஒரு உடைமையே. முழுமை பெறுவது மனிதனிடமேதான் இருக்கிறதென்ருலும், மனிதன் எப்போதுமே குறைபாடுகள் உள்ளவனுகத்தான் இருப்பான்.

**தருமகர்த்தாத்தனத்தின் ஆரம்பம்:** பணம் சம்பாதித்து, அதைத் தாமாக மனித வர்க்கத்தின் நன்மைக்குச் செலவிடாதவர்களுக்கு நாம் அளிக்கும் ஒரு சலுகை, "தருமகர்த்தாத்தனம்."* இந்தக் கொள்கை பகுத்தறிவிலிருந்தும், அனுபவ சாத்தியத்திலிருந்தும் தோன்றியதாகும். ஏற்கனவே பணக்காரர்களாயிருப்பவர்கள், அல்லது செல்வத்தின் மீதுள்ள ஆசையை விடாதவர்கள், தம்முடைய செல்வத்தை மற்றவர்களின் நன்மைக்காகச் செலவிட வேண்டும் என்பதே காந்திஜியின் உபதேசம். ஜமீன்தார்கள், சமஸ்தானதிபதிகளுடைய எல்லா உரிமைகளையும், செல்வத்தையும் பறித்துவிட வேண்டும் என்று சோஷலிஸ்டுகள் கூறியபோது, காந்திஜி முதன் முதலாக இந்தக் கொள்கையை விளக்கினர்.†

**தருமகர்த்தாத்தனத்தின் பொருள்:** தருமகர்த்தாத்தனம் என்பது என்ன? ஒரு மனிதனிடம் அவனுடைய தேவைக்கு அதிகமான அளவு செல்வம் இருந்தால், அப்படி அதிகப்படியாயிருக்கும் பகுதிக்கு அவன் தருமகர்த்தாவாகிவிட வேண்டும். ஒருவருடைய சொத்து, தகப்பனர் வைத்துவிட்டுப் போனதாய் இருக்கலாம்; அல்லது நாணயமான வழிகளில் வர்த்தகத்தின் மூலம் சம்பாதித்ததாயிருக்கலாம். அப்போதும்கூட, அந்தச் சொத்து எல்லாம் தனக்குச் சொந்தமானதல்ல என்பதை அவர் உணர வேண்டும். "லட்சக்கணக்கான மற்றவர்கள் என்ன அனுபவிக்கிருர்களோ அதற்கு அதிகப்படியாக இல்லாமல், கௌரவமான வாழ்க்கை நடத்துவதற்குத்தான் அவருக்கு உரிமை உண்டு"‡ மீதமுள்ள அவருடைய சொத்தெல்லாம் சமுதாயத்திற்குச்

* 'மாடர்ன் ரெவியூ'—அக்டோபர் 1935
† 'ஹரிஜன்' – 3—6—1939
‡ 'ஹரிஜன்' – 3—6—1939

சொந்தமானது. சமுதாயத்தின் நன்மைக்காகவே அதை உபயோகிக்க வேண்டும்.*

பணக்காரர்கள் ஆயுத பலங்கொண்டோ, அல்லது அகிம்சை என்ற ஆயுதத்தின் மூலமோ தமது சொத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

"இரண்டாவது வழியைப் பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு மிகச் சிறந்த மந்திரம் இதுதான்: 'செல்வத்தைத் துறப்பதன் மூலம் அதை அனுபவியுங்கள்.' இதை விரிவாக விளக்குவதாயிருந்தால் அதன் பொருள் பின்வருமாறு: கோடிக்கணக்கில் வேண்டுமானால் சம்பாதியுங்கள். ஆனால், உங்களிடமுள்ள செல்வம் உங்களுடையதல்ல என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்; அது மக்களைச் சேர்ந்தது. உங்களுடைய நியாயமான தேவைகளுக்கு வேண்டியவற்றை எடுத்துக்கொள்ளுங்கள். மீதமுள்ளதைச் சமூகத்திற்கு உபயோகியுங்கள்."†

வர்த்தக சுபிட்சமும் நாணயமான நடத்தையும் முரண்பட்டவை அல்ல: நாணயமான முறைகளின் மூலம் கோடிக்கணக்கில் சம்பாதிப்பது சாத்தியமா என்று கேட்கலாம். நிறைய வியாபாரம் செய்வதும், நாணயமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை என்று காந்திஜி நம்பவில்லை. முற்றிலும் நேர்மையான முறைகளில் வியாபாரம் செய்யும் வர்த்தகர்களைக் காந்திஜிக்குத் தெரியும். 'கோடிக்கணக்கில் சம்பாதிப்பது' என்பது சட்டபூர்வமான சம்பாத்தியத்தைக் குறிப்பிடுகிறது; நேர்மையற்ற முறைகளில் சம்பாதிப்பதையோ, நம்மைச் சுற்றியுள்ள ஏற்றத் தாழ்வுகளை அகம்பாவத்துடன் சுட்டிக்காட்டும் தன்மையுள்ள செல்வத்தையோ அல்ல.‡ காந்திஜி இதற்கு ஓர் உதாரணம் கூறியிருக்கிறார். ஒருவருக்கு ஒரு சுரங்கத்தைத் தோண்டுவதற்கு அனுமதி இருக்கிறது. அந்த நிலத்தில் மிகவும் அபூர்வமான ஒரு வைரம் கிடைக்கிறது. இதனால், அவர் திடீரென்று லட்சாதிபதியாகி விடுகிறார். இவர் நேர்மையற்ற முறைகளைக் கையாண்டார் என்று குற்றம் சாட்ட முடியாது. இதைப்பற்றிய அவருடைய விளக்கம் பின்வருமாறு:

"நான் சொன்ன வாதம் அத்தகையவர்களுக்குத்தான். பொதுவாக பணக்காரர்கள் மட்டுமல்லாமல் அநேகமாக எல்லோருமே, தாம் எந்த வழியில் பணம் சம்பாதிக்கிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை என்பதை ஒப்புக்கொள்ள நான் தயங்கவில்லை. அகிம்சை வழியை உபயோகிக்கும்போது, ஒருவர் எவ்வளவுதான் மோசமானவராயிருந்தாலும், சாமர்த்தியத்துடனும், மனிதாபிமானத்துடனும் நடந்து கொண்டால், அவரைத் திருத்துவது சாத்தியமே என்பதை நம்ப வேண்டும். மனிதர்களிடம் உள்ள

---

* 'ஹரிஜன்' – 3—6—1939

† 'ஹரிஜன்' – 1—2—1942. கோடிக்கணக்கில் சம்பாதிப்பதென்பது, நாணயமான முறையில் சம்பாதிப்பதையே குறிப்பிடுகிறது என்று அதே கட்டுரையின் முடிவில் விளக்கப்பட்டிருக்கிறது—ஆசிரியர்.

‡ 'ஹரிஜன்' - 22—2—1942

நல்லெண்ணத்தைத் தொடும்படியாக நாம் நடந்துகொண்டால், பலன் கிடைக்குமென்று எதிர்பார்க்க வேண்டும்.''*

**மதிப்பிடுவது யார்? :** எந்த லாபங்கள், அல்லது சொத்துக்கள் சட்டபூர்வமானவை, அல்லது கெட்ட வழிகளில் கிடைத்தவை, அல்லது நல்ல வழிகளில் கிடைத்தவை என்பதை யார் மதிப்பிடுவது? ''கடவுள்தான் தீர்ப்பளிக்க முடியும்; அல்லது பணக்காரர்கள், ஏழைகள் இருவருமே நியமிக்கும் தகுதியுள்ள ஒருவர் தீர்ப்பளிக்கலாம்.''† எல்லாச் சொத்துக்களும், அல்லது உடைமைகளுமே திருடியவை என்று நாம் சொன்னுல், எல்லாச் செல்வத்தையும், சொத்துக்களையும் கைவிட வேண்டும். இதற்கு நாம் தயாராக இருக்கிறோமா என்பதை நம்மை நாமே கேட்டுக் கொள்ளவேண்டும். இல்லையென்ருல், மற்றவர்களைப் பற்றி நாம் அபிப்பிராயம் சொல்லக்கூடாது. பற்றற்ற உணர்ச்சியை வளர்த்துக்கொண்டு, உலகம் உங்களைத் தீண்டாத, பாதிக்காதவாறு வாழுங்கள்.

**மனமுவந்து விட்டுக் கொடுப்பதா, பலவந்தமாகப் பறிப்பதா? :** இப்பொழுதுள்ள செல்வத்தில் பணக்காரர்களைத் தருமகர்த்தாக்களாக இருக்கச் சொல்லக்கூடிய செல்வம் எவ்வளவு? அவர்களுக்குச் சொந்தமில்லாத செல்வம் எவ்வளவு? இதை விளக்க முடியுமா? ஒரு பணக்காரர் தம்மிடமுள்ள செல்வத்தில் கால் பகுதியைத் தமக்காக வைத்துக்கொண்டு, மீதமுள்ள முக்கால் பாகத்தைத் தரும காரியங்களுக்குக் கொடுக்கத் தயாராயிருந்தால், அதை ஏற்றுக்கொண்டுவிட வேண்டும். ஏனெனில், துப்பாக்கி முனையில் பலவந்தத்தினுல் பெறும் நூற்றுக்கு நூறைவிட, மனமுவந்து கொடுக்கப்படும் முக்கால் பாகம் சிறந்தது என்பதை நாம் உணரவேண்டும்.‡

இன்று பலவந்தத்திற்குப் பயந்து விட்டுக் கொடுப்பவர் நாளைக்குப் புது நிலைமைக்கும் பணிந்துவிடுவார் என்று விவாதிக்கப்படலாம். ஆனுல், அது நிச்சயமாக நடக்கக்கூடியதென்று நம்புவதற்கில்லை. இன்று பலாத்காரத்தை உபயோகித்தால், இன்னும் அதிகமான அளவில் பதிலுக்குப் பதில் பலாத்காரம் ஏற்படும் என்பது நிச்சயம். ''அகிம்சையை ஒரு விதியாக ஏற்றுக்கொண்டுவிட்டால், வாழ்க்கையில் விட்டுக்கொடுக்கும் சந்தர்ப்பங்கள் நிறைய இருந்துகொண்டிருக்கும். ஆனுல், ஓயாத மோதல்களைவிட அது சிறந்ததே.''§

**தருமகர்த்தாக்களின் கமிஷன் :** அகிம்சாபூர்வமான ஒரு ராஜ்யத்தில் தருமகர்த்தாக்களின் கமிஷனும் கட்டுப்படுத்தப்பட்டிருக்கும். ஒரு தருமகர்த்தா, தம்முடைய வருமானத்திலிருந்து எவ்வளவு கமிஷன் பெறலாம் என்பது நிலையான ஒரு விகிதாச்சாரமாயிராது. அது ஏன் அவ்வப்போது மாறிக்கொண்டிருக்க

---

* 'ஹரிஜன்' - 22—2—1942 † 'ஹரிஜன்' – 1—8—1936
‡ 'ஹரிஜன்' - 1—6—1935 § 'ஹரிஜன்' – 1—6—1935

வேண்டும் என்பதைப் பின்கண்ட குறிப்பிலிருந்து தெரிந்து கொள்ளலாம் :

"இவ்வளவுதான் கமிஷன் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று அவர்களுக்கு நான் உத்தரவிடமாட்டேன். எது நியாயமோ அதை எடுத்துக் கொள்ளும்படி சொல்லுவேன். அதாவது, நூறு ரூபாய் உள்ள ஒருவரை ஐம்பது ரூபாயைத் தனக்காக எடுத்துக்கொண்டு மற்ற ஐம்பது ரூபாயை வேலை செய்பவர்களுக்குக் கொடுக்கும்படி சொல்லுவேன். ஆனால், ஒரு கோடி ரூபாய் உள்ள ஒருவரிடம், ஒரு சதவிகிதம் எடுத்துக்கொள்ளும்படி அவரிடம் நான் சொல்லக்கூடும். ஆகையால், நான் கூறும் கமிஷன் ஒரு நிலையானதாயிராது. அப்படி நிர்ணயிப்பது அக்கிரமமான அநீதியை இழைத்துவிடும்."*

**சட்டபூர்வமான சொத்துரிமை :** அந்த மாறுபட்ட நிலைமையில் சட்டபூர்வமான சொத்துரிமை தருமகர்த்தாவிடமிருக்குமேயன்றி அரசாங்கத்தினிடம் அல்ல. ஆகையால், முதல் தருமகர்த்தாவாகும் சொத்துரிமைக்காரருக்குத் தன்னுடைய வாரிசை நியமிக்கவும் உரிமையளிக்க வேண்டும். ஒரு தர்மகர்த்தாவுக்குச் சமூகத்தைத் தவிர வேறு வாரிசு கிடையாது.† ஆகையால், தருமகர்த்தா, தமக்குப் பின் வாரிசுகளை நியமிப்பது சட்ட சம்மதத்திற்குட்பட்டதாயிருக்க வேண்டும். அதாவது, அந்த நியமனத்தை அரசாங்கம் முடிவாக அங்கீகரிக்க வேண்டும். "அத்தகைய ஏற்பாடு அரசாங்கத்திற்கு மட்டுமின்றித் தனி நபருக்கும் ஒரு கட்டுத்திட்டத்தை விதிக்கிறது."‡

**தருமகர்த்தா ஏற்பாடு :** ஆகாகான் அரண்மனையில் சிறை வைக்கப்பட்டிருந்து 1944-இல் காந்திஜி விடுதலையான பிறகு ஸ்ரீ கிஷோரிலால் மஷ்ருவாலாவும், ஸ்ரீ நரஹரி பரீக்கும் எளிதானதும், அனுபவ சாத்தியமானதுமான ஒரு தருமகர்த்தா ஏற்பாட்டுத் திட்டத்தைத் தயாரித்தார்கள். இந்த நகலில் காந்திஜி சில திருத்தங்கள் செய்தார். திருத்தப்பட்ட அந்த நகல் பின்வருமாறு :

(1) "தருமகர்த்தா ஏற்பாடு இப்போதுள்ள முதலாளித்துவ சமூக அமைப்பை, சமத்துவமுள்ள சமூகமாக மாற்றுவதற்கு ஒரு மார்க்கமாகும். முதலாளித்துவத்திற்கு எதையும் இதை விட்டுக் கொடுக்கவில்லை. ஆனால், பணக்காரர்கள் தம்மைத் திருத்திக்கொள்ளுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை இது அளிக்கிறது. மனித சுபாவம் திருந்த முடியாததல்ல என்ற நம்பிக்கையே இதன் அடிப்படை.

(2) சமூகம் தனது நன்மைக்காக அனுமதிப்பதைத் தவிர சொந்தச் சொத்துரிமை எதுவும் இதில் அங்கீகரிக்கப்படவில்லை.

(3) சொத்துரிமை, அதன் உபயோகம் ஆகியவைகளுக்குச் சட்டம் இயற்றுவதையும் இதில் விலக்கப்படவில்லை.

(4) இப்படி அரசாங்கத்தினால் ஒழுங்குபடுத்தப்படும் தருமகர்த்தா ஏற்பாட்டில், ஒருவர் சுயநலத்திற்காகவோ, சமூக நலன்களைப் பொருட்படுத்

* 'எங் இந்தியா' – 26—11—1931 † 'ஹரிஜன்' – 12—4—1942

‡ 'ஹரிஜன்' - 16—2—1947

தாமலோ சொத்து வைத்துக்கொள்ளவும் முடியாது. அதை அவர் உபயோகிக்கவும் முடியாது.

(5) நியாயமான ஒரு குறைந்த பட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படப் போவதைப் போலவே சமூகத்தில் ஒருவருக்கு அதிகப் பட்சம் எவ்வளவு வருமானத்தை அனுமதிக்கலாம் என்பதையும் நிர்ணயித்துவிட வேண்டும். இந்தக் குறைந்த பட்ச, உயர்ந்த பட்ச வருமானங்களுக்குமிடையே உள்ள வித்தியாசம் நியாயமானதாகவும், நேர்மையானதாகவும், இந்த வித்தியாசங்களையே ஒழித்துவிடக்கூடியவாறு அவ்வப்போது மாற்றப்படுவதாயும் இருக்க வேண்டும்.

(6) காந்தீய பொருளாதார அமைப்பின் கீழ், உற்பத்தியின் தன்மை சமூகத்தின் தேவைகளுக்கேற்றபடியே முடிவு செய்யப்படும்; தனிப்பட்டவர்களுடைய விருப்பம் அல்லது பேராசையைப் பொறுத்ததாக அது இராது.*

இந்த ஏற்பாடு பிரத்தியட்சத் தன்மை வாய்ந்ததாகவும், நெகிழ்ந்து கொடுக்கக்கூடியதாகவும் இருக்கிறது. இப்போதுள்ள பணக்காரர்கள் இதன் மூலம் சோதனைக்குட்படுத்தப்படுகிறார்கள். தம்முடைய புத்திசாலித்தனத்தையும், திறமையையும் சமூகத்தின் நன்மைக்காக உபயோகிப்பதற்குப் பணக்காரர்களுக்கு ஒரு வாய்ப்பையும் இது அளிக்கிறது. சொத்துரிமை ஏற்பாடு எப்படி இருக்கவேண்டும் என்பது, கைத்தொழில்களின் அமைப்பைப் பற்றி விவாதிக்கும்போது பின்னர் கவனிக்கப்படும்.

எத்தனைப் பேர் உண்மையான தருமகர்த்தாக்களா யிருக்க முடியும் என்ற கேள்வி முக்கியமானதல்ல. இந்தக் கேள்வியை நடைமுறையில் பின்பற்றுவது என்பது கஷ்டமாயிருக்கலாம். ஆயினும், இக்கொள்கை உண்மையானதாயிருந்தால், எவ்வளவு பேர் அதைப் பின்பற்ற முடியும், எவ்வளவு பேர் பின்பற்றுகிறார்கள் என்பதெல்லாம் பெரிய விஷயங்களே அல்ல. அகிம்சையில் நம்பிக்கையுள்ளவர்கள் வெற்றி, தோல்வியைப் பற்றிக் கவலைப்படாமல் இதைப் பின்பற்றத்தான் வேண்டும்.

ஒவ்வொருவரும் அடுத்தவரைப்பற்றிப் பொருட்படுத்தாமல் தனக்காக மட்டும் வாழ்வதே இன்றைய அமைப்பாயிருக்கிறது. இதற்குப் பதிலாக ஒரு புது வாழ்க்கை முறையை ஏற்படுத்த வேண்டும் என்பதுதான் தருமகர்த்தா ஏற்பாட்டின் நோக்கம். அமைதியான முறையில் சமூகம் உண்மையாக முன்னேற்றமடைய வேண்டுமானால், தம்மைப் போலவே ஆண்டவனின் குழந்தைகளான ஏழைகளைவிடத் தாம் ஒன்றும் உயர்ந்தவர்களல்ல என்பதைப் பணக்காரர்கள் உணரவேண்டும். அதாவது, பணம் இருப்பதால் அவர்கள் ஏழைகளைவிட உயர்ந்தவர்கள் ஆகிவிடவில்லை.

**பணக்காரர்கள், தருமகர்த்தாக்கள் ஆகாவிட்டால்?:** பணக்காரர்கள் தாமாகவே தருமகர்த்தாக்களாகாவிட்டால், விபரீதத்

---

* 'ஹரிஜன்' – 25—10—1952

தைத் தவிர்க்கவேண்டுமென்ற ஆசை அவர்களுக்கு இல்லா திருந்தாலொழிய, சந்தர்ப்பங்களின் பலத்தின் காரணமாக அவர்கள் அந்த ஏற்பாட்டுக்கு உடன்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும். அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட ராஜ்யத்தில், பலாத்காரத்தின் மூலம் செய்யவே முடியாததையும் பொதுஜன அபிப்பிராயத்தின் மூலம் செய்துவிட முடியும். உண்மையில், உழைப்பவர்களே தாம் உற்பத்தி செய்வதன் சொந்தக்காரர்கள். புத்திசாலித்தனமான சேர்க்கையின் மூலம் தமக்குக் கிடைக்கும் சக்தியை அவர்கள் உணர்ந்தால், சுரண்டும் வர்க்கத்தின் அக்கிரமங்கள் நின்றுவிடும். ஏழைகளை அமுக்கி வைக்கும் முறையின் தீமைகளுடன் மக்கள் ஒத்துழையாமை செய்தால், அது கவனிப்பாரற்றுச் செத்துவிடும். வர்க்கப் போராட்டத்தைத் தவிர்ப்பதற்கு இது ஒன்றுதான் சரியான வழியாகும்.

## கைத்தொழில்கள்

காந்திஜியின் அகிம்சை ராஜ்யத்தைப் பற்றி இதுவரையில் பொதுவாகக் கவனித்தோம். இந்தச் சாம்ராஜ்யத்தைச் சூன்ய நிலையிலிருந்து சிருஷ்டித்துவிட முடியாது. யந்திரங்களை உபயோகித்துக் கைத்தொழில்களைப் பெருக்கும் ஒரு யுகத்தில் இன்று நாம் வசித்து வருகிறோம். கைத்தொழில்கள் விஷயத்தில் காந்திஜி என்ன நினைக்கிறார் என்பதை இனி கவனிக்க வேண்டும்.

**படிப்படியான கருத்து மாற்றம் :** கைத்தொழில்கள், யந்திரங்கள் விஷயத்தில் காந்திஜியின் கருத்துக்கள் படிப்படியாக மாறுதல் அடைந்து வந்திருக்கின்றன. இதைப்போல் வேறெந்த விஷயத்திலும் அவருடைய கருத்துக்கள் இப்படி மாறியதில்லை. யந்திரங்களுடன் அவருக்குப் பரிச்சயம் ஏற்பட்ட காலத்திலிருந்து ஆரம்பித்து, அவருடைய கருத்து படிப்படியாக மாறி வந்திருப்பதை நாமும் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும்.

**நவீன நாகரிகத்தின் சின்னம் :** காந்திஜியின் போதனைகளின் வித்துக்களெல்லாம் 1908-ல் குஜராத்தி மொழியில் அவர் வெளியிட்ட ஒரு சிறு புத்தகத்தில் அடங்கியிருக்கின்றன. பின்னர் இது 'ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம்'* என்ற பெயரில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. 'நவீன நாகரிகம்' என்று சொல்லப்படுவதையும், அதனுடைய முக்கிய சின்னமென்று அவர் கருதிய யந்திரங்களையும் அந்தப் பிரசுரத்தில் அவர் கடுமையாகக் கண்டித்திருக்கிறார்.

**காந்திஜியின் பொருளாதாரச் சிந்தனையின் நோக்கம் :** காந்திஜியின் பொருளாதாரச் சிந்தனையை நாம் பரிசீலனை செய்யும்

---

* இந்நூல் 'மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பில் 603 - ஆம் பக்கத்திலிருந்து 720-ஆம் பக்கம் வரையில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

போது, ஒரு புதிய இந்தியாவை உருவாக்கும் வேலையில் அவர் தீவிரமாக ஈடுபட்டிருந்தார் என்பதைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆகவே, அவருடைய கருத்துக்கள் இந்திய நிலைமைகளை ஆராய்ந்து தெரிவிக்கப்பட்ட கருத்துக்களாகும். யந்திரத் தொழில்களுக்குப் பதிலாக அவர் சொன்ன மாற்று யோசனையையும், கைராட்டினத்திற்கு அவர் கொடுத்த முக்கியத்துவத்தையும் பின்னர் நாம் பரிசீலனை செய்யும்போது இது தெளிவாகப் புலப்படும். இந்திய நிலைமையை அவர் உறுதியாக மதிப்பிட்டிருக்கிறார். மேற்கத்திய நாட்டினருக்கு யோசனை கூற அவர் தயங்குகிறார். ஆயினும், மரியாதைக்காக அவர் அப்படி யோசனை கூறும்போது, நமக்குத் தெரியாத பாதையில் செல்லுகிறோம் என்பதையும் அவர் உணருகிறார்.

**கிராமப் பொருளாதாரம் அழிந்ததன் காரணங்கள்:** 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற புத்தகத்தில் யந்திரங்கள் பற்றிய அத்தியாயத்தில், ராமேஷ் சந்திர தத்தர் எழுதியுள்ள 'இந்தியாவின் பொருளாதார சரித்திரம்' என்ற புத்தகத்தை ஆவேசத்துடன் அவர் குறிப்பிட்டிருக்கிறார். கைத்தொழிலே இந்தியக் கிராமப் பொருளாதாரத்தின் அடிப்படை. மான்செஸ்டரின் மில் தொழில் தான் இந்தப் பொருளாதாரத்தை அழித்து, மக்களை ஏழ்மைப் படுத்தியது என்பதை அந்தப் புத்தகத்திலிருந்து காந்திஜி தெரிந்து கொண்டார். ஆகவே, யந்திரங்களும், நவீன நாகரிகமும் ஒன்றே என்று அவர் கருதினார். நவீன நாகரிகம் நவீனமானது என்ற காரணத்திற்காகக் கெடுதலானதல்ல; மனிதர்களை ஏழ்மைப்படுத்தி, சிறுமைப்படுத்தியது என்ற காரணத்தினால்தான் அது கெடுதலானது. ரெயில்வேக்களும், யந்திரங்களில் செய்யப்பட்ட சாமான்களும் இந்திய வாழ்க்கையைஎப்படிப் பாதித்திருக்கின்றன என்பதை அவர் ஆராய்ந்து, அவை தீமைகள் என்ற முடிவுக்கு வந்தார். 'ஹிந்த் ஸ்வராஜ்' புத்தகத்தில் 'யந்திரங்கள்' என்ற வார்த்தை யந்திரங்களை மட்டுமே குறிக்கவில்லை. அதன் பொருள் மேலும் விரிவானது. யந்திரம் நவீன நாகரிகத்தின் சின்னமாயிருக்கிறது. மின்சார சக்தியினால் இயங்கும் கைத்தொழில் அமைப்பும் அதில் சேர்ந்திருக்கிறது. கைத்தொழில் அமைப்புக்கும், யந்திரங்களுக்குமிடையே உள்ள வித்தியாசம் அவருக்குத் தெளிவாகப் புரியவில்லை. அந்தக் காலத்தில் யந்திரங்கள் பற்றிய அவருடைய அனுபவம் மிகக் குறைவானதாகவே இருந்திருக்க வேண்டும். இந்தக் கட்டத்தில் தறிக்கும் கைராட்டினத்திற்கும் உள்ள வித்தியாசம் அவருக்குத் தெரியாது. 'ஹிந்த் ஸ்வராஜ்'-இல் ராட்டினம் என்ற அர்த்தத்தில் தறி என்ற வார்த்தையை உபயோகித்திருக்கிறார்.* 'ஹிந்த் ஸ்வராஜ்'-இல் அவற்றை அவர் வர்ணித்தபோது ராட்டினத்தையோ, தறியையோ அவர் பார்த்ததுகூட இல்லை.† 1915-ல் இந்தியாவுக்

* 'எங் இந்தியா' – 20—9—1928

† இதைக் காந்திஜியே ஒப்புக்கொண்டு எழுதியிருப்பதை 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பு 2, 318 ஆம் பக்கங்களில் காண்க.

குத் திரும்பி வந்து, சாபர்மதி ஆசிரமத்தில் சோதனைகள் செய்ய ஆரம்பித்த பிறகுதான், கதரைப் பற்றி அவருக்கு உருவான எண்ணங்கள் ஏற்பட்டன.

**தேசீய வாழ்வை அமைத்தல் :** ஒத்துழையாமை இயக்கத்தின் ஆரம்ப காலத்தில், பொருளாதாரப் பிரச்னைகள் அவருடைய கவனத்தைத் தீவிரமாகக் கவர்ந்திருந்தன. யந்திரங்களைப் புகுத்தி, அவற்றை விஸ்தரிப்பதற்குப் பொறுப்பாயிருந்த பொருளாதார அமைப்பை அவர் எதிர்த்தார். அந்தக் காலத்தில் கதரைப் பற்றி அவர் எழுதிய கட்டுரைகளில், சிறந்த உற்பத்தி, வினியோக முறைகளை அடிப்படையாகக் கொண்டு தேசீய வாழ்வை அமைக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர். மில்கள் அதிகமாவது நல்லதல்ல. ஏனெனில், அதனல் செல்வம் ஒரு சிலரிடத்தில்தான் குவிந்துவிடும் என்ருர். 1908-ல் இது பற்றி தாம் எடுத்துக்கொண்ட ஆரம்ப நிலையிலிருந்து 1921 வரையில் அவர் மாறவில்லை.

**கருத்துக்களில் மாறுதல்:** 1920-ஐ அடுத்த வருடங்களில் யந்திரங்கள் பற்றிக் காந்திஜியின் கருத்துக்களில் படிப்படியாக மாறுதல்கள் தென்பட்டன. நவீன நாகரிகத்தின் தீமைக்கு யந்திரம் சின்னமாக விளங்குகிறது என்ற ஆரம்ப நிலையிலிருந்து அவர் நகர்ந்துவிட்டார். யந்திரத் தொழில்களைப் பற்றி மட்டுமே அவர் குற்றம் சாட்டினர். அதாவது, லாப நோக்கத்துடன் பொருள்கள் பெரும் அளவில் உற்பத்தி செய்து குவிக்கப்படுவதை அவர் ஆட்சேபித்தார். மனித வர்க்கத்தின் பிரச்னைகளில் காந்திஜிக்கு நல்ல பரிச்சயம் உண்டு. ஆகையால், யந்திரங்களுக்கும், தொழிலமைப்புக்கும் உள்ள வித்தியாசத்தையும், பல்வேறு விதமான யந்திரங்களுக்குமிடையே உள்ள வித்தியாசங்களையும் அவர் உணர ஆரம்பித்தார். மனித உடலும், கைராட்டினமும் கூட அற்புதமான யந்திரங்களே என்று உணர்ந்தார். யந்திரங்களில் ஒன்றும் கெடுதலில்லை. சட்டபூர்வமாகவும், சட்ட விரோதமாகவும், மனிதனுடைய நன்மைக்கும், மனிதனைச் சுரண்டுவதற்கும் யந்திரங்களைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். ஆகவே, யந்திரங்களுக்குச் சமூகத்தில் ஓர் இடமுண்டு என்பதை அவர் ஒப்புக்கொண்டார். அதே சமயத்தில் யந்திரங்கள் மனிதனுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய உதவ வேண்டுமே யொழிய மனிதனுக்கு எஜமானனுகி விடக்கூடாது என்று அவர் சொன்னர். வேலையின் சலிப்பைக் குறைக்கவும், வேலைச் சுமையைத் தவிர்க்கவும், சில யந்திரங்களை மனிதனின் நன்மைக்காக உபயோகிக்க முடியும். 1925-27-ல் அந்த அம்சம் காந்திஜிக்கு வரவர நன்கு விளங்கியது. யந்திரங்கள் பெருந் தொழிலமைப்பின் சின்னம் என்று 1908-ல் நினைத்தார். ஆனல், இப்போது அப்படியில்லை. யந்திரங்களைக் கட்டுப்படுத்தி வைத்துக்கொண்டால், அதன் மூலம் சில நன்மைகளும் ஏற்பட முடியும். ஓரளவே இல்லாமல் யந்திரங்களைப் பெருக்கிக்கொண்டே போவது மனிதர்களுக்கு

வேலையில்லாமற் செய்து ஏழ்மையைப் பரப்பிவிடும். ஆனால், சாதாரணச் சிறு கருவிகளும், தனி மனிதனின் உழைப்பைக் குறைக்கக்கூடிய யந்திரங்களும் வரவேற்கத்தக்கவைகளே. வாழ்க்கையில் யந்திரத்திற்கு அதற்குரிய ஸ்தானத்தைக் கொடுப்பதே அவருடைய கதர்த் திட்டத்தின் பொருளாதார தத்துவமாகும். யந்திரங்களின் விஷயத்தில் அவருடைய கண்ணோட்டத்தில் ஏற்பட்ட இந்த மாறுதல், பெரும் அளவில் யந்திரங்களை உபயோகிப்பது பற்றிய அவருடைய கருத்துக்களையும் பாதிக்கத் தான் செய்யும்.

செல்வத்தையும், அதிகாரத்தையும் ஒரு சிலரிடம் குவித்து, அவர்கள் ஏழை மக்கள் மீது சவாரி செய்வதற்குச் சௌகரியமாக யந்திரங்களை அமைப்பது, தார்மிகக் கண்ணோட்டத்துடன் பார்த்தாலும், சமூக நலன் என்ற கண்ணோட்டத்துடன் பார்த்தாலும், தவறானதே. யந்திரங்கள் மீதுள்ள இந்த மோகத்திற்குக் காரணம் பேராசையேயொழிய, தரும சிந்தனையல்ல. நாட்டின் நலன்களைப் பலி கொடுத்து, மில் தொழில் செழிப்பதை அனுமதிக்கக்கூடாது. கோடிக்கணக்கான மக்களுக்கு ஒரு கவளம் அன்னமாவது கொடுத்துக்கொண்டிருந்த ஒரே இந்தியக் குடிசைத் தொழில், வேண்டுமென்றே அழிக்கப்பட்டதைக் காந்திஜி ஆட்சேபித்தார். "முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியவர் தனி நபர்தான். தனி மனிதனின் உழைப்பைக் குறைப்பதும், உண்மையான மனிதாபிமானமும்தான் முக்கிய நோக்கமாயிருக்க வேண்டுமே யொழிய பேராசையல்ல."*

**1926 முதல் 1931 வரையுள்ள காலம்:** *1926 முதல் 1931 வரையில் யந்திரத் தொழில் அமைப்பைப் பற்றிய அவருடைய கண்டனம் பலமா யிருந்தது. யந்திரங்களைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. ஆனால், யந்திரங்களின் அடிமையாக மனிதனை வைக்கும் தொழில் அமைப்பைப் பற்றித்தான் பயப்பட வேண்டும். மனிதனுடைய தேவைகளைப் பொறுத்து உற்பத்தி செய்யப்படவில்லை. சொந்தக்காரருக்கு லாபம் சம்பாதித்துக் கொள்வதற்காக எவ்வளவு சாமான்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்பதை யந்திரங்கள் தீர்மானிக்கின்றன. போட்டி இல்லாத வெளிநாட்டு மார்க்கெட்டுகளில் எவ்வளவு சுரண்டலாம் என்பதைப் பொறுத்துத்தான் ஒரு நாட்டின் தொழில் அமைப்பு இருக்கிறது. இந்த முறை சுயநலத்தையும், பக்கத்திலுள்ளவர்களின் நலன்களைக் கவனிக்காத இயல்பையும் வளர்க்கிறது.*

**யந்திரங்களுக்கு நிபந்தனையுடன் எதிர்ப்பு:** *யந்திரங்கள் விஷயத்தில் காந்திஜியின் கருத்து மேலும் ஒரு மாறுதலடைந்திருக்கிறது என்பதை 1924-ல் அவர் எழுதிய கட்டுரைகள் காட்டுகின்றன. சில சந்தர்ப்பங்களில் கனரக யந்திரங்களை உபயோகிப்பது தவிர்க்க முடியாததா யிருக்கும். அந்தச் சந்தர்ப்பங்களில்*

---

* 'எங் இந்தியா' - 13—11—1924.

சமூகத்தின் கட்டுப்பாடுகளுக்குட்பட்டும், கவர்ச்சிகரமான வேலை வசதிகளுடனும் அவற்றை உபயோகிப்பதை அவர் ஒப்புக்கொள்ளத் தயாரா யிருந்தார். கைத்தொழில் அமைப்புக்குப் பதிலாகக் காந்திஜி கூறிய மாற்று யோசனையை விவாதிக்கும்போது, இதை விரிவாகக் கவனிக்கலாம்.

**பொதுவான தப்பு அபிப்பிராயம்:** மின்சாரத்தை உபயோகிப்பதைக் காந்திஜி ஆதரிக்கவில்லை என்றும், விஞ்ஞானத்தில் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுபவைகளை அவர் எதிர்த்தார் என்றும் பொதுவாக ஒரு தப்பபிப்பிராயம் இருக்கிறது. இது சரியல்ல. யந்திரத் தொழில் அமைப்பிலுள்ள தீமைகளைத் தவிர்த்து, எல்லோருடைய நன்மைக்காகவும் அவை உபயோகிக்கப்பட்டால், அவைகளுக்கு அவர் இடமளிக்கத் தயாராயிருந்தார். மின்சாரத்தை ஏற்றுக்கொள்ளவே மாட்டீர்களா என்று கேட்டதற்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார் :

"யார் அப்படிச் சொன்னது? கிராமங்களிலுள்ள ஒவ்வொரு வீட்டிற்கும் மின்சாரம் கொடுக்க முடிந்தால், கிராமவாசிகள் தமது கருவிகளையும், உபகரணங்களையும் மின்சாரத்தின் மூலம் ஓட்டுவதைப் பற்றி எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால், அந்த நிலைமையில் மின்சார நிலையங்கள் கிராம சமுதாயங்களுக்கோ, அரசாங்கத்திற்கோ சொந்தமாயிருக்கும்; மேய்ச்சலுக்காகப் பொது இடங்கள் இருப்பதைப் போல் அவையும் இருக்கும். ஆனால், மின்சாரமோ, யந்திரங்களோ இல்லாத இடங்களில் கைகளை எப்படிப் பயன்படுத்துவது? அவர்களுக்கு வேலை கொடுப்பீர்களா? அல்லது வேலை இல்லை என்பதற்காகக் கைகளை வெட்டிக்கொள்ளச் சொல்லுவீர்களா?"*

மற்றொரு சந்தர்ப்பத்தில் காந்திஜி பின்வருமாறு கூறினார் :

"நீராவி, மின்சாரம் ஆகியவைகளின் உபயோகத்தைப் பற்றி இப்போது நமக்குத் தெரிந்துவிட்டது. உரிய சந்தர்ப்பத்திலும், யந்திரத் தொழில் அமைப்பைத் தவிர்க்கக் கற்றுக்கொண்ட பிறகும் அதை நாம் உபயோகிக்க முடியும். எப்படியும், யந்திரமயமான தொழில் அமைப்பை ஒழிப்பதே நமது முக்கிய நோக்கம்."†

**விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் பற்றி அவருடைய நிலை:** புதிதாகக் கண்டுபிடிக்கப்படுபவைகள், விஞ்ஞானபூர்வமான உண்மைகள் முதலியவைகளைப் பற்றி அவருடைய கருத்துக்கள், மனித வர்க்கத்தின் க்ஷேமத்தில் அவருக்குள்ள உண்மையான அக்கறையையும், இந்தச் சாதனங்கள் தகுதியற்ற முறையில் பயன்படுத்தப்படுவது பற்றிய அவருடைய திகிலையும் பிரதிபலிக்கின்றன. "எல்லோருடைய நன்மைக்காகவுமான விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கு நல்ல மதிப்புக் கொடுப்பேன். கண்டுபிடிப்புகளிலேயே பல விதங்கள் இருக்கின்றன. ஏராளமான மனிதர்களை ஒரேயடி

---

* 'ஹரிஜன்'—22-6-1935 † 'எங் இந்தியா' —7-10-1926

யாக மூச்சுத் திணறடித்துக் கொன்றுவிடக் கூடிய விஷ வாயுக்களை நான் விரும்பமாட்டேன்” என்று காந்திஜி கூறினர்.*

“விஞ்ஞானபூர்வமான உண்மைகளும், கண்டுபிடிப்புகளும் வெறும் பேராசையின் கருவிகளாயிருப்பது முதலில் நிற்க வேண்டும். அந்த நிலைமையில் தொழிலாளர்கள் அளவுக்கு மீறி வேலை செய்ய வேண்டியிராது; யந்திரங்கள் தடையாயிருப்பதற்கு மாருக உதவியாகவே இருக்கும்.”†

**கைத்தொழிலமைப்புக்கு மாற்று:** யந்திரமயமான தொழிலமைப்புக்கு மாற்று என்ன? மேல்நாட்டு முறையில் கைத்தொழில் அமைப்பை ஏற்படுத்தாமல் தப்ப முடியாது என்று ஐரோப்பிய எழுத்தாளர்கள் கூறுகிருர்கள். எல்லா நாடுகளுமே எப்படியும் அந்த வழியில்தான் போக வேண்டியிருக்கும் என்கின்றனர். அவர்கள் ஐரோப்பிய உதாரணங்களை வைத்துக்கொண்டு பொதுவாகப் பேசக்கூடும். இந்த உதாரணங்கள் இந்திய நிலைமைக்குப் பொருத்தமா யிரா. “மேற்கத்திய நிலைமையை மனத்தில் வைத்துக்கொண்டு, தங்களுக்குச் சரியா யிருப்பது இந்தியாவுக்கும் சரியாகத்தானே இருக்க வேண்டும் என்று அவசரத்தில் வாதிக்கிருர்கள். ஆனல், இந்தியாவில் பல விதங்களிலும் நிலைமை மாறுபட்டிருக்கிறது.”‡ பல்வேறு நிலைமைகளுக்கேற்றவாறுதான் பொருளாதார விதிகளை அமுல் நடத்த வேண்டுமென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும் ஆகையால், அவர்கள் கூறும் யோசனை ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு மேல் நமக்கு வழிகாட்டியாக இருக்க முடியாது. ஐரோப்பாவுக்குச் சரியாயிருக்கும் ஒன்று, இந்தியாவுக்கும் சரியானதாக இருக்க வேண்டும் என்பதில்லை.

“ஒவ்வொரு நாட்டுக்கும் சில இயல்புகளும், தனிச் சிறப்புகளும் இருக்கின்றன என்பதையும் நாம் அறிவோம். இந்தியாவுக்கும் அம்மாதிரி இருக்கிறது. இந்தியாவின் பல சங்கடங்களுக்கு நாம் உண்மையான ஒரு பரிகாரத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமானல், இங்குள்ள அமைப்பின் பற்பல அம்சங்களையும் கவனித்துப் பிறகுதான் பரிகாரத்தைக் குறிப்பிட வேண்டும்.” §

ஆகையால், ஐரோப்பாவிலிருப்பதைப் போல் அதே மாதிரி இந்தியாவிலும் யந்திரமயமான தொழிலமைப்பை ஏற்படுத்துவதாகச் சொல்லுவது, அசாத்தியமான ஒன்றைச் செய்ய முயற்சிப்பதாகும்.

**மேற்கு நாடுகளுக்கும் இந்தியாவுக்குமுள்ள மாறுபட்ட நிலைமைகள்:** “மேற்கத்திய நாடுகளைப் போல் அதே மாதிரியான கைத்தொழிலமைப்பு இந்தியாவிலும் ஏன் ஏற்பட வேண்டும்? மேற்கத்திய நாடுகளின் நாகரிகம் நகரங்களை அடிப்படையாகக் கொண்டது. இங்கிலாந்து இத்தாலி போன்ற சிறு நாடுகள் நகர நாகரிகத்தை மேற்கொள்ளலாம். மிகக் குறைவான ஜனத்தொகையுள்ள அமெரிக்கா போன்ற ஒரு பெரிய நாடும், ஒருக்கால்

---

* ‘ஹரிஜன்’ – 22—6—1935
† ‘ஹரிஜன்’ - 12—11—1924
‡ ‘எங் இந்தியா’ – 2—7—1931
§ ‘எங் இந்தியா’ - 6—8—1925

வேறு விதமாகச் செய்ய முடியாமல் இருக்கலாம். ஆனல், ஏராளமான ஜனத்தொகையும், இதுவரையில் திருப்திகரமானதாக இருந்து வந்திருக்கிற ஒரு புராதனமான கிராமப்புறத்து நாகரிகத்தை யுடையதுமான ஒரு பெரிய தேசம், மேற்கத்திய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டியதில்லை; பின்பற்றவும் கூடாது. ஒரு குறிப்பிட்ட நிலைமையிலுள்ள ஒரு நாட்டுச்கு ஏற்றதாயிருப்பது, வேறு விதமாயுள்ள இன்னொரு நாட்டுக்கும் ஏற்றதா யிருக்க வேண்டும் என்பதில்லை. ஒருவருக்கு உணவாயிருப்பது இன்னொருவருக்கு விஷமாயிருக்கும். ஒரு நாட்டின் கலாசாரம், அதன் இயற்கை அமைப்பைப் பொறுத்திருக்கிறது. துருவப் பிரதேசத்தில் வசிப்பவருக்கு பர் ரோமச் சட்டை அவசியமான தேவையாக இருக்கலாம். ஆனல், பூமத்திய ரேகைக் கோடு போகும் பிரதேசங்களில் வசிப்பவருக்கு, அதே சட்டை உடலை வெதும்ப வைத்துவிடும்.''*

''இந்தியா, தனக்கேற்ற பொருளாதார முறையைத் தானே வகுத்துக் கொள்ள வேண்டும். கைத்தொழில்கள் முதலிய மற்றவைகளை எப்படி நடத்த வேண்டும் என்பதற்கும் தனக்கேற்ற வழிகளை வகுத்துக்கொள்ள வேண்டும்.''†

**மேற்கு நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் பொதுவான வியாதி:** ஐரோப்பிய நிலைமைக்கும், இந்திய நிலைமைக்குமிடையே உள்ள வித்தியாசங்கள் காந்திஜிக்குத் தெரியும். ஆகையால், மேல் நாடுகளின் பிரச்னைகளுக்கு யோசனை கூறத் தமக்குத் தகுதியில்லை என்று ஒப்புக்கொள்ளுகிருர். ஆனல், அவருடைய அபிப்பிராயம் கோரப்படுவதால், நிலைமையை ஆராய்ந்து பார்த்து, ஒரு பரிகாரத்தைக் கூறுவதற்கு அவர் துணிகிருர். ''இந்தியாவின் வியாதி என்ன, அதற்குப் பரிகாரம் என்ன என்பது எனக்குத் தெரியும். ஆனல், அந்த மாதிரி ஐரோப்பிய நிலைமையைப் பற்றி எனக்குத் தெரியும். ஆயினும், ஐரோப்பாவில் மக்கள் ராஜீய சுயாட்சியை அனுபவித்தும்கூட, ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் அடிப்படையில் வியாதி ஒன்றேதான் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்று காந்திஜி கூறினர். ‡

ஜனநாயகம் என்ற புனிதமான பெயரில், ஆளும் வர்க்கமோ அல்லது வகுப்போ பாமர மக்களைச் சுரண்டுவதைத்தான் வியாதி என்று மேலே குறிப்பிட்டிருக்கிறது. இந்த வியாதியைக் குணப்படுத்த வேண்டுமானல், பாமர மக்கள் சுரண்டலிலிருந்தும், சிறுமைப்படுத்தப்படுவதி லிருந்தும் விடுவிக்கப்பட்டு விடுவார்கள் என்று தெளிவில்லாமல் பொதுப்படையாகச் சொன்னல் போதாது. இதற்குப் பதில் கண்டுபிடிப்பதற்கு இன்னும் ஆழ்ந்து பார்க்க வேண்டும். ''இன்று முதலாளிகள் வகிக்கும் ஸ்தானத்தை மக்கள் வகிக்க விரும்புகிருர்கள் என்பதுதானே

---

* 'எங் இந்தியா' - 25—7—1929

† 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்'—ஜி. ஏ. நடேசன் அண்ட் கம்பெனி—4 - வது பதிப்பு, பக்கம் 844.

‡ 'எங் இந்தியா' - 2—9—1925

பதில்? அப்படியானுல், பலாத்காரத்தின் மூலம்தான் அதைப் பெற முடியும்."*

**பலாத்காரப் புரட்சியின் கெடுதல்கள் :** பலாத்காரத்தின் மூலம் பாட்டாளி மக்கள் முதலாளித்துவத்தின் ஸ்தானத்தை அடைய முயற்சித்ததற்கு ரஷியா ஓர் உதாரணமாகும். முடிவு என்ன? அதைப் பற்றிக் காந்திஜி பின்வருமாறு கருதுகிருர் :

"கைத்தொழில் அமைப்பின் மேல் வரம்பை அடைந்துவிட்ட ரஷியாவைப் பார்க்கும்போது, அங்குள்ள வாழ்க்கை முறை எனக்குப் பிடிக்கவில்லை. பைபிள் பாஷையில் இப்படிச் சொல்லலாம்: 'தன் ஆன்மாவை இழந்துவிட்டு, மனிதன் உலகத்தையே வென்ருலும் என்ன பயன்?' அதாவது, ஒருவர் தனது தனித் தன்மையை இழந்துவிட்டு, யந்திரத்தின் உறுப்புக்களில் ஒன்ருக ஆகிவிடுவது மனித கௌரவத்திற்கு இழுக்கானது. ஒவ்வொரு தனி மனிதனும் சமூகத்தில் தனிச் சிறப்பு வாய்ந்த மனிதனுக வளர்ச்சி பெற வேண்டும் என்று நான் விரும்புகிறேன். கிராமங்கள் தன்னிறைவு பெற்றவைகளாக இருக்க வேண்டும். அகிம்சை வழியில் வேலை செய்ய வேண்டும் என்ருல், இதைத் தவிர வேறு வழி இருப்பதாக எனக்குத் தெரியவில்லை."†

**முதலாளித்துவத்தின் தீமைகளைத் தவிர்ப்பது எப்படி? :** முதலாளித்துவத்தின் தீமைகளைப் பாமர மக்கள் தவிர்க்க வேண்டுமானுல் என்ன செய்ய வேண்டும்?

"உழைப்பின் பலனை மேலும் நியாயமான முறையில் விநியோகம் செய்ய அவர்கள் முயற்சி செய்வார்கள். அதாவது, மக்கள் தாமாகவே எளிமையில் திருப்தி காண வேண்டும். இந்தப் புதிய மனுேபாவத்தில் தேவைகளைப் பெருக்கிக்கொள்ளுவது வாழ்க்கையின் நோக்கமா யிராது. சௌகரியமான வாழ்க்கைக்கு வேண்டிய அளவோடு கட்டுப்படுத்திக்கொள்ளுவதே நோக்கமா யிருக்கும். கிடைத்ததைப் பெறுவோம் என்று நினைப்பதை நிறுத்திவிடுவோம்; எல்லோருக்கும் கிடைக்காததை நாம் பெற மறுத்துவிடுவோம். பொருளாதார ரீதியில் இதை ஐரோப்பிய மக்களுக்கு எடுத்துச் சொல்லி வெற்றி பெறுவது கஷ்டமா யிராது என்றே எனக்குத் தோன்றுகிறது. இத்தகைய ஒரு பரீட்சையை வெற்றிகரமாக நடத்தினுல், நம்மை அறியாமலே பெரும் அளவில் ஆன்மிக பலன்கள் உண்டாகும். வாழ்க்கையின் சாதாரண நடவடிக்கைகளில்தான் ஆன்மிகமான சட்டம் பிரதிபலிக்கிறது. இவ்வாருக இது பொருளாதார, சமூக, அரசியல் துறைகளையும் பாதிக்கிறது."‡

காந்திஜியின் மேற்கூறிய கருத்துக்களை ஐரோப்பிய மக்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்தால், லட்சியத்தை அடைவதற்குப் பலாத்காரம் முற்றிலும் அவசியமற்றதாக இருக்கும். அகிம்சை வழிகளின் மூலமே மக்கள் சுலபமாகத் தமக்குரியவற்றைப் பெற முடியும்.

---

* 'எங் இந்தியா' – 3—9—1925 † 'ஹரிஜன்' – 28—1—1939

‡ 'எங் இந்தியா – 3—9—1925

**வேண்டிய அளவு என்பதன் பொருள்:** 'வேண்டிய அளவு' என்று காந்திஜி கூறுவதன் பொருள் என்ன? "ஒவ்வொருவருக்கும் உண்பதற்கும் உடுப்பதற்கும் நிறைய இருப்பது; தன் மனத்திற்குப் பயிற்சி அளித்துச் சீராக வைத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய அளவு இருப்பது" என்றே பொருள்.* ஒரு மனிதன் பிரயோசனப்படத்தக்க விதத்தில் எவ்வளவு உபயோகிக்க முடியுமோ அதற்கு அதிகமாக வைத்துக்கொள்ளக்கூடாது என்று அவர் விரும்பினர். வறுமை, கஷ்டம், அசுத்தம், துன்பம் ஆகியவற்றையும் அவர் விரும்பவில்லை.†

**கிராம வாழ்வின் சீரமைப்பு:** யந்திரத் தொழில் மயமாவதற்குப் பதிலாக, "பழைய முழு எளிமைக்குத் திரும்புதல்" என்பது பொருள் அல்ல. "ஆனல், கிராம வாழ்க்கைக்கு முக்கியத்துவம் கொடுக்கும் விதத்தில் சீரமைப்பு ஏற்பட வேண்டும். அந்த அமைப்பில் மிருக பலமும், லோகாயதமும், ஆன்மிக பலத்திற்கு உட்பட்டதாயிருக்க வேண்டும்."‡

**எதிர்த் திசையில் மாற்றம்:** இந்தியாவை யந்திரத் தொழில் நாடாக்குவீர்களா என்ற ஒரு கேள்விக்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்:

"என்னுடைய வியாக்கியானத்தின்படி செய்வேன். கிராம சமுதாயங்களை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும், இந்தியாவிலுள்ள நகரங்களின் தேவைகளையெல்லாம் இந்தியக் கிராமங்களே உற்பத்தி செய்து கொடுத்துக் கொண்டிருந்தன. இந்திய நகரங்கள் வெளிநாட்டினரின் சந்தைகளாயின. வெளிநாடுகளிலிருந்து மலிவான போலி சாமான்களைக் கொண்டு வந்து குவித்து, கிராமங்களை வற்றக் கறக்க ஆரம்பித்த பிறகுதான் இந்தியா ஏழையாயிற்று."§

ஆகையால், கிராமங்களிலிருந்து நகரங்களுக்குப் போக்குப் போகும் ஓட்டத்தை எதிர்த் திசையில் மாற்றி, இயற்கையான பொருளாதார அமைப்புக்குத் திருப்ப விரும்பினர். கிராமங்களிலும் தொழில்களுக்கு இடமளிப்பார். ஆனல், அவருடைய தொழிலமைப்பு என்பது மில்களைப் பெருக்கிக்கொண்டு போவது அல்ல.

**இயற்கையான பொருளாதாரம்:** இயற்கையான பொருளாதாரம் என்பதில், கிராமக் கைத்தொழில்களும், பெரும் அளவு உற்பத்தியும் இணக்கமாகச் சேர்ந்திருக்கும். கிராமங்களுக்கு உதவியளிக்கும் வகையில் அமைக்கப்பட்டால் அவை இணக்கமாக இருக்கும். தேசத்திற்கு அவசியமான, முக்கியமான தொழில்கள் ஒரே இடத்தில் இருக்கலாம். ஆனல், சிறிதளவு ஏற்பாட்டுடன் கிராமங்களே செய்யக்கூடியவைகள் அவ்வித முக்கியத் தொழில்களாக எடுக்கப்பட மாட்டா. அதிகக் கஷ்ட

---

* 'ஹரிஜன்' - 12—2—1938 † 'ஹரிஜன்'—12—2—1938
‡ 'எங் இந்தியா' – 6—8—1925 § 'ஹரிஜன்' – 27—2—1937

மில்லாமல் கிராமங்களே உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களைப் பெரும் அளவில் உற்பத்தி செய்வதைக் காந்திஜி எதிர்த்தார்.*

**கன ரகத் தொழில்கள், சர்க்கார் உடைமை :** முக்கியமான கைத் தொழில்கள் எவை என்பதை அவர் குறிப்பிடவில்லை. ஆயினும், ஏராளமான தொழிலாளர்கள் சேர்ந்து வேலை செய்ய வேண்டிய எதுவும், மொத்தத்தில் அரசாங்க உடைமையாயிருக்க வேண்டுமென அவர் கருதினர். ஸிங்கர் தையல் யந்திரங்கள்,† அச்சடிக்கும் யந்திரங்கள், சத்திர சிகிச்சைக்கான கருவிகள் ‡ முதலியவைகளுக்கு கன ரக யந்திரங்கள் வேண்டியிருக்கும் என்று அவர் உதாரணம் கொடுத்தார். அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்கள் யாவும் அரசாங்கத்தின் மூலம் அவர்களுடைய உடைமைகளாயிருக்கும்.§

கன ரகத் தொழில்கள் சர்க்கார் உடைமைகளாக்கப்பட்டு ஒரே இடத்தில்தான் இருக்கும். ஆனால், கிராமங்களிலெல்லாம் நடைபெறும் பெரும் நடவடிக்கைகளில் அவைகளுக்கு மிகச் சிறு பங்குதான் உண்டு.¶ பெரிய தொழிற்சாலைகள் அரசாங்க உடைமைகளாயிருக்க வேண்டுமென்று சோஷலிஸ்டுகளைப் போலவே அவரும் நம்பினர். ஆனால், அங்கே வேலை செய்பவர்களின் வேலை நிலைமை மிகக் கவர்ச்சிகரமாகவும், உதாரணமாகவும் இருக்க வேண்டுமென அவர் ஆசைப்பட்டார். லாபத்திற்காக இல்லாமல், மனித வர்க்கத்தின் நன்மைக்காக வேலை செய்ய வேண்டும். பேராசைக்குப் பதிலாக அன்பே முக்கிய நோக்கமா யிருக்க வேண்டும்.** முக்கியமான கைத்தொழில்களை அரசாங்கமே எடுத்துக்கொள்ளாவிட்டால்கூட, அவற்றின் நிர்வாகம், அபிவிருத்தி ஆகியவைகளில் அரசாங்கத்திற்குப் பெரும் அளவு பொறுப்பு இருக்க வேண்டும்.*† காந்திஜியின் லட்சிய ராஜ்யம் அகிம்சையை அடிப்படையாகக் கொண்டதா யிருக்குமாகையால், பலாத்காரத்தின் மூலம் பணக்காரர்களின் செல்வம் பறிக்கப்படமாட்டாது. செல்வத்தை அரசாங்க உடைமையாக்குவதற்குப் பணக்காரர்களுடைய ஒத்துழைப்பைக் கோருவார். லட்சாதிபதிகளா யிருந்தாலும், ஓட்டாண்டிகளா யிருந்தாலும், சமூகத்தில் 'பறையர்கள்' என்று அவருக்கு யாரும் கிடையாது.*‡

**கைத்தொழிலின் இரு பிரிவுகளுக்குமிடையே இணக்கம் :** எல்லா அதிகாரங்களும் அரசாங்கத்தினிடமே குவிந்திருந்தால்,

---

* 'ஹரிஜன்' – 28—1—1939 † 'எங் இந்தியா' – 13—11—1924

‡ 'ஹரிஜன்' - 22—6—1935 § 'ஹரிஜன்' - 1—9—1946

¶ காந்திஜி எழுதிய 'நிர்மாண வேலைத் திட்டம்' - 1941 - ஆம் வருடப் பதிப்பு-பக்கம் 8.

** 'எங் இந்தியா' – 13–11–1924

*† 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' — ஜி. ஏ. நடேசன் அண்ட் கம்பெனி 4-வது பதிப்பு – பக்கம் 844.

*‡ 'ஹரிஜன்' – 1—9—1946

தொழிலின் இரு பிரிவுகளுக்குமிடையே இணக்க மிராது. தரும கர்த்தா உணர்ச்சியை விரிவுபடுத்துவதன் மூலம்தான் அதை ஏற்படுத்த முடியும். அரசாங்கத்தின் பலாத்காரத்தைப் போல், தனி நபர் சொத்துரிமையில் உள்ள பலாத்காரம் அவ்வளவு அதிகக் கெடுதலானதல்ல என்பதே அவருடைய அபிப்பிராயம். ஆயினும், வேறு வழியில்லையென்ருல், அரசாங்க உடைமை என்பது குறைந்த பட்ச அளவிலிருப்பதை அவர் ஆதரித்தார்.*

**தனி நபர் உடைமையும் சர்க்கார் ஆதிக்கமும் :** கண்டிப்பாகப் பார்த்தால் தனி நபர் உடைமையும், அகிம்சையும் ஒன்றுக்கொன்று முரணானவை. ஆயினும், அதிலிருந்து ஏதாவது நன்மை பிறக்காதா என்ற நம்பிக்கையில் அதற்கு விட்டுக் கொடுக்கத் தயாராயிருந்தார். தனி நபர் உடைமையைவிட அரசாங்க உடைமை சிறந்ததுதான் என்பதில் சந்தேகமில்லை. ஆனல், பலாத்காரம் இருக்கிறது என்ற காரணத்திற்காக அதை ஆட்சேபித்தார். அரசாங்கம் என்பது கட்டுப்பாடான முறையில் பலாத்காரத்தின் சத்தைப் பிரதிபலிப்பதாகும். தனி மனிதனுக்கு உள்ளம் என்று ஒன்று இருக்கிறது. ஆனல், அரசாங்கம் என்பது உள்ளமே இல்லாத ஒரு யந்திரம். பலாத்காரம் என்ற அஸ்திவாரத்தின் மீதுதான் அது நிற்கிறது. அதிலிருந்து அரசாங்கத்தை மாற்ற முடியாது. ஆகையால், தருமகர்த்தாக் கொள்கையே ஏற்றது என்று அவர் நினைத்தார்.† சோவியத் ரஷியாவில் சர்க்கார் ஆதிக்கத்தின் கீழ் கைத்தொழில்கள் நடத்தப்படும் பரீட்சையின் வெற்றியைப் பற்றி அவர் சந்தேகப்பட்டார். அதாவது, உற்பத்தி, வினியோகம் இரண்டுமே அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்பட்டிருப்பதே ரஷியாவின் பொருளாதார அமைப்பு. இந்த முறை பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டதாகையால், அது எங்கே, எவ்வளவு தூரம் கொண்டு போய்விடுமென்று அவருக்குத் தெரியவில்லை.‡ எப்போதுமே பலாத்காரத்தைத்தான் அடிப்படையாகக்கொண்டிருக்க வேண்டுமென்பதில்லை. "கொள்கையளவில்அப்படியிருக்கலாம். ஆனல், நடைமுறையில் அப்படி இருப்பதற்கு அரசாங்கம் பெரும்பாலும் அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டதாக இருக்கவேண்டும்."§

**தொழிலமைப்பு என்பதன் பொருள், பெருவாரியான உற்பத்தி :** யந்திரத் தொழிலமைப்பு என்பது பெருவாரியான உற்பத்திதான். "மிகவும் சிக்கலான யந்திரங்களின் மூலம் மிகவும் குறைவான பேர் உற்பத்தி செய்வதற்குத்தான் பெருவாரியான உற்பத்தி என்று பெயர்"¶ "பெருவாரியான அளவில் கைத்தொழில்களைப் பெருக்குவது, உற்பத்தியை விற்பனை செய்யும்

---

* 'மாடர்ன் ரெவியூ'-அக்டோபர், 1935 † 'மாடர்ன் ரெவியூ' – அக்டோபர், 1935
‡ 'ஹரிஜன்' – 2—11—1934 § 'ஹரிஜன்' – 16—2—1947
¶ 'ஹரிஜன்' – 2—11—1934

போட்டியை உண்டாக்கும்போது கிராமவாசிகளைச் சுரண்டுவதில் கொண்டு போய்விடும்.''*

**யந்திரத் தொழில் மயமாவதன் தீங்குகள் :** கைத்தொழிலமைப்பின் தீங்குகளைச் சுருக்கமாகப் பின்வருமாறு குறிப்பிடலாம் : (1) மூலதனமும் அதிகாரமும் ஒரு சிலரிடம் குவிந்துவிடுகின்றன. (2) ஒருவரை மற்றொருவர் சுரண்டி வாழ்வது வளருகிறது. பணக்காரர்களும், மத்திய வகுப்பினரும் ஏழைகளைச் சுரண்டுகிறார்கள்; நகரங்கள் கிராமங்களைச் சுரண்டுகின்றன; கைத்தொழில் அபிவிருத்தியடைந்த நாடுகள், விவசாய நாடுகளைச் சுரண்டுகின்றன. (3) முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே முரண்பாடுகள் ஏற்படுகின்றன. (4) பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமிடையே உள்ள பிளவு அதிகமாகிறது. இதனால், ஏற்றத்தாழ்வுகள் வெட்டவெளிச்சமாகின்றன. (5) வியாபார மனப்பான்மை கடுமையாக விரிவடைகிறது. ஒருபுறம் எல்லையில்லாத பேராசை வளருகிறது. இதன் பலனாக மற்றொரு புறத்தில் யுத்தம் மூளுகிறது.

**மேற்கு நாடுகளின் படிப்பினை :** யந்திரத் தொழிலமைப்பு அல்லது முதலாளித்துவத்தின் தீமைகளையெல்லாம் தவிர்ப்பதற்கு மேற்கு நாடுகளின் உதாரணம் நமக்குப் பாடம் கற்பிக்கிறது. யந்திர மயமான தொழில்கள் மிகப் பெரும் அளவில் பெருகுவது,சலுகைகளையும், ஏகபோக உரிமைகளையும் உண்டாக்குகிறது. இது காந்திஜிக்குப் பிடிக்கவில்லை. பாமர மக்களுடன் பகிர்ந்து கொள்ள முடியாத எதுவும் அவருக்குத் தள்ளுபடியானதுதான்.

''ஆகையால், கிராமங்கள் முக்கியமாக தம் உபயோகத்திற்கென்றே உற்பத்தி செய்து, தன்னிறைவு பெற்றவைகளாய் இருப்பதில் நாம் கவனம் செலுத்த வேண்டும். கிராமக் கைத்தொழில்களின் இந்தத் தன்மையை நாம் காப்பாற்றினால், கிராமங்கள் தம்மால் முடிந்த நவீன யந்திரங்களையும், கருவிகளையும் உபயோகிப்பதற்குக்கூட ஆட்சேபணை இராது. மற்றவர்களைச் சுரண்டுவதற்காக இவற்றை உபயோகிக்கக்கூடாது.''†

''மனிதர்களின் தேவைகளையெல்லாம் யந்திரங்கள் சப்ளை செய்யலாம் என்று வாதத்திற்காக வைத்துக்கொண்டாலும், அப்போது குறிப்பிட்ட சில இடங்களில்தான் உற்பத்தி குவிக்கப்பட்டிருக்கும். விநியோகத்தைச் சீர்ப்படுத்துவதற்குச் சுற்றி வளைத்துப் போக வேண்டியிருக்கும். ஆனால், பொருள்கள் தேவைப்படும் பிரதேசங்களிலேயே உற்பத்தி, விநியோகம் ஆகிய இரண்டும் இருந்தால், அது தானாகவே சீர்ப்பட்டுவிடும். மோசடிக்கு அதிக வாய்ப்பு இருக்காது. சூதாட்ட பேரத்திற்கு இடமே இருக்காது.''‡

அகிம்சையின் அடிப்படையில் வேலை செய்ய வேண்டுமென்றால், கிராமங்கள் தன்னிறைவு பெறுவதைத் தவிர வேறு வழியே இல்லை.§ ''அத்தியாவசிய வாழ்க்கைத் தேவைகளின் உற்பத்தி கிராமங்களின் கட்டுப்பாட்டுக்குள் இருந்தாலொழிய,

* 'ஹரிஜன்' – 29—8—1939 † 'ஹரிஜன்' - 29—8—1939
‡ 'ஹரிஜன்' – 2—11—1934 § 'ஹரிஜன்' - 28—1—1939

கிராமங்கள் நீண்ட காலமாக அனுபவித்து வரும் சுதந்திரத்தைத் தொடர்ந்து அனுபவிக்க முடியாது,''* ''பெரும் அளவில் ஏக காலத்தில் வினியோகமும் இருந்தாலொழிய பெருவாரியான உற்பத்தி உலக விபரீதத்தில்தான் முடியக்கூடும்.''†

**ஒரே சமயத்தில் உற்பத்தியும், வினியோகமும் :** உற்பத்தி, அந்தந்த இடங்களில் இருந்தால், வினியோகத்தைச் சமப்படுத்தி விட முடியும். அதாவது, உற்பத்தியும், வினியோகமும் ஒரே சமயத்தில் நடக்க வேண்டும். தன்னுடைய பொருள்களை விற்பனை செய்வதற்கு உலகத்திலுள்ள வேறு மார்க்கெட்டுகளைப் பிடிக்க வேண்டுமென்று நினைக்கும் வரையில், வினியோகம் சமமாயிருக்கவே முடியாது. இதனால் விஞ்ஞானம், வியாபார ஏற்பாடு ஆகிய துறைகளில் மேற்குநாடுகள் அடைந்துள்ள மகத்தான முன்னேற்றத்தினால் உலகத்திற்குப் பிரயோசனமில்லை என்று அர்த்தமில்லை. ஆனால், அவை தரும சிந்தனையுடன் செய்யப்படுவதாக இருக்க வேண்டும்.‡

''அந்தந்த இடங்களிலேயே உற்பத்தியும் வினியோகமும் இருக்கும் போது, எப்படியானாலும் உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டேயிருக்கவேண்டும் என்ற ஆசை மறைந்துவிடுகிறது. இன்றைய பொருளாதார முறையிலுள்ள ஓயாத சங்கடங்களும், பிரச்னைகளும் தீர்ந்துவிடும்.''§

''மக்களின் தேவைகள் பூர்த்தியானவுடன் உற்பத்தியும் நின்றுவிடும். மக்களின் தேவைகளைக் கவனிக்காமலும், அவர்கள் வறுமைக்குள்ளாக்கப்படலாம் என்பதைப் பொருட்படுத்தாமலும், மேலும் அதிகப் பணம் கிடைக்க வேண்டும் என்பதற்காக உற்பத்தி நீடித்துக்கொண்டேயிருக்காது. ஒரு சிலரிடம் மட்டும் இயற்கைக்கு விரோதமாகப் பணம் குவிந்திராது. இன்று அமெரிக்காவி லிருப்பதைப் போல் செல்வத்தின் மத்தியில் ஏழ்மை இராது.''¶

ஆகையால், பின்வருமாறு நடைபெறுவதாயிருக்க வேண்டும் :

''ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டியவற்றையெல்லாம் உற்பத்தி செய்து, அவற்றை உபயோகிக்க வேண்டும். அத்துடன், நகரங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குத் தன்னுடைய பங்காக ஒரு குறிப்பிட்ட விகிதாசாரப்படி மேற்கொண்டும் உற்பத்தி செய்ய வேண்டும்."**

**நகரங்களின் கடமை :** நகரங்களின் தலையீட்டிலிருந்து கிராமங்கள் பாதுகாக்கப்படும். ''ஒரு காலத்தில் நகரங்கள் கிராமங்களை நம்பியிருந்தன. ஆனால், இப்போது நிலைமை நேர்மாறாயிருக்கிறது. ஒன்றையொன்று நம்பி வாழும் நிலைமை இல்லை."*†

---

* 'எங் இந்தியா' – 2—7—1931 † 'ஹரிஜன்' – 2—11—1934

‡ 'ஹரிஜன்' – 2—11—1934 § 'ஹரிஜன்' – 2—11—1934

¶ 'ஹரிஜன்' – 2—11—1934

** காந்திஜியின் 'நிர்மாண வேலைத் திட்டம்' 1941-ஆம் வருடப் பதிப்பு-பக்கம் 8

*† 'ஹரிஜன் – 28—1—1939

காந்திஜியின் திட்டத்தின் கீழ், "கிராமங்களில் உற்பத்தி செய்யப்படக் கூடிய பொருள்களே நகரங்களிலும் செய்யப்படுவதற்கு அனுமதிக்கப்படமாட்டாது. கிராம உற்பத்திகளை விற்பனை செய்வதற்கான இடங்களாகவே நகரங்கள் இருக்கும்."

சாத்தியமான வரையில் ஒவ்வொரு கிராமமும் தன்னிறைவு பெற்றதாயிருக்கும். உள்ளூரில் உற்பத்தியாகாத பொருள்களைப் பண்டமாற்றிக்கொள்ளுவதன் மூலம் இந்தக் கிராமங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கும்.

**அதிக வேலை வாய்ப்புக்கும், உயர்ந்த வாழ்க்கைத் தரத்திற்குமிடையே உள்ள முரண்பாடுகள்:** கிராமங்களை இவ்வாறு இணைப்பதன் மூலம் ஏராளமான பேர்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைக்கின்றன என்றாலும். அதனால் வாழ்க்கைத் தரம் போதுமான அளவு உயருமா என்று கேட்கலாம். வேலையில்லாத நிலைமையைச் சீக்கிரத்தில் அகற்றுவதற்கும், வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்குமிடையே ஒரு முரண்பாடு இருக்கிறது. இரண்டும் வேண்டும் என்றே நாம் விரும்புவோம். எல்லாத் தொழிற்சாலைகளையும் மூடிவிட்டால், இந்தியாவிலுள்ள ஒவ்வொருவருக்கும் வேலை கொடுப்பதென்பது சாத்தியமே. இவ்வாறாக, எல்லோருக்கும் முழு வேலை கிடைக்கும் நிலைமையை ஏற்படுத்தலாம். ஆனால், வாழ்க்கைத் தரம் குறைவானதாகவே இருக்கும். முழு அளவில் வேலை வாய்ப்பும், உயர்ந்த வாழ்க்கைத் தரமும் வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இந்த முரண்பாட்டைப் பற்றி 1955-மார்ச் மாதத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு அலகாபாத்தில் செய்த ஒரு பிரசங்கத்தில் பின்வருமாறு கூறினார் :

"நம்முடைய நாட்டிலும், நம்மைப் போன்ற நிலைமையிலுள்ள மற்ற நாடுகளிலும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், அதிக வேலை வாய்ப்பு அளிப்பதற்குமிடையே இப்போது ஒரு சிறு முரண்பாடு இருக்கிறது. வாழ்க்கைத் தரத்திற்கும், அதிக வேலை வாய்ப்புகளுக்குமிடையே எப்போதுமே முரண்பாடு இருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். வேலை வாய்ப்புகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தால், வாழ்க்கைத் தரம் குறைவதா யிருக்கலாம். வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தால், வேலையில்லாமை அதிகமாகலாம். இவ்விரண்டையும் சமப்படுத்த வேண்டும். இரண்டில் ஒன்றுக்கு மாத்திரம் அதிக முக்கியத்துவம் கொடுக்கக்கூடாது. வேலையில்லாமை அதிகமானால் பரவாயில்லை என்று வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது கூடாது. ஏனெனில், சமூக நலன்கள் என்ற ரீதியில் அது தவறானதாகும். ஆனால், வாழ்க்கைத் தரத்தையே உயர்த்தாமல் வேலையில்லாமையை ஒழித்தால், அதனால் ஒரு பிரயோசனமுமில்லை. ஏழைகளாகவேதான் இருந்து கொண்டிருப்போம். ஆகையால், இது மிகவும் ஜாக்கிரதையாகச் சரிப்படுத்தப்பட வேண்டிய ஒரு பிரச்னையாகும். செல்வத்தை மேலும் அதிகமாக உற்பத்தி செய்வதே இதன் அடிப்படை. செல்வத்தை அதிகமாக உற்பத்தி செய்யாவிட்டால், வினியோகத்திற்கான

திட்டங்களெல்லாம் தோல்வியடைந்துவிடும். ஏனெனில், வினியோகிப்பதற்கு அதிகமாக ஒன்றுமே இராது. ஆகையால், உற்பத்திப் பெருக்கம், அதிக வேலை வாய்ப்புகள் ஆகிய இரண்டையும் எப்படி இணைப்பது என்பதே பிரச்னை.''

இந்த இரண்டு அம்சங்களில் எந்த ஒன்றுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்தால் அபிவிருத்தி சீரானதா யிராது. அத்துடன் சமத்துவம் என்ற லட்சியத்தை மனித வர்க்கம் காண முடியாமலும் போய்விடுகிறது. மேலே விவரிக்கப்பட்ட தொழிலமைப்பு அல்லது முதலாளித்துவத்தின் தீமைகளைத் தவிர்ப்பதற்கும் அது உதவி செய்யவில்லை. இந்த முரண்பாட்டைக் காந்திஜி உணர்ந்திருந்தார். அவர் எழுதினர் :

''ஒரு தேசத்தின் சக்தி வாய்ந்த ஆள் பலத்தைப் புறக்கணித்துவிட்டு மூலப் பொருள்களை மட்டும் பயன்படுத்திக்கொள்ளும் எந்தத் திட்டமும் சரியானதல்ல. மனித சமத்துவத்தை ஏற்படுத்துவதற்கும் அது உதவி செய்யாது."*

ஆகவே, பொருளாதாரத்தின் கேந்திரமாகக் கிராமத்தை வைத்துக்கொண்டு திட்டமிட வேண்டுமெனக் காந்திஜி கூறுகிறர்.

''இந்தியாவிலுள்ள ஆள் பலம் பூராவையும் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளுவதும், இந்தியாவிலுள்ள மூலப் பொருள்களை வெளியே அனுப்பி, பிறகு, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களாகப் பெரும் விலை கொடுத்து அவற்றை மீண்டும் வாங்குவதற்குப் பதிலாக, மூலப் பொருள்களை இங்குள்ள எண்ணற்ற கிராமங்களிலேயே வினியோகிப்பதுதான் உண்மையான திட்டமிடுதலாகும்.''†

## சுதேசி

**சுதேசிக் கொள்கையின் ஆரம்பம் :** இந்தியாவோ, மற்ற நாடுகளோ, முதலில் தமக்காக வாழ வேண்டும். பிறகுதான் மற்றவர்களுக்காக வாழ வேண்டும். தன்னுடைய தேவைகளையெல்லாம் தன் எல்லைக்குள்ளாகவே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும். அப்படி ஏற்படும்போது, பைத்தியக்காரத்தனமானதும், நாசகரமானதுமான போட்டியிலும், அதன் விளைவுகளான பொருமை, சகோதரத் துவேஷம் போன்ற பல தீமைகளில் இந்தியா சிக்கிக்கொள்ள வேண்டி யிராது. கிராமப் பொருளாதாரம் என்ற கருத்தில் ஒரு பெரிய கொள்கை அடங்கியிருக்கிறது. அதற்குக் காந்திஜி, சுதேசி என்று பெயர் கொடுத்தார்.

**சுதேசியின் மூன்று கிளைகள் :** ''எங்கேயோ தொலைவிலிருப்பதை விலக்கி, நம்மைச் சுற்றியுள்ளவைகளைப் பயன்படுத்திச் சேவை செய்ய வேண்டும் என்ற உணர்ச்சிதான் சுதேசி.''

---

* 'ஹரிஜன்' - 23—3—1947 † 'ஹரிஜன்' – 23—3—1947

‡ 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 336.

சுதேசியில் மதம், ராஜீயம், பொருளாதாரம் என்ற மூன்று கிளைகள் இருக்கின்றன. பொருளாதாரத் துறையில் சுதேசியை எப்படி அனுஷ்டிப்பது என்பதையே இங்கே நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். நமக்குப் பக்கத்திலுள்ளவர்களால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களையே உபயோகிக்க வேண்டும். அவற்றில் குறைபாடுகள் காணப்பட்டால் அவற்றை அகற்றுவதற்கு உதவி செய்ய வேண்டும். இதுதான் பொருளாதாரத் துறையில் சுதேசி என்பதன் அர்த்தம்.*

**சுதேசி என்றால் என்ன ?:** "மற்ற யாரையும் கவனிக்காமல், தனக்கு அடுத்த வீட்டில் இருப்பவருக்கு உதவி செய்ய வேண்டும் என்ற உணர்ச்சிதான் சுதேசி. அப்படி உதவி செய்யப்படும் அடுத்த வீட்டுக்காரர், தம்முடைய அண்டை வீட்டுக்காரருக்கு உதவி செய்ய வேண்டும். இப்படிப் பார்க்கும்போது சுதேசி யாரையும் விலக்கவில்லை. மனிதன் எந்த அளவுக்குத் தொண்டு செய்ய முடியும் என்பதை அது உணருகிறது."†

**மனிதனின் முதல் கடமை :** "அண்டை வீட்டுக்காரருக்கு உதவி செய்வது தான் மனிதனின் முதல் கடமையாகும். இதனால் வெளி நாட்டினரை வெறுக்க வேண்டுமென்றோ, நம் நாட்டினரிடமே பட்சபாதம் காட்ட வேண்டுமென்றோ அர்த்தமில்லை. நாம் எவ்வளவு உதவி செய்ய முடியும் என்பதற்கு ஒரு அளவு உண்டு. அண்டை வீட்டுக்காரருக்கு உதவி செய்வதில்கூடக் கொஞ்சம் கஷ்டமிருக்கலாம். நாம் ஒவ்வொருவருமே நம்முடைய அண்டை வீட்டுக்காரருக்குரிய கடமையைச் சரியாக நிறைவேற்றினால், உலகத்தில் உதவி தேவையாயிருப்பவர்கள் யாருமே உதவியற்றிருக்க மாட்டார்கள். ஆகையால், அண்டை வீட்டுக்காரருக்கு உதவி செய்பவர் உலகம் பூராவுக்குமே தொண்டு செய்தவராகிறார். உண்மையில் பார்க்கப்போனால், சுதேசியில், நம் நாட்டினர், பிற நாட்டினர் என்ற பாகுபாட்டுக்கே இடமில்லை. அண்டை வீட்டுக்காரருக்கு உதவி செய்வது உலகத்திற்கே உதவி செய்வதாகும்."‡

"என் பக்கத்திலிருப்பவரைக் கவனிக்காமல், தொலைவிலிருப்பவருக்கு நான் உதவி செய்வதாயிருக்கக் கூடாது. இதில் வஞ்சம் தீர்க்கும் தன்மை வாய்ந்தது எதுவுமில்லை. இது குறுகிய மனப்பான்மை கொண்டதுமல்ல. ஏனெனில், என் வளர்ச்சிக்குத் தேவையாயிருப்பவைகளை உலகத்தின் எல்லா பாகங்களிலிருந்துமே வாங்குகிறேன். என்னுடைய வளர்ச்சியைத் தடை செய்வதாகவோ, அல்லது இயற்கை என்னிடம் முதல் பொறுப்பாக அளித்துள்ளவர்களுக்குப் பாதகம் விளைவிப்பதாகவோ இருந்தால், எவ்வளவு அழகான பொருளாயிருந்தாலும், யாரிடமிருந்தும், எதையும் வாங்க நான் மறுக்கிறேன். பிரயோசனமான நல்ல இலக்கியங்களை உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் வாங்குகிறேன். இங்கிலாந்திலிருந்து சத்திர சிகிச்சைக்கான கருவிகளையும், ஆஸ்டிரியாவிலிருந்து குண்டுசி, பென்சில்களையும், ஸ்விட்சர்லாந்திலிருந்து கடிகாரங்களையும் வாங்குகிறேன். ஆனால், எவ்வளவு அபூர்வ

---

* 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4 – வது பதிப்பு) பக்கம் 336.

† 'ஹரிஜன்' – 23—3—1947

‡ 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 377, 385

மானதாயிருந்தாலும், இங்கிலாந்திலிருந்தோ, ஜப்பானிலிருந்தோ, உலகத்தின் வேறெந்த நாட்டிலிருந்தோ ஓர் இழைகூட பருத்தி ஜவுளிகளை வாங்கமாட்டேன். ஏனெனில், இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு அது தீங்கு விளைவித்திருக்கிறது. இன்னமும் அதிக தீங்கு விளைவிக்கிறது.''*

**சுதேசி, குறுகிய கொள்கையல்ல :** ஒருவருடைய தாய்நாட்டுக்குத் தொண்டு செய்வது குறுகிய தேச பக்தி உணர்ச்சியாகுமா? ''இல்லை'' என்ற காந்திஜியின் பதில் பின்கண்ட வாக்கியங்களில் இருக்கிறது :

"வேறு எந்த நாட்டையும் பற்றிக் கவனிக்காமல், என் நாட்டுக்கே சேவை செய்ய முயற்சிப்பதனுல் மற்றெந்த நாட்டுக்கும் நான் தீங்கு விளைவிக்கவில்லை. என்னுடைய தேச பக்தியில் விலக்குதல், அரவணைத்தல் இரண்டுமே இருக்கின்றன. நான் பிறந்த நாட்டையே நான் முக்கியமாகக் கருதுகிறேன். இதில் மற்ற நாடுகளை விலக்கும் அம்சம் இருக்கிறது. ஆனல், என்னுடைய சேவையில் போட்டியோ, விரோத பாவமோ இல்லை. ஆகவே, இதில் அரவணைப்பு அம்சமும் இருக்கிறது. 'உன்னுடைய சொத்தை மற்றவனுக்குத் தீங்கு விளைவிக்காத விதத்தில் உபயோகித்துக்கொள்' என்பது வெறும் சட்ட கோட்பாடு மட்டுமல்ல; அது பெரிய வாழ்க்கை நெறி. அகிம்சை அல்லது அன்பைச் சரியாகப் பின்பற்றுவதற்கு அது திறவுகோலாகும்.''†

மற்ற நாட்டு மக்களின் கஷ்டங்களை உணராத அளவுக்குக் காந்திஜியின் தேசீயம் அப்படிக் குறுகியதல்ல. வேறெந்த நாட்டின் சுபிட்சத்தையும் பலி கொடுத்து இந்தியா சுபிட்சமாயிருக்க வேண்டும் என்று காந்திஜி விரும்பவில்லை. மற்ற நாடுகள் அழிந்து இந்தியா மகோன்னதமா யிருக்க வேண்டும் என்றும் அவர் ஆசைப்படவில்லை. இந்தியாவின் சுபிட்சத்தினுல் உலகம் பூராவுமே நன்மை பெற வேண்டும் என்று அவர் விரும்பினுர். இந்தியா பலம் பொருந்திய நாடாயிருந்தால், ''தன்னுடைய கலைச் செல்வங்களையும், ஆரோக்கியமளிக்கும் வாசனைத் திரவியங்களையும் உலக நாடுகளுக்கு அது அனுப்பும். ஆனல், இந்தியாவுக்கு நிறைய லாபம் கிடைப்பதாயிருந்தாலும், அபினியையோ, போதையளிக்கும் மது வகைகளையோ அனுப்ப அது மறுத்துவிடும்.''‡

''சுதேசியைப் பின்பற்றுபவர், தன்னைச் சுற்றியுள்ள நிலைமையை நன்கு கவனித்து, சாத்தியமான போதெல்லாம் தனக்குப் பக்கத்திலிருப்பவர்களால் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் தரக் குறைவாயிருந்தாலும், விலை அதிகமாயிருந்தாலும், அவற்றையே வாங்குவதன் மூலம் அவர்களுக்கு உதவி செய்ய முயற்சிப்பார். வேறு இடங்களில் உற்பத்தி செய்யப்பட்டவைகளை வாங்க

---

* 'எங் இந்தியா' — 12—3—1925. 'மகாத்மா காந்தி நூல்கள்' – ஐந்தாம் தொகுப்பு 194 - ஆம் பக்கத்தில் இக் கட்டுரையின் விவரத்தைக் காண்க.

† 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4 வது பதிப்பு) – பக்கம் 336.

‡ 'எங் இந்தியா' - 12—3—1925

மாட்டார். அவற்றிலுள்ள குறைபாடுகளை நீக்க முயற்சிப்பார். குறைகள் காரணமாக அவற்றிற்குப் பதிலாக அந்நிய உற்பத்திகளை வாங்கமாட்டார்.''*

சில குறிப்பிட்ட சுதேசி சாமான்களை மட்டுமே வாங்குவது; இந்த நாட்டில் கிடைக்காவிட்டால், தாற்காலிகமாக வெளிநாட்டுச் சாமான்களை வாங்குவது என்று வைத்துக்கொண்டால்கூட, சுதேசி லட்சியத்தையே பின்பற்றியவர்களாவோம். †

தன்னலமற்ற சேவையே சுதேசி : ''அளவுக்கு மீறி வற்புறுத்தப்பட்டால், நல்ல காரியம்கூடக் கெட்டுப் போய்விடும். 'சுதேசியும் அப்படித்தான். இந்த அபாயத்தைப் பற்றி உஷாராயிருக்க வேண்டும். வெளிநாடுகளில் உற்பத்தி செய்யப்பட்டவை என்பதற்காக அவற்றை நிராகரித்துவிட்டு, நம் நாட்டுக்குப் பொருத்தமற்ற உற்பத்திகளில் பணத்தையும், சக்தியையும் விரயம் செய்வது ஒரு குற்றமாகும்; அதோடு சுதேசி கொள்கைக்கே முரணானதுமாகும். உண்மையான சுதேசி உணர்ச்சி உள்ளவர், அந்நிய நாட்டினர் மீது துவேஷம் கொள்ள மாட்டார்; உலகத்திலுள்ள யாரிடமுமே அவருக்கு விரோத பாவமிராது. சுதேசி என்பது துவேஷத்தை வளர்க்கும் கொள்கையல்ல. தன்னலமற்ற சேவையே சுதேசிக் கொள்கையாகும். பரிசுத்தமான அகிம்சை அல்லது அன்புதான் அதனுடைய ஆணி வேர்.''‡

வெளிநாடுகளில் உற்பத்தி செய்யப்பட்டவை என்ற காரணத்திற்காக வெளிநாட்டுச் சாமான்களை உபயோகிக்கக்கூடாது என்று காந்திஜி சொன்னதே இல்லை. உள்நாட்டு நலன்களுக்குப் பாதகம் விளைவிக்கக்கூடிய எந்த வெளிநாட்டுச் சாமான்களையுமே இறக்குமதி செய்யக்கூடாது என்பதுதான் அவருடைய பொருளாதாரக் கொள்கையாகும். இந்த நாட்டில் உற்பத்தி செய்யப்படக்கூடிய எந்தச் சாமானையும், எந்த நிலைமையிலும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யக்கூடாது என்பதே இதன் பொருள். உதாரணமாக, ஆஸ்டிரேலிய கோதுமையின் தரம் உயர்ந்ததுதான். ஆயினும், அதை இறக்குமதி செய்வதைக் காந்திஜி ஒரு பாவமாகக் கருதுவார். ஆனால், அத்தியாவசியமான தேவை ஏற்பட்டுள்ளது என்றால், ஸ்காட்லாந்திலிருந்து ஓட் அரிசியை இறக்குமதி செய்வதை அவர் ஆட்சேபிக்க மாட்டார். துவேஷம் அல்லது வெறுப்பு காரணமாக எந்த ஓர் அந்நியப் பொருளும் பகிஷ்கரிக்கப்படுவதை அவர் அனுமதிக்க மாட்டார். §

சுதேசி சாமான் : ''மூலதனம், தொழில் நுட்பத் திறமை வெளிநாட்டிலிருந்து வந்திருந்தாலும், இந்தியர் நிர்வாகத்தின் கீழ் உற்பத்தி செய்யப்பட்டிருந்து, லட்சக்கணக்கான மக்களின்

---

* காந்திஜியின் 'எராவ்டா மந்திரி'லிருந்து அத்தியாயம் 16

† மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 336

‡ காந்திஜியின் 'எராவ்டா மந்திரி'லிருந்து, அத்தியாயம் - 16.

§ 'எங் இந்தியா' – 15—11—1928

நலன்களுக்கும் ஏற்றதா யிருந்தால்" அது சுதேசி சாமான்தான் என்று காந்திஜி வியாக்கியானம் செய்திருக்கிறார்.*

**இந்தியர் நிர்வாகம் என்பதன் பொருள்:** இந்தியர் நிர்வாகம் என்பதன் பொருள் என்ன? இந்தியாவில் நடத்தப்பட்ட எந்தக் கைத்தொழிலும் இந்தியக் கைத்தொழிலாகவே ஏற்கனவே கருதப்பட்டது. மூலதனம், நிர்வாகம் எல்லாம் வெளிநாட்டிலிருந்து வந்திருந்தாலும், அது பாமர மக்களின் நலன்களுக்கு விரோதமானதா யிருந்தாலும், இந்தியத் தொழிலாகவே அவை கருதப்பட்டன. இந்தியா லிமிடெட் என்ற முத்திரையுடன் இப்படி வெளிநாட்டுத் தொழில்களைச் சுமத்துவது, ஆரம்பப் பருவத்திலுள்ள உள்நாட்டுத் தொழில்களுக்குக் குழி பறித்துக் கழுத்தை நெறித்துவிடுகிறது. ஆகையால், அத்தகைய ஸ்தாபனங்களைப் பற்றிக் காந்திஜி தம்முடைய கருத்தைத் தெளிவாக்க வேண்டி யிருந்தது. அவர் பின்வருமாறு கூறுகிறார்:

"ஒரு கைத்தொழில் இந்தியக் கைத்தொழிலாகக் கருதப்பட வேண்டுமானால், அது மக்களின் நலன்களுக்காக நடத்தப்படுகிறதென்பது வெளிப்படையாகத் தெரிய வேண்டும். அதிலுள்ள பயிற்சி பெற்ற ஊழியரும், பயிற்சியற்ற ஊழியரும் இந்தியர்களா யிருக்க வேண்டும். இந்திய மூலதனம், யந்திரம் உபயோகிக்கப்பட வேண்டும். அதில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியமும், குடியிருப்பு வசதியும் கிடைக்க வேண்டும். தொழிலாளரின் குழந்தைகளின் நலன்களுக்கு முதலாளிகள் உத்தரவாதமளிக்க வேண்டும். இதுவே சரியான வியாக்கியானமாகும்.''†

அகில இந்திய நூற்போர் சங்கமும், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில்கள் சங்கமும்கூட அவருடைய இந்த வியாக்கியானத்தை முழுமையாகத் திருப்தி செய்யவில்லை. ஆயினும், இந்த வியாக்கியானத்தை முழுமையாகத் திருப்தி செய்வதே ஒவ்வோர் உண்மையான சுதேசி ஸ்தாபனத்தின் கடமையாகவுமிருக்க வேண்டும்.

**உண்மையான சுதேசி கம்பெனி:** ஒரு சுதேசி கம்பெனி எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிக் காந்திஜி இன்னும் விரிவாக விளக்கியுள்ளார்:

"நிர்வாகம், மேற்பார்வை ஆகியவைகளெல்லாம் மானேஜிங் டைரக்டர் அல்லது மானேஜிங் ஏஜெண்டுகள் மூலம் இந்தியர்கள் வசமுள்ள ஸ்தாபனங்களைத்தான் சுதேசி என்று சொல்ல முடியும். வெளிநாட்டு மூலதனத்தை உபயோகிப்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. இங்கே கிடைக்காதபோது அல்லது தேவைப்படும்போது, தொழில் நுட்பங்களில் தேர்ந்த வெளிநாட்டினரைப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கும் எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால், இதற்கு ஒரு நிபந்தனை உண்டு. அதாவது, இந்த மூலதனமும் நிபுணர்களும் முற்றிலும் இந்தியர்களின் நிர்வாகத்தின் கீழும், மேற்பார்வையின் கீழும் இருக்க வேண்டும்; இந்தியாவின் நலன்களுக்காகவும் உபயோகிக்கப்பட

* 'ஹரிஜன்' – 25–2–1939 † 'ஹரிஜன்' - 23—10—1937

வேண்டும்......வெளிநாட்டு மூலதனத்தையும், நிபுணர்களேயும் உபயோகிப்பது தவறு. வெளிநாட்டுக் கைத்தொழில் ஸ்தாபனங்களை இங்கே கொண்டு வந்து திணிப்பது முற்றிலும் தவருனது.''*

வெறும் இந்தியா லிமிடெட் என்ற முத்திரைகளை மட்டும் கொண்ட ஸ்தாபனங்களை எக்காரணத்தைக் கொண்டும் சுதேசி என்று சொல்ல முடியாது. இம்மாதிரி முயற்சிகளுக்கு ஊக்கமளிப்பதைவிட, அத்தகைய தொழில்களின் வளர்ச்சி சில வருடங்கள் வரையில் தாமதப்பட்டால்கூடப் பரவாயில்லை என்று அவர் நினைத்தார். அதற்குள், இந்தியர்களின் நிர்வாகம், மேற்பார்வையின் கீழே அத்தகைய ஸ்தாபனங்கள் இந்திய மூலதனத்துடன் வளர்ச்சி பெறுவதற்கு அவகாசம் கிடைக்கும்.

**பாதுகாப்புக்கு ஆதரவாளர்:** வாழ்க்கையின் எந்தத் துறையிலும் சட்டம் தலையிடுவதைக் காந்திஜி வெறுத்தார். ஆயினும், பாதுகாப்புகள் அளிப்பதை அவர் மனப்பூர்வமாக ஆதரித்தார். தேசீயக் கைத்தொழில்களுக்கு ஆக்கமளிப்பதற்காக, வெளிநாட்டுச் சாமான்கள் மீது கடுமையான தீர்வைகள் விதிக்க வேண்டுமெனக் கோரினர். †

இந்திய விவசாயிகளின் கஷ்டங்களைக் கவனிக்காமல், லங்காஷயர் உற்பத்தியாளர்களின் நலன்களுக்காகவே அரசாங்கத்தின் கொள்கைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன என்று அவர் கருதியதால்தான் பாதுகாப்புகள் விஷயத்தில் அவர் அவ்வளவு உறுதியா யிருந்தார். அவர் கூறினர்:

''நிர்க்கதியாயுள்ள மக்களின் மீது இங்கிலாந்து, தான் உற்பத்தி செய்யும் பொருள்களைக் கொண்டு வந்து திணிக்கிறது; மிகக் குறைந்த விலையில் தன்னுடைய தேவைப் பொருள்கள் வெளியிலிருந்து கிடைக்க வேண்டுமென்றும் அது விரும்புகிறது. இந்த நிலைமையிலுள்ள இங்கிலாந்துக்குத் தடையில்லாத தாராள வர்த்தகம் ஏற்றதா யிருக்கலாம். ஆனல், தடையில்லாத வர்த்தகம் இந்தியாவின் குடிசைத் தொழிலை அநேகமாக அழித்துவிட்டது. அதனல், இந்தியாவின் விவசாயிகளும் நாசமடைந்துவிட்டார்கள். மேலும், எந்தப் புதுத் தொழிலும் பாதுகாப்பு இல்லாமல் வெளிநாட்டு வர்த்தகத்துடன் போட்டி போட முடியாது.''‡

''இந்திய வர்த்தகம், கைத்தொழில்களை அழித்து அவர்கள் (பிரிட்டன்) மேலெழுந்தார்கள் என்பதையும் சந்தேகமறக் கூறலாம். இதில் மிகைப்படுத்திக் கூறுவது ஒன்றுமில்லை. லங்காஷயர் நன்ருயிருக்க வேண்டும் என்பதற்காக இந்தியக் குடிசைத் தொழில்கள் அழிய வேண்டியிருந்தது." §

''இங்கிலாந்தின் பொருளாதாரம் ஜெர்மனியின் பொருளாதாரத்திலிருந்து மாறுபட்டது. ஜெர்மனி, பணவுதவி அளித்து பீட் கிழங்கு சர்க்கரை

---

* 'ஹரிஜன்' - 26—3—1938

† 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' – ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 336.

‡ 'யங் இந்தியா' – 15—5—1924 § 'யங் இந்தியா' – 26—3—1931

யின் மூலம் பொருளீட்டியது; வெளிநாட்டு மார்க்கெட்டுகளைப் பயன்படுத்திக் கொண்டதன் மூலம் இங்கிலாந்து செழித்தது. ஒரு கட்டுக்கோப்பான பிர தேசத்தில் சாத்தியமாயிருந்தது, 1900 மைல்கள் நீளமும், 1500 மைல்கள் அகலமும் உள்ள ஒரு பிரதேசத்திற்குப் பொருந்தாது. ஒரு நாட்டின் பொரு ளாதார அமைப்பு, அந்த நாட்டின் சீதோஷ்ணம், பூமி வளம், மக்களின் மனோ பாவம் ஆகியவைகளைப் பொறுத்திருக்கிறது. முக்கியமான இந்த அம்சங்களி லெல்லாம் இந்தியாவின் நிலைமை இங்கிலாந்தின் நிலைமையிலிருந்து மாறுபட் டிருக்கிறது. இங்கிலாந்துக்கு உணவாயிருப்பது, பல சந்தர்ப்பங்களில் இந்தி யாவுக்கு விஷமாயிருக்கிறது. கைத்தொழில்களில் அது அபிவிருத்தி அடைந் திருக்கிறது. அம்மக்கள் நகரங்களில் வசிப்பது சாத்தியமா யிருக்கிறது. மற்ற நாடுகளைக் கொள்ளை கொள்ளுவதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆகவே, தன்னுடைய இயற்கைக்கு விரோதமான வர்த்தகத்தைக் காப்பாற்றிக்கொள் ளுவதற்காக மிகப் பெரிய கடற்படையை வைத்துக்கொண்டிருக்கிறது என்ற நிலைமையிலுள்ள ஒரு நாட்டுக்கு, பாதுகாப்புகள் இல்லாத தாராள வர்த்தகம் என்பதும் பொருளாதாரத் துறையில் பொருத்தமானதா யிருக்கலாம்.''* (இதன் தார்மிகத் தன்மையைக் காந்திஜி ஆட்சேபிக்கவே செய்தார்.)

தடையில்லாத தாராள வர்த்தகம் இந்தியாவின் சாபக் கேடா யிருந்திருக்கிறது; அது இந்தியாவை அடிமைத்தனத்தில் வைத்திருந்திருக்கிறது.

பாகுபாடல்ல, பாதுகாப்பு: இந்தியத் தொழில்களுக்களிக்கப் படும் பாதுகாப்பை, இந்திய, ஆங்கில நலன்களுக்கிடையே காட் டப்படும் பாகுபாடு என்று சொல்லுவது முறையற்றதாகும். இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பளிக்க மறுப்பது, இந்தி யாவின் அடிமைத்தனத்தைச் சாசுவதமாக்குவதாகும். ''மலைக் கும் மடுவுக்குமிடையே சம சுதந்திரம் என்பதில் என்ன அர்த்த மிருக்கிறது? சமநிலையில் இல்லாதவர்களுக்குச் சமத்துவம் அளிப்பதற்கு முன்பு, மடுவை மலையின் அளவுக்கு உயர்த்த வேண் டும்.''† இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான மக்களின் நலன் களை முன்னிட்டு இத்தகைய நிரவல் அவசியமானதும், தவிர்க்க முடியாததுமாகும்.

இதை இனப் பாகுபாடு என்று சொல்லுவது பொருந்தாது. இந்தக் குற்றச்சாட்டை ருசுப்பிக்க முடியாது. ஏனெனில், தமது வெளிநாட்டு எஜமானர்களுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு சுக மான பதவிகளை வகிக்கும் இந்தியர்கூட, மக்களின் நலன்களுக் கேற்ப நடந்துகொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார் கள். இந்தியாவின் எதிர்கால அரசியலமைப்பில் நிதித் துறை யில் தங்களுக்குப் பாதுகாப்புகள் அளிக்க வேண்டுமென்றும், இனப் பாகுபாடு இருக்கக்கூடாதென்றும், 1931-ல் நடைபெற்ற வட்டமேஜை மகாநாட்டில் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் வர்த்த கர்கள் கேட்டார்கள். இரண்டாவது கோரிக்கையைக் காந்திஜி உடனடியாக ஒப்புக்கொண்டார். இந்தியாவில் பிறந்த பிரஜை

---

* 'எங் இந்தியா' – 8-12-1921 † 'எங் இந்தியா' – 26-3-1931

களுக்கு இல்லாத எந்த நிர்ப்பந்தமும், ஜாதி, நிறம், மதம் காரண மாக மட்டும் சட்டபூர்வமாக இந்தியாவில் வசிக்கும் அல்லது இந்தியாவுக்குள் பிரவேசிக்கும் யார் மீதும் விதிக்கப்படக் கூடாது என்று பிரேரித்தார். இந்த ஏற்பாட்டின்படி பிரிட்டிஷார் அல்லது ஐரோப்பியர், அமெரிக்கர், ஜப்பானியர், அல்லது வேறு எந்த வெளிநாட்டார் மீதும் பாகுபாடு இராது.*

பிரிட்டனுக்கும், இந்தியாவுக்குமிடையே ஒரு நூற்றுண்டுக்கு மேலாகவே நீண்ட தொடர்பு இருந்து வந்திருக்கிறது. ஆகையால், சுதந்திர இந்தியாவில் பிரிட்டிஷ் வர்த்தகத்திற்கு விசேஷ சலுகை கொடுக்க காந்திஜி தயாரா யிருந்தார். ஆனல், அது இந்தியர் நலன்களுக்குப் பாதகமில்லாமலிருக்க வேண்டும்.† லங்காஷயர் துணி இந்தியாவுக்குத் தேவையாயிருந்து, இந்தத் துணியை லங்காஷயர் மட்டுமே உற்பத்தி செய்ய முடியும் என்று இருந்தால், வேறு எந்த அந்நியத் துணியையும் அனுமதிக்காமல் லங்காஷயர் துணிக்குச் சலுகை கொடுக்க காந்திஜி தயாரா யிருந்தார்.‡ சுதந்திர இந்தியாவில் உள்நாட்டிலிருந்தோ, வெளிநாட்டிலிருந்தோ சுரண்டல் இராதென்று காந்திஜி கருதினர். பிரிட்டன், இந்தியாவின் கூட்டாளி அல்லது நண்பனுயிருந்தால், இந்தியாவின் தேவைகளைப் பெரும்பாலும் பிரிட்டனே கொடுக்கலாம் என்று கருதினர்.§

**திறமையின்மைக்குப் பாதுகாப்பில்லை:** திறமையின்மையைக் காப்பாற்றுவதற்காகக் கடும் தீர்வை அனுமதிக்கப்பட மாட்டாது. சுயராஜ்யம் ஏற்பட்டால் இப்போதிருப்பதைவிடத் திறமை இன்னும் அதிகமா யிருக்க வேண்டியது அவசியமென்று காந்திஜி கூறினர்.¶

**பகிஷ்காரமும், சுதேசியும்:** பகிஷ்காரமும், சுதேசியும் ஒன்றல்ல. ''சுதேசி என்பது நிரந்தரமான ஒரு கொள்கை. அதைப் புறக்கணித்ததால்தான் மனித வர்க்கத்திற்குக் கணக்கற்ற கஷ்டங்கள் ஏற்பட்டன. பொருள்களை ஒருவருடைய சொந்த நாட்டிலேயே உற்பத்தி செய்து, வினியோகிப்பதே சுதேசி.''** அது ஒரு நிர்மாண வேலைத் திட்டம். பகிஷ்காரம் என்பது தாற்காலிகமான ஓர் உபாயம்; வேண்டுமென்றே எதிராளிக்கு நஷ்டம் விளைவித்துப் பணிய வைப்பதற்காகச் செய்யப்படுவதாகும். ''ஆகவே, பகிஷ்காரம் என்பது, ஒருவர் தன்னுடைய நோக்கத்தில் வெற்றி பெறுவதற்கு முறை தவறிய வழியைப் போல் ஆகிறது. நம்முடைய நாட்டில் உற்பத்தி பெருகுவது இதன் மறைமுகமான பலன்களில் ஒன்ருயிருக்கக்கூடும். ஆனல், பகிஷ்காரம் தொடர்ந்து, நீண்ட காலம் நீடித்தாலொழிய

---

* 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 344

† 'எங் இந்தியா' – 26—3—1931 ‡ 'எங் இந்தியா' - 15-10-1931

§ 'எங் இந்தியா' - 26—3—1931 ¶ 'எங் இந்தியா' – 16—7—1931

** 'எங் இந்தியா' - 14—1—1920

அப்படி ஏற்படாது.''* பகிஷ்காரம் என்பது, நமது எதிரியின் பொருள்களைப் பகிஷ்கரிப்பதேயொழிய, எல்லா வெளி நாட்டுப் பொருள்களையும் பகிஷ்கரிப்பது அல்ல.

''பகிஷ்காரம் பலனளிக்கத்தக்கதா யிருக்க வேண்டுமானல், அநேகமாக எல்லோருமே அதைக் கடைப்பிடிக்கவேண்டும். சுதேசியை ஒருவரே பின் பற்றினுல்கூட, அந்த அளவுக்கு அது தேசத்திற்கு நன்மையளிப்பதா யிருக்கும், கோப உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவதன் மூலம்தான் பகிஷ்காரத்தை வெற்றி பெறச் செய்ய முடியும். ஆகையால், அதனல் நாம் உத்தேசிக்காத பலன்களும் ஏற்படக்கூடும்; இரு தரப்பினருக்கும் நிரந்தரமான பகைமையும் ஏற்பட்டுவிடக்கூடும்.''†

காரியம் நடந்த பிறகு பகிஷ்காரம் செய்வதில் பிரயோசனமில்லை. அது பலனளிப்பதாயிருக்க வேண்டுமானல், உடனடியாகச் செய்யப்பட வேண்டும், அதன் தன்மை மிகவும் விரிவானதாகையால், திடீரென்று அமைக்கப்படும் எந்த ஸ்தாபனமும் அதை நிறைவேற்ற முடியாது. இதில் இன்னெரு சங்கடமும் இருக்கிறது. அதாவது, நமது எதிரி வேஞெரு அந்நிய நாட்டின் மூலம் தனது பொருள்களை இந்த நாட்டுக்குள் கொண்டு வந்து விடக்கூடும்.

ஆகவே, இவ்விரண்டையும் சீர்தூக்கிப் பார்த்துக் காந்திஜி பின்வருமாறு கூறினர்:

"சுதேசி என்பது, இயங்கும்போதே பலம் பெற்றுக்கொண்டு போவதால்தான் அதில் நான் அவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறேன். எந்த ஸ்தாபனமும் அதைச் செய்ய முடியும். ஆளுபவர்கள் நியாயமாக நடக்கிருர்களா, அநியாயமாக நடக்கிருர்களா என்பதற்கும் அதற்கும் சம்பந்தமில்லை. அதுவேதான் அதனுடைய வெகுமதி. ஆகையால், அதில் சக்தியின் விரயமோ, தோல்வியோ இல்லை. இந்தத் தருமத்தைச் சிறிதளவு கடைப்பிடித்தாலும் பெரும் அபாயத்திலிருந்து காப்பாற்றப்படுகிருேம். ஆகையால், சுதேசியும் பகிஷ்காரமும் ஒன்றேயல்ல, இரண்டும் நேர்மாருனவை.''‡

**சுதேசிக்கு அனுபவ சாத்தியமான வியாக்கியானம்:** சுதேசி என்ருல் என்ன என்பதற்குப் பூராவாக விரிவான முறையில் வியாக்கியானம் கொடுப்பது சாத்தியமில்லை. அது அன்ருடம் மாறிமாறி வளர்ந்துகொண்டே போகும் ஓர் உணர்ச்சியாகும். ஆயினும், ஒரு ராஜீய வேலைத் திட்டத்தின் பகுதியாகக் காந்திஜி இதற்கு அனுபவ சாத்தியமான ஒரு வியாக்கியானத்தைக் கண்டு பிடிக்க வேண்டி யிருந்தது. இதன்படி சிறு கைத்தொழில்கள் மூலம் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் உபயோகமான சாமான்கள் சுதேசி ஜாப்தாவில் சேர்க்கப்பட்டன. இவை பிரபலமடைவதற்குப் பிரசாரம் தேவையா யிருக்கும். விலைகளை நிர்ணயிப்பதிலும், ஊதியம், மற்றும் அவற்றில் வேலை செய்யும் தொழிலாளர்களின் க்ஷேமநலம் முதலிய விஷயங்களில் முறைப்

---

* 'எங் இந்தியா' – 14—1—1920 † 'எங் இந்தியா' – 14—1—1920

‡ 'எங் இந்தியா' - 14—1—1920

படி அமைக்கப்பட்ட ஒரு ஸ்தாபனம் கூறும் யோசனைகளை ஏற்றுக்கொள்ளுவதா யிருக்க வேண்டும். ஒரு மத்திய பொது ஸ்தாபனத்தின் உதவி தேவை இல்லாதவைகளும், அரசாங்கத்தினிடமிருந்து உதவி பெறக்கூடியவைகளுமான பெரிய கைத்தொழில்கள் மூலம் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் இதிலிருந்து விலக்கப்பட்டன. இவை பிறர் உதவியில்லாமலே விற்பனையாகும்.

கட்டுக்கோப்பு இல்லாத, சிறிய உள்நாட்டுத் தொழில்களை ஆதரித்துப் பிரசாரம் செய்வதோடு சுதேசி வேலையை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்பது, பெரிய கைத்தொழில்களை அழித்து விடுவதற்காகவல்ல. இந்தப் பெரிய தொழில்களால் தேசத்திற்கு ஏற்பட்டிருக்கும் நன்மைகளைப் பொருட்படுத்தவில்லை என்பதும் அதன் பொருள் அல்ல. நிறைய வசதிகள் உள்ளவைகளும், வெளி உதவி இல்லாமல் தாமே இயங்கக்கூடியவைகளுமான பெரிய தொழில்களுக்காகப் பிரசாரம் செய்யும் பொறுப்பைப் பொது ஸ்தாபனங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்பதே இதன் பொருள். சுதேசி உணர்ச்சி போதிய அளவுக்குத் தூண்டிவிடப்பட்டிருக்கிறது; பொது ஸ்தாபனங்களின் முயற்சி இல்லாமலே அவற்றிற்கு அது உதவி செய்கிறது. பெரிய தொழில்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு விளம்பரம் செய்வது, அவற்றின் விலைகளை உயர்த்துவதிலும், நல்ல முறையில் நடக்கும் தொழில் ஸ்தாபனங்களிடையே விரும்பத்தகாத போட்டியை உண்டாக்கிவிடுவதிலும் தான் போய் முடியும். வெற்றிகரமாக நடக்கும் ஒரு ஸ்தாபனத்திற்கு உதவி செய்வதற்காக ஒரு தரும ஸ்தாபனத்தை ஏற்படுத்துவது, முயற்சியை வீணடிப்பதாகும். பெரிய தொழில்களின் விளம்பர ஏஜெண்டுகளாக நடந்துகொள்ளுவதால் தேசத்திற்கும் நன்மை இல்லை.

**சிறு தொழில்களில் கவனம்:** எந்த முயற்சியும் உபயோகமானதாயிருக்க வேண்டுமானல், பொதுஜன ஆதரவு அவசியமாயுள்ள, கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் சிறு கைத்தொழில்களில் பூரா கவனத்தையும் செலுத்த வேண்டும். கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பது கதர்த் தொழில் மட்டுமல்ல. உண்மையான சுதேசி ஸ்தாபனம் ஒன்றிருந்தால், கணக்கற்றிருக்கும் எல்லாத் தொழில்களையும் பற்றிய உண்மையைக் கண்டுபிடித்து, அந்த வேலைக்காரர்களின் நலன்களில் அக்கறை எடுத்துக்கொள்ளவேண்டியது அதன் கடமையாக இருக்கும். எந்தத் தொழிலாயிருந்தாலும் அதை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று காந்திஜி சொல்லவில்லை. ஒவ்வொன்ருகப் பார்த்து, கிராமப் பொருளாதார வாழ்வில் அதன் முக்கியத்துவம் என்ன என்று பரிசீலனை செய்வார். அவைகளுக்கு ஆதரவு தேவை என்று அவருக்குத் தோன்றினல் ஆதரவளிப்பார்.

**ஆரம்ப சுதேசி கண்காட்சிகளின் தன்மை:** காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்துடன் முதலாவது சுதேசி கண்காட்சி நடத்தப்

பட்டதிலிருந்து, 1936 வரையில் அத்தகைய கண்காட்சிகள் நடந்தன. அந்த வருடத்தில் ஒரு மாறுதல் செய்யப்பட்டது. ஆரம்பக் கண்காட்சிகள் பெரிய ஆடம்பரங்களா யிருக்கும். சுதேசி உற்பத்திகளுக்கு ஆதரவளிப்பதும், கண்காட்சி வருமானத்திலிருந்து காங்கிரஸ் செலவைச் சரிக்கட்டிக் கொள்ளுவதுமே நோக்கமா யிருந்தது. 1936-லிருந்து இது அடியோடு மாற்றப்பட்டது. 1936 மார்ச் 28-ந் தேதியன்று லட்சுமணபுரியில் காந்திஜி ஒரு கண்காட்சியைத் திறந்து வைத்தார். படோடோபமான பொருள் எதுவும் அதில் இல்லை. இந்திய கிராமவாசிகளின் கைத்திறமையைக் காட்டுவது அதன் நோக்கமா யிருந்தது. பட்டினி கிடக்கும் இந்திய கிராமங்களில்கூட இம்மாதிரி உபயோகமான பொருள்களைச் செய்ய முடியும்; நகரவாசிகள் இவற்றை உபயோகிப்பது அவர்களுக்கும், கிராமவாசிகளுக்கும் நன்மையளிக்க முடியும் என்று காட்டுவதே இந்தக் கண்காட்சிகளின் நோக்கமாகும்.* விஷய அறிவை ஊட்டாத எதுவும் இந்தக் கண்காட்சியில் அனுமதிக்கப்படவில்லை.

**கிராமக் கண்காட்சிகளின் ஆரம்பம்:** காங்கிரஸின் மனப்பான்மையில் ஒரு புதிய மாறுதல் தென்பட்டதென்றாலும், இந்தக் கண்காட்சி நடந்தது ஒரு நகரத்தில் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தக் கண்காட்சிகள் கிராமவாசிகளுக்காக ஏற்பாடு செய்யப்படவில்லை. கிராமவாசிகள் எப்படி வாழுகிறார்கள், அவர்களால் என்ன செய்ய முடியும் என்பதை நகரவாசிகளுக்குக் காட்டுவதே நோக்கம் என்று காந்திஜி சொன்னார்.†

ஒன்றிரண்டு மாதங்களுக்குள்ளாகவே காந்திஜி தம் ஆரம்பக் கருத்திலிருந்து தாண்டிவிட்டார். அவர் விரும்பிய கண்காட்சியொன்று மத்தியப் பிரதேசத்திலுள்ள வார்தா ஜில்லாவில், மகன்வாடியில் நடத்தப்பட்டது. அதைத் திறந்துவைத்துப் பேசுகையில் காந்திஜி பின்வருமாறு கூறினார்:

> *"தங்களைச் சுற்றியுள்ள கிராமங்களுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமை என்ன என்பதைப் பற்றி வார்தாவில் வசிப்பவர்களுக்கு விளக்கிக் காட்டுவதற்கும், தமது நிலைமையை உயர்த்திக்கொள்ளுவதற்கு என்னென்ன செய்ய முடியும் என்பதைக் கிராமவாசிகளுக்குக் காட்டுவதற்குமே இந்தக் கண்காட்சி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தமது கிராமங்களை எப்படிச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவது, என்ன உணவு உட்கொள்ளுவது, இப்போது கிடப்பதைவிட இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சம்பாதிப்பதற்குத் தமது தொழில்களை எப்படி அபிவிருத்தி செய்வது என்பவைகளையெல்லாம் இந்தக் கண்காட்சி விளக்கிக் காட்டுகின்றது. நகரவாசிகள் சம்பந்தப்பட்ட வரையில் நாம் கிராமவாசிகளை எந்தெந்த வழிகளில் சுரண்டுகிறோம் என்பதையும், அவர்களுடைய உற்பத்திகளை வாங்குவதன் மூலம் நாம் அவர்களுக்கு எப்படி உதவி செய்ய முடியும் என்பதையும் இந்தக் கண்காட்சி நன்றாக எடுத்துக்காட்டுகிறது."‡*

---

* 'ஹரிஜன்' - 4—4—1936 † 'ஹரிஜன்' – 4—4—1936

‡ 'ஹரிஜன்' - 16—5—1936

எதிர்காலத்தில் கண்காட்சிகள் பெரிய நகரங்களிலல்லாமல், சிறு பட்டணங்களிலேயே நடத்தப்படுமென்று தாம் நம்புவதாகக் காந்திஜி கூறினர். கண்காட்சியைப் பார்க்க வந்தவர்கள், கிராம வாழ்வின் பிரசாரகர்களாக நடந்துகொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

**கிராமக் கண்காட்சிகள் :** ஆறு மாத காலத்திற்குள் மற்ருெரு குறிப்பிடத்தக்க சம்பவமும் நடைபெற்றது. இந்தத் தடவை காங்கிரஸ் மகாசபையின் வருடாந்தரக் கூட்டத்தையும், கண் காட்சியையும் ஒரு கிராமத்தில் நடத்துவதென்று காந்திஜி தீர்மானித்தார். மத்தியப் பிரதேசத்தில், மேற்கு காண்டேஷ் ஜில்லாவிலுள்ள பெய்ஸ்பூர் கிராமம் இதற்காகத் தேர்ந்தெடுக் கப்பட்டது. காந்திஜி, கிராமவாசிகள் விஷயத்திலேயே தம் கவனம் பூராவையும் செலுத்த ஆரம்பித்தார்; அவருடைய பிரசங்கங்கள் முக்கியமாக கிராமவாசிகளின் பிரச்னைகளைப் பற்றியனவாகவே இருந்தன. இந்தக் கண்காட்சியை ஆரம் பித்து வைத்துக் காந்திஜி பின்வருமாறு கூறினர் :

"இது கிராமவாசிகளின் உழைப்பினல் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள உண்மையான ஒரு கிராமக் கண்காட்சியாகும். விஷயங்களை விளக்கிக் காட்டுவதே இந்த முயற்சி. தங்களுடைய கைகால்களையும், தம்மைச் சுற்றி யுள்ள வசதிகளையும் உபயோகித்தால் எப்படித் தமது வருமானத்தை இரட் டிப்பாக்கிக் கொள்ளலாம் என்பதையே இது கிராமவாசிகளுக்குக் காட்டு கிறது. சுருங்கக் கூறுமிடத்து, விரயமாவதை எப்படிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதை அவர்களுக்கு நாம் சொல்லிக் கொடுக்க வேண்டும். கண்காட்சியின் நோக்கம் அதுதான்."*

கண்காட்சியைப் பார்க்க வந்தவர்களுக்குக் காந்திஜி பின் வருமாறு கூறினர் :

"நமது அக்கிராசனரின் ஊர்வலம் எவ்வளவு எளிமையுடன் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது என்பதையும், முக்கியமாக மிகவும் அழகாக அலங்கரிக் கப்பட்டு, ஆறு ஜோடி மாடுகளால் இழுக்கப்பட்ட ரதத்தையும் பார்த்திருப் பீர்கள். இங்கே உங்களுக்கு என்ன கிடைக்கப் போகிறது என்பதை அது முன்னதாகவே உங்களுக்குக் காட்டுவதாகும். நகர வாழ்க்கையின் சுகங்கள் இங்கே எதுவுமில்லை. ஏழைக் கிராமவாசிகள் என்னென்ன செய்ய முடியுமோ அவையெல்லாம் கிடைக்கும். ஆகவே, இது நம்முடைய காசி, மெக்கா யாத் திரையைப் போன்றது. சுதந்திரத்திற்காகப் பிரார்த்தனை செய்யவும், தேசப் பணிக்கு நம்மை அர்ப்பணித்துக் கொள்ளுவதற்காகவும் இங்கே நாம் யாத் திரை வந்திருக்கிருேம். கிராமவாசிகளைவிட நாம் உயர்ந்தவர்கள் என்று ஆடம்பரப்படுத்திக் கொள்ளுவதற்காக இங்கே நீங்கள் வரவில்லை. அவர்கள் மீது சவாரி செய்வதை எப்படித் தவிர்ப்பது என்பதை அறிந்துகொள்ளவே வந்திருக்கிறீர்கள். அவர்களுடைய அன்றாட வேலைகளில் நீங்களும் பங்கு கொள்ள வேண்டும். தோட்டி வேலை செய்ய வேண்டும், உங்கள் துணிகளை நீங்களே சுத்தம் செய்துகொள்ள வேண்டும். உங்களுக்கு வேண்டிய மாவை

* 'ஹரிஜன்'—2-1-1937

நீங்களே அரைக்க வேண்டும். மற்றவர்களிடம் வேலை வாங்குவதற்காக நீங்கள் வரவில்லை; மற்றவர்களுக்குத் தொண்டு செய்ய வந்திருக்கிறீர்கள்.''*

1938 பிப்ரவரியில், குஜராத்திலுள்ள ஹரிபுராவில் நடந்த அடுத்த காங்கிரஸில், அந்த வருடாந்தரக் கண்காட்சி ஒரு பயிற்சிப் பள்ளி யென்பதைக் காந்திஜி மீண்டும் வற்புறுத்தினர். கைராட்டினம்தான் எல்லாக் கைத்தொழில்களுக்கும் கேந்திரம் என்றும், புதிய தொழில்களைக் கண்டுபிடித்து, கிராமங்கள் தன்னிறைவு பெறச் செய்ய வேண்டும் என்றும் அங்கே வந்திருந்தவர்களைக் காந்திஜி கேட்டுக்கொண்டார். 1939 மார்ச் மாதத்தில் திரிபுராவில் நடந்த காங்கிரஸுடன் அடுத்த கண்காட்சி நடத்தப்பட்டது. சமஸ்தானப் பிரஜைகளின் உரிமைகளைக் காப்பாற்றுவதற்காகக் காந்திஜி அப்போது ராஜ்கோட்டில் உண்ணாவிரதமிருந்தார். ஆகையால், அவர் காங்கிரஸில் வந்து பேச முடியவில்லை. 1939-ல் யுத்தம் பிரகடனம் செய்யப்பட்டுவிட்டது. மக்களின் பிரதிநிதிகளைக் கலந்துகொள்ளாமல் வைஸ்ராய் தன் இச்சையாக இந்தியாவையும் யுத்த நாடாகச் சேர்த்ததை ஆட்சேபித்துக் காங்கிரஸ் மந்திரிசபைகள் ராஜிநாமாச் செய்தன. 1940 மார்ச் மாதத்தில், நீண்டுகொண்டே யிருந்த நிழலின் கீழ் காங்கிரஸின் வருடாந்தர மகாசபை பீகாரிலுள்ள ராம்கரில் நடைபெற்றது. இந்தக் கண்காட்சியைத் திறந்துவைத்துக் காந்திஜி பேசுகையில், நகரங்களைச் சுற்றியுள்ள இன்றைய நாகரிகத்தைவிட, பரவலான முறையில் உள்ள கைத்தொழில் நாகரிகம்தான் உயர்ந்தது என்று தம்முடைய நம்பிக்கையை வலியுறுத்திக் கூறினர். தேசத்தின் வாழ்வில் இப்போது ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாகிவிட்டது. காந்திஜியின் கவனம் பூராவும் விடுதலைப் போராட்டத்தில் சென்றுவிட்டது. காங்கிரஸ் சட்ட விரோதமாகிவிட்டதால் இனி கண்காட்சிகளை நடத்த முடியாது.

## கதர்

**சுதேசியின் பிம்பம்:** சுதேசியின் பிம்பமாகக் கதர் உருவாக்கப்பட்டது. ஒரு நூற்றூண்டுக்கு முன்பு இந்தியா பூராவிலுமுள்ள யாவருக்குமே ராட்டையில் வேலை கிடைத்துக்கொண்டிருந்தது. இந்தியா பருத்தி விளையும் பூமியாதலால், கிழக்கிந்தியா கம்பெனி வருவதற்கு முன்பே இங்கே கைராட்டினம் இருந்தது. கிழக்கிந்தியா கம்பெனியின் ஏஜெண்டுகள் கொஞ்சமும் மனிதாபிமானம் இல்லாமல், கொடூரமான முறையில் ஏற்பாடுகள் செய்து அதை அழித்தார்கள். பொருளாதார நிர்ப்பந்தமும், நவீன இயந்திரங்களுமே கைராட்டினத்தையும், கைத்தறி நெசவையும் அழித்தன என்பது உண்மையல்ல. கிழக்கிந்தியா கம்பெனியின் அசாதாரணமான, தார்மிக விரோதமான வழிகளால்தான் மகத்தான இந்தத் தொழில் அழிக்கப்பட்டது, அல்லது அநேகமாக அழிக்கப்பட்டது.† கட்டுப்பாடான, கொடூரமான முறை

* 'ஹரிஜன்' - 21—1—1937 † 'எங் இந்தியா' – 18—8—1920

களைத் தொடர்ந்து கையாண்டிராவிட்டால், எந்த யந்திரமும் தேசீயக கலையாயிருந்த இந்தத் தொழிலை அழித்திருக்கவே முடியாது.* கைராட்டினம் அழிந்ததால், மக்கள் தம்மிட மிருந்த கொஞ்சநஞ்ச சுதந்திரத்தையும் இழந்தனர்.†

**அழிவின் கதை :** ராட்டையில் அல்லது கதர் உற்பத்தியில், பருத்தி பயிரிடுதல், கொட்டை எடுத்தல், பட்டை போடுதல், நூற்றல், சிட்டம் போடுதல், சாயம் போடுதல், தறியின் பாவு, ஊடைகளைத் தயாரித்தல், நெய்தல், சலவை செய்தல் ஆகிய எல்லா அம்சங்களும் அடங்கியிருந்தன.

புராதனமான இந்தத் தொழில் அழிக்கப்பட்டதால் அடிமைத்தனம், வறுமை யாவும் வந்தன. ஒரு காலத்தில் உலகமே கண்டு பொறுமைப்பட்டுக்கொண்டிருந்த அபூர்வமான இந்தியத் துணிகளைத் தயாரிக்கும் கலைத் திறன் அடியோடு மறைந்து போயிற்று.‡

கேந்திர ஸ்தானம் வகித்த கிராமத் தொழிலும், அதைச் சார்ந்த தொழில்களும் வேண்டும் என்றே அழிக்கப்பட்ட பிறகு, புத்தி கூர்மையும், சுறுசுறுப்பும் கிராமங்களிலிருந்து பறந்து விட்டன. கிராமவாசிகள் நோய் பிடித்த தமது கால்நடைகளைப் போலவே செயலிழந்து, பொலிவிழந்து போய்விட்டனர்.§ கிராமாந்தரங்களில் சோம்பேறித்தனமும், நம்பிக்கையின்மையும் மலிந்துவிட்டன.

ராட்டையினால் இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களும் தன்னிறைவு பெற்றவைகளாய் இருக்க முடிந்தது. ராட்டையின் மறைவுடன் எண்ணெய்ச் செக்குகள் போன்ற மற்ற கிராமத் தொழில்களும் மறைந்துவிட்டன. ஆகவே, கிராமங்களில் கிடைத்துக்கொண்டிருந்த பல்வேறு வேலைகளும் போய்விட்டன; அவர்களுடைய சிருஷ்டித் திறனும், அதன் மூலம் கிடைத்த சொற்ப வருமானமும் போய்விட்டன.¶

**கதரின் தோற்றம் :** கதர், கைராட்டினத்தின் முக்கியத்துவம் முதன் முதலில் 1908-ஆம் வருடத்தில்தான் காந்திஜிக்குத் தெரிந்தது. கைராட்டினம் எப்படி இருக்கும் என்றுகூட அப்போது அவருக்குத் தெரியாது. கைராட்டினத்திற்கும், தறிக்கும் உள்ள வித்தியாசம்கூட அவருக்குத் தெரியாது. இந்தியாவின் கிராமங்களைப்பற்றி ஏதோ ஒரு மாதிரி மேலெழுந்தவாரியாகத்தான் அவருக்குத் தெரியும். ஆயினும் கைராட்டினம் அழிக்கப்பட்டதுதான் அவர்கள் ஓட்டாண்டிகளானதற்குக் காரணம் என்பது மட்டும் அவருக்கு நன்றாகத் தெரிந்தது. ஆகவே இந்தியாவுக்குத் திரும்

---

* 'எங் இந்தியா' – 8—12—1921 † 'ஹரிஜன்' – 13—4—1940
‡ 'எங் இந்தியா' – 16—2—1921 §காந்திஜியின் 'நிர்மாண வேலைத் திட்டம்'
¶ 'ஹரிஜன்' - 13—4—1940

பியவுடன் அதை உயிர்ப்பிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார்.*

**கதரின் நோக்கம் :** நேர்மையற்றதும், சட்ட விரோதமானதும், கொடுங்கோன்மையானதுமான முறைகளால் இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான குடிசைகளிலிருந்து அகற்றப்பட்ட கைராட்டைகளை மீண்டும் அங்கே கொண்டுவருவதே ராட்டை இயக்கத்தின் நோக்கம்.† மக்களுடைய நம்பிக்கையின் பிரதிபலிப்பாகக் கைராட்டினம் இருந்தது. கிராமவாசிகள் தமக்குரிய ஸ்தானத்தைப் பெற வேண்டுமானல், ராட்டையையும், அதனல் கிடைக்கும் அனுகூலங்களையும் உயிர்ப்பிப்பதே இயற்கையான வழியாகத் தென்பட்டது.‡

ஒரு வருடத்தில் ஒருவருக்குச் சுமார் 13 கெஜம் துணி வேண்டியிருக்கும் என்ற கணக்குப்படி பார்த்தால், 1920-ல் இந்தியாவின் தேவையில் பாதிக்கும் குறைவான துணிதான் உற்பத்தியாகிக் கொண்டிருந்தது. இந்தியாவுக்கு வேண்டிய பருத்தி பூராவும் இங்கேயே இருக்கிறது. லட்சக்கணக்கான பேல்கள் பருத்தி இங்கிருந்து ஜப்பானுக்கும், லங்காஷயருக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. அதில் பெரும் பகுதி உற்பத்தி செய்யப்பட்ட துணியாக இங்கே திரும்பி வந்துகொண்டிருந்தது. தனக்கு, வேண்டிய துணி பூராவையும் இந்தியா தானே உற்பத்தி செய்ய முடியும். கைத்தறிகளுக்கு வேண்டிய நூல் பூராவையுமே இந்தியாவே அளிக்க முடியும்.§

**உபதொழிலும், பஞ்சத்துக்குப் பாதுகாப்பும் :** இந்தியாவிலுள்ள பெரும்பாலான விவசாயிகளுக்கு வருடத்தில் நான்கு முதல் ஆறு மாதங்கள் வரையில்தான் வேலை இருக்கிறது. ஆகவே, அவர்கள் அநேகமாகப் பட்டினி நிலையிலேயே வாடுகிருர்கள். இதுதான் மாமூலான நிலைமை. அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும் பஞ்சங்களும், அவர்களுடைய கட்டாய வேலையில்லாமையைப் பெரிதும் அதிகப்படுத்துகின்றன. தங்களுடைய மிகச் சொற்பமான வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு இந்த ஆண்களும் பெண்களும் தமது குடிசைகளிலிருந்து கொண்டே என்ன வேலை செய்ய முடியும்?¶ ஒவ்வொரு விவசாய நாட்டிலும், விவசாயிகள் தம்முடைய நேரத்தைப் பயன்படுத்திக் கொள்ளுவதற்கு ஏதாவது ஒரு தொழில் வேண்டியிருக்கிறது. நூற்றல்தான் இந்தியாவில் எப்போதுமே அந்த உபதொழிலாயிருந்திருக்கிறது. ஏனெனில் அது வருமானம் அளிப்பதாயிருக்கிறது.

**வியாபகமான ஒரே தொழில் :** "லட்சக்கணக்கான மக்கள் செய்யக்கூடிய ஒரே தொழில் நூற்றலைத் தவிர வேருென்றுமில்லை. இதனல், மற்ற

---

* 'ஹரிஜன்' – 19—12—1948 † 'எங் இந்தியா' – 21—11—1929
‡ 'ஹரிஜன்' – 13—4—1940 § 'எங் இந்தியா' – 18—8—1920
¶ 'எங் இந்தியா' - 3—11—1921

தொழில்கள் வேண்டியதில்லை என்றோ, பிரயோசனமில்லை என்றோ அர்த்தமல்ல. தனிப்பட்டவர்களின் கண்ணோட்டத்துடன் பார்த்தால், நூற்றலைவிட வேறெந்தத் தொழிலும் அதிக வருமானம் அளிப்பதாயிருக்கும். கடிகாரம் செய்வது நல்ல வருமானம் அளிக்கக்கூடியதும், கவர்ச்சிகரமானதுமான தொழிலேயாகும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எவ்வளவு பேர்களுக்கு அதில் இடம் கிடைக்கும்? கோடிக்கணக்கான கிராமவாசிகளுக்கு அதனால் ஏதாவது பிரயோசனம் உண்டா?......பட்டினியால் துடிப்பவர்கள் முன்பு பக்குவப்படுத்தப்படாத பல உணவுப் பொருள்களை வைத்துவிட்டு, அவர்கள் இஷ்டப்பட்டதை எடுத்துக்கொள்ளலாம் என்று எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லை. அவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்றே அவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். மிகவும் கவர்ச்சியா யிருப்பவைகளை எடுத்துக்கொள்ள முயற்சி செய்து, அந்த முயற்சியில் அவர்கள் மடிவதாயிருக்கலாம்... முடிந்தவர்கள், இஷ்டப்படுபவர்கள் தாராளமாக வேறு எதையாவது எடுத்துக் கொள்ளட்டும். ஆனால், எல்லோருமே மேற்கொள்ளக் கூடிய கைராட்டினத்தின் அபிவிருத்திக்குத்தான் தேசத்தின் வசதிகளெல்லாம் பயன்படுத்தப்பட வேண்டும்......மேலும், மிகப் பெரும்பான்மையோர் வேறெதையும் மேற்கொள்ளவும் முடியாது.''*

"பல லட்சக்கணக்கான மக்களுக்கு மிகவும் பொருத்தமானதும், அனுபவ சாத்தியமானதுமான தொழில் ராட்டையில் நூற்பதுதான்."†

பொருளாதாரத் துறையிலும், தார்மிகத் துறையிலும் மக்கள் சோர்வடைந்து கொண்டேயிருந்தார்கள். வேலை செய்யவோ, சிந்தனை செய்யவோ, வாழ்வதற்கோகூட அவர்கள் மன உறுதியை இழந்துகொண்டிருந்தார்கள். நடைப் பிணங்களாக அவர்கள் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். கதர் அவர்களுக்கு ஒரு வேலையை அளித்தது. அவர்களுடைய உற்பத்திக்கு ஒரு மார்க்கெட்டையும் கொடுத்தது. நேற்று அந்தகாரமாயிருந்த அவர்களுடைய மனத்தில் கதர் ஒரு நம்பிக்கையை ஊட்டியது.‡

**கைராட்டை, நல்ல வருமானம் உள்ளவர்களுக்கல்ல:** நல்ல வருமானம் அளிக்கும் வேலையில் ஈடுபட்டிருப்பவர்கள், அந்த வேலையை விட்டுவிட்டு நூற்க ஆரம்பிக்க வேண்டும் என்று காந்திஜி சொன்னதேயில்லை. வேறு வழியில்லாதவர்கள், அதுவும் வேலையில்லாத நேரங்களில் நூற்கும்படி தூண்டப்பட வேண்டும் என்று அவர் அடிக்கடி சொல்லியிருக்கிறார். ''வருடத்தில் குறைந்தபட்சம் நான்கு மாதங்களுக்காவது வேலையில்லாமல் சும்மா இருக்கும் ஆண்களும் பெண்களும் இந்த நாட்டில் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள் என்ற அடிப்படையில்தான் கைராட்டையில் நூற்பதென்ற கொள்கையே உருவாக்கப்பட்டிருக்கிறது.''§

இந்த மக்களுக்கு வேறு நல்ல மாற்று வேலை ஏதாவது கிடைத்தால், உடனேயே அவர்கள் கைராட்டையை விட்டு

* 'எங் இந்தியா' - 30—9—1928 † 'எங் இந்தியா' - 12—4—1928
‡ 'ஹரிஜன்' - 20—6—1936 § 'எங் இந்தியா' - 22—10—1925

விடலாம். மக்களுக்கு வேறு நல்ல வேலை கிடைத்தால் அதைக் கண்டு காந்திஜியைவிட வேறு யாரும் அவ்வளவு மகிழ்ச்சியடைய மாட்டார்கள்.* ஆகவே, பதினறு வயதுக்கு மேற்பட்டு திடகாத்திரமாயுள்ள ஒவ்வொருவருக்கும் வயலிலோ, குடிசையிலோ, அல்லது தொழிற்சாலையிலோகூட, இந்தியாவி லுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் வேலையும், போதிய ஊதியமும் கிடைக்கும் வரையில், அல்லது ஒரு நல்ல வாழ்க்கைக்குத் தேவையான சகல வசதிகளுடனும் கிராமங்களுக்குப் பதிலாகப் போதிய அளவு நகரங்கள் சிருஷ்டிக்கப்படும் வரையில், கிராம வாசிகளுக்குப் பொருளாதாரத் துறையில் பலனளிக்கக்கூடியது கதர்தான். கதர்தான் நீண்ட காலம் பிரயோசனமளிக்கக் கூடிய தாயிருக்கும் என்பதற்கு இந்தக் கருத்தைச் சொன்னலே போது மானதாகும்.†

**கைத்தறிக்குப் பதிலாகக் கைராட்டினம் வற்புறுத்தப்படும் காரணம்:** கைத்தறியைவிட கைராட்டினத்திற்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக் கப்பட வேண்டும் என்று கேட்கலாம். காந்திஜி கைத்தறியை எதிர்க்கவில்லை. அது பெரியதொரு குடிசைத் தொழில் என்பதில் சந்தேகமில்லை.‡ ஆனல், "அது தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்க வேண்டிய ஒரு நீண்ட வேலை யாகும். ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் அதைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. ஒரு விவசாயியின் குடிசையில் இது சாத்தியமா யிராது. ஆகையால், அனதிகாலம் தொட்டு கைத்தறி என்பது தனிப்பட்ட ஒரு தொழிலாயிருந்து வந்திருக்கிறது. அதன் மூலமே தனித்து ஜீவனம் நடத்த முடியும். ஆனல், விவசாயி தன்னிஷ்டப்படி செய்வதற்கோ அல்லது விட்டு விடுவதற்கோ ஏற்றதான ஓர் உபதொழில் வேண்டியிருக்கிறது. கோடிக் கணக்கானவர்களுக்கு ஏற்ற அந்தத் தொழில் ராட்டினத்தில் நூற்பது தான்."§

**கைத்தறி, ஒரு தனித் தொழில்:** "ஓர் உபதொழில் என்ற முறை யில் கைத்தறி பொருத்தமானதா யிராது. ஏனெனில், அதைச் சுலபமாகக் கற் றுத் தர முடியாது. இந்தியாவில் அது எல்லோராலும் செய்யப்பட்டதே இல்லை. அதில் வேலை செய்வதற்குப் பலர் வேண்டியிருக்கிறது. நினைத்த நேரங்களில் அதைச்செய்யலாம் என்பதும் முடியாது. அது பொதுவாக ஒரு தனித்த தொழிலாகவேதான் இருந்திருக்கிறது; அப்படித்தான் இருக்கவும் முடியும். பெரும்பாலும் அது, செருப்பு தைத்தல், அல்லது கருமான் பட்டறை போல் ஒரு முழு நேரத் தொழிலாகவே இருக்கிறது."¶

**கைத்தறித் தொழில் மீதுள்ள பிடிப்பு:** மேலும், கைத்தறி நெசவாளர் தம்முடைய தறிக்கு வேண்டிய நூல் எப்போதும் மில் களிலிருந்து கிடைக்கும் என்று நம்பிக்கொண்டிருப்பது தவறு. தம்மால் உற்பத்தி செய்யப்படும் நூலை நெய்தும் விட வேண்டும் என்பதே மில்களின் நோக்கம் என்பதைத் தம்முடைய ஆரம்ப

---

* 'எங் இந்தியா' - 21—11—1929
† 'ஹரிஜன்' – 20—6—1936
‡ 'எங் இந்தியா' - 11—11—1926
§ 'எங் இந்தியா' – 14—5—1925
¶ 'எங் இந்தியா' – 11—11—1926

அனுபவத்திலிருந்து காந்திஜி அறிந்திருந்தார். அவர்கள் மன முவந்து கைத்தறி நெசவாளர்களுடன் ஒத்துழைக்கவில்லை ; அது தவிர்க்க முடியாததும், தாற்காலிகமானதுமாகும்.*

"கைத்தறி நெசவாளர்கள் தம்முடன் கடும் போட்டியில் இறங்கும் போது, அவர்களுக்கு நூல் கொடுத்துக்கொண்டே யிருப்பதற்கு மில்காரர்கள் தருமப் பிரபுக்களல்ல."†

"லாபகரமாயிருக்கும் என்று தெரிந்தவுடன் மில்காரர்கள் மில் நூலை விற்பதை நிறுத்திவிட்டு நிச்சயமாகத் தாமே நெய்ய ஆரம்பித்து விடுவார்கள். அவர்கள் தருமம் செய்பவர்களல்ல. பணம் சம்பாதிப்பதற்காகவே அவர்கள் மில்களை ஆரம்பித்திருக்கிறார்கள். நெய்வது இன்னும் அதிக லாபகரமாயிருக்குமென்று தெரிந்தால் தமது நூலைக் கைத்தறி நெசவாளர்களுக்கு விற்பனை செய்வதை அவர்கள் நிறுத்திவிடுவார்கள்."‡

"மில் நூலை நெய்பவர்களில் பலர் சவுக்கார்களிடம் (வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களிடம்) சிக்கிக்கொண்டிருக்கிறார்கள் என்பது அநேகருக்கு அவ்வளவாகத் தெரியாது. மில் உற்பத்தியை அவர்கள் நம்பிக்கொண்டிருக்கும் வரையில் அப்படித்தான் இருக்க முடியும். நெசவாளர், மூன்றாவது மனிதர்களின் மூலம் தமக்கு வேண்டிய நூலைப் பெறக்கூடாது. தம்மைப் போல் தொழிலில் ஈடுபட்டுள்ள விவசாயியிடமிருந்து பெற வேண்டும். இதுதான் கிராமப் பொருளாதாரம்."§

"மில் நூலை உபயோகிப்பதுதான் கைத்தறித் தொழிலின் கழுத்தை நெறிக்கும் முக்கிய பிடிப்பாகும். கையினால் நூற்கப்பட்ட நூல்தான் அதற்கு விமோசனம். கைராட்டினம் மறைந்தால், கைத்தறியும் அதே மாதிரி மறைந்து தான் போகும்."¶

**கைராட்டினமும், கைத்தறியும் ஒன்றுக்கொன்று உதவி :** கைத்தறி நெசவாளர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பவர்கள் நூற்பவர்களே; அதே மாதிரி நூற்பவர்களுக்கு உதவியாயிருப்பவர்கள் நெசவாளர்கள்.** இவ்விருவரும் ஒருவருக்கொருவர் உதவி செய்யும் இரட்டையர். சுருங்கக் கூறுமிடத்து, கைத்தறியும் கைராட்டினமும் பரஸ்பரம் ஒன்றுக்கொன்று உதவியானவை. கைராட்டினத்திலிருந்து கிடைக்கும் நூலை உபயோகிக்கும் ஒரு நெசவாளர் முடிவில், மில் நூலை உபயோகிப்பவரை விட அதிகம் சம்பாதிப்பார். ஏனெனில், கைராட்டின நூலை உபயோகிப்பவருக்கு வருடம் பூராவுமே வேலை கிடைக்கும்.*† "நெசவாளர்கள், கையினால் நூற்ற நூலை விலக்கிவைத்தால், முடிவில் நெசவுத் தொழிலையே அழித்ததற்கு அவர்கள்தான் பொறுப்பாளியாவார்கள்."*‡ கைராட்டினம் வெற்றி பெற்றால், கைத்தறி தானாகவே அபிவிருத்தியடையும். கைராட்டினம் தோல்வியடைந்தால் கைத்தறி நெசவும் இறந்தே தீரும்.*§

* காந்திஜியின் 'சுய சரிதம்' 5 வது பாகம், 39 அத்தியாயம்.
† 'ஹரிஜன்' – 25—8—1941
‡ 'ஹரிஜன்' - 31—3—1946
§ 'எங் இந்தியா' – 11—11—1926
¶ 'ஹரிஜன் – 25—8—1946
** 'ஹரிஜன்' – 31—3—1946
*† 'ஹரிஜன்' - 25—8—1946
*‡ 'ஹரிஜன்' – 31—3—1946
*§ 'எங் இந்தியா' – 11—11—1926

**மில் தொழிலின் ஸ்தானம் :** "ஹோட்டல்களும் இருக்கின்றன, வீடு களில் சமையலும் நடக்கிறது. அதே மாதிரி நூற்கும் மில்லுடன் கைராட்டின மும் ஏன் சேர்ந்து இருக்க முடியாது என்பதற்கு எந்தவிதமான காரணமு மில்லை."*

"மில்கள் இப்போது மக்களைச் சுரண்டுவதற்காக நடத்தப்படுகின்றன. அப்படியில்லாமல் மக்களுக்குத் தொண்டு புரிவதற்காக மில்கள் நடத்தப்பட் டால், அவை குடிசைகளில் இயங்கும் கைராட்டினம், கைத்தறியின் உற்பத்தி களை அதிகமாக்குவதற்கு உதவியா யிருக்கும். இப்போதிருப்பதைப்போல் அவற்றைப் பிரயோசனமில்லாமல் ஆக்கிவிடாது."†

கதர் ஸ்தாபனங்களால் சுலபமாக உற்பத்தி செய்யப்படக் கூடிய ரகங்களை மில்கள் உற்பத்தி செய்யாமல் இருக்க வேண்டும். இதன் மூலம் கிடைக்கும் அதிகப்படியான சக்தியைக் கதர் ஸ்தாபனங்களால் சுலபமாகத் தயாரிக்க முடியாத ரகங்களை அதிகமாகத் தயாரிப்பதற்குப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

"நமது தேவைகளுக்கு வேண்டிய அளவு நமது மில்களால் உற்பத்தி செய்ய முடியாது. அப்படி உற்பத்தி செய்தாலும், நிர்ப்பந்தம் ஏற்பட்டா லொழிய அவர்கள் விலைகளைக் குறைக்கமாட்டார்கள். பணம் பண்ணுவதே அவர்களுடைய நோக்கம். ஆகையால், தேசத்தின் தேவைகளுக்கேற்றவாறு விலைகளைச் சீர்ப்படுத்தி வைக்கமாட்டார்கள்."‡

மில்காரர்களின் பேராசையினாலும், நாணயமின்மையாலும் தான் வங்காளப் பிரிவினை எதிர்ப்புக் கிளர்ச்சி காலத்தில் வங்காளத்தில் சுதேசி இயக்கம் தடைப்பட்டது. விலையை மிகவும் உயர்த்தி வைத்தார்கள் ; சுதேசி என்ற பெயரில் அந்நியத் துணி களைக்கூட விற்றார்கள். போலிக் கதரைப்பற்றி வெளியாகி யிருக்கும் உண்மைகளிலிருந்து, வாங்குவோர்களின் நலன்களுக்கு விரோதமாகத் தங்கள் சொந்த லாபத்திற்காகச் சுதேசி இயக் கத்தைப் பயன்படுத்திக்கொள்ள மில்காரர்கள் தயங்க மாட்டார்கள் என்பது நன்றாகத் தெரிந்தது.§ இந்தப் பேராசைக் கொள்கையினால் சுதேசிக்கும், தேசத்திற்கும் பாதகம் ஏற்படக்கூடும் என்பதை மில்காரர்கள் உணரவில்லை.¶ அவர்கள் தமது உற்பத்திகளைச் சீர்ப்படுத்திக் குறைந்தபட்ச அளவில் லாபம் வைக்க வேண்டும். மீதம் ஏதாவது இருந்தால் அதைத் தொழிலாளர்களின் நிலைமையை அபிவிருத்தி செய்வ தற்கு உபயோகிக்க வேண்டும்.**

**மில்களின் பேராசைக்குக் கதர் ஒரு முட்டுக்கட்டை :** " கதர் உற்பத்தி யும், கதர்ப் பிரசாரமும் மில்களின் பேராசைக்கு முட்டுக்கட்டையாக விளங்கு கின்றன. மேலும், இது ஆச்சரியமாகத் தோன்றியபோதிலும், வெளிநாட்டுப் போட்டிக்கு எதிரான மில்களின் போராட்டத்தில் மில்களுக்கு மறைமுகமான, ஆனால், பலனளிக்கத்தக்க ஆதரவையும் கதர் அளிக்கிறது......கதரையே உப

* 'எங் இந்தியா' - 21—7—1920
† 'எங் இந்தியா' - 12—4—1928
‡ 'ஹரிஜன்' - 20—6—1936
§ 'எங் இந்தியா' – 10—5—1928
¶ 'எங் இந்தியா' – 23—2—1922
** 'எங் இந்தியா' – 15—3—1928

யோகிக்க வேண்டும் என்ற பிரசாரத்தை நிறுத்திவிட்டு, மில் துணிகளை ஏற்றுக் கொண்டால், கதரைக் கொன்றதாகிவிடும். நாளடைவில் மில் துணியையும் கொன்றதாகிவிடும். ஏனெனில், மில் துணி தனியாக நின்று வெளிநாட்டுப் போட்டியைச் சமாளிக்க முடியாது.''*

**கதரின் உரிமை :** மிகவும் இயற்கையானதும், சுலபமானதும், பணச் செலவில்லாததும், பலன் அளிக்கத் தக்கதுமான முறையில் கைராட்டினம் பொருளாதாரக் கஷ்டத்தைத் தீர்த்துவிடும் என்று காந்திஜி கூறினார்.† கைராட்டினத்தில் நூற்பதன் மூலம் பின்கண்ட நன்மைகள் ஏற்படும் என்று அவர் சொன்னார்.‡

(1) ஓய்வு நேரம் இருப்பவர்களுக்கும், கொஞ்ச வருமானம் தேவைப்படுபவர்களுக்கும் அது உடனடியாக வேலை கொடுக்கிறது.

(2) இது ஆயிரக்கணக்கானவர்களுக்குத் தெரிந்தது.

(3) இதைச் சுலபமாகக் கற்றுக்கொண்டு விடலாம்.

(4) இதற்கு மூலதனம் என்று எதுவும் தேவையில்லை.

(5) கைராட்டினத்தைச் சுலபமாகவும், மலிவாகவும் செய்ய முடியும்.

(6) மக்களுக்கு இதன்மீது வெறுப்பு கிடையாது.

(7) பஞ்சம், பற்றுக்குறை ஏற்படும் காலங்களில் இது உடனடியான நிவாரணம் அளிக்கிறது.

(8) அந்நியத் துணி வாங்குவதால் இந்த நாட்டிலிருந்து வெளியே போய்விடும் செல்வத்தைத் தடுக்க வல்லது இது ஒன்றுதான்.

(9) இதன் மூலம் மிச்சப்படும் கோடிக்கணக்கான ரூபாய்கள், தகுதியுள்ள ஏழைகளிடையே தானாகவே வினியோகமாகிவிடுகிறது.

(10) ஒரு சிறு அளவு வெற்றி கிடைத்தால்கூட அந்த அளவுக்கு அது மக்களுக்கு உடனடியான லாபமாகும்.

(11) மக்களிடையே ஒத்துழைப்பை வளர்ப்பதற்கு இதுவே மிகவும் சக்தி வாய்ந்த கருவியாகும்.

**கதர் இயக்கத்தின் பல அம்சங்கள் :** தன்னுடைய சரித்திரத்தில் கதர் எவ்வளவோ மாறுபாடுகளைத் தாண்டி வந்திருக்கிறது. புராதன காலத்தின் அபூர்வமான ஒரு வஸ்துவாயிருந்த கதர், இந்தியாவின் அகிம்சாபூர்வமான சுதந்திரப் போராட்டத்தின் சின்னமாயிற்று. முன்பு கதர் விவசாயத்திற்கு ஓர் உப தொழிலாக இருந்தது. மில் துணிகளுடன் போட்டி போடக் கூடிய நவநாகரிகத் துணிகளை நகரவாசிகளுக்கு அளிப்பது மட்டும் கதரின் நோக்கமல்ல; அல்லது மற்றத் தொழில்களைப் போல் சிலருக்கு வேலை வாய்ப்பு அளிப்பதுமல்ல. விவசாயிகள் தமது ஒழிவு நேரத்தை லாபகரமாகப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கு அது உதவியாயிருந்தது.§ கிராமவாசிகள் தமது உணவைத் தாமே சமைத்துக்கொள்ளுவதைப்போல் தம்முடைய

* 'எங் இந்தியா' – 10–5–1928 † 'எங் இந்தியா' – 8–12–1921
‡ 'எங் இந்தியா' - 21–8–1924 § 'ஹரிஜன்' – 6–7–1935

சொந்தத் தேவைகளுக்கான கதரையும் அவர்களே தயார்செய்து கொள்ள வேண்டும். மீதம் ஏதாவது இருந்தால் அதை விற்கலாம்.*

1920-ஆம் ஆண்டைத் தொடர்ந்த வருடங்களில் பொருளாதாரம் பற்றிக் காந்திஜியின் கருத்துக்கள் பிரத்தியட்சக் கண்ணோட்டம் பெற்றன. செல்வத்தின் உற்பத்தி, வினியோகம் பற்றிய பிரச்னைகளில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். அதிகாரமும் செல்வமும் ஒரே இடத்தில் குவிந்திராமல், அதை நேர்மையான முறையில் வினியோகம் செய்வதற்காகக் கைராட்டினத்தைப் பிரபலப்படுத்த ஆரம்பித்தார். 1925-ல் அகில இந்திய சர்க்கா சங்கத்தை ஆரம்பித்தார். இந்தியாவில் உள்ள எல்லோரையும் கதர் அணியச் செய்ய வேண்டும் என்பதே அதன் நோக்கம்.

கதரைப் பற்றிய அவருடைய கருத்துக்களில் மீண்டும் மாறுதல் ஏற்பட்டது. 1935-ல் கதரின் வியாபாரத் தன்மையிலுள்ள முக்கியத்தை மாற்றிக் கதரில் சுயதேவைப் பூர்த்தி அம்சத்தை வற்புறுத்தினர். விஷய அறிவு பெருகச் செய்வது தான் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் முதல் நோக்கம் என்று வியாக்கியானம் செய்யப்பட்டது. கதர்க் கடைகள், பணத்திற்குக் கதர் விற்கும் கடைகளாக இராமல், கதர் உற்பத்தியின் பல்வேறு அம்சங்களையும் விளக்கிக் கூறும் நிலையங்களாக இருக்க வேண்டும் என்று கருதப்பட்டது.† எல்லாக் கதர் ஸ்தாபனங்களிலுமே சுயதேவைப் பூர்த்திக்கே முதலிடம் கொடுக்கப்பட்டது.

சுயதேவைப் பூர்த்திதான் முக்கியம் என்று கதரின் வியாக்கியானம் மாற்றப்பட்டபோது, விற்பனைக்காகக் கதரை உற்பத்தி செய்வது நகரவாசிகளின் உண்மையான தேவைகளைக் கவனிப்பதோடு நிறுத்தப்பட்டது.§ ஒரு விதத்தில் சுயதேவைப் பூர்த்தியும், விற்பனைக்கான கதர் உற்பத்தியும் சேர்ந்தே நடந்து கொண்டிருந்தன. விற்பனைக்கான கதர் என்பது சுயதேவைப் பூர்த்தியின் ஓர் உபதொழிலாய்விட்டது.¶

ஆரம்ப காலத்தில் ஏழைகளுக்கு உதவியளிப்பதே முக்கியமானது என்று வற்புறுத்தப்பட்டது. மேலும், பணக்காரர்களுக்கும், ஏழைகளுக்குமிடையே இது உயிர்த்துடிப்புள்ள இணைப்பாகவுமிருந்தது. அதனல் இதற்கு ஓர் அரசியல் முக்கியத்துவமும் ஏற்பட்டது. இதுவரையில் நூற்றலும், நெய்தலும் பாமர மக்களாலேயே செய்யப்பட்டு வந்தன. இப்போதும் அது பாமர மக்களிடமே இருந்தது. ஆயினும் முக்கியமாக அவர்களுடைய சொந்த உபயோகத்திற்காகத்தான்.

---

* 'ஹரிஜன்' – 6—7—1935
† 'ஹரிஜன்' – 6—7—1935
‡ 'ஹரிஜன்' – 26—10—1935
§ 'ஹரிஜன்' – 6—7—1935
¶ 'ஹரிஜன்' – 26—10—1935

கதரின் வளர்ச்சியில் காந்திஜி கண்டுபிடித்த தவறுதான் இந்த மாறுதலுக்குக் காரணமாகும். நூலை நூற்று, துணியை நெய்த கிராமவாசிகள் அவற்றை உபயோகிக்கவில்லை. அதை உபயோகிப்பதில் உள்ள மதிப்பும், கௌரவமும் அவர்களுக்குப் புரியவில்லை. ஆகவே, கிராமவாசிகள் கதர் அணியும்படி செய்வதற்கு அகில இந்திய சர்க்கா சங்கம் தனது சக்திகளைச் செலவிட வேண்டும் என்று விதிக்கப்பட்டது.*

இப்போதுள்ள இயற்கைக்கு மாறான நிலைமையை மாற்றுவதற்காகவே கதர் இயக்கம் உருவாக்கப்பட்டதேயன்றி நகரவாசிகளிடமிருந்து பறிக்க வேண்டும் என்பதற்காகவல்ல. நிலைமையை மாற்றுவதென்பது இயற்கையான உறவுகளை ஏற்படுத்துவதேயாகும்.† கதர் இயக்கம் என்பது, அநேகமாகத் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தைப் போன்றதே. மேல் வகுப்பினர் என்று சொல்லப்படுபவர்கள் பல நூற்றாண்டுகளாகக் கீழ் வகுப்பினரைப் புறக்கணித்துவிட்டார்கள். மேல் வகுப்பினர் கீழ் வகுப்பினருக்குத் தாம் செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் செய்யுமாறு அழைத்ததன் மூலம் கதர் இரண்டு தீமைகளைச் சரிப்படுத்தியது.‡

**கதரின் உள்ளர்த்தம்:** "கதரின் உள்ளர்த்தங்களையெல்லாம் நன்கு தெரிந்துகொண்டே அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். கதர் என்பது, முற்றிலும் சுதேசி மனப்பான்மையாகும்; வாழ்க்கைக்கு அவசியமானவற்றையெல்லாம் இந்தியாவிலேயே தயார் செய்வது என்ற உறுதி. அதுவும், கிராமவாசிகளின் உழைப்பு, புத்திசாலித்தனத்தினால் உற்பத்தி செய்தவைகளா யிருக்க வேண்டும். அப்படியானால், இப்போதுள்ள முறையை மாற்றுவதாகும். இந்தியாவிலுள்ள ஐந்தாறு நகரங்கள்...இந்தியாவிலுள்ள 7,00,000 கிராமங்களைச் சுரண்டி வாழ்வதற்குப் பதிலாக, இந்தக் கிராமங்கள் பெரும்பாலும் தன்னிறைவு பெற்றவைகளாகவே இருக்கும்; இரு தரப்பினருக்கும் நன்மையளிக்கும் வகையில் இந்தக் கிராமங்கள் தாமாகவே இந்தியாவிலுள்ள கிராமங்களுக்கும் வெளி உலகத்திற்கும்கூடச் சேவை செய்யும்."§

நாட்டில் பொருளாதாரச் சுதந்திரமும், எல்லோருக்கும் சமத்துவமும், ஆரம்பமாவதையே கதர் குறிக்கிறது. "இந்திய மக்களின் ஐக்கியத்துக்கும், அவர்களுடைய பொருளாதாரச் சுதந்திரத்துக்கும், சமத்துவத்திற்கும் அது ஒரு சின்னமாகும். ஆகவே, கடைசியில் பண்டித நேரு கூறியதுபோல், 'இந்திய விடுதலையின் தனி ஆடையுமாகும்'."¶

ஆடம் ஸ்மித் எழுதியுள்ள 'நாடுகளின் செல்வம்' என்ற நூலில், பொருளாதார வளர்ச்சியின் தன்மையைப் பற்றிச் சில கோட்பாடுகளை விதித்திருக்கிறார். பொருளாதாரம் சரளமாக

---

* 'ஹரிஜன்' - 21—7—1946 † 'ஹரிஜன்' - 21—7—1946

‡ 'ஹரிஜன்' - 6—7—1935

§ காந்திஜியின் 'நிர்மாண வேலைத் திட்டம்' 1941 பதிப்பு 7-ஆம் பக்கம்.

¶ காந்திஜியின் 'நிர்மாண வேலைத் திட்டம்' 1941 பதிப்பு 7-ஆம் பக்கம்.

வளர்ச்சி பெறுவதற்குத் தடையாக உள்ள சில 'முரண்பாடான அம்சங்களை' அவர் வர்ணித்திருக்கிறார். இவற்றில் முக்கியமானது 'மனிதனின் தன்மை' பற்றியதாகும். கதரின் பொருளாதாரத் துவம் பூராவுமே மனிதனின் தன்மையையே அடிப்படையாகக் கொண்டது. மனிதனின் சுயநலம்தான் பொருளாதாரத்தில் உள்ள 'முரண்பாடான அம்சம்' என்று ஆடம் ஸ்மித் கூறுகிறார். அதையும் சமாளிக்க வேண்டும். ஆகவே, மில் துணி உற்பத்திக்குப் பொருத்தமாயிருப்பது, கதருக்கு ஏற்றதாயிராது. தரத்தைக் குறைப்பது, கலப்படம் செய்வது, மனிதர்களின் கீழ்த்தர உணர்ச்சிகளைத் திருப்திப்படுத்துவது ஆகியவைகளெல்லாம் இன்றைய வர்த்தக உற்பத்திகளில் நிலையான அம்சங்களாயிருக்கின்றன. இவைகளுக்குக் கதரில் இடமில்லை. அதிகமான லாபம், குறைந்த கூலி என்ற கொள்கைக்கும் கதரில் கொஞ்சமும் இடமில்லை. கதரின் விற்பனையால் கிடைக்கும் தொகை, ஆரம்ப உற்பத்தியாளர்களான நூற்பவர்களுக்குத் திரும்பிப் போய்விடுகிறது. மற்றவர்களுக்கு, அவர்களுக்குரிய கூலிதான் கிடைக்கிறது.* "கதர் வர்த்தக சமாதானத்தைக் குறிக்கிறதே யொழிய வர்த்தகச் சண்டையை அல்ல".†

**மிகப் பெரிய கூட்டுறவுச் சங்கம்:** கூட்டுறவு இல்லாமல் ராட்டையில் நூற்றல் வெற்றிபெற முடியாது. கைராட்டினத்தில் நூற்றலின் மூலம் காந்திஜி உலகத்திலேயே மிகப் பெரிய கூட்டுறவுச் சங்கத்தை ஸ்தாபிக்க முயற்சி செய்துகொண்டிருந்தார். இது பெரிய ஆசையாயிருக்கலாம். ஆனால், உண்மையற்றதல்ல. லட்சக்கணக்கான மக்கள் ஒத்துழைத்தாலொழிய கைராட்டினத்தில் நூற்பது அதன் நோக்கத்தில் வெற்றி பெற முடியாது. ஆகையால் காந்திஜியின் ஆசை உண்மையற்றதல்ல. ஆரம்பக் கட்டத்திலிருந்தே கூட்டுறவு மிகவும் அவசியம். நூற்பதன் மூலம் ஒருவருக்குத் தன்னம்பிக்கை ஏற்படுகிறது என்றால், ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும், பரஸ்பரம் ஒருவரையொருவர் நம்பி வாழ வேண்டிய அவசியத்தையும் அது கற்றுக் கொடுக்கிறது. சாகுபடி, மகசூலை விற்பனை செய்வது ஆகியவற்றில் கோடிக்கணக்கான மக்களிடமிருந்து இன்னும் பெரிய அளவில் கூட்டுறவு இருக்க வேண்டும் என்ற அவசியத்தையும் எடுத்துக்காட்டுகிறது. ‡

**லட்சியக் கதர் நிலையம்:** ஒரு லட்சியக் கதர் நிலையம் எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிக் காந்திஜி பின்வருமாறு வர்ணித்திருக்கிறார்:—

"இந்த நிலையம் பிரயோசனமானதாயிருக்க வேண்டுமானால், அங்குள்ள யாவுமே சுத்தமாயிருக்க வேண்டும். அதற்கும், அந்தப் பெரிய ஸ்தாபனத்திலுள்ள பல்வேறு உறுப்புகளுக்குமிடையே உள்ள பிணைப்பு முற்றிலும் ஆன்மிக அல்லது தார்மிகத் தன்மை வாய்ந்தது. ஆகையால், ஒரு நூற்பு

---

* 'ஹரிஜன்' - 21—9—1934 † 'எங் இந்தியா' - 8—12—1921
‡ 'எங் இந்தியா' - 10-6-1926

நிலையம் என்பது ஒரு கூட்டுறவுச் சங்கமேயாகும். பஞ்சைக் கொட்டை எடுப்ப வர்கள், பட்டை போடுபவர்கள், நூற்பவர்கள், நெசவாளர்கள், வாங்குபவர் கள் ஆகியோர் அதில் அங்கத்தினர்கள். ஒரு பொதுவான உறவு, பரஸ்பர நல்லெண்ணம், சேவை உணர்ச்சி ஆகியவைகளால் இவர்கள் பிணைக்கப்பட் டிருப்பார்கள்.''*

**கதர் ஸ்தாபனம், ஒரு பரோபகார ஸ்தாபனம்:** "ஒரு வகையில் கதர் என்பது, முற்றிலும் பொருளாதாரத் தன்மை வாய்ந்ததுதான். ஒரு வியாபார ஸ்தலமாக இருப்பதே கதர் ஸ்தாபனத்தின் முதல் குறியாக இருக்க வேண் டும். ஆகையால், ஜனநாயகக் கொள்கை அதற்குப் பொருந்தாது. கருத்துக் கள், அபிப்பிராயங்கள் ஒன்றோடொன்று மோதுவதுதான் ஜனநாயகம். சில சமயங்களில் இந்த வெவ்வேறு கருத்துக்களில் எது சரி என்பதை ஸ்தாபிப்ப தற்குப் பலாத்கார முறையில் போரில்கூட இறங்க வேண்டி யிருக்கும். ஒரு வியாபார ஸ்தாபனத்தில் இம்மாதிரி முரண்பாடுகளுக்கு இடம் இருக்க முடி யாது. ஒரு வியாபார ஸ்தாபனத்தில் கட்சிகள், கோஷ்டிகள் போன்றவை இருந்தால் என்ன ஆகும் என்று யோசித்துப் பாருங்கள். இந்தச் சுமை தாங் காமல் அது முறிந்துதான் போகும். ஆகவே, இது மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற நோக்கமுள்ள ஒரு பரோபகார ஸ்தாபனமேயாகும். அத்தகைய ஒரு ஸ்தாபனம் பலருடைய இஷ்டத்திற்குத் தகுந்தாற் போல் ஆட முடியாது. தனிப்பட்டவர்களின் பெருமைக்கு அதில் இடமில்லை.''†

**கதரும், அரசியல் ஸ்தாபனமும்:** "கதர், அரசியல் ஸ்தாபனம் என்ற இரு பிரச்னைகளையும் முற்றிலும் தனித்தனியாகவே வைத்துக்கொள்ள வேண்டும். இதில் கொஞ்சமும் குழப்பம் இருக்கக்கூடாது. பரோபகாரமே கதரின் நோக்கம். ஆனால், இந்தியா சம்பந்தப்பட்டவரையில் அது பெரும் ராஜீய விளைவுகளையும் உண்டாக்கத்தான் செய்யும்.''‡

பொதுஜனத் தொடர்புக்கும் கதர் ஒரு கருவியாய் இருந்தது. ஆகவே, கதரின் மூலம் மக்களின் சோம்பேறித்தனத்தைப் போக்க முடியுமென்றால், உணவுடன் அவர்களை அணுகுபவர்கள் கூறுவதைக் கேட்க அவர்கள் ஆரம்பிப்பார்கள். எனவே, கதரின் மூலம் நம்பிக்கையையும் உண்டாக்க முடியும். கதர் வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதில் பரோபகாரம் ஒன்றே. அதாவது, பொருளாதாரமே நோக்கமாய் இருக்க வேண்டும். எந்தவிதமான ராஜீயமும், அதில் இருக்கக்கூடாது. தமக்காகத் தாமே கட்டி வளர்த்துள்ள ஒரு ஸ்தாபனத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்ற கலையைக் கதரின் மூலம் மக்களுக்குக் கற்றுக்கொடுக்க முடியும். அந்தக் கலையை அவர்கள் கற்றுக் கொண்டால்தான், அகிம்சை வழியில் தாம் அழிக்க விரும்பும் ஒன்றுக்குக் கீழ்ப்படிய மறுப்பதிலும் அவர்கள் வெற்றி பெற முடியும். §

**அகிம்சையின் சின்னம்:** எல்லா மதங்களையும் சேர்ந்த மக்களைக் கைராட்டினம் சுயராஜ்யத்திற்கு அழைத்துச் செல்ல

---

* 'எங் இந்தியா' – 10—6—1926 † 'ஹரிஜன்' – 21—9—1934

‡ 'மாடர்ன் ரெவியூ'—அக்டோபர், 1935

§ 'மாடர்ன் ரெவியூ' – அக்டோபர், 1935

வேண்டும். கிராமங்களுக்குரிய ஸ்தானத்தை அது வாங்கிக் கொடுக்கிறது. உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற வித்தியாசத்தையும் அது போக்கிவிடுகிறது. சுயராஜ்யத்திற்கு நிச்சயமான ஒரே வழியான அகிம்சைக்கும், அகிம்சையின் சின்னமான கைராட்டினத்திற்கும் 1919-ல் இந்தியாவின் சுதந்திரப் பிரியர்கள் அறிமுகம் செய்துவைக்கப்பட்டார்கள். கைராட்டினத்தைத் தவிர அகிம்சைக்கு வேறு எந்தச் சின்னமும் இல்லை. எல்லோரும் அதை ஏற்றுக்கொண்டாலொழிய அகிம்சைக்குக் கண்கூடான விளக்கம் எதுவுமிராது.*

அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தில் கௌரவமானதும், அமைதியானதுமான வாழ்க்கைக்கு மக்கள் மனமுவந்து தாமாகவே ஒத்துழைப்பார்கள். அத்தகைய கிராமங்களே அந்தச் சமுதாயத்தில் இருக்கும்.†

**சுதந்திரம் பெற்ற பிறகு கதரின் ஸ்தானம்:** சுதந்திரம் பெற்ற பிறகு கதருக்கு இடம் உண்டா என்பது நியாயமான கேள்வியாகும். அந்தக் கேள்விக்கு காந்திஜி பின்வருமாறு பதிலளித்திருக்கிறார்:

"அகிம்சையை அடிப்படையாகக் கொண்டிருந்த ஒரு வாழ்க்கை முறையைக் கதர் பிரதிபலிப்பதாயிருந்தது; இன்னமும் அப்படி இருக்கிறது. நடைமுறையில் கதரும், அகிம்சையும் மறைவது, கதரின் முக்கிய உட்கருத்துக்களை இவ்வளவு ஆண்டுகளாக நாம் கிரகித்துக் கொள்ளவில்லை என்பதையே காட்டுகிறது. இதுவே என்னுடைய அபிப்பிராயம். இது சரியாயிருக்கலாம், தவறாகவுமிருக்கலாம். எல்லாப் பக்கங்களிலும் சகோதரச் சண்டைகளும், சட்டமின்மையும் காணப்படும் விபரீதத்திற்கு இதுவே காரணமாகும். இந்தியக் கிராமங்களிலுள்ள மக்கள், நமக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டது என்று இயற்கையாகவே உணரத்தக்க விதத்தில் நாம் சுதந்திரம் பெற வேண்டுமானால், நூற்றலும் நெய்தலும், முன்பு எப்போதும் இருந்ததைவிட இப்போது, அதிக முக்கியமானது என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. அதுதான் உலகத்தில் கடவுளின் ஆட்சி ஏற்படும் நிலைமையாகும். இன்று காணப்படும் மோசமான தாரதம்மியத்திற்குப் பதிலாக, எல்லா ஆண்களும் பெண்களும் சமம் என்ற நிலையை அடைவதற்குக் கதரின் மூலம் நாம் முயற்சி செய்துகொண்டிருக்கிறோம். முதலாளித்துவம் அகம்பாவத்துடன் தொழிலாளர்களை அடக்கி வைப்பதற்குப் பதிலாக, தொழிலாளர் நலன்களுக்காக முதலாளித்துவம் பயன்படுத்தப்படும் நிலையை அடைய முயற்சித்துக்கொண்டிருக்கிறோம். ஆகையால், சென்ற முப்பது வருடங்களில் இந்தியாவில் எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளெல்லாம் பிற்போக்கானவை என்று இருந்தாலொழிய இன்னும் அதிக தீவிரத்துடனும், இதுவரையில் காட்டியதைவிட இன்னும் அதிக புத்திசாலித்தனத்துடனும் கைராட்டினத்தில் நூற்பதை மேற்கொள்ள வேண்டும்."‡

*கிராமத் தொழில்களின் கேந்திரம் கதர்:* "கதர்தான் மத்தியில் ஒளி வீசும் சூரியன். சூரியனைச் சுற்றியுள்ள மற்ற கிரகங்களைப் போல் மற்ற கிராமத்

* 'ஹரிஜன்' - 13—4—1940 † 'ஹரிஜன்' – 13—1—1940
‡ 'ஹரிஜன்' – 21—12—1947

தொழில்கள் கதர் என்ற சூரியனைச் சுற்றி வருகின்றன. அவை தனித்து நிற்க முடியாது. மற்ற தொழில்களில்லாமல் கதரும் இருக்க முடியாது, இவை முற்றிலும் ஒன்றையொன்று நம்பியிருப்பவை. இந்தியாவைப் போலவே அவ்வளவு புராதனமான கிராமிய இந்தியா வேண்டுமா, அல்லது அந்நிய ஆதிக்கத்தின் சிருஷ்டியான நகரவாச இந்தியா வேண்டுமா என்பதையே நாம் முடிவு செய்ய வேண்டும். இன்று நகரங்கள் கிராமங்களின் மீது சவாரி செய்து உறிஞ்சுவதால், கிராமங்கள் சிதைந்துகொண்டிருக்கின்றன... கிராமங்களைச் சுரண்டுவதே கட்டுப்பாடான பலாத்காரமாகும். அகிம்சையை அஸ்திவாரமாகக்கொண்ட சுயராஜ்ய மாளிகையை நாம் எழுப்ப வேண்டுமானால், அவற்றிற்குரிய இடத்தைக் கிராமங்களுக்குக் கொடுக்க வேண்டும். நகரங்களிலுள்ள உள்நாட்டு, அல்லது வெளிநாட்டுத் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்குப் பதிலாக, கிராமத் தொழில்களைப் புதுப்பித்து அவற்றின் உற்பத்திகளை நாம் உபயோகிக்க ஆரம்பித்தாலொழிய நாம் அப்படி செய்யவே முடியாது."*

கதரும் அகிம்சையும் ஒன்றே என்று காந்திஜி ஏன் கூறினர் என்பது இப்போது தெளிவாகி யிருக்கும். கதர்தான் கிராமத்தின் முதன்மையான கைத்தொழில், கதரைக் கொன்ருல், கிராமங்களையும், அத்துடன் அகிம்சையையும் கொன்றதாகும். இதைப் புள்ளி விவரங்களின் மூலம் ருசுப்பிக்க முடியாது. இதற்கான ருசு நமது கண் முன்பே இருக்கிறது.

## கதரைத் தவிர மற்ற கிராமத் தொழில்கள்

**நிர்மாண நடவடிக்கைகளின் அவசியம் :** 1933-ஆம் வருடத்தின் இறுதியிலும், 1934-ஆம் வருடத்தின் ஆரம்பத்திலும், காந்திஜியினல், ஆரம்பிக்கப்பட்ட சட்ட மறுப்பு இயக்கம் அதனுடைய உச்சக் கட்டத்தைத் தாண்டிவிட்டது. தேசம் பூராவிலுமுள்ள காங்கிரஸ்காரர்கள், ''அடுத்தபடி என்ன?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். சிறைச்சாலைகளுக்கு வெளியே இருந்தவர்களெல்லாம் செயலற்றுப் போய்விட்டார்களோ என்று தோன்றியது. அப்போது நிர்மாண வேலைகள் எவ்வளவு அவசியமானவை என்பதைக் காந்திஜி உணர்ந்தார். 1920-ல் வகுக்கப்பட்ட காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் இது இடம் பெற்றிருந்தது என்பது உண்மைதான். ஆனுல், அதில் மக்களின் கவனத்தைக் கவரக் கூடிய விதத்தில் ஆடம்பர அம்சம் எதுவுமில்லாததால், அது மங்கிவிட்டது. பகைப் புலனில் சட்ட மறுப்பு இருக்கும்போது, நிர்மாண வேலை தவிர்க்க முடியாததாகிவிட்டது. நிர்மாண வேலையின் முக்கியத்தை உணர்ந்து, ஒவ்வொரு பிரஜையும் அதன் மூலம் சுயராஜ்ய மாளிகையைக் கட்டுவதற்குத் தனக்குரிய பங்கைச் செய்யக் கற்றுக்கொண்டால், வானத்தில் கருமேகங்கள் தோன்றியபோதிலும் ஏக்கத்திற்கோ, ஏமாற்றத்திற்கோ கொஞ்சமும் காரணமே யில்லை. ஆகையால், அகில இந்தியக்

* 'ஹரிஜன்' - 20—1—1940

† 'ஹரிஜன்' - 20—1—1940

கிராமக் கைத்தொழில்கள் சங்கத்தை 1934-ல் காந்திஜி ஆரம்பித்தார். சோர்ந்து கிடக்கும் இந்தியக் குடிசைத் தொழில்களை உயிர்ப்பிப்பதே இந்தச் சங்கத்தின் நோக்கமாகும்.

**கிராமத் தொழில்கள், கதரின் கைப்பாவை:** கிராமத் தொழில்களுக்கும், கதருக்கும் வித்தியாசம் இருக்கிறது. அவற்றில் தன்னிச்சையான வேலைக்கு அதிக இடமில்லை. ஒவ்வொரு தொழிலிலும் ஒரு குறிப்பிட்ட அளவினர்தான் இறங்க முடியும். இந்தத் தொழில்கள் கதருக்குக் கைப்பாவையாக இருக்கின்றன. கதர் இல்லாமல் அவை நிலைக்க முடியாது. அவை இல்லாவிடில் கதருக்குள்ள அந்தஸ்து போய்விடும். மாவரைத்தல், கைக்குத்தல், சோப் செய்தல், காகிதம் செய்தல், தீக்குச்சிகள் செய்தல், தோல் பதனிடுதல், செக்கில் எண்ணெய் ஆட்டுதல் முதலிய அத்தியாவசியமான கிராமத் தொழில்கள் இல்லாமல் கிராமப் பொருளாதாரம் முழுமை பெற முடியாது. வாங்குவோர் இருந்தால், நம்முடைய தேவைகளில் பெரும்பாலானவற்றைக் கிராமங்களிலிருந்தே பெற முடியும் என்பதில் சந்தேகமில்லை.*

## கைத்தொழில், விவசாய நிலைமை

**உண்மையான சமூகப் பொருளாதாரம்:** முதலாளியும் தொழிலாளியும் பிரிக்க முடியாத ஒரு முழுமையின் இரு பகுதிகள் என்பதை உண்மையான சமூகப் பொருளாதாரம் நமக்குப் போதிக்கிறது. ஒன்றைவிட மற்றொன்று சிறியதோ, பெரியதோ அல்ல. இந்த நலன்கள் முரண்பட்டவைகளாயிருக்கக்கூடாது; ஒரே மாதிரியாகவும், ஒன்றையொன்று நம்பியதாகவும் இருக்க வேண்டும்.‡

**முதலாளிகளின் கடமைகள்:** முதலாளிகளிடமிருந்து என்ன எதிர்பார்க்கப்படுகிறது? முதலில், அவருடைய எல்லா நடவடிக்கைகளிலும் நாணயம் இருக்க வேண்டும். முற்றிலும், நாணயமான முறையில் வியாபாரம் செய்வது கடினமானதென்றாலும், அசாத்தியமானதல்ல. ஏராளமாகப் பணம் சேர்ப்பதும், நாணயமும் ஒன்றோடொன்று பொருந்தாதவை என்பதுதான் இதிலுள்ள உண்மை.§

வியாபாரத்தில் நாணயமற்ற முறைகளைக் கையாளுவதை மன்னிக்க முடியாது. வாழ்க்கையின் எந்தத் துறையிலுமே முழு நாணயத்துடன் நடந்துகொள்ள வேண்டும் என்பதே இதற்கும் பொருந்தும். என்ன நஷ்டம் வந்தாலும் கொள்கையை விட்டுக் கொடுப்பதில்லை என்ற உறுதியுடன் வியாபாரி நடந்துகொள்ள வேண்டும்.¶

* காந்திஜியின் 'நிர்மாண வேலைத்திட்டம்' (1941 பதிப்பு) பக்கம் 41
† 'எங் இந்தியா' – 3—5—1928 ‡ 'ஹரிஜன்' - 28—7—1946
§ 'ஹரிஜன்' – 13—3—1937 ¶ 'எங் இந்தியா' – 3—5—1928

மில்காரர்களும் சரி, மற்ற வர்த்தக ஸ்தாபனங்களும் சரி, தங்களிடம் வேலை செய்பவர்களைத் தமது பிள்ளைகள் போல், நடத்த வேண்டும் என்பதில் இரு விதமான அபிப்பிராயங் களுக்கு இடமேயில்லை. முதலாளி, தொழிலாளி ஆகிய இருவருக்கு மிடையே உள்ள உறவு, எஜமான், வேலைக்காரன் என்ற உறவாக மட்டும் இருக்கக்கூடாது.*

தங்களிடம் வேலை செய்பவர்களுடைய வாழ்க்கைத் தேவை களுக்கு வேண்டியதைக் கொடுப்பதைத் தவிரத் தங்களுக்கு வேறு ஒரு கடமையும் இல்லை என்று பலர் நினைக்கிறார்கள். இத் தகைய நல்லெண்ணமுள்ள தேயிலைத் தோட்டக்காரர் ஒருவர், காந்திஜிக்கு எழுதிய ஒரு கடிதத்தில், ஒத்துழையாமை இயக் கத்தை நிறுத்திவிட்டு, தொழிலாளர்களின் நிலைமையை உயர்த்து வதற்குச் சட்டபூர்வமான வழிகளைப் பின்பற்றுமாறு கேட்டுக் கொண்டிருந்தார். அவரைப் பற்றிக் காந்திஜி பின்வருமாறு எழுதினார் :

"இந்தக் கடிதம் எழுதியவரைப் போன்றவர்களை நேட்டாலிலும் சம் பாரணிலும் நான் பார்த்திருக்கிறேன். அவருடைய எண்ணம் நல்லதுதான். ஆனால், கால்நடைப் பிராணிகளை அன்புடன் நடத்தும் ஒருவருக்கும், அவருக் கும் வித்தியாசமில்லை என்பது அவருக்குத் தெரியாது. மனிதர்கள் கால் நடைகளைப் போல் நடத்தப்படலாம் என்பதை ஒப்புக்கொண்டுவிட்டால் போதும், பல ஐரோப்பிய மானேஜர்கள், மிருகங்களைக் கொடுமையாக நடத் தக்கூடாது என்பதற்காக உள்ள சங்கத்திலிருந்து நற்சாட்சிப் பத்திரம் பெற்று விடுவார்கள். இலவசமான மருந்து, இலவசமான வைத்திய உதவி, குடியிருப்பதற்கு இலவசமாக வீடு, இலவசமான மேய்ச்சல் பூமி ஆகியவை களெல்லாம், 'கூலி'யை என்றென்றும் அடிமையாகவே வைத்திருப்பதற்கான தந்திரங்கள் என்பது அனுபவத்திலிருந்து எனக்குத் தெரியும். முழுச் சம்பளம் கொடுத்து வைத்திய உதவிக்கும், குடியிருப்பு வீட்டுக்கும் தொழிலாளரிடம் பணம் வாங்கிக்கொண்டால், தொழிலாளிக்கு இன்னும் அதிக சுதந்திரம் இருக்கும்."†

வைத்திய வசதி போன்ற உதவிகள் இலவசமாக இருக்கக் கூடாது என்பது காந்திஜியின் அபிப்பிராயம். அந்த உதவிகள் உண்மையானவைகளாகவும், தேவை ஏற்படும்போது உடனே கிடைக்கக்கூடியவைகளாகவும், மலிவாகவும் இருக்க வேண்டும். இலவசமான உதவியளிப்பது, உதவி பெறுபவரின் உறுதியைக் குலைத்துவிடக்கூடும். சில சமயங்களில் இலவச உதவி என்பது பெயருக்குத்தான் அளிக்கப்படுகிறது; சில சமயங்களில் அது துஷ்பிரயோகமும் செய்யப்படுகிறது. இந்த இரு தீமைகளி லிருந்துமே அவர்கள் காப்பாற்றப்பட வேண்டும்.‡

**தொழிலாளர்களின் உரிமைகளும், கடமைகளும் :** தொழி லாளர்களின் உரிமைகள், கடமைகள் என்ன? இதைச் சுலபமாகப் புரிந்துகொள்ள முடியும். அதாவது, ஒரு குறிப்பிட்ட தொழிலில்

---

* 'எங் இந்தியா' – 3—5—1928

† 'எங் இந்தியா' – 29—6—1921

‡ 'எங் இந்தியா - 3—5—1928

எவ்வளவு அதிக ஊதியம் கொடுக்க முடியுமோ அதைப் பெற அவர்களுக்கு உரிமையுண்டு; தாம் பெறும் ஊதியத்துக்குத் தம் மால் இயன்றவரையில் திறமையாக வேலை செய்ய வேண்டியதும் அவர்களுடைய கடமையாகும்.*

தொழிலாளர்களுக்கு உண்மையாகத் தீர்க்கவேண்டிய பசி, சில கவளங்கள் அன்னத்திற்காக அல்ல. சுயமரியாதையுடன் சுய உரிமைகள் உள்ள பிரஜைகளாக வாழ்வது, மனிதர்களாக நேர்மையாக நடத்தப்படுவது, சுத்தமான, சுகாதார முறைகளைக் கற்றுக்கொள்ளுவது, பயமில்லாமலிருப்பது, சிக்கனம், சுறு சுறுப்பு, கல்வி ஆகியவைகளே அவர்களுடைய தேவைகளாகும்.† அவர்கள், பண்பாடுகளைக் கற்றுக்கொள்ளவேண்டும்; பரிசுத்தம், நாணயம், நேர்மை ஆகிய குணங்களைப் பழகிக்கொள்ள வேண்டும். அதற்கு விடாமுயற்சியும், தன்னல மறுப்பும், பொறுமையுடன்கூடிய புத்திசாலித்தனமான உழைப்பும் வேண்டும்.

**வேலை நிலைமைகள்:** ஆள் சேர்த்தல், வேலை நேரம், பாது காப்பு, தேக ஆரோக்கியம், குடியிருப்பு வசதி போன்ற முக்கிய மான தொழிலாளர் பிரச்னைகளில் உள்ள தீமைகளைப் பற்றியும் காந்திஜி சில கட்டுரைகள் எழுதினர். கங்காணிகள் மூலம் தொழி லாளர்களை அமர்த்துவதைக் காந்திஜி ஆட்சேபித்தார். எப்படி யாவது தொழிலாளர்களைப் பிடிப்பதுதான் கங்காணிகளின் தொழில். ஆகையால், இம்மாதிரி மூன்ருவது மனிதன் தலையிடும் போது ஒப்பந்தத்தின் சுதந்திரம் போய்விடுகிறது. கிராமத்தி லிருந்து எப்படியாவது அவனைக் கிளப்புவதற்கு இந்த இடைத் தரகன், வேலை நிலைமையைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து பேசுவான்; முடிவில் கிராமவாசிக்கு ஏற்படுவது ஏமாற்றம்தான். ஒரு பிரதேசத்தில் வேலையில்லாத ஏழைகள் இருக்கும்போது, வெளியிலிருந்து தொழிலாளர்களைக் கொண்டு வருவது தவருகும்.‡

மிகவும் அதிகமாயிருந்த வேலை நேரத்தைக் குறைக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர். நீண்ட நேரம் வேலை செய்வதால் குறைந்த அளவில்தான் வேலை நடக்குமேயொழிய அதிகமாக வேலை நடந்துவிடுவதில்லை என்பது உலகத்தின் அனுபவம்.§ மிக நீண்ட நேரம் வேலை செய்ய வேண்டியவர்கள் அறிவுத் துறையிலோ, ஆன்மிகத் துறையிலோ அபிவிருத்தி யடைவதற்கு அவகாசம் இருப்பதில்லை. அவர்களுடைய நிலைமை மிருகத்தைப் போன்றதாகிவிட்டால் ஆச்சரியப்படுவதற் கில்லை.¶ நாமாகவே தாராள மனதுடன் அவசியமான சீர் திருத்தத்தைச் செய்வதற்குக் கொஞ்சம் துணிவும், முயற்சியும்

* 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்'—ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம், 1045

† 'ஹரிஜன்'—29—9—1946

‡ 'எங் இந்தியா'—2—9—1926

§ 'எங் இந்தியா' 22—10—1925

¶ 'எங் இந்தியா'-28—4—1920

தான் வேண்டும். இந்தச் சீர்திருத்தம் எப்படியும் வந்துதான் தீரப்போகிறது. ஆனால், நிர்ப்பந்தத்தின் மூலம் ஏற்படும்போது அதனுடைய பெருமையே போய்விடுகிறது. குறைந்த நேரம்தான் வேலை செய்ய வேண்டும் என்பது ஓர் உலக இயக்கம். யாரும் அதை நிறுத்த முடியாது.* 1920-ல் காந்திஜி செய்த ஒரு பிரசங்கத்தில், தொழிலாளர்களின் வேலை நேரத்தை 12 மணியிலிருந்து 10 மணியாகக் குறைக்க வேண்டும் என்று அகமதாபாத் மில்காரர்களைக் கேட்டுக்கொண்டார். தொழிலாளர்களும் 12 மணி நேரத்தில் செய்த வேலையை 10 மணி நேரத்தில் செய்து முடித்துவிடவேண்டும் என்று வற்புறுத்தினர்.†

அளவுக்கு மீறிய வேலை என்ற தீமையினால் சில தொழிலாளர்கள் கஷ்டப்படுகிறார்கள். ரிக்ஷா இழுப்பவர்களுக்கு இது முக்கியமாகப் பொருந்தும். இவர்கள் மிகவும் கஷ்டப்பட்டு உழைப்பதால் நான்கு ஐந்து வருடங்களில் இருதயம் பாதிக்கப்பட்டு இறந்துவிடுகிறார்கள். ஒரு மலை வாசஸ்தலத்தில் ரிக்ஷா இழுப்பவர்களின் நிலைமையைப் பார்த்த பிறகுதான் காந்திஜி இந்த அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். இவர்கள் தம் சக்தியை மீறி உழைக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடியாமல், ரிக்ஷா உபயோகிப்பவர்கள் அவ்வளவு இருதயமற்றவர்களா என்று ஆச்சரியப்பட்டார்.‡

குழந்தைகளை வேலைக்கு அமர்த்தல்: தொழிற்சாலைகளில் குழந்தைகளை வேலைக்கு அமர்த்தக்கூடிய வயதை உயர்த்த வேண்டும் என்றும் கோரினர்.§

"சிறு குழந்தைகள் பள்ளிக்கூடங்களிலிருந்து அகற்றப்பட்டு, சம்பாதிப்பதில் ஈடுபடுத்தப்படுவது தேசீய அவமானத்தின் அடையாளமாகும். எந்தத் தேசமும் தன்னுடைய குழந்தைகளை இப்படி துஷ்பிரயோகம் செய்தல் கூடாது. 16 வயது வரையிலாவது அவர்கள் பள்ளிக்கூடங்களில் இருக்க வேண்டும்."¶

பாதுகாப்பு: இங்கிலாந்தில் தொழிலாளர்கள் கவனிக்கப்படும் விதத்தைப் பாராட்டிக் காந்திஜி ஒரு கட்டுரை எழுதினர். அசுத்தமான அல்லது அபாயகரமான தொழில்களில் ஈடுபட்டுள்ள சிப்பந்திகளை மட்டுமல்லாமல், பொது மக்களையும் பாதுகாப்பதற்கு மிகவும் கவனமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் ஹரிஜனத் தொழிலாளர்கள் நடத்தப்படும் விதத்தைக் காந்திஜி அதோடு ஒப்பிட்டார். அசுத்தமான வேலைகளைச் செய்யும் 'தீண்டத் தகாதவர்களை' பாதுகாப்பதற்கு இந்தியாவில் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்றும், இந்த வேலைகளைச் செய்பவர்கள் தம்மிடமுள்ள தூசி, தும்பட்டைகளைப் பொது ஜனங்களிடமும் பரவ விட்டுவிடாமல் தடுப்

* 'எங் இந்தியா'-22—10—1925
† 'எங் இந்தியா'-25—7—1929
‡ 'ஹரிஜன்'-16—6—1946
§ 'எங் இந்தியா'-25—7—1959
¶ 'ஹரிஜன்'-28—4—1920

பதற்காக, பொதுஜனங்களைப் பாதுகாப்பதற்கும் வழி செய்ய வேண்டும் என்றார். தோட்டிகள் உடம்பில் படாமல் அசுத்தங்களை அகற்றுவதற்காக மலத் தொட்டிகள், துடைப்பங்கள் இருக்க வேண்டுமென விதிகள் இயற்ற வேண்டும் என்றும், அவர்கள் வேலை செய்யும்போது அணிந்துகொள்ளுவதற்கெனத் தனி ஆடைகள் இருக்க வேண்டும் என்றும் கோரினர். இப்போதுள்ள நிலைமையில் சுகாதாரமின்மை அதிகமாய் இருக்கிறது. வேலை மிகக் குறைவாகவே நடக்கிறது. அத்துடன் லஞ்சம், கெட்ட பழக்கங்கள் அதிகமாக இருக்கின்றன. ஆகையால், எப்படியாவது வேலை வாங்க வேண்டும் என்பதற்குப் பதிலாக, இந்தச் சுகாதார வேலையை மனிதாபிமானத்துடன் மேற்பார்வை செய்வதற்கு இன்ஸ்பெக்டர்களுக்கும் மேஸ்திரிகளுக்கும் பயிற்சியளிக்க வேண்டும்.*

**குறைந்த பட்ச குடியிருப்பு வசதி :** கைத்தொழில் ஸ்தாபனங்கள், 30, 40 சத விகிதம் கொழுத்த லாப விகிதங்கள் கொடுக்கின்றன. ஆனால், தங்களிடம் மிகக் குறைந்த சம்பளத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குக் குடியிருப்பு வசதிகள் செய்து கொடுப்பதில்லை. சில இடங்களில், அவர்களுக்கு லாபம் சம்பாதித்துக் கொடுப்பவர்கள் பரிதாபமான குடிசைகளில் வசிக்கிறார்கள். தங்களிடமுள்ள குறைந்த சம்பளக்காரர்களின் குடியிருப்பு வசதிகள் விஷயத்தில் பல நகர சபைகள் அலட்சியமாயிருக்கின்றன. மணமாகாதவர்கள், மணமானவர்கள், குழந்தைகள் உள்ள தம்பதிகள் முதலியவர்களுக்குக் குறைந்த பட்ச குடியிருப்பு வசதி செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். வேலை செய்பவர்களின் இந்த முதல் தேவையைத் திருப்தி செய்ய வேண்டியது முதலாளிகளின் கடமையாகும்.†

**ஊதியம் :** ஊதியம் பற்றிக் காந்திஜி பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். அகமதாபாத்திலுள்ள ஜவுளி மில்கள் போன்ற பெரிய கைத்தொழில்களில் ஊதிய விகிதங்கள் எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றிச் சில கட்டுரைகளில்தான் குறிப்பிட்டிருக்கிறார். மீதமுள்ள கட்டுரைகளில் குடிசைத் தொழில்கள், கைராட்டினத்தில் நூற்றல் போன்றவைகளில் குறைந்த பட்ச ஊதியம், நிர்ணயம் போன்ற விஷயங்களை விவாதித்திருக்கிறார்.

ஓர் ஊழியருக்குச் சரியான முறையில் வாழ்க்கை நடத்துவதற்குப் போதிய ஊதியம் கிடைக்கவில்லையென்றால், அத்தகைய ஊதியத்தைக் கொடுக்கும்படி முதலாளியைக் கேட்க ஊழியருக்கு உரிமை உண்டு என்று, அகமதாபாத் ஜவுளி மில் தொழிலில் ஏற்பட்டிருந்த தகராறில் மத்தியஸ்தர் தீர்ப்பளித்தார். இந்தத் துணிச்சலான கொள்கை விளக்கத்தைக் காந்திஜி வரவேற்றார்.‡ கஷ்டப்பட்டு உழைக்கும் மக்களுக்கு நியாயம் வழங்க வேண்டுமானால், அவர்களுடைய வாழ்க்கைக்குப் போது

* 'ஹரிஜன்' – 6—10—1946 † 'ஹரிஜன்'-11—7—1936
‡ 'எங் இந்தியா'-12—12—1929

மான அளவு ஊதியம் கொடுக்க வேண்டும். அவர்கள் நிர்க்கதியாய் இருப்பதை நாம் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது.[1] எந்தத் தொழிலாவது இந்தக் குறைந்த பட்ச ஊதியம் கொடுக்க முடியவில்லையென்றால் அதை மூடிவிடலாம்.[2]

குறைந்த பட்ச ஊதியம் என்றால் என்ன? (1) வருடம் பூராவும்[3] தினசரி எட்டு மணி நேரம் திறமையுடன் வேலை செய்வதற்குத் தன் உடல் நிலையைச் சரியாக வைத்துக்கொள்ளு வதற்கு வேண்டிய சீரான[4] புஷ்டியான[5] ஆகாரம் கிடைப்பதாயிருக்க வேண்டும். (2) குறைந்த பட்ச ஆடைகள் கிடைக்க வேண்டும்.[6] (3) நல்ல குடியிருப்பு வசதியும், இதர சாதாரண வசதிகளும் கிடைக்க வேண்டும்.[7]

கைராட்டினத்தில் நூல் நூற்பவர்களுக்குக் குறைந்த பட்ச ஊதியத்தை நிர்ணயித்திருப்பதைச் சிலர் ஆட்சேபித்தார்கள். அப்படிச் செய்தால், எல்லோருக்குமே குறைந்த பட்ச ஊதியம் கொடுக்க வேண்டுமென நூற்பவர்களே வற்புறுத்துவார்கள் என்றும், தொழிலாளர்களின் குறைந்த பட்ச ஊதியம் என்பது எப்படியும் விவசாயிகளின் ஊதியத்தைவிட அதிகமாயிருக்கக் கூடாது என்றும் அவர்கள் சொன்னார்கள்.[8] முதலாவது வாதம், முதலாளிகள், அடிமை, சொந்தக்காரர்கள் ஒவ்வொருவருமே சொல்லும் வாதமாகும். இரண்டாவது வாதம் சம்பந்தப்பட்ட வரையில், விவசாயிகளுக்குக் குறைந்த பட்ச ஊதியம் என்று எதுவும் கிடையாது என்றும், விவசாயிகளின் நிலைமையை ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்ளக்கூடாது என்றும் காந்திஜி பதிலளித்தார். நிலத்திலிருந்து விவசாயிக்குக் கிடைப்பது அவன் உயிர் வாழ்வதற்கோ, தன்னுடைய வாரப் பகுதியைச் செலுத்து வதற்கோகூட போதுமானதாயில்லை.[9] அகில இந்திய சர்க்கா சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் போன்ற பரோபகார ஸ்தாபனங்கள், குறைந்த விலையில் வாங்கி, அதிக விலையில் விற்பதென்ற வியாபாரக் கொள்கையைப் பின்பற்ற முடியாது. ஏனெனில், மலிவாகக் கிராமங்களில் சாமான்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்பது அவர்களுடைய நோக்கமல்ல. வேலையில்லாத கிராமவாசிகளுக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் கிடைக்கும்படி வேலையளிப்பதே அந்த ஸ்தாபனங்களின் நோக்கமாகும்.[10] ஆகவே, விவசாயிக்கு அன்றாட உணவு கிடைப்பதற்கான வழியைச் செய்வது ஒன்றுதான் சரியான முறையாகும். அதற்குக் குறைவாக எதையும் கொடுக்க முயற்சி செய்வது குற்றமாகும்.[11]

---

1 'ஹரிஜன்'-13-7-1935
2 'ஹரிஜன்'-16-1-1937
3 'ஹரிஜன்'-31-8-1935
4 'ஹரிஜன்'-31-8-1935
5 'ஹரிஜன்'-16-1-1937
6 'ஹரிஜன்'-16-1-1937
7 'எங் இந்தியா'-12-11-1911
8 'ஹரிஜன்'-4-1-1935
9 'ஹரிஜன்'-14-1-1935
10 'ஹரிஜன்'-13-7-1935
11 'ஹரிஜன்'-14-1-1935

கைராட்டினத்தில் நூற்பது, மற்றும் இதரக் கிராமக் கைத் தொழில்கள் முதலியவைகளுக்கு அகில இந்திய ரீதியில் ஒரு குறைந்த பட்ச ஊதியத்தை நிர்ணயிப்பதே காந்திஜிக்கு மிகவும் கஷ்டமான பிரச்னையா யிருந்தது. திறமையுள்ள ஒரு வேலைக் காரன் கஷ்டப்பட்டு எட்டு மணிநேரம் வேலைசெய்தால், அந்த உற்பத்தி எவ்வளவு இருக்கும் என்பதை மதிப்பிட்டு, அதற்கு எட்டணு ஊதியம் என்று நிர்ணயித்தார்.*

பீகாரில் ராட்டினத்தில் நூற்கும் ஒருவர், குஜராத்தில் நூற்கும் ஒருவரைவிட ஏன் குறைந்த ஊதியம் பெற வேண்டும் என்று காந்திஜி நினைத்தார். வாழ்க்கைத் தரம் மாறுபட்டிருப்பதால் வெவ்வேறு மாகாணங்களில் விலைகள் வேறு விதமாயிருக்கும் என்பது உண்மையே. ஆனல், அகில இந்திய சர்க்கா சங்கம் அதை அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது. அவை நியாயமில் லாமல் இருந்தால் மாற்றியாக வேண்டும்.†

*1930*-ஐ அடுத்த வருடங்களில் கிராமத்தில் வேலை செய்யும் ஒருவருக்குத் தினசரி ஊதியம் எட்டணு என்பது மிகக் குறை வானதல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண் டும். அப்போது நாட்டில் தொழிற்சாலையில் வேலை செய்பவர் களுக்குக் கிடைக்கும் ஊதியம் அநேகமாக அவ்வளவுதான். மூன்று, நான்கு வருடங்களுக்குள் அகில இந்திய சர்க்கா சங்கம் ஊதியத்தைப் படிப்படியாக எட்டணுவுக்கு உயர்த்த முயற்சி செய்தது. ஆனல், அந்தச் சோதனை தோல்வியடைந்தது. தோல்வியின் காரணங்களை அலசிப் பார்த்துக் காந்திஜி பின்வரு மாறு எழுதினர் :

"சாதாரணமாக, கிராமங்களில் வேலை செய்யும் யாரும் எட்டு மணி நேர வேலைக்கு எட்டணு சம்பாதிப்பதே இல்லை. மற்றவர்களுக்கும் அதே மாதிரி கிடைக்காவிட்டால் நூற்பவர்கள் மட்டும் எட்டணு சம்பாதிக்க முடியாது. நிலை மையில் பெரும் மாறுதல் ஏற்பட்டாலொழிய எல்லோருக்கும் தினசரி எட்டணு ஊதியம் கொடுப்பதற்கு, வாங்கும் வகுப்பினரிடம் பணமில்லை. வருமானம் அளிக்காத ராணுவச் செலவின் கடும் சுமை தேசத்தைப் பிழிந்து உறிஞ்சிவிடு கிறது. இத்துடன் அளவுக்கு மீறிச் சம்பள விகிதம், அதற்கேற்ற பென்ஷன் கள், வெளிநாடுகளில் செலவிடப்படும் பணம் முதலியவைகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். மனிதனை அரித்துத் தின்னும் வறுமைக்கு உள்நாட்டிலேயே வேறு காரணங்களும் இருக்கின்றன."‡

இந்தக் காரணங்கள் எல்லாம் முக்கியமானவையே. ஆயினும், தினசரி எட்டணு ஊதியம் என்ற லட்சியத்தை ஏன் அடைய முடியவில்லை என்பதை இவை பூராவாக விளக்கவில்லை. கதரின் விஞ்ஞானத்தைப் பற்றிய அறியாமைதான், லட்சியத்தை அடைய முடியாததற்குக் குறிப்பிடத்தக்க முக்கியமான காரணம் என்று ஏற்கனவே ஒரு கட்டுரையில் அவர் எடுத்துக் காட்டி

* 'ஹரிஜன்'–13—7—1935 † 'ஹரிஜன்'-6—7—1935
‡ 'ஹரிஜன்' - 26—8—1939

யிருந்தார். கிராமங்களில் சுற்றப்படும் கைராட்டினம், திறமை யான ஓர் உற்பத்திச் சாதனமல்ல. ஆகையால், அது நூற்பவருக்கு திருப்திகரமான ஓர் ஊதியத்தை அளிக்க முடியவில்லை. இன்றும் கூட இதே நிலைமைதான் இருக்கிறது. அதனால்தான் கைராட்டினத்தின் திறமையை இன்னும் அதிகப்படுத்துவது பற்றி அகில இந்திய கதர் போர்டு தீவிரமாக யோசிக்க வேண்டியிருக்கிறது. ஒரு புது மாதிரியான ராட்டினத்தைப் போர்டு தயாரித்திருக்கிறது. இந்தியா பூராவிலும் 250-க்கு மேற்பட்ட இடங்களில் இது சோதனை செய்யப்பட்டு வருகிறது. இந்தச் சோதனை வெற்றி பெற்றால் கைராட்டினத்திற்கு ஏதாவது எதிர்காலம் இருக்கும். கிராமவாசிக்கு நம்பிக்கையளிக்கும் ஓர் அம்சமாகவும் இருக்கும்.

ஒவ்வொரு தொழிலாளிக்கும் குறைந்தபட்ச ஊதியம் கிடைத்து வருவதாக வைத்துக்கொள்ளுவோம். பிறகு, திறமைக்குத் தகுந்தவாறு ஊதியத்தில் மாறுதல் இருக்கக்கூடாது என்று அர்த்தமா? புத்திசாலித்தனமான ஒரு தொழிலாளி அதிகமாகச் சம்பாதிப்பதைக் காந்திஜி எதிர்க்கவில்லை என்பதை ஏற்கனவே பார்த்திருக்கிறோம். சரித்திரபூர்வமான காரணங்களால் ஏற்பட்டதும், இன்றைய நிலைமைகளுக்குச் சம்பந்தமில்லாததுமான அர்த்தமில்லாத வித்தியாசங்களை அவர் ஒழிக்க விரும்பினர். ஒரு மணி நேரம் நூற்பதற்குக் கிடைக்கும் ஊதியம், ஒரு மணி நெய்தலுக்குக் கிடைப்பதைவிடக் குறைவாயிருப்பதற்குக் காரணமில்லை. சாதாரணமாக, நெய்வதற்கு வேண்டியதைவிட நூற்றலுக்கு இன்னும் அதிகத் திறமை வேண்டும். சாதாரண நெய்தல் முற்றிலும் யந்திர வேலையைப் போன்றதே. ஆனால், சாதாரணமாக நூற்பதற்கும் கை லாவகம் வேண்டும். ஆனால், நூற்பவருக்கு ஒரு மணிக்கு ஒரு பைசாதான் கிடைத்தது; எனினும், நெய்பவருக்குக் குறைந்த பட்சம் ஆறு பைசா கிடைத்தது. பஞ்சு அடிப்பவருக்குக்கூட கிட்டத்தட்ட நெய்பவருக்குக் கிடைத்த அளவு கிடைத்தது. இத்தகைய நிலைமைக்குச் சரித்திரபூர்வமான காரணங்கள் இருந்தன. ஆனால், சரித்திரபூர்வமான காரணங்கள் என்பதனால் அவை நியாயமாகிவிட முடியாது. ஆகையால், தன்னிடமுள்ள எல்லா ஊழியர்களின் ஊதியங்களையும் சர்க்கா சங்கம் சீர்ப்படுத்த வேண்டியிருந்தது. இதற்காக நெசவாளர்கள் தம்முடைய ஊதியத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்க வேண்டியிருந்தது; இந்தச் சமப்படுத்தும் முறைக்கு நெசவாளர்கள் தாமாகச் சம்மதிக்காவிட்டாலும்கூட அவர்களைக் கேட்க வேண்டியிருந்தது.*

**சட்டத்தின் எல்லை :** தொழிலாளர்களின் நிலைமையை உயர்த்துவதற்கான முறைகளில் சட்டம் இயற்றுவதும் ஒன்றாகும். ஆனால், அதற்கும் ஓர் எல்லைக் கோடு உண்டு. பொதுஜன அபிப்பிராயம் பக்குவமடைவதற்கு முன்பு சட்டமியற்றுவது

* 'ஹரிஜன்' - 16—7—1935

பயனற்றதேயாகும். தொழிலாளர்களும் தமது குடும்பத்தினரே என்று முதலாளிகள் கருத ஆரம்பிக்க வேண்டும், அல்லது தமது உரிமைகளை உணர்ந்து அவற்றைப் பெறுவதற்கான முறைகளைத் தொழிலாளர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். அதுவரையில் அவர்கள் தமது நிலைமையை அபிவிருத்தி செய்துகொள்ள முடியாது.*

**தொழிலாளர் விழிப்புற வேண்டும் :** ஒற்றுமையாகச் சேர்ந்து காரியங்கள் செய்யும் கலையை முதலாளிகள் அறிந்திருப்பதால் அவர்கள் தொழிலாளர்களை அடக்கியாள முடிகிறது.† தம்முடைய நிலைமையை உயர்த்திக்கொள்ளுவதற்குத் தொழிலாளர்களும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள ஆரம்பிக்க வேண்டும். ரூபாயைப் போலவே, வேலை செய்யும் சக்தியும் மூலதனம்தான் என்பதை அவர்கள் அறிந்தாக வேண்டும். ஒரு துண்டு உலோகமோ, அல்லது குறிப்பிட்ட ஓர் உற்பத்தியோதான் மூலதனம் என்று நினைப்பது தவறு. உண்மையில், உலோகத்தினால் அடிக்கப்பட்ட காசைப் போலவே, வேலை செய்யும் சக்தியும் பணம்தான். மூலதனம் சக்தியைக் குறிக்கிறதென்றால், வேலையும் அப்படித்தான். சக்தியை ஆக்க வேலைகளுக்கோ, அழிவு வேலைகளுக்கோ உபயோகிக்கலாம். இரண்டும் ஒன்றையொன்று நம்பியிருக்கிறது. தொழிலாளி தன் பலத்தை உணர ஆரம்பித்தவுடன் முதலாளியின் அடிமையாயிருப்பதற்குப் பதிலாக அவருடன் சமமாகப் பகிர்ந்துகொள்ளும் நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. அகிம்சையை ஏற்றுக்கொள்வதன் மூலம்தான் அந்த உணர்வு ஏற்பட முடியும். பெரும் அளவில் உள்ள தொழிலாளர்களுக்கு இம்மாதிரி விஷய அறிவை ஊட்டுவது தாமதமான முறைதான். ஆனால், அதுதான் நிச்சயமான வழியாகையால் துரிதமான வழியாகவும் இருக்கிறது.‡

**தொழிலாளர் கதியற்றவர்களா? :** முதலாளிகள் விஷயத்தில் தாங்கள் கதியற்றவர்கள் என்று தொழிலாளர்கள் நினைப்பது பெரிய மூடநம்பிக்கையாகும்.§ பயிற்சியின் மூலமும், புத்திசாலித்தனமான ஒத்துழைப்பின் மூலமும் தமது நலன்களுக்காகத் தாம் என்ன செய்துகொள்ள முடியும் என்பதைத் தொழிலாளர்கள் தெரிந்துகொண்டால், தாம் வேலை செய்யும் ஸ்தாபனத்தின் நிர்வாகியையும், பங்குதாரர்களையும் போலவே தாமும் அந்த ஸ்தாபனத்தின் உரிமையாளர்கள் தாம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளுவார்கள்.¶ தொழிலாளர்கள் விஷய அறிவு பெறாமலே இருந்து வந்ததால், சொன்னபடியெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தார்கள்; அல்லது முதலாளிகளின் பொருள்களையும் யந்திரங்களையும் அழிப்பது, அல்லது முதலாளிகளையே கொன்றுவிடுவது ஒரு நல்ல வழி என்று அகம்பாவத்துடன் நினைக்கவும்

* 'எங் இந்தியா' - 29—6—1921
† 'ஹரிஜன்'-7—9—1947
‡ 'எங் இந்தியா' – 26—3—1931
§ 'ஹரிஜன்' – 3—7—1937
¶ 'ஹரிஜன்' - 13—6—1936

ஆரம்பித்துவிட்டார்கள். பலாத்காரம் அவர்களை ஒருநாளும் காப்பாற்ருது. தமக்குள்ளாகவே ஒத்துழைக்கும் புத்திசாலித்தனம் தொழிலாளர்களுக்கு ஏற்பட்டுவிட்டால், கௌரவமான சமத்துவத்துடன் முதலாளிகளும் ஒத்துழைப்பு அளிப்பார்கள். தொழிலாளர்கள், விஷயங்களைத் தெரிந்துகொண்டு ஒன்று சேர்ந்து தமது பலத்தை உணர ஆரம்பித்துவிட்டால் எந்த முதலாளித்துவமும் அவர்களை அடக்கியாள முடியாது. விஷய அறிவு பெற்று கட்டுப்பாடுடன் உள்ள தொழிலாளர்கள், தாமே நிபந்தனைகளை விதிக்க முடியும்.

**தொழிலாளர்கள் தம் உரிமைகளைப் பெறுவது எப்படி ? :** தொழிலாளர்கள் எப்படித் தமக்குரிய உரிமைகளைப் பெற முடியும்? அவர்கள் தமக்குள்ளாகவே சங்கங்கள் அமைத்துக் கொள்வதுதான் இதற்கு அத்தியாவசியமான முதல் படியாகும். ஆயினும், வேறு சில அம்சங்களும் கவனிக்கப்படாவிட்டால், சங்கமே அடிமைத்தனத்திற்கு ஒரு காரணமாகிவிடக்கூடும் என்பதை அனுபவத்தில் பார்த்திருக்கிறோம். இந்த அம்சங்கள் என்ன ?

(1) ஒவ்வொருவரும் தன் சுயநலத்தைக் கருதாமல், மற்ற தொழிலாளர்களின் நலன்களுக்குத் தான் ஒரு தருமகர்த்தா என்று நினைக்க வேண்டும். எவ்வளவுதான் ஆத்திரமூட்டப்பட்டாலும் அவர் சாத்விகமாகவே இருக்க வேண்டும்.

(2) தான் ஒரு மனிதன் என்ற பெருமையை அவர் உணருவதாயிருந்தால் குடி, சூதாட்டம் போன்ற கெட்ட பழக்கங்களை விட்டுவிட வேண்டும். குடி போதையில் இருப்பவன் மிருகத்தையொத்தவனுகிவிடுகிருன். குடி என்ற சாபக்கேடு மனிதனின் உள்ளத்தையே அழுக வைத்துவிடுகிறது. புலனடக்கத்துடனும், திருமணத்தின் புனிதத்தை மீருமலும் வாழ வேண்டும். அடிப்படையான தார்மிக நியதிகளைப் பின்பற்றுவது சாத்தியமில்லாத அளவுக்குக் குறைந்த ஊதியத்திற்கு அலுவலை செய்வதைவிட அவர் பட்டினி கிடப்பதே நல்லது.*

வெளித் தாக்குதல்களிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக மட்டுமின்றி, தம்மைத் தாமே திருத்திக் கொள்ளுவதற்கும் தொழிலாளர்கள் தமது சங்கங்களை உபயோகித்துக்கொள்ள வேண்டும். சுத்தமான வீடுகள், சுத்தமான உடல்கள், சுத்தமான மனம், சுத்தமான உள்ளம் ஆகியவை முக்கியமானவை. இதற்கேற்ற முறையில் அவர்களுக்கு இன்னும் அதிக ஊதியமும், குறைந்த வேலையும் இருக்க வேண்டும். இது லட்சியமல்ல என்ருல், அதிக ஊதியமும், குறைந்த வேலை நேரமும் பெறுவதற்கு முயற்சி செய்வது பாவமாகும்.†

---

* டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா'–இரண்டாவது தொகுப்பு–பக்கம் 393

† 'எங் இந்தியா'–5—8—1920

உரிமைகள், சலுகைகளை வற்புறுத்துவது முற்றிலும் சரியானதுதான். ஆனால், ஒவ்வொரு உரிமையுடனும் ஒரு கடமையும் இருக்கிறது என்பதை அறிவது மிக முக்கியமாகும். கடமை இல்லாத உரிமை எதுவுமே உலகத்தில் கிடையாது. போதுமான அளவு ஊதியம், முதலாளிகள் மனிதாபிமானத்துடன் நடந்து கொள்ளுதல், சுகாதாரமான குடியிருப்பு வசதிகள் போன்றவைகளை வற்புறுத்துவது நியாயம்தான் என்றாலும், தன்னுடைய முதலாளியின் தொழிலைத் தன்னுடைய தொழிலாகவே பாவித்து, அதில் மனப்பூர்வமாக முழுக் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகும் என்பதையும் தொழிலாளி உணர வேண்டும்.*

**சாத்விக நடவடிக்கைகளுக்குப் பயிற்சி:** துரதிருஷ்டவசமாகத் தொழிலாளர்கள், விவசாயிகள் இருவருமே சாத்விக நடவடிக்கைகளுக்குப் பயிற்சி பெறவில்லை. எப்போதும் அவர்கள் பரபரப்பான மனப்பான்மையுடன் இருக்கும்படியாக வைக்கப் பட்டிருக்கிறார்கள். பலாத்காரமான மோதலில் ஈடுபடாமல் நிறைவேற முடியாத ஆசைகளும் அவர்களுக்கு ஊட்டப்படுகின்றன. சரியான பயிற்சியின் மூலம் விவசாயிகள், தொழிலாளர்கள் இருவரையுமே பலனளிக்கத்தக்க சாத்விக நடவடிக்கைகளுக்குத் தயார் செய்ய முடியும். நீங்கள் சரியான முறையில் ஸ்தாபன ரீதியாக வேலை செய்தால், உங்களுடைய உழைப்பின் மூலம் முதலாளிகளின் பணத்தைவிட அதிகமாக உங்களுக்குச் செல்வமும், வசதிகளும் கிடைக்கும் என்பதை அவர்கள் உணரச் செய்ய வேண்டும். நிதி வசதிகளைத் திரட்டுவதற்கு முதலாளிகளுக்குத்தான் வாய்ப்பு இருக்கிறது. ஆனால், தொழிலாளர்களுக்குத் தம்மிடையேகூடக் கட்டுப்பாடு இல்லை. தொழிலாளர் தலைவர்கள் உண்மையாக வேலை செய்திருந்தால், சாத்விகத்தின் மூலம் கிடைக்கக்கூடிய அசைக்க முடியாத சக்தியின் தன்மையைத் தொழிலாளர்கள் உணர்ந்திருப்பார்கள். ஆனால், அதற்குப் பதிலாக தங்களுடைய கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு நிர்ப்பந்த முறைகளை நம்பியிருக்கும்படி தொழிலாளர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இப்போது தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சி, அவர்களை அறியாமையிலேயே விட்டுவைத்துவிடுகிறது. இதன் பலனாகப் பலாத்காரம்தான் இறுதி வழி என்று அவர்கள் நினைக்க ஆரம்பித்து விடுகிறார்கள்.†

**ஓர் உதாரண சங்கம்:** அகமதாபாத் தொழிலாளர்களுக்குக் காந்திஜிதான் சங்கம் அமைத்துக் கொடுத்தார். அகமதாபாதிலுள்ள ஜவுளித் தொழிலாளர்கள் சங்கத்தை இந்தியா பூராவிலுமே ஓர் உதாரணமாகப் பின்பற்றலாம் என்று காந்திஜி அபிப்பிராயப்பட்டார்:

"அது முற்றிலும் அகிம்சையையே அஸ்திவாரமாகக் கொண்டதாகும். அதனுடைய சரித்திரத்தில் அதற்குத் தோல்வியே ஏற்பட்டதில்லை. ஆடம்

---

* ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' 2-வது தொகுப்பு—பக்கம் 393, 394

† 'ஹரிஜன்'-29—7—1939

பரம் எதுவுமில்லாமல் அதனுடைய பலம் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்திருக்கிறது. அதற்கு ஆஸ்பத்திரி இருக்கிறது. மில் தொழிலாளர்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களிருக்கின்றன. வயது வந்தவர்களுக்கு வகுப்புகள் நடத்தப்படுகின்றன. சொந்தமாக அச்சுக்கூடம் இருக்கிறது; கதர்க் கடை இருக்கிறது. குடியிருப்பு வீடுகளும் இருக்கின்றன. அநேகமாக எல்லாத் தொழிலாளர்களுமே வோட்டர்கள்; தேர்தலின் போக்கை அவர்களே நிர்ணயிக்கிறார்கள். மாகாண காங்கிரஸ் கமிட்டியின் முயற்சியின் பேரில் அவர்கள் வோட்டர்கள் ஜாப்தாவில் சேர்க்கப்பட்டார்கள். காங்கிரஸின் கட்சி அரசியலில், அந்த ஸ்தாபனம் பங்கெடுத்துக் கொண்டதேயில்லை. நகர சபையின் கொள்கையை அது உருவாக்குகிறது. முற்றிலும் சாத்விகமாகவே இருந்து பல வேலை நிறுத்தங்களை அது நடத்தி வெற்றி பெற்றிருக்கிறது. மில் சொந்தக்காரர்களும் தொழிலாளர்களும் பெரும்பாலும் தம்மிச்சையான மத்தியஸ்தத்தின் மூலமே தமது உறவுகளைச் சீர்ப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்."*

காந்திஜி இஷ்டப்படுவதாயிருந்தால், இந்தியாவிலுள்ள எல்லாத்தொழிலாளர் சங்கங்களையும் அகமதாபாத் சங்கத்தைப் போலவே அமைத்துவிடுவார். முதலாளிகளுக்கும், தொழிலாளர்களுக்குமிடையே ஏற்படும் பிரச்னைகளை இந்தத் தொழிலாளர் சங்கத்தின் மூலம் சாத்விகமான முறையில் தீர்த்துவைக்க காந்திஜி முயற்சி செய்து வந்திருக்கிறார்.†

**சம்பாரணில் விவசாயிகள் இயக்கம்:** விவசாயிகள் இயக்கத்தைக் காந்திஜி நடத்தும் விதத்தை அறிய விரும்புபவர்கள் சம்பாரண் சத்தியாக்கிரக இயக்கத்தை ஆராய்ந்து பார்க்கலாம். இந்தியாவில் இங்கேதான் முதல் முதலாகச்சத்தியாக்கிரக இயக்கம் பரீட்சித்துப் பார்க்கப்பட்டது. "இது ஒரு பெரிய சர்வஜன இயக்கமாகிவிட்டது; ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் அது முற்றிலும் சாத்விக முறையிலேயே இருந்தது. இது இருபது லட்சத்திற்கு மேற்பட்ட கிஸான்களிடையே பரவியிருந்தது. நூறு வருடங்களாக இருந்துவந்த ஒரு குறிப்பிட்ட குறையைப் பிரச்னையாகக்கொண்டே இந்தப் போராட்டம் நடத்தப்பட்டது. இந்தக் குறையைப் போக்குவதற்குப் பல தடவைகளில் பலாத்காரமான போராட்டங்கள் நடந்திருக்கின்றன. ஆனால், அவை அடக்கப்பட்டுவிட்டன. ஆறு மாதங்களில் சாத்விக முறை முற்றிலும் வெற்றி பெற்றது."‡

**மற்ற கிஸான் இயக்கங்கள்:** "கேடா, பர்டோலி, போர்ஸாத் ஆகிய இடங்களில் நடந்த கிஸான் இயக்கங்களைப்பற்றிய விவரங்களைப் படித்தும் பயன் பெறலாம். இவை, எம்முடைய குறைகள் என்று கிஸான்கள் தாமே உணருபவற்றைத் தவிர, மற்ற அரசியல் காரணங்களுக்காக அவர்களை உபயோகித்துக்கொள்ள மறுப்பதுதான் வெற்றியின் ரகசியம். ஒரு குறிப்பிட்ட குறையை எடுத்துக்காட்டி, அவர்களுடைய ஒத்துழைப்பைக் கோரினால் அதை அவர்கள் புரிந்துகொள்ள முடியும். அந்த நிலைமையில் அகிம்சையைப் பற்றிய

---

* காந்திஜியின் 'நிர்மாண வேலைத்திட்டம்' (1941 பதிப்பு) பக்கம் 20
† 'எங் இந்தியா'-14—1—1932
‡ காந்திஜியின் 'நிர்மாண வேலைத்திட்டம்' (1951 பதிப்பு) பக்கம் 20

உபதேசங்கள் அவர்களுக்குத் தேவையில்லை. தங்களுக்குப் புரியும் திறமையான ஒரு வழியை அவர்கள் பின்பற்றுகிறார்கள்; பின்னர் அவர்கள் பின்பற்றுவது அகிம்சை வழி என்பதை அவர்களுக்கு எடுத்துச் சொல்லும்போது, உடனே அதை அவர்கள் புரிந்துகொண்டு வருகிறார்கள்.''*

**தொழிற் சங்கக் கொள்கையின் அடிப்படை :** அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒவ்வொரு தொழிற் சங்கமும், எது நியாயம் என்ற உணர்வுடனேயே தமது கொள்கையை வகுத்துக்கொள்ள வேண்டுமேயொழிய என்ன செய்தால் சுலபமாகப் பிரபலமடையலாம் என்ற அடிப்படையில் கூடாது. தான் சரியான பாதையிலேயே வேலை செய்வதாக அச்சங்கம் உறுதியாக நம்பினால், மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் அல்லது செய்யவில்லை என்பதைப் பொருட்படுத்தாமல் அந்தப் பாதையிலேயேதான் போய்க்கொண்டிருக்க வேண்டும். ஹர்த்தால்கள் அல்லது வேலை நிறுத்தங்களுக்கு அவர்கள் ஏற்பாடு செய்யலாம். ஆனால், அது ராஜீயம் போன்ற காரணங்களுக்காக இருக்கக்கூடாது ; தொழிற் சங்க மெம்பர்களின் பொருளாதார நிலைமையை உயர்த்துவதற்காகவே இருக்க வேண்டும்.

## வேலை நிறுத்தங்கள்

**பிரசித்திபெற்ற 1918-ஆம் வருடத்திய வேலைநிறுத்தம் :** கட்டுப்பாடான வேலைநிறுத்தங்களில் காந்திஜி ஒரு நிபுணர். அவருடைய முதல் முயற்சி மிகவும் விரோதமான சூழ்நிலையில் தென்னாப்பிரிக்காவில் செய்யப்பட்டது. 1918-ல் நடந்த அகமதாபாத் வேலைநிறுத்தத்தில் செயல் முறையை அவர் மேலும் செம்மைப்படுத்தினார். வேலைநிறுத்தங்களை எதிர்த்து நிற்க முடியாமல் செய்துவிடலாம் என்பதை அவர் தம்முடைய அனுபவத்திலிருந்து சொல்ல முடியும்.†

இந்த வேலைநிறுத்தம் 21 நாட்கள் நடந்தது. அப்போது தொழிலாளர்களுக்காகக் காந்திஜி பல துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டார். தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்காகச் சாத்விக முறையில் ஒரு போராட்டத்தை எப்படி நடத்துவது என்பதற்கு அவை ஒரு விரிவான அகராதியைப் போல் இருக்கிறது. அகமதாபாத் மில்காரர்கள் கதவடைப்பு செய்வதற்குக் காரணமாயிருந்த சம்பவங்களும், தங்களுடைய கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டாலொழிய வேலைக்குத் திரும்பிச் செல்லுவதில்லை என்று தொழிலாளர்கள் எடுத்துக்கொண்ட சபதமும் அதில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. தம்முடைய சபதத்தை நிறைவேற்றுவதற்குத் தொழிலாளர்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும், வலுக்கட்டாயமாகத் தங்களுக்குக் கிடைத்துள்ள ஓய்வு நேரத்தை அவர்கள் எப்படிப்

---

* காந்திஜியின் 'நிர்மாண வேலைத்திட்டம்' (1941 பதிப்பு) பக்கம் 20

† 'ஹரிஜன்'-13—7—1947

பயன்படுத்திக்கொள்ள வேண்டும், தொழிலாளர்கள் தமது சபதத்தை நிறைவேற்றுவதற்குச் சங்கத் தலைவர்கள் எப்படி உதவி செய்ய வேண்டும் என்ற விவரங்கள் அதில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எது நீதி என்பதும் விவாதிக்கப்பட்டுள்ளது. தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகங்களின் வீரப் போராட்டத்தை எடுத்துச் சொல்லி, எவ்வளவு கஷ்டங்கள், நிர்ப்பந்தங்கள் வந்தாலும், ஆசைகள் காட்டப்பட்டாலும், தொழிலாளர்கள் எப்படி உறுதியாக இருக்க வேண்டும் என்பதும் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. முடிவில், இரு தரப்பினரும் வெற்றி பெற்றதற்குச் சத்தியாக்கிரகம் உதவி செய்ததும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

**வெற்றிகரமான ஒரு வேலைநிறுத்தத்திற்கான நிபந்தனைகள்:** வெற்றிகரமான ஒரு வேலைநிறுத்தத்திற்கு அவர் ஏழு நிபந்தனைகளை விதித்தார்:

(1) வேலைநிறுத்தத்திற்கான காரணம் நியாயமானதாக* இருக்க வேண்டும்; குறை இல்லாதபோது வேலைநிறுத்தம் செய்யக்கூடாது.†

(2) வேலைநிறுத்தக்காரர்களிடையே அநேகமாகக் கருத்தொற்றுமை இருக்க வேண்டும்.‡ கோரிக்கைகள், அவற்றைப் பெறுவதற்கான வழிகள் இரண்டுமே நியாயமாகவும், தெளிவாகவும் இருக்க வேண்டும். முதலாளிகளின் நிலைமையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளப் பார்ப்பது சட்ட விரோதமானதாகும்.§ தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்குவதற்கு முன்பு, மாற்ற முடியாத ஒரு குறைந்த பட்சக் கோரிக்கையை நிர்ணயித்து, அதை அறிவித்துவிட வேண்டும்.¶ தங்களுடைய ஊதியத்தில் 35 சத விகித உயர்வு கிடைத்தால் ஒழிய வேலைக்குத் திரும்புவதில்லை என்பதே 1918-ல் அகமதாபாத்தில் வேலைநிறுத்தம் செய்த தொழிலாளர்கள் எடுத்துக் கொண்ட சபதத்தின் முதல் ஷரத்தாகும். தொழிலாளர்களும், அவர்களுடைய தலைவர்களும் தமக்குள் விவாதித்து 35 சத விகித உயர்வு கோரிக்கை நியாயமானதுதான் என்று ஒப்புக் கொண்ட பிறகுதான் அப்படி முடிவு செய்யப்பட்டது.

(3) வேலைநிறுத்தம் செய்பவர்களும், அவர்களுடைய தலைவர்களும் ஒருவரையொருவர் முற்றிலும் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்.** இந்தியத் தொழிலாளர்களுக்கு இரு விதமான தலைவர்கள் இருக்கிறார்கள். ஒன்று, தொழிலாளர்களிடையே உள்ள தலைவர்கள். மற்றொன்று, தொழிலாளர் தலைவர்களுக்கு யோசனை கூறி, அவர்களை நடத்திச் செல்லும் வெளியார்கள்.

---

* 'எங் இந்தியா'-16—2—1921 † 'எங் இந்தியா'-22—9—1921

‡ 'எங் இந்தியா'-16—2—1921 § 'எங் இந்தியா'-28—4—1920

¶ 'எங் இந்தியா'-22—9—1921

** 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' — ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 1055.

இந்த இரு விதமான தலைவர்களுக்கும், தொழிலாளர்களுக்கு மிடையே பூரண கருத்தொற்றுமை இருந்தாலொழிய தோல்வி ஏற்படத்தான் செய்யும்.*

(4) பலாத்காரம் இருக்கக்கூடாது.†

(5) வேலைநிறுத்தத்தில் கலந்துகொள்ளாதவர்கள் அல்லது கருங்காலிகளைத் துன்புறுத்தவே கூடாது.‡

வேலைநிறுத்தம் என்பது பிறருடைய சூழ்ச்சிகளினால் இல்லாமல் தானாக ஏற்படுவதா யிருக்க வேண்டும். நிர்ப்பந்தமில்லாமல் வேலைநிறுத்தம் ஆரம்பமாகி யிருந்தால், காலித்தனங்களுக்கோ, சூறையிடுவதற்கோ சந்தர்ப்பமே இராது. அத்தகைய வேலைநிறுத்தத்தில் வேலைநிறுத்தக்காரர்களிடையே பரிபூரணமான ஒத்துழைப்பு இருக்கும். அது அமைதியானதாயிருக்க வேண்டும்; பலாத்காரத்தின் தோற்றமே இருக்கக் கூடாது.§ கருங்காலிகள் என்று சொல்லப்படுவோர் மீது எந்த விதமான நிர்ப்பந்தமும் இருக்கக்கூடாது. சகத் தொழிலாளர்கள் மீது இத்தகைய நிர்ப்பந்தத்தை உபயோகிப்பது, வேலைநிறுத்தக்காரர்களின் மீதே திருப்பிப் பாயத்தான் செய்யும்.¶

கருங்காலிகளை எப்படி நடத்த வேண்டும்? வேலைநிறுத்தக்காரர்கள் அவர்களுடன் சண்டை போடாமல் மன்றாடிக் கேட்டுக்கொள்ள வேண்டும். அவர்களுடைய செய்கை குறுகிய நோக்கம் கொண்டதென்றும், எல்லாத் தொழிலாளர்களின் நலன்களுக்காகவுமே தாங்கள் (வேலைநிறுத்தக்காரர்கள்) பாடுபடுவதாகவும் அவர்களிடம் சொல்ல வேண்டும். இதை அவர்கள் கேட்காமலிருக்கக்கூடும். அப்படியானால், அதைச் சகித்துக் கொள்ளத்தான் வேண்டுமேயொழிய, அவர்களுடன் சண்டை போடலாகாது.** வேலைநிறுத்த காலத்தில் எந்த விதமான கலவரமும் செய்வதில்லை, யாரையும் அடிப்பதில்லை அல்லது தாக்குவதில்லை, கொள்ளையடிப்பதில்லை, முதலாளிகளின் சொத்தைச் சேதப்படுத்துவதில்லை, யாரையும் திட்டுவதில்லை, அமைதியாகவே இருப்போம் என்று 1918-ல் அகமதாபாத் வேலைநிறுத்தத்தில் தொழிலாளர்கள் பிரதிக்ஞை செய்திருந்தார்கள். வேலைநிறுத்தம் நியாயமானதா யிருந்தால், வேலைநிறுத்தக்காரர்களைப் பணிய வைப்பதற்காக அந்தத் தொழில் ஸ்தாபனம் கருங்காலி

---

* 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' — ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4 வது பதிப்பு) பக்கம் 1045.

† 'எங் இந்தியா'-16—2—1921 'காந்திஜியின் சுயசரிதம்' 5-வது பாகம், 20-வது அத்தியாயம்.

‡ ,, ,, ,,

§ 'ஹரிஜன்' - 2—6—1946

¶ 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' — ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 1045

** 'ஹரிஜன்' - 7—11—1936

களை அமர்த்தினுல் அல்லது வேறு ஆட்சேபகரமான வழிகளைக் கையாண்டால் அதைக் கண்டிக்க வேண்டும்.*

(6) வேலைநிறுத்த காலத்தில் தொழிலாளர்கள் தம்முடைய ஜீவனத்திற்குப் பொதுஜன நன்கொடைகளையோ அல்லது தருமங்களையோ,† அல்லது பிச்சைகளையோ‡, அல்லது சங்க நிதிகளையோ நம்பியிருக்கக்கூடாது.§

பொது ஜனங்களிடமிருந்து நன்கொடைகள் அல்லது தருமங்களை எதிர்பார்த்துக் கொண்டு அல்லது சங்கத்தின் நிதிகளை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் வரையில், ஒரு வேலைநிறுத்தத்தைக் காலவரையறையின்றி நீடித்துக்கொண்டே போக முடியாத எந்த வேலைநிறுத்தமும் பூரணமாக வெற்றி பெறவும் முடியாது.¶

(7) வேலைநிறுத்தம் எவ்வளவு காலம் நீடித்தாலும் உறுதியாயிருக்க வேண்டும்; அதற்குத் தம்முடைய சேமிப்பிலிருந்தோ அல்லது தாற்காலிகமாகப் பிரயோசனமான ஏதாவது ஒரு வேலை செய்துகொண்டு அல்லது நாணயமான வேறு வேலை செய்துகொண்டு வேலை நிறுத்தக்காரர்கள் தம் ஜீவனத்தை நடத்த வேண்டும்.**

"ஒரு மில் தொழிலாளரின் வாழ்வில் எப்போதும் ஏற்றமும் இறக்கமும் இருந்து கொண்டே யிருக்கும். சிக்கனமாக வாழ்க்கை நடத்திச் சேமித்து வைப்பது இதற்கு ஒரு மாதிரியான பரிகாரம்தான்; அதைப் புறக்கணிப்பது குற்றமும் ஆகும். ஆனல், இந்தச் சேமிப்பு வெகு காலத்திற்குப் போதுமானதா யிராது. ஏனெனில், மில் தொழிலாளர்களில் பெரும்பாலோர் சம்பாதிப்பது அவர்கள் ஜீவனம் நடத்துவதற்கே போதும் போதாது என்று இருக்கிறது. மேலும், தொழிலாளர் ஒருவர் வேலை நிறுத்தம் செய்திருக்கும் போது அல்லது வேலை இல்லாமல் இருக்கும்போது வீட்டில் சோம்பி உட்கார்ந்து கொண்டிருக்க முடியாது. நிர்ப்பந்தமான சோம்பேறித்தனத்தைப் போல் ஒருவருடைய உறுதியையும், சுயமரியாதையையும் பாதிக்கக் கூடியது வேறெதுவுமில்லை. ஒரு நெருக்கடியான காலத்தில் தொழிலாளர்கள் ஜீவனம் நடத்துவதற்கு நிச்சயமான ஒரு மாற்று வேலை இருந்தாலொழிய அவர்களிடையே பந்தோபஸ்து உணர்ச்சியும், நன்னம்பிக்கையும், பலமும் வளர முடியாது."*†

**வேலைநிறுத்தக்காரர்கள் தம் நேரத்தை எப்படி செலவிட வேண்டும்?:** காந்திஜி நடத்திய எல்லா வேலைநிறுத்தங்களிலும் இன்றியமையாத ஒரு விதியை வற்புறுத்தினர். அதாவது, தொழிலாளர்கள் தம் ஜீவனத்திற்குத் தாமே வழி செய்துகொள்ள வேண்டும். தனித்தனியாகவோ அல்லது ஒருவரோடொருவர் சேர்ந்து

* 'ஹரிஜன்' – 31—3—1946 † 'எங் இந்தியா' – 22—9—1921
‡ காந்திஜியின் 'சுய சரிதை' – 5-வது பாகம், அத்தியாயம், 20
§ 'எங் இந்தியா' – 16—2—1921
¶ மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 1045
** 'எங் இந்தியா'–16—2—1921, 22—9—1921. காந்திஜியின் 'சுய சரிதை' 5-வது பாகம், அத்தியாயம் 20
*† 'ஹரிஜன்' – 3—7—1937

ஒத்துழைத்தோ அவர்கள் வேறு வேலை செய்ய வேண்டும். அது தான் வெற்றியின் ரகசியம்; தொழிலாளர்களுக்கு விஷய அறிவு ஊட்டும் ரகசியமும் அதுதான். ஓர் எஜமானிடம் வேலை செய்து, ஒரு குறிப்பிட்ட ஊதியம் பெற முடிந்தால், தம்முடைய வேலையின் மூலம் அதே ஊதியத்தை வேறு எங்கும் பெற முடியும் என்பதை அவர்கள் உணர வேண்டும். ஆகையால், வேலைநிறுத்தக்காரர்கள் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்துகொண்டு வெற்றி பெறலாம் என்று எதிர்பார்க்க முடியாது.*

காந்திஜியின் விருப்பப்படி அகமதாபாத் ஜவுளித் தொழிலாளர் சங்கம் 1918-ல் ஒரு பரீட்சையைச் செய்து பார்க்க ஆரம்பித்தது. கதவடைப்பு, வேலைநிறுத்தம், வேலை இழப்பு ஏற்பட்டால், பட்டினி கிடக்கவேண்டியிராமல், ஏதாவது செய்யத் தெரிந்திருக்கட்டும் என்பதற்காக மில்களில் உள்ள அவர்களுடைய வழக்கமான வேலையைத் தவிர, வேறு ஓர் உப தொழிலைக் கற்றுக்கொள்ளுவதற்குச் சங்க மெம்பர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.† இந்தப் பரீட்சையில் சில நல்ல பலன்கள் கிடைத்தன.

**எப்போது வேலைநிறுத்தம் பரிகாரமாகாது?:** "வேலை நிறுத்தம் செய்திருப்பவர்களுக்குப் பதிலாக வேலை செய்வதற்கு வேண்டிய அளவு தொழிலாளர்கள் கிடைப்பதாயிருந்தால், அந்த நிலைமையில் வேலைநிறுத்தம் பரிகாரமாகாது. நேர்மையில்லாமல் நடத்தப்பட்டால், அல்லது போதுமான ஊதியம் கொடுக்கப்படாவிட்டால், அல்லது அம்மாதிரியான சந்தர்ப்பத்தில் ராஜிநாமாச் செய்வதுதான் பரிகாரமாகும்."‡

இந்தப் பரிகாரம் பலனளித்திருக்கிறதா என்பதைத் தோட்டிகள் நடத்திய வேலைநிறுத்தத்திலும், 1946-ல் கப்பல் மாலுமிகள் பம்பாயில் செய்த கலகத்திலும் பரிசீலனை செய்து பார்ப்போம்.

**வெற்றியின் அளவு :** "மேற் கூறிய நிபந்தனைகளெல்லாம் பூர்த்தி செய்யப்படாமல் இருந்தபோதுகூட வேலைநிறுத்தங்கள் வெற்றி பெற்றிருக்கின்றன. ஆனால், முதலாளிகளுடைய பலவீனத்தையும், அவர்களுடைய குற்றமுள்ள நெஞ்சையுமே அது ருசுப்பிக்கிறது. தவறான உதாரணங்களைப் பின்பற்றிப் பல சமயங்களில் நாம் பெரும் தவறுகளைச் செய்கிறோம். நமக்கு முழு விவரங்கள் தெரியாத உதாரணங்களைப் பின்பற்றாமல், நமக்குத் தெரிந்ததும், வெற்றிக்கு அவசியம் என்று நாம் அறிந்ததுமான வழியைப் பின்பற்றுவதே பத்திரமானதா யிருக்கும்."§

**அனுதாப வேலை நிறுத்தங்கள்:** வேலைநிறுத்தக்காரர்களின் கஷ்டங்களுக்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் வேறு தொழில்களில் உள்ளவர்களும் வேலை நிறுத்தம் செய்வதை அடிக்கடி பார்க்கிறோம். வெற்றிகரமான, அனுதாப வேலைநிறுத்தம்

---

* 'ஹரிஜன்' - 2—6—1946 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்' —ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம் 1045

† 'ஹரிஜன்' – 3—7—1937 ‡ 'எங் இந்தியா' – 16—2—1921

§ 'எங் இந்தியா' – 16—2—1921

செய்யும் அளவுக்கு இந்தியாவிலுள்ள தொழிலாளர்களுக்கும், வேலைக்காரர்களுக்கும் அவ்வளவு தேசீய உணர்வு ஏற்பட்டுவிடவில்லை என்பதே காந்திஜியின் அபிப்பிராயமாகும். தவறு, அரசியல் தலைவர்களுடையதுதான். இந்த வர்க்கத்தினரின் தேவைகளையும், அபிலாஷைகளையும் அவர்கள் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. அரசியல் நிலைமையைப் பற்றி அவர்களுக்குத் தெரிவிப்பதற்கும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. உயர்தரப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளில் படித்தவர்களே தேசீய வேலைகளில் பங்கெடுத்துக்கொள்ளத் தகுதியுள்ளவர்கள் என்று அவர்கள் நினைத்துவிட்டார்கள். ஆகவே, தொழிலாளர்களும், மற்ற வேலைக்காரர்களும் திடீரென்று தமது நலன்களுக்குச் சம்பந்தமில்லாத வேறு நலன்களுக்காகத் தியாகம் செய்வார்கள் என்று எதிர்பார்ப்பது சரியாகாது. ஆகையால், அவர்களை அரசியல் நலன்களுக்காகவோ, வேறு நலன்களுக்காகவோ பயன்படுத்திக்கொள்ளக்கூடாது.* முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு ராஜீயம் என்பது வசதியுள்ளவர்களின் பொழுது போக்காயிருந்தபோது இந்த வார்த்தைகள் எழுதப்பட்டன. நாட்டின் ராஜீயத் தன்மையைக் காந்திஜி அடியோடு மாற்றிவிட்டார். தமது ஆழ்ந்த தூக்கத்திலிருந்து தொழிலாளர்கள் விழிப்படைந்துவிட்டனர். ஆயினும், தாம் செய்யும் காரியங்களின் உள்ளர்த்தங்களையோ, விளைவுகளையோ பூராவாகப் புரிந்துகொள்ளும் அளவுக்கு அவர்கள் முதிர்ச்சி பெற்றுவிட்டார்கள் என்று சொல்ல முடியாது.

அவசரப்பட்டு அனுதாப வேலைநிறுத்தம் செய்வது தொழிலாளர்களின் நலன்களுக்கு மிகுந்த கெடுதலைத்தான் விளைவிக்கும்.† பாதிக்கப்பட்டவர்கள், அனுதாபமற்ற, பிடிவாதமான அதிகாரிகளிடமிருந்து நியாயம் பெறுவதற்கு நேர்மையான எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்துவிட்டார்கள் என்று சந்தேகத்திற்கிடமில்லாமல் ருசுப்பிக்கப்படும் வரையில் அனுதாப வேலைநிறுத்தங்கள் கூடாது.‡ அத்தகைய வேலைநிறுத்தங்கள் ஆன்ம சுத்திக்கான நடவடிக்கைகளாயிருக்க வேண்டும். அனுதாபம் காட்டுபவர்களுக்கு ஏற்படும் அசௌகரியங்களும், நஷ்டமும்தான் அனுதாப வேலைநிறுத்தத்தின் சிறப்பு.§

"அமைதியான ஒரு வேலை நிறுத்தத்தில் குறைகள் உள்ளவர்கள் மட்டுமேதான் கலந்துகொள்ள வேண்டும். உதாரணமாக, டிம்பக்டுவிலுள்ள தீக்குச்சித் தொழிலாளர்கள் தம் வேலை நிலைமை பற்றி முற்றிலும் திருப்தியடைந்திருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்கள், பட்டினி ஊதியம் பெறும் மில் தொழிலாளர்களுக்காக அனுதாப வேலைநிறுத்தம் செய்தால், தீக்குச்சித் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் பலாத்காரத் தன்மை வாய்ந்ததேயாகும். பலாத்காரத்தில் ஈடுபட்டார்கள் என்ற குற்றச்சாட்டுக்கு இடம்கொடுக்

---

* 'எங் இந்தியா' – 22—9—1921
† " "
‡ 'ஹரிஜன்' – 11—8—1946
§ 'எங் இந்தியா – 22—9—1921

காமல் அவர்கள், டிம்பக்டுவிலுள்ள மில்காரர்களின் சாமான்களை வாங்காம லிருந்துவிட்டால், மில் தொழிலாளர்களுக்கு மிகவும் பலனளிக்கத்தக்க விதத்தில் உதவி செய்ததாக இருக்கும். ஆயினும், தமக்கென்று குறைகள் இல்லாதவர்களும் வேலை செய்யாமலிருக்கவேண்டிய கடமை ஏற்படக் கூடிய சந்தர்ப்பங்களும் இருக்கலாம். உதாரணமாக, தீக்குச்சித் தொழிற்சாலை அதி பர்கள் டிம்பக்டுவிலுள்ள மில் அதிபர்களிடம் சேர்ந்துகொண்டால், அப்போது தீக்குச்சித் தொழிற்சாலையிலுள்ளவர்கள் மில் தொழிலாளர்களுடன் சேர்ந்து கொள்ளுவது அவர்களுடைய தெளிவான கடமையாயிருக்கும்...முடிவில் ஒவ் வொரு விஷயத்தையும் அதனுடைய நியாய, அநியாயத்தைக் கொண்டுதான் முடிவு செய்ய வேண்டும். பலாத்காரம் என்பது கண்ணுக்குப் புலப்படாத ஒரு சக்தி. அந்தச் சக்தி வேலை செய்துகொண்டிருக்கிறது என்பதை உணர லாம். ஆனால், அதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமல்ல."*

**தொழிலாளருக்குச் சிறந்த சேவை:** தன் கையே தனக்கு உதவி என்பதைத் தொழிலாளர்களுக்குக் கற்றுக்கொடுப்பதே அவர்களுக்கு நாம் செய்யக்கூடிய சிறந்த சேவையாகும்; கடமை களையும் உரிமைகளையும் அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்து, தம்முடைய நியாயமான குறைகளுக்கு அவர்களாகவே பரிகாரம் தேடிக்கொள்ளக்கூடிய விதத்தில் அவர்களைப் பயிற்றுவிக்க வேண்டும். பின்னர் படிப்படியாக ராஜீய, தேசீய, ஜீவகாருண்ய சேவைகளைச் செய்வதற்கு அவர்கள் திறன் பெற்றுவிடுவார்கள்.†

**ராஜீய காரணங்களுக்காகத் தொழிலாளரைப் பயன்படுத்திக்கொள்ளுதல்:** "இந்தியாவிலும் சரி, வேறு இடங்களிலும் சரி, 'உங்களுக்கு யோசனைகள் கூறி, வழிகாட்டுகிறோம்' என்று வருபவர்கள் சொன்னபடியே தொழிலாளர் உலகம் செய்ய வேண்டியிருக்கிறது. இப்படி வருபவர்கள் எப்போதுமே நாணயஸ்தர்களா யிருப்பதில்லை; நாணயஸ்தர்களாயிருந்தால், புத்திசாலி களாய் இருப்பதில்லை. தொழிலாளர்கள் தமது நிலைமையில் அதிருப்தியுற் றிருக்கிறார்கள். அப்படி அவர்கள் அதிருப்தியுற்றிருப்பதற்கு வேண்டிய கார ணங்கள் இருக்கின்றன. முதலாளிகள் பொருளீட்டுவதற்கு முக்கியமாகத் தொழிலாளர்கள்தான் காரணம் என்று அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப் படுகிறது. இது நியாயமே. ஆகையால், அவர்கள் வேலைநிறுத்தம் செய்யச் சொல்லுவதற்கு அதிக முயற்சி தேவையில்லை. ராஜீய நிலைமையும் இந்தியா விலுள்ள தொழிலாளர்களைப் பாதிக்க ஆரம்பித்திருக்கிறது. ராஜீய காரணங் களுக்காக வேலைநிறுத்தங்களைத் தூண்டிவிடலாம் என்று நினைக்கும் தொழி லாளர் தலைவர்களுக்கும் குறைவில்லை."‡

இத்தகைய காரியங்களுக்காகத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்களை உபயோகித்துக்கொள்ளுவது மிகப் பெரிய தவறு கும் என்று காந்திஜி கூறினர். இத்தகைய வேலைநிறுத்தங்கள் அரசியல் நலன்களுக்கு உதவி செய்யக்கூடும் என்பதை அவர் மறுக்கவில்லை. ஆனால், அவை சாத்விக ஒத்துழையாமையின் வரம்புக்குட்பட்டிருக்கவில்லை. நாட்டின் ராஜீய நிலைமையைத் தொழிலாளர்கள் உணர்ந்து, பொது நன்மைக்காக உழைக்கத்

---

* 'எங் இந்தியா' – 18–11–1926 † 'எங் இந்தியா' - 22–9–1921

‡ 'எங் இந்தியா' – 16–2–1921

தயாராயிருந்தாலொழிய தொழிலாளர்களை ராஜீய காரணங்களுக்காக உபயோகித்துக்கொள்ளுவது அதிக ஆபத்தானது என்பது தெளிவானதாகும். கௌரவமான வாழ்க்கை நடத்தக் கூடிய அளவுக்குத் தமது நிலைமையை உயர்த்திக்கொள்ளும் வரையில் அவர்களுக்குத் திடீரென்று இந்த உணர்வு ஏற்பட்டு விடும் என்றும் எதிர்பார்ப்பதற்கில்லை. தமது நிலைமையை உயர்த்திக்கொண்டு, இன்னும் அதிக விஷய அறிவு பெற்று, தாம் முக்கியமான பங்கெடுத்துக்கொள்ளும் உற்பத்தியை, முதலாளிகள் இன்னும் நல்ல முறையில் உபயோகிக்க வேண்டும் என்று தமது உரிமைகளை வற்புறுத்துவதே தொழிலாளர்கள் செய்யக்கூடிய மிகப் பெரிய ராஜீய தொண்டாகும். தொழிலாளர்களிடையே நல்ல கட்டுப்பாடு ஏற்பட்டு, தம்மைப்பற்றியும், தம் நாட்டைப் பற்றியும் நினைத்துப் பார்க்கும்போது, தம்முடைய முயற்சியினால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் விலை சரியாக நிர்ணயிக்கப்பட வேண்டும் என்று அவர்கள் போராட ஆரம்பிப்பார்கள். லாபப் பிரிவினை, ஊதியம், விலை ஆகியவை நேர்மையான முறையில் விநியோகிக்கப்பட வேண்டிய காலம் வரும்; அது எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரத்தில் வருகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. ஆகவே, தொழிலாளர்கள் தாமும் ஓர் அளவு உரிமையாளர் என்ற அந்தஸ்துக்குத் தம்மை உயர்த்திக்கொள்ளுவதே முறையான வளர்ச்சியாகும். ஆகையால், தொழிலாளர்களின் நேரடியான நன்மைக்காகவும், தம்முடைய உற்பத்தியின் விலைகளைச் சீர்ப்படுத்தவேண்டும் என்ற தேசபக்தி உணர்ச்சி அவர்களுக்கு ஏற்பட்ட பிறகுமே வேலைநிறுத்தங்கள் ஏற்படமுடியும்.*

பொருளாதார முன்னேற்றத்திற்கான வேலைநிறுத்தங்களில், ராஜீய நோக்கமே இருக்கக் கூடாது. இத்தகைய கலப்பு, ராஜீய நோக்கத்திற்கு உதவி செய்வதே இல்லை. அத்துடன், சாதாரணமாக அது வேலைநிறுத்தக்காரர்களுக்குக் கஷ்டத்தையே உண்டுபண்ணுகிறது. நியாயமான மற்றெல்லா முறைகளும் பின்பற்றப்பட்டுத் தோல்வியடைந்த பிறகே அத்தகைய வேலைநிறுத்தங்கள் ஏற்பட முடியும்.†

**அகிம்சை நடவடிக்கையில் ராஜீய வேலைநிறுத்தங்களின் ஸ்தானம்:** ராஜீய வேலைநிறுத்தங்களை அவற்றின் தராதரத்தைப் பொறுத்தே மதிப்பிட வேண்டும். பொருளாதார வேலைநிறுத்தங்களுடன் இவற்றைக் கலப்பதோ, சம்பந்தப்படுத்துவதோ கூடாது. அகிம்சா பூர்வமான நடவடிக்கையில் ராஜீய வேலைநிறுத்தங்களுக்குத் திட்டமான ஓர் இடம் உண்டு. அவை மனம் போன வாக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை. அவை பகிரங்கமாயிருக்க வேண்டும்; காலித்தனத்தைக் கொண்டு நடத்தப்படுவதாக இருக்கக்கூடாது. அவற்றில் பலாத்காரத்

* 'எங் இந்தியா' —16-2-1921 † 'ஹரிஜன்'—11-8-1921

திற்கு இடமே இல்லை.* அரசாங்கத்தை ஸ்தம்பிக்க வைப்பதற்கான ராஜீய வேலைநிறுத்தம், மிகவும் தீவிரமான ஒரு ராஜீய நடவடிக்கையாகும். மக்களுக்கு உண்மையான பிரதிநிதித்துவம் வகிக்கும் ஒரு ஸ்தாபனம்தான் அதில் இறங்கலாம். தொழிலாளர் சங்கங்கள் என்னதான் பலமுள்ளவையாக இருந்தாலுங்கூட அவை நடத்தக்கூடாது.

பம்பாய் கப்பல் மாலுமிகள் கலகம்: அரசாங்கத்தை ஸ்தம்பிக்க வைப்பதற்காகப் பம்பாயிலுள்ள கடற்படை மாலுமிகள் 1946-இல் கலகம் செய்தார்கள். இந்திய மாலுமிகள் விஷயத்தில் பிரிட்டிஷ் அதிகாரிகள் காட்டும் பாகுபாட்டைப் பற்றித் தங்களுடைய அதிருப்தியைத் தெரிவிப்பதே அவர்களுடைய நோக்கம். ஆனால், சுதந்திரத்திற்காகப் போராடுவதாக வெளியில் சொல்லிக்கொண்டார்கள். இது சிந்தனையற்ற ஒரு பலாத்காரச் செய்கை என்று காந்திஜி கண்டித்தார். சாத்விக நடவடிக்கைகளின் மூலம் சுயராஜ்யம் பெறப்போவதாக உலகத்திற்கெல்லாம் சொல்லிவிட்டு, நெருக்கடியான ஒரு கட்டத்தில் அது தன் வார்த்தையைப் பொய்யாக்கி விட்டது என்று இந்தியக் காங்கிரஸுக்குப் பெயர் வருவதை அவர் விரும்பவில்லை. கண்ணியமான முறையில் எப்படி சாத்விக எதிர்ப்பு நடத்தலாம் என்று கடற்படையிலுள்ள இந்தியர்களுக்கு அவர் எடுத்துக் காட்டினார். அவர்கள் ஒருமித்து நடந்துகொண்டால் அது மனிதத் தன்மையுள்ளதாகவும், முற்றிலும் பலனளிக்கக்கூடியதாகவும் இருக்கும் என்று சொன்னார். தனிப்பட்டவர்கள் விஷயத்தில் இது எப்போதுமே பொருந்தும். அங்கே வேலை செய்வது அவர்களுக்கோ, இந்தியாவுக்கோ சிறுமை அளிப்பதாயிருந்தால், தொடர்ந்து ஏன் அவர்கள் அங்கே வேலை செய்ய வேண்டும் என்று கேட்டார். இத்தகைய நடவடிக்கையைச் சாத்விக ஒத்துழையாமை என்று அவர் வர்ணித்தார்.†

காலஞ் சென்ற லாலா லஜபதிராயின் தலைமையில் 1920-ல் கல்கத்தாவில் நடைபெற்ற விசேஷ காங்கிரஸில் சாத்விக நடவடிக்கை வியாக்கியானம் செய்யப்பட்டது. அதன்படி, சிறுமைப் படுத்தும் எதனுடனும் ஒத்துழையாமை செய்ய வேண்டும் என்பதே சாத்விக நடவடிக்கையின் முதல் அம்சமாகும். ஆளப்படுவோரின் நன்மைக்காக இந்தியக் கடற்படை ஸ்தாபிக்கப்படவில்லை யென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இது தெரிந்தேதான் அவர்கள் அதில் போய்ச் சேர்ந்தார்கள். பாகுபாடு, கண் முன்பாகவே இருந்தது. இந்தியாவை அடிமைத் தனத்தில் வைத்திருக்க வேண்டும் என்பதற்காகவே உள்ள ஒரு வேலையில் போய்ச் சேர்ந்தால் பாகுபாட்டைத் தவிர்க்க முடியாது. நிலைமையைச் சீர்ப்படுத்த முயற்சி செய்யலாம்; முயற்சி செய்யவும் வேண்டும். ஒரு அளவு வரையில்தான் அது சாத்தியமாகும். கலகம் செய்வதன் மூலம் அதைப் பெற

* 'ஹரிஜன்' – 11—8—1946

† 'ஹரிஜன்' - 3—3—1946

முடியாது. கலகம் வெற்றி பெறவும் கூடும். ஆனால், அந்த வெற்றி, கலகம் செய்தவர்களுக்கும், அவர்களுடைய உறவினர் களுக்கும்தான் உதவி செய்யும்; இந்தியா பூராவுக்கும் அது நன்மையளிக்காது. இதன் படிப்பினை, கெட்ட உதாரணமாகவே இருக்கும். அப்போது கட்டுப்பாடு எவ்வளவு அவசியமாயிருந் ததோ அவ்வளவு சுயராஜ்யத்திலும் அது அவசியமாக இருக்கும். கலகத்தில் வெற்றி பெற்றவர்களின் கீழ் இருப்பதென்றால், உள் நாட்டுச் சண்டைகளால் தளர்ச்சியுற்ற சண்டைக்காரர்கள் கோஷ்டிகளால் பிளவுபட்டதாக இந்தியா ஆகிவிடும்.* ஆகவே அவர்கள் தைரியமாகத் தமது வேலைகளை விட்டுவிட வேண்டும் என்று காந்திஜி யோசனை கூறினர். அதன் மூலம் அவர்கள் தம் முடைய கௌரவத்தையும், கண்ணியத்தையுமாவது காப்பாற்றிக் கொள்ளலாம் என்றார்.

**தோட்டிகள் வேலைநிறுத்தம் :** தோட்டிகளுக்கு அவர் அளித்த புத்திமதியும் இதே மாதிரிதான் இருந்தது. ஒரு நாளைக் குக்கூடத் தோட்டிகள் வேலை செய்வதை நிறுத்தக்கூடாது.† சில விஷயங்களில் வேலைநிறுத்தம் செய்வது தவறாகும். தோட்டி களின் குறைகள் இந்த ரகத்தைச் சேர்ந்தவை. *1897*-ல் காந்திஜி டர்பனி லிருந்தபோதே, தோட்டிகளின் வேலைநிறுத்தத்தை ஆட் சேபித்திருக்கிறார். ஒரு பொது வேலைநிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்வது பற்றி அங்கே யோசிக்கப்பட்டது. அதில் தோட்டி களும் சேர வேண்டுமா என்ற கேள்வி எழுந்தது. அவர்கள் பொது வேலைநிறுத்தத்தில் சேருவதை எதிர்த்துக் காந்திஜி அப்பொழுது தம் முடிவைத் தெரிவித்தார். காற்று இல்லாமல் மனிதன் உயிர் வாழ முடியாது. அதைப் போலவே, அவனுடைய வீடும், சுற்றுப்புறங்களும் சுத்தமாயில்லாவிட்டாலும் அவன் அதிக காலம் வாழ முடியாது. இந்தக் காலத்துச் சாக்கடைகள் செயல் பட முடியாதபடி செய்துவிட்டால், ஏதாவது ஒரு தொத்துநோய் ஏற்படத்தான்செய்யும்.‡ அப்படியானல் தோட்டிகள் அழுக்கிலும், அசுத்தத்திலும் வாழ்ந்துகொண்டு, பட்டினிக்கொப்பான ஊதி யத்தைப் பெற்றுக்கொண்டு வேலை செய்துகொண்டே இருக்க வேண்டும் என்று அர்த்தமா? அம்மாதிரி சந்தர்ப்பங்களில் வேலைநிறுத்தம் சரியான பரிகாரமாகாது. தோட்டி வேலை செய்பவர்கள் பட்டினி கிடப்பதற்கு ஒப்பான வாழ்க்கையைத் தான் நடத்த வேண்டியிருக்கும் என்றால், அவர்கள் தாம் வேலை செய்வதை நிறுத்த வேண்டியிருக்கும் என்று பொதுவாக ஜனங் களுக்கும், குறிப்பாக, அவர்களை வேலைக்கு வைத்துக்கொண் டுள்ள நகரசபைக்கும் முன்னறிவிப்பு கொடுக்க வேண்டும். வேலை நிறுத்தம் என்பது, நிவாரணத்தை எதிர்பார்த்துத் தாற்காலிக மாக எடுத்துக்கொள்ளப்படும் நடவடிக்கையே ஆகும். வேலை செய்வதையே நிறுத்துவது என்பது, நிவாரணம் கிடைக்கும் என்ற நம்பிக்கை இல்லாததால் ஒரு குறிப்பிட்ட வேலையை விட்டு

---

* 'ஹரிஜன்' - 10—3—1946 † 'ஹரிஜன்' - 21—4—1946

‡ 'ஹரிஜன்' - 21—4—1946

விடுவதாகும். சரியான முறையில் வேலையை விடுவதில் இரண்டு முன் அம்சங்கள், இருக்கின்றன. ஒன்று, நியாயமான முன்னறிவிப்புச் செய்வது; மற்றொன்று, இன்னும் நல்ல ஊதியமும், அழுக்கு, அசுத்தத்திலிருந்து விடுதலையும் கிடைக்கும் என்ற நம்பிக்கை. மானக்கேடான முறையில் உறங்கிக்கொண்டிருக்கும் சமூகத்தை இது விழிப்புறச் செய்யும். இதன் மூலம் பொது ஜன மனச்சாட்சியை மறைத்துக்கொண்டிருந்த இடர்கள் அகற்றப்படும். நொடிப் பொழுதில் தோட்டிகள் தமது வேலையை ஒரு அரும் கலையாக உயர்த்தி, வெகு காலத்திற்கு முன்பே அதற்குக் கிடைத்திருக்க வேண்டிய அந்தஸ்தையும் கொடுத்து விட முடியும்.*

**பொதுநல சாதனங்களில் வேலைநிறுத்தங்கள் :** பொதுநல சாதனங்களில் வேலைநிறுத்தம் செய்வதையும் காந்திஜி ஆட்சேபித்தார். ஏனெனில், இவற்றில் ஏற்படும் சீர்குலைவு பொது ஜனங்களின் வாழ்க்கையையே சீர்குலைத்துவிடும். எந்த மாதிரி நிலைமை இருந்தாலும் அதற்கு உட்பட்டு உழைத்துக்கொண்டே இருங்கள் என்று அவர் சொல்லக்கூடியவரல்ல. ஆனால், நிவாரணம் பெறுவதற்கு ஆட்சேபகரமா யில்லாத வேறு வழிகள் இருக்கின்றன.†

**சாத்விக வேலைநிறுத்தம் :** வேலைநிறுத்தங்கள், இன்று எங்கும் பரவியுள்ள ஒரு தொத்து நோயாகிவிட்டது. இந்தியாவில் இதற்கு விசேஷ முக்கியத்துவம் உண்டு. இயற்கைக்கு மாறான ஒரு நிலைமையில் நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். மூடியைத் திறந்து சுத்தமான காற்று உள்ளே செல்ல ஒரு சிறு துவாரம் கிடைத்தவுடன் வேலைநிறுத்தங்கள் இன்னும் அதிகமாகிவிடும். மற்ற இடங்களில் இருப்பதைப் போலவே, இங்கும் வாழ்க்கையின் அஸ்திவாரம் தகர்க்கப்பட்டிருப்பதுதான் வேலைநிறுத்த ஜுரம் இப்படிப் பரவி யிருப்பதற்கு அடிப்படையான காரணமாகும். மதம் என்ற அடிப்படை தகர்ந்துவிட்டது. அதற்குப் பதிலாக, ஓர் ஆங்கில எழுத்தாளர் கூறியது போல், 'பண ஆசை' ஏற்பட்டு விட்டது. அது நிச்சயமற்ற ஒரு பந்தமாகும். ஆனால், மதத்தின் அஸ்திவாரம் இருக்கும்போதுகூட, வேலை நிறுத்தங்கள் இருந்து கொண்டுதான் இருக்கும். ஏனெனில்,எல்லோருமே'வாழ்க்கைக்கு மதத்தையே ஆதாரமாகக் கொண்டிருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஆகவே, ஒரு புறம் சுரண்டுவதற்கான முயற்சிகளும், மற்றொரு புறம் வேலைநிறுத்தங்களும் இருந்துகொண்டு தான் இருக்கும். ஆனால், அப்போது இந்த வேலைநிறுத்தங்கள் முற்றிலும் சாத்விகத் தன்மை வாய்ந்தவைகளாகவே இருக்கும். அத்தகைய வேலைநிறுத்தங்கள் யாருக்குமே கெடுதல் விளைவிக்காது.‡

**வேலைநிறுத்தங்களின் துஷ்பிரயோகம் :** நியாயம் பெறுவதற்காக வேலைநிறுத்தம் செய்வது தொழிலாளர்களுக்குள்ள

* 'ஹரிஜன்' – 26—3—1946 † 'ஹரிஜன்' - 10—8—1947
‡ 'ஹரிஜன்' 22—9—1946

இயற்கையான உரிமையாகும்.[1] வேலைநிறுத்தங்கள், ஹர்த்தால்கள் எல்லாம் அற்புதமான விஷயங்களே. ஆனால், அவற்றை துஷ்பிரயோகம் செய்வதும் கஷ்டமல்ல. தொழிலாளர்கள், பலம் பொருந்திய தொழில் சங்கங்களை அமைத்துக்கொள்ள வேண்டும்; அந்தச் சங்கங்களின் அனுமதியில்லாமல் அவர்கள் வேலைநிறுத்தம் செய்யவே கூடாது. முதலாளிகளுடன் முதலில் சம்பாஷணைகள் நடத்தாமல் வேலைநிறுத்தங்களில் இறங்கலாகாது.[2] தீர்வுக்கான எல்லா வழிகளையும் பார்த்துவிடவேண்டும்.[3] மத்தியஸ்தத்திற்கு இடம் கொடுக்காமல் முதலாளிகள் நடந்துகொண்டால், தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்ய வேண்டியிருக்கும்.[4]

**எந்தச் சந்தர்ப்பத்தில் வேலைநிறுத்தம் செய்வது குற்றமாகும்?:** முதலாளிகள் மத்தியஸ்தக் கொள்கையை ஏற்றுக்கொண்ட பிறகு வேலைநிறுத்தம் செய்வது குற்றமாகக் கருதப்பட வேண்டும்.[5] தகராறுகளைத் தீர்ப்பதற்குப் பட்சபாதமற்ற ஒரு விசாரணை மன்றத்தை எப்போதுமே ஏற்றுக்கொள்ள வேண்டும். இதை ஏற்க மறுப்பது பலவீனத்திற்கு அடையாளமாகும். நிர்ப்பந்தப்படுத்துவது முடிவில் குழப்பத்தில்தான் முடியும்.[6] கோரிக்கைகள் மத்தியஸ்தத்திற்கு விடப்படவேண்டும். அவை நியாயமான கோரிக்கைகளாயிருந்தாலுங்கூட, மத்தியஸ்தம் செய்வதற்கான முயற்சியைச் செய்யாமல், வேலைநிறுத்தம் செய்யக்கூடாது. எந்தவிதமான திடீர் வேலைநிறுத்தமும் நிர்ப்பந்தமேயாகும். அது அபாயகரமானது.[7]

**நியாயமற்ற வேலைநிறுத்தங்கள்:** நியாயமற்ற காரணங்களுக்காக வேலைநிறுத்தம் செய்யக்கூடாது என்பது தெளிவானது. நியாயமில்லாத எந்த வேலைநிறுத்தமும் வெற்றி பெறக்கூடாது. அத்தகைய வேலைநிறுத்தங்களுக்குப் பொதுஜனங்கள் கொஞ்சமும் அனுதாபம் காட்டக்கூடாது.[8] நியாயமான வேலைநிறுத்தம் என்று சொல்ல முடியாத எந்த வேலைநிறுத்தத்தையும் பொதுஜனங்கள் சந்தேகத்திற் கிடமில்லாமல் கண்டிக்க வேண்டும். வேலைநிறுத்தம் செய்திருப்பவர்கள் திரும்பவும் வேலைக்குப் போவதே இதன் இயற்கையான விளைவா யிருக்கும்.[9]

**மத்தியஸ்தம் ஏன்?:** மத்தியஸ்தம் அல்லது விசாரணை மன்றப் பைசல் ஏற்றுக்கொள்ளப்படும்போது இந்த விஷயம் பொதுஜனங்களின் கவனத்திற்கு வருவதில்லை. அந்த நிலைமையில் பொதுஜனங்களின் நம்பிக்கையைப் பெற்ற பட்சபாதமில்லாதவர்களின் ஆதரவு இருந்தாலொழிய, ஒரு வேலைநிறுத்தத்தின் நியாய அநியாயத்தைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல பொதுஜனங்களுக்கு வாய்ப்பு கிடையாது. ஆகையால் மத்தி

---

1 'எங் இந்தியா' - 28—4—1920
2 'எங் இந்தியா - 11—2—1920
3 'ஹரிஜன்' – 7—11—1936
4 'ஹரிஜன்'- 7—11—1936
5 'எங் இந்தியா' – 28—4—1920
6 'ஹரிஜன்' - 12—5—1946
7 'ஹரிஜன்' – 7—2—1946
8 'ஹரிஜன்' - 11—8—1946
9 'ஹரிஜன்' – 31—3—1946

யஸ்தத்தையோ சட்டபூர்வமான விசாரணை மன்றப் பைசலேயோ இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.[1]

முதலாளிகளும், தொழிலாளர்களும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டு, இருவருக்குமிடையே பரஸ்பர மரியாதையும், சமத்துவ உணர்ச்சியும் இருந்தால், வேலை நிறுத்தத்திற்கே இடமிருக்க முடியாது.[2] தொழிலாளர்களிடையே கட்டுப்பாடு வளரும்போது, வேலை நிறுத்தங்கள் அபூர்வமாகத்தான் ஏற்பட வேண்டும்.[3] தொழிலாளர்களின் சிந்தனையும், சங்க பலமும் வளர்ச்சி பெறும்போது, வேலைநிறுத்தங்கள் என்ற கொள்கைக்குப் பதிலாக, மத்தியஸ்தம் என்ற கொள்கை இடம் பெறுவதைக் காண்பார்கள்.[4]

"மிகவும் சீரான முறையில் நடத்தப்படும் ஸ்தாபனங்களில் கூடச் சில சமயங்களில் முதலாளிகளுக்கும், தொழிலாளர்களுக்குமிடையே வித்தியாசங்கள் இருக்கத்தான் செய்யும். ஆகவே, இரு தரப்பினருக்குமிடையே ஒரு மத்தியஸ்த ஏற்பாடு இருந்தால் என்ன? அப்படி இருந்தால் இருவருமே அந்த மத்தியஸ்தர்களின் தீர்ப்புக்களை முழு நம்பிக்கையுடன் மனமார நிறைவேற்றலாமல்லவா?"[5]

**தீர்ப்பு, இரு தரப்பினரையும் கட்டுப்படுத்துவதாயிருக்க வேண்டும் :** முதலாளிகளும், தொழிலாளர்களும் அமைதியாக வாழ வேண்டுமானல், மத்தியஸ்தக் கொள்கையை அவர்களுடைய மிக பலம் பொருந்திய சங்கங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.[6] மத்தியஸ்தக் கொள்கையை ஏற்றுக்கொண்டுவிட்டால், மத்தியஸ்தர்கள் அல்லது பஞ்சாயத்தார்கள் அளிக்கும் தீர்ப்பு பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் இரு தரப்பினரும் ஒப்புக்கொள்ள வேண்டும்.[7]

**சில திட்டமான கருத்துக்கள் :** இன்று முதலாளித்துவம், தொழிலாளர் வர்க்கத்தைக் கண்டு பயப்படுகிறது; தொழிலாளர்களும், முதலாளிகளைக் கண்டு முறைக்கிறுர்கள். இவர்களுக்கிடையே இம்மாதிரி உறவுக்குப் பதிலாக பரஸ்பர நம்பிக்கையையும், மரியாதையையும் அடிப்படையாகக்கொண்ட உறவை ஏற்படுத்த வேண்டும் என்று காந்திஜி விரும்பினுர்.[8] மத்தியஸ்தம் என்பது, தகராறுகள் ஏற்பட்ட பிறகு அவற்றைத் தீர்க்க முடியுமேயொழிய, தகராறே ஏற்படாமல் தடுக்க முடியாது. அதற்குச் சில கண்டிப்பான நிபந்தனைகளைப் பின்பற்றியாக வேண்டும்:

1. "ஊதியங்கள் ஒரு குறைந்த பட்ச அளவுக்குக் கீழ் போகக்கூடாது. அத்தகைய ஊதியத்தை நிர்ணயிக்கும்போது எவற்றையெல்லாம் அதில் சேர்க்க வேண்டும் என்பது பற்றி இரு தரப்பினரும் பரஸ்பரம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

---

1 'ஹரிஜன்' - 11—8—1946. 2 'ஹரிஜன்' - 31—3—1946

3 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும் கட்டுரைகளும்'—ஜி. ஏ. நடேசன் கம்பெனி.

4 " "

5 'ஹரிஜன்' – 31—3—1946 6 'எங் இந்தியா' – 19—9—1929

7 'எங் இந்தியா' - 11—2—1920 8 'எங் இந்தியா' - 20—8—1925

2. ''தொழிலாளர்களும், பங்குதாரர்களுக்குச் சமமானவர்களாகக் கருதப்பட வேண்டும். ஆகவே, மில்களின் பேரங்களைப் பற்றிச் சரியான விவரங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு அவர்களுக்கும் முழு உரிமை உண்டு என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். கைத்தொழில்கள் நன்ருக நடப்பதற்கு இது அத்தியாவசியமாகும். தொழிலாளர்களும் சம உரிமைகள் உள்ள முதலாளிகளென்ருல், மில்களின் பேரங்களைப் பார்வையிடுவதற்குப் பங்கு தாரர்களுக்கு உள்ள அதே உரிமைகள் அவர்களுக்கும் இருக்க வேண்டும். முக்கியமான தகவல்கள் தொழிலாளர்களுக்குத் தெரிவிக்கப்படாமல் வைத்துக் கொள்ளப்பட்டால் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படாது.

3. ''இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய மில் தொழிலாளர் பட்டியல் ஒன்று இருக்க வேண்டும். பிரதிநிதித்துவம் வாய்ந்த சங்கத்தின் மூலம் தவிர வெளி ஸ்தாபனங்களின் மூலம் ஆட்களைச் சேர்க்கும் வழக்கம் நிறுத்தப்பட வேண்டும். மில்காரர்களின் சங்கத்தைப் போலவே தொழிலாளர்களின் சங்கங்களும் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருந்தால், இந்த விதியைத் தளர்த்தவே கூடாது; இதை ஓர் அவசியமான தீமை என்று சகித்துக்கொண்டிருப்பதாயிருக்கக்கூடாது. ஆகவே, இதன் விளைவாக இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளும் தொழிலாளர் ஜாப்தா ஒன்று இருக்க வேண்டும் என்று ஆகிறது. அத்துடன், தொழிற் சங்கத்திற்கு வெளியே இருந்து மில்காரர்கள் யாரையும் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது என்றும் ஆகிறது.

4. ''முதலாளிகளுக்கு உள்ள அதே அந்தஸ்தும், கௌரவமும் தொழிலாளர்களுக்கும் இருக்க வேண்டும்.*

''மேற்கூறிய அம்சங்கள் அத்தியாவசியமானவை. ஆனல், அந்த ஜாப்தா இத்துடன் தீர்ந்துவிட்டதாக அர்த்தமில்லை.''

**தொழிலாளருக்குப் பட்டவர்த்தனமான புத்திமதி:** தொழிலாளர்களுக்கும் சில பட்டவர்த்தனமான புத்திமதிகளைக் காந்திஜி கூறினர் :

''நீங்கள் எண்ணிக்கையில் அதிகம் பேர் இருந்தாலும், பத்து லட்சம் பேர்களாயிருந்தாலும், ஒரு மில்லை உங்களால் நடத்த முடியாது. அதை நடத்துவதற்கான திறமை உங்களுக்குக் கிடையாது. இருபது வருடம் கட்டுப்பாடாக வேலை செய்த பிறகும், ஒரு மில்லை நடத்துவதற்கான திறமையை நீங்கள் பெறவில்லை. அடுத்த இருபது வருடங்களில் நீங்கள் அந்தத் திறமையைப் பெறுவதும் சாத்தியமில்லை. அந்தத் திறமை உங்களுக்கு இருப்பதாக நீங்கள் நினைத்தால், உங்களை நடத்திச் செல்லுவதற்கு ஒரு தலைவர் அவசியமில்லை.

''என்றைக்காவது அந்தத் திறமையை நீங்கள் அடைய வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். ஒரு மில்லை நடத்துவதற்கு வேண்டிய பயிற்சியைத் தனிப்பட்ட முறையில் நீங்கள் பெறுவது நிச்சயம் சாத்தியமே. அப்படியானல், உங்களில் மற்றவர்கள் இன்றைக்கு இருப்பதைப் போலவே அடிமைகளாகவேதான் இருப்பீர்கள். ஒரு குறிப்பிட்ட காலவரையறைக்குள்

* 'ஹரிஜன்' – 13—2–1937

தொழிலாளர் வர்க்கம் ஒரு மில்லுக்குச் சொந்தக்காரர்களா யிருக்க முடியாது என்பதே நான் கூறுவதன் அர்த்தமாகும்.*

"உரிமைகளையே வற்புறுத்திக்கொண்டிராமல் ஒவ்வொருவரும் தம் கடமையைச் செய்தால், உடனடியாக மனித வர்க்கத்தில் முறைப்படியான வாழ்க்கை ஏற்பட்டுவிடும். ஆளுவது மன்னர்களின் தெய்வீக உரிமை என்பதோ, விவசாயிகள் தம் எஜமானர்களுக்கு மரியாதையுடன் கீழ்ப்படிவது அவர்களுடைய தாழ்மையான கடமை என்பதோ எதுவும் கிடையாது. பரம்பரையான ஏற்றத் தாழ்வுகள் சமூகத்தின் நலன்களுக்குப் பாதகம் விளைவிக்குமாதலால் அவை போக வேண்டும் என்பது உண்மையே. அதே மாதிரி இதுவரையில் அழுத்திவைக்கப்பட்டிருந்த மக்கள், கூச்சமே இல்லாமல் தமது உரிமைகளை வற்புறுத்துவதும் பாதகம் விளைவிக்கக் கூடியதே. இப்படி நடந்துகொள்ளுவது, தெய்வீகம் அல்லது மற்ற உரிமைகளைக் கொண்டாடும் ஒரு சிலரைவிட கோடிக்கணக்கான மக்களைத்தான் பாதிக்கக்கூடும். வீரனாகவோ, கோழையாகவோதான் சாக முடியும். ஆனால், அப்படிச் சிலர் உயிர் துறப்பதால் திருப்தியளிக்கும் சீரான வாழ்க்கை ஏற்பட்டுவிட முடியாது."†

தங்களிடமுள்ள செல்வத்தைப் பற்றி முதலாளிகள் பெருமைப்படக்கூடும் என்றால், தொழிலாளர்கள் தம்முடைய ஆள் பலத்தைப் பற்றிப் பெருமைப்படலாம். முதலாளிகளைப் போலவே அவர்களுக்கும் அதே மாதிரியான உணர்ச்சி போதைகள் ஏற்படக்கூடும்.‡

"ஆகையால், உரிமைகளுக்கும், கடமைகளுக்குமிடையே உள்ள தொடர்பைப் புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்...நன்கு நிறைவேற்றப்பட்ட கடமைகளிலிருந்துதான் உரிமைகள் கிடைக்க முடியும். அப்படியில்லாத உரிமைகளால் பிரயோசனமில்லை. அவை பறிக்கப்பட்டவைகளாகும்; அவற்றைச் சீக்கிரத்தில் துறந்துவிடுவதே நல்லது...கடமையைச் செய்வதிலிருந்து இயற்கையான ஒரு சக்தி பிறக்கிறது. அதுதான் சத்தியாக்கிரகத்திலிருந்து பிறக்கும் ஜெயிக்க முடியாத அகிம்சா சக்தியாகும்."§

அகிம்சையை மக்கள் வாழ்க்கை முறையாக ஏற்றுக்கொள்ளும்போது, வர்க்கப் போராட்டம் என்பது அசாத்தியமானதாய் விடுகிறது. அகமதாபாத்தில் செய்து பார்க்கப்பட்ட இந்தப் பரீட்சையில் மிகவும் திருப்திகரமான பலன்கள் கிடைத்தன.¶ தென்னாப்பிரிக்கா, சம்பாரண், அகமதாபாத் ஆகிய இடங்களில் காந்திஜி தொழிலாளர்களுக்கான ஸ்தாபனங்களை அமைத்தது, முதலாளிகளிடம் விரோத பாவமான உணர்ச்சியுடன் அல்ல. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எந்த அளவுக்கு எதிர்ப்பு அவசியம் என்று கருதப்பட்டதோ அது முற்றிலும் வெற்றிகரமாகவே இருந்தது**

தொழிலாளர்கள், மில் அதிபர்களை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். ஆனால், தம்முடைய உற்றார் உறவினர்களுடன்

* 'ஹரிஜன்' - 7—11—1936
† 'ஹரிஜன்' – 6—7—1947
‡ 'எங் இந்தியா' – 26—3—1931
§ 'ஹரிஜன்' – 6—7—1947
¶ 'எங் இந்தியா' - 26—3—1931
** 'எங் இந்தியா' – 26—3—1931

போராடும்போது எவ்வளவு அன்பும், மரியாதையும், தயக்கமும் காட்டுவார்களோ அதையே முதலாளிகள் விஷயத்திலும் காட்ட வேண்டும். அகிம்சை வழி, முதலாளித்துவத்தை அழிக்க முயற்சி செய்வதில்லை. ஏனெனில், மூலதனம் தொழிலாளர்களின் எதிரியாகக் கருதப்படவில்லை. முதலாளிகளின் மனத்தை மாற்றவே முயற்சி செய்ய வேண்டும். முதலாளித்துவமும், அதிலுள்ள எல்லாத் தீமைகளும் அழிக்கப்பட வேண்டியவைதான். பல்வேறு தரத்தினரும் விரிவான முறையில் ஒத்துழைத்து, கைத்தொழிலை நன்கு அபிவிருத்தி செய்வதற்கு முதலாளிகளும், தொழிலாளர்களும் பூர்ணமாக ஒத்துழைப்பது சாத்தியமே என்ற முழு நம்பிக்கையுடன் இந்தப் பணிக்கு முதலாளிகளின் ஒத்துழைப்பையும் கோர வேண்டும்.

## முடிவு

இயந்திரங்களினாலும், விஞ்ஞானத்தில் புதிதாகக் கண்டுபிடித்திருப்பவைகளினாலும் புரட்சிகரமான விதத்தில் மாறுதல் அடைந்திருந்த சமூகத்திற்குக் காந்திஜி செய்த உபதேசங்களின் முக்கிய சாராம்சத்தை இந்த முன்னுரையில் விளக்கிக் கூற முயற்சித்திருக்கிறேன். முடிந்த வரையில் காந்திஜியின் வார்த்தைகளையே சிந்தனைக்குக் கொடுத்திருக்கிறேன். பல்வேறு மூலை முடுக்குகளில் சிதறிக் கிடந்த அவருடைய மணி மொழிகளைப் பொறுக்கியெடுத்து, ஒரு கோவையாகக் கொடுத்திருப்பதே நான் செய்திருக்கும் வேலை.

காந்திஜி தேச மக்களுக்கு விலை மதிப்பில்லாத ஓர் ஆஸ்தியை வைத்துவிட்டுப் போயிருக்கிறார். இந்தியாவும், மனித வர்க்கமும் உய்யும் வழியை அவர் காட்டியிருக்கிறார். அந்தப் பாதையில் அவரே பிரயாணம் செய்ய ஆரம்பித்தார். கொஞ்ச தூரம் நம்மையும் தம்முடன் அழைத்துச் சென்றிருக்கிறார். அவர் இப்போது நம்மிடையே இல்லை. அவருடைய உறுதியான விளக்கம் இல்லாமல் நாம் இருளில் தடவிக்கொண்டிருக்கிறோம். நம்மைச் சூழ்ந்துள்ள அந்தகாரத்தின் மத்தியில், நாம் சோர்வு அடைந்துவிடக்கூடாது. அது நாசத்தையே விளைவிக்கும். குருட்டுத்தனமாக நாம் தடுமாறவும் முடியாது.

விஷய அறிவுடன் நமது கடமைகளைச் செய்வதே இத்தருணத்தில் நமது தேவையாகும். கதர் அல்லது மின்சாரத்தின் உபயோகம், அல்லது வேறெந்தப் பிரச்னையை அணுகுவதாயிருந்தாலும், நமது நடவடிக்கைகள் விருவிருப்புடனிருப்பதற்கான வழி முறைகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். காந்திஜி சொன்னதைத் திருப்பி ஊர்ஜிதம் செய்வது மட்டும் போதாது.

“ஆய்ந்தறிந்து பார்க்கும் தன்மையுடையவர்கள் விஞ்ஞான ரீதியான விஷயங்களை வெறும் நம்பிக்கையின் மீது மட்டும் ஏற்றுக்கொண்டு விடமாட்டார்கள். அதற்கு அடிப்படையான காரணத்தைக் கண்டுபிடிக்கவே முயற்

சிப்பர். காரண அறிவு பற்றிய விஷயங்களில் நம்பிக்கைக்கு இடமில்லை. காரண அறிவு முடிவடையும்போது நம்பிக்கை ஆரம்பமாகிறது. நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட முடிவுகள், அசைக்க முடியாதவை; ஆனல், காரண அறிவை அடிப்படையாகக் கொண்ட முடிவுகள், நிலையில்லாதவை. ஏனெனில், இன்னும் உயர்ந்த காரண வாதத்தினல் அவற்றைத் தகர்த்துவிட முடியும். விஞ்ஞானத்திற்குச் சில கட்டுப்பாடுகள் இருக்கின்றன என்று சொல்லுவதால் அதைச் சிறுமைப்படுத்துவதாக அர்த்தமில்லை. நமக்கு இரண்டுமே வேண்டும்—ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய இடமுண்டு.''*

ஆகவே, விஞ்ஞான ரீதியான அறிவு, நம்பிக்கை இரண்டையுமே வழிகாட்டிகளாக வைத்துக்கொண்டு காந்திஜி ஏற்றிவைத்த முன்னேற்றச் சுடரை நாம் தாங்கிச் செல்ல வேண்டும்.

தம்மைப் பின்பற்றுபவர்கள், தம்முடைய உபதேசங்களைச் சித்தாத்தங்களின் அளவுக்கு இறக்கிவிடுவார்கள் என்ற அபாயத்தைத் தம் ஆயுள் காலத்திலேயே காந்திஜி அறிந்திருந்தார். ஆகையால், உணர்ச்சியற்ற கண்ணேட்டத்துடன் பிரச்னைகளை அணுகக் கூடாதென்று அவர் பின்வருமாறு எச்சரித்தார்:

“இன்னெரு பெரிய அபாயமும் இருக்கிறது, உங்களுடைய சங்கம்† ஒரு மதகோஷ்டியைப் போன்று க்ஷீணித்து விடக்கூடிய ஆபத்து இருக்கிறது. உங்களுக்கு ஏதாவது சங்கடம் ஏற்பட்டால், ‘எங் இந்தியா’, ‘ஹரிஜன்’ பத்திரிகைகளில் நான் எழுதியுள்ளவைகளைப் புரட்டிப் பார்த்து, அவற்றையே ஆதாரமாக வைத்துக்கொள்ளுவீர்கள். உண்மையில், நான் எழுதியவைகளை என்னுடனேயே சேர்த்துக் கொளுத்திவிட வேண்டும். நான் செய்ததுதான் நிலைத்திருக்குமேயொழிய, நான் சொன்னதோ, எழுதியதோ அல்ல. நம்முடைய சாஸ்திரங்கள் யாவுமே அழிந்துவிட்டால்கூட, ஈசோபனிஷத்திலுள்ள அந்த ஒரு மந்திரமே ஹிந்து மதத்தின் சாராம்சத்தை விளக்கப் போதுமானது என்றும், ஆனல், அதைப் பின்பற்றி நடப்பதற்கு யாருமில்லையென்ருல், அந்த ஒரு மந்திரத்தாலும் பிரயோசனமில்லையென்றும் சமீபமாக நான் அடிக்கடி எழுதியிருக்கிறேன். ஆயினும், சத்தியம், அகிம்சை என்ற இரு பெரிய கொள்கைகளை நீங்கள் எந்த அளவுக்குப் புரிந்துகொள்ள முடிந்திருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் நான் சொன்னவைகளும், எழுதியவைகளும் உங்களுக்கு உதவியாக இருக்கும். அவற்றை நீங்கள் புரிந்துகொண்டு பயன்படுத்திக் கொள்ளவில்லையென்ருல், நான் எழுதியவைகளால் உங்களுக்கு ஒரு பிரயோசனமும் இல்லை. சத்தியாக்கிரகி என்ற முறையில் இந்த ஒவ்வொரு வார்த்தையையும் உங்களுக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்... நான் போன பிறகு என்ன நடக்கும் என்பது பற்றி நான் கவலைப்பட முடியாது. ஆனல், உங்களுடைய ஸ்தாபனம், தேங்கிக் கிடக்கும் குட்டையாக இராமல், மரத்தைப் போல் வளர்ச்சி பெற்றுக்கொண்டே இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். ஆகையால், என்னை மறந்துவிடுங்கள். சங்கத்திற்கு என்னுடைய பெயர் அனவசியமான ஒரு சேர்க்கையாகும். என் பெயரைப் பற்றிக்கொண்டிராதீர்கள்; கொள்கைகளைப் பற்றிக்கொள்ளுங்கள்.

---

* ‘ஹரிஜன்’ - 31—3—1946

† காந்தி சேவா சங்கம்.

உங்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் அந்த அளவுகோலால் அளந்து, ஒவ்வொரு பிரச்னையையும் அச்சமின்றி எதிர் நோக்குங்கள்.''*

இந்த நிலைமையில் காந்திஜி எழுதியதை மட்டுமே பின்பற்றுவதாகச் சொல்லுவது, அவர் சொன்னதன் உணர்ச்சியை மறுப்பதாகும். நமது பிதுரார்ஜிதத்தை மறப்பது தெய்வ நிந்தனையாகும்.

இன்றைய முக்கியமான பிரச்னைகள் அந்த உணர்ச்சியுடன் அணுகப்படுவது மகிழ்ச்சியளிப்பதா யிருக்கிறது. உதாரணமாக, இன்னும் திறமையாக வேலை செய்யக்கூடிய ஒரு ராட்டினம் கண்டுபிடிக்கப்பட்டு, இந்தியா பூராவிலும் பரீட்சித்துப் பார்க்கப்படுகிறது. வெகு சீக்கிரத்தில் பல நோக்கு மின்சாரத் திட்டங்களும் நிறைவேற்றப்படக்கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. ஆகவே, குடிசைத் தொழில்களுக்கு மின்சாரத்தை உபயோகிப்பது இனி வெறும் வாதத்திற்குரிய விஷயமாய் மட்டுமிராது. அகில இந்திய கதர், கிராமக் கைத்தொழில்கள் சங்கம் இந்தப் பிரச்னையைப் பல கோணங்களிலிருந்தும் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. *1954* டிசம்பரில் வெளியிடப்பட்ட 'காதி-கிராமோத்யோக்' பத்திரிகையில், *1954* நவம்பரில் புனாவில் நடைபெற்ற முதலாவது அகில இந்திய காதி-கிராமோத்யோக் ஊழியர்கள் மகாநாட்டைப் பற்றிய செய்திகளே பூராவாக இருக்கின்றன. இது போன்ற பல விஷயங்களைப் பற்றி அதில் உபயோகமான பல தகவல்கள் இருக்கின்றன.

ராஜீய விடுதலை பெற்றுவிட்டோம். இனி பொருளாதார விடுதலை பெறும் வேலையைப் பணித்துக்கொண்டிருக்கிறோம். பொருளாதார விடுதலையென்றால், தொழில் நுட்பத்துறையில் முன்னேற்றமடைவது என்று சிலர் நினைக்கிறார்கள். மனித சமூகத்தின் க்ஷேம நலம்தான் எந்தப் பொருளாதார முன்னேற்றத்திற்கும் உரைகல். நமது பொருளாதாரக் கொள்கைகள் எந்த அளவுக்கு இந்நாட்டு மக்களின் சுபிட்சத்திற்கு உதவி செய்கின்றனவோ அந்த அளவுக்கு நமது முன்னேற்றம் உண்மையானதாக இருக்கும். காந்திஜியின் உபதேசங்களைத் துருவ நட்சத்திரத்துடன் ஒப்பிடலாம். அதைப் புறக்கணிப்பது விவேகமற்றதாகும். அப்படிச் செய்வதால் நமக்குத்தான் நஷ்டம் ஏற்படும். தார்மிக சுதந்திரம் இல்லாமல், ராஜீய, பொருளாதார சுதந்திரத்தில் அர்த்தமே இல்லை என்பதை மறக்காமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

—வி. பி. கேர்

* ஸ்ரீ. டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' – தொகுப்பு 5 வது பாகம்-பக்கம் 188

பகுதி ஒன்று

# சுயராஜ்யம், சோஷலிஸம், கம்யூனிஸம்

## 1

## இந்திய சுயராஜ்யம்

[1909-ஆம் ஆண்டில் காந்திஜி இங்கிலாந்திலிருந்து தென்னுப்பிரிக்காவுக்கு 'கில்டோனன்' என்ற கப்பலில் பிரயாணம் செய்தபோது, 'ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம்' என்ற சிறு நூலை எழுதினர்.* இக்கால நாகரிகத்தை அதில் காந்திஜி பலமாகக் கண்டித்திருக்கிறார். சுயராஜ்யம், நாகரிகம், வக்கீல்கள், டாக்டர்கள், யந்திரம், கல்வி, சாத்விக எதிர்ப்பு முதலிய இருபது அத்தியாயங்களைக் கொண்டது அந்நூல். சுயராஜ்யம், சமூகம், பொருளாதாரம் ஆகியவைகளைக் குறித்து காந்திஜியின் கருத்து அப்பொழுது எவ்விதம் இருந்தது என்பதைத் தெரிந்துகொள்ளுவது, அவருடைய தத்துவங்களையும், போராட்டங்களையும் புரிந்துகொள்ளு வதற்கு இன்றியமையாததாகையால் அச்சிறு நூலைப் படிக்க வேண்டியது அவசியம்.

இந்நூலைக் குறித்து மகாத்மா 1921 ஜனவரியில் 'எங் இந்தியா' வில் 'ஒரு விளக்கம்' எழுதினர். இந்நூலின் முக்கியத்தை அறிவதற்கு இது பயனுள்ளதாக இருக்குமாகையால் அதைச் சுருக்கிக் கீழே கொடுக்கிறோம்:]

''என்னுடைய இச்சிறு நூல் பலருடைய கவனத்தைக் கவர்ந்து வருவது நிச்சயமாக என் அதிர்ஷ்டமேயாகும். முதல் நூல் குஜராத்தியில் எழுதப்பட்டது. அதன் வரலாறு விசித்திரமானது. தென்னுப்பிரிக்காவில் 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையில் இது முதலில் பிரசுரமாயிற்று. பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்ட இந்தியருக்கும், தென்னுப்பிரிக்காவில் இருந்த அதே ரகத்தினருக்கும் பதில் சொல்லுவதற்காக 1909-ல் நான் லண்டனிலிருந்து

---

*இந்நூல் முழுவதும் 'மகாத்மா காந்தி நூல்கள்'—முதல் தொகுப்பில் 603-ஆம் பக்கம் முதல் 731-ஆம் பக்கம் வரையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூலின் முழு விவரத்தையும் படிக்க விரும்புவோர் இந்த முதல் தொகுப்பில் காண்க.

தென்னப்பிரிக்காவுக்குத் திரும்பி வந்துகொண்டிருக்கும்போது இதை எழுதினேன். லண்டனில் இருந்த ஒவ்வோர் இந்திய அராஜகவாதியுடனும் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. அவர்களுடைய வீரம் என்னைக் கவர்ந்தது. ஆனல், அவர்களுடைய உற்சாகம் தவருன வழியில் போவதை உணர்ந்தேன். இந்தியாவின் கஷ்டங்கள் தீருவதற்குப் பலாத்காரம் பரிகாரம் ஆகாது. இதிலிருந்து மாறுபட்டதும், உயர்வானதுமான ஓர் ஆயுதத்தைத் தற்காப்புக்காக உபயோகிப்பதே இந்தியப் பண்பாட்டிற்கு ஏற்றது என்பதை உணர்ந்தேன். தென்னப்பிரிக்க சத்தியாக்கிரகம் இன்னும் பச்சிளங் குழந்தை. அதற்கு இரண்டு ஆண்டுகள்கூட நிரம்பவில்லை. ஆனல், அதைப் பற்றி ஓரளவு நம்பிக்கையுடன் நான் எழுதக்கூடிய வகையில் அது வளர்ந்துவிட்டது. நான் எழுதியதற்கு எவ்வளவோ பாராட்டுக்கள் வந்ததால், இது இச்சிறு புத்தகமாக வெளிவந்தது. இது இந்தியாவிலும் கொஞ்சம் கவனத்தைக் கவர்ந்தது. பம்பாய் அரசாங்கம் அதன் விநியோகத்தைத் தடுத்தது. அதற்கு ஒரு பதிலாக இதன் மொழி பெயர்ப்பை வெளியிட்டேன். இதில் அடங்கியுள்ள விஷயங்களை என் ஆங்கில நண்பர்கள் அறிய வேண்டியது அவசியமென நினைத்தேன்.

"குழந்தையின் கையிலும் கொடுக்கக்கூடிய ஒரு புத்தகம் இது என்பதே என் கருத்து. துவேஷத்திற்குப் பதிலாக இது அன்பு நெறியைப் புகட்டுகிறது. பலாத்காரத்திற்குப் பதிலாக தன்னலத் தியாகத்தை இது உணர்த்துகிறது. மிருக பலத்திற்கு எதிரே ஆத்ம பலத்தின் உயர்வை இது வலியுறுத்துகிறது. இதுவரை பல பதிப்புக்கள் வெளியாகிவிட்டன. விரும்புகிறவர்கள் இதைப் படிக்க வேண்டும் என்று கூறுவேன். இப்புத்தகத்திலிருந்து ஒரு சொல்லைத் தவிர வேறு எதையுமே நான் நீக்கவில்லை; அந்தச் சொல்லையும் ஒரு பெண் நண்பர் நிமித்தம் நீக்கினேன்.

"இச்சிறு நூல் 'நவநாகரிக'த்தைப் பலமாகக் கண்டிக்கிறது. இது 1909-இல் எழுதப்பட்டது. அன்று நான் கொண்டிருந்த அபிப்பிராயமே இன்றும், இன்னும் பலமானதாக இருக்கிறது. 'நவ நாகரிக'த்தை இந்தியா கைவிடுமானல் அதனல் அதற்கு நன்மையே உண்டு என்று நான் எண்ணுகிறேன்.

"இதில் விவரிக்கப்பட்டிருக்கும் சுயராஜ்யத்தை அடைவதற்கு நான் இன்று முயற்சி செய்து வருகிறேன் என்று நினைத்துவிட வேண்டாம் என வாசகர்களை எச்சரிக்கை செய்கிறேன். அதற்கு வேண்டிய பக்குவத்தை இந்தியா இன்னும் அடையவில்லை என்பதை நான் அறிவேன். நான் அப்படிக் கூறுவது துடுக்குத்தனமாகக்கூடத் தோன்றலாம். ஆனல், அது தான் என் சித்தாந்தம். இதில் கூறப்பட்டிருக்கும் சுயாட்சியை அடையத் தனிப்பட்ட முறையில் நான் பாடுபட்டு வருகிறேன். ஆனல் இன்ரே, மற்றவர்களுடனும் கூடிய என்னுடைய நடவடிக்கைகளெல்லாம், இந்திய மக்களின் விருப்பத்திற்கு இணங்கப் பார்லிமெண்டரி முறையான சுயராஜ்யத்தை அடைவதிலேயே ஈடுபட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆஸ்பத்திரிகள், ரெயில்வேக்கள் ஆகியவற்றை அழித்துவிட வேண்டும் என்பது என் நோக்கம் அல்ல. ஆனல், அவை இயற்கையாகவே அழிந்து போய் விடுவதை வரவேற்பேன். உயர்வானதும், தூயதுமான நாகரிகத்திற்கு ரெயில்வேக்களும், ஆஸ்பத்திரிகளும் எடுத்துக் காட்டுகளல்ல. இருந்து ஆக

வேண்டிய தீமைகளாகவே அவைகளைக் கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் ஒழுக்க மேம்பாட்டை அவை இம்மியும் உயர்த்திவிடா. நீதி ஸ்தலங்களை அடியோடு அழித்துவிட வேண்டும் என்றும் நான் முயற்சி செய்யவில்லை. விரும்பும் வகையில் அவை இருக்க வேண்டும் என்பதே என் கருத்து. எல்லா யந்திரங்களையும் மில்களையும் அழித்துவிடுவதற்கும் நான் முயற்சி செய்யவில்லை. இன்று மக்கள் எதிர்பார்ப்பதற்கு மேல் உயர்வானதோர் எளிமையும் தியாகமுமே அதற்குத் தேவை.

"இப்பொழுது நிறைவேற்றப்பட்டு வரும் வேலைத் திட்டத்தின் ஒரே பகுதி, அகிம்சையைப் பற்றியதே. அதுகூட இந்நூலின் கருத்துக்கு இணங்க நிறைவேற்றப்படவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அதன்படி நிறைவேற்றப்பட்டு வருமானல், இந்தியா ஒரே நாளில் சுயராஜ்யத்தை அடைந்துவிடும். இந்தியா, தன்னுடைய தருமத்தின் தீவிரமான பகுதியாக அன்புத் தத்துவத்தை மேற்கொண்டு, தன்னுடைய ராஜீய காரியங்களிலும் அதைப் புகுத்தியிருக்குமானல், இந்தியாவுக்குச் சுய ராஜ்யம் சுவர்க்கத்திலிருந்து தானே வரும். ஆனல், அப்படி ஏற்படும் சமயம் வெகு தொலைவில் இருக்கிறது என்பதை மனவேதனையுடன் அறிவேன்......"

பின்னர் 1938 ஜுலை 14-ஆம் தேதி இந்நூலைக் குறித்துக் காந்திஜி எழுதுகையில் வருமாறு கூறினர்:

"இச்சிறு நூலை நான் திரும்ப எழுதுவதானல், அதன் மொழி நடையில் இங்கும் அங்கும் நான் சில மாறுதல்களைச் செய்யக்கூடும். ஆனல், இடையில் இந்த முப்பது ஆண்டுகளில் நான் எத்தனையோ கஷ்டங்களை யெல்லாம் பார்த்த பிறகும், இதில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்களை மாற்றிக்கொள்ளு வதற்கான காரணம் எதுவும் எனக்குத் தோன்றவில்லை."

> எனவே அந்த நூலில் காந்திஜி தெரிவித்த கருத்தில் அவர், முக்கிய அம்சங்கள் எதிலும் பிற்காலத்தில் தமது கருத்தை மாற்றிக்கொண்டது கிடையாது என்பது குறிப் பிடத்தக்கதாகும்.

## 2

# சுயராஜ்ய அமைப்பில் இந்தியா

மேற்கு இந்திய தேசீய மிதவாதிகள் சங்கத்தின் பிரசாரக் கமிட்டி வெளியிட்டுள்ள பிரசுரங்களை வாசகர்கள் எனக்கு அனுப்பியிருக்கிருர்கள்.

*6-வது பிரசுரத்தில் பின்கண்டவை காணப்படுகின்றன:*

"காந்தி ராஜ்யம் வரும்போது இந்தியா எப்படி இருக்கும்?

"ரயில்கள் இராது. ஆஸ்பத்திரிகள் இருக்கமாட்டா. யந்திரங்கள் இருக்கப்போவதில்லை. சைன்யமும், கடற்படையும் வேண்டியிராது. ஏனெ

வில், உங்களிடம் இந்தியா தலையிடாதென்று மற்ற நாடுகளுக்குக் காந்திஜி உறுதி கூறிவிடுவார். ஆகையால், அவர்கள் இந்தியாவில் தலையிடமாட்டார்கள்!

''சட்டங்கள் அவசியமில்லை, கோர்ட்டுகள் அவசியமில்லை. ஏனெனில், அவரவர்கள் வைத்ததே சட்டமாக இருக்கும். ஒவ்வொருவரும் தன்னிஷ்டப்படி எதையும் செய்யலாம். வாழ்க்கை ரொம்ப சுலபமாயிருக்கும். ஏனெனில், ஒவ்வொருவரும் ஒரு கதர் கௌபீனத்தை அணிந்துகொண்டு, திறந்த வெளியில் தூங்க வேண்டியிருக்கும்.''

மிகைப்படுத்திக் கூறப்பட்டிருப்பது இது என்று நான் சொல்ல முடியாது. இது, மேல் நாட்டு யுத்த முறையில் அனுமதிக்கப்படும் சாமர்த்தியமான ஒரு கேலிச் சித்திரமாகும். இது நேரடியாகப் பொய்யைச் சொல்லவில்லை; பொய் அர்த்தத்தைத்தான் கற்பிக்கிறது. என் கட்சியைச் சொல்லுகிறேன். முதலாவதாக, 'காந்தி ராஜ்ய'த்தை ஸ்தாபிக்க இந்தியா முயற்சி செய்துகொண்டிருக்கவில்லை. சுயராஜ்யம் பெறவே உண்மையான முயற்சியை அது செய்துகொண்டிருக்கிறது. சுயராஜ்யம் பெறுவதற்காக, மகிழ்ச்சியுடன் காந்தியையும் அது பலி கொடுக்கும்; அப்படிச் செய்வது நியாயமும் ஆகும். 'காந்தி ராஜ்யம்' என்பது ஓர் லட்சிய நிலை. அந்த நிலையில் ஐந்து எதிர்மறைகளும் ஓர் உண்மையான சித்திரத்தைப் பிரதிபலிக்கும். ஆனல், சுயராஜ்யத்தில் ரயில் இராது, ஆஸ்பத்திரி இராது, யந்திரம் இராது, சைன்யம் இராது, கடற்படை இராது, சட்டம் இராது, கோர்ட் இராது என்று யாரும் கனவு காணமாட்டார்கள். அப்படி நான் கனவு காண்பதே கிடையாது. அதற்கு மாருக, ரயில்வேக்கள் இருக்கும். ஆனல், அவை ராணுவத்தின் உபயோகத்திற்காக என்ரே, இந்தியாவின் செல்வத்தைச் சுரண்டுவதற்காகவோ இரா. உள்நாட்டு வர்த்தகத்தை அபிவிருத்தி செய்யவும், மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளின் நிலைமையைச் சௌகரியமாக்குவதற்கும் அவை உபயோகிக்கப்படும். மூன்ருவது வகுப்புப் பிரயாணிகள் கொடுக்கும் கட்டணத்திற்குப் பதிலாக அவர்களுக்குச் சௌகரியம் கிடைக்கும். சுயராஜ்யத்தின் கீழ் வியாதியே வராது என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. ஆகையால், நிச்சயமாக ஆஸ்பத்திரிகள் இருக்கும். ஆனல், அப்போது ஆஸ்பத்திரிகள் விபத்துக்குள்ளானவர்களுக்குச் சிகிச்சை செய்வதற்கே முக்கியமாகப் பயன்படுமென்றும், புலன் நுகர்ச்சி காரணமாகக் கஷ்டப்படுபவர்களுக்காக அவை இராவென்றும் நம்புவோமாக. யந்திரங்களும் இருக்கும். ராட்டினமும் ஒரு நுட்பமான யந்திரம்தானே? சுயராஜ்யம் பெற்ற இந்தியாவில், இப்போதிருப்பதைப் போல் மக்களைக் கசக்கிப் பிழிவதற்காக இல்லாமல், மக்களின் நன்மைக்காகப் பல தொழிற்சாலைகள் ஏற்படும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. கடற்படையைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனல், எதிர்கால இந்தியாவின் சைன்யம், இந்தியாவை அடிமைத்தனத்தில் வைத்திருப்பதற்காகவும், மற்ற நாடுகளின் சுதந்திரத்தைப் பறிப்பதற்காகவும் கூலிகளைக் கொண்டதாக இராது என்பது

எனக்குத் தெரியும். மேலும், சைன்யம் பெரும் அளவில் குறைக் கப்படும் என்றும், அதில் பெரும்பாலும் தொண்டர்களாகவே இருப்பார்கள் என்றும், இந்தியாவில் போலீஸ் வேலை செய் வதற்கே அவர்கள் உபயோகிக்கப்படுவார்கள் என்றும் எனக்குத் தெரியும். சுயராஜ்ய இந்தியாவில் சட்டங்களும், கோர்ட்டு களும் இருக்கும். ஆனால், அவை இப்போதிருப்பதைப் போல் மக்களை அடிமைப்படுத்தி, ஒரு தேசம் பூராவையுமே மேற் கொண்டும் அடிமைப்படுத்துவதில் முனைந்துள்ள அதிகார வர்க் கத்தின் கைக்கருவிகளாக இராமல், மக்களின் உரிமைகளுக்குக் காவலர்களாய் இருக்கும். கடைசியாக, இஷ்டப்படுபவர்கள் கௌபீனங்களை அணிந்து கொண்டு, திறந்த வெளியில் தூங்கு வதை யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. இப்பொழுது போதிய ஆடைகள் வாங்குவதற்கு வழியில்லாமல் மக்கள் அழுக்கு கந்தலை கௌபீனமாகக் கட்டிக்கொண்டு போக வேண்டியிருக்கிறது. தங்குவதற்கு வீடு இல்லாததால் பட்டினியினாலும் களைப்பினாலும் சோர்வடைந்த தமது உடல்களைத் திறந்த வெளியில் கிடத்த வேண்டியிருக்கிறது. ஆனால், சுயராஜ்ய இந்தியாவில் அம்மாதி ரியான அவசியமிராது என்றே நம்புகிறேன். ஆகையால், 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற நூலில் தெரிவிக்கப்பட்ட சில கருத்துக் களை, அதன் வாசகத்திலிருந்து பிரித்தெடுத்து, எல்லோரும் இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென நான் பிரசாரம் செய்வதாக மக்கள் நினைக்கும்படி செய்வது சரியாகாது.

—'எங் இந்தியா' – 9—3—1922

[இக்கட்டுரை முதலில் 'தவறான கருத்தை உண்டாக்குவது' என்ற தலைப்பில் வெளியானது.]

## 3

# தேசீய கோரிக்கை

[1931 செப்டம்பர் 5-ஆம் தேதி லண்டனில் நடந்த வட்ட மேஜை மகா நாட்டின் சமஷ்டி அமைப்பு உப கமிட்டியில் காந்திஜி செய்த பிரசங்கம்.]

இந்திய தேசீய காங்கிரஸின் நிலை என்ன என்பதை இங்கே எடுத்துச் சொல்ல வேண்டியிருப்பது, எனக்கு மிகவும் சங்கடமான தாக இருக்கிறது என்பதை முதலில் தெரிவித்துக் கொள்ளு கிறேன். உரிய காலம் வரும்போது, முழு ஒத்துழைப்பு மனப் பான்மையுடனும், கருத்தொற்றுமைகளைக் கண்டுபிடிக்க முழு முயற்சி செய்ய வேண்டும் என்ற விருப்பத்துடனுமே இந்த உப கமிட்டி கூட்டத்திலும், வட்டமேஜை மகாநாட்டிலும் கலந்து கொள்ளுவதற்காக நான் லண்டனுக்கு வந்திருக்கிறேன் என் பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எந்தக் கட்டத்

திலும் அரசாங்கத்திற்குச் சங்கடம் விளைவிக்க வேண்டும் என்பது என்னுடைய விருப்பமல்ல என்பதை மன்னர் சர்க்காருக்கு உறுதி கூறுகிறேன். அதே மாதிரி, நம்மிடையே எவ்வளவு கருத்து வேற்றுமைகள் இருந்தாலும், அவர்களுக்கு நான் எந்த விதமான தடங்கல்களும் செய்யமாட்டேன் என்று இங்குள்ள எனது சகபாடிகளுக்கும் உறுதி கூறுகிறேன். ஆகவே, என்னுடைய நிலைமை, முற்றிலும் உங்களுடைய நல்லெண்ணத்தையும், மன்னர் சர்க்காரின் நல்லெண்ணத்தையுமே பொறுத்திருக்கிறது. என்னால் இந்த மகாநாட்டுக்கு எந்தவிதமான பிரயோசனமும் இல்லை என்று எப்போதாவது எனக்குத் தெரிந்தால், இங்கிருந்து வாபஸாகத் தயங்கமாட்டேன். இந்தக் கமிட்டியையும், மகா நாட்டையும் நடத்தும் பொறுப்புள்ளவர்களுக்கும் ஒரு விஷயம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவர்கள் சூசகமாகச் சொன்னால் கூட இங்கிருந்து வாபஸ் பெறுவதற்கு நான் தயங்கமாட்டேன்.

அரசாங்கத்திற்கும், காங்கிரஸுக்குமிடையே அடிப்படையான கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன என்று எனக்குத் தெரியும். எனது சகபாடிகளுக்கும் எனக்குமிடையே மிக முக்கியமான வித்தியாசங்கள் இருப்பதும் சாத்தியமே. அதனால் தான் இம்மாதிரி நான் சொல்ல வேண்டியிருக்கிறது. மேலும், நான் எதையும் செய்வதற்குச் சில கட்டுப்பாடுகளும் இருக்கின்றன. இந்திய தேசீய காங்கிரஸின் ஓர் எளிய, பணிவான பிரதிநிதிதான் நான். காங்கிரஸ் என்பது என்ன, அதனுடைய நோக்கங்கள் என்ன என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுவது நல்லது. பின்னர் நீங்கள் என்னிடம் அனுதாபம் காட்டுவீர்கள். ஏனெனில், என் மீதுள்ள பாரம் உண்மையிலேயே மிகப் பெரியது என்று எனக்குத் தெரியும்.

## காங்கிரஸ் என்பது என்ன?

இந்தியாவிலுள்ள ராஜீய ஸ்தாபனங்களில் காங்கிரஸ்தான் மிகப் பழமையானது என்று நான் நினைக்கிறேன். இது சுமார் ஐம்பது ஆண்டுகளாகச் செயலாற்றி வருகிறது. இந்தக் காலத்தில் ஒவ்வொரு வருடமும் அதனுடைய வருடாந்திர மகாநாடு நடப்பது தடைப்பட்டதே இல்லை. காங்கிரஸ் ஒரு தேசீய ஸ்தாபனமே. குறிப்பிட்ட ஒரு சாதி, அல்லது வகுப்பு நலனுக்காக அது வேலை செய்யவில்லை. அது, எல்லா இந்திய நலன்களுக்கும், எல்லா வகுப்புகளுக்கும் பிரதிநிதித்துவம் வகிக்கிறது. காங்கிரஸைத் தோற்றுவிக்க வேண்டும் என்ற எண்ணம் முதல் முதலில் ஓர் ஆங்கிலேயருக்குத்தான் தோன்றியது என்பது எனக்கு மிகவும் மகிழ்ச்சியளிக்கும் ஒரு விஷயமாகும். ஆலன் ஆக்டேவியஸ் ஹியூம்தான் காங்கிரஸின் பிதா. இரு பார்ஸி பிரமுகர்கள் அதை வளர்த்தார்கள். சர் பிரோஸ்ஷா மேத்தாவும், இந்தியாவின் பழம் பெரும் கிழவர் என்று எல்

லோராலும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்ட தாதாபாய் நௌரோஜியும் அவர்களாவர். ஆரம்பகாலம் முதலே காங்கிரஸில் முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், ஆங்கிலோ - இந்தியர்களும், மற்றும் எல்லா மதத்தினரும், வகுப்பினரும், பிரிவினரும் ஏறக்குறைய பூர்ண பிரதிநிதித்துவம் பெற்றிருந்தார்கள். காலஞ் சென்ற பத்ருத்தீன் தயாப்ஜி காங்கிரஸுடன் தம்மை இணைத்துக் கொண்டிருந்தார். முஸ்லிம்களும், பார்ஸிகளும் காங்கிரஸ் அக்ராசனர்களாக இருந்திருக்கிறார்கள். டபிள்யூ. ஸி. பானர்ஜி என்ற ஓர் இந்தியக் கிறிஸ்தவரும் அதன் அக்ராசனராயிருந்திருக்கிறார். காளிசரண் பானர்ஜியைவிட அவ்வளவு தூய்மையான ஓர் இந்தியரை நான் அறிந்ததில்லை. அவரும் தம்மைப் பூராவாகக் காங்கிரஸில் ஐக்கியப்படுத்திக்கொண்டிருந்தார். ஸ்ரீ கே. டி. பால் நம்மிடையே இல்லாதது பற்றி, என்னைப் போலவே நீங்களும் வருந்துவீர்கள். அவர் உத்தியோக பூர்வமாகக் காங்கிரஸைச் சேர்ந்தவரல்ல என்றாலும், அவர் முழு தேசீயவாதி ; காங்கிரஸ் அனுதாபி.

காலஞ்சென்ற மௌலானா முகம்மதலியும் காங்கிரஸ் அக்ராசனராயிருந்தார். 15 மெம்பர்களைக்கொண்ட காரியக் கமிட்டியில் இப்போது நான்கு முஸ்லிம்கள் இருக்கிறார்கள். பெண்களும் காங்கிரஸ் அக்ராசனர் பதவியை வகித்திருக்கிறார்கள். டாக்டர் அன்னி பெஸண்ட்டும், பின்னர் ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும் அக்ராசனர்களாக இருந்தார்கள். ஸ்ரீமதி சரோஜினி நாயுடு காரியக் கமிட்டி மெம்பராகவும் இருக்கிறார். இவ்வாறாக எங்களுக்கு சாதி, மத வித்தியாசமுமில்லை ; ஆண், பெண் என்ற பாகுபாடும் இல்லை.

ஆரம்பம் முதற்கொண்டே தீண்டத்தகாதவர்கள் என்று சொல்லப்படுபவர்களின் நலன்களுக்காகக் காங்கிரஸ் வேலை செய்து வந்திருக்கிறது. ஒரு காலத்தில், ஒவ்வொரு வருடாந்திர காங்கிரஸ் மகாநாட்டுடனும் சமூக சீர்திருத்த மகாநாடொன்று நடத்தப் படுவதுண்டு. காலஞ்சென்ற ரானடே, தம்முடைய பல வேலைகளின் மத்தியில் இதற்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருந்தார். சமூக சீர்திருத்த மகாநாட்டில் அவருடைய தலைமையின் கீழ் தீண்டாதார் பற்றிய சீர்திருத்தம் முக்கிய இடம் பெற்றிருப்பதைக் காண்பீர்கள். 1920-ல் காங்கிரஸே ஒரு முக்கிய நடவடிக்கை எடுத்துக்கொண்டது. தீண்டாமை ஒழிப்பு ராஜீய மேடைக்குக் கொண்டுவரப்பட்டு, அது முக்கியமான ஒரு ராஜீய பிரச்னையாக்கப்பட்டது. சுயராஜ்யம் பெறுவதற்கு எல்லா மதத்தினரும் ஒத்துழைக்க வேண்டியது இன்றியமையாதது என்ற பொருளில், காங்கிரஸ் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை விரும்பியது. அதே மாதிரி, பூர்ண சுதந்திரம் பெறுவதற்குத் தீண்டாமையை அகற்றுவதும் இன்றியமையாதது என்று காங்கிரஸ் கருதியது.

1920-இல் காங்கிரஸ் எடுத்துக்கொண்ட அந்த நிலை இன்னும் அப்படியே இருந்து வருகிறது. ஆகவே, ஆரம்ப காலம்

முதலே காங்கிரஸ் முற்றிலும் தேசீய ஸ்தாபனம் என்ற தன்மை யிலேயே வேலைசெய்து வந்திருக்கிறது என்பதைக் காண்பீர்கள்.

இந்திய சமஸ்தானுதிபதிகளின் பிரச்னையையும் காங்கிரஸ் எடுத்துக்கொண்டது என்பதை, உங்கள் அனுமதியுடன் ஆரம் பத்திலேயே குறிப்பிட விரும்புகிறேன். இந்தியாவின் பழம் பெரும் கிழவர்தான், காஷ்மீர், மைசூர் சமஸ்தானங்களுக்காக வாதாடினர் என்பதை இந்தக் கமிட்டிக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இந்த இரு பெரிய ராஜ வம்சங்களும், தாதா பாய் நெளரோஜிக்கும், காங்கிரஸுக்கும் பெரிதும் கடமைப்பட் டிருக்கின்றன என்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்போதுகூட, இந்திய சமஸ்தானங்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதிருப்பதன் மூலம் அவர் களுக்கு உதவி புரியவே காங்கிரஸ் முயற்சி செய்திருக்கிறது.

நான் கூறியுள்ள இந்தச் சுருக்கமான முன்னுரையிலிருந்து, தான் சொன்னபடி செய்வதற்குக் காங்கிரஸ் முயற்சி செய்திருக் கிறது என்பதை இந்த உப கமிட்டியும், மற்றவர்களும் புரிந்து கொள்ள முடியும் என்று நம்புகிறேன். காங்கிரஸ் பல தடவை களில் தவறியிருக்கிறது என்பதையும் நான் அறிவேன். ஆனால், காங்கிரஸின் சரித்திரத்தை நீங்கள் ஆராய்ந்து பார்த்தால், தோல்விகளைவிட, வர வர அதிக வெற்றிகளையே அது பெற்றிருக் கிறது என்பதை அறிவீர்கள். பிரிட்டிஷ் இந்தியாவில் இருப்ப வர்களாயினும் சரி, இந்தியாவிலிருப்பவர்களாயினும் சரி, இந்தியா பூராவிலுமுள்ள ஏழு லட்சம் கிராமங்களில் சிதறிக் கிடக்கும், அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளுக்கே காங்கிரஸ் முக்கியமாகப் பிரதிநிதித் துவம் வகிக்கிறது. காப்பாற்றத் தக்கது என்று காங்கிரஸ் கருதும் ஒவ்வொரு நலனும், இந்த வாயில்லாப் பூச்சிகளின் நலன் களுக்கு ஏற்றதாக இருக்க வேண்டும். அவ்வப்போது பல நலன் களுக்கிடையே முரண்பாடுகள் ஏற்படுவது போல் தோன்று வதைக் காண்பீர்கள். உண்மையான மோதல் ஏற்பட்டால், இந்த வாயில்லாப் பூச்சிகளின் நலன்களுக்காகக் காங்கிரஸ் வேறெல்லா நலன்களையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கும் என்று காங்கிரஸின் சார்பாகக் கொஞ்சமும் தயக்கமின்றி நான் கூறுகிறேன். ஆகவே, அது முக்கியமாக விவசாயிகளின் ஸ்தா பனமேயாகும்; அல்லது வர வர அத்தன்மை கொண்டதாகிக் கொண்டு வருகிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்தின் மூலம் சுமார் 2000 கிராமங்களிலுள்ள 50,000 பெண்களுக்குக் காங்கிரஸ் வேலை தேடிக் கொடுத்திருக்கிறது என்பதை அறிய உங்களுக்கும், உப கமிட்டியிலுள்ள இந்திய மெம்பர்களுக்கும் கூட ஆச்சரியமாக இருக்கும். இவர்களில் சரி பாதியினர், நிச்சய மாக முஸ்லிம் பெண்களே. இவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் தீண்டத் தகாதோர் என்று சொல்லப்படும் வகுப்புகளைச் சேர்ந் தவர்கள். இவ்வாருக, நாங்கள் இந்தக் கிராமங்களுக்குள்ளும்

புகுந்து வேலை செய்திருக்கிறோம். மொத்தம் 7,00,000 கிராமங் களிலுமே வேலை செய்ய முயற்சி செய்யப்படுகிறது. இது அதிக மான வேலைதான். ஆயினும் மனிதனின் முயற்சியால் இதைச் செய்வது சாத்தியமென்றால், சீக்கிரத்தில் காங்கிரஸ் எல்லாக் கிராமங்களுக்குள்ளும் புகுந்து அங்கெல்லாம் கைராட்டினத்தின் செய்தியைப் பரப்புவதைக் காண்பீர்கள்.

## காங்கிரஸின் கோரிக்கை

இதுவே காங்கிரஸின் பிரதிநிதித்துவத்தின் தன்மையாகும். இந்த நிலைமையில் காங்கிரஸின் கட்டளையை நான் வாசிக்கும் போது நீங்கள் ஆச்சரியப்படமாட்டீர்கள். அது உங்களுக்கு அபஸ்வரமாகத் தொனிக்காது என்றும் நம்புகிறேன். கொஞ்சமும் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்றைக் காங்கிரஸ் கோருவதாக உங்களுக்குத் தோன்றலாம். அது எப்படியிருந்தாலும், காங் கிரஸின் சார்பாக அதனுடைய கோரிக்கையைக் கண்ணிய மாகவும், அதே சமயத்தில் மிகுந்த உறுதியுடனும் எடுத்துக் கூறுவதற்காகவே இங்கே நான் வந்திருக்கிறேன். என்னால் முடிந்த அளவு நம்பிக்கையுடனும், சக்தியுடனும் அக்கோரிக்கையை நிறைவேற்றுவதற்காக இங்கே நான் வந்திருக்கிறேன். இந்தக் கோரிக்கை மக்களின் நலன்களுக்கு விரோதமானது என்று என்னை நீங்கள் திருப்தி செய்ய முடிந்தால், என் அபிப்பிரா யத்தை நான் மாற்றிக்கொள்ளுகிறேன். ஆயினும், காங்கிரஸின் பிரதிநிதியாக நான் உபயோகமான முறையில் செயலாற்ற வேண்டுமானால், இதை மாற்றிக்கொள்ளுவதற்கு என் எஜமானர் களின் சம்மதத்தைப் பெற வேண்டும். இந்தக் கட்டத்தில் என் னுடைய வரம்பை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ளுவதற்காக இந்தக் கட்டளையை உங்களுக்கு வாசித்துக் காட்ட உத்தேசித் துள்ளேன்.

இது கராச்சியில் நடந்த இந்திய தேசீய காங்கிரஸில் நிறை வேற்றப்பட்ட ஒரு தீர்மானமாகும் :

"காரியக் கமிட்டிக்கும், சர்க்காருக்குமிடையே ஏற்பட்டுள்ள தாற்கா லிக ஒப்பந்தத்தை இந்தக் காங்கிரஸ் பரிசீலனை செய்து, அதை அங்கீகரிக் கிறது. அதே சமயத்தில், காங்கிரஸின் லட்சியமான பூர்ண சுயராஜ்யம் மாறாமல் அப்படியேதான் இருக்கிறது என்பதைத் தெளிவாக்க விரும்புகிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதிகளுடன் சேர்ந்து ஒரு மகாநாட்டில் பிரதி நிதித்துவம் பெறுவதற்குக் காங்கிரஸுக்கு வாய்ப்புக் கிடைத்தால், காங்கிரஸ் தூது கோஷ்டி இந்த லட்சியத்திற்காகவே வேலை செய்யும். முக்கியமாகப் பின்கண்ட விஷயங்களில் நாட்டுக்கு அதிகாரம் கிடைப்பதற்கு அது வேலை செய்யும்: சைன்யம், வெளிநாட்டு விவகாரம், வரி, நிதி, பொருளாதாரக் கொள்கை ஆகியவைகளில் நாட்டு மக்களுக்கு அதிகாரம் இருக்க வேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷ் சர்க்காரின் நிதி ஏற்பாடுகளைப் பரிசீலனை செய்வதற் குப் பட்சபாதமற்ற ஒரு மன்றம் வேண்டும். இந்தியா அல்லது இங்கிலாந்து

ஏற்றுக்கொள்ள வேண்டிய பொறுப்புக்களைப் பற்றி மதிப்பிடுவதும் தேவை. இரு தரப்பினரில் யாரும் இந்தக் கூட்டுறவிலிருந்து விலகிக்கொள்ளும் உரிமை வேண்டும். ஆயினும், இந்தியாவின் நலன்களுக்கு ஏற்றதாக இருந்தால் இதில் சில மாறுதல்களுக்குச் சம்மதிக்க காங்கிரஸ் தூதுகோஷ்டிக்கு உரிமை உண்டு.''

இதைத் தொடர்ந்து நியமனம் வருகிறது. இந்தக் கட்டளையைக் கருத்தில் வைத்துக்கொண்டு, என்னாலியன்ற வரையில் கவனத்துடன், வட்டமேஜை மகாநாட்டினால் நியமிக்கப்பட்ட பல்வேறு உப கமிட்டிகள் செய்துள்ள தாற்காலிகமான முடிவுகளைப் பரிசீலனை செய்ய முயற்சித்திருக்கிறேன். மன்னர் சர்க்காரின் கொள்கையைப் பற்றி பிரதம மந்திரி நன்கு ஆலோசித்துச் சமர்ப்பித்துள்ள அறிக்கையையும் ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்தேன். நான் கூறுவதில் தவறு இருந்தால் திருத்திக் கொள்ளுகிறேன். ஆனால், இந்த தஸ்தாவேஜை நான் புரிந்து கொள்ள முடிந்தவரையில், காங்கிரஸின் கோரிக்கைக்கு அது குறைவானதாகவே இருக்கிறது என்றே நான் நினைக்கிறேன். இந்தியாவின் நலன்களுக்கு உகந்த மாறுதல்களை நான் ஏற்றுக் கொள்ளலாமென்பது உண்மையே. ஆனால், அவையோ, எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள கட்டளையின் அடிப்படைகளுக்கு ஏற்றவைகளாக இருக்க வேண்டும்.

டில்லியில் இந்திய அரசாங்கத்திற்கும் காங்கிரஸுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை இந்தச் சந்தர்ப்பத்தில் நான் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறேன். என்னைப் பொறுத்தவரையில், அந்த ஒப்பந்தம் புனிதமானது என்று நான் கருதுகிறேன். அந்த ஒப்பந்தத்தில் சமஷ்டிக் கொள்கையைக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டிருக்கிறது. அதாவது மத்திய சர்க்காரில் பொறுப்பு இருக்க வேண்டும் என்ற கொள்கை அது. அத்துடன், இந்தியாவின் நலன்களுக்கு அவசியமானவை என்று கருதப்படும் பாதுகாப்புகள் இருக்கவேண்டும் என்ற கொள்கையையும் ஒப்புக்கொண்டிருக்கிறது.

## சம உரிமையுள்ள கூட்டு

நேற்று ஒரு சொற்றொடர் உபயோகிக்கப்பட்டது. அந்தப் பிரதிநிதி யார் என்று எனக்கு ஞாபகமில்லை. ஆனால், அவர் சொன்னது என் மனத்தில் ஆழப்பதிந்தது. ''வெறும் ராஜீயத் தன்மை வாய்ந்த அரசியல் அமைப்பு மட்டும் எங்களுக்கு வேண்டியதில்லை" என்று அவர் சொன்னார். அந்தச் சமயத்தில் எனக்குத் தோன்றிய அதே பொருளில்தான் அவர் பேசினாரா என்பது எனக்குத் தெரியாது. 'இது ஒரு நல்ல சொற்றொடர்' என்று உடனே எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். வாசித்துப் பார்க்கும்போது, ராஜீயத் துறையில் இந்தியா விரும்புவதையெல்லாம் கொடுப்பது போன்றதும், ஆனால், உண்மையில்

எதையும் கொடுக்காததுமான ஒரு வெறும் ராஜீயத் தன்மை வாய்ந்த அரசியல் அமைப்பில் காங்கிரஸ் திருப்தியடையாது என்பது உண்மையே. நானும் திருப்தியடைய மாட்டேன். பூரண சுதந்திரம்தான் வேண்டும் என்று நாங்கள் பிடிவாதமாயிருக்கிறோம் என்றால், அது அகம்பாவ உணர்ச்சியினால் அல்ல. பிரிட்டிஷ் மக்களுடன் நாங்கள் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமல் துண்டித்துக் கொண்டுவிட்டோம் என்று உலகத்தில் பறைசாற்றுவதற்காக அல்ல அது. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அதற்கு மாறாக, கூட்டாளித்துவத்தையே காங்கிரஸ் விரும்புகிறது என்பதை இந்தக் கட்டளையிலேயே காணலாம். பிரிட்டிஷ் மக்களுடன் தொடர்பு இருக்க வேண்டும் என்றே காங்கிரஸ் விரும்புகிறது. ஆனால், அந்தத் தொடர்பு முற்றிலும் சம உரிமைகளுள்ள இரு கூட்டாளிகளிடையே உள்ள உறவைப் போன்றதாய் இருக்க வேண்டும். ஒரு காலத்தில் என்னைப் பிரிட்டிஷ் பிரஜை என்று சொல்லிக்கொள்ளுவதில் பெருமைப் பட்டுக்கொண்டிருந்தேன். ஆனால், பல வருடங்களாக இப்போது நான் பிரிட்டிஷ் பிரஜை என்று சொல்லிக்கொள்ளுவதை நிறுத்தி விட்டேன். ஒரு பிரஜை என்பதைவிட கலகக்காரன் என்று அழைக்கப்படுவதையே விரும்புவேன். ஆனால், ஒரு சாம்ராஜ்யத்தில் அல்லாமல், ஒரு காமன்வெல்த்தில், சாத்தியமானால் கூட்டாளித்துவத்தில் பிரஜையாயிருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். கடவுளின் கிருபை இருந்தால் அது, ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது சுமத்துவதாய் இராமல், கலைக்க முடியாத ஒரு கூட்டாளித்துவமாய் இருக்கும். ஆகையால், இந்தக் கூட்டாளித்துவத்தை, தொடர்பைக் கத்தரித்துக்கொள்ளுவதற்கு இரு தரப்பினருக்கும் உரிமை இருக்கவேண்டும் என்று காங்கிரஸ் கூறுவதைக் காணலாம். ஆகவே, இது இரு தரப்பினருக்கும் பரஸ்பரம் நன்மையானதாகத்தான் இருக்க முடியும். பொறுப்பு வாய்ந்த பிரிட்டிஷ் ராஜதந்திரிகள், தங்கள் நாட்டின் நிதி நிலைமையைச் சீர்ப்படுத்தும் உள்நாட்டு விஷயத்தில் முழுக் கவனம் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் புரிந்துகொள்ள முடிகிறது. அவர்கள் அப்படித்தான் இருக்க முடியும். இந்த உப கமிட்டியிலுள்ள மெம்பர்களாகிய நாம், இந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு ஒரு கால்கட்டாய் இருப்போமோ, மூன்றாவது மனிதர்களாய் இருப்போமோ என்று நான் லண்டனுக்கு வந்துகொண்டிருக்கும்போதே எனக்குத் தோன்றியது. நாம் அப்படி இல்லாமல் இருக்கலாம்; தங்களுடைய உள்நாட்டு விவகாரங்களுக்குக்கூட இந்த வட்ட மேஜை மகாநாட்டின் நடவடிக்கைகள் முக்கியமானவையென அவர்கள் கருதுவதா யிருக்கலாம் என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். ஆம், இந்தியாவைக் கத்தி முனையில் அடக்கி வைக்கமுடியும். ஆனால், பிரிட்டனின் சுபிட்சத்திற்கும், பொருளாதார சுதந்திரத்திற்கும் நன்மை தரக்கூடியது எது? அடிமைப்படுத்தப்பட்டுப் புரட்சிக் கொடியை உயர்த்தும்

இந்தியாவா? அல்லது பிரிட்டனின் துக்கங்களையும், துரதிர்ஷ்டங்களையும் தோளோடு தோள் நின்று பகிர்ந்துகொள்ளத் தயாராயிருக்கும், மதிப்புள்ள கூட்டாளியான இந்தியாவா?

## என்னுடைய கனவு

ஆம். அவசியம் ஏற்பட்டால், ஆனல், தன்னிச்சையாகப் பிரிட்டனுடன் சேர்ந்து நின்று போராடுவது, உலகத்திலுள்ள எந்த ஒரு ஜாதீய வர்க்கத்தையோ அல்லது தனி மனிதனையோ அடிமைப்படுத்திச் சுரண்டுவதற்காக அல்ல. பூரா உலகத்திற்கும் நன்மை செய்வதற்காகவே அது இருக்கலாம். என்னுடைய நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று நான் கேட்கிறேன் என்ருல், மனித வர்க்கத்தில் ஐந்தில் ஒரு பங்குள்ள என்னுடைய நாடு உலகத்திலுள்ள வேறெரு நாட்டையோ அல்லது ஒரு தனி மனிதனையோ அடக்கியாண்டு சுரண்டுவதற்காக அல்ல. இப்படி நான் சொல்லுவதை நம்புங்கள். அந்த மாதிரியான சுதந்திரம் என் நாட்டுக்கு வேண்டுமென்று நான் நினைத்தால், அதே மாதிரியான சுதந்திரத்தை அனுபவிக்க பலம் பொருந்திய நாட்டுக்கும், பலவீனமான நாட்டுக்கும் அதே உரிமை உண்டு என்பதையும் நான் பேணிப் போற்றவேண்டும். இல்லாவிடில், அந்தச் சுதந்திரத்திற்கு நான் தகுதியுள்ளவனுக மாட்டேன். பலாத்காரமாக அல்லாமல், அன்பு என்ற பட்டுக் கயிற்றினல் கட்டப்பட்ட இந்தியா, ஒரு வருடத்திற்கு மட்டும் இல்லாமல், பல வருடங்களுக்கு உங்கள் வரவு செலவைச் சரிக்கட்டுவதற்கு உண்மையான உதவியாயிருக்க முடியும் என்று பிரிட்டிஷ் மந்திரிகளைத் திருப்தி செய்வது ஒருகால் சாத்தியமாயிருக்கலாம் என்று, உங்களுடைய அழகிய தீவின் கரைகளை நெருங்கிக்கொண்டிருந்த போது எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். நாம் இருவரும் சேர்ந்து எதைத்தான் செய்ய முடியாது? நீங்கள் எண்ணிக்கையில் அதிகமில்லை. ஆயினும், நீங்கள் ஈடிணையற்ற வீரச் செயல்களைப் புரிந்திருப்பவர்கள். அடிமைத்தனத்தை எதிர்த்துப் போராடியதாகப் புகழ் பெற்றவர்கள். எளியவர்களைக் காப்பாற்றுபவர்கள் என்று பல தடவைகளில் நீங்கள் உரிமை கொண்டாடியிருக்கிறீர்கள். நாங்கள் பழமையான ஒரு நாட்டினர். கோடிக்கணக்கான ஜனத்தொகையுள்ள ஒரு நாட்டினர். இப்போதைக்கு ஹிந்து, முஸ்லிம் என்ற இரு மகத்தான கலாசாரங்களைப் பிரதிபலிப்பவர்கள். ஏராளமான கிறிஸ்துவ மக்களும் எங்கள் நாட்டில் இருக்கிருர்கள். அற்புதமான பார்ஸி சமூகம் பூராவுமே எங்கள் நாட்டில்தான் இருக்கிறது. இவர்களுடைய எண்ணிக்கை மிக மிகக் குறைவுதான். ஆனல், அவர்களுடைய தரும சிந்தனையும், முயற்சித் துணிவும் ஈடிணையற்றவை. இந்தக் கலாசாரங்களெல்லாம் இந்தியாவில் ஒருமித்து ஊன்றியிருக்கின்றன. இங்கே வந்துள்ள ஹிந்து, முஸ்லிம் பிரதிநிதிகள் தங்கள் வித்தியாசங்களை மறந்து, ஒன்று

பட்டு கௌரவமான ஓர் உடன்பாட்டுக்கு வரவேண்டும் என்று கடவுள் அருள்பாலிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அப்போது இந்த இரு நாடுகளும் சேர்ந்தால் எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள். உங்களை மீண்டும் கேட்கிறேன். பிரிட்டனைப் போலவே பூர்ண சுதந்திரம் உள்ள இந்தியா, உங்களுடன் கௌரவமான ஒரு கூட்டாளியாக வாழ்ந்தால் அது இரு நாடுகளுக்குமே நன்மையளிப்பதா யிராதா? உங்களுடைய உள்நாட்டு விவகாரங்களுக்கே அது பிரயோசனமா யிராதா வென்றும் கேட்கிறேன். இம்மாதிரியான கனவுகளுடன்தான் நான் இங்கே வந்திருக்கிறேன். அந்தக் கனவை இன்னமும் நான் வைத்துக்கொண்டுதான் இருப்பேன்.

நான் சொல்ல வேண்டியது அநேகமாக இவ்வளவேதான். ராணுவத்தின் மீது அதிகாரம் என்று நான் சொல்லுவதன் பொருள் என்ன? வெளிநாட்டு விவகாரம், பொருளாதார நிதிக் கொள்கைகள் மீது அதிகாரம் என்பவை என்ன? மிகவும் புனிதமானது என்று நேற்று ஒரு நண்பர் சொன்ன நிதி விஷயம் என்ன? ஆகிய இவற்றைப் பற்றி விவரமாக நான் சொல்ல வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள். நீங்களே அந்த விவகாரங்களைப் புரிந்துகொண்டு விடுவீர்கள். அந்நண்பர் சொன்னது போல நான் அப்படி நினைக்கவில்லை. கூட்டாளிகள் கணக்கு வழக்குகளைப் பார்ப்பதென்றால், அவற்றைத் தணிக்கை செய்து சரிக்கட்ட வேண்டும். நாம் எதை எடுத்துக்கொள்ளுகிறோம், எதை எடுத்துக்கொள்ளக்கூடாது என்று தேசம் புரிந்துகொள்ள வேண்டும் என்று காங்கிரஸ் சொன்னால், அதில் நேர்மையற்றதோ, குற்றமானதோ எதுவுமில்லை. இப்படித் தணிக்கை செய்ய வேண்டும் என்று கேட்பது இந்தியாவின் நலன்களுக்கு மட்டும் அல்ல. இருவரின் நன்மைக்காகவும் இது கோரப்படுகிறது. நியாயமாக ஏற்றுக்கொள்ள வேண்டி யிராத ஒரு சுமையைக்கூட பிரிட்டிஷ் மக்கள் இந்தியாமீது சுமத்த விரும்பவில்லை என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். தான் நியாயமாக தீர்க்க வேண்டிய ஒரு பொறுப்பையாவது காங்கிரஸ் மறுக்காது என்பதைக் காங்கிரஸ் சார்பில் நான் உறுதி கூறத் தயாரா யிருக்கிறேன். உலகத்திலுள்ள எல்லா நாடுகளின் நன்மதிப்பையும் பெறத்தக்க நாடாக நாங்கள் கௌரவமாக வாழ வேண்டுமானால், எங்கள் ரத்தத்தைக் கொடுத்தாவது எங்களுடைய நியாயமான கடன்களைப் பைசா வாரியாகத் தீர்த்து விடுவோம்.

இந்தக் கட்டளையிலுள்ள ஷரத்துக்களின் கருத்தென்ன? காங்கிரஸ்காரர்கள் இந்த ஷரத்துக்களுக்கு என்ன பொருள் கொடுக்கிறார்கள் என்றெல்லாம் நான் மேலும் அலசிக்கொண்டிருக்கக்கூடாது என்றே நினைக்கிறேன். இந்த விவாதங்களில் நான் தொடர்ந்து பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் என்பது கடவுளின் விருப்பமாயிருந்தால், விவாதம் நடந்துகொண்டிருக்-

கும்போது இந்த ஷரத்துக்களின் உள்ளர்த்தங்களை விளக்கிக் கூறுகிறேன். பாதுகாப்புகள் பற்றிய எனது நிலையையும் அப்போது கூறுகிறேன். ஏற்கனவே நான் விரிவாகப் பேசி உங்களுடைய கவனத்தைப் போக்கிவிட்டேன். இவ்வளவு நேரம் பேச வேண்டும் என்று நான் நினைக்கவேயில்லை. ஆனால், என் மனத்தில் உள்ளதை இந்த உப கமிட்டிக்கும், பிரிட்டிஷ் மக்களுக்கும் இப்போதே திறந்து சொல்லாவிட்டால்,நான் இங்கேவிளக்கிக் கூறுவதாக வந்திருக்கும் நோக்கத்திற்கும், நாங்கள் விருந்தினர்களாக வந்துள்ள பிரிட்டிஷ் மக்களுக்கும் முழு நியாயம் செய்வதாகாது என்று நினைத்தேன். பிரிட்டனுக்கும் இந்தியாவுக்குமிடையே கௌரவமானதும், சமத்துவமானதுமான ஒரு கூட்டாளித்தனம் ஏற்படப் போகிறது என்ற நம்பிக்கையுடன் இங்கிருந்து திரும்பிச் செல்லுவதற்கும் ஆசைப்படுகிறேன்.

என்னுடைய இந்த ஆசை நிறைவேற வேண்டும் என்று நான் இங்கே இருக்கும் காலத்தில் ஒவ்வொரு நாளும் மனப்பூர்வமாகப் பிரார்த்தனை செய்வேன். நான் வேறு என்ன செய்ய முடியும்? நான் சுமார் நாற்பத்தைந்து நிமிடங்கள் பேசிவிட்டேன். நடுவில் என்னைத் தடுத்து நிறுத்தாமல் இருந்ததற்குத் தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன். எனக்கு இவ்வளவு சலுகை கொடுக்கக் காரணமில்லை. மீண்டும் ஒரு முறை எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## 4

# நான் கனவு காணும் சுதந்திரம்

“சுதந்திரத்திற்கு விளக்கம் கூறும்படி நண்பர்கள் விடாமல் எனக்குச் சவால் விட்டு வருகின்றனர். கூறியதை மீண்டும் கூறல் என்ற தவறு இருந்தாலும் சரி, நான் கனவு கண்டு வரும் சுயராஜ்யம் என்பது, ராமராஜ்யம்—அதாவது இவ்வுலகத்தில் நிலவும் கடவுளின் ஆட்சியே” என்று காந்திஜி 1946 மே 5–ஆம் தேதி ‘ஹரிஜ’னில் வெளியான கட்டுரை ஒன்றில் கூறினர். அந்தச் சுதந்திரத்தில் ராஜீயம், பொருளாதாரம், ஒழுக்கம் ஆகிய மூன்றும் அடங்கியிருக்க வேண்டும் என்றும் அவர் கூறினர். இதற்கு விளக்கத்தையும் சொன்னர்.

‘ராஜீயம்’ என்ருல், எந்த முறையிலும் பிரிட்டிஷ் ராணுவத்தின் ஆதிக்கம் நீங்கியதாக இருக்க வேண்டும் என்ருர்.

'பொருளாதாரம்' என்ருல், பிரிட்டிஷ் முதலாளிகள், மூலதனம், அதுபோன்று இந்திய முதலாளிகள், மூலதனத்தினிடமிருந்து முழுதும் விடுதலே பெறுவதே சுதந்திரம் என்ருகும் என்றும் காந்திஜி கூறினர். "அதாவது, மிகத் தாழ்ந்த நிலேயிலிருப்பவர், உயர்நிலேயிலிருப்பவருடன் தாம் சமம் என்று உணர வேண்டும். மூலதனமோ, முதலாளிகளோ, தங்களுடைய திறமையையும் மூலதனத்தையும் தாழ்ந்த நிலேயில் இருப்பவர்களுடனும், ஏதும் இல்லாதவர்களுடனும் பகிர்ந்து கொண்டால் தான் இது நடக்கும்" என்றும் எழுதினர்.

ஆயுதம் பூண்ட பாதுகாப்புப் படைகளிடமிருந்து சுதந்திரம் பெறுவதுதான் 'தார்மிகம்' என்றும் காந்திஜி கூறினர். 'பிரிட்டிஷ் ராணுவம் இருந்த இடத்தில் ஒரு தேசீய ராணுவத்தின் ஆதிக்கம் ஏற்படுவதை, நான் எண்ணும் ராமராஜ்யம் விலக்குகிறது. தனது தேசீய ராணுவத்திஞலாயினும் ஆளப்படும் ஒரு நாடு, தார்மிகத்தில் சுதந்திரமானதாக இருக்க முடியாது. ஆகையால், அதன் பலவீனமான உறுப்பினர் என்று சொல்லப்படுகிறவர் தமது முழு தார்மிக உயர்வையும் அடையவே முடியாது' என்ருர் காந்திஜி. இதே கட்டுரையில் காந்திஜி, அபர்டீனில் சர்ச்சில் செய்த பிரசங்கத்தையும் குறிப்பிட்டிருக்கிருர். அவர் பேச்சு, தீவிர அகிம்சைச் சீர்திருத்த வாதியின் நோக்கத்திலிருக்கிறது என்றும் கூறுகிருர்.

[காந்திஜியின் இக்கட்டுரையும் ஸ்ரீ சர்ச்சிலின் பிரசங்க விவரமும் 'மகாத்மா காந்தி நூல்கள்'-இரண்டாம் தொகுப்பில் 655-57-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கின்றன.]

இந்தியாவின் சுயராஜ்யம் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதைக் குறித்துக் காந்திஜி 1946 ஜுலே 28-ஆம் தேதி 'ஹரிஜ'னில் எழுதினர். 'சுதந்திரத்தை அடியிலிருந்தே தொடங்க வேண்டும். ஒவ்வொரு கிராமமும் குடியரசாகவும் பஞ்சாயத்தாகவும், பூரண அதிகாரமுள்ளதாகவும் இருக்க வேண்டும்' என்ருர். 'மனித உழைப்பைத் தவிர்க்கும், அதிகாரத்தை ஒரு சிலரிடம் சேர்த்து வைக்கும் யந்திரங்களுக்கு இந்தச் சுதந்திர சமூகத்தில் இடம் கிடையாது' என்ருர் காந்திஜி. 'பண்பாடு மிக்க மனித சமுதாயத்தில் உழைப்புக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. தனிப்பட்டவருக்கு உதவி செய்யக் கூடிய யந்திரத்திற்கு இதில் இடம் உண்டு' என்கிருர்.

[இக்கட்டுரையின் முழு விவரமும் 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாம் தொகுப்பில் 856-58-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.]

# 5

# பஞ்சாயத்து ராஜ்யம்

பஞ்சாயத்து ராஜ்யம், அதாவது, உண்மையான ஜனநாயகம் என்ற நமது கனவு பலிக்கவேண்டும் என்று நாம் விரும்பினல், நாட்டிலுள்ள ஏழை எளியவர்களும், உயர்ந்தவர்களைப் போலவே, இந்தியாவின் மன்னர்கள் என்று நாம் கருத வேண்டும். அப்படி நினைக்க வேண்டுமானல், எல்லோரும் தூய்மையானவர்கள் அல்லது அப்படி இல்லாதவர்கள், தூய்மையானவர்களாய் விடுவார்கள் என்பது பொருள். தூய்மையுடன் விவேகமும் இருக்க வேண்டும். அந்த நிலைமையில் வகுப்புகளுக்கிடையேயோ, உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்ருே யாரும் வித்தியாசம் பார்க்கமாட்டார்கள். எல்லோரும் நமக்குச் சமமானவர்கள் என்று யாவரும் நினைத்து, அன்பு என்ற பட்டுக் கயிற்றினல் இணைத்து ஒன்ருக வைத்திருப்பார்கள். மற்றவன் தீண்டத் தகாதவன் என்று யாருமே நினைக்கமாட்டார்கள். உழைக்கும் தொழிலாளியையும், பணக்கார முதலாளியையும் ஒன்ருகவே நினைப்போம். கஷ்டப்பட்டு உழைத்து நாணயமாகச் சம்பாதிக்க ஒவ்வொருவருக்கும் தெரிந்திருக்கும். உடலுழைப்பு, புத்திபூர்வமான உழைப்பு என்று வித்தியாசம் பார்க்க மாட்டார்கள். இந்த நோக்கம் சீக்கிரமாக நிறைவேறுவதற்கு நாமே மனமுவந்து தோட்டிகளாக வேலை செய்வோம். புத்தியுள்ள யாரும் அபினி, மது, மற்றும் போதையளிக்கக்கூடிய பொருள்களைத் தொட மாட்டார்கள். எல்லோரும் சுதேசியை வாழ்க்கை முறையாக ஏற்றுக்கொள்ளுவார்கள். தன்னுடைய மனைவியைத் தவிர மற்றெல்லாப் பெண்களையும், அவர்களுடைய வயதிற்குத் தகுந்தாற்போல் தாயாகவோ, சகோதரியாகவோ, மகளாகவோ பாவிப்பார்கள்; மனத்தில் காம இச்சைக்கு இடம் கொடுக்கமாட்டார்கள். அவசியம் ஏற்பட்டால், தம் உயிரைக் கொடுக்கவும் தயாராயிருப்பார்கள்; பிறர் உயிரைக் கவர நினைக்கமாட்டார்கள். சீக்கியர்களாயிருந்தால், அவர்களுடைய குருமார்கள் உபதேசத்திற்கிணங்க, ஓர் அடிகூடப் பின்வாங்காமல், லட்சம் பேர் எதிர்த்து வந்தாலும், வீரத்துடன் தன்னந்தனியாகவே எதிர்த்து நிற்பார்கள். அத்தகைய இந்தியனுக்கு அப்போது அவனுடைய கடமை என்ன என்பதைச் சொல்லத் தேவையில்லை.

—'ஹரிஜன்' - 18—1—1948

['குஜராத் மக்களுக்கு' என்ற தலைப்புடன் வெளியிடப்பட்ட ஒரு பகிரங்கக் கடிதத்திலிருந்து.]

## 6

# இந்தியா விடுதலை அடைவது எப்படி ?

இந்திய மக்களின் விடுதலைக்காகவே அல்லும் பகலும் பாடுபட்டு வந்த மகாத்மா, இந்தியா, விடுதலை அடைவது எப்படி என்பதற்கு ஓயாது தமது முறையைக் கூறி வந்திருக்கிறார். அவருடைய அகிம்சா முறையைக்கொண்டே இந்நாடு விடுதலை பெற்ற அற்புதத்தையும் உலகம் கண்டது. அவர் கண்ட முறை, தென்னாப்பிரிக்காவிலிருந்து அவர் இந்தியாவுக்கு வந்த பிறகு தோன்றியது அல்ல என்பது முக்கியமாக இங்கே கவனிக்க வேண்டியதாகும். அவர் தென்னாப்பிரிக்காவிலிருந்த சமயத்தில் இங்கிலாந்துக்குப் போய்விட்டுத் திரும்புகையில் கப்பலில் அவர் எழுதிய நூலே 'ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம்' என்பது. 'இந்தியா சுயராஜ்யம் அடைவது எப்படி?' என்ற கேள்விக்கு அப்பொழுதே காந்திஜி அச்சிறு நூலில் பதில் அளித்திருக்கிறார். அப்புத்தகத்தில் இத்தலைப்புடன் கூடிய அத்தியாயத்திலும், 'இத்தாலியும் இந்தியாவும்', 'மிருக பலம்', 'சாத்விக எதிர்ப்பு' ஆகிய அத்தியாயங்களிலும், இந்தியா சுதந்திரத்தை அடைவதற்கு மார்க்கம் அகிம்சையே யன்றிப் பலாத்காரம் அல்ல என்பதைக் காந்திஜி அப்பொழுது மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

['இந்திய சுயராஜ்யம்' நூலிலுள்ள இந்த அத்தியாயங்களை 'மகாத்மா காந்தி நூல்கள்'-முதல் தொகுப்பு – 671-699-ஆம் பக்கங்களில் விவரமாகக் காண்க.]

## 7

# பலாத்காரம், யந்திரத் தொழிலால் சுயராஜ்யமில்லை

ரஸ்கினின் புஸ்தகம் முக்கியமாக ஆங்கிலேயர்களுக்காகவே எழுதப்பட்டது. ஆயினும், அதை அலசிப் பார்த்தால் இந்தியர்களுக்கும் அதில் ஒரு பாடம் இருக்கிறது. இந்தியாவில் புதிய கருத்துக்கள் உலாவிக்கொண்டிருக்கின்றன. மேல்நாட்டுக்

கல்வி பயின்ற நமது இளைஞர்களிடம் உணர்ச்சி மிகுந்திருக்கிறது. இந்த உணர்ச்சியை நல்ல வழியில் திருப்பிவிட வேண்டும். இல்லாவிட்டால் அதனால் நமக்குக் கெடுதல்தான் ஏற்படும். 'சுயராஜ்யம் பெறுவோம்' என்பது ஒரு கோஷம்; 'நாட்டில் கைத்தொழில்களைப் பெருக்குவோம்' என்பது மற்றொரு முழக்கம்.

ஆனால், சுயராஜ்யம் என்பது என்ன என்பதை நாம் சரியாகப் புரிந்துகொள்ளவேயில்லை. உதாரணமாக, நேட்டாலிலும் சுயராஜ்யம் இருக்கிறது. ஆனால், அது துர்நாற்றமடிப்பதாயிருக்கிறது. ஏனெனில், அங்கே நீக்கிரோக்கள் நசுக்கப்படுகிறார்கள், இந்தியர்கள் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள். நீக்கிரோக்களும், இந்தியர்களும் நேட்டாலை விட்டு வெளியேறினால், அங்குள்ள வெள்ளையர்கள் தமக்குள்ளேயே சண்டை போட்டுக் கொண்டு தம்மைத் தாமே அழித்துக்கொண்டு விடுவார்கள்.

நேட்டாலிலிருப்பது போன்ற சுயராஜ்யம் வேண்டாம், டிரான்ஸ்வாலில் இருப்பது போன்ற சுயராஜ்யம் தேவலையா? அவர்களுடைய தலைவர்களில் ஒருவரான ஜெனரல் ஸ்மட்ஸ், தம் வாக்குறுதிகளைத் தாமே மீறுகிறார்; சொல்வது ஒன்றாகவும் செய்வது மற்றொன்றாகவும் நடந்துகொள்ளுகிறார். போலீஸ் இலாகாவிலிருந்து ஆங்கிலேயர்களை நீக்கிவிட்டுப் பதிலாக ஆப்பிரிக்கானியர்களையே* வைத்திருக்கிறார். முடிவில் இது அவ்விருவருக்குமே நன்மையளிக்கப் போவதில்லை என்றே நான் நினைக்கிறேன். கொள்ளையடிப்பதற்கு 'வெளியாட்கள்' யாரும் இல்லாதபோது, சுயநலக்காரர்கள் தம் இனத்தவரையே கொள்ளையடிக்க ஆரம்பித்துவிடுகிறார்கள்.

ஒரு தேசம் ஆனந்தத்துடன் இருப்பதற்குச் சுயராஜ்யம் மட்டும் போதாது. ஒரு கொள்ளைக் கூட்டத்தினருக்குச் சுயராஜ்யம் கொடுத்துவிட்டால், பலன் என்னவாயிருக்கும்? கொள்ளைக்காரனல்லாத ஒரு நல்ல மனிதனைத் தலைவனாக வைத்தால் தான் அவர்கள் திருப்தியுடன் இருப்பார்கள். அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகியவை பலம் பொருந்திய நாடுகளே. ஆனால், அவை சந்துஷ்டியுடன் இருக்கின்றன என்று நினைக்கக் காரணமில்லை.

சுயராஜ்யம் என்பது உண்மையில் தன்னடக்கமே. ஒழுக்க விதிகளைப் பின்பற்றுபவன், மோசம் செய்யாதவன், சத்தியத்தைக் கைவிடாதவன், தன்னுடைய பெற்றோர்கள், மனைவி, குழந்தைகள், வேலைக்காரர்கள், அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் ஆகியவர்களுக்குத் தான் செய்ய வேண்டிய கடமையைச் செய்பவனே தன்னைத்தானே அடக்கிக்கொள்ளக்கூடியவன். அத்தகைய ஒருவன் எங்கே வாழ்ந்தாலும், அவன் சுயராஜ்

---

* ஆப்பிரிக்கான் மொழி பேசும் தென்னாப்பிரிக்க வெள்ளையர். இவர்கள் டச்சுப் பரம்பரையில் வந்தவர்கள்.

யத்தை அனுபவிப்பவனுகிருன். அம்மாதிரி நல்ல பிரஜைகள் நிறைய இருப்பதாகப் பெருமை கொள்ளும் ராஜ்யத்தில் சுயராஜ்யமும் இருக்கிறது.

ஒரு நாட்டினர், இன்னெரு நாட்டினர் மீது ஆட்சி செலுத்துவது என்பது சரியல்ல. இந்தியாவில் பிரிட்டிஷார் ஆட்சி புரிவது ஒரு தீமையாகும். ஆனல், பிரிட்டிஷார் இந்தியாவைவிட்டுப் போனவுடன் எல்லாம் சரியாய்விடும் என்று நினைத்துவிட வேண்டாம்.

இந்த நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சி இருப்பதற்கு நம்முடைய ஒற்றுமையின்மையும். ஒழுக்கக் குறைவும், அறியாமையுமே காரணங்களாகும். இந்தத் தேசீயக் குறைபாடுகள் அகற்றப்பட்டுவிட்டால், ஒரு குண்டுகூடச் சுடப்படாமல் பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேறிவிடுவார்கள் என்பதுடனல்லாமல், இந்தியாவுக்கு சுயராஜ்யமும் கிடைத்துவிடும்.

முட்டாள்தனமான சில இந்தியர்கள், வெடிகுண்டுகளை வீசுவதில் ஆனந்தம் அடைகிருர்கள். ஆனல், இந்த நாட்டிலுள்ள எல்லா பிரிட்டிஷாரும் இப்படிக் கொல்லப்பட்டுவிட்டால், இப்படிக் கொல்லுபவர்கள் ஆளுபவர்களாகிவிடுவார்கள். அப்போது இந்தியாவில் எஜமானர்கள் மாறினர்கள் என்பதுதான் மிச்சமாயிருக்கும். இப்போது ஆங்கிலேயர்கள் மீது வீசப்படும் வெடிகுண்டுகள், அவர்கள் போய்விட்ட பிறகு இந்தியர்கள் மீதே வீசப்படும். பிரெஞ்சுக் குடியரசின் ஜனதிபதியைக் கொன்றவன் ஒரு பிரெஞ்சுக்காரனே. ஜனதிபதி கிளீவ்லண்டைக் கொலை செய்தவன் ஓர் அமெரிக்கனே. கண்ணை மூடிக்கொண்டு நாம் மேல் நாட்டினரைப் பின்பற்றுமல் இருப்போமாக.

ஆங்கிலேயர்களைக் கொல்லும் பாவத்தினல் சுயராஜ்யம் பெற முடியாதென்பதைப் போலவே, பெரிய தொழிற்சாலைகளைக் கட்டுவதன் மூலமும் அதைப் பெற்றுவிட முடியாது. தங்கத்தையும், வெள்ளியையும் நிறையச் சேர்த்துவைக்கலாம்; ஆனல், அதனல் சுயராஜ்யம் கிடைத்துவிடாது. இதை ரஸ்கின் சந்தேகமற ருசுப்பித்திருக்கிருர். மேல்நாட்டு நாகரிகம் என்பது சிறு குழந்தைப் பருவத்தில் உள்ளதுதான்; அது தோன்றி சுமார் 100 அல்லது 150 வருடங்கள்தான் ஆகின்றன. ஆயினும், இதற்குள்ளாகவே அது ஐரோப்பாவை இந்தப் பரிதாபமான நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டது. ஐரோப்பாவில் ஒவ்வொரு நாடும் மற்றென்றைத் தாக்குவதற்குத் தயாராய் நின்றுகொண்டிருக்கின்றன. ஆயுதங்கள் குவித்துவைக்கப்பட்டிருப்பதால்தான் அவை தாக்காமல், பேசாமல் இருக்கின்றன. ஐரோப்பாவுக்கு ஏற்பட்டுள்ள அந்தக் கதி நமக்கும் ஏற்படாமல் இருக்க வேண்டும் என்று பிரார்த்திப்போமாக. ஒரு பெரிய போராட்டம் ஏற்படப் போகிறது; அப்போது ஐரோப்பா ஒரு நகரமாயிருக்கப் போகிறது. வெள்ளையரல்லாத ஜாதியினரைத் தமது

நியாயமான இரை என்று ஒவ்வோர் ஐரோப்பிய நாடும் கருதுகிறது. மனிதர்களின் உள்ளங்களில் பேராசை ஓங்கி நிற்கும் போது அவர்களிடமிருந்து வேறென்ன எதிர்பார்க்க முடியும்? ஓர் இறைச்சித் துண்டைப் பார்த்ததும் காகங்கள் பாய்ந்தோடி வருவதைப் போல், ஐரோப்பியர்கள் புதுப் புதுப் பிரதேசங்களின் மீது பாய்கிருர்கள். ஏராளமாக உற்பத்தி செய்து தள்ளும் அவர்களுடைய தொழிற்சாலைகளே இதற்குக் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்தியா, சுயராஜ்யம் பெற வேண்டியதுதான். ஆனல், நியாயமான வழிகளின் மூலம் அதைப் பெறவேண்டும். நம்முடைய சுயராஜ்யம் உண்மையான சுயராஜ்யமாயிருக்கவேண்டும். பலாத்காரத்தின் மூலமோ, யந்திரத் தொழில்களைப் பெருக்குவதன் மூலமோ இதைப் பெற முடியாது. ஒரு காலத்தில் இந்தியா பொன்னுடாக இருந்தது. ஏனெனில், இந்தியர்களின் மனம் அப்போது அவ்வளவு தூய்மையான பொன்னுக இருந்தது. நாடு இன்னும் அதே மாதிரிதான் இருக்கிறது. ஆனல், நம்மிடம் ஒழுக்கமில்லாததால் அது பாலைவனமாக இருக்கிறது. நம்முடைய தேசீய குணத்திலுள்ள அழுக்கு அகற்றப்பட்டுத் தூய்மை ஏற்பட்டால்தான் இந்தியா மீண்டும் பொன்னுடாக முடியும். இந்த மாறுதலைச் செய்ய வல்லது சத்திய மார்க்கமே. ஒவ்வோர் இந்தியனும் சத்தியத்தைக் கடைப்பிடித்தால், தானுகவே சுயராஜ்யம் நம்மைத் தேடி வரும்.

[ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற நூலைத் தழுவிக் காந்திஜி எழுதிய 'சர்வோதய'த்தில் 'முடிவு' என்ற அத்தியாயத்திலிருந்து எடுத்தது.]

# 8

# சுயராஜ்யத்தைப் பற்றிச் சில சிந்தனைகள்

*[சுதந்திரப் போராட்டத்தில் பலாத்காரத்தை உபயோகிப்பதைக் காந்திஜி எதிர்த்தார். பலாத்காரத்தின் மூலம் சுயராஜ்யம் பெறுவதை அவர் ஏன் எதிர்த்தார் என்பதற்கான காரணங்களைப் பின்வரும் கட்டுரையில் காணலாம்.]*

(1) வாளின் மூலம்தான் இந்தப் பிரச்னையைத் தீர்க்க வேண்டும் என்ருல், அது சீக்கியரின் வாளாகவோ, கூர்க்காவின் வாளாகவோ இருக்கக்கூடாது; அது இந்தியா பூராவுக்கும் பொதுவான வாளா யிருக்க வேண்டும். மிருக பலம்தான் ஆட்சி

புரிய வேண்டும் என்றால், இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் யுத்தக் கலையைக் கற்றுக்கொள்ள வேண்டும்; அல்லது வாளை ஏந்தி நிற்பவன் வெளி நாட்டினனாயிருந்தாலும், நம் நாட்டினனாயிருந்தாலும், எப்போதும் அவன் காலடியிலேயே கிடக்க வேண்டும். மக்களும் ஆடு மாடுகளைப் போல்தான் இருக்க வேண்டும். பாமர மக்கள் தமது கௌரவத்தையும், சக்தியையும் உணரச் செய்வதற்கு ஒத்துழையாமை இயக்கம் ஒரு முயற்சியாகும். மிருக பலத்தைக் கண்டு நாம் பயப்பட வேண்டியதில்லை என்று அவர்களை உணரச் செய்வதன் மூலம்தான் இது சாத்தியமாகும்.

—'எங் இந்தியா' – 1—12—1920

(2) புரட்சி வழி இந்தியாவில் வெற்றி பெறாது என்றே நான் சொல்லுகிறேன். பகிரங்கமான யுத்தம் சாத்தியமே என்றால், மற்ற நாடுகள் சென்ற அந்தப் பலாத்காரப் பாதையில் நாமும் சென்று, போர்க்களத்தில் ஏற்படும் வீரனின் தன்மைகளையாவது நாம் பெறலாம் என்று நான் ஒப்புக்கொள்ளக்கூடும். ஆனால், நாம் கற்பனை செய்து பார்க்கக்கூடிய காலத்திற்குள் யுத்தத்தின் மூலம் சுயராஜ்யம் பெறுவது என்பது அசாத்தியமானது என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன். யுத்தம் ஏற்பட்டால் ஆங்கில ஆட்சிக்குப் பதிலாக நமக்கு வேறொரு ஆட்சி கிடைக்கலாம். ஆனால், அது பாமர மக்களுக்குச் சுய ஆட்சியாக இராது. சுயராஜ்ய யாத்திரை என்பது, மலை ஏறுவதைப் போல் கடினமானது. அதில் சிறு விவரங்களையும் நன்றாகக் கவனிக்க வேண்டும். இதற்கு நல்ல நிர்வாகத் திறமை வேண்டும். கிராம மக்களுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் கிராமங்களுக்குள் சென்று வேலை செய்ய வேண்டும். அதாவது, இது தேச மக்களுக்கு விஷய அறிவு ஊட்டுவதாகும், பாமர மக்களிடையே தேசீய உணர்வை உண்டாக்குவதாகும். மந்திரத்தில் மாங்காய் வரவழைப்பதைப் போல் இதைச் செய்துவிட முடியாது. ஆலமரத்தைப் போல் நம்மை அறியாமலே இது ஓங்கி வளரும், ரத்தக்களரியுடன் கூடிய புரட்சியில் இது சாத்தியமே இல்லை.

— 'எங் இந்தியா' – 21—5—1925

[இந்தியர் கைக்கு ராஜீய அதிகாரம் மாற்றப்படுவது அத்தியாவசியம் என்று காந்திஜி கருதினார். ஆனால், வெறும் அதிகார மாற்றத்துடன்மட்டும் அவர் திருப்தியடையவில்லை. அவருடைய சுயராஜ்ய அமைப்பில், பாமர மக்கள் எந்த விதத்திலும் சுரண்டப்படுவதை ஒழிக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.]

(3) ஐரோப்பாவிலுள்ள மக்கள் ராஜீய சுயாட்சியை அனுபவித்துக் கொண்டிருந்தாலுங்கூட, அடிப்படையில் இந்தியா

விலும், ஐரோப்பாவிலும் உள்ள வியாதி ஒரே மாதிரியானது என்றே நான் நினைக்கிறேன். ராஜீய அதிகார மாற்றம் இந்தியாவின் தேசீய வாழ்வுக்கு அத்தியாவசியமானது என்று நான் கருதியபோதிலும், வெறும் அதிகார மாற்றம் மட்டும் என் ஆசையைப் பூர்த்தி செய்யாது. ஐரோப்பாவிலுள்ள மக்களுக்கு ராஜீய அதிகாரம் இருப்பது உண்மையே. ஆனால், அங்கே சுயராஜ்யம் இல்லை. ஓரளவுக்கு அவர்களுடைய நலன்களுக்காக ஆசிய, ஆப்ரிக்க நாட்டினர் சுரண்டப்படுகிறார்கள். அதே சமயத்தில் ஆளும் வகுப்பினர் அல்லது சாதியினர், ஜனநாயகம் என்ற புனிதமான பெயரில் மக்களைச் சுரண்டுகிறார்கள். ஆகையால், அடிப்படையில் அங்கும் இந்தியாவில் இருப்பதைப் போன்ற வியாதியேதான் இருப்பது போல் தோன்றுகிறது.

— 'எங் இந்தியா' - 3—9—1925

(4) சுயராஜ்யம் பெற வேண்டியவர்கள் மக்கள். இது முற்றிலும் பணக்காரர்கள், அல்லது படித்தவர்களின் பொறுப்பல்ல. எந்தச் சுயராஜ்ய அமைப்பிலும், இந்த இருவரும் தமது நலன்களைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்.

— 'எங் இந்தியா' - 20—4—1921

(5) காங்கிரஸ் எந்தக் குறிப்பிட்ட கோஷ்டியினருக்கும் சொந்தமானதல்ல; அது எல்லோருக்கும் பொதுவானது. ஆனால், ஜனத்தொகையில் பெரும்பான்மையோராக இருக்கும் ஏழை விவசாயிகளின் நலன்களைக் காப்பாற்றுவதே அதன் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். ஆகையால், காங்கிரஸ் உண்மையாகவே ஏழைகளின் பிரதிநிதியாக இருக்க வேண்டும். அதனால் மத்திய வகுப்பினர், முதலாளிகள் அல்லது ஜமீன்தார்கள் போன்ற மற்ற வகுப்பினர் தாழ்ந்து போய்விட வேண்டும் என்று அர்த்தம் இல்லை. மற்ற எல்லா வகுப்பினரும் ஏழைகளின் நலன்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதே அதன் பொருளாகும்.

(6) ஆகையால், நோக்கம் என்ன என்பதைச் சொல்லுகிறேன். எந்தவிதமான அந்நிய ஆதிக்கமும் இல்லாத முழுச் சுதந்திரம்; அதுவும் வாயில்லாப் பூச்சிகளின் நன்மைக்கான சுதந்திரமே நோக்கம். ஆகவே, அவர்களுடைய நலன்களுக்கு விரோதமாக உள்ள ஒவ்வொரு நலனும் மாற்றப்பட வேண்டும், அல்லது அப்படி மாற்ற முடியாதென்றால் தாழ்ந்துவிட வேண்டும்.

— 'எங் இந்தியா' - 17—9—1931

*[காந்திஜி விரும்பிய சுயராஜ்யம் ஒரு சிலரின் ஏகபோக உரிமையாக இராது. அதிகாரத்தைச் சீர்ப்படுத்திக் கட்டுப்படுத்தி வைக்கும் திறமை பெற்ற உழைப்பாளிகளின் மனமுவந்த சம்மதத்துடன் அது, விரிவான அடிப்படையில் அமைக்கப்பட்டதாக இருக்கும்.]*

(7) வயதுவந்த ஆண்கள், பெண்கள், இங்கேயே பிறந்தவர்கள், இங்கே வந்து குடியேறியவர்கள் ஆகியோர், தம் உடலுழைப்பின் மூலம் தேசத்திற்குத் தொண்டு புரிந்திருந்தால், அவர்கள் தம்முடைய பெயர்களை வாக்காளர்களாகவும் பதிவு செய்துகொண்டிருந்தால், அத்தகைய பெரும்பான்மையோரின் சம்மதத்தைத் தெரிந்துகொண்டு இந்தியாவை ஆட்சி புரிவதையே சுயராஜ்யம் என்று நான் சொல்லுகிறேன். ஒரு சிலர் அதிகாரத்தைப் பற்றிக்கொள்ளுவதால் உண்மையான சுயராஜ்யம் வராது. அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படும்போது, அதை எதிர்க்கும் சக்தியை எல்லோரும் பெறும்போதே உண்மையான சுயராஜ்யம் வரும் என்பதை ருசுப்பித்துக் காட்ட முடியும் என்று நம்புகிறேன். அதாவது, அதிகாரத்தைச் சீர்ப்படுத்தி, கட்டுப்படுத்தக்கூடிய சக்தி தங்களிடம் இருக்கிறது என்பதை மக்கள் உணரச் செய்வதன் மூலமே சுயராஜ்யத்தைப் பெற வேண்டும்.

— 'எங் இந்தியா' - 29—1—1925

[ராஜ்யமே இல்லாததுதான் காந்திஜியின் இறுதி ராஜீய லட்சியமாகும்.]

(8) வெளிநாட்டுச் சர்க்காராயிருந்தாலும் சரி, தேசீய சர்க்காராக இருந்தாலும் சரி, சர்க்கார் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற்றிருப்பதற்கான இடைவிடாத முயற்சியே சுயாட்சியாகும். வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திற்கும் மக்கள் அரசாங்கத்தை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதா யிருந்தால், சுயராஜ்யம் என்பது பரிதாபப்படத்தக்கதா யிருக்கும்.

—'எங் இந்தியா' – 6—8—1925

(9) ராஜீய அதிகாரத்தைப் பெற்றுவிடுவதே முடிவானது என்று நான் நினைக்கவில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் மக்கள் தம் நிலையை உயர்த்திக்கொள்ளுவதற்கான மார்க்கங்களில் அதுவும் ஒன்று என்றே நான் கருதுகிறேன். தேசீயப் பிரதிநிதிகளின் மூலம் தேசீய வாழ்வைச் சீர்ப்படுத்தும் சக்தியே ராஜீய அதிகாரத்தின் பொருளாகும். தானாகவே சீராக நடக்கும்படித் தேசீய வாழ்வு அவ்வளவு செம்மையானதாகிவிட்டால், பிரதிநிதித்துவத்திற்கே அவசியமில்லாமல் போய்விடுகிறது. அப்போது தெளிவுபெற்ற ஓர் அராஜக நிலைமை ஏற்படும். அத்தகைய நிலையில், ஒவ்வொருவரும் தனக்குத் தானே மன்னர். அவர் நடந்துகொள்ளும் விதம் அயலாருக்கு எந்த விதத்திலும் இடையூறு யிராது. லட்சிய ராஜ்யத்தில், ராஜ்யம் என்று தனியாக ஒன்று இராதாகையால், ராஜீய அதிகாரமும் கிடையாது. ஆனால், வாழ்க்கையில் லட்சியம் எப்போதுமே ஈடேறுவதில்லை. அதனால்தான், மிகக் குறைந்த அளவில் ஆட்சி நடத்துகின்ற அரசாங்கமே சிறந்த அரசாங்கம் என்று தோரோ சொன்னார்.

—'எங் இந்தியா' - 2—7—1931

# 9

# பாட்டாளிகளின் குடியரசு

செஞ்சட்டை இயக்கத்தைச் சேர்ந்த சில பிரதிநிதிகள் காந்திஜியைச் சந்தித்து அவருடன் நீண்ட நேரம் மனம் விட்டுப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவருக்கு எந்தவிதமான சரீர இம்சை விளைவிப்பது எப்போதுமே தங்கள் நோக்கமல்ல என்றும், அவருடைய உயிரும், ஆரோக்கியமும் மற்றவர்களைப் போலவே தங்களுக்கும் முக்கியமானதுதான் என்றும், தனிப்பட்டவர்கள்மீது பலாத்காரத்தை உபயோகிப்பது தங்கள் கொள்கையல்ல என்றும் அவர்கள் விளக்கிக் கூறினர்கள். ஆனல், ஒப்பந்த* விஷயத்தில் அவர்கள் பிடிவாதமா யிருந்தார்கள். அதன் மூலம் இந்தியாவில் தொழிலாளர்கள், விவசாயிகள் சுதந்திரக் குடியரசு ஏற்படவே முடியாது என்று அவர்கள் கருதினர்கள். அன்பு ததும்ப அவர்களிடம் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்: "எனதன்புள்ள இளைஞர்களே, பீகாரில் போய்ப் பாருங்கள். தொழிலாளர்கள், விவசாயிகளின் குடியரசு அங்கே செயலில் நடந்துகொண்டிருப்பதைக் காண்பீர்கள். பத்து வருடங்களுக்கு முன்பு பயமும், அடிமைத்தனமும் இருந்த இடத்தில் தைரியமும், வீரமும், தவறை எதிர்க்கும் சக்தியும் இப்பொழுது இருக்கின்றன. முதலாளித்துவம் அழிந்துவிட வேண்டும் என்று நீங்கள் விரும்பினல், அல்லது பணக்காரர்கள், முதலாளிகளை ஒழித்துவிட வேண்டும் என்று விரும்பினல், நீங்கள் ஒரு நாளும் வெற்றி பெறப் போவதில்லை. தொழிலாளர்களுக்குள்ள சக்தி என்ன என்பதை நீங்கள் முதலாளிகளுக்குக் காட்ட வேண்டும். அப்போது, தமக்காகப் பாடுபடுபவர்களின் தருமகர்த்தாக்களாக இருக்க அவர்கள் சம்மதிப்பார்கள். போதிய உணவு, குடியிருப்பு வசதி, ஆடைகள், சுயமரியாதையுள்ள மனிதர்களாகவும், சாதாரண சௌகரியங்களுடனும் வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய வசதி தேவை. தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் இதற்கு மேல் அதிகமாக நான் ஒன்றும் கேட்கவில்லை. அந்த நிலைமை ஏற்பட்ட பிறகு, அவர்களுள் மிகவும் புத்திசாலியாக இருப்பவர் மற்றவர்களைவிட நிச்சயமாக அதிகச் செல்வம் தேடிவிடுவார். ஆனல், நான் விரும்புவதென்ன என்பதை உங்களிடம் சொல்லிவிட்டேன். பணக்காரர்கள், தம்மிடமுள்ள செல்வத்தை ஏழைகளின் தருமகர்த்தாக்களாக வைத்துக்கொண்டிருக்க வேண்டும், அல்லது அந்தச் செல்வத்தைத் துறந்துவிட வேண்டும் என்று விரும்புகிறேன். நான் டால்ஸ்டாய் பண்ணையை அமைத்தபோது என் சொத்தையெல்லாம் துறந்துவிட்டேன் என்பது உங்களுக்குத் தெரியுமா? ரஸ்கினின் 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற புத்தகத்திலிருந்துதான் எனக்கு

* காந்தி – இர்வின் ஒப்பந்தம், 1931-இல் கையெழுத்திடப்பட்டது.

அந்த எண்ணம் தோன்றிற்று. அதே முறையில் எனது பண்ணையை அமைத்தேன். உங்களுடைய தொழிலாளர், விவசாயிகள் குடியரசில் நான் 'ஒரு ஸ்தாபக மெம்பர்' போன்றவன் என்பதை இப்போது நீங்கள் உணருவீர்கள். எது அதிக முக்கியமானது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? செல்வமா? உழைப்பா? வண்டி வண்டியாகப் பணத்துடன் நீங்கள் சகாரா பாலைவனத்தில் தனித்து விடப்பட்டதாக வைத்துக்கொள்ளுங்கள். அப்பணம் உங்களுக்கு எப்படி பிரயோசனப்படும்? ஆனால், நீங்கள் வேலை செய்ய முடியுமென்றால், நீங்கள் பட்டினி கிடக்கவேண்டிவராது. ஆகவே, வேலையைவிடப் பணம் உயர்ந்தது என்று எப்படிச் சொல்ல முடியும்? அகமதாபாத்தில் தொழிற் சங்கம் எப்படி வேலை செய்கிறது என்பதை நீங்களே நேரில் போய்ப் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள். அவர்கள் தம்முடைய சொந்தக் குடியரசு ஒன்றை ஸ்தாபிப்பதற்கு எப்படி முயற்சி செய்கிறார்கள் என்பதை நீங்களே போய்ப் பாருங்கள்.''

—'எங் இந்தியா' – 2—4—1931

['வாரக் கடிதம்' என்பதிலிருந்து எடுத்தது.]

# 10

# சோஷலிஸ்டு யார்?

இந்தக் கேள்விக்குக் காந்திஜி 1947 ஜுலை 13-ஆம் தேதி பிரசுரமான ஒரு கட்டுரையில் பதில் சொல்லியிருக்கிறார். 'எனக்குத் தெரிந்த மட்டில், சோஷலிஸம் என்பது அழகான சொல். சோஷலிஸத்தின் கீழ் சமூகத்தில் யாவரும் சமம்—உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்பதே கிடையாது......மனிதனின் அங்கங்கள் எப்படிச் சமமோ அவ்வாறே சமூகத்தின் எல்லாப் பிரிவினரும் ஒரே அளவினர்'. இதுதான் சோஷலிஸம் என்கிறார் காந்திஜி. 'நமது வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளாமல் பேசிக்கொண்டே போகலாம். கட்சிகள் அமைத்துக்கொண்டிருக்கலாம். கிடைத்ததைப் பருந்துபோல் கொத்திக்கொண்டு போகலாம். ஆனால், அது சோஷலிஸமாகாது. சோஷலிஸப் பாதையில் செல்வதை எவ்வளவுக்கெவ்வளவு விளையாட்டாகக் கருதுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அது நமக்குக் கிட்டாமல் அப்பால் செல்லும்' என்று எச்சரிக்கை செய்கிறார்.

இதே சமயத்தில், இந்தச் சோஷலிஸத்தை அடைவதற்கு உண்மையும், அகிம்சையும் கலந்த பரிசுத்தமான முறையைக்

கையாளுவது முக்கியம் என்றும் வற்புறுத்துகிருர். ‘உண்மையும், அகிம்சையும், தூய்மையும் நிரம்பிய சோஷலிஸ்டுகள்தான் இந்தியாவிலும் உலகிலும் சோஷலிஸ்டு சமுதாயத்தை அமைக்க முடியும்......மேலே குறிப்பிட்ட முறைகளினுலன்றி அத்தகைய சமுதாயம் நிலை பெறுவது முடியவே முடியாது’ என்றும் காந்திஜி கூறியிருக்கிருர்.

[இக்கட்டுரையின் விவரம் ‘மகாத்மா காந்தி நூல்கள்’ இரண்டாம் தொகுப்பில் 858-59-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.]

## 11

# சத்தியமும், அகிம்சையும் சோஷலிஸத்தின் இரு தூண்கள்

சோஷலிஸத்தில் சத்தியமும் அகிம்சையும் நிறைந்திருக்க வேண்டும். அவை அவ்வாறு இருந்து வருவதற்கு அக்கொள்கையைப் பின்பற்றுகிறவருக்கு ஜீவனுள்ள கடவுள் நம்பிக்கை இருக்க வேண்டும். சத்தியத்தையும் அகிம்சையையும் யந்திரம் போல் அனுசரித்து வருவதானுல், நெருக்கடியான சமயம் வரும் போது அவை உடைந்துவிடும். இதனுலேயே சத்தியமே கடவுள் என்கிறேன். இந்தக் கடவுள் ஜீவனுள்ள சக்தி. அந்தச் சக்தியினுலானது நம் வாழ்வு. அந்தச் சக்தி நம்முள் இருக்கிறது. ஆனுல், உடல் அல்ல அது. அந்த மகத்தான சக்தி இருக்கிறது என்பதை மறுப்பவர், வற்ருத அந்தச் சக்தி தனக்குப் பயனுவதை மறுத்துக்கொள்ளுபவராவதோடு அதனுல் சக்தியற்றவராகவும் இருந்து வருகிருர். சுக்கான் இல்லாத கப்பலைப் போன்றவரே அவர். அந்த வாழ்வு அங்குமிங்குமாக அலைப்புண்டு முன்னேற முடியாது அழியும். அப்படிப்பட்டவர்களின் சோஷலிஸம் அவரை எங்கும் கொண்டு போய்விடாது என்ருல், அவர்கள் வசிக்கும் சமூகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை.

அப்படியானுல், எந்தச் சோஷலிஸ்டுக்கும் கடவுளிடம் நம்பிக்கை இல்லை என்று அர்த்தமா? அப்படி யாராவது தெய்வ நம்பிக்கையுள்ளவர்கள் இருக்கிருர்களென்ருல், அவர்களுடைய லட்சியத்தில் ஏன் முன்னேற்றம் காணப்படவில்லை? கடவுள் பக்தியுள்ள பலர் இதற்கு முன்னுல் வாழ்ந்திருக்கிருர்கள். சோஷலிஸ்ட் ராஜ்யத்தை ஏற்படுத்துவதில் அவர்கள் ஏன் வெற்றி பெறவில்லை?

இந்த இரண்டு சந்தேகங்களையும் அடியோடு வாயடைத்து விடுவது கஷ்டமே. ஆயினும், தன்னுடைய சோஷலிஸத்திற்கும், கடவுள் நம்பிக்கைக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்பது, கடவுள் நம்பிக்கையுள்ள சோஷலிஸ்டுக்குத் தோன்றவே இல்லை என்று சொல்லலாம். கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள், மக்களுக்குச் சோஷலிஸத்தைச் சிபார்சு செய்வதே இல்லை என்றும் சொல்லலாம்.

கடவுள் நம்பிக்கையுள்ள ஆண்களும், பெண்களும் இருந்தும்கூட உலகத்தில் மூடநம்பிக்கைகள் மலிந்துகொண்டுதான் வந்திருக்கின்றன. ஹிந்து மதத்தில்கூட, சமீப காலம் வரையில் தீண்டாமை மேலோங்கித்தான் இருந்தது.

இந்தப் பெரிய சக்தியையும், மறைந்துகிடக்கும் அதன் சாத்தியக் கூறுகளையும் அறிந்துகொள்ளுவதற்கு எப்போதுமே கடுமையான ஆராய்ச்சி அவசியமா யிருந்திருக்கிறது என்பது தான் உண்மை.

— 'ஹரிஜன்' – 20—7—1947

# 12

# சோஷலிஸ்டு என்று நான் கொண்டாடும் உரிமை

அரசியல் நிர்ணய சபையைப் பற்றிய ஒரு கேள்வியுடன் பிஷர்* ஆரம்பித்தார். "அரசியல் நிர்ணய சபைக்குள் போய் அதை வேறு காரியத்திற்காக — போர்க்களமாக — உபயோகித்துக்கொண்டு, அந்தச் சபையைப் பூரண ஆதிபத்தியமுள்ள ஒரு சபையாக அறிவித்துவிடுவேன். இந்த யோசனையைப்பற்றி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று பிஷர் கேட்டார்.

காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்: "வேறு ஒருவருடைய சிருஷ்டியைப் பூரண ஆதிபத்திய உரிமை கொண்டது என்று அறிவிப்பதில் பிரயோசனமில்லை. அது ஒரு பிரிட்டிஷ் சிருஷ்டிதானே? வற்புறுத்திக் கூறுவதால் ஒரு சபை பூரண ஆதிபத்திய உரிமை கொண்டதாகிவிடாது. அதற்கு அத்தகைய அந்தஸ்து ஏற்பட வேண்டுமானல், ஆதிபத்திய உரிமை வழியில் நாம் நடந்துகொள்ள வேண்டும். தாங்கள் பூரண அதிகாரங்கள்

* லூயி பிஷர், பிரபல அமெரிக்க பத்திரிகையாளர். மகாத்மா காந்தியின் வாழ்க்கையைக் குறித்து ஒரு நூல் எழுதியிருப்பதோடு ஏராளமான கட்டுரைகளையும் எழுதியிருக்கிறார்.

கொண்ட ஒரு சபையினர் என்று ஜோகன்னஸ்பர்க்கிலுள்ள, டுலி தெருவைச் சேர்ந்த மூன்று தையற்காரர்கள் அறிவித்துக் கொண்டனர். அதனால், ஒன்றும் நடக்கவில்லை. அது வெறும் கேலிக் கூத்தே.

“உத்தேச அரசியல் நிர்ணய சபை புரட்சித்தன்மை வாய்ந்த தல்ல என்று நான் நினைக்கவில்லை. உருப்படியான தன்மை யுள்ள சட்ட மறுப்புக்கு, உத்தேச அரசியல் நிர்ணய சபை பல னளிக்கத்தக்க ஒரு மாற்றாகும் என்று நான் தெரிவித்துள்ள அபிப்பிராயம் முற்றிலும் உண்மையானதாகும். நமது சோஷ லிஸ்டு நண்பர்களின் தன்னல மறுப்பு, தியாக உணர்ச்சி ஆகிய வற்றில் எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு. ஆயினும், அவர்களு டைய வழிக்கும், என்னுடைய வழிக்குமிடையே உள்ள பெரிய வித்தியாசத்தை நான் மறைத்ததே இல்லை. அவர்கள் பலாத் காரத்தையும், அதிலுள்ள மற்றெல்லா அம்சங்களையும் உண்மை யாகவே நம்புகிறார்கள். நான் முழுக்க முழுக்க அகிம்சையையே நம்புகிறேன்.”

இதிலிருந்து விவாதம் சோஷலிஸத்தைப் பற்றிய விஷயங் களுக்குத் திரும்பியது. “அவர்களைப் போல் நீங்களும் ஒரு சோஷலிஸ்டுதானே?” என்றார் பிஷர்.

**காந்திஜி:** நான் சோஷலிஸ்டுதான்; ஆனால், அவர்கள் அல்ல. அவர்களில் அநேகர் பிறப்பதற்கு முன்பே நான் சோஷ லிஸ்ட். ஜோகன்னஸ்பர்க்கில் ஒரு தீவிரமான சோஷ லிஸ்டை நான் திருப்தி செய்தேன். அது கிடக்கட்டும். அவர்களுடைய சோஷலிஸம் செத்த பிறகும், நான் சோஷ லிஸ்ட் என்று உரிமை கொண்டாடுவது நிலைத்து நிற்கும்.

**பிஷர்:** உங்கள் சோஷலிஸம் என்பதன் பொருள் என்ன?

**கா:** ‘கடையனுக்கும் கதி மோட்சம்’ என்பதே என்னுடைய சோஷலிஸத்தின் பொருள். குருடர்கள், செவிடர்கள், ஊமைகளின் நலன்கள் பலியாக்கப்பட்டு அதன் மீது சோஷ லிஸம் ஏற்பட வேண்டும் என்று நான் விரும்பவில்லை. அவர் களுடைய சோஷலிஸத்தில் ஒருக்கால் இவர்களுக்கெல் லாம் இடமில்லாமல் இருக்கலாம். லோகாயத முன்னேற் றம் ஒன்றுதான் அவர்களுடைய ஒரே நோக்கம். உதாரண மாக, அமெரிக்காவில் ஒவ்வொருவருக்கும் ஒரு மோட்டார் இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள். நான் அப்படி ஆசைப்படவில்லை. என்னுடைய தனித் தன்மை பூராவாகச் செயல்படுவதற்குச் சுதந்திரம் வேண்டும் என்று நான்விரும்பு கிறேன். ஸிரியஸுக்கு* மாடிப்படி கட்ட வேண்டும் என்று நான் விரும்பினால் அதற்கும் எனக்கு உரிமை இருக்க வேண் டும். அதனால், அப்படி நான் மாடிப்படி கட்டப் போவதாக

---

* இதைப் பற்றிய அடிக்குறிப்பை 23-ஆம் பக்கத்தில் பார்க்கவும்.

அர்த்தமில்லை. மற்ற சோஷலிஸத்தில், தனிப்பட்டவர்களுக்குச் சுதந்திரம் இல்லை. உங்களுக்கென்று சொந்தமானது ஒன்றுமில்லை. உங்கள் உடல்கூட உங்களுக்குச் சொந்தமில்லை.

பி: ஆம். அதில் பல விதங்கள் இருக்கின்றன. என்னுடைய சோஷலிஸத்தின் கீழ், எல்லாமே சர்க்காருக்குச் சொந்தமானதல்ல. ரஷியாவில் யாவும் சர்க்காருக்குச் சொந்தம் என்று இருக்கிறது. அங்கே உங்கள் உடல்கூட உங்களுக்குச் சொந்தமில்லைதான். நீங்கள் எந்த விதமான குற்றமும் செய்யாமல் இருக்கலாம்; ஆயினும், எந்தச் சமயத்திலும் நீங்கள் கைது செய்யப்படலாம். அவர்கள் உங்களை எங்கே வேண்டுமானாலும் அனுப்பலாம்.

கா: உங்களுடைய சோஷலிஸத்தில் குழந்தைகள் சர்க்காருக்குச் சொந்தமானவை யல்லவா? சர்க்கார் தங்களிஷ்டப்படி குழந்தைகளுக்குக் கல்வி யளிக்கலாமல்லவா?

பி: எல்லா நாடுகளும் அப்படித்தான் செய்கின்றன. அமெரிக்காவிலும் அப்படித்தான் நடக்கிறது.

கா: அப்படியானால், அமெரிக்காவுக்கும் ரஷியாவுக்கும் அதிக வித்தியாசமில்லை.

பி: நீங்கள் உண்மையாகவே சர்வாதிகாரத்தை ஆட்சேபிக்கிறீர்கள்.

கா: சோஷலிஸமே சர்வாதிகாரம்தானே? அல்லவென்றால், அது பொழுதுபோக்கு வேதாந்தமா யிருக்க வேண்டும். நானும் என்னைக் கம்யூனிஸ்டு என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

பி: வேண்டாம், வேண்டாம். நீங்கள் உங்களைக் கம்யூனிஸ்ட் என்று சொல்லிக்கொள்ளுவது அநியாயம். நீங்கள் விரும்புவதையே, ஜெயப்பிரகாஷும் சோஷலிஸ்டுகளும் விரும்புவதையே நானும் விரும்புகிறேன்—அதாவது, சுதந்திரமான உலகம். ஆனால், கம்யூனிஸ்டுகள் அதை விரும்பவில்லை. உடலையும், உள்ளத்தையும் அடிமைப்படுத்தும் ஒரு முறையையே அவர்கள் விரும்புகிறார்கள்.

கா: மார்க்ஸும் அப்படித்தான் என்று சொல்லுவீர்களா?

பி: தங்களுடைய நோக்கத்திற்குச் சாதகமாகக் கம்யூனிஸ்டுகள் மார்க்ஸின் கொள்கைகளை மோசமாக்கிவிட்டார்கள்.

கா: லெனினைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

பி: லெனின்தான் அதை ஆரம்பித்தார்; பிறகு ஸ்டாலின் அதைப் பூர்த்தி செய்திருக்கிறார். கம்யூனிஸ்டுகள் உங்களிடம் வரும்போது, காங்கிரஸுக்குள் புகுந்துகொண்டு,

தங்களுடைய நோக்கத்திற்காக அதை உபயோகித்துக் கொள்ளவே விரும்புகிறார்கள்.

கா: சோஷலிஸ்டுகளும் அப்படித்தான். என்னுடைய கம்யூனிஸம் சோஷலிஸத்திலிருந்து அதிகம் மாறுபட்ட தல்ல. இரண்டும் ஒன்றாகக் கலந்ததே அது. எனக்குப் புரிந்தவரையில் கம்யூனிஸம் என்பது சோஷலிஸத்தின் இயற்கையான விளைவு.

பி: ஆம். நீங்கள் சொல்லுவது சரிதான். ஒரு காலத்தில் இரண்டுக்கும் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாமல் இருந்தது. ஆனால், இன்று சோஷலிஸ்டுகள் கம்யூனிஸ்டு களைப் போல் இல்லாமல் மிகவும் மாறுபட்டவர்களாக இருக்கிறார்கள்.

கா: ஸ்டாலின் ரகத்தைச் சேர்ந்த கம்யூனிஸம் வேண்டாம் என்று சொல்லுகிறீர்களா?

பி: இந்தியாவில் ஸ்டாலின் ரக கம்யூனிஸம் வேண்டும் என்று தான் இந்திய கம்யூனிஸ்டுகள் விரும்புகிறார்கள்; அதற்கு உங்கள் பெயரையும் உபயோகித்துக்கொள்ளப் பார்க் கிறார்கள்.

கா: அவர்கள் வெற்றி பெற மாட்டார்கள்.

—'ஹரிஜன்'—4—8—1946

["நான்கு வருடங்களுக்குப் பிறகு" என்று ஸ்ரீ பியாரிலால் எழுதிய கட்டுரையிலிருந்து சில பகுதிகள்.]

# 13

# சாத்விக சோஷலிஸ்டு அமைப்பு

பின்கண்ட நகல் தீர்மானத்தை ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் எனக்கு அனுப்பினர். இந்தச் சித்திரத்தை நான் ஒப்புக்கொண்டால், ராம்காரில் கூடப்போகும் காரியக் கமிட்டிக் கூட்டத்தின் முன்பு சமர்ப்பிக்கும்படியும் என்னைக் கேட்டுக் கொண்டார்:

"காங்கிரஸும் தேசமும் ஒரு பெரிய தேசீய எழுச்சியை எதிர்நோக்கி யிருக்கின்றன. சுதந்திரம் பெறுவதற்கான இறுதிப் போராட்டம் சமீபத்தில் ஆரம்பமாகவிருக்கிறது. உலகம் பூராவையும் மாறுதலின் மகத்தான சக்திகள் கலகலக்க வைக்கும்போது இது ஏற்படும். ஐரோப்பிய யுத்தத்தின் விளைவாக ஏற்பட்ட விபரீதத்திலிருந்து ஒரு புது உலகத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்று எல்லா நாடுகளிலுமுள்ள சிந்தனையாளர்கள் ஆவலா யிருக்கிறார்கள். தேசங்கள், மக்களின் கூட்டுறவான நல்லெண்ணத்தை அடிப்படையாகக்

கொண்ட ஓர் உலக அமைப்புக்கு ஆசைப்படுகின்றன. இத்தருணத்தில் தன்னுடைய சுதந்திர லட்சியங்களைத் தெளிவாக விளக்கிக் கூறவேண்டியது அவசியம் என்று காங்கிரஸ் கருதுகிறது. இதற்காக இந்திய மக்கள் பெரும் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டும் என்றும் சீக்கிரத்தில் அறிவிக்கப் போகிறது.

''சுதந்திர இந்தியா பின்கண்ட லட்சியங்களுக்காக உழைக்கும்: பல்வேறு நாடுகளிடையே சமாதானமான உறவுகள், ஆயுதங்களை அடியோடு ஒழித்துவிடுதல், மனமுவந்து ஏற்படுத்தப்படும் ஏதாவது ஒரு சர்வதேச ஸ்தாபனத்தின் மூலம் தேசங்களிடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ளுதல்; முக்கியமாக, பக்கத்திலுள்ள நாடுகள் பெரிய வல்லரசுகளா யிருந்தாலும், சிறு நாடுகளாயிருந்தாலும், அவற்றுடன் மிகுந்த நேசபாவத் துடன் வாழ்வதற்கு இந்தியா முயற்சி செய்யும்; மற்றவர்களின் நாட்டைப் பிடிக்க இந்தியா ஆசைப்படாது.

''சுதந்திரமாகத் தெரிவிக்கப்பட்ட மக்களின் கருத்தை அடிப்படை யாகக் கொண்டே நாட்டின் சட்டம் வகுக்கப்படும். மக்களின் சம்மதமும் அங்கீகாரமுமே இறுதியில் அமைதியைக் காக்கும் ஆதாரங்களா யிருக்கும்.

''சுதந்திர இந்தியாவில் தனி நபர் உரிமையும், பிரஜா உரிமையும், கலாசார மத உரிமையும் பூரணமாக உத்தரவாதம் செய்யப்படும். ஆனால், அரசியல் நிர்ணய சபையின் மூலம் இந்திய மக்கள் வகுக்கும் அரசியலமைப் பைப் பலாத்கார வழிகளால் குலைப்பதற்கு உரிமை இராது.

''நாட்டிலுள்ள பிரஜைகளுக்கிடையே அரசாங்கம் எந்த விதமான பாகுபாடும் காட்டாது. ஒவ்வொரு பிரஜைக்கும் சம உரிமைகள் உத்தர வாதம் செய்யப்படும். பிறப்பினால் உயர்வு, சலுகை என்பனவெல்லாம் ரத்துச் செய்யப்படும். வம்சா வழியிலோ, சர்க்காரிடமிருந்தோ எந்தப் பட்டமும் இராது.

''அரசாங்கத்தின் ராஜீய, பொருளாதார நடவடிக்கைகள், சமூக நீதி, பொருளாதார சுதந்திரம் என்ற கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கும். சமூகத்திலுள்ள ஒவ்வொரு தனி மனிதனின் தேவைகளை யும் திருப்தி செய்யும் வகையில் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் இருக்குமென் றாலும், லோகாயத திருப்தி ஒன்று மட்டுமே நோக்கமாக இராது. தனி மனிதர்கள் ஆரோக்கியமாக வாழ்வதற்கும், அவர்களுடைய தார்மிகப் பண்பும், அறிவும் வளர்ச்சி பெறவும் அந்த நடவடிக்கைகள் உதவி செய்யும். சமூக நீதி என்ற லட்சியம் நிறைவேறுவதற்காக, சம்பந்தப்பட்ட யாவரின் நலன்களுக்காகவும், தனிப்பட்டவர்களின் முயற்சிகளினாலோ, கூட்டுறவு முயற்சி களினாலோ நடத்தப்படும் சிறு உற்பத்தி முறைகளுக்கு அரசாங்கம் ஆதரவளிக் கும். பெரும் அளவில் உற்பத்தி செய்யும் சாதனங்கள் யாவும் முடிவில் கூட்டு உடைமைகளாக்கப்படும். முதல் முதலாக கன ரக போக்குவரத்துச் சாதனம், கப்பல்கள், சுரங்கங்கள், கன ரகத் தொழில்கள் சர்க்கார் உடைமைகளாக்கப் படும். ஜவுளி உற்பத்தித் தொழில் படிப்படியாகப் பரவலாக விநியோகிக் கப்படும்.

''கிராமங்களின் வாழ்வும் சீரமைக்கப்படும். கிராமங்கள் சாத்தியமான அளவு தன்னிறைவு பெற்றவைகளாக இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள்

எடுத்துக்கொள்ளப்படும். உழுது பயிரிடுபவனுக்கே நிலம் சொந்தம், கண்ணிய மான முறையில் தன் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கு எவ்வளவு வேண்டுமோ அதற்கு அதிகமாக எந்தச் சாகுபடியாளரிடமும் நிலம் இருக்கக்கூடாது என்ற அடிப்படையில் நாட்டின் நில உடைமைச் சட்டங்கள் அடியோடு மாற்றப்படும். இதனால், பலதரப்பட்ட நிலச்சுவான் உரிமைகளும், பண்ணை அடிமைத்தனமும் ஒழிந்துவிடும்.

"எல்லா வர்க்கத்தினரின் நலன்களையும் அரசாங்கம் காப்பாற்றும். ஆனால், இந்த நலன்கள், ஏழை எளியவர்களின் நலன்களுக்கு முரணாக இருக்கும்போது, அரசாங்கம் ஏழைகளின் நலன்களுக்கே பாதுகாப்பு அளித்து, சமூக நீதி வழங்கும்.

"அரசாங்கத்திற்குச் சொந்தமான, அல்லது அரசாங்கத்தினால் நிர்வகிக் கப்படும் எல்லாத் தொழில் முயற்சிகளின் நிர்வாகங்களிலும், தொழிலாளர் களின் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்கு இடம் இருக்கும். அவற்றி லுள்ள அரசாங்கப் பிரதிநிதிகளைப் போலவே இவர்களுக்கும் சம பங்கு இருக்கும்.

"இந்திய சமஸ்தானங்களில் பூரண ஜனநாயக முறை ஏற்படுத்தப்படும். சமூக பாகுபாடுகளை ஒழிப்பது, பிரஜைகளிடையே சம அந்தஸ்து வழங்குவது என்ற கொள்கைகளுக்கிணங்க, சமஸ்தானங்களில் ராஜாக்கள், நவாபுகள் போன்ற அதிபர்கள் இருக்கக்கூடாது.

"காங்கிரஸ் விரும்பும் அமைப்பு இதுதான்; இதை நிறைவேற்றுவ தற்குக் காங்கிரஸ் வேலை செய்யும். இந்த அமைப்பினால் இந்தியாவிலுள்ள எல்லா வகுப்பினருக்கும், மதத்தினருக்கும் இன்பமும், சுபிட்சமும், சுதந்திர மும் ஏற்படும் என்று காங்கிரஸ் உறுதியாக நம்புகிறது. இந்த மக்கள் யாவரும் ஒன்று சேர்ந்து, இந்த அஸ்திவாரத்தின் மீது மகோன்னதமான ஒரு சமுதாயத்தைக் கட்டி வளர்ப்பார்கள் என்றும் காங்கிரஸ் உறுதியாக நம்புகிறது."

இது எனக்குப் பிடித்திருந்தது. அவருடைய கடிதத்தையும் நகல் தீர்மானத்தையும் காரியக் கமிட்டிக்கு வாசித்துக் காட்டினேன். ராம்கார் காங்கிரஸில் ஒரே ஒரு தீர்மானத்தைத் தான் பிரேரிக்க வேண்டும் என்ற ஏற்பாட்டையே பின்பற்ற வேண்டும் என்றும், பாட்னாவில் தயாரிக்கப்பட்ட அசல் தீர்மா னத்தில் கை வைக்கக்கூடாது என்றும் கமிட்டி கருதியது. கமிட்டியின் இந்தக் கருத்துக்கு ஆட்சேபணை சொல்ல முடியாது. ஆகவே, நகல் தீர்மானத்தைப் பற்றி விவாதிக்காமலே அது கைவிடப்பட்டது. என் முயற்சி இவ்விதம் முடிந்தது என்பதை ஸ்ரீ ஜெயப்பிரகாஷுக்குத் தெரிவித்தேன். அப்படியானால், அத் தீர்மானத்திற்கு என்னுடைய முழு ஆதரவுடன், அல்லது கொடுக்க முடிந்த ஆதரவுடன் நான் அதைப் பிரசுரித்துவிட்டால் தமக்குத் திருப்தி என்று அவர் பதிலளித்தார்.

ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் விரும்பியபடி செய்வதில் எனக்கு ஆட் சேபணையே இல்லை. இந்தியா சுதந்திரமடைந்த பிறகு நிலைமை எப்படி இருக்க வேண்டும் என்ற லட்சியம் சம்பந்தப்பட்ட வரையில், ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் கூறியவற்றில் ஒன்றைத் தவிர மற்றவைகளைப் பொதுவாக நான் ஆதரிக்கிறேன்.

இந்தியாவிலுள்ளவர்கள் சோஷலிஸக் கருத்தை ஏற்றுக் கொள்ளுவதற்கு வெகு காலத்திற்கு முன்பிருந்தே நான் சோஷலிஸ்டாக இருந்திருப்பதாகச் சொல்லி யிருக்கிறேன். ஆனால், என்னுடைய சோஷலிஸம் இயற்கையானது; எந்தப் புத்தகத்திலிருந்தும் கற்றுக்கொண்டதல்ல. அகிம்சையில் எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கையிலிருந்து அது பிறந்தது. அகிம்சையில் தீவிரப் பற்றுள்ள யாரும், எங்கே சமூக அநீதி காணப்பட்டாலும், அதை எதிர்த்து நீக்காமலிருக்க முடியாது. ஆனால், நான் அறிந்த வரையில் சோஷலிஸ்ட் கொள்கைகளை அமுல் நடத்துவதற்குப் பலாத்காரம் அவசியம் என்று மேற்கத்திய நாட்டு சோஷலிஸ்டுகள் துரதிருஷ்ட வசமாக நம்புகிறார்கள்.

மிகவும் எளியவர்களுக்கு, சமூக நீதி வழங்குவதுகூட பலாத்காரத்தினால் சாத்தியமில்லை என்றே நான் எப்போதும் சொல்லி வந்திருக்கிறேன். ஏழை எளியவர்கள் நன்கு பயிற்சி பெற்றால், தமக்கிழைக்கப்பட்ட தவறுகளுக்குச் சாத்விகமான முறைகளின் மூலம் பரிகாரம் பெறுவது சாத்தியம் என்றும் நான் நம்பி வந்திருக்கிறேன். சாத்விக ஒத்துழையாமையே அந்த முறையாகும். சில சமயங்களில் ஒத்துழைப்பைப் போலவே ஒத்துழையாமையும் ஒரு கடமையாகிவிடுகிறது. தான் அடிமைப்படுவதற்கோ, கஷ்டப்படுவதற்கோ யாரும் ஒத்துழைக்கவேண்டும் என்ற அவசியமில்லை. மற்றவர்களின் முயற்சியினால் பெறும் சுதந்திரத்தை, அந்த முயற்சி வாபஸ் பெறப்பட்ட பிறகு, நீடித்துக் காப்பாற்ற முடியாது; எவ்வளவு நல்லெண்ணத்துடன் அம்முயற்சிகள் செய்யப்பட்டிருந்தாலும் பிரயோசனமில்லை. அதாவது, அத்தகைய சுதந்திரம் உண்மையான சுதந்திரமாகாது. ஆனால், சாத்விக ஒத்துழையாமை மூலம் அதைப் பெறும் வித்தையைத் தெரிந்துகொண்டுவிட்டால், மிகவும் சாதாரணமானவர்கள்கூட அதனுடைய பெருமையை உணர முடியும்.

ஆகையால், ஸ்ரீ ஜெயப்பிரகாஷின் நகல் தீர்மானத்தை நான் வாசிக்கும்போது, அவர் விரும்பும் அமைப்பைப் பெறுவதற்கு அகிம்சையை அவர் ஏற்றுக்கொண்டிருப்பதைக் காண எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. பலாத்காரத்தினால் ஒருபோதும் பெற முடியாததை, இறுதியில் தவறிழைப்பவர்களை மாற்றுவதன் மூலம் சாத்விக ஒத்துழையாமையினால் சாதிக்க முடியும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இந்தியாவிலுள்ள நாம், அகிம்சையைச் சரியாகச் சோதனை செய்து பார்க்கவே யில்லை. கலப்புத் தன்மை வாய்ந்த நமது அகிம்சையின் மூலமே நாம் இவ்வளவு பெற முடிந்திருப்பதுதான் அற்புதமாகும்.

நிலங்கள் பற்றி ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் கூறும் யோசனைகள் பயங்கரமாய்த் தோன்றலாம். உண்மையில் அவை அப்படியல்ல. கண்ணியமான வாழ்க்கைக்கு என்ன தேவையோ அதற்கு அதிகமாக யாரும் நிலம் வைத்துக்கொள்ளக்கூடாது. தமக்

கென்று நிலம் இல்லாததால்தான் மக்கள் இவ்வளவு கடும் வறுமையில் மூழ்கியிருக்கிறார்கள் என்பதை யார் மறுக்க முடியும்?

ஆனால், இந்தச் சீர்திருத்தத்தை அவசரப்பட்டுச் செய்ய முடியாது என்பதையும் உணர வேண்டும். அகிம்சை முறையின் மூலமே இதைச் சாதிக்க வேண்டுமானால், பணக்காரர்கள், ஏழைகள் இருவருக்குமே பயிற்சியளிக்க வேண்டும். உங்களுக்கெதிராக எக்காலத்திலும் பலாத்காரத்தை உபயோகிக்கமாட்டோம் என்று பணக்காரர்களுக்கு உறுதி கூற வேண்டும். உங்களுக்கு இஷ்டமில்லாத எதையும் செய்யும்படி யாரும் கட்டாயப்படுத்த முடியாது. தாமே சுயமாகக் கஷ்டங்களை அனுபவிக்கும் அகிம்சையைக் கற்றுக்கொள்ளுவதன் மூலம் நீங்கள் சுதந்திரம் பெற முடியும் என்பதை ஏழைகளுக்கும் உணர்த்த வேண்டும். நம்முடைய நோக்கம் வெற்றிபெற வேண்டுமானால், நான் கூறும் இந்தப் பயிற்சியை இப்போதே ஆரம்பிக்க வேண்டும். பரஸ்பர மரியாதை, நம்பிக்கையுள்ள ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவது முதல் படியாகும். அப்போது பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமிடையே பலாத்காரப் போராட்டம் எதுவுமிராது.

ஆகையால், ஸ்ரீ ஜெயப்பிரகாஷின் அகிம்சாபூர்வமான யோசனைகளைப் பொதுவாக ஆதரிப்பதில் எனக்கு ஒரு கஷ்டமுமில்லை. ஆனால், சமஸ்தானாதிபதிகள் விஷயத்தில் அவர் சொல்லுவதை நான் ஒப்புக்கொள்ள முடியவில்லை. சட்டப்படி அவர்கள் சுதந்திரமானவர்கள். அவர்களுடைய சுதந்திரத்திற்கு அதிக மதிப்பில்லை என்பது உண்மையே. ஏனெனில், வேறு ஒரு பலசாலியினால் அது உத்தரவாதம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், நமக்கெதிராக அவர்கள் தமது சுதந்திரத்தை வற்புறுத்த முடியும். ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நகல் தீர்மானத்திலுள்ளதைப் போல், சாத்விகமான முறைகளின் மூலம் நாம் நமது உரிமைகளைப் பெற முடிந்தால், சமஸ்தானாதிபதிகளும் தமது உரிமைகளை விட்டுக்கொடுத்துவிடுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. எந்த விதமான உடன்பாடு செய்யப்பட்டாலும், தேசம் அதைப் பூரணமாக நிறைவேற்ற வேண்டும். ஆகையால், எந்த உடன்பாட்டிலும் பெரிய சமஸ்தானங்களின் அந்தஸ்து அப்படியே இருக்கும் என்றே நம்புகிறேன். ஒரு விதத்தில் அது இப்போதுள்ளதைவிட மிகச் சிறந்ததாக இருக்கும். ஆனால், மற்றொரு விதத்தில், இந்தியாவிலுள்ள மற்றப் பகுதிகளில் மக்கள் எவ்வளவு சுதந்திரம் அனுபவிக்கிறார்களோ அதே அளவுதான் சமஸ்தான மக்களுக்கும் கிடைக்கும். பேச்சுச் சுதந்திரம், பத்திரிகைச் சுதந்திரம், உண்மையான நீதி ஆகியவை அவர்களுக்கு உத்தரவாதம் செய்யப்படும். ஆனால், சமஸ்தானாதிபதிகள் தமது யதேச்சாதிகாரத்தைத் தாமாகவே விட்டுக் கொடுத்து விடுவார்கள் என்பதில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷுக்கு நம்பிக்கை இல்லையோ, என்னவோ; எனக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. முதலாவதாக, நம்மைப் போல் அவர்களும் மனிதப் பிறவிகளே. இரண்டாவதாக, உண்

மையான அகிம்சையின் சக்தியில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நம்முடைய நம்பிக்கைக்கும், நாட்டினிடமும் நாம் உண்மையாக நடந்துகொண்டு விட்டால், சமஸ்தானுதிபதிகளும், மற்றவர்களும் நியாயமாக நடந்து கொள்ளுவார்கள் என்பதே என்னுடைய கருத்தாகும். இப்போது நாம் அரைகுறை மனதுடன்தான் காரியங்களைச் செய்கிறோம். அரைகுறை மனதுடன் செயல்படுவதன் மூலம் சுதந்திரம் பெறவே முடியாது. அகிம்சையின் ஆரம்பமும் முடிவும் நம்மை நாமே சோதித்துக் கொள்ளுவதில்தான் இருக்கிறது.

—'ஹரிஜன்' - 20—4—1940

[முதலில் 'ஜெயப்பிரகாஷின் சித்திரம்' என்ற தலைப்பில் வெளியானது.]

# 14

# மனமாற்றமும் சாஸ்திரீய சோஷலிஸமும்

செல்வம் படைத்தவர்கள், தங்கள் செல்வத்தை ஏழைகளின் நன்மைக்காகத் தருமகர்த்தாக்களாக இருந்து பயன்படுத்த வேண்டும் என்று காந்திஜி கூறி வருவதில் முரண்பாடு இருக்கிறது என்று சிலர் அடிக்கடி எழுதிவந்தார்கள். இதற்குப் பதிலளிக்க மகாத்மா 1937 பிப்ரவரி 20-ஆம் தேதி 'ஹரிஜ'னில் 'என் முரண்பாடுகள் என்பன' என்ற தலைப்பின் கீழ் ஒரு கட்டுரை எழுதினர். அதில், ஒருவர் தமக்கு எழுதிய ஒரு கடிதத்தையும் கொடுத்திருக்கிறார். அக்கடிதம் எழுதியவர், "பொருளாதாரத் துறைக்கு ஒரு நியாயமும், ராஜீயத் துறைக்கு மற்றொரு நியாயமும் அனுசரிப்பது முரண்பாடாக இல்லையா? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திடமும், பிரிட்டிஷாரிடமும் நீங்கள் நம்பிக்கை இழந்துவிட்டதைப்போல முதலாளித்துவத்திடமும், முதலாளிகளிடமும் நம்பிக்கை இழக்கவில்லை என்று கூறுகிறீர்களா? 'மன்னர்கள் தெய்வாம்சம் பெற்றவர்கள்' என்பது வெகுகாலத்திற்கு முன்பே அடிபட்டுப்போன கொள்கை. உங்கள் தருமகர்த்தாக் கொள்கையும் அதுவும் ஒன்றே போல்தான் தொனிக்கிறது" என்றார்.

இதற்குப் பதிலளித்த காந்திஜி, தாம் கொண்டுள்ள கருத்தில் முரண்பாடு எதுவும் இல்லை என்கிறார். ஒரு முதலாளி, தம்முடைய சொத்துமீது தமக்குள்ள ஏகபோக உரிமையைத்

துறந்து, மக்களின் தருமகர்த்தாவாக அதைப் பரிபாலித்து வந்தால், அம்முதலாளியை எல்லோரும் வாழ்த்துவார்கள் என்கிறார். "என் யோசனையை அவர்கள் ஏற்றுக்கொள்ளாமல் போகலாம்; என் கனவு நனவாகாமல் போய்விடவும் கூடும். ஆனால், சோஷலிஸ்டுகள் காணும் கனவு மாத்திரம் பலிக்கும் என்று யார் உத்தரவாதம் கூற முடியும்? மூலதனத்தை முதலாளிகள் துஷ்பிரயோகம் செய்கிறார்கள் என்பதை அறிந்ததும் சோஷலிஸம் உதயமாகிவிடவில்லை. நான் முன்பே கூறி வந்திருக்கிறபடி, சோஷலிஸமும் கம்யூனிஸமும் கூட, ஈசோபநிஷத்தின் முதல் செய்யுளிலேயே விவரிக்கப்பட்டிருக்கின்றன. மனிதர் மனத்தை மாற்ற முடியும் என்பதில் சில சீர்திருத்தவாதிகள் நம்பிக்கையை இழந்தவுடன் சாஸ்திரீய சோஷலிஸம் என்ற கொள்கை உதயமாயிற்று என்பது உண்மை. சாஸ்திரீய சோஷலிஸ்டுகள் தீர்க்க முயலும் பிரச்னைகளைத் தீர்ப்பதில்தான் நானும் ஈடுபட்டிருக்கிறேன்" என்றார் காந்திஜி. இப் பிரச்னைகளை அகிம்சை முறையில் தீர்க்கத் தாம் முற்பட்டிருப்பதையும் விளக்குகிறார். அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் மூலம் அகில இந்திய அடிப்படையில் அகிம்சை முறை பற்றிய சோதனை நடைபெற்று வருகிறது என்றும் கூறுகிறார்.

காந்திஜி எழுதிய இக்கட்டுரையின் முற்பகுதி 'மகாத்மா காந்தி நூல்கள்'-இரண்டாம் தொகுப்பு 888-890-ஆம் பக்கங்களில் பிரசுரமாகி யிருக்கிறது. இக்கட்டுரையின் பிற்பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

இனி கடிதத்தின் இரண்டாவது பகுதியைப் பார்ப்போம். வாழ்க்கை என்பது, ஜலம் புக முடியாத அறைகளாகத் தடுக்கப்பட்டவை என்று நான் கருதவில்லை. தனி மனிதர்களின் வாழ்வைப் போலவே, ஒரு சமுதாயத்தின் வாழ்வும், பிரிக்க முடியாத முழுமை பெற்றதாகும். காங்கிரஸிலிருந்தோ, அரசியல் வாழ்விலிருந்தோ நான் விலகிக்கொள்ளுவதால், இந்தியா பூரண சுதந்திரம் பெற வேண்டும் என்ற என்னுடைய ஆர்வம் ஒரு துளியும் குறைவதாக அர்த்தமில்லை. சட்ட மறுப்பு என்பது, அகிம்சையின் தனிச் சிறப்பு பெற்ற ஒரு முறையுமல்ல. அகிம்சையிலுள்ள பல வழிகளில் அதுவும் ஒன்றாகும். அம்முறைகள் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல. என்னுடைய எல்லாச் செய்கைகளிலும் அகிம்சை நன்றாகப் புலனாகும்படி செய்வதே என் வேலையாகும். என்னுடைய சோதனையை விஞ்ஞான ரீதியில் நான் செய்துகொண்டிருக்கிறேன். அகிம்சைத் தோட்டத்தில் பல விதமான செடிகள் இருக்கின்றன. எல்லாம் ஒரே மூலத்

திலிருந்து தோன்றியவைகளே. அவை எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் உபயோகிக்காமல் இருக்கலாம். அவைகளில் எதுவுமே கெடுதல் விளைவிப்பதில்லை. ஆனால், அவற்றைச் சாமர்த்தியமாகக் கையாள வேண்டும். கடவுள் எனக்கு அளித்துள்ள சாமர்த்தியத்திற்குத் தகுந்தவாறு அவற்றை நான் கையாளுகிறேன். ஆனால், ஒரு சமயத்தில் நான் ஏதோ ஒரு செடியைப் பயன்படுத்திக்கொள்ளுகிறேன் என்றால், அதனால் போராட்டத்தைக் கைவிட்டுவிட்டதாக அர்த்தமில்லை. இது இறுதி வரை போராட்டமாகும். அகிம்சை அகராதியில் தோல்விக்கே இடமில்லை.

—'ஹரிஜன்' - 20—2—1937

# 15

# வர்க்கப் போர் தவிர்க்க முடியாததல்ல

தொழிலாளருக்கும் முதலாளிகளுக்குமிடையே வர்க்கப் போராட்டம் முளுவதைத் தடுக்க முடியுமா? 'தொழிலாளர்கள், விவசாயிகள், ஆலை வேலையாட்கள் முதலியோருக்கும் நீங்கள் நன்மை ஏற்படும்படிச் செய்வதானால், வர்க்கப் போராட்டம் ஏற்படாமல் நீங்கள் தவிர்க்க முடியுமா?' என்று ஒருவர் காந்திஜியைக் கேட்டார். அதற்கு 1931 மார்ச் 26-ம் தேதி வெளியான 'எங் இந்தியா'வில் காந்திஜியின் பதில் பிரசுரமாயிற்று. அதில், வர்க்கப் போராட்டத்தைக் கட்டாயம் தவிர்க்க முடியும் என்கிறார் காந்திஜி. அகிம்சையினால் அதைத் தவிர்க்க முடியும் என்கிறார். 'முதலாளிக்கு மனமாற்றம் ஏற்படும் வரையில் தொழிலாளி காத்திருக்கவேண்டிய அவசியம் இல்லை. மூலதனம் எப்படி ஒருவித சக்தியோ அதே மாதிரி உழைப்பும் ஒரு வகை சக்தி. இவ்விரு சக்திகளையும் ஆக்கத் துறையிலும் அழிவுத் துறையிலும் பயன்படுத்தலாம்' என்று கூறும் காந்திஜி, ஒவ்வொருவருக்கும் உரிமை இருப்பது போலவே கடமையும் இருக்கிறது என்பதையும் நினைவூட்டுகிறார். முதலாளியின் மனத்தை மாற்ற முயல வேண்டும். அவனுடன் ஒத்துழையாமை செய்தால் அவன் தனது பிழையை உணர்ந்து திருந்துவான். திருந்தாத முதலாளிகளுக்கு மற்றத் தொழிலாளர்கள் உதவி செய்யக்கூடாது என்பதை மற்றத் தொழிலாளர்கள் உணர்ந்து விடுவார்கள் என்றும், இதுவே நிச்சயமாகப் பயனளிக்கக்கூடிய வழி என்றும் காந்திஜி கூறுகிறார்.

இக்கட்டுரையின் முழு விவரமும் 'மகாத்மா காந்தி நூல்கள்'—இரண்டாம் தொகுப்பில் 892—93—ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.

வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதது அல்ல என்று காந்திஜி மற்ரேர் சமயத்திலும் கூறியிருக்கிருர். ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாரக் கடித'த்தில் கண்ட அவ்விஷயமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

உருப்படியான புரட்சி என்று ஸ்ரீ பேசில் மாத்யூஸ் பேசிய போது, அவர் மனத்தில் வேறு என்னென்னவோ இருந்திருக்க வேண்டும். ஆகையால், கிராமப் பொருளாதார அமைப்பில் லேவாதேவிக்காரர், ஜமீன்தாரின் இடம் என்ன என்பதைப் பற்றி விவாதித்தார். "இன்றியமையாதவர்களாக இன்று இருக்கும் லேவாதேவிக்காரர்கள், நாளடைவில் தாமாகவே மறைந்துவிடுவார்கள். கூட்டுறவு பாங்குகளுக்கும் அவசிய மிராது. ஏனெனில், ஹரிஜனங்களுக்கு நான் கற்றுக்கொடுக்க விரும்புவது முடிந்துவிட்டால், அவர்களுக்கு ரொக்கப் பணம் அதிகமாகத் தேவையாக இராது. மேலும் இன்று வறுமைக் குழியின் அடியில் உழலுபவர்கள், கூட்டுறவுப் பாங்குகளைப் பயன் படுத்திக்கொள்ளவும் முடியாது. அவர்களுக்குக் கடனுகப் பணம் கிடைப்பதோ, நிலங்கள் கிடைப்பதோகூட எனக்கு அவ்வளவு முக்கியமில்லை; அவர்களுக்குச் சோறும், மோரும், கொஞ்சம் குழம்புங்கூடக் கிடைக்க வேண்டும் என்பதே எனக்கு ஆசை. வேலையில்லாமல் சோம்பியிருக்கும் நேரத்தைக் காசாக்கிக் கொள்ளும் வித்தையை மக்கள் கற்றுக்கொண்டுவிட்டால், நாம் விரும்பும் மாறுதல்களெல்லாம் தாமாகவே ஏற்பட்டுவிடும்" என்று காந்திஜி சொன்னுர்.

"சரி, ஜமீன்தார் விஷயம் என்ன? அவர்களையும் அகற்றி விடுவீர்களா? அவர்களை ஒழித்து விடுவீர்களா?"

"ஜமீன்தாரை ஒழித்துவிட வேண்டும் என்று நான் விரும்ப வில்லை; ஜமீன்தார் இல்லாமல் முடியாது என்றும் நான் நினைக்க வில்லை. என்னுடைய தருமகர்த்தா கொள்கையை விளக்கிச் சொல்லுகிறேன். இந்தக் கிராமத்தில் ஸ்ரீ ஜம்னுலாலுக்கு 75 சத விகித பங்கு இருக்கிறது. இங்கே நான் வேண்டும் என்றே வர வில்லை; தற்செயலாகத்தான் வந்தேன். ஜம்னுலால்ஜியிடம் நான் உதவி கோரியபோது, வேண்டிய குடிசைகளையும், விடுதிகளையும் அவர் கட்டிக் கொடுத்தார். 'சேகான் கிராமத்திலிருந்து என்ன லாபம் கிடைத்தாலும் அதைக் கிராம நலன்களுக்காக எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னுர். மற்ற ஜமீன்தார்களையும் அப்படிச் செய்யும்படி நான் திருப்ப முடிந்தால், கிராம அபிவிருத்தி வேலை சுலபமாகிவிடுகிறது. அடுத்தபடியாக நில அமைப்பு, சர்க்கார் சுரண்டல் என்ற கேள்விகள் எழுகின்றன. இக்கேள்வி களைச் சுற்றியுள்ள சங்கடங்களை இப்போதைக்கு அவசியமான

தீமைகள் என்றே நான் கருதுகிறேன். இப்போதைய வேலைத் திட்டம் நிறைவேற்றப்பட்டுவிட்டால், சர்க்கார் சுரண்டலை எப்படிச் சமாளிப்பது என்று அப்போது ஒருக்கால் எனக்குத் தெரியக்கூடும்.''

“உங்களுடைய பொருளாதாரக் கொள்கை ஸ்ரீ நேருவின் கொள்கையிலிருந்து மாறுபட்டதாயிருக்கும். எனக்குப் புரிந்த வரையில் அவர் ஜமீன்தார்களை ஒழித்துவிடுவார் என்றே நினைக்கிறேன்.''

“ஆம். கிராம அபிவிருத்தி, புனரமைப்பு ஆகிய விஷயங்களில் எங்களிடையே கருத்து வேறுபாடுகள் இருப்பதாகவே தோன்றுகிறது'' என்று காந்திஜி பதிலளித்தார். “மாறுபாடு என்பது, எது முக்கியம் என்ற மதிப்பீட்டில்தான். கிராம அபிவிருத்தி இயக்கத்தை அவர் ஆட்சேபிக்கவில்லை. யந்திரத்தொழில் பெருக்கத்தில் அவருக்கு நம்பிக்கை இருக்கிறது. அது இந்தியாவுக்குப் பலனளிக்குமா என்பதில் எனக்குப் பெரும் சந்தேகம் உண்டு. முடிந்தால் வர்க்கப் போராட்டத்தைத் தவிர்க்க வேண்டும் என்றே அவர் விரும்புகிறார். ஆனால், இறுதியில் வர்க்கப் போராட்டம் ஏற்பட்டே தீரும் என்று அவர் நினைக்கிறார். ஜமீன்தார்களையும், மற்ற முதலாளி வர்க்கத்தினரையும் அகிம்சை முறையின் மூலம் மாற்றலாம் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆகையால், வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதது என்று நான் நினைக்கவில்லை. முடிந்தவரையில் எதிர்ப்பில்லாமல் போய்க்கொண்டிருப்பது அகிம்சையின் ஒரு முக்கியமான அம்சமாகும். நிலத்தை உழுபவர்கள், தமது சக்தியை உணர்ந்த உடனேயே, ஜமீன்தாரின் தீமை செயலற்றதாகிவிடும். தாம் உண்ணவும், உடுத்தவும், தாமும் தம் குழந்தைகளும் கல்வி பெறவும், தேவையான அளவுக்குத் தமக்கு நியாயமான ஊதியம் கொடுத்தாலொழிய வேலை செய்ய முடியாதென்று அவர்கள் சொல்லிவிட்டால் ஜமீன்தார்கள் என்ன செய்ய முடியும்? உண்மையில், உழைப்பவர்கள் செய்யும் உற்பத்தி அவர்களுக்குத்தான் சொந்தம். உழைப்பவர்கள் புத்திசாலித்தனத்துடன் ஐக்கியப்பட்டால், அது எதிர்க்க முடியாத சக்தியாகிவிடும். வர்க்கப் போராட்டம் அவசியமில்லை என்று அதனால்தான் நான் சொல்லுகிறேன். வர்க்கப் போராட்டத்தைத் தவிர்க்க முடியாது என்று நான் நினைத்தால், அதைப் பிரசாரம் செய்வதற்கும், போதிப்பதற்கும் நான் தயங்க மாட்டேன்.

—'ஹரிஜன்' - 5—12—1936

# 16

# சோஷலிஸ்டு புரட்சியினால் ராமராஜ்யம்?

**கேள்வி :** சோஷலிஸ்டு புரட்சி ஏற்பட்டால், வகுப்புப் போராட்டம் பின்தங்கி, பொருளாதாரப் பிரச்னை முக்கியத்துவம் பெற்றுவிடும் என்று பெரும்பாலான சோஷலிஸ்டுகள் சொல்லுகிறார்கள். அதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா? அத்தகைய புரட்சி ஏற்பட்டால் நீங்கள் கூறும் ராமராஜ்யம் ஏற்பட்டுவிடுமா?

**பதில் :** நீங்கள் எதிர்பார்க்கும் பொருளாதாரப் போராட்டத்தின் பலனாக ஹிந்து—முஸ்லிம் முரண்பாடுகளின் தீவிரம் குறையக் கூடும். ஹிந்து-முஸ்லிம் முரண்பாடுகள் தீர்ந்துவிட்டால் கூட, நமது சங்கடங்களெல்லாம் தீர்ந்துவிடப் போவதில்லை. நடப்பது இதுதான்: அடிமைத்தனம் ஒழிந்து, சுதந்திரம் உதயமாகும்போது, சமூகத்திலுள்ள பலவீனங்களெல்லாம் வெளிக் கிளம்பி மேலே வந்துவிடும். இதைப் பற்றி அனாவசியமாகப் பரபரப்படைவதற்கு நியாயமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அந்தச் சமயத்தில் நாம் நிதானமாக நடந்து கொண்டால், எல்லாச் சிக்கல்களும் தீர்ந்துவிடும். பொருளாதாரப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில், எப்படியும் அதைத் தீர்த்துத்தான் ஆக வேண்டும். இன்று மிகப் பெரும் அளவில் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. பொருளாதார சமத்துவம்தான் சோஷலிஸத்தின் அடிப்படை. இன்றைய நேர்மையற்ற அமைப்பில் சிலர் செல்வத்தில் புரளுகிறார்கள்: பொது மக்களுக்குப் போதுமான உணவுகூடக் கிடைப்பதில்லை. இந்த நிலைமையில் ராமராஜ்யம் சாத்தியமில்லை. நான் தென்னாப்பிரிக்காவிலிருந்த போதே சோஷலிஸத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். பலாத்காரத்தின் மூலம் நிலையான எந்தச் சீர்திருத்தமும் சாத்தியமில்லை என்பதுதான் சோஷலிஸ்டுகளை நான் எதிர்ப்பதற்குக் காரணம்.

—'ஹரிஜன்' – 1—6—1947

[முன்பு இவ்விஷயம் 'கேள்விப் பெட்டி' என்ற தலைப்பின் கீழ் பிரசுரமானது.]

# 17

# பரிபாலனம், சுயஉதவிக் கொள்கை

**கேள்வி :** பணக்காரர்கள், பிறர் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல், சுயநலமிகளாகி, அந்தத் தீமை தங்குதடையின்றித் தொடர்ந்து நீடிக்கும்போது, மக்களின் புரட்சியும், அதைத் தொடர்ந்து வரும் பயங்கரங்களும் ஏற்படுகின்றன. அவை

தவிர்க்க முடியாதவை. எந்தத் தீமை பரவாயில்லை என்று பொறுக்குவதுதான் வாழ்க்கை என்று நீங்கள் சொல்லியிருக் கிறீர்கள். ஆகையால், சரித்திரம் கற்பிக்கும் பாடத்தைக் கருத்தில் கொண்டு, குறைந்தபட்ச பலாத்காரத்துடன் பணக்காரர்களை ஒடுக்கி, ஏழைகளுக்கு நியாயம் வழங்கி, அதன் மூலம் இரு தரப்பினருக்கும் உதவி செய்யும் கருணை யுள்ள ஒரு சர்வாதிகாரம் ஏற்படுவதை நீங்கள் வரவேற்க மாட்டீர்களா?

பதில் : கருணையுள்ளதாயிருந்தாலும், அல்லது வேறெந்த வித மானதாக இருந்தாலும், எந்தச் சர்வாதிகாரத்தையும் நான் ஒப்புக்கொள்ள முடியாது. பணக்காரர்கள் மறைந்து விடவும் மாட்டார்கள், ஏழைகள் காப்பாற்றப்படவும் மாட் டார்கள். சில பணக்காரர்கள் கொல்லப்பட்டுவிடுவார்கள்; சில ஏழைகள் ஊட்டி வளர்க்கப்படுவார்கள். வர்க்கம் என்ற முறையில், கருணையுள்ள சர்வாதிகாரம் ஏற்பட்டாலும், பணக்காரர்கள், ஏழைகள் இருவருமே இருப்பார்கள். சாத்விக ஜனநாயகம்தான் உண்மையான பரிகாரமாகும். அதாவது, எல்லோரும் விஷய அறிவு பெற வேண்டும். தரும சொத்தைப் பரிபாலனம் செய்யும் கொள்கை பணக்காரர் களுக்குப் போதிக்கப்பட வேண்டும்; ஏழைகளுக்குச் சுய முயற்சியைக் கற்றுக் கொடுக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 8—6—1940

['கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் 'கருணையுள்ள சர்வாதிகாரம்' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

# 18

# சாத்விக கம்யூனிஸத்தில் நம்பிக்கை உண்டு

நாங்கள் மிகவும் களைப்புற்றிருந்தோம். புயலினால் பாதிக் கப்பட்ட ஆந்திர பிரதேசத்தில் சுற்றுப்பிரயாணம் செய்வதற்காக மறுநாள் காலை மூன்று மணிக்குப் புறப்பட வேண்டும். ஆகை யால், படுப்பதற்குத் தயார் செய்துகொண்டிருந்தோம். ஐரோப் பிய முறையில் உடையணிந்த தாட்டியான மனிதர் ஒருவர், ஜன் னல் வழியாக எங்கள் ரெயில் பெட்டிக்குள் எட்டிப் பார்த்தார். வண்டி நகர்ந்துகொண்டிருந்தது. அவர் ஆங்கிலத்தில்தான் பேசினார். ஆனால், உச்சரிப்பு பிரெஞ்சு பாணியில் இருந்தது. "நான் எகிப்திலிருந்து வந்திருக்கிறேன். இந்தியாவின் மகா சிரேஷ்டரைப் பார்த்து, அவருடன் கை குலுக்கிப் பேச நான்

விரும்புகிறேன்'' என்று அவர் கூறினர். அவரை உள்ளே அழைப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆனல், கதவு பூட்டப் பட்டிருந்ததால், அடுத்த ஸ்டேஷனில் வண்டிக்குள் வரும்படி சொன்னேம். அவர் தாமதிக்க விரும்பவில்லை. ஜன்னல் வழி யாக நுழைந்து உள்ளே வந்துவிட்டார். அதற்கு நாங்களும் உதவி செய்தோம். எகிப்து ஓரளவுக்குச் சுதந்திரம் பெற்றது பற்றி அவர் மகிழ்ச்சி தெரிவித்தார். அதே மாதிரி இந்தியாவும் சுதந்திரம் பெற வேண்டும் என்று விரும்பினர். ''நான் சில கேள்விகள் கேட்கலாமா? நீங்கள் களைப்புற்றிருக்கிறீர்கள் என் பதும், தூங்க வேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். ஆனல், என் ஆயுளில் இம்மாதிரி சந்தர்ப்பம் மறுபடியும் எனக்குக் கிடைக்கப் போவதில்லை. எனக்கு இந்த வாய்ப்பை நீங்கள் அளிக்க வேண்டும்'' என்ருர். காந்திஜியின் கண்கள் தூக்கத் தினல் சுழன்றுகொண்டிருந்தன. ஆயினும், இவ்வளவு நேச பாவம் காட்டும் இந்த மனிதரிடம் பேசாமலிருக்க அவருக்கு மனம் வரவில்லை. "சரி, கேளுங்கள்" என்ருர்.

''கம்யூனிஸத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? அது இந்தியாவுக்கு நல்லது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' என்று அவர் கேட்டார்.

''ரஷிய முறையிலுள்ள கம்யூனிஸம், அதாவது, மக்களின் மீது சுமத்தப்படும் கம்யூனிஸத்தை இந்தியா விரும்பாது. சாத் விகமான கம்யூனிஸத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு'' என்று காந்திஜி பதிலளித்தார்.

"ரஷிய கம்யூனிஸம், சொந்தச் சொத்து வைத்துக் கொள்ளு வதை அனுமதிக்கவில்லை. சொந்தச் சொத்து இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா?''

''பலாத்காரமின்றிக் கம்யூனிஸம் வருவதாயிருந்தால், தாராளமாக வரட்டும். ஏனெனில், அந்த நிலைமையில், மக்களின் சார்பாக உள்ள சொத்தைத் தவிர, வேறு யாரிட மும் எந்தச் சொத்தும் இராது. லட்சாதிபதியினிடம் லட்சக் கணக்கில் பணம் இருக்கலாம். ஆனல், மக்களின் சார்பாகவே அதை அவர் வைத்திருப்பார். பொது நலன்களுக்காகத் தேவைப்படும்போது சர்க்கார் அதற்குப் பொறுப்பேற்றுக் கொள் ளலாம்.''

''சோஷலிஸம் பற்றி உங்களுக்கும், ஜவாஹர்லாலுக்கு மிடையே ஏதாவது அபிப்பிராய பேதம் இருக்கிறதா?''

''இருக்கிறது. ஆனல், அது முக்கியத்துவத்தைப் பற்றிய வேற்றுமைதான். அவர் பலன்தான் முக்கியம் என்று கருது கிருர் போலும்! ஆனல், நான் முறைகளின் முக்கியத்தை வற் புறுத்துகிறேன். அகிம்சையை அளவுக்கு மீறி நான் வற்புறுத்துவ தாக அவர் நினைப்பதா யிருக்கலாம். அவருக்கும் அகிம்சையில் நம்பிக்கை இருக்கிறது. ஆனல், அகிம்சையின் மூலம் சோஷலி

ஸம் ஏற்படுவது சாத்தியமில்லையானால், வேறு வழிகளிலும் அதைப் பெறலாம் என்று அவர் கருதுகிறார். அகிம்சையை நான் வற்புறுத்துவது கொள்கை பற்றியதாகும். பலாத்காரத்தின் மூலம் நிச்சயமாகச் சுதந்திரம் வருவதாக இருந்தாலும், அதை நான் மறுத்துவிடுவேன். அது உண்மையான சுதந்திரமா யிராது.”

“உங்களுடைய சாத்விகக் கிளர்ச்சியின் பலனாக ஆங்கிலேயர், இந்தியாவை உங்களிடம் விட்டுவிட்டு அமைதியாகத் திரும்பிப் போய்விடுவார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா ?”

“ஆம். அப்படித்தான் நினைக்கிறேன்.”

“உங்களுடைய அந்த நம்பிக்கைக்கு என்ன ஆதாரம்?”

“கடவுளிடமும் அவருடைய நீதியிலும் எனக்குள்ள நம்பிக்கைதான் ஆதாரம்.”

நண்பருக்கு இது மனத்தில் நன்றாகப் பதிந்தது போல் தோன்றியது. காந்திஜி கூறியவற்றை அவர் எழுதிக்கொண்டார். “கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் எங்களை விட உங்களுக்கு அந்தக் கொள்கையில் அதிக நம்பிக்கை இருக்கிறது. இந்த வார்த்தைகளை நான் கொட்டை எழுத்துக்களில் எழுதிக் கொள்ளுகிறேன்” என்றார்.

“ஆம். இல்லாவிட்டால் கடவுள் அன்பின் உறைவிடமாயிருக்கமாட்டார் ; பலாத்காரத்தின் உறைவிடமாகிவிடுவார் ” என்று காந்திஜி சொன்னார்.

இத்துடன் அந்த நண்பர் நிறுத்திக்கொண்டார். அடுத்த ஸ்டேஷன் வருவதற்குள் காந்திஜி அயர்ந்து தூங்கிவிட்டார்.

—‘ஹரிஜன்’ - 13—2—1937

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் ‘வாராந்திரக் கடிதம்’ என்ற பகுதியில் ‘எகிப்தியருக்குப் பேட்டி’ என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

## 19
# போல்ஷிவிஸம்

**கேள்வி :** போல்ஷிவிஸத்தின் சமூகப் பொருளாதாரம் பற்றி உங்களுடைய அபிப்பிராயம் என்ன? நம் நாட்டுக்கு அவை எவ்வளவு தூரம் ஏற்றவைகளாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

**பதில் :** போல்ஷிவிஸத்தின் பொருளை இன்னும் நான் பூராவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். சொந்தச் சொத்து வைத்துக்

கொள்ளும் உரிமையை ஒழிப்பது அதன் நோக்கம் என்பது மட்டும்தான் எனக்குத் தெரியும். பற்றில்லாமை என்ற வாழ்க்கைத் தத்துவத்தைப் பொருளாதாரத் துறைக்கும் விஸ்தரிப்பதுதான் இது. மக்கள் தாமாகவே இந்த லட்சியத்தைக் கற்றுக்கொண்டால், அல்லது அமைதியான முறைகளின் மூலம் இதை ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யப்பட்டால், அதைப் போல் நல்லது வேறென்றும் இராது. ஆனல், போல்ஷிவிஸத்தைப் பற்றி எனக்குத் தெரிந்த வரையில், அது பலாத்காரத்தை விலக்கவில்லை என்பதோடல்லாமல், சொந்தச் சொத்துரிமையைப் பறிமுதல் செய்து, அதை ராஜாங்கச் சொத்தாக வைத்துக் கொள்ளுவதற்குப் பலாத்காரத்தைத் தாராளமாக அனுமதிக்கவும் செய்கிறது. அப்படியானல், இப்போதுள்ள முறையில் போல்ஷிவிஸம் அதிக காலம் நீடிக்க முடியாது என்று தயக்கமின்றி நான் சொல்லுவேன். ஏனெனில், பலாத்காரத்தின் மூலம் நிலையான எதையும் சாதிக்க முடியாது என்பது என்னுடைய திடமான நம்பிக்கையாகும். அது எப்படியிருந்தாலும், போல்ஷிவிக் லட்சியத்திற்காக எண்ணற்ற ஆண்களும், பெண்களும் பெரும் தியாகங்களைச் செய்திருக்கிறார்கள். அதற்காகத் தம்மிடமுள்ளவற்றையெல்லாம் இழந்திருக்கிறார்கள் என்பதை மறுக்க முடியாது. லெனின் போன்ற மேதாவிகளின் தியாகங்களினல் புனிதமாக்கப்பட்ட அந்த லட்சியம் வீண் போக முடியாது. அவர்களுடைய தியாக உதாரணம் என்றைக்கும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும். நாளடைவில் அந்த லட்சியத்தை அது பரிசுத்தமானதாகவும் செய்துவிடும்.

—'எங் இந்தியா' – 15—11—1928

['மாணவர்களின் கேள்விகள்' என்பதிலிருந்து எடுத்தது.]

# 20

# இளம் கம்யூனிஸ்டுகளின் கேள்விகள்

பழைய காலத்து ரோமன் பெண்மணிகளுக்குத் திறந்த அரங்கில் நடக்கும் சண்டைகளில் ஆசை உண்டு. தம்முடைய சிறு குழந்தைகள் விஷயத்தில் அவர்களுக்குப் பெருமை உண்டு என்பதும் பிரசித்தம். ஸ்ரீமதி நாயுடுவுக்குக் கிட்டத்தட்ட அந்த மாதிரி ஆசை உண்டு. ஒரு நாள் இளம் இந்தியக் கம்யூனிஸ்டுகளின் கோஷ்டி ஒன்றை ஸ்ரீமதி நாயுடு* காந்திஜிக்கு அறிமுகம் செய்துவைத்தார். ஸ்ரீமதி நாயுடுவின் கடைசிப் புதல்வன் பாபா

* ஸ்ரீமதி நாயுடு என்று இங்கே குறிப்பிடப்பட்டிருப்பது ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவையாகும்.

வும் அவர்களுடன் வந்தார். அவர்தான் அவர்களுக்குத் தலைவர். இந்த ரத்தம் சிந்தாத அரங்கப் போராட்டத்திற்கு ஸ்ரீமதி நாயுடுவையே தலைமை வகிக்கச் செய்தார் காந்திஜி.

இந்த இளைஞர்கள் அநேகமாகத் தம் தாய்நாடுகளிலிருந்து நாடு கடத்தப்பட்டு பிற நாட்டில் வாழ்பவர்கள். தம்முடைய கருத்துக்களே சரி என்று அவர்கள் உண்மையாகவே நம்பினர்கள். அவர்கள் யாவரும் காந்திஜியைப் பெரிதும் நேசித்தார்கள் என்றே நினைக்கிறேன். சமூக நீதியிலும், ஏழைகளின் நலன்களிலும் இவ்வளவு தீவிரமான அக்கறையுள்ள காந்திஜி, தங்களுடைய கொள்கைகளை எப்படி ஏற்றுக்கொள்ளாமல் இருக்க முடியும் என்று அவர்களுக்குப் புரியவில்லை. "பல சமயங்களில் உங்களுடைய பாஷையைப் புரிந்து கொள்ளுவது எங்களுக்கு மிகவும் கஷ்டமாக இருந்திருக்கிறது. ஒரு நாட்டினரை மட்டும் இல்லாமல், ஆங்கில பாஷையைக்கூட நீங்கள் உருவாக்கிக்கொண்டிருக்கிறீர்கள். பல சமயங்களில் நீங்கள் மனத்தில் ஒன்றை வைத்துக்கொண்டு அபிப்பிராயத்தை எழுதுகிறீர்கள். ஆனால், மற்றவர்கள் அதை வேறு விதமாகப் பொருள்படுத்திக்கொள்ளுகிறார்கள். ஆகவே, நம்மிடையே இருப்பது போல் தோன்றும் வித்தியாசங்களில் பொதுவான அம்சங்கள் எவையாவது இருக்கின்றனவா என்பதைக் கண்டுபிடிக்கவே வந்திருக்கிறோம்" என்று பாபா ஆரம்பித்தார். சில நாட்களுக்கு முன்பு அவர்கள் காந்திஜியிடம் ஒரு கத்தைக் கேள்விகளைக் கொடுத்துவிட்டுப் போயிருந்தார்கள். இந்தக் கேள்விகளில் சிலவற்றிற்குக் காந்திஜி பதிலளித்தார். அந்த விவரம் கீழே தரப்படுகிறது:

## செல்வர்கள் நிலைமை

முதல் கேள்வி பின்வருமாறு :

"இந்திய சமஸ்தானாதிபதிகள், நிலச்சுவான்தார்கள், மில் முதலாளிகள், லேவாதேவிக்காரர்கள் முதலிய லாபமடிப்போர், எப்படி பணம் சம்பாதித்தார்கள் என்று நினைக்கிறீர்கள்?"

"இப்போதைக்குப் பாமர மக்களைச் சுரண்டுவதன் மூலமே சம்பாதிக்கிறார்கள்" என்று காந்திஜி பதிலளித்தார்.

"இந்தியத் தொழிலாளர்களையும், விவசாயிகளையும் சுரண்டாமல் இந்த வர்க்கத்தினர் பணம் திரட்ட முடியுமா?" என்று அடுத்தபடி கேட்டார்கள்.

"ஓரளவுக்கு முடியும்" என்று காந்திஜி பதிலளித்தார்.

"சாதாரணத் தொழிலாளர்களும், விவசாயிகளும் வேலை செய்வதனால்தான் செல்வம் உற்பத்தியாகிறது. அவர்களைவிட சௌக்கியமாக வாழ்வதற்கு இந்த வகுப்பினருக்கு என்ன சமூக நியாயம் இருக்கிறது?"

"ஒரு நியாயமுமில்லை" என்று காந்திஜி கண்டிப்பாகப் பதிலளித்துவிட்டு, மேற்கொண்டு தம் கருத்தை விளக்கிக் கூற ஆரம்பித்தார்: "நாம் பிறவியில் சமமானவர்கள். அதாவது, சம வாய்ப்புகளுக்கு நமக்கு உரிமை இருக்கிறது. ஆனல், எல்லோருக்கும் ஒரே மாதிரியான திறமை இல்லை. அது சாத்தியமுமில்லை. உதாரணமாக, எல்லோரும் ஒரே அளவு உயரமாய் இருக்க முடியாது; ஒரே நிறத்தவர்களாகவும், புத்திசாலித்தனம் உள்ளவர்களாகவும் இருக்க முடியாது. ஆகவே, சிலர் அதிகமாகச் சம்பாதிக்கும் திறமை உள்ளவர்களாக இருப்பார்கள். சிலருக்கு அவ்வளவு திறமை இராது. இது இயற்கையே. சாமர்த்தியம் உள்ளவர்களிடம் அதிகப் பணம் இருக்கும். இதற்காகவே அவர்கள் தமது சாமர்த்தியத்தை உபயோகிப்பார்கள். அவர்கள் தம்முடைய சாமர்த்தியத்தை நல்ல விதமாக உபயோகித்தால், அரசாங்கம் செய்ய வேண்டிய வேலையை அவர்கள் செய்பவர்களாவார்கள். அவர்கள் தருமகர்த்தாக்களைப் போன்று மட்டுமே இருப்பார்கள். திறமை உள்ளவன் அதிகம் சம்பாதிப்பதை நான் அனுமதிப்பேன். அவனுடைய திறமை அமுக்கப்படுவதை விரும்பமாட்டேன். குடும்பத்தில் பிள்ளைகள் சம்பாதிக்கும் பணம் பொதுக் குடும்ப நிதியுடன் சேர்க்கப்படுவது போல், அவன் அதிகப்படியாகச் சம்பாதிக்கும் பணத்தின் பெரும் பகுதி ராஜ்யத்தின் நலன்களுக்காக உபயோகிக்கப்பட வேண்டும். அவர்களுடைய சம்பாத்தியத்தைத் தருமகர்த்தாக்களைப் போல்தான் அவர்கள் வைத்திருக்கலாம். என்னுடைய இந்த நோக்கத்தில் நான் முழுத் தோல்வியடைவதா யிருக்கலாம். ஆனல், என் முயற்சிகள் அத்திசையில்தான் இருக்கும். அடிப்படை உரிமைகள் பிரகடனத்தின் உள்ளர்த்தமும் அதுதான்."

## வர்க்கப் போராட்டம்

செல்வர்களாகவுள்ள வகுப்பினரை மாற்றுவதற்கு 'வர்க்கப் போராட்டம்' பயன்படுமா என்பது பற்றி விவாதம் ஆரம்பித்தது.

கேள்வி : பொருளாதார, சமூக விடுதலைக்காகத் தொழிலாளர்களும், விவசாயிகளும் வர்க்கப் போராட்டத்தை நடத்துவது நியாயமானதுதான் என்று நீங்கள் நினைக்கவில்லையா? அத்தகைய விடுதலை பெற்றுவிட்டால், சமூகத்தில் பிறர் உழைப்பினல் வாழ்க்கை நடத்தும் வகுப்பினரைக் காப்பாற்றும் கடமை என்றென்றைக்குமே அவர்களுக்கு இல்லாமற் போய்விடுமல்லவா?

பதில் : இல்லை. அவர்கள் சார்பாக நானே ஒரு புரட்சியை நடத்திக்கொண்டிருக்கிறேன். ஆனல், அது சாத்விகப் புரட்சி.

கே : ஐக்கிய மாகாணத்தில், லாபத் தொகையைக் குறைக்க வேண்டும் என்ற உங்களுடைய இயக்கத்தினல் விவசாயி

களுக்குக் கொஞ்சம் சௌகரியம் ஏற்படலாம். ஆனால், பிரச்னையின் அடிப்படையை அது பாதிக்கவில்லையே?

ப : ஆம். ஆனால், எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் செய்துவிட முடியுமா?

கே : அப்படியானால், தருமகர்த்தா ஏற்பாட்டை எப்படிச் செய்யப் போகிறீர்கள். மனமாற்றத்தின் மூலமா?

ப : வாய்மொழியாகக் கேட்டுக்கொள்ளுவதன் மூலமாக மட்டுமல்ல. அதற்கான என்னுடைய முறைகளிலேயே நான் அதிக கவனம் செலுத்துவேன். இந்த யுகத்தின் மிகப் பெரிய புரட்சிக்காரன் என்று என்னைச் சிலர் வர்ணித்திருக்கிறார்கள். இது தவறாயிருக்கலாம். ஆனால், நான் ஒரு புரட்சிக்காரன் என்றே நான் நினைக்கிறேன். சாத்விகப் புரட்சிக்காரன். ஒத்துழையாமையே என்னுடைய வேலை முறை. சம்பந்தப்பட்ட மக்கள் மனமுவந்தோ, பலவந்தம் காரணமாகவோ ஒத்துழைத்தாலொழிய யாரும் செல்வம் திரட்ட முடியாது.

## தருமகர்த்தாத் தன்மை

ஆனால், இது அவர்களுக்கு முழுத் திருப்தியை அளிக்கவில்லை. இன்று சில வகுப்பினர் அனுபவிக்கும் சலுகைகளின் அடிப்படையையே அவர்கள் ஆட்சேபித்தார்கள். "முதலாளித்துவ தருமகர்த்தாக்களை ஏற்படுத்தியவர்கள் யார்? எதற்காக அவர்களுக்குக் கமிஷன் கொடுக்க வேண்டும்? கமிஷனை எப்படி நிர்ணயிப்பது?" என்று அவர்கள் கேட்டார்கள். காந்திஜி அவர்களுக்குப் பின் வருமாறு பதிலளித்தார்: "பணம் அவர்களிடம் இருக்கிறது. ஆகையால், கமிஷன் பெற அவர்களுக்கு உரிமை உண்டு. அவர்களைத் தருமகர்த்தாக்களாக யாரும் நியமிக்கவில்லை. தருமகர்த்தாக்களைப் போல் நடந்துகொள்ளும்படி நான்தான் அவர்களை அழைக்கிறேன். உடைமைக்காரர்கள் என்று தம்மை நினைத்துக்கொண்டிருப்பவர்களைத் தருமகர்த்தாக்களாக இருக்கும்படி நான் அழைக்கிறேன். அதாவது, 'இது உங்களுடைய சொத்தல்ல. யாரை நீங்கள் சுரண்டினீர்களோ அவர்களின் சார்பாக சொத்து உங்களிடம் இருக்கிறது என்று நினைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறுகிறேன். நீங்கள் இவ்வளவு கமிஷன்தான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அவர்களுக்கு நான் கட்டளையிடமாட்டேன். நியாயமான அளவில் எடுத்துக்கொள்ளும்படி சொல்லுவேன். அதாவது, நூறு ரூபாய் உள்ளவர் ஐம்பது ரூபாயைத் தாம் எடுத்துக்கொண்டு, மீதமுள்ள ஐம்பது ரூபாயைத் தொழிலாளர்களிடம் கொடுத்துவிடும்படிச் சொல்லுவேன். ஆனால், கோடி ரூபாய் வைத்துக்கொண்டிருப்பவரிடம், 'நீங்கள் ஒரு

சத விகிதம் எடுத்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லக் கூடும். ஆகவே, நான் கொடுக்கும் கமிஷன் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரப்படி இராது. அப்படிச் செய்வதால் பெரும் அநீதிகள் ஏற்படும்.''

## தனி நபரும் ஒரு முறையும்

இந்திய முதலாளிகள், ஜமீன்தார்களுக்கு எதிராக ஓர் இயக்கம் நடத்துவது பற்றிக் காந்திஜியின் கருத்து என்ன என்று அடுத்தபடியாகக் கேள்விகள் கேட்கப்பட்டன. தனி மனிதனுக்கும், ஒரு முறைக்குமிடையே உள்ள வித்தியாசத்தைக் கவனிக்க வேண்டிய அவசியத்தைக் காந்திஜி விளக்கினர். விவசாயம், பொருளாதாரம் பற்றிய தனது உருவான கொள்கைகளையும் அவர் எடுத்துச் சொன்னர். அவர்கள் சொன்னர்கள்: ''மகாராஜாக்களும், நிலச்சுவான்தார்களும் பிரிட்டிஷாரை ஆதரிக்கிருர்கள். ஆனல், உங்களுக்கு ஆதரவு தருபவர்கள் பாமர மக்கள். ஆனல், அவர்களைத் தமது விரோதிகளாக மக்கள் நினைக்கிருர்கள். பாமர மக்கள் அதிகாரத்திற்கு வரும்போது, இவர்களுடைய கதியை அம்மக்கள் நிர்ணயித்தால் அப்பொழுது உங்கள் போக்கு எதுவாக இருக்கும்?''

காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்:

''நிலச்சுவான்தார்களும், மற்றக் கொள்ளை லாபமடிப்பவர்களும் தமது விரோதிகள் என்று மக்கள் இன்று நினைக்கவில்லை. ஆனல், இந்த வகுப்பினர் தங்களுக்குச் செய்துள்ள தவறுகளை மக்கள் உணரச் செய்ய வேண்டும். முதலாளிகளை விரோதிகளாக நினைக்கும்படி மக்களிடம் நான் பிரசாரம் செய்யவில்லை. 'நீங்களேதான் உங்களுடைய விரோதிகள்' என்று அவர்களிடம் கூறுகிறேன். பிரிட்டிஷாரோ, ஜெனரல் டயரோ கெட்டவர்கள் என்று ஒத்துழையாமைக்காரர்கள் மக்களிடம் சொன்னதேயில்லை; அவர்கள் ஒரு குறிப்பிட்ட முறைக்குப் பலியானவர்கள் என்றே சொல்லி வந்திருக்கிருர்கள். ஆகவே, அந்த முறையைத்தான் அழிக்க வேண்டுமேயொழிய தனி நபரை அல்ல. அதனல்தான் சுதந்திர ஆர்வக் கனல் மிகுந்த மக்களிடையேகூட பிரிட்டிஷ் அதிகாரிகள் பயமில்லாமல் வாழ முடியும்.''

''நீங்கள் ஒரு முறையைத் தாக்க விரும்பினல், இதில் இந்திய முதலாளி, ஆங்கில முதலாளி என்று வித்தியாசம் இருக்க முடியாது. ஜமீன்தார்கள் விஷயத்திலும் வரி கொடாமையை நீங்கள் ஏன் வற்புறுத்தக் கூடாது?'' என்று மறுபடியும் அவர்கள் கேட்டார்கள்.

''ஜமீன்தார் ஒரு முறையின் கருவிதான். பிரிட்டிஷ் முறையை எதிர்த்து நடத்தும் இயக்கத்துடன் அவர்களுக்கு

எதிராகவும் ஓர் இயக்கம் நடத்த வேண்டிய அவசியமில்லே. இருவரையும் தனியாகப் பிரிப்பது சாத்தியமே. மக்கள் கொடுக்கும் பணத்திலிருந்து ஜமீன்தார்கள் அரசாங்கத் திற்கும் பணம் செலுத்துகிருர்கள். அதனுல்தான் ஜமீன் தார்களுக்குப் பணம் செலுத்த வேண்டாம் என்று மக்க ளிடம் சொல்ல வேண்டி யிருந்தது. ஆனல், ஜமீன்தார் களிடம் நமக்கு ஒரு சண்டையுமில்லே; தம்முடைய குடியான வர்களிடம் அவர்கள் சரியாக நடந்துகொள்ளும் வரையில் அவர்களிடம் நமக்குச் சண்டையில்லே'' என்று காந்திஜி சொன்னர்.

## உருவான விவசாயிகள் திட்டம்

கே: விவசாயிகளும், தொழிலாளர்களும் தமது எதிர்காலத்தை முற்றிலும் தாமே நிர்ணயித்துக்கொள்ளுவதற்கு உங்களிட முள்ள உருவான திட்டம் என்ன?

ப: காங்கிரஸ் மூலம் நான் செய்துகொண்டிருக்கும் வேலேதான் என்னுடைய திட்டம். இதன் பலனுக, நமக்கு நிணைவு தெரிந்த எந்தக் காலத்திலும் இருந்ததைவிட இன்று, அவர் களுடைய நிலேமை பெரிதும் அபிவிருத்தியடைந்திருக்கிறது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அவர்களுக்கு இப் போது கிடைத்துள்ள வாழ்க்கை வசதிகளேப் பற்றி நான் குறிப்பிடவில்லே. அவர்களிடையே ஏற்பட்டுள்ள மகத்தான விழிப்பையும், அதனுல் அநீதியையும், சுரண்டலேயும் எதிர்ப் பதற்கு அவர்களுக்கு ஏற்பட்டுள்ள சக்தியையுமே குறிப்பிடுகிறேன்.

கே: விவசாயிகளுக்குள்ள 500 கோடி கடனே எப்படி ஒழிக்க உத்தேசித்திருக்கிறீர்கள்?

ப: கடன் தொகை எவ்வளவு என்று யாருக்கும் நிச்சயமாகத் தெரியாது. வெளியேறும் அந்நிய சர்க்காரிடமிருந்து, வரப் போகும் இந்திய சர்க்கார் என்ன பொறுப்புக்களே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது பரிசீலனே செய்யப்பட வேண்டு மென்று காங்கிரஸ் வற்புறுத்துகிறது. அதைப் போலவே, காங்கிரஸ் அதிகாரத்திற்கு வந்தால் விவசாயிகளின் கடன் களேப் பற்றியும் விசாரிக்க வேண்டுமென்று வற்புறுத்தும்.

—'எங் இந்தியா' - 26—11—1931

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'லண்டன் கடிதம்' என்ற பகுதியி லிருந்து எடுக்கப்பட்டது.]

# 21

# உங்கள் பகுத்தறிவுக்குத் தடை விதிக்காதீர்

[பம்பாயில் காந்திஜி ஒரு தொழிலாளர் கூட்டத்தில் பேசும்போது சில இளம் கம்யூனிஸ்டுகள் குழப்பம் விளைவித்தார்கள். அங்கே காந்திஜி ஹிந்தியில் செய்த பிரசங்கத்தின் சுருக்கமான மொழிபெயர்ப்பு கீழே தரப்படுகிறது—மகாதேவ தேசாய்.]

இந்தியாவில் கம்யூனிஸ்டுகள் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆனால், மீரத் சிறைக்கு வெளியே அவர்களை நான் பார்த்ததில்லை; அவர்களுடைய பிரசங்கங்களையும் கேட்டதில்லை. இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் ஐக்கிய மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது, மீரத் கைதிகளைச் சிறையில் சந்தித்துப் பேசினேன். அதனால் அவர்களைப்பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ள முடிந்தது. அவர்களில் ஒருவர் பேசியதை இன்று மாலை கேட்டேன். தொழிலாளர்களுக்குச் சுயராஜ்யம் வாங்கித் தருவதாக அவர்கள் என்னதான் பேசினாலும், அவர்களால் அது முடியுமா என்பதைப்பற்றி எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. இங்குள்ள இளம் கம்யூனிஸ்டுகளில் பலர் பிறப்பதற்கு வெகு காலத்திற்கு முன்பே தொழிலாளர்களுக்காக நான் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டேன். என் காலத்தின் பெரும் பகுதியைத் தென்னாப்பிரிக்காவில் அவர்களுக்காகவே செலவிட்டிருக்கிறேன். அவர்களுடனேயே வசித்து, அவர்களுடைய சுகங்களிலும் துக்கங்களிலும் பங்கு கொண்டிருக்கிறேன். ஆகையால், தொழிலாளர் சார்பாகப் பேசுகிறேன் என்று ஏன் சொல்லுகிறேன் என்பதை நீங்கள் புரிந்துகொள்ளலாம். நீங்கள் வேறொன்றும் செய்யாவிட்டாலும், மரியாதையுடனாவது நடந்துகொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். என்னிடம் வந்து விஷயங்களை எந்த விதமான ஒளிவு மறைவுமின்றி விவாதிக்கும்படி உங்களை அழைக்கிறேன்.

நீங்கள் கம்யூனிஸ்டுகள் என்று சொல்லிக்கொள்ளுகிறீர்கள். ஆனால், கம்யூனிஸ வாழ்க்கையை நீங்கள் நடத்துவதாகத் தெரியவில்லை. கம்யூனிஸக் கொள்கையின் சிறந்த தன்மைகளுக்கேற்ப நான் வாழ்க்கை நடத்த முயற்சி செய்துகொண்டிருக்கிறேன் என்பதை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். கம்யூனிஸத்தில் மரியாதை விலக்கப்படவில்லை என்றே நினைக்கிறேன். இன்று நான் உங்களுடனிருக்கிறேன். இன்னும் சில நிமிடங்களில் இங்கிருந்து போய்விடுவேன். ஆனால், தேச மக்கள்

உங்களுக்கு ஆதரவு தர வேண்டும் என்று நீங்கள் நினைத்தால், அவர்களுடைய நம்பிக்கையைப் பெறும் விதத்தில் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். நிர்ப்பந்தத்தின் மூலம் நீங்கள் அதைச் செய்ய முடியாது. உங்களுடைய கருத்துக்கிணங்கத் தேச மக்களைத் திருப்பும் முயற்சியில் நீங்கள் அழிவை ஏற்படுத்திவிடக் கூடும். ஆனால், எவ்வளவு பேர்களை நீங்கள் அழிப்பீர்கள்? கோடிக் கணக்கில் அழிக்க முடியாது. லட்சக்கணக்கான மக்கள் உங்கள் பக்கமிருந்தால், சில ஆயிரம் பேர்களை நீங்கள் அழிக்கலாம். ஆனால், இன்றிருப்பது நீங்கள் ஒரு சிலரே. உங்களால் முடிந்தால் காங்கிரஸை உங்கள் பக்கமாகத் திருப்பி அதன் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுங்கள். ஆனால், மிகவும் சாதாரணமான மரியாதைகூட இல்லாமல் நீங்கள் அதைச் செய்ய முடியாது. சாதாரண மரியாதைகூட் இல்லாமல் நீங்கள் நடந்துகொள்ளுவதற்கு நியாயமே இல்லை. உங்களுடைய கருத்துக்களை நீங்கள் இஷ்டப்படி எடுத்துச் சொல்லுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. கோர்வையாகப் பேசக்கூடிய யாரையும் பொறுமையுடன் கேட்பதற்கான சகிப்புத் தன்மையும் இந்தியாவில் இருக்கிறது, இந்த நிலைமையில் ஏன் மரியாதை இல்லாமல் நடந்துகொள்ள வேண்டும்?

போராட்ட நிறுத்தத்தினால்* தொழிலாளர்களுக்கு ஒரு கெடுதலும் வந்துவிடவில்லை. என்னுடைய நடவடிக்கைகள் எந்தக் காலத்திலும் தொழிலாளர்களுக்குக் கெடுதல் விளைவித்ததில்லை; கெடுதல் விளைவிக்கவும் முடியாது. காங்கிரஸ் தனது பிரதிநிதிகளை மகாநாட்டுக்கு† அனுப்பினால், அவர்கள் கோரும் சுயராஜ்யம் தொழிலாளர்கள், விவசாயிகளுக்கான சுயராஜ்யத்தைத் தவிர வேறு விதமானதாக இராது. கம்யூனிஸ்ட் கட்சி ஏற்படுவதற்கு வெகுகாலத்திற்கு முன்பாகவே, சுயராஜ்யம் என்பது தொழிலாளர்கள், விவசாயிகளுக்கு நன்மை பயப்பதாயில்லையென்றால், அந்தச் சுயராஜ்யத்தில் அர்த்தமே இல்லை என்று காங்கிரஸ் தீர்மானித்துவிட்டது. இங்கே கூடியுள்ள தொழிலாளர்களாகிய உங்களில் யாரும் மாதம் இருபது ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் பெறாதவர்களா யிருக்கலாம். ஆனால், உங்களுக்கு மட்டுமல்லாமல், எந்தவிதமான வேலையுமில்லாமல் இருப்பவர்களும், ஒரு நாளைக்கு ஒரு வேளை நல்ல சோறுகூட இல்லாதவர்களும், காய்ந்துபோன ஒரு ரொட்டித் துண்டுடனும், ஒரு சிட்டிகை உப்புடனும் திருப்தியடைய வேண்டியிருப்பவர்களுமான அந்தக் கோடிக்கணக்கானவர்களுக்கும் சுயராஜ்யம் பெற நான் வேலை செய்துகொண்டிருக்கிறேன். ஆனால், உங்களை நான் ஏமாற்ற விரும்பவில்லை. ஒரு விஷயத்தை உங்களிடம் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். முதலாளிகளிடம் எனக்கு எந்தத் துவேஷமுமில்லை. அவர்களுக்கு நான் எந்தக்

---

* காந்தி - இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதனால் சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப்பட்டதே இங்கே கூறப்படுகிறது.

† லண்டனில் பிரிட்டிஷ் அரசாங்கம் கூட்டிய வட்டமேஜை மகாநாடு.

கெடுதலும் நினைக்கமாட்டேன். ஆனால், கஷ்டத்தை அனுபவிப்பதன் மூலம் அவர்களுக்குக் கடமை உணர்ச்சியை உண்டாக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அவர்களுடைய மனத்தை இளக்கி, தங்களைப்போல் அவ்வளவு அதிர்ஷ்டம் இல்லாதவர்களாயுள்ள மக்களுக்கு அவர்கள் நியாயம் வழங்கச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். அவர்களும் மனிதப் பிறவிகளே. ஆகையால், என்னுடைய வேண்டுகோள் வீண் போகாது. முதலாளிகளிலும் தியாகம் செய்பவர்கள் நிறைய இருக்கிறார்கள் என்பதை ஜப்பானின் சரித்திரம் ருசுப்பிக்கிறது. சென்ற தடவை நடந்த சத்தியாக்கிரகத்தின்போது, பல முதலாளிகள் பெரும் தியாகங்கள் செய்தார்கள் ; சிறை சென்று கஷ்டங்களை அனுபவித்தார்கள். அவர்களை விரோதித்துக்கொள்ள வேண்டும் என்கிறீர்களா ? பொது லட்சியத்திற்காக அவர்களும் உங்களுடன் சேர்ந்து வேலை செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்பவில்லையா ?

மீரத் கைதிகளைப்பற்றியும் கேட்டீர்கள். எனக்கு அதிகாரம் இருந்தால், சிறையிலுள்ள ஒவ்வொரு கைதியையும் விடுதலை செய்துவிடுவேன் என்பதை நீங்கள் அறிய வேண்டுகிறேன். ஆனால், அவர்களை விடுதலை செய்தால்தான் ஒப்பந்தம் செய்துகொள்ள முடியும் என்று நான் நிபந்தனை விதிப்பது நியாயமாயிருக்காது. அவர்கள் விடுதலை செய்யப்படுவதற்கு என்னாலியன்றவரையில் முயற்சி செய்துகொண்டிருக்கிறேன் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அமைதியான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவதற்கு என்னுடன் ஒத்துழைப்பது என்று மட்டும் நீங்கள் தீர்மானித்தால், காட்வாலிகள் உட்பட எல்லோரையுமே விடுதலை பெறச் செய்வது சாத்தியமாயிருக்கலாம். சுதந்திரத்தைப்பற்றி நீங்கள் பேசுகிறீர்கள். உங்களைப்போலவே நானும் சுதந்திரத்தை விரும்பவில்லையா ? (' சுதந்திரத்தின் சாரம் ' என்ற கூச்சல்கள்) ஆம், நான் விரும்புவது சாரம்தானேயன்றி நிழல் அல்ல. இப்போதைக்கு நீங்கள் கொஞ்சம் பொறுமையாக இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். சந்தர்ப்பம் வரும்போது தன்னுடைய குறைந்த பட்ச கோரிக்கையாகக் காங்கிரஸ் என்ன சொல்லுகிறது என்பதைப் பாருங்கள். கராச்சியில் நிறைவேற்றப்பட்ட லாகூர் தீர்மானத்தையே கேட்போம் என்று உறுதி கூறுகிறேன். நாங்கள் வட்டமேஜை மகாநாட்டுக்குப் போவதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தால், நாங்கள் விரும்புவதைப் பெற்றுத் திரும்புவோம் ; அல்லது வெறுங்கையுடன் திரும்புவோம்.

'பதினோரு அம்சத் திட்டத்தைப்'பற்றிக் கேட்டீர்கள். சுதந்திரத்தின் சாரம் அதிலிருப்பதாக நான் நினைக்கிறேன். அதில் விவசாயிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் நல்ல பாதுகாப்பு இருக்கிறது. ஒப்பந்த சமயத்தில் அவற்றை நான் கூற முடியவில்லை. ஏனெனில், சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பதற்கு மாற்றாகவே அவை சமர்ப்பிக்கப்பட்டன. சட்ட மறுப்பு

இயக்கம் இப்போது முடிந்துவிட்டது. நாம் அழைக்கப்பட்டால், நமது தேசீய கோரிக்கையை வற்புறுத்துவதற்காக நாம் வட்ட மேஜை மகாநாட்டுக்குப் போகவேண்டும். அங்கே நாம் வெற்றி பெற்ருல் பதினேரு அம்சங்களையும் பெற்றுவிடுவோம். அந்தப் பதினேரு அம்சங்களையும் பூர்த்தி செய்யாத எந்தச் சுயராஜ்யத்தையும் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று நீங்கள் நம்பலாம்.

கடவுள் உங்களுக்கு அறிவையும், சாமர்த்தியத்தையும் கொடுத்திருக்கிருர். அவற்றைச் சரியாகப் பயன்படுத்திக்கொள்ளுங்கள். உங்கள் பகுத்தறிவுக்குத் தடை விதிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுள் உங்களுக்குத் துணை புரியட்டும்.

—'எங் இந்தியா' – 26—3—1931

['கம்யூனிஸ்டுகளுக்கு ஒரு வார்த்தை' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

[காங்கிரஸைப் பகிரங்கமாக எதிர்த்துக்கொண்டிருக்கும் கம்யூனிஸ்டுகளைச் சமாளிப்பது எப்படி. என்று ஒருவர் கேட்ட கேள்விக்குக் காந்திஜி கூறியிருக்கும் பதில் 1946 அக்டோபர் 6-ஆம் தேதி 'ஹரிஜ'னில் வெளிவந்திருக்கிறது. 'நியாயத்திற்கும் அநியாயத்திற்கும், உண்மைக்கும் பொய்க்கும் அவர்கள் எந்தப் பாகுபாட்டையும் கவனிப்பதில்லை என்றே தோன்றுகிறது. குற்றச்சாட்டை அவர்கள் மறுக்கிருர்கள். ஆனல், அவர்கள் செய்து வருவதாகக் கூறப்படும் செய்கைகளோ, அக்குற்றச்சாட்டுகளை உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவை நீக்கி ரஷியாவே ஆன்மிகத் தாய்நாடு என்று அவர்கள் கருதுகின்றனர். ரஷியாவிலிருந்தே அவர்கள் ஆக்ஞைகளைப் பெறுகிருர்கள் என்றும் தோன்றுகிறது' என்று கூறிய காந்திஜி, 'கம்யூனிஸ்டுகள் சம்பந்தமாக என் முறை இதுதான்: நான் அவர்கள் கையில் மடிந்தாலும் மடிய வேண்டுமேயன்றி நான் திருப்பி அவர்களுக்கு எதுவும் செய்யக் கூடாது' என்ருர். காந்திஜி கூறிய இப்பதிலின் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—இரண்டாம் தொகுப்பு 751-ஆம் பக்கத்தில் விவரமாகக் காணலாம்.]

பகுதி இரண்டு

# உழைத்துச் சாப்பிடுவது

## 1

## உழைத்துச் சாப்பிடுவது என்ருல் என்ன?

**கேள்வி:** “உழைத்துச் சாப்பிடுவது” என்று டால்ஸ்டாய் குறிப்பிடுகிருரே, அதைப் பற்றி உங்களுடைய கருத்து என்ன? உங்களுடைய உடலுழைப்பின் மூலமேதான் நீங்கள் வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்கிறீர்களா?

**பதில்:** உண்மையில் பார்க்கப்போனல், ‘உழைத்துச் சாப்பிடுவது’ என்பது டால்ஸ்டாயினல் கண்டுபிடிக்கப்பட்ட வார்த்தையல்ல. பாண்டாரெப் என்ற மற்ரெரு ரஷிய எழுத்தாளர் உபயோகித்த வார்த்தை அது. அதை டால்ஸ்டாய் எடுத்துக்கொண்டார். ஒருவர் உணவு பெற வேண்டுமானல் அதற்கு வேண்டிய அளவு உடலுழைப்புச் செய்து அதைப் பெறுவதற்கான தகுதியைப் பெற வேண்டும் என்பதே அதன் பொருள். ஆகையால், அந்த வார்த்தையின் விரிவான பொருளின்படி, அந்த வேலையின் மூலம்தான் ஒருவர் வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்க வேண்டும் என்பதில்லை. ஆனல், ஒவ்வொருவரும் உபயோகமான வழியில் ஏதாவது உடலுழைப்புச் செய்ய வேண்டும். இப்போதைக்கு ராட்டினத்தில் நூற்பது ஒன்றுதான் என்னுடைய உடலுழைப்பாகும். அது ஒரு சின்னம்தான். நான் போதிய அளவு உடலுழைப்புச் செய்வதில்லை. அதனல்தான் நானும் பிறருடைய தருமத்தில் வாழ்பவனுக என்னை பாவித்துக் கொள்ளுகிறேன். ஆனல், ஒவ்வொரு தேசத்திலுமே தங்கள் உடல், பொருள், ஆவி யாவற்றையும் மக்கள் சேவைக்காகச் செலவிடக்கூடியவர்கள் இருக்க வேண்டும் என்று நான் நம்புகிறேன். அவர்கள் தம்முடைய வாழ்க்கையை நடத்துவதற்குத் தம் நாட்டினரின் தயவை நம்ப வேண்டும்; அதாவது கடவுளை நம்ப வேண்டும்.

—‘எங் இந்தியா’–5–11–1928

[‘கேள்விக் கதம்பம்’ என்ற தலைப்பில் முதலில் வெளியான ஒரு கட்டுரையிலிருந்து.]

# 2

# "உழைத்துச் சாப்பிடு" என்ற நியதி கண்டுபிடிக்கப்பட்ட விதம்

"உழைத்துச் சாப்பிடுவது" என்பதைப் பற்றி டால்ஸ்டாய் எழுதியிருந்ததை வாசித்தபோதுதான், மனிதன் வாழ வேண்டுமானுல், அதற்கு அவன் உழைக்க வேண்டும் என்ற நியதி முதலில் எனக்குப் புலப்பட்டது. ஆனுல், அதற்கு முன்பு ரஸ்கினின் 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற புத்தகத்தை வாசித்தபோதே அந்த உண்மையை நான் ஏற்றுக்கொண்டுவிட்டேன். தன் கைகளாலேயே வேலை செய்துதான் ஒருவர் தன் ஜீவனேபாயத்தைத் தேட வேண்டும் என்ற தெய்வீகச் சட்டத்தை முதலில் வற்புறுத்தியவர் டி. எம். பாண்டாரெப் என்ற ஒரு ரஷிய எழுத்தாளர். டால்ஸ்டாய் அதைப் பிரபலப்படுத்தினர். யக்ஞம் செய்யாமல் உணவருந்துபவன் திருட்டு உணவை உண்பவனுகிருன் என்று கீதையின் மூன்ருவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதையேதான் அவரும் சொல்லியிருக்கிருர் என்று நான் நினைக்கிறேன். இங்கே இதன் பொருள், உழைத்துச் சம்பாதித்துச் சாப்பிட வேண்டும் என்றே நினைக்கிறேன்.

காரண அறிவின்படி பார்த்தாலும் அதே முடிவுதான் ஏற்படுகிறது. உடலுழைப்புச் செய்யாத ஒருவனுக்குச் சாப்பிடும் உரிமை ஏது? "நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்து உண்பாயாக" என்று பைபிள் வேதம் கூறுகிறது. ஒரு லட்சாதிபதி நாள் பூராவும் படுக்கையிலேயே புரண்டுகொண்டு, சாப்பாட்டைக் கூட அவருக்கு யாராவது ஊட்டிவிடுவதாயிருந்தால், அது நெடுங்காலம் நீடிக்காது; சீக்கிரத்தில் வாழ்க்கையிலேயே அவருக்கு வெறுப்புத் தட்டிவிடும். ஆகையால், தேகப் பயிற்சியின் மூலம் பசியை உண்டாக்கிக்கொண்டு தன் உணவைச் சாப்பிடுகிருர். பணக்காரராயிருந்தாலும், ஏழையாயிருந்தாலும், ஏதாவது ஒரு வழியில் தேகப் பயிற்சி செய்ய வேண்டியிருந்தால், அது ஏன் சோற்றுக்குச் சம்பாதிப்பதற்கான வேலையாயிருக்கலாகாது? சாகுபடியாளரைத் தேகப் பயிற்சி செய்யும்படி யாரும் கேட்பதில்லை. மனிதர்களில் பத்தில் ஒன்பது பேருக்கு மேல் பூமியை உழுவதன் மூலம் ஜீவனேபாயம் தேடிக்கொள்ளுகிருர்கள். மீதமுள்ள பத்தில் ஒருவரும் தம்முடைய உணவைச் சம்பாதித்துக் கொள்ளுவதற்குத் தேவையான அளவுக்காவது இந்தப் பெரும்பான்மையோரின் உதாரணத்தைப் பின்பற்றினுல், உலகத்தில் எவ்வளவு மகிழ்ச்சியும், ஆரோக்கியமும், அமைதியும் இருக்கும்! இவர்களும் வேலை செய்ய ஆரம்பித்தால் விவசாயத்தில் உள்ள பல கஷ்டங்கள் சுலபமாகத் தீர்ந்துவிடும். தன் உணவுக்காகத்

தான் வேலே செய்ய வேண்டும் என்ற பொறுப்பை ஒவ்வொரு வரும் ஏற்றுக்கொண்டால், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பாகுபாடும் அழிந்துவிடும். இது எல்லா வர்ணங்களுக்கும் பொதுவானது. உலகம் பூராவிலுமே முதலாளிகளுக்கும் தொழி லாளிகளுக்குமிடையே முரண்பாடு ஏற்பட்டிருக்கிறது; பணக் காரர்களேக் கண்டு ஏழைகள் பொருமைப்படுகிருர்கள். எல் லோரும் தமது உணவுக்காக உழைத்தால், அந்தஸ்துகள் மறைந்துவிடும். பணக்காரர்கள் அப்போதும் இருக்கத்தான் செய்வார்கள். ஆனல், அவர்கள் தம்மைப் பொது மக்களின் தருமகர்த்தாக்களாகவே கருதிக் கொள்ளுவர். அதைப் பெரும் பாலும் பொது நலன்களுக்கே உபயோகித்துக்கொள்ளுவார்கள்.

அகிம்சையைப் பின்பற்றிச் சத்தியத்தைக் கடைப்பிடித்து பிரம்மச்சரியத்தை இயற்கையான ஒரு காரியமாக அனுசரிப்பவர் களுக்கு, தன் உணவுக்காக உழைப்பது என்பது ஒரு வரப் பிரசாதமாயிருக்கும். இந்த உழைப்பு உண்மையில் விவசாயத் துடன் மட்டுமே சம்பந்தப்பட்டதாயிருக்கக்கூடும். ஆனல், இப் போதைக்கு எல்லோருமே இதை மேற்கொள்ளும் நிலேமையில் இல்லே. ஆகையால், சிலர் நூற்கலாம்; சிலர் நெய்யலாம்; அல்லது, பூமியில் உழுவதற்குப் பதிலாகத் தச்சு வேலேயையோ, கொத்து வேலேயையோ எடுத்துக்கொள்ளலாம். ஒவ்வொரு வரும் தமக்குத் தாமே தோட்டியாக இருக்க வேண்டும். சாப்பிடு வதைப் போலவே, கழிவுகளே வெளியேற்றுவதும் அவசிய மானதே. ஒவ்வொருவரும் தம்முடைய மலத்தைத் தாமே அகற்றுவதுதான் நல்லது. தோட்டி வேலே செய்வது சமூகத்தில் ஒரு தனிப்பட்ட பிரிவின் வேலே என்று ஒதுக்கி வைக்கப்பட்டி ருப்பதில் ஏதோ பெரிய தவறு இருக்க வேண்டும் என்று வெகு காலமாகவே நான் கருதி வந்திருக்கிறேன். மிகவும் அத்தியா வசியமான இந்தச் சுகாதார சேவையைச் செய்பவர்களுக்கு இவ்வளவு தாழ்ந்த அந்தஸ்தை முதலில் கொடுத்தவர் யார் என்று கண்டுபிடிப்பதற்கு மனிதனின் சரித்திரபூர்வமான ஆதாரம் எதுவும் அகப்படவில்லே. அவர் யாராயிருந்தாலும், நமக்கு அது நன்மை செய்யவில்லே. நாமெல்லோருமே தோட் டிகள்தாம் என்ற எண்ணம் குழந்தைப் பருவத்திலிருந்தே நம் மனத்தில் பதியவைக்கப்பட வேண்டும். இதை உணருபவர்கள் யாவரும், தோட்டி வேலேயைத் தம் சோற்றுக்கான வேலேயாக ஆரம்பிப்பதுதான் சுலபமான வழியாகும். தோட்டி வேலே புத்திசாலித்தனத்துடன் மேற்கொள்ளப்பட்டால், மனிதனின் சமத்துவத்தை உணருவதற்குப் பெரும் உதவியாக இருக்கும்.

'எராவ்டா மந்திரி'லிருந்து—அத்தியாயம்—9.

['உழைத்துச் சாப்பிடுவது' என்ற தலேப்பில் முதலில் வெளியானது.]

  

[காந்திஜியின் நண்பர் ஸ்ரீ போலக், ரெயிலில் படிப்பதற் காகக் காந்திஜியிடம் ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதி

மோட்சம்' என்ற புத்தகத்தைக் கொடுத்தார். அந்த அற்புதமான நூலைப் படித்ததும் தமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளைக் குறித்துக் காந்திஜி தாம் பின்னால் எழுதிய 'சுய சரிதை'யில் குறிப்பிட்டிருக்கிறார். 'ஒரு நூலின் மந்திர சக்தி' என்ற தலைப்பில் இந்நூலைப் பற்றிக் காந்திஜி எழுதியிருக்கும் விபரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'-மூன்றும் தொகுப்பு, 391-94-ஆம் பக்கங்களில் விரிவாகக் காண்க.

'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற நூல் பின்வருபவைகளைப் போதிக்கிறது என்று தமக்குத் தோன்றுவதாகக் காந்திஜி கூறுகிறார்:

1. எல்லோருடைய நலனில்தான் தனிப்பட்டவரின் நலனும் அடங்கியிருக்கிறது.

2. தங்கள் உழைப்பினால் ஜீவனோபாயத்தைத் தேடிக் கொள்ளுவதற்கு எல்லோருக்கும் ஒரே மாதிரியான உரிமை இருப்பதால், க்ஷவரத் தொழிலாளியின் வேலைக்கு இருக்கும் அதே மதிப்புத்தான் வக்கீல் வேலைக்கும் உண்டு.

3. ஒரு பாட்டாளியின் வாழ்க்கையும், அதாவது நிலத்தில் உழுது பாடுபடும் குடியானவரின் வாழ்க்கையும், கைத்தொழில் செய்பவரின் வாழ்க்கையுமே வாழ்வதற்கு உகந்த மேன்மையான வாழ்க்கைகள்.]

# 3

# உழைத்துச் சாப்பிடுவதன் கடமை

பிரம்மா மக்களைச் சிருஷ்டித்தார். சேவையின் கடமையையும் அவர்களுக்களித்தார். "இதன் மூலம் நீங்கள் வளர்ச்சி பெறுவீர்கள். இதுவே உங்களுடைய ஆசைகளையெல்லாம் நிறைவேற்றுவதா யிருக்கட்டும்..." என்றார். "இந்தப் பணியைப் புரியாமல் சாப்பிடுபவன் திருட்டு உணவை உண்பவனாகிறான்" என்று கீதை கூறுகிறது. "நெற்றி வியர்வை நிலத்தில் விழ உங்கள் உணவைச் சம்பாதியுங்கள்" என்று பைபிள் கூறுகிறது. இந்தப் பணி பலவிதமானவைகளா யிருக்கலாம். அவற்றில் ஒன்று சோற்றுக்கான உழைப்பாக இருக்கலாம். தங்களுடைய உணவுத் தேவைகளுக்கு அதிகமாக யாரும் வேலை செய்யாமல் இருந்தால் போதிய உணவு இருக்கும்; எல்லோருக்கும் ஓய்வும் இருக்கும். அப்போது ஜனத்தொகைப் பெருக்கம் என்ற அங்கலாய்ப்பு

இருக்காது. வியாதிகளோ, நம்மைச் சுற்றி நாம் காணும் கஷ்டங்களோ இரா. அத்தகைய பணியே மிகவும் உயர்ந்ததாயிருக்கும். தமது உடல்களின் மூலமோ, மூளைகளின் மூலமோ மனிதர்கள் இன்னும் பல காரியங்களைச் செய்வார்கள். ஆனால், இவையெல்லாம் பொது நன்மைக்கான அன்புப் பணிகளாயிருக்கும். அப்போது பணக்காரர்கள், ஏழைகள், உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், தீண்டத்தக்கவர்கள், தீண்டத்தகாதவர்கள் என்ற வித்தியாசங்கள் இரா.

இது அடைய முடியாத லட்சியமாக இருக்கலாம். ஆனால், அதற்காக நாம் முயற்சி செய்யாமலிருக்க வேண்டும் என்பது இல்லை. பணி புரியும் கடமையைப் பூராவாக நிறைவேற்றுவிட்டாலும், நமது அன்றாட உணவுக்கு வேண்டிய அளவு உடலுழைப்புச் செய்தோமானால், அந்த லட்சியப் பாதையில் நாம் வெகு தூரம் சென்றவர்களாவோம்.

அப்படிச் செய்தால் நமது தேவைகள் குறைந்துவிடும்; நமது உணவும் எளியதானதாக இருக்கும். அப்போது உயிர் வாழ்வதற்காகச் சாப்பிடுவோம்; சாப்பிடுவதற்காக உயிர் வாழமாட்டோம். இதில் சந்தேகமிருப்பவர்கள், தம் உணவுக்காக உழைத்துப் பார்க்கட்டும். தம்முடைய உழைப்பின் உற்பத்தியை அவர்கள் பெரிதும் ரசிப்பார்கள். அவர்களுடைய ஆரோக்கியத்திலும் அபிவிருத்தி ஏற்படும். தாம் ஏற்கனவே உபயோகித்துக் கொண்டிருந்த பல பொருள்கள் தேவையில்லாதவை என்பதையும் உணருவார்கள்.

புத்திபூர்வமான உழைப்பின் மூலம் ஒருவர் தம் உணவைச் சம்பாதிக்கக் கூடாதா? இல்லை. உடலின் தேவைகளை உடலேதான் பூர்த்தி செய்ய வேண்டும். "ஸீஸருக்கு உரியதை ஸீஸரிடம் செலுத்திவிடுக" என்ற பழமொழி இதற்கும் மிகவும் பொருந்தும்.

வெறும் புத்திபூர்வமான உழைப்பு, உள்ளத்தின் திருப்திக்காகத்தான். அதற்கு ஊதியம் எதையும் எதிர்பார்க்கக் கூடாது. லட்சிய சமுதாயத்தில் வக்கீல்கள், வைத்தியர்கள் போன்றோர், சமூகத்தின் நன்மைக்காக மட்டுமே வேலை செய்வார்களே யன்றி, சுயநலத்திற்காக வேலை செய்யமாட்டார்கள். உணவுக்காக உழைக்க வேண்டும் என்ற விதியைப் பின்பற்றுவதன் மூலம் சமூகத்தில் அமைதியான ஒரு புரட்சி ஏற்படும். உயிர் வாழ்வதற்குப் போராடுவதற்குப் பதிலாக, பரஸ்பர சேவைக்காகப் போராடுவது மனிதனின் வெற்றியாக இருக்கும். மிருகத்தின் ஆட்சிக்குப் பதிலாக மனிதனின் ஆட்சி ஏற்படும்.

கிராமத்திற்குத்திரும்புவதென்பது, உணவுக்காகஉழைப்பது என்ற கடமையையும், அதனுடைய விளைவுகளையும்நாமாகஏற்றுக் கொள்ளுவதாகும். "ஆயிரக்கணக்கான இந்திய மக்கள் இன்று கிராமங்களில்தான் வாழுகிறார்கள்; அவர்கள் அரைப் பட்டினி

கிடப்பவர்களாகத்தானே இருக்கிறார்கள்'' என்று கூறுகிறார்கள். துரதிருஷ்டவசமாக இது முற்றிலும் உண்மைதான். ஆனால், அவர்கள் மனமுவந்து கீழ்ப்படியவில்லை என்பதை நாமறிவோம். முடிந்தால் உடலுழைப்பை அவர்கள் தவிர்க்கவே முயற்சிப்பார்கள். ஏதாவது வேலை கிடைக்கும் என்றால், பக்கத்திலுள்ள நகரத்திற்குக்கூட அவர்கள் ஓடிவிடுவார்கள். ஓர் எஜமானனுக்கு நிர்ப்பந்தமாகக் கீழ்ப்படிய வேண்டியிருப்பது, ஒரு வகையான அடிமைத்தனமேயாகும். மனமுவந்து தகப்பனாருக்குக் கீழ்ப்படிவது புத்திரனின் பெருமையாகும். அதே மாதிரி நிர்ப்பந்தமாக உணவுக்காக உழைப்பது, வறுமை, வியாதி, அதிருப்தி ஆகியவற்றையே வளர்க்கும். அது ஒரு விதமான அடிமைத்தனம்தான். அதற்கு மனமுவந்து கீழ்ப்படிவது, திருப்தியையும், தேகாரோக்கியத்தையும் அளிக்கும். தேகாரோக்கியம்தான் உண்மையான செல்வமேயொழிய, வெள்ளியோ, தங்கமோ அல்ல. உணவுக்காக மனமுவந்து உழைக்கச் செய்வதில் கிராமக் கைத்தொழில்கள் சங்கம் ஒரு பரீட்சையாகும்.

—'ஹரிஜன்' – 29—6—1935

## 4

# உடலுழைப்பின் அவசியம்

கவனம் மிகுந்த ஒரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

“ஜாம்ஷெட்பூர் கூட்டத்தில் நீங்கள் செய்த பிரசங்கத்தின் விவரம் ஆகஸ்டு 20-ஆம் தேதியிட்ட ‘எங் இந்தியா’ பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. புத்திபூர்வமான உழைப்பைவிட உடலுழைப்புத்தான் முக்கியம் என்று வற்புறுத்திய பிறகு நீங்கள் பின்வருமாறு கூறியதாக அச்செய்தியின் முதல் பாராவில் குறிப்பிட்டிருக்கிறது: ‘‘ஹிந்து மதம் பூராவிலுமே இந்த எண்ணம்தான் ஊடுருவிச் செல்லுகிறது. ‘உழைக்காமல் உண்பவன் பாவத்தை உண்கிறான்; அவன் ஒரு திருடன்’. பகவத்கீதையிலுள்ள ஒரு சுலோகத்திற்கு இதுதான் அர்த்தம்!'' உடல் உழைப்பு, புத்திபூர்வமான உழைப்பு இரண்டுக்குமிடையே கீதையில் இம்மாதிரி பாகுபாடு காட்டப்பட்டிருக்கிறதா என்பது ஒரு புறமிருக்கட்டும். கீதையின் மூன்றாவது அத்தியாயத்தில், 12, 13-ஆவது சுலோகங்களே நீங்கள் பொருள் கூறிய (அச்செய்தியில் உள்ளபடி) சுலோகங்களாயிருக்க முடியும். ஆகவே, அது ஒரு சுலோகமல்ல; இரண்டு சுலோகங்கள். ‘உழைப்பு’ பற்றி உங்களுடைய கட்சிக்குப் பலம் தேடுவதற்காக அதை உபயோகித்திருக்கிறீர்கள். இரண்டாவதாக, அந்தச் சுலோகங்களில் உடலுழைப்பு, அல்லது புத்திபூர்வமான உழைப்பு என்ற எந்தவிதமான உழைப்பு பற்றிய பிரஸ்தாபமும் இல்லை. ஆனால், வேள்வியின் (யக்ஞம்) கடமையை விளக்கும் முறையில் முதலாவது சுலோகத்தில் ஒரு பிரஸ்தாபம் இருக்கிறது. அதாவது, கடவுள் தனக்களித்

தை மனிதன் கடவுளுடன் சேர்ந்தோ அல்லது கடவுளுக்கு அர்ப்பணம் செய்து விட்டோதான் உட்கொள்ள வேண்டும் என்றும், அப்படி செய்யத் தவறினல் அவன் கள்வன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. 'தமக்காக மட்டும் சமைப்பவர்கள் பாவத்தை உட்கொள்ளுகிருர்கள்' என்று இரண்டாவது சுலோகம் கூறுகிறது. ஆகையால், நீங்கள் கூறியதாக ஸ்ரீ மகாதேவ தேசாய் உங்களுடைய பத்திரிகையிலேயே குறிப்பிட்டிருப்பது, கீதையிலுள்ள சுலோகத்திற்குப் பெரிதும் மாறுபட்டதாகும். உங்களுக்குச் சௌகரியப் படும்போது இதைக் கவனிப்பீர்கள் என்று நம்புகிறேன்."

மகாதேவ தேசாய் அளித்துள்ள மொழிபெயர்ப்பு ஒரு சுலோகத்தினுடையது அல்ல என்றும், அது இரண்டு சுலோகங்களின் மொழிபெயர்ப்பு என்றும் அவர் கூறியிருப்பது சரிதான். அவருடைய இந்தச் சரியான திருத்தத்திற்கு நன்றி செலுத்துகிறேன். கீதையில் உள்ள யக்ஞம் என்ற வார்த்தைக்குக் கொடுக்கப்பட்டுள்ள மொழிபெயர்ப்புக்கு நியாயம் இல்லை என்பதே அவருடைய வாதம் என்று தோன்றுகிறது. ஆனல், அந்த மொழிபெயர்ப்பையே நான் ஆதரிக்கிறேன். அந்த நண்பர் குறிப்பிட்டுள்ள 12. 13-ஆவது சுலோகங்களிலுள்ள வார்த்தைக்கு ஒரே ஒரு பொருள்தான் இருக்கமுடியும் என்று நான் கருதுகிறேன். 14-வது சுலோகம் இதை நன்ருகத் தெளிவாக்குகிறது. அதாவது :

> "மனிதன் உணவால் வாழ்கிருன்,
> மழையினல் உணவு கிடைக்கிறது,
> வேள்வியின் மூலம் மழை வருகிறது,
> வேலையின் மூலம் வேள்வி செய்கிருேம்."

ஆகையால், இங்கே உடலுழைப்புக் கொள்கை மட்டும் விளக்கப்படவில்லை. தனக்காக மட்டுமல்லாமல் மற்றவர்களுக்காகவும் உழைக்க வேண்டும் என்ற கொள்கை விதிக்கப்பட்டிருக்கிறது என்பதே என்னுடைய அபிப்பிராயம். அப்போது தான் அது வேள்வி (யக்ஞம்) ஆக முடியும். புத்திபூர்வமான உழைப்பினல் மழை வருவதில்லை; வெறும் உடலுழைப்பினல் தான் வருகிறது. காடுகளிலுள்ள மரங்கள் அழிக்கப்பட்டுவிட்டால் மழை வருவதில்லை; மரங்கள் பயிரிடப்பட்டால் மழை வருகிறது. மரங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு பெய்யும் மழையும் அதிகமாகிறது. இது விஞ்ஞான ரீதியில் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மையாகும். இயற்கையின் விதிகள் இன்னும் கண்டுபிடிக்கப்பட்டுவிடவில்லை. மேலெழுந்தவாரியாகத்தான் ஏதோ கிளறிப் பார்த்திருக்கிருேம். உடலுழைப்பை நிறுத்திவிடுவதால் மனத்திற்கும், உடலுக்கும் ஏற்படக்கூடிய கெடுதல்கள் யாருக்குத் தெரியும்? நான் சொல்லுவதைத் தவருக எடுத்துக்கொள்ளக்கூடாது. புத்திபூர்வமான உழைப்பின் மதிப்பை நான் குறைத்துப் பேச

வில்லை. ஆனால், எல்லோருடைய நன்மைக்காகவும் உடலு ழைப்பு அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். நாம் எவ்வளவுதான் புத்திபூர்வமாக உழைத்தாலும் அது உடல் உழைப்புக்கு ஈடா காது. பல சமயங்களில் அது உடலுழைப்பைவிட உயர்ந்த தாக இருக்கலாம்; அப்படி உயர்ந்ததாகவுமிருக்கிறது. ஆனால், உடலுழைப்புக்கு அது மாற்றாக இருக்க முடியாது. அறிவுக்கான உணவு, நாம் சாப்பிடும் தானியங்களைவிட உயர்ந்ததுதான். ஆனால், தானியங்களுக்குப் பதிலாக அதைச் சாப்பிட முடியுமா? பூமியில் உற்பத்தியாகும் பொருள்கள் இல்லாமல், அறிவு வளர்ச்சி என்பது அசாத்தியமானதே.

—'எங் இந்தியா' - 15—10—1925

['குறிப்புகள்' என்ற பகுதியில் முதலில் வெளியானது]

# 5

# உணவுக்கான உழைப்பின் பொறுப்பு

காந்திஜி தமது பிரார்த்தனைக்குப் பிறகு பேசியபோது கேள்விகளுக்குப் பதிலளிக்க ஆரம்பித்தார்.

"நீங்கள் எப்போதுமே தருமம் செய்வதை ஆட்சேபித்திருக் கிறீர்கள். உணவுக்காக உழைக்கும் பொறுப்புக்கு எந்த மனித னும் விலக்கல்ல என்று சொல்லி வந்திருக்கிறீர்கள். உட்கார்ந்த படியே ஏதேதோ தொழில்களைச் செய்துகொண்டிருந்தவர்களில் பலர், சென்ற கலகத்தின்போது தம் உடைமைகளையெல்லாம் இழந்துவிட்டார்கள். அவர்களுக்கு என்ன யோசனை சொல்லு கிறீர்கள்? அவர்கள் வேறு இடங்களுக்குச் சென்று வாழ்க் கையில் தமக்குப் பழக்கமான வேலைகளைத் திரும்பச் செய்ய வேண்டுமா? அல்லது, ஒவ்வொருவரும் தம் உணவுக்காக உழைக்க வேண்டும் என்ற உங்கள் கொள்கையைப் பின்பற்றித் தம் வாழ்க்கையைச் சீர்ப்படுத்திக்கொள்ள வேண்டுமா? அப்படி யானால், அவர்களுக்கு இருக்கும் விசேஷ திறமைகள் என்ன ஆவது?"

காந்திஜி அவர்களுக்குப் பின்வருமாறு பதிலளித்தார்: தருமம் செய்வதை அவர் பல வருஷங்களாக எதிர்த்திருப்பது உண்மையே. உணவுக்காக உழைக்க வேண்டிய அவசியத்தை யும் பல வருடங்களாகப் பிரசாரம் செய்து வந்திருக்கிறார். இது சம்பந்தமாக ஜில்லா மாஜிஸ்டிரேட்டும், ஜாமான் சாஹிபும், ஒரு போலீஸ் அதிகாரியுடன் தம்மிடம் வந்ததைப் பற்றிக் குறிப் பிட்டார். அகதிகளுக்கு உதவிப் பணம் அளிப்பது பற்றி அவர்கள் காந்திஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டார்கள். நீர்ப் பாசன வேலை, ரோடுகளைச் செப்பனிடுதல், கிராமப் புனரமைப்பு, அல்லது தமது நிலங்களையே சீர்ப்படுத்துவது, அல்லது தமது

நிலங்களிலுள்ள கட்டடங்களைச் சீர்ப்படுத்துவது போன்ற வேலைகளைச் செய்யலாம் என்று அவர்கள் ஏற்கனவே அகதிகளிடம் கூறியிருக்கிறார்கள். இந்த வேலைகளில் ஒன்றைச் செய்பவர்கள் அதிகாரிகளிடமிருந்து உணவுப் பொருள் பங்கீட்டைப் பெற்றுக் கொள்ளுவதற்கு முற்றிலும் உரிமை உண்டு. இந்த ஏற்பாடு தமக்குப் பிடித்திருக்கிறது என்று காந்திஜி சொன்னார். ஆனால், அனுபவ சாத்தியமான லட்சியவாதி என்ற முறையில், அகதிகளைத் திடீரென்று ஒரு வேலையைச் செய்யச் சொல்லுவதை அவர் விரும்பவில்லை. பலவிதமான வேலைகளை அவர்களுக்கு அளிக்க வேண்டும். ஏதாவது ஒரு வேலையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அவர்களுக்கு ஒரு மாத அவகாசமும் அளிக்கவேண்டும். அதற்குள் அவர்கள் ஏதாவது ஒரு வேலையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளாவிட்டால், அல்லது தமக்குப் பிடித்தமான வேறு ஒரு வேலையைச் சொல்லாவிட்டால், அல்லது உடலில் தெம்பு இருந்தும் எந்த வேலையையும் செய்ய மறுத்தால், அந்த ஒரு மாத காலத்திற்குப் பிறகு எந்த உதவியும் அளிக்கப்படமாட்டாது என்பதை வருத்தத்துடன் அந்த அகதிகளிடம் சொல்லத்தான் வேண்டும். அத்தகைய ஒருவேலைத் திட்டத்தில் அரசாங்கத்திற்கு முழு ஒத்துழைப்பு அளிக்கும்படி அகதிகளுக்கும், அவர்களுடைய நண்பர்களுக்கும் காந்திஜி யோசனை கூறினார். எந்த வேலையும் செய்யாமல், எந்த மனிதனும் உணவுப் பங்கீட்டை எதிர்பார்ப்பது தவறாகும்.

வீடு வாசலைவிட்டுப் போய்விடுங்கள் என்று அவர் ஒரு நாளும் சொல்லமாட்டார். ஒரு ஹிந்துவே பாக்கியிருந்தாலும் கூட, எந்த நிலைமையிலும் அவர் பயமில்லாமல் இருக்க வேண்டும் என்றே அவர் எதிர்பார்ப்பார். தங்களுடைய மத்தியில் அவர் பயமில்லாமல் வாழும்படி முஸ்லிம்கள் செய்ய வேண்டுமென்றும் எதிர்பார்ப்பார். அவர்களுக்குத் தெரிந்த வழியில் அவர்கள் கடவுளை வணங்குவதை வரவேற்கவும் வேண்டும்.

சூதாட்ட பேரங்களின் மூலம் சம்பாதித்த பணத்தை நியாயமாகச் சம்பாதித்த பணம் என்று அவர் ஒப்புக் கொள்ளவேயில்லை. மனிதர்கள் எந்தச் சமயத்திலும் தம்முடைய கெட்ட வழிகளை விட்டுவிடுவது அசாத்தியம் என்றும் அவர் நினைக்கவில்லை. ஒவ்வொருவருமே உடலால் உழைத்து வாழ்க்கையை நடத்தினால் உலகம் சுவர்க்கமாகிவிடும். விசேஷத் திறமைகளை எப்படிப் பயன்படுத்திக்கொள்ளுவது என்று தனியாகக் கவனிக்க வேண்டிய அவசியமில்லை. ஒவ்வொருவரும் தமது உணவுக்காக உழைத்தால், தம்முடைய திறமைகளைச் சமூகத்திற்கு இலவசமாக அளிப்பது தமது கடமை என்று கவிஞர்கள், டாக்டர்கள், வக்கீல்கள் முதலியோரும் கருதுவார்கள். தன்னலமற்றுக் கடமையுணர்ச்சியுடன் அவர்கள் செய்யும் வேலையின் தரம் இன்னும் உயர்வானதாக இருக்கும்.

—'ஹரிஜன்' – 2—3—1947

['காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்புகள்' என்பதிலிருந்து]

## 6

# புத்திசாலித்தனம், உழைப்பு இரண்டும் சேராதிருத்தல்

புத்திசாலித்தனத்துக்கும், உழைப்புக்கும் சம்பந்தமற்றுப் போனதன் விளைவாகக் கிராமங்கள் மிகவும் மோசமாகப் புறக் கணிக்கப்பட்டுவிட்டன. ஆகவே, நாட்டில் அழகிய கிராமங்கள் நிறைந்திருப்பதற்குப் பதிலாக, வெறும் குப்பை மேடுகளையே காண்கிறோம். பல கிராமங்களுக்குப் போகும் வழிகள் திருப்தி யளிக்கும் அனுபவமாக இல்லை. சுற்றியுள்ள அசுத்தத்தையும், துர்நாற்றத்தையும் பார்க்கும்போது, கண்களை மூடிக்கொண்டு, மூக்கையும் பொத்திக்கொள்ளலாமா என்று தோன்றுகிறது. காங்கிரஸ்காரர்களில் பெரும்பாலோர் கிராமவாசிகளாகவே இருக்க வேண்டும். அப்படி இருந்தால், நமது கிராமங்களைச் சுத்தத்திற்கு உதாரணமாக அவர்கள் செய்ய வேண்டும். ஆனால், தங்களுடைய அன்றாட வாழ்க்கையில், கிராமவாசிகளுடன் தொடர்பு கொள்ளுவது தங்களுடைய கடமை என்று அவர்கள் நினைக்கவேயில்லை. ஊரைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற நல்ல பழக்கமே நம்மிடமில்லை. நாம் குளிப்ப தாக இருக்கலாம். ஆனால், காலைக் கடன்களை முடிக்கும் கிணறு அல்லது குளம் அல்லது நதிக்குப் பக்கத்தில் அசுத்தம் செய்வது பற்றி நாம் கவலைப்படுவதேயில்லை. இது ஒரு பெரிய கெட்ட பழக்கம் என்று நான் கருதுகிறேன். நமது கிராமங்களும், புனித நதிகளும் இவ்வளவு மோசமான நிலைமையில் இருப்பதற் கும், சுகாதாரக் குறைவினால் ஏற்படும் வியாதிகளுக்கும் இது தான் காரணம் என்று நினைக்கிறேன்.

'நிர்மாண வேலைத்திட்டம்' (1941 பதிப்பு), பக்கம் – 12.

['கிராம சுகாதார'த்தின் 2-வது அத்தியாயம், 6-வது இனத்திலிருந்து ஒரு பகுதி.]

## 7

# புத்திசாலித்தனமான உடலுழைப்பே மிகச் சிறந்த சமூக சேவை

"சில தோழர்களின் ஒத்துழைப்புடன் நான் ஓர் ஆசிரமத்தை நடத்தி வருகிறேன். நம்மை நல்ல விவசாயிகளாக்கிக்கொள்ளுவதற்குப் பயிற்சி பெறுவதே இதன் நோக்கம். இதனால், நம்மைக் கிராமவாசிகளுடனும். வாழ்க்கையுடனும் ஐக்கியப்படுத்திக்கொண்டு, அவர்களுக்கு மேலும்

நன்ருகச் சேவை செய்ய முடியும். இந்த நோக்கத்துடன் விவசாயமே முக்கிய ஆதாரமாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. நூற்றலும் நெய்தலும் உபதொழில்களாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

"நெல்தான் எங்களுடைய முக்கிய பயிர். சென்ற ஜனவரியில் அதை அறுவடை செய்த பிறகு, கரும்பு, காய்கறிகள் முதலியவற்றைப் பயிரிட ஆரம்பித்திருக்கிரேும். சென்ற ஜூன் மாதத்திலிருந்து, அதாவது ஆசிரமம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து இன்றுவரையில், சராசரி 10 நம்பர் உள்ள 2,60,000 கெஜம் நூலே ஆசிரமவாசிகள் நூற்றிருக்கிருர்கள். ஒரு தறி போடப்பட்டு,நெய்வதும் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. பஞ்சு சுத்தம் செய்தலும் ஆசிரமத்திலேயே செய்யப்படுகிறது. தன்னுடைய துணித் தேவைகளுக்குப் போதுமான நூல் ஆசிரமத்தில் நூற்கப்பட்டிருக்கிறது. இந்த நூல் ஆசிரமத் திலேயே துணியாக நெய்யப்படும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

"தன்னுடைய உழைப்பின் மூலம், தன்னுடைய எல்லாத் தேவைகளே யும் தானே சமாளித்துக்கொண்டும், நகரவாசிகளின் வலேயில் விழாமலும், தன்னிறைவு பெற்ற ஒரு விவசாயக் குடும்பமாய் இருக்க வேண்டும் என்ற லட்சியத்தில் முதல் வருடத்திலேயே ஆசிரமம் நல்ல அளவு வெற்றி பெற்றிருக்கிறது.

"ஆரம்பத்திலிருந்தே ஆசிரமத்திற்கு வேண்டிய மாவு பூராவும் இங் கேயேதான் அரைக்கப்பட்டு வந்திருக்கிறது. இங்கே சர்க்கரை உபயோகிக் கப் படுவதே கிடையாது.இப்போது சென்ற மூன்று மாதங்களாக ஆசிரமத்தில் முற்றிலும் ஆசிரமவாசிகளாலேயே தயாரிக்கப்பட்ட அரிசியே உபயோகிக்கப் பட்டு வருகிறது.

"தன்னிறைவு பெற்ற விவசாயக் குடும்பத்தைப் போல் வசிக்க வேண்டும் என்பதுடன், நூற்றல் முதலிய வேலேகளில் ஈடுபடுவதன் மூலம் கிராமங்களில் ஹரிஜன சேவை செய்ய வேண்டும் என்றும் ஆரம்பத்தில் உத்தேசிக்கப்பட்டது. ஆனுல், இந்த விஷயத்தில் முற்றிலும் ஏமாற்றமே ஏற்பட்டது. இதற்கு ஆசிரமம் அமைப்பதற்குச் சரியான இடம் ஒன்றும் இது வரையில் கிடைக்கவில்லே. இப்போது ஆசிரமம் இருக்கும் இடத்திலுள்ள குக்கிராமங்களில் ஒன்றிரண்டு வீடுகள் தான் இருக்கின்றன. இந்தக் குக்கிராமங் களிடையே உள்ள தூரம் அரை மைலிலிருந்து ஒரு மைல்வரை இருக்கிறது.

"சாப்பாடு விஷயத்தில் நான் பெரும் தவறுகள் செய்துவிட்டேன் என்று இப்போது எனக்குத் தெரிகிறது. ஆசிரமத்தின் அபிவிருத்தி பெரிதும் தடைப்பட்டதற்கு இதுவும் ஒரு காரணமாகும். வறுமையில் வாழ வேண்டும் என்ற அளவுக்கு மீறிய உற்சாகத்தில், சாப்பாட்டின் தரம் மிகக் குறைவானதாய் இருந்தது. உதாரணமாக, ஆசிரமத்தில் காய்கறிகள்கூட ஒழுங்காக உபயோகிக்கப்படவில்லே. எப்போதாவதுதான் காய்கறிகள் சமைக்கப்பட்டன. ஏனெனில், ஆசிரமத்தில் காய்கறிகள் பயிரிட ஆரம்பிக்கப் படவில்லே. இரண்டு மாதங்களுக்குப் பிறகு இத்தவறு சீர்ப்படுத்தப்பட்டது. பால், நெய், தயிர் போன்றவைகள் சுக அனுபவப் பொருள்களாகக் கருதப் பட்டன. இவை ஏழைகளுக்குக் கட்டுப்படியாகாது என்பதற்காக உபயோகிப்ப தில்லே. ஆனுல், ஒரு வாரத்திற்கு முன்பு ஒரு பசு வாங்கினேம். இப்போது பால்,

தயிர் முதலியவைகளை உபயோகிக்கிறோம். ஆனால், இதுவரையில் நெய்க்குப் பதிலாகத் தேங்காய் எண்ணெயையே உபயோகித்துக் கொண்டிருந்தோம். இந்த ஜில்லாவில் அரிசிதான் முக்கிய உணவுப் பொருள். இதனாலெல்லாம் ஆசிரமவாசிகளின் ஆரோக்கியம் பெரிதும் பாதிக்கப்பட்டுவிட்டது. 12 பேர்களுடன் ஆசிரமம் ஆரம்பிக்கப்பட்டது; இப்போது நாங்கள் ஐந்து பேர்கள் தான் இருக்கிறோம். மேலும் மலேரியா ஜுரத்தினாலும் ஆசிரமவாசிகள் பாதிக்கப்பட்டுள்ளனர். இந்தத் தாலுகாவில் காடுகள் அதிகம். ஆகவே, இதில் பெரும் பகுதியை மலேரியாவின் பிறப்பிடம் என்றே சொல்லலாம்.

''உடலுழைப்பின் மூலம் எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்ற லட்சியத்தை ஆசிரமம் இதுவரையில் பின்பற்றி வந்திருக்கிறது. இந்த லட்சியம் புத்திசாலித்தனத்துடன் பின்பற்றப்பட்டால், கொள்கைகள் விஷயத்தில் எங்களுக்கு உறுதி ஏற்படும். ஆனால், இதன் காரணமாக எங்கள் சக ஊழியர்களில் சிலர் ஆசிரமத்திற்கு வராமலிருந்துவிட்டார்கள். உடலால் உழைத்துச் சாப்பிட வேண்டும் என்ற லட்சியத்தைக் கைவிடாமல் மேலே குறிப்பிட்ட இந்த ஊழியர்களை எப்படி ஆசிரமத்திற்குள் கொண்டு வருவது என்பதே பிரச்னையாகும்.

''சமூக சேவைக்குப் பதிலாக, உணவுக்காக உழைப்பதென்ற டால்ஸ்டாயின் லட்சியத்தை நாங்கள் வற்புறுத்தியதால்தான் ஆசிரமவாசிகளிடமிருந்து கிடைத்திருக்கக்கூடிய பல சேவைகள் சமூகத்திற்குக் கிடைக்காமற் போய்விட்டது என்று நண்பர்கள், அனுதாபிகள் மட்டுமின்றி, குறை கூறுபவர்களும் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். 'சமூக சேவை' செய்வதற்காக உணவுக்கான உழைப்பு என்ற கொள்கையை எப்படி, எப்போது விட்டுக்கொடுக்கலாம்? 'இருப்பது', 'செய்வது' இரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசம் பெரும்பாலும் மேலெழுந்தவாரியானதல்லவா? ஆனால், உண்மையில் 'இருப்பது' என்பது 'செய்வதே' யாகும். உணவுக்கான உழைப்பு அளவுக்கு மீறி செய்யப்படுகிறது என்று எப்போது சொல்ல முடியும்? அல்லது அது பெயரளவில்தான் பின்பற்றப்படுகிறதேயொழிய, அதன் உண்மையான நோக்கம் பின்பற்றப்படவில்லை என்று எப்போது சொல்ல முடியும்?

''எட்டு மாதங்களில் ஆசிரமத்தில் வசித்த எங்கள் ஏழு பேர்களின் சராசரி செலவு விவரம் பின்வருமாறு :

| | | | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| சாப்பாடு | ... | ... | 171—8—9 |
| ஆடைகள் | ... | ... | 16—9—9 |
| விளக்கு | ... | ... | 8-10—0 |
| தபால் | ... | ... | 3—6—9 |
| சில்லறைச் செலவு | ... | ... | 6—3—5 |
| மருந்து | ... | ... | 7-12—3 |
| பாத்திரங்கள் | ... | ... | 8—8—9 |
| பத்திரிகைகள் (ஹரிஜன்) | ... | ... | 3-14—0 |
| பிரயாணம் | ... | ... | 10—2—3 |
| | | மொத்தம் ரூ. | 231-11-11 |

சாப்பாட்டுக்காகத் தலா மாதம் மூன்று ரூபாய்களும், ஆடைகள் உள்பட மற்றச் செலவு தலா மாதம் ஒரு ரூபாயும் ஆகியிருப்பதை இதிலிருந்து காணலாம்."

நன்கு கல்வி பயின்றவரும், தன்னலமற்றவருமான ஓர் ஊழியர், ஸ்ரீ கிஷோரிலால் மஷ்ருவாலாவுக்கு எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி இது. உண்மையான ஓர் ஊழியரின் அவதிகளை இது எடுத்துக் காட்டுகிறது. சேவை வாழ்க்கையை நடத்த முயற்சிக்கும் ஒவ்வொருவருக்குமே இது உதவியாக இருக்கக்கூடும்.

முயற்சி உன்னதமானதே. இதை எழுதியவரும், அவருடைய சக ஊழியர்களும், தம்மிடம் ஏதாவது தவறுகள் இருப்பதாகக் கண்டால் அவற்றை ஒப்புக்கொண்டு, திருத்திக்கொள்ளத் தயங்குவதில்லை.

அவருடைய கேள்விகளுக்கு ஸ்ரீ கிஷோரிலால் எப்படி பதிலளித்தார் என்று எனக்குத் தெரியாது. அந்தக் கடிதத்தை எழுதியவருக்கேற்பட்டது போன்ற சங்கடங்கள் மற்றவர்களுக்கும் ஏற்படலாம். ஆகையால், இதில் அக்கறையுள்ளவர்களுக்கு உதவியாக இருப்பதற்காக அவற்றிற்கு நான் பதிலளிக்க வேண்டும்.

உணவுக்கான உடல் உழைப்பு என்ற கொள்கையில் ஏதோ குழப்பம் இருப்பது போல் தோன்றுகிறது. அது சமூக சேவைக்கு முரணானதல்ல. உணவுக்கான உடல் உழைப்பு புத்திசாலித்தனத்துடன் செய்யப்பட்டால், அதுவே மிகவும் உயர்தரமான சமூக சேவையாகும். ஒரு மனிதன் தன்னுடைய சொந்த உழைப்பின் மூலம் நாட்டின் பிரயோசனமான செல்வத்தைப் பெருக்குவதைவிடச் சிறந்தது வேறு என்ன இருக்க முடியும்? 'இருப்பது' என்பது 'செய்வதே' யாகும்.

உழைப்பு சமூக சேவையாக இருக்க வேண்டுமானால், அதில் அந்த நோக்கம் இருக்க வேண்டும் என்பதற்காகவே புத்திசாலித்தனமான உழைப்பு என்று கூறப்பட்டிருக்கிறது. இல்லாவிட்டால், எல்லாத் தொழிலாளர்களுமே சமூக சேவை செய்வதாகச் சொல்லிவிட முடியும். ஒரு வழியில் அவர்களும் சமூக சேவைதான் செய்கிறார்கள். ஆயினும், இங்கே குறிப்பிடுவது அதைவிட விரிவானது. எல்லோருடைய நன்மைக்காகவும் உழைப்பவர், சமூகத்திற்குச் சேவை செய்தவராகிறார்; அவருக்கு உரிய ஊதியத்தைக் கொடுக்க வேண்டும். ஆகையால், அத்தகைய உணவுக்கான உழைப்பு சமூக சேவையிலிருந்து மாறுபட்டதல்ல. பெரும்பாலான மனிதர்கள் தமக்காகவோ, தம் குடும்பத்திற்காகவோ செய்வதை, ஒரு சமூக ஊழியர் பொது நன்மைக்காகச் செய்கிறார். தங்களுடைய அன்றாட உணவுக்காக உழைப்பதைத் தவிர வேறு எந்தச் சேவையும் செய்வதற்கு இந்த ஏழு பேர்களுக்கும் அவகாசமே கிடைப்பதில்லை. அவர்கள் தமது வேலைகளைத் திறமையுடன் செய்தால் இப்படி இருக்க வேண்டியதில்லை. அவர்கள் உண்மையாகத் திறமையான வேலைக்காரர்களல்ல. வயல்களில் வேலை செய்யும் மற்றத் தொழிலாளர்களுக்கு இவர்கள் இணையாகமாட்டார்கள். மற்ற வேலைகள்

செய்வதிலும் இவர்கள் கற்றுக்குட்டிகளே. தன்னிடமுள்ள கருவிகளைப் புத்திசாலித்தனமாக உபயோகித்தால், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் தன்னுடைய உற்பத்தியை இரண்டு மடங்காக்க முடியும் என்பது நூற்பவர் ஒவ்வொருவருக்கும் இப்போது தெரியும். அதாவது, கைராட்டினத்தின் மூலம் வருமானத்தை இரட்டிப்பதாகும். பெரும்பாலானவற்றிற்கு இது பொருந்தும். விவசாயத்தில் அதே கருவிகளை வைத்துக் கொண்டு அபிவிருத்தி செய்வதற்கான வாய்ப்பு நிறைய இருக்கிறது; இயற்கை மட்டும் குறுக்கிடாமலிருந்தால், ஒரு விவசாயி புத்திசாலித்தனமாக வேலை செய்தால், முன்பு வேலை செய்த அதே நேரத்தில் தன் வருமானத்தை நான்கு மடங்கு அதிகமாக்கிக் கொள்ள முடியும். அதாவது, அதே வருமானத்திற்கு இப்போது வேலை செய்வதைப் போல் அவ்வளவு வேலை செய்ய வேண்டியிராது. ஆகையால், இந்த ஊழியர்கள் திறமை பெற்றவுடன் இப்போதிருப்பதைவிட இன்னும் குறைந்த நேரத்தில் தம் உணவைச் சம்பாதித்துவிட முடியும். ஹரிஜன் வேலைக்கோ, மற்ற சேவைகளுக்கோ அவர்களுக்கு அவகாசமும் கிடைக்கும். பலவிதமான செலவுகள் உள்ள சம்சாரிகளுக்குப் பிரச்னை சிக்கலாக இருக்கும். ஆனால், மாதம் நான்கு ரூபாய்க்குள் தன் தேவைகளை அடக்கிக் கொண்டுவிடும் ஓர் ஊழியருக்கு, அந்த நான்கு ரூபாய்க்கு மேல் வருமானம் அளிக்கக்கூடிய வேலையைச் செய்வதற்கு வேண்டிய அவகாசம் கிடைக்கும்.

ஒருவருடைய நான்கு ரூபாய் மாத வருமானத்தில் மூன்று ரூபாயை உணவுக்குச் செலவிட்டால், அது அவருடைய உணவுக்குப் போதுமானதாயிருக்குமா? பம்பாயில் ஐம்பது ரூபாய் போதும் என்று டாக்டர் திலக் கூறுகிறார். இந்தக் கணக்கு சரியானதுதான் என்றால், கிராம வாழ்க்கைக்கு மூன்று ரூபாய் போதுமானதே. டாக்டர் திலக்கின் கணக்குடன் என்னுடைய அனுபவத்தையும் சேர்த்துப் பார்க்கும்போது ஒரு சங்கடமும் தெரியவில்லை. கிராமவாசிகளுக்குப் பால் பவுடர் தேவையில்லை என்று டாக்டர் திலக் கருதுகிறார். ஆனால், அவர் கூறுவதே போல் பால் இல்லாமல் முடியாது. ஆசிரமவாசிகள், தங்களுடைய உணவுப் பொருள்களிலிருந்து பாலை நீக்கியது தவறு. கோடிக்கணக்கானவர்களுக்கு ஒரு துளிப் பால்கூடக் கிடைப்பதில்லை என்பது உண்மைதான். ஆனால், சேவை செய்வதற்காக நாம் உயிர் வாழ்வதற்கு நமக்கு அத்தியாவசியமான இன்னும் பல வசதிகளும் அவர்களுக்குக் கிடைப்பதில்லை. ஆகையால், ஒவ்வொரு கிராமவாசியும் தனக்காக உற்பத்தி செய்யும் அத்தியாவசியத் தேவைகளுடன் நாம் திருப்தியடைய வேண்டும். கோதுமை, அரிசி, சோளம் போன்றவை, பச்சைக் கீரை, பால், அந்தந்தக் காலங்களில் கிராமங்களில் கிடைக்கும் மாம்பழம் போன்ற பழங்கள் முதலியவை ஆரோக்கியமான வாழ்வுக்கு அத்தியாவசியமானவைகளாகும். பச்சை இலைகளுக்குள் மிகச் சிறந்தது வேப்பிலை. இந்தியாவில் இது

எங்கும் கிடைக்கும். இன்னும் நமக்குத் தெரியாத புல் வகைகள் எவ்வளவோ இருக்கின்றன. எல்லா இடங்களிலும் கிடைக்கக்கூடிய புளியையும் அலட்சியம் செய்யக்கூடாது. ஆனால், புளியைப் பற்றி ஏதோ ஒரு தப்பபிப்பிராயம் இருக்கிறது. இதன் காரணம் புரியவில்லை. எலுமிச்சம்பழம் விலை அதிகமாயிருக்கிறது. அதற்குப் பதிலாகப் புளியை நான் நிறைய உபயோகித்து வந்திருக்கிறேன். அதனால் எனக்கு நன்மையே ஏற்பட்டிருக்கிறது. உணவு வகைச் சீர்திருத்த ஆராய்ச்சிக்கு எல்லையே கிடையாது. உலகத்தினருக்கும், முக்கியமாகப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான இந்திய மக்களுக்கும் இதனால் எவ்வளவோ நன்மை உண்டு. இது ஆரோக்கியம், செல்வம் இரண்டையும் அளிக்கிறது. இவை இரண்டும் ஒன்றுதான் என்று ரஸ்கின் சொல்லுகிறார். பரிசுத்தமான வாழ்க்கையை நடத்துவதே மிகப் பெரிய சமூக சேவை என்று அந்தச் சிறிய ஆசிரமத்தின் வாசிகள் நினைப்பது சரியானதுதான். இதனால், அவர்களைச் சுற்றியுள்ளவர்களும் அந்த உதாரணத்தைப் பின்பற்றுவார்கள். நாளடைவில் இந்தியா பூராவிலும், பின்னர் உலகம் பூராவிலுமே இது பரவக்கூடும். இந்தச் சேவையில் ஒருவருடைய சுபிட்சம் எல்லோருடைய சுபிட்சமுமாகும்.

—'ஹரிஜன்'—1—6—1935

['ஒரு தொழிலாளியின் போராட்டம்' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

# 8

# புத்திபூர்வமான உழைப்பும், உடலுழைப்பும்

கேள்வி: ஒரு ரவீந்திரநாதரோ, ஒரு ராமனோ* உடலுழைப்பின் மூலம்தான் தம் உணவைச் சம்பாதிக்க வேண்டும் என்று ஏன் வற்புறுத்த வேண்டும்? அது வெறும் வியர்த்தமல்லவா? புத்திபூர்வமாக உழைப்பவர்களும், உடலுழைப்புச் செய்பவர்களும் ஒன்றுதான் என்று நினைத்தாலென்ன? இருவரும் உபயோகமான சமூக சேவையைத் தானே செய்கிறார்கள்?

பதில்: புத்திபூர்வமான உழைப்பு முக்கியமானதே. வாழ்க்கையின் நியதியில் அதற்கும் ஓர் இடமுண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நான் வற்புறுத்துவது உடலுழைப்பின்

* இதில் குறிப்பிடப்பட்டிருப்பது கவி ரவீந்திரநாத டாகுரையும் தலைசிறந்த விஞ்ஞானியான ஸர் சி. வி. ராமனையுமாகும்.

அவசியத்தைத்தான். யாருக்குமே அதிலிருந்து விலக்களிக்கக் கூடாது என்று நான் சொல்லுகிறேன். இதனால் புத்திபூர்வமான உழைப்பின் தரம்கூட உயரும். முன் காலத்தில், பிராம்மணர்கள் புத்திபூர்வமான உழைப்புடன், உடலுழைப்பும் செய்தார்கள். அவர்கள் அப்படிச் செய்யவில்லையென்றாலும், இன்றைக்கு உடலுழைப்பு அவசியம் என்பது ருசுப்பிக்கப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக டால்ஸ்டாயின் வாழ்க்கையைக் குறிப்பிட விரும்புகிறேன். ரஷிய விவசாயி பாண்டாரெப் என்பவர் முதலில் வகுத்த உடலை உழைத்துச் சாப்பிடுவது என்ற கொள்கையை டால்ஸ்டாய் எப்படிப் பிரபலமாக்கினார் என்பதைக் கவனிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 23—2—1947

['கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 9

# ஆசிரம வாழ்க்கையில் உழைத்துச் சாப்பிடுவது

ஆணாயிருந்தாலும், பெண்ணாயிருந்தாலும் சாப்பாட்டுக்கு வேலை செய்ய வேண்டும் என்று ஆசிரமத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. டால்ஸ்டாயின் கட்டுரைகளில் ஒன்றை வாசிக்கும் போது இது எனக்குப் புலனாயிற்று. பாண்டாரெப் என்ற ரஷிய எழுத்தாளரைப் பற்றி டால்ஸ்டாய் குறிப்பிட்டிருக்கிறார். சோற்றுக்கான உழைப்பின் அத்தியாவசியத்தை அவர் கண்டு பிடித்தது இந்த யுகத்தின் குறிப்பிடத்தக்க கண்டுபிடிப்புகளில் ஒன்றாகும் என்று டால்ஸ்டாய் கூறுகிறார். தேக ஆரோக்கியமுள்ள ஒவ்வொரு நபரும், தன் உணவைச் சம்பாதிப்பதற்கு வேண்டிய அளவு வேலை செய்ய வேண்டும்; அவருடைய புத்தி சாதுரியங்கள் ஜீவனோபாயத்திற்காகவோ, செல்வத்தைக் குவிப்பதற்காகவோ உபயோகிக்கப்படக்கூடாது. மனித வர்க்கத்திற்குச் சேவை செய்வதற்கே அவற்றை உபயோகிக்க வேண்டும் என்பதே அந்தக் கொள்கையாகும். அந்தக் கொள்கை எல்லா இடங்களிலும் பின்பற்றப்பட்டால் எல்லா மனிதர்களும் சரி சமமானவர்களாக இருப்பார்கள். யாரும் பட்டினி கிடக்கமாட்டார்கள். உலகம் எவ்வளவோ பாவங்களிலிருந்து காப்பாற்றப்படும்.

இந்த அருமையான விதியை உலகம் பூராவிலும் யாவரும் பின்பற்றாமல் இருக்கலாம். ஆனால், அதைப் புரிந்துகொள்ளாமல்

லட்சக்கணக்கானவர்கள் அதைப் பின்பற்றுகிருர்கள். ஆனல், அவர்களுடைய மனம் நேர் எதிர்த் திசையில் வேலை செய்கிறது. ஆகையால், அவர்களுக்கும் மகிழ்ச்சி இல்லை. அவர்களுடைய வேலையும் இருக்கவேண்டிய அளவுக்குப் பயனுள்ளதாயில்லை. இந்த விதியைப் புரிந்துகொண்டு பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு இந்த நிலைமை ஒரு தூண்டுகோலா யிருக்கிறது. தாமாகவே இதற்குக் கீழ்ப்படிந்து நடந்தால் தேகாரோக்கியம் ஏற்படு கிறது; முழு அமைதியும் கிடைக்கிறது. அத்துடன் சேவை செய்வதற்கான சக்தியும் வளர்ச்சி பெறுகிறது.

டால்ஸ்டாய் எழுதியிருந்தது என் மனத்தில் ஆழப் பதிந்தது. தென்னப்பிரிக்காவிலேயே என்னலியன்ற வரையில் இந்த விதியைப் பின்பற்ற முயற்சி செய்தேன். ஆசிரமம் ஸ்தாபிக்கப் பட்டதிலிருந்து உழைத்துச் சாப்பிடுவது என்பது ஆசிரமத்தின் தனிச் சிறப்பு பெற்ற ஓர் அம்சமாக இருந்திருக்கிறது என்று சொல்லலாம்.

கீதையின் மூன்ருவது அத்தியாயத்திலும் இந்தக் கொள்கை தான் விதிக்கப்பட்டிருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராய மாகும். அதில் குறிப்பிட்டுள்ள யக்ஞம் (வேள்வி) என்ற வார்த்தைக்குப் பொருள், உடலுழைப்புதான் என்று சொல்லும் அளவுக்கு நான் போகவில்லை. ஆனல், 'வேள்வியின் மூலம் மழை பெய்கிறது' என்று கீதை, (*14*வது சுலோகம்) கூறுகிறது. அது உடலுழைப்பின் அவசியத்தைக் குறிப்பிடுகிறது என்றே நினைக் கிறேன். 'வேள்வியில் மிஞ்சியது' தான் (*13*வது சுலோகம்) நாம் உடலுழைப்பின் மூலம் சம்பாதித்த உணவாகும். ஒருவர் தன் னுடைய உணவுக்கு வேண்டிய அளவு உழைப்பது யக்ஞம் என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. உயிர் வாழ்வதற்கு வேண்டிய தற்கு மேல் அதிகமாகச் சாப்பிடுபவன் கள்வன். நம்மில் பெரும் பாலோர் அந்த அளவுக்கு உழைப்பதில்லை. தன்னுடைய தேவைக்குமேல் அதிகம் பெற யாருக்கும் உரிமை இல்லை என்றே நான் நம்புகிறேன். வேலைசெய்யும் ஒவ்வொருவரும், வாழ்க்கையை நடத்துவதற்கு அவசியமான ஊதியம் பெற உரிமை பெற்றிருக் கிருர்.

இதனல் வேலை பல பிரிவுகளாகப் பிரிக்கப்படக்கூடாது என்று அர்த்தமில்லை. மனிதனின் வாழ்க்கைக்குத் தேவையான எதையும் உடலுழைப்பின் மூலம்தான் உற்பத்தி செய்யமுடியும். ஆகையால், எந்த உழைப்புமே சோற்றுக்கான உழைப்பேயாகும். ஆனல், நம்மில் பலர் அத்தகைய உழைப்பைச் செய்யாததால், தம்முடைய ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுவதற் காகத் தேகப் பயிற்சி செய்ய வேண்டியிருக்கிறது. தன்னுடைய வயலில் அன்ருடம் வேலை செய்யும் விவசாயிக்கு எந்தவிதமான தேகப் பயிற்சியும் தேவையில்லை. அவன் இதர ஆரோக்கிய விதி களையும் பின்பற்றினல், என்றுமே அவனுக்கு நோயே வராது.

அவ்வப்போதைய தேவைக்குமேல் அதிகமாகக் கடவுள் எப்போதுமே சிருஷ்டிப்பதில்லை. ஆகவே, ஒருவர் தம் தேவைக்கு அதிகமாக எடுத்துக்கொண்டுவிட்டால், அதனால் அடுத்தவர் கஷ்டப்பட வேண்டியிருக்கும். நம்மில் பலர் தேவைக்கு அதிகமாகப் பறித்துக்கொள்ளுவதால்தான் உலகில் பலர் பட்டினி கிடக்க நேரிடுகிறது. இயற்கை அளித்த பரிசுகளை நம் மிஷ்டப்படி பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனால், இயற்கையின் பேரேட்டில் வரவும் செலவும் சமமா யிருக்கும். மீதம் என்று இதில் எதிலும் எதுவுமிராது.

விவசாயத்தில் யந்திரங்களைப் புகுத்தியோ, செயற்கை உரங்களை உபயோகித்தோ விளைச்சலை அதிகப்படுத்தினாலும், அதே மாதிரிக் கைத்தொழில் உற்பத்திகளைப் பெருக்கினாலும் கூட, இந்த விதி பாதிக்கப்படவில்லை; இயற்கையின் சக்தி மாற்றப்படுகிறது என்பதுதான் இதன் பொருள். நாம் என்ன தான் முயற்சி செய்தாலும், மிச்சம் பூஜ்யமாகவேதான் இருக்கும்.

அது எப்படியிருந்தபோதிலும், ஆசிரமத்தில் உழைத்தே சாப்பிடுவது என்ற கொள்கை கண்டிப்பாகப் பின்பற்றப்படு வதில் ஆச்சரியமில்லை. சாதாரண கவனத்தின் மூலமே இதைச் சுலபமாக நிறைவேற்றிவிட முடியும். ஒரு நாளில் சில மணிநேரம் வேலை செய்வதைத் தவிர வேறெதுவும் செய்வதற்கில்லை. ஆகையால், வேலை செய்துதான் ஆகவேண்டும். ஒருவர் சோம் பேறியா யிருக்கலாம், திறமையற்றவரா யிருக்கலாம், கவனமில் லாதவராக இருக்கலாம், ஆயினும், எப்படியும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அவர் வேலை செய்துகொண்டுதான் இருக்கிறார். சில வேலைகளில் உடனடியான பலனைக் காண முடியும். ஆகையால், வேலை செய்பவர் அதிக நேரத்தை வீணடிக்க முடியாது. உடலுழைப்பு முக்கியமான அம்சமாயிருக்கும் ஒரு ஸ்தாபனத்தில் பணியாட்கள் அதிகம் இருக்கமாட்டார்கள். நீர் எடுப்பது, விறகு பிளப்பது, விளக்குகளைச் சுத்தம் செய்து எண்ணெய் ஊற்றுவது, சுகாதார வேலைகள் செய்வது, ரோடு களையும் வீடுகளையும் பெருக்கிச் சுத்தம் செய்வது, தன் துணி மணிகளைத் தானே சுத்தம் செய்துகொள்ளுவது, சமைப்பது முதலிய வேலைகளையெல்லாம் தவறாமல் செய்தாக வேண்டும்.

இதைத் தவிர விவசாயம், பால் பண்ணை, நெய்தல், தச்சு வேலை, தோல் பதனிடுதல் போன்ற வேலைகளையும் ஆசிரம வாசிகளே கவனிக்க வேண்டும். இந்த வேலைகளையும் அவர்கள் செய்கிறார்கள்.

உழைத்துத்தான் சாப்பிடுவது என்பதற்கு இந்த நட வடிக்கைகளெல்லாம் போதுமானவை என்று கருதப்படலாம். ஆனால், மற்றவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்பது யக்ஞத்தின் மற்றோர் அத்தியாவசியமான அம்சமாகும். இதில் ஆசிரமத்தில் குறைபாடு இருக்கும் என்றே நினைக்க வேண்டும்.

சேவை செய்வதற்காக வாழ்வது என்பதே ஆசிரமத்தின் லட்சியம். அத்தகைய ஒரு ஸ்தாபனத்தில் சோம்பேறித்தனத் திற்கோ, கடமையைச் செய்யாமல் தப்புவதற்கோ இடமில்லை. எல்லாம் சரியான நல்லெண்ணத்துடன் செய்யப்பட வேண்டும். அப்படி இருந்திருந்தால் ஆசிரம வேலைகள் இன்னும் அதிக பல னுள்ளவைகளாக இருந்திருக்கும். ஆனால், அத்தகைய திருப்தி கரமான நிலைமை இன்னும் ஏற்படவில்லை. ஆகையால், ஆசிர மத்தில் நடக்கும் ஒவ்வொரு காரியமும் யக்ஞத்தைப் போன்றது தான் என்றாலும், கடவுளின் அவதாரமான தரித்திர நாராயணர் களுக்காக எல்லோரும் கட்டாயமாக ஒரு மணி நேரமாவது நூற்க வேண்டும்.

உடலுழைப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ள ஆசிரமம் போன்ற ஒரு ஸ்தாபனத்தில் அறிவு வளர்ச்சிக்கு வாய்ப் பில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால், என்னுடைய அனுபவம் இதற்கு நேர்மாறாக இருக்கிறது. ஆசிரமத்திற்கு வந்துள்ள ஒவ் வொருவரும் அறிவு வளர்ச்சியும் பெற்றிருக்கிறார்கள் ; எனக்குத் தெரிந்து, ஆசிரமத்தில் வந்திருந்தவர்களில் அறிவு வளர்ச்சித் தடைப்பட்டவர்கள் யாரும் இல்லை.

பிரபஞ்சத்தைப் பற்றிய விஷயங்கள் தெரிந்திருப்பதே அறிவு வளர்ச்சி என்று கருதப்படுகிறது. இத்தகைய அறிவு, ஆசிரமத்தில் கஷ்டப்பட்டுப் போதிக்கப்படுவதில்லை என்பதைத் தாராளமாக ஒப்புக்கொள்ளுகிறேன். தராதரம் அறிந்து விஷயங் களைப் புரிந்துகொள்ளுவதுதான் அறிவு வளர்ச்சி என்றால், ஆசிரமத்தில் அதற்கு வேண்டிய இடம் இருக்கிறது. வெறும் கூலிக்காக மட்டும் உடலுழைப்புச் செய்யப்பட்டால், தொழிலாளி அக்கறையற்று, மந்தமாய்விடக்கூடும் என்பது சாத்தியமே. காரியங்கள் எப்படி, எதற்காகச் செய்யப்படுகின்றன என்று அவருக்கு யாரும் சொல்லுவதில்லை. அதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் அவருக்குமில்லை. அவர் தன் வேலையில் அக்கறை எடுத்துக்கொள்ளுவதுமில்லை. ஆனால், ஆசிரமத்தில் அப்படியில்லை. சுகாதார வேலைகள் உள்பட யாவும் புத்திசாலித் தனத்துடன் செய்யப்பட வேண்டும்; உற்சாகத்துடனும், கடவுள் பக்தியுடனும் செய்யப்பட வேண்டும். ஆசிரமத்தின் எல்லா நட வடிக்கைகளிலுமே அறிவு வளர்ச்சிக்கு இடமிருக்கிறது.ஒவ்வொரு வரும் தன் வேலையைப் பற்றிய எல்லா விவரங்களையும் தெரிந்து கொள்ள ஊக்கமளிக்கப்படுகிறார். அப்படித் தெரிந்துகொள்ளாத வர்கள் அதற்குச் சமாதானம் சொல்லியாகவேண்டும். ஆசிரமத்தி லுள்ள ஒவ்வொருவருமே பாட்டாளிதான். ஆனால், யாருமே கூலிக்கு வேலை செய்யும் அடிமையல்ல.

புத்தகங்களின் மூலம்தான் அறிவு வளர்ச்சி பெற முடியும் என்று நினைப்பது மோசமான மூடநம்பிக்கையாகும். இந்தத் தவறை நாம் கைவிட வேண்டும். படிப்பது முக்கியம்தான் ; ஆனால், அதற்கும் ஓரளவுதான் இடமுண்டு. உடலுழைப்பைப்

புறக்கணித்து புத்தக அறிவைப் பெருக்கிக்கொண்டால், அதை நாம் எதிர்த்தே ஆகவேண்டும். நம்முடைய நேரத்தில் பெரும் பகுதி உடலுழைப்புக்காகச் செலவிடப்பட வேண்டும்; கொஞ்ச நேரம்தான் படிப்பில் செலவிடப்பட வேண்டும். இன்று இந்தியாவில் பணக்காரர்களும், உயர் வகுப்பினர் எனப்படுவோரும் உடலுழைப்பைக் கேவலமாக நினைப்பதால், உழைப்பின் கௌரவத்தை வற்புறுத்துவது மிக அவசியமாகும். உண்மையான அறிவு வளர்ச்சி பெறுவதற்குக்கூட உபயோகமான உடலுழைப்பு ஏதாவது செய்யவேண்டும்.

சாத்தியமானல், ஆசிரமத்திலுள்ள ஊழியர்கள் படிப்பதற்கு இன்னும் கொஞ்சம் அதிக நேரம் கொடுப்பது விரும்பத்தக்கதாகும். எழுதப்படிக்கத் தெரியாத ஆசிரமவாசிகளுக்கு உதவி செய்வதற்கு ஓர் ஆசிரியர் இருப்பதும் நல்லது. ஆனல், ஆசிரமத்தின் இன்றைய நடவடிக்கைகளைக் குறைத்துக்கொண்டு படிப்பது போன்ற வேலைகளுக்கு அவகாசம் அளிப்பது சாத்தியமில்லை என்றே தோன்றுகிறது. சம்பளம் கொடுத்து ஆசிரியர்களை அமர்த்தவும் முடியாது. சாதாரண பள்ளிக்கூட பாடங்களைச் சொல்லிக் கொடுக்கக்கூடியவர்கள் மேற்கொண்டும் அதிகமாக ஆசிரமத்திற்கு வரும்வரையில், உள்ளதைக்கொண்டுதான் எப்படியாவது சமாளிக்க வேண்டும். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் கல்வி பயின்றவர்களும் ஆசிரமத்தில் இருக்கிருர்கள். ஆனல், படிப்புக்கும், உடலுழைப்புக்கும் உள்ள தொடர்பை அவர்கள் இன்னும் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. எல்லோருக்குமே இது ஒரு புதிய பரீட்சை. ஆயினும், அனுபவத்திலிருந்துதான் விஷயங்களைத் தெரிந்துகொள்ளுவோம். நம்மில் சாதாரண கல்வி பெற்றவர்கள் நாளடைவில் அதை மற்றவர்களுக்கும் சொல்லிக் கொடுக்க ஏதாவது வழி வகைகள் கண்டு பிடித்துவிடுவோம்.

—'ஹரிஜன்' - 14—11—1948, 28—11—1948

[வி. ஜி டி. யால் குஜராத்தியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட 'ஆசிரம நடைமுறைகள்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 10

# யக்ஞம் அல்லது தியாகம்

## (1)

யக்ஞம் என்ற சொல்லை நாம் அடிக்கடி உபயோகிக்கிறோம். ராட்டினத்தில் நூற்பதை ஓர் அன்ருட மகாயக்ஞமாகச் செய்திருக்கிறோம். ஆகையால், யக்ஞம் என்ற சொல்லின் பல்வேறு

உட்பொருள்களையும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசிய மாகும்.

இகத்திலோ, பரத்திலோ பிரதிபலன் எதையும் எதிர்பாரா மல் மற்றவர்களுடைய நன்மைக்காகச் செய்யப்படும் ஒரு காரி யத்திற்கு யக்ஞம் என்று பெயர். 'காரியம்' என்ற வார்த்தையை அதனுடைய மிகவும் விரிவான பொருளில் எடுத்துக்கொள்ள வேண்டும். செய்கையோடு, மனத்தில் நினைப்பது, வாயால் சொல் வது இரண்டையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். 'மற்றவர்கள்' என்ற சொல், மனிதர்களை மட்டும் குறிப்பிடவில்லை; உயிரினம் யாவுமே அதில் சேர்ந்தது. ஆகையால், அகிம்சைக் கண்ணோட் டத்துடன் பார்க்கும்போது, மனித வர்க்கத்திற்கு நன்மை செய்யும் நோக்கத்துடன் கீழ் உயிர்ப்பிராணிகளைப் பலி கொடுத் தாலும் அது யக்ஞமாகாது. மிருக பலி கொடுக்கலாம் என்று வேதங்களில் கூறப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறதே என்று கவலைப்பட வேண்டியதில்லை. சத்தியம், அகிம்சை ஆகியவற் றின் அடிப்படை சோதனைகளை அது திருப்தி செய்யவில்லை என்பது மாத்திரமே நமக்குப் போதும். வேதப் படிப்பு எனக்கு இல்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், இந்த விஷயம் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கு வேதத்தில் பரிச்சயமில்லையே என்பதற்காக நான் கவலைப்படவில்லை. ஏனெனில், வேத கால சமூகத்தில் மிருக பலி கொடுக்கும் பழக்கம் இருந்ததாக ருசுப் பிக்கப்பட்டால்கூட அகிம்சையைப் பின்பற்றுகிறவர்களுக்கு அது ஒரு வழிகாட்டியாக இருக்க முடியாது.

ஓர் ஆரம்பமான தியாகம் என்பது, விரிவான பிரதேசத்தில் மிகவும் அதிகப்படியான பேர்களுக்கு அதிகமான நன்மை செய்வ தாக இருக்க வேண்டும்; அதிகக் கஷ்டமில்லாமல் பெருவாரி யான ஆண்களும், பெண்களும் செய்யக்கூடியதாகவும் இருக்க வேண்டும். ஆகையால், ஓர் உயர்ந்த நலனுக்காகக்கூட, ஒருவ ருக்குத் தீங்கு செய்வதோ, அல்லது தீங்கு செய்யவேண்டு மென்று நினைப்பதோ யக்ஞமாகாது; நிச்சயம் அது மகாயக்ஞ மாக ஆகாது. யக்ஞம் என்ற வியாக்கியானத்தின் கீழ் வராத எதுவும் பந்தத்தைத்தான் வளர்க்கிறது என்று கீதை கூறு கிறது; அனுபவமும் அதை ருசுப்பிக்கிறது.

இம்மாதிரியான யக்ஞம் இல்லாமல் ஒரு நிமிஷம்கூட உலகம் இயங்க முடியாது. ஆகையால், கீதையின் இரண்டா வது அத்தியாயத்தில் உண்மையான ஞானத்தைக் கூறிவிட்டு, மூன்றாவது அத்தியாயத்தில் அதை அடையும் மார்க்கங்கள் கவ னிக்கப்பட்டிருக்கின்றன. சிருஷ்டியுடனேயே யக்ஞமும் தோன் றிற்று என்று அதில் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால், எல்லா சிருஷ்டிகளுக்கும் சேவை புரியவேண்டும் என்பதற்காகவே இந்த உடல் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், யக்ஞம் செய்யாமல் சாப்பிடுபவன் திருடிய உணவைச் சாப்பிடுகிறான் என்று கீதை கூறுகிறது. பரிசுத்தமான வாழ்க்கை நடத்த

விரும்புபவர்களின் ஒவ்வொரு செய்கையும் இந்த யக்ஞத் தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டும். பிறவியிலேயே நம் முடன் யக்ஞமும் வந்திருப்பதால், ஆயுள் பூராவும் நாம் கடன் பட்டவர்களே. எனவே, நாம் பிரபஞ்சத்திற்கு என்றும் சேவை செய்யக் கடன்பட்டிருக்கிறோம். ஓர் அடிமை தன்னுடைய எஜமானனிடமிருந்து உணவு, ஆடை முதலியவைகளைப் பெறு வது போலவே, பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தா நமக்கு அளிப் பவைகளை நாம் நன்றியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டும். நாம் பெறுபவைகளை வெகுமதிகள் என்றே சொல்லவேண்டும். ஏனெனில், கடன்பட்டவர்கள் என்ற முறையில், நம்முடைய கடனைத் தீர்க்கிறோமாகையால், அதற்காக நாம் எதுவும் பெற உரிமை பெற்றவர்களல்ல. ஆகையால், அதை நாம் பெறாவிட் டால், அதற்காகக் கடவுளைக் குறை கூற முடியாது. நம்முடைய உடல் அவனுடையது. அதைப் பேணிக் காப்பதோ அல்லது உதறித் தள்ளுவதோ அவனுடைய இஷ்டம். இதைப் பற்றிக் குறைபடுவதற்கோ, இரக்கப்படுவதற்கோ எதுவுமில்லை. கடவு ளின் திட்டத்தில் நமக்குரிய ஸ்தானத்தை நாம் உணர்ந்தால், இது இயற்கையானதும் விரும்பத்தக்கதுமான ஒரு நிலைமையு மாகும் என்பதையும் நாம் அறிவோம். இந்தப் பரமானந்தத்தை அனுபவிக்க வேண்டுமானால் உறுதியான நம்பிக்கை இருக்க வேண்டும். "உன்னைப் பற்றி நீயே கவலைப்படாதே. எல்லாக் கவலைகளையும் ஆண்டவனிடமே விட்டுவிடு" என்றே எல்லா சமயங்களும் கட்டளையிடுகின்றன.

இதற்காக யாரும் பயந்துவிடவேண்டிய அவசியமில்லை களங்கமில்லாத மனச்சாட்சியுடன் சேவையில் ஈடுபடுபவர், அதன் அவசியத்தை நாளுக்கு நாள் மேலும் நன்றாக உணருவார்; அவருடைய நம்பிக்கையும் வளர்ந்துகொண்டே யிருக்கும். சுய நலத்தைத் துறக்கத் தயாராக இல்லாமலும், தன்னுடைய பிறவி யின் பயனை அறியாமலும் உள்ள ஒருவர் சேவைப் பாதையில் செல்ல முடியாது. தெரிந்தோ, தெரியாமலோ நாம் யாவருமே ஏதாவது சேவை செய்துதான் வருகிறோம். இந்தச் சேவையை மனமறிந்து செய்யும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொண்டோ மானால், நம்முடைய சேவையில் ஆர்வம் கொஞ்சங் கொஞ்சமாகப் பலப்படும். இதனால், நமக்கு மட்டுமில்லாமல் உலகத்திற்கும் இன்பம் ஏற்படும்.

## (2)

சென்ற வாரம் யக்ஞத்தைப் பற்றி எழுதினேன்; ஆனால், அதைப் பற்றி மேலும் எழுத வேண்டும் போல் தோன்றுகிறது. மனித சிருஷ்டியுடன் சேர்ந்து வந்துள்ள ஒரு கொள்கையை மேற் கொண்டு பரிசீலனை செய்வது பலனுள்ளதா யிருக்கலாம் என்று நினைக்கிறேன். யக்ஞம் என்பது நாள் பூராவும் செய்யப்பட வேண்டிய ஒரு சேவையாகும். ஆசையின்றிச் சேவை செய்வது மற்றவர்களிடம் தயவு காட்டுவதாகாது; நமக்கே தயவு காட்டிக்

கொள்ளுவதாகும். ஒரு கடனைத் தீர்க்கும் போது நமது சுமையைக் குறைத்துக்கொண்டு, நம் கடமையை நிறைவேற்றுவதைப் போன்றது அது. நல்லவர்கள் மட்டுமின்றி, நாமெல்லோரும் நம்மிடமுள்ள வசதிகளையெல்லாம் மனித வர்க்கத்தின் சேவைக்குக் கொடுக்க வேண்டும். இதுதான் சட்டமென்று தோன்றுகிறது. அப்படியானல், வாழ்க்கையில் மனத்தை இஷ்டப்படி ஈடுபடவிடமுடியாது. அதற்குப் பதிலாகப் பற்றில்லாமையையே வளர்க்க வேண்டும். இந்தப் பற்றில்லாமைதான் மனிதனுக்கும், மிருகத்திற்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டுகிறது.

இப்படி வாழ்க்கை நடத்துவதென்ருல், வாழ்க்கை ருசியற்றதாகவும், மந்தமாகவும், கலையே அற்றதாகவும் ஆகிவிடுமென்றும், குடும்பத்தில் இருப்பவனுக்கு இடமில்லாமற் போய்விடும் என்றும் சிலர் ஆட்சேபிக்கிருர்கள். ஆனல், இங்கே பற்றில்லாமை என்பது உலகத்தைத் துறந்து காட்டுக்குப் போய்விட வேண்டும் என்ற பொருளில் சொல்லப்படவில்லை. வாழ்க்கையின் எல்லா நடவடிக்கைகளிலுமே இந்தப் பற்றின்மை மேலோங்கி நிற்க வேண்டும். வாழ்க்கை என்பது புலன் நுகர்ச்சி அல்ல, அது ஒரு கடமை என்று குடும்பஸ்தன் கருதினல், அவன் சம்சாரியாக இல்லாது போய்விடப் போவதில்லை. தியாக உணர்ச்சியுடன் நடந்துகொள்ளும் ஒரு வியாபாரியிடம் கோடிக் கணக்கில் பணம் புரளும்; ஆனல், அவர் இந்த விதியைப் பின்பற்றுவதாய் இருந்தால் தன்னுடைய திறமைகளைச் சேவை செய்வதிலேயே செலவிடுவார். ஆகையால், அவர் மோசம் செய்யமாட்டார்; சூதாட்ட பேரங்களில் ஈடுபடமாட்டார். எளிய வாழ்க்கையையே நடத்துவார். எந்த உயிரினத்திற்கும் தீங்கு செய்யமாட்டார்; லட்சக் கணக்கில் பணம் நஷ்டப்படவும் தயாராக இருப்பாரேயொழிய, யாருக்கும் தீங்கு செய்யமாட்டார். இத்தகைய ஒரு வியாபாரி என்னுடைய கற்பனையில்தான் இருக்கிருர் என்று யாரும் நினைக்க வேண்டாம். உலகத்தின் நல்ல காலம், இம்மாதிரி வியாபாரிகள் மேல்நாடுகளிலும் இருக்கிருர்கள், கீழ்நாடுகளிலும் இருக்கிருர்கள். இம்மாதிரியானவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம் என்பது உண்மைதான். ஆனல், அம்மாதிரி ஒருவராவது இருக்கிருர் என்பது உண்மையாகிவிட்டால், பிறகு அது கற்பனையாக ஆகாது. வத்வானிலுள்ள பரோபகார சிந்தனையுள்ள ஒரு தையற்காரரைப்பற்றி* நாமெல்லோரும் அறிவோம். அத்தகைய நாவிதர் ஒருவரையும் எனக்குத் தெரியும். அத்தகைய நெசவாளி ஒருவரையும் யாவரும் அறிவர். இதை மேலும் ஆழ்ந்து

* பெருமை மிக்க இந்தத் தையற்காரரைக் குறித்து மகாத்மா தமது 'சுயசரிதை'யில் கூறியிருக்கிருர். மோதிலால் என்ற தையற்காரர் தமது தொழிலில் மிகவும் திறமைசாலி. ஆகையால், தமக்குத் தேவையான ருபாய் பதினைந்தை தினத்திற்கு ஒரு மணி நேரம் வேலை செய்து, ஒரு மாதத்தில் சம்பாதித்துக்கொள்ளுவார். மீதமுள்ள தமது நேரத்தை எல்லாம் பொதுச் சேவைக்குச் செலவிடுவார். அவருடைய சேவையைப் பற்றிக் காந்திஜி கூறும் விவரங்களை 'மகாத்மா காந்தி நூல்கள்' 3-ஆம் தொகுப்பு–486–87 ஆம் பக்கங்களில் காண்க.

கவனித்தால், ஒவ்வொரு துறையிலும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டுவிட்ட பலரைப் பார்க்கலாம். இவர்கள் எல்லோரும் தமது வேலைகளின் மூலம்தான் வாழ்க்கையை நடத்துகிறார்கள். ஆனால், அவர்களுடைய நோக்கம் ஜீவனோபாயம் மட்டுமல்ல; அவர்களுடைய வேலையின் ஒரு விளைவுதான் அது. மோதிலால் ஆரம்பத்தில் தையற்காரராகத்தான் இருந்தார். பின்னரும் அந்தத் தொழிலைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். ஆனால், அவருடைய உள்ளத்தின் உணர்ச்சி மாறுதல் அடைந்துவிட்டது. அதனால், அவருடைய வேலை பக்திபூர்வமானதாகி விட்டது. மற்றவர்களின் நலன்களைப் பற்றி அவர் சிந்திக்க ஆரம்பித்தார்; அவருடைய வாழ்க்கை உண்மையான கலையழகு நிறைந்ததாகி விட்டது. தியாக வாழ்க்கையே கலையின் சிகரமாகும்; அதிலேயே ஆனந்தம் நிறைந்திருக்கிறது. யக்ஞம் ஒரு சுமையாக இருக்கிறது அல்லது தொந்தரவாக இருக்கிறது என்று ஒருவர் நினைத்துவிட்டால், அது யக்ஞமாகாது. புலன் நுகர்ச்சி அழிவில் கொண்டு போய்விடுகிறது; பற்றற்றிருப்பது அமரத்துவத்தை அளிக்கிறது. ஆனந்தம் என்பது தனிப்பட்ட ஓர் உணர்ச்சியல்ல; வாழ்க்கையை நாம் எப்படி அணுகுகிறோம் என்பதைப் பொறுத்துத்தான் ஆனந்தம் இருக்கிறது. ஒருவர் நாடக மேடைக் காட்சியை அனுபவிப்பார். மற்றொருவர் வானில் தோன்றும் விதவிதமான காட்சி மாறுதல்களைக் கண்டு ஆனந்திப்பார். ஆகையால், ஆனந்தம் என்பது தனிப்பட்ட, தேசீய விஷய அறிவைப் பொறுத்ததாகும். குழந்தைப் பருவத்தில் நமக்கு எவற்றில் ருசியை ஊட்டியிருந்தார்களோ அவற்றையே நாம் ரசிப்போம். பற்பலவிதமான தேசீய ருசிகளைப்பற்றிச் சுலபமாக உதாரணங்களைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

பற்றில்லாமல் நாம் சேவை செய்வதால், தமக்கு வேண்டியவை வேண்டாதவை எல்லாவற்றையுமே மக்களிடமிருந்து பெறத் தமக்கு உரிமையுண்டு என்று பலர் நினைக்கிறார்கள். இந்த எண்ணம் ஒருவருக்கு ஏற்பட்ட உடனேயே ஊழியர் என்ற அவருடைய தன்மை போய்விடுகிறது; பின்னர், அவர் மக்களைக் கொடுமைப்படுத்துபவராகி விடுகிறார்.

சேவை செய்வதில் ஆர்வமுடையவர்கள் தமது சொந்த சுகங்களைப் பற்றி நினைப்பதில் காலத்தை வீணாக்கமாட்டார்கள். அதைக் கவனிப்பதோ, கவனிக்காமலிருப்பதோ ஆண்டவனின் பொறுப்பு என்று விட்டுவிடுவார்கள். ஆகையால், தனக்குக் கிடைத்ததையெல்லாம் அவர் சுமத்திக் கொள்ளமாட்டார்; தனக்கு அவசியமாக என்ன வேண்டுமோ அதை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றதை விட்டுவிடுவார். அசௌகரியம் ஏற்பட்டால்கூட அமைதியாகவும், மனத்தில் கோபம் இல்லாமலும், மனத்தில் சஞ்சலம் இல்லாமலும் அவர் இருப்பார். சீலத்தைப் போலவே சேவைக்கும் அதுவேதான் வெகுமதி; அத்துடன் அவர் திருப்தியடைந்து விடுவார்.

மேலும், சேவை செய்யும் விஷயத்தில் அலட்சியமாகவோ, தாமதமாகவோ இருத்தல் கூடாது. தன்னுடைய சொந்த விஷயங்களில் தான் சுறுசுறுப்பாக இருக்கவேண்டும் என்றும், பணமில்லாத பொது வேலையை நினைத்த வேளையில், நினைத்தபடி செய்யலாம் என்றும் யாராவது நினைத்தால், அவர் தியாகத்தின் அடிப்படைகளையே தெரிந்துகொள்ளவில்லை என்றுதான் ஆகும். நாமாக மற்றவர்களுக்குச் சேவை செய்ய முன்வருவது என்றால், அது மனப்பூர்வமானதாக இருக்க வேண்டும்; சுயநலத்தைவிட சேவைக்கே முதலிடம் கொடுக்க வேண்டும். உண்மையான சேவையில் ஆர்வமுள்ளவர், மனத்தில் எந்தவிதமான நினைவையும் வைத்துக்கொள்ளாமல், மனித வர்க்கத்தின் சேவைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொள்ளுவார்.

'எராவ்டா மந்திரி'லிருந்து—அத்தியாயங்கள் – 14, 15

# 11
# உழைப்பின் கௌரவம்

"நமது சர்வகலாசாலைகளில் பட்டம் பெற்ற இளைஞர்கள், தமது பட்டங்களை விலை கூறிக்கொண்டிருப்பதை ஒவ்வொரு நாளும் பார்க்கிறோம். கல்வியறிவில்லாத பணக்காரரிடம் போய் அவர்கள் சிபார்சு கேட்கிறார்கள். பெரும்பாலும், சர்வகலாசாலைப் பட்டங்களைவிடப் பணக்காரரின் சிபார்சுக்கு அதிகாரிகள் அதிக மதிப்புக் கொடுக்கிறார்கள். பத்தில் ஒன்பது இப்படித் தான் ஆகின்றன. இதிலிருந்து என்ன ருசுவாகிறது? அறிவைவிடப் பணத்திற்குத் தான் அதிக மதிப்பு என்பதையே இது காட்டுகிறது. மூளைக்கு மதிப்பில்லை. அது ஏன் அப்படி இருக்கிறது? மூளையின் மூலம் பணம் சம்பாதிக்க முடியவில்லை. புத்திபூர்வமான உழைப்பு தேவையாயுள்ள வேலைகள் இல்லாமையே இந்தத் தோல்விக்குக் காரணம். மனித சமூகத்தில் மிகவும் மதிப்புள்ளதும், சக்தி வாய்ந்ததுமான சக்தி மூளைதான். ஆனால், அதற்கு மார்க்கெட் கிடைக்காததால் வீண் விரயமாகிறது.

"விவசாயியின் கைகளே அவனுடைய சொத்து. ஜமீன்தாரின் சொத்து, அவருடைய நிலங்கள். நிலத்தைப் பண்படுத்துவதுதான் விவசாயம். கைகளைக் கொண்டு வேலை செய்வது கைத்தொழில். விவசாயம் ஒரு கைத் தொழில் என்று சொல்லப்படுவதை நான் அறிவேன். விவசாயத்தைக் கைத் தொழில்கள் ஜாப்தாவில் சேர்க்கக்கூடாது. ஏனெனில், அடிப்படையில் வித்தியாசங்கள் இருக்கின்றன. கைத்தொழில் என்பது உடலுழைப்பின் ஒரு பிரிவு, கைத்திறன் படிப்படியாக அபிவிருத்தியடைய இதில் இடமிருக்கிறது. ஒவ்வோர் அபிவிருத்திக் கட்டத்திலும் அதிக ஊதியம் பெறுவதற்கும் வாய்ப்பு இருக்கிறது. ஆனால், நிலத்தில் வேலை செய்வது இப்படியல்ல. ஏர் ஓட்டுபவன், விதை விதைப்பவன், வயலில் களை எடுப்பவன், தன் கை வேலைத் திறமையால் அதிகம் சம்பாதித்துவிட முடியாது. விவசாயத்தில் இன்னும் அதிகம் சம்பாதிக்கக்கூடிய திறமை பெறுவதற்கு இடமில்லை. தச்சு

வேலை செய்யும் ஒருவர் விஷயத்தை எடுத்துக்கொள்ளுவோம். சாமான்களை அனுப்பும் சாதாரண பெட்டிகளைக் கோர்க்கும் வேலையைச் செய்ய அவர் ஆரம்பிக்கிறார். வேலைத்திறமையினால் வேலைப்பாடுகள் மிகுந்த பேழைகளை அவர் செய்யக்கூடும். வேலைத் திறமையின் காரணத்தினால் மனிதனின் அன்றாடக் கூலியால் ஏற்படும் அபிவிருத்தியைப் பாருங்கள். படமெடுத்திருக்கும் இரு நாகங்கள் ஒரு போத்தலைப் பாதுகாப்பதைப் போன்ற உருவத்தில் பேழையைச் செய்த அந்த ஆசாமி, சாமான்களைப் போட்டு அனுப்பும் பெட்டிகளைக் கோர்க்கும் வேலையில்தான் முதன் முதலில் என்னிடம் சேர்ந்தார் என்று உங்களுக்குக் கூறுகிறேன். அவர் வாங்கிய ஆரம்ப ஊதியம் தினத்திற்கு ஆறு அணா. இரண்டு வருடங்களில் அவர் தினத்திற்கு ஒரு ரூபாய் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டார். அவர் செய்யும் சாமானை விற்பதனால், அவரை வேலைக்கு வைத்திருப்பவருக்கும் குறைந்தது நான்கு அணாவாவது லாபம் கிடைக்கும். இது இரண்டு ஆண்டுகளில் ரூ. 133-இல் இருந்து ரூ. 365-க்குச் சம்பள உயர்வை அளிக்கிறது. மக்களில் 98 சத விகிதத்தினர் நிலத்தில் உழுது பாடுபடுகிறார்கள். நிலம் விஸ்தீரணத்தில் அதிகமாவதில்லை. ஜனத்தொகை அதிகமாக ஆக நிலத்தில் பாடுபடும் கைகள்தான் அதிகமாகிக்கொண்டு போகின்றன. ஐந்து பேரைக்கொண்ட ஒரு குடும்பத்திற்கு 30 ஆண்டுகளுக்கு முன்னால் ஜீவனோபாயமாக இருந்த நிலத்தைக் கொண்டு இப்பொழுது 12 முதல் 15 பேர் வரை ஜீவிக்க வேண்டியிருக்கிறது. சில குடும்பங்களில் சிலர் வேலை தேடி வெளியே போய்விடுவதால் இந்த அதிகப்படியான ஆட்களால் ஏற்படும் பளு குறைகிறது. மற்றக் குடும்பங்களின் விஷயத்தில் வயிற்றுக்குப் போதாத மோசமான நிலை தவிர்க்க முடியாததாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது.''

*1924*-இல் பீகார் இளைஞர் கழகத்தில் ஸ்ரீ எம். எஸ். தாஸ் நிகழ்த்திய பிரசங்கத்திலிருந்து ஒரு பகுதி மேலே எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏற்ற தருணம் வரும்போது கவனிக்கலாம் என்பதற்காக இந்தப் பிரசங்கத்தை எப்போதும் என்னுடனேயே வைத்திருந்தேன். இவர் சொன்னதில் புதிது ஒன்றுமில்லை. அவர் ஒரு பிரபல வக்கீல். அவர் உழைப்பைக் கேலி செய்யவில்லை என்பதோடு மட்டுமில்லை. வயதான பிறகு சில கைத்திறன் வேலைகளை அவர் கற்றுக்கொண்டார். பொழுது போக்குக்காக அவர் அந்த வேலைகளைக் கற்றுக்கொள்ளவில்லை. உழைப்பின் கௌரவத்தை இளைஞர்களுக்கு உணர்த்துவதற்காகவும், நாட்டின் கைத்தொழில்களில் கவனம் செலுத்தாவிட்டால் இந்தியாவின் எதிர்காலம் பிரகாசமாக இராது என்பதை அவர்களுக்குக் காட்டவுமே இந்த வேலைகளை அவர் கற்றுக்கொண்டார். அதனால்தான் அவர் தெரிவித்த அபிப்பிராயத்திற்கு மதிப்புக் கொடுக்கவேண்டும். ஸ்ரீ தாஸ் கட்டாக்கில் ஒரு தோல் பதனிடும் சாலையை ஏற்படுத்தி யிருக்கிறார். முன்பு எந்தப் பயிற்சியும் பெற்றிராத பல இளைஞர்கள், இந்த ஸ்தாபனத்தில் பயிற்சி பெற்றிருக்கின்றனர். ஆனால், கோடிக்கணக்கான மக்களின் புத்திசாலித்தனம் தேவைப்படும் மிகப் பெரிய கைத்தொழில் கைராட்டினத்தில் நூற்பதுதான் என்பதில் சந்தேகமில்லை. இந்த நாட்டில் ஏராளமான விவசாயிகள் இருக்கிறார்கள்.

அவர்களுடைய மூளைக்கும், கைகளுக்கும் மேற்கொண்டு புத்தி சாலித்தனமான ஒரு வேலை கொடுப்பதுதான் இன்றைய தேவை யாகும்; அவர்களுக்காக வகுக்கப்படக்கூடிய மலிவானதும், சிறந் ததுமான கல்வி அதுதான். அது உடனடியாகப் பலனளிப்பதால் மலிவானதாகிறது. இந்தியாவில் உள்ள யாவரும் கல்வி பயில வேண்டும் என்று நாம் விரும்பினால், எழுதப் படிக்கத் தெரிந் தால் மட்டும் போதாது. ராட்டினத்தில் நூற்பதையும், அதன் மற்ற அம்சங்களையும் தெரிந்துகொள்ளுவதே முக்கியமானதாகும். அதன் மூலம் கைகளும், கண்களும் சரியான பயிற்சி பெற்றபிறகு, சிறுவர்களும், சிறுமிகளும் முறைப்படியான கல்விக்குத் தயா ராகிவிடுகிறார்கள். இது அர்த்தமில்லாதது என்று சிலர் நினைக் கலாம்; இது கொஞ்சமும் அனுபவ சாத்தியமானதல்ல என்று வேறு சிலர் நினைக்கலாம். அது எனக்குத் தெரியும். ஆனால், அப்படி நினைப்பவர்கள் கோடிக்கணக்கான மக்களின் நிலை மையை அறியாதவர்கள். இந்திய விவசாயிகளின் குழந்தை களுக்கு எப்படிக் கல்வியளிப்பது என்பதும் அவர்களுக்குத் தெரியாது. கல்வியறிவு பெற்ற இந்தியர்களே நாட்டின் அரசியல் விழிப்புக்குப் பொறுப்பாளிகள். அவர்கள் உடலுழைப்பின் கௌரவத்தை உணரவேண்டும். கைராட்டினத்தில் நூற்கக் கற்றுக்கொண்டு, கிராமங்களிலுள்ளவர்களுக்கும் அதைச் சொல்லிக் கொடுப்பது தன்னுடைய கடமை என்று ஒவ்வோர் இளைஞனும் கருதவேண்டும். இல்லாவிட்டால், மிகவும் அவசிய மான இந்தக் கல்வியை அளிக்க முடியாது.

—'எங் இந்தியா' – 9—9—1926

# 12

# உழைப்பின் கௌரவத்தை உணருங்கள்

"கைகளை எதற்காக உபயோகிக்க வேண்டும்? எழுதப் படிக்கத் தெரியாதவர்களே உடலுழைப்பைச் செய்யவேண்டும். இலக்கியம், அரசியல் கட்டுரைகளைப் படிப்பதில்தான் என் நேரத்தை நான் செலவிட முடியும்" என்று நீங்கள் சொல்லலாம். உழைப்பின் கௌரவத்தை நாம் உணரவேண்டும் என்று நினைக் கிறேன். ஒரு நாவிதரோ, செருப்புத் தைப்பவரோ கல்லூரியில் படிக்கப் போனால், அவர் தன் தொழிலைக் கைவிட்டுவிடக்கூடாது என்று நான் கருதுகிறேன். வைத்தியத் தொழிலைப் போலவே, நாவிதரின் தொழிலும் ஒரு நல்ல தொழிலென்றே நான் நினைக் கிறேன்.

[1916 பிப்ரவரி 16-ந் தேதியன்று சென்னை, ஒய். எம். ஸி. ஏ. மன்றத் தில் நிகழ்த்தப்பட்ட ஒரு பிரசங்கத்திலிருந்து எடுத்தது இது. இப்பிரசங்கத் தின் முழு விவரத்தை, 'மகாத்மா காந்தி நூல்கள்' –ஐந்தாம் தொகுப்பு 6–16 ஆம் பக்கங்களில் காண்க.]

# 13

# உழைப்பின் தத்துவம்

உழைப்பின் தத்துவத்தைப்பற்றி நீங்கள் அளவுக்கு மீறி வற்புறுத்துகிறீர்கள் என்று ஒரு நண்பர் காந்திஜியிடம் சொன்னார். "இல்லவே இல்லை. நான் என்ன சொல்கிறேனோ அதுதான் என்னுடைய அபிப்பிராயம். உழைப்பை அளவுக்கு மீறி வற்புறுத்துவதென்பதே இருக்க முடியாது. கீதையின் உபதேசத்தைத்தான் நான் திருப்பிச் சொல்கிறேன். கீதையில் பகவான், 'கண்ணுறக்கமின்றி நான் எப்போதும் வேலை செய்து கொண்டே இல்லாவிட்டால், மனித வர்க்கத்திற்கு நான் தவறான உதாரணம் காட்டியவனாவேன்' என்று கூறுகிறார். "நாட்டிலுள்ள மற்றவர்களுக்கு ஓர் உதாரணம் காட்டுவதற்காகப் புத்திபூர்வமான உழைப்பில் ஈடுபட்டுள்ளவர்களும் ராட்டினத்தில் நூற்க வேண்டும் என்று நான் கேட்கவில்லையா?" என்று காந்திஜி பதிலளித்தார்.

"புத்தர்பிரான் விஷயத்திலும் இப்படியே சொல்லுவீர்களா?"

"ஆம். கொஞ்சம்கூடத் தயக்கமில்லாமல் சொல்லுவேன்."

"துக்காராம், ஞானதேவர் போன்ற பெரிய மகான்களைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?"

"அவர்களை மதிப்பிடுவதற்கு நான் யார்?"

"ஆயினும், புத்தரைப் பற்றி மட்டும் சொல்லுவீர்கள்?"

"நான் அப்படிச் சொல்லவில்லையே. அத்தகைய ஒருவரை நேருக்கு நேர் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தால், தியானத்தைவிட உழைப்பின் தத்துவத்தை நீங்கள் ஏன் போதிக்கவில்லை என்று அவரைக் கேட்கத் தயங்கமாட்டேன் என்றுதான் சொன்னேன். இந்த மகான்களைப் பார்த்தாலும் அதையேதான் சொல்லுவேன்."

—'ஹரிஜன்' - 2—11—1925

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிவந்த 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியிலிருந்து எடுத்தது.]

## 14

# வேலை செய்யாவிடில் சோறு இல்லை

கொஞ்ச காலத்திற்கு முன்பு கல்கத்தாவில் 'பளிங்கு மாளிகை' என்ற அற்புதமான ஒரு மாளிகைக்கு நான் அழைத்துச் செல்லப்பட்டேன். இதில் விலையுயர்ந்த, அழகிய சில ஓவியங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன. அங்கே வரும் பிச்சைக்காரர்கள் எல்லோருக்கும் மாளிகைக்கு முன்னுலுள்ள காம்பவுண்டில் அன்னமளிக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான பிச்சைக்காரர்கள் அங்கே போவதாக அறிகிறேன். இது பிரமாதமான தருமம் என்பதில் சந்தேகமில்லை. அன்னமளிப்பவர்களின் தாராள மனப்பான்மையையே அது காட்டுகிறது. ஆனால், அந்த மாளிகையின் கம்பீரம், இந்த ஏழைகளின் கந்தல் கூளங்களைக் கண்டு கேலி செய்துகொண்டிருக்கும்போது அவர்களுக்கு அங்கே அன்னமளிப்பதன் அபத்தம் அந்தத் தருமசீலர்களுக்குப் புலப்படவேயில்லை. நான் சூரிக்குப் போயிருந்தபோதும் இம்மாதிரி வேதனையளிக்கும் காட்சியொன்றைக் கண்டேன். ஜில்லாவிலுள்ள பிச்சைக்காரர்களுக்கு அன்னமளிக்க வரவேற்புக் கமிட்டியார் ஏற்பாடு செய்திருந்தனர்.

பளிங்கு மாளிகையில் என்னைச் சூழ்ந்துகொண்ட கூட்டத்தினர், தரையில் போடப்பட்டிருந்த அழுக்கடைந்த இலைகளில் சாப்பிட்டுக்கொண்டிருந்த பிச்சைக்காரர்களின் வரிசையைத் தாண்டி என்னிடம் வந்தார்கள். சிலர் அவர்களை மிதித்துக் கொண்டுகூட வந்தார்கள். இது மகிழ்ச்சியளிக்கும் காட்சியாக இருக்கவில்லை. ஆனால், சூரியில் இது இன்னும் சற்று கண்ணியமான முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கூட்டத்தினர், பிச்சைக்காரர்களின் வரிசையைத் தாண்டி வரவேண்டியிருக்கவில்லை. ஆனால், நான் பிரயாணம் செய்த மோட்டார், பிச்சைக்காரர்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்த இடத்தின் வழியாக மெதுவாக ஓட்டிச் செல்லப்பட்டது. எனக்கு இது அவமானமாயிருந்தது. அதிலும், இதெல்லாம் எனக்கு மரியாதை செய்வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டவை என்பதை நினைக்கும்போது இன்னும் அதிக அவமானமாயிருந்தது. ஏனெனில், அங்குள்ள ஒரு நண்பர் என்னிடம் சொன்னதுபோல், நான் 'ஏழைகளின் நண்பன்'. மனிதர்களில் பெரும் பகுதியினர் பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்திருப்பது கண்டு நான் திருப்தியடையக்கூடுமென்றால், அவர்களிடம் எனக்குள்ள நட்பு பரிதாபமானதாய்த்தான் இருக்க வேண்டும். இந்தியாவிலுள்ள ஒட்டாண்டிகளிடம் எனக்குள்ள நட்பு காரணமாக, அவர்கள் பிச்சை எடுப்பதைவிட முழுப் பட்டினி கிடந்தால்கூடப் பரவாயில்லை என்று நினைக்கும் அளவுக்கு என்னுடைய உள்ளம் கல்லாகிவிட்டது என்பது என் நண்பர்களுக்குத் தெரியாது. தேக ஆரோக்கியமுள்ள ஒருவர்

தன் உணவுக்காக நாணயமான வேலை ஏதாவது செய்யாவிட்டால், அவருக்கு இலவசமாக ஒரு வேளை உணவளிப்பதை என்னுடைய அகிம்சை அனுமதிக்காது. எனக்கு அதிகாரமிருந்தால், இலவச உணவளிக்கப்படும் எல்லா தருமச் சத்திரங்களையும் மூடி விடுவேன். இது சமுதாயத்தையே சிறுமைப்படுத்தி விட்டது. சோம்பேறித்தனம், வெளி வேஷம் முதலியவைகளுக்கும், குற்றம் புரிவதற்கும்கூட ஊக்கமளித்துவிட்டது. இத்தகைய வழி தவறிய தருமம் நாட்டின் செல்வத்தைப் பெருக்க உதவி செய்வதில்லை. இதனால் லோகாயதமோ, ஆன்மிகமோ வளம் பெறுவதில்லை. நாம் ஏதோ நல்ல காரியம் செய்துவிட்டோம் என்ற தவறான எண்ணத்தையும் தருமம் செய்பவருக்கு இது அளித்துவிடுகிறது. தமக்காக வேலை செய்பவர்களுக்கு உணவளிப்பதற்காக நல்ல சுத்தமான இடங்களை ஏற்பாடு செய்தால் எவ்வளவு நன்றாகவும், புத்திசாலித்தனமாகவும் இருக்கும்? கைராட்டினமும், பருத்தி சம்பந்தப்பட்ட எந்த வேலையும் நல்ல ஒரு தொழிலாயிருக்கும் என்பது என்னுடைய சொந்த அபிப்பிராயமாகும். அது அவர்களுக்குப் பிடிக்கவில்லை யென்றால், பிடித்தமான வேறெந்த வேலையையும் செய்யலாம். "வேலை செய்யாவிட்டால், சோறு கிடையாது" என்ற விதி மட்டும் இருக்கவேண்டும். ஒவ்வொரு நகரத்திலும் பிச்சைக்காரர் சம்பந்தமான சங்கடமான பிரச்னைகள் இருக்கின்றன; இதற்குப் பணக்காரர்களே பொறுப்பாளிகள். சோம்பேறிகளுக்கு இலவசமாகச் சோறு போடுவது சுலபமே. ஆனால், சோறு கிடைக்க வேண்டுமானால் நாணயமாக ஏதாவது வேலை செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் ஸ்தாபனங்களை ஏற்படுத்துவது கஷ்டம் என்பது எனக்குத் தெரியும். பணச்செலவைக் கணக்கிட்டுப் பார்த்தாலும், இப்போதைய இலவச அன்னதானத்தை விட, ஆரம்ப காலத்திலாவது, வேலையை வாங்கிக்கொண்டு பிறகு அவர்களுக்குச் சோறு போடுவதற்கு இன்னும் அதிகச் செலவாகும். ஆனால், துரிதமாகப் பிச்சைக்காரர்கள் பெருகிக்கொண்டிருக்கும் இந்த நாட்டில், மேலும் பெருகாமல் இருக்கவேண்டுமானால், நாளடைவில் இந்தச் செலவு குறைவானதாகவே இருக்கும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

—'எங் இந்தியா'—13—8—1925

# 15

# ஓர் அவமானம்

நல்ல தேகக் கட்டுள்ள 25 வயது இளைஞர் ஒருவர் நேற்று என்னிடம் வந்து, என்னுடன் இரண்டு மூன்று நாட்கள் தங்கலாமாவென்று கேட்டார். அவர் பஹ்ரேச் என்ற இடத்தைச் சேர்ந்தவர். அவர் குடும்பத்தினருக்குச் சில ஏக்கரா நிலம்

இருக்கிறது. அவர் பம்பாய் காங்கிரசைப் பார்த்திருக்கிறுர். அது முதல் முகமறியாதவர்களிடம் சாப்பிட்டுக்கொண்டு பிரயாணம் செய்து வந்திருக்கிறுர். அவர் வைஷ்ணவர்களுடன் (ராமானுஜிகள்) பழகுகிறுர். அவர்கள் அவருக்குச் சாப்பாடு போடுகிறுர்களாம். ரெயில் செலவுக்கு ஏதாவது பணமும் கொடுக்கிறுர்களாம். இப்படிப் பிறர் தயவில் காலம் தள்ளுவது தவறு என்று அவரிடம் சொன்னேன். "என்னுடைய உணவுக்கும் மற்றச் செலவுகளுக்கும் பிச்சை எடுப்பதில் எந்தத் தவறும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஏனெனில், நான் மக்களுக்குச் சேவை செய்ய உத்தேசிக்கிறேன்" என்று அந்த இளைஞர் பதிலளித்தார். முதலில் தன் ஜீவனத்திற்கு வழி செய்துகொண்டு விட்டுப் பிறகு ஏதோ ஒரு காலத்தில், 'ஜீவனோபாயம்', 'ஊதியம்' இரண்டுக்குமாகச் சேர்த்துச் சேவை செய்வதாகச் சொல்லுவதில் பொருத்தமின்மை எதுவும் இருப்பதாக அவருக்குத் தெரியவில்லை. அவர் சாப்பாட்டு வேளையில் வந்ததால், எங்களுடன் சாப்பிடும்படி அழைத்தேன். சாப்பிட்ட பிறகு, அவருக்கிடப்படும் வேலையை நாள் பூராவும் செய்யத் தயாராயிருந்தாலொழிய எங்களுடன் தங்கியிருக்க முடியாது என்று அவரிடம் சொன்னேன். இதை எழுதும் வரையில் அவர் எங்களில் யாருக்கும் தென்படவேயில்லை.

இம்மாதிரி சம்பவம் இது ஒன்றுதான் என்பதில்லை. தங்களுடைய தேவைகளுக்காகப் பிச்சை எடுப்பதைப்பற்றி இளம் வயதினர் வெட்கப்படவேண்டும். உடலுழைப்புச் செய்வது அவமானம் என்று தவருக அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறுர்கள். அந்த உணர்ச்சியை விட்டொழித்துவிட்டால், சாதாரண புத்திசாலித்தனமுள்ள இளைஞர்களுக்குப் போதிய வேலை வாய்ப்புகள் இருக்கின்றன.

—'ஹரிஜன்'—1—3—1935

['குறிப்புகள்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

## 16

# முழு பிராயச்சித்தம்

பஹ்ரேச் என்ற ஊரைச் சேர்ந்த ஓர் இளைஞர், பொது ஜனங்களின் தருமத்தில் வாழ்க்கை நடத்தியது பற்றிய விவரங்களை கொஞ்ச காலத்திற்கு முன்பு எழுதியிருந்தேன். ஏற்கனவே கூறியது போல், அவர் தம்முடைய நடத்தைக்காக முற்றிலும் மனம் வருந்தி மறுபடியும் என்னிடம் வந்தார். இன்னும் அவர் மகன்வாடியில்தான் இருக்கிறுர். அவருக்கிடப்பட்ட உடலுழைப்பு வேலைகளை ஒழுங்காகச் செய்து கொண்டிருக்கிறுர். பஹ்ரேச்சுக்குப் போவதற்கான செலவை அவர் சீக்கிரத்தில்

சம்பாதித்துவிடுவார். ஆயினும், செலவுக்கு வேண்டிய பணத்தைச் சம்பாதித்தவுடன் அவர் மகன்வாடியிலிருந்து புறப்பட்டு விட விரும்பவில்லை. ஏதாவது கற்றுக்கொண்டு, எங்களுடன் தங்கியிருந்து அதைப் பயன்படுத்திக்கொள்ள விரும்புகிறார். அவருடைய நடத்தை ஆட்சேபிக்கப்பட்டது பற்றி பஹ்ரேச்சிலுள்ள அவருடைய நண்பர்கள் வேதனையடைந்தனர். அந்த இளைஞருடைய பெயர் அவதேஷ். நான் கண்டித்தது நியாயமானதுதான் என்பதை அவர் ஒப்புக்கொள்ளுகிறார். ஆயினும், ஊரார் தருமத்தில் அவர் வாழ்ந்துகொண்டு பிரயாணம் செய்துகொண்டிருந்தது பற்றித் தன்னுடைய மனச்சாட்சி உறுத்தவில்லை என்கிறார். இது ராமானுஜிகளிடையே உள்ள வழக்கமாம். ஆனால், இப்போது தன் தவறை உணர்ந்துகொண்டு விட்டதால், இனி அம்மாதிரி செய்வதில்லையென்று வாக்களிக்கிறார். தன் தவறை அவர் நல்ல வழியில் திருத்திக்கொண்டு விட்டார். என்னுடைய கண்டனத்தினால் அவருக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய இழுக்குக்கும் பிராயச்சித்தம் செய்துகொண்டுவிட்டார். அவதேஷைப் போல் பிறர் தருமத்தை நம்பி வாழும் பலர் இந்த உதாரணத்தைப் பின்பற்றி, புது வாழ்வை ஆரம்பிப்பார்களென்று நம்புவோமாக. தவறு செய்வது மனித இயல்பு; தவறு என்று தெரிந்த பிறகு அதைத் திருத்திக்கொண்டு இனி அம்மாதிரி செய்வதே இல்லை என்று உறுதி கொள்ளுவது உத்தமமானது.

—'ஹரிஜன்' – 13 -4—1935

[முதலில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளியானது]

# 17

# சோற்றுப் பிரச்னை

சோற்றுப் பிரச்னையின் காரணமாகப் பல வங்காளிகள் தேசீய சேவை செய்வதோ, அடிமைத்தனத்தை விடுவதோ சாத்தியமில்லாமல் இருக்கிறது என்று.. ...மாணவர் கூறுகிறார். இது சோற்றுப் பிரச்னையல்ல; உணவுக்காக உழைக்கும் பிரச்னையேயாகும். படித்தவர்களாகிய நாம் உணவுக்காக உழைக்கும் கலையை இழந்து விட்டோம். நெசவாளர்கள், பஞ்சைப் பட்டை போடுபவர்கள், நூற்பவர்கள் ஆகியோரின் ஊதியங்கள் நாளுக்கு நாள் உயர்ந்துகொண்டே இருக்கின்றன. இந்த நிலைமையில் உணவுப் பிரச்னை என்பதே கிடையாது. ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம் நெய்பவன் எடுத்த எடுப்பிலேயே குறைந்த பட்சம் தினம் ஒரு ரூபாய் சம்பாதிக்க முடியும். நல்ல தேர்ச்சி பெற்ற நெசவாளர்கள் தினம் இரண்டு ரூபாய் சம்பாதிக்கிறார்கள். மேஜையில் உட்கார்ந்துகொண்டு வேலை செய்துதான் சம்பாதிக்க வேண்டுமென்று நினைக்கக்கூடாது.

—' எங் இந்தியா ' 25—8—1921

[முதலில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளியானது.]

# 18

# உணவுக்காக உழைப்பதே பரிகாரமாகும்

பின்னர் காந்திஜி, பேராசிரியர் நிர்மல குமார் கோஷ் தயாரித்து வைத்திருந்த ஒருகேள்வியைப் பற்றிக் குறிப்பிட்டார். நண்பர்களுடன் நடத்திய விவாதங்களின் விளைவாக ஸ்ரீ கோஷ் இக் கேள்வியைத் தயாரித்து வைத்திருந்தார். உணவுக்காக உழைப்பது என்றால் என்ன? இன்றைய நிலைமையில் அது எவ்வளவு தூரம் பொருந்தும்? "உணவுக்காக உழைப்பது உண்மையான வாழ்க்கை முறையாகும். அதாவது, ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உணவுக்காகவும், உடைக்காகவும் உழைக்க வேண்டும். உணவுக்கான உழைப்பின் மதிப்பையும், அவசியத்தையும் பற்றி நான் மக்களைத் திருப்தி செய்ய முடிந்தால், உணவு, உடைக்குப் பஞ்சமென்பதே இராது. ஒன்று, வயல்களில் வேலை செய்ய வேண்டும்; அல்லது, நூல் நூற்று நெய்ய வேண்டும். எதையும் செய்யவில்லையென்றால் ஆடையின்றிப் பட்டினியாகத்தான் இருக்க வேண்டும் என்று மக்களிடம் அடித்துச் சொல்ல நான் தயங்கமாட்டேன். இந்தியா பூராவிலுமே உணவு, உடைப் பஞ்சம் ஏற்படும் நிலைமை இருக்கிறது என்பதை எல்லோரும் பத்திரிகைகளில் பார்த்திருக்கிறார்கள். என்னுடைய திட்டம் ஒப்புக்கொள்ளப்பட்டால், இந்தியாவில் மக்கள் தமக்காகவே உற்பத்தி செய்துகொண்ட உணவும், கதரும் போதிய அளவு இருப்பதைக் காணலாம். நிலத்தை உபயோகிக்கும் விதத்தில் அவர்களுக்குப் புத்திசாலித்தனமான உதவியளிக்கப்பட வேண்டும் என்பது உண்மைதான். நூற்பதற்கும், நெய்வதற்கும் வேண்டிய சாதனங்களும், அவற்றைச் சொல்லிக்கொடுப்பதற்கு ஆட்கள் முதலியவைகளும் வேண்டும். வங்காளத்தின் ஜலப் பிரச்னையில் தீவிர அக்கறை எடுத்துக்கொள்ள ஸ்ரீ கேஸியுடனும் (பிரிவினைக்கு முன்பு வங்காளக் கவர்னர்) இதைப் பற்றி விவாதிக்கவும் நான் தயங்கவில்லை. ஸ்ரீ கேஸி மிகப் பெரிய திட்டம் ஒன்று போட்டிருக்கிறார். அதை நிறைவேற்றுவதற்குப் பல வருடங்கள் ஆகும்; பணமும் ஏராளமாக வேண்டியிருக்கும். ஆனால், என்னுடைய திட்டம் அவ்வளவு பெரிதல்ல. செலவும் குறைவு. ஆனால் மிகவும் பலனளிக்கக்கூடிய திட்டம்" என்றார் காந்திஜி.

—'ஹரிஜன்' - 7—9—1947

['பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜியின் பிரசங்கங்களி'லிருந்து.]

# 19

# வறுமைக்கு ஒரே மருந்து வேலைதான்

கிராம ஊழியர்கள், பயிற்சிப் பள்ளிக்கூட மாணவர் களிடையே காந்திஜி பேசும்போது, வேலையில்லாப் பிரச்னை விஷயத்தில் இந்த நாட்டுக்கும், மேல் நாட்டுக்குமிடையே உள்ள வித்தியாசத்தை எடுத்துக் காட்டினர். "ஒரு வகையில் பார்த்தால், மேல்நாடுகளிலிருப்பதைப் போல் வேலையில்லாப் பிரச்னை நம் நாட்டில் அவ்வளவு கஷ்டமானதல்ல. வாழ்க்கை முறைதான் இதில் முக்கியமான காரணம். மேல்நாடுகளில் வேலையில் லாமல் இருப்பவர்களுக்கு அங்குள்ள சீதோஷ்ண நிலைமை காரணமாகக் கம்பளித் துணிகள் வேண்டும். மற்றவர்களைப் போலவே பூட்ஸு, கால் உறை வேண்டும். உஷ்ண வசதியுள்ள வீடும், மற்றும் பல வசதிகளும் வேண்டும். நமக்கு இவை யெல்லாம் வேண்டியதில்லை. நம் நாட்டிலுள்ள வேலையில்லாக் கஷ்டத்தையும், மோசமான வறுமையையும் பார்த்து நான் அழு திருக்கிறேன். ஆனல், நம்முடைய அறியாமையும், அலட் சியமுமே இதற்குப் பெரும்பாலும் காரணம் என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். உழைப்பின் கௌரவம் நமக்குத் தெரியவில்லை. செருப்புத் தைப்பவன் அதற்கதிகமாக எதையும் செய்யமாட்டான். மற்ற வேலைகளெல்லாம் தன் னுடைய கௌரவத்திற்குக் குறைவானது என்று நினைப்பான். இந்தத் தவருன எண்ணம் போக வேண்டும். தம்முடைய உடலை உழைத்து வேலை செய்யத் தயாராயிருப்பவர்கள் யாவருக்கும் இந்தியாவில் வேண்டிய வேலை இருக்கிறது. வேலை செய்வதற்கும், தன்னுடைய அன்ருட உணவுக்குத் தேவையானதைவிட அதிக மாகவே சம்பாதிப்பதற்கும் ஒவ்வொருவருக்கும் கடவுள் சக்தி யளித்திருக்கிருர். அந்தத் திறமையை உபயோகித்துக் கொள்ளும் ஒவ்வொருவருக்கும் நிச்சயமாக வேலை கிடைக்கும். நாணயமாகச் சம்பாதிக்க விரும்புபவனுக்கு எந்த வேலையும் கௌரவக் குறைவானதல்ல. கடவுள் கொடுத்திருக்கிற கைகளை யும், கால்களையும் உபயோகிக்கத் தயாராய் இருக்க வேண்டியது தான் முக்கியம்.

—'ஹரிஜன்' – 19—12—1936

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் 'வாராந்திரக் கடித'த்திலிருந்து எடுத்தது. 'நம் நாட்டில் வேலையில்லாமைக்குப் பரிகாரம்' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

# 20

## 'சமப்படுத்தும் ஒரு பெரிய சக்தி'

*தீண்டாமை ஒழிப்பு லட்சியத்தில் தங்களுக்கும் முழு அனுதாபம் இருக்கிறது என்பதைக் காட்டத் தொழிலாளர்கள் தயங்கவில்லை. பிலாஸ்பூரிலுள்ள பி. என். ரயில்வே தொழிலாளர் சங்கத்தில் வந்து பேசும்படி காந்திஜி அழைக்கப்பட்டிருந்தார்; ஹரிஜன் சேவைக்காக அவருக்கு ரூ. 500க்கு மேற்பட்ட ஒரு பண முடிப்பும் அளித்தார்கள். லட்சியத்தில் தமக்குள்ள அக்கறையைக் காட்டுவதற்காகத் தாம் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணத்தில் ஒரு பகுதியை அவர்கள் கொடுப்பது பற்றிக் காந்திஜி மகிழ்ச்சியடைந்தார். அங்கே அவர் செய்த பிரசங்கம் பூராவையும் கீழே தருகிறேன்:*

நான் தென்னாப்பிரிக்காவுக்குப் போனது முதற்கொண்டே தொழிலாளர்களுடன் எனக்கு நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். இந்தியாவிலோ, அல்லது உலகத்தின் மற்றப் பாகங்களிலோ, தம்மைப் போல் என்னையும் ஒரு தொழிலாளியாகக் கருதி என்னைத் தொழிலாளர்கள் வரவேற்றிருக்கிறார்கள். லங்காஷயர் தொழிலாளர்கூட, என்னைத் தம்மைச் சேர்ந்தவனாகப் பாவித்து, ஆயிரக்கணக்கில் வந்து என்னைச் சூழ்ந்துகொண்டார்கள் என்பது உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கலாம். இதில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. சந்தர்ப்பம் காரணமாக நீங்கள் தொழிலாளர்களாக வேண்டியிருந்தது. முடிந்தால் நீங்கள் எஜமானர்களாகவே இருக்க விரும்புகிறீர்கள். ஆனால், நான் என்னிச்சையாகத் தொழிலாளியானேன். எஜமானனாக வேண்டும் என்ற ஆசையை நான் ஆரம்பத்திலேயே விட்டுவிட்டேன். இல்லாவிட்டால், நானும் அந்தச் சிறு கூட்டத்தைச் சேர்ந்தவனாயிருப்பேன். இன்று இருப்பதைப் போல் இந்தியாவின் ஏழை, எளியவர்கள், ஓட்டாண்டிகள், அரைப் பட்டினிக்காரர்கள், நிர்க்கதியானவர்கள் முதலியவர்களுடன் என்னை நான் ஐக்கியப்படுத்திக்கொண்டிருக்க முடியாது. தொழிலாளர்கள் தம் கதியைப் பற்றி வருந்துவதையோ, ஏளனமாக நினைத்துக்கொள்ளுவதையோ நான் விரும்பவில்லை. உழைப்பின் கௌரவத்தை அவர்கள் உணரவேண்டும்.

ஹரிஜனங்களுக்காக ஆதரவு தெரிவித்து நீங்கள் பண முடிப்பு அளித்திருப்பது பொருத்தமானதே. அவர்களைப் போல் வேறு யார் அவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறார்கள்? ஏணியின் கடைசிப் படியில் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்பதை, அவற்றை அனுபவிக்காதவர்கள் கற்பனை செய்து பார்க்கக்கூட முடியாது.

என்றைக்காவது நாமும் பணம் சேர்த்து, எஜமானர்களாகிச் சமூகத்தில் அந்தஸ்து பெறலாம் என்று மற்றத் தொழிலாளர்கள் நினைக்கலாம். ஆனால், ஹரிஜனங்கள் அம்மாதிரி ஆசைப்படவே முடியாது. தாயின் வயிற்றில் கருவிலிருந்தது முதலே தீண்டாமை என்ற இழுக்கு அவர்களுக்கு ஏற்பட்டுவிடுகிறது. பிரஷ்டர்களாகவே அவர்கள் பிறக்கிறார்கள்; சாகும் வரையில் அப்படியேதான் இருக்கிறார்கள். அவர்கள் தனியாக ஒதுங்கி வாழவேண்டியிருக்கிறது. மற்றவர்கள் அனுபவிக்கும் வாழ்க்கை வசதிகள் அவர்களுக்கு மறுக்கப்படுகின்றன. கடவுள் இலவசமாய் அளித்துள்ள ஜலம்கூட அவர்களுக்கு மறுக்கப்படுகிறது. ஹரிஜனங்களுக்கும், உங்களுக்குமிடையே உள்ள எல்லாப் பாகுபாடுகளையும் ஒழித்துவிடும்படித் தொழிலாளர் சம்மேளனத்தை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அகமதாபாத்திலுள்ள மில் தொழிலாளர்களை எனக்கு நேரில் தெரியும். தொழிலாளர்களும், ஹரிஜனங்கள், ஹரிஜனங்கள் அல்லாதார் என்ற வித்தியாசம் பார்க்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். அதனால்தான் வேண்டும் என்றே இந்த வேண்டுகோளை விடுக்கிறேன். மற்றவர்கள் எப்படியிருந்தாலும், இந்த வித்தியாசங்களைத் தொழிலாளர்கள் அகற்றிவிட வேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன். தொழிலாளர்களின் மூலம் என்றைக்காவது ஒரு நாள் வகுப்பு ஒற்றுமை ஏற்பட்டுவிடும் என்பது என்னுடைய ஆழ்ந்த நம்பிக்கையாகும். தொழிலாளர்களிடம் ஒற்றுமையை வளர்க்கும் பெரிய சக்தி இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். அவர்கள் மூலம் ஏற்றத் தாழ்வுகள் சமப்படுத்தப்படுவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. தொழிலாளர்கள் யாவரும் உழைத்துச் சம்பாதிப்பவர்கள். ஆகவே, அவர்கள் யாவரும் ஒரு விரிவான சகோதரத்துவத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்களிடையே வகுப்பு வித்தியாசங்கள் இருப்பது பெரிய அவமானமாகும். ஆகவே, தீண்டாமையை அடியோடு ஒழிப்பதை அவர்கள் ஆரம்பிக்கட்டும். வகுப்பு ஒற்றுமைப் பாதையில் இது பெரிய முன்னேற்றமாக இருக்கும். ஹரிஜனங்களுக்குள்ள தடை நீக்கப்பட்டுவிட்டால், ஹிந்துக்கள், முஸ்லிம்கள், மற்றும் இதர வகுப்பினரிடையே இன்னும் விரிவான ஒற்றுமை ஏற்படுவதற்கான பாதை திறக்கப்பட்டுவிடும்.

—'ஹரிஜன்' – 8—12—1933

[ஸி. எஸ். எழுதிய 'வாராந்திரக் கடித'த்திலிருந்து.]

# 21

# பணியாட்களை நம்பியிருக்கும் நிலைமை

வீடுகளில் பணியாட்களை வைத்துக் கொள்ளும் வழக்கம் நீண்ட காலமாக இருந்துவருகிறது. ஆனால், எஜமானர் தம் வேலைக்காரரிடம் நடந்துகொள்ளும் விதம் அவ்வப்போது மாறிக்

கொண்டு வந்திருக்கிறது. வேலைக்காரர்களையும் தம் குடும்பத்தினரைப் போலவே சிலர் கருதுகிறார்கள்; மற்றும் சிலர், அவர்களை அடிமைகளைப் போல் நடத்துகிறார்கள். பொதுவாக, வேலைக்காரர்களின் விஷயத்தில் சமூகத்தின் மனப்பான்மை இந்த இரு முனைகளுக்குமிடையே இருக்கிறது என்று சொல்லலாம். இப்போதெல்லாம் வேலைக்காரர்களுக்கு எங்கும் நல்ல கிராக்கி இருக்கிறது. தம்முடைய அவசியத்தை அவர்களும் உணர ஆரம்பித்துவிட்டார்கள். அதனால் சம்பளம், வேலை நிலைமை முதலியவைகளைப்பற்றி அவர்களும் நிபந்தனைகள் போட ஆரம்பித்துவிட்டார்கள். இத்துடன் தம்முடைய கடமையையும் அவர்கள் சரியாக உணர்ந்திருந்தால், இந்த நிபந்தனை நியாயமாக இருக்கும். அப்படியானால், அவர்கள் வெறும் வேலைக்காரர்களாக இருக்கமாட்டார்கள்; குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற அந்தஸ்தையே அவர்கள் பெற்றுவிடுவார்கள். ஆயினும், பலாத்காரம் நல்ல பலனளிக்கும் என்ற நம்பிக்கை உலவி வருகிறது. அந்த நிலைமையில் எஜமானர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற அந்தஸ்தை வேலைக்காரர்கள் எப்படிப் பெற முடியும்? இது நியாயமான கேள்வியே.

மற்றவர்களுடைய ஒத்துழைப்பை விரும்பும் ஒருவர், மற்றவர்களுடன் தானும் ஒத்துழைக்க வேண்டும் என்று விரும்புபவர், வேலைக்காரர்களை நம்பியிருக்கக்கூடாது என்றே நான் கருதுகிறேன். வேலைக்காரர்களுக்குப் பஞ்சமா யிருக்கும் காலத்தில் ஒருவருக்கு வேலைக்காரன் வேண்டியிருந்தால், அவன் கேட்கும் சம்பளத்தையும், மற்ற நிபந்தனைகளையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டி யிருக்கும். அப்போது எஜமானனா யிருப்பதற்குப் பதிலாக எஜமானனே வேலைக்காரனாகிவிட வேண்டி யிருக்கும். இது எஜமானனுக்கோ, வேலைக்காரனுக்கோ நல்லதல்ல. ஆனால், நான் விரும்புவது, நம்மைப்போல் மற்றொரு மனிதனின் ஒத்துழைப்பையே அன்றி அடிமைத்தனத்தையல்ல என்றால், நமக்கு மட்டுமின்றி நாம் யாருடைய ஒத்துழைப்பை நாடுகிறோமோ அவர்களுக்கும் நல்லது செய்தவர்களாவோம். இந்தக் கொள்கையை விஸ்தரித்தால், ஒருவருடைய குடும்பம் உலகத்துடன் ஒட்டியதாக ஆகும். அதற்கேற்றவாறு மற்றவர்கள் விஷயத்தில் அவருடைய மனோபாவமும் மாறுதலடையும். நாம் விரும்பும் லட்சியத்தை அடைவதற்கு வேறு வழி ஒன்றுமில்லை.

இந்தக் கொள்கையைப் பின்பற்ற விரும்புபவர், சிறிய முறையில் ஆரம்பிப்பதுடன் திருப்தியடைவார். ஆயிரக்கணக்கானவர்களின் ஒத்துழைப்பை அதட்டிப் பெறுவதற்கு ஒருவருக்குத் திறமை இருக்கலாம். ஆனால், தனித்து நிற்பதற்கான தன்னடக்கமும், சுயமரியாதையும் அவரிடமிருக்க வேண்டும். இத்தகையவர் யாரையும் தனக்குக் கீழ்ப்பட்டவனாகப் பாவிக்க மாட்டார்; யாரையும் அடக்கியாளவும் முயற்சிக்கமாட்டார். தன்னுடைய வேலைக்காரர்களுக்குத் தான் எஜமானர் என்

பதையே அவர் அடியோடு மறந்துவிடுவார்; வேலைக்காரர்களையும் தன் அளவுக்கு உயர்த்துவதற்குத் தன்னாலியன்றவரையில் முயற்சி செய்வார். அதாவது, மற்றவர்களுக்குக் கிடைக்காதது தனக்கும் வேண்டாம் என்று அவர் திருப்தியடைந்துவிட வேண்டும்.

—'ஹரிஜன்' – 10—3—1946

[''யாருடைய தேவை?'' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

# 22

# வேலை, ஓய்வின் தத்துவம்

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் குறிப்புகள்' என்ற பகுதியில் 'அவருடைய கண்ணோட்டத்தின்படி' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

உழைப்பின் அலுப்புத்தட்டும் தன்மை, உழைப்பின் கௌரவம் முதலிய விஷயங்களைப் பற்றியே பெரும்பாலும் இப்போது காந்திஜியுடன் பேசுகிறார்கள். காந்திஜி கவனிக்க ஆரம்பித்துவிட்டால், மிகவும் சாதாரணமான விஷயங்கள்கூட மற்றவர்களுக்கு வியப்பாயிருக்கிறது. ''இதனுடைய பொருள் என்னவாக இருக்கக்கூடும்?" என்று கேட்கிறார்கள். அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கத்தை ஒவ்வொருவரும் தம்முடைய கண்ணோட்டத்துடனேயே பார்க்கிறார்கள். காந்திஜியின் இந்தப் புது முயற்சி எதைக் குறிக்கிறது என்று யோசிக்கிறார்கள். இதுதான் உண்மை.

இன்னொரு நண்பர் காந்திஜியைக் கேட்டார்: ''ஓய்வைப்பற்றி நீங்கள் சிந்திக்கவே இல்லை போல் தோன்றுகிறது. ஏழைகள் அளவுக்கு மீறி வேலை செய்தால், அவர்கள் சிந்தனை செய்வதற்கோ, உல்லாசமாகப் பொழுதைப் போக்குவதற்கோ அவகாசம் இல்லாமற் போய்விடுகிறது. இப்போது நீங்கள் அவர்களை இன்னும் அதிகமாக வேலை செய்யச் சொல்லுவது போல் இருக்கிறது.''

''உண்மையாகவா? அவர்களுக்குக் கட்டாயமாக இருந்து வரும் ஓய்வு நேரத்தை என்ன செய்வது என்று தெரியாமலிருப்பவர்களின் விஷயத்தையே இப்போது நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களுடைய நிர்ப்பந்த ஓய்வுதான் அவர்களை உயிரற்ற ஜடங்களாக்கியிருக்கிறது. மற்றவர்கள் தம்மைக் கூப்பிடுவதைக்கூடச் சிலர் விரும்புவதில்லை; அவர்களிடம் அவ்வளவு சோம்பேறித்தனம் இருக்கிறது.''

"தேவையுள்ளவர்களுக்கு நிச்சயம் வேலை கொடுப்பீர்கள். உங்களுக்குத் தேவையான மாவை நீங்களே அரைத்துக்கொள்ளுங்கள், உங்கள் அரிசியை நீங்களே குத்திக்கொள்ளுங்கள் என்று கூறுவதன் மூலம், அலுப்புத் தட்டக்கூடிய வேலைக்கு நீங்கள் அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள் அல்லவா?"

"ஒரு வேலையுமில்லாமல் சோம்பேறித்தனமாக இருப்பதைவிட இது அலுப்புத் தட்டக்கூடியதல்ல. வேலை செய்வதன் மூலம் நாம் சில காசு சம்பாதித்துத் தம் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதோடு, தேச மக்களின் ஆரோக்கியத்திற்கும் உதவி செய்கிறோம் என்பதை அவர்கள் உணரும்போது, வேலையில் அலுப்பு ஏற்படாது. இன்றைய தொழிற்சாலைகளில் வேலை செய்வதைவிட அது அலுப்புத் தட்டக்கூடியது அல்ல. ஏதோ ஒன்றை சிருஷ்டி செய்கிறோம் என்ற திருப்தியைக் குலைக்காத சாதாரண வேலைகூட அலுப்புத் தட்டாது. ஒரு பெரிய செருப்புத் தொழிற்சாலைக்குப் போய்ப் பாருங்கள். சிலர் அடிப்பட்டைகளைத் தயாரித்துக்கொண்டிருப்பார்கள், சிலர் மேல் பட்டைகளைச் செய்துகொண்டிருப்பார்கள்; மற்றும் சிலர் வேறு வேலைகளைச் செய்துகொண்டிருப்பார்கள். இது அலுப்புத் தட்டும் வேலைதான். ஏனெனில், அவர்கள் புத்திசாலித்தனமின்றி வேலை செய்கிறார்கள். ஆனால், செருப்பு பூராவையும் ஒருவரே தைத்தால், அந்த வேலை அலுப்புத் தட்டாது. அதில் அவருடைய வேலைத் திறனைக் காணலாம்; நாமே ஒன்றைச் சிருஷ்டிசெய்தோம் என்ற திருப்தியும் அவருக்கு இருக்கும். ஒரு வேலையை எந்த உணர்ச்சியுடன் செய்கிறோம் என்பதைப் பொறுத்தே எல்லாம் இருக்கிறது. எனக்கு வேண்டிய விறகை நானே உடைத்துக் கொள்ளவும், ஜலத்தை நானே இழுத்துக்கொள்ளவும் நான் தயார்தான். ஆனால், இதை நானே புத்திசாலித்தனத்துடன் செய்வதாய் இருக்க வேண்டும். பிறருடைய நிர்ப்பந்தம் காரணமாகச் செய்வதாக இருக்கக்கூடாது. புத்திசாலித்தனத்துடனும், உயர்ந்த நோக்கத்துடனும் செய்யும் எந்த வேலையும் மறு சிருஷ்டியாகவும், மனத்துக்குத் திருப்தியளிப்பதாகவும் இருக்கும்."

"மன்னிக்க வேண்டும். நாள் பூராவும் வெறும் உழைப்பே செய்ய வேண்டுமென்று வற்புறுத்துகிறீர்களே; அதனால் அவர்களுடைய புத்தி மழுங்கிப் போய்விடக் கூடுமல்லவா? எவ்வளவு மணி நேரம் உடலுழைப்பு அவசியம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?"

"நானே எட்டு மணி நேரம் வேலை செய்யத் தயாராயிருப்பேன்."

"உங்களைப் பற்றி நான் கேட்கவில்லை. மீதமுள்ள நேரத்தைச் செலவிடுவதற்கு வேண்டிய புத்தித் திறனும், சிருஷ்டி

சக்தியும் உங்களிடமிருக்கின்றன. உங்களை ஒரு விதி விலக்கா கவே கருத வேண்டும். எட்டு மணி நேரம் நூற்றுக்கொண்டிருப் பதும் உங்களுக்குத் திருப்தியளிக்கும் என்பதை நான் அறிவேன்.''

"இல்லை. எட்டு மணி நேரம் வேலை செய்வதில் யாவருமே திருப்திப்படவேண்டும் என்று நான் விரும்புகிறேன். எந்த உணர்ச்சியுடன் நாம் வேலை செய்கிறோம் என்பதைப் பொறுத்தே எல்லாம் இருக்கிறது. மனப்பூர்வமாக எட்டு மணி நேரம் நன்றாக வேலை செய்த பிறகும், புத்தியை உபயோகிக்க வேண்டிய வேலைகளுக்கும் போதிய அவகாசம் கிடைக்கும். சோம்பேறித்தனத்தைப் போக்க வேண்டும் என்பதே என்னு டைய நோக்கமாகும். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராம வாசியும் தன்னுடைய உழைப்பினால் மாதம் இருபது ரூபாய் சம்பாதிக்கிறார்கள் என்று நான் உலகத்திற்குச் சொல்ல முடிந் தால் அதுவே எனக்குப் பரம திருப்தியாக இருக்கும்."

—'ஹரிஜன்' – 8—3—1935

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் குறிப்புகள்' என்ற பகுதி யில் 'அவருடைய கண்ணோட்டத்தின்படி' என்ற தலைப்பில் முதலில் வெளி யானது.]

# 23

# ஓய்வின் கவர்ச்சி

ஓய்வு என்பது என்ன என்று ஸ்ரீ எல். பி. ஜாக்ஸ் கொடுத் துள்ள வியாக்கியானத்தைக் கொஞ்ச காலத்திற்கு முன்பு வெளி யிட்டிருந்தேன் : ''ஒரு மனிதனின் உள்ளத்தைக் கைப்பற்றுவ தற்குத் தூய்மையும், தீமையும் மிகக் கடுமையாகப் போராடும் காலம்" என்று அவர் கூறியதைக் குறிப்பிட்டு, அவர் கொடுத் திருந்த புள்ளி விவரங்களின் ஆதாரத்துடன் ஓய்வு என்பது எவ்வளவு கஷ்டமான ஒரு கலை என்பதைக் காட்ட முயற்சி செய் தேன். ஒவ்வொரு பிரஜைக்கும் நிறைய ஓய்வு இருக்க வேண்டும் என்று விரும்புபவர் ஸ்ரீ பெர்ட்ரான்ட் ரஸ்ஸல். வேலை செய்யும் நேரத்தை நான்கு மணியாகக் குறைத்துவிடவேண்டும் என்று அவர் சொல்லுகிறார். மதிப்பிற்குரிய நண்பர் ஒருவர், அன்றொரு நாள் காந்திஜியுடன் பேசிக்கொண்டிருந்தபோது, ஓய்வு நேரப் பிரச்னை அவ்வளவு கடினமானதா என்று ஆச்சரியப்பட்டார். ''தினம் எட்டு மணி நேரம் உடலுழைப்புச் செய்ய வேண்டும் என்று ஏன் வற்புறுத்துகிறீர்கள்?'' என்று அவர் கேட்டார். ''சீரான ஒரு சமூக அமைப்பில் வேலை நேரத்தை இரண்டு மணி நேரமாகக் குறைத்துவிட்டுப் பிரஜைகள் தமது புத்தியையும்

கலை உணர்ச்சியையும் திருப்தி செய்யக்கூடிய காரியங்களில் ஈடுபடுவதற்கு நிறைய அவகாசம் தேடித் தருவது சாத்திய மில்லையா?'' என்று கேட்டார்.

''அவ்வளவு அவகாசம் பெறுபவர்கள் தொழிலாளர்களா யிருந்தாலும், படித்தவர்களாயிருந்தாலும், அந்த நேரத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளுவதில்லை என்பதை நாம் அறிவோம். வேலையில்லாமல் சோம்பி யிருப்பவர்களே கெட்டுப் போய்விடுகிறுர்கள் என்பதைப் பார்க்கிறோம்.''

'' இல்லை. சோம்பேறித்தனமாய் இருப்பதற்கு இடம் கொடுக்கமாட்டோம். ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரம் உட லுழைப்பு, ஆறு மணி நேரம் புத்திபூர்வமான உழைப்பு என்று பிரித்துவிட்டால் அது தேசத்திற்கே நல்லதல்லவா ?"

''அது அனுபவ சாத்தியமாக இருக்குமா என்று எனக்குத் தெரியாது. அதை அவ்வளவு கருராக நான் கணக்குப்போட்டுப் பார்த்ததில்லை. ஆனல் ஒரு மனிதன் சமுதாயத்திற்காகவல் லாமல், தன்னுடைய சொந்த நலன்களுக்காக மட்டுமே தன் புத்தியை உபயோகித்தால், அத்திட்டம் நிச்சயம் சீர்குலைந்து விடும். அப்படிச் சீர்குலையாமலிருக்க வேண்டுமானல், அந்த இரண்டு மணிநேர வேலைக்குச் சர்க்கார் அவருக்கு ஏராளமாகக் கொடுப்பதாயிருக்க வேண்டும்; மேற்கொண்டு ஒன்றும் கொடுக் காமல் மீதமுள்ள வேலையைச் செய்யும்படி கட்டாயப்படுத்துவ தாயிருக்க வேண்டும். அது நன்ருய்த்தான் இருக்கும். ஆனல், கட்டாய சேவைத் திட்டம் இல்லாமல் அது சாத்தியமா யிராது."

''உங்களைப் பற்றியே பேசுவோம். நீங்கள் எட்டு மணி நேரம் உடலுழைப்பு செய்வது என்பது சாத்தியமில்லை. நீங்கள் எட்டு மணி நேரத்திற்கு அதிகமாகவே மூளையை உபயோகித்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. உங்களுடைய ஓய்வு நேரத்தை நீங்கள் வீணடிப்பதில்லை ?''

''இது கட்டாயமான வேலை. நான் டென்னிஸ் ஆடப் போனல் அங்கே கொஞ்சம் ஓய்வு கிடைக்கும். அது மாதிரி இதில் கிடைப்பதில்லை. என்னைப்பற்றியே பேசுவோம். நாம் எட்டு மணி நேரம் உழைத்தால் நம் மனம் இன்னும் நன்ருயிருக் கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. அப்போது நம் மனத்தில் ஒரு வீண் சிந்தனைக்குக்கூட இடமிராது. இப்போது என் மனத்தில் அத்தகைய வீண் எண்ணங்களே இல்லை என்று சொல்லுவதற்கில்லை. அதிக இளம் பிராயத்திலேயே உட லுழைப்பின் மதிப்பை நான் உணர்ந்துவிட்டதால்தான் இப் போது இப்படி இருக்கிறேன்."

''உடலுழைப்பில் உண்மையாகவே அவ்வளவு மதிப்பு இருப் பதாயிருந்தால், தினம் எட்டு மணி நேரத்திற்கு அதிகமாகவே வேலை செய்து வந்திருக்கும் நமது மக்களின் மனச் சுத்தமோ,

உறுதியோ குறிப்பிடத்தக்க அளவு அபிவிருத்தி அடைந்திருப்ப தாகத் தெரியவில்லையே?''

''மூளையை உபயோகித்து வேலை செய்வதோ, உடலுழைப்பு செய்வதோ மட்டும் அறிவு வளர்ச்சியாகிவிடாது. நமது மக்கள், தம்மையறியாமலே கடனுக்கு வேலை செய்திருக்கிறார்கள். அதனால், தராதர உணர்ச்சிகள் மழுங்கிவிடுகின்றன. உயர் வகுப்பு ஹிந்துக்கள் விஷயத்தில் எனக்குள்ள பலமான ஆட்சே பணை இதுதான். பாமர மக்களின் வேலைகளை அவர்கள் ருசியற் றவைகளாகச் செய்துவிட்டார்கள்; அந்த வேலைகளில் மக் களுக்கு மகிழ்ச்சியோ, அக்கறையோ இல்லை. அவர்களும் சமூ கத்தில் மற்றவர்களைப்போல் சம அந்தஸ்துள்ளவர்களாகக் கரு தப்பட்டிருந்தால், அவர்களுடைய நிலைமை மிகவும் பெருமைப் படத்தக்கதாய் இருந்திருக்கும். ஆனால், இது கலியுகம். சத்திய யுகத்தில், சமூக அமைப்பு இன்று இருப்பதைவிட மிக நன்றாக இருந்திருக்க வேண்டும் என்பதே என்னுடைய துணிபு. நம் நாடு ஒரு புராதனமான நாடு. எவ்வளவோ விதமான நாகரிகங்களை நாம் பார்த்திருக்கிறோம். ஒரு குறிப்பிட்ட காலத்தில் நம் நாடு எப்படி இருந்ததென்று சொல்லுவது கஷ்டமாயிருக்கும். ஆனால், நீண்ட காலமாக நாம் சூத்திரங்களைப் புறக்கணித்துவிட்டதால் தான் நாம் இன்று இந்த நிலைமையில் இருக்கிறோம் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. இன்று கிராமங்களில் நிலவி வரும் கலாசாரத்தை அப்பெயர்கொண்டு அழைக்க முடியும் என்றால், அது மிகவும் மட்ட ரகமான கலாசாரமே. கிராமவாசிகள் மிரு கங்களைவிடக் கேவலமாக வாழ்கிறார்கள். மிருகங்கள் இயற்கை யாக வாழ்கின்றன. அது இயற்கையின் நியதி. ஆனால், நமது தொழிலாளர்கள், இயற்கையாகவே வேலை செய்து வாழ முடி யாமல் நாம் அவர்களைச் சிறுமைப்படுத்தியிருக்கிறோம். நமது மக்கள் விஷய அறிவுடனும் மகிழ்ச்சியுடனும் வேலை செய் திருந்தால், இன்று நாம் முற்றிலும் வேறு விதமாக இருந் திருப்போம்.''

''அப்படியானால், வேலையையும், கலாசாரத்தையும் பிரிக்க முடியாதா?''

''முடியாது. முன்பு ரோமாபுரியில் அப்படிச் செய்து பார்த்துப் பரிதாபமாகத் தோல்வியடைந்தார்கள். உழைப் பில்லாத கலாசாரம், அல்லது உழைப்பின் பலனையில்லாத கலா சாரம் வாந்தி எடுத்ததற்குச் சமமாகும் என்று ஒரு ரோமன் கத் தோலிக்க எழுத்தாளர் கூறியிருக்கிறார். ரோமாபுரிவாசிகள் புலன் நுகர்ச்சியை ஒரு வழக்கமாக வளர்த்துக்கொண்டார்கள். அதனால், அவர்கள் நாசமடைந்தார்கள். நாள் பூராவும் எழுதிக் கொண்டு அல்லது படித்துக்கொண்டு அல்லது பிரசங்கம் செய்து கொண்டிருப்பதால் மட்டும் மனிதனின் மனம் வளர்ச்சி பெற்று விட முடியாது. என்னுடைய படிப்பெல்லாம் நான் சிறையில் இருக்கும்போது கிடைத்த அவகாசத்தில் படித்ததுதான். ஏதோ

படிக்கிறோம் என்று இல்லாமல், ஒரு நோக்கத்துடன் படித்ததால் தான் நான் பயன் பெற்றேன். தினம் எட்டு மணி நேரம் வீதம் நான் மாதக் கணக்கில் தொடர்ந்து வேலை செய்துமிருக்கிறேன். அதனால் என்னுடைய சிந்தனைத் திறன் பாதிக்கப்படவில்லை. பல சமயங்களில் நான் ஒரு நாளைக்கு 40 மைல் தூரம் நடந்திருக்கிறேன். ஆனால், எனக்கு அலுப்புத் தட்டியதே இல்லை.''

''ஆனால், அதற்கு வேண்டிய அறிவுத் திறன் உங்களுக்கு இருந்தது.''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. பள்ளிக்கூடத்திலும், இங்கிலாந்திலும் நான் எவ்வளவு சாதாரணமாயிருந்தேன் என்பது உங்களுக்குத் தெரியாது. விவாதச் சங்கங்களின் கூட்டங்களிலோ, சைவ உணவினர் கூட்டங்களிலோகூடப் பேசுவதற்கு எனக்குத் தைரியமே இருந்ததில்லை. எனக்கேதோ அசாதாரணமான சக்தி இருந்தது என்று நினைக்காதீர்கள். கடவுள் வேண்டுமென்றேதான் பிரசங்கம் செய்யும் சக்தியை அப்போது எனக்கு அளிக்கவில்லை என்று நினைக்கிறேன். நம்முள் மிகக் குறைவாகப் படித்தவன் நான்தான் என்பதை நீங்கள் அறியவேண்டும்.''

—'ஹரிஜன்' - 1—8—1936

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

## 24

# ஓய்வின் விலை

அந்த ஊழியர் சொன்னார்: ''என்னுடைய கஷ்டம் இதுதான். நம் கிராமங்களிலுள்ளவர்கள் காலையிலிருந்து மாலைவரையில் ஓய்வே இல்லாமல் மாடுகளைப்போல் உழைக்கிறார்கள். அப்படியும் அவர்களுக்கு உண்பதற்குப் போதுமான அளவு கிடைப்பதில்லை. ஆனால், அவர்கள் மேலும் அதிகக் கைவேலை செய்ய வேண்டுமென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்.''

''நீங்கள் சொல்லுவது எனக்குப் புதிதாகவே இருக்கிறது. எனக்குத் தெரிந்த கிராமங்களில், ஏராளமான நேரம் வீணாக்கப்படுகிறது. ஆனால், நீங்கள் சொல்லுவதுபோல் அளவுக்கு மீறி வேலை செய்பவர்களும் இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்கு நான் சொல்லுவது இதுதான்: அதாவது, அவர்கள் எட்டு மணி நேரம்தான் வேலை செய்ய வேண்டும். ஆனால், வாழ்க்கைக்குத் தேவையான அளவுக்குக் குறைந்த ஊதியத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடாது.''

“யந்திரங்களை ஒப்புக்கொண்டாலென்ன? அவற்றிலுள்ள நல்ல அம்சங்களை ஏற்றுக்கொண்டு, கெட்ட அம்சங்களை நீக்கி விடலாமே?”

“நம்முடைய மனித யந்திரங்களை வேலையில்லாமல் வைத்திருக்க முடியாது. நம் நாட்டில் ஏராளமான மனித சக்தி வேலை இன்றிச் சோம்பிக் கிடக்கிறது. அப்படி இருக்க, விசையின் மூலம் ஓடும் மற்ற யந்திரங்களுக்கு இங்கே இடமில்லை.”

“அந்த விசை யந்திரங்களை நமக்கு எவ்வளவு நேரம் அவசியமோ அந்த அளவு மட்டும் ஓட்டலாமே.”

“அப்படியென்ருல்? ஓர் உதாரணம் பார்ப்போம்; துணி உற்பத்திக்கென்றே சில ஆலைகள் இருக்கின்றன; அங்கே சுமார் 30 லட்சம் பேர்களுக்கு வேலை கொடுக்கப்படுகிறது; நமக்கு வேண்டிய துணி பூராவும் அந்த மில்களில் உற்பத்தி செய்யப்படுகிறது; அங்கே கிடைக்கும் லாபமெல்லாம் அவர்களுக்கே விநியோகம் செய்யப்படுகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்போது நிலைமை என்ன? நூறு வருடங்களுக்கு முன்பு 30 கோடி மக்கள் பகிர்ந்துகொண்டிருந்த பணத்தை இப்போது 30 லட்சம் பேர் பகிர்ந்துகொள்ளுவார்கள் என்று ஆகிறது.”

“இல்லை. நமது தேவைக்கு எவ்வளவு அவசியமோ அதற்கதிகமாக மக்கள் வேலை செய்யக்கூடாது. நாமெல்லோருக்குமே ஏதாவது வேலை அவசியம். ஆனல், தினம் இரண்டு மணி நேரத்திற்கு அதிகமாக ஏன் வேலை செய்ய வேண்டும்? மீதமுள்ள நேரத்தையெல்லாம் ஏதாவது இன்பமான வேலைகளில் செலவிட்டாலென்ன?”

(இந்த சம்பாஷணை பூராவும் ஹிந்துஸ்தானியில் நடந்தது. என்னல் முடிந்தவரையில் அவருடைய வாதங்களைக் கொடுக்கிறேன்.)

“அப்படியானல், நம் மக்கள் தினம் ஒரு மணி நேரம் வேலை செய்தாலே நீங்கள் திருப்தியடைந்து விடுவீர்கள்?”

“அதற்குத் திட்டம் வகுக்க வேண்டும். ஆனல், ஒரு மணி நேரம் வேலை செய்தாலே எனக்குத் திருப்திதான்.”

“அதுதான் சங்கடம். எல்லோரும் தினம் எட்டு மணி நேரம் பலனுள்ள வேலைகளில் ஈடுபட்டாலொழிய எனக்குத் திருப்தியே ஏற்படாது.”

“சரி, குறைந்த பட்சம் எட்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்று ஏன் வற்புறுத்துகிறீர்கள்?”

“ஏனென்ருல், வேலை செய்ய வேண்டும் என்பதற்காக மக்கள் வேலை செய்ய மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். தம் உணவுக்காக உழைக்க வேண்டும் என்ற தூண்டுதலிருந்தா

லொழிய உழைப்பதற்கு அவர்களுக்கு ஊக்கமிராது. 'உங்களுக்கு வேண்டிய உணவு தானியங்களையெல்லாம் நாங்களே கொடுக்கிறோம். நீங்கள் வேலை செய்யவே வேண்டாம். எங்களுடைய பரோபகார சிந்தனையைக் காட்டுவதற்கு வாய்ப்பளியுங்கள்' என்று அமெரிக்காவிலிருந்து சில லட்சாதிபதிகள் வந்து நம்மை வேண்டிக்கொள்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்களுடைய அந்த அன்பளிப்பைத் தயக்கமின்றி நான் நிராகரித்துவிடுவேன்."

"அந்த அன்பளிப்பு உங்களுடைய சுயமரியாதையைப் பாதிக்கும் என்பதற்காக நிராகரிப்பீர்கள்."

"இல்லை. அதனால் மட்டுமல்ல. அது நம்முடைய வாழ்க்கையின் அடிப்படையையே பாதிக்கிறது. நம்முடைய உணவுக்கு நாம் உழைக்கவேண்டும், நாம் உடலை வருத்திச் சம்பாதித்த உணவையே உண்ண வேண்டும் என்பது வாழ்க்கையின் அடிப்படை தருமம்."

"அது உங்களுடைய சொந்த நியதிதானே? சமூக அமைப்பு எப்படி இருக்கவேண்டும் என்பதைச் சமூகத்தினிடமே விடப் போகிறீர்களா, அல்லது சில நல்ல வழிகாட்டிகளிடம் விடப் போகிறீர்களா?"

"சில நல்ல வழிகாட்டிகளிடமே அதை விட்டுவிடுவேன்."

"அதாவது, நீங்கள் சர்வாதிகாரத்தை ஆதரிக்கிறீர்கள் என்றாகிறது."

"இல்லை. அகிம்சையே என்னுடைய அடிப்படைக் கொள்கை. எந்தத் தனி நபரையோ, அல்லது பிரிவினரையோ நான் நிர்ப்பந்தப் படுத்தமாட்டேன். வழி காட்டுவதென்பது சர்வாதிகாரமல்ல."

இந்த வாதப்பிரதிவாதம் சகிக்க முடியாத அளவுக்குப் போயிருக்கக்கூடும். ஆனால், காந்திஜிக்கு அன்று அதற்குமேல் அவகாசமில்லை. அந்த நண்பர் அன்று அத்துடன் திருப்தியடைய வேண்டியிருந்தது.

—'ஹரிஜன்' – 17—12—1935

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

பகுதி மூன்று

# பொருளாதார சமத்துவம்

## 1

## பொருளாதார சமத்துவத்தின் பொருள்

காந்திஜி சமீபத்தில் சென்னையில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது நிர்மாண ஊழியர்கள் மகாநாட்டில், "பொருளாதார சமத்துவம் என்பதன் சரியான பொருள் என்ன?" என்று அவரிடம் கேட்கப்பட்டது.

பொருளாதார சமத்துவம் என்றால், எல்லோரிடமும் ஒரே அளவு தொகை இருக்கும் என்பது தம்முடைய கருத்தல்ல என்று காந்திஜி பதிலளித்தார். அவரவர்களுடைய தேவைக்குத் தகுந்தாற்போல் எல்லோருக்கும் கிடைக்கும் என்பதே அதன் பொருள் என்றார். உதாரணமாக, குளிர்காலத்தில் அவருக்கு இரண்டு சால்வைகள் வேண்டியிருக்கின்றன. ஆனால், அவருடைய மகனைப் போன்றவரும், அவருடன் தங்கியிருப்பவருமான கனு காந்திக்கு கம்பளித் துணிகளே வேண்டியதில்லை. காந்திஜிக்கு ஆட்டுப் பால், ஆரஞ்சுப் பழங்கள், வேறு வகைப் பழங்கள் வேண்டியிருக்கின்றன. கனு காந்திக்குச் சாதாரண உணவு இருந்தால் போதும். கனுவைப் பார்க்கும்போது அவருக்குப் பொறாமையாயிருந்தது; ஆனால், அதில் அர்த்தமில்லை. கனு காந்தி இளைஞர்; காந்திஜி 76 வயதாகிவிட்ட வயோதிகர். கனு காந்தியை விட அவருடைய மாதாந்தரச் சாப்பாட்டுச் செலவு அதிகம். ஆனால், அதனால் அவ்விருவருக்குமிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வு இருந்தது என்று பொருளில்லை. எறும்பைவிட யானைக்கு ஆயிரம் மடங்கு அதிகமான உணவு வேண்டியிருக்கிறது; ஆனால், அது சமத்துவமின்மைக்கு அடையாளமில்லை. ஆகையால், 'ஒவ்வொருவருக்கும் அவருடைய தேவைக்குத் தகுந்த அளவு' என்பதே பொருளாதார சமத்துவத்தின் உண்மையான பொருளாகும். அதுதான் மார்க்ஸின் வியாக்கியானமும். ஒரு மனைவி, நாலு குழந்தைகள் உள்ள ஒருவருக்குத் தேவையாக இருப்பதை ஒரு தனி மனிதன் கோரினால் அது பொருளாதார சமத்துவத்தை மீறுவதாகும்.

"பணக்காரர்களுக்கும், ஏழைகளுக்கும், அரசனுக்கும் ஆண்டிக்குமிடையே உள்ள பெரும் ஏற்றத்தாழ்வுகளுக்கு யாரும் சமாதானம் கூற முற்பட வேண்டாம். பணக்காரர்களுக்கு மேலும்

அதிகமாகத் தேவையாயிருக்கிறது என்று சொல்லவேண்டாம். அது அர்த்தமில்லாத வாதமாகும். பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமிடையே இன்றுள்ள வித்தியாசம் பரிதாபகரமான காட்சியாக இருக்கிறது. ஏழைக் கிராமவாசிகளை அந்நிய சர்க்கார் சுரண்டுகிறது' நகரங்களிலுள்ள நம் நாட்டினரும்கூடச் சுரண்டுகிறார்கள். அவர்கள் உணவுப் பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். ஆயினும், அவர்கள் பட்டினி கிடக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் பால் உற்பத்தி செய்கிறார்கள்; ஆனால், அவர்களுடைய குழந்தைகளுக்குப் பால் கிடைப்பதில்லை. இது வெட்கக் கேடானது. ஒவ்வொருவருக்கும் முறைப்படியான ஆகாரம் கிடைக்க வேண்டும்; வசிப்பதற்கு நல்ல வீடு ஒன்று வேண்டும்; குழந்தைகள் படிப்பதற்கு வசதிகளும், வைத்திய வசதிகளும் வேண்டும்." இதுதான் பொருளாதார சமத்துவம் என்று காந்திஜி கருதினர். அத்தியாவசியமான வாழ்க்கைத் தேவைக்கு மேல் ஒன்றுமே கூடாது என்று அவர் தடை செய்ய விரும்பவில்லை. ஆனால், ஏழைகளின் அத்தியாவசியமான தேவைகளைத் திருப்தி செய்த பிறகே அவற்றைக் கவனிக்கவேண்டும். முதலில் கவனிக்க வேண்டியதைக் கவனித்தாக வேண்டும்.

— 'ஹரிஜன்' —31—3—1946

## 2

# பொருளாதார சமத்துவத்திற்காக வேலை செய்தல்

அகிம்சாபூர்வமான சுதந்திரத்திற்குக் கடைசி இனம்தான் திறவுகோல். பொருளாதார சமத்துவத்திற்காக வேலை செய்வதென்பது, முதலாளிகளுக்கும், பாட்டாளிகளுக்குமிடையே உள்ள நிரந்தரமானதான முரண்பாட்டை ஒழிப்பதாகும். ஒருபுறம் ஒரு சில பணக்காரர்களிடம் தேசத்தின் செல்வத்தில் பெரும் பகுதி குவிந்து கிடக்கிறது: மற்றொருபுறம், கோடிக்கணக்கான மக்கள் உடுக்க உடையின்றி, உண்ண உணவின்றி வாழ்கிறார்கள். இதைச் சமப்படுத்துவதுதான் பொருளாதார சமத்துவம். பணக்காரர்களுக்கும், பட்டினி கிடக்கும் ஏழைகளுக்குமிடையே உள்ள பெரும் ஏற்றத்தாழ்வு தொடர்ந்து நீடிக்கும் வரையில் அகிம்சை வழியில் அரசாங்கத்தை நடத்துவது அசாத்தியமானது என்பது தெளிவு. புதுடில்லியிலுள்ள அரண்மனைகளுக்கும், ஏழைத் தொழிலாளர்களின் குடிசைகளுக்குமிடையே உள்ள வித்தியாசம் சுதந்திர இந்தியாவில் ஒரு நாளைக்குக்கூட நீடிக்க முடியாது. சுதந்திர இந்தியாவில், நாட்டிலுள்ள பெரும் பணக்காரர்களுக்குள்ள அதே அதிகாரம் ஏழைகளுக்குமிருக்கும். செல்வத்தையும்,

செல்வத்தின் மூலம் கிடைக்கும் அதிகாரத்தையும் அவர்களாக விட்டுக் கொடுத்து, பொது நன்மைக்காகப் பகிர்ந்து கொண்டாலொழிய என்றைக்காவது ஒரு நாள் பலாத்காரப் புரட்சி ஏற்பட்டே தீரும். என்னுடைய தருமகர்த்தா கொள்கையைப் பலர் கேலி செய்கிறார்கள். இருந்தாலும், அதையே நான் வற்புறுத்துகிறேன். அதை அடைவது கஷ்டமானது என்பது உண்மைதான். அதே மாதிரி அகிம்சையில் வெற்றிபெறுவதும் கஷ்டம்தான். ஆயினும், செங்குத்தான அந்தப் பாதையில் ஏறுவதென்று 1920-இல் நாம் தீர்மானித்தோம். அதனால் பலன் ஏற்பட்டிருப்பதையும் பார்த்திருக்கிறோம்.

அகிம்சை செயல்படும் விதத்தை அன்றாடம் மேலும் மேலும் நன்கு உணருவது அவசியமாகும். இந்த வேலையை நாம் ஏன் செய்கிறோம் என்று காங்கிரஸ்காரர்களும் தாமே யோசித்துப் பார்க்க வேண்டும். என்ன செய்ய வேண்டும் என்று அவர்களுக்கு அவ்வப்போது கட்டளைகள் கொடுக்கப்படுகின்றன. மனப்பூர்வமாகவோ, அரை மனத்துடனோ அவற்றை நிறைவேற்றுவதோடு மட்டும் அவர்கள் திருப்தியடைந்து விடக்கூடாது. இப்போதுள்ள ஏற்றத் தாழ்வுகளைச் சாத்விக வழியிலோ, பலாத்கார வழியிலோ எப்படி அகற்றலாம் என்பதை அவர்களாக யோசித்துப் பார்க்க வேண்டும். பலாத்கார வழி நமக்குத் தெரியும் என்றே நான் நினைக்கிறேன். அது எங்குமே வெற்றி பெறவில்லை. அது ரஷியாவில் பெரும் அளவில் வெற்றி பெற்றிருப்பதாகச் சிலர் சொல்லுகிறார்கள். அதை நான் நம்பவில்லை. வெற்றிதான் என்று ஆட்சேபிக்க முடியாத வகையில் இதற்குள்ளாகவே சொல்லிவிட முடியாது. ரஷியாவுக்கும், ஜெர்மனிக்குமிடையே இப்போது யுத்தம் மூண்டு விட்டதால், இறுதி முடிவு எப்படி இருக்கும் என்று நாம் சொல்ல முடியாது.

நம்முடைய சாத்விகப் பரீட்சை உருவாகும் கட்டத்திலேயே தான் இன்னும் இருக்கிறது. செயலில் காட்டுவதற்கு இன்னும் நம்மிடம் ஒன்றுமில்லை. ஆனால், நான் பார்த்ததிலிருந்து சமத்துவப் பாதையில் இது மெதுவாக வேலை செய்ய ஆரம்பித்து விட்டது என்றே தோன்றுகிறது. அகிம்சை என்பது பிறருடைய மனத்தை மாற்றும் ஒரு முறையாகும். ஆகவே, இந்த மனமாற்றம் ஏற்பட்டால் அது நிரந்தரமானதாக இருக்க வேண்டும். அகிம்சை முறையில் அமைக்கப்பட்ட ஒரு சமுதாயமோ, நாடோ, உள்ளிருந்தோ வெளியிலிருந்தோ ஏற்படும் தாக்குதல்களைச் சமாளிக்கக்கூடியதாய் இருக்க வேண்டும். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் பணக்காரர்களும் இருக்கிறார்கள். அவர்கள்தான் வழிகாட்ட வேண்டும். கடைசிப் போராட்டமாக இது கருதப்படுகிறது. ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் ஆன்ம சோதனை செய்துகொள்ளுவதற்கு இது சந்தர்ப்பமளிக்கிறது. என்றைக்காவது ஒரு நாள் நாம் சமத்துவ லட்சியத்தை அடையவே போகிறோமென்றால், அதற்கு இப்பொழுதே அஸ்திவாரம் போட வேண்டும். சுய

ராஜ்யம் கிடைத்த பிறகு பெரிய சீர்திருத்தங்கள் வரும் என்று நினைப்பவர்கள், அகிம்சாபூர்வமான சுயராஜ்யத்தின் அடிப்படையான செயல்முறைகளையே அறியாதவர்களாவார்கள். திடீரென்று ஒரு நாள் காலை அது ஆகாயத்திலிருந்து குதித்துவிடப் போவதில்லை. எல்லோரும் ஒன்றுபட்டு தாமாகவே முயற்சி செய்து, படிப்படியாக அதைக் கட்ட வேண்டும். அந்தப் பாதையில் நாம் கணிசமான தூரம் முன்னேறி வந்திருக்கிறோம். ஆனால், ராஜ்யத்தின் கம்பீரமான தோற்றத்தைப் பார்ப்பதற்கு இன்னும் வெகுதூரம் பிரயாணம் செய்யவேண்டும். பொருளாதார சமத்துவம் என்ற லட்சியத்தை அடைவதற்கு நாம் என்ன செய்திருக்கிறோம் என்பதை ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தன்னைத்தானே கேட்டுக்கொள்ள வேண்டும்.

—'நிர்மாண வேலைத் திட்டம்' (1941 பதிப்பு), பக்கம் 18

['பொருளாதார சமத்துவத்திற்காக வேலை செய்தல்'—அத்தியாயம் 2. தலைப்பு 13-லிருந்து சில பகுதிகள்.]

## 3

## காந்தீய வழியும், கம்யூனிஸ்ட் வழியும்

**கேள்வி:** பொருளாதார சமத்துவம் என்ற லட்சியத்தை அடையும் விஷயத்தில் உங்களுடைய வழிக்கும், கம்யூனிஸ்டு அல்லது சோஷலிஸ்டு வழிகளுக்குமிடையே உள்ள வித்தியாசம் என்ன?

**பதில்:** இன்று பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்துவதற்குத் தாங்கள் ஒன்றும் செய்ய முடியாது என்று சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் சொல்லுகிறார்கள். அதை ஆதரித்துப் பிரசாரம் மட்டும்தான் செய்வார்களாம். அதற்கு வேண்டிய வெறுப்பு உணர்ச்சியைச் சிருஷ்டித்து, வளர்க்க வேண்டும் என்று நம்புகிறார்கள். 'ராஜ்ய நிர்வாகம் கிடைக்கும்போது சமத்துவத்தை அமுல் நடத்துவோம்' என்றும் அவர்கள் கூறுகிறார்கள். என்னுடைய திட்டத்தின்படி மக்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகத்தான் அரசாங்கம் இருக்குமேயொழிய, தன்னிஷ்டப்படி மக்கள் நடந்துகொள்ள வேண்டும் என்று கட்டாயப்படுத்துவதற்கல்ல. சாத்விக முறைகளை உபயோகித்து, துவேஷத்திற்குப் பதிலாக அன்பு உணர்ச்சிகளைத் திரட்டி, மக்களை என் பக்கமாகத் திருப்புவதன் மூலம் நான் பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்துவேன். சமூகம் பூராவையும் என் பக்கமாகத் திருப்பும் வரையில் இதற்காகக் காத்துக்கொண்டிருக்க மாட்டேன். என்னையே முதல் உதாரணமாக

வைத்துக்கொண்டு ஆரம்பித்துவிடுவேன். ஆனால், நான் ஐம்பது மோட்டார்களும், பதினைந்து ஏக்கரா நிலமும் வைத்துக்கொண்டிருந்தால், நான் கற்பனை செய்யும் பொருளாதார சமத்துவத்தை ஸ்தாபிக்க முடியாது. அதற்காக என்னை ஏழைக்கும் ஏழையாய்க் குறைத்துக்கொள்ள வேண்டும். சென்ற ஐம்பது வருடங்களுக்கும் மேலாக இதையேதான் நான் செய்ய முயற்சித்து வந்திருக்கிறேன். ஆகையால், பணக்காரர்கள் எனக்களிக்கும் மோட்டார்களையும், மற்ற வசதிகளையும் நான் பயன்படுத்திக்கொண்டாலும், நான் ஒரு முதல்தரமான கம்யூனிஸ்டு என்று சொல்லிக் கொள்ளுகிறேன். அவர்களுக்கு என் மீது எந்த விதமான பிடிப்பும் கிடையாது. மக்களின் நலன்களுக்கு அவசியம் என்று இருந்தால், ஒரே நிமிஷத்தில் அவர்களை நான் உதறித் தள்ளிவிட முடியும்.

—'ஹரிஜன்' - 31—3—1946

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'காந்திஜியின் கம்யூனிஸம்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 4

# சமத்துவத்தைப் பெறுதல்

**கேள்வி:** நிர்மாண வேலைத் திட்டத்தில் ஈடுபட்டிருக்கும்போது ஒரு காங்கிரஸ்காரர் பொருளாதார சமத்துவத்தைப் பிரசாரம் செய்யலாமா? சட்ட மறுப்பு வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் அதை எப்படிப் பெறமுடியும்?

**பதில்:** தாராளமாகப் பிரசாரம் செய்யலாம். ஆனால், உங்கள் பிரசங்கம் முற்றிலும் சாத்விகத் தன்மை வாய்ந்ததாக இருக்க வேண்டும். நிலச்சுவான்தார்களிடமும், முதலாளிகளிடமும் உள்ளதைப் பலவந்தமாகப் பறித்துவிட வேண்டும் என்று சிலர் பிரசாரம் செய்திருப்பதை நான் அறிவேன். உங்கள் பிரசங்கம் அம்மாதிரி இருக்கக்கூடாது. ஆனால், பிரசாரத்தைவிட இன்னும் நல்ல ஒரு வழியை நான் காட்டியிருக்கிறேன். நிர்மாண வேலைத் திட்டம், லட்சியப் பாதையில் தேசத்தை வெகு தூரம் அழைத்துச் செல்லுகிறது. அதற்கு இதுதான் மிகவும் ஏற்ற தருணம். கைராட்டினமும், அதை யொட்டிய கைத்தொழில்களும் முழு வெற்றி பெற்றால், சமூகத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் எல்லா சமத்துவமின்மையும் அநேகமாக அழிந்துவிடும். அகிம்சையின் பலனாகத் தமக்குள்ள சக்தியைப் பற்றிய உணர்ச்சி மக்களிடையே வளர்ச்சி பெறுகிறது. தம்முடைய

அடிமைத்தனத்துடன் ஒத்துழைக்க முடியாது என்று மக்கள் விஷய அறிவுடன் மறுத்துவிட்டால், பொருளாதார சமத்துவம் ஏற்பட்டுவிடும்.

— 'ஹரிஜன்' - 25—1—1942

['பொருளாதார சமத்துவம்' என்ற தலைப்பில் 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 5

# சமமான விநியோகம்

[சமமான விநியோகம் என்பது என்ன என்பதைக் குறித்து மகாத்மா 25-8-1940 'ஹரிஜ'னில் ஒரு கட்டுரையின் மூலம் விளக்கினர். "ஒவ்வொருவருக்கும் இயல்பான தேவைகளைப் பூர்த்தி செய்யும் அளவுக்குச் சாதனங்கள் கிடைக்க வேண்டும் என்பதுதான் சமமான விநியோகம் என்பதன் உண்மைப் பொருள். உதாரணமாக, ஒருவனுக்கு ஜீரண சக்தி குறைவாக இருந்தால், ரொட்டிக்குக் கால் பவுண்டு மாவுதான் வேண்டும். மற்றொருவனுக்கோ ஒரு பவுண்டு மாவு வேண்டியிருந்தால், இருவரும் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்கு வேண்டிய வசதியைப் பெற வேண்டும்" என்கிறார்.

இந்த லட்சியம் நிறைவேற வேண்டுமானால், சமூக அமைப்பையே மாற்றி அமைக்க வேண்டும் என்கிறார். "இதை அடைவதற்கு முதற்படி, இந்த வழியை மேற்கொள்ளுபவன், தனது சொந்த வாழ்க்கையில் இதற்கான மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டியதுதான். இந்தியாவின் வறுமை நிலையை உத்தேசித்து அவன் தனது தேவைகளை முடிந்த வரையில் குறைத்துக்கொள்ள வேண்டும். அநியாய வழிகளில் அவன் தன் வருமானத்தைப் பெறமாட்டான். வியாபார லாபத்திற்காகச் சூதாட்ட முறைகளை அனுசரிப்பதை அறவே துறந்து விடுவான். இப்புது வாழ்க்கை முறைக்கு ஒப்ப அவன் வசிக்குமிடமும் எளிமையானதாக இருக்கும். வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் தன்னடக்கத்தைக் கைக்கொள்ளுவான். தனது சொந்த வாழ்க்கையில் இயன்ற அளவு சீர்திருத்தம் செய்துகொண்டு விட்ட பிறகு, இந்த லட்சியத்தைத் தன்னுடைய சகாக்களுக்கும் அண்டை

அயலாருக்கும் போதனை செய்ய முற்படுவான்'' என்கிறார் காந்திஜி.

இதில் பணக்காரர்களின் கடமை என்ன என்பதையும், சம விநியோக நிலையை எந்த முறையில் அடைய முடியும், அடைவது நல்லது என்பதையும் காந்திஜி அதே கட்டுரையில் எழுதியிருக்கிறார். அக்கட்டுரையின் விவரம் 'மகாத்மா காந்தி நூல்கள்'—இரண்டாம் தொகுப்பு 863-67-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.]

## 6

# ஒரே மாதிரியான ஊதியம்

கேள்வி: தம்முடைய தொழில்துறை வாய்ப்புகள் பூராவையும் இழந்து விட்டவர்கள் தாமாகவே தொழிலாளர்களாக மாறிவிட வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறியிருக்கிறீர்கள். அப்படியானால் கல்வி, வர்த்தகம் போன்றவைகளை யார் கவனித்துக்கொள்ளுவார்கள்? உழைப்புப் பிரிவினையை இப்படி நீங்கள் அழித்து விட்டால், அதனால் நாகரிகம் பாதிக்கப்பட மாட்டாதா?

பதில்: அவருக்கே அர்த்தம் புரியவில்லை என்பது இந்தக் கேள்வியிலிருந்தே தெரிகிறது. ஒரு மனிதன் தன்னுடைய பழைய வியாபாரத்தை நடத்த முடியவில்லையென்றால், தோட்டி வேலை செய்தல் அல்லது கல்லுடைத்தல் போன்ற ஏதாவது ஓர் உடல் உழைப்பு வேலையைச் செய்ய வேண்டியது அவருடைய கடமையாகும்; இதில் அவருடைய இஷ்டத்தைப் பொறுத்தது எதுவுமில்லை. உழைப்புப் பிரிவினையில் அவருக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால், ஊதியம் ஒரே மாதிரியானதாயிருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். ஒரு தோட்டிக்கு எவ்வளவு கிடைக்கிறதோ அதற்கு அதிகமாகப் பெற வக்கீலுக்கோ, டாக்டருக்கோ, ஆசிரியருக்கோ உரிமையில்லை. அப்பொழுதுதான் உழைப்பின் பிரிவினையால் தேசத்திற்கும் உலகிற்கும் நன்மை ஏற்பட முடியும். உண்மையான நாகரிகம் அல்லது சந்துஷ்டிக்கு ராஜபாட்டை வேறு எதுவுமில்லை.

உயிரளிக்க வல்லது உணர்ச்சிதான்; அதைப் பற்றிய விரிவுரையல்ல. யானைத் தலையுடன்கூடிய கணபதியின் உருவம் பயங்கரமாய் இருக்கிறது. ஆனால், ஓம் என்ற மந்திரத்தின் சின்னம் என்ற கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது அதன் உயர்வு புலனாகும். பத்துத் தலை ராவணன், புராணத்தில்

வரும் ஒரு முட்டாள். ஆனல், தலேயே இல்லாமல் அவ்வப் போதைய உணர்ச்சிகளால் உந்தப்பட்டவன் என்பதுதான் அதன் அர்த்தமென்ருல், அவன் பல தலேகளுடைய ஒரு ராட்சதன்தான்.

—'ஹரிஜன்' - 23—3—1947

['காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்பு'களிலிருந்து எடுத்தது.]

# 7

# ஒரே மாதிரியான சம்பளம்

**கேள்வி:** விவசாயி அல்லது தோட்டி, இஞ்சினீயர் அல்லது கணக்கர், டாக்டர் அல்லது ஆசிரியர் யாராயிருந்தாலும் சமூகத்திற்கு அவசியமானதும், உபயோகமானதுமான சேவை செய்கிருர்கள். இவர்கள் ஒவ்வொருவரும் ஒரே மாதிரியான சம்பளம் பெறுவதுதான் தரும நியாயம் என்று நீங்கள் கருதுகிறீர்களா? கல்வி அல்லது மற்றச் செலவுகளேச் சர்க்கார் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயமே. தம்முடைய சொந்தத் தேவைகளுக்கு யாவருமே ஒரே மாதிரியான ஊதியத்தைத்தானே பெற வேண்டும் என்பதே எங்கள் கேள்வி. இந்தச் சமத்துவத்திற்கு நாம் வேலே செய்தால், வேறு எந்த வழியையும் விட இது இன்னும் அதிசீக்கிரமாகத் தீண்டாமையின் அடிப்படையைத் தகர்த்துவிடாதா?

**பதில்:** உலகம் கண்டு பொருமைப்படத்தக்க விதத்தில் இந்தியா சுதந்திர வாழ்க்கையை நடத்த வேண்டுமென்ருல், நியாயமான ஒரு நாளேய வேலேக்குத் தோட்டிகள், டாக்டர்கள், வக்கீல்கள், ஆசிரியர்கள், வியாபாரிகள் யாவருமே ஒரே மாதிரியான ஊதியம்தான் பெறுவார்கள் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லே. இந்திய சமுதாயம் இந்த லட்சியத்தை அடையாமலேயே இருக்கலாம். ஆனல், இந்தியா ஓர் ஆனந்தமான நாடாக இருக்கவேண்டுமானல், இந்த லட்சியப் பாதையில் செல்லவேண்டியது ஒவ்வோர் இந்தியருடைய கடமையுமாகும்; வேறெந்தப் பாதையையும் பார்க்கக்கூடாது.

—'ஹரிஜன்' - 16—3—1947

[ 'காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்பு'களிலிருந்து எடுத்தது.]

# 8
# மந்திரிகளின் சம்பளங்கள்

**கேள்வி:** காங்கிரஸ் மெஜாரிட்டியாயுள்ள மாகாணங்களில் இந்தத் தடவை மந்திரிகளின் சம்பளங்கள் எந்த அடிப் படையில் நிர்ணயிக்கப்படப் போகின்றன? இது சம்பந்த மாகக் கராச்சி காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் இப்போதும் பொருந்துமா? இப்போது விலைவாசிகள் மிகவும் உயர்ந்திருக்கின்றன. இந்த அடிப்படையில் சம்ப ளங்களை நிர்ணயிப்பதாயிருந்தால், தம்முடைய எல்லா சிப்பந்திகளின் சம்பளங்களையும் மும்மடங்கு அதிகமாக்கு வதற்கு மாகாணங்களின் பட்ஜெட் இடம் கொடுக்குமா? இல்லையானால், மந்திரிகளுக்கு மட்டும் ரூ. 1,500 கொடுப் பதும், ஒரு 'சப்ராஸி' அல்லது ஆசிரியருக்கு மாதம் ரூ. 12 அல்லது ரூ. 15 கொடுத்து, அதற்குள் அவர்கள் சமாளிக்க வேண்டும் என்றும், காங்கிரஸ் நிர்வாகத்தை நடத்தவேண்டி யிருப்பதால், அதைப் பற்றிக் கிளர்ச்சி செய்யக்கூடாது என்றும் சொல்லுவது முறையாகுமா?

**பதில்:** இது பொருத்தமான கேள்விதான். ஒரு மந்திரி ஏன் ரூ. 1,500 பெறவேண்டும்? ஒரு 'சப்ராஸி' அல்லது ஆசிரிய ருக்கு மட்டும் ஏன் மாதம் ரூ. 15 கொடுக்க வேண்டும்? ஆனால், இந்தப் பிரச்னையை எழுப்புவதால் மட்டும் அதைத் தீர்த்துவிட முடியாது. இம்மாதிரி வித்தியாசங்கள் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கின்றன. ஓர் எறும்புக்கு ஒரே ஒரு தானியம் இருந்தால் போதும். ஓர் யானைக்கு மட்டும் ஏன் ஏராளமான தீனி வேண்டி இருக்கிறது? இந்தக் கேள்வியிலேயே அதற்குப் பதிலும் இருக்கிறது. கடவுள் ஒவ்வொருவருக்கும் அவருடைய தேவைக்கு ஏற்றபடி கொடுக்கிறார். யானைக்கு எவ்வளவு வேண்டும், எறும்புக்கு எவ்வளவு வேண்டும் என்று நமக்குத் தெரிந்திருப்பதுபோல் வெவ்வேறு மனிதர்களின் தேவைகளைப் பற்றியும் நமக்கு நிச்சயமாகத் தெரிய முடிந்தால், சந்தேகங்களே ஏற்படா. சமூகத்தில் பற்பல விதமான தேவைகள் உள்ளவர்கள் இருக் கிறார்கள் என்பதை அனுபவத்தில் அறிந்திருக்கிறோம். ஆனால், அது ஏன், எப்படி என்பது நமக்குத் தெரியாது. முடிந்த வரையில் இந்த வித்தியாசங்களைக் குறைக்க முயற் சிப்பதுதான் இன்று அனுபவசாத்தியமான காரியமாகும். அமைதியான கிளர்ச்சியின் மூலமும், பொதுஜன அபிப்பி ராயத்தை உருவாக்குவதன் மூலமும் இதைச் செய்யலாம். பலாத்காரத்தினாலோ, அல்லது சத்தியாக்கிரகம் என்ற பெயரில் துராக்கிரகம் செய்வதாலோ இது சாத்தியமல்ல. மந்திரிகள் மக்களின் மனிதர்களே. பதவி ஏற்பதற்கு முன்பு

கூட அவர்களுடைய தேவைகள், 'சப்ராஸி'களின் தேவைகளைப் போன்று இருந்ததில்லை. ஒரு 'சப்ராஸி' மந்திரி பதவி வகிக்கத் தகுதியுள்ளவராகி, அதே சமயத்தில் தன்னுடைய தேவைகளையும் அதிகரித்துக்கொள்ளாமல் இருப்பதைப் பார்க்க வேண்டும் என்பதில் எனக்கு மிகுந்த ஆசை உண்டு. உயர்ந்த பட்சமாக நிர்ணயிக்கப்பட்டுள்ள சம்பளம் பூராவையும் எந்த மந்திரியும் பெற வேண்டியதில்லை என்பதையும் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

இந்தக் கேள்விகளால் எழும் ஒரு விஷயத்தைப்பற்றிச் சிந்தனை செய்து பார்க்க வேண்டும். மாதம் ரூ. 15 பெறும் ஒரு 'சப்ராஸி', லஞ்சம் வாங்காமல் அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு தன்னையும், தன் குடும்பத்தையும் காப்பாற்றுவது சாத்தியமா? அம்மாதிரி ஆசைக்கு அவருக்கு இடம் கொடுக்காமல் போதிய அளவு அவருக்குச் சம்பளம் கொடுக்க வேண்டாமா? கூடியவரையில் நமக்கு நாமே 'சப்ராஸி'யாக இருக்க வேண்டும் என்பதுதான் இதற்குப் பரிகாரமாகும். அவர்கள் நமக்கு அவசியமாய் இருந்தால், அவர்களுடைய தேவைக்குப் போதுமான அளவு சம்பளம் கொடுக்க வேண்டும். இந்த வழியில் மந்திரிக்கும், 'சப்ராஸி'க்குமிடையே உள்ள பெரிய ஏற்றத் தாழ்வைச் சரிப்படுத்தி விடலாம்.

மந்திரிகளின் சம்பளம் ரூ.500-லிருந்து ஏன் ரூ. 1,500-ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது என்பது வேறு விஷயம். ஆனால், இதனால் முக்கிய பிரச்னை தீர்ந்துவிடவில்லை; அத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இது பெரிய விஷயமுமல்ல. மூலப் பிரச்னை தீர்ந்தால் இது தானகவே தீர்ந்துவிடும்.

—'ஹரிஜன்' – 21—5—1946

['கேள்விப்பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

## (2)

மந்திரிகளின் சம்பள உயர்வு விஷயமாக அன்று 'ஹரிஜன்' பத்திரிகையில் நான் வெகு ஜாக்கிரதையுடன் எழுதியிருந்தேன். அதன் பலனை இப்போது நான் அனுபவிக்கிறேன். என்னுடைய ஜாக்கிரதையைப் பற்றி வருத்தம் தெரிவித்தும், என்னுடைய கருத்தை மாற்றிக் கொள்ளவேண்டும் என்றும் நீண்ட கடிதங்கள் எனக்கு வந்துகொண்டிருந்தன. ஏழை சப்ராஸிகளுக்கும், குமாஸ்தாக்களுக்கும் தேவைக்கேற்ற உயர்வு கிடைக்காமல் இருக்கும்போது, ஏற்கனவே கொழுத்த சம்பளம் வாங்கிக் கொண்டிருந்த மந்திரிகள் மட்டும் எப்படித் தம் சம்பளங்களில் அவ்வளவு உயர்வு பெற முடியும்? நான் எழுதி இருந்த குறிப்பை மறுபடியும் வாசித்துப் பார்த்தேன். எனக்குக் கடிதம் எழுதியுள்ள பலர் விரும்புவதெல்லாம் அந்தக் குறிப்பில் இருக்கின்றன.

என்றே நான் சொல்லுகிறேன். ஆனால், தப்பெண்ணம் ஏற்படக் கூடாது என்பதற்காக என் கருத்தை விரிவுபடுத்திக் கூறு கிறேன்.

கராச்சி தீர்மானத்தைப் பற்றி நான் குறிப்பிடவில்லையே என்று மடக்கிக் கேட்கிறார்கள். ஏதோ ஒரு தீர்மானம் இருக் கிறது என்பதற்காக மந்திரிகளின் சம்பளம் குறைந்த அளவில் இருக்க வேண்டும் என்று அர்த்தமில்லை. அதற்கு இன்னும் உயர்ந்த காரணங்கள் இருக்கின்றன. அது எப்படியிருந்த போதிலும், எனக்குத் தெரிந்த வரையில், காங்கிரஸ் அந்தத் தீர் மானத்தை மாற்றவேயில்லை. இன்றும் அதுதான் அமுலில் இருக் கிறது.

சம்பள உயர்வு நியாயமானதுதானா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், மந்திரிகள் என்ன சொல்லுகிறார்கள் என் பதைக் கேட்காமல் அந்த உயர்வை நான் கண்டிக்கக்கூடாது. அவர்கள் மீதோ, மற்றவர்கள் மீதோ எனக்கு எந்தவிதமான அதிகாரமும் கிடையாது என்பதை குறை கூறுபவர்கள் உணர வேண்டும். என்னைப் பற்றித்தான் நான் பேச முடியும். காரியக் கமிட்டியின் எல்லாக் கூட்டங்களிலும் நான் ஆஜராயிருப்பது இல்லை. அக்கிராசனர் அழைக்கும்போதுதான் நான் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்குப் போகிறேன். என்னுடைய அபிப்பிரா யத்தைத்தான் நான் சொல்ல முடியும். அதற்கு எவ்வளவு மதிப்பு உண்டென்று எனக்குத் தெரியாது. நான் சொல்லும் அபிப்பிரா யத்திற்கு மதிப்பு இருக்க வேண்டுமானால், அது சரியான ஆதா ரங்களுடன் இருக்க வேண்டும்.

பணக்காரர்கள், ஏழைகள், உயர்ந்த சம்பளக்காரர்கள், குறைந்த சம்பளக்காரர்கள் ஆகியோரிடையே உள்ள பரிதாப மான ஏற்றத்தாழ்வு ஒரு தனி விஷயம். நன்கு சிந்தனை செய்து தீவிரமாக அதற்குப் பரிகாரம் கண்டுபிடிக்க வேண்டும். சில மந்திரிகள், அவர்களுடைய காரியதரிசிகளின் சம்பளங்களைக் குறைப்பதுடன் அதைச் சம்பந்தப்படுத்தக் கூடாது. இரண்டு விஷயங்களையும் அவற்றின் தராதரத்திற்கு ஏற்றவாறு முடிவு செய்ய வேண்டும். சம்பள விஷயத்தைச் சம்பந்தப்பட்ட மந்திரிகள் சுலபமாகப் பைசல் செய்துவிட முடியும்; பைசல் செய்யவும் வேண்டும். மற்றொன்று மிகவும் பெரிய விஷயம். அதை அடியோடு மாற்றவேண்டும். இந்த விஷயத்தை மந்திரிகள் தாமதமின்றித் தாமாகவே கவனிக்க வேண்டும்; கீழ்த்தர வேலை களிலுள்ளவர்களின் சம்பளப் பிரச்னையைப் புனராலோசனை செய்து, அவசியமானவர்களுக்கு முதலில் சம்பள உயர்வு கொடுக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' – 9—4—1946

பகுதி நான்கு

# தருமகர்த்தாத்தனம்

## 1

## தருமகர்த்தாத் தத்துவம்

“தருமகர்த்தாத் தத்துவம் எனக்குப் புரியவில்லை. அதைச் சுருக்கமாக விளக்கிக் கூற முடியுமா?'' என்று ஓர் அங்கத்தினர் கேட்டார்.

**காந்திஜி:** அதைச் சில நிமிஷங்களில் நான் எப்படி விளக்கிக் கூற முடியும்? சில நிமிஷங்களில் அதை நான் விளக்க முடியாவிட்டால், மணிக் கணக்கில் விளக்கினாலும் அதைப் புரிய வைக்க முடியுமா என்று எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. வார்சுரிமை மூலமாகவோ, வியாபாரம், தொழில் மூலமாகவோ எனக்குக் கணிசமான சொத்து கிடைத்திருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அந்தச் செல்வம் பூராவும் எனக்குச் சொந்தமானதல்ல என்பதை நான் உணர வேண்டும். லட்சக் கணக்கான மற்றவர்களைப்போல், நாணயமான வாழ்க்கை நடத்துவதற்குத்தான் எனக்கும் உரிமையுண்டு என்பதை நான் உணர வேண்டும். மீதமுள்ள என் செல்வம் பூராவும் சமுதாயத்திற்குச் சொந்தமானது; சமுதாயத்தின் நலன்களுக்காகவே அதைச் செலவிட வேண்டும். ஜமீன்தார்கள், சமஸ்தானாதிபதிகளின் சொத்துக்கள் விஷயத்தில் சோஷலிஸ்டுக் கொள்கை தேசத்தின் முன்பு சமர்ப்பிக்கப்பட்டபோது, இந்த முறையை நான் விளக்கினேன். இந்தச் சலுகை பெற்ற வகுப்பினரை ஒழித்துவிட வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். ஆனால், அவர்கள் தம்முடைய பேராசை, சொத்துணர்ச்சி ஆகியவைகளிலிருந்து, விடுதலை பெற்று, தாம் செல்வவந்தர்களாய் இருந்தபோதிலும், அன்றாடம் உழைத்துச் சாப்பிடுபவர்களின் அளவுக்குக் கீழே இறங்கிவர வேண்டும் என்று நான் விரும்புகிறேன். தொழிலாளரின் சொத்து, அவர்களுடைய வேலை செய்யும் சக்தி. ஆனால், அது அவர்களுக்குச் சொந்தமானதல்ல. அதைப் போலவே பணக்காரர்களின் செல்வமும் அவர்களுக்குச் சொந்தமானதல்ல என்பதைத் தொழிலாளர்கள் உணர வேண்டும்.

இந்த வியாக்கியானத்தின்படி எவ்வளவு பேர் உண்மையான தருமகர்த்தாக்களாய் இருக்க முடியும் என்பது முக்

கியமல்ல. இந்தக் கொள்கை சரியானதுதான் என்ருல், அதைப் பலர் பின்பற்றுகிருர்களா அல்லது ஒருவர்தான் பின்பற்றுகிருரா என்பதைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய தில்லை. இது நம்பிக்கையைப் பொறுத்த விஷயம். அகிம்சைக் கொள்கையை ஒப்புக்கொண்டால், வெற்றி, தோல்வியைப் பொருட்படுத்தாமல் அதைப் பூரணமாகப்பின்பற்றவே வேண்டும். இதை நடைமுறையில் பின்பற்றுவது கஷ்டம் என்று வேண்டுமானுல் சொல்லலாம்; ஆனுல், இதில் அறிவுக்கு எட்டாதது எதுவும் இருப்பதாகச் சொல்ல முடியாது.

—'ஹரிஜன்' - 3—6—1930

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'காந்தி சேவா சங்கம் – IV – மேலும் சிந்தனைகள்' என்ற கட்டுரைத் தொடரிலிருந்து எடுத்தது.]

## 2

## தரும சொத்து என்பது என்ன?

"பணக்காரர்கள் தருமகர்த்தாக்களாக இருக்கவேண்டும் என்று சொல்லுகிறீர்கள். அவர்கள் தம்முடைய சொத்துரிமையை விட்டுக்கொடுத்துவிட்டு, அதைச் சட்டப்படி ஒரு தரும சொத்தாக்கி, ஜனநாயக முறையில் பரிபாலனம் செய்ய வேண்டும் என்பதுதான் அதன் பொருளா? இப்போது தருமகர்த்தாவாக இருப்பவர் இறந்த பிறகு, அவருடைய வாரிசை எப்படி நிர்ணயிப்பது?"

எல்லாம் கடவுளுக்குச் சொந்தமானதென்றும், எல்லாம் கடவுளிடமிருந்து கிடைத்ததுதான் என்றும் பல வருடங்களுக்கு முன்பு தாம் தெரிவித்த அபிப்பிராயத்தையே இன்றும் சொல்லுவதாகக் காந்திஜி இந்தக் கேள்விக்குப்பதிலளித்தார். ஆகையால், ஒரு தனிப்பட்ட நபர் மட்டுமல்லாமல், கடவுளின் சிருஷ்டிகளாகிய எல்லோருக்குமே இது பொருந்தும். தன்னுடைய விகிதாசாரத்திற்கு அதிகமான அளவு ஒரு தனி நபரிடமிருந்தால், அந்த அதிகப்படி பகுதிக்கு, கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மக்களின் தருமகர்த்தாவாக அவர் ஆகிவிடுகிருர்.

கடவுள் சர்வ சக்தி வாய்ந்தவர். ஆகையால், அவர் சேர்த்து வைக்க வேண்டியதில்லை. ஒவ்வொரு நாளும் அவர் சிருஷ்டித்துக்கொண்டே இருக்கிருர். ஆகையால், மனிதர்களும் கொள்கையளவில் அன்ருடம் வேண்டிய அளவு சம்பாதிக்க வேண்டுமேயொழிய, சேர்த்து வைக்கக் கூடாது. இந்த உண்மையை மக்கள் பொதுவாக ஏற்றுக்கொண்டால், இது சட்டபூர்வமானதாகி

விடும்; தருமகர்த்தாத் தனமும் சட்டபூர்வமானதாகிவிடும். இது இந்தியா, உலகத்தினருக்களிக்கும் ஒரு பரிசாய் இருக்க வேண்டும் என்று காந்திஜி விரும்பினர். அந்த நிலைமையில் ஒருவரையொருவர் சுரண்டுவதென்பது இராது. ஆஸ்டிரேலியாவிலும், மற்ற நாடுகளிலும் இருப்பதைப்போல், வெள்ளையர்களுக்கும் அவர்களுடைய சந்ததிகளுக்கும் என்று தனி இடங்களை ஒதுக்கி வைப்பதும் இராது. இந்தப் பாகுபாடுகளில்தான் சென்ற இரண்டு யுத்தங்களைவிட இன்னும் கோரமான ஒரு யுத்தத்தின் விதைகள் புதைந்து கிடக்கின்றன. வாரிசு சம்பந்தப்பட்ட வரையில், சட்டத்திற்குட்பட்டுத் தனக்குப் பிறகு யார் தருமகர்த்தாவாக இருக்க வேண்டுமென்று நியமிப்பதற்கு இப்போது தருமகர்த்தாவாய் இருப்பவருக்கு உரிமையுண்டு.

— 'ஹரிஜன்' - 23—2—1947

['காந்திஜியின் பாத யாத்திரைக் குறிப்புக'ளிலிருந்து எடுத்தது.]

  

[தருமகர்த்தா முறையைப் பற்றிக் கேட்கப்பட்ட மற்றும் பல கேள்விகளுக்கும் காந்திஜி பதில் அளித்திருக்கிறர். 'பலாத்காரத்தினல் மட்டுமே அடையக்கூடியதை அகிம்சையின் மூலம் பாதுகாக்க முடியுமா?' என்று கேட்டதற்குப் பதிலளித்த காந்திஜி, 'பலாத்காரத்தினல் பெற்றதை அகிம்சை மூலம் பாதுகாக்க முடியாது என்பது மட்டுமல்ல, அகிம்சையை மேற்கொள்ளுபவர், தீய முறையில் பெற்ற பொருள்களை எல்லாம் துறந்துவிட வேண்டும்' என்ருர். இதுபோன்ற கேள்விகளுக்கு அவர் பதிலளித்திருக்கும் விவரங்களை 'மகாத்மா காந்தி நூல்கள்' –இரண்டாம் தொகுப்பு 890-91-ஆம் பக்கங்களில் காண்க.]

## 3

# அதை நான் விரும்புவதேன்?

**கேள்வி :** அன்பு அல்லது அகிம்சைக்கும், சொத்துடைமை அல்லது சுரண்டலுடன் எந்த வகையிலாவது பொருந்துமா? சொத்துடைமையும், அகிம்சையும் முரண்பட்டவைகளென்ருல், நிலங்கள் அல்லது தொழிற்சாலைகள் தனி நபர்களின் சொத்துக்களாயிருப்பது, தனி நபர்கள் அவற்றைத் துறப்பதற்கான முதிர்ச்சி பெறும் வரையில் தொடர்ந்து நீடிக்கக்கூடிய தவிர்க்க முடியாத ஒரு தீமை என்பதை ஒப்புக்கொள்ளுகிறீர்களா? அப்படியானல், எல்லா நிலங்

களையும் சர்க்காருக்குச் சொந்தமாக்கி, சர்க்காரை மக்களின் நிர்வாகத்தின் கீழ் வைப்பது நல்லதல்லவா ?

பதில் : அன்பு, பிரத்தியேக சொத்துடைமை இரண்டும் ஒரு நாளும் சேர்ந்திருக்க முடியாது. கொள்கையளவில் பார்க்கும்போது களங்கமற்ற அன்பு இருக்கிறதென்ருல், சொத்துடைமை உணர்ச்சியே கொஞ்சமும் இருக்க முடியாது. நமது உடல்தான் நம்முடைய கடைசி உடைமை. ஆகவே, உடைமை உணர்ச்சியே கொஞ்சமும் இல்லாத ஒரு மனிதன் தான் களங்கமற்ற அன்பு காட்ட முடியும். அதாவது, மனித சமூகத்தின் சேவைக்காக அவன் தன் உடலைத் தியாகம் செய்யத் தயாராயிருக்க வேண்டும். ஆனல், அது கொள்கையளவில்தான். நடைமுறையில் அத்தகைய களங்கமற்ற அன்பை நாம் காட்ட முடியாது. ஏனெனில், நம்முடைய உடல் எப்போதும் நம்முடைய உடைமையாகவே இருந்து கொண்டிருக்கும். மனிதன் எப்போதுமே செம்மையற்றவனுய்த்தான் இருப்பான் ; செம்மை நிலையை எய்துவதே அவனுடைய முயற்சியாக இருக்கும். ஆகையால், நாம் உயிருடன் இருக்கும் வரையில் களங்கமற்ற அன்பு அல்லது உடைமை உணர்ச்சியின்மை என்பது எய்த முடியாத ஓர் லட்சியமாகவேதான் இருக்கும். ஆயினும், அதை எய்துவதற்கு நாம் இடைவிடாமல் முயற்சி செய்துகொண்டுதான் இருக்க வேண்டும்.

இப்போது பணம் வைத்துக்கொண்டிருப்பவர்கள், ஏழைகளின் சார்பாக அந்தச் செல்வத்தைத் தரும சொத்தாக வைத்துக்கொண்டிருக்கும்படி கேட்கப்படுகிருர்கள். தருமகர்த்தாத்தனம் என்பது சட்டப்படி ஒரு கட்டுக்கதை என்று நீங்கள் சொல்லலாம். ஆனல், மக்கள் சதா அதைப் பற்றிச் சிந்தனை செய்து, அதைப் பின்பற்றி நடக்க முயற்சித்தால், உலகத்தில் இப்போது இருப்பதைவிட அன்பின் ஆட்சி இன்னும் அதிகமாக இருக்கும். பரிபூரணமான தருமகர்த்தாத்தனம் என்பது பிரத்தியட்சமாக விண்டு காட்டக் கூடிய ஒன்றல்ல ; அதை எய்துவதும் சாத்தியமல்ல. ஆனல், அதற்காக முயற்சி செய்தால் சமத்துவ நிலையை அடையும் பாதையில் இன்னும் அதிக தூரம் போக முடியும். வேறெந்த வழியின் மூலமும் அவ்வளவு தூரம் போக முடியாது.

கே : அகிம்சையும், தனி நபர் உடைமையும் ஒன்றுேடொன்று முரண்பட்டவை என்ருல், அதை ஏன் அனுமதிக்கிறீர்கள்?

ப : சிலர் பணம் சம்பாதிக்கிருர்கள். ஆனல், அந்தப் பணத்தை அவர்கள் தாமாகவே மனித வர்க்கத்தின் நன்மைக்காக உபயோகிக்க மறுக்கிருர்கள். அவர்களுக்காக இந்தச் சலுகையைக் கொடுக்க வேண்டியிருக்கிறது.

கே: அப்படியானல், தனி நபர் சொத்துரிமைக்குப் பதிலாக, எல்லாம் அரசாங்கத்திற்குச் சொந்தம் என்று மாற்றி, அதன் மூலம் பலாத்காரத்தைக் கூடியவரையில் குறைத்தால் என்ன?

ப: தனி நபர் சொத்துரிமையைவிட அது நல்லதுதான். ஆனல், பலாத்காரம் என்ற கண்ணேட்டத்தில் அதுவும் ஆட்சேப கரமானதாகிறது. பலாத்காரத்தின் மூலம் அரசாங்கம் முதலாளித்துவத்தை ஒழித்தால், பலாத்காரத்தின் தீமைகளில் அரசாங்கமே சிக்கிக்கொண்டு விடும். எந்தக் காலத்திலும் அவர்கள் அகிம்சையை வளர்க்க முடியாது. இது என்னுடைய உறுதியான நம்பிக்கை. கட்டுப்பாடான முறையில், ஒரே இடத்தில் பலாத்காரம் குவிந்திருப்பதுதான் அரசாங்கம். தனி மனிதனுக்கு உள்ளம் என்று ஒன்று இருக்கிறது. ஆனல், அரசாங்கம் என்பது உள்ளமற்ற ஒரு யந்திரம். அதன் அஸ்திவாரமே பலாத்காரம்தான். ஆகையால், பலாத்காரத்திலிருந்து அரசாங்கத்தைத் திருப்பவே முடியாது. அதனல்தான் தருமகர்த்தாத்தனத்தை நான் விரும்புகிறேன்.

கே: ஒரு குறிப்பிட்ட உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவோம். ஒரு கலைஞன் தன்னுடைய சித்திரங்களைத் தன் மகனுக்கு வைத்துவிட்டுப் போகிருன். அந்தச் சித்திரங்கள் தேசத்திற்கு எவ்வளவு மதிப்புள்ளவை என்பது மகனுக்குத் தெரியவில்லை. மகன் அந்தச் சித்திரங்களை விற்றுவிடுகிருன் அல்லது வீணடித்துவிடுகிருன். இந்த ஒரு மனிதனின் தவறினல் தேசமே நஷ்டமடைய வேண்டியிருக்கிறது. நீங்கள் கருதுகிற விதத்தில் அந்த மகன் தருமகர்த்தாவாக இருக்கமுடியாது என்று உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்தால், குறைந்த பட்ச பலாத்காரத்துடன் அரசாங்கம் அவருடைய உடைமைகளை மேற்கொண்டுவிடுவது நியாயமானது என்று நீங்கள் நினைக்கவில்லையா?

ப: ஆம். அரசாங்கம் அப்படித்தான் செய்யும். குறைந்த பட்ச பலாத்காரத்தை உபயோகிப்பதாயிருந்தால், அது நியாயமாயிருக்கும் என்றும் நம்புகிறேன். ஆனல், தம்முடைய கருத்தை ஏற்றுக்கொள்ளாதவர்கள் மீது அரசாங்கம் அளவுக்கு மீறிய பலாத்காரத்தை உபயோகித்துவிடும் என்ற அச்சம் எப்போதுமே இருந்துகொண்டுதான் இருக்கும். சம்பந்தப்பட்ட நபர்கள் தருமகர்த்தாக்களைப் போல் நடந்துகொள்ளுவார்களென்ருல், எனக்குத் திருப்தியாய்த்தான் இருக்கும். ஆனல், அவர்கள் அப்படிச் செய்யத் தவறினல், குறைந்தபட்ச பலாத்காரப் பிரயோகத்துடன் அரசாங்கத்தின் மூலம் அவர்களுடைய சொத்துக்களைப் பறிக்கத்தான் வேண்டியிருக்கும் என்று நம்புகிறேன். அதனல்தான் எல்லா சுயநல உரிமைகளையும் பரிசீலனை

செய்து, அவசியமான சந்தர்ப்பங்களில், அந்தந்த நிலைமைக் கேற்றவாறு நஷ்டஈடு கொடுத்தோ, கொடுக்காமலோ அவற்றைப் பறிமுதல் செய்ய வேண்டும் என்று வட்ட மேஜை மகாநாட்டில் நான் சொன்னேன்.

என்னைப் பொறுத்தவரையில் எல்லா அதிகாரங்களும் அரசாங்கத்தினிடம் குவிந்திருப்பதை நான் விரும்ப மாட்டேன்; தருமகர்த்தாக் கொள்கை விஸ்தரிக்கப்படுவதையே விரும்புகிறேன். ஏனெனில், அரசாங்கத்தின் பலாத்காரத்தை விட, தனி நபர் உடைமையிலுள்ள பலாத்காரத்தின் தீமை குறைவானது என்று நான் கருதுகிறேன். ஆயினும், தவிர்க்க முடியாதென்றால், குறைந்தபட்ச அரசாங்க உடைமையாவதை நான் ஆதரிப்பேன்.

கே : மனிதர்கள் தம் சுய உறுதியினால் வாழ்கிறார்களேயொழிய, வழக்கத்தினால் அல்ல என்று நீங்கள் கருதுகிறீர்கள். சோஷலிஸ்டுகள், இதற்கு நேர்மாறாகக் கருதுகிறார்கள். பழக்கத்தினால்தான் வாழ்கிறார்கள் என்கிறார்கள். சோஷலிஸ்டுகளுக்கும் உங்களுக்குமிடையே உள்ள அடிப்படை வித்தியாசம் இதுதான் அல்லவா ? மற்றவர்களைச் சுரண்டி வாழ்வது சாத்தியமில்லாத ஒரு முறையை ஏற்படுத்த அவர்கள் முயற்சிக்கிறார்கள். மனிதர்கள் தம்மைத் தாமே திருத்திக் கொள்ள வேண்டும் என்று நீங்கள் முயற்சி செய்வதற்கும் காரணம் அதுதான் அல்லவா ?

ப : மனிதன் வழக்கத்திற்கு அடிமைப்பட்டவன் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும், தன் சுய உறுதியின் மூலம் அவன் வாழ்வதுதான் நல்லதென்று நான் நினைக்கிறேன். மற்றவர்களைச் சுரண்டி வாழ்வதைக் கூடியவரையில் குறைத்துக்கொள்ளும் அளவுக்கு மனிதர்கள் தம் சுய உறுதியை வளர்த்துக்கொள்ளுவது சாத்தியமானது என்றும் நான் நம்புகிறேன். அரசாங்கத்தின் அதிகாரம் அதிகமாவது எனக்கு மிகுந்த அச்சம் விளைவிப்பதாக இருக்கிறது. ஏனெனில், சுரண்டலைக் குறைப்பதன் மூலம் அரசாங்கம் நன்மை செய்வது போல் தோன்றினாலும், முன்னேற்றத்திற்கே ஆணி வேர் போன்ற மனிதனின் தனிச் சிறப்பை அது அழித்து விடுவதால் பெரும் தீங்கை விளைவிக்கிறது. பலர் தருமகர்த்தாக் கொள்கையை ஏற்றுக்கொண்டிருப்பதை நாம் அறிவோம். ஆனால், அரசாங்கம் உண்மையிலேயே ஏழைகளுக்காக இருந்துள்ள இடங்களில் அப்படி ஏற்பட்டதில்லை.

கே : ஆனால், நீங்கள் சில சமயங்களில் குறிப்பிடும் தருமகர்த்தாக்கள் உங்களுடைய செல்வாக்கினால் அக்கொள்கையை ஏற்றுக்கொண்டவர்கள் அல்லவா ? உங்களைப் போன்ற ஆசிரியர்கள் எப்போதோதான் தோன்றுகிறார்கள். ஆகை

யால், மனிதர்களிடம் வேண்டிய மாறுதல்களை ஏற்படுத்து வதற்கு எப்போதாவது தோன்றும் உங்களைப் போன்ற வர்களை நம்பியிருப்பதைவிட ஏதாவதொரு ஸ்தாபனத்தை நம்புவது நல்லதல்லவா?

ப: என்னைவிட்டுத் தள்ளுங்கள். மனித குலத்தில் தோன்றி யுள்ள ஆசிரியர்களின் உபதேசங்கள் அவர்களுக்குப் பின் காலத்திலும்கூட உயிருடன் இருந்து வந்திருக்கின்றன என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். முகம்மது, புத்தர், ஏசுநாதர் போன்ற தீர்க்கதரிசிகளின் உபதேசங்களில், அந்தக் காலத்துக்கேற்ற சில உபதேசங் களும் இருந்தன. தாற்காலிகமானவைகளையும், நிரந்தர மானவைகளையும் நாம் சேர்த்து வைக்க முயற்சி செய்வது தான், இன்று மத சம்பந்தமான பழக்க வழக்கங்களில் இவ் வளவு உருத் தெரியாத மாறுதல்கள் இருப்பதற்குக் காரண மாகும். அது ஒரு புறமிருக்க, இவர்களுடைய செல்வாக்கு, இவர்கள் காலமான பிறகும் இருந்து வருவதை இன்று காண்கிறீர்கள்.

மேலும், அரசாங்கம் என்பது பலாத்காரத்தை அடிப் படையாகக் கொண்ட ஒரு ஸ்தாபனமாகும். அத்தகைய ஸ்தாபனத்தை நான் ஆட்சேபிக்கிறேன். ஸ்தாபனம் இருக்க வேண்டுமானல், அது தன்னிச்சையானதாக இருக்க வேண்டும்.

[1934 நவம்பர் 9, 10 தேதிகளில் ஸ்ரீ நிர்மல குமார் கோஷ், காந்திஜி யைக் கண்டு பேசினர். இந்தச் சம்பாஷணைகளைப் பற்றிக் காந்திஜியால் திருத்தப்பட்ட விவரம் 'மாடர்ன் ரெவியூ' சஞ்சிகையின் 1935 அக்டோபர் இதழில் பிரசுரமாயிற்று. அதிலிருந்து சில கேள்விகளும், பதில்களும் மேலே தரப்படுகின்றன.]

## 4

# சட்டபூர்வமான தருமகர்த்தாத்தனம்

இன்றைய பணக்காரர்கள் சம்பந்தப்பட்ட வரையில், அவர் களுக்கு இரண்டே வழிகள்தான் இருக்கின்றன. ஒன்று, அவர்கள் தாமாகவே தம் செல்வத்திற்குத் தருமகர்த்தாக்களா கத் தம்மைத் தாமே மாற்றிக்கொள்ளவேண்டும்; அல்லது, போராட்டத்தில் இறங்க வேண்டும். அவர்களிடமுள்ள உடை மைகளை வைத்துக்கொண்டிருக்கவும், செல்வத்தைப் பெருக்குவ தற்குத் தம்முடைய திறமையை உபயோகிக்கவும் அவர்கள் அனுமதிக்கப்படுவார்கள். ஆனல், அது அவர்களுடைய நன்மைக் காகவல்ல; நாட்டின் நன்மைக்காகத்தான். ஆகையால், அதில்

சுரண்டல் தன்மை இருக்க இடமில்லை. அவர்களுடைய சேவை சமூகத்திற்கு எவ்வளவு நன்மை அளிக்கிறது என்பதைப் பொறுத்து, அரசாங்கம் அவர்களுடைய கமிஷனை நிர்ணயிக்கும். அவர்களுடைய குழந்தைகள் தகுதியுள்ளவர்களாக இருந்தால் அந்தப் பொறுப்பை அவர்களும் வகிக்கலாம்.

"இந்தியா நாளைக்குச் சுதந்திர நாடாய்விட்டால், எல்லா முதலாளிகளுமே சட்டபூர்வமான தருமகர்த்தாக்களாகும் வாய்ப்புக் கிடைக்கும்" என்று காந்திஜி கூறி முடித்தார். ஆனால், அத்தகைய சட்டம் மேலேயிருந்து சுமத்தப்படமாட்டாது. அடியிலிருந்துதான் வரவேண்டும். தருமகர்த்தாக் கொள்கையின் உள்ளர்த்தங்களை மக்கள் அறிந்து, சூழ்நிலையும் பக்குவமடைந்தால், கிராமப் பஞ்சாயத்துக்களிலிருந்து ஆரம்பித்து, மக்களே அத்தகைய சட்டங்களை அமுல் நடத்தத் தொடங்கிவிடுவார்கள். கீழேயிருந்து வரும்போது இதை யாவரும் ஏற்றுக்கொள்ளுவது சுலபமாக இருக்கும். மேலிருந்து வந்தால், பெரும் சுமையாய் விடும்.

—'ஹரிஜன்' - 31—3—1946

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'காந்திஜியின் கம்யூனிஸம்' என்ற குறிப்பிலிருந்து எடுத்தது.]

## 5

# அனுபவ சாத்தியமான தருமகர்த்தா முறை

நாங்கள் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட பிறகு, ஆகாகான் அரண்மனை சிறைமுகாமில் இந்தப் பிரச்னையை எங்கே நிறுத்தியிருந்தோமோ அங்கிருந்து இதை விவாதிக்க ஆரம்பித்தோம். கிஷோரிலால் பாயும், நரஹரி பாயும் சேர்ந்து, அனுபவசாத்தியமானதும், எளியதுமான ஒரு தருமகர்த்தா நடைமுறையைத் தயாரித்தனர். இது பாபுவினிடம் சமர்ப்பிக்கப்பட்டது. அவர் சில மாறுதல்கள் செய்தார். முடிவான நகல் பின்வருமாறு :

(*1*) இப்போதுள்ள முதலாளித்துவ சமூக அமைப்பை, சமத்துவமுள்ள ஓர் அமைப்பாக மாற்றுவதற்குத் தருமகர்த்தாக் கொள்கை வாய்ப்பளிக்கிறது. முதலாளித்துவத்திற்கு அது கொஞ்சமும் இடம் கொடுக்கவில்லை. ஆனால், இப்போதுள்ள பணக்கார வகுப்பினர் தம்மைத் தாமே மாற்றிக்கொள்ளு

வதற்குச் சந்தர்ப்பமளிக்கிறது. மனித சுபாவம் திருத்த முடியாத ஒன்றல்ல என்ற நம்பிக்கையே இதன் அடிப்படை.

(2) சமூக நன்மைக்காக அனுமதிக்கப்படும் சொத்துரிமையைத் தவிர, தனி நபர்கள் சொத்து வைத்துக்கொள்ளும் உரிமையை இது அங்கீகரிக்கவில்லை.

(3) சொத்துரிமை, சொத்தை உபயோகிப்பதற்குச் சட்டங்கள் இயற்றலாம் என்பது விளக்கப்படவில்லை.

(4) அரசாங்க நிர்வாகத்தின் கீழ் உள்ள தருமகர்த்தாத் தனத்தின்படி ஒரு நபர் சுயநலத்திற்காகவோ, சமூக நலன்களுக்கு முரணாகவோ சொத்து வைத்துக்கொள்ளவும் முடியாது; அதை உபயோகிக்கவும் முடியாது.

(5) கண்ணியமான ஒரு குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்க உத்தேசிக்கப்பட்டிருப்பதைப் போலவே, சமூகத்தில் ஒருவருடைய அதிகப்பட்ச வருமானத்திற்கும் வரம்பு கட்ட வேண்டும். இந்த இரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசம் நியாயமானதாகவும், நேர்மையானதாகவும் அவ்வப்போது மாற்றப்படக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இந்த வித்தியாசம் அடியோடு மறைந்து போவதற்கான நிலைமையிலேயே அது இருக்கவேண்டும்.

(6) காந்தீய பொருளாதாரக் கொள்கையின்படி, சமூகத்தின் தேவைகளுக்கேற்றவாறுதான் உற்பத்தி நிர்ணயிக்கப்படும். தனிப்பட்டவர்களின் பேராசை அல்லது இஷ்டத்தைப் பொறுத்ததாக உற்பத்தி இராது.

—'ஹரிஜன்' – 25—10—1952

[ஸ்ரீ பியாரிலால் எழுதியது. 'காந்திஜியின் தருமகர்த்தாக் கொள்கை' என்ற தலைப்பில் முதலில் வெளியானதிலிருந்து எடுத்தது.]

## 6

# சாத்விக சமூக அமைப்பில் தருமகர்த்தாவின் ஸ்தானம்

**கேள்வி:** உங்களுடைய கட்டுரைகளைப் பார்க்கும்போது நீங்கள் 'தருமகர்த்தா' என்று கூறுவது முதலாவது பார்ஸிலார்டு, டாடாக்கள், வாடியாக்கள், பிர்லாக்கள், ஸ்ரீ பஜாஜ் முதலியவர்களைப் போல் மிகவும் தாராள மனம் படைத்த பரோபகாரிகள் என்பதைத் தவிர வேறொன்றுமில்லை என்று தோன்றுகிறது. அப்படித்தானா? ஒரு பணக்

காரரின் சொத்துக்கு நியாயமான முதல் உரிமை பெற்ற வர்கள் யார் என்பதை விளக்கிக் கூறுவீர்களா? ஒருவர் தம் முடைய சொத்திலும், வருமானத்திலும், தமக்காகவும் தம் உற்ருர் உறவினர்களுக்காகவும், பொது நலன்களுக்காக வல்லாத மற்ற விஷயங்களுக்காகவும் எவ்வளவு செல விடலாம் என்று ஏதாவது வரம்பு இருக்குமா? அதைத் தாண்டிச் செலவழிப்பவரைத் தடுக்க முடியுமா? ஒருவர் தரும கர்த்தாப் பொறுப்பை நிறைவேற்றத் திறமையற்றவ ராகவோ, தகுதியற்றவராகவோ இருந்தால், அவரை விலக்கிவிட முடியுமா? கணக்குக் கொடுக்கும்படி அர சாங்கமோ, சொத்துக்கு உரிமை பெற்றிருப்பவர்களோ அவரைக் கேட்க முடியுமா? இதே கொள்கைகள் ஜமீன் தார்கள், சமஸ்தானுதிபதிகளுக்கும் பொருந்துமா? அவர்க ளுடைய தருமகர்த்தாத் தன்மை வேறுவிதமானதா?

**பதில் :** தருமகர்த்தாக் கொள்கை பரவினுல், நாம் அறிந்துள்ள பரோபகாரம் என்பது மறைந்துவிடும். நீங்கள் குறிப்பிட் டுள்ளவர்களில் ஜம்னுலால்ஜிதான் தருமகர்த்தா என்ற வியாக்கியானத்திற்குக் கிட்டத்தட்டப் பொருந்துகிருர். அதுவும் கிட்டத்தட்டத்தான். ஒரு தருமகர்த்தாவுக்குப் பொது மக்களைத் தவிர வேறு வாரிசுகள் கிடையாது. சாத்விக அடிப்படையில் அமைக்கப்பட்ட அரசாங்கத்தில், தருமகர்த்தாக்களின் கமிஷன் சீர்திருத்தப்படும். சமஸ் தானுதிபதிகளும், ஜமீன்தார்களும் மற்றப் பணக்காரர்களைப் போலவே இருப்பார்கள்.

— 'ஹரிஜன்' - 12—4—1942

['தருமகர்த்தாக் கொள்கை' என்ற தலைப்பில் 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 7

# தன் சொத்துக்குத் தருமகர்த்தா

**கேள்வி :** அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒருவர் சொத்து வைத்துக்கொள்ளலாமா? வைத்துக்கொள்ளலாம் என்ருல், அதை அவர் சாத்விக முறையில் எப்படி வைத்துக்கொள்ள முடியும்?

**காந்திஜி :** அவரிடம் லட்சக்கணக்கில் இருக்கலாம். ஆனுல், சொந்தச் சொத்து என்று ஒன்றும் வைத்துக்கொள்ளக் கூடாது. அதைத் தரும சொத்தாக அவர் வைத்துக்கொண் டிருக்கட்டும். கொள்ளைக்காரர்கள், திருடர்கள் மத்தியில் அவர் வசித்தால், கௌபீனத்தைத் தவிர அதிகமாக அவர்

எதுவும் வைத்துக்கொள்ள முடியாது. இப்படிச் செய்தால் அவர்களையும் அவர் மாற்றிவிட முடியும்.

ஆனால், பொதுப்படையாகப் பேசக்கூடாது. சாத்விக முறையில் அமைக்கப்பட்ட அரசாங்கத்தில் கொள்ளைக் காரர்கள் மிகச் சிலரே இருப்பார்கள். தனி நபர் சம்பந்தப் பட்ட வரையில், அவருக்குச் சொந்தமானது என்றுஎதுவுமே இராது. குற்றப் பரம்பரையினர் என்று சொல்லப்படுபவர்க ளிடையே போய் வேலை செய்வதென்று நான் தீர்மானித் தால், எந்த விதமான சொந்த உடைமையும் இல்லாமலே தான் அவர்களிடம் நான் போக வேண்டும். உணவுக்கும், தங்குமிடத்திற்கும் அவர்களையே நம்பி யிருக்கவேண்டும். அவர்களுக்குத் தொண்டு புரிவதற்காகவே நான் அங்கே வந்திருக்கிறேன் என்று அவர்கள் உணர்ந்த மாத்திரத்தி லேயே அவர்கள் என் நண்பர்களாகி விடுகிறார்கள். உண்மையான அகிம்சையின் மனோபாவம் அதில்தான் இருக்கிறது.

—'ஹரிஜன்' – 1—9—1940

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'ஒரு சுவாரஸ்யமான விவாதம் 2 – ஒரு சகோதரியின் கேள்விகள்' என்ற தலைப்பில் முதலில் வெளியானதி லிருந்து எடுத்தது.]

# 8

# கவராமையும் சொத்தில்லாமையும்

ஏற்கனவே குறிப்பிட்ட மூன்றும்* இந்த இரண்டும்சேர்ந்தது தான் முன் காலத்திய ஐந்து மஹாவிரதங்களாகும் (அடிப்படை யான அனுஷ்டானங்கள்). தன்னைத்தானே அறிந்து கொள்ள முயற்சி செய்பவர்களுக்கு இவை அவசியமாகையால், இவ்வைந் தும் ஆசிரம அனுஷ்டானங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அவற்றைப் பற்றி நீண்ட விவாதத்திற்கு அவசியமில்லை.

## கவராமை

ஒருவருடைய அனுமதியில்லாமல் அவருடையதை எடுத்துக் கொள்ளுவது உண்மையில் கவர்தல் அல்லது திருட்டே. ஆனால், ஒரு பொருளை இரவலாகக் கொடுப்பவர் விரும்பியதற்கு மாறான காரியத்திற்கு அதை உபயோகிப்பதும், அவருடன் நிர்ணயித்துக்

* 'சத்தியம்' – 'ஹரிஜன்' – 18—7—1948, பக்கம் 170
'அகிம்சை' – 'ஹரிஜன்' – 1—8—1948, பக்கங்கள் 101, 15—8—1948 பக்கம் 202
'பிரம்மச்சரியம்' – 'ஹரிஜன்' – 5—9—1948, பக்கம் 230, 26—9—1948 பக்கம் 258

கொண்ட காலத்திற்கு அதிகமாக அதை உபயோகிப்பதும் கூட திருட்டுதான். அச்சமயத்திற்கு வேண்டியதற்கு அதிகமாக எதையும் கடவுள் சிருஷ்டிப்பது இல்லை என்ற மகத்தான உண்மையை அடிப்படையாகக் கொண்டே இவ்விதம் கூறப்படுகிறது, உண்மையில் தனக்கு அவசியமான குறைந்தபட்சத்திற்கு அதிகமாகப் பயன்படுத்திக்கொள்ளுபவர் யாவரும் திருட்டுக் குற்றத்தைச் செய்பவர்களே ஆவார்கள்.

## சொத்தில்லாமை அல்லது வறுமை

கவராமையும் இதில் சேர்ந்திருக்கிறது. அதிகப்படியானது எதையும் நாம் எடுத்துக்கொள்ளவும் கூடாது, வைத்துக் கொள்ளவும் கூடாது. ஆகையால், நமக்கு உண்மையிலேயே அவசியமில்லாத உணவையோ, மரச் சாமான்களையோ வைத்துக் கொண்டிருப்பது இந்த அனுஷ்டானத்தை மீறுவதாகும். நாற்காலிகள் இல்லாமல் சமாளிக்க முடிந்தவர், வீட்டில் நாற்காலிகளை வைத்துக்கொண்டிருக்கமாட்டார்கள். தன்னைத் தானே அறிய முயற்சிப்பவர், மனமறிந்து தன் தேவைகளைக் குறைத்துக் கொண்டு படிப்படியாக எளிய பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொள்ளுவார்.

கவராமை, சொத்து வைத்துக் கொள்ளாமை இரண்டும் மனோநிலைகள் மாத்திரமேயாகும். மனிதனாய்ப் பிறந்த யாரும் இந்த அனுஷ்டானங்களைப் பூரணமாகப் பற்றிவிட முடியாது. நமது உடலும் ஓர் உடைமைதான். உடல் நம்மிடமிருக்கும் வரையில், அதற்காக வேறு உடைமைகளையும் தேட வேண்டியிருக்கிறது. ஆனால், தன்னைத் தானே அறிய முயற்சிப்பவன், பற்றற்ற உணர்ச்சியை வளர்த்துக்கொண்டு உடைமைகளை ஒவ்வொன்றாக விட்டுவிடுவான். எல்லோரையும் ஒரே அளவு கோலால் மதிப்பிட முடியாது. ஓர் எறும்பு ஒரு தானியத்திற்குப் பதிலாக இரண்டு தானியங்களைச் சேர்த்துவைத்தால், அது தவறு செய்ததாகி விடுகிறது. ஆனால், யானையின் முன்பு ஏராளமான புல்லைக் குவிக்க வேண்டியிருக்கும். ஆயினும், அது 'ஏராளமாக' வைத்துக் கொண்டிருக்கிறது என்று குற்றம் சாட்ட முடியாது.

இந்தச் சங்கடங்களின் காரணமாகத்தான் சன்னியாசத்தைப் (உலகத்தைத் துறத்தல்) பற்றிய எண்ணம் இப்போது எழுந்திருப்பது போல் தோன்றுகிறது. ஆசிரமத்தில் இது ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஒரு குகைக்குள் உட்கார்ந்துகொண்டு நல்ல சிந்தனைகளில் ஈடுபட்டு, உலகத்திற்குப் பெரிய நன்மைகள் செய்யக்கூடிய அபூர்வப் பிறவிகளுக்கு இந்தச் சன்னியாசம் அவசியமாக இருக்கலாம். ஆனால், எல்லோரும் குகைவாசிகளாகி விட்டால் உலகம் அழிந்துவிடும். சாதாரண ஆண்களும் பெண்களும், பற்றற்ற மனப்பான்மையைத்தான் வளர்க்க முடியும்.

உலகத்திற்குச் சேவை செய்வதற்கென்றே உலகத்தில் வாழ்பவர்கள் யாவருமே சன்னியாசிகள்தான்.

ஆசிரமத்தில் வாழும் நாங்கள் இந்த வியாக்கியானத்தின்படி சன்னியாசிகளாகிவிடலாம் என்று நம்புகிறோம். அவசியமானவைகளை நாம் வைத்துக் கொண்டிருக்கலாம்; ஆனல், நம்முடைய உடல்கள் உள்பட எல்லாவற்றையுமே விட்டுவிடத் தயாராயிருக்க வேண்டும். எதை இழந்தாலும் நாம் கவலைப்படக் கூடாது. நாம் உயிருடனிருக்கும் வரையில், நம்மாலியன்ற தொண்டுகளைச் செய்துகொண்டிருக்க வேண்டும். உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைத்தால் நல்லதுதான்; கிடைக்காவிட்டாலும் நல்லதுதான். சோதனைக் காலம் வரும் போது, அதில் தேர்ச்சி பெறுவதற்கு ஏற்ற முறையில் ஆசிரமத்தில் உள்ள ஒவ்வொருவரும் தம்முடைய மனத்தைத் தயார் செய்துகொள்ள வேண்டும்.

—'ஹரிஜன்' – 10—10—1948

['ஆசிரம நடைமுறைகள்' என்ற புத்தகத்திலிருந்து குஜராத்தி மொழியிலிருந்து வி. ஜி. டி. யால் மொழிபெயர்க்கப்பட்டது.]

## 9

# கவராமை விரதம்

ஒரு விதத்தில் நாமெல்லோரும் கள்வர்களே என்று நான் சொல்லுகிறேன். என்னுடைய உடனடியான தேவைக்கு அவசியமில்லாத எதையாவது நான் எடுத்துக்கொண்டால், வேறு யாரிடமிருந்தோ அதைத் திருடியவனுகிறேன். நம்முடைய அன்றாடத் தேவைகளுக்குப் போதுமான அளவில் இயற்கை உற்பத்தி செய்துகொண்டிருக்கிறது. தனக்குத் தேவையான அளவை மட்டுமே ஒவ்வொருவரும் எடுத்துக்கொண்டால், உலகத்தில் இல்லாமை இராது. உலகத்தில் பட்டினியால் யாரும் சாகமாட்டார்கள். ஆனல், இந்த ஏற்றத் தாழ்வுகள் இருக்கும் வரையில், நாம் திருடிக்கொண்டிருப்பவர்களாகவே இருக்கிறோம். நான் சோஷலிஸ்டு அல்ல. பணக்காரர்களிடமுள்ள உடைமைகளைப் பறிக்க நான் விரும்பவில்லை. ஆனல், இருளை நீக்கி ஒளியைப் பார்க்க விரும்புபவர்கள், இந்த விதியைப் பின்பற்றத்தான் வேண்டும் என்று சொல்லுகிறேன். யாருடைய உடைமையையும் பறிக்க நான் விரும்பவில்லை. அப்படிச் செய்தால் அகிம்சைப் பாதையிலிருந்து விலகியவனுவேன். என்னிடமிருப்பதைவிட அதிகமாக வேறு யாரிடமாவது இருந்தால், இருக்கட்டும். ஆனல், என்னுடைய வாழ்க்கையை நான் சீர்ப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆகவே, எனக்குத் தேவையில்லாத எதையும் நான் வைத்

துக்கொள்ள முடியாது. இந்தியாவில் ஒரே வேளைச் சாப்பாட்டுடன் திருப்தியடைய வேண்டியவர்கள் முப்பது லட்சம் பேர் இருக்கிறார்கள். ஒரு சப்பாத்தியும், கொஞ்சம் உப்பும்தான் அவர்களுடைய அந்தச் சாப்பாடு. அதில் கொழுப்புச் சத்து ஒன்றும் கிடையாது. இந்த முப்பது லட்சம் பேர்களுக்கும் இன்னும் நல்ல உணவும், நல்ல ஆடைகளும் கிடைக்கும் வரையில் நம்மிடம் உள்ள எதற்கும் நமக்கு உரிமை கிடையாது. நாம் விஷய அறிவுள்ளவர்கள். அவர்களுக்கு இன்னும் நல்ல ஊட்டமும், உடையும் கிடைப்பதற்காக நம்முடைய தேவைகளைச் சீர்படுத்திக்கொள்ள வேண்டும். நாமாகவே பட்டினி கிடக்கவும் தயாராக இருக்க வேண்டும். இதைத் தொடர்ந்து சொத்தில்லாமை என்ற விரதம் தானாகவே ஏற்படுகிறது.

'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' - ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கங்கள் 377, 384

[16-2-1916-இல் சென்னை ஒய். எம். ஸி. ஏ. யில் செய்த ஒரு பிரசங்கத்திலிருந்து.]

## 10

# தன்னிச்சையாக ஏற்கும் வறுமை

நான் ராஜீயச் சுழலில் சிக்கிக்கொண்டபோது என்னை நானே சில கேள்விகள் கேட்டுக்கொண்டேன். ஒழுக்கமின்மை, அசத்தியம், ராஜீயத்தின் மூலம் லாபம் பெறுவது முதலியவைகளால் கொஞ்சமும் பாதிக்கப்படாமலிருப்பதற்கு நான் என்ன செய்யவேண்டும்என்று என்னையே கேட்டுக்கொண்டேன்.எனக்கு மிகவும் புனிதமான, அந்தச் சுவாரஸ்யமான செய்கைகளின் விவரங்களையெல்லாம் இப்போது உங்களிடம் நான் சொல்லிக்கொண்டிருக்கப் போவதில்லை. ஆயினும், ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். ஆரம்பத்தில் அது கஷ்டமான போராட்டமாகவேதான் இருந்தது. என் மனைவியுடன் ஏற்பட்ட முரண்பாடு இன்னும் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. என் குழந்தைகளுடனும் போராட்டம்தான். அது ஒருபுறமிருக்கட்டும். நான் எந்த மக்களின் மத்தியில் வாழ வேண்டியிருக்கிறதோ அவர்களின் கஷ்டங்களை ஒவ்வொரு நாளும் பார்த்துக்கொண்டேயிருக்கிறேன். அவர்களுக்கு நான் சேவைசெய்ய வேண்டுமானால், சொத்துக்கள், உடைமைகள் யாவற்றையும் பூராவாக உதறித் தள்ளிவிட வேண்டும் என்று திட்டமான முடிவுக்கு வந்தேன்.

இந்த நம்பிக்கை எனக்கு ஏற்பட்டபோது, உடனடியாக எல்லாவற்றையும் விட்டுவிட்டேன் என்று நான் சொன்னால் அது உண்மையானதாக இராது. ஆரம்பத்தில் இதன் முன்னேற்றம் மெதுவாகவே இருந்தது என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான்

வேண்டும். அந்தப் போராட்ட நாட்களை இப்போது நினைத்துப் பார்க்கும்போது, ஆரம்பத்தில் அது வேதனையளிப்பதாகத்தான் இருந்தது என்பதும் எனக்கு ஞாபகம் வருகிறது. ஆனால், நாளாக ஆக, நான் என்னுடையவை என்று நினைத்துக்கொண்டிருந்த பலவற்றையும் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும் என்பதை உணர்ந்தேன். இவற்றை அப்படி விட்டுக் கொடுப்பது உண்மையிலேயே மகிழ்ச்சியளித்த ஒரு காலமும் வந்தது. பின்னர் ஒவ்வொன்றாக எல்லாம் என்னைவிட்டு அகன்றுவிட்டன. ஏதோ ஒரு பெரிய சுமை நீங்கியது போன்ற உணர்ச்சியும் ஏற்பட்டது. நான் சுலபமாக நடமாட முடியும் என்பதையும், மக்களுக்கான சேவையை இன்னும் அதிக சௌகரியத்துடனும், மகிழ்ச்சியுடனும் செய்ய முடிகிறது என்பதையும் அறிந்தேன். எதையும் என்னுடையதாகக் கருதுவது அப்போது சங்கடமான ஒரு சுமையாகவே இருந்தது.

அந்த மகிழ்ச்சியின் காரணத்தையும் ஆராய்ந்து பார்த்தேன். எனக்கென்று எதையாவது நான் வைத்துக்கொண்டால், பூரா உலகத்திற்கும் எதிராக அதை நான் காப்பாற்ற வேண்டியிருக்கிறது என்பதைக் கண்டேன். தாம் விரும்புவதைப் பெற முடியாதவர்கள் பலர் இருப்பதையும் கண்டேன். நான் ஒரு தனி இடத்தில் என்னுடைய உடைமைகளுடன் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். என்னிடமுள்ளவற்றைப் பறித்துப் பங்கு போட்டுக்கொள்ள வேண்டுமென்று, பசியினாலும் பஞ்சத்தினாலும் பீடிக்கப்பட்ட மக்கள் வந்தால், நான் போலீஸ் உதவியை நாட வேண்டியிருக்கும். என்னிடமுள்ளதை அவர்கள் எடுத்துக்கொள்ள விரும்புகிறார்கள் என்றால், அதற்குத் தீய நோக்கம் எதுவும் காரணமல்ல. என்னைவிட அவர்களுக்கு அது அதிகத் தேவையானதாக இருப்பதே அதற்குக் காரணம் என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன்.

மேலும் நான் நினைத்தேன்: உடைமைகளை வைத்துக்கொள்ளுவது ஒரு குற்றம் போல் தோன்றுகிறது. சிலவற்றை விரும்பும் மற்றவர்களுக்கும் அவை கிடைக்கின்றன என்பது எனக்குத் தெரிந்தால்தான் அவற்றை நான் வைத்துக் கொள்ளலாம். ஆனால், இது அசாத்தியமானது என்பதை யாவரும் அறிவர். ஆகவே, எல்லோரும் வைத்துக்கொள்ளக்கூடியது உடைமையின்மைதான்; எதையும் வைத்துக்கொள்ளாமல் இருத்தல் அது. அஃதாவது, தன்னிச்சையாக விட்டுக் கொடுப்பது.

'தன்னிச்சையான வறுமை, உடைமையின்மை ஆகியவைகளைப் பற்றி நீங்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே உங்கள் உடலில் பல சாமான்கள் இருக்கின்றனவே' என்று நீங்கள் கேட்கலாம்! அந்தக் கிண்டல் சரியானதாகவும் இருக்கும். ஆனால், இப்போது நான் சொல்லும் விஷயத்தைப் பற்றி உங்களுக்குப் புரிந்திருப்பது மேலெழுந்தவாரியானதாக இருந்தால்தான் அது சரியாயிருக்கும். அதில் உள்ள உணர்ச்சிதான் முக்கியம். உங்க

ளிடம் உடல் இருக்கும் வரையில், அதற்குச் சில ஆடைகளும் வேண்டியிருக்கும். ஆனல், அந்த உடலுக்கென்று கிடைத்ததையெல்லாம் எடுத்துக்கொள்ளக்கூடாது; எவ்வளவு குறைந்த அளவில் சமாளிக்க முடியுமோ அதையே எடுத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் வசிப்பதற்குப் பல மாளிகைகளை வைத்துக்கொள்ளக்கூடாது; குறைந்தபட்சத் தேவையையே எடுத்துக்கொள்ள வேண்டும். உணவு முதலிய மற்றத் தேவைகளின் விஷயமும் இதே மாதிரிதான்.

இன்றுள்ள நாகரிகத்திற்கும், நான் சித்தரித்துக் காட்டும் விரும்பத்தக்க அந்த ஆனந்த நிலைக்குமிடையே தினசரி முரண்பாடுகள் இருப்பதைக் காண்கிறீர்கள். உங்களுடைய தேவைகள் பெருகுவதுதான் நாகரிகப் பண்பாட்டின் அடிப்படை என்று கருதப்படுகிறது. உங்களிடம் ஓர் அறை இருந்தால், இரண்டு மூன்று அறைகள் வேண்டும் என்று விரும்புவீர்கள். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயிருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஆனந்தம். அதேமாதிரி, உங்கள் வீட்டில் முடிந்த வரையில் அதிகமான மரச்சாமான்களை வைத்துக்கொள்ளவும் ஆசைப்படுவீர்கள். உங்களிடம் இருக்கும் அதிகமான உடைமைகளுக்கு ஏற்றவாறு உங்களுடைய பண்பாடும் உயர்வாயிருப்பதாகக் கருதப்படுகிறது. அந்த நாகரிகத்தின் ஆதரவாளர்கள் சொல்லக்கூடியதைப்போல் நான் அவ்வளவு அழகாகச் சொல்லவில்லையோ, என்னவோ! ஆயினும் எனக்குப் புரிந்த விதத்தில் சொல்லுகிறேன்.

இதன் மறுபுறத்தையும் பாருங்கள். உங்களிடம் இருப்பது குறைவாகயிருந்தால், உங்களுடைய தேவையும் குறைவாக இருக்கிறது. அதிகத் திருப்தியுடனும் இருக்கிறீர்கள். எந்த மாதிரி திருப்தி? இந்த வாழ்க்கையை ருசித்து அனுபவிக்கும் திருப்தியல்ல; மற்றவர்களுக்குச் சேவை செய்யும் திருப்தியை அனுபவிக்கத்தான். திரிகரண சுத்தியாகச் சேவை செய்வதற்கு......... உடல்கூட உங்களுடையதல்ல. உங்களுடைய உடல் தாற்காலிகமாகக் கொடுக்கப்பட்டுள்ள ஒன்றுகும். அதைக் கொடுத்தவரே அதைத் திருப்பி எடுத்துக்கொண்டு விடவும் முடியும்.

இதுதான் என்னுடைய திடமான நம்பிக்கை. ஆகையால், கடவுள் விரும்பும்போது இந்த உடலையும் கொடுத்துவிட வேண்டும் என்பதே என்னுடைய விருப்பமாக இருக்க வேண்டும். இந்த உடல் என்னிடமிருக்கும் வரையில், புலன் நுகர்ச்சிக்கோ, தீய வழிகளிலோ, சந்தோஷ அனுபவத்திற்கோ அதை உபயோகிக்கக்கூடாது; நாள் பூராவிலும் சேவை செய்வதிலேயே அதை உபயோகிக்க வேண்டும். உடல் விஷயத்திலேயே இப்படியென்றால் உடைகள், மற்றும் நாம் உபயோகிக்கும் மற்ற விஷயங்களில் இது முக்கியமானதாகிறது.

தன்னிச்சையான வறுமை என்ற இந்த விரதத்தைச் சாத்தியமான அளவுக்குப் பின்பற்றி இருப்பவர்கள், (பூரணச்செம்மை

பெறுவதென்பது மனிதர்களுக்குச் சாத்தியமில்லை; முடிந்த அளவே சாத்தியமானது)இந்த லட்சிய நிலையை எய்தியவர்கள் என்ன கூறுகிறார்கள்? நம்மிடமுள்ள எல்லாவற்றையும் துறந்து விட்டால், உலகத்திலுள்ள எல்லாப் பொக்கிஷங்களுமே நம்மிட மிருப்பதாகும் என்று அவர்கள் கூறுகிறார்கள். அதாவது, உண் மையில் நமக்குத் தேவைப்படும் யாவும் நமக்குக் கிடைக்கின்றன. உணவு தேவைப்பட்டால், அதுவும் உங்களிடம் வரும்.

உங்களில் பலர் தெய்வ பக்தி உள்ளவர்கள். கடவுளை வேண்டிக் கேட்டுக்கொண்டால் உணவு முதல் எல்லாமே கிடைக் கின்றன என்று பல கிறிஸ்தவர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன். அதை நான் நம்புகிறேன். ஆனால், இன்னும் ஒரு படி என்னுடன் நீங்கள் வரவேண்டும் என்று விரும்புகிறேன். உடல் உள்பட தம்மிடமுள்ள யாவற்றையும் தம்மிச்சையாக விட்டுக் கொடுப் பவர்கள், அதாவது அதற்குத் தயாராயிருப்பவர்கள், (அவர்கள் தம்மைத் தாமே கடும் சோதனைக்குட்படுத்திக் கொள்ள வேண் டும்; தமக்கெதிராகவே தீர்ப்பளித்துக் கொள்ளவும் வேண்டும்) உண்மையாகவே, தேவைக்குட்பட்டவர்களாய் இருக்கமாட் டார்கள்.

தேவை என்பதை அதனுடைய முழு அர்த்தத்தில் அப்படியே எடுத்துக்கொள்ளக்கூடாது. கடவுளைப்போல் இவ்வுலகில் அவ் வளவு கடுமையாக வேலை வாங்கும் எஜமானனை நான் அறிந்த தில்லை. அவர் நம்மைக் கடைசி வரையில் சோதனை செய்து பார்த்துவிடுகிறார். உங்கள் உடல் தளர்ச்சி பெற்று க்ஷீண மடையும்போது, அல்லது உங்களுடைய நம்பிக்கை குறையும் போது, எப்படியாவது கடவுள் உங்களுக்குத் துணையாக வந்து விடுகிறார். நான் சொன்னபடி கேட்பதாயிருந்தால் எப்போதும் உங்கள் உதவிக்கு வரத் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறேன் என்பதையும் ருசுப்பித்துவிடுகிறார். இது என்னுடைய அனுபவம். கடைசி நிமிஷத்தில் கடவுள் என்னைக் கைவிட்டார் என்ற அனு பவமே எனக்கு ஏற்பட்டதாக ஞாபகமில்லை.

['மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்' — ஜி. ஏ. நடேசன் கம்பெனி (4-வது பதிப்பு) பக்கம், 1066]

[23—9—1931-இல் லண்டன் கில்ட் ஹவுஸில் செய்த ஒரு பிரசங்கத்தி லிருந்து எடுத்தது.]

# 11

# பணக்காரரின் நியாயமான ஸ்தானம்

பியர் ஸெரிஸோல்.* ஜோவில்ஜில்ஸன்† இருவரும் பம்பாய் போகும்போது எங்களுடன் ரெயிலில் சேர்ந்து பிரயாணம் செய்தார்கள். அவர்கள் 23-ஆம் தேதி ஐரோப்பாவுக்குக் கப்பலேற வேண்டியவர்கள். அகிம்சைக் கொள்கையைத் தாக்கி ஒரு கம்யூனிஸ்டு ஆசிரியர் எழுதியிருந்த புத்தகத்தைப் பியர் வார்தாவில் தங்கியிருந்தபோது மும்முரமாகப் படித்துக்கொண்டிருந்தார். ''இந்தக் கண்டனத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உண்மையில் அவர்களின் வாதங்கள் சிலவற்றை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்'' என்று அவர் சொன்னார். ''ஆனால், உண்மையைத் தவறாகத் திரித்துக்கூறி அவர்கள் ஏன் தம் கட்சியைப் பலப்படுத்த முயற்சிக்கவேண்டும் என்பது எனக்கு விளங்கவேயில்லை. இந்தப் புத்தகத்தில் வெறுக்கத்தக்க பொய்கள் நிறைந்திருக்கின்றன. முதலாளித்துவத்துடன் நேர்மையற்ற முறையில் ஓர் உடன்பாடு செய்துகொள்ளுவதே காந்தீயக் கொள்கையின் பலனாயிருக்கிறது என்று சொல்லுவதற்குப் பதிலாக, காந்திஜி ஏழைகளிடம் அனுதாபம் இருப்பதாகச் சொல்லிக்கொண்டு, பணக்காரர்களிடம் அவருக்குள்ள உண்மையான அனுதாபத்தை மறைத்துக்கொள்ள முயற்சிக்கிறார் என்றும், முதலாளித்துவத்தைத் தாக்கி நிறுத்த முயலுகிறார் என்றும் இந்த ஆசிரியர் கூறியிருக்கிறார். முதலாளிகள், முதலாளித்துவத்துடன் உள்ள உறவுகள் பற்றி எனக்கும் சில ஐயங்கள் உண்டு. ஆனால், இந்தப் பொய் எனக்குப் புரியவில்லை'' என்றார். ரெயிலில் வரும்போது இந்தச் சந்தேகங்களில் சிலவற்றைக் காந்திஜியின் முன்பு பியர் மனம் விட்டுக் கூறினார்.

''பணக்காரர்கள் எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்று சில விதிகள் விதிக்க முடியுமா ? அதாவது, பணக்காரர்களுக்குச் சொந்தமானது எவ்வளவு, சொந்தம் இல்லாதது எவ்வளவு என்று நிர்ணயிக்க முடியுமா ?''

''முடியும்'' என்றார் காந்திஜி, புன்சிரிப்புடன். ''பணக்காரர்கள் 5 அல்லது 10 அல்லது 15 சத விகிதம் எடுத்துக்கொள்ளட்டும்'' என்றார்.

''85 சத விகிதம் எடுத்துக்கொள்ளக் கூடாதல்லவா ?''

''25 சத விகிதம் வரையில்கூடப் போகலாமென்று நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால், சுரண்டி வாழ்பவர்கள் கூட 85 சத விகிதம் எடுத்துக்கொள்ள முடியாது.''

---

* சர்வதேசத் தொண்டர் சேவையின் ஸ்தாபகர், தலைவர்.

† தீனபந்து ஆண்டுரூஸின் விருப்பத்திற்கிணங்க, பீகார் பூகம்ப நிவாரண வேலையில் பியர் ஸெரிஸோலுக்கு உதவி செய்தவர்.

பணக்காரர்களுக்கு இந்த உண்மையை அறிவுறுத்துவதற்கு எவ்வளவு காலம் பொறுத்திருக்க வேண்டும் என்பதே பியர் ஸெரிஸோவின் சங்கடமாகும்.

"அங்கேதான் கம்யூனிஸ்டுகளுக்கும் எனக்கும் கருத்து வேற்றுமை இருக்கிறது" என்ருர் காந்திஜி. என்னைப் பொறுத்த வரையில் அகிம்சைதான் என்னுடைய இறுதியான சோதனை. நாமும் ஒரு காலத்தில் பணக்காரர்களின் நிலைமையில்தான் இருந்தோம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நமக்கும் அது சுலபமாயிருக்கவில்லை. நம்மை நாமே பொறுத்துக் கொண்டதைப் போல், மற்றவர்கள் விஷயத்திலும் நடந்து கொள்ளவேண்டும். மேலும், நான் சொல்லுவதுதான் சரி என்றும், மற்றவன் சொல்லுவது தவறு என்றும் நினைத்துக்கொள்ள எனக்கு உரிமையில்லை. மற்றவனை என் வழிக்குத் திருப்பும் வரையில் நான் காத்துக்கொண்டுதான் இருக்க வேண்டும். இதற்கிடையே, 'நான் 25 சத விகிதம் வைத்துக்கொண்டு, 75 சத விகிதத்தைத் தருமத்திற்குக் கொடுத்துவிடத் தயாராயிருக்கிறேன்' என்று பணக்காரர் சொன்னுல்; அதை ஒப்புக்கொண்டு விடுவேன். ஏனெனில், கத்தி முனையில் வாங்கக்கூடிய நூற்றுக்கு நூறைவிட, தன்னிச்சையாகக் கிடைக்கும் 75 சத விகிதம் மேலானது என்று எனக்குத் தெரியும். இந்த 75 சத விகிதத்துடன் திருப்தியடைவதன் மூலம் நியாயமாகவே நான் நடந்துகொள்ளுகிறேன். அகிம்சையே நம்மிடையே பொது அம்சமாக இருக்க வேண்டும்.

"இன்று நிர்ப்பந்தத்திற்குப் பணியும் ஒரு மனிதன், நாளைக்குத் தன்னிச்சையாகவே அந்த நிலையை ஏற்றுக்கொண்டு விடுவான் என்று நீங்கள் வாதாடலாம். அது அசாத்தியமானது என்றே எனக்குத் தோன்றுகிறது. அதை நான் அவ்வளவாக நம்பமாட்டேன். இன்று நான் பலாத்காரத்தை உபயோகித்தால், பெரும் அளவில் பலாத்காரத்தை நான் எதிர்நோக்க வேண்டியிருக்கும் என்பது நிச்சயம். அகிம்சையை விதியாக ஏற்றுக் கொண்டால், வாழ்க்கை பூராவிலும் விட்டுக் கொடுக்கும் சந்தர்ப்பங்களே அதிகமாக இருக்கும். ஆனுல், முடிவே இல்லாத மோதல்களைவிட அது மேலானது."

"பணக்காரர்களின் நியாயமான ஸ்தானம் என்ன என்பதை ஒரே வார்த்தையில் சொல்லுங்கள்."

"தருமகர்த்தா ஸ்தானம்தான். பல நண்பர்கள், தாம் சம்பாதிப்பதை ஏழைகளுக்காகச் செலவிட்டு, தம்முடைய செல்வத்தைத் தரும சொத்தாகவே கருதுகிருர்கள் என்பதை நானறிவேன்."

"எனக்கும் பல பணக்கார நண்பர்களும், ஏழை நண்பர்களும் இருக்கிருர்கள். என்னிடம் பணம் கிடையாது. ஆனுல்,

பணக்கார நண்பர்கள் கொடுப்பதை நான் ஏற்றுக்கொள்ளு கிறேன். இது நியாயம்தானா ?''

''உங்களுடைய சொந்த உபயோகத்திற்கென்று நீங்கள் எதையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது. அதாவது, ஓய்வெடுத்துக் கொள்ளுவதற்கு ஸ்விட்ஜர்லாந்துக்குப் போவதற்காக நீங்கள் பணம் வாங்கிக்கொள்ளக்கூடாது. ஆனால், ஹரிஜனங்களுக்குக் கிணறுகள் வெட்டுவதற்கோ அல்லது பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத் திரிகள் கட்டுவதற்கோ நீங்கள் லட்ச ரூபாய் வாங்கிக்கொள்ள லாம். சுயநலம் என்ற அம்சத்தை நீக்கிவிட்டால் பிரச்னை எளி தாகிவிடும்.''

''என் சொந்தச் செலவுக்கு என்ன செய்வது?''

''வேலைக்குத் தகுந்த கூலி பெற உரிமையுண்டு என்ற கொள்கைப்படி நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். உங்களுடைய குறைந்த பட்ச ஊதியத்தைப் பெற்றுக்கொள்ள நீங்கள் தயங்கக் கூடாது. நாங்கள் ஒவ்வொருவருமே அப்படித்தான் செய்கிறோம். கோதுமை மாவும், வேப்பிலையும்தான் பன்ஸாலியின் ஊதியம். ஆனால், நாமெல்லோருமே பன்ஸாலிகளாக இருக்க முடியாது. ஆயினும், கிட்டத்தட்ட அம்மாதிரி வாழ்க்கையை நடத்திப் பார்க் கலாம். என் ஜீவனத்திற்கு வேண்டியதை நான் பெற்றுக்கொள் ளலாம். ஆனால், என் மகனுக்கு ஓர் ஏற்பாடு செய்யும்படி ஒரு பணக்காரரிடம் நான் கேட்கக்கூடாது. நான் சமூகத்திற்குத் தொண்டு புரிந்துகொண்டிருக்கும் வரையில், உயிரையும், உடலை யும் காப்பாற்றுவதே என் கவலையாக இருக்க வேண்டும்.''

''அந்தத் தொகையை அவரிடமிருந்து நான் பெற்றுக்கொண் டிருக்கும் வரையில் அவர் விஷயத்தில் எனக்கு ஒரு கடமை இருக்கிறதல்லவா ? 'உங்களுடைய நிலைமை பொறாமைப்படத் தக்கதல்ல. உங்களிடம் நிறையச் சொத்து இருக்கிறது. உங்க ளுடைய வெறும் ஜீவனோபாயத்திற்குத் தேவையாயிருப்பதற்கு மேல் அதிகமாக நீங்கள் வைத்துக்கொண்டிருக்கக்கூடாது' என்று நான் சதா அவருக்கு ஞாபகப்படுத்திக்கொண்டிருக்க வேண்டாமா ?''

''ஆம், அது உங்கள் கடமைதான்.''

''ஆனால், பணக்காரர்களிலேயே பலவிதமானவர்கள் இருக் கிறார்கள். மதுபான வியாபாரத்தின்மூலம் பணம் சம்பாதித்தவர் களும் இருக்கலாம்.''

''ஆம். அதற்கு ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டியதுதான். கள்ளுக்கடைக்காரரிடமிருந்து நீங்கள் பணம் பெற்றுக்கொள்ள முடியாதுதான். ஆனால் நிதி வேண்டும் என்று கோரி ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தால், என்ன நடக்குமென்று எனக்குத் தெரியாது. நியாயமாகப் பணம் சம்பாதித்தவர்கள்தான் நிதிக்கு உதவி செய்யலாமென்று சொல்வீர்களா ? அந்த நிபந்தனையின்

கீழ் பணம் பெறுவதைவிட வேண்டுகோளையே நான் வாபஸ் பெற்றுவிடுவேன். ஒருவர் நியாயமாகச் சம்பாதித்தாரா, இல்லையா என்பதை யார் முடிவு செய்வது? நீதி என்பதும் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடிய ஒன்றுதான். நம்மை நாமே கேட்டுக் கொண்டு பார்த்தால், நம் வாழ்க்கை பூராவிலும் நாம் நியாயமாக இருந்திருக்கவில்லை என்பது தெரியும். எல்லோரும் ஒரே குட்டையில் ஊறியவர்கள்தான் என்று கீதை கூறுகிறது. ஆகையால், மற்றவர்களைப் பற்றித் தீர்ப்புக் கூறுவதைவிட, அதனால் பாதிக்கப்படாமல் உலகத்தில் வாழ்வதே சிறந்தது என்று கீதை கூறுகிறது. சுயநலத்தை அகற்றிவிடுவதுதான் இதிலுள்ள ரகசியம்."

"புரிகிறது" என்று கூறிவிட்டு, பியர் ஸெரிஸோல் சில நிமிஷங்கள் வரை மௌனமாயிருந்தார். பின்னர் ஒரு பெருமூச்சுடன் கூறினார்: "ஆயினும், சில சமயங்களில் மிகவும் தருமசங்கடமான நிலைமை ஏற்படுகிறது. காலையிலிருந்து மாலை வரையில் இரண்டணாவுக்கும் குறைவான ஊதியத்திற்காக வேலை செய்தவர்களைப் பீகாரில் பார்த்திருக்கிறேன். சில சமயம் ஓர் அணா கூட கிடைக்காது. தம்மைச் சுற்றியுள்ள பணக்காரர்கள் அக்கிரமமான வழியில் சம்பாதித்த பணத்தைப் பறித்துவிட்டால் தேவலை என்று அவர்கள் பல தடவை என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் என்ன சொல்ல முடியும்? உங்களை ஞாபகப் படுத்துவேன்."

பியரின் சந்தேகங்கள் யாவும் தீரவில்லை. அவர் முடிவில்லாமல் பேசிக்கொண்டே இருந்திருப்பார். ஆனால், நாள் பூராவும் காந்திஜிக்கு நல்ல வேலை. அவர் தூக்கக் கலக்கத்துடனிருந்தார். ஆனால், பியர் தன் நிலைமையை எடுத்துரைத்ததில் காட்டிய ஆழ்ந்த உணர்ச்சியும், இதை விவாதிக்கும்போது அவரிடம் காணப்பட்ட ஆழ்ந்த துக்கமும், விவாதத்தை ஓர் உயர்ந்த நிலைக்குத் தூக்கிச் சென்றுவிட்டது. அந்த மனோநிலையில் தவறை அணுகும்போது மனச்சாட்சி உறுத்தியிருக்கும். ஆனால், முடிவில் இப்பிரச்னைக்குத் தீர்வு அகிம்சைதான் என்பதையும், அதை எவ்வளவு தூரம் அனுஷ்டிக்கத் தயாராயிருக்கிறோம் என்பதைப் பொறுத்தே இப்பிரச்னை தீரும் என்பதையும் அவர் உணர்ந்தார் போல் தோன்றியது.

—'ஹரிஜன்' – 1—6—1935

[ஸ்ரீ மகாதேவ தேசாயால் எழுதப்பட்டு 'பணக்காரர்களின் பிரச்னை' என்ற தலைப்பில், 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 12

# பணக்காரர்கள் தருமகர்த்தாக்களே

ஒரு நண்பர் எழுதுகிறார் :

தருமகர்த்தாத் தன்மை பற்றிய உங்களுடைய கருத்து, 1300 வருடங்களுக்கு முன்பே எதிர்பார்க்கப்பட்டிருக்கிறது என்பதை நீங்கள் அறிய மகிழ்ச்சியடைவீர்கள். புனிதமான 'ஹாதிஸ்'ஸில் பின்வருமாறு காணப்படுகிறது :

'மனிதர்களிடம் இருப்பதெல்லாம் என்னுடைய சொத்துக்கள். ஏழைகளே என் குடும்பத்தினர். பணக்காரர்களிடமுள்ள சொத்துக்கள் தரும சொத்துக்கள். ஆகையால், என்னுடைய ஏழைக் குழந்தைகளுக்காகப் பணம் செலவு செய்யாத பணக்காரர்கள் 'ஹாதிஸ்'ஸுக்குப் போவார்கள். அவர்களைப் பற்றி நான் கவலைப்படமாட்டேன்.'

இந்த நண்பர் குஜராத்தியில் எழுதியிருக்கிறார். இந்த மேற்கோளையும், அதனுடைய மொழிபெயர்ப்பையும் குஜராத்தியிலேயே கொடுத்திருக்கிறார். இது ஒரு பத்திரிகையில் இருந்ததாம். ஆனால், பத்திரிகையின் பெயரை அவர் கொடுக்கவில்லை. அந்த மேற்கோளில் உள்ள வார்த்தைகளில் 25 சத விகிதம் குஜராத்திகளுக்குப் புரியும். அதாவது, அந்த வார்த்தைகள் குஜராத்தி மொழியிலேயே வழக்கில் வந்துவிட்டன.

— 'ஹரிஜன்' – 23—9—1939

['குறிப்புகள்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 13

# விரும்பி ஏற்கும் தன்மையா? தருமகர்த்தாத் தன்மையா ?

**கேள்வி :** *நியாயமான வழியில் லட்சக்கணக்கில் சம்பாதிப்பது எப்படிச் சாத்தியமாகும்? இது சாத்தியமில்லை என்று, மிகப் பெரிய வர்த்தகரான ஜம்னாலால்ஜி சொல்லுவதுண்டு. மேலும், ஒரு பணக்காரர் எவ்வளவுதான் ஜாக்கிரதையாயிருந்தாலும், தன் சொந்த விஷயத்தில் தேவைக்கு அதிகமாகவேதான் செலவிட்டுக்கொள்ளுவார். ஆகையால், சொத்துக்களுக்குத் தருமகர்த்தாவாய் இருக்க வேண்டும் என்பதைவிடப் பணக்காரர்களாகக் கூடாது என்பதை அதிகமாக வற்புறுத்தினால் என்ன?*

பதில்: இது பொருத்தமான கேள்விதான். இதற்கு முன்பே என்னிடம் இந்தக் கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. எந்தச் செய்கையிலுமே மாசு இருக்கிறது என்று கீதை கூறுவதைக் கருத்தில் வைத்துக்கொண்டு ஜம்னலால்ஜி அப்படிச் சொல்லியிருக்க வேண்டும். மனமறிந்து தவறு செய்யாமல் பணம் சேர்ப்பது சாத்தியம் என்பதே என்னுடைய நம்பிக்கையாகும். உதாரணமாக, என்னுடைய ஓர் ஏக்கரா நிலத்தில் ஒரு தங்கச் சுரங்கம் இருப்பதாக இருக்கலாம். ஆனால், பணத்தைச் சம்பாதித்துவிட்டுப் பிறகு தருமகர்த்தாவாக இருப்பதைவிட, செல்வத்தை விரும்பாமலே இருப்பது நல்லதுதான் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். வெகு காலத்திற்கு முன்பே என்னுடைய உடைமைகளை நான் விட்டுவிட்டேன். மற்றவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று நான் விரும்புகிறேன் என்பதற்கு இது போதிய ருசுவாகும். ஆனால், ஏற்கனவே பணக்காரர்களாயிருப்பவர்களுக்கோ, பணம் சேர்க்க ஆசைப்படுபவர்களுக்கோ, புத்தி சொல்ல நான் யார்? உங்களுடைய செல்வத்தை மற்றவர்களுக்குச் சேவை செய்வதில் பயன்படுத்துங்கள் என்றுதான் சொல்லலாம். பொதுவாகப் பணக்காரர்கள் தங்கள் சொந்த விஷயத்தில் தம் தேவைக்கு அதிகமாகவே செலவிட்டுக் கொள்ளுகிறார்கள் என்பது உண்மையே. ஆனால், இதைத் தவிர்க்க முடியும். தன்னைப் போன்ற அந்தஸ்துள்ளவர்களும், மத்திய தர வகுப்பினரும்கூடத் தமக்காக எவ்வளவு செலவிடுவார்களோ அதைவிடக் குறைவாகவே ஜம்னலால்ஜி செலவிட்டார். சொந்த விஷயத்தில் இப்படிக் கருமித்தனமாக நடந்துகொள்ளும் எவ்வளவோ பேர்களை நான் பார்த்திருக்கிறேன். தம் சொந்தத் தேவைகளுக்கு மிகமிகக் குறைவாகச் செலவு செய்வது சிலருடைய சுபாவம். அதனால் தமக்கு ஏதோ கியாதி கிடைக்கிறது என்றும் அவர்கள் நினைப்பதில்லை.

பணக்காரர்களுடைய பிள்ளைகள் விஷயத்திலும் இது பொருந்தும். வார்சுரிமையில் சொத்து பெறுவதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. தம்முடைய பிள்ளைகள் சுதந்திரமாக வாழக்கூடிய விதத்தில் பணக்காரர்கள் அவர்களைத் தயார் செய்து பழக்க வேண்டும். அவர்கள் அப்படி செய்யவில்லை என்பதுதான் பரிதாபம். அவர்களுடைய பிள்ளைகளுக்கு ஏதோ கல்வி கிடைக்கிறது. வறுமையைப் புகழும் சில பாடல்களையும் அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், தகப்பனாரின் சொத்தைப் பயன்படுத்திக்கொள்ள அவர்கள் தயங்குவதில்லை. ஆகையால், என் பகுத்தறிவை உபயோகித்து, எது அனுபவ சாத்தியமானதோ அதைச் சொல்லுகிறேன். ஆனால், வறுமையை மேற்கொள்ளும் கடமையிலும், பொருளாதாரச் சமத்துவத்திலும் நம்பிக்கையுள்ளவர்கள், பணக்காரர்களைக் கண்டு பொறாமைப்படக்கூடாது. நம்

முடைய வறுமையைப் பிறரும் மேற்கொள்ளக்கூடியவாறு அதில் உண்மையான மகிழ்ச்சியைக் காட்ட வேண்டும். ஆனல், இதில் வருந்தத்தக்க உண்மை என்னவென்ருல், அத்தகையவர்கள் மிகச் சிலரே என்பதுதான்.

—'ஹரிஜன்' – 8—3—1942

['சொத்தா, வறுமையா?' என்ற தலைப்பில் 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 14

# தருமகர்த்தாக்களாகவும் ஊழியர்களாகவும் மாறுங்கள்

[1931 மார்ச்சு 7-ந்தேதியன்று டில்லி, பழைய கவுன்ஸில் மண்டபத்தில் இந்திய வர்த்தகச் சம்மேளனக் கூட்டத்தில் காந்திஜி ஒரு பிரசங்கம் செய்தார். பாதுகாப்பு விஷயம் என்பது பற்றி அவர் பேசியதன் சுருக்கமான மொழிபெயர்ப்பின் பகுதிகள் 'வர்த்தகர்களும் காங்கிரஸும்' என்ற தலைப்பில் வெளியாயின.]

காங்கிரஸைப் பாராட்டி உங்களுடைய தலைவர் பேசினர். பொருளாதார விஷயங்களில் வர்த்தகர்களைக் காங்கிரஸ் கலந்தாலோசிக்க வேண்டும் என்றும் சொன்னர். இந்த யோசனையை நான் வரவேற்கிறேன். உங்களுடைய யோசனையையும் உதவியையும் காங்கிரஸ் எப்போதும் மகிழ்ச்சியுடன் வரவேற்கும். காங்கிரஸ் எந்தக் குறிப்பிட்ட கோஷ்டியினருக்கும் சொந்தமானதல்ல. அது எல்லோருக்கும் சொந்தமானது. ஆனல், ஜனத்தொகையில் பெரும்பான்மையோராக உள்ள ஏழை விவசாயிகளின் நலன்களைக் காப்பாற்றுவதே அதன் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். ஆகையால், காங்கிரஸ் ஏழைகளுக்குத்தான் உண்மையான பிரதிநிதியாக இருக்கவேண்டும். இதனல், மத்தியதர வகுப்பினர், முதலாளிகள், ஜமீன்தார்கள் போன்ற மற்ற வகுப்பினர் அழிந்து போய்விட வேண்டும் என்று அர்த்தமில்லை. எல்லா நலன்களுமே ஏழைகளின் நலன்களுக்குட்பட்டதாயிருக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். கைத்தொழில் துறையில் இந்தியா அபிவிருத்தியடைந்து சுபிட்சமாயிருக்க வேண்டும் என்று காங்கிரஸ் விரும்புகிறது. தொழில் துறையிலுள்ளவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் காங்கிரஸுக்குள் வந்து கொண்டிருக்கிருர்கள். சென்ற வருடம் அவர்கள் அளித்த உதவிக்கு நாங்கள் நன்றி செலுத்தாமல் இருக்க முடியாது. இந்தக் கூட்டத்தில் வந்து பேசும்படி என்னை நீங்கள் அழைத்ததற்குக் காரணம்,

என்னுடைய பெயரல்ல. காங்கிரஸின் ஓர் எளிய தொண்டன், தரித்திர நாராயணர்களின் பிரதிநிதி என்ற முறையில்தான் என்னை அழைத்திருக்கிறீர்கள். வர்த்தக வகுப்பினரின் சேவைகளையும் நான் மறக்க முடியாது. ஆயினும், நீங்கள் இன்னும் ஒரு படி மேலே போக வேண்டும் என்று விரும்புகிறேன். காங்கிரஸை உங்களுடைய சொந்த ஸ்தாபனமாக்கிக் கொண்டுவிட வேண்டும் என்று விரும்புகிறேன். நிர்வாகப் பொறுப்பை நாங்கள் மனமுவந்து உங்களிடம் ஒப்படைக்கத் தயாராக இருக்கிறோம். இந்த வேலையை நீங்கள் இன்னும் நன்ருகச் செய்ய முடியும். ஆனால், நீங்கள் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவதென்று முடிவு செய்தால், அதற்கு ஒரு நிபந்தனையும் இருக்கிறது. ஏழைகளின் தருமகர்த்தாக்களாகவும், ஊழியர்களாகவும் உங்களை நீங்கள் நினைத்துக்கொள்ள வேண்டும். உங்களுடைய வியாபாரம், பாடுபட்டு உழைக்கும் லட்சக்கணக்கான மக்களின் நலன்களுக்கேற்றவாறு நடத்தப்பட வேண்டும். அல்லது பண்டித மாளவியா சொல்லுவது போல், நாணயமாகச் சம்பாதிப்பதுடன் நீங்கள் திருப்தியடைய வேண்டும். வியாபார சுபிட்சமும், கண்டிப்பான நாணயமும் முரண்பட்டவைகள் என்று நான் நினைக்கவில்லை. தங்களுடைய பேரங்களில் முற்றிலும் நாணயமாகவும், நேர்மையாகவும் உள்ள வியாபாரிகளை நான் அறிவேன். ஆகையால், நீங்கள் காங்கிரஸின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவது சுலபமே. காங்கிரஸ் அமைப்பைவிட ஜனநாயகத் தன்மை வாய்ந்த அமைப்பு வேறு எதுவுமில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். எந்த விதமான சிக்கலும் இல்லாமல் பத்து வருடங்களாக அது செயல்பட்டு வருகிறது. அநேகமாக வயது வந்தவர்களுக்கெல்லாம் வோட்டுரிமை என்ற அடிப்படையிலேயே அது அமைக்கப்பெற்றிருக்கிறது.

—'எங் இந்தியா' - 16—4—1931

# 15

# செல்வத்தைத் துறப்பதன் மூலம் அதை அனுபவியுங்கள்

*[கேடா ஜில்லாவில், ஒரு வீட்டில் ஆயுதம் தாங்கிய கொள்ளைக்காரர்கள் புகுந்து கொள்ளையடித்தனர். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் காங்கிரஸின் கடமை என்ன என்பதைப்பற்றி 1942 பிப்ரவரி 12 'ஹரிஜன்' பத்திரிகையில் காந்திஜி எழுதியிருந்தார். 'வருந்தத்தக்க ஒரு சம்பவம்' என்ற தலைப்பின் கீழ் வெளியான அக்கட்டுரையின் கடைசி இரண்டு பாராக்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. கட்டுரையின் முழு விவரத்தை*

'மகாத்மா காந்தி நூல்' இரண்டாம் தொகுப்பு-754-57-ம் பக்கங்களில் காண்க.]

"......இன்று தம்முடைய கடமை என்ன என்பதைப் பணக்காரர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தம்முடைய செல்வத்தைக் காப்பாற்றுவதற்குக் கூலிக்கு அமர்த்தும் ஆட்களை வைத்துக்கொண்டிருப்பவர்கள், அந்தக் காவலர்களே தமக்கு விரோதமாகத் திரும்பி விடுவதைக் காண்பார்கள். ஆயுதங்களுடனே, அகிம்சை வழியிலோ போராடுவதற்குப் பணக்காரர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். அகிம்சை வழியைப் பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு, 'செல்வத்தைத் துறப்பதன் மூலம் அதை அனுபவியுங்கள்' என்பதே மிகவும் பலனளிக்கத்தக்க சிறந்த மந்திரமாகும். அதாவது : "தாராளமாகக் கோடிக்கணக்கில் சம்பாதியுங்கள். ஆனால், உங்களுடைய செல்வம் உங்களுடையதல்ல என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அது மக்களுக்குச் சொந்தமானது. உங்களுடைய நியாயமான தேவைகளுக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள்; மீதமுள்ளதைச் சமூக நலன்களுக்கு உபயோகியுங்கள்." இதுவரையில் இந்த உண்மை பின்பற்றப்படவில்லை. சங்கடம் மிகுந்த இந்தக் காலத்தில்கூட பணக்காரர்கள் இதைப் பின்பற்றி நடக்கவில்லை என்றால், தங்களுடைய செல்வத்திற்கும், ஆசைகளுக்குமே அடிமைகளாக இருப்பார்கள். அதன் பலனை அவர்களை மீறிய சக்தியுடையவர்களுக்கும் அடிமைகளாக இருப்பார்கள்.

"இந்த யுத்தத்தின் முடிவுடன் முதலாளித்துவத்தின் ஆட்சியும் மடிந்துவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆயுத பலத்தின் மூலமோ, அகிம்சையின் மூலமோ ஏழைகளின் ஆட்சி வருவதையும் நான் காண்கிறேன். உடலைப் போலவே பலாத்காரமும் தாற்காலிகமானதுதான் என்பது ஞாபகமிருக்கட்டும். ஆனால், ஆன்மாவைப் போலவே ஆன்மாவின் சக்தியும் நிரந்தரமானது."

[காந்திஜியின் மேற்கூறிய கருத்தைப் பற்றி ஸ்ரீ சங்கர ராவ் தேவ் ஒரு கேள்வி கேட்டார். "பரிசுத்தமற்றதாய்த்தான் இருக்கவேண்டும் என்பதில்லை" என்ற தலைப்பில், 1942 பிப்ரவரி 22-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகையில் காந்திஜி இதற்குப் பதிலெழுதினர். அதன் விவரம் பின்வருமாறு :]

ஸ்ரீ சங்கர ராவ் தேவ் பின்வருமாறு எழுதுகிறார் :

"'ஹரிஜன்' பத்திரிகையின் போன இதழில், 'வருந்தத்தக்க ஒரு சம்பவம்' என்ற தலைப்பில் நீங்கள் எழுதியிருந்த கட்டுரையில், பணக்காரர்களுக்குப் பின்வருமாறு கூறியிருக்கிறீர்கள் : 'தாராளமாகக் கோடிக்கணக்கில் சம்பாதியுங்கள். ஆனால், உங்களுடைய செல்வம் உங்களுடையதல்ல என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்; அது மக்களுக்குச் சொந்தமானது. உங்க

ளுடைய நியாயமான தேவைகளுக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள்; மீதமுள்ளதைச் சமூக நலன்களுக்கு உபயோகியுங்கள்.' இதை நான் வாசித்த போது என் மனத்தில் தோன்றிய முதல் கேள்வி இதுதான்: முதலில் கோடிக் கணக்கில் சம்பாதிப்பானேன்? பிறகு அதைச் சமூக நலன்களுக்காக உபயோகிப்பானேன்? இன்று சமூகம் உள்ள நிலைமையில், கோடிக் கணக்கில் சம்பாதிப்பதென்ருல், அந்த முறை பரிசுத்தமற்றதாய்த்தான் இருக்க முடியும். பரிசுத்தமில்லாத முறைகளில் கோடிக்கணக்கில் சம்பாதிப்பவர்கள், "செல்வத்தைத் துறப்பதன் மூலம் அதை அனுபவிக்கும்'' மந்திரத்தைப் பின்பற்றுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஏனெனில், பரிசுத்தமற்ற முறைகளில் கோடிக்கணக்கில் சம்பாதிக்கும்போதே, அவர்களுடைய ஒழுக்கமும் மாசடைந்திருக்கத்தான் செய்யும். மேலும், மார்க்கங்கள் பரிசுத்தமானவைகளாயிருக்க வேண்டும் என்றே நீங்கள் எப்போதும் வற்புறுத்தி வந்திருக்கிறீர்கள். இப்போது நீங்கள் பலனைத்தான் முக்கியமாகக் கருதுகிறீர்களே யொழிய, அந்தப் பலனைப் பெறுவதற்கான மார்க்கங்களையல்ல என்று மக்கள் உங்கள் கருத்தைத் தப்பர்த்தம் செய்துகொள்ளக்கூடும்.

"செலவிடுவதைப் போலவே, பணம் சம்பாதிக்கும் முறைகளும் பரிசுத்தமானவைகளாக இருக்க வேண்டுமென நீங்கள் வற்புறுத்தவேண்டும் எனக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதை அதிகம்கூட வற்புறுத்தலாம். பரிசுத்தமான மார்க்கங்களையே பின்பற்றுவது என்பதில் கண்டிப்பாக இருந்தால் கோடிக் கணக்கில் சம்பாதிப்பது என்பது முடியாது; சமூக நலன்களுக்காகச் செலவிடுவதென்பதும் மிகச் சிறிய அம்சமாகிவிடும் என்று நான் நினைக்கிறேன்.''

இதை நான் ஆட்சேபிக்கத்தான் வேண்டும். ஒருவர் சொத்து வைத்துக்கொள்ளுவது நியாயம் என்ருல், முற்றிலும் பரிசுத்தமான முறைகளின் மூலம் கோடிக்கணக்கில் சம்பாதிப்பதும் சாத்தியம் என்றே கொள்ளவேண்டும். என்னுடைய வாதத்திற்காக, தனி நபர்கள் சொத்து வைத்துக்கொள்ளுவது பரிசுத்தமற்றதல்ல என்றே கருதுகிறேன். என்னிடம் ஒரு சுரங்க உரிமை இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அதில், எனக்கு மிகவும் அபூர்வமான வைரம் ஒன்று கிடைத்தால், திடீரென்று நான் லட்சாதிபதியாகிவிடக்கூடும். அப்போது நான் பரிசுத்தமற்ற முறைகளைக் கையாண்டதாகக் குற்றம் சாட்ட முடியாது. கோஹினூர் வைரத்தைவிட இன்னும் அதிக மதிப்பு வாய்ந்த கல்லின் வைரம் கண்டுபிடிக்கப்பட்டபோது இப்படித்தான் நடந்தது. இம்மாதிரி உதாரணங்களை எவ்வளவோ காட்டலாம். நான் எழுதியது அத்தகையவர்களுக்குத்தான். பொதுவாகப் பணக்காரர்களும், பெரும்பாலான மனிதர்களுமே, பணம் சம்பாதிக்கும் முறைகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அகிம்சை முறையை அனுஷ்டிக்கும்போது மிகவும் மோசமான நபர்கள்கூட, மனிதாபிமானத்துடனும், திறமையுடனும் கையாளப்பட்டால் திருந்திவிடக்கூடும் என்பதில் நம்பிக்கை வைக்க வேண்டும். மனிதர்களின் நல்ல சுபாவத்தைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். சமூகத்திலுள்ள ஒவ்வொருவரும் தம்முடைய எல்லாத் திறமைகளையும் சுயநலத்திற்காக மட்டுமில்லாமல், எல்லோருடைய நன்மைக்காகவும் உப

யோகிப்பது நல்லதல்லவா? ஒவ்வொருவரும் தமது திறமைகளைச் சாத்தியமான அளவுக்கு உபயோகிக்க முடியாத ஓர் உயிரற்ற சமத்துவத்தைச் சிருஷ்டிக்க நாம் விரும்பவில்லை. அத்தகைய ஒரு சமூகம் இறுதியில் அழிந்துதான் போகும். ஆகையால், எல்லோருடைய நலன்களுக்கும் உதவுவதற்காகப் பணக்காரர்கள் சம்பாதிக்கலாம் (நேர்மையான முறைகளின் மூலம்தான்) என்ற என்னுடைய புத்திமதி சரியானதேயாகும். ''செல்வத்தைத் துறப்பதன் மூலம் அதை அனுபவிக்க வேண்டும்'' என்ற மந்திரம் அபாரமான அறிவிலிருந்து எழுந்ததாகும், பக்கத்திலிருப்பவன் என்ன ஆகிறான் என்பதைப் பொருட்படுத்தாமல், ஒவ்வொருவரும் தம் சுயநலத்தைப் பெரிதாக நினைப்பதே இன்றைய நிலைமையாக இருக்கிறது. அதற்குப் பதிலாக, எல்லோருக்கும் பிரயோசனமான ஒரு புது வாழ்க்கை முறையைச் சிருஷ்டிப்பதற்கு இதுதான் நிச்சயமான வழி.

# 16
# முதலாளிகளின் கடமை

மகாராஷ்டிர வர்த்தகர் மகாநாட்டிற்குத் தலைமை வகித்து (ஷோலாப்பூர்) ஸ்ரீ கனசியாமதாஸ் பிர்லா, 'மனம் விட்டுச் செய்த பிரசங்கம்' குறிப்பிடத்தக்கது.

முதலாளிகளின் கடமையைப் பற்றி அவர் வரைந்து காட்டிய சித்திரத்தைத் தொழிலாளர் தலைவர்கள்கூட அபிவிருத்தி செய்வதென்பது கஷ்டமாக இருக்கும். வர்த்தகர்களிடையே ஒற்றுமை நிலவ வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி அவர் கூறினார்.

''வர்த்தகர்கள் ஒற்றுமையுடனிருக்க வேண்டும் என்று நான் சொல்லுவது சேவை செய்வதற்குத்தானேயொழிய, சுரண்டலுக்காக அல்ல என்பதைத் தெளிவாக்க விரும்புகிறேன். கொஞ்ச காலமாக, இன்றைய முதலாளி வர்க்கம் பெரும் வசைமொழிகளுக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. அவர்கள் ஒரு தனி வர்க்கத்தினர் என்றே இப்போது கருதப்படுகிறார்கள். ஆனால், முன் காலத்தில் நிலைமை முற்றிலும் மாறாக இருந்தது. முன் காலத்தில் வைசியர்களின் வேலைகளை அலசிப் பார்த்தோமானால், உற்பத்தியும் விநியோகமும் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது என்பதைக் காண்கிறோம். அது அவர்களின் சொந்த நன்மைக்காக அல்ல, பொது நன்மைக்காகவே. அவர்கள் ஈட்டிய செல்வத்தை யெல்லாம் தேசத்தின் சார்பாகத் தருமச் சொத்தாக வைத்துக்கொண்டிருந்தார்கள். முதலாளிகள் தம்முடைய உண்மையான கடமையை நிறைவேற்ற வேண்டுமானால், சமூகத்தின் ஊழியர்களாகச் செயல்பட வேண்டும்; சுரண்டுபவர்களாக அல்ல. நமது கடமையை நாம் உணர்ந்து, அதை நிறைவேற்றினோமானால் கம்யூனிஸமோ, போல்ஷிவிஸமோ வளர்ச்சி பெற முடியாது.

"நம்முடைய கடமைகளை நாம் புறக்கணித்ததால், நாம்தான் கம்யூனிஸத்திற்கும், போல்ஷிவிஸத்திற்கும் ஊட்டம் கொடுத்தோம். நமது கடமையை அறிந்து, அதை உண்மையாகப் பின்பற்றியிருந்தோமானால், பல தீமைகளிலிருந்து சமூகத்தை நாம் காப்பாற்ற முடியும் என்று நிச்சயமாக நம்புகிறேன். உற்பத்தியும், விநியோகமுமே நமது உண்மையான வேலைகள் என்று சொன்னேன். சமூகத்தின் நன்மைக்காக உற்பத்தி செய்து விநியோகிப்போமாக; வாழ்வோமாக. அவசியமானால், பொது நன்மைக்காக நம்மையே தியாகம் செய்துகொள்ளத் தயாராயிருப்போமாக."

—'எங் இந்தியா' - 19—12—1929

# 17

# விசேஷ நலன்கள்

[லண்டனில் நடந்த இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில், சமஷ்டி அமைப்புக் கமிட்டியின் முன்பு காந்திஜி செய்த இரண்டாவது பிரசங்கத்திலிருந்து எடுத்தது. "லேசான ஒரு புகார்" என்ற தலைப்பில் வெளியானது.]

'விசேஷ நலன்களுக்கு விசேஷத் தொகுதிகளின் மூலம் பிரதிநிதித்துவம்' என்ற இனத்தை இனி கவனிப்போம். வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை என்ற ஏற்பாட்டில், தொழிலாளர் சங்கங்கள் போன்றவைகளுக்கு விசேஷப் பிரதிநிதித்துவத்திற்கு அவசியமே இல்லை. நிலச்சுவான்தார்களுக்கு நிச்சயமாக அது வேண்டியதில்லை. இதற்கான காரணங்களையும் கூறுகிறேன். நிலச்சுவான்தார்களின் உடைமைகளைப் பறிக்க வேண்டுமென்று காங்கிரஸோ, வாயில்லாப் பூச்சிகளான இந்த ஏழைகளோ விரும்பவில்லை. நிலச்சுவான்தார்கள் தம்முடைய சாகுபடியாளர்களின் தருமகர்த்தாக்களாக நடந்து கொள்ள வேண்டும் என்றே விரும்புகிறார்கள். வேறு இடங்களிலிருந்து யாராவதோ அல்லது தம்மிலேயே ஒருவரோ தம்முடைய அபேட்சகர்களாக வருவதைவிட, தம்முடைய விவசாயிகள் லட்சக்கணக்கான கிராமவாசிகள், நிலச்சுவான்தார்களையே தம்முடைய அபேட்சகர்களாக வருவதை விரும்புகிறார்கள் என்பது நிலச்சுவான்தார்கள் பெருமைப்படத்தக்க விஷயமாகும்.

ஆகையால், என்ன நடக்குமென்றால், நிலச்சுவான்தார்கள் விவசாயிகளுடன் ஒன்றுபட வேண்டியிருக்கும். அவர்கள் அப்படிச் செய்வதைவிட உன்னதமானது வேறென்ன இருக்க முடியும்? ஆனால், நிலச்சுவான்தார்கள் இரு சட்டசபைகளிலுமோ அல்லது ஒரு சட்டசபையிலோ இருந்தால், அதில் தமக்கு விசேஷப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று வற்புறுத்தினால், அவர்கள் பிளவை உண்டுபண்ணி விடுவார்கள் என்றே அஞ்சு

கிறேன். நிலச்சுவான்தார்களின் சார்பாகவோ, மற்ற நலன்களின் சார்பாகவோ அத்தகைய கோரிக்கை எதுவும் வற்புறுத்தப் படமாட்டாது என்றே நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 8—10—1931

# 18

# சட்டபூர்வமான உடைமை

சொத்துடைமையின்றி இருப்பதென்பது கவராமையுடன் சம்பந்தப்பட்டதாகும். ஒரு பொருள் முதலில் திருடப்படாததாக இருக்கலாம். ஆயினும், நமக்குத் தேவையில்லாமல் இருக்கும்போது அதை நாம் வைத்துக்கொண்டிருந்தால் அதைத் திருட்டுச் சொத்தாகவே மதிக்க வேண்டும். சொத்து வைத்துக் கொள்ளுவது என்பது எதிர்காலத்திற்கு ஏற்பாடு செய்வதே யாகும். சத்தியத்தை நாடுபவர், கடவுளின் அன்பு விதியைப் பின்பற்றுபவர் நாளைக்கென்று அவர் எதையும் வைத்துக்கொள்ள முடியாது. நாளைக்கென்று கடவுள் ஒன்றையும் சேர்த்துவைப்ப தில்லை. அவ்வப்போது எவ்வளவு தேவையோ அதற்கதிகமாகக் கடவுள் சிருஷ்டிப்பதேயில்லை. ஆகையால், கடவுளின் அருளில் நமக்கு நம்பிக்கை இருந்தால், நம்முடைய அன்ருட உணவை அவர் நமக்கு அளிப்பார். அதாவது, நமக்கு வேண்டியவற்றை யெல்லாம் கொடுப்பார் என்ற உறுதியுடன் இருக்க வேண்டும். இத்தகைய நம்பிக்கையுடன் வாழ்க்கையை நடத்தியுள்ள மகான் களும் பக்தர்களும், இது சரியானதுதான் என்பதைத் தமது அனுபவத்திலிருந்து அறிந்திருக்கிருர்கள். மனிதனுடைய அன்ருடத் தேவைக்கு அதிகமாக ஒன்றும் கொடுப்பதில்லை என்பது கடவுளின் சட்டம். இதை நாம் அறியாததால்தான் இவ்வளவு ஏற்றத் தாழ்வுகளும். அவற்றின் விளைவுக்கான கஷ்டங்களும் ஏற்பட்டிருக்கின்றன. பணக்காரர்களிடம் அவர்களுக்குத் தேவையில்லாத பொருள்கள் இருக்கின்றன. இதனுல் இவை புறக்கணிக்கப்பட்டு வீணடிக்கப்படுகின்றன. அதே சமயத்தில் உணவுக்கு வழியில்லாமல் லட்சக்கணக்கான மக்கள் பட்டினி கிடந்து சாக வேண்டியிருக்கிறது, ஒவ்வொருவரும் தமக்குத் தேவையானதை மட்டுமே வைத்துக்கொள்ளுவது என்று இருந்தால், யாரும் கஷ்டப்படாமல் திருப்தியாக வாழ முடியும். இப்போதுள்ள நிலைமையில் ஏழைகள் மட்டுமில்லாமல் பணக் காரர்களும் திருப்தியற்றிருக்கிருர்கள். ஏழை, லட்சாதிபதியாக ஆசைப்படுகிருன்; லட்சாதிபதி, கோடீஸ்வரனுக விரும்புகிருன். எல்லோருக்கும் திருப்தி ஏற்பட வேண்டும் என்பதற்காகப் பணக்காரர்கள் தம் சொத்தைக் கைவிடத் தாமாகவே முன்வர வேண்டும். அவர்கள் தம் சொத்தை மிதமான ஓரளவுக்குள் கட்டுப்படுத்தி வைத்துக்கொண்டால், சுலபமாக ஏழைகளின்

பசியைத் தீர்க்கலாம். பணக்காரர்களுடன் அவர்களும் திருப் திப்படும் படிப்பினையைக் கற்றுக்கொள்ளுவார்கள். சொத் தின்மை என்ற லட்சியத்தைப் பரிபூரணமாக நிறைவேற்ற வேண்டுமானால். பறவைகளைப்போல் மனிதனுக்கும் குடியிருப் பதற்கென்று வீடு இருக்கக் கூடாது; ஆடைகளோ, நாளைக் கென்று உணவுப் பொருள்களைச் சேமிப்பதோ கூடாது. மனித னுக்கு அன்றாட உணவு தேவைதான். ஆனால், அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியது கடவுளுடைய பொறுப்பேயொழிய மனித னுடையதல்ல. இந்த லட்சியத்தை எய்துவது சாத்திய மென்றால், வெகு சிலரால்தான் அது முடியும். நம்மைப் போன்ற சாமானிய மனிதர்கள், இந்த லட்சியம் அசாத்தியமானதாயிருக் கிறதே என்று தளர்ச்சியடைந்துவிடக் கூடாது. ஆனால், இந்த லட்சியத்தை எப்போதும் கருத்தில் வைத்துக்கொண்டு, நம்மிட முள்ள உடைமைகளைக் கவனமாகப் பரிசீலனை செய்து, அவற்றைக் குறைத்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். தேவைகளை நாமாக மனமறிந்து குறைப்பதுதான் உண்மையான நாகரிகமேயொழிய தேவைகளைப் பெருக்கிக்கொள்ளுவது அல்ல. இதன் மூலம்தான் உண்மையான மகிழ்ச்சியும் திருப்தியும் ஏற் படும்; சேவை செய்வதற்கான சக்தியும் இதன் மூலம்தான் பெருகும். இந்த அளவுகோலின்படி பார்த்தால், அவசியத்தை ருசுப்பிக்க முடியாத பல பொருள்கள் ஆசிரமத்தில் இருக் கின்றன. இதனால், பக்கத்திலுள்ளவர் திருடுவதற்கு ஆசையை ஊட்டுகிறோம்.

கலப்பற்ற உண்மை என்ற கண்ணோட்டத்துடன் பார்த்தால், உடலும் ஓர் உடைமைதான். அனுபவிக்க வேண்டுமென்ற ஆசைதான் ஆன்மாவுக்கு உடல்களைச் சிருஷ்டிக்கிறது என்பது எவ்வளவு உண்மையான வார்த்தை! இந்த ஆசை மறைந்தால், அதற்குப் பிறகு உடலுக்கும் அவசியமில்லை. பிறப்பு, இறப்பு என்ற தீய சுழலிலிருந்தும் மனிதன் விடுதலை பெற்றுவிடுகிறான். ஆன்மா சர்வ வியாபகமானது. கூண்டைப் போன்ற உடலுக்குள் அது ஏன் அடைபட்டுக் கிடக்க வேண்டும்? அல்லது அந்தக் கூண்டுக்காக ஏன் தீங்கிழைக்க வேண்டும் அல்லது கொல்லுவ திலும் ஈடுபட வேண்டும்? இப்படிப் பரிசீலனை செய்து பார்த் தால், சர்வ பரித்தியாகம் என்ற லட்சியத்திற்கு வந்து சேரு கிறோம். உடல் இருக்கும் வரையில், சேவைக்காகவே அதை உபயோகித்துக்கொள்ளவும் கற்றுக்கொள்ளுகிறோம். இப்படி யாக, வாழ்க்கையின் குறிக்கோள் சேவையேயொழிய, பசியைத் தீர்த்துக்கொள்ளுவது மட்டுமல்ல என்ற உணர்வு ஏற்படுகிறது. நாம் சாப்பிடுகிறோம், நீர் அருந்துகிறோம், தூங்குகிறோம், விழிப் புறுகிறோம் என்றால், எல்லாம் சேவைக்காகவேதான். இத்த கைய மனப்பான்மை நாளடைவில் நமக்கு உண்மையான ஆனந் தத்தை அளிக்கும்; கால முதிர்ச்சியில் தெய்விகத் தன்மையையும் புலப்படுத்தும். இந்தக் கண்ணோட்டத்துடன் நம்மை நாமே சோதித்துக்கொள்ளுவோமாக.

உடைமையற்றிருப்பது என்பது பொருள்கள் விஷயத்தில் மட்டுமில்லாமல், எண்ணங்களுக்கும் பொருந்தும் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பிரயோசனமில்லாத விஷயங்களினால் தன் மூளையை நிரப்பிக்கொள்ளுபவன், மிகவும் உயர்ந்த இந்தத் தத்துவத்தை மீறியவனாகிறான். கடவுளிட மிருந்து நம்மை விலக்கிவிடும் எண்ணங்கள், அல்லது கடவுளிடம் நம்மை இட்டுச் செல்லாத எண்ணங்கள், நமது பாதையிலுள்ள இடைஞ்சல்களாகும். இது சம்பந்தமாக, கீதையின் 13-வது அத்தியாயத்தில் அறிவைப் பற்றிக் கொடுக்கப்பட்டுள்ள வியாக்கியானத்தை நான் பரிசீலனை செய்யலாம். அடக்கம்தான் உண்மையான அறிவு என்றும், மற்றவைகளெல்லாம் அறியாமை யென்றும் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இது உண்மையானால் —இது உண்மைதானென்பதில் சந்தேகமில்லை—இன்று அறிவு என்று நாம் கொண்டாடும் பல விஷயங்கள் வெறும் அறியாமையே. ஆகையால், அவற்றினால் நன்மைக்குப் பதிலாக நமக்குத் தீமையே ஏற்படுகிறது. இதனால், சித்தம் நிலையின்றி ஊசலாடுகிறது. சூன்ய நிலைமையைக்கூட ஏற்படுத்திவிடுகிறது. திருப்தியின்மையின் விளைவாகப் பல உருவங்களில் தீமை முடிவின்றி வளருகிறது. இதனால் செயலற்று இருக்க வேண்டும் என்று நான் சொல்லுவதாக அர்த்தமில்லை. நமது வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியிலும், உடலுக்கோ, மூளைக்கோ ஏதாவது வேலை இருந்துகொண்டே இருக்க வேண்டும். ஆனால், அந்த நடவடிக்கைகள், நம்மை உண்மைப் பாதையில் அழைத்துச் செல்லும் நல்ல தன்மை வாய்ந்தவைகளாக இருக்க வேண்டும். சேவைக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணித்துக்கொண்ட ஒருவர் ஒரு நிமிஷம்கூட சும்மா இருக்கக்கூடாது. ஆனால், நல்ல காரியம், கெட்ட காரியம் என்று பாகுபாடு செய்துகொள்ள நாம் தெரிந்து கொள்ள வேண்டும். சேவை செய்வது ஒன்றையே நோக்கமாகக் கொண்டிருந்தால்தான் இப்படிப் பாகுபாடு செய்வது சாத்தியமாயிருக்கும்.

('எராவ்டா மந்திரி'லிருந்து, அத்தியாயம் 6)

['சொத்தின்மை அல்லது ஏழ்மை' என்ற தலைப்பில் முதலில் வெளியானது.]

## 19

# சட்டபூர்வமான உடைமைக்கு ஆதரவு

**கேள்வி :** உடைமை உரிமை இருக்கும் வரையில், அதை எப்படியும் பாதுகாத்தாக வேண்டியிருக்கும் என்பதை நீங்கள் ஏன் புரிந்துகொள்ளவில்லை? ஆகையால், எந்த நிலைமையிலும் பலாத்காரத்தைத் தவிர்க்க வேண்டுமென்று நீங்கள்

வற்புறுத்துவது முற்றிலும் அனுபவசாத்தியமற்றதும், அபத்தமானதுமாகும். குறிப்பிட்ட ஒரு சிலருக்குத்தான் அகிம்சை சாத்தியமானதாக இருக்குமென்று நான் நினைக் கிறேன்.

பதில் : இந்தக் கேள்விக்கு ஏதாவது ஒரு ரூபத்தில் இந்தப் பத்திரிகையிலும், 'எங் இந்தியா'விலும் பல தடவைகளில் பதிலளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இது நிரந்தரமானதா யிருக்கிறது. எவ்வளவு தடவை இக்கேள்வி கேட்கப்படு கிறதோ அவ்வளவு தடவையும் அதற்கு நான் பதிலும் அளிக்க வேண்டும். அதிலும் இவரைப்போன்ற உண்மை யான ஒருவரிடமிருந்து இந்தக் கேள்வி வரும்போது நான் பதிலளிக்கத்தான் வேண்டும். இன்றுகூட, அகிம்சையை மனமறிந்து ஏற்றுக்கொண்டு இன்றைய சமூகம் அமைக்கப் படவில்லை என்றாலும், உலகத்தில் மனிதர்கள் வாழ்வதும், தம் உடைமைகளைக் காப்பாற்றிக்கொள்ளுவதும் பரஸ்பர சகிப்புத் தன்மையினால்தான் என்று நான் கூறுகிறேன். அப்படியில்லையென்றால், மிகக் கொடூரமானவர்களும், வேறு சிலருமேதான் உயிர் பிழைத்திருக்க முடியும். ஆனால், இன்று அப்படியில்லை. குடும்பங்கள் அன்பினால் பிணைக்கப் படுகின்றன; சமுதாயங்கள் என்று சொல்லப்படும் 'நாகரிக சமூகங்களிலும்' அன்பினால்தான் பற்பல பிரிவுகள் பிணைக்கப் படுகின்றன. ஆனால், அவர்களுக்கு அகிம்சையின் உயர்வு புரியவில்லை. ஆகையால், அதனுடைய விரிவான சாத்தியக் கூறுகளை அவர்கள் ஆராய்ச்சி செய்யவில்லை என்றே ஆகிறது. உடைமையற்றிருத்தல், மற்றும் அதனுடன் இணைந்த விரதங்களை ஏற்றுக்கொள்ளும் சிலருக்குத்தான் முழு அகிம்சை சாத்தியம் என்று இதுவரையில் நாம் நினைத்து வந்திருக்கிறோம். இதைப் பற்றிச் சிந்தனை செய் யாத சோம்பேறித்தனமே இந்த எண்ணத்திற்குக் காரணம் என்று சொல்லலாம். இதை நம்பிப் பின்பற்றுபவர்கள் தான் ஆராய்ச்சி வேலைகளைச் செய்ய முடியும். மனித வர்க் கத்தின் நிரந்தரமான இந்தச் சட்டத்தின் புதிய சாத்தியக் கூறுகளை அவ்வப்போது எடுத்துரைக்கக்கூடியவர்களும் அவர்களே. இது ஒரு சட்டமென்றால், எல்லோருக்கும் பொதுவானதாகவே இது இருக்க வேண்டும். நாம் பார்க் கும் பல தோல்விகள், சட்டத்தைப் பின்பற்றுபவர்களுடைய வைகளே ஒழிய சட்டத்தின் தோல்விகள் அல்ல. எப்படியோ இந்தச் சட்டத்தின் கீழ்தான் நாம் இருக்கிறோ மென்பதுகூடப் பலருக்குத் தெரியாது. ஒரு தாய் தன் குழந்தைக்காக உயிரை விடும்போது, தன்னை அறியாமலே அந்தச் சட்டத்திற்குக் கீழ்ப்படிகிறாள். தோல்விகள் ஏற்பட் டாலுங்கூட, மனமறிந்து இந்தச் சட்டத்தை ஏற்றுக் கொண்டு, தீவிரமாகப் பின்பற்ற வேண்டும் என்று சென்ற ஐம்பது வருடங்களாக நான் வாதாடி வருகிறேன். இந்த

ஐம்பது வருட வேலை அபாரமான பலன்களைக் கொடுத்திருக் கிறது. என்னுடைய நம்பிக்கையையும் பலப்படுத்தியிருக் கிறது. இடைவிடாத அனுஷ்டானத்தின் மூலம் சட்ட பூர்வ மான உடைமையுரிமை என்பது எல்லோராலும் மனமுவந்து ஏற்றுக் கொள்ளப்படும் என்றே நான் சொல்லுகிறேன். அத்தகைய உடைமை மாசு படிந்ததாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், எல்லா இடங்களிலும் நம்மைச் சுற்றி யுள்ள ஏற்றத்தாழ்வுகள், அகம்பாவத்துடன் பறைசாற்றப் படும் தன்மை வாய்ந்ததாக இராது. நேர்மையற்ற, சட்ட விரோதமான உடைமைகளைக் கண்டும் அகிம்சைப் பக்தர் மலைத்து நிற்க வேண்டியதில்லை. அவரிடம் அகிம்சை ஆயுத மான சத்தியாக்கிரகமும், ஒத்துழையாமையும் இருக்கின் றன; நேர்மையான முறையில் போதிய அளவில் உப யோகிக்கப்பட்ட இடங்களிலெல்லாம் இதுவரையில் இது பலாத்காரத்திற்குச் சரியான மாற்றாக இருந்திருக்கிறது. அகிம்சை சாஸ்திரத்திற்கு நான் பரிபூரணமான வியாக்கியா னம் கண்டுபிடித்திருப்பதாக இதுவரையில் நான் உரிமை கொண்டாடியதே இல்லை. அது சாத்தியமுமில்லை. எனக் குத் தெரிந்த வரையில் எந்தச் சாஸ்திரமும், மிகவும் நுட்ப மான தெளிவுள்ள கணித சாஸ்திரம்கூட, அதற்கு இடம் கொடுக்கவில்லை. நான் உண்மையைத் தேடிச் சென்று கொண்டிருப்பவன். இந்தக் கேள்வி கேட்டிருப்பவரைப் போன்றவர்களும் என் மாதிரியேதான் தேடிக்கொண்டிருக் கிறார்கள். மிகவும் கடினமானதும், ஆனால், கவர்ச்சிகர மானதுமான இந்த ஆராய்ச்சியில், என்னுடன் வரும்படி அவர்களை நான் அழைக்கிறேன்.

— 'ஹரிஜன்'–22—2—1942

['நிரந்தரமான பிரச்னை' என்ற தலைப்பில், 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 20

# அநியாயமாகத் தேடிய சொத்தைப் பறித்தல்

கிராம ஊழியர்கள் பயிற்சிப் பள்ளி மாணவர்கள் கேட்ட கேள்விகளில் ஒன்று பின்வருமாறு :

"அநியாயமாகச் சம்பாதித்த சொத்தைப் பறித்துவிடப் போவதாகச் சோஷலிஸ்டுகள் சொல்லுகிறார்கள். இதை எப்படிச் செய்வது?"

காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார் : ''எந்தச் சொத்து நியாயமாகச் சம்பாதிக்கப்பட்டது, எது அநியாயமாகச் சம்பாதிக்கப்பட்டது என்று யார் தீர்ப்புக் கூறுவது? கடவுள்தான் அதைச் சொல்ல முடியும், அல்லது ஏழைகளும் பணக்காரர்களும் சேர்ந்து நியமிக்கும் தகுதியுள்ள ஒருவர் அதைச் சொல்லலாம். நினைத்தவர்களெல்லாம் அதைமுடிவு செய்துவிட முடியாது. ஆனால், எந்தச் சொத்து அல்லது உடைமையுமே திருட்டுதான் என்று நீங்கள் சொன்னால், எல்லோரும் சொத்தையும், செல்வத்தையும் கைவிட்டுவிட வேண்டும். அப்படி நாம் கொடுத்துவிட்டோமா? முதலில் நாம் இதை ஆரம்பிப்போம். பின்னர் மற்றவர்கள் நம்மைப் பின்பற்றுவார்களென்று எதிர்பார்ப்போம். நம்மிடமிருப்பது அநியாயமாகச் சம்பாதித்த சொத்து என்று நம்புபவர்களுக்கு அதை விட்டுக் கொடுப்பதைத் தவிர வேறு வழி கிடையாது.''

—'ஹரிஜன்' - 1—8—1936

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் 'வாராந்திரக் கடித'த்திலிருந்து எடுத்தது.]

# 21

# தருமகர்த்தாக்களாக மாறுவிட்டால்?

**கேள்வி :** ராஜா அல்லது ஜமீன்தார் அல்லது முதலாளி, ஏழைகளின் தருமகர்த்தாவாக இருக்க வேண்டுமென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். இன்று அப்படி யாராவது இருக்கிறார்களென்று நீங்கள் நினைக்கிறீர்களா? அல்லது அவர்கள் அப்படி மாறிவிடுவார்களென்று எதிர்பார்க்கிறீர்களா?

**பதில் :** தருமகர்த்தா என்ற முழு அர்த்தத்தில் இல்லாவிட்டாலும், அத்தகைய ஒரு சிலர் இன்றும் இருக்கிறார்களென்றே நான் நினைக்கிறேன். அவர்கள் நிச்சயமாக அந்தப் பாதையில்தான் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆயினும், இப்போதுள்ள ராஜாக்களும், மற்றவர்களும் ஏழைகளின் தருமகர்த்தாக்களாகி விடுவார்களென எதிர்பார்க்கலாமா என்று கேட்கலாம். அவர்கள் தாமாகவே தருமகர்த்தாக்களாகாவிட்டால், சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தம் காரணமாக அப்படி மாறவே வேண்டி இருக்கும். இல்லையெனில், அடியோடு அழிந்து விடுவார்கள். பஞ்சாயத்து ராஜ்யம் ஸ்தாபிக்கப்படும்போது, பலாத்காரம் எந்தக் காலத்திலும் சாதிக்க முடியாததைப் பொதுஜன அபிப்பிராயம் சாதித்துவிடும். பாமர மக்கள் தம்முடைய சக்தியை உணராதிருக்கும் வரையில்தான் இப்போது ஜமீன்தார்கள், ராஜாக்கள், முதலாளிகளிடமுள்ள அதிகாரம் நீடித்திருக்க முடியும். ஜமீன்தாரி அல்லது

முதலாளித்துவ தீமையுடன் ஒத்துழைக்க மக்கள் மறுத்து விட்டால், அது தானகவே செத்துவிடும். பஞ்சாயத்து ராஜ்யத்தில் பஞ்சாயத்துக்குத்தான் மக்கள் கீழ்ப்படி வார்கள். பஞ்சாயத்துக்கள் தாமே இயற்றும் சட்டங்களின் மூலம்தாம் செயல்பட முடியும்.

—'ஹரிஜன்' – 1—7—1947

['கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 22

# விபரீதத்தைத் தவிருங்கள்

சமீபத்தில் நான் உத்தரப் பிரதேசத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது ஒரு விஷயம் எனக்கு மிகவும் திருப்தியளித்தது. இளம் வயதினரான பல ஜமீன்தார்கள், எளிய முறையில் தம் வாழ்க்கையை மாற்றியமைத்துக்கொண்டு, தேசபக்தியால் உந்தப்பட்டு, விவசாயிகளின் சுமைகளைத் தளர்த்திக்கொண்டிருந் ததைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. ஜமீன் தார்கள் பெரும் அட்டூழியங்கள் செய்கிருர்களென்று நான் பல பயங்கர விவரங்களைக் கேள்விப்பட்டிருக்கிறேன். சட்ட பூர்வ மாகவும், சட்ட விரோதமாகவும் அவர்கள் நினைத்தபோதெல்லாம் வரி விதிப்பார்களாம். இதன் பலனுக விவசாயிகள் வெறும் அடிமைகளைப் போலாகிவிட்டார்கள் என்று கேள்விப்பட்டிருக் கிறேன். ஆகையால், இத்தகைய இளம் தாலுக்தார்கள் இருக் கிருர்கள் என்பது தெரிந்தபோது எனக்கு அது ஆச்சரியமாகவே இருந்தது.

ஆனல், இதில் இன்னும் பரிபூரணமான மாற்றம் ஏற்பட வேண்டும். அவர்களில் மிகச் சிறந்தவர்களுக்கும், விவசாயி களுக்கும் இடையே இன்னும் மிகப் பெரிய பிளவு இருக்கிறது. இதுவரையில் செய்துள்ளதைப் பற்றி ஒரு பெரும்போக்கான சுயதிருப்தி உணர்ச்சி இன்னமும் நிறையக் காணப்படுகிறது. இதில் உள்ள உண்மை என்னவென்ருல், என்ன செய்தாலும் அது விவசாயிகளுக்குச் சேர வேண்டியதை நாள்பட்டுத் திருப்பிக் கொடுப்பதேயாகும். க்ஷத்திரியன் என்று சொல்லப்படுபவன், தான் உயர்ந்தவன் என்று நினைத்துக்கொண்டு நடந்து கொள்ளு வதும், நமக்கு வாழ்வில் கொடுத்து வைத்தது இவ்வளவுதான் என்ற விவசாயியின் பரம்பரை தாழ்மை ஸ்திதியும் நிலவுவதற்கு வர்ணச்சிரமம் என்ற முறையின் அவலட்சணம்தான் காரண மாகும். இந்திய சமூகம் அமைதியான முறையில் முன்னேற்ற மடைய வேண்டுமானல், நம்மைப் போல் விவசாயிக்கும் ஆத்மா இருக்கிறது என்பதையும், நம்மிடம் செல்வமிருப்பதால் ஏழை களைவிட நாம் உயர்ந்தவர்களல்ல என்பதையும் பணக்காரர்கள்

திட்டமாக உணர வேண்டும். ஜப்பானிய பிரபுக்கள் செய்த தைப் போல் அவர்களும் செய்ய வேண்டும். தம்முடைய பொறுப்பில் விடப்பட்டுள்ள விவசாயிகளின் நன்மைக்காக தம் செல்வத்தைத் தரும சொத்தாக வைத்துக் கொண்டிருக்கிறே மென்று நினைக்க வேண்டும். அப்படியானல், தாம் செய்யும் வேலைகளுக்கு நியாயமான ஒரு கமிஷனைத் தவிர அதிகமாக அவர்கள் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். பணக்காரர்களின் முற்றிலும் அனவசியமான படாடோபத்திற்கும், அவர்களைச் சுற்றியுள்ள விவசாயிகளின் சகிக்க முடியாத வறுமைக்கும் சம்பந்தா சம்பந்தமில்லாமல் அவ்வளவு ஏற்றத் தாழ்வுகள் இப்போது இருக்கின்றன. ஆகையால், ஓர் உதாரணமாக விளங்க விரும்பும் ஜமீன்தார், விவசாயிகள் இப்போது தாங்கிக் கொண்டிருக்கும் சுமையில் பெரும் பகுதியை உடனடியாகக் குறைத்து விடுவார். விவசாயிகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டு அவர்களின் தேவைகளை அறிய வேண்டும். நம்பிக்கைக்கே இடமில்லாமல் சீரழிந்து கிடக்கும் அவர்கள் வாழ்வில் நம்பிக்கை ஊட்ட வேண்டும். விவசாயிகளுக்குச் சுகாதார விதிகளைப்பற்றித் தெரியவில்லை என்று நினைத்துக்கொண்டு சும்மா இருந்துவிடக்கூடாது. விவசாயி தன் வாழ்க்கைக்கு அவசியமானவைகளைப் பெறுவதற்காக ஜமீன்தார்கள் தம்மையே ஏழைகளாக்கிக் கொள்ள வேண்டும். தன்னிடமுள்ள விவசாயிகளின் பொருளாதார நிலைமையை நன்கு ஆராய்ந்தறிய வேண்டும். தன் பிள்ளைகளுடன் விவசாயிகளின் பிள்ளைகளையும் படிக்க வைப்பதற்குப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டும். கிராமக் கிணற்றையும், குளத்தையும் சுத்தப்படுத்த வேண்டும். விவசாயிகள் தம்முடைய தெருக்களையும், கக்கூஸ்களையும் தாமே சுத்தம் செய்து கொள்ளுவதற்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். அவசியமான இந்த வேலையை ஜமீன்தாரே செய்து காட்ட வேண்டும். தன்னுடைய தோட்டங்களை விவசாயிகள் தாராளமாக உபயோகிப்பதற்கு அனுமதிக்க வேண்டும். தன்னுடைய சொந்த சுகானுபவத்திற்காக வைத்துக்கொண்டுள்ள அனவசியமான கட்டடங்களை, ஆஸ்பத்திரி அல்லது பள்ளிக்கூடம் போன்றவைகளுக்காக உபயோகிக்க வேண்டும். முதலாளி வர்க்கத்தினர், காலத்தின் போக்கை உணர்ந்து, தம்முடைய உடைமைகளை எல்லாம் அனுபவிக்கக் கடவுளே உரிமையளித்திருக்கிருர் என்ற எண்ணத்தையும் மாற்றிக் கொண்டால், இன்று கிராமங்கள் என்று வருணிக்கப்படும் ஏழு லட்சம் குப்பை மேடுகளையும், மிகமிகச் சீக்கிரத்திலேயே அமைதியும், சுகாதாரமும், வசதிகளும் நிறைந்த வாசஸ்தலங்களாக மாற்றிவிடலாம். முதலாளிகள், ஜப்பானிய சாமுராய் வர்க்கத்தினரைப் பின்பற்றினல், அவர்களுக்கு லாபமேயொழிய ஒன்றும் நஷ்டமில்லை என்றே நான் உறுதியாக நம்புகிறேன். முதலாளிகளுக்கு இரண்டே வழிகள் இருக்கின்றன. ஒன்று, தம்மிடமுள்ள தேவைக்கு அதிகமான உடைமைகளைத் தாமாகவே விட்டுக் கொடுத்து அதன் மூலம்

எல்லோரும் இன்புற்றிருப்பது. மற்ருென்று, முதலாளிகள் உரிய சமயத்தில் விழிப்படையாவிடில், விழிப்படைந்த, ஆனல், விஷய அறிவில்லாத லட்சக்கணக்கான ஏழைகள் தேசத்தைக் குழப் பத்திலாழ்த்தி விடுவார்கள். பலம் பொருந்திய ஒரு சர்க்காரின் ஆயுத பலம்கூட அதைத் தவிர்க்க முடியாது. இந்த விபரீ தத்தை இந்தியா வெற்றிகரமாகத் தவிர்த்துவிடும் என்றே நான் நம்பி இருக்கிறேன். உத்தரப் பிரதேசத்தில், சில இளம் தாலுக் தார்களைச் சந்தித்து நெருங்கிப் பழகியது என்னுடைய நம்பிக் கையைப் பலப்படுத்தி இருக்கிறது.

—'எங் இந்தியா' - 5—12—1929

['ஜமீன்தார்களும் தாலுக்தார்களும்' என்ற தலைப்பில் முதலில் வெளி யானது.]

பகுதி ஒன்று

# தொழில்மயமாவதும் யந்திரங்களும்

[யந்திரங்களைக் குறித்து மகாத்மா கொண்டிருந்த கருத்து மிகவும் தெளிவானது. இதைக் குறித்து அவர் பல சமயங்களிலும் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார். அவற்றில் சில கட்டுரைகள் இப்பகுதியில் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், யந்திரங்களைப் பற்றி அவர் சொன்ன அபிப்பிராயங்கள் யாவும் இங்கே கொடுக் கப்படவில்லை. இவற்றில் அநேக கட்டுரைகள், 'மகாத்மா காந்தி நூல்க'ளின் முந்திய தொகுப்புகளில் வெளியாகியிருக் கின்றன. அவற்றைத் திரும்பவும் இத்தொகுப்பில் கொடுக்க வேண்டாம் என்பதற்காக அவை இங்கே மீண்டும் பிரசுரிக்கப் படவில்லை. என்றாலும், காந்திஜியின் அக்கருத்துக்கள் முந்திய தொகுப்புகளில் எங்கெங்கே பிரசுரமாகியிருக்கின்றன என்பதை வாசகர்கள் எளிதில் தெரிந்துகொள்ளுவதற்கு உதவியாக இருப்பதற்காக அந்த விவரம் கீழே கொடுக்கப்படுகிறது:

யந்திரங்களின் தீமைகளைக் குறித்து காந்திஜி முதன் முதல் தமது கருத்தைத் தெரிவித்திருப்பது 1908-இல் அவர் எழுதிய 'ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்திய சுயராஜ்யம்' என் பதில். அந்நூலில் 19-வது அத்தியாயம் 'யந்திரம்' என்ற தலைப்புடையது. இதை 'மகாத்மா காந்தி நூல்கள்'—முதல் தொகுப்பு 706-10-ஆம் பக்கங்களில் காண்க.

1931-இல் மகாத்மா லண்டன் சென்றிருந்தபோது, இந்தியாவை யந்திரத் தொழில் மயமாக்குவது குறித்து அவ ருடைய கருத்து என்ன என்று அங்கே கேட்டதற்கு அவர் கூறிய அபிப்பிராயம், 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பில் 130-31-ஆம் பக்கங்களில் 'மனித வர்க்கத்திற்குச் சாபக்கேடு' என்ற தலைப்பில் பிரசுரமாகியிருக்கிறது.

அதே தொகுப்பில் 123–ஆம் பக்கம் முதல் 152–ஆம் பக்கம் வரையில் வெளிவந்திருக்கும் கீழ்க்கண்ட தலைப்புகளுள்ள கட்டுரைகளும் காந்திஜி, இந்தியா யந்திர மயமாவதை ஏன் எதிர்க்கிறார் என்பதை விளக்கும்.

'தனக்கு அவசியமான கப்பல்கள், ரெயில்கள், ஆகாய விமானங்கள் முதலியவற்றைத் தானே உற்பத்தி செய்யும் அளவுக்கு இந்தியா யந்திரத் தொழிலை வளர்ப்பது அவசியம் என்று நினைக்கிறீர்களா?' என்று ஒருவர் கேட்டதற்கு மகாத்மா 1–9–1946–இல் 'எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்த நாட்டிலும் தொழிலை யந்திரமயமாக்குவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை' என்று கூறினார். அவர் கூறிய அக்கருத்தின் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பு 786-87-ஆம் பக்கங்களில் காண்க.

'எல்லா யந்திரங்களையும் நீங்கள் எதிர்க்கிறீர்களா?' என்று ஸ்ரீ ஜி. ராமச்சந்திரன் கேட்ட கேள்விக்குக் காந்திஜி, 'இவ்வுடலே ஒரு நுட்பமான யந்திரம் என்று நான் உணரும் போது, எல்லா யந்திரங்களையும் எப்படி எதிர்க்க முடியும்? ராட்டைகூட ஒரு யந்திரம்தான்; பல் தேய்க்கும் குச்சிகூட ஒரு யந்திரம்தான். நான் யந்திரங்களை எதிர்க்கவில்லை; யந்திரங்களின் மேலுள்ள மோகத்தைத்தான் எதிர்க்கிறேன்' என்று கூறியிருக்கிறார். அந்தச் சம்பாஷணையின் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பில் 798–800–ஆம் பக்கங்களில் காண்க.]

## 1

# பொருளாதார முன்னேற்றமா? தார்மிக முன்னேற்றமா?

பொருளாதார முன்னேற்றம், உண்மையான முன்னேற்றத்துடன் மோதுகிறதா? பொருளாதார முன்னேற்றம் என்னும் போது வரையறையற்ற லௌகீக முன்னேற்றத்தையே நாம் கருதுகிறோம் என்று கொள்ளுகிறேன். உண்மையான முன்னேற்றம் என்னும்போது நாம் தார்மிக முன்னேற்றத்தையே குறிப்பாகவும் கருதுகிறோம். இது நம்முள் இருக்கும் நிரந்தரமான அம்சத்தின் முன்னேற்றத்தைப் போன்றதே ஆகும். ஆகையால், விஷயத்தை இவ்வாறு கூறலாம்: லௌகீக முன்னேற்றம்

போல் அதே அளவில் தார்மிக முன்னேற்றம் அதிகரிப்பதில்லையா? இது நம்முன் உள்ள பிரச்னையைவிட விரிவான ஒன்ருகும் என்பதை நான் அறிவேன். ஆனல், நாம் சிறிதைப் படைக்கும் போதும் பெரிதையே எப்போதும் எண்ணுகிறேம் என்று நான் துணிந்து கருதுகிறேன். ஏனென்ருல், கண்ணுக்குப் புலனுகும் நமது இந்தப் பிரபஞ்சத்தில் பூரண ஓய்வு அல்லது விச்ராந்தி என்று ஒன்றில்லை என்பதை உணர்ந்துகொள்ளுவதற்கு வேண்டிய விஞ்ஞானத்தை நாம் அறிவோம். ஆகவே, லௌகீக முன்னேற்றமானது தார்மிக முன்னேற்றத்துடன் மோதவில்லை என்ருல், அது தார்மிகத்தை அவசியம் முன்னேற்றியே தீர வேண்டும். பெரிய விஷயத்திற்கு நியாயத்தை எடுத்துக்கூற முடியாதவர்கள், சில சமயங்களில் தங்கள் கட்சியைத் தெளிவில்லாத முறையில் எடுத்துக் கூறுவதைக் கொண்டு நாம் திருப்தியடைந்துவிடவும் முடியாது. ஒரு நாளைக்கு ஒரு வேளை சாப்பிட்டே மூன்று கோடி மக்கள் இந்தியாவில் உயிர் வாழ்ந்து வருகிருர்கள் என்று காலஞ்சென்ற சர் வில்லியம் வில்ஸன் ஹண்டர் கூறியிருக்கும் திட்டமான உதாரணத்தைக் கொண்டு அவர்கள் சஞ்சலமடைந்து விட்டார்கள் என்று தோன்றுகிறது. அவர்களுடைய தார்மிக க்ஷேமத்தைப் பற்றி நாம் நினைப்பதற்கோ, பேசுவதற்கோ முன்னுல், அவர்களுடைய அன்ருடத் தேவைகளை நாம் பூர்த்திசெய்தாக வேண்டும் என்று அவர்கள் கூறுகிருர்கள். இவற்ருேடு, லௌகீக முன்னேற்றத்தின் பயனுக தார்மிக முன்னேற்றம் ஏற்படுவதாகவும் அவர்கள் கூறுகிருர்கள். அதன் பின், திடீரென்று தாண்டிக் குதித்து, மூன்று கோடி மக்களுக்கும் எது உண்மையோ அதுவே பிரபஞ்சத்துக்கும் உண்மை என்று முடிவு கட்டுகிருர்கள். கஷ்டமான விஷயங்கள் மோசமான சட்டத்தையே உண்டாக்கிவிடுகின்றன என்பதை அவர்கள் மறந்துவிடுகிருர்கள். இந்த மாதிரியாக முடிவு கட்டுவது எவ்வளவு பரிகசிக்கத்தக்க அபத்தம் என்பதை நான் உங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. கொடிய வறுமையானது, தார்மிக இழிவைத் தவிர வேறு எதிலும் கொண்டு போய்விடும் என்று யாரும், எப்போதும் கூறியதில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ உரிமை உண்டு. ஆகவே, சாப்பிடுவதற்கும், அவசியம் நேரும்போது உடுப்பதற்கும், வசிப்பதற்கும் வழி தேடிக்கொள்ளவும் உரிமை உண்டு. இந்தச் சாதாரணமான காரியத்தை நிறைவேற்றுவதற்கு நமக்குப் பொருளாதார பண்டிதர் உதவியோ, அவர்களுடைய கோட்பாடுகளோ தேவையில்லை.

'நாளையைப் பற்றிச் சிந்திக்காதே' என்பது, அநேகமாக உலகின் எல்லாச் சமய சாத்திரங்களிலும் எதிரொலிக்கும் ஒரு கட்டளை. ஒழுங்கு பெற நன்ருக அமைந்துள்ள ஒரு சமூகத்தில் தன் ஜீவனத்துக்கு வேண்டியதைத் தேடிக்கொள்ளுவது உலகிலேயே மிகவும் சுலபமான காரியமாக இருக்கவேண்டும்; அப்படி இருப்பதாகவும் காணப்பட்டிருக்கிறது. உண்மையில், ஒரு நாட்டில் நிலவும் ஒழுங்கு முறைக்குச் சான்ருக இருப்பது, அந்

நாட்டு மக்களிடையே பட்டினி இல்லாதிருப்பதேயன்றி அந்நாட்டில் இருக்கும் லட்சாதிபதிகளின் எண்ணிக்கையல்ல. ஆனால், லௌகீக முன்னேற்றமே தார்மிக முன்னேற்றமும் ஆகும் என்பதை உலகெங்கும் கைக்கொள்ள வேண்டிய ஒரு சட்டமாக விதிக்க முடியுமா? ஆராய வேண்டிய ஒரே விஷயம் இதுதான்.

இப்போது நாம் சில உதாரணங்களை எடுத்துக்கொள்ளுவோம். ரோமாபுரி உயர்ந்த லௌகீகச் செழுமையை அடைந்த போதுதான் தார்மிக வீழ்ச்சியை அடைந்தது. எகிப்துக்கு நேர்ந்ததும் அதுவே. சரித்திர ஆதாரங்களைக்கொண்ட பெரும்பாலான நாடுகளுக்கும் அதுவே நேர்ந்திருக்கிறது. அரசனும் ஆண்டவனுமான கிருஷ்ணனுடைய சந்ததியினரும், உறவினரும்கூட செல்வத்தில் புரண்டுகொண்டிருந்தபோதுதான் வீழ்ச்சியடைந்தனர். ராக்பெல்லர்களும், கார்னீஜிகளும் சாதாரண அளவில் தார்மிக ஒழுக்கத்தைக் கைக்கொண்டிருக்கக் கூடும் என்பதை நாம் மறுக்கவில்லை. ஆனால், நாம் தாராளத்துடன் சந்தோஷமாக அவர்களை மதிப்பிடுகிறோம். உயர்ந்த தார்மிக ஒழுக்க நிலையை அவர்கள் எட்ட வேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பது கூட இல்லை என்றே கூறுகிறேன். அவர்களைப் பொறுத்த வரையில் லௌகீக லாபமானது தார்மிக லாபமாகவே இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. தென்னாப்பிரிக்காவில் நம் நாட்டைச் சேர்ந்த ஆயிரக்கணக்கானவர்களுடன் அதிகமாக நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றிருந்தேன். அங்கே அநேகமாக ஒவ்வொருவர் விஷயத்திலுமே செல்வம் அதிகம் ஆக ஆக அவர்களிடம் ஒழுக்கக் கேடும் அதிகமாக இருந்ததை நான் கவனித்தேன். நம்முடைய பணக்காரர்கள், குறைந்த பட்சமாகச் சொல்லுவதென்றால், சாத்விக எதிர்ப்பாகிய தார்மிகப் போராட்டத்துக்கு ஏழைகளைப் போல அவ்வளவு உதவி புரியவில்லை. தங்கள் சுயமரியாதை உணர்ச்சி பாதிக்கப்படுகிறது என்று பரம ஏழை உணர்வதைப் போலப் பணக்காரர்கள் உணர்வதில்லை. ஆபத்தான இடத்தில் அடி வைக்கிறேன் என்ற அச்சம் எனக்கு இல்லையென்றால், இன்னும் கிட்டத்திற்கு வந்து, செல்வம் படைத்திருப்பது உண்மையான வளர்ச்சிக்கு எப்படித் தடங்கலாக இருந்து வருகிறது என்பதையும் காட்டுவேன். பொருளாதார நியதிகளுக்கு இக்காலப் பாடப் புத்தகங்களை எல்லாம்விட உலகின் சமய நூல்கள் எவ்வளவோ பத்திரமான, சிறந்த புத்தகங்கள் என்று துணிந்து எண்ணுகிறேன். இன்று மாலை நம்மை நாமே கேட்டுக்கொள்ளும் கேள்வி புதியதொன்று அல்ல. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஏசுநாதரை நோக்கி இந்தக் கேள்வி கேட்கப்பட்டது. அந்தக் காட்சியை அர்ச். மார்க்கு விரிவாக வருணித்திருக்கிறார். ஏசுநாதர் தம் பக்தி நிலையில் ஆழ்ந்திருக்கிறார். அதிக சிரத்தையோடுகூடிய மனநிலையில் இருக்கிறார். நித்தியத்துவத்தைப் பற்றி அவர் பேசுகிறார். தம்மைச் சுற்றியுள்ள உலகத்தைப் பற்றி அவர் அறிவார். அவர் காலத்தின் மிகப் பெரிய பொருளாதார சாஸ்திரி அவர். காலத்தையும்

இடத்தையும் சிக்கனம் செய்வதில் அவர் வெற்றி பெற்ருர்—அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டவராக ஆகிவிட்டார். அவர் தமது உயர்நிலையை எய்தியிருக்கும் அந்தச் சமயத்தில் அவரிடம் ஒருவன் ஓடி வருகிருன்; முழந்தாளிட்டு அவரிடம் கேட்கிருன்: "நல்ல தலைவரே, நித்தியமான வாழ்வு பெறுவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" அவனுக்கு ஏசுநாதர் கூறுகிருர்: "என்னை நல்லவர் என்று ஏன் அழைக்கிருய்? கடவுள் ஒருவரைத் தவிர நல்லவர் யாருமே இல்லை. நீ கட்டளைகளை அறிவாய். விபசாரம் செய்யாதே. கொல்லாதே. திருடாதே. பொய்ச் சாட்சி சொல்லாதே. வஞ்சித்து அபகரிக்காதே. உன் தந்தையையும் தாயையும் கௌரவப்படுத்து." அவன் அதற்கு மறுமொழியாக அவரிடம் சொன்னதாவது: "தலைவரே, இவையனைத்தையும் என் இளம் பிராயத்திலிருந்தே நான் கடைப்பிடித்து வந்திருக்கிறேன்." பிறகு ஏசு அவனைப் பார்த்து, அவன்மீது அன்புகொண்டார். அவர் அவனுக்குக் கூறியதாவது: "உன்னிடத்தில் ஒன்று மட்டும் குறையாக இருக்கிறது. உன் வழியில் சென்று, உன்னிடமுள்ளதையெல்லாம் விற்று ஏழைகளுக்குக் கொடு. நீ பரமண்டலத்தில் பொக்கிஷத்தை அடைவாய்—வா, சிலுவையைத் தாங்கிக்கொண்டு என்னைப் பின்தொடர்ந்து வா." அவர் இதைச் சொன்னதும் அவன் துக்கம் கொண்டவனுக மன வருத்தத்துடன் போய்விட்டான்—ஏனென்ருல், அவனிடம் மிகுந்த செல்வம் இருந்தது. பிறகு ஏசுநாதர் சுற்றிலும் பார்த்துவிட்டு, "செல்வம் உடையவர்கள் ஆண்டவனுடைய ராஜ்யத்துக்குள் பிரவேசிப்பது எவ்வளவு கடினமானது" என்று சீடர்களை நோக்கிச் சொன்னர். அவருடைய வார்த்தைகளைக் கேட்டுச் சீடர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். ஆனல், ஏசுநாதர் திரும்பவும் மறுமொழி பகர்ந்தார். அவர்களுக்குச் சொன்னர்: "குழந்தைகளே! செல்வங்களில் நம்பிக்கை வைத்திருப்பவர்கள் ஆண்டவன் ராஜ்யத்துக்குள் பிரவேசிப்பது எவ்வளவு கடினமானது! ஆண்டவன் ராஜ்யத்துக்குள் ஒரு பணக்காரன் நுழைவதைவிட ஊசியின் காதுக்குள் ஒட்டகம் நுழைவது சுலபம்!" இங்கே உங்களுக்கு நித்தியமான ஒரு நியதி, ஆங்கில மொழியால் உற்பத்தி செய்ய முடிந்த மிகச் சிறந்த சொற்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல், இப்பொழுதுகூட நாம் செய்வதைப் போலவே, சீடர்கள் நம்பாமல் தலையை ஆட்டினர்கள். நாம் இன்று செய்வதைப் போலவே அவரிடம் அவர்கள் சொன்னர்கள்: "ஆனல், நியதி எப்படி நடைமுறையில் தோல்வி அடைகிறது என்பதைப் பாருங்கள். நாங்கள் எல்லாவற்றையும் விற்றுவிட்டு, எதுவுமே இல்லாமல் இருந்தால், சாப்பிடுவதற்கு எங்களுக்கு ஒன்றும் இராது. நாங்கள் அவசியம் பணம் வைத்திருக்க வேண்டும். இல்லையென்ருல், நாங்கள் நியாயமான முறையில் ஒழுக்கத்தோடுகூட இருக்க இயலாது." ஆகவே, இவ்வாறு அவர்கள் தங்கள் கட்சியை எடுத்துச் சொல்லுகிருர்கள். அவர்கள் அளவு கடந்து ஆச்சரியம் அடைந்து தங்களுக்குள்ளேயே, 'அப்படியானல் யார்தான் ரட்

சிக்கப்பட முடியும்?' என்று சொல்லிக்கொண்டார்கள். ஏசுநாதர் அவர்களை ஏறிட்டுப் பார்த்து, ''மனிதர்களோடு அது சாத்திய மில்லை, ஆனால், கடவுளோடு அப்படியல்ல. ஏனென்றால், கடவு ளோடு எல்லா விஷயங்களுமே சாத்தியம்" என்றார். பிறகு பீட்டர் அவருக்குச் சொல்லத் தொடங்கினார்: ''இதோ பாருங் கள், நாங்கள் அனைத்தையும் துறந்துவிட்டு உங்களைப் பின்பற்றி யிருக்கிறோம்.'' அதற்கு மறுமொழியாக ஏசுநாதர் சொன்னார்: ''நிஜமாகவே நான் உங்களுக்குக் கூறுகிறேன். என் பொருட் டும், சுவிசேஷங்களின் பொருட்டும் வீட்டையோ, சகோதர சகோதரிகளையோ, தாய் தந்தையரையோ, மனைவி மக்களையோ, நிலங்களையோ துறந்த எந்த மனிதனும் இம்மையிலேயே நூறு மடங்காக வீடுகளையும், சகோதர சகோதரிகளையும், தாய்மாரை யும் குழந்தைகளையும், நிலத்தையும், வரக்கூடிய உலகத்தில் நித்திய வாழ்க்கையையும் பெறுவான். ஆனால், முதன்மையாக உள்ள பலர் கடைசியானவர்களாகவும், கடைசியில் உள்ள பலர் முதன்மையானவர்களாகவும் ஆகிவிடுகிறார்கள்.'' சட்டத்தைப் பற்றுவதனால் பெறும் பலனை அல்லது பரிசை, இந்தப் பதத்தை நீங்கள் அதிகமாக விரும்பினால், இங்கே நீங்கள் காணலாம். ஹிந்துவல்லாத பிற மதங்களின் வேதங்களிலிருந்து இதுபோன்ற மேற்கோள்களைக் குறித்துக் கொள்ளும் சிரமத்தை நான் எடுத் துக்கொள்ளவில்லை. மேலும், ஏசுநாதர் கூறிய சட்டத்துக்கு ஆதரவாக நம் நாட்டு முனிவர்களின் எழுத்துக்களிலிருந்தும், வாக்குகளிலிருந்தும் மேற்கோள்களை, நான் உங்கள் கவனத் துக்குக் கொண்டு வந்த பைபிள் பகுதிகளைவிட, சாத்தியமானால், இன்னும் வன்மையான மேற்கோள்களை, எடுத்துக் கூறி உங்களை நான் அவமானப்படுத்தமாட்டேன். நம் முன் உள்ள விஷயத் திற்கு உடன்பாடான பதிலுக்குச் சாதகமான சான்றுகள் அனைத் திலும் வன்மையானவை, உலகின் மாபெரும் போதகர்களுடைய வாழ்க்கைகளே. ஏசு கிறிஸ்து, முகம்மது, புத்தர், நானக், கபீர், சைதன்யர், சங்கரர், தயானந்தர், ராமகிருஷ்ணர் ஆகியோர், ஆயிரக்கணக்கானவர்களிடம் மிகுந்த செல்வாக்கைச் செலுத்தி, அவர்களுடைய ஒழுக்கத்தை உருவாக்கியவர்கள். அவர்கள் வாழ்ந்ததால் உலகம் மேலும் சிறப்படைந்தது. அதே சமயத்தில் அவர்கள் எல்லோருமே தாங்களாக விரும்பி வறுமையைத் தங் கள் வாழ்க்கையில் மேற்கொண்டவர்களாவர்.

எவ்வளவு தூரம் நாம் தற்கால லோகாயத ஆசையை நமது லட்சியமாகக் கொண்டிருக்கிறோமோ, அவ்வளவுக்கு நாம் முன் னேற்றப் பாதையில் கீழ் நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம் என்று நான் கருதியதால்தான், என் கருத்தை இவ்வளவு விபர மாக விரித்துக் கூறினேன். பொருளாதார முன்னேற்றமானது, நான் அதை விவரித்துள்ள அர்த்தத்தில், உண்மையான முன் னேற்றத்துக்கு விரோதமானதாக இருக்கிறது. அதனால், பழங் காலத்தின் லட்சியம், செல்வத்தை விருத்தி செய்யும் காரியாதி களுக்கு வரம்பு கட்டுவதாக இருக்கிறது. இது லௌகீக ஆசை

முழுவதற்கும் முடிவு கட்டி விடவில்லை. பொருள் தேடுவதைத் தங்கள் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டவர்கள், எப்பொழுதும் இருந்து வந்திருப்பதைப் போல் இன்னும் நம்மிடையே இருந்துதான் வருகிறார்கள். ஆனால், அந்த லட்சியத்தினின்றும் இழிந்த ஒரு வீழ்ச்சியாகவே அதை நாம் எப்பொழுதும் கருதி வந்திருக்கிறோம். நம்மிடையே பெரும் பணக்காரர்களாக இருப்பவர்கள், தாமாக விரும்பி ஏழைகளாக இருப்பது தங்களுக்கு ஒரு மேல் நிலையாக இருக்கும் என்று அடிக்கடி உணர்ந்திருக்கிறார்கள். இதை அறிவது ஓர் இன்பமான விஷயம். கடவுளுக்கும், பணத் தேவதைக்கும் ஒரே சமயத்தில் பணி செய்வது முடியாது என்பது மிக உயர்வானதோர் பொருளாதார உண்மை. இரண்டில் ஒன்றை நாம் தேர்ந்தெடுக்க வேண்டும். இன்று மேலை நாடுகள், பூதாகாரமான லோகாயதத் தெய்வத்தின் காலின் கீழ் அகப்பட்டு அவதிப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றிற்குத் தார்மிக வளர்ச்சி இல்லாது போய்விட்டது. அவை தங்கள் முன்னேற்றத்தை ரூபாய், அணா, பைசாவைக் கொண்டே அளக்கின்றன. அமெரிக்காவின் செல்வம் ஆதார அளவாக இருக்கிறது. அதைக் கண்டு மற்ற நாடுகள் பொறாமைப்படுகின்றன. அமெரிக்காவைப் போல் செல்வத்தை அடைவோம். ஆனால், அதன் முறைகளைத் தவிர்த்து விடுவோம் என்று நம் நாட்டைச் சேர்ந்தவர்கள் பலர் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். இப்படிப்பட்ட முயற்சியை மேற்கொண்டால், நிச்சயமாகத் தோல்வியில்தான் முடியும் என்று நான் துணிந்து கூறுவேன். ஒரே சமயத்தில் நாம் 'விவேகமாகவும், நிதானமாகவும், அத்துடன் கடுங்கோபத்தோடும்' இருக்க முடியாது. உலகில் தார்மிகத்தில் உச்ச நிலை அடைவதற்கு நம் தலைவர்கள் நமக்குக் கற்பிக்க வேண்டும் என்றே நான் விரும்புவேன். நம்முடைய இந்த நாடு, ஒரு காலத்தில் தெய்வங்கள் வாழ்ந்த நாடாக இருந்ததாக நமக்குச் சொல்லப்படுகிறது. ஆனால், ஆலைப் புகைப் போக்கிகள், தொழிற்சாலைகள் ஆகியவற்றின் புகையினாலும், இரைச்சலாலும், கோரமானதும், ஆட்களைக் கும்பலாக ஏற்றிக் கொண்டு எண்ணற்ற கார்களும் எஞ்சின்களும் தலைதெறிக்கும் வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கும் சாலைகளைக் கொண்டதுமான ஒரு நாட்டில் கடவுளர் குடியிருப்பதாகக் கூறுவது சாத்தியமல்ல. அந்தக் கார்களில் செல்லுகிறவர்களுக்குப் பெரும்பாலும் தாங்கள் என்ன செய்கிறோம் என்பதே தெரியாது; அடிக்கடி அவர்கள் மறதி வயப்பட்டவர்களாக ஆகிவிடுகிறார்கள். பெட்டிகளில் திணித்து அடைத்தது போலத் தங்களை அசௌகரியமான முறையில் திணித்து வைப்பதாலும், முற்றும் முன்பின் தெரியாதவர்களாக உள்ளவர்களிடையே இருக்கும்படி செய்திருந்தும் அவர்களுடைய சுபாவங்கள் அபிவிருத்தி அடைவதில்லை. முன்பின் தெரியாதவர்களான அவர்களால் முடிந்தால், இவர்களை வெளியே தள்ளிவிடுவார்கள்; அதே போல இவர்களும் அவர்களைத் தள்ளி விடுவார்கள். இந்த விஷயங்களை நாம் குறிப்பிடுவதற்குக் கார

ணம், அவை லௌகீக முன்னேற்றத்தின் சின்னங்களாகக் கருதப் படுவதனுலேயே இவற்றை எல்லாம் இங்கே கூறுகிறேன். ஆனால், அவை நம் இன்பத்தை ஓர் அணுப் பிரமாணம்கூட அதி கப்படுத்தவில்லை. மாபெரும் விஞ்ஞானியாகிய வாலஸ், தீர்ந்த முடிவாகக் கூறுவது இதுதான் :

"பழங்காலத்திலிருந்து நமக்குக் கிடைத்திருக்கும் மிகப் புராதனமான ஆதாரங்களைக் கொண்டு பார்த்தால் ஒன்று தெரிகிறது. பொதுப்படையான தார்மிக நோக்குகளும், கருத்துக்களும், ஒப்புக்கொள்ளப்பட்ட ஒழுக்கத்தின் தரமும், இவற்றின் பலனுக உருவான நடத்தையும், இன்று நடைமுறையில் இருப்பவற்றை விட எந்த அளவிலும் தாழ்ந்து இருந்தது கிடையாது என்ப தையே காண்கிறோம்.''

பிறகு அவர், ஆங்கில நாடு செல்வத்தின் முன்னேற்றத்தில் எந்நிலையில் இருந்தது என்பதைத் தொடர்ச்சியாகப் பல அத்தி யாயங்களில் ஆராய்கிறார். அவர் கூறுவதாவது : "இந்தத் துரித மான செல்வப் பெருக்கும், இயற்கையின் மீது நமக்குள்ள ஆதிக் கத்தின் வளர்ச்சியும், பக்குவப்படாத நம் நாகரிகத்தின் மீதும், நமது மேலோட்டமான கிறிஸ்தவ மதத்தின் மீதும் தாங்க முடியாத பாரத்தைச் சுமத்தியிருக்கின்றன. அதைத் தொடர்ந்து பல்வேறு உருவங்களில் ஏற்பட்டுள்ள சமூக ஒழுக்கக் கேடு, அநேகமாக முன்பின் கண்டிராத ஆச்சரியமாகவே இருக்கிறது." அப்புறம், எப்படி ஆடவர், பெண்டிர், குழந்தைகள் ஆகியவர் களின் பிணங்கள் மீது தொழிற்சாலைகள் எழும்பின என்ப தையும், நாடு செல்வங்களில் துரிதமாக முன்னேறும்போது அது ஒழுக்கத்தில் எப்படி இழிந்துவிட்டது என்பதையும் அவர் காட்டுகிறார். சகோதரத்துவமின்மை, உயிரை அழிக்கும் தொழில் கள், கலப்படம் செய்தல், லஞ்சம், சூதாட்டம் ஆகியவற்றை விவ ரித்து அவர் இதைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். செல்வம் அதி கரித்ததும் எப்படி நீதியானது ஒழுக்கக் கேடானதாகி விட்டது, குடி போதையாலும் தற்கொலையாலும் மரணங்கள் அதிகரித்துவிட்டன, குறைப் பிரசவங்கள், பிறவியிலேயே அங்கக் குறைகள் ஆகியவை சராசரி அதிகரித்துவிட்டன, விபசாரம் ஒரு ஸ்தாபனமாகவே ஆகியிருக்கிறது என்பதை அவர் காட்டுகிறார். தமது ஆராய்ச்சியைப் பொருள் பொதிந்த இந்தக் குறிப்புக் களோடு அவர் முடிக்கிறார் :

"செல்வம், ஓய்வு ஆகியவற்றின் பலனுகத் தோன்றிய இதர அம்சங்களை, விவாக ரத்துக் கோர்ட்டுகளின் வழக்கு விசாரணைகள் எடுத்துக் காட்டுகின் றன. கிராம வீடுகளிலும், லண்டனிலும் பல்வேறு ஒழுக்கக் கேடான வெறிகளை அவ்வப்போது காணமுடிகிறது என்றும், மிகமிக ஒழுக்கக்கேடான சக்கரவர்த் திகளின் காலத்தில் நடைபெற்ற வெறியாட்டங்கள்கூட அவற்றை மிஞ்சிவிட முடியாது என்றும் லண்டன் சமூகத்தில் நீண்ட நாள் பழகிய நண்பர் ஒருவர் என்னிடம் உறுதியாகக் கூறினர். யுத்தத்தைப் பற்றியோ நான் எதுவும் சொல்ல வேண்டிய அவசியமில்லை. ரோம் சாம்ராஜ்யம் தோன்றியதிலிருந்து அது ஏறக்குறைய தீராப் பிணியாகவே எப்போதும் இருந்து வருகிறது.

ஆனால், இப்போது நாகரிகமடைந்த எல்லா நாட்டு மக்களிடையிலும் யுத்தத்தின் மீது ஒரு வெறுப்பு சந்தேகமின்றி ஏற்பட்டிருக்கிறது. எனினும், சமாதானத்தை விரும்பும் பக்தியோடுகூடிய பிரகடனங்களுடன் மொத்த ஆயுதங்களின் பெருஞ் சுமையைப் பார்க்கும்போது, ஆளும் வர்க்கங்களுக்கிடையில் தார்மிகக் கொள்கையானது வழி நடத்தும் கோட்பாடாக அநேகமாக அறவே இல்லை என்பதையே காட்டுவதாகத்தான் கருத வேண்டும்."

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் நாம் எவ்வளவோ கற்றுக்கொண்டிருக்கிறோம். ஆனால், இயல்பான ஒழுக்கத்தில் பிரிட்டனிடமிருந்து நாம் அடையக்கூடியது எதுவும் இல்லை என்பதே என் உறுதியான நம்பிக்கை. மேலும், நாம் ஜாக்கிரதையாக இல்லாதுபோனால், லோகாயத நோயால் பிரிட்டன் எந்த ஒழுக்கக் கேடுகளுக்கெல்லாம் இரையாகியிருக்கிறதோ அவைகளையெல்லாம் கொண்டு வந்து இங்கே புகுத்திக்கொண்டு விடுவோம். நம் நாகரிகத்தையும் நம் தருமங்களில் நேரிய முறையில் பேணினால்தான், அதாவது, பழம் பெருமை பேசிக்கொண்டிருப்பதற்குப் பதிலாகப் பழைய தார்மிகப் பெருமையை நம் சொந்த வாழ்க்கையில் வெளிப்படுத்தி, நாம் பெருமை பாராட்டிக்கொள்ளுவதற்கு நம் வாழ்க்கையையே சான்றாகக் காட்டினால்தான், பிரிட்டிஷ் தொடர்பினால் நாம் லாபம் அடைய முடியும். அப்போது நாம் பிரிட்டனுக்கும் நன்மை தேடியவர்களாவோம்; நமக்கும் நன்மை தேடிக்கொண்டவர்களாவோம். பிரிட்டன், ஆளுவோரை நமக்கு அனுப்புகிறது என்பதற்காக அதை நாம் அப்பட்டமாகப் பின்பற்றினால் அவர்களும் கீழ் நிலையை அடைவார்கள்; நாமும் கீழ் நிலையை அடைவோம். லட்சியங்களுக்கோ, அவற்றை முழுக்க முழுக்க நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கோ நாம் பயப்பட வேண்டிய அவசியமில்லை. தங்கத்தைவிட அதிக உண்மையையும், அதிகார, ஐஸ்வர்ய ஆடம்பரத்தைவிட அதிக பயமின்மையையும், சுயநல ஆசையைவிட அதிக உதாரத்தையும், காட்டும்போதுதான் நம் நாடு உண்மையிலேயே ஆன்ம சக்தி வாய்ந்த நாடாக இருக்கும். நம் வீடுகளையும், நம் அரண்மனைகளையும், கோவில்களையும் செல்வத்தினால் தோன்றிய விளைவுகளிலிருந்து தூய்மையாக்கி, அவற்றுள் தார்மிகத்திற்குரிய தன்மைகளை நாம் காட்டிவிட்டால், பெரிய ராணுவ பாரத்தைச் சுமக்கும் அவசியமில்லாமலே விரோத சக்திகளின் எந்தக் கூட்டுறவுகளையும், எதிர்த்துப் போராட முடியும். முதலில் ஆண்டவன் ராஜ்யத்தையும், ஆண்டவனின் நீதியையும் நாம் நாடுவோமாக; பின்பு நமக்கு அனைத்துமே வழங்கப்படும் என்பது மாற்ற முடியாத உறுதிமொழியாகும். இவையே உண்மையான பொருளாதாரம். நீங்களும் நானும் அதைப் பொக்கிஷமாகப் பேணி, நம்முடைய தினசரி வாழ்க்கையில் அமுலாக்குவோமாக.

[1916, டிசம்பர் 22-ஆம் தேதி அலகாபாத் மூயிர் மத்தியக் கல்லூரியின் பொருளாதாரச் சங்கத்தின் கூட்டம் ஒன்றில் நிகழ்த்திய சொற்பொழிவு.]

[ஜி. ஏ. நடேசன் அன் கோ வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பேச்சுக்களும் எழுத்துக்களும்' (4-ஆம் பதிப்பு) என்ற நூலிலிருந்து எடுத்தது.]

# 2

# யந்திரத் தொழில்மயமாக்குவது எதற்கு?

[மகாத்மாஜிக்கும் டாக்டர் ஜான் டி போயர் என்ற தென் இந்தியாவின் கல்வித்துறை நிபுணர் ஒருவருக்குமிடையே நடந்த பேச்சில் 'யந்திரத் தொழில் மயமாக்குவ'தைப் பற்றி மட்டும் நடைபெற்ற இந்தச் சம்பாஷணை ஸ்ரீ மகாதேவ தேசாயினால் எழுதப்பட்டு 'வார்தா கல்வித் திட்டத்தின் வியாக்கியானம்' என்ற தலைப்பின் கீழ் முதலில் வெளியாயிற்று. அது கீழே கொடுக்கப் படுகிறது.]

"ஆனால், நீங்கள் வாழ்க்கையை எளிமையாக்கி, யந்திரத் தொழில் மயமாக்குவதை ஒழித்துவிட விரும்புகிறீர்கள்."

"மூன்று கோடிப் பேருக்குப் பதிலாக முப்பதினாயிரம் பேருடைய உழைப்பின் மூலம் என் நாட்டுக்குத் தேவைப்படுவன வற்றையெல்லாம் என்னால் உற்பத்தி செய்ய முடியுமென்றால், அதே சமயத்தில் மூன்று கோடிப் பேர் வேலையில்லாமல் சோம்பி யிருக்கும்படி நேராதென்றால், நான் அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டேன். வேலை நேரத்தை நாளொன்றுக்கு ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரத்துக்குக் குறைத்துவிடக் கூடிய அளவுக்கு சோஷலிஸ்டுகளும் யந்திரத் தொழில் மயமாக்கு வதைப் புகுத்துவார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், நான் அதை விரும்பவில்லை."

"அவர்களுக்கு ஓய்வு கிடைக்கும்."

"ஹாக்கி விளையாடுவதற்கா ஓய்வு?"

"அதற்கு மட்டுமல்ல. உதாரணமாக, புது மாதிரியாகக் கண்டுபிடிக்கும் கைத்தொழில்களுக்கும்தான்."

"புதிதாகக் கண்டுபிடிக்கும் கைத்தொழில்களில் ஈடுபடு மாறுதான் நான் அவர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். ஆனால், நாள் ஒன்றுக்கு எட்டு மணி நேரம் வேலை செய்து தங்கள் கைகளால் அவர்கள் உற்பத்தி செய்வார்கள்."

"ஒவ்வொரு வீட்டிலும் ஒரு ரேடியோவும், ஒவ்வொருவருக்கும் ஒரு காரும் இருக்கும் சமூக நிலையை நீங்கள் எதிர்பார்க்கவில்லை என்றே தோன்றுகிறது. அது ஜனாதிபதி ஹூவரின் கோட் பாடாகும். அவர் ஒரு ரேடியோவல்ல, இரண்டு ரேடியோக் களும், இரண்டு கார்களும் இருக்க வேண்டுமென்று விரும்பினார்."

"நமக்கு அத்தனை கார்கள் இருந்தால், நடப்பதற்கு இடமே இருக்காது" என்றார், காந்திஜி.

"நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு வருடமும் விபத்துக்களால் 40,000 சாவுகள் நேருகின்றன ; அதைப் போல

மூன்று மடங்கான பேருக்குக் கை கால்கள் இல்லாது போகின்றன."

"எப்படியானாலும், இந்தியாவில் உள்ள எல்லா கிராமங்களிலும் ரேடியோக்கள் இருக்கும் நாளைப் பார்க்கும் வரையில் நான் உயிரோடு இருக்கப் போவதில்லை."

"ஏராளமாகிவிடும் பொருளாதாரக் கண்ணோட்டத்துடன் பண்டித ஜவாஹர்லால் சிந்திப்பதாகத் தோன்றுகிறது."

"அதை நானும் அறிவேன். ஆனால், ஏராளமாகிவிடுவது என்றால் என்ன ? அமெரிக்காவில் நீங்கள் செய்வதைப் போல லட்சக்கணக்கான டன் கோதுமையை நாசம் செய்வதற்குரிய சக்தியல்லவே?"

"ஆம். அது முதலாளித்துவத்தின் வினைப் பயன். இப்போது அவர்கள் நாசம் செய்யவில்லை. ஆனால், கோதுமையை உற்பத்தி செய்யாமல் இருப்பதற்காக அவர்களுக்குப் பணம் கொடுக்கப்படுகிறது. ஜனங்கள் ஒருவர் மீது ஒருவர் முட்டைகளை எறிந்துகொள்ளும் பொழுதுபோக்கில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஏனென்றால், முட்டை விலை அதிகமாக இறங்கி விட்டது."

"அதைத்தான் நாங்கள் விரும்பவில்லை. ஒவ்வொருவருக்கும் உணவுக்கும் உடைக்கும் நிறைய இருந்து, உள்ளதைப் பண்படுத்திக் கல்வியறிவு பெறுவதற்குப் போதுமான அளவு இருப்பதை, ஏராளமாக இருப்பது என்று நீங்கள் சொன்னால், நான் திருப்தியடையவே வேண்டும். ஆனால், என்னால் ஜீரணிக்க முடிகிறதற்கு அதிகமானதை வயிற்றில் திணிக்கவோ, நான் பிரயோசனகரமாக உபயோகிக்கக்கூடியதற்கு அதிகமான பொருள்களை வாங்கி அடுக்கிக்கொள்ளவோ நான் விரும்ப மாட்டேன். ஆனால், அதே சமயத்தில் இந்தியாவின் வறுமையையும், பற்றாக் கொடுமையையும், துன்பத்தையும், அழுக்கையும், தூசியையும் நான் விரும்பவுமில்லை."

"ஆனால், நீங்கள் தரித்திர நாராயணனைத் தொழுவதாகவும், வறுமையை வறுமையின் பொருட்டே ஏற்றிப் புகழ்வதாகவும் பண்டித ஜவாஹர்லால் தமது சுயசரிதையில் கூறியிருக்கிறார்."

காந்திஜி ஒரு முறை சிரித்துவிட்டு, "அது எனக்கும் தெரியும்" என்று கூறினார்.

—'ஹரிஜன்' – 12—2—1938

# 3

# யந்திரத் தொழில் மயமாவதன் வரையறைகள்

ஸ்ரீ பிரைட்மேன் என்பவர் போலந்து நாட்டைச் சேர்ந்த நண்பர். பரதானந்தஜி என்பது அவருடைய மற்றொரு பெயர். அவர் சேகானில் தங்கியிருந்தபோது காந்திஜியுடன் நடத்திய விவாதங்களில், "உலகத்தில் யந்திரத் தொழில் மயமாக்கும் அலை, அதிவேகமாக வீசி வியாபித்துக்கொண்டிருப்பது சம்பந்தமாக, ஒரு யதார்த்தவாதி என்ற முறையில் நான் மேற்கொள்ள வேண்டிய போக்கு என்ன?" என்பதும் ஒரு விவாதத்தின் பொருளாக இருந்தது. ஸ்ரீ பிரைட்மேன் எஞ்சினீயராகத் தொழில் புரிபவர்; மைசூர் சமஸ்தானத்தில் பெங்களூரில் உள்ள அரசாங்க மின்சாரத் தொழிற்சாலையின் தலைவராக இருப்பவர். அத்துடன் ராஜீயத்திலும் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளுகிறார். இந்தியாவின் தத்துவத்திலும், ஆன்மிக விஷயங்களிலும் ஆழ்ந்த அக்கறை கொண்டிருக்கிறார். காந்திஜியிடம் அவர் கூறியதாவது: "கிராமங்களை சுயதேவைப் பூர்த்தி உடையனவாக ஆக்குவது என்ற இறுதி லட்சியம் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால், அது ஒவ்வொருவரும் இந்திய அர்த்தத்தில் பண்பாடு உடையவர்களாக இருக்கும்போதுதான் கைகூடும். நிலைமையைச் சீர்ப்படுத்த யந்திரத் தொழில் மயமாக்குவது உதவ வில்லையா? அதை வெறுமனே எதிர்ப்பது சக்தி விரயம் அல்லவா? அதைவிட அதன் மார்க்கத்தைத் திருப்பிவிட முயல்வது நல்லதல்லவா?"

அதற்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்:

"நீங்கள் ஓர் எஞ்சினீயர். ஆகையால், யந்திர சாஸ்திரத்திலிருந்து ஓர் உதாரணம் கூறினால் நீங்கள் பாராட்டுவீர்கள். சக்திகள், அடுத்து ஒன்றின் பக்கத்தில் மற்றொன்று போவதை அறிவீர்கள். அவை ஒன்றின் சக்தியை மற்றொன்று கெடுத்து விடுவதில்லை. அந்தச் சக்திகள் அதனதன் வழியில் சுயேச்சையாக இயங்குகின்றன. இதன் பலனாக இயங்கும் முடிவான வழி நமக்குத் தெரிகிறது. அதேதான் நீங்கள் கூறும் பிரச்னையின் விஷயத்திலும். யந்திரத் தொழில் மயமாக்குவதற்கு அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ள ரஷியாவை நான் பார்க்கும்போது, அங்கே உள்ள வாழ்க்கை நிலை என்னைக் கவரவில்லை. பைபிளின் பாஷையில் கூறுவது என்றால், "ஒருவன் உலகம் முழுவதையுமே அடைந்து, தனது ஆன்மாவை இழந்து விடுவான் என்றால், அதனால் அவனுக்கு என்ன பயன்?" இதை நவீன பாஷையில் கூறுகிறேன்: "ஒருவன் தன் தனித் தன்மையை இழந்து, யந்திரத்திலுள்ள சக்கரத்தின் பல்லாக மாறிவிட்டால்

அது மனிதனுடைய கௌரவத்தினின்றும் இழிந்துவிடுவதாகும். ஒவ்வொரு தனி மனிதனும் முழு மனிதனுக, சமூகத்தில் முழு வளர்ச்சிகொண்ட ஓர் உறுப்பினனுக ஆக வேண்டும் என்பதே என் விருப்பம். கிராமங்கள் தன்னிறைவு கொண்டவைகளாக ஆக வேண்டும். அகிம்சை வழியிலேயே வேலை செய்வதென்ருல், வேறு பரிகாரம் எதுவும் எனக்குத் தெரியவில்லை. இப்போது எனக்கு அந்த உறுதியான நம்பிக்கை இருக்கிறது. யந்திரத் தொழில் மயமாக்குவதில் நம்பிக்கை கொண்டுள்ளவர்கள் இருக்கிருர்கள் என்பதையும் நான் அறிவேன். என் நம்பிக்கைக்காகவே நான் என் முழுச் சக்தியையும் கொண்டு வேலை செய்கிறேன். நிலைமையை அனுசரித்துச் சரி பண்ணிக்கொண்டு போவது என்பது எப்போதும் இருக்கிறது. அதன் பலன் என்னவாக இருக்கும் என்பதை நான் அறியேன். ஆனுல், என்னவாக இருந்தாலும், அது நன்மைக்கானதாகவே இருக்கும்.''

''ஆனுல், தன்னிறைவு பெற்ற கிராமங்கள் என்ற லட்சியத்துக்கு ஆபத்தை உண்டுபண்ணுமல், யந்திரத் தொழில் மயமாக்குவ்தோடு ஒத்துப் போவதற்குச் சாத்தியமான சமரசம் எதுவுமே இல்லையா?'' என்று கேட்டார் போலந்து நண்பர்.

''உண்டு'' என்று பதிலளித்த காந்திஜி கூறியதாவது: ''ரெயில்வேக்கள் இருக்கின்றன. அவற்றை நான் தவிர்ப்பதில்லை. மோட்டார்க் கார்களை நான் வெறுக்கிறேன். ஆனுல், அவற்றைப் பயன்படுத்தவும் செய்கிறேன். இன்னும் பவுண்டன் பேனுக்களையும் நான் வெறுக்கிறேன். ஆனுல், இப்போது என் பெட்டியில் பேனுக் கட்டையை நான் தூக்கிக்கொண்டு சென்ருலும், ஒரு பவுண்டன் பேனுவையும் உபயோகித்துக் கொண்டுதான் இருக்கிறேன். நான் பவுண்டன் பேனுவை உபயோகிக்கும் ஒவ்வொரு சமயத்திலும், அது என் மனத்தைக் கஷ்டப்படுத்துகிறது; என் பெட்டியில் உபயோகிக்காமல் வைத்திருக்கும் பேனுக் கட்டையைப் பற்றி நான் நினைக்கிறேன். ஒவ்வொரு கட்டத்திலுமே ஒத்துப்போதல் என்பது இருந்துகொண்டுதான் இருக்கிறது. ஆனுல், ஒத்துப்போதல் என்பதை ஒருவர் உணர வேண்டியதும், இறுதி லட்சியத்தை இடையருது மனக் கண்முன் நிறுத்திக் கொள்ள வேண்டியதும் அவசியமாகும்.''

ஸ்ரீ பிரைட்மேன் விவாதத்தை மீண்டும் தொடர்ந்தார்: ''பரபரப்பான மேற்கத்திய நாடுகளைப் பார்த்துவிட்டு, இந்தியக் கிராமங்களில் உள்ள பொதுமக்களை நோக்கித் திரும்பும்போது தேக்கநிலையே மேலோங்கியிருக்கும் முற்றிலும் வேறுபட்ட ஓர் உலகத்தில் நடமாடுவது போல எனக்குத் தோன்றுகிறது.''

அதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது :

''ஆம். மேல் பரப்பை நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் வரையிலும் அப்படித்தான் இருக்கும். ஆனுல், அவர்களோடு நீங்கள் பேசி, அவர்களும் உங்களோடு பேசத் தொடங்கி

விட்டால், அந்த நிமிஷத்திலேயே அவர்கள் உதடுகளிலிருந்து விவேகம் வெளிப்படக் காண்பீர்கள். கரடுமுரடான புறத்தோற்றத்தின் பின்னணியில், ஆழமான ஆன்மிகத் தேக்கத்தை நீங்கள் கண்டுகொள்ளுவீர்கள். இதையே நான் பண்பாடு என்று கூறுகிறேன். இப்படிப்பட்ட ஒன்றை நீங்கள் மேற்கத்திய நாடுகளில் காண முடியாது. ஐரோப்பியக் குடியானவன் ஒருவனுடன் நீங்கள் சம்பாஷித்துப் பாருங்கள். ஆன்மிக விஷயங்களில் அவனுக்கு அக்கறை இல்லை என்பதைக் கண்டு கொள்ளுவீர்கள். இந்தியக் கிராமவாசி விஷயத்திலோ, நெடுங் காலப் பழமை வாய்ந்த பண்பாடானது, கரடுமுரடான மேற்பரப்பிற்கு அடியில் புதைந்து கிடக்கிறது. மேற்பரப்பை நீக்கி, அவனுடைய தீரா வறுமையையும், எழுத்தறிவின்மையையும் அப்புறப்படுத்தினல், அறிவு விளக்கமும், பண்பாடும் கொண்ட ஒரு சுதந்திரப் பிரஜை எப்படி இருப்பான் என்பதற்குச் சிறந்த உதாரண புருஷனைக் காண்பீர்கள்.”

—‘ஹரிஜன்’ - 28—1—1939

[ஸ்ரீ பியாரிலாலின் ‘வாராந்திரக் கடித’ப் பகுதியில் முதலில் வெளியானது.]

# 4

# வெல்ல முடியாத நம்பிக்கை

ஹெச். எஸ். எஸ். நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்துக்காக இங்கே வந்திருந்த ஸ்ரீ கனசியாமதாஸ் பிர்லா காந்திஜியுடன் நடத்திய சம்பாஷணை, காந்திஜியை நிலை பெறச் செய்திருக்கும் நம்பிக்கை எப்போதையும்விட அதிகமாக வெளிப்படும்படி செய்தது. நால்வாடியில் உள்ள எங்கள் தோல் பதனிடும் தொழிற்சாலையிலிருந்து அப்பொழுதுதான் ஸ்ரீ கனசியாமதாஸ் திரும்பி வந்திருந்தார். அங்கே அவர் பார்த்தது அவருக்குச் சந்தோஷமளித்திருக்கிறது என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ஆனல், தொடர்ந்த தியாகமும், மங்காத நம்பிக்கையும் தேவைப்படக்கூடிய வேலை, எப்படி நீண்ட காலம் நடைபெற முடியும் என்று அவர் ஆச்சரியப்பட்டார்.

“தோல் பதனிடும் தொழிற்சாலையின் நிர்வாகப் பொறுப்பை வகிக்கும் அந்த நண்பர், மிக மிகச் சொற்பச் சம்பளத்துக்கு வேலை செய்வதாக நீங்கள் சொல்லுகிறீர்கள். அது பெரிதும் போற்றத்தக்கது” என்ருர், ஸ்ரீ கனசியாமதாஸ்.

காந்திஜி கூறினர்: “அவர் ஒரு பிராமணர்; ஒரு பட்டதாரி. நாள் ஒன்றுக்கு எட்டணவுக்கு மேல் அவர் பெற்றுக்கொள்ளுவ

தில்லை. அவர் மனைவியுங்கூட வேறிடத்தில் ஜீவனத்துக்குப் போதுமான சம்பளத்துக்காக நாள் முழுவதும் வேலை செய்கிறார்.''

''ஆம். அதெல்லாம் எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது. ஆனால், இந்த யந்திர யுகத்தில் இதுவெல்லாம் எவ்வளவு காலத்துக்குத் தொடர்ந்து நடைபெற முடியும் என்று எனக்குத் தெரியவில்லை."

அதற்குக் காந்திஜி கூறியதாவது: ''எனக்கு அப்படிப்பட்ட பயம் எதுவும் கிடையாது. ஏனென்றால், யந்திர யுகத்தின் இந்தச் சாதனைகள் அனைத்தும் மறைந்துவிடக்கூடிய காலத்தில், எங்களுடைய இந்தக் கைத்தொழில்கள் எஞ்சி நிற்கும் என்று என்னுள் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கிறேன். எல்லாச் சுரண்டலும் நின்றுவிடும்போது, சேவையும், யோக்கியமான உழைப்பும் அழியாமல் இருக்கும். என்னிடம் இந்த நம்பிக்கை உறுதியாக இருப்பதால்தான் என் வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டு போகிறேன். எப்படியும் நம்பிக்கையை இழந்து விடுவதற்கு எவ்விதமான காரணமும் எங்கே இருக்கிறது? அனந்த காலத்தோடு பார்க்கும்போது சில ஆண்டுகள் எம்மாத்திரம்? மனித சாதியின் தோற்றங்களை ஆராய்வது, நம்மைப் பல லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் கொண்டு செல்லுகிறது. தங்களுடைய பணியில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்ததால், ஸ்டீபன்ஸன், கொலம்பஸ் போன்றவர்களின் வேலை நிலைபெற்று நின்றது. என் வேலையில் உள்ள நம்பிக்கை எனக்கு உறுதியை அளிக்கிறது. ஆனால், அத்துடன் என் நம்பிக்கைக்குச் சவால் விடும் பிற விஷயங்கள் அனைத்தும் அழிவது நிச்சயம் என்ற துணிபும் எனக்கு இருக்கிறது. இந்தியா யந்திரத் தொழில் மயமாக்கப்பட்டுவிட்டால், சுரண்டுவதற்காக மற்ற உலகங்களைத் தேடித் தர நமக்கு ஒரு நாதர்ஷா தேவைப் படுவார். பிரிட்டன், ஜப்பான், அமெரிக்கா, ரஷியா, இத்தாலி ஆகியவற்றின் கடற்படை வலிமையையும், ராணுவ பலத்தையும் எதிர்த்து நாம் நிற்க வேண்டியிருக்கும். இந்தப் போட்டிகளைப் பற்றி நினைக்கும்போது எனக்குத் தலை சுற்றுகிறது. அது கூடாது. இந்த யந்திர யுகம் மனிதர்களை யந்திரங்களாக மாற்ற நினைக்கும்போது, நான் யந்திரமாக மாறிய மனிதனை மீண்டும் அவனுடைய உண்மையான ஸ்தானத்தில் கொண்டுவந்து நிறுத்துவதற்காகப் பாடுபடுகிறேன்.''

கனசியாமதாஸ் புன்னகை செய்துகொண்டே கூறினார்:

''வென்றுவிட முடியாத உங்கள் நம்பிக்கை எனக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனால், நீங்கள் என்றென்றைக்கும் எங்களோடு இருக்கமாட்டீர்கள் என்பதை உங்கள் உற்சாகத்தில் நீங்கள் மறந்துவிடுவதைப் போல் தோன்றுகிறது. பெருந்தொகைகளை வசூலித்து உங்கள் பணியை விரிவான முறையில் ஏன் பரப்பக் கூடாது?"

"இல்லை, எனக்குத் தேவைப்படுவதற்கு மேல் வசூலிப்பதில் எனக்கு நம்பிக்கை கிடையாது."

"ஆனால், நீங்கள் இருபது மாதிரிக் கிராமங்களை - பத்துக் கிராமங்களையாவது - நிர்மாணிக்கிறீர்கள் என்றால்?"

"அது அவ்வளவு சுலபமான காரியமென்றால், உங்கள் பணத்தைக்கொண்டே நீங்கள் அப்படிச் செய்துவிடலாம். ஆனால், அது சுலபமல்ல என்று எனக்குத் தெரியும். பணம் என்ற மந்திரக்கோலால் நீங்கள் ஒரு மாதிரிக் கிராமத்தை உண்டு பண்ணிவிட முடியாது. மேலும், பொதுஜனங்களிடமிருந்து நான் பெற்றுக்கொள்ளும் பணத்துக்கும் முழு அளவில் பிரதிப் பிரயோசனம் காண்பதில் நான் நம்பிக்கை உடையவன். அத்துடன், மேற்கொண்டு எந்த மத்திய நிதிகளையும் இப்பொழுது வசூலிப்பதற்கு நான் விரும்பவில்லை. குஜராத்தில் பல ஹரிஜனப் பாடசாலைகளும் ஆசிரமங்களும் உள்ளன. அவற்றிற்கு வருடம் ஒன்றுக்கு ரூ. 29,000 தேவைப்படுகிறது. குஜராத்தில் நடைபெற வேண்டிய வேலைக்கு உங்களிடம் நான் ஏன் பணம் கேட்க வேண்டும்? குஜராத்தில் ஹரிஜனப் பணிக்குப் பணம் தேடிக் கொள்ளுவது குஜராத்திகளின் கடமையல்லவா? அவர்களால் அதைத் தேடிக்கொள்ள முடியவில்லை என்றால், அவர்கள் வெளி உதவியைக் கேட்பதைவிட அவர்களுடைய ஸ்தாபனங்களை மூடிவிடுவதே மேல்."

—'ஹரிஜன்' - 30—11—1935

[மகாத்மாஜிக்கும் ஸ்ரீ கனசியாமதாஸ் பிர்லாவுக்கும் நடந்த மேற்கண்ட சம்பாஷணை, 1936, ஆகஸ்டு 29-ஆம் தேதி 'ஹரிஜ'னில் 'ஒரு பயங்கரமான குற்றச்சாட்டு' என்ற தலைப்பின் கீழ் எழுதிய ஒரு கட்டுரையில் விளக்கிக் கூறப்பட்டிருந்தது. அதிலிருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்படுகின்றன.]

மேலே பிரசுரமாகியிருக்கும் விஷயத்தை, குறிப்பாக அதன் ஐந்தாவது பாராவைக் குறிப்பிட்டு அப்போது லண்டனில் இருந்த மதிப்பிற்குரிய ஒரு நண்பர் எழுதியதாவது :

"கண்ணோட்டங்களும், ஆதாரங்களும் மிக மிக வித்தியாசப்படும்போது ஒரு பிரச்னையைக் காரண காரியத்துடன் ஆராய்வது எவ்வளவு கஷ்டம் என்பது எனக்கு மிக அழுத்தமாகவே புலனாகிறது. காந்திஜியின் ஒவ்வொரு கூற்றும் தவறான ஓர் ஆதாரத்தையோ அல்லது யந்திரத்தை ஆதரிப்பவர் கூறுவதைப் பற்றிய ஒரு தவறான கருத்தையோ ஆதாரமாகக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. பலன் என்னவென்றால், கருத்துக்கள் ஒருபோதும் ஒத்துப்போவதில்லை. பரஸ்பரம் ஒன்றை ஒன்று அறிந்துகொள்ளாத நிலையில் சமதூரத்தில் விலகிப் போய்க்கொண்டே இருக்கின்றன. சிந்தனையும், உணர்ச்சியும் நிறைந்த ஒவ்வொருவருக்கும் நம் வாழ்க்கையிலும், நமது சமூக அமைப்பிலும் ஏதோ ஒரு பெரிய தவறு இருப்பதாக ஓர் உணர்ச்சி இருந்து வருகிறது. அவர் முற்றும் சமய உணர்ச்சியே கொண்டவரல்லவானால் தமக்குத் தோன்றும் வழிகளில் அவற்றைக் கவனித்து, சந்தேகத்தின் பேரிலேயே பரிகாரங்களையும் கூறுகிறார். கூறப்படும் பரிகாரம் ஒன்றை அவர்

ஏற்றுக் கொள்ளும் போதும், அவர் அதை முழுக்க முழுக்க ஏற்றுக்கொள்ளுவதில்லை. அவர் உண்மையைத் தேடிக்கொண்டிருக்கிறார். ஆனால், காந்திஜி, "என்னுடைய வேலையிலுள்ள நம்பிக்கையே எனக்கு உறுதியை அளிக்கிறது. ஆனால், அத்துடன் என் நம்பிக்கைக்குச் சவால் விடுவன போல் தோன்றும் பிற அனைத்துமே அழிவது நிச்சயம் என்ற உறுதியான நம்பிக்கையும் சேர்ந்திருக்கிறது" என்று கூறும்போது, அவர் உண்மையை நாடுபவராகவே இல்லை. அதைத் தாம் கண்டு விட்டதாகத் தமக்குத் தாமே நம்பிக்கையை உண்டு பண்ணிக் கொண்டு, அதன் காரணமாக மேற்கொண்டு ஆராய்ச்சியோ, விசாரணையோ செய்யாமல் கண்ணை மூடிக்கொள்ளும் ஒருவராகவே அவர் இருக்கிறார். மேலும் அவர், "இந்தியா யந்திரத் தொழில் மயமாக்கப்பட்டுவிட்டால் சுரண்டுவதற்கு வேறு உலகங்களைத் தேடிக்கொடுக்க ஒரு நாதர்ஷா நமக்குத் தேவைப்படுவார்" என்றெல்லாம் கூறுகிறார். இது ஒரு அதீதமான கூற்று. இன்றைய முதலாளித்துவ ஏகாதிபத்திய முறை நீடிப்பதை ஆதாரமாகக் கொண்டே அந்த கூற்றுக்கு நியாயம் கற்பிக்க முடியும். சோஷியலிஸக் கொள்கைகளை ஆதாரமாகக் கொண்ட ஒரு சமூகத்தை எந்த விதத்திலும் கவனிக்காத ஒரு கூற்றாகவும் அது இருக்கிறது. சுரண்டலும், சர்வ தேசச் சச்சரவும், யந்திரத் தொழில் மயமாக்குவதனின்றும் உற்பத்தியாகவில்லை. யந்திர யுகத்துக்கு முன்பே பயங்கரமான சுரண்டலும் சச்சரவும் இருந்ததில்லையா? முதலாளித்துவத்தின் பின்னணியில் உள்ள லாப நோக்கத்திலிருந்தே சுரண்டலும், சர்வதேசச் சச்சரவுகளும் உண்டாகின்றன. இந்த லாப நோக்கம் போய்விட்டால், சுரண்டலோ, சச்சரவோ எங்கே இருக்கிறது? பிறரிடமிருந்து பணம் பண்ணுவதற்காக என்றில்லாமல் உபயோகத்துக்கு என்று மட்டும் உற்பத்தி செய்தால் காந்திஜியின் வாதம் முழுவதுமே தகர்ந்து விழுந்து விடுகிறது.

"மற்றும் ஓர் உதாரணம் இருக்கிறது. அது உங்களுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணக்கூடும். 'யந்திர யுகமானது மனிதர்களை யந்திரங்களாக மாற்ற நினைக்கும்போது, நான் யந்திரமாக மாறிய மனிதனைத் திரும்பவும் அவனுடைய பழைய ஸ்தானத்தில் கொண்டு வந்து நிறுத்த நினைக்கிறேன்' என்று காந்திஜி கூறுகிறார். மனிதன் இருந்த நிச்சயமான பழைய ஸ்தானம் தான் என்ன? சரித்திரத்தையும், மனிதனுடைய தோற்றத்தைப் பற்றிய கதையையும் நான் அறிந்த வரையில், இந்தப் பழைய ஸ்தானம் என்பது மிக மிகக் கீழான மிருகங்களின் நிலையை ஒட்டிய ஒரு ஸ்தானமேயாகும். யந்திர யுகத்துக்கு முன்னால் வரலாற்றின் எந்தக் காலக் கட்டத்திலும், எந்த நாட்டிலும் மனிதர்கள் துன்பகரமான, அரும்பாடு படக்கூடிய, யந்திரம் போன்ற வாழ்க்கையை நடத்த வேண்டியவர்களாகவே இருந்திருக்கிறார்கள். (சற்றுச் சாதகமான நிலையில் அமைந்துள்ள தென் கடல் தீவுகள் போன்ற தொலை தூரத் தீவுகள் சம்பந்தமாக வேண்டுமானால் ஒரு விதிவிலக்கு இருக்கக்கூடும்) உண்மையில், மனிதர்கள் யந்திரங்களாக இருக்க வேண்டியதை அவசியமில்லாமல் செய்யும் நிலைமைகளை யந்திரம் உண்டுபண்ணி இருக்கிறது. இதை ஓரளவுக்குத்தான், ஒரு சில நாடுகளில் மட்டும்தான் உணர்ந்திருக்கிறார்கள் என்பது உண்மையே. ஆனால், யந்திரத்தைத் தனிப்பட்டவர்களுடைய, ஒரு கூட்டத்தின் சொந்த லாபத்துக்காக நீசத்தனமான வழியில் பயன்படுத்துவதில்தான் தவறு இருக்கிறது. சமூக நன்மைக்காகச் சரியான வழியில் அதை உபயோ

கித்தால், மனிதனை மனிதனுக்குவதற்கு அது பெருஞ் சக்தி வாய்ந்த சாதன மாகவே இருக்கும்."

இந்தப் பயங்கரக் குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்ல வேண்டியதே முறை. உண்மையைக் கண்டு கொண்டவர் போல மேற்கொண்டு தேடாமல் கண்ணை மூடிக்கொள்ளும்போது காந்திஜி உண்மையைத் தேடுபவராக இருக்க முடியுமா என்ற சவாலை முதலில் கவனிப்போம். காந்திஜி தாம் தப்பே செய்யாத வர் என்று ஒருபோதும் சொல்லிக்கொண்டதில்லை. உண்மை யைத் தவறு என்று தாம் ஒப்புக் கொள்ளும்படி யாராவது செய்துவிட்டால், தம்மை மாற்றிக்கொண்டு உண்மையைத் தேடு வதை நிறுத்திவிடுவதாகச் சொல்லும் அளவுக்குக்கூட அவர் போயிருக்கிறார். ஆனால், உண்மையைத் தேடும் ஒருவர் அதைத் தம் உயிரைக் கொடுத்தாவது காப்பதற்குக் கடமைப்பட்டிருக் கிறார் என்ற நிபந்தனையும் கூடவே இருக்கிறது. அவர் தமது நிலையின் உண்மையைச் சந்தேகிக்கத் துணியவில்லை. உண்மை யைத் தேடுகிறவரேயன்றி வேறு எதுவுமில்லை என்று அவர் கூறிக்கொள்ளுவதிலேயே, அதற்குரிய வரையறைகளும் அடங்கி யிருக்கின்றன. பண்டித ஜவாஹர்லால் நேரு சோஷலிஸம் பற்றிப் பேசும்போது, அதை நம்முடைய சகல தீமைகளுக்குப் பரிகாரமாக வருணிக்கும்படி அவருக்குள்ள நம்பிக்கை இயல் பாகவே அவரைச் செய்கிறது. அது அவரது உறுதியான நம்பிக்கை. அவருக்கு அந்த உறுதியான நம்பிக்கையிருக்கும் அதே சமயத்தில், வேறு ஏதாவது இருக்குமாயினும் அதைக் கவனிக்கவும் தயாராகவே இருக்கிறார் என்பதை யாராவது சந்தேகிக்க முடியுமா? உண்மை என்னவென்றால், சத்தியமானது காரியாம்சத்தில் மற்றொன்றைச் சார்ந்தும், தத்துவபூர்வமாகச் சுத்த சுயம்பானதாகவும் இருக்கிறது. திறந்த மனத்தோடுதான் அதை நாம் நாடிச் செல்ல வேண்டும். ஆனால், அதனிடம் நமக்கு பக்தி இருக்க வேண்டும்; அதைப் பின்தொடர்ந்து செல்ல வேண்டும்;அதைச் சுத்த சுயம்பான ஒன்றாகக் கருதி வாழ்க்கையில் அனுஷ்டிக்க வேண்டும். உண்மையைத் தேடி, உண்மைக்காகவே வாழ்ந்து, அதையே பின்தொடர்ந்து செல்லுவதில் சிரத்தை கொண்ட யாரும், உண்மைக்கு மாறானது அழிந்துபடுவது நிச்சயம் என்ற நம்பிக்கையுடனேயே வேலை செய்திருக்கிறார்கள். அந்த நம்பிக்கை ஒன்றுதான் அவருக்கு ஆதாரமாக இருக்க முடியும். நாம் நம்புவதில் அந்த ஜீவனுள்ள நம்பிக்கை இல்லாத தனாலேயே நம் கஷ்டங்களில் அநேகம் தோன்றியிருக்கின்றன.

அப்புறம், லாப நோக்கைப் பற்றிக் கவனிப்போம். நமது விமர்சகர் கூறுவது சரி என்பது போலவே தோன்றுகிறது. லாபநோக்குத்தான் எல்லாத் தொழில்களையும் மாசுபடுத்துகிறது. லாப நோக்கிலிருந்துதான் சுரண்டல் உற்பத்தியாகிறது என் பதிலும் சந்தேகமில்லை. ஆனால், அது யந்திரத் தொழில் மய மாக்குவதிலிருந்து உற்பத்தியாகவில்லையா? உற்பத்தியை ஏராளமாகப் பெருக்குவது என்றால், பெரும் அளவில் உபயோ

கிப்பதும் விநியோகிப்பதும் இருந்தே ஆக வேண்டும். இதற்கு இயல்பானவைகளான தவறுகளைக் கட்டுத்திட்டமில்லாத தனி வுடைமையைக் கொண்ட சோஷலிஸம் போக்கிவிடுமா? போர் ஸோடி, "இந்த ஆபாசமான நாகரிகம்" என்ற தமது நூலில் கூறுவதாவது: "உற்பத்தி, விநியோகம் ஆகியவற்றில் உள்ள தனி உடைமையை ஒழிப்பதன் மூலம் சுரண்டலை இல்லாமல் செய்துவிடுவது, கஷ்டத்தின் வேரைத் தொட்டுவிடாது. தொழிற் சாலையின் அழிக்க முடியாத இயல்புகள், மனித வர்க்கத்தை அலைக்கழிக்க அப்புறமும் இருந்துகொண்டுதான் இருக்கும். தொழிற்சாலையைச் சமூக உடைமையாக்குவது, ஏராளமான லட் சியவாதிகள் பாடுபடும் கற்பனை உலகை ஒருபோதும் சிருஷ் டித்து விடப் போவதில்லை. ஒரு பரிகாரம் என்ற முறையில் சமூக உடைமை தோல்வியடைந்தே தீரும். ஏனெனில், தொழிற்சாலை முறை மனித வர்க்கத்தின் மீது புகுத்திவிட்ட உண்மையான நோயை அது குணப்படுத்தவில்லை. சமூக உடைமை தோல்வி யடைந்தே தீரும். ஏனென்றால், திறமாக வேலை செய்யும் ஆற்றலை இழந்த மனித வர்க்கத்துக்கு அதில் மருந்து இல்லை. தொழிற் சாலை நாகரிகத்தின் சாரமாக விளங்கும் ஆற்றல் என்பதுதான், மனித வர்க்கத்தின் மீது தொழிற்சாலை புகுத்திவிட்ட உண்மை யான நோயாகும்......முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தில் போலவே சோஷலிஸத்தின் கீழும், திறமை என்ற பெரிய தெய்வத்தின் பலிபீடத்தில் வசதியைப் பலியிட வேண்டி யிருக்கும். ஏனெனில், திறமை இல்லையென்றால், தொழிற்சாலை யுடன் இணைந்த தவிர்க்க முடியாத ஸ்தாபனச் சுமையைத் தாங்கிக்கொள்ளுவதற்குப் போதிய திறமை இல்லையென்றால், தொழிற்சாலை முறைக்குக் கட்டுபடியாகாது." தொழிற்சாலையின் ஸ்தாபனச் சுமையைப் பற்றி விவரித்துக்கொண்டு போக எனக்கு இங்கே இடமில்லை. ஆனால், சமூக உடைமையாக்குவது ஒன்றினால் மட்டும் அதிகமாகச் சாதித்துவிட முடியாது என்பது இதிலிருந்து வெளிப்படையாகத் தெரிகிறது. அது வீட்டுத் தொழில் நாகரிகத்துடன் இணைக்கப்பட்டு, தொழிற்சாலை நாக ரிகத்தினின்றும் துண்டிக்கப்பட்டாலொழிய, வெறுமனே சமூக உடைமையாக்குவது நம்மை ஓர் ஆபத்திலிருந்து இன்னுமோர் ஆபத்திலேயே தள்ளும். யந்திர நாகரிகத்துக்கு முன்னாலும் பயங்கரமான சுரண்டல் இருந்ததில்லையா என்று நம் விமர்சகர் கேட்கிறார். ஆம், இருந்தது. ஆனால், பணக்காரர்களையும் ஏழை களையும் பிரித்த இடைவெளி அப்போது இப்போதிருப்பதைவிட அகன்று இருந்ததா? குறுகியிருந்ததா? பொருளாதாரக் கோளாறு களுக்குச் சமூக உடைமையாக்குவதில் பரிகாரம் இருக்கலாம்; ஆனால், தொழிற்சாலையுடன் பொருந்தாத் தொடர்பு கொண்ட சமூக உடைமையில் அது இல்லை.

இனி கடைசி விஷயத்துக்கு வருவோம். மனிதனை அவனுடைய பழைய ஸ்தானத்தில் திரும்பவும் வைப்பதையே தமது குறிக்கோளாகக் காந்திஜி கொண்டிருக்கிறார் என்று நான்

கூறியபோது, என் பாஷை திட்டமானதாக இல்லை என்ற என் தவறை ஒப்புக்கொள்ளுகிறேன். காந்திஜி கூற நினைத்தது என்ன வென்றால், அது இதுதான்; அதாவது, மனிதன் உண்மையான மனிதப் பிறவியாக இருக்கும் நிலையை வேகமாக இழந்து கொண்டிருக்கிறான்; குடிசைத் தொழிலைப் புனருத்தாரணம் செய்வது மனிதனை உண்மையான மனிதப் பிறவியாக ஆக்குவதைக் குறிக்கோளாகக் கொண்டது என்பதே அவர் கூறியதன் பொருள். விமர்சகரோ, காந்திஜி யந்திரத்துக்கே விரோதியாக இருப்பதாக நினைத்துக் கொள்ளுகிறார். இதைவிட பெரிய தவறு வேறு இருக்க முடியாது. யந்திரம் மனிதனுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும், அவனுக்குப் பணி செய்ய வேண்டும், ஆனால், மனிதனின் எஜமானனாக அது ஆகிவிடக்கூடாது என்றே அவர் விரும்புகிறார். மனிதன் தனது உழைப்பை மிச்சப்படுத்தவும், உற்பத்தியை அதிகப்படுத்தவும்கூடிய வகையில் தன் ஆதிக்கத்தின் கீழ் உள்ள யந்திரத்தை அபிவிருத்தி செய்யட்டும். ஆனால், விசையினால் ஓடும் யந்திரம் இப்போது அவனை ஆக்கியிருப்பது போல அவன் ஒரு யந்திரமாக இருக்க வேண்டாம். தொழிற்சாலை நாகரிகம் இன்று யந்திரத்தை மனிதனின் எஜமானனாகச் செய்திருக்கிறது. அதற்குக் காரணம், சுரண்டலை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பது மட்டுமல்ல; தொழிற்சாலையின் இயல்பான குறைபாடுகளே அவ்விதம் இருக்கின்றன. தொழிற்சாலை தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில் யந்திரம் போன்று வாழ்க்கை நடத்திய மனிதர்கள் இருந்திருக்கலாம். (அதை யந்திரம் தோன்றுவதற்கு முற்பட்ட காலம் என்று நான் சொல்ல மாட்டேன். ஏனென்றால், ஆதாம் மண்ணைத் தோண்டவும், ஏவாள் நூல் நூற்கவும் ஆரம்பித்ததிலிருந்தே யந்திரங்கள் இருந்து வந்திருக்கின்றன) ஆனால், தொழிற்சாலை நாகரிகத்தில் காண்பதைவிட அப்போது குறைந்த அளவிலேயே யந்திர வாழ்க்கை நிலவியது. சோர்வும் சுதாரிப்பின்மையும், விகாரமும் ஆபாசங்களும் குறைவாகவே இருந்தன என்பேன். தென் கடல் தீவுகள் மட்டுமன்றி (துரதிர்ஷ்டவசமாக அவற்றை நான் அறியேன்) தொழிற்சாலைகள் தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில் இந்தியாவும் அவ்வாறுதான் இருந்தது. இங்கே நான் இந்தியாவின்-உபநிஷத்துக்களும், ராமாயணமும், மகாபாரதமும் கண்ட இந்தியாவின்—பொற்காலத்தைப் பற்றிப் பேசவில்லை; சரித்திர கால இந்தியாவைப் பற்றித்தான் பேசுகிறேன். நெசவாளர்கள் குலத்தில் பிறந்த கபீர், விவசாயிகளின் குலத்தில் பிறந்த துக்காராம், தீண்டாதார் எனப்படுவோரிடையே தோன்றிய சோகாமேளர், சக்கிலியர் சாதியில் உதித்த ராய்தாஸ், குயவர் வகுப்பினரான கோரா, தச்சர் சாதியில் பிறந்த தானு ஆகியவர்கள், யந்திரம் போன்ற வாழ்க்கையின் உதாரண புருஷர்களல்ல; ஆனால் தெய்வீக வாழ்க்கையின் எடுத்துக்காட்டுக்களே ஆவர்.

[மகாதேவ தேசாயின் 'வாராந்திரக் கடித'ப் பகுதியில் முதலில் வெளியானது.]

## 5

# யந்திர மயமாக்குவதற்குப் பதிலாக

ஒருவர் எழுதுகிறார் :

"இந்தியாவை யந்திரத் தொழில் மயமாக்குவது—இந்தியா தனக்கு வேண்டிய கப்பல்களையும், ரெயில் எஞ்சின்களையும், ஆகாய விமானங்கள் முதலியவற்றையும் தானே உற்பத்தி செய்துகொள்ளக்கூடிய அளவுக்கு—அவசியமானது என்று நம்புகிறீர்களா? இல்லையென்றால், இந்தியா சுதந்திர மான நாடு என்ற முறையில் தன் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கான மாற்று மார்க்கங்களைத் தாங்கள் தயவுசெய்து தெரிவிப்பீர்களா?

"இப்படிப்பட்ட தொழில்களை நிறுவுவதில் தங்களுக்கு நம்பிக்கை இருந்தால், அவற்றையும், கிடைக்கும் லாபத்தையும் யார் நிர்வகிக்கவேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறீர்கள்?"

எந்த நாட்டுக்குமே, எந்தச் சந்தர்ப்பத்திலுமே யந்திரத் தொழில் மயமாக்கிவிடுவது அவசியம் என்று நான் கருதவில்லை. இந்தியாவுக்கோ அது மேலும் அவசியமில்லாத காரியமே. சுதந்திர இந்தியா, தனது ஆயிரக்கணக்கான குடிசைகளை அபி விருத்தி செய்து, உலகத்தோடு சமாதானமாக வாழ்ந்து, எளிய, ஆனால், சீரிய வாழ்க்கையைக் கைக்கொள்ளுவதன் மூலமே, வேதனையால் முனகிக்கொண்டிருக்கும் உலகத்துக்குத் தனது கடமையைச் செய்ய முடியும் என்று உண்மையில் நான் கருது கிறேன். பணத் தேவதையைத் தொழுவதனால் நம்மீது சுமத்தப் பட்டுள்ள அசுர வேகத்தை அடிப்படையாகக்கொண்ட சிக்கலான லோகாயத வாழ்க்கையும், உயரிய சிந்தனையும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாகும். சீரிய வாழ்க்கை வாழும் கலையை நாம் கற்றுக்கொள்ளும்போதுதான் வாழ்க்கையில் சகல கலைகளும் நிரம்பியிருப்பது சாத்தியம்.

அபாயகரமாக வாழ்வதில் உணர்ச்சி வேகம் இருக்கக்கூடும். அபாயத்தையும் எதிர்த்து வாழ்வதற்கும், அபாயகரமாக வாழ் வதற்கும் உள்ள வித்தியாசத்தை நாம் தெரிந்துகொள்ள வேண் டியது அவசியம். காட்டு மிருகங்களும், அவற்றையும்விடக் காட்டுத்தனமான மனிதர்களும் நிறைந்த ஒரு வனத்தில், துப் பாக்கியில்லாமல் கடவுளையே தன் ஒரே துணையாகக்கொண்டு துணிந்து வாழ்கிறவன், அபாயத்தையும் எதிர்த்து வாழ்பவ னாவான். தொடர்ந்து நடு ஆகாயத்திலேயே வாழ்ந்துகொண்டு, உலகத்தார் பிரமிக்கும்படி கீழே பூமியை நோக்கிப் பாய்கிறவன், அபாயகரமாக வாழ்கிறவன். ஒன்று குறிக்கோளுடைய வாழ்க்கை; மற்றொன்று குறிக்கோள் இல்லாத வாழ்க்கை.

தனித்து நிற்கும் ஒரு நாடு—அது உலகின் முன்னிலையில் பூகோள ரீதியிலும் ஜனத்தொகையிலும் எவ்வளவு பெரிய நாடாக இருந்தாலும்-முழுக்க முழுக்க ஆயுதம் தரித்துக்கொண்டும்,

ஆடம்பரத்துக்கும் தடபுடலுக்கும் மத்தியிலும் இப்படிப்பட்ட எளிய வாழ்க்கையை வாழ்வது சாத்தியமா? இது, நம்பாத சுபாவமுடையவர்கள் சந்தேகப்படக்கூடிய விஷயமாகும். இந்தக் கேள்விக்குப் பதில் நேரடியானது, எளிதானது, வாழத் தகுந்தது. எளிய வாழ்க்கை என்றால், ஒரு தனி மனிதன் மட்டுமே முயன்றாலும் சரி, ஒரு குழுவினர் முயன்றாலும் சரி, முயற்சிக்கத் தகுந்தது அதுதான்.

அதே சமயத்தில் சில அடிப்படையான யந்திரத் தொழில்கள் அவசியம் என்றும் நான் கருதுகிறேன். திண்ணைப் பேச்சு சோஷலிஸத்திலோ, ஆயுத பல சோஷலிஸத்திலோ எனக்கு நம்பிக்கை கிடையாது. எல்லோரும் என் வழிக்கு மாறுவதற்காகக் காத்திராமல், என் நம்பிக்கைக்கு ஏற்பச் செயலில் ஈடுபடுவதில்தான் எனக்கு நம்பிக்கை உண்டு. அதனால், அடிப்படைத் தொழில்களை எண்ணிக் கணக்கிட வேண்டிய அவசியமின்றி, ஏராளமான பேர் சேர்ந்து வேலை செய்யவேண்டிய தொழில்களை அரசாங்க உடைமையாக்குவதை நான் விரும்புவேன். குறிப்பிட்ட வேலை நுட்பம் தெரிந்தவர்களாயினும், மற்றவர்களாயினும், அவர்கள் தம் உழைப்பினால் உற்பத்தி செய்கின்றவை அரசாங்கத்தின் மூலம் அவர்களுடைய உடைமையாகவே இருக்கும். இப்படிப்பட்ட ஓர் அரசாங்கம், அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருக்கும் என்றுதான் நான் எண்ண முடியும். அதே சமயத்தில், பணம் படைத்தவர்களிடமிருந்து பலாத்காரமாக நான் பணத்தைப் பறிக்கமாட்டேன். ஆனால், அரசாங்க உடைமையாக மாற்றும் செயல் முறையில் அவர்களுடைய ஒத்துழைப்பைக் கோருவேன். லட்சாதிபதிகளாக இருந்தாலும் சரி, பரம ஏழைகளாக இருந்தாலும் சரி, சமூகத்தில் பறையர்கள் என்போர் கிடையாது. அந்த இரு சாராரும் அதே நோயின் ரணங்களே.

நாம் கண்கூடாகக் கண்ட, இந்தியாவிலும் பிற இடங்களிலும் இன்னும் காண வேண்டியிருக்கிற மனிதாபிமானம் இல்லாதவைகளின் முன்னிலையில் இந்த நம்பிக்கையையே கொண்டிருக்கிறேன். அபாயத்தை எதிர்த்து நின்று நாம் வாழ்வோமாக.

—'ஹரிஜன்' – 1—9—1946

## 6

# எப்படி உதவ முடியும்?

ஓர் ஐரோப்பிய நண்பர் பின்வருமாறு எழுதுகிறார்:

"மேற்கத்திய நாடுகளில் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு நன்மையளிக்கக்கூடியவாறு என்ன செய்யலாம்? என்ன முயற்சியை மேற்கொள்ளலாம் என்று நீங்கள் யோசனை கூறுகிறீர்கள்? பட்டினி

கிடக்கும் கோடிக்கணக்கானவர்கள் என்று, ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலும் உள்ள பாட்டாளி மக்கள் கூட்டத்தையே நான் குறிப்பிடுகிறேன். அவர்கள் அதல பாதாளத்தை நோக்கி விரட்டப்படுகிறார்கள்; வாழ்க்கை என்று சொல்லுவதற்குத் தகுதியற்ற வாழ்க்கையே அவர்கள் வாழ்கிறார்கள். அவர்களுக்கு வாழ்க்கை வசதிகள் அறவே கிடையா. எந்தவித சுயராஜ்யத் தினாலும் எதிர்காலத்தில் நிவாரணம் கிடைக்கும் என்று அவர்களால் நம்பிக்கை கொள்ளவும் முடியாது. இந்தியாவில் உள்ள கோடிக்கணக்கான வர்களை விடவும் அவர்கள் திக்கற்ற நிலையில் இருக்கிறார்கள் என்று சொல்லி விடலாம். ஏனென்றால், தெய்வ நம்பிக்கையும், மத ஆறுதலும் அவர்களை விட்டுப் போய்விட்டன. அவை இருந்த இடத்தில் இப்போது துவேஷத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை.

“இந்திய நாட்டைக் கீழே அழுத்திக்கொண்டிருக்கும் இரும்புக் கரங்கள் அங்கேயும் வேலை செய்துகொண்டிருக்கின்றன. இந்தச் சுதந்திர நாடுகள் ஒவ்வொன்றிலும் பேய்த்தனமான முறை அமுலில் இருக்கிறது. பேராசையில் மிகுந்த ஒருமைப்பாடு இருப்பதால் அரசியல் அடிபட்டுப் போய்விடுகிறது. பாவச் செயல் இந்த மக்கள் கூட்டத்தை நாசமாக்கிக்கொண்டிருக்கிறது. அவர்கள் தங்கள் நரக வாழ்க்கையிலிருந்து எப்படியேனும், அதை இன்னும் பெரிய நரகமாக்கியாவது தப்புவதற்கு இயல்பாகவே முயல்கிறார்கள். அவர்களுக்குத் துன்பங்களை மறக்க மத நம்பிக்கைகளும் இப்போது இல்லை. ஏனென்றால், கிறிஸ்தவ மதமானது, நூற்றாண்டுக் கணக்கில் வலியவர் களுக்கும், பேராசைக்காரர்களுக்கும் ஆதரவு கொடுத்து தனது பெருமையை யெல்லாம் இழந்துவிட்டது.

“இந்த மக்கள் கூட்டத்திற்கு உள்ள ஒரே விமோசன மார்க்கம், அப்படி ஏதாவது இருந்தால், மேற்கத்திய உலகம் முழுவதும் ஏற்கனவே நாசத்தில் விழாமல் இருந்தால், விரிந்த அளவில் கட்டுப்பாடான அகிம்சைப் போராட் டத்தை நடத்துவதே என்றுதான் மகாத்மாஜி பதில் சொல்லுவார் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆனால், ஐரோப்பிய மண்ணிலும், அறிவிலும் அகிம்சை மரபுகள் எவையும் கிடையா. இந்தக் கொள்கையைப் பரப்புவ தற்கே பிரம்மாண்டமான கஷ்டங்கள் வந்து குறுக்கிடும். அப்படியிருக்க அதைச் சரியான முறையில் புரிந்துகொள்ளுவதையும், பிரயோகிப்பதையும் பற்றி என்ன சொல்லுவது!”

நண்பர் இவ்வளவு அந்தரங்க சுத்தியோடு விவரித்திருக்கும் இந்த விஷயத்தில் அடங்கியுள்ள பிரச்னை என்னுடைய எல்லைக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. அதனால், கேள்வி கேட்டிருப்ப வருக்கும் எனக்கும் இடையே உள்ள நட்புக்கு மதிப்பு அளிக்கும் முறையிலேயே பதிலைக் கூற முயல்கிறேன். தீர ஆராய்ந்து கூறும் ஒவ்வொரு வாதத்துக்கும் நாம் கொடுக்கும் மதிப்பைத் தவிர என் பதிலுக்கு வேறு மதிப்புக் கிடையாது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இந்தியாவின் விஷயத்தில் நான் அறிந்திருப்பதாகக் கூறிக்கொள்ளும் அர்த்தத்தில் ஐரோப்பா வின் நோய் இன்னது என்பது பற்றி எனக்குத் தெரியாது; அதற்கு என்ன பரிகாரம் என்பதையும் அறியேன்.

ஆனாலும், ஐரோப்பாவில் மக்கள் ராஜீய சுயாட்சியை அனுபவித்து வந்தபோதிலும், அங்கும் இந்தியாவிலும் உள்ள

நோய் அடிப்படையில் ஒன்றுதான் என்று எனக்குத் தோன்று கிறது. ராஜீய அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்றுவது இந்தியாவின் தேசீய வாழ்க்கைக்கு ஒரு ஜீவாதாரமான அவசியம் என்று நான் கருதினலும், அந்த அதிகார மாற்றம் மட்டும் என் ஆசையைப் பூர்த்தி செய்துவிட முடியாது. ஐரோப்பிய மக்களுக்கு ராஜீய அதிகாரம் இருக்கிறது என்பதில் சந்தேக மில்லே. ஆனல், அவர்களுக்குச் சுயராஜ்யம் இல்லே. ஆசிய, ஆப்பிரிக்க மக்கள், ஐரோப்பிய மக்களின் ஓரளவு நன்மைக்காகச் சுரண்டப்படுகிருர்கள். ஐரோப்பிய மக்களோ, ஜனநாயகம் என்ற புனிதமான பெயரால் அவர்களுடைய ஆளும் வர்க்கத் தாராலோ, வகுப்பினராலோ சுரண்டப்படுகிருர்கள். ஆகவே, அடிப்படையில் இந்தியாவில் உள்ளதைப் போன்ற அதே நோய் தான் இருப்பதாகத் தோன்றுகிறது. அதனல், இரண்டுக்கும் ஒரே பரிகாரத்தையே செய்து பார்க்கலாம் என்றும் தோன்று கிறது. மூடி மறைக்கும் வெளிப் பகட்டுக்களேயெல்லாம் களேந்து விட்டுப் பார்த்தால், ஐரோப்பிய மக்கள் பலாத்காரத்தினலேயே சுரண்டப்படுகிருர்கள் என்பது தெரியும்.

பொது மக்கள் பலாத்காரத்தைக் கைக்கொள்ளுவதனல் ஒருபோதும் நோயைப் போக்கிக் கொண்டுவிட முடியாது. எப்படியும், பலாத்காரத்தின் வெற்றி அற்ப ஆயுளில் முடிந்து விட்டதையே இன்றுவரையிலும் அனுபவம் எடுத்துக் காட்டு கிறது. அது பெரிய பலாத்காரத்தில் கொண்டு போய்விடுகிறது. இதுவரையிலும் செய்து பார்க்கப்பட்டதெல்லாம், பலாத்காரத் தின் பல்வேறு வகைகளும், பெரும்பாலும் பலாத்காரவாதிகளின் மனேபீடத்தைப் பொறுத்த செயற்கைக் கட்டுப்பாடுகளுமே. நெருக்கடியான சமயத்தில், இந்தக் கட்டுப்பாடுகள் இயல் பாகவே முறிந்துவிடுகின்றன. ஆகையால், ஐரோப்பிய மக்கள் தங்களுக்கு விடுதலே தேடிக்கொள்ள விரும்பினல், சீக்கிர மாகவோ, தாமதித்தோ, அகிம்சையைக் கைக்கொள்ளும்படி யாகவே நேரும் என்று எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் ஒரு கூட்டமாகத் திரண்டும், உடனடியாகவும் அதைக் கைக் கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கை இல்லே என்பதற்காக நான் திகைத்துவிடவில்லே. விரிவான காலச் சக்கரத்தில் ஒரு சில ஆயிரம் வருடங்கள், ஒரு புள்ளி மாத்திரமே. யாராவது ஒருவர், என்றும் தளராத நம்பிக்கையோடு காரியத்தை ஆரம்பிக்க வேண்டும். பொது மக்கள், ஐரோப்பாவின் பொது மக்களும் கூட, அதை ஆதரிப்பார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லே. ஆனல், விடுதலேயின் உட்பொருளேத் துல்லியமாகப் புரிந்து கொள்ளுவதைப் போல், அகிம்சையில் பெருஞ் சோதனே நடத்து வது கால அளவில் அவ்வளவு அவசரமானதல்ல.

மக்கள் எதிலிருந்து விடுவிக்கப்படுவார்கள்? தெளிவில் லாமல் பொதுப்படையாகப் பேசுவதும், "சுரண்டலிலிருந்தும் இழிநிலேயிலிருந்தும் விடுவிக்கப்படுவார்கள்" என்று பதிலளிப் பதும் பயனற்ற காரியங்கள். இன்று மூலதனம் வகிக்கும்

ஸ்தானத்தை அவர்கள் வகிக்க விரும்புகிறார்கள் என்பதுதான் அதற்குப் பதில் அல்லவா? அப்படியானால், அதைப் பலாத்காரத்தின் மூலம்தான் அடைய முடியும். ஆனால், மூலதனத்தின் தீமைகளை அவர்கள் தவிர்க்க விரும்பினால், வேறு விதமாகச் சொன்னால், மூலதனத்தைப் பற்றிய கருத்தை அவர்கள் திருத்தியமைக்கப் பாடுபடுவதானால், உழைப்பினால் உற்பத்தியாகிறவைகள் இன்னும் ந்யாயமான முறையில் விநியோகம் செய்யப்பட வேண்டும் என்பதற்காகப் பாடுபடுவார்கள். இதன் பலனாக, நாம், நாமாக விரும்பியே போதும் என்ற மன நிறைவையும், எளிமையையும் கைக்கொள்ள வேண்டும் என்பதற்கு வருகிறோம். புதிய கருத்தின்படி, லௌகீகத் தேவைகளைப் பெருக்குவது வாழ்க்கையின் லட்சியமாக இராது. அதற்குப் பதிலாக, வசதியைக் குறைக்காமல் அவற்றைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவதே லட்சியமாக இருக்கும். நம்மால் எதையெல்லாம் அடைய முடியுமோ அதை அடைய வேண்டுமென்று நினைப்பதை நிறுத்திவிடுவோம். ஆனால், எல்லோரும் அடைய முடியாதவற்றை நாம் பெற்றுக்கொள்ள மறுத்துவிடுவோம். ஐரோப்பிய மக்களுக்குப் பொருளாதார பாஷையிலேயே இதை வெற்றிகரமாக எடுத்துச் சொல்லுவது கஷ்டமாக இருக்காது என்று எனக்குத் தோன்றுகிறது. இப்படிப்பட்ட ஒரு பரிசோதனையை ஓரளவு வெற்றிகரமாகச் செய்தால், அதன் காரணமாக தனக்கே தெரியாத விதத்தில் அமோகமான ஆன்மிகப் பலன்கள் ஏற்பட்டே தீர வேண்டும். ஆன்மிக நியதி தனக்கே உரிய ஒரு துறையில் செயல்படுவதாக நான் நம்பவில்லை. அதற்கு மாறாக, அது வாழ்க்கையின் சாதாரண நடவடிக்கைகளின் மூலமாக மட்டுமே வெளிப்படுகிறது. இவ்வண்ணம் அது பொருளாதார, சமூக, ராஜீய துறைகளைப் பாதிக்கிறது. நான் தெரிவித்துள்ள கருத்தை ஐரோப்பியப் பொது மக்கள் கைக்கொள்ளும்படி செய்ய முடியுமென்றால், லட்சியத்தை அடைவதற்கு அவர்களுக்குப் பலாத்காரம் அறவே அவசியமில்லை என்பதைத் தெரிந்துகொள்ளலாம். அத்துடன், அவர்கள் அகிம்சையின் பின் விளைவாகத் தோன்றும் வெளிப்படையான நியதிகளைப் பின்பற்றுவதன் மூலம் தங்களுக்குரிய ஸ்தானத்தைச் சுலபமாகப் பெற முடியும். இந்தியாவுக்கு இயல்பானது என்றும், காரிய சாத்தியமானது என்றும் எனக்குத் தோன்றக்கூடியது, சுறுசுறுப்பான ஐரோப்பிய மக்களின் உள்ளத்தில் பதிவதைவிட சோம்பிக் கிடக்கும் இந்திய மக்களின் உள்ளத்தில் பதிவதற்கு அதிகக் காலம் ஆகவும் கூடும். ஆனால், என் வாதம் முழுவதும், அனுமானங்களையும் யூகங்களையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பதை நான் மீண்டும் ஒப்புக்கொண்டே ஆக வேண்டும். அதனால், என் வாதத்தை அதற்குரிய தகுதியைக்கொண்டே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

- 'யங் இந்தியா' – 3—9—1925

["மேற்கத்திய நாடுகளின் விஷயம் என்ன?" என்ற தலைப்புடன் முதலில் வெளியான கட்டுரை.]

# 7

# இந்தியாவின் துன்பங்களுக்குப் பரிகாரமல்ல

ஒருவர், நம் கஷ்டத்துக்குக் காரணமான தீமைகளையும், விவசாயத்தில் தாம் செய்யவிருக்கும் அபிவிருத்திகளையும் விபரமாக எடுத்துக் கூறிவிட்டு கீழே வருமாறு எழுதுகிறார் :

"நான் பின் தங்கி நின்று கொண்டு, தற்கால நாகரிகம் ஒரு நோய் என்று சொன்னால், இவற்றையெல்லாம் சாதிக்க முடியாது என்று நான் நினைக்கிறேன். நாம் தைரியமாக நோயை எதிர்த்து நின்று, அதனால் ஏற்படும் தீமைகளைப் போக்க ஒரு பரிகாரத்தைக் காணவேண்டும். இந்தக் கால அல்லது சைத்தானின் நாகரிகத்திலிருந்து வெளியேற முடியாத ஓர் அபிவிருத்திக் கட்டத்தை அடைந்திருக்கிறோம். சுலபமான போக்குவரத்துள்ள இந்த நூற்றாண்டில் எந்த நாடும் மற்றொன்றைவிட்டு விலகித் தனித்து வாழ முடியாது. மேற்கத்திய செல்வாக்குகள், பொருளாதார, சமூக, சமய ராஜீய விஷயங்களில் நமது சமூகத்தின் அஸ்திவாரத்தையே அசைத்துக் கொண்டிருக்கின்றன. இந்தப் போராட்டத்தில் அற்பமானவையும், மூடநம்பிக்கை உள்ளவையும், இரண்டாம் பட்சமானவையுமான எல்லா அம்சங்களும் அழிந்துபட்டு, திண்மையும் முக்கியத்துவமும் உடைய விஷயங்கள் நிலைத்து நிற்பதற்கு வழி விலகிக் கொடுத்தாக வேண்டும் என்று நான் நினைக்கிறேன்......நம்முடைய மாட்டு வண்டிகளையும், பழைய மண் விளக்குகளையும் கொண்டு நாம் இனியும் திருப்தியோடு இருந்துவிட முடியாது. நீராவிக் கப்பல்கள், ரெயில்வேக்கள், மோட்டார்க் கார்கள், அச்சு யந்திரங்கள், ஜனநாயகம், அன்பு ஆகியவை பற்றிய கருத்துக்கள், உலக சகோதரத்துவம் ஆகியவற்றிலிருந்து நாம் தப்ப முடியாது. கீழை நாட்டில் ஜப்பான் இப்படிப்பட்ட ஒரு வலிமை கொண்ட நாடு ஆகும் என்று யாரும் நினைத்ததில்லை. நவீன உற்பத்தி முறைகளை அது கடைப்பிடிக்கத் தவறியிருந்தால், பிற நாடுகளின் தயவைக் கோரிக் கொண்டு இப்போது சீனா இருக்கும் இதே நிலையில்தான் அதுவும் இருந்திருக்கும். இந்தியா சரியான வகையில் வளர்ச்சி பெறும்படி செய்வதே நமது லட்சியமாக இருக்கவேண்டும். இதை ஜாலவித்தையினால் செய்து விட முடியாது. நமக்கு இன்னும் எவ்வளவோ அதிக வருமானம் கிடைக்க வேண்டும். தேசிய வருமானம் பரிதாபகரமான நிலையில் மிகவும் குறைவாக இருக்கிறது. ஆள் ஒன்றுக்கு 50 பவுனுக்குக் குறைந்த வருமானம் இருந்தால் கௌரவமான பண்பாடுள்ள வாழ்க்கை சாத்தியமில்லை என்று ஆங்கிலப் பொருளாதார நிபுணர்கள் சொல்லுகிறார்கள். அப்படியானால், இந்தியாவைப் பற்றிய விஷயம் என்ன? வெளிநாட்டுப் போட்டியை எதிர்த்து நிற்கக் கூடிய தொழில்களை நாம் ஆரம்பித்தாலொழிய தேசிய வருமானத்தைக் கூட்டுவது சாத்தியமா? இந்தியாவின் இறக்குமதியை விட ஏற்றுமதி அதிகமாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இந்திய விவசாயி சுகாதாரம், கல்வி, கௌரவம் முதலியவற்றைப் பற்றி நினைக்கும்படி செய்ய முடியும்......இந்தியா இன்னும் உயிரோடு இருக்கிறதென்றால், அதற்குக் காரணம், மாறிக் கொண்டிருக்கும்

நிலைமைகளுக்கேற்ப அது இதுவரையிலும் தன்னை மாற்றிக் கொண்டு வந்திருப்பதுதான். யந்திரங்களும், அதிக அளவில் உற்பத்தியும் இல்லாமல் இதைச் செய்து விட முடியாது.''

பழைய வாதமே இவ்விதம் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தியாவை இங்கிலாந்தைப் போலவும் அமெரிக்காவைப் போலவும் ஆக்குவது, சுரண்டுவதற்காக உலகத்தில் வேறு இனங்களையும், இடங்களையும் கண்டு பிடிக்கவேண்டிய காரியமாகும் என்பதை இக்கடிதத்தை எழுதியிருப்பவர் மறந்துவிடுகிறார். சுரண்டுவதற்காக, ஐரோப்பாவுக்கு வெளியில் இருப்பதாகத் தெரிய வந்த எல்லா இனங்களையும் இப்பொழுதே மேற்கத்திய நாடுகள் பங்கு போட்டுக் கொண்டிருக்கின்றன என்றும், மேற்கொண்டு கண்டு பிடிப்பதற்குப் புதிய உலகங்கள் இல்லை என்றும் தோன்றுகிறது. சுரண்டப்பட்ட நாடுகளில் மிகவும் அதிகத் தீமையடைந்திருப்பது இந்தியா. ஜப்பானும் கொள்ளையில் தன் பங்கை எடுத்துக் கொண்டு வருகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால், இந்தியாவும் சீனாவும் தம்மைச் சுரண்டுவதற்குச் சம்மதிக்காவிட்டால், சுரண்டுகிறவர்களின் கதி என்ன ஆகும்? இந்தியாவும் சீனாவும் தாம் சுரண்டப்படுவதற்குச் சம்மதிக்காத நிலை ஏற்படும்போது மேற்கத்திய நாடுகளும் ஜப்பானும் நாசமடையக் கூடும் என்றால், மேற்கத்திய நாடுகளைப் பார்த்து 'காப்பி'யடிக்க முயலும் இந்தியாவின் கதி என்னவாகும்? உண்மையில் மேற்கத்திய நாடுகள் அநேகமாகத் தொழில் மயமாகி, அமோகமாகச் சுரண்டி அஜீரணத்துக்குள்ளாகியிருக்கின்றன. நோயினால் கஷ்டப்படுகிறவர்கள் தீமைகளைச் சரிப்படுத்திக் கொள்ள ஒரு பரிகாரம் தேட முடியாமல் இருக்கும்போது, வெறும் கற்றுக்குட்டிகளான நாம் அவற்றை எப்படித் தவிர்த்து விட முடியும்? உண்மை என்னவென்றால், யந்திரத் தொழில்மய நாகரிகம் ஒரு நோய். ஏனென்றால், அது சர்வமும் தீமை மயமாக இருக்கிறது. சாதுரியமான வசனங்களாலும், சமத்காரப் பேச்சுக்களாலும் நாம் ஏமாறாமல் இருப்போமாக. நீராவிக் கப்பல்கள் விஷயத்திலோ, தந்திப் போக்குவரத்துக்கள் விஷயத்திலோ எனக்கு விரோதம் எதுவும் கிடையாது. யந்திரத் தொழில் மயமாக்குதல், அதன் சகல விளைவுகள் ஆகியவற்றை ஆதரவாகக் கொள்ளாமல், அவை நிலை பெற்றிருக்க முடியுமென்றால் இருக்கலாம். அவையே லட்சியமல்ல. நீராவிக் கப்பல்களுக்காகவும், தந்திப் போக்குவரத்துக்காகவும் நாம் சுரண்டலை அனுமதிக்கவே கூடாது. மனிதவர்க்கத்தின் நிரந்தர க்ஷேம நலனுக்கு அவை எந்த வகையிலும் இன்றியமையாதவை அல்ல. இப்போது நீராவியையும் மின்சாரத்தையும் உபயோகிப்பதை நாம் அறிந்திருக்கும் நிலையில், யந்திரத் தொழில் மயமாக்குவதைத் தவிர்ப்பதற்கு நாம் கற்றுக் கொண்ட பிறகு அவற்றைத் தக்க சந்தர்ப்பத்தில் நாம் உபயோகிக்கும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். ஆகவே, எந்த வழியிலாவது யந்திரத் தொழில் மயமாக்குவதை அழித்து விட வேண்டும் என்பதில்தான் நமக்கு அக்கறை.

அக்கடிதத்தை எழுதியிருப்பவர், பரிகாரம் கூறியிருக்கிருர். ஆனல், அதைப் பற்றி அவரே தெரிந்து கொள்ளவில்லை. ஏனென்ருல், மற்ற நாடுகள் அழிந்து போயிருக்கும்போது இந்தியா இதுவரையிலும் உயிரோடு இருந்திருக்கிறது என்றும், அதற்குக் காரணம், 'மாறிக் கொண்டு வரும் நிலைமைகளுக்கு ஏற்பத் தான் மாறி வந்திருப்பதுதான்' என்றும் அவரே ஒப்புக் கொள்ளுகிருர். நிலைமைக்கு ஏற்றவாறு தான் மாறிக் கொள்ளு வது, இன்னெருவரைப் பார்த்து 'காப்பி'யடிப்பது ஆகாது. எதிர்த்து நிற்கவும், தன்னேடு ஐக்கியமாக்கிக் கொள்ளவும் கூடிய சக்தி இருக்கிறது என்பதுதான் அதன் பொருள். மற்ற நாகரிகங் களின் தாக்குதல்களை இந்தியா எதிர்த்து நின்றிருக்கிறது. அதற்குக் காரணம், அது தன் ஸ்தானத்தில் உறுதியோடு நின்றதேயாகும். அதற்காக, இந்தியா மாறுதல்களே செய்து கொள்ளவில்லை என்று அர்த்தமல்ல. ஆனல், அது செய்துள்ள மாறுதல்கள், அதன் வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்திருக்கின்றன. யந்திரத்தொழில் மயமாவதற்கு மாறுவது, நாசத்தை வருவித்துக் கொள்ளும் செயலாகும். இன்றுள்ள துன்பம் தாங்க முடியாத தாகும் என்பதில் சந்தேகமே இல்லை. பரம தரித்திரம் ஒழியவே வேண்டும். ஆனல், யந்திரத் தொழில் மயமாவது அதற்குப் பரிகாரமாகாது. தீமை, மாட்டு வண்டிகளை உபயோகிப்பதில் இல்லை. அது, நமது சுயநலத்திலும், நம் அண்டை அயலாரைப் பற்றிய சிரத்தையில்லாதிருப்பதிலுமே இருக்கிறது. நம் அண்டை அயலாரிடம் நமக்கு அன்பில்லை என்ருல், எந்த மாறுதலும், அது எவ்வளவு புரட்சிகரமானதாக இருப்பினும், நமக்கு எவ்வித நன்மையையும் செய்துவிட முடியாது. நம் அண்டை அயலாரிடம்-இந்தியாவின் பரம ஏழைகளிடம்—அவர்கள் நன்மையின் பொருட்டு அன்பு செலுத்தினல், அவர்கள் நமக்காகச் செய்து தரும் பொருள்களை நாம் உபயோகிப்போம். அவர்கள் நன்மை யின் பொருட்டு நாம்—இதைத் தெரிந்து கொள்ளவேண்டும்—வெளிநாட்டு அழகுப் பொருள்களை வாங்கி அவற்றைக் கிராமங் களுக்குக் கொண்டு செல்லுவதன் மூலம், மேற்கத்திய நாடு களுடன் அதர்மமான வர்த்தகத்தில் ஈடுபடமாட்டோம்.

நாம் ஆழ்ந்த சிரத்தையோடும், தொடர்ந்து உறுதி பிறழாம லும் சிந்தித்தோமானல், நாம் வேறு எந்த மாறுதல்களையும் செய்வதற்கு முன் செய்ய வேண்டிய ஒரு பெரிய மாறுதல் அந்நி யத் துணியைத் தூர எறிந்து விட்டு, கையால் நூற்கும் புராதன மான குடிசைத் தொழிலை மீண்டும் நிலைநிறுத்துவதுதான் என் பதைக் கண்டுகொள்ளுவோம். யந்திரத் தொழில் மயமாக்கு வதை எதிர்த்து நிற்போமானல், நமது புராதனமானதும், ஆரோக்கியம் நல்குவதுமான தொழிலுக்கு மேற்கூறியவாறு புது வாழ்வு அளிக்க வேண்டியது அவசியம்.

மூலதனத்தை எதிர்த்துப் போரிடுவதற்கு நான் கூறவில்லை. முதலாளித்துவத்தை எதிர்த்து நான் போராடுகிறேன். மூல

தனம் ஓரிடத்தில் குவிவதைத் தவிர்க்க வேண்டுமென்றும், இன்னும் பயங்கரமான உருவில் மற்றோர் இனப்போர் ஒன்று நடைபெறுவதைத் தவிர்க்க வேண்டுமென்றும் மேற்கத்திய நாடுகள் கற்பிக்கின்றன. மூலதனமும் உழைப்பும் பரஸ்பரம் ஒன்றுக்கு ஒன்று விரோதமாக இருக்க வேண்டிய அவசியமில்லை. எந்த மனிதனும் மற்றொரு மனிதனைவிடப் பணக்காரனாக இராத ஒரு காலத்தை எனக்கு நானே கற்பனை செய்து பார்த்துக்கொள்ள இயலாது. ஆனால், பணக்காரர்கள், ஏழைகளுக்குப் பாதகம் செய்வதன் மூலம் தங்கள் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள மறுக்கக் கூடியதும், ஏழைகள் பணக்காரர்களைப் பார்த்துப் பொறாமைப்படுவதை நிறுத்தக் கூடியதுமான ஒரு காலத்தை எனக்கு நானே கற்பனை செய்து பார்க்கிறேன். மிக மிகப் பூரணத்துவம் எய்திய ஓர் உலகிலும் கூட, ஏற்றத் தாழ்வுகளைத் தவிர்ப்பதில் நாம் தோற்றுவிடுவோம். ஆனால், சண்டையையும், மனக்கசப்பையும் நாம் தவிர்க்க முடியும்; அவசியம் தவிர்க்க வேண்டும். பணக்காரர்களும் ஏழைகளும் பூரண நட்புடன் வாழ்ந்து வருவதற்கு எத்தனையோ உதாரணங்கள் இருக்கின்றன. இப்படிப்பட்ட உதாரணங்களை நாம் பெருக்கத்தான் வேண்டும்.

மேலை நாடுகளின் ரத்தம் படிந்த பாதையில் சென்று இந்தியா தன் லட்சியத்தை அடைய முடியாது. அந்தப் பாதையினிடம் மேல் நாடுகளுக்கு அலுப்புத் தட்டிவிட்டது என்பதற்கு அறிகுறிகள் தென்படுகின்றன. எளிய, தெய்வீக வாழ்க்கையினின்றும் வருவதும், ரத்தம் சிந்தாததுமான சமாதானப் பாதையில்தான் இந்தியாவின் லட்சியம் இருக்கிறது. இந்தியா தனது ஆன்மாவை இழக்கும் அபாயத்தில் இருக்கிறது. அதை இழந்து இந்தியா வாழ முடியாது. அதனால் சோம்பேறித்தனமாகவும், அனாதரவான நிலையிலும், "மேல் நாடுகளிலிருந்து பாயும் வெள்ளத்திலிருந்து என்னால் தப்ப முடியாது" என்று இந்தியா சொல்லவே கூடாது. தன் நலனைக் கருதியும், உலக நலனைக் கருதியும் அதை எதிர்த்து நிற்பதற்கு இந்தியா போதிய பலம் பெற்றிருக்க வேண்டியது அவசியம்.

—'எங் இந்தியா' - 7—10—1926

["அதே பழைய வாதம்" என்ற தலைப்பின் கீழ் முதலில் வெளியான கட்டுரை.]

## 8

# யந்திரங்களையும் மில்களையும் நாசம் செய்வது என் நோக்கமல்ல

ரயில்வேக்களும் ஆஸ்பத்திரிகளும் இயல்பாக அழிவதை நான் நிச்சயம் வரவேற்பேன் என்றாலும், அவற்றை நாசம் செய்ய வேண்டும் என்பது என் நோக்கமல்ல. உயர்ந்த பரிசுத்தமான

ஒரு நாகரிகத்துக்கு ரயில்வேக்களோ, ஆஸ்பத்திரிகளோ சான்ருகாது. அவை அத்தியாவசியமான ஒரு தீமையாக இருக்கின்றன என்பதுதான் அவை பற்றிக் கூறக்கூடிய சிறப்புரையாகும். அந்த இரண்டில் எதுவும் ஒரு நாட்டின் தார்மிக உயர்வை ஓர் அங்குலம்கூட அதிகப்படுத்தவில்லை. சட்ட மன்றங்கள் நிரந்தரமாக அழிவதை 'பெரிதும் விரும்பத் தக்க ஒரு பூரண நிலை'யாக நான் கருதினாலும் அவற்றை நிரந்தரமாக அழிப்பது என் நோக்கமல்ல. எல்லா யந்திரங்களையும் மில்களையும் அழிக்க வேண்டுமென்றும் நான் முயலவில்லை. அதற்கு, மக்கள் இன்று கைக்கொள்ளத் தயாராக இருப்பதைவிட உயர்ந்த எளிமையும் துறவும் தேவை.

—'எங் இந்தியா' – 26—1—1921

['ஒரு விளக்கம்' என்ற தலைப்பின் கீழ் முதலில் வெளியான கட்டுரை.]

[இது, 'ஹிந்த் ஸ்வராஜ்' புத்தகத்தின் 1938-ஆம் பதிப்பிலும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.]

# 9

# நடைமுறை சாத்தியமானது; வரையறைக்குட்பட்டது

[கவிஞர் ரவீந்திரநாத டாகுரின் மாணக்கர் ஒருவர், "கொள்கையளவில் எல்லா யந்திரங்களையும் நீங்கள் எதிர்க்கிறீர்களா?" என்று கேட்டதற்குக் காந்திஜி கீழ்க்கண்டவாறு பதில் அளித்தார்.]

அது எப்படி சாத்தியமாகும்? என்னுடைய உடம்பே அசாதாரணமான நுட்பத்துடன் அமைக்கப்பட்ட ஓர் யந்திரத்தைத் தவிர வேறில்லை என்பதை நான் அறிவேன். ராட்டினமும் ஒரு யந்திரந்தான்; ஒவ்வொரு பல் குத்தும் குச்சியும்கூட அதே போலத்தான். இப்படிப்பட்ட யந்திரங்களை எதிர்த்து நான் போராடவில்லை. ஆனால், யந்திரங்கள் உழைப்பை மிச்சப்படுத்துகின்றன என்று நினைக்கும் பைத்தியக்காரத்தனத்தை எதிர்த்தே போரிடுகிறேன். ஆயிரக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் போய், பட்டினியால் தெருக்களில் சாகும்வரையில் மனிதர்கள் 'உழைப்பை மிச்சப்படுத்துகிருர்கள்.' மனித வர்க்கத்தின் ஒரு பகுதிக்கு மட்டுமல்ல, எல்லோருக்குமே வேலையும், ஜீவனோபாயமும் கிடைக்கும்படி செய்யவே நான் விரும்புகிறேன். சமூகத்துக்கு நஷ்டம் விளைவிப்பதன் மூலம் ஒரு சிலர் பணம் சேர்த்துக் கொண்டிருப்பதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். தற்போது, ஒரு சிறு மைனரிடி பொது மக்களைச் சுரண்டி வாழ்வ

தற்கு யந்திரம் உதவி செய்துகொண்டிருக்கிறது. இந்த மைனாரிடியின் மூல நோக்கம் மனிதாபிமானமல்ல; தங்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள் மீது உண்டான அன்பல்ல; பேராசை ஒன்றேதான் இந்த மாதிரியான நிலையை நான் என் முழுப் பலத்தோடு தாக்கிக் கொண்டிருக்கிறேன்.

[வின்ஸெண்ட் ஷீன் எழுதிய 'ஒளியே, கருணையோடு வழிகாட்டு' என்ற புத்தகத்தின் 4 ஆம் அத்தியாயத்திலிருந்து எடுத்தது.]

# 10

# யந்திரங்களின் துஷ்பிரயோகத்தை எதிர்த்து

போன மாதம் இரண்டு ஜப்பானிய நண்பர்கள் என்னிடம் வந்தார்கள்; இனிய முறையில் என்னோடு சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். கீழ்க்காணும் சாஸனத்தை என்னிடம் விட்டுச் சென்றார்கள் :

"ஒரு காலத்தில் இந்தியாவின் மகாத்மாக்கள் சீனா வழியாக ஜப்பானுக்கு வந்தார்கள்.

"ஜப்பானியர்களின் ஆன்மாக்கள் முழுவதிலும் அவர்கள் மாபெரும் மாறுதல்களைச் செய்தார்கள். ஜப்பானியர்களாகிய எங்களிடம் இன்னும் அந்த மாறுதல்கள் நின்று நிலவுகின்றன; என்றும் நின்று நிலவும். ஆகையால், ஜப்பானியர்கள் இந்தியாவுக்கு மிகுந்த விசேஷ மரியாதை செலுத்துகிறார்கள்.

" இப்போது நான் இந்தியாவில் – எங்கள் மக்களால் மிகவும் மதிக்கப் பெறும் நாட்டில் – இருக்கிறேன். அதனால் பெரிதும் ஆனந்தம் அடைகிறேன்.

" இந்தக் காலத்தில்கூட – நமது சகாப்தத்தில் – சர்வ பரித்தியாகம் செய்து, நீதிக்கும் சத்தியத்துக்கும் முழுக்க முழுக்க உண்மையாக நடந்து கொள்ளும் ஒரு மாபெரும் மனிதர் தோன்றியிருக்கிறார்.

" அவர் முன்னிலையில் நிற்கவும், நேரடியாக அவரிடமிருந்து சில உபதேசங்களைப் பெறவும் என்னை அனுமதித்தால், எனக்கு அது பேரின்பமாக இருக்கும்.

"அவரைப் புத்தகங்கள் மூலமும், செய்திப் பத்திரிகைகள் மூலமுமே நாங்கள் அறிவோம். அவரைப் பற்றி அறிந்துகொள்ளுவதால் எங்கள்மீது சில தப்பபிப்பிராயங்களும் ஏற்பட்டிருக்கக்கூடும்.

"எங்கள் சிந்தனைகளைப் பற்றிய அவருடைய அபிப்பிராயங்கள் சிலவற்றைப் பெறும் கௌரவம் எனக்குக் கிட்டுமாக.

"மனிதர்கள் நிர்வாணமாகப் பிறக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு இரண்டு கைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

"மனிதர்களுக்குக் கடவுள் சுவர்க்கத்தைக் கொடுத்திருப்பதாக நாங்கள் நினைக்கிறோம். ஆனால், அவர் அதை நேரடியாக மனிதர்களுக்குக் கொடுக்கவில்லை. இன்றைய உலகில் சுவர்க்கத்தையே உண்டாக்குவதற்கு இரண்டு கைகளை—எதையும் எல்லாவற்றையும் படைக்கும் சக்தியைக்—கொடுப்பதன் மூலம் அவர் மறைமுகமாக மனிதர்களுக்குச் சுவர்க்கத்தைக் கொடுத்திருக்கிறார். அதனால், தங்கள் கைகளை முடிந்தமட்டும் உபயோகிக்க வேண்டியது மனிதர்களின் கடமை என்று நான் கருதுகிறேன். உதாரணமாக, பல்வேறு சீதோஷ்ண நிலைகளுக்கும், வெவ்வேறு சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தக்கூடியவாறு பல ரகங்களில் அழகான துணிகளை உற்பத்தி செய்ய வேண்டும். சில சமயங்களில் அவர்கள் காட்டு மிருகங்களையும் பறவைகளையும்விட அழகாகவும், புலிகள் அல்லது மயில்களின் தோலைவிட அழகாகவும் உடையணியவேண்டும். ஏனென்றால், சுவர்க்கத்தில், நல்லவர்களாகவும் உண்மையைக் கடைப்பிடிப்பவர்களாகவும் இருப்பதோடு அழகாக இருப்பதும் அதிமுக்கியமான விஷயமாகும்.

"ரெயில் தண்டவாளங்கள் போடுவதும், நீராவிக் கப்பல்கள் கட்டுவதும், வெவ்வேறு யந்திரங்கள் பலவற்றைச் செய்வதும் நமது கடமை. அவற்றை நாம் மிக உயர்ந்த திறமையோடு பயன்படுத்த வேண்டும். ஆகவே, நூற்பு முறை—இவ்வாறு சொல்வதற்காக மன்னிக்க வேண்டும்—நாம் சாதிக்க வேண்டிய காரியங்களின் இறுதி முடிவல்ல என்றும், மக்கள் சிக்கனமாகவும் செட்டாகவும், நல்ல உள்ளம் உடையவர்களாகவும் இருப்பதற்கும், அவ்வழியில் அவர்களிடம் பல நல்ல மாறுதல்களை உண்டுபண்ணுவதற்கும், அநேகர் வேலையின்றி விடப்பட்டிருக்கும் கிராமிய வாழ்க்கையில் உள்ள ஏராளமான நேரத்தைப் பயன்படுத்துவதற்குமான மார்க்கங்களில் ஒன்று என்றே நான் கருதுகிறேன்."

இதில் வேண்டுமென்றே நான் எவ்விதத் திருத்தங்களும் செய்யாமல் விட்டிருக்கிறேன். அவ்விதம் செய்தால் அதன் விசித்திரமான இயல்பு போய்விடும். இந்த நண்பர்களைப் பார்ப்பதற்கு முன் இந்தக் கடிதத்தை நான் வாசித்திருக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டது. அவ்வாறு வாசித்திருந்தால், கடவுள் நமக்கு இரண்டு கைகளைக் கொடுத்திருக்கிறார் என்ற உண்மையை நான் உணர்ந்ததால்தான், இந்நாட்டில் வாழும் கோடிக்கணக்கான மக்கள் ஒரு நிமிஷம்கூடக் கைகளைச் சோம்பியிருக்கவிடாமல், ஓய்வு நேரங்களில் அவற்றை உபயோகிப்பதால் இந்தியா முழுவதற்கும் ஆடையளிக்கக் கூடியவாறு முடிந்தமட்டும் சிறந்த முறையில் உபயோகிக்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டுமென்று எனக்குத் தோன்றியது என்பதை அவர்களுக்குச் சொல்லியிருப்பேன். அத்துடன், தன்னுடைய துணியை எங்களிடம் திணிக்காமல் எங்களுடன் பரஸ்பரம் நன்மையையே உண்டுபண்ணத்தக்க வர்த்தகத்தில் மாத்திரமே ஈடுபடும்படி ஜப்பானைத் தூண்டுவதன் மூலம் எங்கள் லட்சியத்தை நாங்கள் அடைவதற்கு உதவி புரிய வேண்டும் என்றும் என் நண்பர்களை நான் கேட்டிருப்பேன். கடைசியாக, எனக்கு ரெயில் பாதைகள், நீராவிக் கப்பல்கள், மற்றும் பலவிதமான யந்திரங்கள் ஆகியவை மீது விரோதம் கிடையாது என்றும், ஆனால், உலகின் பல நாடு

களைச் சுரண்டுவதற்கோ, அவற்றை அழிப்பதற்காகவோ தற்போது அவற்றைத் துஷ்பிரயோகம் செய்வதைத்தான் நான் ஆட்சேபிக்கிறேன் என்றும் அவர்களிடம் கூறியிருப்பேன்.

'எங் இந்தியா' – 13—9—1925

['ஜப்பானிலிருந்து ஆலோசனை' என்ற தலைப்பில், 'குறிப்புகள்' என்னும் பத்தியில் முதலில் வெளியான கட்டுரை.]

## 11

# யந்திரங்களை நல்ல வழியில் உபயோகித்தல்

"யந்திரங்களின் தருமம்" பற்றி ஸ்ரீ ரிச்சர்டு பி. கிரெக் ஒரு நண்பருக்கு எழுதிய கடிதத்தை பிப்ரவரி மாதம் 'கரண்ட் தாட்' பத்திரிகை வெளியிட்டிருக்கிறது. ஸ்ரீ கிரெக் முன்னாள் அமெரிக்க வழக்கறிஞர்; தம் சொந்த நாட்டைப் பற்றிப் பரந்த அனுபவம் உடையவர். அவர் தமது கடிதத்தில் வருணித்திருக்கும் விஷயங் களின் மத்தியிலேயே வாழ்ந்திருக்கிறார்; தம் வாழ்நாளில் ஒரு சமயத்தில் அவற்றின் வளர்ச்சிக்கும் உதவியிருக்கிறார். அதனால் அவர் ஆதாரபூர்வமாக எழுதுகிறார்.

அவர் கூறுவதாவது: "யந்திரங்களை, அவற்றால் அடையும் உடனடியான பலன்களுக்காகப் பெரும்பாலான மக்கள் ஏற்றுக் கொள்ளுகிறார்கள். அவை மெதுவாக வளர்ந்து வருவதனால் ஏற்படும் இரண்டாவது பலன்களை அறவே பார்க்காதவர்களாக இருக்கிறார்கள். ஆனால், இரண்டாவதாகச் சொன்ன பலன்களே மிகவும் முக்கியமானவை." அப்புறம் யந்திரங்கள் பெருகுவதனால் ஏற்படும் தீமைகளை அவர் விவரிக்கிறார். தீமைகளின் ஜாபிதாவில், ஏராளமான பொருள் பலமும், செல்வமும் முதன்மையிலிருக்கும் ஒரு சிலரிடம் குவிந்து கிடப்பதையே முதலாவதாக அவர் குறிப் பிடுகிறார். ஸ்ரீ கிரெக் பின்வருவாறு கூறுவது உண்மையான விஷயம்: "யந்திரங்களும், நவீனத் தொழிலும் கோடிக்கணக் கான மக்களின் பணத்தைப் பறித்துக்கொண்டு, அதன் நிர்வா கத்தையும், கட்டுப்பாட்டையும் ஒரு சிலருடைய கைகளில் கொண்டுபோய்க் குவித்துவிட்டது. பாங்கி முறையிலும், கடன் முறையிலும் ஏற்பட்டுள்ள நவீன அபிவிருத்திகள், எல்லாப் பொருள்களையும், தொழிற்சாலைகளையும், மில்களையும், கட்டுப் படுத்தும் அதிகாரத்தை இன்னும் சுருக்கமான ஆட்களிடம் கொண்டுபோய்க் குவித்துவிடுகின்றன." தங்கள் குடிசைகளுக்கு ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கும் பெருந் தொழில்களைத் தாங்கி நிற்பதற்காகக் கோடிக்கணக்கானவர் களின் ரத்தத்தை அறவே உறிஞ்சும் மேற்சொன்ன செயல்

முறையே நம் நாட்டிலும்கூட அமுலில் இருந்து வருவதை நாம் பார்க்கவில்லையா? ஸ்ரீ கிரெக் சொல்லுகிறார்: "ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், ஆசியா, ஆப்பிரிக்கா ஆகியவற்றில் பெரும் பகுதியிலும் உள்ள தொழிலின் உண்மையான முடிவாக நிர்வாகம் 1500-க்கு மேற்படாதவர்களின் கைகளிலேயே, ஒரு வேளை இன்னும் சுருக்கமான ஆட்களின் கையிலேயே குவிந்திருக்கிறது."

"இப்படிப்பட்ட பிரம்மாண்டமான சக்தி, மனித இயற்கையால் எதிர்த்து நிற்க முடியாத ஒரு வசியமாகும். அதில் ஒருபுறம் கொடுமை, டம்பம், கர்வம், பேராசை, சுயநலம், ஈவிரக்கமற்ற போட்டி ஆகியவையும், மறுபுறம் சுதந்திரத்தை இழத்தல், பத்திரமின்மை, பயங்கள், சுயநலத்தை நம்புவதும் சுயேச்சையும் இல்லாமல் போதல், இழிவு, வறுமை, கௌரவமும் சுயமரியாதை முதலியனவும், கெடுதல் ஆகியவையும் அடங்கியுள்ளன."

"யுத்தத்தினால் ஏற்படும் உடற் சேதங்களைவிட எவ்வளவோ அதிகமாகத் தொழிற்சாலைகளில் மரணங்களும், அங்கவீனங்களும் ஏற்படுகின்றன. இக்கால தொழிலால் நேரடியாகவும், மறைமுகமாகவும் ஏற்படும் நோய்களும், உடல் க்ஷீணமும் பயங்கரமாக இருக்கின்றன. ஏனென்றால், புகை, அழுக்கு, இரைச்சல், கெட்ட காற்று, சூரிய வெளிச்சக் குறைவு, வீட்டுக்கு வெளியே நடத்தும் வாழ்க்கை, சேரிகள், நோய், விபசாரம், இயற்கைக்கு மாறான வாழ்க்கை ஆகியவற்றுடன் கூடிய பெரிய நகரங்கள் வளர்வதற்கு யந்திரத் தொழிலே காரணமாக இருக்கிறது."

விளம்பரங்களில் பணம் பாழாவது உண்மையிலேயே 'பயங்கரமாக' இருக்கிறது. "பிரிட்டிஷ் தீவுகளுக்கு மட்டும் வருடம் ஒன்றுக்கு விளம்பரங்களுக்காக 17,50,00,000 பவுன் செலவாகிறது என்று பிரிட்டிஷ் விளம்பர ஆலோசகர்கள் சங்கத்தின் தலைவர் சமீபத்தில் மதிப்பிட்டிருக்கிறார்"!!!

மற்றொரு முக்கியமான அம்சம் "புல்லுருவித்தனம்." "மனிதன் யந்திரத்துக்குக் கீழ்ப்படியும்படி செய்யப்படுகிறான். பணக்கார வர்க்கமும் மத்தியதர வர்க்கமும் சக்தியற்றுப் போய்த் தொழிலாளி வர்க்கத்தின் உழைப்பில் வாழத் தொடங்குகின்றன. தொழிலாளி வர்க்கமும் அதேபோல பிறரைக்கொண்டு வாழ்வதில் தனி இயல்பைப் பெற்றுவிடுகிறது சாதாரணமாக நகரத்தில்வசிக்கும் ஒருவன், தன்னுடைய ஆடைகளை நெய்துகொள்ள முடியாது; தன் உணவை உற்பத்தி செய்யவோ, தயாரிக்கவோ முடியாது. நகரங்கள், கிராமங்களின் ரத்தத்தை உறிஞ்சுகின்றன. தொழில் வளர்ச்சி அடைந்த நாடுகள் விவசாய நாடுகளை உறிஞ்சுகின்றன. மித சீதோஷ்ண நாடுகளில் வாழ்பவர்கள், உஷ்ண நாடுகளில் வாழும் மக்களை நாளுக்குநாள் அதிகமாக உறிஞ்சிக்கொண்டிருக்கிறார்கள். அரசாங்கங்கள், மக்களின் உழைப்பில் வாழ்கின்றன. ராணுவம் பொதுமக்களின் உழைப்பில் வாழ்கிறது. இவ்விதமே

மக்களும்கூட புல்லுருவிகளாகி, உற்சாகம் பெறவும், உல்லாசமாகப் பொழுதுபோக்கவும் மற்றவர்களின் உதவியை எதிர்பார்க்கிறார்கள். தாங்களே தங்களுக்கு உற்சாகமூட்டிக்கொள்ளுவதற்குப் பதிலாக, மற்றவர்கள் தங்களை உற்சாகமூட்ட வேண்டுமென்று விரும்புகிறார்கள். சினிமா, நாடகக் கொட்டகைகளிலும், சங்கீத மண்டபங்களிலும் போய்க் கூடுகிறார்கள். மற்றவர்கள் கிரிக்கெட் முதலியன விளையாடுவதைப் பார்க்கிறார்கள்.''

''இந்தப் புல்லுருவித்தனத்துடன்கூடவே, பொறுப்பின்மையும் வந்து பரவியிருக்கிறது. தொழில் முதலாளி, அல்லது பாங்கியின் உரிமையாளர், ஐரோப்பாவிலிருந்துகொண்டு ஓர் உத்தரவைப் பிறப்பிக்கிறார்; அது மத்திய ஆப்பிரிக்காவிலுள்ள நீக்கிரோக்களின் வாழ்க்கையை ஜீவாதாரமாகப் பாதிக்கிறது.''

உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களைவிட உபயோகிப்பவர்களின் நிலையும் நன்றாக இல்லை. அவர்களும்கூட பொறுப்புணர்ச்சியைக் கைவிட்டுவிடுகிறார்கள். ஸ்ரீ கிரெக் பின்வருமாறு கூறுகிறார்: ''நான் பிரான்ஸிலுள்ள ஒரு சிற்றுண்டிச் சாலையில் உட்கார்ந்து, என்னுடைய சூப்பில் சிறிது மிளகுத் தூளைத் தூவிக்கொள்ளும்போது, ஜாவாவில் எந்தக் கூலிக்காரன் ஜுரத்துக்கும் ஒரு வேளை கடுமையான தோட்ட நிர்வாகத்தின் அவமரியாதைகளுக்கும், மிருகத்தனத்துக்கும் உள்ளாகி அந்த மிளகைச் சேகரிப்பதற்குச் சந்தர்ப்பவசமாகக் கஷ்டத்தை அனுபவித்தானோ என்று நான் கொஞ்சமாவது யோசிக்கிறேனா?''

விஷய ஞானம் ஊட்டும் இந்தக் கடிதத்திலிருந்து இன்னும் அதிகமாக மேற்கோள்களைக் காட்ட வேண்டுமென்று எனக்கு ஆசை இருந்தாலும் அவ்வாறு செய்யக்கூடாது. மாதிரிக்காக நான் எடுத்துக்கொடுத்துள்ள பகுதிகள், இன்னும் அதிகமாகப் பகுதிகளைப் படிக்கவேண்டுமென்ற தாகத்தை வாசகருக்குஉண்டு பண்ணியிருந்தால், மூலக் கடிதத்தையே படிக்கும்படி அவரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீ கிரெக் எல்லா யந்திரங்களுக்கும் விரோதமாக இருக்கிறார் என்று வாசகர் நினைக்கவே கூடாது. கட்டுப்பாடற்ற முறையில் அவை பெருகுவதைத்தான் அவர் எதிர்க்கிறார். நம்முடைய புலன்களை நாம் சரியான வழியில் திருப்புவதை அல்லது திருப்ப வேண்டியதைப் போல், யந்திரங்களின் உபயோகத்தையும் சரியான வழியில் திருப்ப வேண்டும் என்பது அவர் கருத்து. எல்லோருடைய நலன்களுக்கும் உதவக்கூடியவாறு யந்திரங்கள் பயன்படுவது நியாயமானதாகும்.

**—'எங் இந்தியா' - 15—4—1926**

['குறிப்புகள்' என்ற பத்தியில், 'யந்திரங்களின் தருமம்' என்ற தலைப்பின் கீழ் முதலில் வெளியான கட்டுரை.]

# 12

# மனிதனுக்கு எஜமானன் ஆகக் கூடாது

யந்திர யுகத்துக்குக் காந்திஜி விரோதியாக இருக்கிறார் என்று ஜப்பானிலிருந்து வந்த ஒருவர் குறிப்பிட்டதற்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார் :

"அப்படிக் கூறுவது என் கருத்துக்களைக் கோணலாகச் சித்தரிப்பதாகும். யந்திரங்கள் என்பதனாலேயே நான் அவற்றை எதிர்க்கவில்லை; அவை நமக்கு எஜமானன் ஆகும்போதுதான், நான் அவற்றைப் பூரணமாக எதிர்க்கிறேன். ஜப்பானும் அமெரிக்காவும், இங்கிலாந்தும் இன்று அதைச் செய்துகொண்டிருக்கின்றன. இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமிடையில் ஒப்பந்தம் என்பது பொருந்தாத வார்த்தையாகும். அது இங்கிலாந்தும் ஜப்பானும் செய்துகொண்ட ஒப்பந்தமே. இந்தப் போட்டியிலிருந்து ஜப்பான் விலகிவிட வேண்டும். அது எங்களுக்கும் தீங்கு பயக்கக்கூடியது; உங்களுக்கும் தீங்கு பயக்கக்கூடியது. தன்னைத்தானே தாழ்த்திக்கொள்ளாமல் யாரும் மற்றவர்களை ஒப்பந்தப்படி அடிமைகளாக்க முடியாது. ஒரு சில வருடங்களுக்கு முன்புதான் நாம் நமக்கு வேண்டிய துணியை உற்பத்தி செய்துகொண்டிருந்தோம். இப்போது அது ஜப்பானிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் நமக்குக் கிடைக்கிறது. அது இயற்கைக்கு மாறான ஒரு நிலை. நமக்கும், உலகம் முழுவதற்கும் நாம் போதிய துணியை உற்பத்தி செய்ய முடியும். நம்முடைய நாட்டில் இயற்கை வளங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஒருவர் தனக்குச் சொந்தமான பருத்தியை அனுப்பி, தயாரிக்கப்பட்ட சாமான்களை வாங்கிக்கொள்ளுவதில் மகாவிகாரமான தவறு ஏதோ இருக்கிறது. தயாரிக்கப்பட்ட சாமான்களாக நமக்குத் திரும்பக் கிடைப்பதற்காகவே ஒன்பது கோடி ரூபாய் மதிப்புள்ள ஆடு மாடுகளின் தோல்களை இங்கிருந்து ஏற்றுமதி செய்கிறோம். இவ்வாறு ஏன் நடக்க வேண்டும் என்பதற்கு யாதொரு காரணமும் இல்லை."

"நீங்கள் இந்தியாவை யந்திரத்தொழில் மயமாக்க மாட்டீர்கள்?"

"என்னுடைய கருத்துப்படி நான் உண்மையில் இந்தியாவைத் தொழில் மயமாக்குவேன். கிராம சமுதாயங்கள் புனருத்தாரணம் செய்யப்பட வேண்டும். இந்திய கிராமங்கள், இந்தியாவின் சிறு நகரங்களுக்கும், பெரு நகரங்களுக்கும் தேவைப்படும் அனைத்தையும் உற்பத்தி செய்து கொடுத்தன. எங்கள் நகரங்கள் வெளிநாடுகளுக்கு மார்க்கெட்டுகளாகி, வெளிநாடுகளிலிருந்து வந்து மலிவான போலிச் சாமான்களைக்கொண்டு போய்க் குவிப்பதன் மூலம் கிராமங்களை உறிஞ்சத் தொடங்கிய போது இந்தியா வறுமைக்குள்ளாகிவிட்டது."

"அப்படியானல் நீங்கள் மீண்டும் இயற்கைப் பொருளா தாரத்துக்குப் போகிறீர்கள்."

"ஆம். இல்லையென்றால், நான் திரும்பவும் நகரத்துக்குச் செல்ல வேண்டும். பெரிய தொழிலை நடத்தி வரக்கூடிய சக்தி எனக்கு உண்டு. ஆனால், நான் அந்த ஆசையை வேண்டுமென்றே தியாகம் செய்துவிட்டேன். அதை ஒரு தியாகமாகச் செய்யவில்லை. என் உள்ளம் அதை எதிர்த்ததனாலேயே நான் அவ்வாறு செய்தேன். ஏனென்றால், நாட்டைக் கொள்ளையடித்த பொருளில் நான் பங்கு பெற விரும்பவில்லை. கொள்ளை அனவரதமும் நடைபெற்ற வண்ணமாக இருக்கிறது. ஆனால், வேறு வழியில் நான் கிராமங்களைத் தொழில் மயமாக்கிக்கொண்டிருக்கிறேன். கிராமத்தில் உற்பத்தி செய்யப்பட்ட ஒரு பண்டத்தை உங்களுக்குக் காட்டுகிறேன். அது அமெரிக்க மிட்டாய்க்கு இணையானதாக இருப்பதாக நான் நிச்சயமாகக் கருதுகிறேன். அமெரிக்க மிட்டாயைவிட இந்த வெல்லத்தை(பனைவெல்லத்தை) நீங்கள் அதிகமாக விரும்பவில்லையா என்பதை எனக்குச் சொல்லுங்கள்."

இப்போது சிறிது பனை வெல்லம் விருந்தினர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. அவர்கள் அதை ருசித்துத் தின்கிறார்கள். அமெரிக்கப் பெண்மணி அதை மிகவும் ருசித்து, ஒரு பெரிய துண்டு வேண்டுமென்று கேட்கிறார். அதே சமயத்தில், அவருடைய கலைத்திறன் கொண்ட கண்கள், அவருக்கு எதிரே உள்ள சுவரில் மாடக் குழிக்கு மேலே வரையப்பட்டிருந்த பனை மரச் சித்திரங்களைப் பார்க்கின்றன. வெல்லத்தை அப்பெண்மணி வெகுவாகப் புகழ்கிறார். காந்திஜி சொன்னார்: "ஆனால், அங்கே ஜப்பானிடம் எங்களுக்குக் கொடுப்பதற்கு ஏராளமானவை இருக்கின்றன. உங்கள் கலைகளிலும், கைத்தொழில்களிலும் நீங்கள் நிகரற்றவர்களாக இருக்கிறீர்கள்."

"ஆனால், இங்கேயுள்ள மண் தரையையும், மண் சுவர்களையும் நான் விரும்புகிறேன்" என்று பெண்மணி கூறினார்.

காந்திஜி களிப்போடு சொன்னார்: "ஆம். அது எங்களுக்குக் குளிர்காலத்தில் வெதுவெதுப்பாகவும், கோடையில் குளிர்ச்சியாகவும் இருக்கிறது."

"அப்படித்தான் ஜெர்மானியர் தங்கள் பீரைப் பற்றியும் சொல்கிறார்கள்" என்றார், ஜப்பானிய நண்பர்.

காந்திஜி ஹாஸ்யத்தை ரசித்துக்கொண்டு, "ஆகவே, பூமாதேவிதான் எங்கள் பீர். அது பிரமாதமாக இல்லையா?" என்றார்.

—'எங் இந்தியா' – 27—2—1937

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் முதலில் வெளியான கட்டுரை.]

## 13

# யந்திரங்களுக்குரிய சரியான ஸ்தானம்

**கேள்வி :** *ரெயில் பாதைகளையும், டாக்டர்களையும், ஆஸ்பத்திரிகளையும், நவநாகரிகத்தின் பிற அம்சங்களையும் நீங்கள் கண்டனம் செய்வது அத்தியாவசியமானதா? மாற்ற முடியாததா? முதலில் நாம் யந்திரங்களுக்கும், முறைப்படி அமைக்கப்பட்ட நவீன வாழ்க்கையின் விஞ்ஞான, உற்பத்தி சக்திகளுக்கும் ஆன்மிகத் தன்மையளிக்கக்கூடிய பெரிய உணர்ச்சியை நாம் முதலில் வளர்க்க வேண்டாமா?*

**பதில் :** *ரெயில் பாதைகள் முதலியவற்றை நான் கண்டனம்செய்வது உண்மையே. ஆனால், அதற்கும் தற்போதைய இயக்கத்துக்கும் அநேகமாக, அல்லது அறவே சம்பந்தம் இல்லை. இந்த இயக்கம், கடிதம் எழுதி இருப்பவர் குறிப்பிட்டுள்ள ஸ்தாபனங்களில் எதையுமே அலட்சியமாகக் கருதவில்லை. தற்போதைய இயக்கத்தில், நான் ரெயில் பாதைகளையும் தாக்கவில்லை; ஆஸ்பத்திரிகளையும் தாக்கவில்லை. ஆனால், ஒரு லட்சிய ராஜ்யத்தில் அவற்றிற்கு அநேகமாக, அல்லது அறவே இடமில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. தற்போதைய இயக்கம், இவர் ஆசைப்படும் ஒரு முயற்சிதான். ஆனாலும், அது யந்திரங்களுக்கு ஆன்மிகத் தன்மைஅளிக்கும் முயற்சியல்ல. ஏனென்றால், அது சாத்தியமில்லாத காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், யந்திரங்களுக்குப் பின்னால் இருப்பவர்களிடையே மனிதத் தன்மையுள்ள அல்லது மனிதாபிமானமுள்ள உணர்ச்சியைச் சாத்தியமானால் உண்டு பண்ணுவதாகும், ஒரு சிலரிடம் செல்வத்தையும் சக்தியையும் குவிப்பதற்காகவும், பலரைச் சுரண்டுவதற்காகவும் யந்திரங்களை நிறுவுவது முழுக்க முழுக்கத் தவறு என்று நான் கருதுகிறேன். இந்தக் காலத்தில் யந்திரங்கள் நிறுவப்பட்டிருப்பது அந்த முறையிலேதான். ராட்டை இயக்கம், யந்திரங்களை ஏகபோக ஸ்தானத்திலிருந்தும், சுரண்டும் நிலையிலிருந்தும் தள்ளி, அதற்குரிய ஸ்தானத்தில் கொண்டு போய் நிறுவும் ஸ்தாபன ரீதியான முயற்சியேயாகும். ஆகவே, என்னுடைய திட்டத்தின் கீழ், யந்திரங்களின் பொறுப்பை ஏற்றுள்ளவர்கள், தங்களைப் பற்றியோ, தங்கள் சொந்த நாட்டைப்பற்றியோகூட நினைக்க மாட்டார்கள்; மனித வர்க்கம் முழுவதைப் பற்றியுமே நினைப்பார்கள். இவ்வகையில், லங்காஷயர்க்காரர்கள் இந்தியாவையோ, மற்ற நாடுகளையோ சுரண்டுவதற்காக யந்திரங்களை உபயோகிப்பதை நிறுத்தி விடுவார்கள். அதற்கு மாறாக, இந்தியா தன் சொந்தக் கிராமங்களில் தனது பருத்தியைத் துணியாக மாற்றுவதற்கு உதவக் கூடிய வழி வகை*

களை வகுப்பார்கள். அமெரிக்கர்களும், என்னுடைய திட்டத்தின் கீழ், புதிது புதிதாகக் கண்டு பிடிக்கும் தங்கள் ஆற்றலின் மூலம் உலகின் மற்ற இனங்களைச் சுரண்டித் தாங்கள் செல்வந்தர்களாக முயலமாட்டார்கள்.

– 'எங் இந்தியா' – 17—9—1925

['அமெரிக்க நண்பர்களுக்கு' என்ற தலைப்பில் வெளியான ஒரு கட்டுரையிலிருந்து எடுத்தது.]

# 14

# யந்திர யுகத்தின் மாறுபாடுகள்

**கேள்வி :** யந்திரங்கள், நாகரிகத்தின் கேடாக இருக்கின்றன என்று நீங்கள் கூறுகிறீர்கள். அப்படியானால், ரெயில் வண்டிகளிலும், மோட்டார்க் கார்களிலும் நீங்கள் ஏன் பிரயாணம் செய்கிறீர்கள் ?

**பதில் :** சில விஷயங்களை நீங்கள் தவிர்த்துக் கொண்டிருக்கும் சமயத்தில்கூட அவற்றிலிருந்து உடனடியாகத் தப்பிவிட முடியாது. நான் சிறைப்பட்டிருக்கும் இந்த மண்கூடு, என் வாழ்க்கையில் ஒரு கேடாக இருக்கிறது. ஆனாலும், நான் அதைச் சகித்துக் கொள்ளவும், இந்த நண்பருக்குத் தெரிந்திருப்பது போல, அதை நான் துய்க்கவும் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால், கடந்த யுத்தத்தின்போது திட்டமிட்டுச் செய்யப்பட்ட கொலைகளுக்குப் பொறுப்பாளியாக இருந்தது யந்திர யுகந்தான் என்பதை இந்த நண்பர் உண்மையிலேயே சந்தேகிக்கிறாரா? மூச்சுத் திணறச் செய்து கொல்லும் வாயுவும், அதைப்போன்ற தீயவையும் நம்மை ஓர் அங்குலம்கூட முன்னேற்றவில்லை.

– 'எங் இந்தியா' – 27—10—1921

['சில கேள்விகள்' என்ற பகுதியிலிருந்து எடுத்தது.]

# 15

# தொழில் ஆராய்ச்சியின் உண்மையான நோக்கம்

மறுநாள் காந்திஜி விஞ்ஞான நிலையத்துக்கு விஜயம் செய்தார். மின்சாரம், ரசாயனம், ஜீவரசாயனம் முதலிய ஒவ்வொன்றிற்கான பகுதியையும் காந்திஜிக்கு டைரக்டர் காட்டினார். அவற்

றிற்காகத் தண்ணீரைப் போல் பணத்தைக் கொட்டிக் கொண் டிருந்தார்கள். பல வகையான விஷயங்களைப் பேராசிரியர்கள் விளக்கிக் கூறியதை அவர் யந்திர கதியில் கேட்டுக்கொண் டிருந்தபோது சிந்தனையில் மூழ்கியவராகக் காணப்பட்டார். ஒரு வேளை, சிறுவர்கள் சிருஷ்டிப்பதற்காகக் கற்றுக் கொண் டிருக்கும் பிராங்கன்ஸ்டீனின் பூதங்களைப் பற்றியும், அதிகச் செலவாகும் பரிசோதனைக்காகத் தான் கொடுத்து வரும் பணத் துக்குப் பிரதிபலனை எதிர்பார்க்கும் தொலை தூர நம்பிக்கைகூட இல்லாத வரி கொடுப்போரைப் பற்றியும், தாய் நாட்டின் நலனுக் காக முப்பது லட்சம் ரூபாயைக் கொடுத்த மாபெரும்நன்கொடை யாளரைப் பற்றியும் அவர் சிந்தித்துக்கொண்டு இருந்திருக்கக் கூடும். மாணவர்கள் அவருக்கு ரூ. 325 கொண்ட பண முடிப் பைக் கொடுக்க ஒன்று கூடியபோது, நன்றியுரை கூறுவதைத் தவிர வேறு எதுவும் கூறுவதில்லை என்று அவர் தீர்மானித்திருக்க லாம். ஆனால், ஒரு முறை வாயைத் திறந்துவிட்டால், அந்த அள வோடு அவரால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது. கடுமை யாகவும், ஆனால் இதமாகவும் அவர் தம் உள்ளத்தையே பொழிந்து கொண்டிருந்தபோது சில நிமிஷ நேரம் மாணவர்கள் மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போலக் கேட்டுக் கொண்டிருந் தார்கள்.

காந்திஜி ஒரு பெருமூச்சுடன், "நான் எங்கே வந்திருக்கிறேன் என்று திகைத்துக் கொண்டிருந்தேன்" என்று ஆரம்பித்தார். "பிரமிப்புடனும், ஆச்சரியத்துடனும் பேச்சிழந்து நிற்க வேண் டிய என்னைப் போன்ற கிராமவாசிக்கு இங்கே இடமில்லை. அதிகமாகப் பேசக்கூடிய மனநிலையில் நான் இல்லை. நான் சொல்லக் கூடியதெல்லாம், இந்தப் பெரிய ஆராய்ச்சிக் கூடங் களும், நீங்கள் இங்கே காணும் மின்சார சாதனங்களும் கோடிக் கணக்கானவர்களின் - தாமாக விரும்பாத நிலையில் நிர்ப்பந்தத் துக்கு உட்பட்டு - உழைத்ததன் பலன்களாகும். ஏனென்றால், டாட்டாவின் முப்பது லட்சம் ரூபாயும் வெளியிலிருந்துவரவில்லை. மைசூரின் நன்கொடையும், இந்த நிர்ப்பந்த உழைப்பு என்ற உல கத்தைத் தவிர வேறு எங்கிருந்தும் வரவில்லை. நாம் கிராமவாசி களைச் சந்தித்து, அவர்களுடைய பணத்தை, அவர்களுக்கு ஒரு போதும் பலன் தராத, ஆனால், ஒரு வேளை அவர்களுடைய சந்ததி களுக்குப் பலன் தரக்கூடிய கட்டடங்களுக்கும், யந்திரங்களுக் கும் நாம் எப்படிப் பயன்படுத்தி வருகிறோம் என்பதை அவர்க ளுக்கு விளக்கிச் சொன்னால், அதை அவர்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள். அதைக் கேட்கப் பிடிக்காமல் நிராகரித்து விடு வார்கள். ஆனால், அவர்களிடத்தில் நாம் ஒருபோதும் நம்பிக்கை வைப்பதில்லை. 'பிரதிநிதித்துவம் இல்லையென்றால்வரியும்விதிக்கக் கூடாது' என்ற நியதியை நாம் உரிமை என்று கருதிவிடுகிறோம். ஆனால், அது அவர்களுக்கும் பொருந்தும் என்பதை மறந்து விடுகிறோம். உண்மையிலேயே அதை அவர்கள் விஷயத்தில் நீங்கள் பிரயோகித்து, அவர்களுக்குக் கணக்குக் கொடுக்க

வேண்டிய பொறுப்பை நீங்கள் உணர்ந்தால், இந்த ஸ்தாபனங்களுக்கெல்லாம் வேறொரு பக்கமும் இருப்பதைக் காண்பீர்கள். அப்பொழுது உங்கள் உள்ளத்தில் அவர்களுக்குச் சிறிது இடமல்ல, அதிக இடமே அளிப்பீர்கள். உள்ளத்தை நல்ல முறையில் நீங்கள் வைத்துக் கொண்டால், உங்களுடைய கல்வி யாருடைய உழைப்பை அடிப்படையாகக் கொண்டிருக்கிறதோ அந்தக் கோடிக்கணக்கானவர்களின் நன்மைக்காக உங்கள் அறிவைப் பயன்படுத்துவீர்கள். நீங்கள் எனக்குக் கொடுத்த பண முடிப்பை நான் தரித்திர நாராயணருக்கு உபயோகிப்பேன். உண்மையான தரித்திர நாராயணனை நானும் இன்னும் பார்த்ததில்லை. ஆனால், என் கற்பனையின் மூலமாக மட்டுமே அறிவேன். இந்தப் பணத்தை அடையப் போகும் நூற்பாளர்களும், இது வரையிலும் யாரும் போய் அறியாத தொலை தூரக் கிராமங்களாகிய மூலை முடுக்குகளில் வாழும் உண்மையான தரித்திர நாராயணர்களல்ல. சில ரசாயன வஸ்துக்களில் அடங்கியுள்ளவற்றை ஆராய்ந்து தேடுவதற்குப் பல வருடங்கள் பரிசோதனைகள் செய்ய வேண்டியிருக்கும் என்று உங்கள் பேராசிரியர் எனக்குக் கூறினர். ஆனால், இந்தக் கிராமங்களை யார் ஆராய்ந்து தேடப் போகிறீர்கள்? உங்கள் பரிசோதனைக் கூடங்களில் சில பரிசோதனைகள் இருபத்து நான்கு மணி நேரமும் இடைவிடாமல் தொடர்ந்து நடைபெறுவது போலவே, கோடிக்கணக்கான ஏழைகளின் நன்மைக்கு அதிக முக்கியத்துவத்தை உங்கள் உள்ளத்தில் நிரந்தரமாகக் கொடுப்பீர்களாக.

“சாதாரண மனிதன் ஒருவனிடமிருந்து எதிர்பார்ப்பதைவிட மிகவும் அதிகமாக உங்களிடமிருந்து நான் எதிர்பார்க்கிறேன். ஓரளவு கொடுத்துவிட்டதோடு திருப்தி அடைந்து விடாதீர்கள். ‘‘எங்களால் முடிந்ததை நாங்கள் செய்திருக்கிறோம்; ஆகவே, இப்போது டென்னிஸும், பில்லியர்ட்ஸும் விளையாடுவோம்” என்று கூற வேண்டாம். பில்லியர்ட்ஸ் அறையிலும், டென்னிஸ் மைதானத்திலும், நாளுக்கு நாள் உங்கள் மீது ஏறிக் கொண்டிருக்கும் பெருங் கடனை நினைக்க வேண்டும் என்று நான் உங்களுக்குக் கூறுகிறேன். ஆனால், பிச்சைக்காரர்கள் தங்களுக்கு ‘அது வேண்டாம், இது வேண்டும்’ என்று தேர்ந்தெடுக்க முடியாது. நீங்கள் எனக்குக் கொடுத்ததற்காக நான் உங்களுக்கு நன்றி கூறுகிறேன். நான் செய்து கொண்ட பிரார்த்தனையை மனத்தில் வைத்து, அதை நிறைவேற்றுங்கள். ஏழை மாதர்கள், உங்களுக்காக நெய்து கொடுத்த துணியை அணிவதற்குப் பயப்படாதீர்கள். நீங்கள் கதர் கட்டினல் உங்களை உங்கள் முதலாளிகள் வேலையிலிருந்து நீக்கி விடுவார்களோ என்று பயப்பட வேண்டாம். நீங்கள் மனிதர்களாக இருப்பதையும், உலகத்தின் முன் உங்கள் கொள்கைகளில் உறுதியான பிடிப்புடன் நிற்பதையுமே நான் விரும்புவேன். பணம் தேடும் முயற்சியில், வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கானவர்களின் நன்மையின் பொருட்டு நீங்கள் கொள்ளும் உற்சாகம்

குன்றிவிட வேண்டாம். வெளி ஆராய்ச்சி தேவைப்படாமல் உள் ஆராய்ச்சி தேவைப்படுவதும் – உள் ஆராய்ச்சியோடு சம்பந்தப்படாத எல்லா ஆராய்ச்சிகளும் பயனற்றவையாக இருக்கும் – உங்கள் உள்ளங்களைக் கோடிக்கணக்கான உள்ளங்களுடன் இணைக்கவல்லதான மிக உயர்ந்த கம்பியில்லாத் தந்திக் கருவியை நீங்கள் கண்டு பிடிக்க முடியும் என்று நான் கூறுகிறேன். நீங்கள் கண்டுபிடிக்கும் அனைத்தும் ஏழைகளின் நலனைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கவில்லை என்றால், உங்களுடைய தொழிற்சாலைகளெல்லாம், ராஜகோபாலாச்சாரி தமாஷாகச் சொன்னது போல, சைத்தானுடைய தொழிற்சாலைகளை விட உண்மையில் எந்த விதத்திலும் சிறந்தவையாக இரா. நல்லது. எல்லா ஆராய்ச்சி மாணவர்களும் இருக்க வேண்டியதைப்போல், நீங்களும் சிந்தித்துப் பார்க்கும் மனநிலை படைத்தவர்களாக இருக்கிறீர்கள் என்றால், நான் உங்கள் சிந்தனைக்குப் போதுமான விஷயத்தையே அளித்திருக்கிறேன்."

—'எங் இந்தியா' - 21—7—1927

['விஞ்ஞான நிலையத்தில்' என்ற தலைப்பின் கீழ் ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடித'ப் பகுதியில் முதலில் வெளியான கட்டுரை.]

பகுதி இரண்டு

# சுதேசி

[இந்திய மக்களின் பொருளாதார உறவில் சுதேசிக் கொள்கைக்குள்ள முக்கியத்தைக் குறித்துக் காந்திஜி கூறி யிருப்பவையும் எழுதியிருப்பவையும் கொஞ்சமல்ல. அவர் கூறியிருப்பவைகளில், 'மகாத்மா காந்தி நூல்க'ளின் முந்திய தொகுப்புக்களில் வெளியாகாதவையே இங்கே கொடுக்கப்பட் டிருக்கின்றன. முந்திய தொகுப்புக்களில் வெளியாகியுள்ள இது சம்பந்தமான விஷயங்கள் யாவை என்பதை வாசகரின் சௌகரியத்திற்காகக் கீழே கொடுத்திருக்கிறும்:

1. 1916 பிப்ரவரி 16-ஆம் தேதி சென்னையில் நடந்த பாதிரிகள் மகாநாட்டில் மகாத்மா காந்தி பேசுகையில், 'சுதேசி என்பது என்ன?' என்பதற்கு மிகத் தெளிவான விளக்கம் கொடுத்திருக்கிறுர். சுதேசியத்தில் சமயம், ராஜீயம், பொரு ளாதாரம் ஆகிய மூன்று பிரிவுகள் உண்டு என்று அதில் காந்திஜி கூறி விளக்கியிருக்கிறுர். "சுதேசி என்பது நம்முள் இருக்கும் ஓர் உணர்ச்சி. தூரமாக இருப்பதை விலக்கிவிட்டு நம்மை ஒட்டிச் சுற்றிலுமிருப்பவைகளை உபயோகித்துக் கொள்ளுபவர் களாகவும், அவற்றிற்குச் சேவை செய்பவர்களாகவும் நம்மை அந்த உணர்ச்சி கட்டுப்படுத்துகிறது" என்கிறுர், மகாத்மா. ஆனல், இதனல் அந்நியரை வெறுக்க வேண்டும் என்பதோ, தன் நாட்டினருக்காக ஓரவஞ்சனையாக நடந்துகொள்ள வேண்டும் என்பதோ அர்த்தமல்ல என்றும் கூறியிருக்கிறுர். மகாத்மாவின் இப்பிரசங்கத்தின் முழு விவரமும் 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பு 6-16-ஆம் பக்கங்களில் பிரசுரமாகியிருக்கிறது.

2. 'சுதேசி உணர்ச்சி' என்பதைக் குறித்து மகாத்மா, 1917 அக்டோபரில் கோத்ராவில் நடந்த குஜராத் மாகாண ராஜீய மகாநாட்டில் தலைமை வகித்துப் பேசியபோது பேசிய விவரம் 'மகாத்மா காந்தி நூல்கள்'—ஐந்தாம் தொகுப்பு-16-18-ஆம் பக்கங்களில் வெளியாகியிருக்கிறது- "நமக்குச் சுதேசியத் தில் அன்பு மாத்திரமல்ல, தீவிர சுதேசிய மோகமும் ஏற்பட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நமது செயல் ஒவ் வொன்றிற்கும் சுதேசி முத்திரை இருக்கவேண்டும். நம்

நாட்டினதாக இருக்கும் எல்லாமே நல்லதுதான் என்ற நம் பிக்கையின் பேரிலேயே சுயராஜ்யத்தை அமைக்க முடியும்" என்று அப்பிரசங்கத்தில் மகாத்மா கூறினர்.

3. பிறகு 1919 டிசம்பர் 10–ஆம் தேதி 'எங் இந்தியா' வில் மகாத்மா எழுதிய ஒரு கட்டுரையில், ''இந்தியாவுக்கு இன்று வேண்டிய சீர்திருத்தம், சுதேசியத்தை அதன் உண்மை யான கருத்தில் அனுசரிப்பதேயாகும்'' என்ருர். ''கிராமக் கைத்தொழில் இல்லையாயின் இந்திய விவசாயிகள் அழிந்துவிடு வார்கள். நிலத்தில் கிடைப்பதைக் கொண்டு மாத்திரம் விவசாயி வாழ்ந்துவிட முடியாது. உதவிக்கு வேறு தொழிலும் அவருக்கு அவசியம். நூற்பதுதான் எளிதானது, மலிவானது, மிகச் சிறந்தது. இவ்விதம் செய்வது நமது மனப்போக்கில் ஒரு புரட்சி உண்டாவதேயாகும் என்பதை நான் அறிவேன். இது ஒரு புரட்சி என்பதனுலேயே, சுயராஜ்யத்தை அடைவதற்கு இருக்கும் வழி சுதேசியின் மூலமே என்று நான் கூறுகிறேன்'' என்கிருர். இக்கட்டுரை 'மகாத்மா காந்தி நூல்கள்' - ஐந்தாம் தொகுப்பு - 18-21–ஆம் பக்கங்களில் பிரசுரமாகியுள்ளது.

4. 1920 ஏப்ரல் 21–ஆம் தேதி மகாத்மா, 'எங் இந்தியா' வில் எழுதிய கட்டுரையில், ''மற்றவைகளை யெல்லாம்விடச் சிறந்த ஆக்கவேலை சுதேசி. இதில் உருப்படியான வேலைக்குத் தான் அதிக இடமேயன்றிப் பிரசங்கங்களுக்கு இதில் அதிக இடமில்லை'' என்ருர். இக்கட்டுரை, 'அதற்கான வழிகள்' என்ற தலைப்பில் 'மகாத்மா காந்தி நூல்கள்' - ஐந்தாம் தொகுப்பு 21–23–ஆம் பக்கங்களில் வெளிவந்திருக்கிறது.

சுதேசியத்தைக் குறித்து மகாத்மா காந்தி கூறியிருக்கும் கீழ்க்கண்ட மற்ற கட்டுரைகளும், 'மகாத்மா காந்தி நூல்கள்' –ஐந்தாம் தொகுப்பில் பிரசுரமாகியிருக்கின்றன:

5. 'எது சுதேசி?'—713-16–ஆம் பக்கங்கள்.

6. 'சில உதாரணங்கள்'—719–21-ஆம் பக்கங்கள்.

7. 'புதிய சுதேசிக் கொள்கை'—721-24-ஆம் பக்கங்கள்.

8. 'அந்நியப் பொருள்களும் சுதேசியும்'—197—8–ஆம் பக்கங்கள்.

9. 'சுதந்திரமும் சுதேசியும்'—792-3–ஆம் பக்கங்கள்.

10. 'லங்காஷயரில்'—662-71-ஆம் பக்கங்கள்.

11. 'சுதேசி நியதி'—206-210-ஆம் பக்கங்கள்.

12. 'இந்தியப் பொருளாதாரத்தில் ராட்டை'—70-76-ஆம் பக்கங்கள்.

13. 'மலையும் மடுவும்'—778-81-ஆம் பக்கங்கள்.

14. 'தடையில்லா வர்த்தகம் - பாதுகாப்பு—576-7-ஆம் பக்கங்கள்.]

## 1

# சுதேசி

ஆசிரமத்தில் நாங்கள் எல்லாவற்றிலும் சுதேசியையே கடைப்பிடிப்பது என்ற சட்டத்தை வைத்துக் கொண்டிருக்கிறோம். மனிதனின் முதல் கடமை, தன் அண்டை வீட்டுக்காரனுக்குப் பணிபுரிவதே. இது அந்நியர் மீது வெறுப்புக் கொள்ளுவதாகவோ, சொந்த நாட்டுக்காரனுக்காகப் பாரபட்சம் காண்பிப்பதாகவோ ஆகாது. நமது பணிபுரியும் சக்திக்கு வெளிப்படையாகவே வரம்பு உண்டு. சிறிது கஷ்டத்துடன் நம் அண்டை வீட்டுக்காரனுக்கும் நாம் பணி புரிய முடியும். நாம் ஒவ்வொருவரும் தத்தம் அண்டை வீட்டுக்காரனுக்குத் தமது கடமையைத் தவறாது செய்து விட்டால், உலகத்தில் யாருமே கவனிப்பாரற்றுப் போய்விடமாட்டார்கள். ஆகவே, தன் அண்டை வீட்டுக்காரனுக்குச் சேவை செய்கிறவன், உலகம் முழுவதற்கும் சேவை செய்கிறான். பார்க்கப்போனால், தன் ஆட்கள் மற்ற ஆட்கள் என்ற வேற்றுமைக்கே சுதேசியில் இடமில்லை. அண்டை வீட்டுக்காரனுக்குச் செய்வது உலகத்துக்குச் சேவை செய்வதாகும். உண்மையில், உலகத்துக்குச் சேவை செய்வதற்கு நமக்குள்ள ஒரே வழி அதுதான். உலகம் முழுவதையும் தன் குடும்பமாகக் கொண்டிருக்கும் ஒருவனுக்கு, தன்னுடைய இடத்தை விட்டு நகராமல் பிரபஞ்சத்துக்குச் சேவை செய்யும் சக்தி இருக்க வேண்டும். இந்தச் சக்தியை அவன் தன் அண்டை வீட்டுக்காரனுக்குச் செய்யும் சேவையின் மூலமே பிரயோகிக்க முடியும். டால்ஸ்டாய் இன்னும் மேலே போய், இப்போது நாம் ஒவ்வொருவரும் மற்றொருவரின் முதுகில் ஏறிச் சவாரி செய்து கொண்டிருப்பதாகவும், நாம் கீழே இறங்கிவிட்டாலே போதும் என்றும் கூறுகிறார். இது, ஒரே விஷயத்தை வேறுவிதமாகக் கூறுவதாகும். தனக்குச் சேவை செய்து கொள்ளாமல் யாரும் மற்றவர்களுக்குச் சேவை செய்ய முடியாது. அத்துடன், மற்றவர்களுக்குச் சேவை செய்யாமல் தன்னுடைய சொந்தக் காரியங்களுக்காக மாத்திரம்

முயல்கிறவர் யாராக இருந்தாலும் அவர் தமக்கும், உலகத்திற்குமே தீங்கு செய்கிறார். இதன் காரணம் வெளிப்படையானது. எல்லா உயிர்ப் பிராணிகளும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவை. ஆனால், ஒரு மனிதனுடைய ஒவ்வொரு செயலும் உலகம் முழுவதிலும் நல்ல விளைவையோ, தீய விளைவையோ உண்டு பண்ணுகிறது. தூரத்தில் பார்க்க முடியாத நிலையில் இருக்கும் நம்மால் இதைக் காண முடியாது. ஒரு தனி மனிதனின் ஒரே ஒரு செய்கையால் உலகில் ஏற்படும் விளைவு அற்பமாக இருக்கலாம். ஆனாலும், அந்த விளைவு அப்படியே இருக்கத்தான் செய்கிறது. இந்த உண்மையை உணர்வது, நமது பொறுப்பையும் நாம் உணரும்படி செய்ய வேண்டும்.

ஆகையால், சுதேசியில் அந்நியருக்கு அபகாரம் செய்யக் கூடியது எதுவும் இல்லை. அப்படி இருந்தும், சுதேசி எல்லா இடங்களையும் எட்டவில்லை. அதற்குக் காரணம், இன்றுள்ள நிலைமைகளில் அது எல்லா வகையிலும் அசாத்தியமானதே ஆகும். ஒருவன் உலகத்துக்குச் சேவை செய்ய முயலும்போது அவன் உலகத்துக்குச்சேவை செய்யாததுடன், அண்டை வீட்டுக்காரனுக்கும்கூடச் சேவை செய்யத் தவறி விடுகிறான். அண்டை வீட்டுக்காரனுக்குச் சேவை செய்யும்போது, அதன் பயனாக உலகத்துக்கே சேவை செய்கிறான். தன் அண்டை வீட்டுக்காரனுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்தவனுக்குத்தான், ‘‘எல்லோரும் என் உறவினர்’’ என்று சொல்லிக் கொள்ளும் உரிமை உண்டு. ஆனால், ‘‘எல்லோரும் என் உறவினரே’’ என்று சொல்லிக் கொண்டு, தன் அண்டை வீட்டுக்காரனை லட்சியம் பண்ணாமல் ஒருவன் புலன் நுகர்ச்சியில் மூழ்கினால், அவன் தனக்காக மட்டுமே வாழ்கிறான்.

•

தங்களுடைய சொந்த இடத்தை விட்டுப் புறப்பட்டு, தன் அண்டை வீட்டுக்காரரல்லாத மற்றவர்களுக்குச் சேவை செய்து கொண்டு உலகமெல்லாம் சுற்றி வரும் சில நல்ல மனிதர்களை நாம் காண்கிறோம். அவர்கள் தவறு எதுவும் செய்யவில்லை. அவர்களுடைய நடவடிக்கை சுதேசி நியதிக்குப் புறம்பான ஒன்றல்ல. அவர்களுடைய சேவை செய்யும் ஆற்றல் பெரிதாக இருக்கிறது. அவ்வளவுதான். ஒருவருக்கு அடுத்த வீட்டில் வசிப்பவனே அண்டை வீட்டுக்காரனாக இருக்கிறான். இன்னும் ஒருவருக்கு, அவருடைய அண்டை வீடும் அவருடைய கிராமமும் ஒன்றாக இருக்கிறது. மூன்றாமவர் ஒருவருக்குச் சுற்றியுள்ள பத்துக்கிராமங்களும் அண்டை வீடாக இருக்கின்றன. இவ்வாறு ஒவ்வொருவரும் தனது சக்திக்கு இயன்றபடி சேவை செய்கிறார். சாதாரணமான மனிதன் அசாதாரணமான வேலையைச் செய்ய முடியாது. அவனைக் கருத்தில் கொண்டே எதற்கும் விளக்கம் கொடுக்கப்படுகிறது. அந்த விளக்கம் தனது மூலக்கருத்துக்கு மாறுபடாத பொருளையே உணர்த்துகிறது. சாதாரணமான மனிதன், சுதேசி நியதியைக் கடைப்பிடிக்கும்போது, தான் யாருக்கும் எவ்விதச்

சேவையும் செய்து கொண்டிருப்பதாக நினைப்பதில்லை. பக்கத்தி லுள்ள உற்பத்தியாளரிடம் சரக்கு வாங்குவது அவருக்குச் சௌகரியமாக இருக்கிறது. ஆனால், இது அசௌகரியமாக இருக் கக்கூடிய ஒரு சந்தர்ப்பமும் எழக்கூடும். சுதேசிதான் வாழ்க் கையின் நியதி என்பதை அறிபவர், இப்படிப்பட்ட சந்தர்ப்பங் களிலும்கூட சுதேசியையே கடைப்பிடிப்பார். நம்மில் பலருக்கு இப்பொழுது இந்தியாவில் செய்யப்பட்ட சாமான்களின் தரம் திருப்தியளிப்பதில்லை. அதனால், அவர்கள் வெளிநாட்டுச் சாமான் களை வாங்க ஆசைப்படுகிறார்கள். ஆகவே, சுதேசியானது நமது சௌகரியத்துக்கு உதவுவதல்ல. ஆனால், வாழ்க்கையின் நியதி என்பதைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது. சுதேசிக்கும் அந்நியரை வெறுப்பதற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. மற்ற வர்களுக்குக் கெடுதல் நினைப்பதோ, கெடுதல் செய்வதோ ஒருவ னுடைய கடமையாக ஒருபோதும் இருக்க முடியாது.

கதர், சுதேசியின் வடிவமாகக் கருதப்பட்டிருக்கிறது. ஏனென்றால், கதரைக் கைவிட்டதன் மூலம் இந்தியா கொடிய பாவத்தைச் செய்திருக்கிறது. அத்துடன் தன் இயல்பான கடமையைச் செய்வதினின்றும் தவறிக்கொண்டிருக்கிறது.

*1908*-இல் ராட்டினம் எப்படி இருக்கும், ராட்டினத்திற்கும் தறிக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதைக்கூட நான் அறியாதிருந்த சமயத்தில், கதர், ராட்டினம் ஆகியவற்றின் முக்கியத்துவம் எனக்கு முதல் முதலாகப் புலப்பட்டது. அப்போது இந்தியாவின் கிராமங்களுடைய நிலையைப்பற்றி தெளிவற்ற ஓர் எண்ணம்தான் எனக்கு இருந்தது. ஆனாலும், ராட்டினம் அழிந்ததுதான், கிராமங்கள் வறுமை எய்தியதற்குப் பிரதானமான காரணம் என்பதைத் தெளிவாகக் கண்டேன். அதனால், இந்தியாவுக்குத் திரும்பியதும் அதற்குப் புத்துயிர் அளிக்க முயல வேண்டுமென்று தீர்மானித்தேன்.

இந்த எண்ணங்களோடு நான் *1915*-இல் திரும்பி வந்தேன். ஆசிரமம் தொடங்கியதிலிருந்தே அனுஷ்டானங்களில் சுதேசியும் ஒன்றாயிற்று. ஆனால், எப்படி நூற்பது என்று எங்களில் யாருக்கும் தெரியாது. ஆகையால், நாங்கள் ஒரு கைத்தறியை அமைத்ததோடு திருப்தியடைந்தோம். எங்களில் சிலருக்கு அப்பொழுதும் மெல்லிய துணியிலேயே விருப்பம் இருந்துகொண் டிருந்தது. பெண்களின் புடவைக்கு ஏற்ற மிகவும் சன்னமான சுதேசி நூல் கடைகளில் கிடைக்கவில்லை. அதனால், மிகவும் சொற்பமான காலத்துக்கு வெளிநாட்டு நூலைக்கொண்டு புடவைகள் நெய்யப்பட்டன. ஆனால், சீக்கிரமாகவே இந்திய மில்களிலிருந்து சன்னமான நூலை நாங்கள் வாங்கிக்கொள்ள முடிந்தது.

ஆசிரமத்தில் கைத்தறியை நிறுவுவதும் சுலபமான காரிய மாக இருக்கவில்லை. நெசவைப்பற்றி எங்களில் யாருக்கும்

எதுவும் தெரியாது. ஒரு தறியை வாங்கினோம்; நண்பர்கள் மூலம் ஒரு நெசவாளியையும் வரவழைத்துக் கொண்டோம். மகன்லால் காந்தி நெசவைக் கற்றுக்கொள்ள முன்வந்தார்.

ஆசிரமத்தில் நான் பரிசோதனைகளை நடத்தினேன். அதே சமயத்தில், நாட்டில் சுதேசிப் பிரசாரமும் செய்துவந்தேன். ஆனால், நாங்கள் நூலை நூற்றுக்கொள்ள முடியாதவரையில், மாப்பிள்ளை இல்லாக் கல்யாணம் போலவே இருந்தது. கடைசியில் ஒரு வழியாக, ராட்டினத்தையும் நூற்பவர்களையும் தேடிக் கண்டு பிடித்து, ஆசிரமத்திற்கு ராட்டினத்தைக் கொண்டு வந்து சேர்த்தேன். இந்தக் கதை முழுவதும் 'சுயசரிதை'யில் விரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

ஆனால், எங்கள் கஷ்டங்கள் தீர்ந்துவிட்டன என்று அதற்கு அர்த்தமல்ல. அதற்குப் பதிலாக, அவை அதிகரித்தன. இது வரையிலும் மறைந்திருந்த கஷ்டங்கள் இப்பொழுது வெளிப் படையாகத் தெரியத் தொடங்கின.

ராட்டினத்தைப் பற்றிச் சொன்ன மாத்திரத்தில் மக்கள் அதை ஏற்றுக்கொண்டுவிட மாட்டார்கள் என்பதை நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்தபொழுது கண்டேன். நூற்பதன் மூலம் அதிகப் பணம் சம்பாதிக்க முடியாது என்பதை நான் அறிவேன். ஆனால், அந்தப் பணம் எவ்வளவு குறைவாக இருக்கும் என்பது எனக்குத் தெரியவில்லை. அத்துடன், நூற்கப்பட்ட நூல் எடுத்த எடுப்பிலேயே கரடுமுரடு இல்லாமல் ஒரே மாதிரியாகவும், சன்ன மாகவும் இராது. கரடுமுரடான, பலவீனமான நூல்தான் அநேகர் நூற்க முடியும். நூற்பதற்கு எல்லா வகையான பருத்தி யும் தகுதியானதல்ல. பஞ்சை அரைத்து, பட்டை போட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. பட்டை போடுவதில் எல்லாம் பஞ்சின் தரத்தைப் பொறுத்தே இருந்தது. எந்த ராட்டினமும், ஒவ்வொரு ராட்டினமும் பயன்பட்டுவிடாது. ராட்டினத்திற்குப் புத்துயிர் கொடுப்பது, இவ்வண்ணம் ஒரு பெரிய திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவதாக இருந்தது. பணம் மட்டும் இந்த உபாயத்தைச் செய்துவிட முடியாது. ஆள் பலத்தைப் பொறுத்த வரையிலும்கூட, நூற்றுக்கணக்கான ஊழியர்கள் தேவைப்பட்டார்கள். இவர்கள் ஒரு புதிய கலையைக் கற்றுக் கொள்ளவும், சொற்ப ஊதியத்தைக்கொண்டு திருப்தி அடைய வும், கிராமங்களில் தங்கள் வாழ்நாளைக் கழிக்கவும் தயாராக இருக்க வேண்டும். ஆனால், அதுவும்கூடப் போதாது. கிராமச் சூழ்நிலையில் சோம்பேறித்தனமும், நம்பிக்கையின்மையும் மட்டுக்கு மிஞ்சி நிறைந்திருந்தன. இந்தச் சூழ்நிலையில் அபிவிருத்தி ஏற் பட்டாலொழிய ராட்டினம் எந்த முன்னேற்றத்தையும் உண்டு பண்ணிவிட முடியாது. ஆகவே, எல்லையற்ற பொறுமையும், உறுதியான நம்பிக்கையும், ஏகாக்கிரக சித்தமும் கொண்ட ஆடவரும் பெண்டிருமான படையைக்கொண்டுதான் ராட்டினத் துக்கு வெற்றிகரமாகப் புத்துயிரளிக்க முடியும்.

முதலில் இந்த நம்பிக்கையைக் கொண்டிருந்தவன் நான் ஒருவன்தான். உண்மையில், என்னிடமிருந்த ஒரே மூலதனம் நம்பிக்கைதான். ஆனால், நம்பிக்கை இருந்தால், பிற யாவும் கிட்டும் என்பதைக் கண்டேன்; நம்பிக்கை அறிவுக்கு விளக்கம் தருகிறது. முயற்சி செய்யும் பழக்கத்திற்குத் தூண்டுதல் அளிக்கிறது. எல்லாப் பரிசோதனைகளும் ஆசிரமத்தில், ஆசிரமத்தின் மூலம் நடத்தப்பட வேண்டும் என்பது தெளிவு. உண்மையில் ஆசிரமம் அந்தக் காரியத்துக்காகவே இருந்தது. ஆசிரமத்தில் நூற்றல் பிரதானமான சரீரப் பிரயாசையாக இருக்க வேண்டும் என்பதை நான் உணர்ந்தேன். இந்த விதமாகத்தான் அதை ஒரு சாஸ்திரமாக்க முடியும். ஆகவே, இறுதியில் நூற்பு ஒரு மகா யக்ஞமாகக் கொள்ளப்பட்டது. ஆசிரமத்தில் சேர்ந்த ஒவ்வொருவரும் நூற்கக் கற்றுக்கொள்ளவும், தினந்தோறும் தவறாமல் நூற்கவும் வேண்டியிருந்தது.

ஆனால், யக்ஞம் என்பது செயல் திறமையைக் குறிக்கிறது. (கர்மஸு கௌசலம்) எப்படியோ ஒருவிதமாகக் கொஞ்சம் நூலை நூற்பதை ஒரு யக்ஞம் என்று கூற முடியாது. முதலில், அங்கத்தினர்கள் தினந்தோறும் குறைந்தது அரை மணி நேரமாவது நூற்க வேண்டும் என்று விதி இருந்தது. ஆனால், ராட்டினத்தில் பழுது ஏற்பட்டுச் சரியாக வேலை செய்யாவிட்டால் அரை மணி நேரத்தில் இரண்டு கெஜம் நூலைக்கூட நூற்க முடியாது என்பது தெரியவந்தது. ஆகையால், விதியைத் திருத்தி, குறைந்த பட்சம் 160 சுற்றுக்களாவது நூற்க வேண்டும் என்று அங்கத்தினர்களுக்குக் கூறப்பட்டது. ஒரு சுற்று என்பது நான்கு அடிகளுக்குச் சமம். அப்புறம், நூல் ஒரே மாதிரியாகவும் பலமாகவும் இல்லையென்றால் அதனால் பிரயோசனமில்லை. நூலின் பலத்தையும், ஒரே மாதிரியான ஒழுங்கையும் பரீட்சித்துப் பார்க்க முறைகள் வகுக்கப்பட்டன. இப்போது, 20-ஆம் நெம்பருக்கு மேல் கனமாக உள்ள நூல் நூற்பது யக்ஞமாகக் கருத முடியாது என்ற அளவுக்கு நாங்கள் முன்னேறிவிட்டோம்.

ஆனால், நல்ல நூலே நூற்கப்படுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அதை யார் உபயோகிப்பது? நூற்பதை ஒரு புனிதச் சடங்காகக் கருதி நூற்கும் ஒருவர். தமது நூலை உபயோகிக்கவே கூடாது என்று ஆரம்பத்திலிருந்து நான் உறுதியாகக் கருதி வந்தேன். ஆனால், மற்றவர்களை அந்த மாதிரிக் கருதும்படி செய்ய என்னால் இயலவில்லை. நூற்பவர் கூலி கொடுத்துவிட்டு தமக்குத் தேவையான நூலை விலைக்கு வாங்கிக் கொள்ளுவதில் கெடுதல் எங்கே இருக்கிறது? என்னையே நான் ஏமாற்றிக் கொண்டு, தாம் நூற்ற நூலுக்குக் கூலி கொடுத்துத் தமக்கு வேண்டிய அளவு வாங்கிக்கொள்ளும் ஒருவர் நூற்புக்காகத் தியாகம் செய்பவராகக் கருதப்பட வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டேன். இந்தத் தவறு இன்னும் பூரணமாகத் திருத்தப் படவில்லை. தவறுகள் தலைகாட்டுகிற சமயத்திலேயே கடுமை

யான நடவடிக்கையின் மூலம் அவற்றைத் திருத்தாமல் விட்டு விட்டால், அவை நிரந்தரமாகிவிடப் பார்க்கின்றன. அப்புறம் நாட்பட்ட நோய்களைப் போக்குவது போல அவற்றைக் களைவது கஷ்டமாகிவிடுகிறது.

இந்த யக்ஞத்தின் பலனாக, நூற்றல் இந்தியாவில் பிரமாத மாக முன்னேறிக்கொண்டு வந்திருக்கிறது. ஆனால், நம்முடைய கிராமங்கள் ஒவ்வொன்றிலுமே அது இன்னும் வேரூன்றவில்லை. இதன் காரணம் வெளிப்படையானது. என்னுடைய நம்பிக்கை யோடு நூற்பதைப்பற்றிய அறிவும் சேர்ந்திருக்கவில்லை. தவறுகள் செய்த பின் சிறிது அறிவைச் சம்பாதித்தேன். சக ஊழியர்கள் என்னோடு சேர்ந்திருக்கிறார்கள். ஆனால், நான் மேற்கொண் டிருக்கும் பெரும் பணிக்கு அவர்கள் தொகை மிகக் கொஞ்சமே. நூற்றுக்கணக்கான ஊழியர்கள் இருக்கிறார்கள். ஆனால், தேவைப் படும் அளவுக்கு நம்பிக்கையும் ஞானமும் அவர்களிடம் இல்லை என்றே தோன்றுகிறது. வேர் இவ்வளவு பலவீனமாக இருக் கும்போது, நன்கு பழுத்த பழத்தைச் சாப்பிடலாம் என்று எதிர் பார்க்க முடியாது.

ஆனால், இதற்காக நான் யாரையும் குற்றம் சொல்ல முடியாது. வேலை புதிது; சமுத்திரத்தைப் போல் விரிந்தது; மேலும் அதில் கஷ்டங்கள் நிரம்பியிருந்தன. ஆகையால், எங்கள் நடவடிக்கையின் பலன் திருப்தி தருவதாக இல்லை என்றாலுங் கூட, எங்கள் நம்பிக்கையைத் தொடர்ந்து வைத்துக்கொண் டிருப்பதற்கு அது போதுமானதாக இருந்தது. பூரண வெற்றியில் நம்பிக்கை வைக்க எங்களுக்குச் சகல உரிமையும் உண்டு. நம்பிக்கையுள்ள ஊழியர்கள்—ஆடவர்களும் பெண்டிரும்— போதிய அளவில் சேர்ந்திருக்கிறார்கள்; மதிப்பு வாய்ந்த அனுப வத்தையும் பெற்றிருக்கிறார்கள். அதனால், இந்த இயக்கம் நிச்சய மாகச் சாகப்போவதில்லை.

ஆசிரமத்திலும், நாட்டின் பிற இடங்களிலும் கதரின் பயனாக வேறு பல நடவடிக்கைகளும் தோன்றியுள்ளன. அவற்றை இங்கே அதிக அளவில் விரிவாகக் கூறுவதற்கில்லை. பருத்தி சாகுபடி அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது, ராட்டினங்கள் செய்யப் படுகின்றன, துணிக்குச் சாயம் ஏற்றப்படுகிறது, பஞ்சு அரைப் பதிலிருந்து நெசவு வரைக்கும் எல்லா வேலைகளையும் செய்வ தற்குக் கையால் இயக்கப்படும் சாதாரண யந்திரங்கள் செய்யப் படுகின்றன என்பவற்றைச் சொன்னாலே போதும். இந்த யந்திரங்கள் மேலும் மேலும் அபிவிருத்தி செய்யப்படுகின்றன. அதோடு அதிக ஆற்றலுள்ள ரக ராட்டினத்தை உற்பத்தி செய் வதில் காணப்பட்ட முன்னேற்றம் என் உள்ளத்திற்கு ஒரு கவிதையாகவே இருக்கிறது.

—'ஹரிஜன்' - 19—12—1948

[குஜராத்தியிலிருந்து ஸ்ரீ வி. ஜி. டி. ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த 'செயல் முறையில் ஆசிரம அனுஷ்டானங்கள்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 2

# சுதேசியின் உண்மையான அர்த்தம்

**கேள்வி:** ஒருவர் தம்முடைய அண்டை வீட்டுக்காரர்களுக்குச் சேவை செய்யும் அதே சமயத்தில் மனித வர்க்கம் முழுவதற்கும் சேவை செய்துவிட முடியுமா? சுதேசியின் உண்மையான பொருள் என்ன?

**பதில்:** முதல் நாள் மாலையிலேயே இந்தக் கேள்விக்கு நான் பதில் அளித்துவிட்டேன். ஒருவர் தம் அண்டை வீட்டுக்காரர்களுக்கும் மனித வர்க்கத்துக்கும் ஏககாலத்தில் சேவை செய்ய முடியும் என்ற உண்மையில் எனக்குப் பூரணமான நம்பிக்கை இருக்கிறது. அதற்கு நிபந்தனை என்னவென்றால், அண்டை வீட்டுக்காரர்களுக்குச் சேவை செய்வதில் எந்த வகையிலும் சுயநலமாகவோ, ஓரிடத்திற்கு மட்டும் பிரத்தியேகமானதாகவோ இருக்கக்கூடாது. அதாவது, மற்றொரு மனித ஜீவனை எந்த விதத்திலும் சுரண்டுவதாக இருக்கக் கூடாது. அப்பொழுது அண்டை வீட்டுக்காரர்கள், இப்படிப்பட்ட சேவை செய்யப்படுவதன் உண்மையான பொருளை உணர்ந்துகொள்ளுவார்கள். தாங்கள் தங்கள் அண்டை வீட்டுக்காரர்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவார்கள் என்பதையும் அவர்கள் அறிந்து கொள்ளுவார்கள். இவ்வாறு பார்க்கும்போது, இருக்க இருக்கப் பெரிதாகும் பனிப் பந்து மாதிரி சேவையானது உலகெங்கும் பரந்து வியாபிக்கும்.

மற்றவர்களை விட்டுவிட்டுத் தனக்கு அடுத்த வீட்டில் வசிப்பவருக்குச் சேவை செய்யும்படி செய்வதுதான் சுதேசி என்று ஆகிறது. நான் ஏற்கனவே குறிப்பிட்ட நிபந்தனையின்படி இவ்வாறு சேவை செய்யப்பட்ட அண்டை வீட்டுக்காரர், தானும் தன் அண்டை வீட்டுக்காரருக்குச் சேவை செய்தாக வேண்டும் என்பதே. இந்த அர்த்தத்தில், சுதேசி ஒருபோதும் ஓரிடத்தில் மட்டும் பிரத்தியேகமாகக் கைக்கொள்ள வேண்டிய விஷயமாக இருந்ததில்லை. சேவை செய்வதற்கான மனித சக்திக்கு உள்ள விஞ்ஞான பூர்வமான வரையறையையே அது ஒப்புக்கொள்ளுகிறது.

—'ஹரிஜன்' - 23—3—1947

['காந்திஜியின் பாத யாத்திரை நாட்குறிப்பு' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

# 3
# வியாபாரிகளின் கடமை

[புரோச் வியாபாரிகளின் வரவேற்புப் பத்திரத்திற்கு அளித்த பதில்.]

வியாபாரிகள் எப்பொழுதும் தீர உணர்ச்சியும், புத்திக் கூர்மையும், செல்வமும் உடையவர்கள். ஏனெனில், இந்த இயல்புகள் இல்லாவிட்டால் அவர்களுடைய வியாபாரம் தொடர்ந்து நடைபெற்று வர முடியாது. ஆனல், இப்போது அவர்கள் தேச பக்தி உணர்ச்சியையும் கொள்ள வேண்டும். மதத்திற்குக்கூட தேசபக்தி அவசியம். மத உணர்ச்சி வேகத்தின் மூலம் தேசபக்தி உணர்ச்சி விழித்து எழுமாயின், அந்தத் தேச பக்தி சுடர்விட்டுப் பிரகாசிக்கும். ஆகவே, வர்த்தக சமூகத்தில் தேசபக்தி உணர்ச்சியைத் தூண்டிவிட வேண்டியது அவசியம்.

முன்பைவிட இப்போது வியாபாரிகள் பொது விவகாரங்களில் அதிகப் பங்கெடுத்துக்கொள்ளுகிருர்கள். தேச பக்தியின் மூலம் வியாபாரிகள் ராஜீய காரியங்களில் கலந்துகொள்ளும்போது சுயராஜ்யம் வந்துவிட்டது போலத்தான் நாம் எப்படிச் சுயராஜ்யம் பெற முடியும் என்று உங்களில் சிலர் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கலாம். வர்த்தக சமூகம், தேச பக்தி உணர்ச்சியைப் புரிந்துகொள்ளும்போதுதான் நாம் சீக்கிரமாகச் சுயராஜ்யம் பெற முடியும் என்று நான் என் நெஞ்சில் கை வைத்துக் கூறுகிறேன். அப்பொழுது சுயராஜ்யமானது ஓர் இயல்பான விஷயமாக இருக்கும்.

சுயராஜ்யத்தைத் திறந்தளிக்கும் பற்பல திறவுகோல்களில், சுதேசி விரதம் தங்கத் திறவுகோலாகும். நாட்டில் சுதேசி விரத அனுஷ்டானத்தைக் கட்டாயமாக்குவது வியாபாரிகளின் கையில் இருக்கிறது. இது ஒரு தீரச் செயல், இதை வியாபாரிகளால் பிரபலப்படுத்த முடியும். இந்தத் தீரச் செயலை மேற்கொள்ள வேண்டுமென்று வியாபாரிகளை நான் பணிவாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். அப்புறம், உங்களால் எப்படிப்பட்ட அற்புதங்களெல்லாம் நிகழ்த்த முடியும் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

இது அப்படியிருக்க, இந்நாட்டில் சுதேசி அனுஷ்டானத்துக்கும், சுதேசி இயக்கத்துக்கும் நாசத்தை உண்டுபண்ணியது வர்த்தக சமூகந்தான் என்பதை வருத்தத்துடன் சொல்லவேண்டியிருக்கிறது. சமீப காலமாக வங்காளத்தில், விலைவாசிகளின் அதிகரிப்பைப்பற்றிய புகார்கள் கிளம்பியிருக்கின்றன. அவற்றுள் குஜராத் மீது கிளம்பியிருக்கும் புகாரும் ஒன்று. வேஷ்டி விலைகள் அசாதாரணமாகக் கூட்டப்பட்டிருக்கின்றன என்றும், வேஷ்டிகள் குஜராத்திலிருந்து போகின்றன என்றும் அங்கே புகார் சொல்லப்

படுகிறது. நீங்கள் பணம் சம்பாதிக்கக்கூடாது என்று யாரும் சொல்லவில்லை. ஆனால், அதைக் கெட்ட வழியில் சம்பாதிக்காமல் நல்ல வழியில் சம்பாதிக்க வேண்டும். நியாயமான வழிகளில்தான் வியாபாரிகள் பணம் சம்பாதிக்க வேண்டும். அநியாயமான வழிகளை ஒருபோதும் கடைப்பிடிக்கக் கூடாது.

இந்தியாவின் பலம் வர்த்தக சமூகத்திடம் இருக்கிறது. ராணுவத்தினிடம்கூட அவ்வளவு பலம் இல்லை. யுத்தத்துக்குக் காரணம் வர்த்தகம். யுத்தத்துக்கு வழி திறந்துவிடும் திறவுகோல் வர்த்தக சமூகத்தின் கையில் இருக்கிறது. வர்த்தகர்கள் பணத்தைத் திரட்டுகிறார்கள். அதன் பலத்தில் ராணுவம் திரட்டப்படுகிறது. இங்கிலாந்து, ஜெர்மனி ஆகியவற்றின் பலம் அந்நாடுகளின் வர்த்தக சமூகத்தையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது. ஒரு நாட்டின் சுபிட்சம், அதன் வர்த்தக சமூகத்தைப் பொறுத்தே இருக்கிறது. வர்த்தக சமூகத்தின் வரவேற்புப் பத்திரத்தைப் பெறுவது நல்லதிர்ஷ்டத்தின் அறிகுறி என்றே நான் கருதுகிறேன். எனக்குப் புரோச்சைப் பற்றிய நினைவு வரும் போதெல்லாம், இன்றைய தினம் எனக்கு வரவேற்பளித்த வியாபாரிகள் அற வழியில் நம்பிக்கையும் தேசபக்தியும் கொண்டிருக்கிறார்களா என்று விசாரிப்பேன். எனக்கு ஏமாற்றம் அளிக்கும் பதில் கிடைத்தால், வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கும் பழக்கம்தான் இந்தியாவுக்கு வந்திருக்கிறது என்றும், அதில் எனக்கு ஒரு பங்கு கிடைத்தது என்றுமே நினைத்துக்கொள்ளுவேன்.

[சென்னை, ஜி. ஏ. நடேசன் கம்பெனி வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் சொற்பொழிவுகளும் எழுத்துக்களும்' என்ற நூலின் நான்காம் பதிப்பிலிருந்து எடுத்தது.]

# 4

# பகிஷ்காரம் சுதேசியா?

பகிஷ்காரம் என்பது, பலாபலன்களைப் பார்க்கும்போது சுதேசியைப் போலவே இருப்பதோடு மட்டுமன்றி, அதைவிட மேலானதாகவும் இருக்கிறது என்று காட்டுவதற்காக ஸ்ரீ பாப்திஸ்தா பேசியிருக்கிறார். அவர் அவ்வாறு கூறுவதற்குக் காரணம், உள்நாட்டில் செய்த சாமான்களை உபயோகிப்பதற்குத் தூண்டுதல் அளிப்பதில் அது சுதேசியின் நோக்கத்தை நிறைவேற்றும் அதே சமயத்தில், பிரிட்டிஷ் வர்த்தகரின் பையிலும், உற்பத்தியாளரின் பையிலும் கை வைத்து அவர்களிடம் ஒரு விளைவை உண்டுபண்ணுகிறது என்பதாகும். பகிஷ்காரத்தை நான் எதிர்ப்பது முற்றிலும் ஓர் ஆன்மிகக் கருத்தாக இருப்பதால், என் எதிர்ப்பைப் பிரிட்டிஷ் மக்கள் புரிந்துகொள்ளவில்லை

என்றும், அதே சமயம் பகிஷ்காரத்தைத் தங்களுக்குத் தெரிந்த, முற்றிலும் சட்டபூர்வமான ஓர் ஆயுதம் என்றே எப்போதும் அவர்கள் கருதியிருக்கிருர்கள் என்றும் ஸ்ரீ பாப்திஸ்தா சொல்லுகிருர்.

பலாபலன்களைப் பொறுத்தவரையில்கூட, சுதேசியைப் போன்றதுதான் பகிஷ்காரம் என்று கூறுவது, இரண்டையுமே புரிந்துகொள்ளாததனுல்தான். சுதேசி நிரந்தரமான ஒரு கொள்கை. அதை அலட்சியப்படுத்தியதால் மனித வர்க்கத்துக்குச் சொல்லொணுத துன்பம் விளைந்திருக்கிறது. சொந்த நாட்டிலேயே சாமான்களை உற்பத்தி செய்து, சொந்த நாட்டிலேயே விநியோகிக்க வேண்டும் என்பதுதான் அதன் பொருள். அதனுடைய குறுகிய, தற்கால அர்த்தத்தில், குடியானவர்களின் மூலமாக வருடந்தோறும் அறுபது கோடி ரூபாயை மிச்சம் பிடிப்பதாக ஆகும். அதனுல், 72 சத விகித மக்கள் தொகையினருக்கு மிகவும் தேவைப்படும் ஓர் உபதொழிலை அளிப்பதாகவும் பொருள்படும். சுதேசி ஒரு நிர்மாணத் திட்டம். பகிஷ்காரமோ, பிரிட்டிஷ் மக்களுக்குப் பண நஷ்டத்தை உண்டுபண்ண வேண்டுமென்றே முயற்சி செய்வதன் மூலம் அவர்களை நிர்ப்பந்திப்பதற்காக மேற்கொள்ளப்படும் ஒரு தாற்காலிக நடவடிக்கையாகும். ஆகையால், பகிஷ்காரமானது காரியத்தைச் சாதிப்பதற்காகப் பிரயோகிக்கப்பட்ட ஒரு நியாயமில்லாத சக்தியைப் போல் வேலை செய்கிறது. அதன் மறைமுகமான விளைவாக உள்நாட்டில் அதிகமாக உற்பத்தி செய்யப்படலாம். ஆனுல், அதற்குப் பகிஷ்காரம் விடாப்பிடியாக நீண்ட காலம் நடைபெற்று வர வேண்டும். அதன் விளைவாக, மற்ருெரு சங்கடமான அம்சம் உள்ளே புகுந்துவிடுவது நிச்சயம். ஏனென்ருல், பகிஷ்காரம் எல்லா அந்நியச் சாமான்களையும் விலக்குவதாக இல்லை. பிரிட்டிஷ் சாமான்களை விலக்குவதாக மட்டுமே இருக்கிறது. அதன் காரணமாக, ஜப்பான், அமெரிக்கா போன்ற வேறு அந்நிய நாடுகளுக்கு அதிக ஊக்கம் அளிக்கப்படுகிறது. இந்திய வர்த்தகத்தில் ஜப்பானின் செல்வாக்கு வளர்ந்துகொண்டே வருவதை நிச்சயமாக என்னுல் மன அமைதியோடு சிந்திக்க முடியவில்லை. பகிஷ்காரம் பலன் தர வேண்டுமென்ருல், கூடிய மட்டிலும் அதை எல்லோரும் அனுஷ்டித்தாக வேண்டும். ஆனுல், சுதேசியை ஒருவர் கடைப்பிடித்தாலும், அம்மட்டுக்கு நாட்டுக்கு நல்லதுதான். கோப உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவதன் மூலமே பகிஷ்காரத்தை வெற்றிகரமாகச் செய்ய முடியும். ஆகையால், அது நாம் நினைக்காத விளைவுகளையும் உண்டுபண்ணிவிடக்கூடும். சம்பந்தப்பட்ட இரு சாராருக்குமிடையில் நிரந்தரமானவிரோதம் ஏற்படுவதற்குக்கூட வழி செய்துவிடக்கூடும். ஆனுலும், கோப உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவது பகிஷ்காரத்தின் தவிர்க்க முடியாத விளைவு என்பதை—குறிப்பாக என்னைப் போன்ற ஒருவர் இயக்கத்தை நிர்வகிப்பதாக இருந்தால்—ஸ்ரீ பாப்திஸ்தா மறுக்கிருர். அந்த அபிப்பிராயத்துக்கு நான் துணிந்து சவால் விடு

கிறேன். ஓர் அநீதியால் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஒருவனுடைய உணர்ச்சிகள், ஒரு சிறு காரணம் கிடைத்த மாத்திரத்தில் பொங்கி எழத் தயாராக இருக்கும். பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரிக்கும்படி ஒருவரைக் கேட்டுக்கொள்ளுவதன் மூலம், தவறு செய்பவனைத் தண்டிப்பது என்ற கருத்தை வற்புறுத்துகிறீர்கள். தண்டனையோ, நிச்சயமாகக் கோபத்தைக் கிளப்புகிறது.

என்னுடைய அபிப்பிராயத்தை எதிர்ப்பதற்காக எழுதியுள்ள ஸ்ரீ ஜாஹஹிர் அகமத்தும், ஒத்துழைப்பை வாபஸ்பெறுவது சாராம்சத்தில் பகிஷ்காரத்தைப் போன்றதுதான் என்றும், அதனால் ஏற்படும் பலன்தான் மிக மிகக் குறைவு என்றும், ஏனென்றால், அது அநேகமாகக் காரிய சாத்தியமற்றது என்றும் கூறுகிறார். இப்பொழுது நான், தவறு செய்யும் ஒருவருக்கு உதவி புரிந்தால்—அவரோடு ஒத்துழைத்தால்—தவறு செய்வதில் நான் பங்கெடுத்துக்கொள்ளுகிறேன். ஆகையால், தவறு கடுமையானதாக இருக்கும்போது, ஒத்துழைப்பை வாபஸ் பெறுவது ஒரு கடமையாகிறது. ஒத்துழைப்பதை ஒருவர் நிறுத்திவிட்டாலும், அந்த அளவுக்கு அது பலனுள்ளதே. ஏனெனில், ஒருவராவது தன் கடமையைச் செய்கிறார். ஆனால், பகிஷ்காரம் ஒரு தண்டனையாக இருப்பதாலும், எந்தத் தண்டனையும் ஒரு கடமையாக இருக்க முடியாததாலும், பகிஷ்காரம் தன் விளைவை உண்டு பண்ணுத வரையில் வீண் விரயமாக்கப்பட்ட ஒரு சக்தியாகவே அது இருக்கும். மேலும், அரை டஜன் பேர் சேர்ந்து பகிஷ்காரம் செய்வது, யானையை வைக்கோலால் அடித்தது போலாகும்.

ஓர் ஆன்மிகக் கருத்தை ஆதாரமாகக்கொண்டே அடிப்படையில் நான் பகிஷ்காரத்தை எதிர்க்கிறேன் என்பதையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அது ஆன்மிக நியதியை ராஜீய உலகத்துக்கும் விஸ்தரிப்பதற்கு நான் முயன்று கொண்டிருக்கிறேன் என்று கூறுவதேயாகும். பிரிட்டிஷ் மக்கள் அதைப் புரிந்துகொள்ளமாட்டார்கள் என்பதையும் நான் மறுக்கவே செய்கிறேன். அதைத் தென்னாப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் புரிந்து பாராட்டும்படி செய்வதில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படவில்லை. ஆன்மிகமான ஒரு செயலை பலன் தரத்தக்கவாறு செய்வதற்கு அதன் ஆன்மிகமான கருத்தை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை. என்னுடைய வாதம் என்னவென்றால், ஆன்மிகமானதாகவே உள்ள செயலைப் புரிந்துகொள்ளுவதும் சுலபம்; செய்து முடிப்பதும் சுலபம். ஆன்மிகம் பிரதானமாக நடைமுறைக்கு ஒத்துவராவிட்டால், அதனால் யாதொரு பயனும் இல்லை. நம் கைகள் அழுக்காக இருக்கும்போது அவற்றைக் கழுவ வேண்டும் என்பதைப் புரிந்துகொள்ளுவது சிரமமல்ல. அதைச் செய்வதும் அப்படியே சிரமமில்லாத காரியமாகும். எனினும், அது சாராம்சத்தில் ஓர் ஆன்மிகச் செயலாக இருக்கிறது. சுத்தத்தைப் பற்றிய

ஆன்மிகக் கருத்து இல்லாமலே அழுக்கடைந்த கைகளைச் சுத்தம் செய்வதன் அவசியத்தை நாம் ஏற்றுக்கொள்ளுவதாக இருந்தால், ஆன்மிக அடிப்படையைப் புரிந்துகொள்ளுவதற்காகக் காத்துக்கொண்டிராமல் பகிஷ்காரத்தின் பிரத்தியட்சமான தோல்வியையும், குறிப்பிட்ட நிலைமைகளில் ஒத்துழையாமையின் பிரத்தியட்சமான அவசியத்தையும் நாம் ஒப்புக்கொள்ளலாம்.

அப்படியானால் பகிஷ்காரம் அனுபவ சாத்தியமானதா? பிரிட்டிஷ் சாமான்கள் பகிஷ்காரத்தை ஸ்ரீ பாப்திஸ்தா சரி என்று ஏற்றுக்கொண்டிருக்கிறார். அந்நியச் சாமான்களை நீக்கி விட்டு சுதேசியை ஆதரிப்பது, நாட்டிற்கு மிக உயர்ந்த, நிரந்தர மான நன்மையானது என்பது போதிய தூண்டுதலாக நம் வியா பாரிகளுக்கு அமையாவிட்டால், பிரிட்டிஷ் மக்களிடமிருந்து நியாயம் பெறுவதற்காகத் தாற்காலிகமாக அவர்களுடைய சரக் குகளை வாங்காமல் நிறுத்திவிட வேண்டும் என்று வியாபாரி களைக் கேட்டுக்கொள்ளுவது படுதோல்வியில்தான் முடியும் என்று நான் துணிந்து கூறுகிறேன். சமயம் போய்விட்ட பின்னர் பகிஷ்காரத்தினால் யாதொரு பயனும் ஏற்படாது. பகிஷ்காரம் பலன் தர வேண்டுமானால், அதை உடனடியாகச் செய்ய வேண்டும். உடனடியான நடவடிக்கைக்கு நாம் போதிய அளவு ஒன்றுபட்டிருக்கவில்லை என்பது என் அபிப்பிராயம். நினைத்த மாத்திரத்தில் எந்த ஸ்தாபனமும் பகிஷ்காரத்தைத் தோற்று விக்க முடியாத வகையில் பகிஷ்காரம் செய்யும் பிரதேசத்தின் விஸ்தீரணமும் பெரிதாக இருக்கிறது. மேலும், ஜெர்மனி சில வருடங்களுக்கு முன் தன் சாமான்களை இங்கிலாந்தின் மூலம் இந்தியாவுக்கு அனுப்பியது போலவே, பிரிட்டிஷ் உற்பத்தியாளர் களும் ஜப்பான் மூலமாகவோ, அமெரிக்கா மூலமாகவோ இந் தியாவுக்கு அனுப்புவதில் கஷ்டம் எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

நான் சுதேசியை அபார நம்பிக்கையோடு ஆதரித்துப் பேசு வதற்குக் காரணம், அது முன்னேறும்போது, ஆதரித்து மேன் மேலும் பலம் பெறக்கூடிய ஒரு பரிணமச் செயல் முறையாக இருப்பதுதான். எந்த ஸ்தாபனமும் அதை அனுஷ்டிக்க முடியும். ஆட்சியாளர்களின் அல்லது பிரிட்டிஷ் மக்களின் நியாயத்தையோ, அநியாயத்தையோ பொறுத்ததாக இல்லாமல் தனிப்பட்டுச் சுயேச்சையான ஒன்றாக அது இருக்கிறது. அதுவே அதனால் அடையும் பலன். "தருமத்தை ஒரு சிறிது கடைப்பிடித்தாலும், அது ஒரு மாபெரும் ஆபத்திலிருந்து காப்பாற்றுகிறது; அதில் சக்தி வீணாவதில்லை; தோல்வியும் இல்லை." ஆகவே, சுதேசியும் சுதந்திரமும் ஒன்றல்ல; ஆனால், ஒன்றுக்கு ஒன்று எதிரிடையான துருவங்கள்.

— 'எங் இந்தியா' - 14 - 1 - 1920

# 5

# பத்ராவதியில் இந்தியத் தொழில் முயற்சி

கிருஷ்ணராஜ சாகர அணைக்கட்டைப்போல், பத்ராவதியும் ஸர். எம். விஸ்வேஸ்வரய்யாவின் தேசபக்திக்கும் ஆக்கபூர்வமான மேதைக்கும் சான்ருக இலங்குகிறது. அவர் தம் திறமைகளையும், அறிவையும், உழைப்பையும், முழு நேரத்தையும், சக்தியையும் மைசூரின் பணிக்கு அர்ப்பணித்திருக்கிருர். கடந்த காலத்தில் பலவிதமான கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருந்த இரும்புத் தொழிற்சாலை, ஸர். எம். விஸ்வேஸ்வரய்யா கூறுவது போல், ஏற்கனவே ஆண்டுதோறும் 10 லட்சம் ரூபாயை வெளியிலிருந்து சமஸ்தானத்துக்குள் கொண்டு வருகிறது. அத்துடன் சுமார் 5,000 பேருக்கு வேலை கொடுக்கிறது. சாதாரணமாகக் கவனம் செலுத்தினலும், எதிர்காலத்தில் அது சுயபலத்தில் இயங்கிக் கொண்டிருக்கும்; சர்க்காருக்கு ஒரு பாரமாக இருக்கும் நிலைமை போய்விடும். திட்டத்தைத் தொடங்கி வைத்தவரைவிட வேறு யாருக்கும், அந்த முயற்சியிலுள்ள குறைகள் அநேகமாக நன்கு தெரிந்திருக்க முடியாது. ஆகவே, கதருக்குப் புத்துயிரளிக்கப் பாடுபட்டுக்கொண்டும், அதன் சாவதானமான வளர்ச்சிக் கட்டங்களைக் கவனித்துக்கொண்டும் இருப்பவர், இந்தத் துணிகர முயற்சியைக் குறை கூறுபவரைப் பொறுமையாக இருக்கும்படி தாராளமாகக் கேட்கலாம். மேற்கண்ட திட்டம் வேலை செய்யத் தொடங்கியநான்கு வருடகாலத்தில்,பிரதான உற்பத்திப்பொருள்களான இரும்புப் பாளங்கள், காடி, மதுசாரம், இரும்பு, வார்ப்படங்கள் ஆகியவற்றிற்காகும் உற்பத்திச் செலவு 50 சத விகிதத்துக்கும் அதிகமாகக் குறைக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. அத்துடன், முந்திய ஆண்டைப்போல் இல்லாமல் கடந்த அரை ஆண்டில் நஷ்டம் எதுவும் ஏற்படவில்லை; நடைமுறை இனத்திலும், இருப்பு மதிப்பிலும் லாபமே கிடைத்திருக்கிறது. மதிப்பிடப்பட்ட சராசரி தினசரி உற்பத்தியை இப்போதைய உற்பத்தி அநேகமாக எட்டி இருக்கிறது என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்தத் தொழிற்சாலையின் விஸ்தரிப்புத் திட்டத்திலும் பல்ப், காகிதம் போன்ற வனத்தொழில்களை ஆரம்பிப்பதிலும் ஸர். எம். விஸ்வேஸ்வரய்யா வெற்றி பெறுவாராஞல், கடந்த காலத்தில் ஏற்பட்ட நஷ்டங்கள் அவற்றின் அளவுக்கு அதிகமாகவே ஈடு செய்யப்பட்டுவிடும் என்று உறுதி கூறப்படுகிறது.

முன்னேற்ற ஆர்வமுள்ள இந்தச் சமஸ்தானத்தின் இந்தத் தொழில் முயற்சியைக் காண வேண்டுமென்ற ஆசை காந்திஜிக்கு நிச்சயமாக இருந்தபோதிலும்,அவரை இங்கே வரும்படி செய்தது பணம்தான்.அங்கே தம்மை வரும்படி அழைத்ததற்காக நிர்வாகத்தினருக்கும், ரூ. 500 கொண்ட பண முடிப்பு அளித்ததற்காகத் தொழிலாளர்களுக்கும் காந்திஜி தமது சுருக்கமான பிரசங்

கத்தில் நன்றி தெரிவித்துவிட்டு, அந்தத் தொழிற்சாலையைப் பற்றித் தமக்கு ஏற்பட்டிருக்கும் கருத்தைத் தெரிவிக்கலானார்: "உங்கள் அழைப்பும், உங்கள் பணமுடிப்பும், இரும்புப் பேழையும், நான் ஜாம்ஷெட்பூருக்கு விஜயம் செய்ததை ஞாபகப் படுத்துகின்றன. ஆனால், இங்கே அதிகமாக என் கவனத்தைக் கவர்ந்தது, இந்த ஸ்தாபனம் மேலிருந்து கீழ்வரை முழுவதும் சுயபூர்த்தியுள்ளதாக இருப்பதாகும். இந்தத் தொழில் நிலையத்தின் கர்த்தாவாக இருப்பவர் ஒரு மைசூர்க்காரர்; உத்தியோகஸ்தர்களும் தொழிலாளர்களும் பெரும்பாலும் மைசூர்க்காரர்கள்; எப்படியும், எல்லோரும் தென் இந்தியர்கள். இதற்காக நீங்களும் இந்தியாவும் தாராளமாகப் பெருமைப்படலாம். இந்தியாவில் நுண்ணிய அறிவு இருக்கிறது; ஆனால், நடைமுறையில் செய்து காட்டும் மேதை இல்லை என்று சில இடங்களில் கூறப்பட்டதை நீங்கள் பொய்யாக்கிவிட்டீர்கள். இந்த இரும்புத் தொழிற்சாலை வளர்ந்தோங்கி, நாளுக்கு நாள் சமஸ்தானத்துக்குச் சுபிட்சத்தை உண்டுபண்ணும் என்று நம்புகிறேன்; அதற்காகப் பிரார்த்திக்கிறேன். தாதுப் பொருள்கள் மிகுதியாக உள்ள ஒரு நாட்டில், இப்படிப்பட்ட தொழில் முயற்சிகளுக்கு இடம் உண்டு. இந்தப் பொருள்களை மக்கள் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டியது நம் கடமை. ஸர். எம். விஸ்வேஸ்வரய்யா இங்கே இல்லையே என்பதற்காக வருந்துகிறேன். ஆனால், மனப்பூர்வமாக வரவேற்று அவர் அனுப்பியுள்ள தந்தி, அவரது உள்ளம் இங்கே இருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

"ஜாம்ஷெட்பூரில் தொழிலாளர்களுக்கு நான் கூறியதுபோல் இங்கே உள்ள தொழிலாளர்களாகிய உங்களுக்கு இப்பொழுது ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். நான் ஏற்கனவே கூறியதுபோல், உங்கள் தொழில் முயற்சி தேவையாகவே இருக்கிறது. ஆனால், நீங்கள் எந்த வேலைக்காகப் பண முடிப்புக் கொடுத்தீர்களோ, அது இன்னும் அதிகமாகத் தேவைப்படுகிறது. உங்கள் தொழில் முயற்சிகளைப் போன்றவை மத்திய தர வர்க்கத்தாருக்கும், பணக்காரர்களுக்கும் தேவை. ஆனால், திக்கற்ற ஏழைகளை நீங்கள் கவனிக்காமல் ஒதுக்கிவிட முடியாது. இரண்டு வழிகளில்—கதருக்குப் பண உதவி செய்வதன் மூலமும், அதை நீங்களே அணிவதன் மூலமும்—நீங்கள் உதவி செய்ய முடியும். இரும்புக்கு மார்க்கெட் இல்லாவிட்டால் எப்படி உங்கள் தொழிற்சாலை வேலை செய்யாமல் நின்றுவிடுமோ, அதே போல ஏழை மனிதனின் உழைப்பினால் உற்பத்தியானவைகளை நீங்கள் அணியாவிட்டால், கதர் இயக்கமும் முன்னேற முடியாது. முதலாளிகள் தம் தொழிற்சாலையை நடத்திக் கொண்டு போகும் அதே சமயத்தில் ஏழைகளைக் கவனிக்காமல் அலட்சியம் செய்துவிடக் கூடாது என்று அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். முடிவாக, உத்தியோகஸ்தர்களுக்கும் தொழிலாளிகளுக்குமிடையே இனிய நட்புறவுகள் நிலவுகின்றன என்றும், மதுக் கடையும், சூதாடும் களமும் உங்கள் குடியிருப்புப் பகுதியை நெருங்காமல் பல மைல்



லங்காஷயர் டார்வென் ஜவுளி மில் தொழிலாளருடன் காந்திஜி-1931
செப்டம்பர் 26-ஆம் தேதி



டார்வெவில் ஒரு தொழிலாளர் குடும்பத்துடன் மகாத்மா பேசிக்கொண்டிருக்கிருர்.

களுக்கு அப்பாலேயே அவற்றைத் தடுத்து வைப்பதில் கவனம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது என்றும் நான் நம்புகிறேன்.

—'எங் இந்தியா' – 1—9—1927

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் 'வாராந்திரக் கடித'ப் பகுதியில், 'பத்ராவதி' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை.]

## 6

# வர்த்தகத் துறையில் பாகுபாடு

[எதிர்கால இந்திய அரசியல் சட்டத்தில் நிதி சம்பந்தமான பாதுகாப்புக்கள் வேண்டும் என்று இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் வியாபாரிகள் கோருவதைப் பற்றி இந்திய தேசிய காங்கிரஸின் கருத்து என்ன என்பதை விவரித்து லண்டன் வட்ட மேஜை மகாநாட்டின் சம்மேளன அமைப்புக் கமிட்டிக் கூட்டத்தில் காந்திஜி ஆற்றிய சொற்பொழிவு.]

லார்டு சான்ஸலர் அவர்களே! நண்பர்களே! ஸ்ரீ பெந்தால் மிகவும் நிதானமான முறையில் தம் கருத்துக்களைத் தெரிவித்ததற்காக அவருக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அத்துடன், அவர் இரண்டு அபிப்பிராயங்களையும் சேர்த்து வெளியிட்டதன் மூலம் தமது பேச்சில் மாசு படியுமாறு செய்திருக்க வேண்டியதில்லை என்றும் நினைக்கிறேன். அவர் வெளியிட்ட ஒரு கருத்து, இந்தியாவுக்குச் சில நன்மைகளைச் செய்திருப்பதை முன்னிட்டு ஐரோப்பியர்கள் அல்லது பிரிட்டிஷ்காரர்கள் உரிமை கொண்டாடுகிறார்கள் என்பதாகும். இந்த அபிப்பிராயத்தை அவர் வெளியிடாமல் தவிர்த்திருக்கலாம். ஆனால், வெளியிட்ட பிறகு, அதை மரியாதையான முறையில் ஸர் புருஷோத்தமதாஸ் தாக்கூர்தாஸ் மறுத்ததையும், அவ்வாறே இப்போது பிரோஸ் சேத்னா மறுத்ததையும் கண்டு லார்டு ரீடிங் ஆச்சரியப்பட்டதைப்போல் ஆச்சரியப்பட்டிருக்கவும் வேண்டியதில்லை. ஸ்ரீ பெந்தால், தாம் பிரதிநிதித்துவம் வகிக்கும் மாபெரும் ஸ்தாபனத்தின் சார்பில் விடுத்த அந்த அறிக்கையில் காணப்படும் மிரட்டலையும் அவர் தவிர்த்திருக்கலாம். ஸ்ரீ பெந்தால் வெளியிட்ட ஐரோப்பிய சமூகத்தின் கோரிக்கைகளையும், சில தினங்களுக்கு முன் தனித் தொகுதித் தேர்தல் வேண்டுமென்று கோரியதில் வெளிப்பட்ட பிரிவினை மனப்பான்மையையும் இந்திய தேசியவாதிகள் ஏற்றுக்கொண்டு, அந்தப் பிரிவினைக் கூட்டுறவில் சேர வேண்டும் என்றும், அப்பொழுதுதான் தேசியக் கோரிக்கைக்கு ஐரோப்பியர்கள் ஆதரவு கிடைக்கும் என்றும் அவர் சொன்னார். அந்தப் பிரிவினைக் கோரிக்கை பற்றி அன்றொரு நாள் வேதனையோடு நான் பேசினேன். முந்திய மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானத்தை ஆராய நான் முயன்றிருக்கிறேன். அந்தத் தீர்மானம் உங்களுக்குத் தெரிந்ததுதான் என்றாலும், அதைத்

திரும்பவும் வாசிக்க விரும்புகிறேன். ஏனென்ருல், அந்தத் தீர் மானம் சம்பந்தமாக நான் சில விஷயங்களைச் சொல்ல விரும்பு கிறேன்.

"பிரிட்டிஷ் வர்த்தக சமூகத்தின் வேண்டுகோளுக்கு இணங்க, இந்தியாவில் வர்த்தகம் செய்யும் பிரிட்டிஷ் வர்த்தக சமூகம், ஸ்தாபனங்கள், கம்பெனிகள் ஆகியவற்றின் உரிமைகளுக்கும், இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளுக்கும் இடையே எவ்வித வித்தியாசமும் இருக்கக்கூடாது என்ற கொள்கை பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது."

மீதிப் பகுதியை நான் வாசிக்க வேண்டிய அவசியமில்லை. ஸர் தேஜ் பகதூர் சப்ரூவிடமும், ஸ்ரீ ஜய்க்கரிடமும் நான் மிகுந்த மதிப்பும் மரியாதையும் வைத்திருந்த போதிலும், இந்தத் தீர்மானத்துக்கு நான் இணங்காமல் மாறுபடுவதற்காக மிகவும் வருந்துகிறேன். அதனுல், அந்தத் தீர்மானம் தெளிவில்லாமல் இருக்கிறது என்றும், அதில் சீர்திருத்தம் செய்ய இடம் இருக்கிறது என்றும் நேற்று ஸர் தேஜ் பகதூர் சப்ரூ ஒப்புக்கொண்டபோது நான் மகிழ்ச்சியடைந்தேன். இந்தத் தீர்மானத்தை நீங்கள் கவனமாகப் படித்துப் பார்த்தால், அதன் பொதுத் தன்மையைக் கண்டுகொள்ளுவீர்கள். இந்தியாவில் வர்த்தகம் செய்யும் பிரிட்டிஷ் வர்த்தக சமூகம், ஸ்தாபனங்கள், கம்பெனிகள் ஆகியவற்றின் உரிமைகளுக்கும், இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளுக்கும் இடையே யாதொரு வித்தியாசமும் இருக்கக்கூடாது. இதை நான் சரியான முறையில் வியாக்கியானம் செய்துகொண்டிருக்கும் பட்சத்தில், அது பயங்கரமான விஷயம் என்றே நான் கருதுகிறேன். காங்கிரஸை இந்த மாதிரியான தன்மையுடைய ஒரு தீர்மானத்தை ஏற்கும்படி நான் செய்ய மாட்டேன். இந்தியாவின் எதிர்கால இந்திய அரசாங்கம் ஏற்கும்படியாகவோ நிச்சயமாகச் செய்யமாட்டேன்.

ஒவ்வொருவரின் தகுதியையும் பற்றி இங்கே யாதொரு பிரஸ்தாபமும் இல்லை. பிரிட்டிஷ் வர்த்தக சமூகத்தின் உரிமைகளும், இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளும் ஒரே மாதிரியானதாக இருக்க வேண்டும். அதனுல், இன வேற்றுமையோ, அதுபோன்ற வேறென்றே காட்டப்படுமோ என்ற நிலை இல்லை. இங்கே, பிரிட்டிஷ் வர்த்தக சமூகத்தினர் இந்தியாவில் பிறந்த பிரஜைகளின் உரிமைகளையே அனுபவிக்கிருர்கள். இந்தியாவில் பிறந்த எல்லாப் பிரஜைகளின் உரிமைகளுமே சம நிலையில் இருக்க வேண்டும். உத்தரவாதம் செய்யப்பட வேண்டும் என்ற கொள்கையைக்கூட என்னல் ஆதரிக்க முடியாது என்பதை என் முழுப் பலத்தையும் கொண்டு அழுத்தமாகக் கூற விரும்புகிறேன். அதற்குரிய காரணத்தை இப்பொழுது கூறுகிறேன்.

## நிலைமைகளைச் சமப்படுத்துவது

நிலைமைகளைச் சமப்படுத்துவதற்கு, இந்தியாவின் எதிர்கால அரசாங்கம், இப்போதுள்ள அரசாங்கம் செய்யாமல் உதாசீனம்

செய்துவிட்ட காரியத்தைத் தொடர்ந்து செய்யவேண்டியிருக்கும் என்று நினைக்கிறேன். அதாவது, இயற்கையினாலோ அல்லது அரசாங்கத்தினாலோ செல்வமும், மற்ற விசேஷச் சலுகைகளும் பெற்றிருப்பவர்களை ஒதுக்கிவிட்டு, பட்டினியால் செத்துக் கொண்டிருக்கும் இந்தியர்களுக்குச் சாதகமாகத் தொடர்ந்து பாரபட்சம் காட்ட வேண்டியிருக்கும். எதிர்கால அரசாங்கம், தொழிலாளிகளுக்கு ஒரு வேளை இனாமாக வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். அப்பொழுது இந்தியாவில் உள்ள பணக்காரர்கள், "அவர்களுக்கு நீங்கள் இனாமாக வீடுகள் கட்டிக் கொடுக்கும்போது, எங்களுக்கு அந்த மாதிரியான வீடுகள் தேவையில்லை என்றாலும், அதற்குப் பதிலாக வேறு சகாயங்கள் எங்களுக்குச் செய்யவேண்டும்" என்று சொல்லலாம். ஆனால், அரசாங்கம் அவ்வாறு செய்ய முடியாது. சந்தேகமில்லாமல் ஏழைகளுக்குச் சாதகமாகப் பட்சம் காட்டப்படும். அப்பொழுது பணம் படைத்தவர்கள், இந்தக் கொள்கையின்படி தங்களுக்குப் பாதகமான முறையில் பாரபட்சம் காட்டப்படுவதாகச் சொல்லக்கூடும்.

அதனால், இந்தியாவின் எதிர்கால அரசியல் சட்டத்தை உருவாக்குவதில், எங்கள் உதவியை ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவுக்கு மன்னர் சர்க்காருக்கு உதவுவதற்கு நாங்கள் முயலும் அதே சமயத்தில், மேலே சொன்ன பொதுப்படையான கொள்கையை இந்த மகாநாட்டில் எங்களால் ஏற்றுக்கொள்ள இயலாது என்பதைத் துணிந்து கூறுகிறேன்.

## பாகுபாடு செய்யும் கொள்கை

ஆனால், இவ்வளவும் கூறிய பிறகு, இனவேற்றுமை காண்பிக்கப்படக் கூடாது என்று பிரிட்டிஷ் வர்த்தகர்களும், ஐரோப்பியர் சபைகளும் நியாயமான முறையில் கோருவதை நான் பூரணமாக ஆதரிக்கவே விரும்புகிறேன். 20 ஆண்டுகளுக்கும் மேலாகவே மாபெரும் தென்னாப்பிரிக்க அரசாங்கத்துடன் அவர்களுடைய நிற வேற்றுமையையும், இந்தியர்களுக்கு விரோதமாகப் பாரபட்சமான முறையில் அவர்கள் சட்டமியற்றியதையும் எதிர்த்துப் போராட வேண்டியிருந்த நான், இப்போது இந்தியாவில் உள்ள, அல்லது எதிர்காலத்தில் இந்தியாவுக்கு வர விரும்புகிற பிரிட்டிஷ் நண்பர்களுக்கு விரோதமாக அப்படிப்பட்ட பாரபட்சம் காண்பிப்பதற்கு உடன்பட முடியாது. நான் காங்கிரஸ் சார்பிலுமே பேசுகிறேன். காங்கிரஸும் இதே கருத்தைத்தான் கொண்டிருக்கிறது.

ஆகவே, இதற்குப் பதிலாக, பின்கண்ட விதமாக ஒரு கொள்கையைக் கடைப்பிடிக்கலாம் என்று நான் யோசனை கூறுவேன். அந்தக் கொள்கைக்காக ஜெனரல் ஸ்மட்ஸுடன் பல வருட காலம் போராடும் இன்ப அனுபவமும், பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. அதில் அபிவிருத்தி செய்வதற்கு இடம் இருக்க

லாம். ஆனல், இந்தக் கமிட்டியும், குறிப்பாக ஐரோப்பிய நண்பர்களும் ஆராய்ந்து பார்க்கவேண்டும் என்பதற்காகவே நான் இந்தக் கொள்கையைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். "இந்தியாவில் பிறந்த பிரஜைகள் அனுபவிக்காத தடை எதுவும், இந்தியாவில் சட்டபூர்வமாக வசித்துக்கொண்டிருக்கிற அல்லது இந்தியாவில் பிரவேசிக்கிற யாருக்கும், இனம், நிறம் அல்லது மதத்தை மட்டும்—'மட்டும்' என்ற வார்த்தையை நான் அழுத்திக் கூறுகிறேன்—காரணமாகக் கொண்டு விதிக்கப்படமாட்டாது." இது எல்லோரையும் திருப்தி செய்யக்கூடிய கொள்கை என்று நான் நினைக்கிறேன். எந்தச்சர்க்காரும் இதற்கு மேல் அதிகமாகப் போக முடியாது. இந்தக் கொள்கையினல் விளையும் பயன்கள், சென்ற வருடக் கொள்கையிலிருந்து லார்டு ரீடிங் செய்த அல்லது செய்ய முயன்ற முடிவுகளினின்றும் வேறுபட்டவை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்தக் கொள்கையில், எந்த ஒரு பிரிட்டிஷ்காரருக்கும் விரோதமாக அல்லது எந்த ஓர் ஐரோப்பியருக்கும் அவர் ஐரோப்பியர் என்ற வகையில் விரோதமாக யாதொரு பாகுபாடும் இராது. பிரிட்டிஷாருக்குள்ளேயோ, மற்ற ஐரோப்பியருக்குள்ளேயோ, அமெரிக்கர், ஜப்பானியர் ஆகியவர்களுக்குள்ளேயோ நான் எவ்விதமான வித்தியாசம் பாராட்டவும் விரும்பவில்லை. பிரிட்டிஷ் காலனிகளின் அல்லது பிரிட்டிஷ் டொமினியன் நாடுகளின் உதாரணத்தை நான் பின்பற்றமாட்டேன். அவை, சாராம்சத்தில் நிற வேற்றுமையையும், இன வேற்றுமையையும் அடிப்படையாகக் கொண்ட சட்டங்களைக்கொண்டு இணைத்ததன் மூலம் தங்கள் சட்டப் புத்தகங்களை விகாரப்படுத்திவிட்டார்கள் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

சுதந்திர இந்தியா வேறு விதமான பாடத்தைக் கற்பிக்கும் என்றும், உலகத்துக்கு வேறு விதமான உதாரணத்தை ஏற்படுத்தும் என்றும் கருதவே நான் ஆசைப்படுவேன். இந்தியா தனித்து ஒதுங்கி வாழ்வதை நான் விரும்பமாட்டேன். அப்படிச் செய்த அது, தண்ணீர் நுழைய முடியாத அறைகளுக்குள் வாழ்ந்தது போல வாழ்ந்து, தன் எல்லைக்குள் பிரவேசிக்கவோ, தன் எல்லைக்குள் வர்த்தகம் செய்யவோ அனுமதிக்காது என்று இருக்க வேண்டும் என விரும்பமாட்டேன். ஆனல், இதைக் கூறிய பிறகு, சமத்துவ நிலையை உண்டுபண்ணுவதற்கு நான் அநேக காரியங்களையும் எண்ணியிருக்கிறேன். முதலாளிகளாலும், நிலச்சுவான்தார்களாலும், மேல் வர்த்தகத்தார் என்று கூறப்படுகிறவர்களாலும், அதைத் தொடர்ந்தும், விஞ்ஞானபூர்வமாகவும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்களாலும் சேற்றில் ஆழ்த்தப்பட்டும், நசுக்கப்பட்டும், வீழ்ச்சியுற்றும் கிடக்கும் மக்களைத் தூக்கிவிடுவதற்கு இந்தியா பல வருட காலம்வரை சட்டங்களை இயற்றுவதில் ஈடுபட்டிருக்கும் என்றே அஞ்சுகிறேன். சேற்றிலிருந்து இந்த மக்களை நாம் தூக்கிவிட வேண்டுமானல், அப்புறம் நாட்டை ஒழுங்குபடுத்துவதற்காக இந்த மக்களுக்குத் தொடர்ந்து முது

லிடம் கொடுப்பதும், அவர்களை நசுக்கிக்கொண்டிருக்கும் சுமை களிலிருந்து அவர்களை விடுவிப்பதும்கூட இந்தியாவின் தேசீய அரசாங்கத்தினுடைய கடமையாகிவிடும். நிலச்சுவான்தார்களும், ஜமீன்தார்களும், பணம் படைத்தவர்களும், இப்போது விசேஷச் சலுகைகளை அனுபவித்துக்கொண்டு வருகிறவர்களும்—அவர்கள் ஐரோப்பியர்களாக இருந்தாலும் சரி, இந்தியர்களாக இருந்தா லும் சரி, எனக்குக் கவலையில்லை—தங்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்டப்படுகிறது என்று அவர்கள் கண்டால், அவர் களுக்காக நான் அனுதாபப்படுவேன். ஆனல், எனக்குச் சாத் தியமாக இருந்தால்கூட அவர்களுக்கு நான் உதவ இயலாது. ஏனென்ருல், அந்தச் செயல் முறைக்கு அவர்களுடைய உதவியை நாடுவேன். அவர்களுடைய உதவியின்றிச் சேற்றிலிருந்து இந்த மக்களைத் தூக்கிவிடுவது சாத்தியமில்லை.

## தீண்டாதார்

தீண்டாதாரின் நிலையைப் பாருங்கள். சட்டம் அவர்களுக்கு உதவி புரிய வருகிறதா, மைல் கணக்கில் அவர்களுக்கு நிலத்தை ஒதுக்குகிறதா என்பதைக் கவனியுங்கள். தற்போது அவர் களிடம் நிலம் இல்லை. அவர்கள் முழுக்க முழுக்க உயர்ந்த சாதி யார் எனப்படுவோரின் தயவிலும், அரசாங்கத்தின் தயவிலுமே வாழ்ந்துகொண்டிருக்கிருர்கள். அவர்களை ஓரிடத்திலிருந்து மற் ருேரிடத்திற்குக் கிளப்பிவிடலாம். அவர்கள் புகார் செய்யவோ, சட்டத்தின் உதவியை நாடவோ முடியாத நிலையில் இருக்கி ருர்கள். ஆகவே, அப்போது சட்டசபையின் முதல் நடவடிக்கை, சமத்துவ நிலையை உண்டுபண்ணுவதற்காக, இந்த மக்களுக்கு இனமாகப் பலவித சகாயங்களைச் செய்வதற்கு வகை செய்வ தாகவே இருக்கும்.

இந்தச் சகாயங்களைச் செய்வதற்கு வேண்டிய பணம் யாரி டத்திலிருந்து கிடைக்கிறது? தெய்வலோகத்திலிருந்து கிடைக்க வில்லை என்பது நிச்சயம். ராஜாங்கத்திற்குத் தெய்வலோகம் பணத்தைக் கீழே கொட்டப்போவதில்லை. அது, இயல்பாக ஐரோப்பியர்கள் உட்படப் பணம் படைத்த வர்க்கத்தினரிட மிருந்தே கிடைக்கவேண்டும். இது பாரபட்சமான காரியம் என்று அவர்கள் சொல்லுவார்களா? இது, அவர்கள் ஐரோப்பியர்கள் என்பதற்காக அவர்களுக்கு விரோதமாகக் காட்டப்படும் பாரபட்சமல்ல என்பதை அவர்களே கண்டுகொள்ளுவார்கள். அவர்களிடம் பணம் இருக்கிறது, மற்றவர்களிடம் பணம் இல்லை என்பதற்காகக் காட்டப்படும் பாரபட்சமே இது. ஆகவே, இது உடையவர்களுக்கும், இல்லாதவர்களுக்கும் இடையில் நடக்கும் போராட்டமாகவே இருக்கும். அதற்காகத்தான் பயப்படுவ தாக இருந்தால், இந்த எல்லா வர்க்கத்தினரும் வாயில்லாப் பூச்சிகளான இந்தக் கோடிக்கணக்கான மக்களின் தலைக்கு நேராகக் கைத்துப்பாக்கிகளைப் பிடித்துக்கொண்டு, "எங்கள்

உடைமைகளையும் உரிமைகளையும் நீங்கள் உத்தரவாதம் செய்தாலொழிய நீங்கள் உங்களுக்குச் சொந்தமான அரசாங்கத்தை அமைக்க முடியாது" என்று சொன்னுல், தேசீய சர்க்கார் தோன்ற முடியாது என்று அஞ்சுகிறேன்.

காங்கிரஸ் வற்புறுத்துவது என்ன என்பதையும், நான் தெரிவித்த கொள்கையின் பலாபலன்களையும் போதுமான அளவுக்கு விளக்கிக் கூறியிருக்கிறேன் என்று நினைக்கிறேன். எக்காரணத்தை முன்னிட்டும், ஆங்கிலேயர்களாக இருக்கிருர்கள் என்பதற்காகவோ, ஐரோப்பியர்கள், அல்லது ஜப்பானியர்கள், அல்லது வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகவோ அவர்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்டப்படமாட்டாது என்பதை அவர்கள் கண்டுகொள்ளுவார்கள். அவர்கள் விஷயத்தில் பாரபட்சம் காட்டுவதற்குரிய காரணங்களே, இந்தியாவில் பிறந்த பிரஜைகள் விஷயத்தில் பாரபட்சம் காட்டுவதற்குரிய காரணங்களாகவும் இருக்கும்.

## மற்ெருரு முறை

என்னிடத்தில் மற்ெருரு முறையும்கூட இருக்கிறது. அதை அவசரமாகத் தயாரித்தேன். ஏனென்ருல், லார்டு ரீடிங்கும், ஸர் தேஜ்பகதூர் சப்ருவும் பேசுவதைக் கவனித்துக்கொண்டிருக்கும் போதுதான் அது தயாரிக்கப்பட்டது. அது தற்போது இருந்து வரும் உரிமைகள் சம்பந்தமானதாகும் :

"சட்டபூர்வமான முறையில் அடைந்ததும், பொதுவாக நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரண்படாதவாறு இன்று உள்ளதுமான எந்த நலனிலும் இப்படிப்பட்ட நலன்கள் விஷயத்தில் செல்லுபடியாகும் சட்டத்தின் பிரகாரமாகவன்றி வேறு வகையில் தலையிடமாட்டாது."

இன்று பிரிட்டிஷ் சர்க்கார் நிறைவேற்றி வரும் கடமைகளை வரப்போகும் அரசாங்கம் மேற்கொள்ளுவது சம்பந்தமாகக் காங்கிரஸ் தீர்மானத்தில் நீங்கள் காணக்கூடியதை நான் நிச்சயமாகக் கவனத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன். இந்தக் கடமைகளை நாங்கள் மேற்கொள்ளுவதற்கு முன், இவற்றைப் பாரபட்சமற்ற ஒரு நீதி சபை பரிசோதிக்க வேண்டும் என்று நாங்கள் கோருவதைப் போலவே, தற்போதுள்ள நல உரிமைகளையும் அவசியம் ஏற்படும்போது நீதி மன்றம் பரிசோதிக்க வேண்டும். ஆகவே, நல உரிமைகளைப் பரிசிலனை செய்யவும், கணக்குப் பரிசோதனை செய்யவும் எடுத்துக் கொள்ளுவதைத் தவிர, அவற்றை இல்லை என்று மறுக்கும் பிரச்னையே இதில் கிடையாது. ஐரோப்பியர் அனுபவித்துவரும் விசேஷச் சலுகைகளையும், ஏகபோக உரிமைகளையும் ஆராய்ந்துள்ள எங்களில் சிலர் இங்கே இருக்கிருர்கள். ஆனல், ஐரோப்பியர்களை மட்டும் ஆராய வேண்டாம். இன்று நிலம் வைத்துக்கொண்டிருக்கும் இந்தியர்கள் பலர் இருக்கிருர்கள். சந்தேகமின்றி

அநேக இந்தியர்களை நான் நினைவில் வைத்துக்கொண்டுதான் சொல்லுகிறேன். அவர்களுக்கு நிலம் வழங்கப்பட்டிருப்பது நாட்டுக்குச் செய்த எவ்விதச் சேவைக்காகவும் அல்ல. ஆனால், சர்க்காருக்குச் செய்திருக்கும் சேவைக்கு என்றுகூட நான் சொல்ல மாட்டேன். ஏனெனில், சர்க்கார் நன்மையடைந்ததாக நான் கருதவில்லை. யாரோ ஓர் உத்தியோகஸ்தருக்குச் சேவை செய்ததற்காகவே அவர்களுக்கு நிலம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சலுகைகளையும், இந்த விசேஷ உரிமைகளையும் அரசாங்கம் பரிசோதித்துப் பார்க்கக்கூடாது என்று நீங்கள் எனக்குக் கூறுவீர்களேயானால், இல்லாதவர் சார்பில், பறிக்கப்பட்டவர்களின் சார்பில் சர்க்கார் யந்திரத்தை நடத்தப் போவது அசாத்தியமாகிவிடும் என்று நான் மீண்டும் உங்களுக்குச் சொல்லுகிறேன். இதிலிருந்து, ஐரோப்பியர் சம்பந்தமாக எதுவும் சொல்லப்படவில்லை என்பதை நீங்கள் காண்பீர்கள். இரண்டாவது முறையும்கூட இந்தியர்களுக்குப் பொருந்துவது போல், ஸர் புருஷோத்தமதாஸ் தாக்கூர்தாஸுக்கும், ஸர் பிரோஸ் சேத்னாவுக்கும் பொருந்துவது போல ஐரோப்பியருக்கும் பொருந்தக்கூடியதாகும். அவர்கள் பெற்றிருக்கும் சலுகைகள், அப்பொழுதிருந்த உத்தியோகஸ்தர்களுக்கு ஏதோ செய்ததற்காகச் சலுகைகளை அவர்கள் பெற்றிருந்தால், சில மைல் தூரமுள்ள நிலங்களைப் பெற்றிருந்தால், என்னிடம் அரசாங்க அதிகாரம் இருக்கும் பட்சத்தில், அவற்றைச் சீக்கிரத்தில் அவர்களிடமிருந்து எடுத்துக் கொள்ளுவேன். அவர்கள் இந்தியர்களாக இருக்கிறார்களே என்று பார்க்கமாட்டேன். அதைப் போலவே, ஸர் ஹூபர்ட் காரிடமிருந்து, அல்லது ஸ்ரீ பெந்தாலிடமிருந்து—அவர்கள் எவ்வளவு பிரமாதமானவர்களாக இருந்தாலும் சரி, என்னிடம் எவ்வளவு சிநேகம் உடையவர்களாக இருந்தாலும் சரி - அவற்றைத் தயங்காமல் எடுத்துக்கொள்ளுவேன். சட்டம், மனிதர்களுக்குள் எவ்வித வேற்றுமையும் காட்டாது. இந்த உறுதிமொழியை நான் உங்களுக்கு அளிக்கிறேன். அதற்கு மேல் என்னால் போக இயலாது. ஆகவே, ‘சட்டபூர்வமாக அடைந்தது’ என்பதன் பொருள் உண்மையில் இதுதான்: அதாவது ஒவ்வொரு நல உரிமையும் கறை படியாததாக இருக்க வேண்டும்; சந்தேகப்பட இடமில்லாததாக இருக்க வேண்டும். அதனால், அவை அனைத்தும் அரசாங்கத்தின் பார்வைக்கு வரும்போது அவற்றைப் பரிசோதிக்க வேண்டும் என்று நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

அப்புறம், “நாட்டின் சிறந்த நலன்களுடன் முரண்படாத வாறு உள்ள” என்ற விஷயமும் இருக்கிறது. குறிப்பிட்ட சில ஏகபோக உரிமைகளை நினைவில் வைத்துக்கொண்டு நான் இவ்வாறு கூறுகிறேன். அவை சந்தேகமின்றி சட்டபூர்வமான முறையிலேயே அடையப் பெற்றுள்ளன. ஆனால், அவை நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரண்படக்கூடிய நிலைக்குக் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. உங்களுக்கு ஓர் உதாரணம் காட்டுகிறேன். அது உங்களுக்கு ஒரு வகையாகச் சுவாரஸ்யம் அளிக்கும்; ஆனால்,

அது எதார்த்தமாக இருக்கிறது. புதுடில்லி எனப்படும் இந்தப் பகாசுரனை எடுத்துக்கொள்ளுங்கள். அவனுக்கு இரை போடுவதற்காகப் பலகோடிகள் செலவழிக்கப்பட்டிருக்கின்றன. நாங்கள் வைத்துக்கொண்டிருக்கும் இந்தப் பகாசுரனை ஏதேனும் ஒரு வழியில் பயன்படுத்த வேண்டும் என்று எதிர்கால அரசாங்கம் முடிவு செய்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். பழைய டில்லியில் பிளேக்கோ, காலராவோ வந்திருக்கிறது என்றும், ஏழைகளுக்கு ஆஸ்பத்திரிகள் தேவை என்றும் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது நாங்கள் செய்ய வேண்டியது என்ன? தேசீய சர்க்காரால் ஆஸ்பத்திரிகள் கட்டுவது முதலிய காரியங்களை அப்பொழுதே செய்துவிட முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? முடியவே முடியாது. நாங்கள் அந்தக் கட்டடங்களை எடுத்துக்கொண்டு, அவற்றில் பிளேக் நோய் பீடித்தவர்களைக் கொண்டுபோய் படுக்க வைப்போம்; அவற்றை ஆஸ்பத்திரிகளாகப் பயன்படுத்துவோம். ஏனென்றால், அந்தக் கட்டடங்கள் நாட்டின் சிறந்த நலன்களுக்கு முரணானவையாக உள்ளன என்பது என் கட்சி. அவை இந்தியாவின் கோடிக் கணக்கான மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கவில்லை. அவை மேஜைக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் பணம் படைத்தவர்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கக் கூடும். மேன்மை தங்கிய போபால் நவாப் சாகிப்புக்கோ, ஸர் புருஷோத்தமதாஸ் தாக்கூர் தாஸுக்கோ, ஸர் பிரோஸ் சேத்னவுக்கோ, ஸர் தேஜ் பகதூர் சப்ரூவுக்கோ பிரதிநிதித்துவம் வகிக்கக்கூடும். ஆனால், படுத்துத் தூங்குவதற்குக் கொஞ்சம் இடமில்லாமலும், சாப்பிடுவதற்கு ஒரு கவளங்கூட இல்லாமலும் இருப்பவர்களுக்கு அவை பிரதிநிதித்துவம் வகிக்கவில்லை. தேசீய சர்க்கார், அந்த இடம் அவசியமற்றது என்ற முடிவுக்கு வந்தால், எந்த நலன்கள் சம்பந்தப்பட்டிருந்தாலும் சரி, அதை எடுத்துக்கொண்டுவிடும்; யாதொரு நஷ்டஈடும் கொடுக்காமலே அதை எடுத்துக்கொள்ளும் என்றும் நான் உங்களுக்குக் கூறுவேன். ஏனென்றால், இந்த அரசாங்கம் நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அது ராமனிடம் திருடித்தான் கிருஷ்ணனிடம் கொடுக்க வேண்டியிருக்கும். அது சாத்தியமில்லாத காரியம்.

காங்கிரஸ் கருதுவதுபோல் ஓர் அரசாங்கம் பதவிக்கு வந்தால், விழுங்கியாக வேண்டிய கசப்பு மாத்திரையாக அது இருக்கிறது. இங்கிருந்து ஏதாவது கொண்டுசெல்வதற்காக, எல்லாம் சரியாகவே இருக்கும் என்று நீங்கள் நம்பும்படியாக நான் ஏமாற்ற விரும்பவில்லை. காங்கிரஸின் சார்பில் நான் எல்லாவற்றையும் உங்கள் முன் பகிரங்கமாகத் தெரிவித்துவிட விரும்புகிறேன். எந்தவிதமான ஒளிவு மறைவும் வேண்டியதில்லை என்று கருதுகிறேன். அப்போது காங்கிரஸின் நிலை ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருந்தால், எனக்கு அதைவிட வேறு எதுவும் சந்தோஷம் அளித்துவிட முடியாது. ஆனால், அந்த நிலை ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இல்லாவிட்டால், உங்கள் உள்ளங்களைத்

தொட்டு, என் கருத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ளும்படி என்னல் செய்ய முடியாது என்று எனக்கு இன்று தோன்றினல், அப்புறம் உங்கள் அனைவரையும் மாற்றும் வரையில், கோடிக்கணக்கான இந்திய மக்கள் இறுதியில் தங்களுக்கு ஒரு தேசீய அரசாங்கம் கிடைத்துவிட்டதாக உணரும் வரையில், காங்கிரஸ் தொடர்ந்து அலைந்து, மனக் கருத்தை மாற்றும் பணியைத் தொடர்ந்து செய்ய வேண்டியதுதான்.

## குற்ற விசாரணைகள்

இந்தத் தீர்மானத்தின் கடைசியில் இருக்கும் இரண்டு வரிகள் பற்றி இதுவரையிலும் யாரும் ஒரு வார்த்தையும் சொல்ல வில்லை. அந்த வரிகளாவன: "குற்ற விசாரணைகள் சம்பந்தமாக இந்தியாவிலுள்ள ஐரோப்பிய சமூகத்திற்குத் தற்போது இருந்து வரும் உரிமைகள் தொடர்ந்து இருந்துவர வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது."

அதில் சம்பந்தப்பட்டுள்ள எல்லா விஷயங்களையும் இது வரையில் என்னல் ஆராய முடியாமல் போய்விட்டது என்பதை நான் ஒப்புக்கொண்டே ஆக வேண்டும். சில நாட்களாக நான் ஸர் ஹூபர்ட் காருடனும், ஸ்ரீ பெந்தாலுடனும், சில நண்பர்க ளுடனும் சிநேகபூர்வமான, தனிப்பட்ட சம்பாஷணைகளை நடத்து வதில் ஈடுபட்டிருந்தேன். இதே விஷயத்தைப்பற்றி அவர்களோடு விவாதித்தேன். இந்த இரண்டு விஷயங்களுக்கும் என்ன பொருள் என்று சொல்லும்படி அவர்களைக் கேட்டேன். மற்ற சமூகங்களுக்குள்ள அதே விஷயந்தான் இது என்று அவர்கள் சொன்னர்கள். அதற்கு என்ன அர்த்தம் என்று நான் நிச்சயப் படுத்திக்கொள்ளவில்லை. மற்றச் சமூகங்களுங்கூட தங்களுக்குச் சொந்த ஜூரி வேண்டுமென்று கோரலாம் என்று பொருள்படு கிறது என நான் நினைக்கிறேன். இது ஜூரி மூலம் விசாரணை செய்வதைக் குறிக்கிறது. இம்முறையை என்னல் ஆதரிக்க இயலாது என்றே அஞ்சுகிறேன்.

இப்படியெல்லாம் பிரத்தியேக சலுகை அளிப்பதற்கு நான் உடந்தையாக இருக்கவே முடியாது. ஒரு தேசீய சர்க்காரை அந்தக் கட்டுப்பாடுகளுக்குள் அடைத்துவைக்க முடியாது என்று நினைக்கிறேன். எதிர்காலத்தில் இந்திய தேசீய இனமாகப் போகும் இன்றுள்ள எல்லாச் சமூகங்களும் நல்லெண்ணத்தோடு அனைத்தையும் தொடங்க வேண்டும்; பரஸ்பர நம்பிக்கையோடு தொடங்க வேண்டும்; அல்லது தொடங்காமலே இருந்துவிட வேண்டும். நாம் பொறுப்பாட்சியைப் பெற இயலாது என்று நமக்குக் கூறினல், அது புரிந்து கொள்ளக்கூடிய ஒரு நிலையாக இருக்கும். ஆனல், இந்த விசேஷ உரிமைகளும், பாதுகாப்பு களும் இருந்தாக வேண்டும் என்று நமக்குக் கூறப்படுகிறது. அது சுயேச்சையான பொறுப்பாட்சியாக இராது. ஆனல், ஒரே பாதுகாப்புகளின் மயமாகவே அது இருக்கும். அந்தப் பாது

காப்புகள் அரசாங்கம் முழுவதையுமே தின்றுவிடும். இந்தப் பாதுகாப்புகளுக்கெல்லாம் அங்கீகாரம் அளிப்பதாக இருந்தால், இங்கே பேசிய பேச்செல்லாம் நடைமுறைக்கு வந்தால், நாங்கள் பொறுப்பாட்சியை அடையப் போவதாக எங்களுக்குக் கூறப்பட்டால், அது அநேகமாகச் சிறைச்சாலைகளுக்குள் கைதிகளுக்குக் கிடைக்கும் பொறுப்பாட்சியைப் போன்றதாகவே இருக்கும். அறைக் கதவு மூடப்பட்டு, சிறைக் காவலாளி போன மாத்திரத்தில், அவர்களுக்கும்கூட பூரண சுதந்திரம் கிடைக்கிறது. 10 அடிச் சதுரமோ, 7 அடிக்கு 3 அடியோ உள்ள அறைக்குள் கைதிகளுக்குப் பூரண சுதந்திரம் இருக்கிறது. சிறைக் காவலாளிகள் தங்கள் உரிமைகளை வசதியாகப் பாதுகாத்துக்கொள்ளக்கூடிய அம்மாதிரியான பூரண சுதந்திரத்தை நான் கேட்கவில்லை.

ஆகையால், எங்கள் ஐரோப்பிய நண்பர்கள் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள நினைக்கும் எண்ணத்தை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் இங்கே வெளியிட்ட இரண்டு கொள்கைகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று துணிந்து யோசனை கூறுகிறேன். அவற்றை நீங்கள் விரும்பும் எந்த மாதிரியிலாவது வெட்டித் திருத்திக்கொள்ளலாம். வாசகம் திருப்திகரமாக இல்லாமல் இருந்தால், வேறு வாசகத்தைத் தெரிவியுங்கள். நீங்கள் எதிர்மறைத் தன்மையிலுள்ள இந்தக் கொள்கைகளில் உங்களுக்கு விரோதமான தீய அம்சம் எதுவுமில்லை. அதனால், இவற்றிற்குப் புறம்பாக மேற்கொண்டு கேட்கக்கூடாது—கேட்கத் துணியக்கூடாது என்று நான் கூறலாமா?—என்று துணிவோடு கூறுகிறேன். இவ்வளவும் தற்போதுள்ள நல உரிமைகளையும், எதிர்கால வர்த்தகத்தையும் பற்றியவையாகும்.

## அடிப்படைத் தொழில்கள்

அடிப்படையான தொழில்களைப் பற்றிப் பேசும்போது ஸ்ரீ ஜெயக்கர் தெரிவித்த கருத்துக்களை நான் முழுக்க முழுக்க ஒப்புக்கொள்ளுகிறேன். அடிப்படைத் தொழில்களை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவில்லையென்றால், அடிப்படைத் தொழில்களை நடத்துவதிலும், நிர்வகிப்பதிலும், அபிவிருத்தி செய்வதிலும் அரசாங்கத்திற்கு முக்கியமான ஆதிக்கமாவது இருக்கவேண்டும் என்பதுதான் காங்கிரஸின் கருத்து.

பிரமாதமாக வளர்ச்சியடைந்த தனிப்பட்ட தீவான பிரிட்டனைப் பற்றி முடிவு கட்டுவது போல, இந்தியாபோன்ற வளர்ச்சியடையாத ஓர் ஏழை நாட்டைப் பற்றி முடிவு கட்டக்கூடாது. இன்று பிரிட்டனுக்கு நல்லதாக இருப்பது, அநேக அம்சங்களில் இந்தியாவுக்கு விஷமாக இருக்கிறது என்பது என் அபிப்பிராயம். இந்தியா, தனக்கு ஏற்ற பொருளாதாரத்தையும், தன் சொந்தக் கொள்கையையும் உருவாக்குவதுடன், தன் தொழில்களையும் பிற

அனைத்தையும் தான் நடத்தும் முறையையும் வகுக்க வேண்டும். ஆகவே, அடிப்படைத் தொழில்களைப் பொறுத்தவரையில், பிரிட்டிஷ்காரர்கள் மட்டுமன்றி மற்றும் பலரும் தங்களுக்குச் சம நீதி வழங்கப்படவில்லை என்று கருதுவார்கள் என்று அஞ்சுகிறேன். ஆனால், ஒரு நாட்டுக்கு விரோதமான 'சம நீதி'க்கு என்ன அர்த்தம் என்று எனக்குத் தெரியவில்லை.

## கரையோரக் கப்பல் வர்த்தகம்

அப்புறம் கரையோரக் கப்பல் போக்குவரத்துத் தொழில் இருக்கிறது. அந்த வர்த்தகத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்ற விருப்பத்தினிடம் காங்கிரஸுக்குச் சந்தேகமின்றி மிக மிக அனுதாபம் உண்டு. ஆனால், கரையோரக் கப்பல் தொழில் பற்றிய மசோதாவில் ஐரோப்பியர்களுக்கு விரோதமாக ஏதேனும் பாரபட்சம் காட்டப்பட்டால், நான் ஐரோப்பியர்களோடு சேர்ந்துகொண்டு, ஆங்கிலேயர் என்பதற்காகவே அவர்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்டும் மசோதாவை அல்லது யோசனையை எதிர்த்துப் போராடுவேன். ஆனால், அங்கே மிகப் பெரிய நல உரிமைகள் உருவாகியிருக்கின்றன. நான் வங்காளத்தின் பெரிய ஆற்று மார்க்கங்களில் அடிக்கடி பிரயாணம் செய்திருக்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன் ஐராவதி நதியிலும் பிரயாணம் செய்திருக்கிறேன். அந்தத் தொழிலைப் பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியும். சலுகைகளையும், விசேஷ உரிமைகளையும், சகாயங்களையும்—இவற்றை நீங்கள் எப்படி அழைத்தாலும் சரி—வைத்துக்கொண்டு இந்தப் பிரம்மாண்டமான கார்ப்பொரேஷன்கள் தொழில் நிலையங்களை நிறுவியிருக்கின்றன; கம்பெனிகளை உருவாக்கியிருக்கின்றன; எவ்விதமான போட்டியையும் அனுமதிக்காத ஒரு தொழிலை நிர்மாணித்திருக்கின்றன.

சிட்டகாங்குக்கும் ரங்கூனுக்குமிடையில் கப்பல் போக்குவரத்து நடத்தும் ஒரு கம்பெனியைப் பற்றி உங்களில் சிலர் கேள்விப்பட்டிருக்கலாம். அது இப்போது முளைவிடும் பருவத்தில் இருக்கிறது. அந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஏழை முஸ்லிம்கள், ரங்கூனில் அவர்கள் என்னிடம் வந்து, நான் ஏதாவது செய்ய முடியுமா என்று கேட்டார்கள். என் முழு மனமும் அவர்கள் பால் அனுதாபம் கொண்டது. ஆனால், எதுவும் செய்வதற்கில்லாமல் இருந்தது. என்ன செய்ய முடியும்? மாபெரும் பலம் படைத்த பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி, முளைவிட்டுக்கொண்டிருக்கும் அந்தக் கம்பெனியைவிட மலிவான கட்டணங்களை விதித்துக்கொண்டும், டிக்கெட்டுக்கு அறவே பணம் வாங்காமல் பிரயாணிகளை ஏற்றிக்கொண்டும் வருகிறது. இப்படிப்பட்ட பல சம்பவங்களை நான் எடுத்துக் கூற முடியும். அது பிரிட்டிஷ் கம்பெனியாக இருக்கிறது என்பதற்காக நான் இப்படிச் சொல்லவில்லை. இந்தியக் கம்பெனி அந்த வேலையைச் செய்தாலும்,

இதே கதைதான். இன்று இந்தியாவில் மூலதனத்தைப் போடுவதற்குப் பதிலாக இந்தியாவுக்கு வெளியே மூலதனம் போடுகிற அல்லது தங்கள் பணத்தை முதலீடு செய்கிற இந்தியர்கள் எங்களிடையே இருப்பதுபோல், ஓர் இந்தியக் கம்பெனி மூலதனத்தை வெளியே எடுத்துக்கொண்டு போவதாக வைத்துக் கொள்ளுவோம். தேசீய சர்க்கார் சரியான கொள்கையைக் கடைப்பிடிக்கவில்லை என்று பயந்து, அதனுல் தங்கள் பணத்தைப் பத்திரமாகக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக அதை வெளியே கொண்டு போவதாகச் சொல்லி லாபத்தை எல்லாம் உலகின் பிற பகுதிகளில் கொண்டுபோய் முதலீடு செய்வதாகவும் வைத்துக்கொள்ளுங்கள். என்னேடு இன்னும் ஒரு படி மேலே போய், அந்த இந்திய டைரக்டர்கள் மிக மிக விஞ்ஞான பூர்வமாக, கொஞ்சம்கூட குற்றங் குறைகள் இல்லாதவாறு தங்கள் ஸ்தாபனத்தை அமைப்பதற்காகத் தங்களால் முடிந்தவரை ஐரோப்பிய நிபுணர்களையெல்லாம் அங்கே கொண்டுபோய், கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் இந்தக் கார்ப்பொரேஷன்களை உருப்படவிடாமல் செய்கிருர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்பொழுது, சிட்டகாங் கம்பெனியைப் போன்ற கம்பெனிகளைக் காப்பாற்றுவதற்காக நிச்சயமாக நான் ஏதாவது சொல்லுவதோடு சட்டம் இயற்றும்படியும் செய்வேன்.

சில நண்பர்கள், ஐராவதி நதியில் தங்கள் கப்பல்களை மிதக்க விடவும்கூட முடியவில்லை. அது அறவே சாத்தியமில்லாத நிலைக்கு வந்துவிட்டது என்பதை எனக்கு நிரூபிப்பதற்குச் சரியான ஆதாரங்களைக் காட்டினுர்கள். அவர்களுக்கு லைசென்ஸ்கள் கிடைப்பதில்லை. நியாயமாகக் கிடைக்க வேண்டிய சாதாரண வசதிகள் அவர்களுக்குக் கிடைப்பதில்லை. பணத்தைக் கொண்டும், செல்வாக்கைக்கொண்டும் எதையெல்லாம் வாங்க முடியும் என்பதை நாம் ஒவ்வொருவரும் அறிவோம். இப்படிப்பட்ட செல்வாக்கு வளர்ந்து, ஸர் ஜான் கோர்ஸ்ட் கூறியதுபோல, முளைவிட்டுக்கொண்டிருக்கும் பயிர்களையெல்லாம் நாசமாக்குகிறது என்ருல், அப்போது இந்தப் பெருஞ் செடிகளின் கொப்புகளையெல்லாம் வெட்டிக் களைய வேண்டியது அவசியமாகிறது. முளைப் பயிர்களைப் பெரிய செடிகள் நசுக்குவதற்கு விடவே கூடாது. கரையோர வர்த்தகத்தின் சார்பில் கோரப்படுவது உண்மையில் இதுதான். மசோதாவின் வாசகங்கள் சரியாக அமையாமல் இருக்கலாம். அது முக்கியமில்லை. அதன் சாராம்சம் முழுக்க முழுக்கச் சரியாக இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

பிரஜை என்பதற்கு விளக்கம் கொடுப்பது மிகக்கடுமையான வேலை. எப்படிப்பட்ட விளக்கம் காங்கிரஸுக்கு உகந்ததாக இருக்கும், அல்லது எப்படிப்பட்ட விளக்கம் எனக்கு உகந்ததாக இருக்கும் என்பதை, காங்கிரஸின் இன்றைய மனநிலையை நான் புரிந்துகொண்டிருக்கும் நிலையில், முன் பின் ஆராயாமல்

இப்பொழுதே என்னால் அந்த வேலையை மேற்கொள்ள இயலாது. அது ஸர் தேஜ் பகதூர் சப்ருவுடனும், மற்ற நண்பர்களுடனும் கலந்து பேச வேண்டிய விஷயம். அவர்களுடைய உள்ளக் கருத்தை நான் புரிந்துகொள்ள முயல வேண்டும். ஏனென்றால், இந்த விவாதத்திலிருந்து விஷயத்தின் ஜீவநாடியை என்னால் தொட முடியவில்லை. நாங்கள் எவ்வித இனப் பாகுபாட்டையும் விரும்பவில்லை என்று கூறிக் காங்கிரஸின் நிலையை நான் தெள்ளத் தெளிவாக எடுத்துரைத்துவிட்டேன். ஆனால், அந்த நிலையைத் தெளிவுபடுத்திய பிறகு, 'பிரஜை' என்ற சொல்லுக்குரிய விளக்கம் சம்பந்தமாகக் காங்கிரஸின் அபிப்பிராயம் இதுதான் என்று சுருக்கமாக முடிவு கட்டி நான் கூற வேண்டியதில்லை. ஆகவே, 'பிரஜை' என்ற சொல் சம்பந்தமாக நான் கூறுவது, அதன் விளக்கம் பற்றி என் அபிப்பிராயம் கூறுவதைத் தற்போதைக்கு நான் நிறுத்தி வைத்துக்கொள்ளுகிறேன் என்பதே.

இதைக் கூறிய பின், பின் கண்ட விபரங்களைத் தெரிவித்து விட்டு நான் முடித்துக்கொள்ள விரும்புகிறேன். ஐரோப்பிய நண்பர்களைத் திருப்தி செய்யும் பொதுவான ஒரு முறையை நிர்ணயிப்பதில் நான் நம்பிக்கை இழந்துவிடவில்லை. நானும் ஒருவனைப் பங்கெடுத்துக்கொண்ட பேச்சு வார்த்தைகள் இனியும் தொடர்ந்து நடக்கும் என்று நான் நினைக்கிறேன். நானும் உடன் இருக்க வேண்டியது அவசியமானால், அந்தச் சிறு கமிட்டிக் கூட்டத்துக்கு இன்னும் வருவேன். எனது நோக்கம், அதைப் பெரிதாக்கி முறைப்படி கூடாமல் பூர்வாங்கமாகக் கூடிப் பேசிக் கொண்டிருக்கும் நிலையைச் சிறிது மாற்றி, பொதுவான ஓர் அடிப்படையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதே.

பழையபடியும் விஷயத்துக்கு வருகிறேன். நான் அறிந்த வரையில், அரசியல் சட்டத்தில் இணைக்கக்கூடிய விபரமான திட்டம் எதைப்பற்றியும் என்னால் சிந்திக்க இயலாது. எல்லா வித உரிமைகளுக்கும் இடம் அளிக்கக்கூடிய ஒரு கொள்கையைத் தான் அரசியல் சட்டத்தில் இணைக்க முடியும்.

## சட்டபூர்வமான பரிகாரம்

எதையும் நிர்வாக ரீதியில் செய்வது பற்றி இங்கே யாதொரு கருத்தும் இல்லை என்பதை நீங்களே அறிவீர்கள். பெடரல் கோர்ட் சம்பந்தமாகவும், சுப்ரீம் கோர்ட் சம்பந்தமாகவும் என் சொந்த நம்பிக்கையை நான் தெரிவித்திருக்கிறேன். அதுதான் இறுதியான அப்பீல் கோர்ட். அதற்கு மேல் எவ்விதமான அப்பீலும் இராது. அதுவே என் பிரிவி கவுன்சில்; அதுவே சுதந்திரத்தின் காவல் தெய்வம். பாதிக்கப்பட்ட ஒவ்வொருவரும் போகக்கூடிய கோர்ட் அதுதான். டிரான்ஸ்வாலில் ஒரு பெரிய சட்ட நிபுணர்—டிரான்ஸ்வாலும், தென்னாப்பிரிக்காவும் மிகப் பெரிய சட்ட நிபுணர்களைத் தோற்றுவித்திருக்கிறது என்பதில்

சந்தேகமில்லை—மிகவும் கஷ்டமான ஒரு வழக்குச் சம்பந்தமாக ஒரு சமயம் என்னிடம் பின்வருமாறு கூறினர்: "இப்போதைக்கு நம்பிக்கைக்கு இடமில்லாமல் இருந்தபோதிலும், நான் ஒரு விஷயத்தை எனக்குப் பற்றுக்கோடாக வைத்துக்கொண்டிருக்கிறேன் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். அப்படி இல்லை என்றால் நான் வழக்கறிஞனாக இருக்கவே கூடாது. அதாவது, கோர்ட்டில் பரிகாரம் காண முடியாத தவறு எதுவுமே இல்லை; பரிகாரம் எதுவும் இல்லை என்று நீதிபதிகள் சொன்னால், அந்த நீதிபதிகளை வேலையைவிட்டு உடனே நீக்கிவிடவேண்டும்." இதை லார்டு சான்ஸலர் அவர்களே, உங்களிடம் மிகுந்த பணிவுடனேயே தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆகவே, இப்போது மாட்சிமை தங்கிய மன்னருக்கு ஆலோசகர்களாக இருக்கும் மந்திரிகளின் தயவு இல்லாவிட்டால், நாங்கள் வெறுங் கையோடு திரும்ப வேண்டியிருக்கும் என்று நாங்கள் எதிர்பார்ப்பது போல், எங்கள் ஐரோப்பிய நண்பர்களை எதிர்காலப் பெடரல் கோர்ட் வெறுங்கையோடு அனுப்பிவிடாது என்பதில் அவர்கள் உறுதியோடு இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். மந்திரிகள் எங்கள் குரலுக்குச் செவி சாய்ப்பார்கள்; அவர்களுடைய ஆதரவைப் பெறலாம்; அப்புறம் பண்டமாக ஏதாவது இங்கிருந்து கொண்டு போகலாம் என்று நான் இன்னும் நம்பிக்கொண்டிருக்கிறேன். பண்டமாக ஏதேனும் கொண்டு போகிறேமோ, இல்லையோ, நான் கனவு காணும் பெடரல் கோர்ட் நனவாகிவிட்டால், ஐரோப்பியர்களும், எல்லோரும்—எல்லாச் சிறுபான்மையினரும்—என்னைப் போன்ற ஒரு சின்னஞ் சிறு தனி மனிதன் ஏமாற்றிவிட்டால் கோர்ட் அவர்களை ஏமாற்றிவிடாது என்பதில் உறுதியோடு இருக்கலாம் என்று நம்புகிறேன்.*

—'தேசத்தின் குரல்'

---

* இந்தப் பிரசங்கத்தைத் தொடர்ந்து ஒரு விவாதம் நடைபெற்றது :

ஸர் தேஜ் பகதூர் சப்ரு : எதிர்கால தேசீய சர்க்கார் ஒவ்வொருவருடைய சொத்துக்கும் உரிய பாத்தியதையை ஆராய்ந்து விசாரணை செய்ய வேண்டும் என்று சொல்லுகிறீரா? அப்படியானால், அது குறிப்பிட்ட ஒரு காலத்துக்குள் செய்து கொண்ட பாத்தியதையாக மட்டும் இருக்குமா அல்லது எல்லா பாத்தியதைகளையும் விசாரணை செய்வதா? பாத்தியதையைப் பரிசீலனை செய்ய எந்தச் சபையை நியமனம் செய்ய வேண்டும் என்று அவர் கூறுகிறீர்? ஏதாவது நஷ்டஈடு கொடுக்க வேண்டும் என்று அவர் உத்தேசிக்கிறீரா? அல்லது அவருடைய கருத்துப்படியோ, பெரும்பான்மையினரின் கருத்துப்படியோ, தவறான முறையில் பாத்தியதை செய்து கொள்ளப்பட்டதாகத் தோன்றும் சொத்தைத் தேசீய சர்க்கார் அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தேசிக்கிறீரா?

காந்திஜி : நான் அறிந்தவரையில் அரசாங்கம் அதைச் செய்ய வேண்டும் என்று உத்தேசிக்கப்படவில்லை. எல்லாக் காரியங்களும் பகிரங்கமாகவே செய்யப்படும். அதைச் சட்ட ரீதியான ஒரு சபையே செய்யும்.

ஸர் தேஜ் பகதூர் சப்ரு : சட்டரீதியான சபையாக இருக்கப்போவது எது?

காந்திஜி : இன்னதுதான் என்று வரையறுப்பதைப்பற்றி இப்போது சிந்திக்க

# 7

# சர்க்கார் திட்டங்கள் சுதேசியா?

**கேள்வி :** நாட்டின் மூலப்பொருள்களை உபயோகப்படுத்தாமல் துருப்பிடிக்கும்படி விட்டுவிட்ட ஏராளமான மனித சக்தியை யல்ல—அதிகப் பட்ச அளவுக்குப் பயன்படுத்துவதற்காக நாட்டைத் தொழில் மயமாக்கும் திட்டங்களைச் சர்க்கார் அமுலாக்கிக் கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட திட்டங்களைச் சுதேசி என்று கருதலாமா?

**பதில் :** இந்தக் கேள்வி நல்ல முறையில் கேட்கப்பட்டிருப்பதாகக் காந்திஜி சொன்னார். சர்க்காரின் திட்டம் என்ன என்று தமக்கு நிச்சயமாகத் தெரியாது என்று தெரிவித்தார். ஆனாலும், ஒரு நாட்டின் மூலப் பொருள்களைப் பயன்படுத்தி, அதைவிடச் சக்தி வாய்ந்த மனித பலத்தை லட்சியம் செய்யாமல் புறக்கணிக்கும் எந்தத் திட்டமும், ஒரு பக்கம் இறங்கி இருக்குமே ஒழிய, மனித வர்க்கத்தில் சமத்துவத்தை ஒரு போதும் நிலைநாட்ட முடியாது என்ற கருத்தை அவர் மனப்பூர்வமாக ஊர்ஜிதம் செய்தார்.

உலகிலேயே அமெரிக்கா மிகமிகத் தொழில் மயமாக்கப்பட்டுள்ள நாடு. ஆனாலும், அது வறுமையையும், கீழ் நிலையையும் இன்னும் ஒழித்துவிடவில்லை. அதற்குக் காரணம், அது ஆள் பலத்தை, மனித சக்தியை எல்லாம் லட்சியம் செய்யாமல், பலரைச் சுரண்டிப் பணத்தைத் திரட்டிய சிலருடைய கையில் பலத்தைக் கொண்டுபோய்க் குவித்துவிட்டதே. அதன் பலனாக, அது தொழில் மயமானது அந்நாட்டின் ஏழைகளுக்கும், உலகத்துக்கும் ஒரு பயமுறுத்தலாக ஆகிவிட்டது.

---

வில்லை. தவறை எதிர்ப்பதில் எவ்வித வரையறையும் கிடையாது என்றே நான் நினைக்கிறேன்.

ஸர் தேஜ் பகதூர் சப்ரு : ஆகவே, உங்கள் தேசீய சர்க்காரின் ஆட்சியில் இந்தியாவில் எந்தப் பாத்தியதையும் பத்திரமாக இராது?

காந்திஜி : எங்கள் தேசீய சர்க்காரின் ஆட்சியில் இந்த விஷயங்களைக் கோர்ட்டுதான் முடிவு செய்யும். இவ்விஷயங்களைப் பற்றி ஏதேனும் பயம் இருந்தால், நியாயமான ஒவ்வொரு சந்தேகத்தையும் தீர்த்துத் திருப்தியளிப்பது சாத்தியம் என்றே நான் நினைக்கிறேன். பொதுவாக இது ஏற்றுக்கொள்ள வேண்டிய ஒரு கொள்கை என்று சொல்லுவதில் நான் தயக்கம் கொள்ளவில்லை. நியாயமான முறையில் பாத்தியதை செய்துகொள்ளப்பட்ட சொத்துக்களும் இருக்கின்றன என்று புகார்கள் செய்யப்படும்போது, இந்த உரிமைகளை விசாரிக்க வேண்டியது கோர்ட்டுகளின் பொறுப்பு. அரசாங்க நிர்வாகத்தை மேற்கொள்ளும்போது, எந்த உரிமைகளையும் எந்தப் பாத்தியதைகளையும் நான் விசாரிக்கமாட்டேன் என்று இன்றைய தினம் நான் கூறப்போவதில்லை.

இப்படிப்பட்ட கேட்டிலிருந்து இந்தியா தப்ப வேண்டுமென்ருல், அது அமெரிக்காவிலும், மற்ற ஐரோப்பிய நாடுகளிலும் உள்ள சிறந்ததை மட்டும் பின்பற்ற வேண்டும்; கவர்ச்சிகரமான தோற்றத்தோடு, ஆனல் நாசத்தை உண்டு பண்ணக்கூடிய பொருளாதாரக் கொள்கைகளை ஒதுக்கிவிட வேண்டும். ஆகவே, இந்தியாவின் மூலப் பொருள்களை வெளியே அனுப்பித் தயாரிக்கப்பட்ட சாமான்களைக் கொள்ளை விலை கொடுத்து வாங்கிக்கொண்டிருப்பதற்குப் பதிலாக, இந்தியாவின் ஆள் பலத்தையெல்லாம் பயன்படுத்தி, அதன் மூலப் பொருள்களை அதனுடைய கணக்கற்ற கிராமங்களில் விநியோகம் செய்வதில்தான் உண்மையான திட்டம் அடங்கியிருக்கிறது.

—'ஹரிஜன்' – 23—3—1947

['காந்திஜியின் பாத யாத்திரை நாட் குறிப்'பிலிருந்து எடுத்தது.]

# 8

# சுதேசி உணர்ச்சி மறைந்துகொண்டிருக்கிறதா ?

சுயராஜ்யத்தின் வடிவில் சுதேசி ராஜ்யம் வந்துகொண்டிருக்கும் சமயத்திலும், நாட்டிலிருந்து சுதேசி உணர்ச்சி சீக்கிரமாக மறைந்துகொண்டிருக்கிறது என்று என்னிடம் சொல்லுகிருர்கள். கையிருப்பில் உள்ள கதர் மிகமிகக் குறைவு. காந்திக் குல்லாய்கள் எனப்படும் தொப்பிகளை அணிந்து, மற்றப்படி பரதேசித் துணிகளையே அணிந்துகொண்டிருக்கும் ஆட்களைப் பார்ப்பது சகஜமாக இருக்கிறது. ஏதேனும் விரிவான அளவில் அது உண்மையாக இருக்குமென்ருல், நாம் ஆசையோடு விரும்பிய சுதந்திரம் அற்பாயுள் கொண்டதாகவே இருக்கும் என்பதே என் அபிப்பிராயம். அப்புறம் இந்தியா ஆசியாவின் ஜோதி ஆகும்-உரிமைப்படி அது அப்படி ஆகவேண்டும்-நம்பிக்கையைக் கைவிட்டுவிட வேண்டியதுதான். பரதேசியும் ஆடம்பரமும் ஒன்றையொன்று இணைந்து செல்கின்றன. ஆடம்பரமானது எங்கே பார்த்தாலும் ஆட்டம் போட்டுக்கொண்டிருக்கிறது என்கிருர், ஒரு நிருபர். இந்தப் பரிதாப நிலை, நகரங்களைப் பொறுத்தவரையில் உண்மையாக இருக்கக்கூடும் என்றும், கிராமங்களின் நிலை அவ்வாறு இல்லை என்றும், அவை பட்டினி கிடப்பதே அதற்குக் காரணமாக இருக்கக்கூடும் என்றும் நான் நம்புகிறேன்.

1915-ஆம் ஆண்டில் நான் இந்தியாவுக்குத் திரும்பியதுமே சுதேசியின் நடுநாயகமான அம்சம் கதரில்தான் இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்தேன். கதர் இல்லாமல் போய்விட்டால், சுதேசியும் இராது என்று அப்பொழுதே நான் வாதித்தேன்.

இந்திய மில்களில் உற்பத்தியாகின்றவை சுதேசியாகமாட்டா என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறேன். இன்றும் அதே கருத்தைத்தான் உறுதியாகக் கொண்டிருக்கிறேன்.

நமது முதலாவது தேசீயப் போராட்டத்தின்போது, நாம் அந்நியத் துணிகளைச் சொக்கப்பனையாகக் கொளுத்தியதை நினைத்துப் பாருங்கள். ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும், பண்டித மோதிலால் நேருவும் அந்தச் சொக்கப்பனையில் தங்கள் விலை உயர்ந்த உடைகளை எறிந்தார்கள். கதரின் எளிமையிலும், தூய்மையிலும் தாம் உண்மையான சந்தோஷத்தைக் கண்டதாகப் பிற்பாடு சிறைச்சாலையிலிருந்து பண்டித மோதிலால் நேரு எழுதினர். அந்த உணர்ச்சி இன்று இல்லை என்று கூறப்படுகிறது. நமது மூவர்ணக் கொடியின் நடுவில் ராட்டினம் இருக்கிறது. அது கோடிக்கணக்கான மக்களின் ஒற்றுமைக்கும், அகிம்சா பலத்துக்கும் சின்னமாக விளங்குகிறது. கொடியின் மூன்று வர்ணங்களும் யார் யாருக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கின்றனவோ அவர்களை எல்லாம் ஒன்ருகப் பிணைக்கக்கூடிய ஒற்றுமைச் சக்தியாக சர்க்காவில் நூற்ற நூலை நான் பாவிக்கிறேன். அதனுல்தான் சுயராஜ்யம் என்ற துணி முழுவதும் கையால் நூற்ற நூலின் ஓர் இழையில் தொங்குகிறது என்றும், ராட்டினமே நமது சக்தி வாய்ந்த ஆயுதம் என்றும் சொன்னேன். அந்த ராட்டினம் இன்று எங்கே?

உங்களிடம் சுதேசி உணர்ச்சி இருக்குமானுல், நீங்கள் உங்களுடைய பிரதானத் தேவைகளுக்கு வேண்டியவற்றை மேற்கே இருந்து எதிர்பார்க்க மறுத்துவிடுவீர்கள் என்பதை ஏற்கனவே உங்களுக்கு நினைவூட்டி இருக்கிறேன். இந்தக் கடுமையான பற்ருக்குறைக் காலத்தில் இந்தியா வெளியிலிருந்து உணவுப் பொருட்களையும் உடையையும் இறக்குமதி செய்தால், அதை நான் கண்டிக்கமாட்டேன். ஆனுல், ஒரு நிபந்தனை என்னவென்ருல், அவை இந்தியாவுக்குள்ளிருந்தே கிடைக்க முடியாத நிலை இருக்க வேண்டும். நிலைமை அவ்வாறு இருப்பதாக எந்த வகையிலும் நிரூபிக்கப்படவில்லை. இந்தியா தனக்கு வேண்டிய கதரைத் தயாரிக்கவும், தன் எண்ணற்ற கிராமங்களில் தனக்கு வேண்டிய உணவுப் பொருட்களைப் பயிரிட்டுக்கொள்ளவும் முடியும் என்று சொல்ல நான் தயங்கியதில்லை; அதையே திரும்பவும் சொல்லுவேன். ஆனுல், அந்தோ! மக்கள் மிகவும் சோம்பேறிகளாகிவிட்டார்கள். இந்த இரு தேவைகளும் இந்தியாவின் எல்லைகளுக்கு உள்ளிருந்தே கிடைக்க வேண்டும் என்று வற்புறுத்தாதவர்களாக இருக்கிருர்கள். நான் பட்டினி கிடக்கவும், நிர்வாணமாக இருக்கவும் கூடத் தயாராக இருப்பேனே ஒழிய உணவுக்கும் உடைக்கும் மேல்நாடுகளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கமாட்டேன் என்ற அளவுக்கும் போகிறேன். மன உறுதியில்லாமல் நல்ல காரியத்தைச் செய்வது சாத்தியமில்லை.

—'ஹரிஜன்' – 29—6—1947

[20—6—1947-இல் காந்திஜி, பிரார்த்தனை முடிந்த பிறகு செய்த பிரசங்கம்—எஸ். என்.]

பகுதி மூன்று

# உற்பத்தி முறையின் அமைப்பு

## 1

## தொழில்களை அமைப்பதற்கான முறை

ஆனல், கதர் மனப்பான்மை என்பது, உற்பத்தியைப் பரவலான முறையில் செய்து, வாழ்க்கைத் தேவைகளை விநியோகிப்பதாகும். ஆகையால், இதுவரையிலும் உருவாக்கப்பட்ட கொள்கை என்னவென்ருல், ஒவ்வொரு கிராமமும் தன் தேவைகளை உற்பத்தி செய்து உபயோகிக்க வேண்டும்; அத்துடன், நகரங்களின் தேவைகளுக்காகக் குறிப்பிட்ட சத விகிதம் உற்பத்தி செய்ய வேண்டும் என்பதே.

கன ரகத் தொழில்களைக் குறிப்பிட்ட இடத்திலேயே குவிப்பதும், தேசீய மயமாக்குவதும் அவசியமாக இருக்கும். ஆனல், கிராமங்களில், விரிவான தேசீய நடவடிக்கையின் குறைந்த பட்சப் பகுதியில்தான் அவை இடம் பெறும்.

—*'நிர்மாணத் திட்டம்'* (1941-ம் ஆண்டுப் பதிப்பு.)

['கதர்' என்ற நூலின் இரண்டாம் அத்தியாயத்திலிருந்து எடுத்த பகுதிகள்.]

## 2

## குடிசைத் தொழில்கள், பெரிய அளவில் உற்பத்தி பற்றிச் சில கேள்விகள்

டிசம்பர் கடைசி வாரத்தில் நாகபுரியில் நடைபெற்ற பொருளாதார மகாநாட்டைச் சேர்ந்த சுமார் முப்பது அங்கத்தினர்கள், காந்திஜியைப் பார்ப்பதற்காகவும், மகன் பொருட்காட்சியின் திறப்பு வைபவத்தைக் காண்பதற்காகவும் சென்ற மாதம் 30-ஆம் தேதி சேகானுக்கு வந்தார்கள். காலதாமதமாக வந்துவிட்டதால், முதலில் அவர்கள் வைபவத்துக்குப் போக வேண்டியிருந்தது.

திறப்பு வைபவம் முடிந்த பிறகு, அவர்கள் காந்திஜியைச் சந்திக்க ஜம்னுலால்ஜியின் பங்களாவுக்குப் போனுர்கள். அவர்களோடு சம்பாஷணையைத் தொடங்கிய காந்திஜி பின்கண்டவாறு கூறினுர்: ''நீங்கள் பார்த்ததைக் குணதோஷ விமர்சனம் செய்ய வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீங்கள் கண்ட குறைகளை என்னிடம் சொல்லுங்கள். புகழுரை எனக்கு உதவி புரியாது. எந்தச் சமயத்தில் நான் புகழுரைக்குப் பாத்திரமானவன் என்பதை நான் அறிவேன். இதற்கு முன்பு சில பொருளாதார வாதிகள் சொன்னது போல, எல்லாமே தோல்வியில்தான் முடியும் என்று அதிகார தோரணையில் என்னிடம் சொல்லாதீர்கள். இப்படிப்பட்ட கண்டனம் ஏன் உள்ளத்தில் தைக்காது? ஆனுல், நுட்பமாகவும், அனுதாபத்துடனும் ஆராய்ந்த பிறகு, நீங்கள் குறைகள் இருப்பதாகக் கண்டு, அவற்றை எனக்குக் குறிப்பிட்டுக் காட்டினுல், நான் நன்றியுணர்ச்சி உடையவனுக இருப்பேன்.''

ஆனுல், ஆக்ககரமான முறையில் யாதொரு குணதோஷ விமர்சனமும் வெளிவரவில்லை. முதலில் கேட்கப்பட்ட கேள்வி, காந்திஜி பல முறை திரும்பத் திரும்பப் பதிலளித்துள்ள கேள்வி தான். அதாவது, ''பெரிய அளவில் உற்பத்தி செய்வதை நீங்கள் எதிர்க்கிறீர்களா?'' என்று கேட்கப்பட்டது. அதற்குக் காந்திஜி அளித்த பதில்: ''அப்படி நான் ஒருபோதும் கூறியதில்லை. இந்த நம்பிக்கை, என்னைப்பற்றிய பல மூடநம்பிக்கைகளில் ஒன்று. இப்படிப்பட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதிலேயே என்னுடைய பாதி நேரம் கழிந்துவிடுகிறது. ஆனுல், விஞ்ஞானிகள் நன்ருக அறிந்துகொண்ட நிலையில்தான் பேசுவார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன். உங்கள் கேள்வி, நிச்சயமில்லாத பத்திரிகைச் செய்திகள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. கிராமவாசிகள் சிரமமில்லாமல் உற்பத்தி செய்யக்கூடியவற்றைப் பெரிய அளவில் உற்பத்தி செய்வதைத் தான் நான் எதிர்க்கிறேன்.''

**கேள்வி:** திட்டக் கமிஷனைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**பதில்:** நான் எதுவும் கூற இயலாது. அதை நான் ஆராய்ந்ததில்லை. அது, நான் இருக்கும்போது காரியக் கமிட்டியில் விவாதிக்கப்படவில்லை. என் ஆலோசனையை நாடும்போதெல்லாம் நான் தொடர்ந்து காரியக்கமிட்டிக்கு ஆலோசனை கூறி வருகிறேன் என்பதனுல், காரியக் கமிட்டியிலிருந்து வெளியாகக்கூடிய ஒவ்வொன்றும் என்னுடைய அங்கீகாரம் பெற்றிருக்கிறது என்ருே, என்னேடு விவாதிக்கப்பட்டது என்ருேகூட ஆகிவிடாது. தீர்மானங்களின் பொது அம்சங்களைப் பொறுத்தவரையில் நான் வேண்டுமென்றே பொறுப்பை ஏற்றுக்கொள்ளவில்லை.

கே : அதற்குத் தாங்கள் ஆசீர்வதிக்கிறீர்கள்?

ப : எனக்குத் தெரியாத ஒரு விஷயத்தில் அல்லது எனக்கு அக்கறையில்லாத ஒரு விஷயத்தில் என் ஆசீர்வாதங்களால் என்ன பயன் ஏற்பட முடியும்?

கே : குடிசைத் தொழில்களுக்கும், பெரிய தொழில்களுக்கு மிடையே ஒற்றுமையை உண்டுபண்ண முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

ப : ஆம். கிராமங்களுக்கு உதவக்கூடிய முறையில் அவற்றைத் திட்டமிட்டால் முடியும். அடிப்படைத் தொழில்களை, நாட்டுக்குத் தேவைப்படும் தொழில்களை, குறிப்பிட்ட இடத்தில் மத்தியப்படுத்தலாம். ஆனால், ஓரளவுக்கு ஸ்தாபன ரீதியில் அமைத்துக் கிராமவாசிகள் மேற்கொள்ள முடியும் எதையும் ஓர் அடிப்படைத் தொழிலாக அப்போது நான் தேர்ந்தெடுக்க மாட்டேன். உதாரணமாக, கையினால் செய்யும் காகிதத்தின் சாத்தியக் கூறுகளைப்பற்றி முன்பு எனக்குத் தெரியாது. இப்பொழுது ஒவ்வொரு கிராமமும், செய்திப் பத்திரிகைகள் முதலியவற்றிற்குக் காகிதம் உற்பத்தி செய்ய முடியாவிட்டாலும், தனக்கு வேண்டிய காகிதத்தை உற்பத்தி செய்துகொள்ள முடியும் என்று நான் கருதும் அளவுக்கு நம்பிக்கையோடு இருக்கிறேன். காகிதம் செய்வதில் அரசாங்கம் கட்டுப்பாடு செய்து, அதைக் குறிப்பிட்ட இடத்தில் மத்தியப்படுத்தும் பட்சத்தில், கிராமங்கள் உற்பத்தி செய்யக்கூடிய எல்லாக் காகிதங்களுக்கும் அரசாங்கம் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்றே நான் எதிர்பார்ப்பேன்.

கே : கிராமங்களைப் பாதுகாப்பது என்பதற்கு என்ன அர்த்தம்?

ப : நகரங்களின் ஆக்கிரமிப்புகளிலிருந்து அவற்றைப் பாதுகாப்பது என்று அர்த்தம். ஒரு சமயத்தில், நகரங்கள், கிராமங்களைச் சார்ந்திருந்தன. இப்பொழுது நிலைமை நேர் மாறாக இருக்கிறது. பரஸ்பரம் ஒன்றையொன்று சார்ந்திருக்கும் நிலை இல்லை. நகரங்கள் கிராமங்களைச் சுரண்டியும், உறிஞ்சியும் வருகின்றன.

கே : நகரங்கள் உற்பத்தி செய்கிற அநேக பொருட்கள், கிராமங்களுக்குத் தேவைப்படவில்லையா?

ப : அது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது. எது எப்படியானாலும் என் திட்டத்தின் கீழ் கிராமங்களால் உற்பத்தி செய்ய முடியும் எதையும் நகரங்கள் உற்பத்தி செய்வதற்கு அனுமதிக்கப்படமாட்டாது. கிராமங்களில் உற்பத்தி செய்யப்பட்டவற்றை வாங்கி விற்பதுதான் நகரங்கள் செய்ய வேண்டிய நியாயமான வேலை.

கே: ஜவுளி மில்லின் நடவடிக்கை, கைத்தறி உற்பத்தியோடு இணைந்து போகும்படி நம்மால் செய்ய முடியுமா ?

ப: எனக்குத் தெரிந்தவரையில், 'இல்லை' என்று அழுத்தமாகச் சொல்லுவதுதான் என் பதிலாகும். நமக்குத் தேவைப்படும் எல்லாத் துணியையும் கிராமங்களில் சுலபமாக உற்பத்தி செய்துவிட முடியும்.

கே: ஆனால், மில்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டு வருகிறது.

ப: அது ஓர் துரதிர்ஷ்டம்.

கே: ஆனால், திட்டக் கமிஷன் செய்வதற்கு முனைந்து நிற்கும் காரியங்களில் அது ஒன்று.

காந்திஜி: இந்தச் செய்தி எனக்குப் புதிதாக இருக்கிறது. அப்படியானால், கதரைப் பற்றிய தன் தீர்மானத்தைக் காங்கிரஸ் தூக்கி எறிய வேண்டியிருக்கும்.

'ஹரிஜன்' - 28—1—1939

[ஸ்ரீ பியாரிலால் எழுதிவந்த 'வாராந்திரக் கடித'த்தில் முதலில் வெளியான கட்டுரை.]

# 3

# சர்க்கார் உடைமையா, கட்டுப்பாடா ?

கிங்ஸ்வே ஹரிஜன் காலனியில் *8, 9, 10* தேதிகளில் அகில இந்திய நூற்போர் சங்க வருடாந்தரக் கூட்டம் நடை பெற்றது. இதுவரையிலும் கொள்கையளவில் கருதப்பட்டு வந்த அநேக விஷயங்கள், தேசீய அரசாங்கம் ஏற்பட்டதிலிருந்து நடை முறை சாத்தியமாகக்கூடிய நிலையை அடைந்திருக்கின்றன என்ற உண்மையை அக்கூட்டம் புலப்படுத்தியது. கூட்ட நடவடிக்கை களில் சுமார் *80* அங்கத்தினர்கள் பங்கெடுத்துக்கொண்டார்கள். விவாதிக்கப்பட்ட பிரச்னைகளில் ஒன்று, மில் துணியைச் சில குறிப்பிட்ட பிரதேசங்களில் விலக்கிவிடுவதும், மில் துணி கதருடன் போட்டி போட்டு அதைக் கொன்றுவிடாமல் இருக்கப் புதிதாக ஜவுளி மில்கள் அமைப்பதற்குத் தடை விதிப்பதுமாகும். துணி விஷயத்தில் சுயதேவைப் பூர்த்திச் சோதனையைச் செய்து பார்க்க மக்கள் தயாராக இருக்கும் குறிப்பிட்ட பகுதிகளில் மில் துணி நுழைவதை அரசாங்கம் தடுக்க வேண்டும் என்று காந்திஜி யோசனை கூறினார். மாகாண சர்க்கார்கள் கதரை எல்லா இடங் களிலும் பரப்புவதில் அக்கறை கொண்டிருந்தால், அவை புது ஜவுளிமில்களைக் கட்டக்கூடாது என்றும், கட்டுவதற்கு அனுமதிக் கக்கூடாது என்றும் அவர் நல்லுரை பகர்ந்தார். புது மில்களுக்கு

கோடிக்கணக்கில் செலவழித்துக்கொண்டு, அதே சமயத்தில் தங்களுடைய கதர்த் திட்டங்களில் கிராமவாசிகள் தீவிரமாக ஈடுபடுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. கிராமவாசி சூட்சமமான புத்தி படைத்தவர். அவரிடத்தில் துணி விஷயத்தில் சுயதேவைப் பூர்த்தியைப் பற்றிப் பேசிக்கொண்டும், தங்கள் மாகாணங்களில் புதிய ஜவுளி மில்கள் கட்டுவதற்கு அனுமதித்துக்கொண்டுமிருந்தால், அவர்களுடைய அந்தரங்க சுத்தியைக் கிராமவாசி உடனே சந்தேகிக்கத் தொடங்கிவிடுவார்.

எல்லாப் புதிய ஜவுளி மில்களையும், இப்போது உள்ள மில்களையும் கூடிய சீக்கிரத்தில் தேசீய மயமாக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்றை அகில இந்திய நூற்போர் சங்கம் நிறைவேற்றலாம் என்று ஓர் அங்கத்தினர் யோசனை சொன்னார். காந்திஜி அந்த யோசனையை ஏற்றுக் கொள்ளாமல், கதரும், புது மில்களைக்கட்டுவதும் ஒன்றோடொன்று ஒத்துப்போக முடியாது என்று சர்க்காரிடம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, புது ஜவுளி மில்களைத் தேசீய மயமாக்க வேண்டுமென்று கூற முடியாது என்று விவரித்துச் சொன்னார். சென்னை மாகாணப் பிரதமர் ஸ்ரீ டி. பிரகாசம், அம்மாகாணத்தில் புதிய ஜவுளி மில்கள் கட்டக்கூடாது என்று ஏற்கனவே அறிவிப்புக் கொடுத்திருக்கிறார். இப்போதுள்ள மில்களைத் தேசீய மயமாக்கும்படி அவர்கள் கோரலாம் என்றும், ஆனால், அவற்றை அரசாங்கத்தின் கண்டிப்பான கட்டுப்பாட்டின் கீழ் வைத்து அரசாங்க ஸ்தாபனத்தைப் போன்று பொறுப்பேற்று நடத்திவருவதைத்தான் தாம் அதிகம் விரும்புவதாகவும் காந்திஜி சொன்னார். மேலும், காந்திஜி கூறியதாவது: "அகிம்சையில் நம்பிக்கையுள்ளவன் என்ற முறையில் நான் தருமகர்த்தாக் கொள்கையில் நம்பிக்கை வைத்திருக்கிறேன். மில் சொந்தக்காரர்கள் சமாதானமான முறையில் மாறுதல் அடைவதையே நம்புகிறேன். அதன் மூலம் மில் முதலாளிகளும், அவர்களுடைய தொழிலாளிகளும் தாமாகவே சமூகக் கட்டுப்பாட்டின் கீழ் வந்துவிடுவார்கள். அதற்கு என்ன அர்த்தம் என்றால், உதாரணமாக 'அ' என்பவர் சட்ட பூர்வமாகச் சொந்தக்காரராகத் தொடர்ந்து இருந்துவந்த போதிலும், அவர் தம் சேவைக்கு ஏற்றபடியும், மக்கள் அனுமதிக்கும் அளவிலும் லாபத்திலிருந்து தமக்குக் கமிஷனை மட்டும் எடுத்துக் கொள்ளுவார். மில்களில் தொழிலாளர்களே உண்மையான சொந்தக்காரர்களாக இருப்பார்கள். டாட்டா ஸ்தாபனம் ஒன்றில் தொழிலாளிகள் லாபத்தில் பங்கு பெறக்கூடியவர்களாக ஆகியிருக்கிறார்கள் என்று செய்தி வெளியாகியிருக்கிறது. அது சம்பந்தமாக ஸ்ரீ. ஜே. ஆர். டி. டாட்டா செய்துள்ள பிரசங்கம் படிக்க வேண்டிய ஒன்றாகும். இப்படிப்பட்ட பரிகாரத்தையே தலைசிறந்ததாக நான் கருதுகிறேன். அவசியமானால், இப்படிப்பட்ட எந்தத் திட்டத்திலும் ஒத்துழைக்கத் தயாராக இருப்பதாகவும், மேற்கொண்டு தங்கள் ஜவுளி மில்களை விஸ்தரிப்பதை நிறுத்திவிடுவதாகவும் எனக்கு

உறுதிமொழியளித்தார்கள். அரசாங்கமும், அகில இந்திய நூற்போர் சங்கமும், மில் சொந்தக்காரர்களும் சேர்ந்து கூட்டாக மில் தொழிலை நிர்வகிப்பது என்ற யோசனையை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. நம்முடைய வேலை, மில்களை நடத்துவதன்று; சிறு ராட்டினத்தைக் கையால் சுற்றுவதேயாகும். நம்முடைய செயல்துறைக்குப் புறம்பே உள்ள ஒரு விஷயத்தைப்பற்றி விவாதித்து நாம் ஏன் நேரத்தைப் போக்க வேண்டும்? எல்லா மில்களுமே மூடப்படுவதாக இருந்தால், நான் அதற்காக ஒரு துளி கண்ணீர்கூடச் சிந்த மாட்டேன். மில்கள் வளர்ச்சி பெற்றால், கதர் சாக வேண்டியதுதான். ஏழைகளின் நிவாரணத்துக்காக இன்னும் அது உபதொழிலாக இருந்து வரலாம். ஆனால், அதற்குச் சர்க்கா சங்கம்போன்ற ஓர் பெரிய ஸ்தாபனம் தேவைப் படாது. அரசாங்கமானது நம்மைக் கலந்தாலோசித்து, சாத்தியமானவரை நம்முடைய ஆலோசனைப்படி ஜவுளி மில்களைக் கட்டுப் படுத்தி வந்தால் நான் பூரணத் திருப்தி அடைவேன்."

—'ஹரிஜன்' – 20 -10—1946

[மேற்கண்ட தலைப்புடன், பியாரிலால் எழுதிவந்த 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் வெளியான கட்டுரை.]

## 4

# பரவல் முறை-கிராம இயக்கம் வெற்றி பெறுவதற்கான மார்க்கம்

ஸ்ரீ ஜாதவ்* எழுதுகிறார்:

"இரண்டாவதாக, நான் ஜில்லா லோக்கல் போர்டு காரியாலயத்தில், காங்கிரஸ் கட்சி பதவிக்கு வந்ததிலிருந்து, கையினால் செய்த காகிதத்தையே உபயோகித்து வருகிறேன். மில்லில் செய்த காகிதத்தையோ, அந்நிய நாட்டுக் காகிதத்தையோ உபயோகிப்பது அடியோடு நிறுத்தப்பட்டுவிட்டது. நான் கேள்விப்பட்ட வரையில், மகாராஷ்டிரத்தில் எங்கள் போர்டு ஒன்று தான் காரியாலய உபயோகத்துக்கு வெளிநாட்டுக் காகிதத்தை அறவே நீக்கி விட்டுக் கையினால் செய்த காகிதத்தை உபயோகித்து வருகிறது. எங்கள் போர்டின் இந்தப் பழக்கத்தைப் பின்பற்றும்படி கேட்டுக்கொண்டு மகாராஷ்டிராவில் உள்ள மற்ற போர்டுகளின் தலைவர்களுக்கு நான் ஓர் சுற்றறிக்கை அனுப்பினேன். அவ்விதமே செய்யச் சில போர்டுகள் சம்மதித்திருக்கின்றன என்பதனால் நான் சந்தோஷப்படுகிறேன். ஆனால், இந்தியாவிலுள்ள காங்கிரஸ் போர்டுகளின் தலைவர்களைக் காரியாலய உபயோகத்துக்குக் கைக் காகிதத்தையே பயன்படுத்த வேண்டுமென்று தாங்களே கேட்டுக்கொண்டால் நன்றாக இருந்திருக்கும் என்று நினைக்கிறேன். 'ஹரிஜன்' பத்திரிகை மூலமே தாங்கள் அவ்வேண்டுகோளை விடுக்கலாம். அவ்வாறு செய்தால், கிராமத்

* ஜாதவ்: ஷோலாப்பூர் ஜில்லா போர்டு தலைவர்.

தொழில்களுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டுமென்ற தங்கள் கனவு, எழுதும் காகிதத்தைப் பொறுத்தவரை நனவு ஆவதற்குப் பெரிதும் காரணமாக இருக்கும் என்று நான் உறுதி கூறுகிறேன்."

இந்த வாதத்தை நான் மகிழ்ச்சியோடு ஆதரிக்கிறேன். உண்மையில், அதே விஷயத்தை நான் அடிக்கடி இந்தப் பத்திரிகையில் எழுதி வந்திருக்கிறேன். கையால் செய்த காகித விஷயத்தில் மட்டுமன்றி, கிராமத்தில் தயாரான எல்லாப் பொருள்கள் சம்பந்தமாகவும் ஸ்ரீ ஜாதவின் உதாரணத்தை எல்லா லோக்கல் போர்டுகளும் பின்பற்றவேண்டும். சிறிது ஜாக்கிரதையோடு இந்த விஷயங்களைத் தங்கள் வரவு செலவுத் திட்டத்துக்குள்ளேயே போர்டுகள் சமாளிக்க வேண்டும். போர்டுகள் தங்கள் அதிகாரத்தின் கீழ் இருக்கும் கிராமங்களில் கூடுமானவரை இந்தப் பொருள்களைத் தயாரிக்கும்படி செய்யவேண்டும் என்று நான் ஆலோசனை கூறுவேன். கேந்திரமான இந்த உண்மையை மனத்தில் கொள்ளாவிட்டால், கிராம இயக்கம் முறியடிக்கப்பட்டுவிடும். பரவல் முறை இயக்கத்தின் வெற்றிக்கான மார்க்கமாக இருப்பதைப் போல அதன் அழகாகவும் இருக்கிறது.

—'ஹரிஜன்' – 8—6—1940

['கையினால் செய்த காகிதம்' என்ற தலைப்பில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளியான கட்டுரை.]

# 5

# சமூக நீதியின் பேரில் தொழில்களை நிர்மாணித்தல்

தேச பக்தியும் முதலாளித்துவமும் பரஸ்பரம் ஒன்றுக்கொன்று முரணானவை என்பதில் சந்தேகமில்லை; இதுவரையிலும் அப்படித்தான் அவை இருந்து வந்திருக்கின்றன. ஆனால், மூலதனம் என்பது வேறு; முதலாளித்துவம் வேறு. முதலாளி அந்த இரண்டினின்றும் வேறானவர். உழைப்பையே ஒரு வகை மூலதனம் என்று வருணிக்கலாம். ஆனால், பணம் என்ற குறுகிய அர்த்தத்திலும், சிறிது மூலதனம்—அது எப்போதும் கொஞ்சமாகவே இருக்கட்டும்—உழைப்பு செயல்படுவதற்கு அவசியம். அதனால், மூலதனத்துக்கும் தேசபக்திக்கும் யாதொரு முரண்பாடும் கிடையாது. ஒரு முதலாளி தேசபக்தராக இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். முதலாளிகளுக்குத் தேசபக்தி மார்க்கம் ஒன்றைக் காட்டி பீகாரிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் ரிஜிஸ்தரார் கான்பகதூர் மொகையதீன் அகமத் பேசியிருக்கிறார். 'டைம்ஸ் ஆப் இந்தியா' கூறுவதாவது: "மோதிகாரி

மத்தியக் கூட்டுறவு பாங்கியின் புதுக் கட்டடத் திறப்பு விழா வின்போது பேசிய கான்பகதூர், தீங்கு பயக்கும் முதலாளித் துவத்துக்கும் பயனுள்ள முதலாளித்துவத்துக்குமிடையே உள்ள வித்தியாசத்தை எடுத்துக்காட்டினூர். தொழில் துறை நட வடிக்கைகளை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்க வேண்டும் என்று அவர் யோசனை சொன்னூர். அவர் கூறியதாவது: 'ஒரு பிரிவை முதலாளிகள் மேற்கொள்ள வேண்டும். மற்றொரு பிரிவை இந்தி யாவின் 90 சதவிகித மக்களின் நன்மைக்காகக் கூட்டுறவு முறை யில் மேற்கொள்ள வேண்டும். பருத்தி, சர்க்கரை, எண்ணெய் விதைகள், கோதுமை போன்ற விவசாய உற்பத்திப் பொருள்களை அடிப்படையாகக் கொண்ட எந்தத் தொழிலும் கூட்டுறவு முறையில்தான் நடைபெற வேண்டும். அப்பொழுதுதான் உற் பத்தியாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்ததற்குரிய முழுப் பிரதி பலனையும் அடைய முடியும். விவசாயிகளைச் சுரண்டாத எல்லா வகையான சுரங்கத் தொழில்கள், இரும்புத் தொழில்கள், தோல் முதலிய பெரிய தொழில்கள் ஆகியவற்றை முதலாளிக்கு விட்டு விடவேண்டும். அப்பொழுது, அவர்கள் விவசாயிகளைச் சுரண்டி அதன் மூலம் இந்தியாவின் செல்வ ஊற்றையே உறிஞ்சுவதற்குப் பதிலாக நாட்டின் செல்வத்தை மேலும் அதிகமாகப் பெருக்குவ தற்குத் தங்கள் மூலதனத்தை உபயோகிக்க முடியும்.''

முதலாளிகள் கான்பகதூரின் நல்லுரையைப் பின்பற்றி, பொது மக்களுக்கும் தங்களுக்கும் ஒரே மாதிரி நன்மை தேடக் கூடிய காரியங்களுக்கு மட்டும் தங்கள் மூலதனத்தைப் பயன் படுத்தினூல், இந்தியாவின் வறுமை வெகு சீக்கிரத்தில் பழங் கதை ஆகிவிடும். கான்பகதூர் பின் வருமாறு அபிப்பிராயப் படுகிறூர்: ''சணல் மில்கள், சர்க்கரை மில்கள், பருத்தி மில்கள் ஆகியவை விவசாயிகளைச் சுரண்டுவதற்காகவே இருக்கின்றன. சுரண்டப்பட்ட இந்த மக்கள் அடிமைகளைப் போல் வேலை செய்வ தற்குத் தொழிற்சாலைகளுக்கு விரட்டப்படுகிறூர்கள். யுத்த சம யத்தில், அந்நிய ஏற்றுமதி நிறுத்தப்பட்டபோது, வங்காளத்தின் சணல் பயிரிடுவோருக்காக வங்காள சணல் மில் சொந்தக் காரர்கள் சிறிதும் கவலைப்படவில்லை...இந்தச் சுரண்டலின் பலனூக, சணல் பயிரிடுவோர் வறுமை நிலையை எய்தினூர்கள்: சணல் மில் சொந்தக்காரர்கள் நூற்றுக்கு நூறு லாபம் அடைந் தார்கள்.''

—'எங் இந்தியா' – 3—6—1926

['தேச பக்தியா, முதலாளித்துவமா?' என்ற தலைப்பின்கீழ் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளியான கட்டுரை.]

# 6

# கூட்டுறவின் தார்மிக அடிப்படை

சில மாதங்களுக்கு முன் நான் ஸ்ரீ ஈவ்பாங்க்குடன் மில் தொழிலாளிகளின் கூட்டம் ஒன்றுக்குப் போயிருந்தேன் என்பதனுலும், அவர்களுக்குக் கூட்டுறவு முறையின் நியதிகளே அவர் விளக்கிக் கூற விரும்பினர் என்பதனுலுமே நான் உங்கள் கவனத்தை உரிமையோடு கோருகிறேன். அந்தத் தொழிலாளிகள் வசித்து வந்த சின்னஞ் சிறு அறைகளேக் கொண்ட பெரிய வீடு எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஆபாசமாக இருந்தது. சமீபத்தில் பெய்த மழை அதை இன்னும் மோசமாக்கிவிட்டது. ஸ்ரீ ஈவ்பாங்க் தமது லட்சியமாகக் கொண்டுவிட்டதில் மிகுந்த உற்சாகம் காட்டியிராவிட்டால், நான் எனது கடமையைத் தட்டிக் கழித்திருப்பேன் என்பதை நான் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளவே வேண்டும். ஆனல், நாங்கள் அங்கே போனேம். தொய்ந்தும் அறுந்தும் போயிருக்கும் ஒரு கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்திருந்தோம். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் எங்களேச் சுற்றிச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். எல்லோரையும் விலக்கிக்கொண்டு முன்னல் வந்து நின்ற ஒருவரை—முகத் தோற்றத்தைப் பார்த்தால் அவர் அப்பாவியைப் போல் தெரியவில்லே—ஸ்ரீ ஈவ்பாங்க் கோபித்துக் கொண்டார். அந்த ஆசாமியுடனும், மற்றவர்களுடனும் குஜராத்தியில் சம்பாஷணை செய்துவிட்டு, அங்குள்ளவர்களிடம் நான் பேச வேண்டும் என்று அவர் விரும்பினர். ஸ்ரீ ஈவ்பாங்க் முதலில் பேசிய ஆசாமியின் சந்தேகப் பார்வைகளின் காரணமாக நான் இயல்பாகவே கூட்டுறவின் தார்மிக அம்சங்களே வற்புறுத்திக் கூறினேன். அவ்விஷயத்தைக் குறித்து நான் பேசிய முறை ஸ்ரீ ஈவ்பாங்க்குக்குப் பிடித்திருந்ததாகவே நான் நினைக்கிறேன். அதனுல்தான், தார்மிகக் கண்ணேட்டத்துடன் கூட்டுறவைப் பற்றிச் சில நிமிஷ நேரம் விவரித்துக் கூறி உங்கள் பொறுமைக்கு வேலை கொடுக்கும்படி அவர் அன்போடு என்னைக் கேட்டுக் கொண்டார் என்று கருதுகிறேன்.

கூட்டுறவு பற்றிய சாஸ்திரீய முறையில் எனக்கு எதுவுமே தெரியாது. என் சகோதரர் தேவாதரர் அதைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டிருக்கிருர். அவர் எதைச் செய்தாலும் இயல்பாக அது என்னைக் கவருகிறது. அதில் ஏதாவது நல்லது இருக்க வேண்டும் என்றும், அதைச் செய்வது சற்றுக் கடினமாகவே இருக்க வேண்டும் என்றும் என்னை நினைக்கும்படி செய்கிறது. இவ்விஷயம் பற்றிய சில புத்தகங்களேயும் ஸ்ரீ ஈவ்பாங்க் எனக்கு அன்போடு கொடுத்து உதவினர். அத்துடன் சம்பாரணில் ஓரளவு கூட்டுறவு முயற்சியின் பலனைக் கவனிக்கும் இணையற்ற ஒரு சந்தர்ப்பமும் எனக்குக் கிடைத்தது. பத்துக் கட்டளைகளைப்

போலிருந்த ஸ்ரீ ஈவ்பாங்க்கின் பத்துப் பிரதான அம்சங்களையும் படித்துப் பார்த்தேன். பீகாரைச் சேர்ந்த ஸ்ரீ காலின்ஸின் பன்னிரண்டு அம்சங்களையும் படித்துப் பார்த்தேன். அவை பழைய ரோமாபுரிச் சட்டங்களை எனக்கு நினைவூட்டின. விவசாய பாங்கிகள் எனப்படுபவை சம்பாரணில் இருக்கின்றன. அவை கூட்டுறவின் வெற்றியை எடுத்துக்காட்டுவன என்றால், எனக்கு அவை ஏமாற்றம் அளிக்கும் முயற்சிகளாகவே இருந்தன. அதே சமயத்தில், அதே மார்க்கத்தில் பாதிரியாரான ஸ்ரீ ஹாட்ஜ் அமைதியாக வேலை செய்து வருகிறார். அவருடைய முயற்சிகள் அவரோடு தொடர்பு கொள்ளுபவர்களிடம் தமது முத்திரையை இட்டுச் செல்லுகின்றன. ஸ்ரீ ஹாட்ஜ் கூட்டுறவில் உற்சாகம் கொண்டவர். தம்முடைய முயற்சிகளினால் ஏற்படும் பலனைக் கூட்டுறவின் செயல் முறையால் ஏற்படுவதாக அவர் கருது கிறார் போலும்! இம்முயற்சிகளைக் கவனித்த நான், தனி மனிதனின் உதவி ஒரு சந்தர்ப்பத்தில் வெற்றிக்கும் மற்றொரு சந்தர்ப்பத்தில் தோல்விக்கும் காரணமாக இருந்தது என்று முடிவு கட்டத் தயங்கவில்லை.

நானே இதில் உற்சாகம் உடையவன்தான். ஆனால், இருபது வருடப் பரிசோதனையும், அனுபவமும், முன் ஜாக்கிரதையுள்ள, பகுத்து அறியக்கூடிய உற்சாகியாக என்னை ஆக்கியிருக்கின்றன. ஒரு லட்சியத்துக்காகப் பாடுபடும் ஊழியர்கள், அதன் பெருமைகளை மிகைப்படுத்தி விடுகிறார்கள். தம்மையறியாமலே மிகைப்படுத்தினாலும், அது அவசியமாக இருக்கிறது. அத்துடன் அதன் குறைகளையே சாதகமாக மாற்றிக்கொள்ளுவதில் அடிக்கடி வெற்றி பெறுகிறார்கள். நான் முன்ஜாக்கிரதையோடு இருந்தாலும், அகமதாபாத்தில் நான் நடத்திவரும் ஸ்தாபனம் உலகிலேயே மிகச் சிறந்ததாக இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். அதுதான் எனக்குப் போதிய உத்வேகத்தை அளிக்கிறது. அது ஆன்மா இல்லாத ஆன்ம பலமாக விளங்குகிறது என்றும், அதன் கடுமையான கட்டுத் திட்டங்கள் அதை யந்திரமாகவே மாற்றியிருக்கின்றன என்றும் விமர்சகர்கள் என்னிடம் கூறுகிறார்கள். இருவர்—விமர்சகர்களும் நானும்—கூறுவதும் தவறு என்றே எனக்குத் தோன்றுகிறது. அது நாட்டின் அறிவுத் திறனைப் பயன்படுத்தி ஆடவரும் பெண்டிரும் சுதந்திரமான, கட்டுக்களற்ற முறையில் நல்லொழுக்கத்தை வளர்ப்பதற்கு வாய்ப்பளிக்கும் ஓர் இல்லத்தை நாட்டுக்கு அளிப்பதற்கான ஒரு பணிவான முயற்சியேயாகும். அதைக் கட்டுப்படுத்தி நிர்வகிப்பவர்கள் கவனமாக இல்லாவிட்டால், நல்லொழுக்கத்தின் அடிப்படையான ஒழுக்க முறை, கண்ணில் தெரியும் லட்சியத்தையே அடையவிடாமல் ஏமாற்றிவிடும். அதனால், பொய் நம்பிக்கைகளை வைத்துக்கொள்ளக்கூடாது என்று கூட்டுறவு உற்சாகிகளை எச்சரிக்கத் துணிகிறேன்.

ஸர் டானியல் ஹாமில்டனுக்கு அது ஒரு மதமாகவே ஆகிவிட்டது. சென்ற ஜனவரி 13-ஆம் தேதியன்று ஸ்காட்டிஷ்

சர்ச்சுகளின் கல்லூரி மாணவர்களுக்கு அவர் ஒரு பிரசங்கம் செய்தார். ஓர் ஒழுக்க நியதியைச் சுட்டிக்காட்டுவதற்காக அவர், இருநூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்காத்லாந்து வறுமை நிலையில் இருந்ததையும், அந்த மகத்தான தேசம் வறுமை நிலையிலிருந்து சுபிட்ச நிலைக்கு எப்படி உயர்த்தப்பட்டது என்பதையும் விவரித்தார் :

''அந்நாட்டை உயர்த்திய சக்திகள் இரண்டு: ஒன்று, ஸ்காட்டிஷ் சர்ச்; மற்றொன்று, ஸ்காட்டிஷ் பாங்கிகள். சர்ச் மனிதர்களை உற்பத்தி செய்தது; பாங்கிகள், மனிதர்களின் வாழ்க்கைக்கு ஒரு தோற்றுவாயை அளிப்பதற்காகப் பணத்தை உற்பத்தி செய்தன...சர்ச், விவேகத்தின் ஆரம்ப கட்டமான தெய்வ பயத்தைக்கொண்டு நாட்டில் ஒழுங்கு முறையை நிலைநாட்டியது. சர்ச்சைச் சேர்ந்த பாடசாலைகளில், மனித வாழ்க்கையின் தலையாய நோக்கம் தெய்வத்துக்கு மகிமையளித்து, என்றென்றைக்கும் தெய்வ சாந்நித்தியத்தை அனுபவிப்பதே என்பதைக் குழந்தைகள் கற்றுக் கொண்டார்கள். மனிதர்கள், கடவுளிடமும் தங்களிடமும் நம்பிக்கை வைக் கப் பயிற்றுவிக்கப் பட்டார்கள். அவ்விதமாகச் சிருஷ்டிக்கப்பட்ட நம்பக மான நல்லொழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஸ்காட்டிஷ் பாங்கி முறை அமைக்கப்பட்டது."

அவ்விதமாக நிர்மாணிக்கப்பட்ட நல்லொழுக்கத்தை அடிப் படையாகக் கொண்டே பிரமாதமான ஸ்காட்டிஷ் பாங்கி முறையை அமைப்பது சாத்தியமாயிற்று என்பதை ஸர் டானியல் அப்புறம் எடுத்துக்காட்டுகிறார். இதுவரையில் ஸர் டானியலின் கருத்துடன் பூரணமாக ஒத்துப் போகத்தான் முடி யும். ஏனென்றால், ''நல்லொழுக்கமில்லை யென்றால், கூட்டுறவு இல்லை'' என்பது அருமையான ஒரு சூத்திரமாகும். ஆனால், மேற்கொண்டும் வெகு தூரம் அவருடன் நாம் ஒத்துப் போக வேண்டும் என்று நினைக்கிறார். கூட்டுறவு பற்றிக் கீழ்க் கண்டவாறு வாசாலகத் திறமையோடு அவர் பேசுகிறார் :

''இந்தியாவின் எதிர்காலம் பற்றி உங்கள் பகற்கனவுகள் எப்படி இருந் தாலும் சரி, இந்தியாவை ஒன்றாக இணைப்பதற்கும், அதன் மூலம் அது உலகில் தனக்குரிய நியாயமான ஸ்தானம் அடைவதற்குமே பிரிட்டிஷ் சர்க்கார் இங்கே இருக்கிறது என்பதை ஒரு போதும் மறந்துவிட வேண்டாம். சர்க்காரின் கையில் இருக்கும் ஒன்றாக இணைக்கும் சாதனம் கூட்டுறவு இயக்கமே."

இந்தியாவைத் தற்போது பீடிக்கும் எல்லாத் துன்பங் களுக்கும் அதுவே நிவாரணம் என்பது அவர் அபிப்பிராயம். விரிந்த அர்த்தத்தில், அது ஒரு நிபந்தனையின் பேரிலேயே தனக்கு நியாயம் கற்பித்துக்கொள்ள முடியும். அந்த நிபந் தனையை இங்கே குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. ஸர் டானியல் தாமஸ் கொண்ட வரையறைக்குட்பட்ட அர்த்தத்தில், அதை ஓர் உற்சாகியின் உயர்வு நவிற்சி என்றே நான் துணிந்து கருதுகிறேன். இறுதியாக அவர் கூறுவதைக் கவனியுங்கள் :

"கடன் என்பது—அது ஒன்றே நம்பிக்கையாக இருக்கிறது—இருக்க இருக்க அதிகமாக உலகின் பண பலமாக மாறிக்கொண்டு வருகிறது. மலைகளைப் பெயர்க்கும் நம்பிக்கையைப் பொறித்துள்ள கடன் பத்திரம் என்ற ஆயுதத்தினுல் இந்தியா வெற்றியையும் சமாதானத்தையும் அடையும்."

இங்கே வெளிப்படையான குழப்பம் இருக்கிறது. உலகின் பண பலமாக மாறிக்கொண்டிருக்கும் கடனுக்கு தார்மிக அடிப்படை கிடையாது; அது நம்பிக்கை என்பதற்கு மாற்றுப் பெயரும் அல்ல. நம்பிக்கை என்பது சுயம்புவான தார்மிக இயல்பாகும். தென்னுப்பிரிக்காவில் பாங்கிகளோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்த நூற்றுக்கணக்கானவர்களின் இருபது வருட அனுபவத்துக்குப் பிறகு நான் அடிக்கடி கேள்விப்பட்ட அபிப்பிராயம், அதாவது அயோக்கியன் எவ்வளவுக்குப் பெரிய அயோக்கியனுகிருனே, அவ்வளவுக்குப் பாங்கிகளிலிருந்து அவன் வாங்கும் கடனும் அதிகமாகிறது என்ற அபிப்பிராயம், என்னுள் உறுதியாக நிலைத்துவிட்டது. பாங்கிகள் அவனுடைய தார்மிக ஒழுக்கத்தை ஆராய்ந்து பார்ப்பதில்லை. அவன், அதிகப் பற்ருக வாங்குவதையும்,நோட்டு எழுதிக் கொடுத்து வாங்குவதையும் உரிய காலத்தில் திருப்பிக் கொடுத்துவிட்டால், அவை திருப்தியடைந்துவிடுகின்றன. கடன் கொடுத்து வாங்கும் முறையானது, நம்முடைய அழகான உலக கோளத்தைப் பாம்பைப் போல் பல வளையங்களைக் கொண்ட சுருளாகச் சுற்றிக்கொண்டிருக்கிறது. அதை, நாம் பொருட்படுத்தவில்லையென்ருல், அது நம்மை மூச்சுத் திணறும்படி நசுக்கிவிடக்கூடிய நிலையில் இருக்கிறது. அந்த முறையினுல் பல குடும்பங்கள் பாழானதை நான் பார்த்திருக்கிறேன். அந்தக் கடன், கூட்டுறவு முறையில் வாங்கியதாக இருந்தாலும் சரி, வேறுவிதமாக வாங்கியிருந்தாலும் சரி, பலன் ஒன்ருகவே இருக்கிறது. நாசகரமான அந்தச் சுருள் ஐரோப்பாவில் நாம் காணும் இந்த நாசத்தைச் சாத்தியமாக்கியிருக்கிறது. எதுவும் செய்வதற்கு இயலாமல் அதை நாம் சும்மா பார்த்துக்கொண்டிருக்கிருேம். சட்டத்தில் போலவே யுத்தத்திலும், நீளமான பணப்பைதான் இறுதியில் வெற்றி பெறுகிறது என்பது, அநேகமாக இன்று இருக்கும் அளவுக்கு என்றும் உண்மையாக இருந்ததில்லை. கூட்டுறவு இயக்கம் சமய உணர்ச்சி மிக்கவர்களால் நடத்தப் பெற்று எந்த அளவுக்குத் தார்மிக இயக்கமாக இருக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் அது இந்தியாவுக்கு ஒரு வரப்பிரசாதமாக இருக்கும் என்பதை வற்புறுத்திக் கூறுவதற்காகவே, கடன் கொடுக்கும் முறையைப் பற்றி இப்போது இருந்து வரும் கருத்துக்கு நான் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கத் துணிந்தேன். ஆகவே, தார்மிக ரீதியில் நியாயமாக நடக்க விரும்பி, ஆனல் கொடிய வறுமையினுலும், லேவாதேவிக்காரனுடைய இரும்புப் பிடியினுலும் அவ்வாறு நடந்துகொள்ள முடியாமல் இருப்பவர்களுக்குத்தான் கூட்டுறவு முறை பயன்படுத்தப்படவேண்டும். நியாயமான வட்டிக்குக் கடன் வாங்குவதற்கான வசதி, ஒழுக்கம் கெட்டவர்களை

ஒழுக்க சீலர்களாக ஆக்கிவிடாது. ஆனல், நல்லவர்களாக ஆவதற்குப் பாடுபட்டுக்கொண்டிருப்பவர்களுக்கு முன்னேற்றப் பாதையில் உதவி புரிவதுதான் கொடையாளிகளுக்கு இருக்க வேண்டிய விவேகமாகும்.

லோகாயத சுபிட்சமே தார்மிக வளர்ச்சி என்று அடிக்கடி நாம் கருதுகிறோம். இந்தியாவுக்கு மிகுந்த நன்மை செய்யும் சாத்தியம் கொண்ட ஓர் இயக்கம், அற்புதக் கடன்களைக் கொடுப்பதற்கான இயக்கமாகத் தாழ்வுற்றுவிடக்கூடாது. அதனல், இந்தியாவின் கூட்டுறவு சம்பந்தமான கமிட்டியின் அறிக்கையில் கீழ்க்கண்ட சிபாரிசைப் படித்தபோது நான் சந்தோஷம் அடைந்தேன்:

"பொது மக்களுக்கு நன்மை செய்ய, உண்மையான கூட்டுறவு முறையைத்தான், அதாவது தார்மிக அம்சத்தை ஏற்றுக்கொள்ளும் கூட்டுறவு முறையைத்தான் அரசாங்கம் அமுலாக்க வேண்டுமே ஒழிய, எவ்வளவு பிரமாதமானதாக இருந்தாலும், கூட்டுறவுக் கோட்பாடுகளை அறியாத நிலையில் அமைக்கப்பட்ட போலிக் கூட்டுறவையல்ல என்ற தங்கள் கருத்தை அவர்கள் தெளிவாகத் தெரிவிக்க விரும்புகிருர்கள்."

இதுவே உரைகல்லாக இருக்கும்போது, இயக்கத்தின் வெற்றியை, அமைக்கப்பட்டுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கையைக்கொண்டு அளவிடக்கூடாது; ஆனல், கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்திருப்பவர்களின் தார்மிக நிலையைக் கொண்டே அளவிட வேண்டும். அந்த நிலையில், ரிஜிஸ்தரார்கள் இப்போதுள்ள சங்கங்களைப் பெருக்குவதற்கு முன் அவற்றின் தார்மிக வளர்ச்சியை உறுதி செய்ய வேண்டும். அரசாங்கமும், ரிஜிஸ்தர் செய்துகொண்டிருக்கும் சங்கங்களின் எண்ணிக்கையை விட்டுவிட்டு, இப்போதுள்ள ஸ்தாபனங்களின் தார்மிக வெற்றியையே நிபந்தனையாக விதித்து, அவற்றின் வளர்ச்சிக்கு உதவவேண்டும். இது, அங்கத்தினர்களுக்குக் கடனகக் கொடுக்கப்பட்ட ஒவ்வொரு தம்பிடியும் எப்படியெல்லாம் செலவிடப் படுகிறது என்பதைக் கண்டறியும் காரியமாகும். கூட்டுறவுச் சங்கங்கள், நல்ல முறையில் நடைபெறுவதற்குப் பொறுப்பேற்றிருப்பவர்கள், கடனகக் கொடுக்கப்பட்ட பணம் கள்ளுக் கடைக்காரனின் பாக்கிக்கோ, சூதாட்ட விடுதிகளை நடத்துபவர்களின் பைக்கோ போய்ச் சேர்ந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். சூதாட்டம் தானக ஒழியும்படி செய்வதிலும், குடியானவனைக் கள்ளுக்கடைக்குப் போகவிடாமல் செய்வதிலும் வெற்றி பெற்ருல், லேவாதேவிக்காரனின் கொள்ளையை நான் மன்னித்துவிடுவேன்.

லேவாதேவிக்காரனைப் பற்றி ஒரு வார்த்தை கூறுவது இங்கே பொருந்தும். கூட்டுறவு என்பது ஒரு புதிய முறையல்ல. பயிர்களை நாசமாக்கும் குரங்குகளையும், பறவைகளையும் பறை அடித்து விரட்டுவதற்குக் குடியானவர்கள் கூட்டுறவு கொள்ளு

கிறார்கள். பொதுவான ஒரு நெற்களத்தை உபயோகிப்பதிலும் அவர்கள் கூட்டுறவு கொள்ளுகிறார்கள். அவர்கள் தங்களுடைய கால்நடைகளைப் பாதுகாப்பதற்கு, தங்கள் சிறந்த நிலத்தை மேய்ச்சல் தரையாக ஒதுக்கிவைக்கும் அளவுக்குக் கூட்டுறவு கொள்ளுவதை நான் பார்த்திருக்கிறேன். குறிப்பிடத்தக்கவாறு கொள்ளைக்காரனாக இருக்கும் லேவாதேவிக்காரனை எதிர்த்தும் அவர்கள் கூட்டுறவு கொள்ளுவதைப் பார்த்திருக்கிறோம். குடியானவர்களை லேவாதேவிக்காரன் இறுகப் பிடித்துக்கொண் டிருப்பதன் காரணமாக, கூட்டுறவு வெற்றி பெறுமா என்று சந்தேகப்பட்டிருக்கிறார்கள். எனக்கு அந்தப் பயம் இல்லை. சாராம்சத்தில் தார்மிக இயக்கமாக இருக்கும் கூட்டுறவின் முன், மிகமிகச் சக்திவாய்ந்த லேவாதேவிக்காரன், அவன் தீய சக்தி யின் பிரதிநிதியாக இருப்பின், தலை குனிந்தே ஆக வேண்டும். சம்பாரணில் உள்ள லேவாதேவிக்காரன் சம்பந்தமாக நான் பெற்ற குறிப்பிட்ட எல்லைக்குள் அடங்கிய அனுபவம், அவ னுடைய 'நாசகரமான ஆதிக்கம்' பற்றி நிலவும் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளும்படி செய்தது. எல்லாச் சமயங்களிலுமே அவன் ஒரே மாதிரி கல் நெஞ்சம் கொண்டவனாக இல்லை; எப் பொழுதுமே கடைசித் தம்பிடி வரையிலும் கறந்துவிடுகிறவ னாகவும் இல்லை. சில சமயங்களில் அவன் தன் வாடிக்கைக் காரர்களுக்குப் பல வழிகளில் உதவி செய்கிறான்; அவர்கள் துன்பத்துக்குள்ளான சமயங்களில் அவர்களை அதிலிருந்து மீட்கவும் வருகிறான். நான் பார்த்திருப்பது ஒரு வரையறைக்கு உட்பட்டதுதான். அதனால், அதைக்கொண்டு நான் எவ்வித முடிவுக்கும் வந்துவிடக்கூடாது. எனினும், லேவாதேவிக்கார னிடம் உள்ள நல்ல அம்சத்தையே எடுத்துக்கொள்ளவும், அவனிடம் உள்ள தீய அம்சத்தை களைந்துவிடுமாறு அவனைத் தூண்டவும் சிரத்தையோடு முயற்சி செய்து பார்ப்பது சாத்திய மில்லையா என்று பணிவோடு கேட்கிறேன். கூட்டுறவுப் படையில் சேருமாறு அவனைத் தூண்ட முடியாதா? அவனுக்காகப் பிரார்த்தனை செய்வதற்குக் காலம் கடந்துவிட்டது என்று அனு பவம் நிரூபித்துவிட்டதா?

இந்த இயக்கம் எல்லா உள்நாட்டுத் தொழில்களையும் கவனத்தில் கொள்ளுவதாகக் காண்கிறேன். நெசவாளியின் நிலையை அபிவிருத்தி செய்வதற்கான என் பணிவான முயற்சியில் அரசாங்கம் உதவி செய்துகொண்டிருப்பதற்காக அதற்குப் பகிரங்கமாக என் நன்றியைத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த மார்க்கத்தில் வேலை செய்வதற்கு நிறைய இடம் இருக்கிறது என்பதை நான் நடத்திக்கொண்டிருக்கும் பரிசோதனை எடுத்துக் காட்டுகிறது. இந்தியாவின் நலனை விரும்பும் யாரும், எந்தத் தேச பக்தரும் கைத்தறி நெசவாளிக்கு நாசம் ஏற்படுவதை மனக் கலக்கமில்லாமல் பார்த்துக்கொண்டிருக்கத் துணிய மாட்டார். டாக்டர் மான் கூறியிருப்பது போல், இந்தத் தொழில் குடியானவர்களுக்குப் புதியதொரு வருமான மார்க்கத்தைத்

தேடிக் கொடுத்ததுடன், பஞ்சம் வராதிருக்க ஓர் உத்தரவாதத்தையும் அளித்து வந்திருக்கிறது. இந்த முக்கியமான, அழகிய தொழிலுக்கு மீண்டும் உயிர்கொடுக்கும் ஒவ்வொரு ரிஜிஸ்தராரும் இந்தியாவின் நன்றிக்குப் பாத்திரமானவர் ஆவார். என்னுடைய அடக்கமான முயற்சி எல்லாம் இதுதான்; முதலாவது, மாமூலான கைத்தறிகளில் சுலபமான சீர்திருத்தங்களைச் செய்வதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்வது; இரண்டாவதாக, படித்த வாலிபனை சர்க்கார் உத்தியோகத்துக்கோ, மற்ற உத்தியோகங்களுக்கோ ஆசைப்பட்டுக் கொண்டிருப்பதினின்றும், கல்வியானது சுயேச்சையான தொழிலுக்கு அவனை லாயக்கில்லாமல் செய்கிறது என்ற எண்ணத்தினின்றும் திருப்பி, தறி வேலையைப் பாரிஸ்டர் வேலையைப் போலவோ, டாக்டர் தொழிலைப் போலவோ கௌரவமானதாகக் கருதி மேற்கொள்ளுமாறு தூண்டுவது, மூன்ருவதாக, தங்கள் தொழிலை கைவிட்ட நெசவாளர்களை மீண்டும் அதை மேற்கொள்ளுவதற்கு உதவி புரிவது. என் பரிசோதனையின் முதல் இரண்டு பகுதிகளைப் பற்றி யாதொரு அறிக்கையையும் விடுத்துச் சபையில் உள்ளவர்களை நான் அலுத்துப்போகும்படி செய்ய மாட்டேன். மூன்ருவது பகுதியைப் பற்றி ஒரு சில வாக்கியங்களைக் கூற அனுமதிக்கலாம். ஏனென்ருல், அது நம்முன் உள்ள விஷயத்துடன் நேரடியான தொடர்பு கொண்டிருக்கிறது. ஆறு மாதங்களுக்கு முன்ருல்தான் அந்த விஷயத்தில் நான் பிரவேசிக்க முடிந்தது. நெசவுத் தொழிலைக் கைவிட்ட ஐந்து குடும்பங்கள் மீண்டும் அந்தத் தொழிலை மேற்கொண்டன. இப்பொழுது அவர்களுடைய தொழில் நன்ருக நடைபெற்று வருகிறது. அவர்களுக்குத் தேவைப்படும் நூலை அவர்களுடைய வீட்டு வாசலிலேயே கொண்டுபோய் ஆசிரமத் தொண்டர்கள் கொடுக்கிருர்கள். நெய்யப்பட்ட துணியை மார்க்கெட் விலைக்கு ரொக்கம் கொடுத்து வாங்கிக்கொண்டு வருகிருர்கள். நூலுக்கு முன்பணமாகக் கொடுத்த கடனுக்குரிய வட்டியைத்தான் ஆசிரமம் இழக்கிறது. இதுவரையிலும் அதற்கு எவ்வித நஷ்டமும் ஏற்பட்டதில்லை. கடனை ஒரு குறிப்பிட்ட தொகைக்குள் வரையறுத்துக்கொள்ளுவதன் மூலம் நஷ்டத்தை ஒரு குறைந்தபட்ச அளவுக்கு மேற் போகாமல் கட்டுப்படுத்திக்கொள்ள அதனுல் முடிகிறது. எதிர்காலத்தில் எல்லா வியாபாரமும் ரொக்கத்துக்குத்தான். கைக்குக் கிடைத்த துணியை எங்களால் உடனடியாக விற்பனை செய்துவிட முடிகிறது. ஆகவே, வியாபாரத்தில் ஏற்படும் வட்டி நஷ்டம் பொருட்படுத்தத் தக்கதல்ல. ஆரம்பத்திலிருந்து முடிவு வரை அது முழுக்கத் தார்மிக இயல்பு கொண்டதாக இருப்பதைச் சபையோர் கவனிக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

நண்பர்கள் செய்யும் உதவியைக்கொண்டே ஆசிரமம் வாழ்ந்துவருகிறது. அதனுல், வட்டி போடுவதற்கான முகாந்திரம் எதுவும் எங்களுக்கு இல்லை. நெசவாளிகளுக்கு அந்தப்

பாரத்தைச் சுமத்த முடியாது. சிதறுண்டு போய்க்கொண்டிருந்த குடும்பங்கள் மீண்டும் ஒன்று கூட்டப்பட்டிருக்கின்றன. கடனை இன்ன காரியத்திற்குத்தான் பயன்படுத்த வேண்டும் என்பது முன்கூட்டியே நிர்ணயம் செய்யப்பட்டு விடுகிறது. நடுவிலுள்ள வர்களான நாங்கள், தொண்டர்களாக இருக்கும் முறையில், அவர் களுடைய வாழ்க்கையில் பிரவேசிக்கும் தனிச் சலுகையைப் பெறுகிறோம். இதே, அவர்கள் நன்மைக்கும், எங்கள் நன்மைக்கு மான காரியம் என்று நான் நம்புகிறேன் நாம் உயர்த்தப்படாமல் அவர்களை நாம் உயர்த்த முடியாது. கடைசியாகச் சொன்ன இந்த உறவு இன்னும் அபிவிருத்தி செய்யப்படவில்லை. ஆனால், கூடிய சீக்கிரத்தில் நாங்கள் இந்தக் குடும்பங்களுக்குக் கல்வி புகட்டும் பணியையும் மேற்கொள்ளலாம் என்று நம்புகிறோம். ஒவ்வோர் அம்சத்திலும் அவர்களோடு தொடர்பு ஏற்படும் வரையில் நாங்கள் திருப்தியடைந்துவிடப் போவதில்லை. இது மிகவும் பேராசையோடு காணும் ஒரு கனவல்ல, கடவுளின் அருள் இருந்தால், என்றாவது ஒரு நாள் அது நனவாகிவிடும். நான் கூட்டுறவு என்று சொல்லுவதை மற்றவர்களும் பின்பற்றும் பொருட்டு இந்தச் சிறு பரிசோதனையை உதாரணமாகக் காட்டி விவரிக்கத் துணிந்தேன். நம் லட்சியம் இன்னது என்பதில் நாம் நிச்சயமாக இருப்போமாக. அதை அடைய முடியாமல் எப் போதும் நாம் தோற்றுக்கொண்டிருந்தாலும், அதற்காகப் பாடு படுவதை நாம் ஒருபோதும் நிறுத்தக்கூடாது. அப்புறம், ரஸ்கின் நியாயமான முறையிலேயே பயந்த 'அயோக்கியர்களின் கூட் டுறவு' பற்றி நமக்கு எந்தவிதப் பயமும் தேவையில்லை.

–'மகாத்மா காந்தியின் பேச்சுக்களும், எழுத்துக்களும்'—ஜி. ஏ. நடேசன் கம் பெனியார் வெளியிட்ட ஆங்கில நூலிலிருந்து எடுத்தது.

[1917, செப்டம்பர் 17-ஆம் தேதி நடைபெற்ற பம்பாய் மாகாணக் கூட்டுறவு மகாநாட்டுக்கு காந்திஜி எழுதியனுப்பியது.]

# 7
# கூட்டுப் பண்ணை

**கேள்வி :** தங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதில் ஒரு பகுதியைப் பாய் நெய்வதன் மூலம் சம்பாதிக்கும் சில பெண் தொழி லாளிகளைக் கூட்டுறவு முறையில் வேலை செய்யும்படி அன்றொரு நாள் நீங்கள் ஆலோசனை கூறினீர்கள். நிலங்கள் சின்னஞ் சிறு பகுதிகளாகத் துண்டுபட்டுப் போனதால் வங்காளத்தின் விவசாயம், பொருளாதார ரீதியில் மோச மான நிலைக்கு வந்துவிட்டது. அதனால், விவசாயிகளும் கூட்டுறவு முறைகளை மேற்கொள்ளும்படி நீங்கள் ஆலோசனை கூறுவீர்களா ?

அப்படியானால், இன்றைய நில உடைமை முறையில் அதை அவர்கள் மேற்கொள்ளுவது எப்படி? சட்டத்தில் அவசியமான மாறுதல்களை அரசாங்கம் செய்ய வேண்டுமா? அரசாங்கம் தயாராக இல்லாமல், மக்கள் அதை விரும்பும் பட்சத்தில், அவர்கள் தங்கள் சொந்த ஸ்தாபனங்கள் மூலம் அந்த லட்சியத்துக்காக எப்படி வேலை செய்வது?

பதில்: கேள்வியின் முதல் பகுதிக்குப் பதில் சொல்லும்போது, பாய் நெய்பவர்களைவிட விவசாயிகளுக்குத்தான் கூட்டுறவு முறை மிகவும் அவசியம் என்பதில் தமக்குச் சந்தேகமில்லை என்று காந்திஜி கூறினார். தாம் கூறிவருவது போல, நிலம் அரசாங்கத்துக்குச் சொந்தம் என்றும், அதனால் அதில் கூட்டுறவு முறையில் வேலை செய்யும்போது அதிகப் பலன் கொடுக்கிறது என்றும் அவர் சொன்னார்.

கூட்டுறவு, முற்றிலும் அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும் என்பதை மறந்துவிடக் கூடாது. பலாத்காரக் கூட்டுறவில் வெற்றி என்பது கிடையாது. இரண்டாவதாகச் சொன்னதற்கு ஹிட்லர் ஒரு சரியான உதாரணம். மக்கள் மீது பலவந்தமாகத் திணிக்கப்பட்ட கூட்டுறவைப் பற்றி அவரும் வீணாகப் பேசினார். அதன் பலனாக ஜெர்மனி எந்த நிலைக்குக் கொண்டு செல்லப்பட்டது என்பதை எல்லோரும் அறிவார்கள்.

காந்திஜி முடிவில் கூறியதாவது: பலாத்காரத்தின் மூலம் கூட்டுறவை அடிப்படையாகக் கொண்டு புதிய சமூகத்தை உருவாக்க இந்தியாவும் முயன்றால், அது வருந்தத்தக்க விஷயமாக இருக்கும். பலாத்காரத்தின் மூலம் செய்யும் நன்மை, தனித்தன்மையை நாசமாக்கியிருக்கிறது. அகிம்சா பூர்வமான ஒத்துழையாமையின், அதாவது அன்பின் தூண்டுதல் சக்தி மூலம் மாறுதல் செய்யப்பட்டால்தான், தனித் தன்மையின் அஸ்திவாரத்தை அழியாமல் பாதுகாக்க முடியும்; உலகம், உண்மையான, நிலையான முன்னேற்றத்தை அடையும் என்று உறுதி கூற முடியும்.

—'ஹரிஜன்' – 9—3—1947

['காந்திஜியின் பாத யாத்திரை நாட்குறிப்'பிலிருந்து எடுத்தது.]

## 8

## உற்பத்தியாளரைப் பற்றி என் கருத்து

கேள்வி: உணவுத் தானியங்களின் விலைகளைக் குறைப்பது இடைக்காலச் சர்க்காரின் கொள்கை. அது உணவுத் தானிய உற்பத்தியைப் பாதித்துவிடாதா?

**காந்திஜி:** உணவுத் தானியங்களின் விலைகளை இன்னும் குறைக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். என்னை நான் ஒரு குடியானவன் என்று சொல்லிக்கொள்ளுகிறேன். உணவைச் சாப்பிடுகிறவர் கொடுக்கும் விலையில் ஒரு சிறிய பாகம்தான் உணவை உற்பத்தி செய்பவருக்குப் போய்ச் சேருகிறது என்பதை நான் அறிவேன். நிலத்தை உழுபவர், தாம் உற்பத்தி செய்யும் பொருளின் முழுப் பெறுமானத்தையும் அடையும்படியும், தானியத்தை வாங்கிச் சாப்பிடுகிறவர் கொடுக்கும் ஒவ்வொரு தம்பிடியும் குடியானவனிடம் போய்ச் சேரும்படியும் செய்ய வேண்டியது இடைக்காலச் சர்க்காரின் வேலையாக இருக்க வேண்டும். இல்லையென்றால், அது வெளியேறிவிட வேண்டும். உணவு உற்பத்தி செய்கிறவனுக்கு நஷ்டத்தை உண்டுபண்ணி, சாப்பிடுகிறவனுக்கு மலிவான விலைக்குத் தானியங்களை விற்க ஆசைப்படும் குற்றத்தை இடைக்காலச் சர்க்கார் ஒருபோதும் செய்யக் கூடாது. குடியானவனுடைய பிரச்னை, விலைவாசிக் குறைவல்ல; அவனுக்கும், சாப்பிடுகிறவனுக்கும் நடுவே இருப்பவன்தான் அவன் பிரச்னை.

கதர் உற்பத்தியிலுங்கூட, நூற்பவர்களுக்கு நாள் ஒன்றுக்கு எட்டணா கொடுப்பதை நான் லட்சியமாக்கினேன். விலை உயர்ந்த கதர், கதர் உற்பத்தியையே நாசமாக்கிவிடும் என்று ஆட்சேபிக்கப்பட்டுங்கூட, நாம் உண்மையில் நாலணா விகிதாசாரத்தைத் தொட்டுவிட்டோம். அது,உற்பத்தியாளர் பற்றிய என் மனப்போக்கை எடுத்துக்காட்டுகிறது. நடுவில் இருப்பவனை அடியோடு ஒழித்துக் கட்டவே நான் விரும்புவேன். இன்று குடியானவனை உறிஞ்சுகிறவன் அவன்தான். இல்லையென்றால், குடியானவன் பட்டினி கிடப்பதற்குக் காரணமே இல்லை. அதே சமயத்தில், கொள்ளை லாபம் அடிக்கிற அல்லது கள்ளமார்க்கெட்டைப் பயன்படுத்துகிற ஒரு குடியானவன் தன் தொழிலுக்கு ஏற்காத காரியத்தைச் செய்தவனாகிறான். சுரண்டுவதில் அவன் ஜமீன்தாரைவிட எந்த வகையிலும் குறைந்தவனல்ல.

—'ஹரிஜன்' - 6—10—1946

['சில பிரச்னைகள்' என்ற தலைப்பின் கீழ் ஸ்ரீ பியாரிலால் எழுதியதில் வெளிவந்தது.]

## 9

# பிரசவ வேதனையில்

அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் தோன்றுவதற்கு அதிக காலம் பிடிக்கிறது. அந்தக் காரியத்திற்காக ஜே. சி. குமரப்பாவும் நானும் எங்களுக்குக் கிடைக்கும் நேரத்தை

யெல்லாம் செலவிடுகிறோம் என்பதுதான் பொதுமக்களுக்கு நான் கொடுக்கக்கூடிய ஆறுதல். மத்திய காரியாலயத்தை எங்கே நிறுவுவது, மத்திய போர்டையும் ஏஜென்ஸி நிலையங்களையும் யார் யாரை அங்கத்தினராகக் கொண்டு அமைப்பது ஆகிய மூன்று விஷயங்களையும் நாங்கள் சமாளிக்க வேண்டியிருக்கிறது.

இந்த விஷயங்கள் அனைத்துமே எங்களுக்குக் கவலை அளித்தபோதிலும், போர்டு அமைக்கும் விஷயம் பெருங்கவலையைக் கொடுக்கிறது. காரியம் பிரம்மாண்டமானது; லட்சியம் மகத்தானது. அபாரமாக அபிவிருத்தி செய்யப்பட்டுள்ள யந்திர முறையும், குவியல் முறையும் இன்றைய மோஸ்தராக இருக்கும் நிலையில் கிராமங்களுக்குப் பத்துயிர் அளிப்பதென்பது சுலபமான காரியமல்ல. ஆகையால், சங்கத்தின் செயல் திட்டத்தில் ஜீவனுள்ள நம்பிக்கை உடையவர்களும், இந்தக் காரியத்தில் ஈடுபாடு உடையவர்களும், தங்கள் முழு நேரத்தையில்லாவிட்டாலும் அதிக நேரத்தை, போர்டுக்காகச் செலவழிக்கக்கூடியவர்களுமான ஆர்வமுடைய ஒரு சிலர்தான் போர்டில் இருக்க வேண்டுமென்ற முடிவுக்கு நாங்கள் வந்திருக்கிறோம். எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதைக் கவனிக்காமல், பொறுப்பை ஏற்றுக் கொள்ளக்கூடியவர்களாக இருப்பவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க நாங்கள் முயன்றுகொண்டிருக்கிறோம்.

கிளை நிலையங்களைப் பொறுத்தவரையில், ஜில்லாக்களே மத்திய போர்டுக்கு நேரடியான பொறுப்பாக இருக்கும் உட்பிரிவுகளாக இருக்கவேண்டும் என்று பரீட்சார்த்தமாக நாங்கள் முடிவு செய்திருக்கிறோம். பிரிட்டிஷ் ஆட்சியால் உத்தியோகபூர்வமாகப் பிரிக்கப்பட்ட ஜில்லாக்கள், விஸ்தீரணத்திலும் ஜனத்தொகையிலும் சமமாக இல்லை. அதனால், அவற்றை அவசியம் நேரும் இடங்களில் உட்பிரிவுகளாகப் பிரிக்க நாம் தயங்க மாட்டோம். பரவல் முறையும், கிராமவாசிகளுடன் ஜீவனுள்ள தொடர்பை ஏற்படுத்துவதுமே பிரதான நோக்கமாக இருக்கும். சமஸ்தானங்கள் அனுமதிக்கக்கூடிய இடங்களில் அவற்றுடன் நேரடியான தொடர்பு இருக்கும். இந்தியாவின் பூகோளப் பரப்பு முழுவதிலும் உள்ள எல்லாக் கிராமங்களுக்குமே நாம் சேவை செய்ய விரும்புகிறோம்.

மத்திய காரியாலயத்துக்கான இடத்தைத் தேர்ந்தெடுப்பதிலும் கஷ்டம் இருக்கிறது. சாத்தியமில்லையானால், அதை ஒரு கிராமத்திலேயே நாங்கள் மகிழ்ச்சியோடு ஸ்தாபிப்போம். ஆனால், நாங்கள் இடத்தைத் தேர்ந்தெடுக்கும் விஷயம் இரண்டுவித யோசனைகளால் கட்டுப்படுத்தப்பட்டு இருக்கின்றன. நிலமும், செங்கல்லும், சாந்துமாக வாக்களிக்கப்பட்ட, அல்லது ஏற்கனவே கைக்கு வந்து சேர்ந்த அற்ப சொற்பமான மூலதனத்தை ஈடுபடுத்த நாங்கள் விரும்பவில்லை. ஆகையால், கேட்கும்போது தேவைப்படக்கூடிய இருப்பிடம் எங்கே கிடைக்கிறதோ அதையே

நாங்கள் தேர்ந்தெடுத்தாக வேண்டும். மற்றொரு யோசனை என்னவென்றால், மத்திய காரியாலயம் பிரதான ரெயில்பாதைக்கு அருகில், இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் சுலபமாக வந்துபோகக்கூடிய இடத்தில் இருக்க வேண்டும். ஆனால், பின்னால் என்ன நடக்க வேண்டும் என்பதை நான் சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம். எங்களுக்கு ஆலோசனை கூறி வழி காட்டுகிறவர்கள், அவ்விதமே செய்யும் பொருட்டுப் பொதுமக்களுடன் என் கருத்துக்களைப் போதிய அளவு பகிர்ந்துகொண்டிருக்கிறேன். எங்களுடைய கஷ்டமான பணியில் அனுதாபம் உடையவர்கள் அனைவருடைய பிரார்த்தனைகளையும் நாங்கள் வரவேற்கிறோம்.

—'ஹரிஜன்' – 23—11—1934

# 10

# கிராமங்களில் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் வழி

[ இந்தூர் பொதுக்கூட்டம் ஒன்றில் காந்திஜி நிகழ்த்திய ஒரு சொற்பொழிவை மகாதேவ தேசாய் கீழ்க்கண்டவாறு சுருக்கிக் கொடுத்திருக்கிறார். இது, 'கிராமவாசிகளுக்கு நாம் செய்ய வேண்டிய கடமை' என்ற தலைப்பில் 'ஹரிஜ'னில் வெளிவந்தது. ]

## கிராமவாசிக்குச் செய்யவேண்டிய கடமை

இங்கே வந்திருப்பவர்களில் பெரும்பாலோர் இந்தூர் வாசிகள். கிராமங்களிலிருந்து வந்துள்ள ஜனங்களும் இருக்கிறார்கள். ஆனால், பெரும்பாலானவர்கள் இந்தூரிலிருந்து வந்தவர்களே. நீங்கள் கண்காட்சியை அவசியம் பார்த்திருப்பீர்கள். அகாலத்தில் பெய்த மழை அதைத் துரதிர்ஷ்டவசமாகப் பாழாக்கிவிட்டது. கிராமவாசிக்கு நகரவாசி செய்ய வேண்டிய கடமையை நினைவூட்டும் பொருட்டே அது ஏற்பாடு செய்யப்பட்டது. இத்தனை வருட காலமும் நாம் அதை மறந்து இருந்துவிட்டோம். இப்போது அப்படியிருக்க நம்மால் முடியாது. நாம் ஒரு வேளை அறியாமல் இருக்கலாம். ஆனால், நாம் தனிப்பட்ட முறையிலும் ஒரு நாடு என்ற முறையிலும் கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துக்கொண்டு வருகிறோம் என்பது உண்மை. அதற்கு மற்றவர்களை—அரசாங்கத்தையோ, சமஸ்தானத்தையோ, ஜமீன்தாரையோ—குற்றஞ்சாட்டிப் பயனில்லை. நம்முடைய துயர நிலைக்கு அவர்கள் நிச்சயமாகப் பொறுப்பாளிகள்தான். ஆனால்,

நாமும் அதே அளவுக்குப் பொறுப்பாளிகளே. நம்முடைய பொறுப்பையே நாம் எண்ணிப் பார்ப்பது நல்லது.

நம்முடைய சராசரி வாழ்க்கைத் தரம் வருந்தத்தக்க விதமாகக் குறைந்திருப்பதற்கும், நாம் இருக்க இருக்க அதிக வறுமை அடைந்து கொண்டு வருவதற்கும் காரணம், நம்முடைய 7 லட்சம் கிராமங்களையும் நாம் கவனிக்காமல் அலட்சியம் செய்து விட்டதுதான். உண்மையில் அவை பற்றி நாம் நினைத்திருக்கிறோம்; ஆனால், அவற்றைச் சுரண்டக்கூடிய அளவுக்குத்தான் நினைத்திருக்கிறோம். 'இந்தியாவின் பெருமை'யைப் பற்றியும் அது தேனும் பாலும் பெருக்கெடுத்து ஓடும் நாடாக இருந்ததைப் பற்றியும் கூறும் மயிர்க்கூச்செரியச் செய்யும் கதைகளை ஏராளமாக வாசித்திருக்கிறோம். ஆனால், இன்று அது பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கானவர்கள் வாழும் ஒரு நாடாகவே இருக்கிறது. இந்த அழகான பந்தலில், மின்சார விளக்குகளின் ஜகஜ்ஜோதியான வெளிச்சத்தில் நாம் உட்கார்ந்துகொண்டிருக்கிறோம். ஆனால், ஏழைகளைச் சுரண்டித்தான் நாம் இந்த விளக்குகளை எரித்துக்கொண்டிருக்கிறோம் என்பதை நாம் அறியமாட்டோம். இந்த விளக்குகளின் பொருட்டு நாம் அவர்களுக்குக் கடன்பட்டிருக்கிறோம் என்பதை நாம் மறந்துவிட்டால் இவற்றை உபயோகிக்க நமக்கு உரிமையே இல்லை.

## இரண்டு நாகரிகங்கள்

கிழக்கத்திய நாகரிகத்துக்கும்—இந்தியாவின் நாகரிகத்துக்கும்—மேற்கத்திய நாகரிகத்துக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. வித்தியாசம் எதில் இருக்கிறது என்பதைப் பொதுவாக நாம் உணர்ந்துகொள்ளவில்லை. நம்முடைய பூகோள அமைப்பு வேறு; நமது சரித்திரம் வேறு; நம்முடைய வாழ்க்கை முறைகளும் வேறுபட்டவை. நாம் வாழும் கண்டம் விரிவானதாக இருந்தாலும் உலகப் பரப்பில் ஒரு புள்ளி மாத்திரமே, ஆனால், சீனாவைத் தவிர உலகத்திலேயே அதிக ஜனநெருக்கமானது அதுதான். நல்லது. நிலத்தில் ஜனநெருக்கம் மிக மிக அதிகமாக இருக்கும் ஒரு நாட்டின் பொருளாதாரமும், நாகரிகமும், நெருக்கமும் மிகவும் குறைவாக இருக்கும் ஒரு நாட்டின் பொருளாதாரத்தினின்றும், நாகரிகத்தினின்றும் வேறுபட்டவையாக இருக்கின்றன; அப்படித்தான் இருக்க வேண்டும். ஜனத்தொகை குறைவாக உள்ள அமெரிக்காவுக்கு யந்திரங்கள் தேவையாக இருக்கலாம். இந்தியாவுக்கு அவை அறவே தேவையில்லாமல் இருக்கலாம். கோடிக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் சோம்பியிருக்கும் போது, வேலையைக் குறைக்கக்கூடிய சாதனங்களைப் பற்றி நினைப்பதால் பிரயோசனமே இல்லை. சாப்பிடுவதற்கு நாம் கைகளை உபயோகிக்க வேண்டிய சிரமத்தை அவசியமில்லாமல் செய்யும் ஒரு யந்திரத்தை யாராவது கண்டுபிடித்துவிட்டால், சாப்பிடுவது ஆனந்தமாக இருக்கும் நிலை போய், சித்திரவதை

யாக ஆகிவிடும். நமது வறுமைக்குக் காரணம், நம்முடைய தொழில்கள் அழிந்ததும், அதன் விளைவாக நமக்கு வேலையில்லாமல் போனதும்தான். சில ஆண்டுகளுக்கு முன்னால், இந்தியாவில் விவசாயிகளின் ஜனத்தொகை 70 சத விகிதம் என்று கூறப்பட்டது. இன்று அது 90 சத விகிதம் என்று கூறப்படுகிறது. அதனால், 90 சத விகிதம் பேரும் விவசாயிகள் என்று அர்த்தமல்ல. ஆனால், நிலத்தை நம்பி வாழ்ந்த 70 சத விகிதத்தினருக்குப் பதிலாக, நிலத்தை நம்பி வாழும்படியாக 90 சத விகிதம் பேர் இப்பொழுது விரட்டப்பட்டிருக்கின்றனர் என்பதே அதன் பொருள். வேறுவிதமாகச் சொன்னால், சிறிது காலத்திற்கு முன் 20 சத விகிதத்தினருக்கு உணவளிப்பதற்குப் போதுமான தொழில்கள் இருந்தன. அவை இப்போது இல்லை. இந்த நிலையில் மக்கள் நிலத்துக்கு விரட்டப்பட்டிருக்கிறார்கள். இவ்விதமாக அவர்கள் தங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதைத் திருடுகிறார்கள். அதற்குக் காரணம் திருட வேண்டும் என்று அவர்கள் விரும்புவதல்ல; மேற்கொண்டு நிலம் இல்லாததுதான்.

நம்முடைய 35 கோடி மக்களுக்கு உணவளிப்பதற்குப் போதிய நிலம் இல்லாமலும் இல்லை. இந்தியாவில் அளவுக்கு மீறி ஜனத்தொகை பெருகிவிட்டதென்றும், அதிகப்படியாக உள்ள ஜனங்கள் சாகத்தான் வேண்டும் என்றும் சொல்லுவது அபத்தமான கூற்று. உள்ள நிலம் முழுவதையும் தக்க முறையில் பயன்படுத்தி, அது தன்னால் முடிந்த அளவுக்குப் பலன் கொடுக்கும்படி செய்தால், அது ஜனத்தொகை முழுவதையுமே காப்பாற்றும் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். அதற்கு நாம் நன்றாகப் பாடுபட்டு உழைத்து, இன்று ஒரு பயிர் முளைக்கும் இடத்தில் இரண்டு பயிர்கள் முளைக்கும்படி செய்ய வேண்டும். அவ்வளவுதான்.

## பரிகாரம்

ஏழைக் கிராமவாசியும் நாமும் ஒன்றாக இணைந்து, நிலத்தை அதிகமாக விளையவைக்க நாம் அவனுக்கு உதவி புரிய வேண்டும்; நமக்குத் தேவையானவற்றை அவன் உற்பத்தி செய்வதற்கு உதவ வேண்டும். அவன் உற்பத்தி செய்வதை மட்டுமே நாம் உபயோகிப்பதோடு நிறுத்திக்கொள்ள வேண்டும். அவன் வாழ்வதைப் போல வாழ வேண்டும். உணவிலும் வாழ்க்கையிலும் அதிகப் பகுத்தறிவோடு கூடிய வழிகளைக் கைக்கொள்ளும்படி அவனைத் தூண்ட வேண்டும். இதுதான் பரிகாரம்.

மில்லில் அரைத்த மாவை நாம் சாப்பிடுகிறோம். ஏழைக் கிராமவாசிகூட தனக்கு மிகவும் அருகில் உள்ள மாவுமில்லில் அரைத்துக்கொண்டு வருவதற்காக அரை மணங்குத் தானியத்தைத் தலைச்சுமையாக எடுத்துக்கொண்டு நடக்கிறான். நாம் ஏராளமான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்தபோதிலும், வெளிநாட்டிலிருந்து கோதுமையை இறக்குமதி செய்

கிறேம் என்பதையும், ஆஸ்திரேலியாவிலிருந்து வரும் 'உயர்ந்த ரக' மாவைச் சாப்பிடுகிறோம் என்பதையும் நீங்கள் அறிவீர்களா? கையால் அரைத்த மாவை நாம் உபயோகிப்பதில்லை. ஏழைக் கிராமவாசியும் முட்டாள்தனமாக நம்மைப் பின்பற்றுகிறான். இவ் விதமாக நாம் செல்வத்தைக் குப்பையாக்குகிறோம்; அமிர்தத்தை விஷமாக்குகிறோம். பூரண சத்துள்ள உணவே நல்ல உணவு. மில்லில் அரைத்த மாவில் வைட்டமின் சத்துக்கள் கிடையா. மில்லில் அரைத்த மாவை நாட்கணக்கில் வைத்திருந்தால் அதில் வைட்டமின்கள் இல்லாதிருப்பதோடு மட்டுமல்ல, விஷமாகவும் ஆகிவிடுகிறது. ஆனால், நாம் ஒவ்வொரு நாளும் புதிதாகச் சாப்பிடவேண்டிய மாவைத் தயாரித்துக்கொள்ளுவதில் நாம் சிரமம் எடுத்துக்கொள்ளுவதில்லை. அதே சமயத்தில் சத்துக் குறைந்த பொருள்களுக்குக் காசைச் செலவழித்து, ஆரோக்கியக் குறைவை விலைக்கு வாங்குகிறோம். இது ஏதோ புரிந்துகொள்ள முடியாத ஒரு பொருளாதார உண்மையல்ல; நம் கண் முன்னால் தினமும் காணும் உண்மையே. அரிசி, வெல்லம், எண்ணெய் ஆகியவை பற்றிய விஷயமும் இதுதான். சத்தை எல்லாம் தீட்டிப் போக்கிவிட்ட அரிசியைச் சாப்பிடுகிறோம்; சத்துக் குறைந்த சர்க்கரையைச் சாப்பிடுகிறோம்; அதிகச் சத்துடைய வெல்லத்துக்குக் கொடுப்பதைவிட அதிகக் காசு கொடுத்துச் சர்க்கரையை வாங்குகிறோம். கிராமத்து வாணியரைச் சாகும்படி விட்டுவிட்டு, கலப்பட எண்ணெய்களை நாம் உட்கொள்ளுகிறோம். பசுவைப் பூஜிக்கிறோம்; ஆனால், அதைக் கொஞ்சம் கொஞ்ச மாகக் கொல்லுகிறோம். நாம் தேனைச் சாப்பிட்டுவிட்டு, தேனீ யைக் கொல்லுகிறோம். அதன் பலனாக, என்னைப் போன்ற ஒரு 'மகாத்மா'வுக்கோ, மருந்து கலந்து சாப்பிடுவதற்காக வைத் தியரிடமிருந்து வாங்கித் தீர வேண்டியிருப்பவர்களுக்கோ மட்டும் கிடைக்கக்கூடிய ஓர் அபூர்வப் பொருளாக இன்று தேன் ஆகிவிட்டது. சாஸ்திரீயமான, கெடுதல் இல்லாத தேனீ வளர்ப் பைக் கற்றுக்கொள்ள நாம் சிரமம் எடுத்துக்கொண்டால், அது நமக்கு மலிவாகக் கிடைக்கும். நம் குழந்தைகள் அதிலிருந்து தங்களுக்குத் தேவையான எல்லா கார்போ ஹைட்ரேட்டுகளையும் பெற்றுக்கொள்ளுவார்கள். நம்முடைய எல்லா உணவு முறை களிலும் நாம் சக்கையையே சாரம் என்று கொண்டு, சத்து நிறைந்த பழுப்பு வெல்லத்துக்குப் பதிலாக எலும்பு போல் வெளுத்திருக்கும் சர்க்கரையை விரும்புகிறோம்; மிகுந்த சத் துடைய பழுப்பு நிறத் தவிட்டு ரொட்டிக்குப் பதிலாக வெள்ளை ரொட்டியை விரும்புகிறோம்.

நம் நாட்டினர் தினமும் குளிக்கிறவர்கள் என்று சொல்லப் படுகிறது. அது உண்மைதான். ஆனால், அதன் காரணமாக நம் நிலைமை எந்த வகையிலும் உயர்ந்துவிடவில்லை. ஏனென்றால், நாம் அசுத்தமான நீரில் குளிக்கிறோம். நம்முடைய குளங்களிலும் ஆறுகளிலும் ஆபாசக் குப்பைகளைக் கொட்டி அவற்றை அசுத்தப் படுத்தி, அந்தத் தண்ணீரைக் குடிக்கவும் குளிக்கவும் உபயோகிக்

கிறோம். வக்கீல்களாகவும், பட்டதாரிகளாகவும், டாக்டர் களாகவும் இருக்கும் நாம், சுகாதாரத்தின் பால பாடங்களைக் கூடக் கற்றுக்கொள்ளுவதில்லை. நம்முடைய கழிவுப் பொருள் களை மிகவும் லாபகரமான முறையில் பயன்படுத்தும் முறையை நாம் இன்னும் அறிந்துகொள்ளாமல், ஆரோக்கியமான திறந்த வெளிகளை, நோயை உற்பத்தி செய்யும் ஸ்தலங்களாக மாற்றிக் கொண்டிருக்கிறோம்.

உங்கள் சோம்பலை உதறிவிட்டு, சுறுசுறுப்புடன் இந்த ஆரம்ப ஞானத்தைப் பெற்று இன்னும் அதிக விவேகத்தோடு கூடிய வாழ்க்கையை வாழும்படியாகவும், வீணுவதையெல்லாம் செல்வமாக மாற்றுவது எப்படி என்பதைக் கற்றுக்கொள்ளும் படியாகவும் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் சாதாரண உண்மைகளை உங்களுக்குச் சொன்னேன். பல்லாண்டு காலமாக இருந்துவரும் சோம்பலை நாம் உதறிவிடுவோமானால், விரைவில் அந்த உண்மைகளை உணர்ந்து அவற்றிற்கேற்ப வாழத் தொடங் குவோம். ஆனால், நாம் சரீர உழைப்பைக் கைவிட்டு அதன் மூலம் மூளைக்குக் கேட்டை உண்டுபண்ணியிருக்கிறோம். இவ்வித மாக, விவேகமற்ற உணவு முறைகளிலும், வாழ்க்கை முறைகளி லும் திருப்தியடைந்தவர்களாக இருக்கிறோம். நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து, நம்முடைய உடம்பும் மூளையும் அதிகச் சுறு சுறுப்பு அடையும்படி செய்ய உறுதிகொள்ளுவோமாக.

நான் பேசுவதைப் பொறுமையோடு கேட்டுக்கொண்டிருந்த உங்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

—'ஹரிஜன்' – 11—5—1935

# 11

# பாழ்பட்ட கிராமப் பொருளாதாரத்துக்குப் புத்துயிர்

காந்திஜி முஸ்ஸோரியில் பத்து நாட்கள் தங்கியிருந்த போது, தமக்கு ஒரு நாள் விடுமுறை விட்டுக்கொண் டார். விடுமுறை என்றால் அவருடைய பாஷையில், பொது நடவடிக்கைகளினின்றும், பேட்டிகளினின்றும் ஓய்வு எடுத்துக் கொள்ளுவது என்று பொருள். இதில் முழு வெற்றி பெற்றுவிட வில்லை. ஒரு சில அந்நிய நாட்டு நிருபர்கள், அவர் தனியே ஒதுங்கியிருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடித்து வந்துவிட் டார்கள். பொதுவான விஷயங்களைப் பற்றி அவரோடு சம்பா ஷணை செய்வதும் அவர்களுக்குச் சாத்தியமாகிவிட்டது. அதில் அரசியல் விஷயம் மட்டும் இயல்பாகவே பிரஸ்தாபிக்கப்பட

வில்லை. காந்திஜி வழக்கம்போல் காலையில் நடக்கும்போது அவர்களைப் பார்த்தார்.

## முன்னேற்றத்துக்குப் 'பிரேக்'?

"உங்களுடைய கதரும், கைத்தொழில்களும், கிராமப் பொருளாதாரமும் ஒரு விவசாய நாட்டுக்கு, உதாரணமாக பால்கன் நாடுகளுக்கு மிகுந்த கவர்ச்சியளிக்கும். ஆனால், எங்களில் பலருக்கு, உண்மையிலேயே உங்கள் நாட்டினர் பலருக்குத் தோன்றுவதுபோலவே அது முன்னேற்றத்துக்குப் போடும் 'பிரேக்' போல் தோன்றுகிறது. விரிவானதோர் அளவில் திட்டமிடுவதும், யந்திரத் தொழில் மயமாக்குவதும் அவசியம் என்று அநேகர் நினைக்கின்றனர்" என்றார், ஒரு நிருபர்.

அதற்குக் காந்திஜி பதில் சொல்லும்போது, "இந்தியாவின் முன்னேற்றத்தை எனது திட்டம் எப்படித் தடை செய்கிறது? இந்தியா பிரதானமாகக் கிராமிய நாடு; அதில் 7 லட்சம் கிராமங்கள் இருக்கின்றன" என்றார்.

நிருபர் அந்த விஷயத்தை அப்படியே விட்டுவிட்டு வேறொரு விஷயத்துக்குத் தாவிவிட்டார். நகரங்களுக்கு இது நியாயம் செய்வதாக ஆகாது என்று அவர் வாதித்தார். "பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய நகரங்களின் விஷயம் என்ன?" என்று கேட்டார்.

"உண்மை, அதற்கு நேர்மாறாக இருக்கிறது" என்று சொல்லிவிட்டுக் காந்திஜி கூறியதாவது: "நகரங்களின் வளர்ச்சியைக் கெட்ட காரியமாகவும், மனித வர்க்கத்துக்கும் உலகத்துக்கும் துரதிர்ஷ்டவசமானதாகவும், இங்கிலாந்துக்கும், நிச்சயமாக இந்தியாவுக்கும் துரதிர்ஷ்டமாகவும் நான் கருதுகிறேன். பிரிட்டிஷார், நகரங்களின் மூலமாகவே இந்தியாவைச் சுரண்டியிருக்கின்றனர். நகரங்கள் கிராமங்களைச் சுரண்டியிருக்கின்றன. கிராமங்களின் ரத்தத்தையே சிமிண்டாகக் கொண்டு நகரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இன்று நகரங்களின் ரத்தக் குழாய்களைப் புடைக்க வைத்துக்கொண்டு ஓடும் ரத்தம், மீண்டும் கிராமங்களின் ரத்தக் குழாய்களில் ஓட வேண்டுமென்று நான் விரும்புகிறேன்."

## தவறைத் திருத்தல்

காந்திஜி இவ்வாறு கூறியும் ஒரு நண்பருக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவர் பின் கண்டவாறு வாதித்தார்: "ஆரம்பத்தில் தவறு செய்தாகிவிட்டது. இந்த நிலையில், ஏற்கனவே கட்டப்பட்டதையெல்லாம் தகர்த்தெறிய வேண்டி நேர்ந்தாலும், பின்னுக்குச் சென்று, பழைய தவறுகளையெல்லாம் தயவு தாட்சண்யமின்றித் திருத்தவேண்டும் என்றுதான் நீங்கள் கூறுவீர்களா?"

"ஏன் கூடாது? தவறு செய்துவிட்டதாக நாம் அறிந்தால், அறிந்த மாத்திரத்திலேயே நாம் செய்யவேண்டிய ஒரே காரியம், நம் தவறு என்ன என்பதைக் கண்டறிந்து, பின்னுக்குச் சென்று, புதிதாக வேலையைத் தொடங்குவதுதான்'' என்றார், காந்திஜி.

"இந்த விஷயத்தில் பின்னுக்குச் செல்லுவது முன்னேற்றத்துக்கு முரணானதாக இருக்கும் என்ற நம்பிக்கை ஏதோ ஒரு வகையில் இன்றைய உலகில் இருந்து வருகிறது'' என்று நண்பர் தம் கட்சியை விடாமல் வற்புறுத்திச் சொன்னார்.

பதிலுக்குக் காந்திஜி கூறியதாவது: "கப்பல் கடலில் திசை தவறிவிட்டால் என்ன செய்வீர்கள்? தவறான மார்க்கத்தில் கப்பல் தொடர்ந்து செல்லுவதில்லை. உடனே பின்னுக்குச்சென்று புதிதாகப் பிரயாணத்தைத் தொடங்குகிறது. இப்படிக் கொலம்பஸ் எத்தனை தடவைகள் செய்திருக்க வேண்டும்! இல்லையென்றால், அவர் இவ்வளவு காலமும் கைவிடப்பட்ட ஒருவராகவே இருந்திருப்பார்.''

"அப்படியானால், நகரங்களைக் காலி செய்து, நகர மக்களையெல்லாம் பழையபடியும் கிராமங்களுக்கு அனுப்புவீர்களா?'' என்று நண்பர் கேட்டார்.

''நான் அதைச் செய்ய மாட்டேன். நான் விரும்புவதெல்லாம், கிராமவாசிகளை உறிஞ்சுவதை நிறுத்திவிடக்கூடிய வகையில் தங்கள் வாழ்க்கையை அவர்கள் மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டும்; கிராமவாசிகளின் பாழ்பட்ட பொருளாதாரத்துக்குப் புத்துயிரளிப்பதில் உதவி புரிவதன்மூலம் இந்தக் கடைசி நேரத்திலாவது சாத்தியமான நஷ்டஈட்டைச் செலுத்த வேண்டும் என்பதே.''

- 'ஹரிஜன்' – 19—12—1946

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'சில முஸ்ஸோரி நினைவுக' ளிலிருந்து எடுத்தது]

## 12

# பெரிய முதலாளிகள் செய்யக்கூடியது

சிந்தியா கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ சாந்தி குமார் எழுதியிருக்கும் பின்கண்ட கடிதத்தை ஸ்ரீ விட்டல்தாஸ் ஜெராஜனி எனக்கு அனுப்பியிருக்கிறார் :

''தேசீய வாரத்தின்போது தெருத் தெருவாகக் கதரைக் கூவி விற்பதற்குச் சகல முயற்சிகளும் செய்யப்படும். அப்படியிருக்க, பெரிய காரியாலயங்களை அணுகி, அவை தம் வேலைக்காரர்களின் உடைகளுக்காகக் கதர் வாங்கும்படி ஏன் சம்மதிக்கச் செய்யக்கூடாது? வேலைக்காரர்களின் உடைகளை எப்பொழுதும் கம்பெனிகளே வாங்கிக் கொடுக்கின்றன. சென்ற ஆண்டு,

சிந்தியா கம்பெனி தன் வேலைக்காரர்களுக்குக் கதர் யூனிபாரங்களை வாங்கிக் கொடுத்தது. இந்த ஆண்டும் நாங்கள் அதே யூனிபாரங்களைத்தான் வாங்கப் போகிறோம். கம்பெனியின் கிளைகளில் உள்ள வேலைக்காரர்களின் யூனிபாரத்துக்குக் கதரையே உபயோகிக்கும்படி நான் ஏற்கனவே சுற்றறிக்கைகள் அனுப்பிவிட்டேன். சிந்தியா கம்பெனியுடன் இணைந்துள்ள மற்றக் கம்பெனிகளிலும் கதர் யூனிபாரங்களைப் புகுத்துவதற்கு நான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன்.

"சிந்தியா கம்பெனியின் காரியாலயத்தில் கையினால் செய்த காகிதத்தை உபயோகிக்கும்படி செய்வதற்கும் நான் முயன்று வருகிறேன். இந்த விஷயத்தில் நான் ஓரளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறேன்; ஆனால், அது எனக்குத் திருப்தி அளித்துவிடவில்லை. கையினால் செய்த காகிதத்தின் உபயோகத்தை அதிகப்படுத்துவதற்கு எல்லா முயற்சிகளையும் நான் செய்து கொண்டிருக்கிறேன்."

ஸ்ரீ சாந்தி குமாரின் யோசனையை முழு மனத்துடன் ஆதரிப்பதில் எனக்கு யாதொரு தயக்கமும் இல்லை. நான் இன்னும் ஒரு படியும் மேலே போவேன். வேலைக்காரர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், தங்களுக்குக் கொடுக்கப்படும் யூனிபாரங்களை அணிய வேண்டியவர்களே. அவர்கள், அதனால் எவ்விதத் தாழ்வுணர்ச்சியும் கொள்ளாதிருக்கும் பொருட்டு, காரியாலயத்தின் பெரிய உத்தியோகஸ்தர்கள் தாமாக முன்வந்து கதர் உடைகளை அணிவதன் மூலம் முன்மாதிரியாக நடந்துகொள்ள வேண்டும். எல்லோரையும் சமத்துவமாக்கும் மிகப் பெரிய சாதனங்களில் ஒன்று கதர். வேலைக்காரர்கள், தங்கள் யூனிபாரங்களின் காரணமாகப் பெருமைகொள்ளும்படியாக இருக்க வேண்டும். தங்கள் யூனிபாரங்கள் எந்தத் துணியால் ஆனதோ அதையே தங்கள் முதலாளிகளும் உபயோகிக்கிறார்கள் என்பதை அறியும்போதுதான் அவர்கள் இப்படிப் பெருமைகொள்ளுவார்கள். முதலாளிகள் தங்களிடம் வேலை செய்பவர்களிடம் மேலும் மேலும் அதிகமாக அணுகும்போது, கஷ்டமான வர்க்கப் போராட்டப் பிரச்னையைச் சமாதானமாகத் தீர்ப்பதற்கு அதிகச் சாத்தியம் உண்டு. ஆகையால், ஸ்ரீ சாந்தி குமாரின் முயற்சியை மற்ற முதலாளிகளும் போற்றுவார்கள் என்று நான் நம்புகிறேன். உண்மையில் ஆஸ்பத்திரிகள், மாணவர் விடுதிகள் போன்ற எல்லாப் பொது நிலையங்களும் இந்த முயற்சியை மேற்கொள்ள வேண்டும்.

கையினால் செய்த காகிதத்தை உபயோகிப்பது அவ்வளவு கஷ்டமான பிரச்னையல்ல. கையினால் செய்த நல்ல காகிதம் எப்போதும் சாதாரணமான மில் காகிதத்தைவிடக் கலைத் தன்மையும் உயர்வும் உடையதாகும். அத்துடன், இந்த இரண்டு காகிதங்களின் விலைகளில் உள்ள வித்தியாசம், கதருக்கும் மில் துணிக்கும் உள்ள விலை வித்தியாசத்தைப்போல் இல்லை. பெரிய காரியாலயங்கள், தங்களால் முடிந்தவரை கையினால் செய்த சாமான்களை உபயோகிப்பது கோடிக்கணக்கானவர்களுக்குச் செய்யவேண்டிய கடமையாகும்.

—'ஹரிஜன்' – 27—4—1940

# 13

# ஆக்க வேலையை உயிருள்ளதாக்குவது எப்படி ?

['அதை உயிர்த் துடிப்பு நிறைந்ததாகச் செய்வது எப்படி?' என்ற தலைப்பில் 'ஹரிஜ'னில் ஸ்ரீ பியாரிலால் எழுதிய கட்டுரை.]

"பலாத்காரம் மோசமானது. அதற்குப் பதிலாகச் செய்யக் கூடியது ராட்டையைச் சின்னமாகக் கொண்ட ஆக்க வேலையே என்பதிலும் தங்களோடு நான் ஒத்துப் போகிறேன். ஆனால், அதிலிருந்து உயிர்த் துடிப்பு போய்விட்டதாகவே தோன்று கிறது. அதன் புரட்சிகரமான முக்கியத்துவத்தை வெளிப் படுத்துவதற்கு என்ன செய்ய வேண்டும்?"—அன்றொரு நாள் ராயல் இந்தியக் கடற்படையினருடைய கலகம் பற்றிக் காந்திஜி யுடன் விவாதித்துக்கொண்டிருந்தபோது ஒரு நண்பர் இவ்வாறு கேட்டார். காந்திஜி அளித்த பதில் எவ்வளவு முக்கியத்துவம் நிறைந்ததாக இருந்ததோ, அவ்வளவு சுருக்கமாகவும் இருந்தது. ஒரே வார்த்தையில் சொன்னால், அவருடைய பதில் 'தவத்தின் மூலம்' என்பதே. தவம் என்று அவர் சொன்னது, தன்னைப் பூரணமாக வெளிப்படுத்துவதற்குச் செயலோடு இணைந்துள்ள அறிவுத் தவத்தையே. இந்தச் சம்பாஷணை மேற்கொண்டு தொடர்ந்து நடைபெறவில்லை. இவ்விஷயத்தைப் பற்றி அப் புறம் அந்த நண்பர் சிந்தித்தாரா என்பது எனக்குச் சந்தே கமே. ஆனாலும், அது திரும்பத் திரும்பக் கேட்கப்படும் ஒரு கேள்வியாகும். அதே கேள்வியைக் கல்கத்தாவில் பார்க்கம்ட்டா கதர் ஊழியர்கள் காந்திஜியிடம் கேட்டார்கள். அதற்குப் பதி லளித்தபோது காந்திஜி கூறியதாவது :

## சுபிட்சத்திலிருந்து வறுமைக்கு

"தீராத வறுமை குடிகொண்ட இந்தியாவில் ஏழைகளுக்கு உணவளித்து வந்தது, ராட்டையே என்று கோல்புருக் கூறுவ தாக டாக்டர் ராதாகுமுத முகர்ஜி தம்முடைய புத்தகம் ஒன்றில் எடுத்துக்காட்டியிருக்கிறார். இந்திய ஜவுளி வர்த்தகத்தை அஸ்தி வாரமாகக்கொண்டே கிழக்கு இந்தியக் கம்பெனி எப்படி சுபிட்சம் அடைந்தது என்பதைக் காலஞ்சென்ற ஆர். ஸி. தத் எடுத்துக் காட்டியுள்ளார். இந்திய ஜவுளிக்கு இணையாக, சீனாவும் ஜப்பானும் உட்பட, உலகில் எந்தப் பகுதியும் உற்பத்தி செய்ய முடியாது. இந்திய ஜவுளி மீது தனக்கிருந்த ஏகபோக உரிமையைப் பயன்படுத்தியே கிழக்கு இந்தியக் கம்பெனி ஆரம்பக் கட்டத் தில் கொழுத்தது. இந்திய ஜவுளி அவர்களுக்கு அமோகமான வர்த்தக லாபத்தைச் சம்பாதித்துக் கொடுத்தது மட்டுமல்லா மல், பிரிட்டிஷ் கப்பல் போக்குவரத்துத் தொழிலுக்கும் அது

உத்வேகம் அளித்தது. பிறகு, தொடர்ந்து பல யந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்ட பின் லங்காஷயர் தனது சொந்த ஜவுளித் தொழிலை அபிவிருத்தி செய்தது. இதனால் அது இந்திய ஜவுளி உற்பத்தியாளருக்குப் போட்டியாக வந்து சேர்ந்தது. இந்திய ஜவுளித் தொழில் நிபுணர்களைச் சுரண்டும் கொள்கை போய், அவர்களுடைய தொழிலை நாசம் செய்யும் கொள்கை நடைமுறைக்கு வந்தது.

''பருத்தியின் வரலாறே நாகரிகத்தின் வரலாறு என்று ஓர் ஆங்கில எழுத்தாளர் கூறியிருக்கிறார். அரசியல், வர்த்தகத்தின் தோழி. அதற்கு இந்திய சரித்திரம் பொருத்தமான உதாரணமாக விளங்குகிறது. நம் பருத்தி உற்பத்தியாளர்கள் சுபிட்சமாக இருந்த காலத்தில், நம் தேவைகளுக்கு வேண்டிய எல்லாப் பருத்தியையும் நாம் உற்பத்தி செய்து வந்தோம். ஆடு மாடுகளுக்குப் பருத்திக் கொட்டை வைத்து வளர்த்தோம். அவை ஆரோக்கியம் அளிக்கும் பாலை மக்களுக்குக் கொடுத்து வந்தன. விவசாயம் செழித்தோங்கியது. பஞ்சை அழகான துணிகளாக மாற்றினோம். அவற்றிற்கு டாக்கா ஜமதானிகள் நல்ல உதாரணம். இந்தத் தொழிலிலிருந்து கிளைத்த கிளையான மசூலிப் பட்டணத்தின் சாயத் தொழிலும், துணிக்கு அச்சடிக்கும் கலையும் உலகப் புகழ் பெற்று விளங்கின. நீடித்து இருப்பதிலும், பிரகாசத்திலும், அழகிலும் நம்முடைய பழைய உள்நாட்டுச் சாயங்களுக்கு இணையாக உலகத்தில் வேறு எந்தச் சாயத்தையுமே செய்ய முடியாது என்று கலாரஸிகர்கள் கூறுகிறார்கள். அதெல்லாம் இப்பொழுது போய்விட்டன. இந்தியா இன்று நிர்வாணமாக இருக்கிறது. ராட்டைக்குப் பதிலாக அதைவிடச் சிறந்த வேறொன்றை யாரேனும் தெரிவித்தால், நான் இன்றே ராட்டையைத் தூர எறிந்து விடுகிறேன். ஆனால், வேறு எதுவும் இருப்பதாக இதுவரையிலும் கண்டுபிடிக்கவில்லை; கண்டு பிடிப்பது சாத்தியமில்லை என்றே நான் கூறுவேன்.

## அடிமைத்தனத்தை ஒழிக்க

''ஆனாலும், 'இந்தியா சுதந்திரத்தை இழந்தபோது அதைத் தடுக்கமுடியாத ராட்டை, எப்படி இந்தியாவுக்குச் சுதந்திரத்தைக் கொண்டுவந்துவிட முடியும்?' என்று கேட்கலாம். அதற்குப் பதில் என்னவென்றால், கடந்த காலத்தில் சுதந்திரத்தைப் பற்றிய கருத்துடன் ராட்டை சம்பந்தப்படவில்லை. அது அப்பொழுது அகிம்சையின் சின்னமாகவும் விளங்கவில்லை. பழங் காலத்தில் அது நமது அடிமைத்தனத்தின் சின்னமாகவே இருந்தது. நம்முடைய முன்னேற்றமும், சுபிட்சமும், சுதந்திரமும்கூட ராட்டையைப் பொறுத்தே இருக்கின்றன என்பதை நாம் முன்பு உணரவில்லை. உணர்ந்திருந்தால், ராட்டையை அழிக்கப்படுவதனின்றும் காப்பாற்றுவதற்கு நாம் போராடியிருப்போம்; சத்தியாக்கிரகத்தில் இறங்கியிருப்போம். நமது

அறியாமையாலும், அசிரத்தையாலும் இழந்ததை இப்போது புத்தி நுட்பத்தினாலும், அறிவினாலும் மீண்டும் பெற வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. இன்று நாம் நமக்காகச் சிந்திப்பதை நிறுத்தி விட்டோம். வங்காளம், ஓர் ஏழை மாகாணம் என்று அரசாங்கம் கூறுகிறது. அந்தக் கூற்றை யாதொரு உணர்ச்சியுமின்றி யந்திரம் போல அப்படியே ஏற்றுக்கொள்ளுகிறோம். 6½ கோடி மக்கள் இருக்கும் மாகாணம் என்று பெருமையாகச் சொல்லிக்கொள்ளப்படும் ஒன்றை, ஏழை மாகாணம் என்று சொன்னால், அது நம் அறிவின்மையைப் பறைசாற்றுவதேயாகும். வங்காளத்தில் உள்ள குடியானவன், வருடத்தில் ஆறு மாதம் வேலையில்லாமல் இருக்கிறான் என்று அன்றொரு நாள் வங்காளக் கவர்னர் ரேடியோப் பிரசங்கத்தில் கூறவில்லையா? உலகத்தில் பாதி வருடம் வேலையில்லாமல் சோம்பியிருக்கும் எந்த மக்கள் கூட்டமும் உயிர்வாழ முடியுமா? வருடத்தில் பாதி நாள் ஜனங்கள் நிர்ப்பந்தமாக வேலையில்லாதிருக்கும் நிலையைப் போக்காவிட்டால், பெய்கின்ற மழைத் தண்ணீரையெல்லாம் பிடித்துவைத்துப் பாசனத்துக்குப் பயன்படுத்தினாலும், அது அவர்களை உயிரோடு வைத்துக் காப்பாற்ற முடியாது. உண்மையில் நம்மைப் பீடித்திருக்கும் நோய், வறுமையல்ல; சோம்பேறித்தனமும், அசிரத்தையும், செயலின்மையுமே. பாசன எஞ்ஜினீரிங் முறையில் நீங்கள் அற்புதங்களை நிகழ்த்தலாம். ஆனால், நன்கு நிரம்பியுள்ள களஞ்சியங்கள் மட்டும் நம்முடைய அடிமைத்தனத்தை ஒழித்துவிட முடியாது. அடிமைத்தனத்தை ஒழிக்க வேண்டுமென்றால், ஜனங்களுடைய உள்ளத்திலும் உடம்பிலும் குடிகொண்டுள்ள சோம்பலைப் போக்கி, அவர்களுடைய புத்தி நுட்பத்தையும், ஆக்கத்திறனையும் தட்டியெழுப்ப வேண்டும். இந்தக் காரியத்தை இந்தியாவைப் போன்ற விசாலமான, பலவித அம்சங்கள் கொண்ட ஓர் உபகண்டத்தில் சாதிக்கக்கூடியது, நூற்பதன் குறிக்கோளைப் பூரணமாக அறிந்து, அதை எல்லா இடங்களிலும் பரப்புவதுதான் என்பது என் கருத்து. நூற்பதை நடுநாயகமான சூரியனுடனும், மற்றக் கிராமக் கைத்தொழில்களைச் சூரிய மண்டலத்தில் உள்ள வெவ்வேறு கிரகங்களுடனும் நான் ஒப்பிட்டிருக்கிறேன். முதலில் சொன்னது, பின்னால் சொன்னவற்றிற்கு ஒளியும் உஷ்ணமும் கொடுத்துக் காப்பாற்றுகிறது; அது இல்லாமல் அவை உயிர் வாழ இயலாது."

## அது தோற்றுவிட்டதா ?

**கேள்வி :** தாங்கள் கூறுவது போல, கையினால் நூற்ற நூலின் இழையில் சுயராஜ்யம் தொங்கிக்கொண்டிருக்கிறது என்றால், கால் நூற்றாண்டாகக் கதர் வேலை செய்த பிறகும் நாம் ஏன் சுயராஜ்யத்தை அடைய முடியாமல் இருக்கிறோம் ?

**பதில் :** ஏனென்றால், நமது உழைப்பு அறிவினால் இயக்கப்படவில்லை. சமாதியில் நிலவும் அமைதி, அமைதியை மரண

வீடாக்குகிறது. ஆனல், ஆன்மாவில் நிலவும் அமைதியோ, அதைத் தெய்வீக ஞானத்தின் பீடமாக ஆக்குகிறது. அதே போல, ஆன்மாவின் தொடர்பற்ற உழைப்பு அடிமைத் தனத்தின் சின்னமாக இருக்கிறது. அறிவொளி பெற்ற உழைப்பு, சுதந்திர உள்ளத்தின் சின்னமாக விளங்குகிறது. இரண்டுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் மிகப் பெரிது. கதர் விஞ்ஞானத்தில் தேர்ச்சியின்றிச் செய்யும் கதர்ப் பணி, சுயராஜ்யத்தைப் பொறுத்தவரையிலும் வீண் முயற்சி யாகவே முடியும் என்பதைக் கதர் ஊழியர்கள் உணர வேண்டும்.

## அறிவின் ரசவாதம்

**கேள்வி :** நூற்பு விஞ்ஞானம் என்று தாங்கள் எதைக் கூறு கிறீர்கள் ? அதில் அடங்கியவை யாவை ?

**ப :** நான் சாப்பாடில்லாமல்கூட இருந்துவிடுவேன்; ஆனல், யக்ஞ நூற்பில்லாமல் என்னல் இருக்க முடியாது என்று நான் பல முறை கூறியிருக்கிறேன். இந்தியாவில் என்னைப் போல யாரும் தவருத ஒழுங்குடன், மனம் தோய்ந்த உழைப் போடு நூற்றதில்லை என்றும் நான் கூறியிருக்கிறேன். ஆனலும், அது மட்டுமே விஞ்ஞான அறிவின் ஸ்தானத்தை வகித்துவிட முடியாது என்று கூறுவேன். செய்யும் ஒவ் வொரு காரியமும் எதற்கு, எதனல் என்று இடையருது துருவி ஆராய்வது விஞ்ஞான அறிவுக்குத் தேவை. ராட் டையில் சுயராஜ்யமும் சாந்தியும் இருக்கின்றன என்ற உறுதியோடு மட்டும் இருந்தால் போதாது. விஞ்ஞான பூர்வ மான விஷயங்களை வெறும் நம்பிக்கையின் பேரில் வைத்துக் கொள்ளுவது, விஞ்ஞான உள்ளத்துக்குத் திருப்தியளிக் காது. பகுத்தறிவில் ஓர் அடிப்படையைக் காணவேண்டு மென்றே அவன் பிடிவாதமாக நிற்பான். பகுத்தறிவு சம் பந்தப்பட்ட விஷயங்களில் நுழையத் துணியும்போது, நம்பிக்கை முடமாகிவிடுகிறது. பகுத்தறிவுத் துறை முடியும் இடத்தில்தான் நம்பிக்கைத் துறை தொடங்குகிறது. நம் பிக்கையை அடிப்படையாகக் கொண்ட முடிவுகளை அசைக்க முடியாது; அதே சமயத்தில் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட முடிவுகளோ ஸ்திரமற்றவையாகவும், உயர்ந்த தர்க்க ஞானத்தின் முன் தோன்றிவிடக் கூடியவையாகவும் ஆகியே தீரும். விஞ்ஞானத்தின் வரம்பைக் கூறுவது, அதைக் குறைத்துக் கூறுவதாக ஆகாது. நமக்கு இரண் டுமே இல்லாமல் முடியாது. ஆனல், ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உரிய இடம் உண்டு.

## பற்றற்ற உள்ளமும் தைரியமும்

"கண்டுபிடிக்கும் சக்தி ஒரு காலத்தில் இந்தியாவுக்குக் குறைவில்லாமல் இருந்தது. ஆனல், இன்று அது தூங்கிக்

கிடக்கிறது என்று பண்டித ஜவாஹர்லால் நேரு மிகப் பொருத்தமாகக் கூறியிருக்கிறார். ஒருவன், ஒரு தடவை விஞ்ஞான நோக்கை அடைந்துவிட்டால், உண்பது, பருகுவது, ஓய்வெடுப்பது, உறங்குவது போன்ற அவனுடைய ஒவ்வொரு செயலிலும் அது பிரதிபலிக்கும். ஒவ்வொன்றும் விஞ்ஞான பூர்வமாகவும், ஏன், எதனால் என்பதை முழுக்க அறிந்த நிலையில் ஒழுங்குபடுத்தப்படும். கடைசியாக விஞ்ஞான உள்ளம் பற்றற்றிருக்க வேண்டும். இல்லையென்றால், அது தன்னைத் தானே மூளைக் கோளாறு ஆஸ்பத்திரியில் கொண்டுபோய்த் தள்ளிவிடும். பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே ஆண்டவனிடமிருந்து உற்பத்தியானவை என்று உபநிடதம் கூறுகிறது. அது அவனுக்குச் சொந்தம்; அதை அவனுக்கே அர்ப்பணித்துவிட்டு, அதன்பின் அதை அனுபவிக்க வேண்டும். அப்புறம் உங்களுக்கு இன்பமும் துன்பமும், வெற்றியும் தோல்வியும் ஒன்றாக இருக்கும்.''

முடிவில் காந்தி கூறியதாவது: "இன்னும் ஒரு விஷயம்; கொடுங்கோலர்கள் ராட்டையையே அழிக்க விரும்புகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது என்ன ஆவது ? என் பதில் என்னவென்றால், அப்படி நேரும் சமயத்தில் ராட்டையுடன் நாமும் அழிய வேண்டுமே ஒழிய, அதன் நாசத்தைப் பார்த்துக்கொண்டிருக்கக் கூடாது. இந்த விதமாகத் தியாகம் செய்யும் ஒவ்வொரு கதர் ஊழியருக்கும் பதிலாக, அந்த இடத்தில் ஆயிரக்கணக்கான ஊழியர்கள் தோன்றுவார்கள். அவனுடைய உறுதியான செயல், அவனுடைய லட்சிய வெற்றிக்கு இறுதி முத்திரையை இட்டுவிடும்.''

—' ஹரிஜன் ' – 31—3—1946

# 14

# சமூக ரீதியில் மின்சார சக்தியின் நியாயமான உபயோகம்

**கேள்வி :** குஜராத்திலுள்ள ஆயிரக்கணக்கான கிராமங்களில் மாவரைக்கும் யந்திரங்களை எஞ்ஜின்கள் இயக்கி வருகின்றன. இந்த எஞ்ஜின்களை, நதிகளிலிருந்தும், குளங்களிலிருந்தும், கிணறுகளிலிருந்தும் பாசனத்துக்காகத் தண்ணீர் எடுத்துப் பாய்ச்சுவதற்காக எளிதில் உபயோகப்படுத்தலாம். மாவரைக்கும் யந்திரங்களை இயக்குவதுடன், இந்தப் பயனுள்ள காரியத்துக்கும் எஞ்ஜின்களை உபயோகிக்கும்படி

அரசாங்கத்தையோ, அவற்றின் சொந்தக்காரர்களையோ தூண்ட முடியாதா ?

பதில் : ஆயிரக்கணக்கான கிராமங்களில் மாவரைப்பதற்கு மின்சார சக்தியால் இயங்கும் யந்திரங்கள் இருப்பது நமது கையாலாகாத்தனத்தின் எல்லை என்றே நான் கருது கிறேன். எல்லா எஞ்ஜின்களையும், அல்லது மாவரைக்கும் யந்திரங்களையும் இந்தியா உற்பத்தி செய்துவிடவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. நிருபர் தவருகக் கூறு கிருர் என்றும், இந்தியா முழுவதிலும்கூட சக்கரங்களும் யந்திரங்களும் ஆயிரக்கணக்கில் இல்லை என்றும் நம்பவே ஆசைப்படுகிறேன். அப்படி இருப்பது உண்மையானல், அது நம் மக்களிடம் ஏற்பட்டுள்ள முழுச் சோம்பலைச் சுட்டிக் காட்டுவதே ஆகும். கிராமங்களில் இப்படிப்பட்ட யந்தி ரங்களையும், எஞ்ஜின்களையும் அதிக அளவில் கொண்டு போய் நாட்டுவது பேராசையின் சின்னமும் ஆகும். ஏழை களுக்குப் பாதகமாக இந்த முறையில் பணம் திரட்டுவது சரியா? இப்படிப்பட்ட ஒவ்வொரு யந்திரமும் ஆயிரக்கணக் கான திரிகைகளுக்கும், ஆயிரக்கணக்கான குடும்பப் பெண் களுக்கும், இந்தத் திரிகைகளைச் செய்யும் தொழிலாளர் களுக்கும் வேலையில்லாமல் செய்துவிடுகிறது. அத்துடன், இந்த யந்திர முறை பிறவற்றையும் தொற்றிக்கொள்ளும்; ஒவ்வொரு கிராமத் தொழிலையும் பீடித்துவிடும். கிராமத் தொழில் க்ஷீணமடைந்தால், கலையும் க்ஷீணமடையும். பழைய தொழில்களுக்குப் பதிலாக ஏற்படும் புதுத் தொழி லாக அது இருந்தாலும், அதை எதிர்த்து அதிகம் சொல்லு வதற்கு எதுவும் இல்லாதிருக்கலாம். ஆனல், நடப்பது அதுவல்ல. மின்சார சக்தியால் ஓடும் யந்திரங்கள் இருக்கும் ஆயிரக்கணக்கான கிராமங்களில் அதிகாலை நேரத்தில் திரிகைகள் சுற்றும்போது கேட்கும் இனிய கீதத்தைக் கேட்க முடியாமல் போய்விட்டது.

பிரதானமான விஷயத்துக்கு வருவோம் : இந்த யந்தி ரங்கள் தற்சமயம் தவருன முறையில் உபயோகிக்கப்படு கின்றன என்று நான் கருதும் அதே சமயத்தில், இந்த எஞ்ஜின்களைத் தற்போதைய உபயோகத்துடன் நதிகளி லிருந்தும், குளங்களிலிருந்தும், கிணறுகளிலிருந்தும் தண்ணீர் இறைப்பதற்கும் உபயோகித்தால் அது நஷ்டத் தைச் சிறிது ஈடு செய்வதாக இருக்கும். இதற்கு அரசாங்க உதவியைப் பெறலாம் என்று எனக்குக் கடிதம் எழுதி யிருப்பவர் யோசனை கூறுகிருர். இது அவசியம்தான ? எஞ்ஜின்களின் சொந்தக்காரர்கள் தாங்களாக இஷ்டப் பட்டே அவற்றை இந்தப் பயனுள்ள, அவசியமான வேலைக் குப் பயன்படுத்த மாட்டார்களா ? அல்லது அரசாங் கத்தின் நிர்ப்பந்தமில்லாமல் நாம் எதுவும் செய்யத் தயாராக இல்லை என்ற அளவுக்கு அறவே சக்தியற்ற நிலையை

அடைந்துவிட்டோமா? அது எப்படியும் இருக்கட்டும். மக்களை இன்று எதிர்நோக்கியுள்ள பயங்கரமான விதியிலிருந்து காப்பாற்றுவதற்கு, இப்போதுள்ள மின்சார சக்தியை எல்லாம் உபயோகப்படுத்துவதற்கு எல்லா அவசியமான நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும் என்பதே என் உறுதியான கருத்து.

—'ஹரிஜன்' – 10—3—1946

['குறிப்புகள்' என்ற பகுதியில், 'கிடைக்கும் மின்சார சக்தியைப் பயன்படுத்தல்' என்னும் தலைப்பின் கீழ் 'ஹரிஜ'னில் வெளிவந்த கட்டுரை.]

# 15

# கண்டுபிடிப்பதன் அவசியம்

பம்பாய் இந்திய வர்த்தகர்கள் சங்கக் காரியதரிசி ஸ்ரீ ஜி. கே. மேத்தா எழுதுகிறார் :

''கிராமக் கைத்தொழில்களின் புனருத்தாரணத்திற்கான புதிய திட்டம் சம்பந்தமாக என்னுடைய அனுபவம் ஒன்றைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். 1917–இல் யுத்த காரியங்களுக்காக என்னுடைய சேவையை வர்த்தகர்கள் சங்கத்திலிருந்து இந்திய அரசாங்கம் இரவலாக வாங்கிக் கொண்டிருந்தது. நான் சிம்லாவில் ராணுவ தளவாட போர்டில் சுமார் ஒன்றரை வருட காலம் இருந்தேன். அப்போதைய நிலைமையில் பிரிட்டனிலிருந்து ஏற்றுமதி செய்வதற்குத் தடை விதிக்கப்பட்ட அல்லது ஏற்றுமதி செய்வது சாத்தியமில்லாமல் போன சாமான்களைச் சேகரிப்பதே தளவாட போர்டின் பிரதான நோக்கம். பிரிட்டனிலிருந்து குதிரை லாடங்கள் கிடைக்கும்படி செய்வதற்கு வழியில்லை என்று தெரிந்தது. இந்தியாவில் குதிரை லாடங்கள் செய்யும் தொழிற்சாலை எதுவும் இல்லை. பிரிட்டனிலிருந்து ஏற்றுமதி செய்வதற்கும் முழுத் தடை விதிக்கப்பட்டிருந்தது. மற்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்கும் வழியில்லை. ஆகவே, அது ஒரு பிரம்மாண்டமான, சிக்கலான பிரச்னையாகிவிட்டது. குதிரை லாடங்களைப் பெறுவது எப்படி என்று ராணுவ அதிகாரிகள் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். முடிவில், நூற்றுக்கணக்கான கிராமங்களில் குதிரை லாடங்களைத் தயாரிக்கச் செய்து வாங்கிக்கொள்ளுவதன் மூலம் பிரச்னை தீர்க்கப்பட்டது. கிராமங்களில் வாழும் கொல்லர்கள், இந்திய சர்க்காருக்குத் தக்க சமயத்தில் உதவினார்கள். ஜில்லாக் கலெக்டர்கள் மூலம் போலீஸ் அதிகாரிகளுக்கு ஆர்டர்கள் கொடுக்கப்பட்டன. அவர்கள் பல்வேறு கிராமங்களில் லாடங்களை வாங்கி ராணுவத் தேவைகளுக்கு அனுப்பி வைத்தார்கள். இது நீண்ட காலம் நடைபெற்று வந்தது. ஆனால், என்ன நடந்தது என்பதன் கருத்தையும், கிராமங்களைத் தக்க முறையில் பயன்படுத்தினால், வீட்டுக்குத் தேவையான துடைப்பம், மண் பானை போன்ற சாமான்களை மட்டுமன்றி, குதிரை லாடம் போன்ற முக்கியமான சாமான்களையும் எப்படித்

தயாரித்துக் கொடுக்க முடியும் என்பதையுமே இப்போது தங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

உண்மையில் தேவைதான் எதையும் புதிதாகக் கண்டு பிடிக்கச் செய்கிறது. மகாயுத்தத்தின்போது சாத்தியமானதை, நிர்ப்பந்தமான சோம்பலேயும் வேலேயின்மையையும் எதிர்த்துப் போராடும் போராட்டத்தில் ஏன் செய்ய முடியாது? ஸ்ரீ ஜி. கே. மேத்தா தெரிவித்திருப்பது போன்ற உதாரணங்களே முடிவில்லாமல் அடுக்கிக்கொண்டே போகலாம். பரஸ்பரம் படு கொலே செய்துவந்த அந்த நாட்களில் மாபெரும் ஐரோப்பாக் கண்டத்தின் முழுத் தோற்றமுமே மாற்றப்பட்டுவிட்டது; ஆடவரும் பெண்டிரும், சிறுவரும் சிறுமியரும் உயிரோடு வாழ்வதற்காகத் தங்கள் கைகளால் வேலே செய்ய வேண்டியிருந்தது.

—'ஹரிஜன்' - 14—12—1934

# 16

# சத்தியாக்கிரகிகள் நிறைவேற்ற வேண்டிய கடமை

" குண்டு வெடிப்புக்கு முன் கீழ்த்திசை
உலகம் பொறுமையோடுகூடிய
ஆழ்ந்த இகழ்ச்சியுடன்
தாழக் குனிந்தது;
இடி முழக்கம் செய்யும் படைகள் தன்னேக்
கடந்து போகும்படி விட்டுவிட்டது;
அப்புறம், திரும்பவும்
சிந்தனேயில் மூழ்கிவிட்டது."

நூற்பதைப் பற்றிய தங்கள் மனக் கருத்துக்களே வெளிப்படையாகத் தெரிவித்துள்ள சோஷலிஸ்டுகளேயும், ராயிஸ்டுகளேயும், மற்றவர்களேயும் நான் வாழ்த்துகிறேன். நாட்டின் முன் இருக்கும் பிரச்னே மிகக் கடுமையானது. சாத்விக எதிர்ப்பை ஊக்கமாகப் பிரகடனம் செய்தால், தக்கதோர் உடன்பாடு ஏற்படும்வரையில் அதை நிறுத்தி வைக்கக்கூடாது. ஆகையால், போராட்டம் அகிம்சா பூர்வமானதாக இருக்க வேண்டுமென்ருல், அகிம்சை கலப்பற்றதாக இருக்க வேண்டும் என்பது தானே தெளிவாகிறது. தேவைகளேத் தெரிவிக்கும் போது நான் பலவீனமாக இருக்கக்கூடாது. நான் தயங்கினுல், நாட்டின் லட்சியத்துக்குத் துரோகம் செய்பவன் ஆவேன்.

வெற்றிக்கு அத்தியாவசியமானவை என்று நான் கருதும் யோக்கியதாம்சங்கள் இல்லாத ஒரு படையை நான் தலைமை தாங்கி நடத்திச் செல்லத் துணியமாட்டேன்.

அரை மனத்தோடு காட்டும் விசுவாசம் பயன்படாது. இரண்டு இடங்களில் விசுவாசம் வைத்திருப்பது நாசத்திலேயே கொண்டுபோய்விடும். நான் காங்கிரஸின்மீது சவாரி செய்யவில்லை என்பதைக் குறை சொல்லுவோர் உணரவேண்டும். அன்பில்லாத நண்பர்கள், எனக்குச் சர்வாதிகாரி என்ற கேலிப் பெயரைச் சூட்டியிருந்தாலும், நான் சர்வாதிகாரியல்ல. யார் மீதும் என்னுடைய இஷ்டத்தைச் சுமத்துவதற்கு எனக்கு யாதொரு அதிகாரமும் கிடையாது. ஆகையால், என்னை மக்களின் சேவகன் என்று அழைத்துக்கொள்ளுகிறேன். பெயரளவில்கூட நான் தளபதியாக நியமிக்கப்படவில்லை என்பதைப் பொதுமக்கள் அறிய வேண்டும். பெயரளவில் என்னைக் காரியக் கமிட்டி நியமிக்காது என்பதல்ல. ஆனால், அதற்கு யாதொரு அவசியமும் இல்லை என்று நான் சொன்னேன்; அங்கத்தினர்களும் ஒப்புக்கொண்டார்கள். எனவே, ஒரு தளபதிக்கும் அவருடைய படைக்குமிடையே கலப்பற்ற அன்பும் நம்பிக்கையும் கொண்ட ஒரு பிணைப்பு இருக்க முடியுமென்றால், இது அப்படிப்பட்ட ஒன்றாகும். என்னை ஒதுக்கிவிட்டுத் தான் விரும்புவது போல் எந்தத் தீர்மானத்தையும் காங்கிரஸ் நிறைவேற்றுவதை எதுவும் தடுக்கவில்லை. எந்த மனிதனும், அல்லது எந்த மாகாணமும், அல்லது எந்த ஜில்லாவும் தன் சொந்தப் பொறுப்பில் சாத்விக எதிர்ப்பைப் பிரகடனம் செய்வதை, என்னைப் பொறுத்தவரையிலும் எதுவும் தடுக்கவில்லை. அவர்கள் காங்கிரஸினிடம் ஒழுங்கீனமாக நடந்துகொள்ளும் குற்றத்தைச் செய்தவர்களாவார்கள். ஆனால், இப்படிக் கீழ்ப்படியாமல் மீறுவது சம்பந்தமாக என்னால் எதுவும் செய்ய இயலாது.

அதனால், நூற்கும் கட்சியை எடுத்து வாதாடுவது எனக்கு அனாவசியமான காரியமாக இருக்க வேண்டும். அது, ஒவ்வொரு சத்தியாக்கிரகியும் நிறைவேற்ற வேண்டிய கடமை என்பதே போதுமானதாக இருக்க வேண்டும்.

ஆனால், மாறுபட்ட கருத்துடையவர்களை என் கட்சிக்குத் திருப்பும் வரையில் நான் தொடர்ந்து வாதாட வேண்டும்; அல்லது நான் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டும்: ஏனென்றால், ஒவ்வோர் இந்தியனையும்-அவன் ஹிந்துவாக இருந்தாலும், முஸ்லிமாக இருந்தாலும், வேறு யாராக இருந்தாலும் – ஆங்கிலேயர்களையும்கூட, முடிவில் உலகத்தையும் அகிம்சைக்குத் திருப்புவதே எனது நோக்கம். பொருளாதாரம் சம்பந்தமானவை என்றாலும், அரசியல் பற்றியவை என்றாலும், சமூகம் அல்லது சமயம் சம்பந்தப்பட்டவை என்றாலும், எந்தப் பரஸ்பர உறவுகளையும் ஒழுங்குபடுத்துவது அகிம்சையாகவே இருக்கவேண்டும். நான் ஒரேயடியாக ஆசைப்படுகிறேன் என்று என்னைக் குற்றஞ்

சாட்டினால், நான் குற்றத்தை ஒப்புக்கொள்ளவே வேண்டும். என் கனவு ஒருபோதும் நிறைவேறப் போவதில்லை என்று என்னிடம் கூறினால், "அது சாத்தியமே" என்று நான் பதில் கூறிவிட்டு என் வழியே செல்லுவேன். நான் நன்கு பண்பட்ட அகிம்சாப் போர்வீரன். என் நம்பிக்கையை உறுதிப்படுத்த என்னிடம் போதிய ஆதாரங்களும் இருக்கின்றன. ஆகவே, என்னுடன் ஒரே ஒரு தோழர் இருந்தாலும், அதற்கு அதிகமாக இருந்தாலும், அல்லது யாருமே இல்லாது போனாலும், நான் என் சோதனையை தொடர்ந்து செய்துவரத்தான் வேண்டும்.

ஓர் ஆங்கிலேயரிடத்தில்கூட எனக்கு வெறுப்புக் கிடையாது என்பதை என் சக ஊழியர்கள் முதலில் உணர வேண்டுமென்று விரும்புகிறேன். அவரை இந்தியாவை விட்டுத் துரத்துவதில் நான் சிரத்தை கொள்ளவில்லை. அவர் ஓர் ஆட்சியாளராகவோ, ஆளும் வர்க்கத்தில் தாமும் ஒருவராக இருப்பதற்கும், அவ்வாறு தம்மைக் கருதிக்கொண்டிருப்பதற்கும் பதிலாக அவரை இந்தியா வின் ஓர் ஊழியராக மாற்றுவதில்தான் நான் சிரத்தை கொண் டிருக்கிறேன். எந்த மதத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், ஓர் இந்தியரைப் பற்றி நான் நினைப்பது போலவே ஆங்கிலே யரைப் பற்றியும் நினைக்கிறேன். ஆகையால், இந்த அடிப்படைத் தகுதியை என்னோடு பகிர்ந்து கொள்ளாதவர்கள் சத்தியாக் கிரகிகள் ஆக முடியாது.

ஆங்கிலேயர்களிடத்தில் எனக்குள்ள அன்பு ஏதோ உபசா ரத்துக்காகக் கொள்ளும் அன்பைப் போன்றதல்ல. அவர்க ளுடைய ஏகாதிபத்தியத்தை அநேகமாக என்னைவிட யாரும் பயங்கரமாகச் சித்தரித்துக் காட்டியதில்லை. ஆனால், அப் பொழுது என்னுடைய குடும்ப வட்டத்திலும், அரசியல் வட்டத் திலும் அப்படியே செய்தேன். நான் கருதும் அன்பு, ரோஜா இதழைவிட மிருதுவாக இருக்கிறது என்றாலும், கருங்கல்லைவிடக் கடினமானதாகவும் இருக்கும். கடினமான பகுதியை என் மனைவி அனுபவிக்க நேர்ந்திருக்கிறது. என் மூத்த மகன் அதை இப் பொழுதும் அனுபவித்துக் கொண்டிருக்கிறான். சுபாஷ் பாபுவை என்றென்றைக்கும் ஒரு மகனாக அடைந்துவிட்டதாக நான் நினைத்தேன். எனக்கு அந்தப் பாக்கியம் இல்லாமல் போய் விட்டது. அவர்மீது தடை விதிப்பதில் வேதனையோடு நான் முழுக்கப் பங்கெடுத்துக்கொண்டேன். டாக்டர் காரேயும், வீர நரிமனும், என்னுடைய வார்த்தைதான் தங்களுக்குச் சட்டம் என்று சொல்லிக்கொண்டிருந்த காலம் உண்டு. அந்தோ, இப் பொழுது நான் அந்த உரிமையைக் கொண்டாட முடியாது. எப்படியும் அவர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பதில் நானும் பங்கெடுத்துக்கொண்டேன். எனக்கு மிக மிக நெருக்க மானவர்கள் என்றும், என் அன்புக்குரியவர்கள் என்றும் கரு தப்படுபவர்களின் விஷயத்தில் நான் நடந்துகொண்டது போலவே, இவர்கள் விஷயத்திலும் நடந்துகொண்டதாக உறுதி யோடு கூறுகிறேன். அன்பின் ஆணைப்படியே நான் எல்லாக்

காரியங்களையும் செய்து வந்திருக்கிறேன். ஆங்கிலேயரிடத்தும் நான் அவ்வாறே நடந்துகொண்டிருக்கிறேன். நான், அவர்களை எதிர்த்துப் போராடியபோது, என்னை எல்லா விதங்களிலும் திட்டியிருக்கிறார்கள். அவர்களுடைய புகழுரையைப் போலவே அவர்களுடைய கடுமையான குறைகூறலையும் நான் மதிக்கிறேன். இதையெல்லாம் பாராட்டுப் பத்திரத்தைப் பெறுவதற்காகவோ அல்லது அதை எதிர்பார்த்தோ நான் கூறவில்லை. பிரிட்டிஷ் ஆட்சியைப் பற்றியும், முறைகளைப் பற்றியும் நான் கடுமையான விஷயங்களைக் கூறியிருக்கிறேன் என்பதற்காக, ஆங்கிலேயர்களிடத்தில் எனக்குக் கெட்ட எண்ணம் இருப்பதாகக் கற்பிக்கக் கூடாது என்பதைக் காட்ட விரும்புகிறேன். ஆகையால், அவர்களிடம் கெட்ட எண்ணம் கொண்டவர்கள், முடிவில் என்னிடம் ஏமாற்றமே அடைவார்கள்.

நான் இங்கே எந்தப் புதுக் கருத்துக்களையும் தெரிவிக்கவில்லை. அவற்றை 1908-இல் நான் எழுதிய 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலில் காணலாம். சத்தியாக்கிரக முறை உருவாகிக் கொண்டிருந்த சமயத்தில் அது எழுதப்பட்டது. அன்போடு கூடிய இந்தத் திட்டத்தில் ராட்டை ஒரு பகுதியாகிவிட்டது. அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையை நான் சித்தரித்துப் பார்த்தபோது, உயர்ந்த சிந்தனையும், எளிய தன்மையும் கொண்டதாக அது அமைக்கப்பட வேண்டும் என்பதைக் கண்டேன். உணவும் உடையும் எப்பொழுதும் வாழ்க்கையின் முக்கியத் தேவையாக இருந்துவரும். இந்த இரண்டும் கிடைப்பது நிச்சயமில்லை என்றால், வாழ்க்கையே அசாத்தியமானதாகிவிடும். வெளிநாட்டுப் படையெடுப்பின்போதோ, உள்நாட்டுக் குழப்பங்களின்போதோ, எல்லோரும் சாத்தியமானவரை தங்களைக் கவனித்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்க வேண்டும். அகிம்சாபூர்வமான தற்காப்புச் சமூகத்தை அவ்வாறு மாற்றியமைக்க வேண்டும். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் வீட்டுச் சமையலே சுலபமானதாக இருப்பதைப்போல், துணி உற்பத்திக்குத் தக்ளியும் அல்லது அதிகப் பட்சம் ராட்டையும் தறியுமே மிகவும் எளிமையான உடைமைகளாக உள்ளன. கௌரவமான, அமைதியான வாழ்க்கைக்குத் தாமாக முன்வந்து ஒத்துழைப்பது நிபந்தனையாக இருக்கும் கிராமங்களில் வசிக்கும் கூட்டங்களைக் கொண்டதாகவே, அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட சமூகம் இருக்கும். பலாத்காரத்தைப் பலாத்காரத்தால் எதிர்க்க வேண்டும் என்று எதிர்பார்க்கும் அல்லது ஏற்பாடு செய்யும் ஒரு சமூகம், ஒன்று அபாயகரமான வாழ்க்கையை நடத்தும்; அல்லது பெரிய நகரங்களையும், தற்காப்புக் காரியங்களுக்காக வெடி மருந்துகளையும் உற்பத்தி செய்யும். ஐரோப்பாவின் நிலைமையைப் பார்க்கும்போது, அதன் நகரங்களும், பிரம்மாண்டமான தொழிற்சாலைகளும், மாபெரும் ராணுவ சாதனங்களும் ஒன்றைவிட்டு ஒன்று தனித்து வாழ முடியாதவாறு மிகவும் நெருங்கிய தொடர்புடையனவாக ஆகிவிட்டன என்று

கருதுவதில் தவறில்லை. அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட நாகரிகத்தைஅடைவதற்குரிய சுருக்கமான மார்க்கமாக இருப்பது இந்தியாவில் இதற்கு முன் இருந்த கிராமக் குடியரசுதான். அது பூரணமானதல்ல என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் விவரிப்பதும், நான் கருதுவதுமான அகிம்சை அதில் இல்லை என்பதை அறிவேன். ஆனால், அதன் கரு அதில் இருக்கிறது. நான் கூறியிருப்பதெல்லாம் வெறும் முட்டாள்தனமாக இருக்கலாம். நாட்டின் விஸ்வாசமான ஓர் ஊழியன் என்ற முறையில் என் முட்டாள்தனத்தை மறைக்கக்கூடாது. ஒரு பெரிய மாறுதல் நிகழவிருக்கும் கட்டத்தில் நாம் இருக்கிறோம் என்பதில் சந்தேகமில்லை. அது நல்லதற்கான மாறுதல் என்று நான் நம்புகிறேன். ஆனால், அது கெட்டதற்கான மாறுதலாகவும் இருக்கக்கூடும். என் அந்தரங்க எண்ணங்களை என்னுடைய சக ஊழியர்களுடன் பகிர்ந்துகொள்ளும் தைரியம் எனக்கு இருக்க வேண்டும். அவர்களுடைய ஒத்துழைப்பை நான் இழந்துவிடும் அபாயம் இருந்தாலும் சரிதான்.

வாதத்தை மீண்டும் தொடருவோம். அந்தக் கருவிலிருந்தே அகிம்சை முறையை நான் அபிவிருத்தி செய்திருக்கிறேன். ராட்டைக்கு நான் செய்துள்ள மிகுந்த வியாக்கியானத்துக்கு ஏற்றவாறு அது இருந்தால், அது சத்தியாக்கிரக ஆயுதச் சாலையில் உள்ள ஆற்றல் மிக்க ஆயுதம் ஆகிவிடும். ராட்டையிலிருந்து வரும் பலவீனமான நூல் இழை, கோடிக்கணக்கானவர்களைக் கத்திரிக்க முடியாத ஒரு கயிற்றில் ஒன்றாக இணைக்கிறது. ஒரு கெஜம் நூலிழை உபயோகமற்றதாக இருக்கலாம். ஆனால், விருப்பமும் விஷய ஞானமும் உடையவர்களால் நூற்கப்பட்ட கோடிக்கணக்கான முடிவற்ற இழைகள், எந்தப் பாரத்தையும் தாங்கிக்கொள்ளக்கூடிய பலம் படைத்த ஒரு கயிறு ஆகிவிடும். ஆனால், *1907*-க்கும் *1914*-க்குமிடையே இந்தக் கருத்து செயல்படாமல் இருந்தது. திட்டம் முழுவதும் இந்தியாவுக்காகத் தயாரிக்கப்பட்டதுதான். ஆனாலும், தென்னாப்பிரிக்காவிலேயே அதில் அடங்கியுள்ள உணர்ச்சி செயல்படத் தொடங்கிவிட்டது. அங்கே சத்தியாக்கிரகிகளின் வாழ்க்கை மிக மிக எளிமையாக்கப்பட்டது. பாரிஸ்டர்களாக இருந்தாலும் சரி, அல்லது மற்றவர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் உழைப்பின் பெருமையைக் கற்றுக்கொண்டார்கள். தாமாக மேற்கொள்ளும் வறுமையை, வாழ்க்கையில் தங்களுக்கு விதித்த விதியாக அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். தங்களை ஏழைகளோடு ஏழைகளாக ஆக்கிக் கொண்டார்கள். நான் இந்தியாவுக்கு வந்ததும், ராட்டையின் புனருத்தாரணத்துக்காகத் தன்னந்தனியே வேலை செய்யத் தொடங்கினேன். *1921*-இல் கதர், காங்கிரஸின் நிர்மாணத் திட்டத்தின் பிரதான அம்சங்களில் ஒன்றாக ஆயிற்று. ராட்டை அகிம்சையோடு கொண்டுள்ள ஜீவாதாரமான தொடர்புடன் காங்கிரஸ் கொடியின் நடுவே இடம் பெற்றது. ஆகையால், நான் இன்று புதிதாக எதையும் சொல்லவில்லை. ஆனால், அடிக்கடி

நடந்து வந்திருப்பது போல், ஜனங்களை நடவடிக்கை எடுக்குமாறு கட்டாயப்படுத்தும் வரையில், அவர்கள் நான் கூறுவதைக் கவனிக்காமலே இருந்து வந்திருக்கிறார்கள்.

ராட்டையையும், அதன் தன்மைகளையும் எதிர்த்து எழுதி வந்திருக்கும் எல்லாத் தோழர்களிடத்திலும் நான் மிகுந்த மதிப்பு வைத்திருக்கிறேன். தங்களுக்குப் புலப்பட்ட உண்மைக்கேற்ப நாட்டுக்கு வழிகாட்டுவதன் மூலம் அவர்கள் ஒரு பணியைச் செய்துகொண்டிருக்கிறார்கள். நான் வேண்டுகிறவற்றிற்கு அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு சம்மதிப்பதை நான் விரும்பவில்லை. அது தேசீய காரியத்துக்கு உதவினால் அதை நான் வைத்துக்கொள்ளவே வேண்டும். ஆனால், அது உதவ முடியாது என்பதை நான் அறிவேன்.

'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகைக்கு ஸர் சிமன்லால் செதல்வாடு எழுதிய கடிதத்தை இங்கே நான் ஆராயவேண்டும். 1915-இல் நான் இந்தியாவுக்கு வந்ததிலிருந்தே எங்களுக்குள் ராஜீயம் சம்பந்தமாக அபிப்பிராய பேதங்கள் இருந்துவந்திருக்கின்றன என்பதை நான் அறிவேன். அவர் பெரிய வழக்கறிஞர். ஆனால், அதற்காகத் தற்கால யுத்தத்தில் காலாட்படையின் உபயோகத்தைப் பற்றி அவருக்கு எப்படி அதிகாரபூர்வமாக அபிப்பிராயம் சொல்ல உரிமை கிடையாதோ, அதே போல ராட்டையின் பொருளாதாரத்தைப் பற்றியும் கூற உரிமை இல்லை. ராட்டையைப் பற்றி வெளிவந்துள்ள நூல்களைப் படிக்குமாறு அவரை நான் அழைக்கிறேன். அதன் ஆற்றலைப் பற்றி அவருடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளுவார் என்று நான் உறுதி கூறுகிறேன். என் நண்பர்களிடையே அநேக மில் சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள் என்று நான் கூறுவதையும் அவருக்கு நான் நினைவூட்டலாமா? மில்களைப் பற்றிய என் அபிப்பிராயங்களை அவர்கள் அறிவார்கள். வெளிநாட்டு மில்களைவிட நம்முடைய மில்களின் சுபிட்சத்தைப் பெருக்குவதில் எனக்குப் பங்கு இருக்கிறது என்பதையும் அவர்கள் அறிவார்கள். இந்தியாவிலேயே மிகப் பெரியதும்,மிகவும் சக்தி வாய்ந்ததுமான தொழிற் சங்கத்தின் கொள்கையை நிர்ணயம் செய்வதில் நான் வழிகாட்டிக்கொண்டிருக்கிறேன் என்பதையும் ஸர் சிமன்லால் அறிய வேண்டும். மில்களிடத்தில் எனக்குள்ள எதிர்ப்பு வளைந்து கொடுக்காததும், விட்டுக்கொடுக்காததுமாகும். ஆனால், அது முழுக்க முழுக்க அகிம்சா பூர்வமானதாகும். எனக்கு அந்த நற்சாட்சிப் பத்திரத்தைக் கொடுப்பவர்களில் மில் சொந்தக்காரர்கள் முதலாவதாக நிற்பார்கள் என்பதையும் நான் தைரியமாகக் கூறுகிறேன். மில்களோடு எனக்குள்ள தொடர்பு, அகிம்சாபூர்வமான எதிர்ப்புக்கு இன்பகரமான. பூரணமான ஓர் உதாரணமாகும். என்னுடைய நடவடிக்கை அவர்களைத் தீண்டாது என்று அறிந்திருப்பதால் என்னை அவர்கள் போஷிக்கிறார்கள் என்று எனக்கு நினைவூட்ட வேண்டிய அவசியமில்லை. அவர்கள் இன்னும் நன்றாக அறிவார்கள் என்ற நம்பிக்கையினால்

என்னை நானே பாராட்டிக்கொள்ளுகிறேன். மில்களைப் பற்றிய என்னுடைய ஸ்திரமான கருத்துக்களோடு அவை பற்றிப் பலாத்கார நோக்கங்களும் நான் கொண்டிருந்தால், என் நடவடிக்கை அவர்களுக்கு மிகுந்த கஷ்டத்தை உண்டுபண்ணும் என்பதையும், அதன் காரணமாக அவர்கள் என்னை ஒரு விரோதியாக நடத்த வேண்டி வரும் என்பதையும், எனக்கு விரோதமாகச் சட்டத்தின் உதவியையும் தேட வேண்டி வரும் என்பதையும் அவர்கள் அறிவார்கள்.

ஆனால், முன்னாள் மந்திரிகளுக்கு ஸர் சிமன்லால் விடுத்துள்ள சவால் எனக்குப் பிடித்திருக்கிறது. அவர்கள் பேசுவார்களாக.

—'ஹரிஜன்' - 13—1—1940

['ராட்டை' என்ற தலைப்பில் 'ஹரிஜ'னில் வெளிவந்த கட்டுரை.]

# 17

# யந்திரத்தில் தயாரான எண்ணெயும் செக்கு எண்ணெயும்

கிராமச் செக்கும், கிராமத் திரிகையும், கிராமத் தறியும், ராட்டையும், கிராமக் கரும்பாலையும் ஒரு காலத்தில் கிராமத்தின் பிரிக்க முடியாத பகுதிகளாக இருந்தன. அகில இந்திய நூற்போர் சங்கமும், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கமும் அவற்றில் சிலவற்றிற்குப் புத்துயிர் அளிக்க முயன்றுகொண்டிருக்கின்றன. தறிக்கும், ராட்டைக்கும் எவ்வாறு புத்துயிர் அளிக்க முடியும் என்பதை நாம் ஓரளவு நன்ருகவே அறிவோம். கதர் ஒரு விஞ்ஞானம் ஆகியிருக்கிறது. அதன் எல்லா அம்சங்களையும் கற்றுத் தேற வேண்டும். அந்த விஞ்ஞானத்துக்கு மகன்லால் காந்தி அடிப்படை போட்டார். கிராமத் திரிகைக்கும், கிராமக் கரும்பாலைக்கும் இனிமேல்தான் விஞ்ஞானிகள் தோன்ற வேண்டும், ஆனல், செக்குக்கு விஞ்ஞானிகள் இருக்கிருர்கள். மகன்வாடியைச் சேர்ந்த ஸ்ரீ ஜவேர்பாய் பட்டேல் விடாமுயற்சியுடனும், விஞ்ஞானிக்குரிய நுட்பத்துடனும் செக்கின் எல்லா அம்சங்களையும் ஆராய்ந்து வருகிருர். அவர் அபிவிருத்திகளும் செய்திருக்கிருர். அவற்றின் பயனுகச் செக்கில் வேலை செய்யும் ஆட்களுக்கும் பிராணிகளுக்கும் வேலை குறைந்திருக்கிறது என்றும், அதே சமயத்தில் எண்ணெய் உற்பத்தியும் அதிகரித்திருக்கிறது என்றும் அவர் கூறுகிருர். எண்ணெய் மார்க்கெட்டையும், எண்ணெய் விதைகளின் போக்குவரத்தையும் அவர் ஆராய்ந்திருக்கிருர். அதன் பலனுக அவர் தமது எண்ணெயை அநேகமாகப் பஜார் விலைக்கே இன்று விற்க முடிகிறது. ஆகவே,

அவருடைய சரக்கு உடனடியாக விற்பனையாகும் வாய்ப்பு இருக்கிறது. யந்திரங்களில் ஆட்டிய எண்ணெயைவிட அவருடைய எண்ணெய் சிறந்ததாக இருக்கிறது. யந்திரங்களால் தயாரிக்கப்பட்ட எண்ணெய் எப்போதும் கலப்படமானதாகவே இருக்கிறது; ஒருபோதும் அது புது எண்ணெயாக இருப்பதுமில்லை. ஆனால், வார்தாவில் உள்ளூர் மார்க்கெட்டை வெற்றிகரமாகப் போட்டி போடுகிறோம் என்பதைக்கொண்டு ஸ்ரீ ஜவேர்பாய் திருப்தியடைந்துவிடவில்லை. யந்திரங்களால் தயாரிக்கப்பட்ட எண்ணெய், ஏன் செக்கு எண்ணெயைவிட விலையில் மலிவாக இருக்க வேண்டும் என்பதை அவர் கண்டுபிடித்திருக்கிறார். அவர் மூன்று காரணங்களைக் கூறுகிறார். அவற்றுள் இரண்டு தவிர்க்க முடியாதவை. அவை மூலதனமும், கடைசிச் சொட்டு எண்ணெய் வரையிலும் பிழியக்கூடிய, அதுவும் செக்கைவிடக் குறைந்த நேரத்தில் பிழியக்கூடிய யந்திரத்தின் ஆற்றலும் ஆகும். இந்த ஆதாயங்கள், எண்ணெய் மில்லின் சொந்தக்காரர் தரகர்களுக்குக் கொடுக்கும் கமிஷனில் போய்விடுகின்றன. ஆனால், ஸ்ரீ ஜவேர்பாய் மூன்றாவது காரணத்தை, அதாவது கலப்படம் செய்தாலொழியச் சமாளிக்க முடியாதவராக இருக்கிறார். இயல்பாகவே அவர் இதைச் செய்யமாட்டார். ஆகையால், கலப்படம் செய்வதைச் சட்டத்தின் மூலம் தடுக்க வேண்டும் என்று அவர் யோசனை கூறுகிறார். கலப்படத் தடுப்புச் சட்டம் என்று ஒரு சட்டம் இருந்தால். அதைக்கொண்டு தடுக்கலாம்; அல்லது அந்தச் சட்டத்தை இயற்றி எண்ணெய் மில்களுக்கு லைசென்ஸ் கொடுப்பதன் மூலம் தடுக்கலாம்.

கிராமச் செக்கு க்ஷீணதசை அடைந்ததன் காரணத்தையும் ஸ்ரீ ஜவேர்பாய் ஆராய்ந்திருக்கிறார். அதற்கு முக்கியமான காரணம், எண்ணெய் ஆட்டுகிறவர், தமக்கு எண்ணெய் விதைகள் தவறாமல் ஒழுங்காகக் கிடைத்து வரும்படி செய்துகொள்ள முடியாமல் இருப்பதுதான். எண்ணெய் விதைகள், அவை கிடைக்கும் குறிப்பிட்ட காலத்துக்குப் பின் கிராமங்களில் அறவே இல்லாமல் போய்விடுகின்றன. எண்ணெய் ஆட்டுகிறவரிடம் விதைகளைச் சேமித்து வைத்துக்கொள்ளவும், நகரங்களில் அவற்றை வாங்கிக்கொள்ளவும் பணம் இல்லை. ஆகையால், அவர் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டார்; அல்லது வேகமாக மறைந்துகொண்டு இருக்கிறார். லட்சக்கணக்கான செக்குகள் இன்று சும்மா கிடக்கின்றன. அதன் காரணமாக நாட்டின் வருமானத் துறை மிகப்பெரிய அளவில் பாழாகிக்கொண்டிருக்கிறது. எண்ணெய் விதைகள் எங்கே விளைகின்றனவோ அங்கேயே அவற்றைத் தேக்கி, கிராமத்தின் வாணியருக்கு நியாயமான விலைக்குக் கிடைக்கச் செய்வதன் மூலம் இப்போதுள்ள செக்குகள் தொடர்ந்து நிலைபெற்றிருக்கச் செய்வது, நிச்சயமாக அரசாங்கத்தின் கடமையே. இந்த உதவியைச் செய்வதால் அரசாங்கம் எதையும் இழக்கப்போவதில்லை. கூட்டுறவுச் சங்கங்களின் மூலமோ, பஞ்சாயத்துக்கள் மூலமோ இந்த உதவியைச்

செய்யலாம் என்று ஸ்ரீ ஜவேர்பாய் கூறுகிறார். இதைச் செய்தால், யந்திரங்களால் தயாரிக்கப்பட்ட எண்ணெயுடன் செக்கு எண்ணெய் போட்டி போட முடியுமென்றும், கிராமவாசிக்கு இன்று கிடைக்கும் கலப்பட எண்ணெயால் ஏற்படும் ஆபத்து இல்லாமல் போய்விடுமென்றும் ஆராய்ச்சியின் பேரில் ஸ்ரீ ஜவேர்பாய் அபிப்பிராயப்படுகிறார். கிராமவாசிக்குக் கிடைக்கும் கொழுப்புச் சத்து, அப்படி ஏதாவது கிடைத்தால், எண்ணெய்களிலிருந்து கிடைப்பதுதான் என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். நெய், பொதுவாக அவனுக்கு முன்பின் தெரியாத வஸ்துவாகவே இருக்கிறது.

—' ஹரிஜன் ' – 2—9—1939

# 18

# குண்டூரில் கிராமக் கைத்தொழில்கள்

ஆந்திர தேசத்தில், குண்டூர் ஜில்லா ரேபல்லியில் உள்ள வினய ஆஸ்ரமத்தைச் சேர்ந்தவரான ஸ்ரீ சீதாராம சாஸ்திரி, தமது ஆஸ்ரமத்தின் சேவைகள் அனைத்தையும் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்துக்கு அளிக்க முன்வந்து பின் வருமாறு கூறுகிறார் :

"கீழ்க்காணும் வேலைகளைச் செய்யலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. இவற்றைத் தங்களிடம் நான் ஒப்படைக்கிறேன்; (1) செருப்புத் தைத்தல், (2) கையால் பஞ்சரைத்தல், (3) பதநீரிலிருந்து வெல்லம் செய்தல், (4) மண்பாண்ட வேலையை அபிவிருத்தியோடு செய்தல், (5) கையினால் காகிதம் செய்தல், (6) கல்லைச் செதுக்கிப் பளபளப்பாகத் தேய்த்தல், (7) வேர்க்கடலைப் பருப்பு எடுத்தல், (8) ஆரஞ்சுப் பழம் அல்லது வெளித் தோல்களிலிருந்து எண்ணெயும், பிற வஸ்துக்களும் தயாரித்தல், (9) பனம் பழங்களைக் கெடாமல் வைத்திருத்தல்.

"இரண்டாவதாகச் சொல்லப்பட்டிருக்கும் வேலை கதர்த் தொழிலுக்கும் உதவி செய்யும். மூன்றாவது வேலை, குடிப் பிரச்னையைத் தீர்க்க உதவும். இந்த ஜில்லாவில் பனைமரங்கள் ஏராளமாக முளைக்க வைக்கப்படுகின்றன. இவற்றின் பழத்தைப் பரிசோதனை செய்து பார்த்ததில், அது மதிப்பு வாய்ந்த உணவுச் சத்துக்களைக் கொண்டது என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஜில்லாவில் ஆரஞ்சும் மிகுதியாகப் பயிர் செய்யப்படுகிறது; மலிவான விலைக்கும் கிடைக்கிறது. ஆரஞ்சுப் பழங்களின் தோல் உபயோகமில்லாதது என்று தூர எறியப்படுகிறது. ஆனால், வியாபார நோக்குடன் கவனிக்கும் போது, அது உண்மையிலேயே உபயோகமுள்ளதாக இருக்கிறது. அதில் நன்றாக எரியக் கூடிய எண்ணெய் இருக்கிறது. மார்க்கெட்டில் ஆரஞ்சுப் பழத்தோல் விற்கப்பட்டும் வருகிறது. கொண்டவீடு என்பது இந்த ஜில்லாவில் உள்ள ஒரு கிராமம். அது நீண்ட காலமாகவே கையால் செய்த காகிதத்துக்குப் பெயர் போனது. ஜில்லா காங்கிரஸ் கமிட்டி 1921-இல் இந்தத் தொழிலுக்குப் புத்துயிரளிக்க முயன்றது. ஆனால், தொழிலாளிகளின் அசிரத்

தையால் முயற்சி கைவிடப்பட்டது. பால்நாட்டில் ஒரு விசேஷமான கல் அகப்படுகிறது. அது உள்ளூரிலேயே செதுக்கிப் பளபளப்பாக்கப்படுகிறது; காகிதங்கள் காற்றில் பறக்காமல் இருப்பதற்கு வைக்கப்படும் கற்களாகவும், தள வரிசைக் கற்களாகவும், சுவர்களுக்கும் மேஜைகளுக்குமான கற்களாக வும் அது உபயோகிக்கப்படுகிறது. சாதாரணமாக அது பால்நாடு சலவைக் கல் என்று அழைக்கப்படுகிறது. கையால் எடுத்த வேர்க்கடலைப் பருப்பு தென் இந்தியாவில் விற்கப்படுகிறது; யந்திரங்களினால் எடுக்கப்பட்ட பருப்பைவிட மலிவாகவும் இருக்கிறது. இந்த ஜில்லாவின் பல பகுதிகளில் வேர்க்கடலை பயிர் செய்யப்படுகிறது. ஆன்ம சாதனத்திற்காகத் தமது வக்கீல் தொழிலை விட்ட பெஜவாடா ஸ்ரீ டி. ராமசாமி குப்தா, அபிவிருத்தியான முறையில் மண் பாண்டங்கள் செய்யப்பட்டு வருவதற்குக் காரணகர்த்தா ஆவார். அவருடைய யோசனைப்படி தயாராகும் மண் பாண்டங்கள், நாட்டுக் குயவர் செய்யும் பாண்டங்களை விட எவ்வளவோ உயர்ந்தவையாக இருக்கின்றன."

இவர் மட்டும் இவ்விதம் உதவி செய்ய முன் வரவில்லை, அநேகமாக இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து இப்படிப் பலர் உதவி செய்ய முன்வந்திருக்கிறார்கள் என்பது எனக்குப் பெரும் மகிழ்ச்சியளிக்கும் விஷயமாகும். இதுதான் சமீபத்தில் வாக்களிக்கப்பட்டுள்ள உதவியாகும். இதில் ஊழியர்கள் மதிக்கக்கூடிய தகவல் அடங்கியிருக்கிறது. சேவை செய்ய முன்வரும் எல்லா ஊழியர்களும் கட்டளைகளுக்காகக் காத்திராமல் வேலையைத் தொடங்க வேண்டும் என்றே நான் சிபாரிசு செய்வேன். கிராமக் கைத்தொழில் திட்டத்தின் நோக்கம், நம்முடைய தினசரித் தேவைகளுக்கு வேண்டிய சாமான்களுக்குக் கிராமங்களையே எதிர்நோக்க வேண்டுமென்பதும், சில தேவைகளுக்கு அங்கிருந்து சாமான்கள் கிடைக்காதபோது, சிறிது சிரமம் எடுத்து ஏற்பாடு செய்வதன் மூலம் கிராமவாசிகள் அவற்றைத் தயாரித்து லாபகரமாக அனுப்ப முடியாதா என்று பார்ப்பதுமே யாகும். லாபத்தை மதிப்பிடும்போது, நாம் கிராமவாசியைப் பற்றி நினைக்க வேண்டுமே ஒழிய, நம்மைப் பற்றியல்ல. ஆரம்ப கட்டத்தில், நாம் சாதாரண விலையைவிட அதிகமாகக் கொடுக்கவும், அதற்குத் தரம் குறைந்த சாமானைப் பெற்றுக்கொள்ளவும் நேரலாம். நம் தேவைக்குச் சாமான்களைத் தயாரித்து அனுப்புகிறவர் விஷயத்தில் நாம் அக்கறை எடுத்து, அவர் நல்ல விதமாகத் தயாரிக்க வேண்டுமென்று வற்புறுத்தி, நல்ல விதமாகத் தயாரிப்பதற்கு உதவி புரியச் சிரமமும் எடுத்துக்கொண்டால், நிலைமை அபிவிருத்தியடையும்.

— 'ஹரிஜன்' – 23—11—1934



காந்தி லண்டனில் 1931-இல் கிங்ஸ்லி ஹாலில் தங்கியதன் ஞாபகார்த்தமாக
அங்கே ஒரு மரத்தின் பதியனை நட்டபோது எடுத்த படம்.



லங்காஷயரில் ஒரு ஜவுளி மில்லைப் பார்த்துவிட்டு மகாத்மா காந்தி திரும்பிக்கொண்டிருந்தபோது எடுத்த படம்.

பகுதி ஒன்று

# வேலை, வாழ்க்கை நிலைகள்

## 1

## சேவையும் சுயமரியாதையும்

"ரெயில்வே கம்பெனிகளும், ஐரோப்பிய வர்த்தக ஸ்தாபனங்களும், மற்றவைகளும், தங்கள் சிப்பந்திகள் தேசீய நிதிக்குப் பணவுதவி செய்வதையோ, கதர் அணிவதையோ விரும்பவில்லை. அத்தகைய கம்பெனிகளின் சிப்பந்திகள், காங்கிரஸின் ஆணையை மேற்கொண்டு ராஜிநாமாச் செய்துவிட வேண்டும் என்று நீங்கள் யோசனை கூறுகிறீர்களா?" என்று ஒருவர் எழுதிக் கேட்கிறார். போராட்டத்தின் கடைசிக் கட்டமேயான இச்சமயத்தில், இத்தகைய ஒரு விஷயத்திற்குத் தீர்வு காண வேண்டியிருக்கக் கூடாது என்றே நான் எண்ண வேண்டும். தம் மதத்தை அனுசரிக்கவோ, சுயமரியாதையுடன் நடந்துகொள்ளவோ முடியாத இடத்தில் இன்னும் ஒருவர் உத்தியோகத்தில் இருந்துகொண்டிருப்பது என்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. குமாஸ்தாக்கள், ஜீவனை அளிப்பதாகவுள்ள கதரை அணியக் கூடாது என்று தடுக்கப்படுகின்றனர்; தேசீய நிதிக்குப் பகிரங்கமாக பணவுதவி செய்யக்கூடாது என்றும் தடுக்கப்படுகின்றனர். அப்படியிருந்தும், நூற்றுக்கணக்கான குமாஸ்தாக்கள் உத்தியோகங்களை விட்டுவிட்டு வெளிவந்துவிட முடியாமலேயே இருக்கிறார்கள் என்றால், நாம் எவ்வளவு கேவலமான நிலைக்குத் தாழ்ந்துவிட்டோம் என்பதையே அது காட்டுகிறது. சுயமரியாதையின் சாதாரண விஷயங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு, ஒத்துழையாமையின் கடுமையான பாடம் எதுவும் தேவையில்லை. என்றாலும், இத்தனை மாதங்களிலும் ஒத்துழையாமை அதையேதான் செய்துகொண்டு வந்திருக்கிறது. விசாகப்பட்டணம் வைத்திய மாணவர்களின் வீர உதாரணத்தை ஒவ்வொரு சிப்பந்திக்கும் நான் சிபார்சு செய்கிறேன். கதர் உடையைக் கைவிட்டால்தான் பள்ளிக்கூடத்தில் இருக்க முடியும் என்பதற்காகக் கதர் உடையை அணிவதை அவர்கள் விட்டுவிடவில்லை.

— 'எங் இந்தியா' - 3—11—1921

[மேற்கண்ட கட்டுரை முதலில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் 'சிப்பந்திகளுக்கு' என்ற தலைப்பில் 'எங் இந்தியா'வில் பிரசுரமாயிற்று.]

## 2

# சுயமரியாதையைப் பாதுகாத்தல்

அரசாங்கத்தின் சிப்பந்திகள் வெள்ளைக் குல்லாய்களை அணிவது குற்றம் என்று மத்திய மாகாணத்தில் உத்தியோக முறையில் கருதப்படுகிறது. இந்த முடிவை மத்திய மாகாண சட்டசபையும் பகிரங்கமாக அங்கீகரித்திருக்கிறது. அந்த அரசாங்கம் விதித்திருக்கும் தத்துவம், அடிமைத்தனமானதோடு அதிக ஆபத்தானதுமாகும். வெள்ளைத் தொப்பி, ஒத்துழையாமைக் கட்சியின் சின்னம் என்றால், கதரை உடுத்துவதும் அவ்வாறே கருதப்பட்டு அதை உடுத்துவது குற்றம் என்றும் செய்யப்பட்டுவிடும். இதே போலச் சுதேசி என்பதும் அரசாங்கத்தின் அகராதியில் பாவம் என்றாகிவிடும். இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால் அந்நியத் துணி இந்தியாவின் மீது பலவந்தமாகத் திணிக்கப்பட்டது. இந்தியா திரும்பவும் சுதேசிக்குத் திரும்பி விடுவதைப் பலவந்தமாகத் தடுப்பதற்கான முயற்சி இப்பொழுது ஆரம்பமாகி விட்டது. பொதுஜன அபிப்பிராயத்தை உணரும் யோக்கியமான அரசாங்கம் எதுவும், தனது சிப்பந்திகள் கதரை அணிவதற்கு ஆதரவையே அளிக்கும். வெள்ளைக் குல்லாயை அணிவது ஒத்துழையாமைக்கு எந்த வகையிலும் அடையாளமல்ல என்று நான் மறுக்கிறேன். ஒத்துழையாமை இயக்கம் பிடிக்காத அநேகரும், சௌகரியத்திற்காகவும், சுதேசியின் சின்னமாகவும் வெள்ளைக் குல்லாயை அணிந்து வருகிறார்கள் என்பதை அறிவேன். அரசாங்கத்தின் சிப்பந்திகள் தங்களுடைய உத்தியோகங்களை எல்லாம் விட்டுவிட்டு வந்துவிட வேண்டும் என்று காங்கிரஸ் இன்னும் அவர்களை அழைக்கவில்லை. என்றாலும், தங்களுக்கு இஷ்டமான உடையை அணிவதற்கு வேண்டிய தைரியம் அவர்களுக்கு இருப்பதோடு, தங்களுடைய உத்தியோகம் போய் விடுவதாயிருந்தாலும் அதற்கும் துணிந்து சுயேச்சையாக நடந்துகொள்ளும் தைரியத்துடனும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். அரசாங்கத்தில் வேலை பார்ப்பவர்கள் ஒற்றுமையுடனிருந்து காரியத்தைச் செய்வார்களாயின், அவர்களைத் தண்டித்துவிடும் சக்தி அரசாங்கத்திற்கு இருக்காது என்பதைக் காண்பார்கள். ஆனால், அது சாத்தியமானாலும், சாத்தியமாகாது போனாலும், அவர்களுடைய நன்மையை முன்னிட்டு ஒன்று மாத்திரம் நம்புகிறேன். அரசாங்கத்தின் ஊழியர்களிடையேயும், வெள்ளைக் குல்லாய் அணியத் தயங்காத தனிப்பட்டவர்கள் இருந்துகொண்டுதான் இருப்பார்கள்.

—'எங் இந்தியா'—11—8—1921

[இக்கட்டுரை முதலில் 'எங் இந்தியா'வில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் 'மத்திய மாகாணத்தில் வெள்ளைக் குல்லாய்' என்ற தலைப்பில் பிரசுரமாயிற்று.]

# 3

# ஆண்மையின் விலை

[இக்கட்டுரையும் முன்னால் 'வெள்ளைக் குல்லாய்' என்ற தலைப்புடன் 'குறிப்புகள்' என்ற பகுதியில் 'எங் இந்தியா'வில் பிரசுரமானதாகும்.]

பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் ஊழியர் ஒருவர், கதர்க் குல்லாயை அணியும் வெட்கக் கேடான தைரியம் கொண்டுவிட்டதற்காக வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறார்! ஷா வாலஸ் கம்பெனி, இந்தக் காரியத்தை ஆரம்பித்து வைத்துவிட்டது. இது பெரிய அவமானகரமான காரியம். எவ்வளவு பெரிய அவமானம் இது என்பதை நாம் உணரவில்லை. இதைக் கவனிக்காத அளவுக்கு நாம் அவ்வளவு மோசமான தாழ்ந்த நிலைமையை அடைந்துவிட்டோம். என்றாலும், வேண்டுமென்றோ அல்லது கோபத்திலோ உடலின் மீது அடிக்கும் அடிகளைவிட இது நாட்டு மக்களுக்கு அதிக அவமானகரமானதாகும். சவுக்கடி வாங்குவதைவிட மார்பினால் ஊர்ந்து செல்லுவதும், மூக்கை உராய்ந்துகொள்ளுவதும் உடலுக்கு அவ்வளவு அதிக நோவை உண்டாக்குபவை அல்ல. என்றாலும், சவுக்கடி கொடுத்ததைவிட மார்பினால் ஊர்ந்து செல்வதும் மூக்கை உராய்வதும் இந்தியாவை அதிகமாக அவமானப்படுத்திவிட்டன என்பதில் அபிப்பிராய பேதமே கிடையாது.* தலைவணங்குவதில் பிரமாதமாக என்ன இருக்கிறது? என்றாலும், வைஸ்ராயின் முன்னிலையிலிருந்து திரும்பும்போது செய்ய வேண்டிய முறைப்படி சரியானபடி தலையை வணங்கிவிட்டு வெளிவர மறந்துவிட்ட குற்றத்திற்காக ஒரு சுதேச மன்னருக்குச் சிம்மாசனத்தை இழந்துவிடும் ஆபத்து ஏற்பட்டது. தாழ்மைப்படுத்தி வைப்பது நிலை பெற்றிருக்க வேண்டும் என்பதற்காகத் தாழ்மைப்படுத்தி வாங்கப்படும் பணிவே அது. அதேபோல இரு கம்பெனிகள், ஏழைகளான தங்கள் குமாஸ்தாக்கள் தங்களுடைய தேசீய உடையை அல்லது தங்கள் நம்பிக்கையின் சின்னத்தை அணியும் ஆண்மை கொண்டுவிட்டதற்காக அவர்களை வேலையிலிருந்து நீக்கியிருக்கின்றன. தங்கள் குமாஸ்தாக்கள் ஆண்மையைக் காட்டிக் கொண்டு விட்டது, தங்கள் கௌரவத்தையே பெரிதாகக் கருதும் அக்கம்பெனிகளுக்குச் சகிக்கவில்லை. இந்தியாவின் ஆண்கள் தங்களுடைய ஆண்மையை உணர்ந்து, பெண்களும் தங்கள் சக்தியை அறிந்துகொண்டுவிட்ட மாத்திரத்திலேயே, இந்தியா

---

* 1918-இல் பாஞ்சாலத்தில் ராணுவ ஆட்சியில் கொடுமையான அடக்குமுறை தாண்டவமாடிய சமயத்தில் அநேகர் மார்பினாலேயே ஊர்ந்து செல்லும்படியும் மூக்கைக் கல்லில் உராய்ந்துகொள்ளும்படியும் நிர்ப்பந்திக்கப்பட்ட சம்பவத்தையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார்.

சுதந்திரமானதாகிவிடும். அப்பொழுது உலகத்தில் எந்தச் சக்தியும் இந்தியாவின் சுதந்திரத்தைத் தடுத்துவிட முடியாது. ஆகையால், இந்த இரு வேலைநீக்கங்களும் நமக்கு எவ்வளவோ அர்த்தத்தை உணர்த்த வேண்டும். அவ்விரு கம்பெனிகளின் ஊழியர்களும் எந்தவித உணர்ச்சியுமற்றவர்களாக இருப்பதால், வருந்தத்தக்க ஏமாற்றமே உண்டாகிறது என்பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். சாதாரண தொழிலாளர்களுக்கு இருக்கும் தீரத்தையாவது அவர்கள் காட்டிக்கொண்டிருக்கலாம். தங்கள் தோழர் ஒருவர் அவமதிக்கப்பட்டார் என்பதற்காகத் தொழிலாளர்கள் அடியோடு வேலை நிறுத்தம் செய்திருக்கும் உதாரணத்தை இந்தியா காட்ட முடியும். தங்கள் தோழர்கள் விஷயத்தில் இந்தக் கம்பெனிகளின் குமாஸ்தாக்களுக்கு உணர்ச்சியே கொஞ்சம்கூட இல்லையா ? இந்தியா முழுவதுடன் தங்களுக்கு உறவு உண்டு என்று அவர்கள் சொல்லிக்கொள்ள முடியுமா? வீரமுள்ள இவ்விரு இளைஞர்களை நடத்தியதைப் போன்று தங்கள் உடன்பிறந்த சகோதரரை நடத்தியிருந்தால் அப்பொழுது இவர்கள் என்ன செய்வார்கள்? இக்கம்பெனிகளின் ஊழியர்களுக்குச் செய்துவிட்ட தவறுக்குப் பரிகாரம் செய்வதற்கு இன்னும் காலம் கடந்து விடவில்லை. தங்களுடைய ஆட்சேபத்தைத் தெரிவிப்பதற்கு அறிகுறியாக அவர்களும் வெள்ளைக் கதர்க் குல்லாய்களை அணியலாம். தங்கள் தோழர்களான இரு குமாஸ்தாக்களையும் அந்தந்தக் கம்பெனிகள் திரும்பவும் வேலையில் வைத்துக்கொண்டாக வேண்டும் என்றும் கோரலாம்.

அவ்விரு கம்பெனிகளின் மானேஜர்களுக்கு எச்சரிக்கையும் செய்கிறேன். ஒத்துழையாமைக்காரர்களிடம் நிறத்துவேஷம் என்பதே கிடையாது. மோசமானதாக இருக்கும் முறையை எதிர்த்தே அவர்கள் தங்கள் முழுச் சக்தியையும் கொண்டு போராடுகிறார்கள். தனிப்பட்ட ஆங்கிலேயருடன் அவர்களுக்கு எவ்விதமான சச்சரவும் கிடையாது. ஆனால், அவ்விரு கம்பெனிகளின் மானேஜர்கள் செய்திருப்பதைப் போன்று அவர்கள் ஒரு கட்சியில் சேர்ந்துகொள்ளுவார்களானால், இனப் போராட்டம் மூண்டுவிடுவதைத் தடுப்பது கஷ்டமாகிவிடும். ஐரோப்பிய வர்த்தகர்கள், இந்த விஷயத்தை மிகவும் அவசரமானதாகப் பாவித்து, சம்பந்தப்பட்ட இரு கம்பெனிகள் செய்திருக்கும் மோசமான தவறுக்கும் உடனே பரிகாரம் செய்யவில்லையென்றால், ஐரோப்பியக் கம்பெனிகளைப் பகிஷ்காரம் செய்யவேண்டிய ஆபத்தும் ஏற்படும்.

—' எங் இந்தியா ' - 28—7—1921

# 4

# கதர்க் குல்லாய் மீது போர்

[கீழ்வரும் கட்டுரையும் 'எங் இந்தியா'வில் 'குறிப்புகள்' என்ற தலைப்பில் பிரசுரமானதாகும்.]

கதர்க் குல்லாய் அணியத் தாம் துணிந்ததற்காகத் தாம் வேலை பார்க்கும் போர்பஸ் காம்பல் அண்டு கம்பெனி தம்மை வேலையிலிருந்து நீக்கிவிட்டது என்று கராச்சி ஸ்ரீ தருமதாஸ் உதாராம் எழுதுகிறார். வேலையிலிருந்து நீக்கப்படுவதை ஏற்றுக் கொள்ளுவதேயன்றிக் கதர்க் குல்லாய் அணிவதை மாத்திரம் கைவிடுவதில்லை என்று அவர் கொண்ட தைரியத்திற்காக அவரைப் பாராட்டுகிறேன். நாம் அதிகக் கேவலமான நிலையை அடைந்து விடவில்லையென்றால், ஒவ்வொரு குமாஸ்தாவும், அவர் எங்கே வேலை பார்த்து வந்தாலும், ஏககாலத்தில் எல்லோரும் கதர்க் குல்லாய் அணிந்து வேலையிலிருந்து நீக்கப்படுவதற்குத் தயாராக வேண்டும். இப்படிச் செய்வது அக்கம்பெனிகளுக்குப் புத்தி உண்டாகும்படி செய்து, தீமையற்றதான உடை மீது போர் தொடுப்பதிலுள்ள தவறையும் அவை உணரும்படி செய்யும். தங்களுடைய சிப்பந்திகளுக்குப் பயத்தை உண்டாக்கி, அவர்களை ஆண்மையற்றவர்களாக்கிப் பணிந்து கிடக்கும்படி செய்வதற்காகவே உண்மையில் இப்போராட்டம் தொடங்கப் பட்டிருக்கிறது. சென்னையில் கல்வி இலாகா டைரக்டர், பள்ளிக்கூடங்களில் ராட்டையில் நூற்பதைப் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர்கள் அனுமதிக்கக் கூடாது என்று உத்தரவிட்டிருக்கிறார். ராட்டைக்கு ராஜீய முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது என்று அவர் காரணம் கூறுகிறார். குடிக்கக்கூடாது என்று பிரசங்கம் செய்வதையும், இதே காரணத்தைச் சொல்லித் தடுக்கலாம். ஏனெனில், அதில் ராஜீய முக்கியத்துவம் இருக்கிறது என்று ஒத்துழையாமைக்காரர்கள் கருதுகிறார்கள். சுதேசி, சர்க்காருக்குப் பிடிக்கவில்லை என்பதையே, சுதேசி மீது பல வழிகளிலும் போர் தொடுக்கப்பட்டிருப்பது காட்டுகிறது. அதாவது, பொருளாதாரத்தில் இந்தியா சுயேச்சை அடைவதை அரசாங்கத்தினால் சகிக்க முடியவில்லை. இந்த அறிகுறிகளெல்லாம், சுதேசித் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் நமது உறுதியைப் பலப்படுத்த வேண்டாமா?

—'எங் இந்தியா' – 27—10—1921

# 5

# வேலையில் அதிருப்தி கொண்டவருக்கு

ஒரு மில்லில் வேலை செய்து வரும் ஒரு வாலிபர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

"நான் ஒரு மில்லில் என்ஜினீயரிங் பகுதியில் வேலை செய்து வருகிறேன். இந்த வேலை எனக்கு வெறுத்துப் போய்விட்டது. அரை டஜன் உறவினர்களுக்கு நான் சம்பாதித்துப் போட வேண்டியவனாக இருக்கிறேன். வேறு எந்த விதமான தொழிலிலும் எனக்குப் பயிற்சி இல்லை. ஆகையால், அவர்களுக்கெல்லாம் வேறு வகையில் சம்பாதித்துப் போடுவதற்கு எனக்கு வழி தெரியவில்லை. மாதந்தோறும் எனக்கு நூறு ரூபாய் வேண்டி இருக்கிறது. மில் தொழிலாளருக்குத் தினந்தோறும் செய்யப்பட்டு வரும் அநீதிகளையும், மில் முதலாளிகளின் முழு சுயநலப் போக்கையும் இரக்கமற்ற செய்கையையும் பார்க்கும்போது, அரசாங்கத்தில் வேலை பார்ப்பதைவிட மில்லில் வேலை பார்ப்பது இன்னும் அதிக மோசமானது என்பதை உணருகிறேன். இந்த நிலைமையில் நான் என்ன செய்ய வேண்டும் என்று யோசனை கூறுகிறீர்கள்? எனக்கு வயது 26. மெட்ரிகுலேஷன் வரை படித்திருக்கிறேன்."

'ரொட்டியைப் பத்திரமாக வைத்திருக்கவும் வேண்டும். அதைச் சாப்பிடவும் வேண்டும் என்றால் எப்படி அது முடியும்?' என்பது பழைய ஆங்கிலப் பழமொழி. அதேபோல, மில் உத்தியோகத்தை நீங்கள் விட்டுவிடவும் வேண்டும். மாதம் உங்களுக்கு நூறு ரூபாயும் வேண்டும் என்றால் அது முடியாது. இந்தியாவில் அதிக வருமானம் தருவதாக இருக்கும் உத்தியோகங்களையெல்லாம் ஆழ்ந்து கவனித்தால் ஓர் உண்மை புலப்படும். அநேகமாக அவை எல்லாமே இந்தியாவில் இருக்கும் பிரிட்டிஷ் ஆட்சியின் சிருஷ்டிகள். அந்த ஆட்சி நிலையானதாக இருக்கும்படி செய்வதற்கு உதவுபவைகளாக அவை பெரும்பாலும் இருந்து வருகின்றன. மக்களின் சராசரி தின வருமானம் ஒன்றே முக்காலணாவுக்கு மேலில்லாத ஒரு நாட்டினால் அதிகச் சம்பளம் கொடுத்துக்கொண்டிருக்க முடியாது. அப்படி அதிகச் சம்பளம் கொடுப்பது, இப்பொழுதே கொடிய ஏழ்மையைத் தாங்க முடியாது தவிக்கும், பாடுபட்டு உழைக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு மேற்கொண்டும் அதிகச் சுமையாகிவிடும் என்பதுதான் அதற்குக் காரணம். ஆகையால், மில்கள் செய்து கொண்டிருப்பதைப் போன்ற சுரண்டல் முறையிலிருந்து ஒருவர் தப்புவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அவர் தம் குடும்பச் செலவை அதிகமாகக் குறைத்துக் கொண்டுவிட வேண்டும். இதை இரண்டு வழிகளில் செய்யலாம்; வாழ்க்கையை மிகவும் எளிமையானதாக்கிக்கொண்டு விடலாம். தமது சம்பாத்தியத்தைக் கொண்டு வாழவேண்டியிருப்பவர்களின் தொகையைக் குறைத்துவிடலாம். குடும்பத்தில் வயது வந்து விட்டவர்களாக

வும், திடகாத்திரமுள்ளவர்களாகவும் இருக்கும் ஒவ்வோர் ஆணும் பெண்ணும், யோக்கியமான உழைப்பின் மூலம் சம்பாதித்துக் குடும்பத்திற்குத் தங்கள் விகிதத்தை உதவும்படி செய்ய வேண்டும். பெரிய அளவில் மூலதனம் எதுவும் தேவையில்லாமல், எளிதில் கற்றுக்கொண்டு வீட்டிலேயே செய்யக்கூடிய கைத்தொழில்கள் எத்தனையோ இருக்கின்றன. இந்த இரண்டு காரியங்களில் எதையும் செய்ய அவர் தயாராக இல்லையென்ருல், அவர் இப்பொழுது இருந்து வரும் வேலையிலேயே இருந்துகொண்டு தம்மால் செய்ய முடிந்த சேவையைச் செய்து வரட்டும். அவர் மில்லில் வேலை பார்ப்பவராக இருந்தால், மில் தொழிலாளியின் கஷ்டங்களையும் துயரங்களையும் அனுதாபத்துடன் நுணுக்கமாக ஆராய்ந்து, அவற்றை நீக்குவதற்கு இருக்கும் நிலைமையில் தம்மால் சாத்தியமானதைச் செய்யட்டும். அவர் தமது ஒழுக்கத்தில் புனிதத்தையும், யோக்கியப் பொறுப்பையும், நேர்மையையும் வளர்த்துக்கொண்டு, தமது லட்சியங்கள் தம்முடன் வேலை செய்யும் மற்றவர்களுக்கும் பரவும்படி செய்யட்டும். கீழிருக்கும் சிப்பந்திகளெல்லாம் நடத்தையில் நேர்மையுள்ளவர்களாக இருப்பார்களாயின், அதனல் புனிதமான சூழ்நிலையை உண்டாக்கிவிட முடியும். இது முடிவில் அவர்களின் எஜமானர்களிடம் மாறுதலை உண்டாக்கும். இதனல் மில் தொழிலாளர்களுக்கு அவர்களிடமிருந்து நியாயம் கிடைக்கும்படி செய்யவும் முடியும்.

இந்த உலகத்தில் எல்லாச் செயல்களிலுமே ஏதோ குறைபாடுகள் இருந்துகொண்டுதான் இருக்கின்றன. அக்குறைபாடுகளைக் குறைப்பதுதான் மனிதனுடைய கடமையும் உரிமையுமாகும். அக்குறைபாடுகளின் மத்தியில் வாழ்ந்தாலும், தன்னல் இயன்றவரையில் அவைகளினல் பாதிக்கப்படாமலும் இருக்க வேண்டும். கடுமையான உதாரணமாகக் கவனித்தால், கசாப்புக் கடைக்காரருக்கும் மனமிரக்கம் இருக்க முடியும் என்பதில் அதிக மாறுபாடு எதுவும் இருப்பதற்கில்லை. கசாப்புக் கடைக்காரராகவே இருந்தாலும், அவருடைய உள்ளத்திலும் இரக்கம் இருப்பது சாத்தியம். உண்மையில் எனக்குச் சில கசாப்புக் கடைக்காரர்களைத் தெரியும். யாருமே எதிர்பார்க்க முடியாத அளவுக்கு அவர்களிடம் நல்ல குணங்கள் உண்டு. மகாபாரதத்தில் வரும் கசாப்புக்காரரான கௌசிகனின் உதாரணம் கவனிக்கத் தக்கதாகும். இக்கடிதம் எழுதியிருப்பவரைப் போன்ற நிலையிலிருக்கும் எல்லா இளைஞர்களும் கவனமாகச் சிந்தித்து கிரகித்துக்கொள்ள வேண்டிய உதாரணம் அதுவாகும்.

— 'எங் இந்தியா' - 1—8—1929

# 6

# அதிக வருவாயுள்ள வேலையின் விலை

ஒரு நண்பர் குழப்பத்தில் இருக்கிறார். இவர் ஓர் இந்தியக் கம்பெனியில் உத்தியோகத்தில் இருக்கிறார். காலை 8 மணி முதல் இரவு 9 மணி வரையில் அவர் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. இடையில் சாப்பாட்டுக்கு இடைவேளை நேரம் இருக்கும் என்று எண்ணுகிறேன். ஆனால், இவர் இன்ன மாதிரி உடையை, இன்ன துணியில்தான் அணிய வேண்டும் என்று முதலாளிகள் இவருக்கு விதிக்கவில்லை. அவர் இஷ்டத்திற்கு அவர் கதர் உடுத்துகிறார். ஓர் அந்நியக் கம்பெனி இவருக்கு, இப்பொழுது வாங்குவதைவிட இரட்டிப்புச் சம்பளத்தில் உத்தியோகம் தருவதாக அழைக்கிறது. இவர் இப்பொழுது வேலை செய்வதில் பாதி நேரம் வேலை செய்தால் போதும். ஆனால், அவர் கதரை உடுத்திக்கொள்ளக்கூடாது என்று அந்நியக் கம்பெனி கூறுகிறது. இப்பொழுது இவருக்கு உண்டாகியிருக்கும் சங்கடம் இதுதான்: அந்நியக் கம்பெனியில் வேலையை ஒப்புக்கொண்டால் பண விஷயத்தில் அவருக்குச் சௌகரியமாக இருக்கும். அதோடு, நூற்பதில் அவருக்கு நம்பிக்கை இருப்பதால் நூற்பதற்கும் அவருக்கு நேரம் இருக்கும். ஆனால், கதர் அணிவதில் தமக்கு அதிக ஆசை இருந்தும் அதை அவர் கைவிட்டுவிட வேண்டும். இப்பொழுது வேலை பார்க்குமிடத்திலேயே இருந்து வருவதென்றால், அடிமை போல் தினமும் பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. நூற்பதற்கு நேரமே இல்லை. இந்நிலையில் அவர் என்ன செய்வது? இதில் என் அபிப்பிராயத்தைத் தயங்காமல் கூறுவேன். கதர் விஷயம் ஒருபுறம் இருக்கட்டும், அந்நியக் கம்பெனி கொடுக்கச் சம்மதிக்கும் கவர்ச்சியான உத்தியோகம், சுயமதிப்புள்ள யாரும் ஏற்றுக்கொள்ளவே முடியாததாகும். ஒருவருடைய சுதந்திரத்திற்கு அந்த உத்தியோகம் அனாவசியமாகத் தடை விதிப்பதாக இருப்பதே இதற்கு முக்கியமான காரணம். மேலும், அந்தத் தடை தேசிய நன்மைக்கு விரோதமானதாக இருப்பதோடு, கூறப்படும் உண்மைகளிலிருந்து, கதர் மீது துவேஷத்தினால் பிறந்ததாகிறது என்றும் தெரிகிறது. இவ்விஷயத்தின் தன்மையைக்கொண்டு கவனித்தாலும், நேரமில்லை என்பதனால் நூற்பதை இப்போதைக்குத் தியாகம் செய்துவிடவே நேர்ந்தாலும், கதர் அணியச் சுதந்திரம் இருப்பதே மேல் என்பேன். கதர் கட்டுவதை எல்லோரும் கைவிட வேண்டி வந்தால், நூற்பதால் மாத்திரம் பலனே இல்லை. நூற்பதன் பெருமை அதனளவோடு மாத்திரம் இல்லை. நூற்பதனால் உற்பத்தி செய்வது விற்பனையாவதில்லை என்றால், அரைப் பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான ஆண்களையும் பெண்களையும் நூற்கும்படி அழைப்பது கொடிய கேலிக்கூத்தேயாகும். ஆகையால், கதரை எல்லோரும்

அணியும்படி செய்வதுதான் இப்பொழுது வேண்டியதாகும். நூற்பது அவசியமே என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நூற்பது, கதரை அணிவது என்ற இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதானால், கதரை அணிவதைத்தான் மேற்கொள்ள வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. மிகச் சொற்ப வருவாயுடனிருப்பவர்களுக்கு. மேற்கொண்டும் கொஞ்சம் வருவாய் கிடைப்பதற்கு. அதுவும் அவர்களுக்கிருக்கும் ஓய்வு நேரங்களில், அவர்கள் நூற்க வேண்டும். குறிப்பிட்ட இந்த வகையில் கொஞ்சம் உழைப்பிற்குத் தேசத்திற்காகத் தங்கள் நேரத்தைக் கொடுக்க முடிந்தவர்கள், எந்தவித ஊதியமும் பெறாமல் நூற்க வேண்டும். இவ்விஷயத்தில் நூற்றாக வேண்டும் என்ற உறுதி இருப்பதால் நாளாவட்டத்தில் இதற்கு நேரம் இருந்துதான் தீரும். இக்கடிதத்தை எழுதியிருப்பவர், ரெயில் அல்லது டிராம் மூலமே தமது காரியாலயத்திற்குப் போகக்கூடும். அவர் தம்முடன் தக்ளியை வைத்துக்கொண்டு கிடைத்த நேரத்திலெல்லாம் நூற்கட்டும். ஆகையால், அவர், எந்த ஆசைக்கும் மயங்கி கதர் அணிவதை விட்டுவிடவே மாட்டார் என்று நம்புகிறேன். அந்நிய வர்த்தகர்களின் ஸ்தாபனங்களில் கதர் மீது இருக்கும் துவேஷம் மறைந்துவிடும் என்றே நம்பினேன். கல்கத்தாவிலிருக்கும் ஐரோப்பிய வர்த்தகர்களிடம் பேசும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. கதரை அணிவதில் அவர்களுக்கு எவ்விதத் துவேஷமும் இல்லை என்பது தெரிந்தது. நான் எழுதும் இந்தக் குறிப்பைப் படிக்க நேரும் செல்வாக்குள்ள ஐரோப்பிய வர்த்தகர்கள், இக்கடிதம் எழுதியிருப்பவர் குறிப்பிடும் துவேஷத்தைப் போக்குவதற்குத் தங்கள் செல்வாக்கை உபயோகிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இந்திய வர்த்தக ஸ்தாபனங்கள், அசாதாரணமாக அதிக நேரம் வேலை வாங்கும் வழக்கத்தை இனியாவது மாற்றிக்கொண்டுவிட வேண்டும். அதிக நேரம் வேலை வாங்குவதால் அதிக வேலை நடந்துவிடுவதில்லை. வேலை குறைந்தே விடுகிறது என்பதை உலகத்தின் அனுபவம் காட்டுகிறது. இதில் சீர்திருத்தம் எப்படியும் வந்துதான் தீரும். ஆனால், இந்தச் சீர்திருத்தம், விரும்பியும் தாராளத்தோடும் ஏற்படுவதற்குக் கொஞ்சம் தைரியமும் முன்யோசனையோடு ஆரம்பிப்பதும் மாத்திரமே தேவை. இச்சீர்திருத்தம் தானே வராமல் கட்டாயத்தின் பேரில் வந்துவிடும்போது, அதில் பெருமையே இல்லாது போய்விடும். தொழிலாளரின் வேலை நேரத்தைக் குறைக்க வேண்டும் என்பது ஓர் உலக இயக்கம். இதை யாரும் தடுத்துவிட முடியாது. இந்திய வர்த்தக சங்கமோ அல்லது அது போன்ற வர்த்தக சங்கமோ இதற்கு வழி செய்யக் கூடாதா?

—'எங் இந்தியா' – 22—10—1925

# 7

# செய்த குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிறூர்

உண்ணுவிரதம்* அநேக ஊழியர்களிடையே மறைமுகமாக உண்டாக்கியிருக்கும் மாறுதலுக்குச் சாட்சியங்களாகக் கடிதங்கள் இன்னும் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. அத்தகைய ஊழியர்களில் ஒருவர் குஜராத்திலிருந்து பரிதாபகரமான கடிதம் ஒன்றைக் குஜராத்தி மொழியில் எழுதியிருக்கிறூர். அதைச் சுருக்கமாகக் கீழே கொடுக்கிறேன் :

"தாங்கள் புனைவில் இருந்தபோது தங்களுக்கு எழுதுவது என்று பன்முறை பேனவை எடுத்தேன். ஆனல், எனக்குத் தைரியம் வரவில்லை. ஆனல், இன்று அதிகாலையில், எனக்கு நானே வருமாறு சொல்லிக் கொண்டேன்: 'எனக்கு அதிகச் சமீபத்தில், நீங்கள் இருக்கும்போதே என் பாவத்தின் பாரத்தை நான் இறக்கிக் கொண்டுவிட வேண்டும்; ஏழை மக்களிடமிருந்து நான் எப்படித் திருடி வந்தேன் என்பதை உங்களிடம் சொல்லிவிடவேண்டும்.' அதெல்லாம் நடந்த விதம் இதுதான்: 1900–இல் ஒரு பெரிய பஞ்சம் உண்டாயிற்று என்பது தங்களுக்கு நினைவு இருக்கும். பஞ்ச நிவாரணத்திற்காக நடந்த வேலைகள் ஒன்றிற்கு அமர்த்தப்பட்டிருந்த தொழிலாளரைக் கண்காணிக்கும் வேலையில் நான் இருந்தேன். அப்பொழுது எனக்கு வாலிபப் பருவம். எனக்குக் கீழ் இருக்கும் தொழிலாளருக்குக் கொடுக்கும் கூலியில் கொஞ்சத்தை நான் எடுத்துக்கொண்டு விடுவதில் தவறு எதுவும் இருப்பதாக நான் அப்பொழுது எண்ணவில்லை. இந்த வகையில் நான் ரூ. 100-க்குக் குறையாமல் எடுத்துக் கொண்டிருப்பேன். நான் எட்டு மாதங்கள் அந்த வேலையில் இருந்தேன். இக்கதையில் மிகவும் துக்ககரமான அம்சம் என்னவென்றால், அத்தொழிலாளர்களெல்லாம் ஹரிஜனங்கள்; அவர்களை அமர்த்தியவனும் நான்தான். மற்றப்படி அவர்களிடம் பிரியத்தோடேயே இருந்து வந்தேன். அவர்களும் என்னிடம் திருப்தியுடன் இருக்கிறூர்கள் என்றே எனக்குத் தோன்றியது. ஆனல், அவர்களுக்கு முழு நாள் வேலைக்கும் கொடுக்கும் இரண்டணுவில் நான் காலணு எடுத்துக் கொண்டு விடுவேன். சுமார் ஆறு வயதே இருக்கும் ஒரு சிறுவனுக்குக் கொடுத்த கூலியிலும் காலணு எடுத்துக் கொண்டேன். நான் அவ்வளவு அற்பத்தனமாக நடந்து கொண்டேன். உண்மை என்னவென்றால், கூலி பட்டுவாடா செய்வதில் அச்சிறுவன் எனக்கு அதிக உதவியாக இருப்பான். அப்படியிருந்தும் அவன் கூலியிலும் நான் எடுத்துக் கொண்டு விட்டது என் குற்றத்தை அதிகமாக்குகிறது. அவர்களுக்கெல்லாம் நான்தான் வேலை தேடிக் கொடுக்கிறேன்; ஆகையால், இந்த ஏழைகளிடமிருந்து நான் பணத்தைத் திருடிக்கொள்ளுவது தவறு அல்ல என்ற இந்த எண்ணத்தில் என் மனச்சாட்சியை அமிழ்த்தி வைத்திருந்தேன். எனக்குக் கீழ் ஹரிஜனங்களல்லாத தொழிலாளரும் இருந்தார்கள். கொடுக்கும் கூலியில் ஆளுக்குக் காலணு வீதம் நான் எடுத்துக்கொண்டு விட்டது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. நான் காலணு திருடிக் கொள்ளுவதை அவர்கள் அனுமதிக்காவிட்டால், அவர்களை

---

* 1933 இல் மே மாதம் 8-ஆம் தேதி முதல் 29-ஆம் தேதி வரையில் தாம் ஹரிஜனங்களுக்காக மேற்கொண்ட உண்ணுவிரதத்தையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறூர்.

வேலையிலிருந்து நீக்கி விடுவதாக மிரட்டிவிட வேண்டியதாயிற்று. ஆனல், பாவம், நான் ஒவ்வொரு நாளும் மேலே சொன்னது போல ஒழுங்காக ஆளுக்குக் காலணு வீதம் திருடிக்கொண்டதைக் குறித்து ஹரிஜனத் தொழிலாளர்கள் ஆட்சேபித்து எதுவும் சொல்லுவதே இல்லை.

''நான் செய்த அயோக்கியத்தனத்தின் கதை அதோடு முடிந்தும்விட வில்லை. பெண் தொழிலாளருடன் நான் கொண்டிருந்த உறவு விஷயத்திலும் நான் புனிதமாக நடந்துகொள்ள முடிந்ததும் இல்லை.

''நான் செய்தது சரிதான் என்பதற்கு நான் சமாதானம் சொல்லப் போவதில்லை. என்றாலும், என்னைச் சுற்றிலும் இருந்த சூழ்நிலை ஆன்மாவைக் கொன்று விடுவதாகவே இருந்தது என்பதை உங்களுக்கு நான் அறிவித்தே ஆக வேண்டும். பார்ஸி எஞ்சினீயர் ஒருவர் மாத்திரமே அங்கே எந்தவித மான ஊழலும் இல்லாமல் இருந்தார் என்று நான் நம்புகிறேன்.

''நான் செய்த அக்கிரமங்களுக்குப் பிராயச்சித்தமாக இத்துடன் ரூ. 250-க்கு நோட்டுகளை அனுப்புகிறேன். அதில் ரூ. 50 ஹரிஜனங்களுக்காக, அதைக் கீழ்வருமாறு வினியோகிக்க வேண்டும்:

ரூ. 20 படிப்புக்காக,

ரூ. 20 அவர்களுக்குத் தண்ணீர் கொடுப்பதற்காக,

ரூ. 10 பிரசாரத்திற்காக,

மற்ற ரூ. 200-ஐ உங்கள் இஷ்டம் போல் பயன்படுத்தலாம்.''

1900-இல் இந்த இளைஞர் என்ன செய்தாரோ அதுதான் பொதுவாக மேஸ்திரிகளிடம் சந்தேகத்திற்கிடமில்லாத வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. அந்தப் பழக்கம் இன்னும் தொடர்ந்து இருந்துகொண்டு வருகிறது என்றே அஞ்சுகிறேன். ஏழை ஹரிஜனங்களுக்கு வேலை கிடைப்பதில்லை. ஆகையால், வேலை கிடைத்தால், அப்படி வேலை கொடுப்பவர்கள் தங்களிடம் திருடினலும் அவர்களிடம் நன்றியுள்ளவர்களாக இருக்கின்றனர். அதை அவசியமான குணமாகவும் கொள்ளுகின்றனர். அந்தத் திருட்டை எதிர்த்துவிட்டால், தாங்கள் சம்பாதிக்கும் அப்பரிதாபகரமான கொஞ்சத்திற்கும் வழியில்லாது போய்விடும் என்று அவர்கள் எண்ணுகிறூர்கள். என்றாலும், தாங்கள் கஷ்டப்பட்டு உழைத்து அன்றாடம் சம்பாதிக்கும் கூலியில் இவ்விதம் ஒரு பகுதியைத் தவறுமல் திருடிவிடுவது, அவர்கள் மனத்தில் கசப்பான நினைவு இருந்துகொண்டிருக்கும்படியே செய்யும். இக்கடிதத்தை எழுதியிருப்பவர், தாம் செய்த குற்றத்தை மனம்விட்டு ஒப்புக்கொண்டு அதற்குப் பிராயச்சித்தமும் செய்திருப்பதற்காக அவரைப் பாராட்டுகிறேன். இக்கடிதம், ஹரிஜன ஊழியர்கள் எல்லோருக்கும் ஓர் எச்சரிக்கையாக இருப்பதோடு அவர்களைப் பரிசுத்தமானவர்களாக்குவதாகவும் இருக்கட்டும்.

—'ஹரிஜன்' – 29—7—1933

## 8

# தரும ஸ்தாபன நிர்வாகியின் பொறுப்பு

**கேள்வி :** ஒரு தரும ஸ்தாபனத்தின் தலைமையில் இருப்பவர், தமக்குக் கீழிருப்பவர்கள் எல்லோரும் எளிய வாழ்க்கை நடத்த வேண்டும் என்று வற்புறுத்தும்போது, அவர் மாத்திரம் தமக்காகச் செலவழித்துக்கொள்ளும் பணம் தமது சொந்தப் பணமாகவே இருந்தாலும், ஆடம்பர வாழ்க்கையை நடத்திக்கொண்டிருப்பது சரியா?

**பதில் :** தாம் செய்துகொண்டிருப்பதற்கு அதிகமாக எதையும் தம் சக ஊழியர்களிடமிருந்து எதிர்பார்ப்பவர் தோல்வியை அடைவது நிச்சயம். ஆனால் இது ஏழ்மை லட்சியத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் நிர்வாகிகளைக் கொண்ட தரும ஸ்தாபனங்களுக்கு மாத்திரமே பொருந்தும்.

—'ஹரிஜன்' - 8—3—1942

[இது, 'கேள்விப்பெட்டி' என்பதன் கீழ் 'ஒரு நிர்வாகியின் கடமை' என்ற தலைப்பின் கீழ் 'ஹரிஜ'னில் பிரசுரமானது.]

## 9

# வியாபாரத்தில் நாணயம்

**கேள்வி :** நான் வியாபாரி : வயது 21 ஆகிறது. என் சம்பாத்தியத்தை நம்பி வாழ்கிறவர்கள் தொகை பதினொன்று. சத்தியத்திலும் அகிம்சையிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால், அவற்றை வர்த்தகத்தில் கண்டிப்பாக அனுசரித்து வர முடியவில்லை என்பதைக் காண்கிறேன். நான் என்ன செய்வது? வர்த்தகம் செய்வதைக் கைவிட்டு விடுவதானால் என் உறவினர்கள் கஷ்டப்பட நேரும்.

**பதில் :** விஷயத்திலுள்ள உண்மையை இது கவனிக்க வேண்டியதாகிறது. யோக்கியமான வகையில் வியாபாரம் செய்வது என்பது கஷ்டமானதுதான்; ஆனால், அசாத்தியமானது அல்ல. உண்மை என்னவென்றால், ஒரு வியாபாரி எவ்வளவுக்கெவ்வளவு யோக்கியமாக இருக்கிறாரோ அவ்வளவுக்கு அவர் வியாபாரம் வெற்றிகரமானதாக இருக்கும். இதனாலேயே 'யோக்கியமே சிறந்த கொள்கை' என்ற பழமொழியையும் வர்த்தகர்கள் உண்டாக்கிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், பெருஞ் செல்வத்தைத் திரட்டுவதும், யோக்கியமாக நடப்பதும் ஒன்றுக்கொன்று பொருந்தா

தவை என்பதுதான் உண்மையானது. 'ஒரு பணக்காரர் கடவுளின் ராஜ்யத்தை அடைவதைவிட, ஓர் ஊசியின் காது வழியாக ஓர் ஒட்டகம் புகுந்துவிடுவது மிக மிக எளிதானது." ஆகையால், ஒரு யோக்கியமான வர்த்தகர் எவ்வளவுதான் ஆற்றலுடையவராக இருந்தபோதிலும், பன்னிரண்டு பேராயினும், அதிகமானவர்களாயினும், குறைவானவர்களேயாயினும், சோம்பேறித்தனமாக இருப்போருக்குச் சோறு போட்டுக்கொண்டிருக்கக் கூடாது. இவருடைய சம்பாத்தியத்தைக் கொண்டு வாழ்ந்துவரும் பதினேரு பேரும், சிசுக்களாகவோ, தள்ளாதவர்களாகவோ இருக்க முடியாது. ஒரு வர்த்தகரின் வசதியைக் கொண்டு அசாத்தியமான காரியங்களைச் செய்ய வேண்டும் என்று யோக்கியப் பொறுப்பு விதிப்பதில்லை. யோக்கியமான ஒருவர், அயோக்கியமான உறவினர்களை வைத்துக்கொண்டிருக்க முடியாது. இக்கேள்வியைக் கேட்டிருப்பவர் தம் காரியத்தையே ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பாராயின், யோக்கியமான வியாபாரத்தில் தவறு எதுவுமில்லை. ஆனல், தம்மிடமே ஏதோ தவறு இருக்கிறது என்பதைக் காண்பார். தம்மிடமுள்ள தவறு என்ன என்பதை அவர் கண்டு கொள்ளட்டும்.

—'ஹரிஜன்' – 28—7—1946

['கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முன்னல் வெளியானது.]

# 10

# ஒழுக்கமும் வர்த்தகமும்

## (1)

வியாபாரத்தில் யோக்கியமில்லாத காரியங்களைச் செய்யவே வேண்டியிருக்கிறது என்றோ, அவை மன்னிக்க வேண்டியவை என்றோ நான் கருதவில்லை. நிபந்தனையில்லாத யோக்கியப் பொறுப்பு வாழ்க்கையின் மற்றத் துறைகளில் இன்றியமையாததாக இருப்பதைப் போன்றே இதிலும் அவசியமானதேயாகும். ஆகையால், என்னதான் நஷ்டம் வருவதாயிருந்தாலும், வர்த்தகர்கள், கொள்கையை விட்டுக் கொடுக்காமலிருக்க வேண்டியது அவர்கள் கடமை. யோக்கியமாக நடந்துகொள்ளுவதுதான் முடிவில் உண்மையாகவே லாபம் தரும். என்றாலும், யோக்கியமாக நடக்க வேண்டும் என்பதற்கு லாபமே நோக்கமாக இருக்க முடியாது. சாமான்களை வாங்குபவர்களில் குறிப்பிட்ட ஒரு தரத்தினருக்கு, சாமான்களை இன்ன விலைக்குத்தான் விற்பது என்று விலையை நிர்ணயிக்க ஒருவருக்கு உரிமை உண்டு. ஆனல்,

அப்படி விலையை நிர்ணயிப்பது குறிப்பிட்ட தெளிவான ஒரு கொள்கையை அனுசரித்ததாக இருக்க வேண்டும். சந்தர்ப்பத்தை அனுசரித்ததாகவும், சமயோசிதமானதாகவும் அது இருக்கக்கூடாது. சந்தேகிக்காத, எளியவர்களான வாங்குவோரை ஏய்த்துப் பணம் பறிக்கும் மோசடிக்கோ, ஏமாற்று வேலைக்கோ, அல்லது தந்திரத்திற்கோ அதில் இடமிருக்கக்கூடாது.

—'ஹரிஜன்' - 13—3—1937

(2)

ஜவுளி வியாபாரத்திலிருக்கும் ஒரு குமாஸ்தா, பாபுவுக்குக் கடிதம் எழுதியிருந்தார். பொய் சொல்லாமல் தங்களால் வியாபாரம் செய்துகொண்டு போக முடியவில்லை என்று எழுதியிருந்தார். அவர் செய்ய வேண்டியது என்ன? இதைத் தவிர தாம் செய்யக்கூடியதான வேறு தொழில் எதுவும் அவருக்குத் தோன்றவில்லை. அவருக்குப் பாபு கீழே வருமாறு எழுதினர் :

'இருக்கும் சந்தர்ப்பமும் நிலைமையும் எதுவானாலும், அதையெல்லாம் பொருட்படுத்தாமல் யார் ஒருவர் உண்மையையே பேசி, உண்மையை அனுசரித்து வருவாரோ அவரே உண்மையுள்ளவராவார். வர்த்தகத்திலோ அல்லது செய்யும் வேலையிலோ பொய் சொல்லத்தான் வேண்டும் என்று யாரும் கடமைப்பட்டிருக்கவில்லை. ஆனல், பொய் சொல்லியாக வேண்டும் என்று எங்காவது கட்டாயப்படுத்தப்படுவோமாயின், அத்தகைய வேலையை நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது. அந்த வேலை இல்லாததனல் பட்டினி கிடக்க நேர்ந்தாலும் அதையும் பொருட்படுத்தக்கூடாது.'

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'தினக்குறிப்பு'—1932 ஜூன் 19-ஆம் தேதி எழுதியது.]

# 11

# கட்டுப்பாட்டின் அவசியம்

கதர்ச் சேவையில் ஈடுபட்டிருக்கும் சில ஊழியர்கள் கீழ்வருமாறு எழுதுகிறுர்கள் :

"தலைமைக் காரியாலயம் 20-ம் தேதியிட்டு ஒரு சுற்றறிக்கையை அனுப்பியிருக்கிறது. அதன்படி, தலைமைக் காரியாலய வேலை செய்பவர்களாகிய நாங்கள், காரியாலயத்திற்குக் காலை 6-30 மணிக்கு வந்து 10 மணிக்குப் போய், பிறகு 2 மணிக்கு வந்து மாலை 6 மணிக்குப் போக வேண்டும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறோம். எங்களில் சிலர் ஆசிரமத்திற்கு இரண்டு மைல் தூரத்தில் வசிக்கிறோம். ஆகையால், இந்தக் கோடை வெயிலில் இவ்விதம்

போய் வருவது என்பது எங்களுக்குக் கஷ்டமாக இருக்கிறது. வேளாவேளைக் குச் சரியாகச் சாப்பிடவும் முடியாததால் எங்கள் தேகநிலை கெட்டுவிட்டது. எனவே, வேலை நேரத்தை மாற்றும்படி காரியதரிசியைக் கேட்டுக்கொண் டோம். ஆனால், அவர் கண்டிப்பாக மறுத்துவிட்டார். எப்படியோ காலத்தில் போய்விட நாங்கள் முயற்சி செய்தும், சில சமயங்களில் காலம் தாழ்ந்து போய்ச் சேருகிறோம். அன்று வேலைக்கு வராததாகக் குறித்து விடுகின்றனர். இவ்வாறு செய்துவிடவே, எங்கள் கஷ்டங்களை விளக்கிக் கூறித் திரும்பவும் காரியதரிசிக்கு எழுதினோம். எங்களுக்குச் சௌகரியமானதாக இருக்கும் வகையில் வேலை நேரத்தை மாற்றும்படியும், நேரங் கடந்து வந்ததற்காக வேலைக்கு வராததாகக் குறித்துக் கொண்டிருப்பதை ரத்துச் செய்யும்படியும் கேட்டுக்கொண்டோம். ஆனால், எங்கள் அறிவிப்புக்குப் பதிலே கிடைக்க வில்லை. எனவே, காரியாலயத்திற்குப் போகாமல் நின்றுவிட்டோம். காரிய தரிசி, ஆசிரமத்திற்கு ஒரு பர்லாங்கு தூரத்தில்தான் குடியிருக்கிறார். ஆபீஸ் சைக்கிளும் அவரிடம் இருக்கிறது. என்றாலும், குறித்த நேரத்தில் காரியால யத்திற்கு வர அவராலும் முடியவில்லை. ஆனால், நாங்கள் மாத்திரம் குறித்த நேரத்தில் வந்தாக வேண்டும் என்று அதிகாரம் செய்யப்படுகிறோம். 'கதர், தரித்திர நாராயணர்களுக்குத் தெய்வீகமான சேவை' என்று நீங்கள் கூறு கிறீர்கள். அவ்வளவு தெய்வீகத் தன்மை அதில் இருப்பதாக இருந்தால், ஒரே துறையில் வேலை செய்பவர்களான ஊழியர்களிடையே இந்த உயர்வும் தாழ்வும் இருப்பானேன்?"

உண்மையில் லட்சியத்தைப் பற்றிய குழப்பமே இதில் இருந்து வருகிறது. அநேகமாக எல்லா தேசீய ஸ்தாபனங்களி லுமே, உயர்வு தாழ்வு என்பதைப் பற்றிய தவறான அபிப்பிரா யங்கள், கட்டுத்திட்டத்திற்கு அடங்காமையை உண்டாக்கியிருக் கின்றன. அந்தஸ்தில் இருக்கும் வித்தியாசத்தை நீக்கிவிடுவது அராஜகத்திற்கும், இஷ்டம் போல் நடந்துகொள்ளுவதற்கும் அனுமதிச் சீட்டு என்று அநேகர் எண்ணிக்கொள்ளுகின்றனர். ஆனால், பாகுபாட்டை நீக்குவது என்பதற்குச் சரியான கட்டுத் திட்டம் என்பதே பொருளாக இருக்க வேண்டும். நாம் எந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்களோ அந்த ஸ்தாபனத்தின் கட்டுத் திட்டங்களுக்கு, அதாவது நம் வாழ்வின் சட்டங்களுக்கு நாமே வலியப் பணிந்து நடப்பதால்தான் சரியானபடி நடப்பதாகிறது. ஏனெனில், மனிதனே தன்னளவில் ஓர் அற்புதமான ஸ்தாபன மாகும். அவனுக்கு எது பொருந்துவதாகிறதோ அதுவே அவனை உறுப்பினனாகக்கொண்ட சமூக, ராஜீய ஸ்தாபனத்திற்கும் பொருந்தும். உடம்பில் பல உறுப்புக்கள் இருக்கின்றன. அவற்றில் எதுவும் இன்னொன்றைவிட எவ்விதத்திலும் தாழ்வான தாகாது. உடல் நல்ல ஆரோக்கியமான நிலையில் இருக்கும் போது இந்த உறுப்புக்கள் மனத்தின் ஆக்ஞைக்கு வலியக் கட்டுப்பட்டிருக்கின்றன. அதேபோன்று ஒரு ஸ்தாபனத்தின் உறுப்பினர்களில் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்று யாரும் இல்லை. ஸ்தாபனத்தின் தலையான மனத்திற்கு அவர்கள் வலியக் கட்டுப்பட்டு இருக்கிறார்கள். வழிகாட்டி நடத்திச் செல்லும் மனமே இல்லாத அல்லது மனத்துடன் ஒத்துழைக்கும்

உறுப்பினர்கள் இல்லாத ஒரு ஸ்தாபனம், முடக்குவாதத்தினல் பாதிக்கப்பட்டுவிடுகிறது; அது சாகும் நிலையிலும் இருக்கிறது.

நான் மேலே கொடுத்திருக்கும் கடிதத்தில் கையெழுத்திட்டிருப்பவர்கள், ஒரு விஷயத்தை அறிந்துகொள்ளவில்லை. குறிப்பிட்ட நேரத்தில் ஒழுங்காக வேலைக்கு வர வேண்டும் என்பதில் அடங்கியுள்ள சாதாரணக் கொள்கையை அவர்கள் ஏற்றுக் கொள்ளாது போனல், அவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட அந்தக் கதர்க் காரியாலயம், அதன் நோக்கத்தை, அதாவது தரித்திர நாராயணர்களுக்குச் சேவை செய்வதைச் சரியான வகையில் நிறைவேற்ற முடியாது. இதையே அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. அரசாங்கக் காரியாலயத்தின் கட்டாயமான கட்டுத்திட்டங்களைவிட, வலிய ஏற்றுக்கொள்ளுவதான கதர்க் காரியாலய கட்டுத் திட்டங்கள் அதிகக் கடுமையானதாக இருக்க வேண்டும் என்பதையும் அவர்கள் அறிந்துகொள்ளட்டும். சம்பந்தப்பட்ட கதர்க் காரியாலயத்தின் பிரதம அதிகாரி, எப்பொழுதுமே காலா காலத்தில் காரியாலயத்திற்கு வருவதில்லை யென்ருல், அவர் காரியாலயத்தில் இல்லாத போதும் கதர் வேலையிலேயே அவர் ஈடுபட்டிருக்கவும் கூடும். ஏனெனில், சிப்பந்திகளுக்கு நியாய மான வேலை நேரம் இருக்கும்போது, பிரதம அதிகாரிக்கு ஓய்வுக்கே நேரமில்லை. அவர், யோக்கியமானவராகவும், தாம் வகிக்கும் பெரிய பதவியின் பொறுப்பை உணருபவராகவும் இருந்தால், கதர் என்ன வகையில் இருக்க வேண்டுமோ அவ்விதம் அது இருக்கும்படி செய்வதற்காக அவர் இரவு பகல் வேலை செய்ய வேண்டியிருக்கும். நடந்துகொண்டிருக்கும் ஒரு ஸ்தாபனத்திற்குள் வந்து வேலை செய்வது என்பது ஒரு விஷயம். புதிதாக ஆரம்பித்து, அதன் வகையில் உலகத்தில் மிகப் பெரியதாக அது இருக்க வேண்டும் என்ற நோக்கமுள்ள ஒரு ஸ்தாபனத்தில் வேலை செய்வது என்பது முற்றிலும் வேருன விஷயம். அத்தகைய ஒரு ஸ்தாபனத்தின் ஓர் ஊழியரை மாத்திரமல்ல, ஆயிரக்கணக்கானவர்களை உஷாராகவும், புத்திசாலித்தனத்தோடும், யோக்கியமாகவும் கண்காணிக்க வேண்டியிருக்கிறது. இந்த ஊழியர்கள், இப்பொழுதுள்ள ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களாகவும் இருந்துகொண்டு, தங்களால் முடிந்த மட்டும் கஷ்டமான கட்டுத்திட்டங்களைத் தங்களுக்குத் தாங்களே விதித்துக் கொண்டு அவர்கள் நிலையை எய்த வேண்டியவர்களாகின்றனர்.

— 'எங் இந்தியா' – 3—5—1928

# 12
# வேலைக்காரனின் திருட்டு

**கேள்வி:** வேலைக்காரன் திருட்டுப் பழக்கமுள்ளவனாக இருக்கிறான். எவ்வளவுதான் சொல்லிப் பார்த்தாலும், அடித்தாலும் அவன் திருந்துவதாக இல்லை. அவனை வேலைக்கு வைத்திருப்பவர் அப்போது என்ன செய்வது?

**பதில்:** மற்றவர்களும்கூட அப்படிப் பழக்கப்பட்டுப் போனவர்களாகவே இருக்கக்கூடும். ஆனால், அவர்கள் விஷயம் கண்டுபிடிக்கப்படாமலிருக்கலாம். கவனித்துப் பார்த்தால், நாம் எல்லோருமே திருடர்கள்தான் என்பது தெரியும். இதிலிருக்கும் வித்தியாசமெல்லாம், நம் விஷயத்தில் அதிக சகிப்புத் தன்மையோடு இருக்கிறோம்; ஆனால், கண்டு பிடிக்கப்பட்டுவிடும் சாதாரணமானவர்களாக இல்லாதவர்களிடம் சகிப்பில்லாதவர்களாக இருக்கிறோம் என்பதுதான். மனிதன், தான் விற்கும் பொருளுக்கு முடிந்த வரையில் அதிக விலை வைத்து விற்கிறான். அப்படி செய்யும் மனிதன் திருடனல்லாமல் வேறு யார்? வாங்குகிறவர், ஏமாறத் தயாராக இருக்கிறாரே என்று பதில் சொல்லுவதானால், இதிலுள்ள உண்மையை ஒப்புக்கொள்ளுவதாகும். வாங்குகிறவர்கள் ஏமாறச் சம்மதிக்கிறார்கள் என்பதைவிட, அவர்களுக்கு வேறு வழியில்லாமல் வாங்குகிறார்கள் என்பதுதான் உண்மை. கேள்வியில் குறிப்பிடப்படும் திருட்டு, சமூகத்தில் ஆழ வேரூன்றிவிட்ட ஒரு நோயின் அறிகுறியே ஆகும். பணம் படைத்தோர் சிலருக்கும், ஒட்டாண்டிகளான அநேகருக்கும் நிரந்தரமாக இருந்து வரும் தகராறின் அறிகுறிதான் அது. ஆகையால், அவரை வேலைக்கு வைத்துக்கொண்டிருப்பவருக்கு நான் கூறும் யோசனை இதுதான்: திருடுபவருக்கு ஆசை மூட்டி மயக்குவதாயிருக்கும் எல்லாவற்றையும் விலக்கிவிடுக. அவனைச் சொந்த சகோதரனாகவே பாவித்து நடத்துக. என்னதான் பரோபகாரமான காரியங்களைச் செய்தும், அவற்றினாலெல்லாம் அவன் திருந்த மறுத்து விடுவானாயின், அவன் இஷ்டம் போல் போகும்படி அனுப்பி விடுக. ஒரு குறிப்பிட்ட நிலையில் தம் சொந்தச் சகோதரரை அப்படி நடத்துவாரா? இதை முதலாளி தம்மைத்தாமே எப்பொழுதும் கேட்டுக்கொள்ளட்டும்.

—'ஹரிஜன்' - 21—7—1946

['திருட்டு' என்ற தலைப்பில் 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் முன்னால் வெளியானது இது.]

# 13
# ரெயில்வேக்களில் திருட்டு

ரெயில்வேக்களில் நடக்கும் திருட்டுகளைக் குறித்தும் லஞ்ச ஊழல்களைக் குறித்தும் வரும் புகார்களுக்கு எல்லையே இல்லை. இவைகளெல்லாம் உண்மையானுல், புனிதமாக வேண்டும் என்ற ஆர்வம் நாடு முழுவதிலும் பரவியிருக்கும் இச்சமயத்தில், இது மிகப் பெரிய தேசீய அவமானமாகும். இத்தகைய கெட்ட காரியங்களுக்கும் அரசாங்கத்திற்கும் நிச்சயமாகக் கொஞ்சமும் சம்பந்தமே இல்லை. இதற்கு முழுப் பொறுப்பும் நம்முடையது தான். பஞ்ச காலத்தில் புல்லை ஏற்றிக்கொண்டு போவதற்கு வேண்டிய சாமான் வண்டிகள் கிடைப்பதற்குக்கூட லஞ்சம் கொடுக்க வேண்டியிருக்கிறது என்று கேள்விப்படுகிறேன். நாம் எதை வேண்டுமானுலும் ரெயில்வே பார்சல் மூலம் அனுப்பலாம். ஆனல், அப்பார்சலைப் பிரித்து எடுத்துவிட முடிந்தால், அதிலிருந்து எடுத்துவிடப்படும். சமீபத்தில்தான் ஒரு பம்பாய் வர்த்தகருக்கு ரெயில்வே பார்சல் மூலம் கதர் வந்தது. அதைப் பிரித்துப் பார்த்தபோது அதிலிருந்த கதரில் ஒரு பகுதி திருடப் பட்டிருந்தது. நான் எழுதும் இதை ரெயில்வே சிப்பந்திகள் படிக்க நேர்ந்தால், என்னுடைய இந்தக் கோரிக்கையைத் தயவு செய்து அவர்கள் கவனிக்கட்டும்; பொதுஜனங்களிடம் அவர்கள் கொஞ்சம் மதிப்பு வைக்கட்டும். தங்கள் வருவாய்க்கு வேறு ஏதாவது யோக்கியமான வழியைத் தேடிக்கொள்ளட்டும் என்பதே அவர்களுக்கு என் கோரிக்கை. ரெயில்வே சிப்பந்தி களின் சங்கங்களுக்கும் ஒரு யோசனை கூறுகிறேன். சிப்பந்தி களின் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று அச்சங்கங்கள் வற்புறுத்துவதைப் போலவே, அவர்கள் தங்கள் கடமைகளையும் நிறைவேற்ற வேண்டும் என்பதையும் வற் புறுத்தட்டும். இதே புகார்கள்தான் சுயராஜ்யம் வந்த பிறகும் இருந்துவரும் என்ருல், நிர்வாகச் செலவும் இப்பொழுது இருப் பதைப் போன்று அதிகமாகவே இருக்கும். பெரும்பாலான மக்கள் விசுவாசமுள்ளவர்களாகவும், தேசாபிமானமுள்ளவர்களா கவும் இருந்தால்தான் சுயராஜ்யத்தை நிர்வகிக்க முடியும். அம் மக்களுக்குத் தங்கள் சொந்த லாபமுள்பட மற்றெல்லாவற்றை யும்விட நாட்டின் நன்மை ஒன்றே பிரதானமானதாக இருக்க வேண்டும். அநேகர் ஆட்சி செய்வது என்பதுதான் சுயராஜ்யம் என்பதன் பொருள். அந்த அநேக மக்கள் ஒழுக்கமில்லாதவர் களாகவும், சுயநலங்கொண்டவர்களாகவும் இருந்தால், அவர் களுடைய அரசாங்கம் அராஜகமானதாகவே இருக்குமேயன்றி வேறு எதுவாகவும் இராது. இப்போதைக்கு நான் ஒன்றுதான் நம்புகிறேன். அவர்கள் அடிப்படையில் நல்லவர்களாகவும், உண்மையுள்ளவர்களாகவுமே இருக்கிருர்கள். ஆனல், கோழை களாகவும் சிரத்தையில்லாதவர்களாகவும் இருப்பதால், தங்க

ளுடைய இயல்பான தன்மைகளை அறியாதவர்களாக இருக்கின்றனர். நல்லவர்களாக இருப்பதன் சக்தியை அறிந்து கொண்டு விடுவார்களானல், அதை நடைமுறையில் கொண்டுவர ஆரம்பித்து அம்முயற்சியில் வெற்றியும் பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

— 'எங் இந்தியா' - 28—7—1921

# 14

## சுங்கச் சாவடி, ரெயில்வேக்களில் லஞ்சம்

ரெயில்வே அதிகாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் மாமூல் என்ற பெயரில் லஞ்சம் கொடுத்து வருவது இந்திய வாழ்க்கையில் சாதாரணமான விஷயம். பொதுஜனங்களுடன் ஏதோ ஒரு வகையில் சம்பந்தமுள்ள எந்த அதிகாரியும், தனது கடமையைச் செய்வதற்குக்கூட, லஞ்சம் வாங்கிக்கொள்ளத் தயாராயிருக்கிருர். கடமையை மீறிச் செய்யும் காரியங்களுக்கு வாங்குவதைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. மூன்ரும் வகுப்பு டிக்கெட் வாங்குமிடத்தில் சில அணுக்களை லஞ்சமாகக் கொடுக்க மறுத்ததனல் என் காலத்தில் நான் கஷ்டப்பட வேண்டியிருந்திருக்கிறது. லஞ்சம் கொடுப்பவர்களுக்குத்தான் முதலில் டிக்கெட்டு கொடுக்கப்படுமாகையால் எனக்கு டிக்கெட்டு கிடைக்கும் என்பதற்கு இடமே இல்லை. சாதாரணமாக, அடிக்கடி பொது மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டியிருக்கும் இரு இலாகாக்கள், சுங்கச் சாவடிகளும் ரெயில்வேக்களும், இந்த இரண்டிலும் அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்க நீங்கள் தயாராக இருந்தாலன்றி, சோர்வடைந்துவிடும் அளவுக்கு நீண்ட நேரம் நீங்கள் காத்துக்கிடக்கவே நேருகிறது. இந்தத் தீமைக்குப் பரிகாரம் தேடுவது எப்படி என்பதை அவர் அறிய விரும்புகிருர். ஒழுக்கக்கேடாக இவ்விதம் பணம் பறிக்கப்படுவதை எதிர்த்தாக வேண்டும் என்ற ஆர்வம், உணர்ச்சி மிக்க ஊழியர்களிடையே இருந்து வருகிறது. இவ்விஷயத்தில் யோசனை கூறுவது என்பது அதிகக் கஷ்டமானதாகும். லஞ்சம் கொடுக்கவே கூடாது என்பது உண்மை. பொதுஜன வேலைக்குக் குந்தகம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதும் அதே போல உண்மை. தனக்கு இருக்கும் கொஞ்ச அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் சில்லுண்டி அதிகாரியைச் சீக்கிரத்தில் திருத்தி விடுவதற்கான பரிகாரம் எதுவும் இல்லை. இந்த அதிகாரிகள் இவ்வேலையில் நன்ருக ஊறிப்போனவர்கள். புகார் செய்வதாக அவர்களை மிரட்டிப் பயனில்லை. அவர்களுக்கிருக்கும் பலம் அவர்களுக்குத் தெரியும். அவர்களுடைய பண லாபத்தைப் பற்றிய விஷயமே இதுவாகையால், அந்த அதிகாரத்தை அவர்கள்

கொஞ்சமும் இரக்கமின்றி உபயோகித்துத்தான் தீருவார்கள். வழக்கமான வருவாயாக வந்துகொண்டிருக்கும் இந்த லாபம், தங்கள் ஊதியத்தின் ஒரு பகுதியே என்றும் அவர்கள் எண்ணத் தலைப்பட்டுவிட்டார்கள். லஞ்சம் கேட்டு வாங்க அவர்களுக்குள்ள உரிமையை ஆட்சேபிக்கிறவர்கள், பாடங் கற்பிக்கப்பட வேண்டியவர்களாகிவிடுகின்றனர். பாடங் கற்பிக்கப்படுகிறார்களோ, இல்லையோ, ஏராளமான ஊழியர்களிடையே ஏற்பட்டிருக்கும் புதிய உணர்ச்சியை அறியாத இந்த அதிகாரிகளைத் தண்டனைக்குட்படுத்த யாராவது தைரியம் கொள்ளவே வேண்டும். சாமான்களை எடுப்பது, அனுப்புவது ஆகிய வேலைகள் இப்போதைக்குக் கஷ்டமாகவே இருக்கும். என்றாலும், லஞ்சம் வாங்காமலிருக்க வேண்டும் என்ற சாதாரண ஒழுக்கத்தை அதிகாரிகள் அறிந்துகொள்ளும்படி செய்வதற்காக இதிலுள்ள கஷ்டத்தை மேற்கொள்ளுவது அவசியமேயாகும். அவர்களுக்குச் சம்பளம் போதாது என்றால், அதிகச் சம்பளம் வேண்டும் என்று அவர்கள் கேட்கட்டும். ஆனால், எந்தப் பொது மக்களுக்குச் சேவை செய்வதற்காக என்று அவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படுகிறதோ அப்பொது மக்களிடமிருந்தே அவர்கள் லஞ்சம் வாங்கக்கூடாது. இத்தீமை எங்கும் தீவிரமாக வளர்ந்து கொண்டு வருகிறது என்பதை மேலதிகாரிகள் அறிவார்கள். இதை உணர்ந்து, இதை ஒழிக்கச் சரியான நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்.

—'ஹரிஜன்' – 23—5—1936

[முன்னால் 'லஞ்சம்' என்ற தலைப்பின் கீழ் வெளியானது.]

# 15

# அகமதாபாத் மில் தொழிலாளர்களுடன் ஒரு நாள்

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

அகமதாபாத்தில் காந்திஜி குறுகிய காலமே தங்கினாரெனினும் அவருக்கு வேலைகள் அதிகம் இருந்தன. அதில் அதிக ருசிகரமான வேலை, பள்ளிக்கூடங்களில் படித்துவந்த அகமதாபாத் மில் தொழிலாளரின் குழந்தைகளைச் சந்தித்ததாகும். இப்பள்ளிக்கூடங்கள், அகமதாபாத் தொழிலாளர் சங்கம் ஸ்தாபித்து, தொழிலாளர்களைக் கொண்டே நிர்வகிக்கப்பட்டு வந்தவை. அப்பள்ளிக்கூடங்களைக் குறித்தும், அங்கே படிக்கும் மாணவர்களைப் பற்றியும் அற்புதமான புள்ளிவிவரங்களைச்

சுருக்கிக் காந்திஜி மற்றேரிடத்தில் கொடுத்திருக்கிருர்.* அதிகத் திறமையாக நிர்வகிக்கப்பட்டு வருவதற்காக அந்த ஸ்தாபனங்களைக் காந்திஜி பாராட்டினர். சிறுவர்கள் சுத்தமாக இருக்கும் பழக்கத்தைப் பெறும்படி செய்வதில் அதிகக் கவனஞ் செலுத்தும்படியும் கேட்டுக்கொண்டார். அங்கே படிக்கும் தீண்டாத வகுப்பு மாணவர்களின் தொகையும், ஒழுங்கான முறையில் நூற்கப்பட்டு வருவதும் அவர் மனத்தை அதிகமாகக் கவர்ந்தன.

---

* 'ஒப்பற்ற சாதனே' என்ற தலைப்பின் கீழ் 'குறிப்புகள்' என்ற பகுதியில் கீழ்க்கண்ட விஷயம் 'எங் இந்தியா'வில் 10—9—1925-இல் பிரசுரமாயிற்று :

"ஸ்ரீமதி அனுசூயா பாயின் சிறந்த கவனத்தின் கீழ் நிர்வகிக்கப்பட்டு வரும் தொழிற்சங்கம், சந்தடியில்லாமலும், ஆனல், அதிகத் திறமையோடும் செய்துவரும் அற்புதமான வேலையைப் பற்றிய சுருக்கமான அறிக்கை என் முன்பு இருக்கிறது. தொழிலாளரிடையே செய்யப்பட்டு வரும் கல்வி சம்பந்தமான வேலையைப் பற்றியது அது.

"1924–இல் அங்கே 8 பகல் பள்ளிக்கூடங்கள் இருந்தன. இன்று 9 இருக்கின்றன. இவற்றில் இரண்டு, எல்லாக் குழந்தைகளும் படிப்பதற்கென்று இருப்பவை. ஆறு, தீண்டாதாரின் குழந்தைகளுக்கு; ஒன்று, முஸ்லிம் குழந்தைகளுக்கு. 1924-இல் இரவு பள்ளிக்கூடங்கள் 11 இருந்தன. இன்று அவை 15 இருக்கின்றன. இவற்றில் எல்லோருக்குமாக ஒன்று, தீண்டாதாருக்காக 8, முஸ்லிம்களுக்கு 5, வக்ரிகளுக்கு ஒன்று. 1924-இல் 1119 பேர் படித்து வந்தனர். 979·4 பேர் ஒழுங்காகப் பள்ளிக்கூடம் வந்துகொண்டிருந்தார்கள். இவர்களில் தீண்டாதார் 692 பேர், தீண்டக் கூடியவர்கள் 221 பேர், முஸ்லிம்கள் 206 பேர். இவ்வருட ஆரம்பத்தில் படித்து வந்தவர்கள் தொகை 1166. இவர்களில் தீண்டாதார் 798 பேர், தீண்டக் கூடியவர்கள் 219 பேர், முஸ்லிம்கள் 169 பேர், வக்ரிகள் 60 பேர். 907.92 பேர் ஒழுங்காகப் பள்ளிக்கூடத்திற்கு வந்துகொண்டிருந்தார்கள். இப்பொழுது 1,285 பேர் படிக்கிருர்கள்.

"சாதாரண ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படும் பாடங்கள் யாவும், சிறுவர், சிறுமியருக்குச் சொல்லிக் கொடுக்கிருர்கள். அதோடு, கையினல் நூற்பதும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. நிர்வாகிகள் முதலில் ராட்டையில் நூற்கும்படி செய்து பார்த்தார்கள். இவ்வளவு அதிகமான சிறுவர், சிறுமியருக்கு ராட்டைகள் வாங்கிக் கொடுப்பதற்கு அதிகப் பணம் செலவாகிறது என்பதைக் கண்டார்கள். இதற்கு இடமும் அதிகமாக வேண்டியிருப்பதால் அந்த அசௌகரியம் வேறு இருந்தது. ஆகையால், தக்ளியை எடுத்துக்கொண்டார்கள். படிக்கும் ஒவ்வொருவரும் தக்ளி வைத்துக்கொள்ள முடியும். பல நூற்றுக்கணக்கான சிறுவர், சிறுமியர் ஒரே காலத்தில் நூற்பதைப் பார்ப்பது அற்புதமான காட்சியாக இருக்கிறது. இவர்கள் ஒவ்வொருவரும் மணிக்குச் சராசரி 30 முதல் 40 கெஜ வேகத்தில் நூற்கிருர்கள். இதுவரையில் 2 மணங்கு, 8 சேர் நல்ல நூல் நூற்றிருக்கிருர்கள்.

"தீண்டாத வகுப்புச் சிறுவர்கள் 16 பேரைக் கொண்டதான, அங்கேயே இருந்து படிக்கும் பள்ளிக்கூடம் ஒன்றும் இருக்கிறது. இவர்களில் 6 பேர் சாப்பாட்டுச் செலவுக்காக ஒவ்வொருவரும் ரூ. 5 கொடுக்கிருர்கள். மற்றவர்களுக்கு இனமாகச் சாப்பாடு போடுகின்றனர். பஞ்சைப் பட்டை போடவும், நூற்கவும், நெய்யவும் இவர்கள் கற்றுக்கொள்ளுகின்றனர். 1924–இல் இவர்கள் $1\frac{1}{4}$ மணங்கு நூல் நூற்றதோடு 125 கெஜம் கதர் நெய்தார்கள். 1924–இல் 66 உபாத்தியாயர்கள் இருந்தனர்; இப்பொழுது 77 பேர் இருக்கிருர்கள். மொத்தச் செலவு ரூ. 22,254-8-4. இதில் மாதம் ரூ. 1,250 மில் சொந்தக்காரர்கள் சங்கம் உதவி செய்கிறது. அதன் அங்கத்தினர்கள் திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கொடுத்த பணத்திற்கு வரும் வட்டி.

ராட்டையில்லாமலேயே நூற்கும் பரீட்சை அப்பள்ளிக்கூடங் களில் வெற்றிகரமாக நடந்துவருவதைக் குறித்துக் காந்திஜி கூறி யதாவது: "பள்ளிக்கூடங்களில் ராட்டையைக் கொண்டு நூற் கும்படி செய்ய முயற்சிப்பது சரியானது அல்ல என்பதை இப்பொழுது காண்கிறேன். தக்ளியில் இருக்கும் சௌகரியம் ராட்டையில் இல்லை. நாட்டிலிருக்கும் ராட்டைகள் எல்லாமே அழிக்கப்பட்டு விடுவதாயினும், அந்நியத் துணி பகிஷ்காரத்தை வெற்றிகரமானதாக்கிவிடும் சக்தி தக்ளிக்கு இருக்கிறது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன் ராட்டை முக்கியமாகக் குடிசை களுக்குத்தான் ஏற்றது. தக்ளி வைக்க அதிகப்படியாக இடம் தேவையில்லை. கயிறோ, எண்ணெய் போடவேண்டியதோ இல்லை. முக்கியமாகப் பள்ளி அறைகளுக்கு ஏற்றது இது." கூட்டத்தில் காந்திஜி பேசிக்கொண்டிருந்தார். அவர் பேசு வதைக் கேட்டுக்கொண்டே சிறுவர்கள் தக்ளியில் நூற்றுக் கொண்டு, ஒரே மாதிரியான, பலமான நூலை இழுத்துக்கொண் டிருந்தது பார்ப்பதற்கு ஆனந்தமாக இருந்தது. இரண்டு மாதங் கள் செய்த சோதனையின் பலனாக முந்நூறுக்கும் மேற்பட்ட சிறு வர்கள் தக்ளியில் நூற்கக் கற்றுக்கொண்டுவிட்டனர். மற்றச் சிறுவர்களிடமும் இது வேகமாகப் பரவிக்கொண்டு வருவதாகவே தெரிகிறது.

உபாத்தியாயர்கள் செய்ய வேண்டியதைக் குறித்துக் காந்திஜி பேசினர். மில் சொந்தக்காரர்களுக்கும் இரண்டொரு

---

தொழிலாளரின் நலனுக்குச் செலவிட என்று ஒதுக்கப்பட்ட பணம் ஆகியவைகளி லிருந்து இது கொடுக்கப்படுகிறது. மாதத்திற்கு ரூ. 60 ஸ்ரீ பிரிஜ் வல்லபதாஸ் ஜெகிஸன்தாஸ் கொடுத்துதவி வருகிறார். மீதப் பணத்தைத் தொழிலாளர் சங்கம் கொடுக்கிறது. மாணவர் குடியிருந்து படிக்கும் பள்ளிக்கூடத்திற்காகும் செலவை மாகாண காங்கிரஸ் கமிட்டி கொடுக்கிறது.

"இந்தப் பள்ளிக்கூடங்களில் *தீண்டாதார்* சிறுவர்கள் அதிகமாகக் கல்வி பெற்று வருவது மிகவும் முக்கியமானதாகும். சிறுவர்களை அனுப்பும்படி பெற்றோரைத் தூண்ட வேண்டிய அவசியம் இருக்கவில்லை என்று அறிகிறேன். தங்கள் குழந்தை களைச் சந்தோஷமாகவே அவர்கள் அனுப்புகிறார்கள். ஏதாவது அவசியமாகிற தென்றால், மற்ற வகுப்புப் பெற்றோரிடம் சென்று குழந்தைகளை அனுப்பும்படிக் கேட்க வேண்டியிருக்கிறது என்பதுதான்.

"இந்தப் பள்ளிக்கூடங்களெல்லாம், அரசாங்க உதவியும் நிர்வாகமும் இல்லா மல் நடக்கின்றன என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. மாணவர்கள் சுத்தமாக இருக்கும்படி செய்வதில் அதிகக் கவனஞ் செலுத்தப்படுகிறது. இந்தியா முழுவதிலும் இருக்கும் எந்த ஆரம்பப் பள்ளிக்கூடங்களுடனும் இப்பள்ளிக்கூடங்களை ஒப்பிட்டுச் சொல்ல முடியும். மாணவர்கள் சுத்தமாக இருப்பதன் அவசியத்தை எல்லா உபாத்தி யாயர்களும் கவனிக்க வேண்டும். இதற்கு விசேஷ முயற்சி எதுவும் தேவையில்லை. வகுப்புகள் ஆரம்பமாவதற்கு முன்னால் எல்லாப் பள்ளிக்கூட மாணவர்களையும் வரி சையாக நிறுத்தி, அவர்களுடைய பற்கள், நகங்கள், காதுகள், கண்கள் எல்லாம் சுத்தமாக இருக்கின்றனவா என்று பார்த்தாலே போதும். மற்றவைகளுக்கு எடுத் துக் காட்டாக இருப்பதாகக் கூறப்படும் பள்ளிக்கூடங்களில்கூட இந்தச் சாதாரண விஷயங்கள் கவனிக்கப்படாமல் இருப்பதைப் பார்க்கிறேன்."

விஷயங்கள் கூறினர். பிறகு சிறுவர்களுக்குச் சொன்னர். அப்பொழுது காந்திஜியும் சிறுவர்களும் ஆனந்தமாக இருந்தனர். 'உங்கள் பற்களை நீங்கள் முற்றிலும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்; அப்போதைக்கப்போது நகங்களைக் கத்தரிக்க வேண்டும் என்பதை, சிறுவர்களே கவனியுங்கள். உங்களோடு இருக்கும் முஸ்லிம் சிறுவர்களுக்கு நான் ஒரு கதை சொல்ல வேண்டும். தங்கள் பற்கள் அழகாக இருக்கவேண்டும் என்பதில் ஸோமாலி அரபுக்கள் அதிகச் சிரத்தை எடுத்துக் கொள்ளுகிருர்கள். கப்பலில் இருக்கும்போது அவர்கள் பெரிய பல் குச்சிகளை வைத்திருப்பார்கள். மணிக் கணக்கில் பற்களைத் துலக்கிக் கொண்டுமிருப்பார்கள். இதன் பலனுக அவர்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பதோடு அவர்கள் உடம்பும் அழகாக இருக்கும். ஆனல், புறச் சுத்தம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு அகச்சுத்தமும் முக்கியம்' என்ருர். அகச் சுத்தம் என்ருல் என்ன என்று காந்திஜி ஒரு சிறுவனைக் கேட்டார். 'உள்ளத் தூய்மை' என்று உடனே பதில் சொன்னுன், அவன். 'உள்ளம் எங்கே இருக்கிறது?' என்று கேட்டார். அச்சிறுவன் மார்பின் மீது கையை வைத்து, 'இங்கே இருக்கிறது' என்று காட்டினுன். 'அந்தக் கெடிகாரம் இரவு பகல் வேலை செய்துகொண்டிருக்கும் படிச் செய்யும் கெடிகார ரிபேர் செய்பவர் யார்?' என்று கேட்டார். 'கடவுள் தான்' என்ருர்கள் சிறுவர்கள். 'ஆகையால், அடிக்கடி அந்தக் கெடிகாரம் பழுதாகிப் பழுது பார்க்கும் தொந்தரவை அவருக்குக் கொடுக்காமலிருப்பதை முன்னிட்டுக் கெடிகாரத்தை நீங்கள் சரியாக வைத்துக்கொள்ள வேண்டும். உடல், உள்ளம் ஆகிய இரண்டையும் நீங்கள் கொஞ்சமும் அழுக்கில்லாமல் அதிகச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். உங்களில் பெரும்பாலானவர்கள் 'தீண்டாதவர்கள்' என்பதைக் காண்கிறேன். தேத் சிறுவர்களாகிய நீங்கள் எல்லோரும் என் சுவீகாரப் பிள்ளைகளே என்பது உங்களுக்குத் தெரியுமா? அந்தக் கௌரவத்திற்கு உரியவர்களாக நீங்கள் இருக்க வேண்டுமானுல், மற்றச் சிறுவர்களைவிட நீங்கள் அதிகச் சுத்தமாக இருக்க வேண்டும்' என்ருர் காந்திஜி.

மாலையில் குழந்தைகளின் பெற்ருேர்கள் காந்திஜியைச் சந்தித்தார்கள். மரத்தின் நிழலிலேயே சந்தித்தனர். அந்த இடம் 1918-ஆம் ஆண்டில் வெற்றிகரமாக நடந்த வேலைநிறுத்த சமயத்திலிருந்தே சரித்திர பிரசித்தமானதாகி விட்டது. 1918-இல் இருபத்து மூன்று நாட்கள் தொழிலாளர்கள் அந்த மரத்தடியில் தான் கூடி ஸ்ரீமதி அனுசூயா பாயும் காந்திஜியும் பேசுவதைக் கேட்டுவந்தார்கள். ஒவ்வொரு வருடக் கூட்டத்திற்கும் அம்மரத்தடியில்தான் கூடுகிருர்கள். ஸ்ரீ அம்பாலால் சாராபாய் பெரிய மில் சொந்தக்காரர். ஸ்ரீ கோதன்பாய் பட்டேல், மில் சொந்தக்காரர்கள் சங்கத்தின் காரியதரிசி. இவர்களும் அவ்வைபவத்திற்கு வந்திருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். தொழிலாளர் சங்கத்தின் வருடாந்தர அறிக்கை மிக விரிவானது.

காரியதரிசி அந்த அறிக்கை முழுவதையும் படிக்கவில்லை. அதில் கண்ட முக்கியமான விஷயங்களை எல்லாம் சுருக்கிச் சொல்லி விட்டார். பள்ளிக்கூடங்களைப் பற்றிய விஷயங்களையும் புள்ளி விவரங்களையும் போலவே மற்றும் பல முக்கியமான விஷயங் களும் அறிக்கையில் இருந்தன. அறிக்கையில் கண்ட ஆண்டில் தொழிலாளர் சங்கத்தில் 14,000 அங்கத்தினர்கள் இருந்தார்கள். சந்தா வசூல் வருமானம் ரூ. 25,000. ஒவ்வோர் இலாகாவும் அதன் பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. அப்பிரதிநிதிகள், அவ் வாண்டு 74 முறைகள் கூடினர். யூனியன் தொழிலாளர்கள் மத் தியான ஓய்வின்போது மில் பகுதிக்குள்ளேயே 130-க்குக் குறையாத கூட்டங்களை நடத்தியிருக்கின்றனர். அவ்வாண்டில் வந்த 743 புகார்களை யூனியன் கவனித்திருக்கிறது. யூனியன் அங்கீகாரம் பெற்ற வேலைநிறுத்தம் எதுவும் நடக்கவில்லை. ''மில் அதிகாரிகள், யூனியன் சம்பந்தமாக அனுதாபத்துடனும், மரி யாதையுடனும் நடந்துகொண்டார்கள். நியாயத்தைச் செய்ய வேண்டும் என்பதில் எப்பொழுதும் சிரத்தை கொண்டிருந்தனர். புகார்களைச் சொல்லிக்கொள்ளுவதற்காகச் சில மில்களுக்கு நாங்கள் போக வேண்டியே நேரவில்லை என்றும் கூறுவோம்'' என்று காரியதரிசி திருப்தியுடன் குறிப்பிடுகிறார். சிக்கனமாக இருக்கும் அங்கத்தினர்களின் நன்மைக்கென்று யூனியன் சேமிப்பு பாங்க் ஒன்றையும் வைத்திருக்கிறது. அதிலிருந்து குறைந்த வட்டிக்கு ரூ. 10,668 கடனும் கொடுத்திருக்கிறார்கள். இந்தக் கடனில் பாதி, அப்பொழுது ஏற்படும் செலவுக்குப் போதாததற் காகக் கொடுக்கப்பட்டது. 20 சத விகிதம்கூட வட்டி கொடுக்க வேண்டியிருந்த கடனைக் கொடுத்துத் தீர்த்துவிடுவதற்காக அத் தொகையில் 41 சதவிகிதம் கடன் கொடுக்கப்பட்டிருக்கிறது. எல்லா வசதிகளுடன் கூடிய ஓர் ஆஸ்பத்திரியை யூனியன் நடத்து கிறது. அதிகத் தகுதிவாய்ந்த ஒரு டாக்டரின் தலைமையில் அது நடக்கிறது. அதில் தனி பிரசவ, பெண்கள் வார்டுகளும் இருக் கின்றன. யூனியன் மலிவாக ரூ. 2,662க்குக் கதரும், மலிவாக ரூ. 17,000க்குத் தானியங்களும் விற்றிருக்கிறது. தனி சமூக நலன் இலாகாவும் இருக்கிறது. தொழிலாளர்களின் நிலைமையை அது ஆராய்கிறது. 2,000 குடும்பங்களைப் பற்றிய விவரங்களை அது சேகரித்திருக்கிறது. இந்த ஆராய்ச்சி, மில் தொழிலாளர்களின் பொது அறிவையும், சமூகாபிவிருத்தியையும் வளர்ப்பதற்கு அதிக உதவியாக இருக்கும். மில் தொழிலாளர் க்ஷேமமடைவ தனால் அவர்களுடைய திறமையும் நிச்சயமாக விருத்தியடையும். ஆகையால், இதற்கு மில் சொந்தக்காரர்கள் பணவுதவி செய்ய வேண்டும் என்று யூனியன் நியாயமாகவே கோரியிருக்கிறது. ஆனால், மில் சொந்தக்காரர்கள் செய்யத் தவறியதை, தாங்கள் எதுவும் செய்யாமல் இருந்துவிட்டதற்கு ஒரு சாக்குப்போக்காகப் பயன்படுத்திக்கொள்ள யூனியன் விரும்பவில்லை என்பது கவனிக் கத்தக்கதாகும். 'வேலை ஆரம்பமாகும் நேரத்தில் வேலையைத் தொடங்குவதற்குத் தயாராக நாங்கள் மில்களுக்கு வரவேண்டும்

என்பதை நாங்கள் அறிகிறோம். செய்யும் வேலையை விட்டு அடிக்கடி நாங்கள் வெளியே போகக்கூடாது. மலஜலம் கழிப்பதற்கு அவசியமாகும் நேரத்தைவிட ஒரு நிமிடம்கூட அதிகமாக நாங்கள் எடுத்துக்கொள்ளக் கூடாது. குறையில்லாத வேலை, யந்திரங்களை ஜாக்கிரதையாகக் கையாளுவது, சாமான்களைக் கூடுமானவரையில் சேதப்படுத்தாமலிருப்பது ஆகியவைகளில் நாம் மில்களுக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும்'' என்று அறிக்கை கூறுகிறது. தொழிலாளரின் இந்த உறுதி யூனியனின் நிலைமையை முக்கியமாகப் பலப்படுத்துவதோடு, அவர்கள் விசேஷ முறையில் மில் சொந்தக்காரர்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் பெற உரிமையுள்ளவர்களாகவும் செய்கிறது. அக்கூட்டத்தில் பேசிய தொழிலாளர்களின் பிரதிநிதி ஒருவர், வர்த்தக மந்தம் அதிகக் கடுமையானதாக இருப்பதால், தங்களுடைய சம்பள விஷயத்தில் குறைகளை வற்புறுத்த முடியாமலிருக்கிறது என்பதைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டார். மத்தியஸ்தர்கள் இதற்கு முன்னால் அளித்திருக்கும் தீர்ப்புகளை மில்கள் நிறைவேற்றிவிடுமானால், அதைக்கொண்டே தாங்கள் திருப்தியடைவதாகவும் அவர் சொன்னார். இதுவும் மில் தொழிலாளரின் பெருமையையே காட்டுகிறது.

காந்திஜி பேசியபோது, முக்கியமாகத் தொழிலாளரின் கடமையையே வற்புறுத்திச் சொன்னார். அவர் கூறியதாவது : 'போதுமான தண்ணீர் வசதி இல்லை, சாப்பிடுவதற்குத் தனி இட வசதி இல்லை, கக்கூசுகள் சரிவரச் சுத்தம் செய்யப்படுவதில்லை, வேலை வாங்குகிறவர்கள் அடிக்கிறார்கள், அவமரியாதையாக நடத்துகிறார்கள், நூற்கும் யந்திரக் கோளாறினால் நூல் அடிக்கடி அறுந்து போவதால், அதிக வேலை செய்ய முடியாததோடு கூலியும் குறைந்துவிடுகிறது என்பது போன்ற குறைகள் உங்களுக்கு இருக்கின்றன என்பதை அறிவேன். ஆனால், இவற்றில் சில விஷயங்கள் உங்களையே, உங்கள் சுயமதிப்பை நீங்கள் சரியானபடி வளர்த்துக்கொள்ளுவதையே பொறுத்திருக்கின்றன என்பது நிச்சயம். யூனியன், உங்களில் சிலருடைய கடன்களைத் தீர்த்திருக்கிறது. மிக அதிக வட்டிக்கு வாங்கியிருந்த கடனைத் தீர்க்க குறைந்த வட்டிக்குப்பணம் கொடுத்திருக்கிறது என்பதை அறிந்து சந்தோஷமடைகிறேன். நீங்கள் இவ்வளவு கடன் வாங்கியிருப்பது உங்கள் வாழ்க்கை முறையின் வருந்தத்தக்க போக்கையே காட்டுகிறது. உங்கள் சம்பளம் போதுமானதாக இல்லாமலிருக்கலாம். என்றாலும், சிக்கனமாகச் செலவு செய்து, குடி போன்ற கெட்ட பழக்கங்களெல்லாம் இல்லாமலிருந்தால், நீங்கள் கடன் பட நேர்ந்திருக்காது என்பது நிச்சயம். இச்சமயம் மில்காரர்களுக்கு இருக்கும் சங்கடமான நிலைமையை மில் தொழிலாளர்கள் அறிந்திருப்பதற்காக நான் அதிகச் சந்தோஷமடைகிறேன். இதை நீங்கள் உணர்ந்திருப்பதற்காக மகிழ்ச்சி. அவர்கள் பெருங்கஷ்டத்தில் இருந்துவரும்போது அதிகமாகச் சம்பளம் கொடுக்க வேண்டுமென்று நீங்கள் கேட்க முடியாது.

மில்கள் மூடப்பட்டுவிடாமலிருக்கும்படி செய்வதற்காக விஸ்வாசமுள்ள தொழிலாளர்கள், சம்பளமில்லாமலேயே வேலை செய்யவும் முன்வரக்கூடிய நாளும் வரக்கூடும். ஆனால், அந்த நாள் வரவேண்டும் என்பதற்கு நீங்கள் தயாராக இல்லை என்பதை அறிவேன். உங்களுக்கும் மில்காரர்களுக்குமிடையே அந்த அளவுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிடவில்லை. எத்தனையோ அநீதிகளுக்கிடையே நீங்கள் கஷ்டப்பட்டு வருகிறீர்கள். மில் சொந்தக்காரர்கள் அனுதாபத்துடனும், அன்போடு உங்களை நடத்துவதனாலும் உங்கள் அன்பைப் பெற்றாலன்றி, இன்று அப்படிப்பட்ட காரியம் எதையும் நீங்கள் செய்யப்போவது இல்லை. ஆனால், அந்த நிலையை அடையும் வகையில் நீங்கள் வேலை செய்து வரவேண்டும் என்று விரும்புகிறேன்.'

தொழிலாளர் யூனியனுக்கும் மில்காரர்கள் சங்கத்திற்குமிடையே இருக்கும் உறவு, இந்தியாவில் வேறு எங்கும் இருப்பதைவிட இங்கே சிறந்ததாக இருக்கிறது. நல்ல முறையில் அமைக்கப்பட்ட, பலமான தொழிலாளர் சங்கம் இருந்து வருவதுதான் உண்மையில் இதற்குக் காரணம். மில் சொந்தக்காரர்கள் சங்கக் காரியதரிசியிடம் காந்திஜி மனம்விட்டுப் பேசினார். தொழிலாளருக்குச் சுத்தமான தண்ணீர் கிடைப்பதற்கும், சாக்கடை நீரை வெளிப்படுத்துவதற்குமாவது ஜாம்ஷெட்பூரில் டாட்டா கம்பெனியார் சிறந்த முறையில் காரியங்களைச் செய்திருப்பதைக் காந்திஜி எடுத்துக் கூறினார். அவர்கள் செய்திருப்பதைப் போலச் செய்யுமாறு கேட்டுக்கொண்டார். அவரும் காந்திஜி கூறிய யோசனையை அன்போடு கேட்டுக்கொண்டார். பள்ளிச் சிறுவர்கள் கூட்டத்தில் பின்னர் பேசிய மில்காரர்கள் சங்கக் காரியதரிசி, பள்ளிக்கூடச் செலவுக்குத் தாங்கள் கொடுக்க வேண்டியதில் பாக்கியாக இருக்கும் தொகையை உடனே கொடுத்துவிடுவதாகச் சொன்னார். எல்லோரும் பலத்த கரகோஷம் செய்தனர். போதுமானபடி தண்ணீர் வசதி இல்லாதது, நூல் அறுந்துவிடுவது ஆகியவைகளைக் குறித்துத் தம்மிடம் புகார் செய்தால், அவற்றை உடனே கவனிப்பதாகவும் கூறினார்.

—'எங் இந்தியா' – 10—9—1925

## 16

# பரோடா மில் தொழிலாளர் துயரம்

'எங் இந்தியா' ஆசிரியரவர்களுக்கு,

ஐயா,

பரோடா சமஸ்தானத்தில் ஜவுளி மில்தொழிலாளர், மற்றத் தொழிற்சாலைகள் தொழிலாளர் ஆகியோரின் அதிகத் துயரமான

நிலையைக் குறித்துத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். அவர்களுடைய நிலைமை சீர்ப்படுவதற்கு உங்கள் அன்பான உதவியை அளிக்கும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன். பிரிட்டிஷ் இந்தியாவில் நமக்கு வாரத்தில் அறுபது மணி நேர வேலை என்ற விதி இருக்கிறது என்பதைத் தாங்கள் அறிந் திருக்கக்கூடும். அதாவது, 1922-இல் இருந்து தொழிற்சாலை தொழிலாளருக்குப் பொதுவாக தினம் 10 மணி நேர வேலை என்ற ஏற்பாடு இருக்கிறது. ஆனால், பரோடா சமஸ்தானத்தில் இருக்கும் மில்களில் தினத்திற்குப் பன்னிரண்டு மணி நேரமும், சில சமயங்களில் அதற்கும் அதிகமாகவும் இன்றும்கூட வேலை வாங்கப்படுகிறது. குழந்தைகளை வேலைக்கு வைத்துக்கொள்ளும் விஷயத்தில், அரை நேரம் வேலை செய்யும் குழந்தைகளுக்குப் பன்னிரண்டு வயதாகியிருக்க வேண்டும் என்றும், முழு நேரம் வேலை செய்வோருக்குப் பதினைந்து வயது ஆகியிருக்கவேண்டும் என்றும் இங்கே தொழிற்சாலைகள் சட்டம் விதிக்கிறது. ஆனால், பரோடா மில்களிலோ, இன்னும் குறைந்த வயதினரும்கூட வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கின்றனர். அகமதாபாத் ஜவுளி மில் தொழிலாளர்கள், உங்களுடைய ஆலோசனையின் பேரில், தாங்கள் காட்டிய வழியைப் பின்பற்றி நடந்து, இப்பொழுதுள்ள தொழிற்சாலைச் சட்டம் வருவதற்கு முன்னாலேயே தினத்திற்குப் பத்து மணி நேர வேலை என்ற ஏற்பாட்டை அடைந்தனர் என் பதை அறிவேன். நீங்கள் வற்புறுத்தியதன் பேரில், உங்க ளுடைய செல்வாக்கினாலேயே இந்த ஆண்டு இந்தூர் சமஸ் தானத்திலும் அதே போன்ற சீர்திருத்தம் அமுலுக்கு வந்தது. பரோடா மில்களில் இருக்கும் நிலைமை, தொழிலாளரின் ஆரோக் கியத்திற்கும் பொது நலனுக்கும் எவ்விதம் கேடு விளைவிப்பதாக இருந்து வருகிறது என்பதைக் குறித்து நான் சொல்ல வேண்டிய தில்லை. பரோடா சமஸ்தானம், தொழிற்சாலைச் சட்டத்தை மாற்றுவதென்று இப்பொழுது யோசித்து வருகிறது ; இதற்கான நகல் விதிகளும் வெளியிடப்பட்டிருக்கின்றன. இது முடிவாக நிறைவேற்றப்பட்டுவிடுமானால், பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்து வரும் சட்டத்திற்கு ஏற்றதாக இது இருக்கும். என்றாலும், அதிக முக்கியமானதும், முன்னாலேயே செய்திருக்க வேண்டியதுமான இச்சீர்திருத்தத்தை உள்ளூர் மில் சொந்தக்காரர்கள் எதிர்ப்ப தோடு, தங்கள் நன்மைக்கு நல்லது என்று தாங்கள் நினைக்கும் வகையில் இச்சட்டத்தில் திருத்தங்களைக் கொண்டுவர முயன்று வருவதாகவும் அறிகிறேன். வாரத்திற்கு 60 மணி நேர வேலை என்பதற்குப் பதிலாக 66 மணி நேர வேலை என்று மாற்றவும், முழு நேரம் வேலைக்கு அமர்த்தப்படுகிறவர்களுக்கு 15 வயதாகி யிருக்க வேண்டும் என்பதை 14 வயது என்று செய்துவிடவும் மில்காரர்கள் முயற்சி செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் இது போன்ற சிபார்சுகளை ஐந்து கனவான்க ளடங்கிய ஒரு கமிட்டியே முடிவு செய்தது. அவர்களில் இருவர் பிரபலமான மில் சொந்தக்காரர்கள். இந்த விதிகளைக் குறித்து

அபிப்பிராயம் தெரிவிக்கவே இவர்களை அரசாங்கம் நியமித்தது. இவை ஏற்றுக்கொள்ளப்படவில்லையெனினும், பொதுஜன அபிப்பிராயத்தைப் பலமாக எழுப்பினாலன்றி இந்தச் செல்வாக்குகளெல்லாம் பயனளித்துவிடும் என்ற பயம் இருந்துவருகிறது. இவ்விஷயம் அடுத்த வாரம் பரோடா கவுன்சிலின் விவாதத்திற்கு வருகிறது. இந்த நிலைமையில் நீங்கள் இது சம்பந்தமாக உங்கள் கருத்தைத் தெரிவிப்பீர்களானால், நியாயமான நல்ல முடிவுக்கு வருவதில் கவுன்ஸிலுக்கும் சமஸ்தானத்திற்கும் அதிக உதவியாக இருக்கும்.

—' இரு தரப்பாரின் ஒரு நண்பன் '

[மேலே கொடுத்திருக்கும் கடிதத்தை மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன். அக்கடிதத்தை எழுதியிருப்பவரை எனக்குத் தெரியும். தம்மை யார் என்று அவர் சொல்லிக்கொள்ளுகிறாரோ அதை நான் நம்புகிறேன். என் கருத்து எந்த இடங்களுக்குத் தெரிய வேண்டுமோ அங்கே போய்ச் சேருமா, அதனால் ஏதாவது பலன் ஏற்படுமா என்பது எனக்குத் தெரியாது. என்றாலும், எந்தச் சமஸ்தானமும், அதிலும் பரோடா, பிரிட்டிஷ் இந்தியாவில் இருப்பதற்குக் குறைவாக எதையும் செய்யக் கூடாது என்பது என் திடமான கருத்து. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளபடி, தினத்திற்குப் பத்து மணி நேர வேலை என்பதிலும், குழந்தைகளின் வயது எல்லையிலும் உண்மையில் அபிவிருத்தி வேண்டும். முதலாளித்துவம் மோசமான வகையில் கேவலமாகிவிடாதிருக்க வேண்டுமானால், முதலாளிகள் வலிய முன்வந்து தன்னடக்கத்தை மேற்கொண்டு தொழிலாளருடன் உடன்பாட்டிற்கு வரவேண்டும்.]

—' எங் இந்தியா ' – 25—7—1929

['கடிதம்—பரோடா சமஸ்தானத்தில் மில் தொழிலாளி' என்ற தலைப்பின் கீழ் முன்னால் வெளியான கட்டுரை இது.]

# 17

# கல்கத்தா மில் தொழிலாளர் அவதி

கல்கத்தாவிலிருந்து வந்திருக்கும் கடிதம், அங்கே இருக்கும் மில் தொழிலாளரின் புள்ளி விவரங்களையும் அவர்களைப் பற்றிய விவரங்களையும் கூறுகிறது :

வங்காளத்தின் பல பகுதிகளிலும் வேலை செய்துவரும் மில் தொழிலாளரின் சராசரித் தொகை வருமாறு :

| | |
|---|---|
| கஞ்சரப்பா......... | 12,000 |
| காஜிநாகூர், நைஹாதி, கௌரிப்பூர் | 30,000 |
| கதர்பாரா, இச்சாப்பூர், ஷாம்நாகூர் | 50,000 |
| காங்கினரா, ஜாக்தால் | 80,000 |
| டிடாகர்...... | 1,25,000 |
| கமார்ஹாதி, காசிப்பூர், டம்டம், போரியா, காத்தா, ஸீல்தா | 65,000 |
| தெலினிப்பாரா, ஸ்ரீராம்பூர், ரிஷ்ரா, சாம்ப்தானி, ஸால்கியா, ஷிப்போர், ஹௌரா, விப்லுவா | 1,50,000 |
| பட்ஜ்பட்ஜ், பௌரியா, ராஜ்கஞ்ச், டாலிகஞ்ச், கிதர்பூர் | 1,50,000 |
| மொத்தம் | 6,62,000 |

"மில் தொழிலாளரில் பெரும்பாலோர் எழுத்து வாசனை இல்லாதவர்கள். அவர்களின் மனைவிமார்களோ இன்னும் அதிகமாக எழுத்து வாசனையே இல்லாதவர்கள். அவர்களுடைய குழந்தைகளின் ஒழுக்கமோ நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. அவர்கள் எவ்வளவுதான் சம்பாதித்தாலும் எல்லாவற்றையும் சூதாட்டத்திலும், மதுவிலும், விபசாரத்திலும் அழித்துவிடுகிறார்கள். அவர்களுடைய பழக்கம் அவ்விதமாகிவிட்டது. அவர்கள் கையில் பணமில்லாது போய்விடும்போது சோற்றுக்கு வழியில்லாமல் குழப்பமடைந்துவிடுகிறார்கள். அதனால் மாதத்திற்கு, வாரத்திற்குக்கூட ரூபாய்க்கு இரண்டணா அதிக வட்டி கொடுத்து காபூலிகளிடமும் மற்றவர்களிடமும் கடன் வாங்க வேண்டியவர்களாகிவிடுகின்றனர். இத்தொழிலாளர்கள் ஒன்றுமே தெரியாதவர்களாக இருப்பதால், நாளுக்கு நாள் செத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த முழு இருளிலிருந்து அவர்களை வெளியேற்றுவதற்கான பரிகாரம் எதுவுமே இல்லையா?"

இவர் கொடுத்திருக்கும் புள்ளி விவரமோ, விமர்சனமோ சரியானதுதான் என்று நான் சொல்லிவிடுவதற்கில்லை. ஆனால், பொதுவாக இரண்டுமே சரியாக இருக்கும் என்று வைத்துக்

கொள்ளலாம். இத்தொழிலாளர்களை அவர்களின் துயரங்களி லிருந்து காப்பதாக தேசபந்து தாஸ் வாக்களித்திருந்தார் என்றும், அந்த வேலையை அவர் ஆரம்பிக்கவே முடியாதபடி சாவு அவரைத் தடுத்துவிட்டதால், அவ்வேலையைப் பூர்த்தி செய்யுமாறும் இக்கடிதத்தை எழுதியிருப்பவர் என்னைக் கேட்டுக் கொள்ளுகிறார். மில் பகுதிகளில் படத்தின் மூலம் காட்டுவ தற்காக ஒரு சினிமாக் கம்பெனி ஊழியருக்கு உதவவும், அத் தொழிலாளரிடையே தறிகளையும் ராட்டைகளையும் அமைக்கவும் பத்தாயிர ரூபாய் மூலதனத்தை நான் திரட்ட வேண்டும் என்றும் அவர் யோசனை கூறுகிறார்.

கடிதம் எழுதியிருப்பவர், நல்ல எண்ணத்தின் பேரிலேயே இந்த யோசனைகளைக் கூறுகிறார். ஆனால், சினிமா, ஆண்களையும் பெண்களையும் எழுத்து வாசனை உள்ளவர்களாக்கிவிடாது. அவர் களிடமிருக்கும் ஒழுக்கக் கேடுகளைப் போக்கிவிடாது என்பதை அவர் அறியவில்லை. நூற்கும் ராட்டையையும் தறிகளையும் இந்தத் தொழிலாளர்கள் உபதொழிலாக ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஏனெனில், இவை அவர்களுக்குத் தேவையில்லை. கடிதம் எழுதி யிருப்பவருக்கு இதுவும் தெரியவில்லை. ஹர்த்தால்கள் செய்யும் போதும், தங்களுக்கு வேலை கிடைக்காதபோதும் தங்களுக்கு உதவியாக இருப்பதற்கு வேண்டுமானால் அவர்கள் நூற்கவும் நெய்யவும் கற்றுக்கொள்ளலாம். தொழிலாளரிடையே ஒழுக்க, சமூக சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது மிகவும் கஷ்டமானது, சங்கடமானது. இது மெதுவாகச் செய்துகொண்டே போக வேண்டிய வேலை. சீர்திருத்தவாதிகள் அவர்கள் மத்தியில் வசித்து, அதன் மூலம் இதைச் செய்ய வேண்டும். தங்களுடைய சிறந்த ஒழுக்கம், மில் தொழிலாளரின் வாழ்க்கையில் நல்ல மாறு தலை உண்டாக்கும்படியும் செய்ய வேண்டும். இத்தகைய வேலைக்கு மூலதனம் எதுவும் தேவை இல்லை. இதற்கு வேண்டிய பணத்தை மில் தொழிலாளர்களே மகிழ்ச்சியுடன் கொடுத்து விடுவார்கள். இதுதான் இன்று அகமதாபாத்தில் நடந்துவரு கிறது; ஜாம்ஷெட்பூரில் நடந்துகொண்டிருக்கிறது.

—'எங் இந்தியா' - 24—9—1925

## 18

# டில்லியில் கல்லுடைப்போரின் கொடுந்துயர்

ஸ்ரீ ஏ. வி. தக்கர், 'டில்லியில் இரக்கமற்ற செய்கை' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார். தெருக்கூட்டுவோரின் படு மோசமான நிலைமையைக் குறித்தும், கண்டிராக்டர்கள் இரக்க

மின்றி அவர்களை வஞ்சித்து வருவதைப் பற்றியும் அக்கட்டுரையில் கூறியிருந்தார். அதன்மீது எழுதிய ஒரு குறிப்பில் காந்திஜி கூறியதாவது :

"ஏழைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களில், டில்லியில் எல்லாம் வெகு மெதுவாகவே காரியங்கள் நடக்கின்றன என்று தோன்றுகிறது. நான் பார்த்தவைகளிலெல்லாம் படுமோசமானவை டில்லி தெருக்கூட்டுவோர் வசிக்கும் இடங்கள். இன்று அவர்கள் கொஞ்சம் நன்ருக இருக்கிருர்களா என்பது எனக்குத் தெரியாது. கல்லுடைப்போருக்கு இருந்துவரும் மிகவும் மோசமான குறைகளைக் குறித்து இப்பொழுது தக்கர் பாபா எல்லோர் கவனத்திற்கும் கொண்டுவருகிருர். கொடுக்கும் கூலியில் இந்த ஏழைகள் ஏமாற்றப்படுகின்றனர். இரக்கமற்ற கண்டிராக்டர்கள், அவர்களுடைய அறியாமையையும் ஏழ்மையையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளுகிருர்கள். டில்லிப் பொது மக்கள் இப்பொழுதாவது விழிப்படைந்து இத்தீமைக்குப் பரிகாரம் தேடியாக வேண்டும். கண்டிராக்டர்கள் யோக்கியமாக நடந்துகொள்ளாவிட்டால், கல்லுடைப்பவர்களின் பொது வேலை நிறுத்தத்திற்குப் பொதுமக்கள் ஆதரவு அளிக்க வேண்டும். வேலைநிறுத்தம் நடந்துகொண்டிருக்கும் காலத்தில் அவர்களுக்கு ஏற்றதான வேறு வேலையைத் தேடித்தர வேண்டும். கடைசியானதான இந்த நடவடிக்கையை மேற்கொள்ளுவதற்கு முன்னல் கண்டிராக்டர்களுடன் பேசியும் பார்க்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை."

—'ஹரிஜன்' – 18—9—1937

## 19

# பணக்காரர்களின் இரக்கமின்மை

சிம்லாவில் செய்ததைப் போலவே முஸோரியிலும் அவர்களின் (பணக்காரர்களின்) இரக்கமற்ற போக்கைக் குறித்துக் காந்திஜி பன்முறை அம்பலப்படுத்தினர். ஏழைகளான ரிக்ஷா இழுப்போர், சுமை தூக்குவோரின் நிலைமையைக் குறித்து அவர்களுக்குக் கூறினர். இவர்கள்தான், பணக்காரர்கள் அங்கே வாழ்வது சாத்தியமாகும்படி செய்கின்றனர். ஆனல், பணக்காரர்களோ, அவர்களை ரிக்ஷாக்களை இழுக்கும்படி செய்து இரக்கமின்றி வேலை வாங்கிக்கொள்ளுகிருர்களேயன்றி, அவர்கள் எப்படி வாழ்கிருர்கள், என்ன சாப்பிடுகிருர்கள், என்ன சம்பாதிக்கிருர்கள் என்பதைக் கவனிப்பதே இல்லை. இந்த ஏழைகள், காற்ருேட்டமோ, வெளிச்சமோ இல்லாத மிகச் சிறிய அறைகளில் குடியிருக்கிருர்கள் என அறிகிறேன். அந்த இடங்களிலிருந்தும் வெளியேற்றப்பட்டுவிடக்கூடும், அல்லது அபராதம் விதிக்கப்படக்

கூடும் என்று அவர்களுக்குப் பயம். ஆகையால், ஓர் அறையில் எத்தனை பேர் நெருங்கியிருந்து தாங்கள் வாழ்கிறோம் என்பதை வெளியிட அவர்கள் விரும்புவதில்லை. இவர்களில் கொஞ்சம் பேர் இன்று மாலை பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வந்திருக்கிறார்கள். எவ்வித அழுக்குத் துணிகளை அணிந்து வருகின்றனர் என்பது அவர்களைப் பார்த்தாலே தெரியும். ஆனால், அவர்களுக்குத் துணிகளை மாற்றிக்கொள்ளுவதற்கு வேண்டிய வசதிகள் இல்லாமல் இருக்கலாம். பீகாருக்கு முதலில் போயிருந்தபோது அங்கே நான் பார்த்த பெண்களைப் போன்றே இவர்களும் இருக்கக்கூடும். குளித்துவிட்டுத் துணியையும் துவைத்துக் கட்டும்படி ஒரு பெண்ணிடம் சொன்னபோது, அவள், "கட்டிக்கொள்ள என்னிடம் வேறு புடவை இல்லாதபோது நான் எப்படிக் குளிக்க முடியும்?" என்று என் மனைவியிடம் கூறினாள். தங்களுடைய தேவைக்கு அதிகமாகச் சிலருக்குக் கடவுள் அளித்திருக்கிறார். தங்களிடம் அதிகப்படியாகவுள்ளதை, தேவையிலிருப்போருக்குச் செலவு செய்ய வேண்டியது அவர்கள் கடமை. காங்கிரஸ் அரசாங்கம் இப்பொழுது இருந்து வருவதால் எல்லா இடங்களிலும் தொழிலாளருக்குக் குடியிருப்பு வீடுகளைக் கட்டிக் கொடுக்க வேண்டும் என்கிறார்கள். அப்படிச் செய்தால் நல்லது தான். அப்படிச் செய்யவேண்டியது கடமையேயாகும். அவ்வாறு செய்வதனாலும், ரிக்ஷாக்களில் சவாரி செய்பவர்கள் தங்களுக்கு இருக்கும் கடமையிலிருந்து தப்பிவிட முடியாது. இந்த ஏழைகள் நான்கு ஐந்து வருடகாலம் ரிக்ஷா இழுக்கிறார்கள் என்றும், இவ்வேலை அதிகக் கஷ்டமானதாக இருப்பதால் பிறகு இருதய, நுரையீரல் நோய் ஏற்பட்டு இறந்துவிடுகிறார்கள் என்றும் டாக்டர்கள் என்னிடம் கூறுகிறார்கள். இவர்களுக்கு நல்ல வீட்டு வசதி செய்து கொடுப்பதிலும், நல்ல உடை கிடைத்து அளவுக்கு மிஞ்சி வேலை செய்யாமலிருக்கும்படி பார்ப்பதிலும், நல்ல கூலி கொடுப்பதிலும் ரிக்ஷாக்களில் சவாரி செய்கிறவர்கள் எவ்வாறு கவனிக்காமல் அலட்சியமாக இருந்துவிட முடியும்?"

— 'ஹரிஜன்' –16—6—1946

[பிரார்த்தனைக்குப் பிறகு மகாத்மா செய்த பிரசங்கம், ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற தலைப்பில் முன்னால் வெளியானது.]

# 20

# ஹரிஜனத் தொழிலாளருடன்

அகமதாபாத்தில் மில் தொழிலாளரின் கூட்டமொன்றில் காந்திஜி பேசினார். அங்கிருந்த தொழிலாளரில் பெரும்பாலானவர்கள் ஹரிஜனங்கள். அவர்கள் கொடுத்த ரூ. 50,000 பண முடிப்பைக் குறிப்பிட்டுக் காந்திஜி கூறியதாவது:

"ஹரிஜனங்கள் தங்களுக்குள்ளேயே தீண்டாமையை இனியும் அனுசரித்து வருவதற்கு ஓர் அனுமதிச் சீட்டாக இப்பண முடிப்புக் கொடுத்ததை நீங்கள் எண்ணிக்கொள்ளக்கூடாது. தீண்டாமையை அடியோடு ஒழித்துவிடுகிறோம் என்று வாக்குறுதியளிப்பதற்கு ஓர் அடையாளமாகவே இதைக் கருத வேண்டும். யாரையும் தங்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்று கருதக்கூடாது. ஆனால், தாழ்ந்தவர்களிலும் மிகத் தாழ்ந்தவர்களே தாங்கள் என்று தங்களை எண்ணிக்கொள்ள வேண்டும். உயர்வு என்ற அகந்தை அழிவில்தான் கொண்டுபோய்விடும். ஆகையால், தேத்கள், சாமார்கள், பங்கிகள் முதலியவர்களில் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற தரத்தையெல்லாம் நீங்கள் மறந்துவிடவேண்டும். ஜவுளி மில் தொழிலாளர் யூனியன் உங்களுக்காக மிகச் சிறந்த முறையில் வேலை செய்து வருகிறது. ஆனால், அதனிடமிருந்து சாத்தியமான எல்லா நன்மைகளையும் அடைந்து வருகிறீர்களா? கல்யாண் கிராமம் சிறந்த இடம். நீங்கள் சுத்தமில்லாமலிருந்து, அந்த இடத்தையும் சுத்தமாக வைத்துக்கொள்ளாவிட்டால், பொதுஜனங்களுக்கு ஆபாசமான இடமாகவே அதைச் செய்துவிடுவீர்கள். அதோடு, உங்களிடம் குடிப் பழக்கமும் சூதாடுவதும் இன்னும் இருந்துவருகிறது. செத்த மாட்டு மாமிசத்தை இன்னும் தின்று வருகிறீர்கள். இத்தீமைகளையெல்லாம் போக்கிவிட்டு, உங்கள் குழந்தைகளுக்கும் கல்வி அளிக்க வேண்டும். இவ்விதம் அவர்கள் பண்பாடுள்ள மனிதர்களாகவும், உண்மையான ஹரிஜனங்களாகவும் ஆகிவிடுவார்களானால், ஒவ்வொருவரும் அவர்களுடன் சேருவதோடு அவர்களில் ஒருவராகவும் இருப்பார்கள். சாதி ஹிந்துக்கள், தாங்கள் செய்துவிட்ட பாவங்களுக்காகப் பிராயச்சித்தம் செய்துகொண்டு வருகின்றனர். ஆனால், அதே போன்ற கடமை, தங்களைத் தாங்களே புனிதமாக்கிக்கொள்ளுவதில் ஹரிஜனங்களுக்கும் இருக்கிறது."

—'ஹரிஜன்' – 13—7—1934

['வாராந்திரக் கடிதம் நெ. 31' என்ற தலைப்பின் கீழ் முன்னால் பிரசுரமானது.]

# 21
# தோட்டிகள் துயரம்

**கேள்வி :** இது சம்பந்தமாக முன்னாலேயே தாங்கள் எழுதியிருக்கிறீர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், தோட்டிகள் அவர்களுடைய வேலையைச் செய்வதற்குச் சரியான வசதிகளைச் செய்து கொடுப்பது சம்பந்தமாக முனிசிபாலிடிகளுக்கும், மற்ற அதிகாரிகளுக்கும், அவர்களை வேலைக்கு வைத்திருக்கும் தனிப்பட்டவர்களுக்குமுள்ள கடமையைக் குறித்துத் தாங்கள் மீண்டும் கூறவேண்டும் என்று விரும்புகிறேன்.

உதாரணமாக, நீர் ஒழுகாத சட்டிகளை அவர்களுக்குக் கொடுத்தாலன்றி, மழைக் காலத்தில் கூடைகளையோ, கோணிப் பைகளையோ உபயோகித்தால், அத்துர்ப்பாக்கியத் தொழிலாளர் மீது ஆபாச நீர் கொட்டிக்கொண்டுதான் இருக்கும். தோட்டிகள் செய்யும்வேலைகளெல்லாம்,அவர்கள் கைகளையோ, அவர்கள் உடம்பின் எப்பகுதியையோ ஆபாசப்படுத்திக்கொள்ளாமல் செய்ய முடிவதாக இருக்க வேண்டும். இவ்வேலை அவ்விதம் இருந்தால், இந்த வேலைக்கு இப்பொழுது இல்லாமலிருக்கும் கௌரவம் இதற்கு உண்டாகும். கக்கூசுகளைச் சுத்தஞ் செய்வதற்கும், தெருக் கூட்டுவதற்கும் சரியான சாமான்களை அவர்களுக்குக் கொடுப்பதோடு தோட்டிகளுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டியும் இருக்கிறது. சுத்தம் சம்பந்தமான இக்காரியங்களை உள்ளூர் அதிகாரிகளும், மாகாண அதிகாரிகளும் கவனிக்க வேண்டும்.

பதில் : ஆபாசங்களைக் கையில் தொட வேண்டியிராத வகையில் இன்னகருவிகளையும்துடைப்பங்களையுமே உபயோகிக்கலாம் என்பதற்குச் சட்ட விதிகளைச் செய்யவேண்டும் என்று கூறுவேன். தோட்டிகள் வேலை செய்யும்போது, இன்ன எளிய ஆடையை அணிவது என்பதும் இருக்க வேண்டும். இன்ஸ்பெக்டர்களும், கண்காணிப்பவர்களும், எப்படியாவது வேலை வாங்கிவிட வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவதற்குப் பதிலாக, இந்தக் காருண்யமுள்ள, சுகாதார வேலையில் பயிற்சி பெற்றவர்களாக இருக்க வேண்டும். இப்பொழுது இருந்துவரும் முறையின் பலன் என்னவென்றால், அதிக அளவு சுகாதாரமின்மையும், மிகக் குறைவான வேலையும், அதோடு லஞ்சம், ஊழல், கெட்ட செய்கை ஆகியவைகளும் சேர்ந்து இருப்பதேயாகும்.

—'ஹரிஜன்' - 6—10—1946

# 22

# ரெயில்வே தொழிலாளரின் சில குறைகள்

சென்னைக்கும் பழனிக்கும் நான் யாத்திரை சென்றபோது, பொன்மலையில் நடந்த மிகப் பெரிய தொழிலாளர் கூட்டத்தில் 259 பேர் கையெழுத்திட்டிருந்த கீழ்க்கண்ட கடிதத்தை என்னிடம் கொடுத்தார்கள் :

"தென்னிந்திய ரெயில்வே தொழிலாளராகிய நாங்கள், தங்களுடைய ஆதரவைப் பெறும் நோக்கத்துடன், எங்களுக்குள்ள பெரிய பிரச்னைகளில் சிலவற்றைத் தங்கள் முன்னால் சமர்ப்பிக்கிறோம்.

"ரெயில்வேக்கள் முழுவதிலும் சுமார் 2,64,000 தொழிலாளர்களை ஆள் குறைப்புக்காக வேலையிலிருந்து நீக்கப் போகிறார்கள். தென்னிந்திய ரெயில் வேயில் மாத்திரம் 10,000 பேர் குறைக்கப்படுவார்கள். இதுவரையில் 2,000 பேரை அனுப்பிவிட்டார்கள். ரெயில்வே தொழிலாளருக்குப் பதிலாக, ராணுவத்தில் முன்னால் சேவை செய்தவர்களை வைத்துக்கொள்ளுவது என்று அரசாங்கம் யோசித்து வருகிறது. இவ்வாறு எங்களை மாஜி ராணுவத்தின ருக்கு எதிராக வைக்கின்றனர்.

"ஜீவனத்திற்குப் போதுமான குறைந்தபட்ச சம்பளம் மாதத்திற்கு ரூ. 30 கொடுக்க வேண்டும் என்று கேட்டு வருகிறோம். இப்பொழுதுள்ள குறைந்த சம்பளம் ரூ. 8 முதல் ரூ. 15 வரை. எங்களில் பெரும்பான்மையோர் மாதம் ரூ. 18-க்குக் குறைவாகவே சம்பளம் பெறுகிறோம்.

"ரெயில்வே ஊழியர்கள் 42,000 பேரில் 8,000 பேருக்கு மாத்திரமே வீடுகள் கொடுத்திருக்கிறார்கள். அவற்றில் பெரும்பாலானவை சுகாதார வசதிகள் இல்லாமல் இருக்கின்றன. போதுமான காற்றோட்டமும் வெளிச்ச மும் இல்லை.

"எங்களுடைய குறைகளை நிவர்த்தி செய்து, எங்கள் யோசனைகளையும் ஏற்றுக்கொள்ளாது போனால், இதை மத்தியஸ்தத் தீர்ப்புக்கு விடவேண்டும், அல்லது விசாரணைக் கோர்ட்டை நியமிக்க வேண்டும் என்று கேட்டு அகில இந்திய ரெயில்வே தொழிலாளர் பெடரேஷன் செய்திருக்கும் முடிவைத் தாங்கள் அறிந்திருப்பீர்கள். ரெயில்வேக்களின் முறைகளில் அபிவிருத்தி ஏற்பட்டுத் தொழிலாளர் நிலைமையும் சீர்ப்பட வேண்டும் என்பதற்காகவே யோசனைகளைக் கூறினோம். ரெயில்வே போர்டுக்கும், அரசாங்கத்திற்கும் தொழிலாளர் பெடரேஷன் அனுப்பியிருக்கும் பதினறு யோசனைகளை நீங்களும் அறிய வேண்டும் என்பதற்காக அவற்றைக் கீழே கொடுக்கிறோம்:

1, முதல் காரியமாக, வாரத்திற்கு 40 மணி நேர வேலை என்று வேலை நேரத்தைக் குறைக்க வேண்டும். பிறகு ரெயில் போக்குவரத்தில் ஈடுபட் டிருக்கும் சிப்பந்திகள் உள்பட எல்லோருக்கும் சம்பளத்தில் எந்தக் குறைப்பு மின்றி வாரத்திற்கு 40 மணி நேர வேலை என்று நிர்ணயிக்க வேண்டும்.

2. எல்லா ரெயில்வே தொழிலாளருக்கும் வாரத்தில் ஒருநாள் ஓய்வு கொடுக்க வேண்டும்.

3. ரஜா நாட்களைச் சேர்த்து வைப்பதை 25 சதவிகிதத்திற்கு உயர்த்த வேண்டும்.

4. இன்ஜினீயரிங் காங்கி ஆட்களுக்கு, அவர்கள் கவனிக்க வேண்டிய ரெயில்பாதை நீளத்தைக் குறைக்க வேண்டும்.

5. சிப்பந்திகளுக்கு அளிக்கப்பட்டு வரும் ரஜா வசதிகளைத் தினக் கூலி பெறும் கீழ்ச் சிப்பந்திகளுக்கும் அளிக்க வேண்டும்.

6. கண்டிராக்டு தொழிலாளரைக் கொண்டு இப்பொழுது செய்து வரும் வேலைகளை யெல்லாம் இலாகாவே செய்துவர வேண்டும்.

7. இன்ஜின்கள், வாகன்கள், வண்டிகள் ஆகியவை இத்தனை மைல் கள் ஓட வேண்டும் என்று இருப்பதன் காலத்தைக் குறைக்க வேண்டும்.

8. தொழிற்சாலையில் உற்பத்தியாகிறவைகளை, அதாவது பாய்லர்கள், இன்ஜின் பகுதிகள் ஆகியவைகளைச் செய்வதை அதிகரிக்க வேண்டும்.

9. இந்திய ரெயில்வே தொழிற்சாலேகளிலேயே இன்ஜின்கள், வண்டிகள், வாகன்கள் ஆகியவைகளே உற்பத்தி செய்ய வேண்டும்.

10. பிரயாணிகளுக்கு நல்ல வசதிகள் இருக்கும் வகையில், அதாவது குளிக்கும் அறைகள், மின்சார விசிறிகள், தூரப் பிரயாணிக்குத் தூங்குவதற்கு வசதி ஆகியவை இருக்கும் வகையில் மூன்ரும் வகுப்பு வண்டிகளே மாற்றி அமைக்க வேண்டும்.

11. யுத்த காலத்தில் மூடிவிட்ட ரெயில் பாதைகளே எல்லாம் திரும்ப ஆரமபிப்பதோடு, நிறுத்திவிட்ட ரெயில்களே திரும்பவும் விடவேண்டும். பொதுஜன சௌகரியத்தை உத்தேசித்து வண்டிப் போக்குவரத்துக்களே அதிகரிக்க வேண்டும்.

12. எல்லா ரெயில்வே தொழிலாளருக்கும் நல்ல வீட்டு வசதியைச் செய்து கொடுப்பதற்காக வீடுகட்டும் வேலேத் திட்டம் வேண்டும்.

13. தேசத்தின் தேவையை அனுசரித்துப் புதிய ரெயில் பாதைகளே அமைக்க வேண்டும்.

14. அவசியமான இடங்களில் இரட்டைப் பாதைகளே அமைக்க வேண்டும்.

15. ரெயில்வேக்கள் போகாத தூரத்திலுள்ள பட்டணங்களுக்கும் கிராமங்களுக்கும் ரெயில், மோட்டார் போக்குவரத்தை ஏற்படுத்த வேண்டும்.

16. இப்பொழுது ரெயில்வேக்கள் நடத்தி வரும் விமானப்படை தொழிற்சாலேகளே, விமானப்படைத் தேவைக்கு ஏற்ப விஸ்தரித்து நடத்திவர வேண்டும்.

"முழு வேலே, வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம், சரியான வீட்டு வசதி ஆகியவைகளில் எங்களுடைய கோரிக்கையைத் தாங்கள் ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறோம். இவ்விஷயத்தில் தாங்கள் தேசத்திற்கு வழிகாட்டி, எங்கள் கோரிக்கையை ஏற்றுக்கொண்டு, ஆயிரக்கணக்கான ரெயில்வே தொழிலாளருக்கும் மற்றவர்களுக்கும் வேலேயில்லாத் திண்டாட்டம், கஷ்டம், ஏழ்மை நிலே ஏற்பட்டு விடாது காக்கும்படி ரெயில்வே போர்டைத் தாங்கள் கட்டாயப்படுத்த வேண்டும் என்றும் கோருகிறோம்."

இக்கடிதத்தில் சொல்லப்படுவது போல, ராணுவத்தில் சேவை செய்தவர்களுக்கு வேலே கொடுக்க வேண்டும் என்பதற்காகத் தொழிலாளர்கள் வேலேயிலிருந்து நீக்கப்படுவதாக இருந்தால். இரண்டு வகையில் அது தவருகும் என்பதே என் கருத்து. மாஜி சிப்பாய்கள் சலுகை காட்டப்படுகின்றனர் என்பது, அந்த மாஜி சிப்பாய்களுக்குத் தவருனதாகும். ஏனெனில், தனக்குச் சலுகை காட்டப்படுவதை ஏற்றுக்கொள்ளும் போர்வீரர், போர் வீரரே அல்ல. வேலேயிலிருந்து நீக்கப்படுவது, தொழிலாளருக்குச் செய்யப்படும் இரண்டாவது தவருகும். ஏனெனில், அவர்கள் செய்த குற்றம் எதுவும் இல்லாமலேயே அவர்கள் வேலேயிலிருந்து நீக்கப்படுகின்றனர். அவர்கள் தாற்காலிகமாக வேலேக்கு வைக்கப்பட்டிருந்தவர்கள் என்று சொன்னல் போதாது. வேலேயில்லாதவர்கள் எல்லோருக்கும் அரசாங்கம் வேலே தேடித் தர வேண்டும்.

இனி ரெயில்வே தொழிலாளரின் கோரிக்கைகளுக்கு வருவோம். யோசனைகளில் 1 முதல் 9 வரையிலும், 12-ஆம் யோசனையும் ரெயில்வே தொழிலாளர் சம்பந்தமானதே என்பது என் கருத்து. ஆனால், ரெயில்வே அதிகாரிகள் தரப்பில் என்ன சொல்லுகிறார்கள் என்பது தெரியாமல், இக்கோரிக்கைகள் நியாயமானவையா, இல்லையா என்று சொல்லிவிட முடியாது. அவைகளை மத்தியஸ்தரின் முடிவுக்கு விடவேண்டும். மத்தியஸ்தர் தீர்ப்புக்கு விடும் வேலையைக் கவனிப்பதற்கு முன்னால் இவற்றை வேலைநிறுத்தம் செய்வதற்கான விஷயங்களாக்கி விடக்கூடாது. எந்தத் திடீர் வேலைநிறுத்தமும், இன்னதைச் செய்யவேண்டும் என்று ஆக்ஞை பிறப்பிப்பதைப் போன்றதாகும். ஆகையால், அது ஆபத்தானது.

10, 11-ஆம் யோசனைகளையும், 13 முதல் 16 வரையிலுள்ள யோசனைகளையும் நிறைவேற்ற வேண்டும் என்று நியாயமாகவே தொழிலாளர் கேட்கக்கூடாது. அவை பிரயாணிகளின் குறைகள். பிரயாணிகள், அதாவது பொது மக்கள் அவற்றைக் கோர வேண்டும்.

10-ஆம் நெம்பர் கோரிக்கை, மிகவும் அதிகப்படியானது என்று கருதுகிறேன். பிரயாணிகளில் மிகப் பெரும்பான்மையினர் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள். மேலும் மேலும் சௌகரியம் செய்யப்பட வேண்டியவர்கள், இந்த மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளேயன்றி முதல், இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் அல்ல என்பதில் எனக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. ரெயில் வண்டிகளில் சீக்கிரமாகவே வகுப்புகள் எவையும் இருக்காது. வர்க்க பேதமில்லாத சமூகம் இருக்க வேண்டும் என்பது லட்சியம் மாத்திரமல்ல; ஆனால், அதை அடைவதற்காக வேலை செய்ய வேண்டும். அத்தகைய சமூகத்தில் வர்க்கங்களோ, வகுப்புகளோ இருப்பதற்கு இடமே இல்லை; அந்த நாள் வரும் வரையில், முதல், இரண்டாம் வகுப்பு வண்டிகளில் வசதிகளை ஓரளவுக்கு உட்படுத்தி, அவசியமாகும்போது அவ்வசதிகளைக் குறைத்து, மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் விஷயத்திலேயே எல்லா கவனத்தையும் செலுத்த வேண்டும். ஆனால், மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள், அவர்கள் எவ்வளவு அதிக தூரம் பிரயாணம் செய்பவர்களாக இருப்பினும், பத்தாயிரக் கணக்கான பிரயாணிகளுக்கு வண்டியில் குளிப்பதற்கு வசதிகளையெல்லாம் செய்துவிடும் காலம் வரும் என்று என்னால் எண்ணிப்பார்க்க முடியவில்லை. இப்பொழுது வேண்டியதெல்லாம், மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளுக்கு ரெயில்வே ஸ்டேஷன்களில் குளிப்பதற்குச் சரியான வசதிகள் இருக்க வேண்டும் என்பதுதான். இந்தியாவில் கவனிப்பாரே இல்லாமல் இருப்பவர்கள் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளே. சுகாதாரத்திலும், சுத்தமாக இருப்பதிலும் பொதுமக்களுக்குச் சரியானபடி போதிப்பதற்கு ரெயில் வண்டிகளையும், ரெயில்வே ஸ்டே

ஷன்களையும் பயன்படுத்த வேண்டும். ஆனால் இப்பொழுது அவ்வாறு செய்யப்படவில்லை. ஹிந்து, முஸ்லிம் தேநீர், அல்லது தண்ணீர் என்ற பாகுபாடு எவ்வளவு சீக்கிரத்தில் மறைகிறதோ அவ்வளவும் நல்லது. இயற்கையல்லாத, மத விரோதமான இந்த வித்தியாசங்களையெல்லாம் அரசாங்கம் ஏன் அங்கீகரிக்க வேண்டும்? தங்கள் மதத்தைச் சேராதவர்கள் கொடுக்கும் நீரைக் குடித்துவிடுவதால் தோஷப்பட்டுவிட்டதாக எண்ணு பவர்கள், தங்கள் சொந்த ஏற்பாடுகளைச் செய்துகொள்ளும்படி விட்டுவிட வேண்டும்.

ரெயில்வே பிரயாணிகளின் கஷ்ட நிவாரணத்திற்கு என்று இருக்கும் சங்கம், குறைகளை அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். பிரயாணிகள், ஒருவருக்கொருவர் நடந்துகொள்ள வேண்டிய கடமையைக் குறித்தும், சுத்தம், சுகாதாரம் பற்றிய விதிகளை அனுசரிக்க வேண்டியது சம்பந்தமாகவும் இடைவிடாது பிரயாணிகளுக்குப் போதித்து வருவதே இச்சங்கத்தின் முக்கிய மான வேலையாக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 17—2—1946

# 23

# குமாஸ்தாக்களும் தொழிலாளரும்

குமாஸ்தாக்களின் தொழில் இன்ஷூரன்ஸ் சம்பந்தமாக சேத் ரஞ்சோத்லால் அமிர்தலால் கீழ்க்கண்ட திட்டம் ஒன்றை எனக்கு அனுப்பியிருக்கிறார்:

"தொழிலாளரின் நிலைமை, அவர்கள் ஊதியம், அவர்களுடைய தேவைகள் ஆகியவைகளைக் குறித்து இந்நாட்டில் மாத்திரமல்ல, வெளிநாடு களிலும் கூட இக்காலத்தில் விடாமல் பரிசீலனை செய்து வருகிறார்கள். ஆனால், மத்தியதர வகுப்பினரைச் சேர்ந்தவர்கள் என்று கருதப்பட்டு வரும் குமாஸ் தாக்களைக் குறித்து யாருமே கவலைப்படுவதாகத் தெரியவில்லை. இந்தக் குமாஸ்தாக்கள், தொழிலாளரைவிட அதிக மோசமான நிலைமையில் இருக் கிறார்கள். நான்கு முதல் ஆறு பேர் வரையிலுள்ள ஒரு குடும்பத்தில் சம்பாதிக் கிறவர் ஒருவரே. அவருடைய ஊதியம் மாதத்திற்கு ரூ. 30 ஆக ஆரம்பமாகி ரூ. 60-இல் முடிகிறது. அவருடைய துயரத்திற்கெல்லாம் முக்கியமான கார ணம், அவர் பலியாகியிருக்கும் சமூக அந்தஸ்துதான். அக்குடும்பத்தில் சம்பாதிக்கிறவர் இறந்துபோனதும், அவருடைய மனைவியும் குழந்தைகளும் பட்டினி கிடக்க வேண்டிய நிலைமைக்கு வந்துவிடுகிறார்கள். அவர் பணக்கார ராவது என்பதே முடியாது என்பது மாத்திரம் அல்ல; உயிரையும் உடலையும் சேர்த்து வைத்துக் கொண்டிருப்பது எப்படி என்பதே அவருக்கு என்றும் துயரமும் கவலையுமாக இருந்துவருகிறது. ரூ. 2 அல்லது ரூ. 3 சம்பள உயர்வு ஆசையால் அவர் எஜமானரை மாற்றிக்கொண்டு விடுகிறார். ஒரே சமயத்தில்

ஓர் இடத்தில் அதிக காலம் வேலை பார்த்திருக்கிறார் என்பதும் இல்லாமல் போகிறது.

"குமாஸ்தாக்களின் நிலைமையைச் சீர்ப்படுத்துவதற்குக் கீழ்க்கண்ட காரியங்களைச் செய்ய வேண்டும் என்று யோசனை கூறப்படுகிறது:

1. சாத்தியமான வரையில் உத்தியோகம் நிரந்தரமானதாக இருக்க வேண்டும்.

2. உத்தியோகத்தில் வைத்திருப்பவர்கள், மலிவான தானிய, துணிக் கடைகளுக்கு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

3. இலவச வைத்திய உதவி.
4. குறைந்த வாடகையில் வீடு.
5. குமாஸ்தாக்களின் குழந்தைகளின் கல்விக்கு ஏற்பாடு செய்தல்.
6. நியாயமான வட்டிக்குக் கடன் கொடுத்தல்.

7. குமாஸ்தாக்கள் இறந்துவிட்டால், அவரைக்கொண்டு ஜீவித்து வந்தவர்களுக்குச் சகாயமாக இருக்க இன்ஷூரன்ஸ் திட்டங்கள்.

"முதல் ஆறு விஷயங்களையும் நிறைவேற்றிவிடுவது மிகவும் எளிதானதாகத் தோன்றும். ஏழாவது விஷயமும் எளிதானதோடு நன்மையானது மாகும். அகமதாபாத் புது பருத்தி மில், இத்திட்டத்தைக் குறித்துத் தீவிரமாக ஆலோசித்து வருவதோடு திட்டமான காரியங்கள் சீக்கிரத்திலும் செய்யப்படலாம்.

"தொழில் இன்ஷூரன்ஸ் திட்டமே மிகவும் சரியானதாக இருக்கும் என்று தோன்றுகிறது. அதன்படி மில்லின் ஒவ்வொரு குமாஸ்தாவும் அவருடைய ஆயுளை ரூ. 1,500 க்கு இன்ஷூரன்ஸ் செய்ய வேண்டும். அதற்கு அவர் சம்பளத்திலிருந்து மாதந்தோறும் சொற்பத் தொகையைக் கட்ட வேண்டியிருக்கும். அது வருமாறு இருக்கலாம்:

"ரூ. 50–க்குக் குறைவாகச் சம்பளம் வாங்கும் குமாஸ்தா, இன்ஷூரன்ஸுக்குப் பணம் கட்ட வேண்டியதில்லை.

ரூ. 51 முதல் ரூ. 75 வரை வாங்குபவர் மாதம் ரூ. 0–15–0 கட்ட வேண்டும்.

ரூ. 76 முதல் ரூ. 100 வரை வாங்குவோர் மாதம் ரூ. 1-6-0 கட்ட வேண்டும்.

ரூ. 101 முதல் ரூ. 150 வரை வாங்குவோர் மாதம் ரூ. 1–8–0 கட்ட வேண்டும்.

ரூ. 151 முதல் ரூ. 250 வரை வாங்குகிறவர் மாதம் ரூ. 2-0-0 கட்ட வேண்டும்.

ரூ. 251-க்கு மேல் வாங்குகிறவர் மாதம் ரூ. 2-4-0 கட்ட வேண்டும்.

"இது அல்லாமல் மில் வருடந்தோறும் ரூ. 1,200 போனஸ் கொடுக்க வேண்டும். அந்த ஆண்டில் இறந்து போகும் குமாஸ்தாக்களின் குடும்பங்களுக்கு அத்தொகையைப் பிரித்துக் கொடுக்க வேண்டும். சராசரி அறுபது

குமாஸ்தாக்களில் ஒருவர் ஒரு வருடத்தில் இறந்து போகிறுர் என்று தெரிகிறது. இதனல், இறந்துபோகும் குமாஸ்தாவின் குடும்பத்திற்கு ரூ. 1,200 அதிகப்படியாகக் கிடைக்கக் கூடும். இந்தத் தொகையை எவ்விதம் உபயோகித்து இறந்தவரின் குடும்பத்திற்குப் பிரித்துக் கொடுப்பது என்பதை இன்ஷூரன்ஸ் போர்டு முடிவு செய்ய வேண்டும். ஆனல், இத்தொகையில் எப்பகுதியையும், ஒருவர் இறந்த பிறகு நடத்தும் விருந்துகள், ஆட்சேபகரமான செலவுகளுக்கு உபயோகித்துவிட அனுமதிக்கக் கூடாது.

"இந்தியாவிலிருக்கும் எல்லா மில்களும் இதை அனுசரித்து நடக்கும் என்று நம்புகிறேன்."

இன்ஷூரன்ஸ் குறித்து எனக்கு அவ்வளவாக எதுவும் தெரியாது. ஆனல், இன்ஷூரன்ஸ் யுகத்தில், குமாஸ்தாக்களாக ஊழியம் செய்வோரின் நன்மைக்கு என்று செய்யப்படும் எந்தத் திட்டமும் அவர்களுக்கு நன்மை பயக்கும் என்றே கருதுகிறேன். இன்ஷூரன்ஸ் நிபுணர்தான் இத்திட்டத்தைக் குறித்துப் பயனுள்ள யோசனைகளைக் கூற முடியும். ஸ்ரீ ரஞ்சோத்பாய், தாராளமான மனமுள்ள ஒரு நிபுணரைக் கலந்தாலோசித்தே இத்திட்டத்தைத் தயாரித்திருக்கிறுர் எனக் கருதுகிறேன்.

மில் சொந்தக்காரர்களேயன்றி வர்த்தகர்களும், வர்த்தக ஸ்தாபனங்களை நடத்துபவர்களும் தங்களிடம் வேலைக்கு இருப்பவர்களின் நன்மை சம்பந்தமாகப் பெற்ருேருக்குப் பிள்ளைகளிடம் இருக்கவேண்டிய சிரத்தையுடன் நடந்துகொள்ள வேண்டும். இதில் இருவிதமான அபிப்பிராயங்கள் இருப்பதற்கே இடமில்லை. வேலைக்கு வைத்துக்கொள்பவருக்கும் வேலை செய்பவருக்குமுள்ள உறவு, இதுவரை எஜமானனுக்கும் வேலைக்காரருக்கும் இருக்கும் உறவாகவே இருந்துவருகிறது. இந்த உறவு, தந்தைக்கும் குழந்தைகளுக்குமுள்ள உறவாக இருக்க வேண்டும். ஆகையால், இத்திட்டத்தை வரவேற்கிறேன்.

வைத்திய உதவி இலவசமானதாக இருக்கக்கூடாது என்பது என் கருத்து. அது, உண்மையானதாகவும் சீக்கிரத்தில் கிடைப்பதாகவும், மலிவானதாகவும் இருக்க வேண்டும். இனம் உதவி, அவர்களுடைய சுயேச்சை உணர்ச்சியைக் கெடுத்துவிடக்கூடும். இந்த இலவச உதவி சில சமயங்களில் சிரத்தையின்றிச் செய்யப்படுகிறது; சில சமயங்களில் துஷ்பிரயோகம் செய்யப்பட்டுவிடுகிறது. இவ்விரு தீமைகளிலிருந்தும் குமாஸ்தாக்களைப் பாதுகாக்க வேண்டும்.

குமாஸ்தாக்களின், தொழிலாளர்களின் முக்கியமான குறை, சம்பளம் குறைவாகக் கொடுக்கப்படுகிறது என்பதும், அவர்களுடைய நலனில் அசிரத்தை காட்டப்படுகிறது என்பதுமேயாகும். இத்திட்டத்தில் கூறப்பட்டிருக்கும் காரியங்கள், இக்குறைகளைப் போக்குவதற்கு நேரடியான, எளிய பரிகாரங்களாக இருக்கும். இவற்றை நான் வரவேற்கிறேன்.

சில அம்சங்களில் குமாஸ்தாக்களின் நிலைமை அதிகப் பரி தாபகரமானதாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அவர் ளுடைய நிலைமை என் மனக்கண் முன்பு தெளிவாக இருந்து வருகிறது. *1915*-இல் கல்கத்தாவில் மார்வாரி குமாஸ்தாக்கள் சங்கத்தினர் இதை எனக்குத் தெளிவாக எடுத்துக் கூறினர்கள். அவர்களுடைய திக்கற்ற நிலைமை, ஒரு துக்ககரமான கதை. குமாஸ்தாக்களின் தொகை சிறிது; அவர்களுக்குள்ள சகித்துக் கொள்ளும் சக்தியும், ஒன்றுபடும் ஆற்றலும் மிகக் குறைவு. ஒரு தொழிலாளியின் குடும்பத்தில் எல்லோருமே சம்பாதிக்கிறவர்கள். ஆனல், ஒரு குமாஸ்தாவின் குடும்பத்திலோ, அவர் ஒருவரே சம் பாதிக்கிறவர். தங்கள் நிலைமையை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும் என்பதில் குமாஸ்தாக்கள் உற்சாகங் கொள்ள வேண்டும். அவர்கள் ஒன்றுபட வேண்டும். தாங்கள் சம்பா திப்பதை நம்பி வாழ்ந்துகொண்டிருப்பவர்களுக்கு, முக்கியமாகத் தங்கள் மனைவிமார்களுக்கு, லாபமுள்ள ஏதாவது வேலையில் ஈடுபடுவதற்கு அவர்கள் சொல்லிக்கொடுக்கவேண்டும். அவர்கள் தன்னம்பிக்கையை எல்லாம் இழந்துவிட்டார்கள். கதியற்ற வர்களாகிவிட்டார்கள். தங்கள் வேலையில் யோக்கியமாகவும், திறமைசாலிகளாகவும், மனச்சாட்சியுடனும், கஷ்டப்பட்டும் வேலை செய்பவர்களாகவும் இருப்பவர்கள், தகுதியான வேலை கிடைக்காது போய்விடுமோ என்று மனச்சோர்வு அடைந்துவிட வேண்டியதில்லை.

தொழிலாளி, குமாஸ்தா, முதலாளி ஆகிய எல்லோரும், ஒரு ஸ்தாபனத்தின் பிரித்துவிட முடியாத அங்கங்களே என்பதை உண்மையான பொருளாதாரம் நமக்குப் போதிக்கும். ஒருவருக்கொருவர், சின்னவர், பெரியவர் என்பது இல்லை. அவர்கள் நலன்கள் ஒன்றுக்கொன்று உடன்பாடுடையனவாகவும் ஒன்றை மற்றென்று நம்பி வாழ்வதாகவும் இருக்க வேண்டுமே யன்றி ஒன்றுக்கொன்று விரோதமாக இருப்பதற்கில்லை.

— 'எங் இந்தியா' - 3-5-1928

# 24

# உபாத்தியாயர்கள் நிலைமை

அகில வங்காள உபாத்தியாயர்கள் தூதுகோஷ்டி ஒன்று கொஞ்ச காலத்திற்கு முன்னல் வந்து என்னைப் பார்த்தது. தங்க ளுடைய நிலைமையை எப்படிச் சீர்ப்படுத்திக்கொள்ளுவது, எவ் விதம் நாட்டிற்குத் தாங்கள் உதவியாக இருப்பது என்பதில் தங்களுக்கு யோசனை கூறும்படி கேட்டுக்கொண்டார்கள். இப் பொழுது தாங்கள் நாட்டிற்கு அதிக நன்மை எதையும் செய்து

வரவில்லை என்பதையும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். தங்களுடைய நிலைமையைக் குறித்து அவர்கள் வருமாறு கூறினர்:

"உபாத்தியாயர்கள் தங்கள் சொந்த நலனை எவ்வளவோ தியாகஞ் செய்து, நன்றியறிதலில்லாத வேலையைச் செய்து வர வேண்டியவர்களாக இருந்து வருகின்றனர். தவறுக்கு அவர்கள் பொறுப்பல்லவெனினும் லாபமில்லாத, ருசியற்ற கல்வியை அவர்கள் போதித்து வரவேண்டியிருக்கிறது. சமய, ஒழுக்க, கைத்தொழில் பயிற்சி எதுவுமே இல்லாத ஒரு பாட முறையை அவர்கள் யந்திரம் போல் பின்பற்ற வேண்டியிருக்கிறது. 900 பள்ளிக்கூடங்களில் 20,000 உபாத்தியாயர்களைக் கொண்டு வங்காளத்தில் இன்று கொடுக்கப்பட்டுவரும் கல்வி, ஒரு பரீட்சை முறையின் கொடுமைக்குக் கீழ்ப்பட்டது. அம்முறையோ, நெட்டுருப் போடும் பழக்கத்தைத்தான் அதிகரிக்கிறது. உபாத்தியாயர்களுக்குப் பரிதாபகரமான நிலையில் குறைந்த சம்பளம் கொடுக்கப்படுவதால், அவர்கள் கேவலமாக மதிக்கப்படுகின்றனர். உபாத்தியாயர்களுக்கிடையேயும், பள்ளிக்கூட நிர்வாகிகள், பெற்றோர்களுக்கிடையேயும் பரஸ்பர சந்தேகமும், பரஸ்பர அவநம்பிக்கையும், அனுதாபமின்மையுமே அநேக இடங்களிலும் இருந்துவருகின்றன. படிப்பு, உடற் பயிற்சிக்கான காரியங்களைச் செய்யவில்லை. அந்நிய மொழியின் மூலம் இக்கல்வி அளிக்கப்படுகிறது. இதனால் தேசீய சக்தி ஏராளமாக வீணாக்கப்படுகிறது."

உபாத்தியாயர்கள் இவைகளை எல்லாம் சொன்னதோடு, மாணவர்கள் சக்தியற்றுப் போகும்படியும் தன்முயற்சியற்றவர்களாகும்படியும் இக்கல்வி செய்கிறது என்பதையும் சேர்த்துச் சொல்லியிருக்கலாம். என் பதிலை அவர்களுக்குச் சொன்னேன். அப்போதைக்கு அது அவர்களுக்குத் திருப்தி அளித்தது. ஆனால், இப்பிரச்னையைக் குறித்து இப்பத்திரிகையில் நான் எழுதுவேன் என்ற வாக்குறுதியையும் அவர்கள் பெற்றுச் சென்றார்கள்.

இந்தத் தீமையின் வேர் அந்நிய ஆதிக்கத்தில்தான் இருக்கிறது; அந்நிய ஆதிக்கத்தின் வேரோ நம்முள் இருக்கிறது என்பது என் அபிப்பிராயம். வேராகவுள்ள தீமையை நாம் சமாளித்துவிட்டாலன்றி இந்தப் பிரச்னைகளை நாம் சமாளித்துவிடவே முடியாது என்பதை நான் அறிவேன். நமக்கு நமது சொந்த அரசாங்கம் இருக்குமானால், உபாத்தியாயர்கள் தங்கள் நிலைமையை எடுத்துச் சொல்லிக்கொள்ள முடியும். நமது சொந்த அரசாங்கம் இருப்பதென்பது, பெரும்பாலான மக்களின் விருப்பத்தை ஆயுத பலங்கொண்டு நிராகரித்துவிடுவதற்கு வேண்டிய பலம் என்றும் இராத அரசாங்கமாக இருப்பது எனப் பொருள்படும். அதாவது, பொதுஜன அபிப்பிராயத்திற்குப் பொறுப்பு வாய்ந்ததாக அரசாங்கம் இருக்கும். இன்று உபாத்தியாயர்களுக்கு அநேக விஷயங்களில் பொதுஜன அபிப்பிராயம் ஆதரவாக இருந்துவருகிறது. ஆனால், இந்திய மக்களைப் பொறுத்தவரையில், அவர்கள் ஒன்றுபடுவது சாத்தியம் என்றிருக்கும் எக்காரியத்தையும் அடக்கிவிடும் ஆயுத பலத்துடனுள்ள ஓர் ஆட்சியின் முன்னால் அந்தப் பொதுஜன அபிப்பிராயம் கதியற்றதாக இருந்து வருகிறது. இந்திய அரசாங்கம், கோடிக்

கணக்கான இந்திய ஆண்களின், பெண்களின் அபிப்பிராய விஷயத்தில் பொறுப்பற்றதாகவும், உடன்படாததாகவும் இருப்பதைப் போன்று உலகத்தில் வேறு எந்த அரசாங்கமும் இல்லை. இந்த உண்மையை அறிந்துகொண்டதனுல்தான், சுயராஜ்யம் பெறுவதற்கு முயற்சி செய்வதைத் தவிர மற்றவைகளையெல்லாம் ஒத்திவைத்துவிட வேண்டும் என்ற முடிவுக்கு கோகலே வந்தார். லோகமான்யர், இதில் அதிகப் பொறுமையை இழந்துபோய், 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை' என்பது இந்தியாவின் மூலை முடுக்குகளிலெல்லாம் ஒலிக்கும்படி செய்வதைத் தமது வேலை முறையாக்கிக் கொண்டார். சுயராஜ்யமே முக்கியம் என்பதற்காக, நூல்கள், வேதாந்த ஆராய்ச்சிகளில் தமக்கு இருந்த ஆர்வத்தையெல்லாம் அடக்கிக் கொண்டார். இதே லட்சியத்தை அடைய வேண்டும் என்பதற்காகவே தேசபந்து தமது உயிரையும் கொடுத்தார். ஆகையால், உபாத்தியாயர்களைப் போன்று குறைகள் இருப்பவர்கள் எல்லோரும், எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் சுயராஜ்யத்தை அடைந்துவிடுவதைத் தவிர, அவர்கள் நோய்க்கு வேறு பரிகாரமே இல்லை. அதை அடைவது எப்படி? பரிகாரத்தை நான் குறிப்பிட்டிருக்கிறேன். அதை நாடும் மேற்கொண்டிருப்பதாகக் கருதப்படுகிறது. இதில் இருக்கும் ஒரு மாறுதல், வெளி முயற்சியுடன் உள்ளுக்குள்ளே முயற்சி செய்வதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதே. சட்டசபைப் பிரவேசமே அது. உபாத்தியாயர்கள் சட்டசபைக்குப் போக முடியாது; தீவிரமான ராஜீய காரியங்களில் அவர்கள் கலந்துகொள்ள முடியாது. ஆனுல், அவர்கள் எல்லோரும் நூற்கலாம். அவர்கள் விரும்பினுல், உடலுழைப்புள்ள ஏதாவது வேலையைச் செய்யலாம். உடலுழைப்புள்ள வேலைகளை உபாத்தியாயர்களே செய்வதில்லையென்ருல், அவர்களிடம் படிக்கும் மாணவர்கள் செய்வார்கள் என்று அவர்கள் எதிர்பார்க்க முடியாது. சொந்த லாபத்திற்காக அல்ல, கட்டுத்திட்டம் இருப்பதற்காகவும், தேசத்தின் லாபத்திற்காகவும் எல்லோரும் செய்ய முடியும் என்பதற்காகவே, நூற்க வேண்டும் என்று நான் யோசனை கூறினேன். அந்நிய அரசாங்கமாக இருந்தாலும் சரி, தேசீய அரசாங்கமாக இருந்தாலும் சரி, அரசாங்கத்தின் ஆதிக்கமில்லாமல் சுயேச்சையாக இருப்பதற்குத் தொடர்ந்து முயற்சித்து வருவதுதான் சுயாட்சி என்பதன் பொருள். வாழ்க்கையின் ஒவ்வொரு காரியத்தையும் ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்க வேண்டும் என்று மக்கள் அரசாங்கத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களானுல், சுயராஜ்ய அரசாங்கம் வருந்தத்தக்க ஒன்ருகவே இருக்கும். அவர்கள் எப்படி இருக்கிருர்களோ அதன் மிகைப்பட்ட பதிப்புக்களே மாணவர்கள் என்பதை உபாத்தியாயர்கள் அறிகிருர்களா? உபாத்தியாயர்களுக்குத் தன்முயற்சி இருந்தால், சீக்கிரத்தில் அது மாணவர்களுக்கும் இருக்கும். இப்பொழுதுள்ள பரீட்சை முறை, வெறும்

யந்திரமே போன்ற படிப்பு முறையின் காரணத்தினுல். இரட்டிப் பான வகையில் நசுக்குவதாக இருந்துவருகிறது. சில தினங் களுக்கு முன்னுல் நான் ஒரு பள்ளிக்கூடத்தைப் பார்த்து வரும் போது, என் முன்னுல் ஒரு பையன் புத்தகத்திலிருந்து பாடலீ புத்திரத்தைப் படித்தான். அதை அவன் படித்து முடித்ததும், 'பாடலீபுத்திரம் எங்கே இருக்கிறது?' என்று அவனைக் கேட்டேன். அவனுல் சொல்ல முடியவில்லை. இதில் குற்றம் அரசாங்கத்தினுடையதோ, மாணவனுடையதோ அல்ல. நிச்சய மாக இது உபாத்தியாயரின் குற்றம்தான். பரீட்சை முறையின் படுமோசமான பளு என்னதான் இருந்தாலும், உபாத்தியாயர் களுக்கு மனம் இருந்தால், அவர்கள் சொல்லிக்கொடுப்பதை ருசிகரமானதாகவும், பயனுள்ளதாகவும் செய்துவிடலாம். மேல் வகுப்புக்களில் ஆங்கிலத்தைக்கொண்டே பாடங்கள் போதிக் கப்பட்டாலும், தங்களிடம் படிக்கும் மாணவர்களின் தாய் மொழி விஷயத்திலும் உபாத்தியாயர்கள் அதிகக் கவனஞ் செலுத்த முடியும். மாணவர்களிடம் தாய்மொழியில் உபாத்தி யாயர்கள் பேசக்கூடாது என்று தடுக்கும் விதி எதுவும் இல்லை. உண்மை என்னவென்றுல், நுட்பமான விஷயங்களைச் சொல்லு வதற்குத் தாய்மொழியில் உள்ள சொற்கள் அநேக உபாத்தி யாயர்களுக்குத் தெரியாது. ஆகையால், அத்தகைய விஷயங் களைப் போதிக்கும்போது தாய்மொழியில் கூறி மாணவர்களுக்குப் புரியவைக்க அவர்களால் முடிவதில்லை. நாம் சாதாரணமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, ஆங்கிலப் பெயர் எச்சங்களையும் வினை எச்சங்களையும், ஆங்கிலச் சொற்றொடர்களையும் உபயோ கிப்பது நாகரிகம் என்று எண்ணும் ஆபாசமான பழக்கமும் நமக்கு வந்துவிட்டது. இப்பொழுதுள்ள கல்வி முறையிலுள்ள அநேகக் குறைபாடுகளை, உபாத்தியாயர்கள் விரும்பினுல், அவர்களே தீர்த்துக்கொண்டுவிட முடியும்.

இப்பொழுதுள்ள கல்விமுறையின் கீழ் செய்யக்கூடியவை யாவை என்பதற்குச் சாத்தியமான உதாரணங்கள் பலவற்றில் சிலவற்றை நான் கொடுத்திருக்கிறேன். இம்முறையிலுள்ள தீமையை நான் அறிந்திருப்பதுதான், ஒத்துழையாமையை எண் ணும்படி என்னைச் செய்தது. ஆனல், இச்சமயத்தில் அதைத் திரும்பவும் ஆரம்பிப்பது என்பது முற்றிலும் அசாத்தியமான தாகவே தோன்றுகிறது ஆகையால், சில விஷயங்களில் செய்து முடிப்பது கஷ்டமானதாக இருக்கக்கூடியவைகளைச் சிபாரிசு செய்கிறேன். சாதாரண மனிதனுக்கு. தீமைக்குள் இருந்துகொண்டு அதனுல் பாதிக்கப்படாமலிருப்பதைவிட அதிலிருந்து தூர ஓடிப்போய்விடுவது மிகவும் எளிதானது. கள்ளுக்கடைப் பக்கம் போவதையே தவிர்த்துக்கொண்டு, அநேகர் குடிப்பழக்கமில்லாதவர்களாக இருக்க முடியும். ஆனுல், கொடிய தொத்து நோயே போன்ற அந்த இடங்களில் இருந்து கொண்டு அந்நோய் தொத்திக்கொள்ளுவதைத் தவிர்ப்பது என்பது அநேகரால் ஆகாது.

என்றாலும், உபாத்தியாயர்கள் என்னுடைய யோசனைகளைக் கூறும்படி கேட்டிருக்கிறார்கள். சக்திக்கு ஏற்ற வகையில் அவற்றிற்கு அவர்கள் உடன்படட்டும் என்று என் யோசனைகளை அவர்களுக்குச் சொல்லத்தான் வேண்டும். படித்த இந்தியர் உபாத்தியாயர் தொழிலுக்குப் போகிறார்கள் என்றால், அந்தத் தொழிலில் அவர்களுக்கு இருக்கும் பிரியத்தினால் அல்ல. பிழைப்புக்கு இதைவிடச் சிறந்ததான வேலை வேறு எதுவும் கிடைக்காததனாலேயே இவ்வேலைக்குப் போகிறார்கள். இதுதான் துர்ப்பாக்கியமான நிலைமை. சிறந்த வேலை என்று தாங்கள் எதை எண்ணுகிறார்களோ அதற்குத் தங்களைத் தயார் செய்து கொள்ளுவதற்காகவும்கூட பலர் உபாத்தியாயர் வேலைக்கு வருகிறார்கள். இதில் ஆச்சரியம் என்னவென்றால், தாங்களே வருவித்துக்கொள்ளும் இந்த ஆரம்ப இடையூறு இருந்தபோதிலும், அநேக உபாத்தியாயர்கள் மோசமான நிலையில் இல்லாமல் இருப்பதுதான். ஒழுங்கான கிளர்ச்சியின் மூலம் அவர்கள் தங்கள் வருவாயைப் பற்றிய நிலைமையைச் சீர்ப்படுத்திக்கொண்டுவிடலாம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சுயராஜ்ய அரசாங்கத்தின் கீழும் அவர்களுடைய சம்பள விகிதம் இப்பொழுது இருப்பதைவிட உயர்த்தப்பட்டுவிடும் என்பதற்கு எந்த வாய்ப்பும் இருப்பதாக நான் காணவில்லை. போதிப்பதில் கொள்ளும் அன்பிற்காகவே போதிப்பது, அதற்காக வாழ்க்கைக்குப் போதுமானதை மாத்திரமே பெற்றுக்கொள்ளுவது என்ற பழங்காலக் கருத்தில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இக்கருத்தை ரோமன் கத்தோலிக்கர்கள் இன்றும் மேற்கொண்டு வருகிறார்கள். உலகத்தில் மிகச் சிறந்த கல்வி ஸ்தாபனங்கள் இருந்து வருவதற்கும் இவர்களே பொறுப்பாளிகள். புராதன காலத்திலிருந்த ரிஷிகள், இதையும்விட சிறந்த முறையில் செய்துவந்தார்கள். மாணவர்களை அவர்கள் தங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக்கிக்கொண்டார்கள். ஆனால், அந்தக் காலத்தில் அவர்கள் அளித்துவந்த படிப்பு சாதாரண பொதுமக்களுக்கானது அன்று. இந்தியாவில், மனித வர்க்கத்திற்கே உண்மையான ஆசான்களாக இருக்கக் கூடிய ஓர் இனத்தை அவர்கள் வளர்த்து வந்தனர். சாதாரண பொதுமக்கள், தங்கள் வீடுகளிலும் பாரம்பரியத் தொழில்களிலும் பயிற்சி பெற்று வந்தார்கள். இது அந்தக் காலத்திற்குச் சிறந்ததான லட்சியம். சந்தர்ப்பங்கள் இப்பொழுது மாறிவிட்டன. கல்விப் பயிற்சி இருக்கவேண்டும் என்ற கோரிக்கை பொதுவாக இன்று எங்கும் இருந்துவருகிறது. பணக்காரர்களைப் போன்றே தாங்களும் இதில் கவனிக்கப்பட வேண்டும் என்று பாமரர்களும் கேட்கிறார்கள். பொதுவாக இது எந்த அளவுக்குச் சாத்தியம், நன்மையானது என்பதைக் குறித்து இங்கே விவாதிப்பதற்கில்லை. கல்வியைப் பெற வேண்டும் என்று ஆர்வங்கொள்ளுவதில், அதனளவிலுள்ள தவறு எதுவும் இல்லை. அந்த ஆர்வத்தை நல்ல வழியில் செலுத்தினால், அதனால் நன்மையே ஏற்படும். ஆகையால், தவிர்க்க முடியாததைத் தவிர்ப்பதற்கான

வழிகளைக் கண்டுபிடிப்பதற்காக நின்றுவிடுவதைவிட, அதனுல் அடைவதற்குச் சாத்தியமான நன்மையை அடையவே பார்க்க வேண்டும். நினைத்த மாத்திரத்தில் ஆயிரக்கணக்கான உபாத்தியாயர்கள் கிடைத்துவிட மாட்டார்கள். அவர்கள் பிச்சை எடுத்து வாழ்ந்துகொண்டிருக்கவும் முடியாது. அவர்களுக்கு நல்ல சம்பளத்திற்கு உத்தரவாதம் இருக்கவேண்டும். ஏராளமான உபாத்தியாயர்களும் நமக்கு வேண்டியிருக்கும். அவர்கள் பெறும் ஊதியம், அவர்கள் உத்தியோகத்தின் நியாயமான தகுதிக்கு ஏற்றதாக இருக்க முடியாது. ஆனல், இதைக் கொடுப்பதற்கு நாட்டு மக்களுக்குள்ள சக்திக்கு ஏற்றபடியே இது இருக்க வேண்டும். ஓர் உத்தியோகத்திற்கும் இன்னுமொரு உத்தியோகத்திற்குமுள்ள தராதரங்களை நாம் அறியும்போது, நாளாவட்டத்தில் ஊதியத்தில் உயர்வு ஏற்படும் என்று நாம் எதிர்பார்க்கலாம். ஆனல், இந்த உயர்வு நிச்சயமாக மெதுவானதாகவே இருக்க வேண்டும். ஆகையால், பண லாபம் என்ன என்பதையே கொஞ்சமும் சிந்திக்காமல், தேசாபிமான நோக்கத்தின் பேரில் உபாத்திமைத் தொழிலை மேற்கொள்ளும் ஆண்களையும் பெண்களையும் கொண்ட ஒரு தனி வகுப்பு இந்தியாவில் தோன்ற வேண்டும். அப்பொழுது நாட்டு மக்கள், உபாத்தியாயர் தொழிலை மட்டமானதாக எண்ணமாட்டார்கள். இதற்கு மாருக, தன்னலத் தியாகம் செய்யும் இந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும் தாங்கள் செலுத்தும் அன்பில் முதலிடம் அளிப்பார்கள். ஆகவே, இந்த முடிவுக்குத்தான் வருகிறேம்; சுயராஜ்யத்தை அடைவது எவ்விதம் நமது சொந்த முயற்சியினுலேயே சாத்தியமோ அதே போல உபாத்தியாயர்கள் உயர்வடைவதும் அவர்களுடைய சொந்த முயற்சியினல்தான் சாத்தியம். வீரத்தோடும் பொறுமையோடும் பாடுபட்டு அவர்கள் வெற்றியை அடைய வேண்டும்.

**—'எங் இந்தியா' - 6—8—1925**

# 25

# அஸ்ஸாம் கூலிப் பிரச்னே

நான், அஸ்ஸாமில் பிரயாணம் செய்துகொண்டிருந்த போது ஒருவர், தமது மனத்திலிருந்ததையெல்லாம் கொட்டி மேலே கண்ட தலைப்பின் கீழ் எனக்கு எழுதினர். அவர் கடிதத்திலிருந்து கீழே கண்டதை எடுத்துக் கொடுக்கிறேன் :

"அப்பாவியான கூலி ஏழ்மையில் அவதிப்படுகிருன். குடிகாரனக இருக்கிறன். படிப்பில்லாதவனகவும், ஹிந்து சமூகத்தில் இழிந்த சாதிக்காரனகவும் இருக்கிறன். அவன் நிலை உண்மையில் திகைக்க வைக்கும் பிரச்னையாக இருக்கிறது. அவன் கதிக்கே அவனை விட்டுவிட்டால், அரை நூற்ருண்டுக்கும்

மேலாக அவன் இருந்து வந்திருப்பதைப் போன்றே, தன் எஜமானனுக்கு மாடு போல அடிமையாக உழைத்து வாழ்ந்துகொண்டு, குடிப்பதனல், தனது துன்பங்களை மறந்து தனது பரிதாபகரமான வாழ்க்கையைத் தள்ளிக் கொண்டு போவான். ஆனல், அவனைப் பற்றிக் கவனிக்காமல் நாம் இனியும் அலட்சியமாக இருந்து விட முடியாது. அவன் நிலை பெற்றுவிட்டான்; நம் மண்ணில் வேரூன்றிவிட்டான். நமது மாகாணத்தில் சமூக, ராஜீய, பொரு ளாதார அமைப்பில் முக்கியமான அம்சமாக இருக்கும் வகையில் கூலிகளின் தொகை அதிக அளவுக்குப் பெருகியும் விட்டது.

"கூலியை, வெளியான் என்று அலட்சியமாக இருந்துவிட முடியாது. கவனிக்க வேண்டாத அந்நியன் என்று அலட்சியமாக இருந்துவிடுவதற்கு மில்லை. அவன் விஷயத்தில் நாம் முன்பு அலட்சியமாக இருந்துவிட்டது, நமக்கு முன் யோசனை கிடையாது என்பதற்கு ஓர் அத்தாட்சியாகிறது. திக்கற் றவர்களும், ஏராளமான தொகையினருமான இந்த ஹிந்துக்களுக்கு, வாழ்க்கை என்பது தீராத தொல்லையாகவும் குடிபோதையாகவும் இருக்கிறதே யன்றி வேறு ஒன்றுமில்லை. இவர்கள் விஷயத்தில் நாம் எந்தவிதமான உணர்ச்சி யுமே இல்லாமல் இருந்துவிடுவது சரியல்ல. இவர்கள் விஷயத்தில் விசால மான நோக்கத்துடன் கவனித்து, கூலியும் நம் சமூகத்தின் ஓர் உறுப்பினனே என்றும், நம் ராஜீயத்திலும் நிரந்தரமான அம்சம் அவன் என்றும் கருதியாக வேண்டிய சமயம் வந்துவிட்டது. அவனை அணுகி, அவனை மூடியிருக்கும் அறியாமைத் திரையை நீக்கி, கல்வியின் மூலமும் தொழிலின் மூலமும் முன் னேற்றத்திற்கான வழியை அவனுக்கு நாம் சுட்டிக்காட்டியாக வேண்டிய சமயம் உண்மையிலேயே வந்துவிட்டது.

"அநேகமாக இந்தியாவின் எல்லா மாகாணங்களிலிருந்தும் கூலிகள் அஸ்ஸாமுக்கு வந்திருக்கிருர்கள். இவர்களில் அநேகர், அவருடைய சொந்த மாகாணங்களில் தீண்டாதாராகக் கருதப்படுவார்கள். பிறருடன் கலக்காமல் அவர்கள் ஒதுங்கி வாழ்வது, அவர்களுடைய பழக்க வழக்கங்கள், பாஷை வித்தியாசங்கள், அவர்களுடைய தாழ்வான பொருளாதார நிலைமை ஆகி யவைகளினல் அவர்கள் அஸ்ஸாமில் ஒரு தனியான சாதியாகவே இருந்துவரு கிருர்கள். தீண்டாதாரைப்போன்ற மோசமான நிலையிலேயே இருக்கிருர்கள்.

"அவர்கள், தங்களுடைய ஆபாசமான பழக்கங்களைக் கைவிடும்படிச் செய்து, அங்குள்ள மக்களுடன் மேலும் மேலும் நெருங்கிய தொடர்புகொள் ளுவதற்கான வசதிகளைச் செய்து கொடுத்து, ஹிந்துக்களின் சமய, சமூகப் பழக்கங்களை அனுசரித்து வரும்படி அவர்களைத் தூண்டி, எல்லாவற்றையும் விட முக்கியமாக அவர்களிடையே கல்வியைப் பரப்பி இந்தக் கூலிகளை நம் சமூகத்தைச் சேர்ந்தவர்களாக்கிவிடுவதே நாம் செய்யும் காரியங்களின் நோக்கமாக இருக்க வேண்டும்.

"கூலிகள், அதிகக் கஷ்டப்பட்டு வேலை செய்பவர்கள். சரியானபடி வசதிகளை அளித்தால், அவர்களுக்குப் போதுமானதை அவர்கள் சம்பாதித் துக் கொள்ளுவார்கள். ஆனல், அவர்களிடம் குடிப் பழக்கம் அதிக மாக இருக்கிறது. இக்குடிப் பழக்கத்திற்கு எதிராகத் தீவிரமான பிரசா ரம் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

"காந்திஜி மிகச் சொற்ப காலமே நம்முடன் தங்கப்போகிருர். என்ரு லும், இத்திக்கற்ற கூலிகளை அவர் கவனிப்பதோடு அவர்கள் எந்த நிலை

மையில் வாழ்ந்து வருகிருர்கள் என்பதையும் காந்திஜி நேரில் பார்க்க வேண்டும் என்று நம்பப்படுகிறது. கூலிகள் சம்பந்தமாக அவர் எவ்வளவு குறைந்த நேரமே உபயோகித்தாலும், ஏராளமான தகவல்கள் அவருடைய உஷாரான கண்களுக்கு வெளிப்பட்டுவிடும். அவர்களுக்கு இடையூறுகளாக அநேக கஷ்டங்கள் இருந்துவருகின்றன என்பதைக் காந்திஜி அறிந்துகொள்ளுவார் என்பதில் சந்தேகமில்லை. இந்தக் கஷ்டங்களில் முக்கியமானது பணம் இல்லாதது. அவர், இதற்கான வேலைத்திட்டத்தைத் தயாரிப்பதோடு அதை நிறைவேற்றி வைப்பதற்கான வழிதுறைகளையும் வகுப்பார் என்றும் நம்பப்படுகிறது.

''கூலிகளையும்விட இன்னும் அதிக மோசமான நிலையிலிருக்கும் துர்ப்பாக்கிய மக்கள், மற்றும் அநேகர் இருக்கிருர்கள். அவர்களைக் குறித்து இங்கே குறிப்பிடுவதும் அனாவசியமானதாக ஆகாது. மிரிஸ், மிக்ரிஸ் நாகர்கள் முதலியவர்களே அவர்கள். அவர்களையும் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது.

''என்ருலும், அஸ்ஸாம் மக்களில் தாழ்ந்த நிலையிலிருக்கும் இப்பகுதி மக்கள் எல்லோருமே ஹரிஜன சேவா சங்கத்தின் வேலைத்திட்டத்தின் கீழ் வந்துவிட வேண்டும் என்று நான் கூறவில்லை. இவர்களில் சிலர், முக்கியமாக மலைச் சாதியினர் ஹரிஜன் என்ற விளக்கத்தின் கீழ் வராதவர்களாக இருக்கலாம். ஆனால், மகாத்மா அவர்களைக் கவனிப்பதிலிருந்து அது நிச்சயமாகத் தடுத்துவிடாது.

''குறிப்பு: கடைசியாக எடுத்த ஜனக்கணக்கின்படி அஸ்ஸாம் பள்ளத்தாக்கு டிவிஷனின் மொத்த ஜனத்தொகை 48,55,711. முன்னாள் தோட்டக் கூலிகள் உள்பட மொத்தக் கூலிகள் தொகை 10,50,000. முன்பு தோட்டக் கூலிகளாக இருந்தவர்கள், தோட்ட வேலையிலிருந்து விடுதலை பெற்று, தாங்கள் முன்னால் எந்த மாகாணங்களிலிருந்து இங்கே வந்தார்களோ அந்த மாகாணங்களுக்குத் திரும்பிப் போவது என்ற எண்ணத்தையே மறந்துவிட்டு இங்கேயே குடியேறிவிட்டார்கள். இத்தகையவர்களின் சரியான எண்ணிக்கை என்ன என்பதைக் காட்டுவதற்குச் சரியான புள்ளி விவரம் எதுவும் இல்லை.''

இதை எழுதியிருப்பவர் கூறியிருப்பவைகளில் அநேகவற்றை, என் சொந்த அனுபவத்தைக் கொண்டு நான் ஒப்புக்கொள்ளுகிறேன். கூலி என்ற சொல்லே, தவருன பிரயோகமாகும். தென்னாப்பிரிக்காவில் நடந்துகொண்டு வருவதையே இது நினைவுபடுத்துகிறது. இந்தச் சொல், ஒரு தொழிலாளி; சுமை தூக்குகிறவர் என்பதைக் குறிப்பதற்குப் பதிலாகத் தென்னாப்பிரிக்காவில் ஒருவர் இன்ன தேசத்தினர் என்பதைக் காட்டுவதற்கு அவருக்கு இப்பெயர் சூட்டப்படுகிறது. ஆகவே, அது அவமதிக்கும் சொல்லாகிவிட்டது. ஓர் இந்திய வர்த்தகர், பாரிஸ்டர், அல்லது டாக்டரை, கூலி வர்த்தகர், கூலி பாரிஸ்டர், கூலி டாக்டர் என்றே சொல்லுகிருர்கள். அதே போல, அஸ்ஸாமில் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்வதற்காக இன்னொரு மாகாணத்திலிருந்து அங்கே போன இந்தியர், தொழிலாளராக வேலை செய்யப் போன அவருடைய ஒப்பந்தம் முடிந்து விட்டாலும், அவர் தொழிலாளியாக இன்னும் இல்லாமல் நிலச் சொந்தக்காரராக ஆகிவிட்டாலும், அப்பொழுதும்

அவர் கூலியாகவே இருந்துவருகிறார். ஆனால், கஷ்டப்பட்டு வேலை செய்பவர்களாகையால், அவர்கள் அஸ்ஸாமில் அதிகமாகி விட்டனர். என்றாலும், அவர்கள் ஒதுங்கி வாழ்பவர்களாகவும், பலமிருந்தும் பொது மக்களிடையே செல்வாக்கு இல்லாதவர்களாகவும் இருந்து வருகின்றனர். அவர்களை அவ்விதம் வைத்திருக்கும் கொள்கை, தற்கொலைக்குச் சமமானதாகும். அவர்களை அஸ்ஸாமை விட்டுத் துரத்திவிட முடியாது. அவர்கள் அடியோடு கவனிக்கப்படாமல் இருந்துவிட்டதால், அது பொருளாதார நஷ்டம். அவர்கள் விஷயத்தில் சரியானபடி சிரத்தை எடுத்துக் கொண்டுவந்தால், அவர்களே முதல் தரமான சொத்தாவார்கள். இப்பிரச்னையை ஆராய்ந்து, சம்பந்தப்பட்ட எல்லோருக்கும், நன்மையான வகையில் அதைத் தீர்க்க முயற்சி செய்ய வேண்டியது அஸ்ஸாமின் படித்த மக்களின் கடமை. இதற்கு அறிவும் பிரயாசையும்தான் வேண்டுமேயன்றிப் பணம் அவ்வளவாக வேண்டியதில்லை.

—'ஹரிஜன்' - 1—6—1934

# 26

# ஆள் திரட்டும் தீமை

ஸிர்ஸி (கன்னடம்) விருந்து ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார் :

*"அஸ்ஸாம் தேயிலைத் தோட்ட முதலாளியின் ஏஜண்டு ஒருவர், அத் தோட்டங்களுக்குக் கூலியாக ஆள் சேர்ப்பதற்கு ஒரு டிப்போவை ஆரம்பிக்க விரும்புகிறார். அவர், முஸ்லிம் கூலிகளைச் சேர்க்க விரும்பவில்லை. ஏனெனில், அவர்கள் பணிவாக இல்லையாம். சாந்தமாகவுள்ள ஹிந்துக்கள் மாத்திரமே வேண்டும் என்று விரும்புகிறார். பதிவு செய்து கொள்ளும் ஒவ்வொரு கூலிக்கும் ரூ. 15 கொடுப்பதாகக் கூறுகிறார். இத்தீமையை நிறுத்தி விடுவது சாத்தியமல்லவா? அவர்களுக்குப் பொய்யாக எத்தனையோ விஷயங்கள் கூறப்பட்டு வருகின்றன."*

இது மிகப் பெரிய தீமை என்பதில் சந்தேகமில்லை. அஸ்ஸாம், ஜனத்தொகையைக் குறைவாகக்கொண்ட பகுதி அன்று. கன்னடத்திலிருந்து அஸ்ஸாமுக்கு இவ்வளவு தூரம் தொழிலாளரைக் கொண்டுபோக வேண்டியிருக்கிறது என்றால், இதில் ஏதோ தவறு இருக்கிறது. ஒன்றுமறியாத கன்னட கிராம வாசிகளுக்கு, அஸ்ஸாம் தேயிலைத் தோட்ட நிலைமையை அறிவது சாத்தியமில்லை. எப்படியாவது தொழிலாளரைப் பிடித்துவிட வேண்டும் என்பதுதான் கங்காணிகளின் வேலை. ஆகையால், இதில் ஒரு கங்காணி குறுக்கிட்டதுமே, ஒப்பற்ற சுதந்திரம் என்பது போய்விடுகிறது. கன்னடக்காரர்கள் விரும்பினால், அஸ்ஸாம்காரர்களுக்குப் பதிலாக வேலை செய்ய இவர்கள் போக

வில்லை என்றால், கன்னடக்காரர்கள் முழுவதுமே வேண்டுமானு லும் அஸ்ஸாமுக்குப் போகட்டும். ஆனல், இந்த விஷயத்தில், இக் கடிதத்தில் எழுதியிருப்பதுதான் உண்மை என்று இருக்குமானல், கன்னடக்காரர்களைப் பொறுத்த வரையில், அவர்கள் விருப்பத் திற்கே இடமில்லை. அஸ்ஸாமியருக்குப் பதிலாக வேலை செய்வ தற்கு என்றல்லாமல், வெளியார் யாரும் அஸ்ஸாமுக்குப்போகவும் முடியாது. அஸ்ஸாமில் வேலையில்லாது கஷ்டப்படும் ஏழை மக்கள் இருந்துவரும் வரையில், அஸ்ஸாம் தோட்டங்களில் வேலை நடந்துதான் ஆக வேண்டும் என்றால், அங்கேயே இருக் கும் தொழிலாளரைக்கொண்டுதான் வேலை நடக்க வேண்டும்.

ஆள் திரட்டும் தீமையைத் தடுப்பதற்கான பரிகாரத்தைக் கூறும்படி எனக்குக் கடிதம் எழுதியிருப்பவர் கேட்கிறார். பொது ஜன அபிப்பிராயம்தான் சரியான பரிகாரம். இக்கடிதம் எழுதி யிருப்பவர், போதுமான அளவு ஊழியர்களைத் திரட்டட்டும். அவர்களுக்கு ஓய்வு இருக்கும்போது, அக்கம்பக்கத்துக் கிராமங் களுக்குப் போய், அவர்களைப் பிடிப்பதற்காக வைக்கப்படும் பொறியில் சிக்கிவிட வேண்டாம் என்று அக்கிராமவாசிகளை எச்சரிக்கை செய்வதையே அவ்வூழியர்கள் தங்கள் வேலையாகக் கொள்ளட்டும். இந்த ஊழியர்களில் யாராவது ஒருவர், தாம் நேரில் போயோ, அல்லது இது சம்பந்தமாகப் பிரசுரமாகியிருக் கும் பிரசுரங்களைப் படிப்பதன் மூலமோ அஸ்ஸாமிலுள்ள தொழி லாளரின் நிலைமையை ஆராய வேண்டும்.

—'எங் இந்தியா' – 2—9—1926

['குறிப்புகள்' என்ற பகுதியில் முதலில் வெளியானது.]

# 27

# பாதுகாப்பான உடை

இங்கிலாந்திலுள்ள அரசாங்க உள்துறைக் காரியாலயம், அரசாங்க உபயோகத்திற்கு என்று கவனத்துடன் பிரசுரம் ஒன்றைத் தயாரித்திருக்கிறது. 'தொழிற்சாலைகளிலும் யந்தி ரங்களிலும் வேலை செய்யும் பெண், சிறுமிகளான தொழி லாளருக்குப் பாதுகாப்பான உடை' என்று அப்பிரசுரத்திற்குத் தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரசுரத்தை எனக்கு அனுப்பியதற்காக ஸ்ரீ ஹிராலால் ஷாவின் விடாமுயற்சியோடு கூடிய உற்சாகத்திற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். இன்ன வேலைகளைச் செய்யும் பெண்களுக்கு இன்னின்ன விதமான பாது காப்பான ஆடை வேண்டும் என்று அதில் திட்டமாகக் கூறப்பட் டிருக்கிறது. தொழிலாளருக்கு விபத்தோ, தேகாரோக்கியத் திற்குத் தீங்கோ ஏற்படாமலிருக்கவேண்டும். வேலை செய்யும்

போது உடை சௌகரியமாகவும் வசதியாகவும் இருக்க வேண்டும். பெண் தொழிலாளி செய்யும் வேலையில் உபயோகிக்கும் சாமான்கள், யந்திரங்கள் ஆகியவைகளினாலோ, வேலை நடக்கும் நிலைமையினாலோ அவளுடைய சாதாரணஉடைகெட்டுப் போய்விடாமல் பாதுகாக்கவும் வேண்டும். இவற்றிற்கெல்லாம் பாதுகாப்பான உடை அவசியமாகிறது என்று அப்பிரசுரம் கூறுகிறது. கீழ்க்கண்ட காரணங்களில் எந்த ஒன்றினாலும் பாதுகாப்பான உடை பெரும்பாலானவர்கள் விஷயத்தில் அவசியமாகிறது என்றும் அப்பிரசுரம் கூறுகிறது :

1. தூசு துப்பு எழும்படியான வேலைகள்,
2. யந்திரங்களின் பக்கத்திலிருந்து செய்யும் வேலை,
3. ஏணிகளில் ஏறுவது முதலியன,
4. திராவகங்கள், காரச் சத்துள்ள திரவங்களை உபயோகிப்பது,
5. ஈரமாக இருக்கும் வேலைகள்,
6. அதிகப்படியான உஷ்ணம்,
7. காற்றிலும் மழையிலும் இருப்பது.

அதன் பிறகு, எந்த மாதிரியான உடை சிபார்சு செய்யப்படுகிறது என்பதைக் குறித்துத் தெளிவான, ஆனால் சுருக்கமான விளக்கமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. நான் மேலே கொடுத்திருக்கும் தலைப்புகளில் 31 விதமான வேலைகளுக்கு ஏழு வகையான உடைகள் கூறப்பட்டிருக்கின்றன. அப்பிரசுரத்தில் இவற்றை விளக்கி ஏராளமான படங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இங்கிலாந்திலிருக்கும் அரசாங்கம், தொழிலாளரின் வாழ்க்கை விஷயத்தில் எவ்வளவு சிரத்தையாகக் கவனிக்கிறது என்பதைக் காட்டுவதற்கும், தூசி துப்பையுள்ளதும், தேகாரோக்கியத்திற்குப் பாதகம் விளைவிக்கக்கூடியதுமான வேலைகளில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளரைப் பாதுகாப்பதற்கு மாத்திரமேயன்றி பொது மக்களைப் பாதுகாப்பதற்காகவும் சிறந்த முறைகளை அனுசரிப்பதில் எவ்வளவு கவனஞ் செலுத்துகிறார்கள் என்பதை எல்லோரும் அறியும்படி செய்வதற்காகவுமே இதை நான் கூறுகிறேன். இங்கே தீண்டாதார் என்போர், தூசு துப்பைகள் நிறைந்ததும், ஆபாசமானதுமான வேலைகளைச் செய்து வருகிறார்கள். இத்தகைய வேலைகளைச் செய்கிறவர்கள், தூசு துப்பைகளையும் அசுத்தங்களையும் தங்களுடன் கொண்டு செல்லும் உயிர்களாகவும் இருந்து வருகிறார்கள். ஆகையால், இத்தகைய வேலைகளில் ஈடுபட்டிருப்பவர்களையும், பொது மக்களையும் அவ்வித தூசு துப்பைகள், அசுத்தங்களால் ஏற்பட்டு விடும் தொத்து நோய்களிலிருந்து காப்பதற்கு, அதுவும் நம் சீதோஷ்ண நிலையில், இன்னும் எவ்வளவு அதிகமான கவனஞ்

செலுத்த வேண்டியது அவசியமாகிறது? அவர்களுடைய தீண்டாமை எந்த வகையிலும் சமூகத்தைக் காப்பாற்றிவிடுவதில்லை. இதற்கு மாருக, பாதுகாப்பு இருக்கிறது என்ற தவருன எண்ணம், தொத்து நோய் பரவி மற்றவர்களுக்கும் பற்றிக்கொள்ளும் அபாயத்தை மேலும் அதிகமாக்கிவிடுகிறது. இத்தகைய தொழிலாளர்களைச் சமூகம் கவனிக்காமல் அசிரத்தையாக இருந்துவிடுவதால், அவர்களே சுகாதாரக் கேடான காரியங்களில் ஊறிப் போய்விட்டவர்களாகிவிடுவதோடு அவர்கள் வசிக்குமிடங்களின் சுற்று வட்டாரங்களே ஆபாசத்தையும் நோயையும் பரப்பும் தொழிற்சாலைகளாகவும் ஆகி, அந்த ஆபத்து உண்மையில் இரட்டிப்பாகவும் ஆகிவிடுகிறது. எனவே, ஸ்ரீ ஹிராலால் ஷா கூறும் சீர்திருத்தங்களை எந்த விதமான தாமதமும் இல்லாமல் அனுசரித்தாக வேண்டியது அதிக அவசியமானதாகிறது. தீண்டாமை குறித்துக் குறுகிய புத்திப் போக்கை நாம் கொள்ளாமலிருந்தால், தீண்டாதார் வசிக்கும் வீடுகளுக்கு நாம் போக வேண்டும். நமது கக்கூசு முதலியவைகளுக்குள் நாம் நன்ருகக் கண்களைத் திறந்துகொண்டு போய்ப் பார்ப்பதன் மூலம் அவர்களுடைய நிலைமையைப் பரிசீலனை செய்ய நாம் ஆரம்பிக்கவேண்டும். கக்கூசுகள் முதலியவைகளில் அவசியமான சுகாதார ஏற்பாடுகள் இருக்கும்படி செய்வதோடு ஹரிஜனங்கள் வசிக்கும் இடங்களிலும் சுகாதார ஏற்பாடுகள் இருக்கும்படி செய்து, அவர்களுக்குப் பாதுகாப்பான உடைகளைக் கொடுப்பதற்கும், உடம்பைக் கழுவிக்கொண்டு உடை மாற்றிக்கொள்ளுவதற்கும் வேண்டிய சீர்திருத்தங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும். அப்பொழுது சமூகம், இதற்காக ஆகும் செலவு எதையும் அதிகம் என்று கருதாது.

—'ஹரிஜன்' – 1—4—1933

# 28

# பயங்கரமான வித்தியாசம்

சென்ற மார்ச்சு மாதம் முதன் முதலில் புது டில்லியையும் சட்டசபை மண்டபத்தையும் பார்த்த ஒரு நண்பர் கீழ்வருமாறு எழுதுகிருர் :

"மிக முக்கியமான ஒரு விஷயத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அது இதுதான்: முதன் முதலாக அன்றுதான் சட்டசபை மண்டபத்திற்குப் போயிருந்தேன். நான் புது டில்லியைப் பார்த்ததுகூட அதுதான் முதல் தடவை. புது டில்லியை அமைத்து, அது அவ்வளவு பிரமாதமானதாக இருக்கும்படிச் செய்வதற்குக் கோடிக் கணக்கில் பணம் எவ்வாறு கொட்டப்பட்டிருக்கிறது என்பதை நான் காண முடிந்தது. சட்டசபை மண்டபம்கூட அதே போலக் கம்பீரமான தோற்றத்தையே அளிக்

கிறது. ஆனால், சட்ட சபை மண்டபத்திலிருந்து வெளியே வந்ததும், அதிக மோசமான நிலைமையிலிருந்த குடிசைகளையும் பார்த்தேன். அது தொழிலாளர் முகாம் என்று தெரிந்தது. புது டில்லியை நிர்மாணிக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்கள் அக்குடிசைகளில்தான் வசிக்கிறார்கள் என்று எண்ணினேன். அம்முகாமுக்குள் போய்ப் பார்த்தேன். அக்காட்சி என் மனம் மிகவும் வேதனைப் படும்படிச் செய்துவிட்டது. தொழிலாளர் வசிப்பதற்குக் கொடுக்கப்பட்டிருந்த குடிசைகள், மனிதர் வசிப்பதற்கே தகுதியற்றவை என்பதைக் கண்டேன். நாளெல்லாம் பாடுபட்டு உழைக்கும் இத்தொழிலாளர், தங்களுக்கு அவசியமான ஓய்வைப் பெறுவதற்குப் போய்த் தங்கும் இடமே இப்பாழடைந்த குடிசைகள். சில இடங்களில் சுவர்கள் சுண்ணும்போ, மண் சாந்தோ இல்லாமல் இருந்தன. வெறும் செங்கற்கள் ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கப்பட்டு மாத்திரமே இருந்தன.

"பணம் படைத்தவர்கள் வசிப்பதற்குப் புது டில்லியில் கட்டப்படும் அரண்மனைகளையும், இந்த அரண்மனைகள் தோன்றுவதற்கு யாருடைய உழைப்பு காரணமோ அம்மக்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பரிதாபகரமான குடிசைகளையும் பார்க்கும்போது, இவைகளுக்கிடையே உள்ள வித்தியாசம் எண்ணிப் பார்ப்பதற்கும் பயங்கரமாக இருக்கிறது. கூலிப்பெண்கள் இதைப்பற்றியே கவலைப்படவில்லை என்று தோன்றுகிறது. மாலை நேரத்தில் தான் இத்தொழிலாளர் முகாமை நான் பார்த்தேன். வேலை செய்துவிட்டுப் பெண்கள் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். பாட்டுப் பாடிக்கொண்டே வந்தார்கள். ஆனால், என் உள்ளமோ அழுதது. தொழிலாளர்கள் இவ்வளவு படுமோசமான குடிசைகளில் வாழ வேண்டி இருக்கும்போது, பெரிய அதிகாரிகளும் பணம் படைத்தவர்களும் சௌகரியமாக வாழ வேண்டும் என்பதற்காக அரசாங்கம் எவ்விதம் கோடிக் கணக்கில் செலவிடலாம்? புது டில்லிக்கு வந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் என்னால் பார்க்க முடிந்துவிட்ட இந்தப் பயங்கரமான வித்தியாசத்தை சட்ட சபை உறுப்பினர்கள் ஒவ்வொரு நாளும் காண எப்படித் தவறி விடுகிறார்கள்? இதையும் என்னுள்ளேயே எண்ணினேன். எத்தனையோ விஷயங்களைப்பற்றி அவர்கள் பேசுகிறார்கள். எத்தனையோ தீர்மானங்களைக் கொண்டு வருகிறார்கள். ஏழைகளும், வாயில்லாப் பூச்சிகளும், எதையுமே அறியாதவர்களுமான இந்த ஏழைத் தொழிலாளரைக் குறித்து ஒரு வார்த்தை சொல்லக் கூடாதா? தங்களுடைய பரிதாபகரமான குடிசைகளில் வாழ்ந்து, புது டில்லியின் பயங்கரமான குளிர் நிறைந்த இரவுகளை இத்தொழிலாளர்கள் எப்படிக் கழித்திருப்பார்கள் என்பதை எண்ணிப் பார்த்திருக்கக் கூடாதா? சட்ட சபை மெம்பர்கள் யாரிடமும் நான் எதுவும் சொல்லவில்லை. ஆனால், இந்த விஷயத்தில் தாங்கள் ஏதாவது செய்யக் கூடாதா? யாரிடமும் எனக்குச் செல்வாக்கு இல்லாததால் யாரிடமும் நான் எதுவும் சொல்லவில்லை, ஆனால், ஏதாவது செய்ய வேண்டியது அவசியம் என்று தாங்கள் எண்ணக் கூடும். நீங்கள் ஏழைகளின் நண்பர். அவர்களுக்கு ஏதாவது நிவாரணம் அளிப்பது உங்களால் சாத்தியமாகலாம். எப்படியும் என் மனத்திலிருக்கும் சுமையை உங்களிடம் நான் சொல்லாமல் இருக்க முடியவில்லை."

நியாயத்தைக் கூறும் இந்நண்பர், ஹிந்தியில் எழுதியிருக்கிறார். அக்கடிதத்திலுள்ள முக்கியமான விஷயங்களை நான் சுருக்கிக் கொடுத்திருக்கிறேன். தொழிலாளரின் நிலைமைக்கும்

முதலாளிகளின் நிலைமைக்குமிடையே அக்கிரமமான வித்தியாசம் இருந்து வருவது, இக்காலத்தில் புதிய விஷயமே அல்ல. நண்பர் புதிதாக இப்பொழுது கண்டுகொண்டிருப்பது, பல நூற்றுண்டுகளுக்கு முன்னுல் கௌதம புத்தர் கண்டுகொண்டதையே என் நினைவுக்குக் கொண்டு வருகிறது. அவர் கண்டு கொண்டது புதிய விஷயமே அல்ல. ஆனுல், முதுமையையும், நோயையும், வாழ்க்கையின் மற்றத் துன்பங்களையும் பார்த்ததால், அவருக்கு ஏற்பட்ட அதிர்ச்சி, அவருடைய வாழ்க்கையில் மாறுதல் ஏற்படும்படி செய்ததோடு உலகத்திற்கும் அதனுல் எவ்வளவோ நன்மை ஏற்படும்படி செய்தது. இந்தப் பெண் மணிக்கும் முதல் தடவையாக அதிர்ச்சி ஏற்பட்டிருப்பதும் நல்லதே. இவரும், பண்பாடு பெற்றிருக்கும் மற்ற இந்தியப் பெண்களும், இக்கடிதம் எழுதியிருப்பவர் எந்தத் தொழிலாளரைக் குறித்து இப்பொழுது பரிதாபத்துடன் எழுதுகிருரோ அவர்களுடைய செலவில்தான் தங்கள் கல்வியைப் பெற்றிருக்கிருர்கள். இப்பெண்கள், இவ்விஷயத்தில் இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து பார்த்து, அவர்களுடைய நன்மைக்கானவைகளைக் கவனித்து, ஏதாவது கொஞ்சம் பிரதிவுபகாரத்தை இத்தொழிலாளருக்குச் செய்ய முற்படுவார்களாயின், அவர்களுடைய துயர நிலை சீர்ப்படுவதற்கு அதிக காலமாகி விடாது. இந்தியாவில் நாம் பார்க்கும் ஒவ்வோர் அரண்மனையும் இந்நாட்டின் செல்வத்தை எடுத்துக் காட்டவில்லை. ஆனுல், செல்வம் சிலருக்கு அளிக்கும் சக்தி செய்துவரும் அவமதிப்பையே இது காட்டுகிறது. ஆனுல், அந்தச் சிலரோ, இந்தியாவின் கோடிக்கணக்கான பரம ஏழைகளின் பரிதாபகரமான உழைப்பிற்குத் திரும்பச் செய்யக் கடமைப்பட்டவர்கள். நமக்கு இருக்கும் அரசாங்கமோ, பாடுபட்டு உழைக்கும் கோடிக்கணக்கான மக்களைச் சுரண்டுவதையே அடிப்படையாகக் கொண்டிருப்பதோடு அதற்காக மாத்திரமே அது இருந்தும் வருகிறது.

இன்னுமொரு நாள் ஒரு நண்பர் ஓர் இங்கிலாந்துப் பத்திரிகையிலிருந்து ஒரு செய்தியைக் கத்தரித்து எனக்கு அனுப்பியிருந்தார். ஓர் ஆங்கிலேயருக்கு, இந்தியாவில் அவருடைய தேவைக்கு ரூ. 1,500 போதுமானது அல்ல என்று அப்பத்திரிகை கூறுகிறது. மாதம் ரூ. 1,500-க்கு மேல் கிடைக்காவிட்டால் இந்தியாவுக்குப் போக யாரும் துணிந்துவிட வேண்டாம் என்று அப்பத்திரிகை ஆங்கிலேயரை எச்சரிக்கையும் செய்திருக்கிறது. இருக்க வேண்டும் என்று சொல்லப்படும் தரத்தைக் குறித்து நமக்கு எந்த விதமான சச்சரவும் இல்லை. அப்பத்திரிகையில் எழுதியிருப்பவரின் கருத்துப்படி மாதம் ரூ. 1,500 கொஞ்சமும் போதாத ஊதியம் என்று ஆகிறது. ஏனெனில், கிளப் வாழ்க்கை, மோட்டார் கார், உஷ்ணம் அதிகமாக இருக்கும் மாதங்களில் மலை வாசத்திற்குப்போவது, இங்கிலாந்தில் குழந்தைகளைப் படிக்க வைப்பது ஆகியவை குறைந்த பட்சத் தேவைகள் என்று அவர் கருதுகிருர். அத்தியாவசியமான குறைந்த

பட்சத் தேவை இதுதான் என்ருல், இது சம்பந்தமாக ஒருவர் சொல்லக்கூடியதும், சொல்லியாக வேண்டியதும் ஒன்றே ஒன்று தான் : ஆங்கில அதிகாரிகளின் சேவை நன்மையானது என்று எவ்வளவுதான் காட்டப்பட்டாலும், அந்தத் தரம் இந்தியா வுக்குக் கொஞ்சமேனும் கட்டுபடியாகாத தரம். பாடுபட்டுக் கொண்டிருக்கும் கோடிக்கணக்கான மக்கள் உயிர் வாழ வேண்டு மாளுல், நன்மையான இந்த உத்தியோகஸ்தர்கள் இல்லா மலேயே இந்தியா சமாளித்துக்கொள்ள வேண்டியதுதான். அந்த நன்மை, இந்திய மக்கள் பணம் கொடுக்க முடிவதற்கு மிஞ்சியதாக இருக்கிறது என்பதுதான் இதற்கு முக்கியமான காரணம். இந்திய மக்களில் கோடிக்கணக்கானவர்களே, ஏதா வது ஒரு ஹிமாலய மேட்டுப் பிரதேசத்திற்குக் கொண்டுபோய் குடியேற்றி விடுவது முடிந்தால், இந்த உலகத்தில் அவர்கள் உயிர் வாழும் நாட்கள் இரட்டிப்பாவது சாத்தியம் என்று காட்ட முடியும் என்று நான் கருதுகிறேன் என்று வைத்துக் கொள்ளு வோம். ஆனல், அது தங்களால் ஆகாத யோசனே என்று சொல்லி அம்மக்கள் சிரித்துவிடுவார்கள்.

புது டில்லியில் அப்பெண்மணி பார்த்ததெல்லாம், வளர்ந்து கொண்டே போகும், ஆயிரக்கணக்கான மக்களின் உயிர்களைத் தினமும் நாசப்படுத்திக்கொண்டிருக்கும், ஆழ வேர் ஊன்றிவிட்ட நோயின் சிறு அறிகுறியையே ஆகும். உற்சாகமுள்ள சட்டசபை மெம்பர் ஒருவர், தொழிலாளருக்கு இன்னும் நல்லதான வீட்டு வசதியைச் செய்து கொடுக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானத்தைக்கொண்டு வரலாம். அத்தீர் மானம் அரசாங்கத்திஞல் நிராகரிக்கப்படாமலும் இருக்கலாம். இந்தத்தொழிலாளரைவிட இன்னும் அதிக ஏழைகளான கோடிக் கணக்கான மக்களின் செலவில் அத்தீர்மானத்தை அரசாங்கம் சந் தோஷமாக நிறைவேற்றி வைக்கும் என்பதும் சாத்தியமாகலாம். நியாயமான நண்பர் ஒருவர் உண்மையில் விரும்பக்கூடியது இது வல்ல என்பது நிச்சயம். தேசத்தின் நிலைமையை அறிந்த ஒவ்வோர் இந்தியரையும் போன்றே இப்பெண்மணி விரும்புவ தெல்லாம், அளவுக்கு மிஞ்சிய செலவுள்ளதாக இருக்கும் அர சாங்கத்தின் முறையில் மாறுதல் ஏற்பட வேண்டும் என்பதே. இந்த அரசாங்கத்தின் பளு, இந்நாட்டின் ஏழை மக்களை நாளுக்கு நாள் நசுக்கிக்கொண்டே வருவதோடு, அவர்கள் அடியில் கிடந்து தவித்துக் கொண்டுமிருக்கிருர்கள். இந்தக் கஷ்டமான நிலைமையிலிருந்து தப்புவதற்குள்ள வழியை எத்த னையோ தடவைகள் நான் குறிப்பிட்டுக் கூறி வந்திருக்கிறேன். இதைத் தவிர வேறு வழி எனக்குத் தெரியாது.

— ' எங் இந்தியா ' – 28—4—1927

# 29

# ஏழைகளுக்கு வீட்டுவசதி

பெங்களூர் முனிசிபாலிடி, 18 ஏக்கர் விஸ்தீரணமுள்ள அழகான திறந்த வெளியில் ரூ. 1,05,000 செலவில், தனது கீழ்ச் சிப்பந்திகளுக்காக 250 வீடுகளைக் கட்டியிருப்பது சிறந்த காரியம் என்று என்னுடைய பெங்களூர் குறிப்பில் நான் சொல்லியிருக்க வேண்டும். இந்த வீடுகளெல்லாம் தனித்தனியாக இருக்கின்றன. அவைகளில் நல்ல காற்றோட்டமும் இருக்கிறது. அந்த வீடுகளுள்ள பகுதிக்கு ஒரு பள்ளிக்கூடமும் இருக்கும். ஒரு வைத்தியசாலை, தண்ணீர்க் குழாய்கள், விளக்கு வசதி, ஒரு விளையாடுமிடம் ஆகியவைகளும் இருக்கின்றன. சென்ற ஜூன் 24–ஆம் தேதி இவ்வீடுகளைத் திவான் ஆரம்பித்து வைத்தார்.

இக்குடியிருப்பு இடங்களை வந்து பார்க்கும்படி காந்திஜியை அழைத்திருந்தார்கள். அவர் ஒரு குடிசைக்குள் போய் எல்லாவற்றையும் விவரமாகப் பார்த்தார். சம்பந்தப்பட்டவர்களிடம் காந்திஜி கூறியதாவது : “ முனிசிபாலிடி தனது சிப்பந்திகளுக்கு இந்த வசதிகளைச் செய்து கொடுத்திருப்பதைக் குறித்து நான் சந்தோஷமடைகிறேன். ஆனால், இந்த வசதிகள் போதுமானவை அல்ல என்று நான் சொல்லாமலிருக்க முடியாது. சில தினங்களுக்கு முன்னால், கோலார் தங்க வயல் தொழிலாளரின் குடிசைகளுக்கு என்னை அழைத்துச் சென்றார்கள். அக்குடிசைகள் மனிதர் குடியிருப்பதற்கு ஏற்றவை அல்ல என்று நான் சொல்ல வேண்டியிருந்தது. அந்தச் சுரங்கக் கம்பெனி 30 முதல் 40 சதவிகிதம் வரையில் பங்குதாரர்களுக்குக் கொழுத்த லாபம் கொடுத்துவரும்போது, இந்த லாபத்தை அவர்களுக்குச் சம்பாதித்துக் கொடுத்துக்கொண்டிருப்பவர்கள், இத்தகைய படுமோசமான குடிசைகளில் வாழும்படிச் செய்யப்பட்டிருப்பது கொடுமையானதாகவே எனக்குத் தோன்றியது. இங்கே நீங்கள் கட்டியிருக்கும் குடிசைகள் நிச்சயமாக அவற்றைவிட மேலானவையே. இவை, நல்ல இடத்தில் இருப்பதோடு காற்றோட்டமுள்ளவை. கல்யாணமாகாதவருக்குக் குடிசை, கல்யாணமானவருக்குக் குடிசை, குழந்தைகளோடு கூடிய தம்பதிகளுக்குக் குடிசை என்று குறைந்தபட்ச வசதிகளோடுகூடிய தரங்கள் இருக்க வேண்டும். வயதான குழந்தைகளுடன் கணவனும் மனைவியும் ஒரே அறையில் தூங்கக்கூடாது என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தனியாக இருப்பது என்பதற்கு இவற்றில் வசதியே செய்யப்படவில்லை. தங்கள் ஏழைச் சிப்பந்திகளுக்குத் தலைக்கு இத்தனை அடி இடம்தான் என்று முனிசிபாலிடிகள் ஏன் அளந்து கட்டவேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை. இக்குடிசைகளுக்கு இன்னும் ஓர் அறையும், ஒரு

தாழ்வாரமும் முற்றிலும் அவசியம். ஹரிஜன சிப்பந்திகளுக்கும் இதே வசதிகளைச் செய்து கொடுப்பதென்று யோசித்திருக்கிறீர்கள் என்பதைக் குறித்துச் சந்தோஷம் அடைகிறேன். ஆனால், அவர்களுக்கு வீடுகளைக் கட்டும்போது தயவு செய்து இந்த யோசனையை மனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். இன்னும் அநேக முனிசிபாலிடிகள், மிகக் குறைந்த சம்பளம் வாங்கும் தங்கள் சிப்பந்திகளுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்காமல் இருக்கின்றன என்பதை மன வேதனையுடன் கூறுகிறேன். நமது ஊழியர்களில் மிகவும் அத்தியாவசியமாக இருப்பவர்களுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையை நாம் எப்பொழுதுதான் உணரப் போகிறோம் என்பது எனக்குத் தெரியவில்லை. சீக்கிரத்தில் நாம் உணராதுபோனால், நமது சமூகத்திற்குச் சீக்கிரமாக அழிவு ஏற்பட்டுவிடும். சமூகம் தன்னைத்தானே திருத்திக் கொள்ளாதுபோனால் அதற்கு அழிவு ஏற்பட்டே தீரும்."

— 'ஹரிஜன்' - 11—7—1936

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடித'த்திலிருந்து எடுத்தது.]

# 30

# ஏழைகளை மறவாதீர்

முஸோரியில் தொழிலாளரின் வாழ்க்கை நிலை மிகவும் மோசமானதாக இருக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சிறிய, அதிகக் கூட்டமுள்ள, ஆபாசமான, துர்நாற்றமடிக்கும் அறைகளில் அவர்கள் வசிக்கிறார்கள். இதைக் குறித்து யாரும் அலட்சியமாக இருந்துவிட முடியாது. எல்லா உயிரும் ஒன்றே. தங்கள் வீட்டை மாத்திரம் சுத்தமாக வைத்துக்கொண்டு அக்கம் பக்கத்தார் வீடுகள் விஷயத்தில் அலட்சியமாக இருந்துவிடுவார்களானால், தொத்து நோய்கள் போன்றவைகளால் அவர்கள் கஷ்டப்படவே நேரும். மேற்கத்திய நாடுகளில் பிளேக் நோயை ஒழித்துவிட அவர்களால் முடிந்திருக்கிறது. தென்னாப்பிரிக்காவில் ஜோகன்னஸ்பர்க் முனிசிபாலிடி, உடனே தீவிரமான நடவடிக்கை எடுத்துக்கொண்டதன் மூலம் பிளேக் நோய் பரவுவதைச் சரியானபடி தடுத்துவிட்டதோடு அந்நோய் திரும்ப வரவே இல்லை என்பதை நான் நேரில் பார்த்திருக்கிறேன். ஆனால், இந்தியாவில் அது திரும்பத் திரும்ப வந்துகொண்டிருக்கிறது. அது பெருவாரி தொத்துநோயாகவே போய்விட்டது. இதற்குப் பரிகாரம் உங்கள் கையில்தான் இருக்கிறது. நாம் நம்முடைய சொந்த விஷயத்தில் சுகவழி, சுகாதார முறைகளை அனுசரிப்பதோடு நம் அக்கம்பக்கத்திலிருக்கும் ஏழைகளும் அவற்றை அனுசரிக்கும்

படி பார்க்கவேண்டும். அவ்விதம் செய்யாமல் இருந்து விடுவது பாவம். இதற்கான தண்டனையிலிருந்து தப்பவே முடியாது. பணக்காரர்கள் ஏழைகளை மறந்துவிடாமல், தங்கள் செல்வத்தை ஏழைகளுடன் பகிர்ந்துகொள்ளுவார்களானால், மற்றவர்களைக் கஷ்டத்திற்குள்ளாக்கி, ஏழ்மைப்படுத்தி அச்செல்வம் சம்பாதிக்கப்படாததாக இருப்பின், அவர்களிடமிருக்கும் செல்வத்தைக் குறித்து எனக்கு ஆட்சேபணை இல்லை.

—'ஹரிஜன்' – 16—6—1946

[பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்தது. ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடித'த்தில் முன்னால் பிரசுரமானது.]

# 31
# பிச்சையல்ல, நியாயம்

காந்திஜிக்கும் காலஞ்சென்ற கஸ்தூரிபாய் காந்திக்கும் மனத்திற்கு மிகவும் பிடித்தமானது நூற்பு. இந்த வருட இந்தியப் பஞ்சாங்கத்தின்படி கஸ்தூரிபாய் காந்தியின் இறந்த தினமும் காந்திஜியின் 78-வது பிறந்த நாளும் ஒன்றாக ஒத்துக்கொண்டன. ஆகையால், தோட்டிகள் முகாமில் வருடாந்தர விழா நிகழ்ச்சிகளில் நூற்பு நடவடிக்கைகளே ஏதாவது ஒரு வகையில் முக்கியமாக இருந்தன.

அன்றைய நிகழ்ச்சிகள், கொடியேற்றம், கொடி வணக்க வைபவத்துடன் ஆரம்பமாவதற்கு இருந்தன. டாக்டர் ராஜேந்திர பிரஸாத் இதை நடத்தி வைப்பது என்றும் இருந்தது. இந்த ஏற்பாடுகளைக் கவனித்துவந்த உள்ளூர் நண்பரொருவர், இக்கொடி வணக்க வைபவத்திற்குப் பிறகு ஹரிஜனக் குழந்தைகளுக்கும் தொண்டர்களுக்கும் சிற்றுண்டிகளை அளிப்பதற்குத் திட்டம் போட்டிருந்தார். இது விஷயம் அன்று விடியற்காலையில் அகஸ்மாத்தாகக் காந்திஜிக்குத் தெரிய வந்தது. இதை அறிந்து அவர் திடுக்கிட்டுவிட்டார். அவர் வழக்கமாகச் செய்வதைப் போன்று, இதன் காரணத்தைத் தம்முள்ளுக்குள்ளேயே ஆராயத் தொடங்கினார். தமது தோழர்கள் ராட்டையின் உட்பொருளை மறந்துவிட்டார்கள் என்றே அவருக்குத் தோன்றியது. அன்று மாலை நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் அவர் அதை விளக்கிச் சொன்னார்: "நாம் எல்லோரும் ஒன்று; ஒருவர் இன்னொருவரைவிட உயர்ந்தவர், பணக்காரர் என்று இல்லாமல் உலகத்தின் பொருள்களை எல்லோரும் சமமாகப் பகிர்ந்துகொள்ளுவதற்காகப் பிறந்திருக்கிறோம் என்பதை ராட்டையின் கீதம் இனிமையாகக் கூறிக்கொண்டிருக்கிறது. ஆனால், இன்றைய

உலகத்தில் செல்வத்தில் சமத்துவமின்மை நிறைய இருந்துவருகிறது. உயர்வு, தாழ்வு என்ற மோசமான வித்தியாசங்களும் இருக்கின்றன. இது தவறு. சாவு, பேதா பேதம் பார்ப்பதில்லை. ஒரு நாளைக்கு அது எல்லோரையும் மண்ணோடு மண்ணாக ஒன்றாகத்தான் நம்மைச் செய்துவிடப்போகிறது. நமது அகந்தையினால் அதை நாம் மறந்துவிடுகிறோம்.

''இரண்டாவது பாடம், எல்லோரும் பாடுபட்டு உழைத்து அதைக்கொண்டு சாப்பிடவேண்டும் என்பது. இதை 'உழைப்பின் சோறு' என்று ரஷ்யப் பெரியார் கூறுகிறார். மூன்றாவது பாடம், மக்களில், மக்களுடன் நாமும் ஒன்றே என்றால், தேவையில்லாதவர்களுக்குச் சோறு போட நாம் மறுத்துவிட வேண்டும்; நம் தேகாரோக்கியத்திற்கு வேண்டியதற்கு மேல் நாம் சாப்பிடவும் கூடாது. நாம் எல்லோரும் இவ்வாறு செய்வோமானால், இந் நாட்டில் உணவுப் பஞ்சமே இருக்காது. உணவுப் பொருள்களுக்கு வெளிநாடுகளைப் பார்த்துக்கொண்டிருக்கவும் நாம் மறுத்துவிடுவோம். என்றாலும், என்னுடன் நெருங்கி இருக்கும் தோழர்கள், டாக்டர் ராஜேந்திர பிரஸாத்தினால் கொடி வணக்கம் முடிந்தபிறகு தொண்டர்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் சிற்றுண்டி வழங்கும் தவறைச் செய்ய இருக்கிறார்கள். தொண்டர்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் அச்சிற்றுண்டி தேவையில்லை. இவர்கள் பட்டினியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. இவர்களுக்குச் சிற்றுண்டியைக் கொடுத்து, இருபது மனிதர்களை உயிரோடு வைத்திருக்கக்கூடிய உணவுப் பொருள்களை விரயமாக்கிவிடுவது பெரிய குற்றம் அல்லவா? இப்படிச் சிற்றுண்டி அளிப்பதனால் தாங்கள் ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதாக எண்ணுவார்களானால், இவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்ளுகின்றனர். ஹரிஜனங்களுக்கு உண்மையாகவே தீர்க்க வேண்டிய பசி, சில கவளங்கள் உணவைக் கொடுப்பதனால் தீரக்கூடியது அல்ல. ஆனால், சுயமதிப்புள்ள, சமத்துவமான பிரஜை என்ற முறையில் நியாயமான வாழ்க்கைக்கு அவர்களுக்கு வழி செய்யவேண்டும். அவர்களும் மனிதர்கள் என்ற வகையில் அவர்களுக்கு நியாயத்தைச் செய்ய வேண்டும். பயத்திலிருந்து விடுதலையும், சுத்தமான, சுகாதாரப் பழக்கங்களும், சிக்கனமும், உழைப்பும், கல்வியும் அவர்களுக்கு உண்டாகும்படி பார்க்க வேண்டும். இதற்கு நம்மைப் பொறுத்தவரையில் விடாமுயற்சியும், தன்னலத் தியாகமும், பொறுமையோடுகூடிய புத்திசாலித்தனமான உழைப்பும் வேண்டும். ஹரிஜனங்களுக்குச் சோறு போடுவதற்கு என்று என்னிடம் யாராவது பணம் கொடுத்தால், அதை வாங்கிக்கொள்ள நான் மறுத்துவிடுவேன். ஏனெனில், அவர்களைப் பிச்சை எடுப்பவர்களாகவும், சோம்பேறிகளாகவும் ஆக்கிவிட நான் விரும்பவில்லை. டாக்டர் ராஜேந்திர பிரஸாத் உணவு மந்திரி. பட்டினி கிடப்பவர்களுக்காக ஒவ்வொரு கவளம் சோற்றையும் மிச்சப்படுத்த அவர் விரும்புகிறார் என்ற உண்மையையும் இங்கே

குறிப்பிடுகிறேன். இந்த நிலைமையில் என் தோழர்களே இத்தவற்றைச் செய்ய முற்பட்டார்களென்றால், என் விஷயத்திலேயே நான் கண்டிப்பாக இல்லாது போனது அதற்குக் காரணம் அல்லவா? என் முன்னால் கொண்டுவந்து வைக்கப்படும் பழங்களை நான் தாராளமாக உபயோகித்துக்கொள்ளுவதில் என்னை நானே தாராளமாக அனுமதித்துக்கொண்டிருக்கிறேன் அல்லவா? ராட்டையின் படிப்பினையை நாம் உண்மையில் அறிந்துகொள்ளுவதாயின், நேற்றைய பாடம் நம் எல்லோருக்குமே கடுமையான எச்சரிக்கையாகும்.''

—'ஹரிஜன்' - 29—9—1946

[இது முன்னால் ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடித'த்தில் 'எழுபத்தெட்டாம் பிறந்த தினம்' என்ற தலைப்பில் வெளிவந்தது.]

# 32

# தொழிலாளர் நிலை சீர்ப்பட

ஸ்ரீ காந்திக்கும், ஒத்துழையாமை இயக்கத்தில் சம்பந்தப்பட்டுள்ள மற்றவர்களுக்கும்,

கனவான்களே,

உங்கள் ஒத்துழையாமை இயக்கம் இந்தியாவை எங்கே கொண்டுபோய் விடப்போகிறது என்பதைக் குறித்து எப்பொழுதாவது நீங்கள் யோசித்துப் பார்த்தது உண்டா? என்னை அனுமதிப்பதாக இருந்தால், நான் அஸ்ஸாமுக்காகப் பேசுகிறேன். நீங்கள் போக்க எண்ணும்தீமைகளுக்குப் பரிகாரம்சட்டமேயன்றி ஒத்துழையாமை அல்ல என்றே கூறுவேன். முதலில் சட்டமும், அதன் பிறகு கட்டாயக் கல்வியுமே வேண்டியவை. அஸ்ஸாமிலிருக்கும் கூலிகளை, ஐரோப்பியர் நிர்வாகத்திலிருக்கும் தேயிலைத் தோட்டங்களிலெல்லாம் ஐரோப்பியர்கள் நன்றாகவே கவனித்துக் கொண்டு வருகின்றனர். ஆனால், அந்தத் தோட்டங்களில்கூட, ஏழைக் கூலிகளிடமிருந்து நியாயமில்லாத முறைகளைக்கொண்டு பணம் பறிப்பதற்கு, உங்கள் சொந்த நாட்டினரைப் பொறுத்தவரையில் ஆர்வம், இருக்க வேண்டியதற்கு அதிகப்படியாகவே இருந்துவருகிறது என்பதைச் சொல்ல வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். தேயிலைத்தோட்டங்களில் கொடுக்கப்படும் கூலி, நன்றாகவே இருந்துவருகிறது. என் கூலிகள் மாதம் (1920 செப்டம்பரில் அரசாங்கக் கணக்குப்படி) ஆண்கள் சராசரி ரூ. 10-3-8, பெண்கள் ரூ. 6-12-8, குழந்தைகள் ரூ. 4-15-9 சம்பாதிக்கிறார்கள். இந்தக் கூலியல்லாமல், இனமாக விறகு, இனமாக மருந்து, வைத்திய வசதி, இனமாகக் குடியிருப்பு வீட்டு வசதி, இனமாக மேய்ச்சல் இடம் முதலியவை கொடுக்கப்படுகின்றன. பஞ்ச நிலைமை இருக்கும்போது, கடை விலைக்கு அதிகக் குறைவான

விலைக்கு இவர்களுக்கு அரிசியும் கொடுக்கப்படுகிறது. அஸ்ஸாமிலிருக்கும் எல்லாத் தேயிலைத் தோட்ட கூலிகளுக்கும் இந்தச் சௌகரியங்களெல்லாம் செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன. "குதிரையைத் தண்ணீர்த் தொட்டிக்குக் கொண்டு போகலாமேயன்றி அது தண்ணீர் குடிக்கும்படி செய்ய முடியாது." அதே போல ஒரு கூலியை வேலைக்குக் கொண்டுபோகலாமேயன்றி அவன் வேலை செய்யும்படி நீங்கள் செய்ய முடியாது. உலகத்திலுள்ள எல்லாத் தொழில்களிலுமே மனிதன் வேலை செய்தாக வேண்டும். நான் கூறும் இதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள் என்பது நிச்சயம். தேயிலைத்தோட்டங்களில் செய்யும் வேலைக்குக் கூலி என்றும் ஆள் வைக்கப்படுகிறது. ஒரு கூலி, வேலை அதிகம் இருக்கும்போது தினத்திற்கு 8 அணு முதல் 10 அணு வரையில் சுலபமாக சம்பாதிக்கலாம்; ஒரு பெண் 4 அணுமுதல் 6 அணுவரை சம்பாதிக்கலாம். இவர்கள் மேலே சொன்ன வசதிகளை எல்லாம் பெற்றுக்கொண்டு வேலை செய்யும்போது, கூலிகள் விஷயத்தில் தேயிலைத் தோட்டக்காரர்கள் தங்கள் கடமையைச் செய்யவில்லை என்று ஒத்துழையாமைக்காரர்களாகிய நீங்கள் உண்மையோடு கூற முடியுமா? முடியாது. ஏழைக் கூலி, அவன் இருந்து வந்ததாகக் கருதப்பட்டதைப் போல அவ்வளவு முட்டாள் அல்ல. இப்பொழுதெல்லாம் அவர்களை வருத்தி வேலை வாங்கிவிடவும் முடியாது. இதை உங்கள் நாட்டினர் உணர ஆரம்பித்து விட்டார்கள். வேறு இடத்திலிருந்து பணம் வரவேண்டியிருப்பதால், அவனுக்குப் போதிய கூலி கொடுக்கவில்லை, அவனை வருத்தி வேலை வாங்குகிறுர்கள், அவனை அவமதிக்கிறுர்கள் என்று அநேக பொய்களையெல்லாம் சொல்லி, அப்பணத்தைக் கூலிகள் மூலம் எடுத்துக்கொள்ள நீங்கள் முயற்சி செய்கிறீர்கள். உங்கள் சீர்திருத்தக் கவுன்சில்கள் எங்கே? நீங்கள் சட்டம் செய்வது என்பதும் எங்கே? நீங்கள் போகிற போக்கில் சீக்கிரத்தில் அதன் பலனை அனுபவிப்பீர்கள்.

பிறகு செய்யவேண்டியதுதான் என்ன? அஸ்ஸாமில் இந்திய சிப்பந்திகளின் சம்பளத்தை இரட்டிப்பாக உயர்த்திவிட வேண்டும். இவ்விதம் செய்தால், இப்பொழுது குமாஸ்தாக்களிடையே இருந்து வரும் அதிருப்தி நீங்கிவிடும். இந்தக் குமாஸ்தாக்களில் அநேகர், போதாததாக இருக்கும் சம்பளத்தைக் கொண்டு பெரிய குடும்பங்களை நடத்திக்கொண்டு வர வேண்டியிருக்கிறது. வாழ்க்கையை நடத்துவதற்கு வேறு எங்காவது பணம் தேட வேண்டியிருக்கிறது. இதனுல் அவர்கள், வலியவர்களிடமிருந்து பணம் பறிக்க முடியாததால் எளியவர்களிடமிருந்து பணம் பறிக்கிறுர்கள். என்னிடம் ஒரு தலைமை குமாஸ்தாவும் இரு சாதாரண குமாஸ்தாக்களும் இருக்கின்றனர். இவர்கள் வெட்கக்கேடான சம்பளம் பெறுகின்றனர். அவர்கள் திருடுவதில்லை; திருடவும் முடியாது. ஏனெனில், அவர்கள் ஏமாற்றிவிட முடியாத வகையில் நான் கெட்டிக்காரன். அவர்களுக்காக நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஆனுல், என்னுடைய

செலவுக்கே போதாமல் நான் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதால் என் சம்பளத்திலிருந்து நான் அவர்களுக்கு உதவி செய்ய முடியாது. நான் எதற்காகச் செய்யவேண்டும்? அவர்களுக்கு அதிகம் கொடுக்க என் முதலாளிகள் என்னை அனுமதிக்கவில்லை. ஆனால், சீக்கிரத்திலோ, கொஞ்சம் நாள் கழித்தோ அது வந்து தான் தீரும். அது கிளர்ச்சியினாலும் ஒத்துழைப்பதனாலும்தான் வருமேயன்றி ஒத்துழையாமையினால் வராது. உங்களைப் பின்பற்றுகிறவர்களின் முறைகளில் போல்ஷிவிக் போக்கு இருக்கிறது. பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கும் நாட்டில் குழப்பத்தையும், முற்றிலும் ஒழுங்கின்மையையும் உண்டாக்கப் பார்க்கிறார்கள். கிளர்ச்சி செய்க, விடாமல் கிளர்ச்சி செய்க. ஒத்துழைக்க, ஒத்துழைக்க, ஒத்துழைக்க. சட்டங்களைச் செய்க, சட்டங்களைச் செய்க. உங்கள் மனத்திலிருந்து ஒத்துழையாமையை விரட்டி விடும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அது பயனில்லாதது.

அஸ்ஸாமில் கீழ்க்கண்டவைகளைக் காண விரும்புகிறேன்:

1. சுயேச்சையான தொழிலாளர். சுதந்திரம்தான் செல்வம்.

2. இந்தியாவின் எந்தப் பகுதியிலிருந்தும், எப்பகுதிக்கும், பஞ்சப் பிரதேசத்திலிருந்து சுபிட்சப் பிரதேசத்திற்கு, ஒவ்வோர் இந்தியரும் எவ்விதத் தடையுமின்றிப் பிரயாணம் செய்யலாம்.

3. ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் ஒரே மாதிரியான சட்டம்; இந்தியருக்கும் ஐரோப்பியருக்கும் ஒரே மாதிரியான சட்டம்.

4. இந்தியப் பெண்களையும், அவர்களுக்கும் ஐரோப்பியருக்கும் பிறந்த குழந்தைகளையும் பாதுகாக்கச் சட்டம்.

5. ஒவ்வொரு தேயிலைத் தோட்டத்திலும் பஞ்சாயத்துச் சபை அதிகாரத்துடன் இருக்க வேண்டும். அதற்கு மானேஜரே தலைவராக இருக்கவேண்டும். இந்தியர்மீது வழக்கைப் பஞ்சாயத்து விசாரிக்கலாம் என்றால், அதே போல அது ஐரோப்பியரையும் விசாரிக்கலாம். (என்னை விசாரிக்க என் கூலிக்கு அனுமதி இருக்கிறது.)

6. நோயுற்றிருக்கும் கூலிகளுக்கு அலவன்ஸைக் கட்டாயமாகக் கொடுக்க வேண்டும்.

7. கூலிகளின் மணங்களைக் கட்டுப்படுத்துபவைகளை நீக்கிவிடவேண்டும்.

8. கர்ப்பமுற்றிருக்கும் பெண்களுக்குப் பிரசவ கால அலவன்ஸை ஆறு மாத காலத்திற்குக் கட்டாயமாகக் கொடுக்க வேண்டும்.

இந்த யோசனைகளெல்லாம் சட்டசபையினருக்கேயன்றி ஒத்துழையாமைக்காரருக்கு அல்ல என்பதை நீங்கள் ஒப்புக்

கொள்ளுவீர்கள். ஆகையால், கிளர்ச்சி செய்க, ஒத்துழைக்க, சட்டம் செய்க, அன்பு செலுத்துக.

உங்கள் சட்டசபை மெம்பர்கள் என்ன செய்கிருர்கள்? அவர்களை வேலை செய்யும்படி செய்யுங்கள்; தகுந்த சட்டங்களை நிறைவேற்றச் செய்யுங்கள்; மக்கள் சொல்லுவதைக் கவனிக்கும் படி செய்யுங்கள். என் மக்களிடம் (கூலிகளிடம்) நான் கொண்டிருக்கும் அன்புதான் என் பலம். அவர்கள், மக்களிடம், இந்தியரிடம், ஒத்துழையாதார், ஒத்துழைப்போர், கிளர்ச்சிக்காரர்கள், சட்டசபையினர் ஆகியோரிடம் அன்புடனிருப்பதே அவர்களின் பலம். இல்லையானுல், உள்ளுக்குள்ளேயே ஒற்றுமை இல்லாமல் நிலைத்து நிற்க முடியாது. ஆகையால், ஒத்துழையுங்கள். சாமாரிலிருந்து பிராமணர் வரையில். கூலியிலிருந்து ராஜா வரையில், நான் சந்திக்கும், என்னுடன் சம்பந்தமுள்ள எல்லா இந்தியரிடமும் நான் அன்பு செலுத்துகிறேன். எல்லோரும் கடவுளின் சிருஷ்டிகள்; எல்லோரும் மனிதர். எல்லோரையும் என் சகோதரராகப் பாவிக்கிறேன். உதவி செய்ய முடிந்த இடத்தில் உதவுகிறேன்; கஷ்டத்தை நீக்க முடிந்த இடத்தில் அதை நீக்குகிறேன்; போதிக்க முடியும்போது போதிக்கிறேன். சகோதர அன்பு நீடிக்கட்டும். ஒத்துழையாமையினுல் அதை அடைய முடியாது. ஆனுல், ஒத்துழைப்பதே சகோதர அன்பு.

நல்ல சம்பளம் பெறும், அதிகத் திருப்தியோடுகூடிய தேயிலைத் தோட்டத் தொழிலாளருக்கு நான் மானேஜர் என்று சொல்லிக்கொள்ள முடிவதற்காகச் சந்தோஷமடைகிறேன். எல்லோரையும் திருப்தி செய்துவிட முடியாது என்பது உண்மை. என்ருலும், நான் இந்தியாவுக்கு வந்ததிலிருந்து, என்னுடைய கூலிகளின் துயரங்களைப் போக்குவது என்பதையே நான் எப்பொழுதும் என் கடமையாகக் கொண்டுவந்திருக்கிறேன் என்பதை நான் உண்மையுடன் கூற முடியும். ஒத்துழைப்பதன் மூலம் இது செய்யப்பட்டிருக்கிறது. என் நிர்வாகத்திலிருக்கும் தோட்டத்தில் வேலைநிறுத்தம் நடந்ததில்லை, நடக்காது. இதை நம்பிக்கையுடன் கூறுகிறேன். ஆகவே, உங்கள் வேலையையும், உங்கள்அனுதாபிகளின் வேலையையும் நிறுத்தி, அஸ்ஸாமிலிருந்து வெளியேறிவிடும் பைத்தியக்காரத்தனத்தை நிறுத்தும்படி, ஸ்ரீ காந்தி, உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களுக்குத் திடீரென்று ஏற்பட்டிருக்கும் திகிலினுல் ஆயிரக்கணக்கான சாவுகள் ஏற்பட்டு வருவதை எண்ணிப் பாருங்கள். இரண்டு தவறுகள், என்றும் ஒரு நல்ல காரியமாக ஆகிவிடாது.

என் தோட்டத்தையும், மற்றும் சிலருடைய தோட்டங்களையும் தவிர தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்வோரிடம் அனுசரிக்கப்படும் முறைகளை, என்னைப் பொறுத்தவரையில் நான் வெறுக்கிறேன். இவை, தேயிலைத் தோட்டத் தொழிலுக்கு, அதாவது, பாபுக்களைக்கொண்டு நடத்தப்படும் தோட்டங்களுக்கு அவமானம் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனுல்,

வேண்டியதெல்லாம் ஒத்துழைப்பு, கிளர்ச்சி, சட்டம் செய்தல் ஆகியவையே அன்றி உங்கள் முறையான ஒத்துழையாமைப் போக்குடைய போல்ஷிவிஸம் அன்று. உண்மை யார் மனத்தையும் வருத்துவதில்லை.

என் மனத்தில் உள்ளதையே எழுதியிருக்கிறேன், என் கடிதத்தில் காணும் தொனிக்காக மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தங்கள்,

"மௌனமாயிருப்பவரே தவறை ஒப்புக்கொள்ளுபவர்"

[எந்த மாற்றமும் செய்யாமல், இக்கடிதத்தைப் பிரசுரிக்கிறேன். இதை எழுதியிருப்பவர் தம் பெயரையும் எனக்கு அறிவித்திருக்கிறார். ஆனால், தம் பெயர் வெளிக்குத் தெரிய வேண்டாம் என்று விரும்புகிறார். நேட்டாலிலும் சம்பாரணிலும், இக்கடிதத்தை எழுதியிருப்பவரைப் போன்றவர்களை நான் பார்த்திருக்கிறேன். தாம் நியாயமாக நடந்து வருவதாகவே அவர் எண்ணுகிறார். ஆனால், கால்நடைகளை அன்போடு வளர்ப்பவரைவிடத் தாம் மேலானவராகிவிடவில்லை என்பதை அவர் அறியவில்லை. கால்நடைகளை நடத்துவதைப் போன்றே மனிதரையும் நடத்தலாம் என்பதை ஒப்புக்கொண்டு விட்டால், பிராணிகள் துன்பப்படுத்தப்படுவதைத் தடுப்பதற்கென்று இருக்கும் சங்கத்தினிடம், அநேக ஐரோப்பிய மானேஜர்கள் நற்சாட்சிப் பத்திரங்களைப் பெற்றுவிடுவார்கள். இனமாக மருந்து கொடுப்பது, இனமாக வைத்தியம் செய்வது, இனம் குடியிருப்பு வசதி, இனம் மேய்ச்சல் பூமி என்பதெல்லாம் 'கூலி'களை என்றும் அடிமையாக வைத்திருப்பதற்காகக் கைக்கொள்ளப்படும் தொழில் தந்திரங்களேயாகும். இதை நான் அனுபவத்தில் அறிவேன். தொழிலாளருக்கு முழுச் சம்பளத்தையும் கொடுத்துவிட்டு, மருந்துக்கும் வீட்டு வசதிக்கும் அவர்கள் பணம் கொடுத்துவிடச் செய்தால், தொழிலாளர் சுதந்திரத்துடன் இருப்பார்கள். தொழிலாளருக்கு இனம் மேய்ச்சல் இடம் என்பது, அவர்களுக்குத் தவிர்க்க முடியாததைச் சுவாசிப்பது போன்றதாகும். ஒவ்வொரு தோட்டத்திலுமிருக்கும் தொழிலாளிப் பெண்ணுக்கும் ஐரோப்பியருக்கும் பிறந்த குழந்தைகள், ஆணின் பெண்ணின் மானக்கேட்டின் கதையையே கூறுகின்றன. எனக்கு அதிகாரம் இருந்தால், இவ்விதம் பிறந்த யுரேஷியன் குழந்தைகள் இருப்பதன்மூலம் இந்தியப் பெண்களிடம் நடந்திருக்கும் குற்றம் நிருபணமாகும் எல்லாத் தோட்டங்களையும் மூடிவிடுவேன். இப்பிரச்னை அதிகக் கஷ்டமானது என்பதை அறிவேன். ஆனால், தன்னுடைய சகோதரியின் கற்பைப் போன்றே இந்தியப் பெண்ணின் கற்பையும் மதிக்க ஐரோப்பியர் அறிந்துகொண்டு விடுவாரானால், மணவாழ்க்கைக்குப் புறம்பாக இத்தகைய யுரேஷியக் குழந்தைகளே இருக்க மாட்டா. ஆண், பெண்களின்



சென்னையில் 1946 ஜனவரி 24-ஆம் தேதி நடந்த நிர்மாண வேலை ஊழியர்கள் கூட்டத்திற்கு காந்திஜி போய்க்கொண்டிருந்தபோது எடுத்த படம்.



மகாத்மா காந்தி லண்டன் வட்டமேஜை மகாநாட்டிற்குப் போனபோது மார்சேல்ஸில் பிரெஞ்சு பத்திரிகை நிருபர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது எடுத்த படம். காந்திஜியின் குமாரர் ஸ்ரீ தேவதாஸ் காந்தியும், தீனபந்து ஸி. எப். ஆண்டுரூஸும் அவருடன் இருக்கிறார்கள்.

'தாராள' உடற்சேர்க்கையில் நம்பிக்கையுள்ளவன் அல்ல நான். இது அதிக மன வேதனையை அளிக்கும் விஷயம். ஆண்கள், பெண்களின் கற்பு எனக்கு அதிகத் தெய்வீகமானது. ஆகையால், அத்தகைய தோட்டங்களில் நான் பார்த்தவைகளையும், கேள்விப் பட்டவைகளையும் குறித்து நான் நிதானத்துடன் எழுத முடிகிறது. அவர்கள் செய்த குற்றம் சிருஷ்டித்திருப்பவற்றின் முகத்திலிருக் கும் மானக்கேட்டை அவர்களின் நிறம் மறைக்கிறது என்பதை அறிவேன். ஆனால், இந்தியன் செய்யத் துணியாத காரியத்தை ஐரோப்பிய மானேஜர், எத்தகைய தண்டனைக்கும் ஆளாகாமல் செய்கிறான் என்பதை நான் துணிந்து கூறுவேன். ஆனால், இந்த அத்தியாயத்தை நான் இங்கே முடித்துவிடவேண்டும். மானே ஜரே பஞ்சாயத்துக்களின் தலைவராக இருக்கவேண்டும் என்ற கபடமான யோசனை, தோட்ட முதலாளியின் கட்சியில் நியாய மில்லை என்பதை வெளிப்படுத்திவிடுகிறது. ஒத்துழையாமையைக் குறித்து இக்கடிதம் எழுதியிருப்பவர் கூறியிருக்கும் புத்திமதி, அறியாமையிலிருந்து எழுந்ததாகும். வேலை நிறுத்தம் செய்யு மாறு அஸ்ஸாமிலிருக்கும் கூலிகளில் ஒருவருக்குக்கூட நான் யோசனை கூறியதில்லை. இதை இவருக்கு உறுதியாகக் கூறு கிறேன். மேலும், மூலதனத்தின் விஷயத்திலோ, முதலாளிக ளோடோ ஒத்துழையாமை நடந்துகொண்டிருக்கவில்லை என்ப தையும் இவர் அறிய வேண்டும். ஒரு முறை என்ற வகையில் இப்பொழுது இருந்துவரும் அரசாங்கத்தை எதிர்த்தே ஒத் துழையாமை நடந்துவருகிறது. ஆனால், எங்கெல்லாம் தீமையும், கொடுமையும், அநீதியும் இருக்கின்றனவோ அங்கெல்லாம், யார் விரும்பினாலும் விரும்பாதுபோனாலும், ஒத்துழையாமை வந்தே தீரும். பரிகாரத்தைக் கண்டுகொண்டுவிட்ட மக்கள், அதை உபயோகித்துக்கொள்ளவே முற்படுவார்கள். முட்டாள்தன மாகவோ, நியாயமில்லாமலோ அவர்கள் அதைச் செய்வார்க ளாயின், உண்மையில் அவர்களேதான் நஷ்டமடைகிறவர்களா வார்கள். சட்டம் இயற்றுவதனாலோ, சட்டசபைகளில் விவா திப்பதனாலோ அதிக நன்மை எதுவும் ஏற்பட்டுவிடும் என்று நான் நம்பவில்லை. தொழிலாளரைத் தங்கள் சொந்தக் குடும் பத்தைச் சேர்ந்தவர்களாக முதலாளிகள் நினைக்க ஆரம்பிக்கும் வரையில், தொழிலாளர்கள் தங்கள் சொந்த உரிமைகளைப் புரிந்து கொள்ளும் வகையில் கல்வியைப் பெற்று, அந்த உரிமைகளைப் பெறுவதற்கான முறைகளையும் தெரிந்துகொள்ளும் வரையில், தங்கள் நிலைமையைச் சீர்ப்படுத்திக்கொண்டுவிட தொழிலாளர் களால் முடியாது. பொதுஜன அபிப்பிராயம் ஏற்படுவதற்கு முன்னால் சட்டத்தைச் செய்துவிடுவதால் எந்தவிதப் பிரயோ சனமும் இல்லை. பொதுஜன அபிப்பிராயம் ஏற்படும்படிச் செய் வதற்கும், இந்த விஷயத்தில், நடத்தையில் மாறுதலோ, நான் அடிக்கடி கூறிவருவதுபோல மனமாற்றமோ உண்டாகும்படி செய்வதற்கும் மிகத் துரிதமான முறை ஒத்துழையாமையே.]

—'யங் இந்தியா' – 29—6—1921

# 33

# தொழிலாளரின் உரிமைகளும் கடமைகளும்

## (1)

அன்று முடிவாக நடந்த மில் தொழிலாளர் கூட்டம், இணையற்ற வகையில் அமைதியாகவும் ஒழுங்காகவும் நடந்தது. இந்த அற்புதமான கூட்டம், ஒழுங்காக நடந்த அகமதாபாத் மில் தொழிலாளரின் கூட்டங்களைக் காந்திஜிக்கு நினைவுபடுத்தின. கூச்சல் அதிகமிருக்கும் எத்தனையோ கூட்டங்களுக்கு நாங்கள் போயிருக்கிறோம். அவற்றிற்கு இக்கூட்டம், திருப்தியான வகையில் மாறுபட்டதாக இருந்தது. தொழிலாளர், தங்களுக்குள் சிறு தொகையை வசூலித்து அதைப் பண முடிப்பாகக் கொடுத்ததன் மூலம், காந்திஜி மேற்கொண்டிருக்கும் லட்சியத்தில் தங்களுக்குள்ள தீவிரமான ஆதரவைக் காட்டிக்கொண்டனர். காந்திஜி அக்கூட்டத்தில் பேசுகையில், 'சகோதரத் தொழிலாளர்களே' என்று விளித்தார். தாம் அவ்வாறு அழைப்பதன் காரணத்தையும் விளக்கினர்: "உங்களைச் 'சகோதரத் தொழிலாளர்களே' என்று காரணத்தோடுதான் அழைக்கிறேன். எனக்கு இருபத்து மூன்று வயதுகூட ஆகவில்லை; அப்பொழுது எனக்குத் தென்னுப்பிரிக்காவில் பாலசுந்தரத்துடன் தொடர்பு உண்டாயிற்று; பாலசுந்தரம், ஓர் ஒப்பந்தத் தொழிலாளி.* அவருடைய வழக்கை நடத்தும் பாக்கியம் எனக்கு ஏற்பட்டது. பிறகு தொழிலாளருக்கு இருக்கும் கஷ்டங்களைக் குறித்து எவ்வளவோ தெரிந்துகொண்டேன். அவரைச் சந்தித்த நாளிலிருந்து, தொழிலாளருக்கும் எனக்குமிடையே உறவு வளர்ந்தது. நாளாகவாக இந்த உறவு அதிக நெருக்கமானதாக ஆகிக்கொண்டு வந்தது. என்னை அவர்கள் மனிதனுகவே ஆக்கிக்கொண்டுவிட்டேன். நானும் அவர்களைப் போல ஒப்பந்தக் கூலியாக ஆகிவிடாவிட்டாலும், உள்ளத்தில் நானும் அவர்களில் ஒருவனே என்பதை அவர்கள் அறிந்துகொண்டார்கள். என்னைத் தொழிலாளி என்று நானே சொல்லிக்கொள்ளுவதற்கு இதுதான் காரணம்.

"உயர்வு, தாழ்வு என்ற பாகுபாடு உங்களுக்குள்ளும் இருந்து வருகிறது என்பதை அறிவேன். அதை ஒழித்துவிடும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு தொழிலாளியையும் நீங்கள், உங்களுக்குச் சமமானவராகவும் உங்கள்

---

* இந்தப் பாலசுந்தரத்தைக் குறித்துக் காந்திஜி தமது 'சுய சரிதை'யில் ஒரு தனி அத்தியாயமே எழுதியிருக்கிருர். முதலாளி அடித்ததால் காயமடைந்து தம்மிடம் வந்த பாலசுந்தரத்திற்குச் சிகிச்சை செய்வித்து வழக்கும் தொடர்ந்த வரலாற்றைக் குறித்துக் காந்திஜி எழுதியிருக்கும் விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்' மூன்ரும் தொகுப்பு 209-12-ஆம் பக்கங்களில் காண்க.

சொந்தச் சகோதரராகவும் நீங்கள் கருதவேண்டும். அந்த நிலையை நீங்கள் அடைந்துவிடுவீர்களானால், உங்கள் சொந்த நன்மைக்காக மாத்திரமல்ல, நாட்டின் நன்மைக்கும் நீங்கள் எவ்வளவு பெரிய சக்தியாக இருக்க முடியும் என்பதை உடனே நீங்கள் தெரிந்துகொள்ளுவீர்கள். போதை தரும் மது பானத்தைக் குடிப்பதையும், அபின் போன்றதைத் தின்பதையும் விட்டுவிட்டு, செத்த கால்நடைகளைத் தின்பதையும் மாட்டு மாமிசம் புசிப்பதையும் ஒழித்துவிட்டு, சூதாடுவதையும் கடனாளியாவதையும் நிறுத்திவிடுவதன் மூலம், தன்னைத்தானே புனிதப்படுத்திக் கொள்ளும் இந்த லட்சியத்திற்கு நீங்கள் உதவி செய்வீர்கள் என்று எதிர்பார்க்கிறேன். உங்களிடையே முஸ்லிம் தொழிலாளரும் இருப்பார்களாயின், அவர்களிடம் அன்பையும், முழுமையான சமத்துவத்தையும் காட்டுவதன் மூலம் அவர்களிடம் நடந்துகொண்டு அவர்களோடு நீங்கள் வாழ வேண்டும். நீங்கள் செய்யும் வேலையில் சொந்தச் சிரத்தையையும் நீங்கள் வைக்க வேண்டும். நீங்கள் சரியாக நடத்தப்பட வேண்டும் என்றும், போதுமான ஊதியம் வேண்டும் என்றும், நியாயமான சௌகரியங்களைச் செய்துகொடுக்க வேண்டும் என்றும் உங்கள் முதலாளிகளிடம் கேட்பதற்கு உங்களுக்கு முழு உரிமையும் உண்டு. அதே சமயத்தில், நீங்கள் பெறும் ஊதியத்திற்குச் சரியானபடி யோக்கியமாக நீங்கள் வேலை செய்ய வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. தனிப்பட்ட ஒரு தொழிற்சாலையில் நீங்கள் தொழிலாளர்களாக அமர்த்தப்பட்டிருக்கிறீர்கள் என்ற காரணத்தைக் கொண்டு, அத்தொழிற்சாலையில் பணம் போட்டிருப்பவர்கள் எப்படி அதன் சொந்தக்காரர்களாகிறார்களோ அது போலவே நீங்களும் அதில் பாகச் சொந்தக்காரர்களாகிறீர்கள். கொஞ்சம் சிந்தித்துப் பார்ப்பீர்களாயின் இதை அறிந்துகொள்ளுவீர்கள். லோகத்தினாலான நாணயம் எப்படிப் பணமாகிறதோ அதே போல உண்மையில் உழைப்பும் பணம்தான். ஒரு குறிப்பிட்ட தொழிலில் சிலர் தங்கள் பணத்தைப் போடுகிறார்கள் என்றால், உங்கள் உழைப்பை நீங்கள் அதில் போடுகிறீர்கள். பணம் இல்லாவிட்டால் உங்கள் உழைப்பு எப்படிப் பயனற்றதாகி விடுமோ அதே போல, உங்கள் உழைப்பு இல்லாவிட்டால் உலகத்திலுள்ள பணம் எல்லாமும் முற்றிலும் பயனற்றதாகவே ஆகும். ஆகையால் நீங்கள் வேலை செய்யும் தொழிற்சாலையை உங்களுடையதாகவே எண்ணி அதற்காக வேலை செய்வதில் நீங்கள் பெருமை அடைய வேண்டும். இவ்வாறு ஒரு பக்கத்தில் நீங்களும் பாக முதலாளிகள் என்று உங்கள் உரிமையை வற்புறுத்துவதோடு மற்றோர் பக்கத்தில், யோக்கியமாக வேலை செய்வதன் மூலம் முழுச் சேவையையும் நீங்கள் செய்தவர்களுமாவீர்கள்.''

—'ஹரிஜன்' – 2—2—1934

[மதுரை ஸி. எஸ். எழுதிய 'வாராந்திரக் கடித'த்திலிருந்து எடுத்தது.]

## (2)

உங்களில் சிலர் முன் பேசும் பாக்கியம் எனக்குச் சென்ற ஆண்டு கிடைத்தபோது, உங்களைப் போன்றே நானும் ஒரு சகோதரத் தொழிலாளி என்று என்னைக் கருதிக்கொள்ளு கிறேன் என்று நான் சொன்னதாக நினைக்கிறேன். நீங்கள் விரும்பித் தொழிலாளராகாமல், சில நிர்ப்பந்தங்களினால் தொழி லாளரானவர்களாக இருக்கலாம். உழைப்புக்குள்ள கௌரவத் தில் நான் அதிக மரியாதை வைத்திருக்கிறேன். இதனால், நானும் தொழிலாளரில் ஒருவனாகக் கலந்துகொண்டுவிட்டேன். அநேக ஆண்டுகளாக, அவர்களைப் போன்றே என் கைகளினாலும் கால் களினாலும் உழைத்து அவர்கள் மத்தியிலிருந்து நானும் வாழ்ந்து வருகிறேன். உங்கள் உடலைக்கொண்டு உழைத்து வருவதன் மூலம் உங்கள் வாழ்வின் நியதியை நீங்கள் அனுசரித்துக்கொண்டு தான் வருகிறீர்கள். ஆகையால், உங்கள் கதியைக் குறித்து நீங்கள் அதிருப்தி அடைவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. இதற்கு மாறாக, இந்நாட்டின் தருமகர்த்தாக்கள் என்று உங்களை நீங்கள் எண்ணிக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனெனில், நாட்டிற்காக நீங்கள் உழைத்து வருகிறீர்கள். லட்சாதிபதிகள் இல்லாமல் ஒரு நாட்டு மக்கள் இருந்து வர முடியும்; முதலாளிகள் இல்லாமலும் இருக்க முடியும். ஆனால், தனது தொழிலாளர்கள் இல்லாமல் ஒரு நாட்டு மக்கள் இருக்கவே முடியாது. ஆயினும், உங்கள் உழைப்புக்கும் என் உழைப்புக்கும் அடிப்படையான வித்தியாசம் ஒன்று உண்டு. இன்னொருவருக்காக நீங்கள் உழைத்து வருகிறீர்கள். நானோ, எனக்காகவே உழைத்து வருகிறேன் என்று கருதுகிறேன். இதனால் எனக்கு நானே எஜமானன். இயற்கையான நிலையில் நமது சொந்த எஜமானர்களை நாமேதான் கண்டுகொள்ள வேண்டும். அப்படி இருக்கக்கூடிய ஒரு நிலையை ஒரே நாளில் அடைந்துவிட முடியாது. ஆகையால், இன்னொருவருக்காக உழைக்கும் தொழிலாளர் என்ற வகையில் நீங்களே எவ்விதம் நடந்துகொள்ள வேண்டும் என்பதைச் சிந்திக்கவேண்டியது உங்களுக்கு முக்கியமான விஷயமாகிறது. தனக்குத்தானே உழைத்துக்கொள்ளுவது என்பதில் எவ்விதம் வெட்கப்பட வேண்டியது எதுவும் இல்லையோ அதே போல, மற்றவர்களுக் காக உழைப்பதிலும் வெட்கப்பட வேண்டியது எதுவும் இல்லை.

ஆனால், எஜமானனுக்கும் வேலைக்காரனுக்கும் இருக்க வேண் டிய உண்மையான உறவைக் கண்டுகொள்ள வேண்டியது அவசியமாகிறது. உங்கள் கடமைகள் யாவை? உங்கள் உரி மைகள் யாவை? உங்கள் உழைப்புக்கு அதிகமான ஊதியத் தைப் பெறுவதற்கு உங்களுக்கு உரிமை உண்டு என்பது எளிதில் புரிந்துகொள்ளக்கூடியது. அதே போல, நீங்கள் பெறும் ஊதி யத்திற்கு உங்களால் முடிந்தவரையில் நன்றாக வேலை செய்ய

வேண்டும் என்பது உங்கள் கடமை என்பதும் எளிதில் புரிந்து கொள்ளக்கூடியது. தொழிலாளர்கள் விஷயத்தில் முதலாளிகள் தங்கள் கடமையை நிறைவேற்றி வருவதைவிடத் தொழிலாளர்கள் தங்கள் கடமைகளை அதிக நன்ருகவும், அதிக மனச்சாட்சியோடும் நிறைவேற்றி வருகின்றனர். இதுதான் எங்குமே எனக்கு ஏற்பட்டிருக்கும் அனுபவம். ஆகையால், தங்கள் எஜமானர்கள், தங்கள் இஷ்டத்தை நிறைவேற்றும்படி எந்த அளவுக்கு வற்புறுத்த முடியும் என்பதைக் கண்டுகொள்ள வேண்டியது தொழிலாளருக்கு அவசியமாகிறது. நமக்குப் போதுமான ஊதியம் கொடுக்கப்படவில்லை, நல்ல குடியிருப்பு வசதி அளிக்கப் படவில்லை என்ருல், போதுமான ஊதியத்தையும் நல்ல வீட்டு வசதியையும் நாம் பெறுவது எப்படி? தொழிலாளருக்கு நியாயமான ஊதியம் இன்னது என்பதையும், தொழிலாளருக்கு வேண்டிய சௌகரியங்களின் தரம் இன்னது என்பதையும் நிர்ணயிப்பது யார்? இதற்குச் சரியான வழி, தொழிலாளர்களாகிய நீங்கள் உங்கள் உரிமைகளை நீங்களே புரிந்துகொண்டு, உங்கள் உரிமைகளை வற்புறுத்தும் வழிகளையும் தெரிந்துகொண்டு, அவற்றை நடைமுறையில் கொண்டு வருவதுதான் என்பதில் சந்தேகமில்லை. ஆனல், இதற்கு முன்கூட்டியே உங்களுக்குக் கொஞ்சம் பயிற்சி, அதாவது படிப்பு வேண்டும். நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் மையமான ஓர் இடத்திற்கு நீங்கள் கொண்டு வரப்பட்டிருக்கிறீர்கள். ஒரே இடத்தில் நீங்கள் திரட்டி வைக்கப் பட்டிருப்பதாகவும் காண்கிறீர்கள். ஆனல், உங்கள் வாழ்க்கைக்குப் போதுமானது கிடைப்பதில்லை. சரியான வீட்டு வசதியும் கிடையாது என்பதையும் பார்க்கிறீர்கள். ஆகையால், ஸ்ரீ வாடியாவுக்கும் உங்களுக்குத் தலைமை வகித்து நடத்திச் செல்லும், ஆலோசனை கூறும் மற்றவர்களுக்கும், ஒரு யோசனையைத் துணிந்து கூறுகிறேன். உங்களுக்கு வழிகாட்டுவதில் அவர்களுக்குள்ள முதல் வேலை, உங்களுக்கு எழுதப் படிக்கச் சொல்லிக் கொடுப்பது அல்ல. ஆனல், மனிதரின் காரியங்களையும் மனித உறவுகளையும் குறித்து நீங்கள் அறியும்படி செய்வது தான் அவர்களுக்குள்ள முதல் வேலை. மிகுந்த மரியாதையோடும், அதிக அடக்கத்துடனுமே நான் இந்த யோசனையைக் கூறுகிறேன். ஏனெனில், இந்தியாவில் தொழிலாளர் நிலைமையைக் குறித்து ஆராய்ந்திருக்கிறேன். அதைக் குறித்து நான் மேற்கொள்ள முடிந்தவரையில், தென்னுப்பிரிக்காவில் தொழிலாளர் நிலைமையைக் குறித்து எனக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பொறுத்த அளவில், தொழிலாளருக்கு எழுதப் படிக்கச் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்றுதான் மிகப் பெரும்பாலான தொழிலாளர் தலைவர்கள் கருதுகிருர்கள் என்ற முடிவுக்கே நான் வர வேண்டியிருக்கிறது. இதுவும் அவர்களுக்கு அவசியமானதே என்பதில் சந்தேகமே இல்லை. ஆனல், இதற்கும் முன்னல், உங்களுடைய உரிமைகள் யாவை, அவற்றை அமுலுக்குக் கொண்டு வரும் வழி என்ன என்பதைப் பற்றிய சரியான அறிவு ஏற்பட

வேண்டியது அவசியம். இந்த அடிப்படையான போதனையைத் தொழிலாளருக்குச் சில தினங்களில் அளித்துவிடுவது சாத்தியம். அநேக வேலை நிறுத்தங்களை நடத்தியதன் மூலம் இதை நான் அறிந்திருக்கிறேன்.

['மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், கட்டுரைகளும்'—ஜி. ஏ. நடேசன் கம்பெனி வெளியீடு—(4-வது பதிப்பு)-பக்கம் 1045.]

பகுதி இரண்டு

# கூலியைப் பற்றிய பிரச்னை

[தொழிலாளரின் கடமைகளை வற்புறுத்திய காந்திஜி, அவர்களுக்குள்ள உரிமையையும் வற்புறுத்தினர். பெறும் ஊதியத்திற்குத் தொழிலாளர்கள் மனச்சாட்சியுடன் தங்களால் முடிந்த வரையில் உழைக்க வேண்டும் என்று கூறிய மகாத்மா, உழைப்புக்கு ஏற்ற ஊதியம், அதாவது அவர்கள் வாழ்க்கைக்குப் போதுமான ஊதியமும், நல்ல வாழ்க்கை வசதிகளும் கிடைத்தே ஆக வேண்டும் என்றும் வற்புறுத்தினர். பாடுபட்டு உழைக்கும் கோடிக்கணக்கானவர்களுக்கு நியாயத்தைச் செய்வதற்கு, அவர்கள் வாழ்வதற்குப் போதுமான ஊதியத்தைக் கொடுக்க வேண்டும்; அவர்களுடைய திக்கற்ற நிலையைப் பயன்படுத்திக்கொண்டுவிடக் கூடாது என்பது காந்திஜியின் கருத்து. இந்தக் குறைந்த பட்ச ஊதியத்தை ஒரு தொழிற்சாலையினல் கொடுக்க முடியவில்லையென்ருல் அத்தொழிற்சாலையையே மூடிவிடுவதே மேல் என்றும் காந்திஜி கூறினர்.

தொழிலாளரின் ஊதியத்தைக் குறித்துக் காந்திஜி எழுதியிருப்பவைகளில் சில மாத்திரமே, அகமதாபாத் ஜவுளி மில் தொழிலைப் போன்ற பெருந் தொழிற்சாலைகளைப் பற்றிக் கூறுகின்றன. கிராமக் கைத்தொழில்களிலும், நூற்புக்கும் குறைந்த பட்சக் கூலியை நிர்ணயிக்க வேண்டும் என்பதிலேயே மகாத்மா அதிகச் சிரத்தை காட்டினர். இதைக் குறித்தே அடிக்கடி எழுதியும் விவாதித்தும் வந்தார். இக்கட்டுரைகளில் பல 'மகாத்மா காந்தி நூல்கள்' ஐந்தாம் தொகுப்பில் பிரசுரமாகியிருக்கின்றன. அவற்றின் விவரத்தை அறிய விரும்புவோர் அத்தொகுப்பின் பதினென்ரும் பகுதியை, 351-ஆம் பக்கம் முதல் 394-ஆம் பக்கம் வரையில் காணலாம். தொழிலாளரின் ஊதியத்தைப்பற்றிய பிரச்னை சம்பந்தமான அக்கட்டுரைகள் போக மீதமிருக்கும் கட்டுரைகள் மாத்திரமே இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

# 1

# ஒரு முக்கியமான தீர்ப்பு

அகமதாபாத் மில் சொந்தக்காரர் சங்கத்தினரும், ஜவுளித் தொழிலாளர் சங்கமும் தாமே நியமித்துக்கொண்ட நிரந்தர சமரச போர்டு, இத்தகராறில் ஒரு தீர்ப்பைக் கூறும்படி மத்தியஸ்தரான திவான்பகதூர் கிருஷ்ணலால் மோகன்லால் ஜவேரியைக் கேட்டுக்கொண்டது. அவர் அளித்த தீர்ப்பு மிக முக்கியமானதாகும். இவ்விஷயத்தில் உண்மை நிலையைக் கவனமாக ஆராய்ந்து தயாரிப்பதாக மத்தியஸ்தரின் தீர்ப்பு இருக்கிறது. 'தகுந்த வாழ்க்கை நிலையில் வாழ்வதற்குப் போதுமான ஊதியம் ஒரு தொழிலாளிக்குக் கிடைக்காதபோது, அவ்விதம் வாழ்வதற்குப் போதுமான ஊதியத்தைக் கொடுக்கும்படி தனது முதலாளியை அவர் கேட்கலாம்' என்ற தத்துவத்தை இந்தத் தீர்ப்பு தைரியமாக நிலைநாட்டுவதாகவும் இருக்கிறது. வாழ்க்கைக்குப் போதுமானதான ஊதியத்தைப் பெற தங்களுக்கு உரிமை உண்டு என்பதுதான் தொழிலாளர் சென்ற பல ஆண்டுகளாகக் கூறி வரும் வாதம். இதை முதலாளிகள் மறுத்து வந்தார்கள். தொழிலாளரின் இந்த வாதத்தை ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும் என்று நான் கூறி வந்திருப்பதைப்போன்றே மத்தியஸ்தரும் அதை முற்றிலும் ஒப்புக்கொண்டிருக்கிறுர். குறைந்த கூலியைப் பெறுகிறவர்களும், கூடுதலான கூலியைப் பெறுகிறவர்களும் உள்பட தொழிலாளர் குடும்பங்களின் சராசரி வருமானம் மாதத்திற்கு ரூ. 40-க்கு மேல் இல்லை; மொத்தச் செலவு ரூ. 50-க்குக் குறைவாக இல்லை என்ற உண்மையையும் அவர் கண்டுகொண்டிருப்பது குறிப்பிடத்தக்க மற்ருேர் விஷயமாகும். 1923-இல் மில் சொந்தக்காரர்கள், தொழிலாளரின் கூலியில் 15 சத விகிதத்தைக் குறைத்துவிட்டார்கள். குறைந்த அக்கூலி முழுவதையும் கூட்டித் தரவேண்டும் என்று தொழிலாளர் கோரியதே மத்தியஸ்தரின் பரிசீலனைக்கு விடப்பட்டது. வாழ்க்கைக்குப் போதுமானதான ஊதியத்தைப் பெற தொழிலாளருக்கு உரிமை உண்டு என்பதை மத்தியஸ்தர் ஒப்புக்கொண்டு அனுமதித்தார். உண்மையில் அகமதாபாத் ஜவுளித் தொழிலாளர்கள் அத்தகைய ஊதியத்தைப் பெருமலிருப்பதால், சம்பளக் குறைப்பு முழுவதையும் ரத்துச் செய்து முழுச் சம்பளத்தையும் ஏன் கொடுத்துவிடக்கூடாது என்பது விளங்கவில்லை என்றும் மத்தியஸ்தர் கூறினர். கூலிப் பிடித்தம் முழுவதையும் ரத்துச் செய்துவிட்டுப் பழைய கூலியையே கொடுத்தாலும், அது மாதத்திற்கு ரூ. 50-க்கு வராது என்பதையும் வாசகர் கவனிக்க வேண்டும். இதில் தத்துவத்தைப் பொறுத்தவரையில், கூறப்பட்டிருக்கும் முடிவுக்கும், ஊதியத்தைப் பொறுத்தவரையில், உண்மையில் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பதற்கும் பொருத்தமில்லாமலிருக்கிறது. இதற்கு நான் கண்டுகொள்ளக்கூடிய ஒரே சமா

தானம், தமது தீர்ப்பைக் குறித்தே மத்தியஸ்தர் பயந்திருக்க வேண்டும் அல்லது *1923*-இல் மில் முதலாளிகள் கூலியைக் குறைத்தது சம்பந்தமாகச் செய்த காரியத்தை, அதன் விளைவின் மூலமாகவாவது, கண்டிக்க மத்தியஸ்தர் தயங்கியிருக்க வேண்டும் என்பதே. *1923*-இல் கூலியைக் குறைத்தபோது, மில் முதலாளிகள் அதை சமரசத்திற்கு விட்டுக்குறைக்கவில்லை. தொழிலாளரைக் கஷ்டப்படுத்துவதற்குத் தங்களுக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு தங்களிஷ்டம் போல் குறைத்துவிட்டார்கள். அப்பொழுது இருந்த மில் தொழிலின் நிலைமை, யுத்த காலத்தில் இருந்ததைப் போன்று அவ்வளவு சுபிட்சமானதாக இல்லை என்பது முற்றிலும் உண்மையே. என்றாலும், அச்சமயம் லாபம் குறைவாக வந்துகொண்டிருந்த சமயமேயன்றி நஷ்டம் வந்து மூலதனத்தில் கை வைக்க வேண்டியிருந்த சமயம் அன்று. தொழிலாளரின் வாழ்க்கைக்கு வேண்டிய செலவுகள் போக மிச்சமும் இருக்கக்கூடிய வகையில் நல்ல கூலி இருக்கும்போது, சம்பந்தப்பட்ட தொழில் உண்மையில் நஷ்டப்படவேண்டி வந்தால் மாத்திரமே, கூலியைக் குறைப்பது என்ற பிரச்னை வர முடியும். ஆனால், தொழிலாளரோ, மத்தியஸ்தத்திற்கு உடன்படுவது என்ற கொள்கையை அனுசரிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆகையால், முழுச் சம்பளமும் பிடித்தம் இல்லாமல் அப்படியே கிடைக்காது போனாலும் மத்தியஸ்தரின் முடிவுக்குச் சந்தோஷமாக உடன்பட்டாக வேண்டும். திவான் பகதூர் அனுமதித்திருப்பதை நன்றியறிதலுடன் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். பிறகு மீதத்தைப் பெறுவதற்கு விடாமுயற்சியுடனும் அமைதியோடும் வேலை செய்ய வேண்டும். தொழிலாளர்களின் வாழ்க்கைக்குப் போதுமான கூலியை அவர்கள் அடையும் வரையில், நல்ல வீட்டு வசதியையும் மற்றச் சாதாரண சௌகரியங்களையும் பெறும் வரையில், தொழிலாளருக்கோ, முதலாளிகளுக்கோ உண்மையில் ஓய்வு என்பதே இருப்பதற்கில்லை. ஆனால், வேலை நிறுத்தங்களுக்கு அவசியமில்லாது போய், இரு தரப்பாரும் மத்தியஸ்த முடிவுக்கு வருவது என்ற கொள்கையைக் கண்டிப்பாக அனுசரிப்பதாயிருந்தால், அதுவே பெரிய லாபம்தான்.

—'எங் இந்தியா' - 12—12—1929

## 2

# குறைந்தபட்ச ஊதியம்

தொழிலாளருக்கும் தொழில் வினைஞர்களுக்கும் வாழ்க்கைக்குப் போதுமானதான குறைந்த பட்ச ஊதியத்தை அளிக்கும் பிரச்னையே போர்டு கூட்டத்தின் முன்னால் வந்த மிக முக்

கியமான விஷயம். நூற்போருக்கு இதே போன்ற ஊதியத்தை அளிப்பது என்ற விஷயம் கதர் ஊழியர்களின் கவனத்தில் இருந்து வந்தும், இது சம்பந்தமாக இன்னும் எவ்வித முடிவுக்கும் வர முடியவில்லை. ஆனல், இத்துறை புதிதாக இருப்பதோடு சில கிராமக் கைத்தொழில்கள் சம்பந்தமாகப் புதிதாக ஆரம்பிக்க வேண்டியதாகவும் இருப்பதால், இந்த விஷயம் அதிக எளிதானதே ஆகும். இப்பிரச்னையின் எல்லா அம்சங்களைக் குறித்தும் இரண்டு நாட்கள் தீர விவாதித்தார்கள். ஒரு விஷயத்தில் எல்லா மெம்பர்களுமே ஒரே மனதாக இருக்கிருர்கள் என்று தோன்றுகிறது. நாம் வேலைக்கு வைத்துக்கொள்ளும் தொழிலாளர் எல்லோருக்கும், நியாயமான வகையில் சத்துள்ளதான உணவு கிடைக்கும்படி செய்வதாக அவர்கள் பெறும் ஊதியம் இருக்க வேண்டும் என்பதுதான் அது. இதே உணவு ஒன்றரை அணுவுக்குப் பீகாரில் கிடைக்கலாம். அதே உணவுக்குக் குஜராத்தில் நான்கு அணுவும், பம்பாயில் ஆறு அணுவும் செலவாகலாம் என்பது முற்றிலும் வேருன விஷயம். அந்த இடங்களில் ஒரு பழைய ரொட்டியைக்கொண்டோ, பசையே இல்லாத ரொட்டியையும்ஒரு சிட்டிகை உப்பையும் கொண்டோ பரம ஏழைகளாக இருப்போர் வாழ முடிகிறது என்பதைக்கொண்டு யாரும் ஏமாந்து போய்விடக் கூடாது. வருடமெல்லாம் சாதாரணமாக உழைத்து வேலை செய்துகொண்டு வருவதற்குத் தகுதி வாய்ந்தவராக ஒருவரை வைப்பதற்குப் போதுமான குறைந்த பட்ச ஆகாரமாக அவை ஆகா. எனவே, ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஏற்றதான, சரியான ஆகாரம் இன்னது என்பதை முடிவு செய்ய வேண்டும். இதை முடிவு செய்வதில், தொழிலாளிகளான ஆண்களுக்கும் பெண்களுக்கும் அவர்கள் உணவில் போதுமான பாலும் நெய்யும், வைட்டமின் சத்துக்களும் இருக்கும்படியும் பார்க்க வேண்டியது அவசியம். "வாழ்க்கைக்குப் போதுமானதான இந்தக் குறைந்த பட்ச ஊதியத்தைக் கொடுப்பது எந்தத் தொழிலுக்காவது சாத்தியமில்லாமல் இருக்குமானல், நாம் கடையைக் கட்டிக்கொண்டுவிடுவதே மேல். நாம் மேற்கொள்ளும் எந்தத் தொழிலும் கொடுக்கும் ஊதியம், வாழ்க்கையை நடத்துவதற்குப் போதுமானதாக இருக்கும்படி நாம் பார்க்க வேண்டும்" என்ருர் காந்திஜி.

  

இன்னும் ஒன்றையும் காந்திஜி தெளிவாக எடுத்துக் கூறினர். செத்துவிட்ட, செத்துக்கொண்டிருக்கும் தொழில்களைப் புதுப்பிக்கவே நாம் முயன்று வருகிரேமேயன்றி இப்பொழுது இருந்து வரும் தொழிலில் நாம் தலையிடப் போவதில்லை என்ருர். குறைந்த பட்ச ஊதியம் கொடுப்பது என்பது, கிராமவாசிகளுக்குக் கஷ்டத்தை உண்டாக்கிவிடுமா? உதாரணமாக, மண்பாண்டங்கள், அகல் விளக்குகள் போன்றவை கிராமவாசிகளின் அன்ருடத் தேவைகள். அந்தச் சிறிய பொருள்களின் சங்கதி என்ன?

இந்தப் பொருள்களுக்கெல்லாம் பட்டணவாசிகள் கொஞ்சம் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டும் என்பதனால், அந்த அதிக விலையையே கிராமவாசிகளும் கொடுக்க வேண்டுமா? பட்டணங்களை அடுத்துள்ள கிராமங்களில் இருப்பவர்கள், பட்டணங்களுக்குத் தொலை தூரத்தில் இருக்கும் கிராமவாசிகளைவிட இப்பொழுதே பாலுக்கு அதிக விலை கொடுத்து வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். காந்திஜி கூறியதாவது: "இது தவிர்க்க முடியாததாகும். ஆனால், கிராமவாசிகள் தங்களுக்குள்ளேயே விலைகளைச் சரி செய்துகொள்ள வேண்டும். மேலும், நமது ஸ்தாபனம் நன்றாக வேலை செய்ய ஆரம்பித்துவிடும்போது, மண்பாண்டங்களைச் செய்பவரிடமிருந்து அப்பாண்டங்களைத் தச்சரோ, கொல்லரோ, நெசவாளரோ, நூற்பவரோ, குறைந்தபட்ச ஊதிய விலையில் வாங்கும்போது, இவர்கள் தயாரிக்கும் பொருள்களுக்கும் அதே குறைந்த பட்ச ஊதிய விலையே இருந்து வரும். ஆகையால், ஏழைக் குயவருக்கு அவர் விலையைக் கொடுத்துப் பாண்டங்களை வாங்குவதற்கு இவர்கள் முணுமுணுக்கமாட்டார்கள். ஆனால், அது இன்னும் வெகு தொலைவில் இருக்கும் லட்சியம். இப்போதைக்குக் கிராமங்களிலிருந்து பட்டணங்களுக்குப் போகும் பொருள்கள் சம்பந்தப்பட்ட விஷயத்தோடு திருப்தியடைவோம். வாழ்க்கைக்குப் போதுமான குறைந்தபட்ச ஊதிய விலைக்குக் குறைவாக எதுவும் பட்டணங்களுக்குப் போவதை அனுமதிக்க நாம் மறுத்துவிட வேண்டும்."

—'ஹரிஜன்' – 31—8—1935

[முன்னால் ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிவந்த 'வாராந்திரக் கடித'த்தில் 'வாழ்க்கைக்குப் போதுமான குறைந்த பட்ச ஊதியம்' என்ற தலைப்பில் வெளியானது.]

## 3

# ஏழ்மையிலிருந்து விடுதலை

**கேள்வி:** நாளெல்லாம் உழைத்தும் ஒருவருக்குச் சாப்பிடுவதற்குப் போதுமான உணவு கிடைக்கவில்லை என்றால் அவர் என்ன செய்வது?

**பதில்:** தொழிலாளிக்கு அவர் உழைப்புக்கான கூலி வேண்டும். மலைகள் எவ்வளவு புராதனமானவையோ அவ்வளவு புராதனமானது இந்த நியதியும். பயனுள்ள எல்லா உழைப்பும், தொழிலாளிக்குப் போதுமானதான கூலியை அளித்தாக வேண்டும். அந்தக் காலம்வரும்வரையில், குறைந்தபட்சம் செய்யக்கூடியது ஒன்று உண்டு. ஒவ்வொரு தொழிலாளிக்கும், தானும் தன் குடும்பமும் சாப்பிடுவதற்கும்

உடுத்துவதற்கும் போதுமானது கிடைக்கும்படி பார்க்க வேண்டும் என்பதுதான் அது. இதாவது கிடைக்கும்படி செய்யாத ஓர் அரசாங்கம், அரசாங்கமே அல்ல. அது அராஜ கமேயாகும். அத்தகைய நிலையை அமைதியான வழியில் எதிர்க்க வேண்டும். தானியக் கடைகளைக் கொள்ளையடிப் பதும் காலித்தனமும் இதற்குப் பரிகாரமாகா. வீணை நஷ் டத்திலும் சாவுகளிலும்தான் அவை கொண்டுபோய்விடும். பயத்தின் காரணமாக அதிகாரிகள் விட்டுக்கொடுத்தாலும். அவர்களுக்கோ, மக்களுக்கோ உண்மையில் அவை உதவி செய்யா. அராஜகத்தை அவை போக்கா. நிலைமை இருந்தபடியே இருந்துகொண்டுதான் வரும். உலகம் முழுவதையும் பார்த்தால் இங்கே கூறப்பட்டது ஊர்ஜித மாகும்.

டிப்போக்களில் உணவு தானியங்களைச் சேகரித்து வைத் திருந்தும் பட்டினி கிடப்போருக்கு அவை கிடைக்கவில்லை என்றால், அமைதியான முறையில் அவர்கள் சத்தியாக்கிரகம் செய்யலாம். தங்களுக்குக் கொடுக்கப்படாததை அவர்கள் பலாத்காரத்தினால் எடுத்துக்கொண்டுவிடக்கூடாது. சாகும் வரையில் பட்டினி கிடப்பது என்று இருந்து, அவ்வகையில் தங்களுக்கும் மற்றவர்களுக்கும் கஷ்ட நிவாரணம் தேடிக் கொள்ளலாம். அவர்களுக்குப் பொறுமை மாத்திரம் இருக்கு மானால், நான் கூறும் முறைதான் நிச்சயமாக வெற்றி அளிக்கும்.

—'ஹரிஜன்' - 9—6—1946

['கேள்விப் பெட்டி' என்ற தலைப்பில் முன்னால் பிரசுரமானது.]

## 4

# திட்டமான ஊதியம் தேவை

அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம், தனது ஏஜண்டுகளுக்கும் மற்றவர்களுக்கும் கீழ்க்கண்ட கேள்விகளை அனுப்பி, அடுத்த ஆகஸ்டு முதல் தேதிக்கு முன்னால் வார்தா தலைமைக் காரியாலயத்திற்குப் பதில்களை அனுப்ப வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறது :

"அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் ஆதரவில் உற்பத்தி செய்யப்படும், அல்லது விற்கப்படும் பொருள்களின் சம்பந்தமாக, அவற்றை உற்பத்தி செய்த கிராமத் தொழில் வினைஞருக்கு, அவர்களுடைய உழைப்புக் குப் போதுமானதான ஊதியம் கிடைக்கும்படி நாம் வற்புறுத்த வேண்டும் என்று யோசிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக உழைப்போருக்குத் திட்டமான

ஊதியத்தை நிர்ணயிக்க வேண்டியது அவசியமாகிறது. அப்படி நிர்ணயிக்கும் திட்டமான ஊதியம், ஒரே மாதிரியான வேலைக்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரியாகவே இருக்க வேண்டும். தினம் எட்டு மணி நேர வேலையில் குறிப்பிட்ட அளவு உற்பத்தி செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் அதை நிர்ணயிக்கலாம். அத்தகைய ஊதியம், உற்பத்திச் செலவில் சேரும். இதை அனுசரித்து விலையை நிர்ணயிக்க வேண்டும். சாதாரணமாக, போட்டி போட்டு விற்கக்கூடிய விலையை நாம் நிர்ணயிக்க முடியாமலிருக்கலாம். ஆனால், போட்டிபோட வேண்டியிராத பொருள்களின் விஷயத்திலும், பொருள்களின் விசேஷத் தன்மையைக்கொண்டு வாங்குவோர் விரும்பி வாங்கக் கூடியவைகளாக இருக்கும் பொருள்கள் விஷயத்திலும் நாம் அவ்வாறு செய்யலாம்.

கீழ்க்கண்டவை சம்பந்தமாக உங்கள் கருத்தை அறிவிக்க வேண்டும் என்பதற்காக இக்கேள்விகள் உங்களுக்கு அனுப்பப்படுகின்றன :

1. விலையை நிர்ணயிப்பதன் மூலம் குறைந்தபட்ச தினக்கூலியை நிர்ணயித்து அது அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்வது நல்லது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

2. திட்டமான நமது கூலியை நிர்ணயித்துக்கொண்டு அதை அடைவதற்காக வேலை செய்வதா? அல்லது குறைவான குறைந்தபட்சக் கூலியுடன் ஆரம்பித்து, போகப் போக அதை உயர்த்திக்கொண்டு போவதா?

3. எந்த அடிப்படையில் இதை நிர்ணயிப்பது? துணி விஷயத்தைச் சொந்த முயற்சியின்பேரில் சரிக்கட்டிக்கொள்ளலாமாகையால் உணவை மாத்திரம் கவனத்தில் கொண்டு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் இன்னது என்பதில் நீங்கள் ஒரு யோசனை கூற முடியுமா? ஒரு மணி நேர வேலைக்கு அரை அணா என்பது அதிகக் குறைவானதாக இருக்குமா?

மலிவாக இருக்கும் இடங்களில் வாங்கி அதிக விலைக்கு விற்பது என்ற வியாபாரக் கொள்கையை, அகில இந்திய நூற்போர் சங்கம், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் போன்ற பரோபகார ஸ்தாபனங்கள் அனுசரிக்க வேண்டியதில்லை. மலிவாகக் கிடைக்கும் இடத்தில் வாங்கவே அகில இந்திய நூற்போர் சங்கம் முயன்றிருக்கிறது. என்றாலும், இதைக் குறித்து மற்றோர் பத்தியில் எழுதுகிறேன். கதர் அபிவிருத்தி சம்பந்தமாக எனக்கு ஏற்பட்டிருக்கும் அனுபவங்களின் பலனை அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்திற்கு அளிப்பதற்காக அச்சங்கத்தின் ஆதரவில் வேலை செய்துவரும் தொழிலாளர்களின் கூலியைக் குறித்து விவாதத்தை ஆரம்பித்தேன். அதன் பலனே மேலே கண்ட கேள்விகள்.

தேவையான பொருளைச் சாத்தியமானவரையில் குறைவான செலவில் தயாரிப்பது என்ற போக்கு ஏஜண்டுகளிடம் இருந்து வருகிறது என்பது இப்பொழுதே கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. தொழிலாளர்களின் வருமானத்தைக் குறைத்துவிடுவதைத் தவிர இச்செலவுக் குறைப்பு எதில் சாத்தியம்? ஆகையால், குறைந்த பட்ச விகிதம் ஒன்று நிர்ணயிக்கப்பட்டாலன்றி, அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் கிராமத் தொழில் வினை

ஞர்களின் நன்மைக்காக என்று ஆரம்பிக்கப்பட்டிருந்த போதிலும், அவர்களுக்குக் கஷ்டமே உண்டாகும் என்பதற்கான எல்லா ஆபத்துக்களும் இருந்து வருகின்றன.

பொறுமையோடுகூடிய ஏழைக் கிராமவாசிகளை நாம் வெகு நீண்டகாலமாகச் சுரண்டி வந்திருக்கிருேம். அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கமும், பரோபகாரம் என்ற வேஷத்தில் அந்தச் சுரண்டலை இன்னும் அதிக தீவிரமானதாக்காமல் இருக்கட்டும். வேலை இல்லாமலிருக்கும் கிராமவாசிகளுக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியத்துடன் வேலை கிடைக்கும்படி பார்ப்பதுதான் இச்சங்கத்தின் நோக்கமேயன்றி, சாத்தியமான அளவு மலிவாகப் பொருள்களை உற்பத்தி செய்வது என்பது அதன் லட்சியம் அல்ல.

கிராமங்களில் தயாராகும் பொருள்களின் விலை ஏறிவிடும்படி செய்துவிடும் எதுவும், எந்த நோக்கத்தின் பேரில் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் ஆரம்பிக்கப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேருதபடி செய்துவிடும் என்று விவாதிக்கப்படுகிறது. ஏனெனில், கிராமங்களில் உற்பத்தியாகும் பொருள்களின் விலை அதிகமாக இருந்தால், அவற்றை யாரும் வாங்கமாட்டார்கள் என்று கூறுகிருர்கள். ஒரு பொருளை உற்பத்தி செய்கிறவருக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியத்தைக் கொடுப்பதாக மாத்திரம் இது இருக்குமானல், அந்தப் பொருளின் விலை அதிகமானதாக இருக்கிறது என்று ஏன் கருத வேண்டும்? மக்கள் இருந்துவரும் மோசமான நிலைமையை அறியும்படி, வாங்குவோருக்கு எடுத்துக்கூற வேண்டும். பாடுபட்டு உழைத்துவரும் கோடிக்கணக்கான மக்களுக்கு நாம் நியாயத்தைச் செய்ய வேண்டுமானல், அவர்களுக்கு உரியதை நாம் அளிக்கவேண்டும். அவர்கள் உயிர் வாழும்படி செய்வதற்கு வேண்டிய ஊதியத்தை நாம் அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அவர்களுடைய, கதியற்ற நிலைமையை நமக்குச் சாதகமாக உபயோகித்துக்கொண்டு, ஒரு வேளை முழுச் சாப்பாட்டுக்குக்கூடப் போதுமானதாக இல்லாத ஊதியத்தை நாம் அவர்களுக்குக் கொடுக்கக்கூடாது.

மில்களில் உற்பத்தியாகிறவைகளுடன் போட்டி போட இச்சங்கம் மறுத்துவிட வேண்டும் என்பது தெளிவான விஷயம். நாம் தோற்றுத்தான் போவோம் என்று நாம் அறிந்திருக்கும் காரியத்தில் நாம் இறங்க வேண்டியதில்லை. உலோகங்களால் தயாரிக்கும் சாமான்களைப் பொறுத்தவரையில், அவை வெளிநாட்டில் தயாரிக்கப்பட்டவைகளாயினும் உள்நாட்டில் செய்யப்படுபவைகளாயினும், மனிதனின் கையினல் செய்யப்படும் முயற்சியைப் பெரிய கம்பெனிகள் என்றுமே முறியடித்துவிடும். இச்சங்கம் செய்ய முற்படுவதெல்லாம் பொய்யான, மனிதத் தன்மையற்ற பொருளாதாரத்திற்குப் பதிலாக உண்மையான, மனிதப் பொருளாதாரத்தைக் கொண்டுவரப் பார்ப்பதேயாகும். மனிதரின் தருமம், வாழ்வளிக்கும் ஒத்துழைப்பேயன்றிக் கொல்லும் போட்டி

அல்ல. மனக் கிளர்ச்சிகளை அலட்சியம் செய்துவிடுவது, மனிதனுக்கு உணர்ச்சிகள் உண்டு என்பதை மறந்துவிடுவதாகும். 'கடவுள் ரூபத்திலேயே நாம் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம்' என்றால், சிலருடைய நன்மைக்கு என்றல்ல, அநேகரின் நன்மைக்கு என்றும்கூட அல்ல, எல்லோருக்கும் நன்மை ஏற்படும்படி நாம் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதால் அந்த எல்லோருடைய நன்மையையும் நாம் கவனிக்க வேண்டும்.

அனுப்பப்பட்டிருக்கும் கேள்விகளில் அடங்கியிருக்கும் பிரச்னைகளைக்கவனிப்பதை, அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தைப் போன்ற ஒரு பரோபகார ஸ்தாபனம் தட்டிக் கழிக்க முடியாது. உண்மையான பரிகாரம் அனுபவ சாத்தியமில்லாததாகத் தோன்றுமானால், அதை அனுபவ சாத்தியமானதாகச் செய்ய அது பாடுபட்டாக வேண்டும். உண்மை என்றுமே அனுபவ சாத்தியமானதே. இதைக்கொண்டு கவனித்தால் இச்சங்கத்தின் வேலை முறையை, முதியோர் கல்வி என்று பொருத்தமான வகையில் கூற முடியும்.

தனது பராமரிப்பிலிருக்கும் தொழில் வினைஞருக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் கிடைக்கும்படி சங்கம் செய்ய வேண்டுமானால், அவருடைய குடும்பத்தின் வரவு செலவு விவரத்தையும் சங்கம் ஆராய்ந்து அவருக்குக் கொடுக்கப்படும் ஒவ்வொரு காசும் எவ்விதம் செலவாகிறது என்பதையும் சங்கம் கண்டுகொள்ள வேண்டும்.

குறைந்த பட்ச அல்லது வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் இன்னது என்பதை முடிவு செய்வதுதான் மிகவும் கஷ்டமான விஷயம். நல்ல திறமையுள்ள ஒரு தொழிலாளி, எட்டு மணி நேரம் கடுமையாக வேலை செய்து, குறிப்பிட்ட சரக்கை இவ்வளவு உற்பத்தி செய்தால், எட்டு அணாக் கொடுப்பது குறைந்த பட்ச ஊதியம் என்று நான் யோசனை கூறினேன். எட்டு அணா என்பது, வாழ்க்கையின் தேவைகளில் சிலவற்றிற்காக வெறும் அடையாளமான தொகைதான். ஐந்து பேரைக் கொண்ட ஒரு குடும்பத்தில் முழு நேரமும் வேலை செய்யக்கூடியவர்கள் இரண்டு பேர் இருந்தால், விடுமுறைக்கும் நோய்க்கும் எந்த நாளையும் ஒதுக்காமல் அவர்கள் வேலை செய்தால், தினத்திற்கு எட்டு அணா விகிதத்தில் அவர்கள் மாதத்திற்கு ரூ. 30 சம்பாதிக்கலாம். ஐந்து பேர் சாப்பிட்டாக வேண்டியிருக்கும் ஒரு குடும்பத்திற்கு மாதம் முப்பது ரூபாய் என்பது ஆடம்பரமான வருமானம் அல்ல. இங்கே ஆலோசிக்கப்பட்டிருக்கும் முறையில் ஆண், பெண் என்ற பாகுபாடோ, அல்லது வயதோ கவனிக்கப்படுவதில்லை. ஆனால், பதில் அனுப்புகிறவர் ஒவ்வொருவரும் தமது சொந்த அனுபவத்தைக்கொண்டு கவனித்து அதன் பேரில் தமது கருத்தைத் தெரிவிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 13—7—1935

பகுதி மூன்று

# தொழிலாளர், விவசாயிகள் சங்கங்கள்

## 1

## தொழிலாளரின் பலம் எதில் இருக்கிறது?

பிரான்சிலும் சுவிட்ஜர்லாந்திலும் நடந்த பல கூட்டங்களில் கேட்கப்பட்ட ஏராளமான கேள்விகளையும், அவற்றிற்கு அளிக்கப்பட்ட பதில்களையும் என்னுடைய முந்திய கடிதத்தில் விட்டுவிட வேண்டியதாகிவிட்டது. அவற்றை இந்த வாரம் எடுத்துக்கொள்ளுகிறேன். ஜினிவாவில் விக்டோரியா மண்டபத்தில் நடந்த முக்கியமான கூட்டங்களிலிருந்து ஆரம்பிக்கிறேன். உலகத்திலேயே இது மிகச் சிறந்த மண்டபம் என்று கருதப்படுகிறது. ஓர் ஆங்கிலேயர், இதை சுவிட்ஜர்லாந்துக்கு இனமாகக் கட்டிக்கொடுத்திருக்கிறுர். வழக்கமான மத்தியானச் சாப்பாட்டு நேரத்தில், காந்திஜி கூறுவதைக் கேட்பதற்காக ஆண்களும் பெண்களுமாக இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் அங்கே ஒருங்கு திரண்டிருந்தார்கள். மற்ற நேரங்களில் கூட்டத்தை நடத்தலாம் என்ருல், ரெயில்கள் புறப்படும் நேரம் அதற்கு அசௌகரியமானதாக இருந்தது. இந்த நேரம் சௌகரியமான நேரம் அல்ல; ஆகையால், கூட்டம் அவ்வளவாக இருக்காது என்றே பயந்தார்கள். ஆனல், ஒரு நாளைக்கு மத்தியானச் சாப்பாடு இல்லாமல் போனுலும் சரி என்று மக்கள் முடிவுசெய்துவிட்டார்கள் என்று தோன்றியது. மண்டபத்தில் மாத்திரமேயன்றி, அதிலிருந்த மூன்று, நான்கு காலரிகளிலும் மக்கள் நிறைந்துவிட்டனர். ஜினிவாவில் சர்வதேசச் சங்கத் தலைமைக் காரியாலயமும், சர்வதேசச் சங்கத் தொழிலாளர் சங்கக் காரியாலயமும், மற்றும் பல சர்வதேச ஸ்தாபனங்களின் காரியாலயங்களும் இருந்தன. ஆகையால், கேட்கப்பட்ட கேள்விகள் இயல்பாகவே அவைகளை ஒட்டியதாகவே இருந்தன. காந்திஜி ஆரம்பத்தில் சர்வதேசச் சங்கத்தைக் குறித்துச் சுருக்கமாகச் சில வார்த்தைகள் சொன்னுர். பிறகு சில கேள்விகளுக்குப் பதில் சொன்னுர். அவர் கூறியதாவது: “உங்களுடைய இந்த நகரத்தில் சர்வதேசச் சங்கத்தின் தலைமைக் காரியாலயம்

இருக்கிறது. இந்தச் சங்கம் ஏதேதோ அற்புதங்களையெல்லாம் செய்துவிடும் என்று எதிர்பார்க்கப்பட்டது. யுத்தம் என்பதே இல்லாதபடி அது செய்துவிடும். அது தனது சொந்தப் பலத்தைக் கொண்டு தங்களுக்குள் தகராறு இருந்துவரும் நாடுகளுக் கிடையே மத்தியஸ்தம் செய்துவிடும் என்றும் எதிர்பார்க்கப் பட்டது. ஆனால், இதற்கு அவசியமான அதிகாரம் சர்வதேசச் சங்கத்திற்கு இல்லை என்றே எப்பொழுதும் எனக்குத் தோன்றி வந்தது. செய்யும் முடிவுகள் பயனுள்ளவையாவதற்கு, முற்றிலும் என்று இல்லாவிட்டாலும் பெரும்பாலும், சம்பந்தப்பட்ட நாடு களின் நல்லெண்ணத்தையே இச்சங்கம் நம்பியிருக்க வேண்டிய தாயிற்று. இந்தியாவில் நாங்கள் அனுசரித்த முறை, சர்வ தேசச் சங்கம் போன்ற ஒரு ஸ்தாபனத்திற்கு மாத்திரமல்ல, உலக சமா தானத்தை லட்சியமாகக் கொள்ளும் எந்தச் சுயேச்சையான ஸ்தாபனம் அல்லது சங்கத்திற்கும் அவசியமானதான அதிகா ரத்தை அளிக்கும்.''

**கேள்வி:** பலாத்காரம் இல்லாமல் தொழிலாளர்கள் எப்படி நீதியை அடைய முடியும்? தொழிலாளரின் முயற்சிகளை ஒடுக்குவதற்காக முதலாளிகள் பலாத்காரத்தை உபயோகிப் பார்களாயின், தங்களை ஒடுக்குகிறவர்களை நாசம் செய்யத் தொழிலாளர் ஏன் முயற்சி செய்யக்கூடாது?

**பதில்:** உண்மையில் இது பழைய தருமம். அடிக்குப் பதில் அடி என்ற வனாந்தர தருமம். வனாந்தரத்தின் அந்தத் தருமம் மனிதனுக்குப் பொருந்தாது. ஆகையால், அதை ஒழித்து விட்டு, அத்தியாவசியமானது என்று நான் கருதும் அகிம் சைச் சோதனையைச் செய்ய நான் முயன்று வருகிறேன்.

அகமதாபாத் என்ற இடத்தில் இருக்கும் ஒரு தொழி லாளர் சங்கத்திற்கு நான் பிரதம ஆலோசகன் என்பது உங் களுக்குத் தெரியாமலிருக்கலாம். அங்கே போய்ப் பார்த்த, தொழிலாளர் விஷயங்களில் நிபுணர்களான அநேகர், அச்சங் கத்தின் சிறப்பைக் குறித்துப் பாராட்டிக் கூறியிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் ஏற்படும் பிரச்னை கள் சம்பந்தமாக அகிம்சை முறையை அமுலுக்குக் கொண்டு வரச் சென்ற பதினைந்து ஆண்டுகளாக இத்தொழிலாளர் சங்கத்தின் மூலம் நாங்கள் முயற்சி செய்துகொண்டிருக் கிறோம். ஆகையால், இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்லப்போவதெல்லாம், கேள்வி கேட்கப்பட்டிருக்கும் அதே முறையில், உண்மை அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு கூறப்போவதேயாகும். தொழிலாளர் போது மானபடி ஒன்றுபட்டுத் தன்னலத் தியாகமும் செய்தால், எப்பொழுதுமே அவர்கள் நியாயத்தில் வெற்றி பெற்றுவிட முடியும் என்பதே எனது பணிவான அபிப்பிராயம். முதலாளிகள் எவ்வளவுதான் அடக்கி ஒடுக்குகிறவர்களாக

இருந்தாலும், அதைப் பற்றிக் கவலையில்லை. முதலாளி களுக்கு என்றுமே இருக்க முடியாத சக்தி, தொழிலாளருக்கு இருக்கிறது. இதை, தொழிலாளருடன் சம்பந்தப்பட்டிருப் பவர்களும், அவர்களை நடத்திச் செல்லுபவர்களுமே தெரிந்து கொள்ளவில்லை என்றுதான் நான் நிச்சயமாக எண்ணு கிறேன். தொழிலாளர் இல்லாது போனால் மூலதனம் கதி யற்றதாகிவிடும் என்பதை மாத்திரம் தொழிலாளர்கள் அறிந்து, உணர்ந்தும் விடுவார்களாயின், தொழிலாளர்கள் உடனே தங்களுக்குரிய நிலையை அடைந்துவிடுவார்கள்.

துரதிருஷ்டவசமாக, மூலதனத்தின் சக்தியாகிய மயக் கத்திலும், அதன் செல்வாக்கு மயக்கத்திலும் நாம் இருந்து வருகிறோம். ஆகையால், உலகமே மூலதனத்தில்தான் இருந்து வருகிறது என்று நம்ப ஆரம்பித்துவிட்டோம். ஆனால், ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தால், முதலாளிகள் என்றுமே பெற்றிருக்கமுடியாத மூலதனம் தங்களிடம் இருக் கிறது என்பதைத் தொழிலாளர்கள் கண்டுகொள்ளுவார்கள். உழைப்புக்கு இணையில்லாத சந்தர்ப்பங்கள் இருந்து வரு கின்றன என்று ரஸ்கின் அவர் காலத்தில் உபதேசித்தார். ஆனால், அவர் நமக்கு முற்பட்ட காலத்தில் இதைச் சொல்லிப் போனார். இப்பொழுதோ ஸர் டேனியல் ஹாமில்டன் என்ற ஆங்கிலேயர் ஒருவர் இருக்கிறார். அவர் உண்மையில் அதே விஷயத்தைச் சோதனை செய்துகொண்டிருக்கிறார். அவர் ஒரு பொருளாதாரப் பண்டிதர். அவர் ஒரு முதலாளியுங்கூட. அவர் தமது பொருளாதார ஆராய்ச்சியினாலும், சோதனை களினாலும், ரஸ்கின் தமது மனத்தில் தோன்றியதைக்குறித்து என்ன சொன்னாரோ அந்த முடிவுக்கே வந்திருக்கிறார். தொழிலாளருக்கு உயிரானதோர் உபதேசத்தைக் கூறியிருக் கிறார். ஓர் உலோகத்தின் துண்டுதான் மூலதனம் என்று எண்ணுவது தவறு என்று அவர் கூறுகிறார். இவ்வளவு உற்பத்திதான் மூலதனம் என்று எண்ணுவதும் தவறு என் கிறார். ஆனால், நாம் அதன் ஆதாரத்திற்கே போய்ப் பார்ப் போமானால், உழைப்புதான் மூலதனம், உயிருள்ளதான இம் மூலதனம் என்றும் செலவழிந்துவிட முடியாதது என்பது விளங்கும் என்றும் கூறுகிறார். இந்த நியதியின் பேரிலேயே அரசாங்கத்துக்கு எதிரான எங்கள் போராட்டத்தில் நாங்கள் வேலை செய்து வருகிறோம். இந்த நியதியை உணர்ந்துகொண் டதனால்தான் சம்பாரணில், ஒரு நூற்றாண்டுக்கு மேலாக இருந்த கொடுமையினின்றும் 17,00,000 மக்களை ஆறு மாதங் களுக்குள்ளேயே விடுவித்துவிட முடிந்தது. அந்தக் கொடுமை என்ன என்பதை உங்களுக்குக் கூறுவதை நான் தாமதிக்கக்கூடாது. ஆனால், அந்தப் பிரச்னையை அறிந்து கொள்ளுவதில் சிரத்தையுள்ளவர்கள், அவர்கள் முன்னால் நான் எடுத்துக் கூறிய ஒவ்வோர் உண்மையையும் ஆராய முடியும். நாங்கள் அதில் செய்தது என்ன என்பதை இப்

பொழுது சொல்லுகிறேன். ஆங்கிலத்தில் அதிகச் சக்தி வாய்ந்த ஒரு சொல் இருக்கிறது. பிரெஞ்சிலும், உலகத்தின் எல்லா மொழிகளிலுமே அந்தச் சொல் இருக்கிறது. 'முடியாது' என்பதுதான் அச்சொல், 'சரி' என்று சொல்ல வேண்டும் என்று முதலாளித்துவம் பாட்டாளியிடம் விரும்பும்போது, 'முடியாது' என்று சொல்லிவிடவே பாட்டாளி விரும்பினல், 'முடியாது' என்று முழங்கிவிட வேண்டும் என்பதுதான் நாங்கள் கண்டுகொண்ட ரகசியம். 'சரி' என்று சொல்ல தாம் விரும்பும்போது 'சரி' என்று சொல்லவும், 'முடியாது' என்று சொல்லிவிட விரும்பும்போது 'முடியாது' என்று தன்னிஷ்டப்படி சொல்லிவிடவும் தமக்கு உரிமை இருக்கிறது என்பதைத் தொழிலாளர் உடனே அறிந்து கொண்டு விடுகிருர்கள். முதலாளித்துவத்தினிடமிருந்து தொழிலாளர் சுதந்திரமானவர்களாகிவிடும்போது தங்களைக் கவரவே அது பார்க்கவேண்டும் என்பதையும் தெரிந்து கொண்டு விடுகிருர்கள். முதலாளித்துவத்திற்குத் தனக்குச் சாதகமாக உபயோகித்துக்கொள்ள துப்பாக்கிகளும், விஷ வாயுக்களும்கூட இருந்தாலும் அதைப்பற்றிக் கொஞ்சமும் கவலை இல்லை. முதலாளித்துவத்திற்கு அவைகளெல்லாம் இருந்தாலும், 'முடியாது' என்பதை உபயோகித்துத் தொழிலாளர் தங்கள் கௌரவத்தை வற்புறுத்திவிடுவார்களாயின், முதலாளித்துவம் கொஞ்சமும் கதியில்லாத நிலையிலேயே இருக்கும். அப்பொழுது தொழிலாளர் பதிலுக்குப் பதில் செய்ய வேண்டிய அவசியமில்லை. துப்பாக்கிக் குண்டுகளையும், விஷ வாயுக்களையும் ஏற்றுக்கொண்டு தொழிலாளர் உறுதியுடன் நின்று, அப்பொழுதும் 'முடியாது' என்பதை வற்புறுத்திக் கொண்டுதான் இருப்பார்கள். தொழிலாளர்கள் அடிக்கடி தோல்வியடைந்துகொண்டு வருவதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. நானும் ஒரு தொழிலாளி என்ற முறையிலேயே இதைக் கூறுகிறேன். நான் கூறிய யோசனையின்படி முதலாளித்துவத்தைச் சக்தியற்றதாக்கிவிடுவதற்குப் பதிலாக, மூலதனத்தைக் கைப்பற்றிக்கொண்டு மோசமான வகையில் தாங்களே முதலாளிகளாகிவிடத் தொழிலாளர் விரும்புவதுதான் தோல்விக்குக் காரணம். முதலாளிகளோ, சரியானபடி பலம் பெற்றிருக்கிருர்கள்; ஒன்றுபட்டும் இருக்கிருர்கள்.

அதே வேலைக்கு வந்துவிடத் தொழிலாளர் சிலர் தயாராக இருக்கிருர்கள் என்பதையும் காண்கிருர்கள். ஆகையால், தொழிலாளரை ஒடுக்குவதற்கு இவர்களில் ஒரு பகுதியினரை உபயோகித்துக் கொள்ளுகின்றனர். உண்மையிலேயே நாம் இந்த மயக்க மந்திரத்தில் மயங்கிக் கிடக்காமலிருந்தால், நம்மில் ஒவ்வொருவரும், ஒவ்வோர் ஆணும் பெண்ணும், இந்த அடிப்படையான உண்மையைக் கொஞ்

சங்கூட கஷ்டமின்றி அறிந்துகொள்ளுவோம். வாழ்க்கை யின் பல துறைகளிலும் அநேக சோதனைகள் செய்து பார்ப் பதன் மூலம் இதை எனக்கு நானே நிரூபித்துக்கொண்டிருக் கிறேன். ஆகையால், ஆதாரத்துடன் நான் உங்களிடம் இதைச் சொல்லுகிறேன். நான் இவ்விதம் சொல்லுவதற் காக என்னை மன்னிப்பீர்கள் என்றே நம்புகிறேன். உங்கள் முன்னால் நான் கூறியிருக்கும் திட்டத்தில் மனித சக்திக்கு அப்பாற்பட்டது எதுவும் இல்லை. ஆனால், ஒவ்வொரு தொழிலாளியும், ஆணும் பெண்ணும், அனுசரிக்கக்கூடியது தான் இது. மேலும், இந்த அகிம்சாத் திட்டத்தின்படி தொழிலாளர் செய்ய வேண்டும் என்று சொல்லப்படுவதில், பீரங்கி வேட்டுக்கு முன்னால் நிற்கும் ஒரு சுவிஸ் சிப்பாயோ, அல்லது உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் ஆயுத பாணியாக இருக்கும் ஒரு சாதாரணச் சிப்பாயோ செய்ய வேண்டும் என்று சொல்லப்படுவதற்கு அதிகமானது எது வுமே இல்லை. எதிரிக்குச் சாவையோ நாசத்தையோ உண் டாக்கிவிட வேண்டும் என்றே சிப்பாய் முற்படுகிறான் என் பதில் சந்தேகமில்லையென்றாலும், தன் உயிரைக் கொடுத்து விடவும் அவன் தயாராகவே இருக்கிறான். சிப்பாயினிடம் இருக்கும் மிருகத்தனத்தை, அதாவது இன்னொருவருக்குச் சாவை உண்டாக்குவதற்கு அவனுக்குள்ள ஆற்றலை அனுச ரித்து நடக்காமல், அந்தச் சிப்பாயின் வீரத்தைப் பார்த்துத் தொழிலாளர் தாமும் வீரத்துடன் நடக்க வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். உங்களுக்கு இன்னுமொன்றும் கூறுகிறேன். ஆயுதம் எதையுமே வைத்துக்கொள்ளாமல், தற்பாதுகாப்புக்குக்கூட எந்த ஆயுதமும் இல்லாமல், சாகத் தயாராயிருக்கும், சாகத் துணியும் ஒரு தொழிலாளி, உள் ளங் காலிலிருந்து உச்சந்தலை வரையில் ஆயுதபாணியாக இருக்கும் ஒருவரைவிட மிக உயர்வான வீரத்தையே காட்டு கிறார்.

—'எங் இந்தியா' - 14—1—1932

[ஸ்ரீ மகாதேவ தேசாயின் கடிதம் 'எங் இந்தியா'வில் முதலில் 'கேள்வி களும் பதில்களும்' என்ற தலைப்பிலே பிரசுரமாயிற்று. 'முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமுள்ள உறவு' என்ற பகுதி மாத்திரம் அதிலிருந்து எடுத்து மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

# 2

# விவசாயிகள், தொழிலாளர் சங்க அடிப்படை

நிர்மாண வேலைத் திட்டத்தின் பதின்மூன்று அம்சங்களையும்* விவரிப்பதை இப்பொழுது முடித்திருக்கிறேன். இதில் ஒவ்வோர் அம்சமும் சுயராஜ்யத்திற்கு எவ்விதம் பொருத்தமானது, ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் இதை எவ்விதம் நிறைவேற்ற முடியும் என்பதை எடுத்துக்காட்ட நான் முயன்றிருக்கிறேன். இந்த வேலைத் திட்டத்தோடு எல்லாம் தீர்ந்து விடவில்லை. சுயராஜ்யம் என்பது மிகப் பிரமாண்டமான கட்டடம். அதைக் கட்டுவதற்கு எண்பது கோடி கைகள் வேலை செய்ய வேண்டும். ஆகையால், இந்தப் பதின்மூன்று விஷயங்களுடன் இன்னும் அநேகத் துண்டு இனங்களையும் சேர்த்துக்கொள்ளலாம். இவற்றிற்கு ராட்டையையே கேந்திரமாகக்கொண்டு மற்றவைகளெல்லாம் அதைச் சுற்றி வர வேண்டும்; இடைவிடாத ஆக்க சேவைக்கு உற்சாகம் ராட்டையிலிருந்து வர வேண்டும்.

விவசாயிகள், தொழிற்சாலைத் தொழிலாளர் அல்லது தொழிலாளர்கள், மாணவர்கள் ஆகியவர்களைக் குறித்து எதுவுமே கூறப்படவில்லை என்பதை வாசகர்கள் கவனித்திருப்பார்கள். சக ஊழியர்கள் இதைக் கவனித்திருக்கிறார்கள். அவர்கள் வேலையையும் நிர்மாண வேலைத் திட்டத்தில் சேர்ப்பதை வேண்டுமென்றே நான் தவிர்த்திருக்கிறேன். இந்த லட்சியத்தில் ஈடுபட்டிருக்கும் மற்ற ஊழியர்களைப் போன்றே அவர்களும் இந்தப் பதின்மூன்று அம்சங்களிலும் வேலை செய்ய வேண்டும். அவர்களைச் சொல்லாமல் நான் தவிர்த்திருப்பது, இயக்கத்தில் அவர்கள் செய்யக் கூடியதை சிறுமைப்படுத்தும் நோக்கத்தில் அல்ல. விடுதலை இயக்கத்தில் அவர்களுக்கு இருக்கும் அதிக முக்கியத்தை நான் நன்றாக அறிந்தே இருக்கிறேன். அவர்களை ஒருங்கு திரட்டி வேலை செய்யும்படி செய்வது யார், எப்படி என்பதுதான் இதிலிருக்கும் முக்கியமான விஷயம். தொழிலாளரைப் பொறுத்த வரையில், அகமதாபாத் தொழிலாளர் சங்கத்தை ஆரம்பித்ததற்குப் பொறுப்பாளியாக இருந்தவன் நானே. அகில இந்தியாவும் பின்பற்றுவதற்கான

---

* நிர்மாண வேலைத் திட்டத்தின் பதின்மூன்று அம்சங்களும் வருமாறு: (1) சமூக ஒற்றுமை, (2) தீண்டாமை ஒழிப்பு, (3) மது விலக்கு, (4) கதர், (5) மற்றக் கிராமக் கைத்தொழில்கள், (6) கிராம சுகாதாரம், (7) புதிய அல்லது அடிப்படைக் கல்வி, (8) முதியோர் கல்வி, (9) பெண்கள் முன்னேற்றம், (10) சுகவழியிலும் சுகாதாரத்திலும் போதனை, (11) தேசிய பாஷையைப் பரப்புவது, (12) ஒருவரின் சுயபாஷையில் அன்பு கொள்ளுவது, (13) பொருளாதாரச் சமத்துவத்திற்காக வேலை செய்வது.

உதாரணம் இது என்பது என் அபிப்பிராயம். அசல் அகிம்சையே அதன் அடிப்படை. அதன் வேலைகளில் அதற்குத் தோல்வி ஏற்பட்டதே இல்லை. எந்த விதமான சிக்கலோ, பகட்டோ இல்லாமல் அது மேலும் மேலும் பலம் பெற்று வந்திருக்கிறது. அதற்குச் சொந்தமான ஆஸ்பத்திரி இருக்கிறது. மில் தொழிலாளரின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. முதியோருக்குக் கல்வியளிக்கும் வகுப்புக்கள் இருக்கின்றன. அதற்குச் சொந்தமாகக் கதர்க் கடை, அச்சுக் கூடம், குடியிருப்பு வீடுகள் ஆகியவைகளும் இருக்கின்றன. அநேகமாக எல்லாத் தொழிலாளர்களும் வாக்காளர்கள்; தேர்தலின் விதியை அவர்களே முடிவு செய்கின்றனர். மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் முயற்சியினால் அவர்கள் வாக்காளர்களாயினர். இந்த ஸ்தாபனம், காங்கிரஸின் ராஜீய விவகாரங்களில் சம்பந்தப்பட்டதே இல்லை. இதன் செல்வாக்கு நகரின் முனிசிபல் கொள்கையை மாற்றுவதாக இருக்கிறது. முற்றிலும் அகிம்சையோடுகூடிய வேலை நிறுத்தங்களை வெற்றிகரமாக நடத்திய பெருமையும் அதற்கு உண்டு. மில் சொந்தக்காரர்களும் தொழிலாளரும், விரும்பி மத்தியஸ்த முடிவுக்கு வருவதன் மூலமே பெரும்பாலும் தங்களுக்குள் உறவு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். என் இஷ்டப்படி நடப்பதாக இருந்தால், இந்தியாவிலிருக்கும் தொழிலாளர் ஸ்தாபனங்களையெல்லாம் அகமதாபாத் உதாரணத்தில் ஒழுங்குபடுத்திவிடுவேன். அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸின் வேலையில் குறுக்கிட அது முற்பட்டதே இல்லை. அந்தக் காங்கிரஸின் செல்வாக்கிற்கும் அது உடன்பட்டு விடவில்லை. அகமதாபாத் முறையைத் தொழிற் சங்கக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டு, அகில இந்திய யூனியனின் ஒரு பகுதியாக அகமதாபாத் ஸ்தாபனத்தைச் செய்துகொள்ளும் ஒரு காலம் வரும் என்றே நம்புகிறேன். இது பற்றி நான் அவசரப்படவில்லை. உரிய காலத்தில் அது வரும்.

விவசாயிகள் இயக்க விஷயத்தில்கூட, ராஜீய காரியங்களுக்கு விவசாயிகளை உபயோகித்துக்கொண்டுவிட ஆபாசமான போட்டி இருந்து வருகிறது என்றே அஞ்சுகிறேன். அக்காரியம் அகிம்சா முறைக்கு முற்றிலும் மாறானது என்று கருதுகிறேன். சத்தியாக்கிரகம் இந்தியாவில் முதல் தடவையாகச் சம்பாரணிலேயே பரீட்சித்துப் பார்க்கப்பட்டது. அதன் பலனை அகில இந்தியாவும் அறிந்திருக்கிறது. ஆகையால், விவசாயிகளை, ஒருங்கு திரட்டுவதில் என் முறையை அறிய விரும்புகிறவர்கள் சம்பாரணில் நடந்த இயக்கத்தை ஆராய்ந்து பயனடையலாம். அது பொதுஜன இயக்கமாக ஆகிவிட்டது. ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் முற்றிலும் அகிம்சையோடு அது நடந்தது. அதில் இருபது லட்சத்திற்கும் அதிகமான விவசாயிகள் ஈடுபட்டிருந்தார்கள். குறிப்பிட்ட ஒரு குறையைக் கேந்திரமாகக் கொண்டே போராட்டம் நடந்தது. அக்குறையோ, ஒரு நூற்றாண்டுக்கும் மேற்பட்டதான பழைய குறை. இக்குறையைப் போக்கிக்

கொண்டு விடுவதற்காகப் பலாத்காரத்தோடுகூடிய கலகங்கள் பல முன்னால் நடந்திருக்கின்றன. அவைகளெல்லாம் அடக்கப் பட்டுவிட்டன. அகிம்சைப் பரிகாரமோ, ஆறே மாதங்களில் முழு வெற்றியையும் அளித்தது. நேரடியான முயற்சி எதுவு மில்லாமலேயே சம்பாரண் விவசாயிகள் ராஜீய உணர்வு பெற்ற வர்களாகி விட்டார்கள். தங்கள் குறைகளைப் போக்கிக்கொண்டு விடுவதற்கு அகிம்சையை வேலை செய்ததில் திட்டமான சாட்சியம் அவர்களுக்கு இருந்தது அவர்களைக் காங்கிரஸில் ஈடுபடும்படி செய்தது. பாபு பிரஜ்கிஷோர், பாபு ராஜேந்திரப் பிரஸாத் ஆகியவர்களின் தலைமையில் சட்ட மறுப்புப் போராட் டங்களில் தங்கள் ஆற்றலையும் நன்றாக நிரூபித்தனர்.

கேடா, பர்தோலி, போர்ஸாத் ஆகிய இடங்களில் நடந்த விவசாயிகள் இயக்கங்களையும் ஆராய்ந்து வாசகர் பயனடைய லாம். அவர்களுக்குச் சொந்தமாக இருக்கும், அவர்கள் உணரும் கஷ்டங்களை நிவர்த்திப்பது என்பதற்கு அப்பால், ராஜீய காரி யங்களுக்காக விவசாயிகளை உபயோகித்துக்கொள்ள மறுத்து விடுவதில்தான் வெற்றியின் ரகசியம் இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு தவறை எதிர்த்துப் போராட ஒன்றுபடுவது என்பது அவர் களுக்குப் புரியும். அப்பொழுது அவர்களுக்கு அகிம்சையைப் பற்றிய உபதேசங்கள் அவசியமில்லை. தங்களுக்கு விளங்கக் கூடியதும், சரியான பலன் தரக்கூடியதுமான பரிகாரத்தை அவர்கள் அனுசரிக்கிறார்கள். அவர்கள் அனுசரித்த முறைதான் அகிம்சை முறை என்று அவர்களுக்குப் பிறகு சொன்னால், அதை அப்படியே உடனே தெரிந்துகொண்டு விடுகிறார்கள்.

விவசாயிகளுக்காக, விவசாயிகள் மத்தியில் எப்படி வேலை செய்யலாம் என்பதை சிரத்தையுள்ள காங்கிரஸ்காரர்கள், மேலே சொல்லப்பட்ட உதாரணங்களிலிருந்து ஆராய்ந்து கொள்ளலாம். விவசாயிகள் இயக்கங்களை நடத்த சில காங்கிரஸ்காரர்கள் மேற்கொண்ட முறை, விவசாயிகளுக்கு எந்தவித நன்மையையும் செய்துவிடாததோடு அவர்களுக்குத் தீமையையே செய்திருக்கும் என்று நான் கருதுகிறேன். எப் படியும் அவர்கள் அகிம்சை முறையை உபயோகிக்கவில்லை. அகிம்சை முறையில் தங்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதை அவர்கள் ஒளிக்காமல் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அந்த அளவுக்கு அந்த ஊழியர்கள் யோக்கியமானவர்களே. அவர்கள் காங்கிரஸின் பெயரை உபயோகிக்கக் கூடாது; காங்கிரஸ் காரர்கள் என்று சொல்லிக்கொண்டு அந்த வேலையைச் செய்யக் கூடாது என்பதுதான் அத்தகைய ஊழியர்களுக்கு நான் சொல்லக்கூடிய புத்திமதி.

அகில இந்திய அடிப்படையில் விவசாயிகள், தொழிலாளர் இயக்கங்களை நடத்தும் போட்டியிலிருந்து நான் ஏன் ஒதுங்கி இருந்துவிட்டேன் என்பதை இப்பொழுது வாசகர் புரிந்து

கொண்டிருக்கலாம். எல்லோருமே அதே மாதிரி நடந்துகொள்ள வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். எப்படியும் நிர்ப்பந்தப் படுத்துவது என்பது அகிம்சையில் இல்லை. அகிம்சை வேலை செய்வதன் கண்டிப்பான நியாயமும், அது எடுத்துக் காட்டுவதும் வேலையைச் செய்யட்டும் என்று நம்ப வேண்டும்.

—'நிர்மாண வேலைத் திட்டம்'—1941-ஆம் வருடப் பதிப்பு—பக்கம் 20.

[இவ்விஷயம் 'விவசாயிகள், தொழிலாளர், மாணவர்கள்' என்ற தலைப்பில் முதலில் வெளியாயிற்று. மாணவரைப் பற்றிய பகுதி இதிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறது.]

## 3

# அகிம்சை நடவடிக்கைக்குத் திரட்டுதல்

சத்தியாக்கிரகத்தைப் பற்றிய காங்கிரஸ் தீர்மானத்தின் மீது இப்பொழுது நடந்து வரும் வாதப் பிரதிவாதத்தைக் குறித்து டாக்டர் லோகியா, நியாயமான காரணங்களோடு கூடிய நீண்ட கடிதம் ஒன்றை எனக்கு அனுப்பி இருக்கிறார். அதில் இருக்கும் ஒரு பகுதி, பொதுஜன விவாதத்திற்கு உரியது. இதுதான் அது :

"உங்களுடைய குறிப்பிட்ட வேலைத் திட்டத்திலிருந்து சத்தியாக்கிரகக் கொள்கையைக் கொஞ்சங்கூட பிரித்துவிட நீங்கள் அனுமதிக்க மாட்டீர்கள். சத்தியாக்கிரகக் கொள்கையை எல்லாவற்றிற்கும் பயன்படுத்துவதாக்கி, உங்களுடையதல்லாத மற்ற வேலைத் திட்டங்களுக்கும் அதையே அடிப்படையானதாகச் செய்து விடுவது சாத்தியமானது அல்லவா? ஒரு வேளை அது சாத்தியமானதாக இல்லாமலிருக்கலாம். ஆனால், உங்கள் மீது இந்தக் குறையைத் தான் நான் சொல்லுவேன்: அத்தகைய பரீட்சை எதையும் செய்து பார்ப்பதற்கு நீங்கள் அனுமதிக்கவும் இல்லை, ஆதரவளிக்கவும் இல்லை. உங்கள் சொந்த வேலைத் திட்டமான மந்திரி சபை நடவடிக்கைகளும், நிர்மாண வேலைகளுமே முற்றிலும் போதுமானவை என்று இன்று மக்கள் கருதவில்லை. விவசாயிகளின் நடவடிக்கைகள் போன்ற வேலைத் திட்டங்களை அவர்கள் பரீட்சித்து வருகிறார்கள். பொதுவான சத்தியாக்கிரகம் இல்லாத சமயங்களில் கூட, ஆங்காங்கு சில இடங்களில் இந்தப் புதிய வேலைத் திட்டத்தின்படி நடவடிக்கைகள் அவசியமே ஆகின்றன. பொதுவான சத்தியாக்கிரகத்திற்குரிய முறையை நீங்கள் காணும் வரையில், இந்தச் சிறு சத்தியாக்கிரகத்தை நீங்கள் நிறுத்துவீர்களா? அத்தகைய நடவடிக்கையினால் அடக்குவதனால் உண்டாகக் கூடிய அராஜக ஆபத்து இருக்கிறது. சரித்திரம் முழுவதிலுமே மனித வர்க்கம் பெற்றிருக்கும் கிடைப்பதற்கரிய மிகுந்த அபூர்வமான வெகுமதிகளில் அகிம்சையோடு கூடிய கூட்டு நடவடிக்கையும் ஒன்றாகும். என்றாலும், அதைப் பாதுகாத்து, தொடர்ந்து செய்து கொண்டு போவது எப்படி என்பது நமக்குத் தெரியாமலிருக்கலாம்."

குறிப்பிட்ட என் சொந்த வேலைத் திட்டங்களிலிருந்து சத்தி யாக்கிரகக் கொள்கையைப் பிரித்து உபயோகிப்பதை நான் தடுக்கவில்லை என்பது மாத்திரமல்ல, புதிய வேலைத் திட்டங் களைக் கூறும்படியும் நான் அடிக்கடி கேட்டும் வந்திருக்கிறேன். ஆனால், புதிய வேலைத் திட்டம் வந்தது என்பதாக இதுவரையில் ஒரு விஷயத்தைக்கூட நான் அறிந்ததில்லை. என்னுடைய வேலைத் திட்டத்தில் மாற்றங்களைச் செய்வதோ, அதில் சேர்ப்பதோ இருக்கக் கூடாது என்று நான் என்றும் கூறியதுமில்லை. என்ரு லும், நான் சொல்லி இருப்பதும், இப்பொழுது திரும்பச் சொல்ல நான் விரும்புவதும் என்னவென்ருல், சரியானது என்று எனக் குத் தோன்ருத ஒரு புது வேலைத் திட்டத்தை நான் ஆசீர்வதிக் கவோ, ஆதரிக்கவோ முடியாது என்பதுதான். என் கருத்துப் படியான சத்தியாக்கிரகத்திலிருந்து வந்ததே அது என்று நான் கூறுகிறேன். ஆகையால், சத்தியாக்கிரகத்தை வளர்ப்பதற்கு ஆதரவாக இருக்கும் ஜீவனுள்ள நடவடிக்கை ஏதாவது இருந் தால் அது என் கவனத்திற்கு வராமல் தப்பிவிட முடியாம லிருக்கலாம்.

என்னுடைய வேலைத் திட்டம், பொதுவாகக் காங்கிரஸி லுள்ள படித்தவர்களின் மனத்தைக் கவர்வதாக இல்லை என்பதை மன வேதனையோடு நான் அறிந்துதான் இருக்கிறேன். காங்கிரஸ் காரர்கள் சிரத்தை கொள்ளாமலிருக்கிருர்கள் என்ருல், அதற்குக் காரணம் என் வேலைத் திட்டத்திலிருக்கும் குறைபாடு எதுவும் அல்ல. ஆனல், அகிம்சையில் உயிர் நம்பிக்கை அவர்களுக்கு இல்லை என்பதே காரணம். பூரணமான சமூக ஒற்றுமையும், தீண்டாமை ஒழிக்கப்பட்டு விடுவதும், கள்ளுக்கடைகளை எல் லாம் மூடிவிட்டு குடி வருமானத்தை நாம் தியாகம் செய்வதும், மில் துணிக்குப் பதிலாகக் கதர் இருப்பதும் நம்மிடம் இருக்க வேண்டும் என்பதைவிட வேறு என்ன அதிகத் தெளிவானதாக இருக்க முடியும்? ஹிந்துக்களும், முஸ்லிம்களும், மற்றவர்களும் ஒருவர்மீது மற்றொருவர் கொண்டிருக்கும் அவநம்பிக்கையை விட் டொழிக்காவிட்டால், அவர்கள் உடன்பிறந்த சகோதரர்கள் போல வாழாது போனல், ஹிந்துக்கள் தீண்டாமைச் சாபத் தீட்டைப் போக்கிக் கொண்டு தங்களைப் புனிதப் படுத்திக் கொண்டு, வெகு நீண்ட காலமாக யாரைச் சமூகத்திற்குச் சம்பந்தமில்லாமல் ஒதுக்கி வைத்து வந்தார்களோ அவர்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ளாது போனல், குடிப் பழக்கத்திற்கும் அபின் போன்றவைகளைத் தின்னும் பழக்கத்திற்கும் கதியற்றுப் பலி யாகி இருக்கும் ஏழைகளுக்கு அவற்றில் கவர்ச்சி ஏற்படாம லிருப்பதற்காக மதுபானக் கடைகளை மூடிவிடுவதற்காக இந்தி யாவிலுள்ள பணக்கார ஆண்களும் பெண்களும் தங்களுக்குத் தாங்களே வரி விதித்துக் கொள்ளாது போனல், கடைசியாக நாம் எல்லோரும் மில் துணி மீதிருக்கும் மோகத்தை விட்டுவிட்டு, இந்தியாவின் கிராமங்களில் பல கோடிக் கரங்கள் உற்பத்தி செய்து வரும் கதரை உடுத்துவதற்குத் திரும்புவதன் மூலம்,

அரைப் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கான மக்களுடன் நம்மையும் நாம் ஒன்றுபடுத்திக் கொள்ளாது போனல், அகிம்சையோடு கூடிய சுயராஜ்யத்தை அடைந்து விட முடியாது என்று நான் கூறுகிறேன். நிர்மாண வேலைத் திட்டத்திற்கு எதிராக எவ்வளவோ எழுதப்பட்டிருக்கின்றன. ஆனல், அதற்குள்ள தகுதியைக் குறித்தோ, அகிம்சை சுயராஜ்யத்தைப் பற்றிய வகையில் அதன் தகுதியைப் பற்றியோ, ஒப்புக் கொள்ளக்கூடியதாக ஒரு வாதம்கூட கூறப்பட்டிருப்பதாக நான் காணவில்லை. எல்லாக் காங்கிரஸ்காரர்களும் இந்த நிர்மாண வேலைத் திட்டத்திலேயே முழுக்கவனத்தையும் செலுத்துவார்களானல், நூற்றுக்கு நூறு சத்தியாக்கிரகத்திற்கு வேண்டிய அகிம்சைச் சூழ்நிலை இந்நாடு முழுவதிலும் ஏற்பட்டு விடும் என்று நான் துணிந்து கூறுவேன்.

டாக்டர் லோகியா யோசனை கூறும் விவசாயிகள் நடவடிக்கையைச் சாத்தியமான புதிய வேலைத் திட்டமாகப் பார்ப்போம். பெரும்பாலோர் விஷயத்தில் விவசாயிகள், அகிம்சை நடவடிக்கைக்குப் போதிக்கப்பட்டிருக்கவில்லை என்று கூற வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அவர்கள் நிரந்தரமான பரபரப்புடனிருக்கும் நிலையிலேயே வைக்கப்பட்டிருக்கின்றனர். பலாத்காரப் போராட்டத்தினலன்றி என்றும் நிறைவேற்றவே முடியாத நம்பிக்கைகளைக் கொள்ளும்படியும் செய்யப்பட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் இதற்காக யோக்கியமாக வேலை செய்வதாக இருந்தால், விவசாயிகளையும் தொழிலாளரையும் அகிம்சை நடவடிக்கைக்கு ஒழுங்கு படுத்த முடியும். என் அனுபவம் இதைத்தான் எனக்குக் கூறுகிறது. ஆனல், அகிம்சை நடவடிக்கையே முடிவான வெற்றியை அளிக்கும் என்பதில் காங்கிரஸ்காரர்களுக்கு நம்பிக்கை இல்லையானல், இதை அவர்களால் செய்யமுடியாது. விவசாயிகளும் தொழிலாளரும் சரியான வகையில் போதிக்கப்படுவதுதான் இப்பொழுது வேண்டியதெல்லாம். அவர்கள் தங்களைச் சரியானபடி ஒழுங்குபடுத்திக் கொள்ளுவார்களானல், பணத்தைக் கொண்டு முதலாளிகளுக்கு இருக்கக்கூடியதைவிட அதிக செல்வத்தையும் வசதிகளையும் தங்கள் உழைப்பைக் கொண்டு விவசாயிகளும் தொழிலாளரும் அடைய முடியும். இதை அவர்கள் அறியச் செய்ய வேண்டும். முதலாளிகளுக்கு மாத்திரமே பண மார்க்கெட்டின் மீது ஆதிக்கம் இருக்கிறது. தொழிலாளர் மார்க்கெட் மீது தொழிலாளருக்கு ஆதிக்கமில்லை. தொழிலாளர் தேர்ந்தெடுத்துக்கொண்டிருக்கும் தலைவர்களினல் அவர்கள் சரியானபடி பயனடைந்திருந்தால், அகிம்சையைக் குறித்துச் சரியாக அறிந்துகொண்டிருப்பதால், அடையக்கூடிய அசைக்க முடியாத சக்தியை அவர்கள் உணர்ந்தவர்களாகியிருப்பார்கள். இதற்குப் பதிலாகத் தொழிலாளர், அநேக இடங்களில், தங்களுடைய கோரிக்கைகளுக்கு உடன்படும்படி செய்வதற்குப் பலவந்தமான முறைகளை நம்பி இருக்கும்படியே போதிக்கப்பட்டிருக்கின்றனர். இன்று தொழிலாளர் பொதுவாகப் பெற்று

வரும் பயிற்சி, அவர்களை அறியாமையில் இருந்துவரும்படி செய்வதோடு முடிவான காரியம் பலாத்காரம் என்று நம்பி இருக்கும்படியும் செய்வதாக இருக்கிறது. எனவே, இப்பொழுது இருந்துவரும் விவசாயிகள் அல்லது தொழிலாளர் நடவடிக்கைகளைச் சத்தியாக்கிரகத்திற்குத் தயாராவதற்கான புதிய வேலைத் திட்டம் என்று நான் கருதுவது சாத்தியமில்லை.

உண்மையில் என்னைச் சுற்றி நான் காண்பது, அகிம்சைப் போராட்டத்திற்கு வேண்டிய தயாரிப்பு அல்ல. அவர்கள் அறியாமலிருந்தாலும், அவர்கள் அவ்வாறு எண்ணுமலிருந்தாலும், பலாத்காரப் போராட்டத்திற்கான தயாரிப்புதான் அது. சென்ற இருபது ஆண்டுகளாக நான் செய்துவந்திருக்கும் முயற்சிக்குப் பிறகு ஏற்பட்டிருக்கும் முடிவு இதுதான் என்றால், இதற்குப் பொறுப்பை நான்தான் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று சொல்லப்படுமாயின், என் குற்றம்தான் என்பதை ஒப்புக்கொள்ள நான் தயங்கவே கூடாது. இதை இப்பத்திரிகையில் இதற்கு முன்பே நான் கூறியிருக்கவில்லையா? ஆனால், நான் ஒப்புக்கொள்ளுவதானல் நாம் செய்யும் காரியத்தை மாற்றிக்கொண்டு, நடந்துவிட்ட தவறுக்குப் பரிகாரமும் தேடப்பட்டாலன்றி நான் ஒப்புக்கொண்டுவிட்டதால் மாத்திரம் எந்த நன்மையும் ஏற்பட்டு விடாது. பூரண சுதந்திரத்தை அடைவதற்குள்ள ஒரே முறை அகிம்சைதான் என்பதில் சந்தேகத்திற்கிடமில்லாத நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதுதான் இதன் பொருள். நமக்கு அந்த நம்பிக்கை உண்டாகிவிட்டால், காங்கிரஸுக்குள் இருந்துவரும் தகராறுகளெல்லாம் போய்விடும். அதிகாரத்தைப் பெறுவதற்காகப் போட்டிச் சச்சரவுகளும் பிறகு இருக்கமாட்டா. பரஸ்பரம் ஒருவரையொருவர் தூஷித்துக்கொண்டிருப்பதற்குப் பதிலாகப் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவியும் இருந்துவரும். ஆனால், என் விளக்கத்தோடுகூடிய அகிம்சை பயனில்லாதது என்றோ, அதை அடைவது அசாத்தியம் என்றோ காங்கிரஸ்காரர்கள் நம்ப ஆரம்பித்துவிட்டார்கள் என்றும் இருக்கலாம். அப்படியானல், காங்கிரஸிலுள்ள எல்லாக் கோஷ்டிகளையும் கொண்ட ஒரு மகாநாட்டையோ, அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியையோ கூட்ட வேண்டும். அகிம்சைக் கொள்கையையும், அதன் விளைவான நிர்மாண வேலைத் திட்டத்தையும் மாற்றியாக வேண்டிய சமயம் வந்துவிட்டதா என்பதை ஆலோசித்துக் காங்கிரஸ்காரர்களுக்கு இப்பொழுதிருக்கும் புத்திப் போக்கிற்கு ஏற்ற வகையில் ஒரு வேலைத் திட்டத்தைக் கண்டுபிடித்து அமைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் இந்த முக்கியமான பிரச்னையைக் குறித்துத் தங்கள் உள்ளத்திற்குள்ளேயே தீவிரமாகச் சிந்தித்து முடிவுக்கு வரலாம். அரைகுறை மனத்தோடுகூடிய கொள்கையைப் பின்பற்றிக்கொண்டு போவது காங்கிரஸுக்குப் பத்திரமானதல்ல, கௌரவமானதும் அன்று. காங்கிரஸ் அங்கத்தினர்கள் பலதரப்பட்ட கோஷ்டிகளைச் சேர்ந்தவர்கள் என்பதை மறந்துவிட்டு, முதலிலும் கடைசி

யிலும் ஒரே மனத்துடன் நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடும் நாட்டின் ஊழியர்களே தாங்கள் என்பதை நினைவுபடுத்திக் கொள்ளுவதற்கு அத்தகையதோர் கூட்டத்தை நான் விரும்பு வேன். இன்று காங்கிரஸ் உள்ளுக்குள் பிளவுபட்டதாக இருந்து வருகிறது. அது அப்படி இருக்கக்கூடாது.

—'ஹரிஜன்' – 29—7—1939

# 4
# புத்திசாலித்தனமான அகிம்சைக் கூட்டின் நன்மை

மோதியாபர்ஜுக்கு நான் இப்பொழுது வந்திருப்பது இரண்டாவது தடவையாகும். பல ஆண்டுகளுக்கு முன்னால் ஹிந்து, முஸ்லிம் தொழிலாளருக்கிடையே சச்சரவு இருந்ததால் அப்பொழுது நானும் மௌலானா அபுல்கலாம் ஆஜாதும் இங்கே வந்திருந்தோம். கலகப் பகுதிக்கு நாங்கள் வந்தபோது அதிர்ஷ்ட வசமாகக் கலகம் ஓய்ந்துவிட்டது. ஆனால், இதற்காக நாங்கள் எங்களுக்கு உரியதல்லாத கௌரவத்தைப் பெற்றோம். இப் பொழுதோ சந்தோஷமான சமயத்தில் வந்திருக்கிறேன். ஹிந்துக் களும் முஸ்லிம்களும் தங்களுக்குள் இருந்த வேற்றுமைகளை யெல்லாம் சரி செய்துகொண்டு நண்பர்களாக இருந்து வரு கிறார்கள். இந்த நட்பு நீடித்து இருந்துவரும் என்றே நம்பு கிறேன். தொழிலாளர்கள் குடியிருக்கும் பகுதியில் தொழிலா ளருக்குச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். உழைப்பில் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் எந்த வித வித்தியாசமும் இல்லை என்றே நம்புகிறேன். நீங்கள் எல்லோரும் தொழிலா ளர்கள். வகுப்புவாதம், தொழிலாளருக்குள் பிளவை உண்டாக்கி விடுமானால், தொழிலாளரேயன்றி நாடும் பலவீனமடைந்துவிடும். எல்லாப் பாகுபாடுகளையும் சமப்படுத்திவிடக் கூடியதாக இருப் பது, உழைப்பு. இந்த உண்மையை நீங்கள் உணர்ந்துகொண் டால், இன்னும் ஒரு படி மேலேயும் போய் நீங்கள் கவனிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். தொழிலாளர் புத்திசாலித் தனமில்லாது இருந்துவிட முற்பட்டதால், அடிமைப்பட்டுக்கிடப் பவர்களாகவோ அல்லது முதலாளிகளின் சாமான்களையும் யந் திரங்களையும் நாசப்படுத்துவதிலோ, முதலாளிகளைக் கொல்லுவ திலுங்கூட அகம்பாவமாக நம்பிக்கை கொள்ளுபவர்களாகவோ தொழிலாளர் ஆகிவிட்டனர். என் கொள்கையின்படி நான் தொழிலாளி, தோட்டி. ஆகவே, என் நலன்கள் தொழிலாளரின் நலன்களுடன் பிணைவுண்டிருக்கிறது. இதனாலேயே பலாத்காரம் ஒரு நாளும் உங்களைக் காப்பாற்றாது என்று உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். பொன் முட்டையிடும் வாத்தைப்

பேராசையினல் கொன்று விட்டவர்களே ஆவீர்கள். மூலதனத்தை விட உழைப்பு எவ்வளவோ மேலானது என்று அநேக ஆண்டுகளாக நான் சொல்லிக்கொண்டு வருகிறேன். உழைப்பு இல்லாது போனல், தங்கம், வெள்ளி, செம்பு ஆகியவை எல்லாம் வீண் சுமைதான். பூமியின் அடியிலிருந்து மதிப்பு வாய்ந்த உலோக மண்ணைத் தோண்டி எடுத்து வந்திருப்பது உழைப்பேயாகும். உலோகங்கள் இல்லாமலேயே தொழிலாளர் வாழ்ந்துவிட முடியும் என்று என்னல் எண்ண முடியும். விலை மதிப்பில்லாதது உழைப்பேயன்றித் தங்கம் அல்ல. மூலதனத்திற்கும் உழைப்புக்கும் விவாகமாகிவிட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். இரண்டும் ஒன்றுபட்டுவிட்டால் எவ்வளவோ அற்புதங்களைச் செய்ய முடியும். ஆனல், தொழிலாளர்கள் தங்களுக்குள் ஒத்துழைப்பதற்கு வேண்டிய புத்திசாலித்தனத்தை அடைந்து, அதன் பிறகு கௌரவமான சமத்துவ நிலையில் ஒத்துழைக்கத் தயார் என்று முதலாளிகளுக்கு அறிவிக்கும்போதுதான் அந்த ஒத்துழைப்பு ஏற்பட முடியும். ஒன்றுபடும் கலையை முதலாளிகள் அறிந்திருப்பதால்தான் அவர்கள் தொழிலாளர்மீது ஆதிக்கம் செலுத்துகிருர்கள். சிதறிக் கிடக்கும் சிறு நீர்த்துளிகள் மறைந்துவிடும். ஒன்றுபடும் நீர்த்துளிகள் சமுத்திரமாகின்றன. அதன் விசாலமான மார்பகத்தில் கடல் நாய்களும் இருந்துவரும். அதே போல, உலகத்தின் எப்பகுதியிலாவது எல்லாத் தொழிலாளரும் ஒன்றுபட்டுவிடுவார்களானல், சம்பள உயர்வு என்பதைக் கொண்டு அவர்களை மயக்கிவிட முடியாது. கதியற்று அற்பத்திற்கெல்லாம் ஆசைப்பட்டுவிடுவதற்குத் தங்களை அனுமதித்துக் கொண்டுவிடவும் மாட்டார்கள். உண்மையாகவும், அகிம்சை முறையிலும் தொழிலாளர்கள் ஒன்றுபடுவது, தேவைப்படும் மூலதனத்தையெல்லாம் தன்னிடம் கிரகித்துக்கொள்ளும் காந்தமாக வேலை செய்யும். அப்பொழுது முதலாளிகள், தருமகர்த்தாக்கள் என்ற முறையில்தான் இருக்க முடியும். சந்தோஷகரமான அந்த நாள் உதயமாகும்போது முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே எந்த வித்தியாசமுமே இராது. தொழிலாளருக்குப் போதுமான உணவு இருக்கும். குடியிருக்கச் சுகாதாரத்தோடு கூடிய நல்ல வீடுகளும், அவர்களுடைய குழந்தைகளுக்கு அவசியமான எல்லாக் கல்வியும், தங்களுக்குத் தாங்களே அறிவு பெறுவதற்கு அதிக ஓய்வும், சரியான வைத்திய உதவியும் இருக்கும்.

—'ஹரிஜன்' – 7—9—1947

['பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி செய்த பிரசங்கங்கள்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 5

# ஒரு லட்சிய சங்கம்

[கீழே கொடுக்கப்பட்டிருப்பது முதலில் ‘எங் இந்தியா’ வில் ‘வாராந்திரக் கடிதம்’ என்ற பத்தியில் வெளியானது. அகமதாபாத் தொழிலாளர் சங்கத்தினர் நடத்திய தொழிலாளர் கூட்டத்தில் மகாத்மா காந்தி செய்த பிரசங்கத்தின் ஒரு பகுதியை ஸ்ரீ மகாதேவ தேசாய் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார். அப்பகுதியே இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

உங்களை நான் எண்ணும்போதெல்லாம் என் உள்ளம் உங்களையே நாடுகிறது. நம்மிடையே இருந்துவரும் அன்பின் பிணைப்பு மேலும் பலம் பெற வேண்டும், உங்களுக்கும் எனக்குமிடையே எந்த வகையான வித்தியாசமும் இல்லை என்பதை நீங்கள் உணரவேண்டும் என்று நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். மில் சொந்தக்காரர்களிடமும் நான் போகிறேன். அவர்கள் அளிக்கும் உபசாரங்களையும் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனால், என் உள்ளம் மாத்திரம் எப்பொழுதும் உங்களுடனே தான் இருக்கிறது. உங்களிடமிருந்து என்னை என்றும் பிரித்து விடவே கூடாது, ஏழைகளுக்குச் சேவை செய்வதிலேயே என் உயிரை விடவேண்டும் என்பதுதான் கடவுளிடம் பக்தியுடன் நான் செய்துவரும் பிரார்த்தனை.

நான் கனவு காணும் சுயராஜ்யம், ஏழையின் சுயராஜ்யம் என்று உங்கள் அறிக்கையில் நீங்கள் சரியானபடியே கூறியிருக்கிறீர்கள். மன்னர்களும் பணம் படைத்தவர்களும் அனுபவித்து வருவதைப் போன்ற வாழ்க்கையின் தேவைகளையே நீங்களும் அனுபவிக்க வேண்டும். ஆனால், அவர்களுக்கு இருப்பதைப் போல அரண்மனைகள் உங்களுக்கும் இருக்க வேண்டும் என்பது அதன் பொருள் அல்ல. இன்பத்திற்கு அவை அவசியமானவை அன்று. நீங்களோ, நானோ அவற்றில் இருப்பதே தெரியாது போய்விடுவோம். ஆயினும், பணக்காரன் அனுபவித்து வரும் சாதாரணமான வாழ்க்கை வசதிகளெல்லாம் உங்களுக்கும் கிடைக்க வேண்டும். சுயராஜ்யத்தின் கீழ் இந்த வசதிகளெல்லாம் உங்களுக்கு உத்தரவாதம் செய்யப்படும் வரையில், சுயராஜ்யம் பூரண சுயராஜ்யமே அல்ல என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. இதை நாம் அடையப்போவது எப்பொழுது என்பது எனக்குத் தெரியாது. என்றாலும், அதற்காக நாம் எல்லோரும் பாடுபட்டாக வேண்டும்.

உங்கள் வேலை, உங்களை உலகம் முழுதும் அறிந்திருக்கும் படி செய்து வருகிறது. உங்கள் ஸ்தாபனத்தின் அழகைக்

கண்டு மேற்கத்திய நாடுகளிலிருந்து வரும் மாணவர்கள் போற்று கிறார்கள்; அதை ஆராய்ந்து அறிந்துகொள்ளவும் முயற்சிக் கிறார்கள். இணையற்றது என்று அவர்கள் பிரமிக்கும்படி உங்கள் சங்கம் வேலை செய்கிறது. உங்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள், தங்கள் உரிமை விஷயத்தில் உறுதியுடன் இருக்கிறார்கள். அந்த உரிமைகளுக்காகத் தங்கள் உயிரைக் கொடுக்கவும் தயாராயிருக் கிறார்கள். ஆனால், அவர்களை நடத்திச் செல்லுபவர்களாக இருக்கும் அவர்கள் தலைவர்களுக்கோ, முதலாளிகளிடம் எந்த விதக் கெட்ட எண்ணமும் இல்லை. அவர்கள் க்ஷேமத்திலும் அவர்கள் சக்தியிலும், உங்கள் க்ஷேமமும் சக்தியும் இருப்பதாக நீங்கள் காண்கிறீர்கள்; இதுதான் உங்கள் பலத்தின் ரகசியம். உங்கள் நிலைமையை வெளியார் புரிந்துகொள்ள முடியாது. முதலாளிகள் என்றால் சுரண்டுகிறவர்கள், தொழிலாளர் என்றால் சுரண்டப்படுகிறவர்கள் என்றுதான் அவர்கள் எண்ணியிருக் கிறார்கள். முதலாளிகள் எல்லாருமே மனிதரை அடித்துத் தின்னும் அரக்கர்களே என்பது சிலருடைய அபிப்பிராயம். ஆனால், இந்த இரு தரத்தாருக்குமிடையே இவ்விதமான வெறுப்பு இருக்க வேண்டிய அவசியமே இல்லை. இது நம்மு டைய தவறான எண்ணம். தங்களிடம் அதிகச் செல்வம் இருக்கிறதென்று முதலாளிகள் பெருமைப் பட்டுக்கொள்ளுவ தானால், தங்களிடமிருக்கும் ஆள் பலத்தைக் குறித்துத் தொழி லாளர் பெருமைப்பட முடியும். முதலாளிகளுக்கு இருப்பதைப் போன்ற ஆசாபாசத்திற்கு நாமும் ஆளாகி மதி மயங்கிப் போய் விடக்கூடும். அந்த ஆசாபாசத்தினால் இரு தரப்பாரும் பாதிக் கப் படாமலிருக்க வேண்டும் என்பதே நம் பிரார்த்தனையாக வேண்டும். வர்க்கப் போர் எதுவும், அகமதாபாத் மில் சொந்தக் காரர்களுக்கும் தொழிலாளருக்குமிடையே இருந்து வரும் உறவை விஷமாக்கிவிடாது என உணருகிறேன். இவர்களுக் கிடையே இப்பொழுது இருந்து வரும் சுமுகமான உறவு நீடித்து இருந்துவரும் என்று நான் நம்புவதோடு அதற்காகப் பிரார்த்திக் கிறேன்.

ஆனால், உங்களை நடத்திச் செல்லுபவர்களான ஆண்களுக் கும் பெண்களுக்கும், இதில் சுயநல நோக்கம் எதுவும் இல்லை என்பதே உங்கள் வெற்றியின் ரகசியம். அவர்கள் சேவை செய்வதில் கேவலமான சுயநலம் எதுவும் இல்லை.

—'எங் இந்தியா - 26—3—1931

# 6

# தொழிலாளர் ஒன்றுபடுக

கோலார் தங்க வயல்களுக்குச் சென்று பார்த்ததெல் லாம் மிகக் கொஞ்ச நேரந்தான். சுரங்கத் தொழிலாளர்போன்ற வர்கள் தனியான ரகத்தினர். அவர்கள் அங்கே எப்படி வாழ

வேண்டியிருக்கிறது என்ற நிலைமையைக் கொஞ்ச நேரத்தில் ஆராய்ந்துவிடுவது என்பது சாத்தியமானது அல்ல. அவர்கள் என்ன கஷ்டமான வாழ்க்கையை நடத்த வேண்டியிருக்கிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டுமானால் ஒருவர் பல நாட்கள் அவர்களுடன் இருந்தாக வேண்டும். ஆனால், காந்திஜியோ, கொஞ்ச நேரம் பார்த்ததுமே அவர்கள் நிலைமையை அறிந்து கொண்டுவிட்டார். அவர்களுக்குத் தண்ணீரும், விளக்கு வசதிகளும் அளித்திருந்தாலும் அவர்கள் வசித்து வந்த அறைகள் மனிதர் வசிப்பதற்கே தகுதியில்லாதவை என்பதைக் காந்திஜி கண்டார். காருண்யமான மனப்போக்கு உள்ளவர்களும் வாழ்க்கையைப் பற்றிய தங்கள் கருத்துக்களை மாற்றிக்கொண்டு, தொழிலாளர் எந்த நிலையில் வசிக்கிறார்களோ அந்த நிலையில் தங்களை வைத்துப் பார்க்க வேண்டும். அந்தத் தொழிலாளரின் உழைப்பை நம்பியே நாம் வாழ்கிறோம். ஆனால், அந்தத் தொழிலாளர்கள் சதா காலமும் வாழ்க்கையை நடத்தி வரும் நிலை திருப்திகரமானதாக இருக்கிறதா என்பதை அறிவதற்கு ஒரே ஒரு பரீட்சை மாத்திரமே உண்டு. "நம் இடத்தை அவர்களுக்குக் கொடுத்துவிட்டு அவர்கள் இடத்தில் நாம் எவ்வளவு காலம் இருக்க முடியும்?" என்பதை யோசித்துப் பார்ப்பதுதான் அப்பரீட்சை.

சுரங்கத் தொழிலாளரின் பொதுக்கூட்டத்தில் காந்திஜி சில நிமிஷங்கள் பேசினார். அப்பொழுது அவர் கூறியதாவது: "தொழிலாளர் வசிக்கும் குடிசைகளை அவசரத்தில் பார்த்து விட்டு வந்தேன். அவை மிகச் சிறியவை, வெளிச்சமே போதாதவை, மனிதர் வசிப்பதற்குக் கொஞ்சமும் தகுதியில்லாத வகையில் அவற்றின் கூரை அதிகத் தாழ்வானதாக இருக்கிறது என்றே எனக்குத் தோன்றுகிறது. பயிற்சியின் மூலமும், புத்திசாலித்தனமாக ஒன்றுபடுவதன் மூலமும் தங்களுக்குத் தாங்களே என்ன செய்துகொள்ள முடியும் என்பதை மாத்திரம் தொழிலாளர் அறிந்துகொண்டுவிடுவார்களானால், சுரங்கங்களின் மானேஜர்களையும் பங்குதாரர்களையும் போன்றே தாங்களும் சுரங்கச் சொந்தக்காரர்களே என்பதைத் தெரிந்துகொண்டு விடுவார்கள். பூமிக்கு அடியிலிருந்து தொழிலாளர்கள் தங்களுடைய உழைப்பின் மூலம் தோண்டியெடுக்கும் தங்கத்தைவிட இவர்களுடைய உழைப்பு இன்னும் அதிக மேன்மையானது. சுரங்கங்களின் சொந்தக்காரர்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகப் படுத்துகிறேன். தொழிலாளருக்குரிய நியாயமான அந்தஸ்தைச் சுரங்கச் சொந்தக்காரர்கள் தாங்களே வலிய உணர்ந்து, தங்களை எப்படி நடத்திக்கொள்ளுகிறார்களோ அதே போலவே தொழிலாளரையும் நடத்தாது போனால், தங்களுக்கு இருக்க வேண்டியது இன்னதுதான் என்று தொழிலாளர் கண்டிப்பாகச் சொல்லி விடும் காலம் அதிக தூரத்தில் இல்லை. தொழிலாளருக்கும் ஒன்று கூறுகிறேன். உங்களுடைய உரிமைகளை வற்புறுத்துவது நியாயம், அதுதான் சரி. அதோடு சுரங்கங்கள் தங்களுடைய

னவே போன்று கருதி அவர்கள் தங்கள் வேலையையும் செய்து வர வேண்டும். குடிப் பழக்கத்தையும், சூதாடுவதையும், மற்றத் தீய வழக்கங்களையும் விட்டுவிடும்படியும் கேட்டுக்கொள்ளு கிறேன்.

—'ஹரிஜன்' - 13—6—1936

# 7

# உரிய நிலையை அடைவது எப்படி?

1927-இல் காந்திஜி இலங்கைக்குச் சென்றிருந்தபோது, அங்கே பல தரப்பட்ட பொதுக்கூட்டங்களில் பேசினார். அத் தீவின் தலைநகரான கொழும்புவில் அவர் கடைசியாகப் பேசிய முக்கியமான பொதுக்கூட்டம், தொழிலாளர் சங்கத்தின் ஆத ரவில் நடந்த கூட்டமாகும். அதில் காந்திஜி கூறியதாவது :

"நீங்கள் எனக்கு வாசித்துக் கொடுத்திருக்கும் உபசாரப் பத்திரத்தில் 'இந்தியத் தாய்நாடு' என்று கூறியிருக்கிறீர்கள். இது என் மனத்தை அதிகமாக உருக்கிவிட்டது. நீங்கள் அவ் வாறு கூறியதில் அதிக முக்கியத்துவம் இருக்கிறது என்பதே என் அபிப்பிராயம். ஏனெனில், நீங்கள் எல்லோருமே இந்தியர்கள் அல்ல என்பதை நான் அறிவேன். அவ்வாறு அது முக்கியமானது என்று ஏன் நான் கருதுகிறேன் என்பதையும் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். ஆனால், உங்களில் இந்திய ரல்லாதவர்களாக இருப்போர், 'இந்தியத் தாய்நாடு' என்று கூறியபோது, அதைப்பற்றி நான் கருதும் முக்கியத்துவம் அவர் கள் மனத்தில் இல்லாமலும் இருந்திருக்கலாம்.

"ராமர் என்ற அரசர் இலங்கைக்கு வந்து, இத்தீவில் இருந்த கொடிய மன்னனை அழித்தார். வெற்றி பெற்றதனால் அடைந்த உரிமையை உபயோகித்து இந்த அழகான தீவை ராமர் இந்தியாவுடன் சேர்த்துக்கொண்டு விடவில்லை. மாண்டு போன கொடிய மன்னனின் சகோதரனான விபீஷணனுக்கே அரசை அளித்து இலங்கையின் மன்னனாக அவனுக்கே முடி சூட்டினார். இது புராணக் கதை. சில சமயங்களில் புராணக் கதை சரித்திரத்தையும் விட உயர்வானதாகிறது.

"அதையே இக்கால பாஷையில் சொல்லுவதானால், அதன் பொருள் இதுதான்: இலங்கை மக்களின் விசுவாசத்தையோ அல்லது மன்னர் விபீஷணரின் வாதத்தையோ ராமர் சோதித் துக்கொண்டிருக்கவில்லை. தம் தருமகர்த்தா ஆட்சியின் கீழ் சிறிது காலம் இலங்கை இருந்தாக வேண்டும் என்றும் ராமர் செய்யவில்லை. பூரண சுயாட்சியை - டொமினியன் அந்தஸ்தை- உடனேயே கொடுத்து விட்டார்.

"இந்தப் புராணக் கதையில் கூறப்பட்டிருக்கும் காலத்திற்குப் பிறகு இந்தத் தீவிலும் இந்தியாவிலும் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவ்விரு நாடுகளின் கதிகளிலும் எத்தனையோ மாறுதல்கள் உண்டாகி இருக்கின்றன. என்றாலும், சரித்திர உண்மைகளை எல்லாம் விட இக்கதையையே இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்கள் இன்றும் உறுதியாக நம்பிக் கொண்டு வருகிறார்கள். இந்த அழகிய தீவின் மக்களாகிய நீங்கள், உங்கள் பக்கத்து நாட்டினராகிய இந்தியருடன் கொஞ்சம் தொடர்பு கொண்டிருப்பதற்காக வெட்கப்படவில்லையென்றால், கோடிக்கணக்கான இந்தியர் இக்கதை சம்பந்தமாகக் கொண்டிருக்கும் பெருமையில் நீங்களும் பங்குகொள்ளும்படியும் உங்களுக்கு யோசனை கூறுகிறேன்.

"உங்கள் ராஜ்யம், இந்தியாவின் மகள் போன்றது என்பது என் கருத்து. ஆகையால், அந்த நாட்டினிடம் உங்களுக்குள்ள விசுவாசத்தை நீங்கள் தெரிவித்துக் கொள்ளுவதற்கு இந்தியாவை 'இந்தியத் தாய்' என்று சரியாகவே கூறியிருக்கிறீர்கள் என நான் ஏன் கூறினேன் என்பதை நீங்கள் இப்பொழுது புரிந்து கொண்டிருப்பீர்கள்.

"உங்களுக்கு இன்னுமொன்றும் குறிப்பாகச் சொல்லுகிறேன். கதையில் கூறப்படும் ராமர் இந்த உலகத்தில் வாழ்ந்திருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். கதையில் பத்துத் தலை ராவணன் இருந்தும் இருக்கலாம், இல்லாதுமிருக்கலாம். ஆனால், இன்று ஒரு ராமர் இருந்து வருகிறார்; ஒரு ராவணனும் இருந்து வருகிறான் என்பது மாத்திரம் உண்மை. ஹிந்து சமயத்தில் ராமர் என்பது கடவுளுக்குள்ள இனிமையான, தெய்விகமான பெயர். ஹிந்துப் புராணங்களில் தீமைக்கு, தீமை மனித ரூபத்தில் வரும்போது அதற்கு, ராவணன் என்று பெயர் கொடுக்கப்படுகிறது. தீமை தோன்றும்போதெல்லாம் அதை அழிக்க வேண்டியது கடவுளாகிய ராமரின் வேலையாகிறது. அதே போல, விபீஷணன் போன்ற தனது பக்தர்களுக்கு, மாற்றிவிட முடியாத சுயாட்சி சுதந்திர உரிமையை அளிக்க வேண்டியதும் கடவுள் ராமரின் வேலையாகிறது.

"நாம் தொழிலாளராயினும், மற்றவர்களாக இருப்பினும், நம்முள்ளிருக்கும் தீமையாகிய பத்துத் தலை ராட்சதனை ஒழிப்பதற்கு நம்முள்ளிருக்கும் ராமரின் உதவியை நாம் நாடுவதோடு சுயாட்சிக்குச் சாசனத்தையும் அவரிடம் கேட்போமாக.

"என் சகோதரத் தொழிலாளர்களாகிய நீங்கள், உங்களுக்குரியவைகளை அடைய வேண்டியவர்களாக இருக்கிறீர்கள். உங்களிடமுள்ள தீமைகளைப் போக்கிக் கொள்ளுவதற்கும், சுய ஆட்சிக்குத் தகுதியுடையவர்களாக உங்களைச் செய்து கொள்ளுவதற்கும் உங்களுக்கு ராமருடைய உதவியும் அவருடைய கிருபையும் விசேஷமாகத் தேவைப்படுவதாக இருக்கக் கூடும்.

"தென்னாப்பிரிக்காவில் ஒப்பந்தத் தொழிலாளருக்குச் சுதந்திரத்தைத் தேடித் தந்தது நான்தான் என்றோ, அகமதாபாத்திலோ, சம்பாரணிலோ தொழிலாளருக்கு விடுதலையைத் தேடித் தந்ததும் நானே என்றோ யாராவது உங்களுக்குச் சொன்னால் நீங்கள் நம்ப வேண்டாம். அவர்கள் செய்ததை அவர்கள் அடைந்தார்கள். ஏனெனில், சுயாட்சிக்கான விதிகளை, அவசியமான விதிகளை அனுசரித்து அவர்கள் நடந்தார்கள்.

"நீங்கள், உங்கள் உரிமைகளை அடைவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது பற்றிய என் கருத்தை இனி சுருக்கமாகக் கூறுகிறேன். சங்கங்கள் என்ற ரூபத்தில் உங்களுக்குள்ளேயே ஒன்றுபட வேண்டியது முதலாவது வேலை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அனுபவத்தைக் கொண்டு உங்களுக்கு ஒன்று கூறுவேன். நான் இனி கூறப்போகும் நிபந்தனைகளை நீங்கள் அனுசரிக்காது போவீர்களாயின், உங்களுடைய சங்கங்கள் ஒவ்வொன்றும் உங்கள் அடிமைத்தனத்திற்கான காரணங்களில் ஒன்றாகிவிடும்.

"உங்களில் ஒவ்வொருவரும், மற்றச் சகோதரத் தொழிலாளரின் நலனுக்குத் தாமே தருமகர்த்தாவாக ஆகிவிட வேண்டும்; சுயநலக்காரராகி விடக்கூடாது. நிலைமை எவ்வளவுதான் மோசமாக இருந்தாலும், எவ்வளவுதான் ஆத்திரமூட்டுவதாக இருப்பினும், பலாத்காரமற்றவர்களாக நீங்கள் இருந்து வர வேண்டும். நீங்கள் மனிதத் தன்மையுடனிருந்து, உங்கள் கௌரவத்தையும் நீங்கள் உணருவதாக இருந்தால், நீங்கள் சாபக்கேடான குடிப் பழக்கமுடையவர்களாக இருப்பின் அதை அடியோடு விட்டொழித்துவிட வேண்டும். குடி போதையில் மனிதன் மிருகத்திலும் கேவலமாகி விடுகிறான். சகோதரிக்கும், தாய்க்கும், மனைவிக்குமுள்ள பேதத்தைக்கூட அவன் மறந்து விடுகிறான். என்னை உங்கள் நண்பன் என்று நீங்கள் உண்மையிலேயே நம்புவதாக இருந்தால், உங்களுடைய இந்தப் பழைய நண்பனின் புத்திமதியை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் முன்னால் படமெடுத்துச் சீறிக்கொண்டு வரும் நாகத்தை எவ்விதம் தவிர்ப்பீர்களோ அதே போலக் குடியையும் தவிர்க்க வேண்டும். பாம்பு நம் உடலை மாத்திரமே அழிக்கும். ஆனால், குடியின் கேடு உள்ளுக்குள் இருக்கும் ஆன்மாவையும் கெடுத்து விடுகிறது. ஆகையால், பாம்பை விட இது அதிகமாகப் பயந்து தவிர்க்க வேண்டியதாகும். சூதாடும் கெட்ட பழக்கத்திற்கும் நீங்கள் ஆளாகி இருப்பின், அதையும் நீங்கள் தவிர்க்க வேண்டும்.

"மனிதன், அனாதி காலம் தொட்டு விவாக பந்தத்தின் புனிதத்தை ஒப்புக்கொண்டிருக்கிறான். பெண்களுடன் சம்பந்தப்பட்ட தன் வாழ்க்கையை, தனக்குத் தானே மேலும் மேலும் விரித்துக் கொண்டு புலனடக்கத்தின் மூலம் ஒழுங்குபடுத்திக் கொண்டும் வந்திருக்கிறான். மனிதனை, மிருகத்திலிருந்து தெளிவாகப் பிரித்துக் காட்டும் காரியங்களில் ஒன்று இது. முக்கிய

மான ஒழுக்க முறை விதிகளை அனுசரிக்கும் வகையில் தனியாகவும், போதுமான வகையிலும் நீங்கள் வாழ அனுமதிக்கக் கூடியதாக உங்கள் வருவாய் இல்லை என்றால், அவமான நிலைமைகளிலும், அவ்வித போதாத சம்பளத்திற்கும் வேலை செய்ய நீங்கள் மறுத்துவிட வேண்டும். சாதாரண ஒழுக்க விதிகளை அனுசரிப்பதைக்கூட அசாத்தியமானதாக்கும் போதாத கூலியை வாங்குவதை விட, முழுப் பட்டினி நிலையே போதும் என்று நீங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்களானால், உங்களை வீரமுள்ள மனிதர்கள் என்று நான் போற்றுவேன்.

"உங்களுடைய சங்கங்களை, வெளித் தாக்குதல்களைச் சமாளிப்பதற்கு உபயோகித்துக்கொள்ளுவதைப் போன்றே உள்ளுக்குள் சீர்திருத்திக்கொள்ளுவதற்கும் நீங்கள் உபயோகித்துக் கொள்ள வேண்டும் என்று யோசனை கூறுவேன். உங்கள் உரிமைகள் உங்களுக்கு வேண்டும் என்று நீங்கள் வற்புறுத்துவது நியாயம்தான். ஆனால், ஒவ்வோர் உரிமையிலும் இருந்துவரும் கடமையையும் நீங்கள் உணர்ந்திருக்க வேண்டும் என்பதும் அவசியமாகும். போதுமான கூலி வேண்டும் என்றும், உங்கள் முதலாளிகள் மனிதத் தன்மையோடு உங்களைச் சரியானபடி நடத்தவேண்டும் என்றும், நல்ல, சுகாதாரத்தோடுகூடிய வீடுகள் வேண்டும் என்றும் நீங்கள் வற்புறுத்தும்போது, உங்களுடைய முதலாளிகளின் வியாபாரத்தை உங்கள் சொந்த வியாபாரம் போன்றே கவனிப்பதோடு நீங்கள் யோக்கியமாக உங்கள் முழுக் கவனத்தையும் அதில் செலுத்தி வரவும் வேண்டும்.

"இந்தியாவில் உங்களைவிட அதிக துர்ப்பாக்கியசாலிகளாக இருந்து வரும் கோடிக்கணக்கான மக்களைக் குறித்து நீங்கள் எண்ணியிருப்பதும் மிகவும் சரியானதே. முக்கியமாக, இந்தியா உங்கள் தாய் ராஜ்யம், தாய்நாடு என்று நீங்கள் எண்ணுவதானால், அவர்களுக்கும் உங்களுக்கும் உயிர்ப் பந்தத்தை உண்டாக்கிக் கொள்ளும்படி உங்களுக்குக் கடைசியாக யோசனை கூறுகிறேன். கோடிக்கணக்கான அந்த ஏழை மக்களுக்காக, துணிக்காக நீங்கள் செலவிடும் ஒவ்வொரு தம்படியையும், சதத்தையும் கதருக்கே நீங்கள் அளிக்க வேண்டும்; வேறு எதற்கும் அதை உபயோகிக்கக்கூடாது."

[டி. ஜி. டெண்டுல்கரின் 'மகாத்மா' தொகுப்பு-2-வது புத்தகம்; பக்கம்–391]

# 8

# சுய உதவி யோசனை

பெங்களூர் மகாராஜா மில் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்திருந்தார்கள். காந்திஜி பெங்களூருக்கு வந்ததிலிருந்து அவரைப் பார்க்க வேண்டும் என்று அவர்கள் விரும்பி வந்தனர்.

அவர்களைச் சந்தித்துப் பேசவும் காந்திஜி கொஞ்சம் அவகாசம் தேடிக்கொண்டார். ஆனல், அவர்களுக்கு அவர் அளிக்கக் கூடியதெல்லாம், அன்பையும் உற்சாகத்தையும் அளிக்கும் சொற்களைத்தான். ஒரு நாள் மாலை தங்கள் பண முடிப்பைக் காந்திஜிக்கு அளிப்பதற்காக அவர்கள் கூடியபோது, சுமாரான நீண்ட பேச்சின் மூலம் அவை அளிக்கப்பட்டன.

காந்திஜி கூறியதாவது: “பொது வாழ்க்கையில் நான் ஈடுபட்டதிலிருந்து, உங்களைப் போன்று நானும் ஒரு தொழிலாளியாகவே இருந்து வருகிறேன். தொழிலாளரின் கஷ்டங்களையும் துயரங்களையும் தென்னுப்பிரிக்காவில் அறியலானேன். உங்களுக்கு நீங்கள்தான் உதவி செய்துகொள்ள வேண்டும், வெளியார் யாரும் எந்த உதவியும் செய்ய முடியாது என்ற முடிவுக்கும் நான் வந்திருக்கிறேன். தென்னுப்பிரிக்காவில் லட்சம் தொழிலாளர்கள் வரையில் இருந்தனர். அவர்களுக்கு உதவி செய்ய எனக்குச் சக்தி இருந்தது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படி எனக்கு எந்தச் சக்தியும் இல்லை. அவர்களுடைய முன்னேற்றத்திற்கு அவர்களே வேலை செய்துகொண்டார்கள். தங்கள் மீது குவிக்கப்பட்டிருக்கும் ஏராளமான கொடிய தவறுகளை அவர்கள் அறிந்துகொண்டபோதுதான் அவர்கள் விழிப்படைந்தார்கள். தாங்களே முயன்று, கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டதன் மூலம் வெற்றி பெற்ருர்கள். அதேபோலவே சம்பாரண் விவசாயிகளும், அகமதாபாத் மில் தொழிலாளரும் தாங்களே செய்துகொண்ட தவங்களினுலும், தியாகங்களினுலும் வெற்றி பெற்ருர்கள். தென்னுப்பிரிக்காவிலோ, இங்கோ, தங்கள் குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ள அவர்கள் பலாத்காரத்தை மேற்கொண்டதே இல்லை. தங்களுடைய குறைந்த பட்சக் கோரிக்கைகளுக்கு முதலாளிகள் உடன்பட வேண்டும், இல்லையானுல் தாங்கள் இல்லாமலேயே காரியங்களை அவர்கள் செய்துகொள்ள வேண்டும் என்று தங்கள் முதலாளிகளுக்கு அவர்கள் தைரியமாகச் சொல்லிவிட்டார்கள். இதற்கிடையில் தங்களுக்கு ஏற்பட்ட துயரங்களையும் சகித்துக் கொண்டார்கள். அதுதான் உண்மையான சத்தியாக்கிரகம். துன்பத்தை அனுபவிப்பதன் மூலம் வெற்றியடைந்து தீருவது என்று உறுதிகொண்டுவிடும் ஒரு சிறுவனே, சிறுமியும்கூட இதை மேற்கொள்ள முடியும்.

“உள்ளுக்குள் செய்துகொள்ள வேண்டிய சீர்திருத்தத்தைக் குறித்து ஒரு வார்த்தை. அடிக்கடி உங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்ளுகிறீர்கள். குடி, சூதாட்டம் போன்ற மோசமான பழக்கங்களும் உங்களிடமிருப்பதோடு உங்கள் குழந்தைகளுக்கும் அவை பிதுரார்ஜிதமாக வந்துவிடுகின்றன. சத்தியாக்கிரகத்திற்குத் தகுதியுடையவர்களாக நீங்கள் ஆக வேண்டுமானுல், இந்தக் கெட்ட பழக்கங்களை நீங்கள் விட்டொழிக்க வேண்டும். உங்களையும்விட பரம ஏழைகளாக

இருப்பவர்களின் நலனுக்காக நீங்கள் ஏதோ உதவியிருப்பதைக் குறித்துச் சந்தோஷமடைகிறேன். மில் துணிக்குப் பதிலாக ஏழைகள் உற்பத்தி செய்யும் கதரையே நீங்கள் உடுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மில் துணிக்கு உங்கள் ஆதரவு தேவையில்லை.

''முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே தகராறுகள் இருக்க வேண்டிய அவசியம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. ஒருவர் மற்றொருவரை எதிர்பார்த்து வாழ வேண்டியவர்களாக இருக்கிறார்கள். முதலாளிகள், தொழிலாளர் மீது தங்கள் எஜமானத்துவத்தைக் காட்டக்கூடாது என்பதுதான் இன்று அத்தியாவசியமானதாகும். மில்களின் பங்குதாரர்களைப் போன்றே மில் தொழிலாளரும் அந்த மில்களின் சொந்தக்காரர்களே என்பதுதான் என் அபிப்பிராயம். தங்களைப் போலவே தொழிலாளரும் மில்களின் சொந்தக்காரர்களே என்பதை மில் முதலாளிகள் உணர்ந்துகொண்டு விடுவார்களானால், பிறகு அவர்களுக்குள் சச்சரவுக்கு இடமே இல்லை. ஆனால், கடமையும் உண்டு என்றில்லாத உரிமை எதுவுமே உலகத்தில் கிடையாது. சொத்தின் சொந்தக்காரர் யாரும் தமது சொத்தைப் பாழ்படுத்துவதில்லை. மில்கள், முதலாளிகளுக்கு எவ்வளவு சொந்தமோ அவ்வளவு உங்களுக்கும் சொந்தம் என்பதை நீங்கள் அறிந்துகொண்டு விடும்போது, மில் சொந்தக்காரர்களுடன் உங்களுக்குள்ள சச்சரவைத் தீர்த்துக்கொள்ளுவதற்காகக் கோபத்தில் துணிகளையோ, யந்திரங்களையோ நீங்கள் ஒரு போதும் நாசப்படுத்த மாட்டீர்கள். போராடித்தான் ஆக வேண்டும் என்றால், நியாயமான வழியில் போராடுங்கள். கடவுளும் உங்களுக்கு உதவி செய்வார். உங்களை நீங்களே புனிதப்படுத்திக்கொள்ளுவதையும், துன்பத்தை அனுபவித்துக் கொள்ளுவதையும் தவிர, உங்கள் உரிமைகளை அடைவதற்கு நியாயமான வேறு வழி எதுவும் கிடையாது என்பதைத் திரும்பவும் கூறுகிறேன்.''

—'எங் இந்தியா' – 4—8—1927

[இவ்விஷயம் முன்னால் 'வாராந்திரக் கடிதம்' என்பதில், 'முதலாளிகளும் தொழிலாளரும்' என்ற தலைப்பின் கீழ் பிரசுரமாயிற்று.]

## 9

# ஹரிஜன தொழிலாளர் சங்கம்

''உயர்சாதி ஹிந்துக்களைக்கொண்டு ஹரிஜன முன்னேற்ற வேலையை நடத்தும் கொள்கைக்குப் பொறுப்பாளி நான்தான். இவர்கள் பிராயச்சித்தம் செய்ய வேண்டியவர்கள். சேவை

செய்வதற்கு வேண்டிய தகுதி இல்லாததால் அவர்கள் எல்லோருமே நேரடியான சேவையைச் செய்ய முடியாது. ஆனல், எல்லோரும் பணம் கொடுத்து உதவலாம். பிராயச்சித்தம் செய்வதற்குள்ள வழிகளில் அதுவும் ஒன்ருக இருக்கும்" என்று காந்திஜி கூறி ஹரிஜன சேவா சங்கத்தின் இப்போதைய கொள்கையை விளக்கினர். "செய்துவிட்ட தவறுக்காக வருந்துவோரின் சங்கம்" என்றும் பொருத்தமாக அதை வர்ணித்தார். காந்திஜியின் பதிலைப் பெறுவதற்காக ஏராளமான கேள்விகள் கேட்கப்பட்டதன் மூலம், தங்களைத் தாங்களே சோதித்துக் கொள்ளுவதில் அக்கூட்டம் அற்புதமானதாக இருந்தது.

அங்கே கேட்கப்பட்ட ஒரு கேள்வியும் பதிலும் கீழே கொடுக்கப்படுகின்றன:

கேள்வி: கம்யூனிஸ்டு கட்சி வெற்றிகரமாகத் தோட்டிகள் சங்கத்தை அமைத்து, ஹர்த்தால்கள் முதலியவைகளின் மூலம் அவர்கள் உரிமைகளைப் பெறுவதற்கு உதவி செய்திருக்கிறது. ஆனல், ஹரிஜன சேவா சங்க வேலைகளோ, அவர்களுடைய க்ஷேம நலனைக் கவனிக்கும் வேலையாகவே பெரும்பாலும் இருந்து வருகிறது. ஆகையால், ஹரிஜனங்களிடையே செல்வாக்குப் பெறும் விஷயத்தில் இச்சங்கம் கம்யூனிஸ்டுகளுடன் வெற்றிகரமாகப் போட்டி போட முடியாது. இதை முன்னிட்டு ஹரிஜன சேவா சங்கம் தனது கொள்கையையும் வேலை முறையையும் மாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம் என்று நீங்கள் கருதவில்லையா?

பதில்: எது சரி என்பதில், நமக்குள்ள அறிவுதான் நமது கொள்கையில் நமக்கு வழிகாட்டியாக இருக்கவேண்டும். எளிதில் செல்வாக்குப் பெறுவது என்பதைக்கொண்டு நாம் மயங்கிவிடக்கூடாது. சரியான வழியில் தான் வேலை செய்துகொண்டு வருவதாக ஹரிஜன சேவா சங்கம் நிச்சயமாக நம்பினல், மற்றவர்கள் என்ன செய்கிருர்கள், என்ன செய்யவில்லை என்பதைப் பொருட்படுத்தாமல் அது தன் வேலையைச் செய்துகொண்டே போகும். ராஜீய நோக்கங்களுக்காகவோ, அத்தகைய காரியங்களுக்காகவோ அல்லாமல், ஹரிஜனங்களின் சமூக, பொருளாதார நிலைமை முன்னேற்றமடையும்படி செய்வதற்காக அவ்விதம் நாம் தொழிலாளர் சங்கங்களை அமைக்கலாம். ஹர்த்தால் செய்யும்படியும் தூண்டலாம்.

—'ஹரிஜன்' - 21—7—1946

  

[பரோபகார வேலையில் ஈடுபட்டிருக்கும் ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள், தொழிலாளர் சங்க முறையில் சங்கங்களை அமைத்துக்கொள்ளுவது சரியா? இக்கேள்விக்கும் மகாத்மா பதிலளித்திருக்கிருர். அகில இந்திய தூற்போர் சங்கத்தின்

ஏஜண்டு ஒருவர் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில், தமது சக ஊழியர்கள் ஒரு சங்கத்தை அமைத்துக்கொண்டு தமக்குச் சில நிபந்தனைகளை விதித்திருக்கிறார்கள் என்றும், இதற்குத் தாம் என்ன சொல்லுவது என்றும் கேட்டிருந்தார். இதற்கு மகாத்மா அளித்த பதிலில், அப்படிப்பட்ட ஊழியர்களின் நிலைமை என்ன என்பதை விளக்கியிருக்கிறார். "வலியச் சேவை செய்வதான இச்சங்கத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், அதனிடமிருந்து எந்த விதமான லாபத்தையும் அடைவதில்லை என்பது மாத்திரமல்ல, அவர்களால் முடிந்தால் தங்கள் உழைப்பை இனமாக இச்சங்கத்திற்கு அளிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கப்படுகின்றனர்" என்கிறார், காந்திஜி. மகாத்மா எழுதியிருக்கும் இக்கட்டுரையின் முழு விவரமும் 'மகாத்மா காந்தி நூல்கள்'-ஐந்தாம் தொகுப்பில் 324-25-ஆம் பக்கங்களில் 'தவறான போக்கு' என்ற தலைப்பின் கீழ் பிரசுரமாகியிருக்கிறது.]

# 10

# பரோபகார சேவைகளில் முதலாளி, தொழிலாளி எண்ணங்கள்

## (1)

கதர் சேவை, கிராம சேவை, ஹரிஜன சேவை ஆகியவை பெயரில் மூன்றாக இருந்தாலும் உண்மையில் எல்லாம் ஒன்றே. அவையெல்லாம் பரோபகார சேவைகள். தரித்திர நாராயணருக்குச் சேவை செய்வது என்பதைத் தவிர வேறு எந்தவிதமான நோக்கமும் அவைகளுக்கு இல்லை. கோடிக்கணக்கான தரித்திர நாராயணர்களில் மிகவும் தாழ்த்தப்பட்ட நிலைமையில் கிடப்பவர்கள் ஹரிஜனங்கள். அவர்களுக்குச் சேவை செய்வது எல்லாச் சேவைகளிலும் சேர்ந்ததாக இருப்பது அவசியமாகிறது. கடவுளின் பெயரால் ஒரு ஹரிஜனுக்குக் கொடுக்கப்படும் ஒரு டம்ளர் நீர், மனித வர்க்கத்தில் கவனிப்பாரற்றுக் கிடக்கும் எல்லோருக்கும் அளிக்கப்பட்ட நீராகும்.

இத்தகைய எண்ணத்தோடு ஆரம்பிக்கப்பட்டிருக்கும் சேவைகளில், முதலாளி-தொழிலாளி என்ற எண்ணங்களைக் கொண்டுவந்து புகுத்துவது தவறாகும். சம்பளமில்லாத அக்கிராசனரிலிருந்து சம்பளம் பெறும் வேலைக்காரர்கள் வரையில் எல்லோரும் ஊழியர்களே. பணம், அந்தந்தத் தரும ஸ்தாபனங்

களைச் சேர்ந்தது. சம்பளம் வாங்குவோர், சம்பளமில்லாதவர் ஆகிய எல்லா ஊழியர்களும், அந்தந்தப் போர்டுகள் அப்போதைக்கப்போது செய்யும் விதிகளுக்கு உடன்பட்டு நடக்க வேண்டியவர்கள். கடமையைப் பற்றியதாகவே எண்ணம் முழுவதும் இருக்குமிடத்தில் உரிமையைப் பற்றிய பிரச்னையே இல்லை. ஆகையால், இந்தச் சேவைகளில் உரிமைகளைக் குறித்தும், சலுகைகளைப் பற்றியும் யாராவது எண்ணுவார்களாயின், என்றாவது ஒரு நாள் அவர்கள் ஏமாற்றத்திற்கே ஆளாவார்கள். ஏனெனில், இந்தச் சேவைகளில் நாளாவட்டத்தில் பொருளாதார அபிவிருத்தி என்பது எதுவும் இல்லை. இதற்கு மாறாக, பண வசதியை நாளாவட்டத்தில் தியாகம் செய்வது என்பதே இருக்கிறது; சீக்கிரத்தில் இருக்கும். 'கடன் இனமாகத் தருமத்திற்குக் கொடுத்ததாகிவிடும்போது, கடமையே அறமாகும்.' நிறைவேற்றப்படும் கடமைக்கு அதற்குரிய சன்மானம் உண்டு. இத்தகைய சேவைகளைச் செய்வதில் திருப்தி இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. நம் கடமையைச் செய்தோம் என்ற திருப்திதான் அது. சேவை என்ற ஒரே உணர்ச்சியினாலேயே எல்லோரும் இக்காரியத்தில் ஈடுபட்டிருக்கவில்லை என்பது உண்மை. எனவே, இம்மூன்று சேவைகளிலும் பழமையானதில் அப்போதைக்கப்போது ஆத்திரங்கள் வெளிக்காட்டப்படுவதும் இருந்துகொண்டிருக்கிறது. மீண்டும் இத்தகைய ஆத்திரங்களைக் காட்டுவதைத் தவிர்ப்பதற்குள்ள ஒரே வழி, தரித்திர நாராயணர்களுக்கு நாம் நிறைவேற்றியாக வேண்டியிருக்கும் கடமையைச் செய்வதற்காகவே இச்சேவையில் ஈடுபட்டிருக்கிறோமேயன்றி நமக்குச் சலுகைகளை நாடுவதற்காக அல்ல என்பதை நமக்கு நாமே நினைவுபடுத்திக்கொள்ளுவதுதான். தரித்திர நாராயணர்களைத் தவிர நமக்கு வேறு எஜமானர்கள் யாரும் இல்லை. இப்போதைக்கு நமக்கு மேலிருப்பவர்களையும் நாம் வைத்துக் கொண்டிருக்கிறோம் என்றால், வேண்டும் என்று விரும்பித்தான் வைத்துக் கொண்டிருக்கிறோம். கட்டுத்திட்டமில்லாமல் எந்த ஸ்தாபனமும் நடந்துகொண்டு போக முடியாது என்பதை அறிந்துதான் அவ்விதம் வைத்துக் கொண்டிருக்கிறோம். கட்டுத்திட்டம் இருக்க வேண்டும் என்றால், ஸ்தாபனத்திற்குத் தலைவர் வேண்டும். சம அந்தஸ்தில் இருப்பவர்களில் முதலாவதாக இருப்பவர் மாத்திரமே அவர். முற்றிலும் அவர் ஊழியராகவே இருப்பதால், தலைமையில் அவர் இருப்பதற்கு, தமது சக ஊழியர்கள் எல்லோரையும்விட அவர் அதிக அடக்கத்துடன் இருக்க வேண்டும். சகிப்புடனேயே அவர் அங்கே இருக்கிறார். ஆனால், அவர் அங்கே இருக்கும் வரையில் மற்ற எல்லா ஊழியர்களின் விசுவாசத்தையும், மனமார்ந்த, புகார் கூறாத பணியையும் பெற அவருக்கு உரிமை உண்டு.

—'ஹரிஜன்' – 22—6—1935

[முன்னால் 'மூன்று சேவைகள்' என்ற தலைப்பில் வெளியானது.]

## (2)

காந்திஜி, மாணவர்களிடையே* பேசுகையில், பள்ளிக்கூடம் என்பதன் ஆரம்பத் தத்துவம் என்ன என்பதை விரிவாக விளக்கியதோடு அவர்கள் எந்த லட்சியத்தின்மீது வேலைசெய்ய வேண்டும் என்றும் கூறினர்.

காந்திஜி கூறியதாவது: “இப்பள்ளிக்கூடத்தை ஆரம்பிப்பதில் நான் சந்தேகத்துடனேயே இருந்தேன் என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். போதுமான சரக்கு நம்மிடம் கிடையாது. கிராம வேலையைக் குறித்து அனுபவ ஞானமும் நமக்கு இல்லை. ஆகையால், மாணவர்களுக்குப் பயிற்சி அளிப்பதில் எந்த வகையிலாவது நாம் உதவியாக இருக்க முடியுமா என்ற சந்தேகம் எனக்கு இருந்தது. இதில் சேருவதற்கு மாணவர்கள் பலர் முன்வருவார்களா, கிராம வேலைகளுக்கு எந்த விதமானவர்கள் வேண்டும் என்று நாம் விரும்புகிறோமோ அப்படிப்பட்டவர்களாக அவர்கள் இருப்பார்களா என்றும் நான் சந்தேகித்தேன். என்னுடைய பயமெல்லாம் இதுவரையில் பொய்த்துவிட்டதற்காக நான் சந்தோஷம் அடைகிறேன். குறுகிய காலமான இந்த மூன்று மாதங்களில் எதிர்பார்த்ததைவிட அதிகமான பலனையும் கண்டிருக்கிறோம்.

“ஆனல், நீங்கள் எந்த லட்சிய வேலையையும், வாழ்க்கையையும் கருத்தில் வைத்து அதை நோக்கி வேலை செய்ய வேண்டும் என்பதைக் குறித்து இன்று உங்களுக்குச் சொல்லலாம் என்று இருக்கிறேன். ஜீவனத்திற்கான ஒரு தொழில் என்பதன் சரியான பொருளில் சொல்லுவதானல், நீங்கள் ஒரு தொழிலுக்காக இங்கே இல்லை. இன்று மனிதனுடைய தகுதி ரூபாய், அணு, பைசாவைக் கொண்டுதான் அளக்கப்படுகிறது. மனிதனின் கல்விப் பயிற்சி, வியாபாரப் பொருளாக இருக்கிறது. அந்த அளவுகோலை மனத்தில் வைத்துக்கொண்டு நீங்கள் இங்கே வந்திருப்பீர்களாயின், நீங்கள் ஏமாற்றமடையப்போவது நிச்சயம். இந்தப் படிப்பு முடிந்ததும் ஆரம்பத்தில் உங்களுக்கு உபகாரப் பணமாகப் பத்து ரூபாய் கொடுக்கப்பட்டு அதோடு முடிவதாய் இருக்கக்கூடும். ஒரு பெரிய கம்பெனியின் மானேஜருக்கோ, ஒரு பெரிய அதிகாரிக்கோ கிடைக்கும் தொகையுடன் அதை நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது.

“இப்பொழுது இருந்து வரும் தராதரங்களை நாம் மாற்ற வேண்டி இருக்கிறது. லாபமுள்ள உத்தியோகம் எதுவும் தருவதாக நாங்கள் உங்களுக்கு வாக்களிக்கவில்லை. உண்மையில் அத்தகைய ஆசையிலிருந்து உங்களை அப்புறப்படுத்தவே நாங்கள் விரும்புகிறோம். சாப்பாட்டிற்கு என்று மாதம் ரூ. 6 தான் நீங்கள் செலவு செய்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்

* இங்கே குறிப்பிடுவது வார்தா மகன்வாடியிலிருந்த கிராம ஊழியர்கள் பயிற்சிப் பள்ளிக்கூட மாணவரையாகும்.

கப்படுகிறீர்கள். ஓர் ஐ. ஸி. எஸ். அதிகாரிக்குச் சாப்பாட்டுச் செலவு மாதம் ரூ. 60 ஆகலாம். ஆனால், அதனால் உடல் வலுவிலோ, அறிவிலோ, ஒழுக்கத்திலோ உங்களை விட அவர் உயர்வாக இருக்கிறார் என்று ஆகாது. அவருடைய வலுவான உயர்ந்த வாழ்க்கையின் காரணமாக, அந்த வகைகளிலெல்லாம் அவர் உங்களைவிடத் தாழ்வானவராகவும் இருக்கக்கூடும். உங்கள் மதிப்பைக் காசைக் கொண்டு நீங்கள் மதிப்பிடாததனாலேயே நீங்கள் இந்த ஸ்தாபனத்திற்கு வந்திருக்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன். சொற்பத்தைப் பெற்றுக்கொண்டு தேசத்திற்கு உங்கள் சேவையை அளிப்பதில் நீங்கள் ஆனந்தமடைகிறீர்கள். பங்கு மார்க்கெட் பேரத்தில் ஒருவர் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கலாம். என்றாலும், அவர் நம் காரியத்திற்குக் கொஞ்சமும் பயனில்லாதவர். நம்முடைய எளிமையான சூழ்நிலையில் அவர்கள் சந்தோஷமில்லாதவர்களாகவே இருப்பார்கள்; அவர்கள் சூழ்நிலையில் நாமும் சந்தோஷமற்றவர்களாக இருப்போம். தேசத்தின் நலனுக்காகப் பாடுபடும் லட்சியத் தொழிலாளரே நமக்கு வேண்டும். தாங்கள் எந்தக் கிராமவாசிகளுக்குச் சேவை செய்கிறார்களோ அக்கிராமவாசிகள், தங்களுக்கு என்ன உணவையும் மற்ற வசதிகளையும் கொடுக்கிறார்கள் என்பதைக் குறித்து இவர்கள் கவலைப்பட்டுக் கொள்ளமாட்டார்கள். தங்களுக்குத் தேவையானவைகளுக்குக் கடவுளிடமே நம்பிக்கை வைப்பார்கள். தாங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும் கஷ்டங்களையும் துயரங்களையும் சகித்துக் கொள்ளுவார்கள். நாம் எண்ணிப் பார்த்தாக வேண்டிய கிராமங்கள் 7,00,000 இருக்கும் நம் நாட்டில் இது தவிர்க்க முடியாததாகும். ஒழுங்கான சம்பள உயர்விலும், பிராவிடண்டு நிதியிலும், பென்ஷனிலும் கவனம் வைத்துக் கொண்டிருக்கும் சம்பளம் வாங்கும் சிப்பந்திகளை ஊழியர்களாக வைத்துக் கொள்ள நம்மால் ஆகாது. கிராமவாசிகளுக்கு விசுவாசத்தோடு சேவை செய்வதுதான் அதனால் ஏற்படும் திருப்தியாக இருக்க வேண்டும்.

"கிராம வாசிகளுக்கும் இந்த வாழ்க்கைத்தரம்தான் இருக்க வேண்டுமா என்று கேட்க உங்களில் சிலருக்குத் தோன்றலாம். இந்தத் தரம் இருக்கவே கூடாது. இதெல்லாம் ஊழியர்களாகிய நமக்கேயன்றி நமது எஜமானர்களாகிய கிராமவாசிகளுக்கு அல்ல. இத்தனை ஆண்டுகளாக நாம் அவர்கள் மீது ஏறிச் சவாரி செய்து வந்திருக்கிறோம். நமது அந்த எஜமானர்களின் கதி இன்று இருப்பதைவிட மேம்பட வேண்டும் என்பதற்காக, அதிகரித்துக் கொண்டே போகும் ஏழ்மையை வலிய ஏற்றுக் கொள்ள நாம் தயாராக இருக்கிறோம். இன்று சம்பாதிப்பதைவிட அதிகமாக அவர்கள் சம்பாதிப்பதற்கு நாம் உதவி செய்ய வேண்டும். கிராமக் கைத்தொழில் சங்கத்தின் நோக்கம் இதுதான். நான் விவரித்திருப்பதைப் போன்ற ஊழியர்களின் தொகை அதிகரித்துக் கொண்டே போனாலன்றி அது

சுபிட்சமடையாது. அத்தகைய ஊழியர்களாக நீங்கள் இருப்பீர்களாக.''

—'ஹரிஜன்' – 23—5—1936

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற பகுதியில் 'லட்சிய கிராம ஊழியர்' என்ற தலைப்பில் முன்னால் பிரசுரமான விஷயமே மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

★ ★ ★

[தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள், வேலை நிறுத்தம், மில் கதவடைப்பு, வேலையில்லாது போவது ஆகிய சமயங்களில் பட்டினி கிடக்காமலோ, பிறர் அளிக்கும் தருமத்தை நம்பி வாழாமலோ இருப்பதற்கு வேறு ஏதாவது தொழிலையும் கற்று வைத்திருக்க வேண்டியது அவசியம் என்பது மகாத்மாவின் அபிப்பிராயம். இந்த எண்ணம் 1918-இல் அகமதாபாத் மில் தொழிலாளர்கள் இருபத்து மூன்று நாட்கள் வேலை நிறுத்தம் செய்தபோது தமக்கு உதித்தது என்று அவர் கூறுகிறார். சோம்பேறித்தனமாகச் சும்மா இருப்பதைவிட தொழிலாளரின் ஒழுக்கத்திற்கும் சுயமரியாதைக்கும் தீமையானது வேறு எதுவும் இல்லை என்பது காந்திஜியின் கருத்து. ஆகையால், அவர் யோசனையின் பேரில் அகமதாபாத் தொழிலாளர் சங்கம், அதன் அங்கத்தினர்களுக்கு ஓய்வுநேரங்களில் வேறு தொழிலையும் போதிக்க ஆரம்பித்ததைக் குறித்து, மகாத்மா 3—7—1937 'ஹரிஜ'னில் எழுதி இருக்கிறார். ''முதலாளியின் முன், தாம் சக்தியற்றவர் என்று தொழிலாளி நினைப்பது, அவர்களை அடிமையாக்கியுள்ள மூட நம்பிக்கைகளில் மிகக் கொடியது. இந்தத் தவறான எண்ணத்தைப் போக்குவதே அகமதாபாத் தொழிற் சங்கத்தின் முயற்சியின் நோக்கம். ஆகவே, அந்த முயற்சி அனைவராலும் வரவேற்கத் தக்கது'' என்றும் காந்திஜி கூறி யிருக்கிறார். இக்கட்டுரையின் விவரம், 'அகமதாபாத் தொழிற் சங்கத்தின் முயற்சி' என்ற தலைப்பின் கீழ் 'மகாத்மா காந்தி நூல்கள்'–ஐந்தாம் தொகுப்பு 762-64-ஆம் பக்கங்களில் பிரசுரமாகி யிருப்பதைக் காண்க.]

பகுதி நான்கு

# மறக்க முடியாத வேலை நிறுத்தம்

## 1

## தொழிலாளருடன் தொடர்பு

[மகாத்மா, இந்தியாவுக்கு வந்த பிறகு அவருக்கு தொழிலாளருடன் தொடர்பு ஏற்பட்டது சம்பாரண் சத்தியாக்கிரகத்திற்குப் பிறகேயாகும். இத்தொடர்பு ஏற்பட்ட விதத்தைக் குறித்து மகாத்மா தமது 'சுயசரிதை'யில், 'தொழிலாளருடன் தொடர்பு' என்ற அத்தியாயத்தில் எழுதியிருக்கிறார். அகமதாபாத் மில் தொழிலாளருடன் அவருக்கு ஏற்பட்ட தொடர்பும், பிறகு தமது யோசனையின் பேரில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ததையும் காந்திஜி அதில் கூறியிருக்கிறார். அத்தொழிலாளர் பெற்று வந்த கூலி மிகக் குறைவு. ஆகையால், கூலியை உயர்த்தித் தர வேண்டும் என்பதே தொழிலாளரின் கோரிக்கை. அவர்கள் கேட்பது சம்பந்தமாக மத்தியஸ்தர்களின் முடிவுக்கு விட்டுவிடும்படி காந்திஜி, மில் முதலாளிகளுக்கு யோசனை கூறினார். அதற்குச் சம்மதிக்க முதலாளிகள் மறுத்து விடவே வேலைநிறுத்தம் செய்யும்படி தொழிலாளருக்கு யோசனை கூறினார். வேலை நிறுத்தம் வெற்றிகரமாவதற்குத் தொழிலாளருக்கு நான்கு நிபந்தனைகளையும் அவர் விதித்தார்: (1) எந்த நிலைமையிலும் பலாத்காரத்தில் இறங்கி விடவே கூடாது. (2) கட்டுப்பாட்டை மீறி வேலைக்குப் போகிறவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது. (3) பிறர் இடும் பிச்சையை எதிர்பார்த்திருக்கக் கூடாது. (4) வேலை நிறுத்தம் எவ்வளவு காலம் நீடிப்பதாக இருந்தாலும் உறுதியுடன் இருக்க வேண்டும். யோக்கியமாக வேறு எந்த வகையிலாவது உடலை உழைத்து வேலை நிறுத்த காலத்தில் ஜீவனத்தை நடத்திக்கொள்ள வேண்டும்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு தொழிலாளரிடையே சோர்வுக்கான அறிகுறிகள் தென்பட்டன. இதைக் குறித்து மகாத்மா தமது 'சுயசரிதை'யில் 'உண்ணாவிரதம்' என்ற அத்தியாயத்தில் குறிப்பிடுகிறார். 'உடம்பு பலவீனமாக ஆக மனிதன் சீக்கிரத்தில் கோபப்படுவதுபோல, வேலை நிறுத்தம் பலவீனமடைவதாகத் தோன்றியதும், கட்டுப்பாட்டை மீறி வேலைக்குப் போகிறவர்கள் விஷயத்தில் தொழிலாளர்கள் கொண்ட போக்கும் மேலும் மேலும் ஆபத்தானதாகிக் கொண்டு வந்தது. எங்கே முரட்டுத் தனமான செய்கைகளில் இறங்கி விடுவார்களோ என்று பயந்தேன்' என்கிறார், காந்திஜி. அவர் மேலும் கூறியிருப்பதாவது : "இவ்வாறு திகைத்துத் தெளிவான வழி காண முடியாமல் நான் தத்தளித்துக் கொண்டிருந்த சமயத்தில், ஒரு நாள் காலை, ஆலைத் தொழிலாளர் கூட்டத்தில் திடீரென்று எனக்கு ஓர் ஒளி தோன்றிற்று. முன்கூட்டி எண்ணிப் பாராமலே என் நாவில் பின்வரும் சொற்கள் வந்தன: 'வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் திடம் கொண்டு ஒரு சமரச முடிவு ஏற்படும் வரையில் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்தினாலன்றி, அல்லது இப்பொழுது வேலைக்குப் போகிறவர்கள் எல்லோரும் ஆலைகளிலிருந்து வெளி வந்து விடும் வரையில், நான் உணவு கொள்ளப் போவதில்லை' என்று கூட்டத்தில் கூறினேன்'' என்கிறார், காந்திஜி. மில் முதலாளிகள் இந்த உண்ணாவிரதத்தின் காரணமாக சமரசத்திற்கு வந்தார்கள். வேலை நிறுத்தமும் வெற்றிகரமாக முடிந்தது.

தொழிலாளருடன் காந்திஜிக்குத் தொடர்பு ஏற்பட்டது, தொழிலாளருக்காக அவர் உண்ணாவிரதம் இருந்தது ஆகியவைகளைப் பற்றி அவர் எழுதி இருப்பதன் முழு விவரத்தையும் 'மகாத்மா காந்தி நூல்கள்'—மூன்றும் தொகுப்பு—546-50-ஆம் பக்கங்களிலும், 553–58–ஆம் பக்கங்களிலும் காண்க.]

## 2

# போராட்டம், உண்ணுவிரதம் குறித்து விளக்கம்

சமீபத்தில் நான் மேற்கொண்ட உண்ணுவிரதத்தைக் குறித்துப் பொது ஜனங்களுக்கு விளக்கம் கூறியாக வேண்டும் என்று உணருகிறேன். நான் செய்த இக்காரியம் முட்டாள்தனமானது என்று சில நண்பர்கள் கருதுகிருர்கள். மற்றவர்களோ, இன்னும் அதிக மோசமானது என்று எண்ணுகிருர்கள். ஆனல், இக்காரியத்தை நான் செய்யாமலிருந்திருப்பேனுயின், என்னைப் படைத்தவனுக்கும், நான் மேற்கொண்ட வேலைக்கும் பொய்யனுகியிருப்பேன் என்று நான் நம்புகிறேன்.

ஒரு மாதத்திற்கு முன்னுல் நான் பம்பாய்க்குப் போயிருந்தபோது, அகமதாபாத் மில் தொழிலாளருக்குப் பிளேக் காலத்தில் கொடுக்கப்பட்டு வந்த போனஸ் நிறுத்தப்பட்டுவிடுமானுல், அவர்கள் வேலை நிறுத்தம் செய்து சங்கடத்தை ஏற்படுத்தக் கூடும் என்று கேள்விப்பட்டேன். இதில் தலையிடும்படி என்னைக் கேட்டுக்கொண்டார்கள். அப்படியே செய்வதாக நானும் ஒப்புக் கொண்டேன்.

பிளேக் ஏற்பட்டதனுல் தொழிலாளரின் சம்பளத்தில் 70 சதவிகிதம் அவர்களுக்குப் போனஸாக ஆகஸ்டு மாதத்திலிருந்து கொடுக்கப்பட்டு வந்தது. அந்தப் போனஸை நிறுத்திவிடுவதற்குச் செய்யப்பட்ட முயற்சி, அவர்களிடையே அதிருப்தியை உண்டாக்கிவிட்டது. கடைசி நேரத்தில் மில்காரர்கள், விலைவாசிகள் உயர்ந்துவிட்டதை முன்னிட்டுத் தொழிலாளரின் சம்பளத்தில் 20 சத விகிதம் சேர்த்துக் கொடுக்க ஒப்புக்கொண்டார்கள். ஆனுல், இதைக்கொண்டு தொழிலாளர் திருப்தியடைந்துவிடவில்லை. இந்தத் தகராறு மத்தியஸ்தத்திற்கு விடப்பட்டது. அகமதாபாத் கலெக்டர் ஸ்ரீ சாட்பீல்டு மத்தியஸ்தராக நியமிக்கப்பட்டார். அப்படியிருந்தும் சில ஆலைகளில் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். இது நடந்துவிட்டதும் மத்தியஸ்தத்திலிருந்து முதலாளிகள் பின்வாங்கிக் கொண்டு விட்டதோடு ஆலைகளைக் கதவடைப்பும் செய்துவிட்டனர். தொழிலாளர் சளைத்துப்போய் 20 சத விகித சம்பள உயர்வை அவர்கள் ஒப்புக்கொண்டுவிடும் நிலைமை ஏற்படும் வரையில் தொடர்ந்து ஆலைகளை மூடியே வைத்துவிடுவது என்றும் முதலாளிகள் தீர்மானித்துவிட்டார்கள்.

தொழிலாளர் தரப்பில் மத்தியஸ்த போர்டில் நானும் ஸ்ரீ வல்லபபாய் பட்டேலும், ஸ்ரீ சங்கரலால் பாங்கரும் நியமிக்கப்பட்டிருந்தோம். துரிதமான, திட்டமான நடவடிக்கை

எடுத்துக்கொள்ளாது போனல், தொழிலாளர் சரணுகதி யடைந்து அவமானப்படும்படி கட்டாயப் படுத்தப்பட்டுவிடு வார்கள் என்று கண்டோம். கூலி உயர்வு விஷயத்தைக் குறித்து விசாரணை செய்ய ஆரம்பித்தோம். முதலாளிகளின் உதவியையும் பெற முயன்ருேம். ஆனல், உதவி செய்ய அவர்கள் மறுத்து விட்டனர். தங்களுடைய கட்டுப்பாடான பலத்தைக்கொண்டு தொழிலாளரின் ஒற்றுமையை முறித்துவிடவும் யோசித்துக் கொண்டு வந்தார்கள். இதனல் எங்கள் விசாரணை ஒரு வகையில் ஒருதலைப்பட்சமானதாகவே ஆயிற்று. என்ருலும், மில் சொந்தக் காரர்கள் தரப்பின் நியாயத்தையும் தெரிந்துகொள்ள முயற்சி செய்தோம். முடிவில் 35 சத விகித சம்பள உயர்வுதான் நியாய மானது என்ற முடிவுக்கும் வந்தோம். இதைத் தொழிலாள ருக்கு அறிவிப்பதற்கு முன்னுலேயே மில் சொந்தக்காரர்களுக்கு அறிவித்தோம். நாங்கள் போட்டிருக்கும் கணக்கில் ஏதாவது தவறு இருக்கிறது என்று காட்டப்படுமானல் திருத்திக் கொள்ளவும் தயாராக இருக்கிருேம் என்றும் தெரிவித்தோம். ஆனல், எங்களுடன் எதையும் கலந்தாலோசிப்பதற்கு அவர்கள் தயாராயில்லை என்றே தெரிந்தது. பம்பாய் முதலாளிகளும், அரசாங்கமும் கொடுத்திருக்கும் கூலி உயர்வு, நாங்கள் நிர்ணயித் திருக்கும் விகிதத்தைவிடக் குறைவாக இருக்கிறது என்று அவர்கள் பதில் எழுதினர்கள். புதியதோர் விஷயத்தையே அவர்கள் இப்பொழுது புகுத்துகிருர்கள் என்று உணர்ந்தேன். தொழிலாளரின் பெரிய கூட்டம் ஒன்றில் பேசுகையில், தொழி லாளர்கள் 35 சத விகித சம்பள உயர்வை ஏற்றுக்கொள்ளு வார்கள் என்று கூறினேன்.

பிளேக் காரணமாகத் தொழிலாளர் கூலியில் 70 சத விகிதம் அதிகமாகப் பெற்று வந்தார்கள்; பிறகு விலைவாசிகள் ஏறி விட்டதால் 50 சத விகிதத்திற்குக் குறைந்த கூலி உயர்வைத் தாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது என்று தொழிலாளர் கூறி வந்தனர் என்பதைக் கவனிக்க வேண்டும். இதற்கு மாருக நாங்களோ, அவர்கள் கேட்டு வந்த 50 சத விகிதத்திற்கும், முதலாளிகள் கொடுக்க சம்மதித்த 20 சத விகிதத்திற்கும் நடு வாந்தரமான 35 சத விகிதத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ருேம். (நடுவாந்தரமான இந்த 35 சத விகிதத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது யதேச்சையாகவே முடிவு செய்யப்பட்டது.)

கொஞ்சம் எதிர்ப்புக்குப் பிறகு, 35 சத விகித உயர்வை கூட்டம் ஒப்புக்கொண்டது. இத்தகராறை மத்தியஸ்தத்திற்கு விட முதலாளிகள் தயாராயிருக்கும் சமயத்தில், தொழிலாளர் களும் அதற்கு உடன்படத் தயாராயிருக்கிருர்கள் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அதன் பிறகு ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் நகருக்கு வெளியிலுள்ள ஒரு மரத்து நிழலில் கூடுவார்கள். அவர்களில் சிலர் தொலை

தூரத்திலிருந்து நடந்தே அங்கே வருவர். 35 சத விகித உயர்வுக்குக் குறைந்த எதையும் தாங்கள் ஏற்றுக்கொள்ளுவதில்லை என்ற தங்கள் பிரதிக்ஞையை வற்புறுத்தி வந்தனர்.

தொழிலாளருக்கு எவ்வித பணவுதவியும் செய்யவில்லை. ஆகவே, சிலர் பட்டினி கிடந்தார்கள். அவர்கள் வேலையில்லாமலிருக்கும் வரையில், அவர்களுக்கு ஆலோசனை கூறி வந்தவர்களாகிய நாங்களோ, அவர்களில் திடகாத்திரத்துடன் இருப்பவர்கள் உடலை உழைத்து ஜீவனம் செய்யத் தயாராக இல்லையென்றால், அவர்களுக்குச் சோறு போட நாங்கள் பொது ஜனங்களிடம் நிதி வசூலித்தால், அவர்களை அவமானப்படுத்தியதாகும் என்று கருதினோம். மில்களில் தறிகளில் வேலை செய்து பழகியவர்களை, கல்லையும் மண் கூடையையும் சுமக்கச் செய்வது கஷ்டமாக இருந்தது. இத்தகைய வேலைகளை அவர்கள் செய்தார்களென்றாலும் விருப்பமில்லாமல்தான் செய்துவந்தனர்.

மில்காரர்களும் கடுஞ்சித்தம் கொண்டு விட்டனர். 20 சத விகிதத்திற்கு அதிகமாகக் கொடுப்பதே இல்லை என்று முடிவு செய்துகொண்டனர். வேலைக்கு வந்துவிடும்படி தொழிலாளரைத் தூண்ட ஆட்களையும் நியமித்தார்கள். ஜீவனத்திற்காக ஏதாவது வேலையைச் செய்யாதவர்களுக்கு உதவி செய்வதில்லை என்று கதவடைப்பு ஆரம்பமானதிலிருந்தே மறுத்து வந்தோம். ஆனால், அவர்களுக்கு உணவும் உடையும் அளிப்பதற்கு முன்னால் நாங்கள் உண்டு உடுத்தமாட்டோம் என்று அதே சமயத்தில் அவர்களுக்கு உறுதி கூறியும் வந்தோம்.

இவ்வாறு இருபத்திரண்டு நாட்கள் கழிந்தன. பட்டினியின் அவதியும், முதலாளிகளின் பிரசாரமும் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டன. 'உங்களுக்கு உதவி செய்ய வருவதற்கு உலகத்தில் கடவுள் என்ற ஒன்று இல்லவே இல்லை. பிரதிக்ஞை என்பதெல்லாம் பலவீனர்கள் மேற்கொள்ளும் உபாயங்களே' என்ற பேய்த்தனமான எண்ணங்கள் தொழிலாளரின் காதுகளில் மெல்ல ஒலிக்க ஆரம்பித்துவிட்டன. அதுவரையில் தினந்தோறும் ஐயாயிரம் முதல் பத்தாயிரம் பேர் வரையில் பொதுக்கூட்டங்களுக்கு உற்சாகத்தோடும் ஆர்வத்துடனும் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களுடைய உறுதி அவர்கள் முகத்தில் நன்றாகத் தெரிந்தது. இதற்கு மாறாக அந்த ஒரு நாள், இரண்டாயிரம் பேர் மாத்திரமே வந்திருந்ததைக் கண்டேன். அவர்களுடைய முகங்கள் சோர்ந்திருந்தன. அதே சமயத்தில், ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் வேண்டுமென்றே கூட்டத்திற்கு வராமல் இருந்துவிட்டார்கள் என்றும் 20 சத விகிதக் கூலி உயர்வை ஏற்றுக்கொண்டுவிடும் தறுவாயில் இருக்கிறார்கள் என்றும் கேள்விப்பட்டோம். எங்களுக்கு மோட்டார்கள் இருக்கின்றன; சாப்பிடவும் ஏராளமாகச் சாப்பாடு இருக்கிறது. ஆகையால், கூட்டங்களுக்கு வரவேண்டும் என்றும், சாகும் வரையிலும்

உறுதியுடன் இருக்கவேண்டும் என்றும் மற்றவர்களுக்குச் சொல்லுவது எங்களுக்கு எளிது என்றும் அத்தொழிலாளர்கள் புகார் கூறினர்கள் என்றும் கேள்விப்பட்டோம். அவர்கள் அப்படிப் புகார் சொன்னது சரி என்பதுதான் என் அபிப் பிராயம்.

இப்படிப்பட்ட நிலைமையில் நான் என்ன செய்வது? அவர்கள் எங்களைக் குறை கூறுவது நியாயம் என்று உணர்ந் தேன். கடவுள் பிரத்தியட்சமாகக் கண் முன்னல் தெரிவதே போன்று எனக்குக் கடவுளிடம் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்து வருகிறது. மேற்கொண்ட ஒரு பிரதிக்ஞையை எப்படியும் அனுசரித்தே ஆக வேண்டும் என்றும் நான் நம்பு கிறேன். என் முன்னல் உட்கார்ந்திருக்கும் தொழிலாளருக்கும் கடவுள் பயம் உண்டு என்பதை அறிவேன். ஆனல், ஆலைக் கதவடைப்பும், வேலை நிறுத்தமும் நாளாகிக்கொண்டே வரும் போது, அவர்களுக்குத் தாங்க முடியாத சுமை ஏற்பட்டுவிட்டது. இந்தியாவில் நான் அதிக தூரம் சுற்றிப் பார்த்திருக்கிறேன். நூற்றுக்கணக்கானவர்கள் ஒரு சமயத்தில் எடுத்துக்கொள்ளும் பிரதிக்ஞையை, அடுத்த கணமே மீறி விடுகிறார்கள் என்பதை என் பிரயாண காலங்களில் பார்த்தும் இருக்கிறேன். நம்மில் சிறந்தவர்களாக இருப்பவர்களுக்குக்கூட கடவுளிடமும் ஆன்ம சக்தியைக் குறித்தும் பலவீனமான, திடசித்தமில்லாத நம்பிக்கை இருந்து வருகிறது என்பதை நான் கண்டுகொண்டி ருக்கிறேன். எனக்குத் தெய்வீகமானதோர் சமயம் அது என்று உணர்ந்தேன். என் நம்பிக்கை சோதிக்கப்படுகிறது. தயக்க மின்றி எழுந்து நின்றேன். தொழிலாளர்கள் மேற்கொண்ட பிரதிக்ஞையை மீறிவிடுவது என்பதை என்னல் சகிக்க முடிய வில்லை என்று சொன்னேன். ஆகையால், அவர்களுக்கு 35 சத விகித கூலி உயர்வு கிடைக்கும் வரையிலோ, போராட்டத்தை அடியோடு விட்டுவிடும் வரையிலோ நான் சாப்பிடப் போவதில்லை என்று விரதம் எடுத்துக்கொண்டேன்.

அதுவரையில் இக்கூட்டம் முந்திய கூட்டங்களைப் போல அவ்வளவு உற்சாகமானதாக இல்லை. உண்மையில் அது சோபை இல்லாமலேயே இருந்தது. ஆனல், இப்பொழுது ஒரு மந்திர சக்தியினல் ஏற்பட்டதே போன்று அங்கே இருந்தவர் களுக்கு உற்சாகம் உண்டாயிற்று. அவர்கள் கண்ணீர் சொரிந் தார்கள். ஒருவருக்குப் பின் ஒருவராக எழுந்து நின்று, 'கோரிக்கைகள் முற்றிலும் நிறைவேற்றப்படும் வரையில் மில்களுக்கு வேலைக்குப் போகமாட்டோம்; கூட்டத்திற்கு வராம லிருந்தவர்களையும் கண்டுபிடித்து அவர்கள் மனத்தையும் உறுதிப்படுத்துகிறோம்' என்றார்கள். சத்தியத்தின், அன்பின் சக்தியைக் காண முடிந்தது, இணையில்லாததோர் அனுபவமாகும். கடவுளின் காக்கும் சக்தி நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. புராதன காலத்தில் மக்கள் இதை உணர்ந்ததைப் போன்று ஒவ்வொருவரும் உணர ஆரம்பித்தனர்.

அந்த விரதத்தை மேற்கொண்டதற்காக நான் வருத்தப்படவில்லை. அதற்கு மாருக, வேறு எந்த வகையிலாவது நான் நடந்துகொண்டிருப்பேனுயின், நான் எந்த லட்சியத்தை எடுத்துக் கூறி வந்தேனே அதற்கே துரோகம் செய்துவிட்டவனுவேன் என்பது எனது திடமான நம்பிக்கை. அதில் சில தவறுகளும் இருக்கின்றன என்பதை, அந்த விரதத்தை மேற்கொள்ளுவதற்கு முன்னுலேயே நான் அறிவேன். உதாரணமாக, மில்காரர்கள் தங்கள் முடிவை மாற்றிக்கொள்ளும்படி செய்வதற்காக அத்தகைய விரதத்தை நான் மேற்கொண்டிருந்தால், அது மில்காரர்களுக்கு அநீதியைச் செய்ததாக இருந்திருக்கும். அவர்களில் சிலருடைய நட்பை அனுபவிக்கும் பாக்கியமும் எனக்கு இருந்தது என்பதும், அத்தகைய காரியத்தினுல் அந்த நட்புக்கு என்னைத் தகுதியற்றவனுக்கிக் கொண்டவனுவேன் என்பதும் எனக்குத் தெரியும். என் உண்ணுவிரதத்தைக் குறித்துத் தவருக எண்ணிவிடக்கூடிய ஆபத்தும் இருக்கிறது என்பதையும் அறிவேன். என் உண்ணுவிரதம் மில்காரர்களைப் பாதிக்காமலிருக்கும் வகையில் தடுத்துவிடுவது என்னுல் சாத்தியமானது அல்ல. அவர்களுடன் நான் கொண்டிருந்த தொடர்பினுல் என்னுடைய பொறுப்பு அதிகமாயிற்று. இத்தகைய போராட்டங்களில் நியாயமானது என்று கருதப்படக்கூடிய தான நிவாரணத்தைக்கூடத் தொழிலாளருக்கு என்னுல் பெற முடியவில்லை என்றே தோன்றியது. முதலாளிகளிடமிருந்து என்னுல் பெற முடிந்ததான குறைந்தபட்சத்தைக் கொண்டு திருப்தியடைந்துதான் நான் இருந்துவிட வேண்டியதாயிற்று என்பதையும் அறிவேன். அந்தக் குறைந்தபட்சமும் பெயரளவில் தொழிலாளரின் பிரதிக்ஞைக்குப் பொருந்துவதாக இருந்ததேயன்றி உண்மையில் அது முற்றிலும் நிறைவேற்றப்பட்டு விடவில்லை. வாஸ்தவத்தில் நடந்ததும் இதுதான். என்னுடைய விரதத்தில் அடங்கிய இந்தக் குறைபாடுகளையெல்லாம் தராசின் ஒரு தட்டில் போட்டு, அதன் நன்மைகளையெல்லாம் மற்ருேர் தட்டிலிட்டு நிறுத்துப் பார்த்தேன். எப்படியும் மனிதன் செய்யும் காரியங்களில் தவறே இல்லாதவை மிகச் சிலதான். என்னுடைய விரதத்தில் அநேக குறைபாடுகள் இருந்தன என்பதை அறிவேன். (1) பத்தாயிரம் தொழிலாளர்கள் கடவுள் முன்னிலையில் எடுத்துக்கொண்ட, இருபது நாட்கள் உறுதியும் செய்து வந்த பிரதிக்ஞையைத் திடீரென்று அவர்கள் கைவிட்டுவிடுவது; (2) நியாயமில்லாத வகையில் முதலாளிகளுக்குச் சங்கடத்தை உண்டாக்கிவிட்டேன் என்று என்மீது குறை கூறப்படுவது ஆகிய இரண்டில் பிந்தியதையே நான் விரும்பினேன். மக்கள் எஃகுபோல் உறுதிகொள்ளாமல் இருக்கிறவரையில், மனிதர் மேற்கொள்ளும் பிரதிக்ஞைகள் மீறிவிட முடியாதவை, அசைக்க முடியாதவை என்று இல்லாத வரையில், அம்மக்கள் ஒரு தேசிய இனமாக இருக்க முடியாது என்பது எனது திடமான நம்பிக்கை. என் கருத்தை நண்பர்கள் ஏற்றுக்கொள்ளாமல்

இருக்கலாம். வருங்காலத்தில் இதே போன்ற சந்தர்ப்பம் ஏற்பட்டால், இப்பொழுது நான் செய்ததைப் போன்றே செய்ய நான் தயங்கமாட்டேன் என்றுதான் உணருகிறேன்.

இக்கடிதத்தை முடிப்பதற்கு முன்னுல், இருவருடைய பெயர்களே இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இவர்களேக் குறித்து இந்தியா பெருமையடையக் காரணம் உண்டு. ஸ்ரீ அம்பாலால் சாராபாய் மில் சொந்தக்காரர்களின் பிரதிநிதி. அவர் மிகச் சிறந்த கனவான். நன்ருகப் படித்தவர், புத்திசாலி, உறுதியானவர். அவருடைய சகோதரி ஸ்ரீமதி அனுசூயா பென் மில் தொழிலாளரின் பிரதிநிதி. அவர் உள்ளம் பொன்னேப் போல் புனிதமானது; ஏழைகளிடம் மிகுந்த அன்புடையவர். மில் தொழிலாளர்கள் அவரைப் போற்றுகின்றனர். அவர் சொல்லே அவர்களுக்குச் சட்டம். மனக் கசப்பே இல்லாத, இரு தரப்பிலும் அதிக மரியாதை காட்டப்படும் இது போன்ற ஒரு போராட்டத்தைக் குறித்து நான் கேள்விப்பட்டதே இல்லே. முக்கியமாக ஸ்ரீ அம்பாலால், ஸ்ரீமதி அனுசூயா பென் ஆகிய இருவருடைய செல்வாக்கினுலேயே இந்த இனிமையான முடிவு ஏற்பட்டது.

['நீதியான போராட்டம்' என்ற நூலிலிருந்து எடுத்தது.]

## 3

# அகமதாபாத் உண்ணுவிரதம்

[ 1918–இல் அகமதாபாத்தில் நடந்த மில் தொழிலாளர் வேலே நிறுத்தம் சம்பந்தமாகக் காந்திஜி மேற்கொண்ட உண்ணுவிரதத்தைக் குறித்துக் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு அவர் அளித்த பதிலே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. முதலில் இப்பதில் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளி வந்தது. ]

1918-இல் மில் தொழிலாளர்கள் வேலே நிறுத்தம் நடந்த போது நான் மேற்கொண்ட உண்ணுவிரதம், மில் தொழிலாளர்களான 'அன்பர்'களுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்டதேயன்றி 'கொடியவர்'களான. மில் சொந்தக்காரர்களுக்கு எதிராக அல்ல. அந்த உண்ணுவிரதம் என் சொந்த நண்பர்களான மில் சொந்தக்காரர்களே மனமாற்றமடையும்படி நிர்ப்பந்தம் செய்தே தீருமாகையால், அது குறைபாடுகள் இல்லாதது அல்ல என்று அச்சமயத்திலேயே நான் அறிவித்திருக்கிறேன். ஆனல், என் முன்னிலேயில் இருபத்தோரு நாட்கள் அத்தொழிலாளர்கள் பக்தியுடன் செய்துகொண்டு வந்த பிரதிக்

ளையை, என் சகாக்களான மில் தொழிலாளர்கள் மீறிவிடுவதைப் பார்த்துக்கொண்டு கவலைப்படாமலிருப்பதென்பது, எனக்குச் சாத்தியமில்லாதது. உண்ணாவிரதத்தின் பலன் மின் சக்தியைப் போன்று இருந்தது. இப்படியா, அப்படியா என்று இருந்து வந்த தொழிலாளர்கள் உடனே பலமான உறுதிகொண்டுவிட்டார்கள்.

—'எங் இந்தியா' - 31—7—1924

# 4

# வேலை நிறுத்தக்காரர்களுக்கு

[ 1918-இல் அகமதாபாத் மில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் நடந்து கொண்டிருந்தபோது மொத்தம் பதினேழு துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்பட்டன. 'சங்கரலால் பாங்கரின் பிரசுரம்' என்று வெளியான பதினாறாவது துண்டுப் பிரசுரத்தைத் தவிர மற்றவை யாவும் [அப்பொழுது அகமதாபாத் மில் தொழிலாளரின் தலைவராக இருந்த ஸ்ரீமதி அனுசூயா பென் சாராபாயின் பெயரிலேயே வெளியிடப்பட்டிருந்தன. என்றாலும், உண்மையில் அப் பிரசுரங்களை யெல்லாம் எழுதியவர் காந்திஜியே. ஆனால், அவை ஸ்ரீமதி அனுசூயா பென் சாராபாயின் பெயரில் ஏன் வெளியிடப்பட்டன என்பது தெளிவானது. ]

## (1)

மில்கள் கதவடைப்பு பிப்ரவரி 22-ஆம் தேதி ஆரம்பமாயிற்று. அன்றிலிருந்து நெசவு இலாகாவைச் சேர்ந்த தொழிலாளர்கள், வேலையில்லாதிருக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டு விட்டனர். பிளேக் கால போனஸ் இனி கொடுக்கப்படாது என்று மில் சொந்தக்காரர்கள் அறிவிப்பை வெளியிட்டு, அதன் காரணமாக அமைதியின்மை ஏற்பட்டபோது, இந்தத் தகராறை மத்தியஸ்தத் தீர்ப்புக்கு விட்டு முடிவு செய்துகொள்ளுவது என்று முதலாளிகள் முடிவு செய்தனர். இதற்குத் தொழிலாளரும் சம்மதிப்பார்கள் என்று கருதப்பட்டது. அதன் பேரில் வாழ்க்கைச் செலவு அதிகரித்துவிட்டதால் பிளேக் போனஸுக்குப் பதிலாகக் கூலியில் என்ன உயர்வைக் கொடுக்கலாம் என்பதை முடிவு செய்வதற்காக ஒரு மத்தியஸ்த போர்டை நியமிப்பது என்று 14-2-1918-இல் மில் முதலாளிகள் தீர்மானித்தனர். தொழிலாளர்களின் பிரதிநிதிகளாக மகாத்மா காந்தி, ஸ்ரீ சங்கரலால் பாங்கர், ஸ்ரீ வல்லபபாய் பட்டேல் ஆகியவர்களும், முதலாளிகளின் பிரதிநிதிகளாக சேத் அம்பாலால் சாராபாய், சேத் ஜெக

பாய் தளபதி பாய், சேத் சந்துலால் ஆகியவர்களும், தலைவராக கலெக்டரும் மத்தியஸ்த முடிவு செய்ய நியமிக்கப்பட்டனர். அதன் பிறகு சில மில்களில் தொழிலாளர், தவறான அபிப்பிரா யத்தினால் வேலை நிறுத்தம் செய்துவிட்டனர். அது தவறுதான். அதைத் திருத்திக்கொண்டுவிடவும் தொழிலாளர் தயாராக இருந்தனர். ஆயினும், மத்தியஸ்தர்கள் தங்கள் முடிவைத் தெரி விப்பதற்கு முன்னால் வேலை நிறுத்தம் செய்து தொழிலாளர் தவறு செய்துவிட்டார்கள் என்று முதலாளிகள் கூறி, அதன் காரணமாக மத்தியஸ்த போர்டின் நியமன சம்பந்தமான தீர்மா னத்தையே ரத்துச் செய்துவிட்டார்கள். கூலியில் 20 சத விகித உயர்வுக்குத் தொழிலாளர்கள் சம்மதிக்கவில்லையானால், அவர் களுக்கு உரிய சம்பளத்தைக் கொடுத்து, அவர்கள் வேலையி லிருந்து நீக்கப்படுவர் என்றும் அதே சமயத்தில் ஒரு தீர்மானத் தையும் செய்துவிட்டனர். நெசவு வேலையில் ஈடுபட்டிருந்த தொழி லாளர் திருப்தியடையவில்லை. தங்களை நீக்கிவிடலாம் என்று கூறிவிட்டனர். முதலாளிகளின் கதவடைப்பு ஆரம்பமாயிற்று.

ஆனால், இந்த நிலைமையில், தொழிலாளர் நியாயமாக என்ன கூலி உயர்வைக் கேட்கலாம் என்பதைத் தொழிலாளருக்குத் தாங்கள் சொல்லியாக வேண்டியது தங்கள் பொறுப்பு என்று, தொழிலாளருக்காக இருந்த மத்தியஸ்தர்கள் கருதினர். இவர்கள் தங்களுக்குள் தீர விவாதித்து, கூலியில் 35 சத உயர்வு தான் சரியானது என்று முடிவுக்கு வந்து, அதையே தொழிலாள ருக்கு ஆலோசனை கூறுவது என்றும் தீர்மானித்தார்கள். அவ் விதம் தொழிலாளருக்கு ஆலோசனை கூறுவதற்கு முன்னால் தங்கள் நோக்கத்தை மில் சொந்தக்காரர்களுக்கு அறிவித்து, அதற்கு எதிராக அவர்கள் ஏதாவது சொல்லுவதானால் அதை யும் ஆலோசிக்க தாங்கள் தயாராக இருப்பதாகவும் உறுதி கூறினர். இவ்விஷயம் பற்றி முதலாளிகள் தங்கள் கருத்தைத் தெரிவிக்கவில்லை. கூலியில் 50 சத விகிதம் உயர்வு வேண்டும் என்பதுதான் தொழிலாளர் கோரிக்கை. அவர்கள் அக் கோரிக்கையை வாபஸ் வாங்கிக்கொண்டு, தங்கள் மத்தியஸ்தர் களின் ஆலோசனையின் பேரில் 35 சத விகித உயர்வையே கேட்பது என்று முடிவு செய்தனர்.

தொழிலாளர் தீர்மானித்ததாவது:

(1) ஜூலை மாத கூலியில் 35 சத விகித உயர்வு கிடைக்கும் வரையில் வேலைக்குப் போவதில்லை

(2) கதவடைப்பு நடந்துவரும் காலத்தில் எந்தக் கல வரமும் செய்வதில்லை; தாக்குவதிலோ, அடிப் பதிலோ ஈடுபடுவதில்லை; திருடுவதில்லை; முத லாளிகளின் சொத்துக்களைச் சேதப்படுத்துவது இல்லை; வசை மொழிகளை உபயோகிப்பதில்லை. ஆனால், அமைதியாக இருந்துவருவது.

## (2)

தொழிலாளரின் பிரதிக்ஞை என்ன என்பதை நேற்று வெளியிட்ட பிரசுரத்தில் பார்த்தோம். அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றி வைப்பதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை நாம் இப்போது கவனிக்க வேண்டும். முதலாளிகளிடம் கோடிக் கணக்கில் பணம் இருக்கிறது. தொழிலாளரிடம் ஒன்றுமில்லை என்பதை நாம் அறிவோம். ஆனால், தொழிலாளரிடம் பணம் இல்லை என்றாலும் அவர்களுக்குக் கைகளும் கால்களும் இருக்கின்றன; அவைகளால் வேலை செய்ய முடியும். உலகத்தின் எந்தப் பகுதியும் தொழிலாளர் இல்லாமல் வாழ்ந்துவிட முடியாது. ஆகையால், இதைத் தொழிலாளர்கள் உணர்ந்துகொள்ளுவார்களானால், நிலைமையைச் சமாளித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய சக்தி தங்களிடமே இருக்கிறது என்பதை அறிவார்கள். தொழிலாளி இல்லாவிட்டால் பணத்தினால் எந்தப் பயனும் இல்லை. தொழிலாளி இதை உணர்ந்துகொள்ளுவாராயின், அவரிடம் சில தன்மைகளும் இருக்குமானால், தங்களுக்கு வெற்றி நிச்சயம் என்று அவர்கள் இருக்க முடியும். அத்தகைய தன்மைகள் இல்லாது போனால், தொழிலாளிகள் வீணேயாவார்கள். அந்தத் தன்மைகள் யாவை என்று பார்ப்போம்:

(1) தொழிலாளி, உண்மையுள்ளவராக இருக்க வேண்டும். அவர் பொய் சொல்லுவதற்குக் காரணமே இல்லை. அவர் பொய்யே சொன்னாலும், அவர் விரும்பும் கூலி அவருக்குக் கிடைக்காது. உண்மையோடு இருப்பவர் உறுதியுடனும் இருக்க முடியும். உறுதியுடனிருக்கும் தொழில்ாளி தோல்வி அடைவதே இல்லை.

(2) தொழிலாளிக்குத் தைரியம் இருக்க வேண்டும். நம் வேலை போய்விட்டால் நமக்கு என்ன நேர்ந்துவிடுமோ என்ற பயத்தினாலேயே நம்மில் அநேகர் நிரந்தரமான அடிமைகளாகி விடுகிறோம்.

(3) தொழிலாளி நியாயமாகவும் நடந்துகொள்ள வேண்டும். தனக்கு இருக்கும் தகுதியைவிடத் தனக்கு அதிகமாகச் சம்பளம் வேண்டும் என்று ஒரு தொழிலாளி கேட்டால், அவரை வேலைக்கு வைத்துக்கொள்ளுகிறவர்கள் யாருமே இருக்க மாட்டார்கள். இந்தப் போராட்டத்தில் நாம் கேட்கும் சம்பள உயர்வு நியாயமானது. ஆகையால், உடனேயோ, பிறகோ அது கிடைப்பது நிச்சயம் என்ற உறுதி நமக்கு இருக்க வேண்டும்.

(4) தன் முதலாளியிடம் கோபத்தைக் காட்டக்கூடாது, விரோதத்தையும் மனத்தில் வைத்துக்கொள்ளக்கூடாது; மனிதன் என்றால் ஏதோ தவறு செய்யத்தான் நேரும். நாம் கேட்கும் சம்பள உயர்வைக் கொடுக்க மறுப்பதில் முதலாளிகள் தவறு செய்கிறார்கள் என்பது நம் நம்பிக்கை. கடைசி வரையில்

நாம் நேர்மையாகவே நடந்துகொண்டு வருவோமானல், முத லாளிகள் நிச்சயம் தங்கள் தவறைத் திருத்திக்கொண்டு விடு வார்கள். இப்பொழுதோ, முதலாளிகளுக்கு அதிகக் கோபம் இருந்து வருகிறது. தொழிலாளர் இப்பொழுது கேட்பதற்குச் சம்மதித்துவிட்டால் அவர்கள் தங்களை எப்பொழுதும் தொந் தரவு செய்துகொண்டே இருப்பார்கள் என்றும் முதலாளிகள் சந்தேகிக்கிருர்கள். இந்தச் சந்தேகத்தை அவர்களுக்குப் போக்குவதற்கு, நமது நடத்தையில் முதலாளிகளுக்கு நம்பிக்கை ஏற்படும் வகையில் நம்மால் முடிந்தவரையில் முயற்சி செய்துவர வேண்டும். இதற்கு நாம் செய்ய வேண்டிய முதற் காரியம், முதலாளிகள் மீது எந்த விரோதத்தையும் மனத்தில் வைத்துக் கொள்ளாததேயாகும்.

(5) இத்தகைய பெரிய போராட்டத்தில், கஷ்டப்பட வேண்டியது நிச்சயம் இருக்கவே செய்யும் என்பதை ஒவ்வொரு தொழிலாளியும் நினைவில் வைக்க வேண்டும். ஆனல், விரும்பி அனுபவிக்கும் துயரை அடுத்துச் சந்தோஷம் ஏற்படும். சாப்பிடு வதற்குப் போதுமானது நமக்குக் கிடைக்கவில்லை என்பதே ஒரு துயரம்தான். ஆனல், நமது அறியாமையினல் அந்தத் துயரத்தை அனுபவித்துக்கொண்டு வந்திருக்கிரேம். இந்தக் கஷ்ட நிலைமை யைப் போக்கிக்கொள்ளுவதற்காக, 'நாங்கள் கேட்கும் சம்பள உயர்வைக் கொடுத்தாலன்றி எங்களால் வாழ்க்கை நடத்த முடியாது' என்று இப்பொழுது முதலாளிகளுக்குத் தெரிவித்துக் கொண்டிருக்கிரேம். இந்த நிலைமையில், நமது நிரந்தரமான பட்டினியைப் போக்கிக்கொள்ளுவதற்காகக் கேட்கும் சம்பள உயர்வு கிடைக்காது போனல், பட்டினியின் உபாதையையும் விரும்பிச் சகித்துக்கொள்ளுவது என்று நாம் முடிவு செய்து கொண்டிருக்கிரேம். நம்மிடம் கருணை காட்டாமல் முதலாளிகள் எத்தனை நாட்களுக்கு இப்படி இருந்துவர முடியும்?

(6) கடைசியாக, கடவுள் ஏழைப் பங்காளன் என்பதைத் தொழிலாளி நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். போராடி யாக வேண்டியது நம் வேலை. கடவுள் சித்தம்போல் அதற்கு வெகுமதி நமக்குக் கிடைத்தே தீரும். இதை நாம் உணர்ந்து கடவுளை நம்ப வேண்டும். நமது கோரிக்கை நிறைவேற்றப்படா மலிருக்கும் வரை நாம் அமைதியாகவும் இருக்க வேண்டும்.

மேலே சொன்ன வகையில் நடந்துகொள்ளும் தொழி லாளிக்கு, தன் பிரதிக்ஞைப்படி இருந்துவருவது என்றும் கஷ்ட மாகவே இராது.

## (3)

கதவடைப்பு இருந்துகொண் டிருக்கும் காலத்தில் தொழிலா ளர்கள் தங்கள் நேரத்தை எப்படிக் கழிப்பது என்பதைக் குறித்து இன்று விவாதிப்போம். 'வேலையில்லாமல் சும்மா இருப் பது விஷமத்தைத் தூண்டும்' என்று நம்மிடையே ஒரு பழ

மொழி இருக்கிறது. ஆகையால், அகமதாபாத்தில் பத்தாயிரம் பேர் வேலையில்லாமல் சும்மா இருப்பது என்பது நல்லதே அல்ல. தொழிலாளர் என்ன செய்யக்கூடாது என்பதை முதலில் கூறுவோம்:

(1) அவர்கள் சூதாட்டங்களில் தங்கள் பொழுதை வீணுக்கக் கூடாது.

(2) பகலில் தூங்கிப் பொழுதைப் போக்கவும் கூடாது.

(3) முதலாளிகளைக் குறித்தும், ஆலைகள் கதவடைப்பைப் பற்றியும் நாளெல்லாம் பேசியும் பொழுதைக் கழிக்கக் கூடாது.

(4) அவர்கள் டீக் கடைகளுக்கு அடிக்கடி போகக்கூடாது. அநேகர் ஹோட்டல்களுக்குப் போய் வீணான காரியங்களை யெல்லாம் அங்கே விவாதித்துக்கொண்டிருந்துவிட்டு அனாவசிய மாகச் சாப்பிடுகிறார்கள்.

(5) ஆலைகளில் கதவடைப்பு இருந்து வரும் சமயத்தில் அவர்கள் மில்கள் பக்கம் போகக்கூடாது.

இப்பொழுது தொழிலாளர் என்ன செய்ய வேண்டும் என் பதைப் பார்ப்போம்:

1. அநேக தொழிலாளரின் வீடுகளும், சுற்றுப்புறங்களும் பொதுவாக ஆபாசமாக இருக்கின்றன. அவர்கள் வேலைக்குப் போய்க்கொண்டிருக்கும் சமயத்தில் இதைப் பற்றிக் கவனித்துக் கொண்டிருக்க தொழிலாளருக்கு அவகாசம் இல்லை. இப் பொழுது வேலையில்லாமலிருக்கும்படி அவர்கள் கட்டாயப்படுத் தப்பட்டிருப்பதால், தங்கள் வீடுகளையும் சுற்றுப் புறங்களையும் சுத்தம் செய்து பழுது பார்ப்பதில் கொஞ்ச நேரத்தைச் செல விட வேண்டும்.

2. படிக்கத் தெரிந்தவர்கள் புத்தகங்களைப் படித்துத் தங்கள் அறிவை விருத்தி செய்துகொள்ள வேண்டும். படிக்கத் தெரியாதவர்களுக்கும் அவர்கள் போதிக்கலாம். அவ்வாறு அவர்கள் செய்வார்களாயின், ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள அவர்கள் கற்றுக்கொள்ளுவார்கள். படிப்பதில் ஆர்வ முள்ளவர்கள், தாதாபாய் புத்தகசாலைக்கும், வாசகசாலைக்கும் மற்ற இலவச வாசகசாலைக்கும் போய்ப் படிக்க வேண்டும்.

3. தையல் வேலை, தச்சு வேலை, நகாஸ் வேலை ஆகியவை தெரிந்திருப்பவர்கள் தாங்களே வேலை தேடிக்கொண்டுவிடலாம். அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லையானால், வேலை தேடுவதில் எங்கள் உதவியையும் பெறலாம்.

4. தான் ஜீவனம் தேடிக்கொண்டு வரும் தொழிலைத் தவிர ஒவ்வொருவரும் குறைந்தது இன்னுமொரு தொழிலையாவது கற்றிருக்க வேண்டும். ஆகையால், தொழிலாளர் சில புதிய,

எளிதான தொழில்களைக் கற்றுக்கொள்ளுவதில் நேரத்தைச் செலவிடலாம். இவற்றைக் கற்றுக்கொள்ளுவதற்கு எங்கள் உதவியைத் தொழிலாளர்கள் நாடலாம்.

இந்தியாவில் ஒரு தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள், இன்னொரு தொழிலைச் செய்வது கேவலம் என்று எண்ணுகிறார்கள். அதோடு, சில தொழில்களைத் தாழ்வானவை என்றும், கேவலமானவை என்றும் நினைக்கிறார்கள். இந்த இரு அபிப்பிராயங்களும் தவறானவை. மனிதனின் வாழ்வுக்கு அத்தியாவசியமான தொழில்களில் தாழ்வானது, உயர்வானது என்பதே கிடையாது. ஒருவருக்குப் பழக்கமான ஒரு தொழிலைவிட இன்னுமொரு தொழிலைச் செய்வதில் வெட்கப்படுவதற்கு எதுவும் இல்லை. துணி நெய்வது, கல் உடைப்பது, மரம் அறுப்பது அல்லது மரம் உடைப்பது, வயல்களில் வேலை செய்வது ஆகியவை எல்லாம் அவசியமானவை, கௌரவமான வேலைகள் என்று நாங்கள் கருதுகிறோம். ஆகையால், சும்மா இருந்து நேரத்தை வீணாக்குவதற்குப் பதிலாகத் தொழிலாளர்கள் தங்கள் நேரத்தை இத்தகைய நல்ல வேலைகளில் உபயோகித்துக்கொள்ளுவார்கள் என்று நம்புகிறோம்.

(4)

தொழிலாளர்கள் தங்கள் பிரதிக்ஞையை எந்த வகையில் நிறைவேற்றலாம், கதவடைப்பு இருந்துவரும்போது அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை முன்னால் கூறியிருக்கிறோம். அவர்களுக்கு எந்தெந்த வகையில் உதவி செய்வது என்று இருக்கிறோம் என்பதை இந்தத் துண்டுப் பிரசுரத்தில் கூறுகிறோம்.

நாங்கள் செய்ய முடியாதது என்ன என்பதை முதலில் கூறுகிறோம் :

*1.* தொழிலாளர்கள் தவறான எதையும் செய்வதற்கு நாங்கள் உதவி செய்ய மாட்டோம்.

*2.* தொழிலாளர்கள் தவறான காரியங்களைச் செய்தால், மிகைப்பட்ட கோரிக்கைகளைக் கூறினால், பலாத்காரக் காரியங்களைச் செய்தால் தொழிலாளரை நாங்கள் கைவிடுவதோடு அவர்களுக்கு உதவுவதையும் நிறுத்திவிட வேண்டிவரும்.

*3.* முதலாளிகளுக்குத் தீமை உண்டாக வேண்டும் என்று நாங்கள் விரும்பவே முடியாது. நாங்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கைகளிலும் அவர்களுடைய நன்மையையும் கவனிப்போம். நாங்கள் தொழிலாளரின் நலனை நாடுகிறோம். அதே சமயத்தில் முதலாளிகளின் நன்மையையும் பாதுகாக்கிறோம்.

தொழிலாளருக்கு நாங்கள் என்ன செய்ய முடியும் என்பதை இப்பொழுது பார்ப்போம் :

1. தொழிலாளர்கள் இதுவரையில் நடந்து வந்திருப்பதைப் போன்று நல்ல ஒழுக்கத்தோடு நடந்துகொண்டு வரும்வரை அவர்களுக்காக நாங்கள் வேலை செய்துவருவோம்.

2. அவர்கள் கூலியில் 35 சத விகித உயர்வைப் பெறுவதற்காக எங்களால் முடிந்ததையெல்லாம் செய்வோம்.

3. நாங்கள் இன்னும் முதலாளிகளைக் கேட்டுக்கொண்டு வருகிறோம். பொதுஜன அனுதாபத்தைப் பெறுவதற்கோ, பொதுஜன அபிப்பிராயத்தை வளர்க்கவோ நாங்கள் இன்னும் முயற்சி செய்யவில்லை. ஆனால், ஏற்ற சமயம் வரும்போது தொழிலாளர் நிலைமையைக் குறித்து இந்தியா முழுவதும் அறியும்படி செய்யத் தயாராக இருக்கிறோம். நமது லட்சியத்திற்குப் பொதுஜன அனுதாபத்தைப் பெறலாம் என்றும் நம்புகிறோம்.

4. தொழிலாளர், அவர்களின் உரிமையை அடையும் வரையில் நாங்கள் ஓய்ந்திருக்க மாட்டோம்.

5. தொழிலாளர் நிலைமையுடன் அதன் பொருளாதார, ஒழுக்க, கல்வி அம்சங்களில் தொடர்பு கொள்ளுவதற்கு நாங்கள் முயன்று வருகிறோம். தொழிலாளர்கள் தங்களுடைய பொருளாதார நிலைமையை எவ்விதம் விருத்தி செய்துகொள்ளலாம் என்பதை அவர்களுக்குக் காட்டுவோம். அவர்களுடைய ஒழுக்கத்தின் தரத்தை உயர்த்துவதற்கும் பாடுபடுவோம். ஆபாசத்தில் அவர்கள் வசித்துக் கொண்டிருப்பார்களானால், அதிகச் சுத்தமாக வாழ்வது எப்படி என்பதைக் கண்டுபிடித்து அவர்களுக்குக் காட்டுவோம். அவர்கள் எதுவுமே அறியாதவர்களாக இருந்தால் அவர்கள் அறிவைப் பெறும்படி செய்யவும் முயற்சி செய்வோம்.

6. இப்போராட்டத்தில் பட்டினி கிடக்கும் நிலைமைக்கு வந்து, எந்த வேலையும் கிடைக்காமல் இருப்போருக்கு நாங்கள் உதவி செய்வோம். அவர்களுக்கு உணவும் துணியும் அளித்த பிறகே நாங்கள் உண்டு உடுத்துவோம்.

7. நோயுற்றிருப்போருக்குப் பணிவிடை செய்வோம். வைத்தியர்கள், டாக்டர்கள் உதவியையும் தேடித் தருவோம்.

எங்கள் பொறுப்பை முற்றிலும் உணர்ந்தே நாங்கள் இந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறோம். தொழிலாளரின் கோரிக்கை முற்றிலும் நியாயமானது என்று கருதுகிறோம். தொழிலாளரின் கோரிக்கையை ஒப்புக்கொண்டு விடுவதால் முதலாளிகளின் நன்மைக்குப் பாதகம் ஏற்படாது என்பதோடு அதனால் அவர்களுக்கு நன்மையே உண்டு என்றும் நம்புகிறோம். இதனாலேயே இப்போராட்டத்தில் நாங்கள் கலந்து கொண்டிருக்கிறோம்.

## (5)

முதலாளிகளின் நிலைமையை இப்பொழுது கவனிப்போம்.

தொழிலாளரின் முயற்சி, இரண்டில் ஒரு பலனைத்தான் அளிக்கும் :

1. தொழிலாளருக்குக் கூலியில் 35 சத விகித உயர்வு கிடைக்கலாம். அல்லது,

2. எந்தவிதமான கூலி உயர்வும் இல்லாமலேயே அவர்கள் வேலைக்குத் திரும்பிவிட நேரலாம்.

தொழிலாளருக்குச் சம்பள உயர்வு கிடைத்தால், அது அவர்களுக்கு நன்மையாகும். முதலாளிக்கும் பெருமையாகும் உயர்வு எதையும் பெறுமலேயே தொழிலாளர் வேலைக்குப் போய்விட நேர்ந்தால், அவர்கள் மனம் உடைந்தவர்களாய், முதலாளிகளிடம் வெறுப்புடன் அடிமைகள் போலவே பணிந்து விடுவார்கள். ஆகையால், தொழிலாளருக்குக் கூலி உயர்வு கிடைப்பது இரு தரப்பாருக்கும் நல்லது. தொழிலாளரின் தோல்வியில் முதலாளிகளுக்கு நஷ்டம் அதிகம் உண்டு.

முதலாளிகளின் முயற்சிகள் கீழே கூறப்படும் இரு பலன்களில் ஒன்றை அளிக்கலாம் :

1. தொழிலாளருக்குக் கூலியில் உயர்வை முதலாளிகள் அளிக்கலாம்.

2. அவர்கள் தொழிலாளருக்குக் கூலியில் எந்த அதிகரிப்பும் செய்யாமல் இருக்கலாம்.

முதலாளிகள், தொழிலாளருக்குக் கூலியை உயர்த்திக் கொடுப்பார்களானல், தொழிலாளர்கள் திருப்தியடைவார்கள், நியாயத்தை அடைந்தவர்களாவார்கள். தொழிலாளர் கேட்பதைக் கொடுத்துவிட்டால் அவர்கள் தங்களை அவமதிப்பவர்களாகி விடுவார்கள் என்று முதலாளிகள் பயப்படுகிருர்கள். இந்தப் பயம் கொஞ்சமும் ஆதாரமில்லாதது. இன்று தொழிலாளர் அடக்கப்பட்டுவிட்டாலும், சந்தர்ப்பம் ஏற்படும்போது அவமதிப்பவர்களாகிவிடுவார்கள் என்பது அசாத்தியமானது அல்ல. ஒடுக்கப்பட்டுவிட்ட தொழிலாளர், தீவிரமான விரோத மனப்பான்மையுள்ளவர்களாகி விடுவதும் சாத்தியம். எங்கெங்கே தொழிலாளர்கள் ஒடுக்கப்பட்டிருந்தார்களோ அங்கெல்லாம் சந்தர்ப்பம் வந்தபோது தொழிலாளர் புரட்சியில் கிளம்பியிருக்கிருர்கள் என்பதை உலக சரித்திரம் காட்டுகிறது. தொழிலாளரின் கோரிக்கைக்கு உடன்பட்டுவிட்டால், அவர்களுக்கு ஆலோசனை கூறி வருகிறவர்களின் செல்வாக்கு தொழிலாளரிடையே அதிகரித்துவிடும் என்று முதலாளிகள் நினைக்கிருர்கள். தொழிலாளருக்கு ஆலோசனை கூறி வருகிறவர்களின்

வாதங்கள் உண்மையானவைகளாக இருந்தால், அவர்கள் கஷ்டப்பட்டு உழைப்பவர்களாகவும் இருப்பின், தோல்வியிலும் வெற்றியிலும் தொழிலாளர் அவர்களை என்றுமே விட்டுப் போய் விடமாட்டார்கள். ஆலோசனை கூறுகிறவர்களும் தொழிலாளரைக் கைவிட்டு விடமாட்டார்கள் என்பதையும் கவனிக்க வேண்டும். தொழிலாளருக்குச் சேவை செய்வதைத் தங்கள் கடமையாகக் கொண்டிருக்கிறவர்கள், முதலாளிகளின் விரோதத்திற்குத் தாங்கள் ஆளாக நேரினும் தங்கள் கடமையைக் கைவிட்டு விடமாட்டார்கள். அவர்கள் எவ்வளவு ஏமாற்றமடைந்தவர்களாகிருர்களோ அவ்வளவுக்குச் சேவையில் அதிக பக்தியுள்ளவர்களாவார்கள். முதலாளிகள் தங்களால் முடிந்த வரையில் முயற்சித்தே பார்ப்பார்கள். என்ருலும், தொழிலாளரை அவர்களுடைய ஆலோசனையாளரிடமிருந்து பிரித்து விடுவது என்பதில் அவர்கள் வெற்றியடையப் போவதே இல்லை. தொழிலாளரைத் தோற்கடித்து விடுவதால் முதலாளிகளுக்கு என்னதான் கிடைத்துவிடப் போகிறது? தொழிலாளரின் அதிருப்தியைத் தவிர அவர்களுக்கு வேறு எதுவும் கிடைத்து விடப் போவதில்லை என்பதே இதற்குப் பதில். ஒடுக்கப்பட்டு விட்ட தொழிலாளரிடம் முதலாளிக்கு எப்பொழுதும் சந்தேகம் இருந்துகொண்டிருக்கும்.

தொழிலாளர் கேட்கும் சம்பள உயர்வைக் கொடுத்துவிட்டால், அவர்களுக்கு முதலாளிகள் திருப்தியளித்துவிடலாம். தொழிலாளர் தங்கள் கடமையில் தவறி விடுவார்களானல், அவர்களுடைய ஆலோசகர்களின் உதவியை முதலாளிகள் எப்பொழுதும் நம்பியிருக்கலாம். இரு தரப்புக்கும் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நஷ்டத்தையும் நிறுத்தி விடலாம். தங்கள் கோரிக்கை நிறைவேற்றப் பட்டுவிடுமானல் தொழிலாளர் எப்பொழுதும் நன்றியறிதலுள்ளவர்களாக இருப்பார்கள். முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே நல்லெண்ணமும் இருந்து வரும். இவ்விதம் முதலாளிகளின் வெற்றி, தொழிலாளரின் வெற்றியில்தான் இருக்கிறது; அவர்கள் தோல்வியடைந்தால் அது முதலாளிகளுக்கும் தோல்வியே. இந்தப் பரிசுத்தமான நீதிக்குப் பதிலாக முதலாளிகள் மேற்கத்திய, இக்காலப் பேய்த்தனமான நீதி என்று சொல்லப்படுவதைக் கையாண்டு வருகிருர்கள்.

## (6)

சகோதர வாஞ்சையையும் காருண்யத்தையும் கொண்டதுதான் புனிதமான நீதி. இதை, இந்தியாவிலிருக்கும் நாம் கிழக்கத்திய அல்லது புராதனமான நீதி என்கிருேம். சகோதர உணர்ச்சிக்கும் காருண்யத்திற்கும் எதில் இடமில்லையோ அது பேய்த்தனமான அல்லது மேற்கத்திய, இக்கால நீதியாகும். அன்பினலோ, கொள்ளும் மதிப்பினலோ, தந்தை தனது மகனுக்காக அநேகவற்றை விட்டுக் கொடுக்கிருன்; மகனும் அதே போலத்

தந்தைக்காக விட்டுக் கொடுக்கிறன். இவ்விதம் செய்வதால் இருவருமே நன்மை அடைகின்றனர். ஒருவர், இன்னெருவருக் காக விட்டுக் கொடுக்கும்போது, அவ்விதம் விட்டுக் கொடுக்கிற வருக்கு ஒரு பெருமை உணர்ச்சி ஏற்படுகிறது. இது, தன் பலத்தின் அறிகுறியே அன்றி பலவீனத்தின் அறிகுறி அல்ல என்றும் எண்ணுகிருர். தந்தைக்குப் பிறகு மகன் என்று பரம் பரையாக வேலைக்காரர்கள் ஒரே வீட்டில் வேலை செய்து வருவது என்பது, இந்தியாவில் இருந்த காலம் ஒன்று உண்டு. அவர்கள் வேலைசெய்து வந்த வீடுகளில் அவர்கள் மதிக்கப்பட்டு வந்த தோடு, அவர்களும் அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே நடத் தப்பட்டு வந்தனர். முதலாளியின் துயரங்களில் இவர்களும் பங்கு கொண்டார்கள். இவர்களுடைய சுக துக்கங்களில் முதலாளி களும் பங்கு கொண்டார்கள். இத்தகைய நிலைமை இருந்து வந்த காலத்தில் இந்தியாவில் சமூக ஒழுங்கு எளிதானதாக இருந்தது; ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அதே அடிப்படையில் தொடர்ந்தும் இருந்து வந்தது. ஆனல், இன்னும்கூட அந்த உணர்ச்சி நம் நாட்டில் அடியோடு போய்விடவில்லை. அத்தகைய ஏற்பாடு இருக்குமிடத்தில், மூன்ருமவருக்கோ, மத்தியஸ்த ருக்கோ இடமே இல்லை. எஜமானனுக்கும் வேலைக்காரருக்கும் ஏற்படும் தகராறுகள் அவர்களுக்குள்ளேயே அன்னியோன்னிய மாகத் தீர்த்துக்கொள்ளப்படுகின்றன. கூலியைக் குறைப்பது, உயர்த்துவது அதற்காகக் கோரிக்கையை வெளியிடுவ்து என்ப தெல்லாம், ஒருவர், மற்ருெருவரின் தேவையைப் பொறுத்ததாக வும் இருப்பது இல்லை. வேலையாட்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கும்போது, வேலைக்காரர்கள் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்று கேட்பதில்லை. வேலையாட்கள் அதிகமாகக் கிடைக்கும்போது எஜமானர்கள், வேலையாட்களின் சம்பளத் தைக் குறைப்பதும் இல்லை. பரஸ்பரம் ஒருவருக்கொருவர் கொள்ளும் மதிப்பு, கட்டுப்பாடு, மரியாதை, பாசம் ஆகியவை களினுலேயே முக்கியமாக இவ்விதம் நடந்து வந்தது. எஜமான ருக்கும் வேலையாட்களுக்குமிடையே நாட்டில் பொதுவாக இருந்துவந்த உறவு நிலை இதுவேயாகையால், இப்பொழுது சொல்லப்படுவதைப் போன்று அப்பொழுது இது அனுபவ சாத் தியமானது அல்ல என்று கருதப்பட்டதும் இல்லை. இந்தப் புனித மான நீதியையே நம் மக்கள் தங்கள் வாழ்க்கையின் நியதியாகக் கொண்டிருந்ததால், அவர்களால் அபூர்வமான காரியங்களை யெல்லாம் சாதிக்க முடிந்தது என்று சரித்திரம் குறிப்பிடுகிறது. இதுதான் புராதன காலக் கிழக்கத்திய நீதி.

இன்று மேற்கத்திய நாடுகளில் இதற்கு முற்றிலும் மாருன தான வாழ்க்கை முறை இருந்து வருகிறது. இக்கால நீதியை மேற்கத்திய நாடுகளில் இருக்கும் எல்லோருமே அங்கீகரிக்கி ருர்கள் என்று கருதிவிடக்கூடாது. புராதனமான முறைகளை அனுசரித்துத் தங்கள் வாழ்க்கையை நடத்திக்கொண்டு வரும் அநேகர் மேற்கத்திய நாடுகளிலும் இருக்கிருர்கள். ஆனல்,

மேற்கத்திய நாடுகளில் இன்று இருந்து வரும் பொது நடவடிக்கைகள் அநேகவற்றில் அன்பிற்கோ, கருணைக்கோ இடமே இல்லை. எஜமானர், தம் வேலைக்காரனுக்கு என்ன கொடுக்கிறாரோ அது, அவருக்குச் சௌகரியமானதாக இருப்பதால் அதுவே நியாயம் என்று கருதப்படுகிறது. வேலைக்காரனின் தேவை என்ன என்பதை யோசிக்கவேண்டியது அவசியமாகவே கருதப்படுவதில்லை. அப்படியேதான் தொழிலாளியும். முதலாளியின் பொருளாதார நிலைமை எப்படி இருந்தாலும் அதைக் கவனிக்காமல் தனக்கு இன்னது வேண்டும் என்று தொழிலாளி கேட்கலாம். இதுவும் நியாயம் என்று கருதப்படுகிறது. ஒவ்வொருவரும் அவரவர்களைப் பற்றித்தான் நினைக்கிறார்களேயன்றி மற்றவரைப் பற்றி எண்ணிப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கவில்லை. ஐரோப்பாவில் இப்பொழுது நடந்து வரும் யுத்தம் அதே கொள்கையின் பேரிலேயே நடந்து வருகிறது. எதிரியை ஒடுக்கியாக வேண்டும் என்னும்போது, எதையும் முறையற்றதாகக் கருதுவதில்லை. இத்தகைய போர்கள் பழங்காலத்திலும் நடத்தப்பட்டிருக்கலாம். ஆனால், அவற்றில் மக்களில் பெரும் பகுதியானவர்கள் ஈடுபடுவது இல்லை. இந்தக் கேவலமான 'நீதி'யை இந்தியாவில் புகுத்திவிடாமலிருப்பது விரும்பத்தக்கதாகும். தொழிலாளர்கள், முதலாளிகளின் நிலைமையைப் பற்றிக் கொஞ்சம்கூடக் கவலைப்படாமல், தங்களுக்குப் பலம் இருக்கிறது என்பதைத் தாங்கள் உணருகிறார்கள் என்பதனால் மாத்திரம் தங்களுக்கு இன்னது கொடுக்க வேண்டும் என்று கேட்பார்களாயின், பேய்த்தனமான நீதிக்கு அவர்கள் பலியாகிவிட்டார்கள் என்றே அர்த்தமாகும். தொழிலாளரின் கோரிக்கையை முதலாளிகள் கவனிப்பதில்லை என்றால், மனதார அறியாமலோ, அறியாமையாலோ செய்வதாயினும், இக்கால நீதியின் கொள்கையை அவர்கள் ஏற்றுக்கொண்டுவிட்டார்கள் என்றுதான் அர்த்தமாகும். தொழிலாளருக்கு எதிராகத் தங்கள் சக்திகளையெல்லாம் முதலாளிகள் திரட்டுவது என்பது, எறும்புகளுக்கு எதிராக யானைப் படையைத் திரட்டுவது போன்றதாகும். நியாயத்தைக்கொண்டு பார்த்தால், தொழிலாளரை எதிர்ப்பதற்கு முதலாளிகள் வெட்கப்பட வேண்டும். புராதன இந்தியாவில், தொழிலாளரின் பட்டினியைத் தங்களுக்கு வாய்ப்பாக முதலாளிகள் மனதார உபயோகித்துக்கொண்டதே இல்லை. ஒரு தகராறில் எந்தத் தரப்பாரையும் பாதிக்காததாக இருக்கும் நடவடிக்கை முறை மாத்திரமே நீதியாகும். தொழிலாளரை ஒடுக்குவதையோ, அவர்களுக்கு உரியதைவிட வேண்டுமென்றே குறைவாகக் கொடுப்பதையோ, குஜராத்தின் இக்கீர்த்தி வாய்ந்த தலைநகரிலிருக்கும் ஜெயின, வைஷ்ணவ முதலாளிகள் தங்கள் வெற்றியாகக் கருதிவிடமாட்டார்கள் என்றே நாங்கள் நிச்சயமாக நம்பிக்கொண்டிருந்தோம். இந்த மேற்கத்திய போக்கு சீக்கிரத்தில் மறைந்துவிடும் என்றே நம்புகிறோம். எப்படியும் தொழிலாளர்கள், புராதன நீதியையும், நாம் அறிந்த அதன்

தருமங்களையும் அனுசரித்து வர வேண்டும் என்றே விரும்பு கிறோம். அவர்கள் தங்களுடைய உரிமைகளை அடைவதற்கு அந்த வகையில்தான் நாங்கள் உதவி செய்ய விரும்புகிறோம்.

(7)

தென்னப்பிரிக்கா, பெரிய பிரிட்டிஷ் குடியேற்ற நாடு. நானூறு ஆண்டுகளுக்கு மேலாக ஐரோப்பியர்கள் அங்கே இருந்து வருகிறார்கள். தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளுவதற்கு அவர்களுக்குச் சுதந்திரம் இருக்கிறது. அந்த நாட்டின் ரெயில்வேக் களில் வேலை செய்யும் ஐரோப்பியத் தொழிலாளர்கள் அநேகர் இருக்கிறார்கள். தங்களுக்குக் கொடுக்கப்படும் கூலியைக் குறித்து அவர்களுக்கு அதிருப்தி உண்டாயிற்று. ஆனால், கூலி உயர்வைப் பெறுவதற்கு முயற்சி செய்வதற்குப் பதிலாக அர சாங்கத்தையே கைப்பற்றிக்கொண்டுவிட அவர்கள் எண்ணி யிருக்கிறார்கள். அது அநியாயம்; அது பேய்த்தனமான நீதி. இதனால் அரசாங்கத்திற்கும் தொழிலாளருக்குமிடையே மனக் கசப்பு மிகுந்தது. தென்னப்பிரிக்க நாடு முழுவதும் பயந்து போய்விட்டது. யாருக்கும் அபாயம் நேரலாம் என்று அஞ்சி விட்டனர். முடிவில் இந்த இருதரப்பினருக்குமிடையே பகிரங்க மாகச் சண்டையே நடந்தது. ஒரு பாவமுமறியாதவர்கள் கொல் லப்பட்டனர். ஒவ்வோர் இடத்தையும் ராணுவம் வளைத்துக் கொண்டது. இரு தரப்பிற்கும் ஏராளமான சேதம். ஒரு தரப் பினர், மற்றொரு தரப்பினரைத் தோற்கடித்துவிட விரும்பினர். இதில் யாரும் நீதியைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. ஒருவ ரைப் பற்றி மற்றொருவர் மிகைப்படுத்திக் கதைகளையெல்லாம் சொல்லி வந்தனர். இன்னொருவரின் உணர்ச்சியைக் குறித்து இதில் யாரும் மதிப்பு வைக்கவே இல்லை.

இது நடந்துகொண்டிருந்த சமயத்தில் நம் தொழிலாளர்கள் நியாயமாக நடந்துகொண்டார்கள். மேலே சொன்ன ரெயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம் நடந்தபோது, இந்தியத் தொழி லாளர்கள் 20,000 பேர் வேலை நிறுத்தம் செய்திருந்தார்கள். அந் நாட்டு அரசாங்கத்துடன் நாங்கள் நீதிக்காகப் போராடிக் கொண்டிருந்தோம். நம் தொழிலாளரின் ஆயுதம், சத்தியாக்கிர கம். அரசாங்கத்தினிடம் அவர்களுக்கு விரோதமும் இல்லை; அதற்குத் தீமை ஏற்பட வேண்டும் என்று எண்ணவும் இல்லை. அந்த அரசாங்கத்தை விரட்டிவிடவேண்டும் என்ற விருப்பமும் இல்லை. இந்தியரின் வேலை நிறுத்தத்தைத் தங்களுக்குச் சாதக மாக உபயோகித்துக்கொள்ள வேண்டும் என்று, ஐரோப்பியத் தொழிலாளர்கள் விரும்பினார்கள். அப்படி அவர்கள் உபயோ கித்துக்கொண்டுவிட அனுமதிக்க நம் தொழிலாளர்கள் மறுத்து விட்டனர். இவர்கள் கூறியதாவது : "எங்களுடையது சத்தியப் போராட்டம். அரசாங்கத்திற்குச் சங்கடத்தை உண்டாக்க நாங்கள் விரும்பவில்லை. ஆகையால், உங்கள் சண்டையின்

காலத்தில் எங்கள் போராட்டத்தை நிறுத்திவைக்கிறோம்.'' இந்த அறிக்கையோடு நம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை நிறுத்திவிட்டனர். இதுதான் உண்மையான நீதி என்கிறோம். முடிவில் நம் தொழிலாளர்கள் வெற்றி பெற்றனர். அவர்கள் கோரிக்கையை நியாயமாக ஒப்புக்கொண்டுவிட்டதால் அரசாங்கத்திற்கும் கௌரவமாயிற்று. இன்னொரு தரப்பினரின் உணர்ச்சியை நம் தொழிலாளர்கள் மதித்தனர். எதிராளியின் சங்கட நிலைமையினால் நன்மையடைந்துவிட அவர்கள் முற்படவில்லை. இப்போராட்டத்தின் முடிவில், அரசாங்கத்திற்கும் எங்களுக்குமிடையே அன்பின் பந்தம் அதிகமாயிற்று. எங்கள் மதிப்பும் உயர்ந்தது. இவ்வாறு உண்மையான நீதியை அடிப்படையாகக் கொண்டு நடத்தும் போராட்டம் இரு தரப்புக்கும் நல்லது.

நமது போராட்டத்தையும் அதே அடிப்படையில் நீதி உணர்ச்சியுடன் நடத்திவருவோமானால், முதலாளிகள் விஷயத்தில் எந்தவிதக் கெட்ட எண்ணமும் கொள்ளாமல் இருந்தால், எப்பொழுதும் நியாயத்தையே நம்பியிருப்போமாயின், நாம் வெற்றிபெறுவதோடு மாத்திரமல்ல, தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் நல்ல உறவும் அதிகரிக்கும்.

மேலே சொன்னதில் கவனிக்க வேண்டிய இன்னுமொரு விஷயமும் இருக்கிறது. சத்தியத்திற்காக நடத்தும் போராட்டத்தில், இரு தரப்பினருமே சத்தியத்தைப் பின்பற்றுபவர்களாக இருக்க வேண்டும் என்பதில்லை. ஒரு தரப்பினர் சத்தியத்தைக் கடைப்பிடித்தாலும், சத்தியத்திற்கான போராட்டம் நிச்சயம் வெற்றி பெற்றே தீரும். ஆரம்பத்தில் விஷத்தை உபயோகிக்கும் ஒரு தரப்பினர், மற்றொரு தரப்பினரும் அதே போல விஷத்தை உபயோகிக்காததனால், தம் விஷம் வரண்டுவிடுவதைக் காண்பர். ஒருவன் தன் கையை வெட்டவெளியில் ஓங்கிக் குத்தினால், அதனால் அவன் கைதான் சுளுக்கிக்கொண்டுவிடும். அதே போல விஷமும் அதனளவில் பயனற்றது; அது, தீங்கைத் தன்னிடமே கொண்டது. ஆனால், விஷத்தைக் கொண்டு அதை எதிர்த்தால் அது கொல்லும் விஷமாகிவிடுகிறது. ஆகையால், நாம் பலாத்காரமின்றிப் போராடி வந்தால், தைரியத்தை இழந்துவிடாமலிருப்போமாயின், முடிவில் வெற்றி பெற்றே தீருவோம் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

## (8)

உலகத்தில் கீர்த்தி வாய்ந்தவர்களான சத்தியாக்கிரகிகளைக் குறித்து இந்தப் பிரசுரத்தில் நாம் விவாதிக்கப் போவதில்லை. நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களால் எந்த அளவுக்கு அகிம்சையோடு துன்பங்களை அனுபவித்துக்கொள்ள முடிந்தது என்பதை அறிவது நமக்கு அதிகப் பயனுள்ளதாவதோடு நமக்குப் பலத்தையும் அளிக்கும். இமாம் ஹாஸனும், ஹுஸேனும் தீரமுள்ள, உறுதியான சத்தியாக்கிரகிகள். அவர்கள் பெயர்

களைப் பக்தியுடன் போற்றுகிறோம். ஆனால், அவர்களை நினைவு படுத்திக்கொள்ளுவதனால் மாத்திரம் நாம் சத்தியாக்கிரகிகளாகி விடுவது இல்லை. அவர்களுடைய சக்தியை நம் சக்தியோடு ஒப்பிட்டுப் பார்ப்பது என்பதற்கே இடமில்லை என்றும் எண்ணுகிறோம். அதே போல நினைவுப்படுத்திக்கொள்ளக்கூடிய மற்றொரு பெயர், பிரகலாதனின் பெயர். ஆனால், அப்படிப்பட்ட பக்தியையும், உறுதியையும், சத்தியத்தினிடம் அன்பையும், தைரியத்தையும் காட்டிக்கொள்ளுவதற்குத் தகுதி வாய்ந்தவர்கள் அல்ல நாம் என்றும் எண்ணுகிறோம். முடிவாக, நாம் இருக்கிறபடியே இருந்துகொண்டு வருகிறோம். ஆகையால், நம்மைப் போன்ற மற்றவர்கள் என்ன செய்திருக்கிறார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் எண்ணிப் பார்ப்போம். ஹர்பத் சிங் அப்படிப் பட்ட ஒரு சத்தியாக்கிரகி.

ஹர்பத் சிங் 75 வயதான கிழவர். தென்னாப்பிரிக்காவில் ஒரு விவசாயப் பண்ணையில் ஐந்து வருட ஒப்பந்தத்தில் வேலை செய்வது என்று மாதம் ரூ. 7 சம்பளத்திற்கு இவர் அங்கே போனவர். முந்திய பிரசுரத்தில் குறிப்பிடப்பட்டிருந்த 20,000 இந்தியரின் வேலை நிறுத்தம் ஆரம்பமானபோது இவரும் அதில் சேர்ந்துகொண்டார். வேலைநிறுத்தக்காரர்கள் சிலரைச் சிறையிலிட்டார்கள். அப்படிச் சிறை சென்றவர்களில் ஹர்பத் சிங்கும் ஒருவர். அவர்களுடைய சகாக்கள் அவரிடம் வருமாறு கூறி வேண்டிக்கொண்டனர்: "துயரமான இக்கடலில் நீங்களும் குதிப்பது என்பது சரியல்ல. சிறையில் இருப்பதற்கு உங்களால் முடியாது. இப்படிப்பட்ட போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லை என்பதற்காக உங்களை யாரும் குறை கூறமாட்டார்கள்." இதற்கு ஹர்பத் சிங் பதிலளித்ததாவது: "நமது மானத்தைக் காப்பதற்காக நீங்களெல்லாம் துயரத்தை அனுபவிக்கும்போது, சிறைக்குப் போகாமல் வெளியில் இருந்துகொண்டு நான் என்ன செய்வது? சிறையில் நான் செத்துவிட்டால்தான் என்ன?" அப்படியே ஹர்பத் சிங் சிறையில் மாண்டார்; அமரரும் ஆனார். அவர் சிறைக்கு வெளியில் இறந்திருப்பாரானால் அம்மரணத்தைக் குறித்து யாருமே கவனித்திருக்க மாட்டார்கள். ஆனால், அவர் சிறையில் இறந்ததால், அவர் சவத்தைக் கொடுக்கும்படி இந்திய சமூகம் கேட்டு வாங்கி, நூற்றுக்கணக்கான இந்தியர் சென்று தகனக் கிரியை நடத்தினார்கள்.

ஹர்பத் சிங்கைப் போன்றதுதான் டிரான்ஸ்வால் வியாபாரியான அகமது முகமது கச்சாலியாவின் விஷயமும். கடவுள் அருளால் அவர் இன்னும் உயிருடனிருக்கிறார். அவர் தென்னாப்பிரிக்காவில் வசித்து, இந்திய சமூகத்தினரின் நன்மையைக் கவனித்து வருவதோடு அதன் கௌரவத்தையும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறார். ஹர்பத் சிங் உயிரிழந்த அந்தப் போராட்டத்தின்போது, கச்சாலியா அநேக தடவைகள் சிறை சென்றார். தன்னுடைய வியாபாரம் கெட்டுப்போகும்படியும் அனுமதித்து

விட்டார். அவர் இப்பொழுது ஏழ்மையிலிருந்தாலும் எல்லோரும் அவரிடம் மரியாதை செலுத்துகிறார்கள். உறுதியை விடாமல் அவர் அநேக துன்பங்களையெல்லாம் அனுபவித்தார்.

ஒரு கிழத் தொழிலாளியும், நடுத்தர வயதுள்ள ஒரு வியாபாரியும், தங்கள் வாக்கை நிறைவேற்றுவதற்காகப் போராடிக் கஷ்டங்களை அனுபவித்ததைப் போன்று பதினேழு வயதுள்ள ஒரு பெண்ணும் அவ்வாறே செய்தாள். அந்தப் போராட்டத்தில் சமூகத்தின் மானத்தைக் காப்பதற்காக அப்பெண்மணி சிறை சென்றாள். அவள் சிறைப்பட்டபோது அவளுக்கு ஜுரம். சிறையிலிருந்த காலத்தில் ஜுரம் அதிகமாகிவிட்டது. அவள் சிறையிலிருந்து போய்விடலாம் என்று ஜெயிலர் யோசனை கூறினார். ஆனால், வள்ளியம்மாள் மறுத்துவிட்டுத் தனது சிறைத் தண்டனையை உறுதியுடன் நிறைவேற்றினாள். சிறையிலிருந்து விடுதலையான நான்காவது நாளோ, ஐந்தாவது நாளோ இறந்து போனாள்.

இந்த மூவருடைய சத்தியாக்கிரகமும் புனிதமானது. இம்மூவரும் துன்பங்களை அனுபவித்தார்கள்; சிறை சென்றார்கள். ஆனால், கொண்ட பிரதிக்ஞையில் உறுதியுடன் இருந்தனர். நம் தலைமீது அத்தகைய மேகம் எதுவும் இப்போது கவிழ்ந்துகொண்டிருக்கவில்லை. நமது பிரதிக்ஞையை நிறைவேற்றிக்கொண்டு வருவதற்கு நாம் இப்பொழுது கஷ்டப்பட வேண்டியிருப்பதெல்லாம், நமது வசதிகளைக் கொஞ்ச அளவுக்கு விட்டுவிட்டு, இதுவரை நாம் பெற்றுவந்த சம்பளம் இல்லாமலேயே சமாளித்துக்கொள்ள வேண்டியதுதான். இது அவ்வளவு கஷ்டமானது அல்ல. நம் காலத்திலேயே நம் சகோதரர்களும் சகோதரிகளும் செய்திருப்பதையே நாம் செய்வது கஷ்டமானதாக இருக்கவும் கூடாது.

இவ்விஷயத்தை இன்னும் மேலே அடுத்த பிரசுரத்தில் கவனிப்போம்.

## (9)

மூன்று சத்தியாக்கிரகிகளின் உதாரணத்தை நேற்று வெளியான பிரசுரத்தில் கவனித்தோம். அப்போராட்டத்தில் சத்தியாக்கிரகிகளாக இருந்தவர்கள் அவர்கள் மாத்திரம் அல்ல. ஒரு சமயத்தில் 20,000 தொழிலாளர்கள் வேலையில்லாமல் இருந்தார்கள். கஷ்டம் பன்னிரண்டு நாட்களில் தீர்ந்துவிடவில்லை. முழுப் போராட்டமும் ஏழு ஆண்டுகள் நடந்தது. அந்தக் காலத்தில் நூற்றுக்கணக்கானவர்கள் பெருங் கஷ்டத்திலும் கவலையிலும் இருந்தனர். ஆனால், தாங்கள் முடிவு செய்துகொண்ட விஷயத்தில் உறுதியுடன் இருந்தார்கள். 20,000 தொழிலாளர்கள் இருக்க வீடின்றி, எந்தக் கூலியும் இல்லாமல் மூன்று மாதங்கள் இருந்தனர். அநேகர் தங்களிடமிருந்த சாமான்களையெல்லாம் விற்றுவிட்டார்கள். தங்கள் குடிசைகளைவிட்டு வந்துவிட்டனர்.

தங்களுடைய படுக்கைகள், கால்நடைகள் ஆகியவைகளையும் விற்ருர்கள். நடந்தே போராட்டத்தில் ஈடுபட முன்வந்தார்கள். முக்கால் ராத்தல் மாவையும் ஓர் அவுன்ஸ் சர்க்கரையையும் மாத்திரம் சாப்பிட்டுக்கொண்டு அவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் அநேக நாட்கள், தினத்திற்கு இருபது மைல்கள் வீதம் நடந்துகொண்டிருந்தனர். அவர்களில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இருந்தார்கள். அவர்களில் ஒருவர், பம்பாய் ஜும்மா மஜீதின் மோஜிமின் குமாரர். இமாம் சாஹிப் அப்துல்காதர் பாவாஜீர் என்பது அவர் பெயர். இதற்கு முன்னல் எந்தவிதமான கஷ்டத்தையும் அனுபவித்தறியாத அவர் சிறைவாசத்தின் துன்பத்தை அனுபவித்தார். சிறைவாச காலத்தில் ரஸ்தாக்களைச் சுத்தம் செய்து, கல்லுடைத்து, இன்னும் பல கடினமான வேலைகளையெல்லாம் செய்துவந்தார். மாதக் கணக்கில் ருசியற்ற, எளிய உணவைச் சாப்பிட்டு வாழ்ந்துவந்தார். இப்பொழுது அவரிடம் ஒரு காசுகூட இல்லை. சூரத்தைச் சேர்ந்த தாதாமியா காஸியின் நிலைமையும் இதே போன்றதுதான். சென்னையைச் சேர்ந்த பதினேழு வயது வாலிபர்களான நாராயணசாமி, நாகப்பன் ஆகிய இரு இளைஞர்களும் அப்போராட்டத் தீயில் கஷ்டங்களை அனுபவித்து உயிர் நீத்தார்கள். ஆயினும் கொண்ட உறுதியை மாத்திரம் கைவிடவில்லை. இதற்கு முன்னல் நடந்தும் அறியாத பெண்கள், தெருத் தெருவாக சாமான்களைத் தூக்கிச் சென்று விற்ருர்கள்; சிறையில் வண்ணர வேலை செய்தார்கள்.

இந்த உதாரணங்களையெல்லாம் கவனிக்கும்போது, நம்மில் எந்தத் தொழிலாளி தன்னுடைய பிரதிக்ஞையை நிறைவேற்றி வருவதற்காகச் சாதாரணமான அசௌகரியங்களை அனுபவிக்கத் தயாராக இருக்கமாட்டார்?

முதலாளிகள் வெளியிட்டிருக்கும் துண்டுப் பிரசுரங்களில், கோபத்தில் அநேக யோக்கியமில்லாத விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அறிந்தோ, அறியாமலோ அநேக விஷயங்கள் மிகைப்படுத்திச் சொல்லப்பட்டிருக்கின்றன. சில விஷயங்கள் திரித்தும் சொல்லப்பட்டிருக்கின்றன. நாம் சத்தியாக்கிரகிகள் என்ற முறையில் கோபத்தைக் கோபத்தால் சமாளிக்கக்கூடாது. அவற்றிலிருக்கும் தவருன கூற்றுகளைத் திருத்துவதுகூட சரியல்ல. நாம் தவருன காரியங்களைச் செய்யும்படி செய்துவிட முடியாது, அவ்விதம் எழுதப்பட்டிருப்பதைக் கண்டு ஆத்திரமடைந்து விடமாட்டோம் என்று நாம் சொல்லிவிட்டால் மாத்திரம் போதும். தொழிலாளரின் ஆலோசகர்கள் மீது கூறப்பட்டிருக்கும் குற்றச்சாட்டுகள் உண்மையானவைகளாக இருந்தால், அவற்றை நாம் மறுத்துச் சொல்லுவதனல் மாத்திரம் அவை பொய்யாகிவிடமாட்டா. அவர்கள் செய்வது சரியல்ல என்பதை நாம் அறிவோம். நாம் அப்படி அல்ல என்பதை நிரூபிக்க இனி நாம் நடந்துகொள்ளுவதையே நம்பியிருக்க வேண்டும்.

## (10)

ஆலைகள் கதவடைப்பு ஆரம்பமாகி இன்னும் இரண்டு வாரங்கள்கூட ஆகவில்லை. என்றாலும், சாப்பாட்டுக்குத் தங்களுக்கு ஒன்றும் இல்லை என்று சிலர் சொல்லுகிறார்கள்; வாடகை கொடுப்பதற்குக்கூட பணம் இல்லை என்று சிலர் கூறுகின்றனர். தொழிலாளரில் பெரும்பாலானவர்களின் வீடுகள் மோசமான நிலையில் இருக்கின்றன. அவற்றில் போதிய வெளிச்சமோ, காற்றோட்டமோ இல்லை. வீடுகள் அதிகப் பழைய வீடுகள். சுற்றுப்புறங்களும் ஆபாசமாக இருக்கின்றன. தொழிலாளர் உடுத்தியிருக்கும் துணிகள் ஒரே அழுக்காக இருக்கின்றன. சலவைக்குப் போடுவதற்குச் சிலருக்குப் பணம் இல்லை. சோப்பு வாங்கவும் வழியில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். தொழிலாளரின் குழந்தைகள் தெருக்களில் அலைந்துகொண்டிருக்கின்றன. படிப்பு இல்லாமல் இருக்கிறார்கள். சில தொழிலாளர்கள், தங்கள் குழந்தைகளை உபயோகித்துக் கொஞ்சம் பணம் சம்பாதிக்கிறார்கள். இப்படிப்பட்ட படுமோசமான வறுமை இருப்பது வருந்தத்தக்கதாகும். இதற்குப் பரிகாரம், 35 சதவிகிதக் கூலி உயர்வு மாத்திரம் அல்ல. கூலியை இரட்டிப்பாக்கினாலும், மற்றப் பரிகாரங்களெல்லாம் செய்யப்படவில்லையானால், தொழிலாளர்கள் ஏழைகளாகவே இருந்து வருவார்கள். இந்த ஏழ்மைக்கு அநேக காரணங்கள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை இன்று கவனிப்போம்.

தொழிலாளருக்குப் பணம் இல்லாது போகும்போது, மாதத்திற்கு ரூபாய்க்கு ஓர் அணா முதல் நான்கு அணா வரையிலும்கூட வட்டி கொடுத்துக் கடன் வாங்குகிறார்கள் என்று தொழிலாளரிடம் விசாரித்ததிலிருந்து தெரிகிறது. இது பயங்கரமான விரயமாகும். இத்தகைய வட்டியை ஒருவர் ஒரு முறை கொடுக்க ஆரம்பித்துவிட்டால் பிறகு அவர் அதிலிருந்து விடுபடவே முடியாது. இதைப் பற்றி இன்னும் கொஞ்சம் பார்ப்போம். ரூபாய்க்கு ஓர் அணா வீதம் பதினாறு ரூபாய்க்கு ஒரு ரூபாய் வட்டியாகிறது. இந்த விகிதத்தில் வட்டி கொடுக்கிறவர்கள், ஒரு வருடம் நான்கு மாதங்களில் அசல் தொகைக்குச் சமமான ஒரு தொகையை வட்டியாகக் கொடுத்து விடுகின்றனர். இது 75 சதவிகித வட்டியாகிறது. பன்னிரண்டு முதல் பதினாறு சதவிகித வட்டியையே அதிகம் என்று கருதும்போது, 75 சதவிகிதம் வட்டி கொடுக்கும் ஒருவர் எப்படி உயிருடன் இருந்து வர முடியும்? அப்படியிருக்கும்போது மாதத்திற்கு ரூபாய்க்கு நான்கு அணா வட்டி கொடுப்பவரைப் பற்றி என்ன சொல்லுவது? பதினாறு ரூபாய்க்கு, ரூபாய்க்கு நான்கு அணா வீதம் வட்டி கொடுத்து வருகிறவர் நான்கு மாதங்களில் அசல் தொகைக்குச் சமமான தொகையை வட்டியாகக் கொடுத்துவிடுகிறார். இது 300 சதவிகித வட்டியாகிறது! இத்தகைய வட்டியைக் கொடுக்கிறவர்கள் எப்பொழுதும் கடன்பட்டவர்களாகவே இருக்

கிறார்கள்; அதிலிருந்து அவர்கள் மீளவே முடியாது. வட்டி, ஏழைகளுக்கு எவ்வளவு பெரிய பளு என்பதை முகமது நபிகள் உணர்ந்திருக்கிறார். ஆகையால், வட்டி வாங்கவே கூடாது என்று திருக்குரானில் கண்டிப்பாகக் கூறியிருக்கிறார். அதே காரணத்தை முன்னிட்டே ஹிந்து சாஸ்திரங்களில் 'அசல் தொகைக்கு இரண்டு மடங்குக்குமேல் வட்டி வாங்கக்கூடாது' என்று விதிக்கப்பட்டிருக்கிறது.

இப்பொழுது நடத்தி வரும் போராட்டத்தின் காரணமாக இத்தகைய அக்கிரமமான வட்டியைக் கொடுப்பதில்லை என்று பிரதிக்ஞை செய்துகொள்ளுவார்களானால், தாங்க முடியாத பளுவிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டவர்களாவார்கள். பன்னிரண்டு சத விகிதத்திற்கு அதிகமாக யாரும் வட்டி கொடுக்கக்கூடாது. "அதெல்லாம் சரிதான். ஆனால், இதற்கு முன்னால் வட்டிக்கு வாங்கியிருப்பதை நாங்கள் எப்படித் திருப்பிக் கொடுப்பது? எங்கள் ஆயுளெல்லாம் அக்கடன் எங்களுடன் இருந்துகொண்டுதான் இருக்கும்" என்று சிலர் சொல்லலாம். இப்படிப்பட்ட நிலைமையில் சரியான வழி, தொழிலாளருக் குள்ளே பணவுதவி செய்துகொள்ளுவதற்காகப் பரஸ்பர உதவிச் சங்கம் ஒன்றை ஆரம்பிப்பதுதான். வட்டியின் பளு தாங்காமல் நசுங்கிக்கொண்டிருக்கும் தங்கள் சக தொழிலாளர்களைக் காப்பாற்றக்கூடியவர்கள் சிலர் இருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம். வெளியார் இதில் தலையிட வரவே மாட்டார்கள். நம்மிடம் நம்பிக்கையிருப்பவர்கள் மாத்திரமே உதவி செய் வார்கள். என்ன கஷ்டப்பட்டாவது இந்தச் சாபக்கேட்டி லிருந்து தொழிலாளர் தங்களை விடுவித்துக் கொண்டாக வேண்டும். இவ்வாறு அதிக வட்டி கொடுத்துக் கொண்டிருப்பது தான் அவர்களுடைய வறுமைக்கு முக்கியமான காரணம்.

## (11)

நாளாகவாக தொழிலாளருக்குத் தவறான அபிப்பிராயத்தை உண்டாக்கும் துண்டுப் பிரசுரங்களை முதலாளிகள் அதிகமாக வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்கள். செவ்வாய்க்கிழமை கதவ டைப்பு ரத்துச் செய்யப்படும் என்றும், வேலைக்குத் திரும்பும் தொழிலாளர்கள் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்றும் வதந்திகள் இருந்து வருகின்றன. தன்னுடன் ஐந்து தொழிலாளரையோ, அதற்கு அதிகமானவர்களையோ அழைத்து வருகிறவர்களுக்கு வெகுமதி கொடுக்கப்படும் என்றும் சொல் லப்படுகிறது. இந்தத் தந்திரங்களையெல்லாம் குறித்து எதுவுமே செய்ய வேண்டியதில்லை. மற்றவர்களைக்கொண்டு தொழிலாள ரைத் தூண்டும்படி செய்து, அவர்கள் வேலைக்குத் திரும்பி விடும்படி பார்க்க முதலாளிகளுக்கு உரிமை உண்டு. ஆனால், தொழிலாளரின் கடமை என்ன? 20 சத விகித உயர்வு போதாது என்று கூறி, அவர்கள் முதலாளிகளுக்கு அதன்படி நோட்டீஸ்

கொடுத்திருக்கிறார்கள். 35 சத விகித உயர்வுக்குக் குறைந்த எதையும் ஏற்றுக்கொள்ளுவதில்லை என்றும் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கின்றனர். இந்த நிலைமையில் தொழிலாளர் தங்கள் பிரதிக்ஞை, கௌரவம், ஆண்மை ஆகியவைகளை இழந்துவிட சம்மதிக்காமல் இப்பொழுது பின்வாங்கிக் கொண்டுவிட முடியாது. ஆனால், அப்படிப்பட்ட கௌரவ உணர்ச்சி ஒவ்வொரு தொழிலாளிக்கும் இல்லாமலிருக்கலாம். சிலர் இந்தப் பிரதிக்ஞையை எடுத்துக் கொள்ளாமல் இருக்கவும் கூடும். சிலர் குஜராத்திற்கு வெளியிலிருந்து வந்தவர்கள். மாலைநேரங்களில் நாம் நடத்தும் கூட்டங்களுக்கு அவர்கள் வராமலும் இருக்கலாம். அத்தகைய தொழிலாளர்கள்கூட 20 சத விகித கூலி உயர்வுடன் வேலைக்குத் திரும்பிவிடுவது தவறாகும். அறியாமையிலிருக்கும் அத்தகைய தொழிலாளர்கள் யார் என்பதைக் கண்டுபிடித்து உண்மையான விவரங்களை எடுத்துக் கூற வேண்டியது நமது கடமை. ஆனால், அவர்களையும்கூட நிர்ப்பந்தம் செய்யக்கூடாது.

நாளைக்கு, அதாவது செவ்வாய்க்கிழமை காலை வழக்கமான இடத்தில் காலை 7-30 மணிக்கு நாம் கூடப் போகிறோம். ஆலைகளைத் திரும்பத் திறப்பது சம்பந்தமாக முதலாளிகள் நமக்கு ஆசை காட்டிவிடாமலிருப்பதற்குச் சரியான வழி, கூட்டத்திற்கு வருவதுதான். நாட்டின் மற்றப் பகுதியைச் சேர்ந்த தொழிலாளரையும் நீங்கள் பார்த்து, உங்களுக்குத் தெரியாதவர்களையும், இந்தக் கூட்டங்களுக்கு இது வரையில் வராதவர்களையும் நீங்கள் கூட்டத்திற்கு அழைத்துவர வேண்டும். உங்களுக்கு ஆசை காட்டுவதற்காக மில்சொந்தக்காரர்கள் அநேக நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு வருவதால், இந்த நாட்களில் உங்கள் புத்தி ஸ்திரமில்லாமல் இருக்கக்கூடும். தொழிலாளிக்கு வேலையில்லாமலிருப்பது என்பது அதிக வேதனையானது. நீங்கள் கொண்டிருக்கும் உறுதியில் தவறிவிடாமல் இருப்பதற்குக் கூட்டங்கள் உங்களுக்கு உதவியாக இருக்கும்.

தங்களுடைய பலத்தை அறிந்தவர்களுக்கு, வழக்கமான வேலை இல்லாமலிருப்பது ஒரு பெரிய பிரச்னை அல்ல. தொழிலாளர் தம்முடைய உண்மையான தகுதியை உணர்ந்துகொண்டு விட்டால், வேலை போய்விட்டதைக் குறித்து மனந்தளர வேண்டியதில்லை; உண்மையில் சுயேச்சையாகவும் இருக்க முடியும். பணக்காரரிடம் இருக்கும் செல்வம், மறைந்துவிடக்கூடும், திருட்டுப் போய்விடலாம்; தவறான வழியில் உபயோகித்துத் தீர்ந்தும் போய்விடலாம். இல்லாவிடில், ஏதோ தவறுக் கணக்குப் போட்டுக் காரியத்தைச் செய்ததால் ஓட்டாண்டியாகிவிடவும் நேரலாம். ஆனால், ஒரு தொழிலாளியின் மூலதனமோ வற்றாதது. அதைத் திருடிவிடவும் முடியாது. அவர் விரும்பும் பலன் அதிலிருந்து அவருக்கு எப்பொழுதும் கிடைத்துக் கொண்டிருக்கும். அவருடைய கையும் காலும், அவருடைய ஆற்றலும் சக்தியுமே அவருடைய வற்றாத மூலதனம். அவர்

பெறும் கூலிதான் அந்த மூலதனத்திற்கு அவர் பெறும் வட்டி. சாதாரணமாக அதிகக் கஷ்டப்பட்டு உழைக்கும் தொழிலாளிக்கு அந்த வட்டி அதிகமாகக் கிடைக்கிறது. சோம்பேறித்தனமாக இருக்கும் தொழிலாளி, நிச்சயமாகப் பட்டினிதான் கிடக்க நேரும். அவர் பிறரை நம்பி இருக்க வேண்டியவராகவும் இருப்பார். ஆனால், பாடுபட்டு உழைக்கிறவர் ஒரு கணமேனும் மனச் சோர்வடைவதற்குக் காரணம் இல்லை.

**(12)**

இன்றிலிருந்து ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகிறது. முதலாளிகள் கதவடைப்பை ரத்துச் செய்துவிட்டார்கள். 20 சத விகித கூலி உயர்வை ஏற்றுக்கொள்ளுகிறவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளத் தயார் என்றும் அறிவித்திருக்கிறார்கள். ஆகையால் முதலாளிகள் செய்திருந்த கதவடைப்பு இன்றிலிருந்து முடிவடைந்து தொழிலாளரின் வேலை நிறுத்தம் இன்றிலிருந்து ஆரம்பமாகிறது. முதலாளிகள் செய்திருக்கும் இம் முடிவைப் பற்றிய அறிவிப்பை நீங்கள் எல்லோரும் பார்த்திருப்பீர்கள். வேலைக்குத் திரும்பிவிட அநேக தொழிலாளர்கள் தயாராக இருக்கிறார்கள் என்றும், கதவடைப்பினால் அவர்கள் வேலைக்கு வர முடியவில்லை என்றும் அவர்கள் கூறுகிறார்கள். தொழிலாளர் தினமும் நடத்தி வரும் கூட்டங்களுக்கும், அவர்கள் செய்துகொண்டிருக்கும் பிரதிக்ஞைக்கும் கொஞ்சமும் பொருத்தமில்லாததாக இருக்கிறது முதலாளிகள் கொடுக்கும் தகவல். ஒன்று, முதலாளிகள் கூறுவது உண்மையாக இருக்கவேண்டும்; இல்லாவிடில், தினம் நடக்கும் கூட்டங்களுக்குத் தொழிலாளர் வருவதும், அவர்கள் எடுத்துக் கொண்டிருக்கும் பிரதிக்ஞையும் உண்மையானவைகளாக இருக்கவேண்டும். எல்லாவற்றையும் தீர ஆலோசித்த பிறகே தொழிலாளர்கள் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள் ஆகையால், தங்களுக்கு ஆசை காட்டப் படுவதோ, தாங்கள் அனுபவிக்க வேண்டியிருக்கும் துயரமோ எதுவானாலும், 35 சத விகிதக் கூலி உயர்வைப் பெறாமல் இப்பொழுது அவர்கள் வேலைக்குத் திரும்ப முடியாது. அவர்களுடைய யோக்கியப் பொறுப்பு இதில்தான் இருக்கிறது. ஒரு பிரதிக்ஞையையும், லட்சக்கணக்கான ரூபாய்களையும் நிறுத்துப் பார்த்தால் பிரதிக்ஞையின் நிறைதான் அதிகமானதாக இருக்கும். இதைத் தொழிலாளர்கள் மறந்துவிடவே மாட்டார்கள் என்ற நிச்சயம் எங்களுக்கு உண்டு. பிரதிக்ஞையில் உறுதியாக இருப்பதைத் தவிர உயர்வடைவதற்குத் தொழிலாளருக்கு வேறு வழியே கிடையாது. இதை முதலாளிகள் உணர்வார்களானால், அவர்களுடைய நலனும்கூட தொழிலாளர் தங்கள் பிரதிக்ஞையில் உறுதியாக இருந்து நிறைவேற்றுவதில்தான் இருக்கிறதுஎன்பதை அறிவார்கள் என்பது எங்கள் திடமான நம்பிக்கை. தங்கள் பிரதிக்ஞையின்படி நடந்துகொள்ள முடியாத தொழிலாளரை வேலைக்கு எடுத்துக்கொண்டு விடுவதால் முடிவில் முதலாளிகளுக்

கும் நன்மை இல்லை. தெய்வ பக்தியுள்ள ஒருவர், செய்துகொண்ட பிரதிக்ஞையை மீறிவிடுமாறு இன்னொருவரை வற்புறுத்துவதிலோ, அப்படிச் செய்ய முயற்சிப்பதிலோ சந்தோஷப் படவே மாட்டார். என்றாலும், முதலாளிகளின் கடமையைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்க நமக்கு இப்பொழுது அவகாசம் இல்லை. அவர்கள் கடமையை அவர்கள் அறிவார்கள். நாம் அவர்களைக் கேட்டுக் கொள்ளத்தான் முடியும். ஆனால், தொழிலாளர்கள் தங்கள் கடமையைக் குறித்தே நன்றாகச் சிந்திக்க வேண்டும்.

பிரதிக்ஞையை மீறிப் போய்விடுவதால் தொழிலாளருக்குக் கிடைக்கக்கூடிய லாபம் என்ன என்பதைப் பார்ப்போம், இச்சமயம் இந்தியாவில் யோக்கியமான யாரும், புத்திசாலித்தனமாக வேலை செய்வதால் மாதம் இருபது ரூபாய் முதல் இருபத்தைந்து ரூபாய் வரை சம்பாதித்துக் கொண்டுவிடலாம். அவருக்கு நேரக்கூடிய மோசமான நிலைமை, முதலாளி அவரை வேலைக்கு வேண்டாம் என்று அனுப்பி விடுவதால் இன்னோர் இடத்தில் அவர் வேலை தேட வேண்டியிருக்கும் என்பதே. சில நாட்கள் தேடினால் தனக்கு எங்கும் வேலை கிடைத்துவிடும் என்பதைச் சிந்தனையுள்ள தொழிலாளி உணர வேண்டும். ஆனால், தொழிலாளரை வேலைக்கு வேண்டாம் என்று அனுப்பிவிடும் கடுமையான நடவடிக்கையை முதலாளிகள் விரும்பவில்லை என்பது நமக்கு நிச்சயமாகத் தெரியும். தொழிலாளர் மாத்திரம் உறுதியுடன் இருப்பார்களாயின். எவ்வளவு கடினமானதாக இருக்கும் உள்ளமும் இளகித்தான் தீரும்.

குஜராத்திற்கு வெளியிலிருந்து வந்துள்ள தொழிலாளர், (வடக்கிலிருந்தும் தெற்கேயிருந்தும் வந்திருப்போர்), இப்போராட்டத்தைக் குறித்துச் சரியாகத் தெரிந்துகொள்ளாமலிருப்பது சாத்தியமே. பொது வேலையில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், குஜராத்திகள், மதராஸிகள், பஞ்சாபிகள் ஆகியவர்கள் இடையே பாகுபாட்டை நாம் செய்யவில்லை, செய்ய விரும்பவும் இல்லை. நாம் எல்லோரும் ஒன்றே; ஒன்றாக இருக்கவே விரும்புகிறோம். ஆகையால், சரியான தகவல்களை ஒழுங்கான முறையில் அவர்களுக்குத் தெரிவித்து, நம்மில் மற்றவர்களுடன் தங்களை ஒன்றுபடுத்திக்கொள்ள வேண்டியது ஒவ்வொருவருடைய நன்மைக்கும் முக்கியமாவதோடு தங்கள் நன்மைக்கும் அவசியம் என்பதை அவர்கள் உணரும்படியும் செய்ய வேண்டும்.

## (13)

வேலைக்குத் திரும்பிவிட அநேக தொழிலாளர்கள் தயாராக இருக்கிறார்கள் என்றும், ஆனால், அவர்களை நிர்ப்பந்தப்படுத்தியும், அடிப்பதாகப் பயமுறுத்தியும் அவர்கள் வேலைக்குப் போக முடியாதபடி மற்றவர்கள் தடுத்து வருகிறார்கள் என்றும் வதந்திகள் கிளம்பியிருக்கின்றன. இவ்வாறு சகோதரத் தொழிலாளரை நிர்ப்பந்தப்படுத்தி, பயமுறுத்தி வேலைக்குப்

போகாதபடி தடுப்பதனுல், அவர்களுக்கு நாம் உதவி செய்யவே முடியாது என்று தீர்மானம் செய்துகொண்டிருப்பதை ஒவ்வொரு தொழிலாளரும் நினைவில் வைக்க வேண்டும். இந்தப் போராட்டத்தில், தானே விரும்பித் தன் பிரதிக்ஞையின்படி நடந்து கொள்ளுகிறவர் மாத்திரமே வெற்றியடைவார். தன் கௌரவம் போகாமல் காத்துக்கொள்ளும்படி யாரையும், எவரும் கட்டாயப் படுத்திவிட முடியாது. முக்கியமாக இது தானே விரும்பிச் செய்துகொள்ள வேண்டியது. நம் பிரதிக்ஞையின்படி நடந்து கொண்டு போக நாம் விரும்புகிறோம். ஒருவருக்குப் பயம் அதிகமாகிவிடுமானுல், அவரால் எதுவும் செய்ய முடியவில்லையென்றால், அவர் முன்னேறிப் போக முடியும் என்ற நம்பிக்கைக்கே இடமில்லை. நிர்ப்பந்தப்படுத்துவது என்பது உபயோகிக்கப்படுமானுல், போராட்டம் முழுவதுமே பலவீனமாகி முறிந்து போய்விடவும்கூடும். தொழிலாளரின் போராட்டம், அவர்களுடைய கோரிக்கையிலுள்ள நியாயத்தையும், அவர்களின் நடவடிக்கைகளிலுள்ள நேர்மையையுமே முற்றிலும் நம்பியதாக இருந்து வருகிறது. அவர்கள் கோரிக்கை நியாயமற்றதாக இருந்தால் அவர்கள் வெற்றி பெறவே முடியாது. கோரிக்கை நியாயமானதாக இருந்தும், அநீதிகளை உபயோகிப்பதன் மூலமும், பொய் சொல்லுவது, ஏமாற்றுவது, நிர்ப்பந்திப்பது, அசிரத்தையாக இருப்பது ஆகியவைகளின் மூலமும் அதை அடைந்துவிட முற்பட்டால், எவ்வளவுதான் துயரங்களை அனுபவித்திருந்தாலும் தொழிலாளி தோல்வியையே அடைவார். யாரையும் நிர்ப்பந்தம் செய்வதில்லை, தான் ஜீவிக்கப் பாடுபட்டு உழைப்பது என்பவை இந்தப் போராட்டத்தில் அனுசரிக்க வேண்டிய அத்தியாவசியமான கொள்கைகளாகும்.

## (14)

பணம் எவ்விதம் பணக்காரர்களின் ஆயுதமாக இருக்கிறதோ அதே போல உழைப்பு தொழிலாளரின் ஆயுதம். பணக்காரன் தன் பணத்தை உபயோகிக்காவிட்டால் எவ்விதம் பட்டினி கிடக்க நேருமோ அதே போல, தொழிலாளி தன் செல்வத்தை உபயோகிக்காவிட்டால்—உழைக்காவிட்டால்—அவனும் பட்டினி கிடக்கவே நேரும். உழைக்காதவன் தொழிலாளி அல்ல. உழைக்க வெட்கப்படும் தொழிலாளிக்குச் சாப்பிட உரிமை இல்லை. ஆகையால் இப்பெரும் போராட்டத்தில் தொழிலாளர்கள் தங்கள் பிரதிக்ஞையை நிறைவேற்ற விரும்புகிறார்களாயின், ஏதாவது ஒரு வேலையைச் செய்ய அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும். நிதியைத் திரட்டி, தாங்கள் சும்மா இருந்து கொண்டு அந்த நிதியைக் கொண்டு சாப்பிட்டுக்கொண்டிருக்கிறவர்கள், வெற்றியடைந்துவிட எந்தவித உரிமையும் உடையவர்கள் அல்ல. தங்களுடைய பிரதிக்ஞைக்காகத் தொழிலாளர் இப்போராட்டத்தை நடத்திவருகின்றனர். உணவுக்காக வேலை செய்யாமல் உணவு வேண்டும் என்கிறவர்களை, கொண்ட

விரதத்தில் உறுதியாக இருக்க வேண்டும் என்பதன் பொருளை அறிந்தவர்களாகக் கருதுவதற்கில்லை. மேற்கொண்ட விரதத்தின் படி நடக்க வேண்டும் என்பதில், கௌரவ உணர்ச்சியும், சுயமரியாதை உணர்ச்சியும் இருந்துவர வேண்டும் என்பதும் அடங்கியிருக்கின்றன. ஒரு வேலையுமே செய்யாமல் இருந்துகொண்டு, பொதுஜன நிதியிலிருந்து தனக்குச் சோறு போட வேண்டும் என்று இருப்பவர்களை யார்தான் கேவலமாக எண்ணாமலிருப்பார்கள்? ஆகையால், வேலை செய்து சம்பாதித்துச் சாப்பிட வேண்டும் என்பது நமக்கு அவசியமானதாகிறது. ஒரு தொழிலாளி வேலை செய்யவில்லை என்றால், அவர் இனிப்பை இழந்துவிட்ட சர்க்கரையைப் போன்றவராவார்.

சம்பளத்தில் 35 சதவிகித உயர்வைப் பெறவேண்டும் என்பதற்கு மாத்திரமல்ல இப்போராட்டம். தங்கள் உரிமையை நிலைநாட்டுவதற்காகத் துன்பங்களை அனுபவிக்கும் தொழிலாளர் தயாராயிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்காகவே இப்போராட்டம். நமது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக நாம் போராடுகிறோம். நம்மை நாமே அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்காக இப்போராட்டத்தை ஆரம்பித்தோம். பொதுப் பணத்தைத் தவறான வழியில் பயன்படுத்திக்கொண்டுவிட ஆரம்பிப்போமாயின், நாம் அபிவிருத்தியை அடைவதற்குப் பதிலாக இன்னும் மோசமான நிலையை அடைந்துவிடுவோம். இதைக் குறித்து நாம் எந்த விதத்தில் யோசித்துப் பார்த்தாலும், நமது சொந்த உழைப்பைக்கொண்டே நாம் ஜீவிக்க வேண்டும் என்பதையே காண்கிறோம்.

தன் அன்பிற்குரியவளான ஷிரீனுக்காக பர்ஹத் கல்லுடைத்தார். தொழிலாளருக்கோ, அவர்கள் பிரதிக்ஞையே அவர்களுடைய ஷிரீன். அதற்காக அவர்கள் ஏன் கல்லுடைக்கக் கூடாது? உண்மைக்காக ஹரிச்சந்திரன், தன்னைத்தானே விற்றுவிட்டான். கொண்ட பிரதிக்ஞையிடம் உண்மையாக இருப்பதற்காகத் தொழிலாளர் ஏன் கஷ்டங்களை அனுபவிக்கக் கூடாது? தங்கள் சமயத்திற்காக இமாம் ஹாஸனும் ஹுஸேனும் எவ்வளவோ கஷ்டங்களையெல்லாம் அனுபவித்தார்கள். நமது கௌரவத்தைக் காப்பதற்காக நாம் ஏன் சாகவும் தயாராக இருக்கக்கூடாது. ஒரு வேலையும் செய்யாமல் வீட்டில் உட்கார்ந்து கொண்டு பணத்தைப் பெற்று நாம் போராடினால், நாம் போராடினோம் என்று சொல்லுவது கூட தவறாகும்.

ஆகையால், ஒவ்வொரு தொழிலாளியும் உழைத்துச் சம்பாதித்துத் தன் ஜீவனத்தை நடத்தி வருவார், பிரதிக்ஞையின்படி நடந்து உறுதியுடனும் இருந்து வருவார் என்பதே எனது நம்பிக்கை. போராட்டம் நீண்டுகொண்டே போகுமானால், அது நமது பலவீனத்தினால்தான். தொழிலாளர்கள் வேறு எந்த வேலையும் செய்யமாட்டார்கள், பணிந்துவிடுவார்கள் என்று ஆலை முதலாளிகள் நம்பும் வரையில், அவர்களுக்கு அன்பு உணர்ச்சி ஏற்

படாததோடு எதிர்த்துக்கொண்டுமே இருப்பார்கள். தொழிலாளர்கள் தங்கள் பிரதிக்ஞையைக் கைவிட்டுவிடமாட்டார்கள் என்று அவர்களுக்கு நிச்சயமான நம்பிக்கை ஏற்பட்டாலன்றி அன்பு உணர்ச்சி அவர்களுக்கு ஏற்படாததோடு, தங்கள் லாபத்திற்கு நஷ்டமானலும், அவர்கள் தொழிலாளரை எதிர்த்தே வருவார்கள். என்ருலும், எந்தச் சந்தர்ப்பத்திலும் தொழிலாளர் தங்கள் உறுதியைக் கைவிட்டு விடமாட்டார்கள் என்று அவர்கள் நிச்சயமாக நம்பும்போது, அவர்கள் காருண்யமுள்ளவர்களாக ஆகிவிடுவதோடு தொழிலாளர்கள் திரும்பவும் வேலைக்கு வருவதையும் வரவேற்பார்கள். இன்ருே, தொழிலாளர் வேறு வேலை எதையும் செய்யப்போவதில்லை. ஆகையால், சீக்கிரத்தில் பணிந்துவிடுவார்கள் என்று முதலாளிகள் நம்பிக்கொண்டிருக்கிருர்கள். தொழிலாளர் தங்களுடைய ஜீவனத்திற்கு மற்றவர்களுடைய பணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களாயின், அத்தகைய உதவி வெகு சீக்கிரத்திலேயே தீர்ந்து போய்விடுவது நிச்சயம் என்று மில் சொந்தக்காரர்கள் எண்ணுவார்கள்; தொழிலாளர் சொல்லுவதை அவர்கள் கேட்கப் போவதில்லை. இதற்கு மாருக, ஜீவனத்திற்கு வேறு வழியில்லாத தொழிலாளர்கள் உடலை உழைத்து வேலை செய்ய ஆரம்பித்துவிடுவார்களாயின், 35 சதவிகித சம்பள உயர்வு கொடுத்தாலன்றித் தங்கள் தொழிலாளரைத் தாங்கள் இழந்துவிட நேரும் என்பதை முதலாளிகள் உணர்வார்கள். இவ்விதம் இப்போராட்டத்தை முடிக்கக்கூடியவர்களும், நீடிக்கக்கூடியவர்களும் நாமே. இப்பொழுதே அதிகக் கஷ்டத்தை அனுபவிப்பதன் மூலம் சீக்கிரத்தில் பரிகாரத்தை நாம் அடைந்துவிட முடியும். நாம் கஷ்டத்தை அனுபவிக்காது போனல், போராட்டம் நீண்டுகொண்டுதான் போகும். இவற்றையெல்லாம் யோசிப்பதன்மூலம் பலவீனமடைந்துவிட்டவர்கள் பலமடைவார்கள் என்றே நம்புகிருேம்.

பலவீனமடைந்துவிட்டவர்களைப் பலம் பெற்றவர்களாகிவிடும்படி தூண்டிவிட முடியாது என்று சிலர் நினைக்கிருர்கள். இந்த நம்பிக்கை முற்றிலும் நியாயமற்றதாகும். எந்தக் காரணத்தைக் கொண்டாவது, பலவீனமாகிவிட்டவர்களைத் திரும்பவும் பலமுள்ளவர்களாகும்படி செய்வது உங்கள் கடமையாவதோடு எங்கள் கடமையுமாகும். இப்போராட்டம் என்ன என்பதை அறியாதவர்களுக்கு அதை அறியும்படி செய்ய வேண்டியதும் நம் கடமை. மிரட்டியோ, பொய் சொல்லியோ, அடித்தோ அல்லது எந்த விதமான நிர்ப்பந்தத்தையும் உபயோகித்தோ நம்முடனிருக்கும்படி நாம் யாரையும் பலவந்தப்படுத்தக் கூடாது என்பது உண்மை. நாம் எடுத்துச் சொல்லியும் மனம் தேருமல் வேலைக்குத் திரும்பிப் போகிறவர்களைக் குறித்து நாம் மனம் தளர்ந்துவிடக் கூடாது. ஒரே ஒருவர்தான் மிஞ்சினலும், என்னவானலும், அவரை நாம் கைவிட்டுவிடக்கூடாது.

## (15)

காந்திஜியின் உண்ணாவிரதத்தின் நோக்கத்தையும் அதன் முக்கியத்துவத்தையும் புரிந்துகொள்ள வேண்டியது அவசியம். முதலாளிகள் உடன்படும்படி செய்வது அல்ல இவ்விரதத்தின் நோக்கம் என்பது முதலில் நினைவில் வைக்க வேண்டியதாகும். அந்த உணர்ச்சியின் பேரில் இந்த விரதம் மேற்கொள்ளப்பட்டிருக்குமாயின், அது நம் போராட்டத்திற்கும் கௌரவத்திற்கும் விரோதமான வகையில் பாதித்துவிடும். முதலாளிகளிடமிருந்து நியாயம் வேண்டும் என்றுதான் நாம் விரும்புகிறோமேயன்றி அவர்களுடைய பச்சாத்தாபத்தை அல்ல. ஏதாவது அனுதாபம் இருக்குமானால் அதைத் தொழிலாளரிடம் காட்டட்டும். அவர்களிடம் அனுதாபம் காட்ட வேண்டியது முதலாளிகளின் கடமை என்று நாம் நம்புகிறோம். ஆனால், காந்திஜியிடம் முதலாளிகள் கொள்ளும் அனுதாபத்தினால் 35 சத விகித சம்பள உயர்வு நமக்குக் கிடைக்குமானால், நாம் கேவலப்படுத்தப்பட்டவர்களாவோம். அந்த அடிப்படையில் அதைத் தொழிலாளர் ஒப்புக்கொள்ளவே முடியாது. முதலாளிகளிடமோ அல்லது சமூகத்தினிடமோ தமக்குள்ள உறவை இவ்விதம் காந்திஜி தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுவதானால், தமது நிலைமையை அவர் தவறான வழியில் உபயோகித்துக்கொண்டதாகும்; அவர் தமது கௌரவத்தையும் இழந்துவிடுவார். காந்திஜியின் உண்ணாவிரதத்திற்கும் தொழிலாளரின் கூலிக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்? முதலாளிகளின் வீடுகளின் முன்னால் பட்டினி கிடந்து சாவது என்று ஐம்பது பேர் துணிந்தாலும், 35 சத விகித உயர்வைப் பெறத் தொழிலாளருக்கு உரிமை இல்லை என்றால், அந்தச் சம்பள உயர்வை முதலாளிகள் எப்படி கொடுத்துவிடுவார்கள்? இந்த வகையில் உரிமையைப் பெறுவது என்பது வழக்கத்தில் வந்துவிடுமானால், சமூகத்தின் காரியங்களை நடத்திக்கொண்டு போவது என்பதே முடியாத காரியமாகிவிடும். காந்திஜியின் உண்ணாவிரதத்தைக் குறித்து முதலாளிகள் கவனிக்கவேண்டியதே இல்லை; கவனிக்கவும் முடியாது.

அப்படியிருந்தும், காந்திஜி மேற்கொண்டிருக்கும் இக்காரியம் முதலாளிகளைச் சாதகமான முடிவுக்கு வரும்படியே செய்யும் என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும். முதலாளிகள், அவருடைய உண்ணாவிரதத்தினால் சாதகமான முடிவுக்கு வரும் அளவுக்கு நாம் வருத்தப்பட வேண்டியதே. ஆனால், அதே சமயத்தில் காந்திஜியின் உண்ணாவிரதத்தினால் ஏற்படக்கூடிய முக்கியமான விளைவுகளிலிருந்து நாம் ஒதுங்கி இருந்துவிட முடியாது.

உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருப்பதன் நோக்கத்தைக் குறித்து இனி கவனிப்போம். செய்துகொண்ட பிரதிக்ஞை

தொழிலாளரிடையே மதிப்பை இழந்து வருகிறது என்பதைக் காந்திஜி கண்டார். பட்டினி பயத்தினால் சிலர் பிரதிக்ஞையை மீறிவிடவும் தயாராக இருந்தார்கள். பத்தாயிரம் பேர் தங்களுடைய பிரதிக்ஞையைக் கைவிட்டுவிடுவது என்பது சகிக்க முடியாததாகும். பிரதிக்ஞையைக் கடைப்பிடித்து நடக்காததனால் மனிதன் பலவீனமாவதோடு முடிவில் தனது மனிதத் தன்மையையும் இழந்துவிடுகிறான். ஆகையால், தொழிலாளர் பிரதிக்ஞையை அனுசரித்து நடப்பதற்கு நம்மாலியன்ற உதவியைச் செய்தாக வேண்டியது நமது கடமையாகிறது. தாம் உண்ணாவிரதம் இருந்தால், பிரதிக்ஞையைத் தாம் எவ்வளவு மதிக்கிறார் என்பதை அது காட்டும் என்று காந்திஜி எண்ணினார். மேலும், தொழிலாளர் தாங்கள் பட்டினி கிடக்க வேண்டியிருப்பதைக் குறித்துப் பேசி வந்தனர். பட்டினி கிடந்தாலும் பிரதிக்ஞைப்படி மாத்திரம் நடந்துகொள்ளுங்கள் என்று காந்திஜி அவர்களுக்கு உபதேசித்து வந்தார். முடிவாகத் தமது உபதேசத்தை அவர் செய்கையின் மூலமாவது காட்ட வேண்டும். பட்டினி கிடந்து சாவதற்குத் தாமே தயாராவதன் மூலமே இதைச் செய்ய முடியும். மேலும், தொழிலாளர்கள் வேலை செய்வதில்லை; நிதி உதவி வேண்டும் என்கிறார்கள். இது பயங்கரமான விஷயம். இதை அனுமதிப்பதாயிருந்தால் நாட்டில் பெரும் குழப்பமே நேரும். வேலை செய்வதில் உள்ள கஷ்டத்தைத் தவிர்க்க முடியாது என்பதைக் கண்கூடாகக் காட்டுவதற்குக் காந்திஜிக்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. அவரே கஷ்டத்தை அனுபவிக்க வேண்டும். உடலை உழைத்து அவர் வேலை செய்தார். ஆனால், அது போதாது. பல காரியங்களை நிறைவேற்றுவதற்கு உபாயமாக உண்ணாவிரதத்தைக் கருதி அவர் அதை மேற்கொண்டார். தொழிலாளர் 35 சத விகித சம்பள உயர்வைப் பெற்றாலோ அல்லது தொழிலாளர் வேண்டுமென்றே தங்களுடைய பிரதிக்ஞையை அடியோடு கைவிட்டாலோதான் அவர் உண்ணாவிரதத்தை நிறுத்துவார். விரும்பிய பயன் கிடைத்துவிட்டது. இந்த விரதத்தை அவர் மேற்கொண்டபோது அங்கே இருந்தவர்கள், அதன் முழுப் பொருளையும் அறிந்துகொண்டார்கள். தொழிலாளர்கள் அதிகப் பரபரப்பை அடைந்தார்கள். உடலை உழைத்து வேலை செய்ய ஆரம்பித்தனர். அவர்களுடைய கௌரவமும் யோக்கியப் பொறுப்பும் கெடாமல் இருந்தன.

தங்கள் பிரதிக்ஞையில் உறுதியாக நின்றால்தான் முதலாளிகளிடமிருந்து நியாயத்தைப் பெற முடியும் என்பதைத் தொழிலாளர்கள் உணர்ந்துகொண்டார்கள். காந்திஜியின் உண்ணாவிரதத்தினால் அவர்கள் பலமடைந்தார்கள். தங்கள் சொந்த பலத்தைக்கொண்டுதான் தாங்கள் போராட முடியும், தொழிலாளரின் முன்னேற்றம் தொழிலாளரைப் பொறுத்தேதான் இருக்கிறது என்பதையும் அவர்கள் தெரிந்துகொண்டார்கள்.

## (16)

## ஸ்ரீ சங்கர்லால் பாங்கரின் பிரசுரம்

நான், உங்களுக்கு எழுதும் முதல் பிரசுரம் இது. ஆகையால், உங்களுக்கு யோசனை கூற எனக்கு இருக்கும் உரிமை மிகச் சாதாரணமானது என்பதை உங்களுக்கு முதலில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். உடலை உழைக்கும் வேலை எதையும் நான் செய்யவில்லை. தொழிலாளர்கள் சகித்துக்கொண்டிருக்கும் துயரங்களை நான் அனுபவிக்கவும் இல்லை. அவர்கள் துயரத்தைப் போக்குவதற்கு என்னால் செய்யக்கூடியதும் எதுவும் இல்லை. ஆகையால், இச்சந்தர்ப்பத்தில் உங்களுக்கு யோசனைகள் கூற நான் தயங்குகிறேன். ஆனால், முன்னால் உங்களுக்காக நான் எதுவும் செய்யவில்லையென்றாலும், என் சக்திக்கு ஏற்ற வகையில் என்னாலியன்றதை இனி உங்களுக்குச் செய்யவேண்டும் என்பது என்னுடைய ஆர்வம். அந்த ஆர்வத்தினாலேயே இதை எழுதுகிறேன்.

இரு தினங்களுக்கு முன்னால் நமது நிலைமையில் ஒரு நெருக்கடியான மாறுதல் ஏற்பட்டது. உங்களில் சிலர் அதிகக் கஷ்டமான நிலைமையில் இருந்தீர்கள். ஆனால், காந்திஜி அடிக்கடி வற்புறுத்தி வந்ததை அனுசரித்து, இந்த நிலையிலிருந்து நிவாரணம் பெறுவதற்கு வேறு ஏதாவது வேலையைச் செய்வதற்குப் பதிலாக உங்களில் சிலர் பிரதிக்ஞையைக் கைவிட்டு ஆலைகளுக்குத் திரும்பவும் வேலைக்குப் போய்விடக்கூடும் என்று காணப்பட்டது. எனினும், அந்த நிலைமை இப்பொழுது போய்விட்டது. காந்திஜியின் உண்ணாவிரதத்தினால் சுறுசுறுப்பில்லாத நம் உள்ளங்கள் சுறுசுறுப்பைப் பெற்றுவிட்டன. நமது பிரதிக்ஞை எவ்வளவு முக்கியமானது என்பதை இப்பொழுது அறிய ஆரம்பித்துவிட்டோம். ‘உயிரை இழக்க நேரினும் பிரதிக்ஞையை மாத்திரம் விட்டுவிடமாட்டோம்’ என்பது கூட்டங்களில் கூறப்படும் வெறும் முழக்கம் மாத்திரம் அல்ல, அதைக் காரியத்திலும் செய்து காட்டியாக வேண்டும் என்பதை நன்றாகத் தெரிந்துகொண்டுவிட்டோம். நிலைமையில் ஏற்பட்டிருக்கும் இந்த மாறுதலுக்கு ஆதாரமாக, பணக் கஷ்டத்தில் இருப்பவர்கள் மனமுவந்து உடலை உழைத்து வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். அது மாத்திரம் அல்ல. நல்ல நிலைமையில் இருப்பவர்கள், அதிகக் கஷ்டத்திலிருப்போருக்குத் தங்கள் கூலியிலிருந்து உதவி செய்து, நமக்குள்ளே தகராறு ஏற்படுவதற்கிருந்த சாத்தியத்தையும் அடியோடு போக்கிவிட்டார்கள். ஆனால், அது மாத்திரம் போதாது. காந்திஜியின் உண்ணாவிரதத்தில் நமக்கு மிகப் பெரிய பலமான பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பொறுப்பை நாம் முற்றிலும் உணருவதாக இருந்தால், இப்போராட்டத்தை எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு விரைவில் முடித்துவிடுவதற்கு நம்மாலான எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும்.

நமது பிரதிக்ஞைக்குப் பாதகம் இல்லாத வகையில் இப் போராட்டம் சீக்கிரத்தில் முடிந்துவிடுவதற்கான எல்லா முறைகளையும் நாம் அனுசரிக்கவும் வேண்டும். 30 சத விகித சம்பள உயர்வைப் பெறுவது என்பதுதான் நம் பிரதிக்ஞை. இந்த 35 சத விகித உயர்வைக் கொடுத்துவிடுவதில் முதலாளிகளுக்கு எந்தவிதமான பணக் கஷ்டமும் இருக்கப் போவதில்லை என்பதையும் நாம் அறிவோம். ஆனால், இந்த 35 சத விகித உயர்வைக் கொடுத்துவிட்டால் தொழிலாளர்கள் ஆதிக்கம் பெற்றவர்களாகிப் பிடிவாதம் பிடிப்பவர்களாகவும் ஆகிவிடுவதோடு, ஏதாவது சின்ன காரியம் நடந்துவிட்டாலும் கட்டுக்கடங்காதவர்களாகி விடுவார்கள் என்றும், அற்ப விஷயங்களுக்கெல்லாம் வேலை நிறுத்தத்தை ஆரம்பித்து ஆலைத் தொழிலையே அழித்துவிடுவார்கள் என்றும் முதலாளிகள் கருதுகின்றனர். அப்படி பயப்பட வேண்டியதற்கு எந்தக் காரணமும் இருப்பதாக நான் காணவில்லை. தங்களுடைய அன்றாட ஜீவனத்திற்கு வகை செய்துகொண்டிருக்கும் ஒரு தொழில் நாசமாகிவிட வேண்டும் என்று தொழிலாளர் என்றுமே விரும்பமாட்டார்கள். நல்லது கெட்டதை அறியாமலோ, நியாய அநியாயத்தைப் பற்றிச் சிந்திக்காமலோ தொழிலாளர் நடந்துகொள்ளுவார்களானால், அதன் பலன் தவிர்க்க முடியாதது. அதிலிருந்து பாதிக்கப்பட்ட நாம் விரும்புவோமாயின், நல்லெண்ணத்தின் பேரில் மில் சொந்தக்காரர்களுக்காக ஒழுங்காக வேலை செய்ய நாம் உறுதிகொள்ள வேண்டும். நியாயமில்லாத கோரிக்கைகளை வெளியிடுவதில்லை என்ற முடிவுக்கு நாம் வரவேண்டும். மற்ற வழிகளிலெல்லாம் முயன்று பார்த்தும் பயனில்லை என்று இருந்தாலன்றி, நீதியைப் பெற வேலை நிறுத்தம் போன்ற உபாயங்களில் இறங்குவதில்லை என்றும் நாம் உறுதி செய்துகொள்ள வேண்டும். ஆனால், அத்தகைய உறுதியைச் செய்துகொண்டு விடுவதனால் மாத்திரம் நம் வேலை தீர்ந்துவிடாது. நாம் முதலாளிகளிடம் போய், நாம் செய்திருக்கும் முடிவுகளை அவர்களுக்குத் தெரிவித்து, அவர்களுடைய நம்பிக்கையைப் பெற வேண்டும். 35 சத விகிதக் கூலி உயர்வைக் கொடுப்பதற்கு அவர்களைத் தடுத்து வரும் சந்தேகங்களையெல்லாம் நாம் போக்க வேண்டும். இந்த வகையில் உடனடியான நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ள வேண்டும்.

## (17)

## இருவருக்கும் வெற்றி

சத்தியாக்கிரகத்தில் எப்பொழுதுமே இரு தரப்பாரும் வெற்றியை அடைகிறார்கள் என்று முந்திய துண்டுப் பிரசுரங்களில் கூறியிருக்கிறோம். யார் சத்தியத்திற்காகப் போராடி அதை அடைகிறாரோ அவர் உண்மையில் வெற்றி பெறுகிறார். ஆனால், ஆரம்பத்தில் சத்தியத்தை எதிர்த்தபோதிலும் பின்னால்

அதை உணர்ந்து அதற்கு உடன்படுகிறவரும் வெற்றி பெற்றவராகவே கருதப்பட வேண்டும். அந்த வகையில் பார்த்தால், தொழிலாளரின் பிரதிக்ஞை நிறைவேறியதோடு முதலாளிகளுடையதும் நிறைவேறியதால், இரு தரப்பினரும் வெற்றி பெற்றிருக்கிறார்கள். 20 சத விகிதத்திற்கு அதிகமாகக் கூலியை உயர்த்திக் கொடுப்பதில்லை என்று முதலாளிகள் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தனர். அவர்களுடைய பிரதிக்ஞைக்கும் மதிப்புக் கொடுத்திருக்கிறோம். ஆகையால், இரு தரப்பினருக்கும் கௌரவம் போகவில்லை. ஏற்பட்ட சமரச முடிவு என்ன என்பதை இப்பொழுது பார்ப்போம்:

1. நாளை, அதாவது 20-ஆம் தேதி தொழிலாளர் வேலைக்குத் திரும்புவது. அன்று அவர்களுக்குக் கூலியில் 35 சத விகித உயர்வு கிடைக்கும். 21-ஆம் தேதி 20 சத விகித உயர்வு.

2. 22-ஆம் தேதியிலிருந்து, மத்தியஸ்தரின் முடிவின்படி, 35 சத விகிதத்திற்கு அதிகமாகாத கூலி உயர்வு அவர்களுக்குக் கிடைக்கும்.

3. குஜராத்தின் தலை சிறந்த படிப்பாளியும், தெய்வ பக்தி மிகுந்தவரும், குஜராத் கல்லூரிப் பேராசிரியரும், உதவிப் பிரின்ஸிபாலுமான பேராசிரியர் ஆனந்த சங்கர பாபுபாய் துருவா, எம். ஏ., எல். எல். பி. மத்தியஸ்தராக இருப்பார்.

4. மூன்று மாதங்களில் மத்தியஸ்தர் தமது முடிவைத் தெரிவிக்க வேண்டும். அந்தக் காலத்தில் தொழிலாளருக்கு $27\frac{1}{2}$ சத விகிதக் கூலி உயர்வு கொடுக்கப்படும். தொழிலாளர் தாங்கள் கோரியதில் பாதியையும், முதலாளிகள் தங்களுடையதில் பாதியையும் விட்டுக் கொடுக்க வேண்டும்.

5. மத்தியஸ்தர் என்ன தொகை கூறுகிறாரோ அது $27\frac{1}{2}$ சத விகிதத்தில் ஈடு செய்துகொள்ளப்படும். $27\frac{1}{2}$ சத விகிதத்திற்கு அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று மத்தியஸ்தர் முடிவு செய்தால், அந்த அதிகரிப்பை முதலாளிகள் கொடுக்க வேண்டும். ஆனால், மத்தியஸ்தர், $27\frac{1}{2}$ சத விகிதத்திற்குக் குறைய வேண்டும் என்று முடிவு செய்தால், அதிகப்படியாக வாங்கியிருந்ததைத் தொழிலாளர் திருப்பிக் கொடுப்பார்கள்.

இந்தச் சமரச முடிவினால் இரண்டு காரியங்கள் நிறைவேறியிருக்கின்றன. முதலாவது, தொழிலாளரின் கௌரவம் நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது. இரண்டாவது, இரு தரப்பினருக்குமிடையே ஒரு பெரும் தகராறு ஏற்படுமானால், வேலை நிறுத்தத்தில் இறங்காமல் மத்தியஸ்தத்தின் மூலம் அது தீர்த்துக் கொள்ளப்பட வேண்டும். இனி ஏற்படும் தகராறுகளை மத்தியஸ்தத்தின் மூலம் தீர்த்துக்கொள்ளுவது என்பது இப்பொழுது ஏற்பட்டிருக்கும் சமரசத்தின் நிபந்தனைகளில் ஒன்று அல்ல.

ஆனல், இந்தச் சமரச முடிவு மத்தியஸ்தத்தின் மூலமே ஏற் பட்டிருப்பதால், இனி ஏற்படும் இது போன்ற சமயங்களில் மத்தியஸ்தரே நியமிக்கப்படுவார் என்று கருதப்படுகிறது. முதலாளிகளுக்கும் தொழிலாளருக்கும் அபிப்பிராய பேதம் ஏற் படும்போதெல்லாம் மூன்ருமவர் தலையிட வேண்டியிருப்பது, இரு தரப்பினருக்குமே அவமானமானதாகும். முதலாளிகள், அதைச் சகிக்க முடியாது. அந்த நிலைமையில் அவர்கள் தங்கள் தொழிலைச் செய்துகொண்டு போக முடியாது. பணத்தை உலகம் எப்பொழுதுமே மதித்து வந்திருக்கிறது. ஆகையால், செல்வம் எப்பொழுதும்தான் மரியாதை செய்யப்பட வேண்டும் என்கிறது. எனவே, அற்ப காரியங்களுக்கெல்லாம் தொழி லாளர்கள் முதலாளிகளுக்குத் தொந்தரவு கொடுத்துக்கொண் டிருப்பார்களானல், அவர்களுடைய உறவு முறிந்துவிடும். அனவசியமான அத்தகைய தொந்தரவுகளையெல்லாம் தொழி லாளர்கள் உண்டாக்க மாட்டார்கள் என்றே நம்புகிருேம். நன்ருக யோசிக்காமல் அவர்கள் வேலை நிறுத்தம் செய்யக் கூடாது என்றும் அவர்களுக்கு நாம் புத்திமதி கூற வேண்டும். நம்மைக் கலந்தாலோசிக்காமல் அவர்கள் வேலை நிறுத்தம் செய்து விடுவார்களானல், அவர்களுக்கு நாம் உதவி செய்ய முடியாது.

35 சத விகித சம்பள உயர்வை ஒரே ஒரு நாளைக்கு மாத்திரம் பெற்று விடுவதனல் பிரதிக்ஞை உண்மையாகவே நிறைவேறி விட்டது என்று சொல்ல முடியுமா என்பதில் சந்தேகங்கள் உண்டாகியிருக்கின்றன. இது, குழந்தைகளைச் சமாதானப் படுத்துவதைப் போன்றுதான் இருக்கிறதல்லவா? சில சமரச முடிவுகளில் அது போன்ற ஏமாற்றும் வேலைகள் நடந்திருக் கின்றன; ஆனல், இதில் அப்படி நடந்து விடவில்லை. சந்தர்ப்பத் தைக் கருதி, வேண்டுமென்றேதான் ஒரு நாளைக்கு 35 சத விகித சம்பள உயர்வை நாம் ஏற்றுக்கொண்டிருக்கிருேம். '35 சத விகித உயர்வு இல்லாமல் வேலைக்குத் திரும்பிப் போகமாட்டோம்' என்பதற்கு இரண்டு பொருள்கள் உண்டு. 35 சத விகித உயர் வுக்குக் குறைந்த எதையும் எப்பொழுதுமே ஏற்றுக்கொள்ள மாட்டோம் என்பது ஒரு பொருள். 35 சத விகித உயர்வுடன் நாங்கள் வேலைக்குத் திரும்புவோம்; அது ஒரு நாளைக்குக் கிடைத் தாலும் சரிதான் என்பது இன்னுமொரு பொருள். 35 சத விகித உயர்வு நிரந்தரமாகக் கிடைக்க வேண்டும் என்பது மாத்திரமே சுத்தமான நீதியாகும் என்று உறுதிகொண்டிருப்பவர்கள், அது கிடைக்கும் வரையில் போராடுவதற்கு வேண்டிய வற்ருத பலம் உள்ளவர்கள், 35 சத விகித உயர்வு நிரந்தரமாகக் கிடைத்தால் தான் தங்கள் பிரதிக்ஞை நிறைவேறியதாகும் என்று கருது வார்கள். ஆனல், நாம் கொண்ட உறுதி அப்படிப்பட்டது அல்ல. மத்தியஸ்தத்தின் மூலம் நீதியைப் பெற நாம் எப் பொழுதும் தயாராக இருந்தோம். 35 சத விகித உயர்வு என் பதை நாமே ஒருதலைப் பட்சமாகத்தான் முடிவு செய்தோம். 35

சத விகித சம்பள உயர்வைக் கேட்கும்படி தொழிலாளருக்கு ஆலோசனை கூறுவதற்கு முன்னால், இது விஷயமாக முதலாளி களின் கட்சி என்ன என்பதைத் தெரிந்துகொள்ளவும் விரும் பினேம். துரதிருஷ்டவசமாக அதைத் தெரிந்துகொள்ள முடிய வில்லை. ஆகவே, அவர்கள் தரப்பு நியாயத்தையும் எங்களால் முடிந்த வரையில் ஆராய்ந்துவிட்டு 35 சத விகித உயர்வு வேண்டும் என்று கோருமாறு யோசனை கூறினேம். ஆனல் 35 சதவிகிதம் என்று நாங்கள் கணக்கிட்டது, தவறே இருக்க முடி யாதது என்று நாங்கள் சொல்ல முடியாது. அப்படி நாங்கள் சொல்லவும் இல்லை. எங்கள் தவறை முதலாளிகள் எடுத்துக் காட்டுவார்களானல், இன்னும் குறைவானதை ஏற்றுக்கொள்ளும் படி தொழிலாளருக்கு ஆலோசனை கூறுவோம். இன்னும் குறை வான கூலி உயர்வுதான் சரி என்று மத்தியஸ்தர் கருதினல், குறைவானதை நாங்கள் ஏற்றுக்கொள்ளுவோம். அதனல் எங்கள் விரதம் முறிந்துவிட்டதாகாது. மத்தியஸ்தத்தின் மூலம் தகரா றைத் தீர்த்துக்கொள்ளுவது என்பதை எப்பொழுதுமே ஒப்புக் கொண்டிருக்கிறேம். 35 சதவிகித உயர்வு வேண்டும் என்று முடிவு செய்ததில் தவறு எதையும் செய்துவிடவில்லை என்று நாங்கள் நம்புகிறேம். ஆகையால், அந்தச் சத விகிதம் கிடைக்கும் என்றும் நம்புகிறேம். ஆனல், தவறு செய்துவிட்டோம் என்று இருந்தால், குறைவானதை மனமார ஏற்றுக்கொள்ளுவோம்.

மூன்று மாத அவகாசம் வேண்டும் என்று நாங்கள்தான் கேட்டிருக்கிறேம். இரண்டு வார காலத்தை ஏற்றுக்கொள்ள முதலாளிகள் தயார். என்றாலும், எங்கள் கோரிக்கையின் நியா யத்தை நிரூபிப்பதற்குப் பம்பாயில் சில விசாரணைகளை நடத்த வேண்டியிருக்கிறது. இங்கே இருந்துவரும் நிலைமையை மத்தி யஸ்தருக்குக் காட்டுவதோடு தொழிலாளரின் வாழ்க்கை நிலை மையை அவர் ஆராயும்படி செய்வதும் மிகவும் அவசியம். இவை களை எல்லாம் அவர் தெரிந்துகொண்டாலன்றி அவருக்கு விஷ யம் முழுதும் தெரிவதற்கில்லை. இத்தகைய விரிவான வேலையைச் சில நாட்களில் முடித்துவிட முடியாது. ஆயினும், எவ்வளவு துரிதமாக வேலையை முடித்துவிட முடியுமோ அவ்வளவு முயற்சியும் செய்வோம்.

கதவடைப்பு நடந்த நாட்களுக்குக் கூலியை முதலாளிகளிட மிருந்து பெற வேண்டும் என்ற விருப்பத்தைச் சில தொழிலாளர் தெரிவித்திருக்கிறார்கள். இதை நாட்கள் ஏற்கவில்லை என்று தான் சொல்ல வேண்டும். 20 சத விகிதக் கூலி உயர்வை நாம் ஏற்றுக்கொள்ளாததனல் வேலை நிறுத்தமோ, கதவடைப்போ அவசியமாகிவிட்டது. நாம் இருபத்திரண்டு நாட்கள் கஷ்டப் பட்டோம் என்பது நமது கடமையாகிவிட்டதோடு அது நமது நன்மைக்காகவே. அனுபவித்த இக்கஷ்டத்திற்கு சன்மானமாக இந்தச் சமரச முடிவு நமக்குக் கிடைத்திருக்கிறது. அப்படி யிருக்க கதவடைப்பு நாட்களுக்குக் கூலி வேண்டும் என்று நாம்

எப்படிக் கேட்க முடியும்? கதவடைப்பு நாட்களுக்குக் கூலியைக் கேட்பது என்ருல், முதலாளிகளின் பணத்தைக்கொண்டு இப் போராட்டத்தில் ஈடுபடுவதாகவே ஆகும். இத்தகைய எண்ணமே தொழிலாளரை வெட்கப்படும்படி செய்யவேண்டும். போர் வீரன் தனது சொந்த பலத்தைக் கொண்டே போராட வேண்டும். மேலும், தொழிலாளர்கள் இப்பொழுதுதான் புதிதாக வேலைக்கு வருகிருர்கள் என்று சொல்லுவதற்குச் சௌகரியமாக இருப்பதற்கு முதலாளிகள், கதவடைப்புக்கு முன்னுலேயே தொழிலாளரின் கூலியையெல்லாம் கொடுத்துத் தீர்த்துவிட்டார்கள். இவைகளையெல்லாம் கொண்டு கவனித்தால், கதவடைப்புக் காலத்திற்குக் கூலி கொடுக்க வேண்டும் என்று கேட்பதைத் தொழிலாளர் விட்டுவிட வேண்டும் என்றே ஆகிறது.

கூலி, இருபது நாட்களுக்குப் பிறகுதான் கிடைக்கும். இதற்கு மத்தியில் தொழிலாளர்கள் எப்படி ஜீவனத்தை நடத்துவது? அநேகரிடம் ஒரு தம்பிடியும் இல்லாமல் இருக்கக்கூடும். சம்பளத் தேதிக்கு முன்னுல் தங்களுக்கு உதவி வேண்டும் என்று விரும்புகிறவர்கள், இதற்காகத் தங்கள் முதலாளிகளைக் கேட்டுக் கொள்ள வேண்டும். அவசியமான நிவாரணத்தை முதலாளிகள் அளிப்பார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேம்.

இனி தொழிலாளரின் நிலை, அவர்கள் செய்யும் வேலையின் தரத்தையே பொறுத்திருக்கிறது என்பதைத் தொழிலாளர்கள் நினைவில் வைக்க வேண்டும். மனப்பூர்வமாகவும், மரியாதையோடும், உற்சாகமாகவும் அவர்கள் வேலை செய்வார்களானுல், அவர்கள் முதலாளிகளுக்குத் திருப்தியை உண்டாக்கி, அவர்களிடமிருந்து அதிக உதவியைப் பெறலாம். ஒவ்வொன்றையும் எங்கள் மூலமே அடைய முடியும் என்று நினைப்பது தவருகும். அவசியமானுல் தொழிலாளருக்குக் கஷ்டம் ஏற்படும்போது அவர்களுக்காகச் சேவை செய்ய நாங்கள் தயாராக இருக்கிறேம். ஆனுல், அவர்களுடைய நன்மை, சாத்தியமான வரையில் முதலாளிகளையே தங்கள் பெற்றேராக எண்ணுவதிலும், தங்களுக்கு வேண்டியவைகளை அவர்களிடமிருந்து பெறுவதிலுமே இருக்கிறது.

அமைதிதான் இப்பொழுது வேண்டியதெல்லாம். சிறு கஷ்டங்களையெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும். எங்களை நீங்கள் அனுமதிப்பதாக இருந்தால், உங்களுடைய கெட்ட பழக்கங்களிலிருந்து நீங்கள் விடுபட உங்களுக்கு உதவி செய்ய விரும்புகிறேம். உங்களுக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் கல்வி போதிக்க உத்தேசித்திருக்கிறேம். உங்கள் ஒழுக்கத்திலும், உங்கள் குழந்தைகளின், உங்களுடைய தேகாரோக்கியத்திலும், உங்களுடைய பொருளாதார நிலைமையிலும் முழு அபிவிருத்தி ஏற்பட வேண்டும் என்று ஆசைப்படுகிறேம். நீங்கள் எங்களை அனுமதித்தால் இவற்றிற்காக உங்களிடையே வேலை செய்வோம்.

கடவுள் தொழிலாளரின் கௌரவத்தை, விரதத்தைக் காப்பாற்றி இருக்கிருர். இதுதான் தொழிலாளர் அடைந்திருக்கும் மிகப் பெரிய வெற்றி. இவ்விதம் தனது கௌரவத்தைக் காப்பாற்றிக்கொண்டவன் எல்லாம் அடைந்தவனே. உலகத்தையே ஆளும் அதிகாரத்தைப் பெற்றும் ஒருவன் தனது கௌரவத்தை மாத்திரம் இழந்துவிடுவாளுயின் அவன் எதையுமே அடையவில்லே என்றே ஆகும்.

—'நியாயமான போராட்டம்' என்ற நூலிலிருந்து.

பகுதி ஐந்து

# வேலை நிறுத்தங்களும் மறியலும்

## 1

## வேலை நிறுத்த ஜுரத்தின் மூலகாரணம்

**கேள்வி :** கொஞ்ச காலமாக, முக்கியமாக இந்தியாவில் தொழிலாளர் வேலை நிறுத்தங்களின் எண்ணிக்கையும் அளவும் அதிகரித்துக்கொண்டு போவதில் ஏதாவது விசேஷ முக்கியத்துவம் இருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்களா? இந்தியாவில் இருந்துவரும் இத்தொழிலாளர் தகராறின் விளைவு எதுவாக இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

**காந்திஜி :** வேலை நிறுத்தங்கள் இன்று எங்கும் வியாபித்திருக்கும் தொத்து நோய் போல் ஆகிவிட்டது. எங்குமே வேலை நிறுத்தங்கள் இருந்து வருகின்றன. அமெரிக்காவும் இங்கிலாந்தும் இதில் விலக்குகள் அல்ல. ஆனால், இந்தியாவில் வேலை நிறுத்தங்களுக்கு விசேஷ முக்கியத்துவம் இருக்கிறது. நாம் இயற்கையல்லாததோர் நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மூடி அகற்றப்பட்டு, சுதந்திரமாகப் புதிய காற்று இடுக்கு வழியாகப் புக ஆரம்பித்ததுமே, வேலை நிறுத்தங்களின் தொகை இன்னும் அதிகரிக்கும். வேலை நிறுத்த ஜுரம் இவ்விதம் பரவிக்கொண்டு போவதற்கு அடிப்படையான காரணம், மற்ற இடங்களைப் போன்றே இங்கும் வாழ்க்கை அதன் அடிப்படையிலிருந்து பெயர்ந்து போயிருப்பதுதான். அதாவது, சமய தரும அடிப்படையிலிருந்து அது புரண்டுவிட்டது. அந்த அடிப்படைக்குப் பதிலாக 'பண பந்த' அடிப்படை வாழ்க்கைக்கு ஏற்பட்டுவிட்டது என்று ஆங்கில அறிஞர் ஒருவர் கூறுகிறார். அது மிகவும் ஆபத்தான பந்தமாகும். ஆனால், சமய தரும அடிப்படை இருக்கும்போதுகூட, வேலை நிறுத்தங்கள் இருந்தே வரும். ஏனெனில், வாழ்க்கையின் எல்லாவற்றிற்குமே சமய தருமம் அடிப்படையாக இருந்துவிடும் என்பது அவ்வளவாக நினைக்க முடியாதது. ஆகவே, ஒரு பக்கத்தில் ஏய்த்துச் சுரண்டுவதற்கான முயற்சிகள் இருக்கும்போது மற்றோர் பக்கத்தில் வேலை நிறுத்தங்களும்

இருக்கும். ஆனல், அப்பொழுது இந்த வேலே நிறுத்தங்கள் முற்றிலும் அகிம்சையையே கொண்டதாக இருக்கும். அத்தகைய வேலே நிறுத்தங்கள் யாருக்கும் தீமையையே செய்யாது. இத்தகையதோர் வேலே நிறுத்தமே ஜெனரல் ஸ்மட்ஸைப் பணியும்படி ஒரு வேளே செய்திருக்கக்கூடும். 'ஆங்கிலேயர் ஒருவரை நீங்கள் காயப்படுத்தியிருந்தால் உங்களேச் சுட்டிருப்பேன் ; உங்கள் மக்களேயெல்லாம் நாடு கடத்தியிருப்பேன். இப்பொழுது இருக்கிற நிலேயில், உங்களேச் சிறையிலிட்டு உங்களேயும் உங்கள் மக்களேயும் அடக்கிவிட எல்லா வகையிலும் நான் முயன்றேன். ஆனல்,நீங்கள் பதிலுக்கு எதுவும் செய்யாமலிருக்கும்போது எவ்வளவு காலத்திற்குத்தான் நான் இவ்வாறு செய்துகொண்டே போக முடியும்?' என்ருர் ஜான் ஸ்மட்ஸ். அப்பொழுது இந்தியரெல்லோரும் தென்னுப்பிரிக்காவில் கூலிகள் என்றே அழைக்கப்பட்டு வந்தனர். என்ருலும், கூலிகளின் சார்பாக இருந்த சாதாரணமான கூலியிடம் அவர் சமரச ஒப்பந்தத்திற்கு வரவேண்டியதாயிற்று.

—' ஹரிஜன் ' – 22—9—1946

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற பத்தியில் முன்னுல் வெளியானது.]

## 2

# முதலாளித்துவமும் வேலே நிறுத்தமும்

தொழிலாளர் வேலே நிறுத்தம் செய்யும்போது முதலாளிகள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? இந்தக் கேள்வி நீண்ட காலமாக இருந்து வருகிறது, இச்சமயத்தில் இது அதிக முக்கியமானதாகவும் ஆகியிருக்கிறது. இதற்குள்ள ஒரு வழி, 'அமெரிக்க' என்று பெயரிடப்பட்டுள்ள, அல்லது நிந்தனேப் பெயரிடப்பட்டுள்ளதான அடக்கி ஒடுக்கிவிடும் வழி. குண்டர்களே ஏற்பாடு செய்து அதன் மூலம் தொழிலாளரை அடக்கி ஒடுக்குவதும் இவ்வழியில் சேர்ந்திருக்கிறது. இது தவருனது, நாசகரமானது என்று ஒவ்வொருவரும் கருதவேண்டும். நியாயமானதும், கௌரவமானதுமான மற்ருேர் வழி, ஒவ்வொரு வேலே நிறுத்தத்தையும் அதன் தகுதியைக்கொண்டு கவனித்து, தொழிலாளருக்கு உரியதை அளிப்பது. அப்படி அளிப்பது, உரியது என்று முதலாளிகள் கருதுவதை அல்ல. ஆனல், தங்களுக்கு உரியது என்று தொழிலாளர் என்ன நினேக்கிருர்களோ, புத்திசாலித்தனத்தோடுகூடிய பொதுஜன அபிப்பிராயம், நியாயம் என்று எதைக் கருதுகிறதோ அதைக் கொடுத்துவிட வேண்டும்.

நியாயமாகவே ஆரம்பக் கேள்வி ஒன்று எழுகிறது : ஒழுங் கான முறையில் அமைந்த ஒரு ஸ்தாபனத்தில் வேலை நிறுத்தம் என்பதே ஏன் ஏற்படவேண்டும் ? தொழிலாளருக்கும் முதலாளி களுக்கும் பூரணமான நம்பிக்கை இருந்து, பரஸ்பர மரியாதையும் சமத்துவத்தை அங்கீகரிப்பதும் இருந்துவிட்டால், வேலை நிறுத்தம் என்பது அசாத்தியமானதாகவே இருக்க வேண்டும். மிகுந்த ஒழுங்கான முறையில் அமைந்த ஸ்தாபனங்களில்கூட, தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் சில சமயங்களில் அபிப் பிராயபேதம் ஏற்பட்டுவிடக் கூடுமாகையால், அத்தகைய விஷ யங்களில் மத்தியஸ்தர் செய்யும் முடிவுகளைப் பூரணமான நல்லெண்ணத்துடன் நிறைவேற்றி வைத்துவிடுவதை முன்னிட்டு மத்தியஸ்த முறை ஒன்று ஏன் இருந்துவரக்கூடாது ?

ஆனால், இருக்கிற விஷயத்தைத்தான் நாம் கவனிக்க வேண் டுமேயன்றி விஷயம் எப்படி இருக்க வேண்டும் என்பதைக் கொண்டு கவனிக்கக்கூடாது. நாளாகவாக தொழிலாளர் உலகம் தன்னுடைய கோரிக்கைகளை மேலும் வற்புறுத்திக் கொண்டே போகிறது. அவர்களுடைய கோரிக்கைகள் தினமும் அதிகரித்துக் கொண்டும் போகின்றன. அந்தக் கோரிக்கைகள் அமுலாக வேண்டும் என்ற ஆத்திரத்தில் பலாத்காரத்தில் இறங்கி விடவும் தொழிலாளர் உலகம் தயங்குவதில்லை. இவற்றை அமு லாக்குவதற்குப் புதிய முறைகளும் கையாளப்படுகின்றன. முத லாளிகளின் சொத்துக்களுக்குச் சேதத்தை உண்டாக்குவதற்கோ, யந்திரங்களைக் கெடுத்துவிடுவதற்கோ, வேலை நிறுத்தத்தில் சேராத கிழவர்களையும் கிழவிகளையும் சங்கடப்படுத்துவதற்கோ, வேலைக்குப் போகிறவர்களைப் பலவந்தமாகத் தடுத்துவிடுவ தற்கோ தொழிலாளர் தயங்குவது இல்லை. இத்தகைய நிலைமை களில் முதலாளிகள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் ?

தொழிலாளர்கள் உயர்வானவர்கள் என்று கருதப்படா விட்டாலும், முதலாளிகளும் தொழிலாளரும் சமமான பங்காளி களே என்பது என் அபிப்பிராயம். ஆனால், இன்று நாம் காண் பதோ, இதற்கு நேர்மாறானதாக இருக்கிறது. இதற்குக் காரணம், முதலாளிகள் அறிவைத் தங்களுக்கு உதவியாகக் கொண்டிருப்பதுதான். மூலதனம் ஒருங்கே திரண்டிருப்பது, அதனுடன் கொண்டு வரும் உயர்வான வசதியும் அவர்களுக்கு இருக்கிறது. அதை எப்படி உபயோகித்துக்கொள்ளுவது என் பதும் அவர்களுக்குத் தெரியும். ஒரு தனி ரூபாய்க்கு இருக்கும் சக்தி மிகக் குறைவானது. ஆனால், பணம் மூலதனமாகத் திரண்டு விடும்போது, தனிப்பட்ட ரூபாய்களின் மொத்தத் தொகைக்கு இருப்பதைவிட மிக அதிகப்படியான, வேறு முறையிலான சக்தியை அந்த இணைப்பு கிரகித்துவிடுகிறது. தனித்த முறை யில் கோடிக்கணக்கான நீர்த்துளிகள் சாதாரணமானவையே. அவை ஒன்று திரண்டுவிடும்போது சமுத்திரமாக ஆகி, அதன்மீது பெரிய கப்பல்கள் போவதோடு கடல் நாய்களும்

அதற்குள் இருக்கின்றன. இந்தியாவில் முதலாளிகள் சுமாராக ஒற்றுமையடைந்திருக்கிறார்கள். ஆனால், தொழிலாளரோ, தொழிலாளர் சங்கங்களும் அவர்களுடைய சம்மேளனங்களும் இருந்த போதிலும், அநேகமாக இன்னும் ஒன்றுபடாத நிலைமையிலேயே இருந்து வருகிறார்கள். ஆகையால், உண்மையான சேர்க்கை அளிக்கும் சக்தி தொழிலாளருக்கு இல்லை.

மேலும், தொழிலாளருக்குப் புத்திசாலித்தனமும் போதாது. இதனால் தனிப்பட்டவர்கள், தனிப்பட்டவர்களுடன் சண்டை போட்டுக்கொள்ளுவதோடு அவர்கள் சங்கங்களும் சங்கங்களோடு சண்டை போடுகின்றன. புத்திசாலித்தனம் இல்லாததால் சுயநலக்காரர்களும் யோக்கியப் பொறுப்பில்லாதவர்களும் விஷமங்களை உண்டாக்கி வளர்த்துவிடும் அளவுக்குக்கூட இவர்கள் ஏமாற்றப்பட்டு விடுவதில் போய் முடிந்து விடுகிறது. அகிம்சையின் ரகசியத்தை அறியாதவர்களாக இருப்பதால் இதைவிட அவர்கள் மேலாக இருப்பதற்கில்லை. இதன் மொத்த பலன், தொழிலாளர் கஷ்டப்படுவதுதான். அகிம்சை எப்படி வேலை செய்கிறது என்பதைத் தொழிலாளர் புரிந்துகொள்ளுவதாக இருந்தால், இவர்கள் ஒன்றுபடுவதால் ஏற்படும் சக்தி, சில முதலாளிகள் கையிலிருக்கும் உயிரில்லாத உலோகத்திற்கு இருக்கும் சக்தியைவிட எப்பொழுதும் மிஞ்சியதாக இருந்து வரும்.

ஆகவே, முதலாளிகளுக்கு நான் சொல்லும் புத்திமதி இது தான்: தாங்கள் உண்டாக்கியவை என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கும் ஸ்தாபனங்களின் உண்மையான சொந்தக்காரர்கள் தொழிலாளரே என்பதை மனமுவந்து முதலாளிகள் கருத வேண்டும். மேலும், தொழிலாளருக்குள் உறங்கிக் கிடக்கும் அறிவை வெளிப்படுத்தக்கூடியதான சிறந்த கல்வியை அவர்கள் பெறும்படி செய்ய வேண்டியது தங்கள் கடமை என்றும் முதலாளிகள் எண்ண வேண்டும். இந்தத் தொழிலாளரின் ஐக்கியம் அவர்களுக்கு அளிக்கும் சக்தியைச் சந்தோஷத்துடன் வளர்த்து, அதை முதலாளிகள் வரவேற்கவும் வேண்டும்.

இந்த உயர்வான வேலையை முதலாளிகள் ஒரே நாளில் செய்துவிட முடியாது. இதற்கு மத்தியில், தங்களுடைய ஸ்தாபனங்களில் வேலை நிறுத்தக்காரர்கள் செய்து வரும் நாசங்களைச் சமாளிக்க வேண்டியிருக்கும் முதலாளிகள் செய்ய வேண்டியது என்ன? அந்த ஸ்தாபனங்கள் முதலாளிகளுக்கு எவ்வளவு சொந்தமானவையோ அதே போலத் தொழிலாளருக்கும் சொந்தமானவையே. ஆகையால், அந்த ஸ்தாபனங்களின் முழு நிர்வாகத்தையும் வேலை நிறுத்தக்காரர்களிடமே உடனே ஒப்படைத்துவிட வேண்டும் என்று நான் தயங்காமல் முதலாளிகளுக்கு ஆலோசனை கூறுவேன். அந்த ஸ்தாபனங்களிலிருந்து முதலாளிகள் விரோதத்துடன் வெளியேறக்கூடாது. அது நியாயமானதாகையாலும்

தங்கள் நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காகவும், தொழிலாளருக்குத் தங்கள் இன்ஜினியர்கள், நுட்பத் திறமை வாய்ந்த சிப்பந்திகள் ஆகியவர்களின் உதவியையும் அளிக்க வேண்டும். முடிவாக இதனுல் தாங்கள் இழந்துவிட்டது எதுவுமே இல்லை என்பதை முதலாளிகள் காண்பார்கள். உண்மையில் நியாயமான அவர்கள் நடவடிக்கை எதிர்ப்பைப் போக்கி அவர்களுக்கு தொழிலாளரின் வாழ்த்துக்களையும் தேடித் தரும். தங்கள் மூலதனத்தைச் சரியானபடி உபயோகித்தவர்களுமாவார்கள். இத்தகைய காரியத்தைப் பரோபகார காரியமாக நான் கருதமாட்டேன். தங்களுக்குள்ள வசதிகளை முதலாளிகள் புத்திசாலித்தனமாக உபயோகித்துக்கொண்டதாவதோடு, கௌரவமான பங்காளிகளாக்கிக் கொண்டுவிட்ட தங்கள் தொழிலாளர் விஷயத்தில் யோக்கியமாக நடந்துகொண்டதுமே ஆகும்.

—'ஹரிஜன்' - 31—3—1946

# 3

# எப்பொழுது வேலை நிறுத்தம் செய்வது?

வேலை நிறுத்தங்கள் இக்காலத்தில் சமஜமானதாகி விட்டன. இப்பொழுது இருந்து வரும் அமைதியின்மைக்கு அறிகுறியே அவை. தெளிவில்லாத எல்லாவிதமான கருத்துக்களும் வியாபித்திருக்கின்றன. தெளிவில்லாத ஒரு நம்பிக்கையை எல்லோருக்கும் மூட்டி வருகிறது. இந்தத் தெளிவற்ற நம்பிக்கை திட்டமான உருவை அடையாதபோது ஏற்படும் ஏமாற்றம் அதிகக் கடுமையானதாக இருக்கும். ஆலோசகர்கள் என்றும், வழிகாட்டிகள் என்றும் கிளம்பியிருப்பவர்களின் தயவிலேயே, மற்ற இடங்களில் இருப்பதைப் போன்று இந்தியாவின் தொழிலாளர் உலகமும் இருந்து வருகிறது. இந்த ஆலோசனையாளர்களும் வழிகாட்டிகளும் எப்பொழுதுமே யோக்கியமானவர்களாக இருப்பதில்லை. அப்படியே யோக்கியமானவர்களாக இருந்தாலும் புத்திசாலிகளாக இருப்பதில்லை. தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் கதியைக் குறித்துத் தொழிலாளர் அதிருப்தியடைந்திருக்கிறுர்கள். அவர்கள் அதிருப்தியடைந்திருப்பதற்கு எல்லா காரணங்களும் உண்டு. முதலாளிகள் பணக்காரர்களாவதற்கு முக்கியமான காரணங்களாக இருப்பவர் தாங்களே என்று கருதிக்கொள்ளும்படி தொழிலாளர் போதிக்கப்பட்டிருக்கின்றனர். நியாயமாகவே போதிக்கப்பட்டிருக்கிறுர்கள். ஆகையால், இவர்கள் வேலை நிறுத்தம் செய்யும்படி செய்வதற்குச் சொற்ப முயற்சி போதும். ராஜீய நிலைமையும் இந்தியத் தொழிலாளரைப் பாதிக்க ஆரம்பித்திருக்கிறது. ராஜீய நோக்

கங்களுக்காக வேலை நிறுத்தங்களைத் தூண்டி விடலாம் என்று கருதும் தொழிலாளர் தலைவர்களுக்கும் குறைவில்லை.

இத்தகைய காரியத்திற்குத் தொழிலாளர் வேலை நிறுத்தங்களைப் பயன்படுத்திக்கொள்ளுவது மிக மோசமான தவறாகும் என்பது என் அபிப்பிராயம். இத்தகைய வேலை நிறுத்தங்கள் ராஜீய காரியங்களுக்குப் பயன்படும் என்பதை நான் மறக்கவில்லை. ஆனால், அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமைத் திட்டத்தில் அடங்கியவை அன்று வேலை நிறுத்தங்கள். தொழிலாளர்கள் நாட்டின் பொருளாதார நிலைமையைப் புரிந்து கொண்டு, பொதுவான நன்மைக்கு வேலை செய்யத் தயாராவதற்கு முன்னால் தொழிலாளரை ராஜீய காரியங்களுக்கு உபயோகித்துக்கொள்ளுவது அதிக ஆபத்தானது என்பதை அறிவுள்ளவர்கள் கண்டுகொள்ளுவதற்கு அதிகச் சிரமம் அவசியமில்லை. தொழிலாளர்கள் உடலையும் உயிரையும் நல்ல முறையில் ஒருங்கே வைத்திருக்கும் நிலையில் தங்கள் நிலைமையைச் சீர்ப்படுத்திக் கொள்ளுவதற்கு முன்னால், தொழிலாளரிடமிருந்து அதைத் திடீரென்று எதிர்பார்ப்பதற்கும் இல்லை. ஆகையால், தொழிலாளர் செய்யக்கூடிய மிகப் பெரிய ராஜீய உதவி, தங்களுடைய சொந்த நிலைமையை விருத்தி செய்துகொள்ளுவதும் விஷயங்களைச் சரியாகத் தெரிந்துகொண்டிருப்பவர்களாவதும், தங்கள் உரிமைகளை வற்புறுத்துவதும், முதலாளிகள் செய்யும் உற்பத்தியில் தாங்கள் முக்கியமான பங்கு கொண்டிருப்பதால் அந்த உற்பத்தியைச் சரியானபடி முதலாளிகள் பயன்படுத்தவேண்டும் என்று கோருவதும் ஆகும். ஆகையால், தொழிலாளர்கள் தாங்களும் பாகச் சொந்தக்காரர்கள் என்ற நிலைக்குத் தங்களை உயர்த்திக்கொள்ளுவதே சரியான விருத்தியாகும். எனவே, இப்போதைக்கு வேலை நிறுத்தங்கள் தொழிலாளரின் நிலையை நேரடியாக மேன்மைப் படுத்திக்கொள்ளுவதற்காக மாத்திரமே இருக்க வேண்டும். தேச பக்தி உணர்ச்சியை அவர்கள் அடைந்துவிட்ட பிறகு. தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களின் விலையை ஒழுங்குபடுத்துவதற்கும் வேலை நிறுத்தங்கள் இருக்க வேண்டும்.

வெற்றிகரமான வேலை நிறுத்தத்திற்கான நிபந்தனைகள் எளிதானவை. அவை நிறைவேற்றப்பட்டு விடுமானால் வேலை நிறுத்தங்கள் தோல்வியடைய வேண்டியதே இல்லை. அவை யாவன :

1. வேலை நிறுத்தத்தின் காரணம் நியாயமானதாக இருக்க வேண்டும்.

2. வேலை நிறுத்தம் செய்தவர்களிடையே ஒரே விதமான கருத்து இருந்து வரவேண்டும்.

3. வேலை நிறுத்தத்தில் சேராதவர்கள் மீது பலாத்காரத்தை உபயோகிக்கக் கூடாது.

4. வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள், வேலை நிறுத்த காலத்தில் தொழிலாளர் சங்க நிதியைக் கொண்டு வாழாமல் தாங்களே சமாளித்துக்கொள்ள வேண்டும். ஆகையால், அவர்கள் ஏதாவது ஒரு பயனுள்ள, உற்பத்திகரமான தொழிலில் தாற்காலிகமாக ஈடுபட்டிருக்க வேண்டும்.

5. வேலை நிறுத்தம் செய்திருப்பவர்களுக்குப் பதிலாக வேலைக்குப் போகப் போதுமான அளவு தொழிலாளர் இருக்கும் போது வேலை நிறுத்தம் ஒரு பரிகாரமே ஆகாது. அப்படிப்பட்ட நிலைமை இருக்கும்போது, தொழிலாளர் அக்கிரமமாக நடத்தப் பட்டோ, குறைவான கூலி முதலியன கொடுக்கப்பட்டோ வந்தால், வேலையை ராஜிநாமாச் செய்துவிடுவதுதான் பரிகாரம்.

6. மேலே சொன்ன நிபந்தனைகளெல்லாம் சரியாக நிறை வேற்றப்படாத சமயத்திலும், வேலை நிறுத்தங்கள் வெற்றிகரமாக நடந்திருக்கின்றன. ஆனால், முதலாளிகள் பலவீனமாக இருந் தார்கள், குற்றமுள்ள நெஞ்சு அவர்களுக்கு இருந்தது என்ப தையே அந்த வேலை நிறுத்தங்கள் நிரூபிக்கின்றன. கெட்ட உதாரணங்களைப் பின்பற்றி நடந்து விடுவதால் எப்பொழுதுமே நாம் படுமோசமான தவறுகளைச் செய்துவிடுகிறோம். நமக்கு விஷயம் பூரணமாகத் தெரியாத உதாரணங்களைப் பின்பற்றி நடந்துவிடாமல் இருப்பதே மிகப் பத்திரமானது. ஆனால், நாம் அறிந்ததாகவுள்ள நிபந்தனைகளைப் பின்பற்றி நடப்பதோடு வெற்றிக்கு அவை அவசியம் என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

—‘ எங் இந்தியா ’ - 16—2—1921

[முன்னால் இக்கட்டுரை ‘வேலை நிறுத்தங்கள்’ என்ற தலைப்பில் வெளியாயிற்று.]

## 4

# வெற்றிக்கு மூன்று நிபந்தனைகள்

வேலை நிறுத்தத்தைப் பற்றிய விஷயத்திற்கு இனி வரு வோம். உலகம் எங்குமே வேலை நிறுத்தப் பேச்சு இன்று பலமாக இருந்து வருகிறது. அற்ப காரணங்களுக்கெல்லாம் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்து விடுகிறார்கள். அநேக வேலை நிறுத்தங்கள் தொழிலாளருக்கு நன்மையைச் செய்வ தற்குப் பதிலாகத் தீமையையே செய்திருக்கின்றன. சென்ற ஆறு மாத காலத்தில் இதுதான் என் சொந்த அனுபவம். பம்பாயில் நடந்த வேலை நிறுத்தங்கள், டாட்டா இரும்புத் தொழிற்சாலையில் நடந்த ஒரு வேலை நிறுத்தம், பஞ்சாபில் ரயில்வே

தொழிலாளர்கள் பிரமாதமாகச் செய்த வேலை நிறுத்தம் ஆகியவைகளை என்னாலானவரை ஆராய்ந்திருக்கிறேன். இந்த வேலை நிறுத்தங்களிலெல்லாம் தோல்வியே ஏற்பட்டது. தாங்கள் விரும்பியவைகளை முழு அளவில் தொழிலாளர் அடைந்துவிட முடியவில்லை. இதற்கு என்ன காரணம்? தொழிலாளர் தவறான வழியில் கொண்டு போகப்பட்டு விட்டனர். இரு ரகமான தலைவர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். உங்களிலிருந்தே தோன்றியிருக்கும் தலைவர்கள் இருக்கிறார்கள். அந்தத் தலைவர்களோ, தொழிலாளர்களல்லாதவர்களான தலைவர்களின் ஆலோசனையைக் கேட்டு அவர்களால் நடத்திக்கொண்டு போகப்படுகின்றனர். இப்படிப்பட்ட தலைவர்கள், தொழிலாளரிடம் அனுதாபமுள்ளவர்கள், அல்லது அனுதாபமுள்ளவர்கள் என எதிர்பார்க்கப்படுகிறவர்கள். தொழிலாளர்கள், தொழிலாளர்களாகவுள்ள தலைவர்கள், இந்தத் தலைவர்கள் ஆகிய இம்மூவரிடையே பூரணமான ஒருமைப்பாடு இருந்தாலன்றி, நிச்சயம் தோல்வி ஏற்பட்டே தீரும்.

மேலே நான் சொன்ன நான்கு வேலை நிறுத்தங்களிலும் அந்தப் பூரணமான ஒருமைப்பாடு இல்லை. தோல்விக்கு மற்றோர் முக்கியமான காரணத்தையும் நான் கண்டுகொண்டேன். தொழிலாளர், தங்கள் ஜீவனத்திற்குத் தொழிலாளர் சங்கங்களிடமிருந்து பண உதவியை எதிர்பார்க்கிறார்கள். தொழிலாளர்கள் தங்கள் ஜீவனத்திற்குத் தொழிலாளர் சங்கத்தின் நிதியை நம்பி இருக்கிறவரையில் அவர்கள் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போக முடியாது; தொடர்ந்து நடத்தப்படாத எந்த வேலை நிறுத்தமும் முழு வெற்றியையும் அடையவும் முடியாது. நான் நடத்திய வேலைநிறுத்தங்களிலெல்லாம் ஓர் அத்தியாவசியமான விதியை நிர்ணயித்திருந்தேன். தொழிலாளர் ஜீவனத்திற்கும் தாங்களேதான் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும் என்பதே அது. வெற்றியின் ரகசியம் அதில்தான் இருக்கிறது; நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டிய போதனையும் அதில்தான் இருக்கிறது. நீங்கள் ஓர் எஜமானனிடம் வேலை செய்து ஒரு குறிப்பிட்ட ஊதியத்தைப் பெற முடிந்தால், அதே ஊதியத்தை வேறு எங்கும் சம்பாதித்துவிடுவதற்குத் தகுதி வாய்ந்ததாகவும் ஏற்றதாகவும் உங்கள் உழைப்பு இருக்க வேண்டும் என்பதை அறிந்துகொள்ளக்கூடியவர்களாக நீங்கள் இருக்க வேண்டும். ஆகையால், வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் சும்மா இருந்து வெற்றி பெற்றுவிடலாம் என்று எதிர்பார்க்கக்கூடாது. உங்கள் முயற்சி நியாயமானதாக இருக்க வேண்டும். 'கருங்காலிகள்' என்று நீங்கள் சொல்லுகிறவர்கள் மீது நிர்ப்பந்தத்தைக் கொண்டுவரக்கூடாது. உங்கள் சகோதரத் தொழிலாளர் மீது உபயோகிக்கும் இத்தகைய பலவந்தம், உங்கள் மீதே திருப்பி வேலை செய்ய ஆரம்பித்துவிடும். இந்த

மூன்று நிபந்தனைகளையும் நிறைவேற்றிவிட்டால் எந்த வேலைநிறுத் தமும் தோல்வியடைய வேண்டியதில்லை என்று உங்கள் ஆலோ சகர்கள் உங்களுக்குக் கூறுவார்கள் என்றே நினைக்கிறேன். ஆனால், வேலை நிறுத்தத்தில் இறங்கும் முன்பு அதைக் குறித்து நூறு தடவைகள் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று அவர்கள் உடனே உங்களுக்கு எடுத்துக்காட்டுகிறார்கள். உங்களுடைய உரிமைகளைக் குறித்தும், அவற்றை அமுலுக்குக்கொண்டுவருவதற் கானமுறைகளைக் குறித்தும் நான் சொல்லக்கூடியவைஅவ்வளவே. ஆனால், தொழிலாளர் ஒன்றுபட்டு பலம் பெற்றுவிடும்போது, வேலை நிறுத்தங்கள் குறைந்துபோய் எப்பொழுதோ நடப்பது என்றும் ஆகிவிடும். உங்கள் அறிவின் முன்னேற்றமும் ஒற்றுமை யும் அபிவிருத்தி அடைந்துகொண்டு போகப்போக, வேலை நிறுத்தம் என்ற கொள்கைக்குப் பதிலாக மத்தியஸ்தம் என்ற கொள்கை வந்துவிடுவதைக் காண்பீர்கள். அந்தக் கட்டத்தை அடைய வேண்டிய சமயம் இப்பொழுது வந்துவிட்டது.

—ஜி. ஏ. நடேசன் கம்பெனி வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பிரசங்கங்களும், எழுத்துக்களும்' என்ற நூலின் நான்காம் பதிப்பிலிருந்து எடுத்தது.

[1920-இல் சென்னையில் நடந்த தொழிலாளரின் பிரமாண்டமான கூட்டத்தில் மகாத்மா செய்த ஒரு பிரசங்கத்திலிருந்து.]

## 5

## யுத்த எதிர்ப்பு வேலை நிறுத்த நிபந்தனைகள்

பிரிட்டிஷ் யுத்த எதிர்ப்பாளர்களின் பத்திரிகையான 'இனி மேல் போர் இல்லை' என்ற பத்திரிகையிலிருந்து இதை எடுத்து ஒரு நண்பர் எனக்கு அனுப்பியிருக்கிறார். ஸ்ரீ ஏ. பென்னர் பிராக்வே, யுத்த எதிர்ப்பு வேலை நிறுத்தத்திற்கு ஒரு சோதனை யாக விதித்திருக்கும் கீழ்க்கண்ட நிபந்தனைகளை நான் பிரசுரிக் கிறேன் :

1. மனித உயிரை நாசம் செய்யும் ஒரு சமூகத் தீமையை எதிர்த்துச் செய்யும் வேலை நிறுத்தம், யுத்தத்திற்கு எதிரான வேலை நிறுத்தமே ஆவ தோடு யுத்த எதிர்ப்புக் காரியமும் ஆகும். (பீரங்கிகள் எவ்வளவு பேரைக் கொன்றிருக்கின்றனவோ அவ்வளவு பேரை பட்டினிக் கூலியும் கொல்லு கிறது.)

2. இத்தகைய தீமைகளைப் போக்குவதற்கு 'அரசியல் சம்பந்தமான' முறைகளை உபயோகிக்கலாம் என்று சொல்லப்படுமானால், யுத்த விஷயத் திலும் அதையே சொல்லலாம். நமது 'அரசியல்' யந்திரம் போதுமானதாக

இல்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் வாக்காளர்களின் மனத்தில் சம்பளக் குறைப்போ, யுத்தமோ இருக்கவில்லை.

3. சம்பளக் குறைப்பை எதிர்த்துச் செய்யும் ஒரு வேலை நிறுத்தம் (முக்கியமாகப் பொது வேலை நிறுத்தம்) தேசத்தையோ அல்லது அரசாங்கத்தையோ நிர்ப்பந்திக்கச் செய்யும் காரியம் என்று சொல்லப்படுவதானால், யுத்தத்திற்கு எதிராக நடத்தும் பொது வேலை நிறுத்த விஷயத்திலும் இதையே சொல்லலாம். உண்மையில், தேச மக்களில் பெரும் பகுதியினர் ஆதரித்தாலன்றி இந்த இரண்டில் எதுவும் வெற்றி பெறுவதற்கு இல்லை.

4. பொருளாதார முற்றுகை போன்றது வேலை நிறுத்தம் என்று சொல்லுவது சரியல்ல. பட்டினி அபாயம் அதில் இருக்கும் வரையில் வேலை நிறுத்தம் செய்கிறவர்கள்தான் முதலில் துன்பப்பட வேண்டியவர்களாவார்கள். உண்மையில், சமீபத்தில் நடந்த பொது வேலை நிறுத்தத்தில், வாழ்க்கைக்கும் சுகாதாரத்திற்கும் வேண்டியவைகளாக இருப்பவைகளில் ஒத்துழைக்கத் தொழிற் சங்கக் காங்கிரஸ் தயாராக இருந்தது. அந்த ஒத்துழைப்பை ஏற்க அரசாங்கம்தான் மறுத்துவிட்டது.

5. ஒரு வேலை நிறுத்தம், யுத்த எதிர்ப்பானதா, இல்லையா என்பதை முடிவு செய்வதற்கான விஷயம், எந்த உணர்ச்சியைக்கொண்டு அது எழுந்தது என்பதைக் கவனிப்பதே. யுத்தத்திற்கு எதிரான ஒரு வேலை நிறுத்தத்தின் நோக்கம், யுத்தத்தின் பேரிலிருக்கும் வெறுப்பைவிட அரசாங்கத்திலிருப்பவர்களின் மீது கொள்ளும் வெறுப்பாகவே இருக்குமாயின், உள்நாட்டு யுத்தமாக மாறிவிடக்கூடிய உணர்ச்சி அதில் இருக்குமானால், அது யுத்த எதிர்ப்புச் செய்கை ஆகாது. சம்பளக் குறைப்பை எதிர்த்துச் செய்யும் வேலை நிறுத்தம் முதலாளிகளிடமும் அரசாங்கத்திலிருப்பவர்களிடமும் கொண்ட வெறுப்பினால் ஏற்பட்டதாக இருக்குமானால், சமூக விரோத உணர்ச்சியினாலேயே உண்டானதாக இருக்குமாயின், அதுவும் யுத்த எதிர்ப்பாக ஆகாது. ஆனால், இந்த இரண்டு வேலை நிறுத்தங்களும் தீமைகளை மாத்திரமே எதிர்க்கும் உணர்ச்சியின் பேரில் நடந்தால் அவை யுத்த எதிர்ப்புக் காரியங்களாகும்.

6. யுத்த எதிர்ப்பு அல்லாத உணர்ச்சி, பிரசங்கங்கள் மூலமும், எப்பொழுதோ சில சமயங்களில் வேலை நிறுத்தங்களினாலும், தன்னை வெளிப்படுத்திக்கொள்ளுகிறது என்று ஒப்புக்கொள்ளப்படுகிறது. என்றாலும், பொது வேலை நிறுத்தத்தின் முக்கியமான நோக்கம், தார்மிக எதிர்ப்பைத் தனக்குத் தானே தியாகம் செய்துகொள்ளுவதேயன்றிச் சமூக விரோத சக்தியோ, சொந்த வெறுப்போ அல்ல என்று சொல்லக் கொஞ்சமும் தயங்க மாட்டேன். இதுதான் ஆன்மிக சக்தியை அளித்தது. அற்புதமான வகையில் மனிதர் கட்டுத்திட்டத்துடன் நடந்துகொண்ட ரகசியமும் இதில்தான் இருக்கிறது.

எப்பொழுதோ நடக்கும் ராணுவப் போரில் நடக்கும் கொடுமைகளை மாத்திரம் கண்டு, நமது சமூக அமைப்பில் தொடர்ந்து நடந்துவரும் கொடுமைகளைக் காணமலிருக்கும் யுத்த எதிர்ப்பு பயனற்றதாகும். நமது யுத்த எதிர்ப்பு, யுத்தமே இல்லாதபடிச் செய்தது என்பதில் மாத்திரமேயன்றி மொத்தத்தில் யுத்தமில்லாத நாகரிகத்தை உண்டாக்குவதென்ற விசாலமான மனித இயக்கத்திலும் வியாபித்தாலன்றி மனித வர்க்கத்தின் முன்னேற்றத்தில் அதற்கு

அதிக முக்கியத்துவம் எதுவும் இல்லை. இதன் செல்வாக்கு எதுவும் இல்லாமலேயே வாழ்க்கை உணர்ச்சி அதை மிஞ்சிப் போய்விடும்.

யுத்தமே இல்லாதபடி செய்ய முற்படும் இயக்கம், இந்த உண்மையை ஒப்புக்கொள்ளும் வரையில்தான் அதன் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டதாகும்.

இந்த அற்புதமான நிபந்தனைகளுக்கு நான் இன்னும் ஒரு சோதனையையும் சேர்ப்பேன். ஒரு யுத்த வேலை நிறுத்தம், நீக்க வேண்டியதாயுள்ள குறைகளால் கஷ்டப்படுகிறவர்களோடு நிற்பதாக இருக்க வேண்டும். டிம்பக்டுவிலிருக்கும் தீக்குச்சித் தொழிலாளர்கள் தங்கள் நிலை குறித்து அதிகத் திருப்தியுள்ளவர்களாக இருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்கள், பட்டினிக் கூலியைப் பெற்றுவரும் ஆலைத் தொழிலாளர்களுக்கு அனுதாபம் காட்டுவதற்காக வேலை நிறுத்தம் செய்தால், தீக்குச்சித் தொழிலாளரின் வேலை நிறுத்தம் பலாத்கார ரகத்தைச் சேர்ந்ததாகும். இவர்கள் பலாத்காரக் குற்றச்சாட்டுக்கு ஆளாகாமல், டிம்பக்டு ஆலைகளின் சொந்தக்காரர்களின் துணிகளை வாங்க மறுத்து விடுவார்களானால், அவர்கள் ஆலைத் தொழிலாளருக்குச் சரியானபடி உதவியவர்களாவார்கள். அப்படி அவர்கள் செய்யவும் வேண்டும். ஆனால், நேரடியாகக் கஷ்டப்படாதவர்களும் வேலை நிறுத்தம் செய்ய வேண்டிய கடமை ஏற்படக்கூடிய சமயங்கள் ஏற்படுவதும் சாத்தியமே. தீக்குச்சித் தொழிலாளர்களும் டிம்பக்டு ஆலை முதலாளிகளுடன் சேர்ந்துகொள்ளுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது ஆலைத் தொழிலாளருடன் சேர்ந்துகொண்டு வேலை நிறுத்தம் செய்வது தீக்குச்சித் தொழிலாளரின் கடமையாகும். ஆனால், இந்தச் சேர்க்கையை நான் உதாரணத்திற்காகவே கூறியிருக்கிறேன். முடிவாக ஒவ்வொரு விஷயத்தையும் அதன் தராதரத்தைக்கொண்டே முடிவுக்கு வர வேண்டும். பலாத்காரம் ஒரு மறைவான சக்தி. அது இருப்பதாக நீங்கள் உணர்ந்தாலும், அது இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்துவிடுவது எப்பொழுதும் அதிகக் கஷ்டமானது.

—'எங் இந்தியா' - 18—11—1926

## 6

# அமைதியான வேலை நிறுத்தங்கள்

**கேள்வி :** காலித்தனங்களையோ, பலாத்காரத்தையோ தவிர்க்கும் வகையில் ஒரு வேலை நிறுத்தத்தை எப்படி நடத்துவது?

**பதில் :** வேலை நிறுத்தம் தானே ஏற்படுவதாக இருக்க வேண்டுமேயன்றி அதற்காக ஏற்பாடு செய்து ஆரம்பமான

தாக இருக்கக்கூடாது. எந்தவிதமான பலவந்தமும் இல்லாமல் வேலை நிறுத்தம் செய்யப்பட்டால், காலித்தனத்திற்கோ, கொள்ளைக்கோ இடமே இல்லை. அத்தகைய வேலை நிறுத்தத்தில், வேலை நிறுத்தம் செய்திருப்போரிடையே பூரணமான ஒத்துழைப்பு இருக்கும். அது அமைதியானதாக இருப்பதோடு பலாத்காரத்தைக் காட்டும் எதுவும் அதில் இராது. வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் தனித்தோ, சிலர் சேர்ந்தோ ஜீவனத்திற்கு வேறு ஏதாவது வேலை செய்து வர வேண்டும். எந்தவிதமான வேலையைச் செய்து வருவது என்பது முன்கூட்டியே யோசித்து முடிவு செய்ததாக இருக்க வேண்டும். இத்தகைய அமைதியான, சரியான, உறுதியான வேலை நிறுத்தத்தில், காலித்தனங்களுக்கோ,கொள்ளைகளுக்கோ இடமே இராது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இப்படிப்பட்ட வேலை நிறுத்தங்களை நான் அறிவேன். கற்பனையானதோர் காட்சியை நான் சித்தரித்துவிடவில்லை.

—'ஹரிஜன்' - 2—6—1946

[ இது முன்னல் 'கேள்விப் பெட்டி' என்ற பத்தியில் வெளியாயிற்று.]

# 7

# வேலை நிறுத்தக்காரர்களுக்கு எச்சரிக்கை

பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி பேசியபோது கூறியதாவது: "நான் கேள்விப்படுகிறவைகளிலிருந்தும், பத்திரிகைகளில் படிப்பவைகளிலிருந்தும், இந்தியாவில் வேலை நிறுத்தங்கள் தொல்லையாகிக்கொண்டு வருகின்றன என்று அறிகிறேன். கல்கத்தாவில் அகௌண்டெண்டு ஜெனரலின் காரியாலயத்தில் குமாஸ்தாக்கள், 'பேனாவைக் கீழே வைத்துவிடும்' வேலை நிறுத்தம் செய்தனர். இக்காரியாலயம் செய்வது போன்ற சேவைகள் பொதுஜன நன்மைக்கானவை. இவற்றில் கோளாறு ஏற்படுவது பொதுஜன வாழ்க்கைக்குக் கஷ்டங்களை உண்டாக்கும். இந்த இலாகாக்களிலும் மற்றவைகளிலும் உள்ள குமாஸ்தாக்களும் மற்றவர்களும், நிலைமை எப்படி இருந்தாலும், அடிமைகளாக இருந்து வரவேண்டியதுதான் என்று சொல்லுபவன் அல்ல, நான். ஆயினும், குறைகளை நிவர்த்தி செய்துகொள்ளுவதற்கு ஆட்சேபகரமல்லாத மற்ற வழிகள் இருக்கின்றன. கீழ்ச் சிப்பந்திகளுக்கு அதிகமான சம்பள உயர்வு கொடுக்க வேண்டும் என்று சம்பளக் கமிஷன் சிபார்சு செய்திருக்கிறது. ஆனல், அவர்களோ இன்னும் அதிகமாக வேண்டும் என்கிறார்கள். இதுவே வேலை

நிறுத்தத்தின் காரணம் என்று தெரிகிறது. டைரக்டருக்கு மாதம் ரூ. 2,000 சம்பளமும், சப்ராஸிக்கு மாதம் ரூ. 20 சம்பளமும் ஏன் இருக்க வேண்டும்? நிச்சயமாக இது விசித்திரமாகவே இருக்கிறது. லட்சியமான நிலைமையில் ஒரு பாரிஸ்டரின் வருவாயும் பங்கியின் (தோட்டியின்) வருவாயும் ஒரே மாதிரியானதாக இருக்க வேண்டும் என்று நம்புகிறவன் நான். ஆனால், உலகம் முழுவதிலுமுள்ள சமூகம், அந்த லட்சிய நிலைக்கு வெகு தூரத்திலேயே இருக்கிறது என்பதை எல்லோரும் அறிவார்கள். ஒவ்வொருவருக்கும் தினத்திற்கு ரூ. 100 கொடுப்பது என்பது சாத்தியமல்ல. ஒரு பாரிஸ்டர் பெறும் ஊதியம், நியாயமாக அவருக்கு உரியது அல்ல என்பதையும் அறிவேன். என்றாலும், கட்சிக்காரர்கள் ஏராளமாகக் கொட்டிக் கொடுக்கிறார்கள். கீழே இருப்பவர்களைப் பார்த்தால், தையற்காரருக்கு மக்கள் தினத்திற்கு ரூ. 4 சந்தோஷமாகக் கொடுப்பார்கள். ஆனால், தெருக் கூட்டுகிறவருக்குத் தினத்திற்கு எட்டு அணவுக்கு மேல்கொடுக்க மாட்டார்கள். வருவாயில் ஒரேமாதிரியான அளவு இருக்கும்படி செய்வதற்கு, சமூகத்திற்குப் பொறுமையோடு கூடிய இடைவிடாத போதனை வேண்டும். அத்தகைய சமத்துவ நிலையை அடைவதற்கு, சமூகத்திற்கு அதிக முற்போக்கான பயிற்சியும் தேவை. இதற்கு மத்தியில் உயர்ந்த உத்தியோகங்களில் இருப்பவர்களுக்கும் கீழ்ச் சிப்பந்திகளுக்கும் சம்பளத்தில் இருக்கும் அதிக வித்தியாசத்தையும் ஒருவாறு சமப்படுத்துவதற்கு எல்லாவித முயற்சியையும் செய்ய வேண்டும். சம்பளக் கமிஷன் அதைச் செய்திருக்கிறது. சம்பள உயர்வு திருப்திகரமானதாக இல்லை என்றால், அதன் காரணத்தைப் பரிசீலனை செய்ய வேண்டும். அதிகப்படியான பளுவைத் தாங்க நாட்டுக்குச் சக்தி இருக்கிறதா என்பதையும் கவனிக்க வேண்டும். வாழ்க்கையில் திடீர் ஏற்றம் என்று எதுவும் இல்லை. பொன் முட்டையிடும் வாத்தை அவர்கள் கொன்றுவிடாமல் இருக்கட்டும். அக்காரியம் நாட்டை ஓட்டாண்டி ஆக்கிவிடும்.

“பம்பாயில் சம்பளக் கமிஷனின் சிபார்சுகளை அரசாங்கம் இப்பொழுதே அமுலுக்குக் கொண்டு வந்து விட்டது என்று அறிகிறேன். எனினும், இன்னும் அதிகமான சம்பள உயர்வு வேண்டும் என்று அங்கே கிளர்ச்சி இருக்கிறது. ஒரு நாளைக்கு அடையாள வேலை நிறுத்தம் செய்வது என்ற மிரட்டலும் இருந்து வருகிறது. அவ்வாறு கூறப்படுவது உண்மையாக இருக்காது என்றே நம்புகிறேன். அது உண்மையாக இருப்பின், மிரட்டலுக்கு அதிகமாகக் காரியம் போய்விட அனுமதிக்கப் பட்டுவிடாது என்றும் நம்புகிறேன். வேலை நிறுத்தம் செய்து தான் தீருவது என்று இருப்பார்களாயின், அத்தகைய வேலை நிறுத்தத்தை ஆரம்பிப்பதற்கு முன்னால் அதைக் குறித்துத் தீரச் சிந்தித்துப் பார்க்கும்படி இந்த இயக்கத்தின் தலைவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த இயக்கத்திற்குப் பின்னால் இருந்துவரும் தலைவர்களின் பலத்தையோ, செல்வாக்கையோ

'சோதிப்பதற்கு என்று இந்த வேலை நிறுத்தம் இருந்தாலன்றி இம்முயற்சி அர்த்தமற்றது என்றுதான் எனக்குத் தோன்று கிறது. அதுதான் விஷயம் என்றால், இதை நாட்டுக்குத் தீமை விளைவிக்கும் ஆபத்தான காரியம் என்றுதான் நான் கருத முடியும். பொது வாழ்வில் செல்வாக்குள்ளவர்களுக்கெல்லாம் ஒன்று நினைவில் இருக்கட்டும். கட்சியின் லாபத்தை எண்ணிச் செய்யப்படும் காரியம், அந்நிய ஆதிக்கத்திலிருந்து நாம் அடை யும் தறுவாயிலிருக்கும் சுதந்திரத்திற்குத்தான் ஆபத்தை விளைவிக்கும்."

—'ஹரிஜன்' - 10—8—1947

['காந்திஜியின் பிரசங்கங்கள்' என்பதிலிருந்து எடுத்தது.]

# 8

# திடீர் வேலை நிறுத்தங்கள்

'**கேள்வி:** இங்குமங்குமாக எங்கோ ஏற்படும் வேலை நிறுத் தங்கள், காங்கிரஸ் ஆதரிக்க முடியாதவைகளாக இருக்கும் போது, அவைகளுக்கு முடிவு காண்பதற்கு காங்கிரஸ்காரர் களும் பொது மக்களும் செய்ய வேண்டியது என்ன?

**பதில்:** முதலாவதாக, காங்கிரஸின் ஸ்தாபன ஏற்பாடுகள் பூரணமானதாக இருந்தால், திடீர் வேலை நிறுத்தங்களோ அல்லது வேறு எந்த வேலை நிறுத்தங்களோ நியாயமற்றவை களே ஆகும். இதற்கு முக்கியமான காரணம், தனது ஸ்தாபன எல்லைக்குள் நடக்கும் நியாயமான வேலை நிறுத்தம் எதையும் நடத்தும் பொறுப்பை மக்களின் ஸ்தாபனமே வகிக்க வேண்டும். ஆனால், இன்றோ, வருந்தத்தக்க வகையில் காங்கிரஸ் சக்தியற்றதாக இருப்பதால், அத் தகைய உயர்ந்த நிலையை அது அடைந்துவிடவில்லை. எனவே, திடீரென்று ஏற்பட்டுவிடும் ஒவ்வொரு வேலை நிறுத் தத்தையும், அதற்குப் பொறுப்பாக இருக்கும் கட்சி எது வானாலும் அதைக் கவனிக்காமல், அந்த வேலை நிறுத்தத்தின் தராதரத்தைக் கொண்டே அதை மதிப்பிட வேண்டும். ஒரு வேலை நிறுத்தம் அதன் தன்மையில் ஆதரிக்கக் கூடியதாக இல்லாதிருக்குமாயின், காங்கிரஸும் மக்களும் சந்தேகத் திற்கு இடமில்லாத வகையில் அதைக் கண்டிக்க வேண்டும். அதனால் ஏற்படும் இயல்பான பலன், வேலை நிறுத்தம் செய் திருப்பவர்கள் வேலைக்குப் போய்விடுவார்கள். வேலை நிறுத்தம் நியாயமானதாக இருக்குமானால், எந்த ஸ்தாப னத்தை எதிர்த்து இந்த வேலை நிறுத்தம் செய்யப்படு கிறதோ அந்த ஸ்தாபனம், தொழிலாளரைப் பணியும்படி

செய்வதற்குக் கருங்காலிகளை அமர்த்துவது போன்ற ஆட்சேபகரமான காரியங்களைச் செய்துவருமானால், அதைக் காங்கிரஸும் பொதுமக்களும் கண்டிக்க வேண்டும்.

—'ஹரிஜன்' – 31—3—1946

[ முன்னால் 'கேள்விப் பெட்டி' என்ற தலைப்பில் வெளியானது. ]

# 9
# அனுதாப வேலை நிறுத்தங்கள்

அஸ்ஸாம் – வங்காள ரெயில்வே, கப்பல்கள் வேலை நிறுத்தங்கள், சாதாரண வேலை நிறுத்தங்களுக்குப் புறம்பானவை. தொழிற் சங்கங்களுக்கு வெளியிலிருப்பவர்களுக்கு அனுதாபம் காட்டுவதற்காக வேலை நிறுத்தம் செய்வதற்கு இது முதல் முயற்சி என்று கண்டேன். ஆகையால், வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள், ஜீவகாருண்ய அல்லது ராஜீய அனுதாபத்துடன் அவ்விதம் செய்திருக்கிறார்கள். அந்த ரெயில் பாதை நெடுகவும், முக்கியமாக கௌஹாத்தி, சிட்டகாங், பாரிஸால் ஆகிய இடங்களில் வேலை நிறுத்தம் செய்திருப்போரைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அவர்களுடன் தாராளமாக மனம்விட்டு சம்பாஷித்தேன். அதிலிருந்து, தாங்கள் மேற்கொண்டிருக்கும் இக்காரியத்திலிருக்கும் கஷ்டம் முழுவதையும் அவர்கள் அறியவில்லை என்பது தெரிந்தது. ஆனால், வேலை நிறுத்தத்தை ஆரம்பித்துவிட்டதால் அதன் விளைவுகளை அனுபவிக்க அவர்கள் முயன்று வருகிறார்கள். அப்படிப்பட்ட நிலைமையைச் சமாளிக்க வேண்டியிருந்தால் தாம் என்ன செய்திருப்பார் என்று வெளியார் ஒருவர் கூறுவது எப்பொழுதுமே ஆபத்தானதோடு நியாயமில்லாததுமாகும். ஆனால், ஒருவர் ஓர் அபிப்பிராயத்திற்கு வர முடிந்தால், ஜீவகாருண்ய வேலை நிறுத்தத்திற்கு அவர்கள் தயாராக இல்லை என்றுதான் நான் நினைக்கிறேன். ஓர் அனுதாப வேலை நிறுத்தத்திற்கு அவசியமானதான தேசீய உணர்ச்சி, இந்தியாவின் தொழிலாளருக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் இன்னும் ஏற்பட்டுவிடவில்லை என்பதே என் அபிப்பிராயம். இதில் தவறு நம்முடையதே. தேசீய சேவையில் அக்கறையுள்ளவர்களான நாம், சமீப காலம் வரையில் இந்த வகுப்பாரின் தேவைகளையோ, அபிலாஷைகளையோ ஆராயாது போய்விட்டதோடு ராஜீய நிலைமையை அவர்களுக்கு அறிவிக்கும் சிரமத்தை எடுத்துக்கொள்ளாமலும் இருந்துவிட்டோம். உயர்தரப் பாடசாலைகளிலும், கல்லூரிகளிலும் படித்துவிட்டு வந்தவர்கள் மாத்திரமே தேசீய வேலைகளில் ஈடுபடுவதற்குத் தகுதியானவர்கள் என்றும் இதுவரை நம்பியிருந்தோம். ஆகையால், தொழிலா

ளரும் தொழில் வல்லவர்களும் தங்களுடைய நன்மைக்குப் புறம் பானவைகளின் அவசியத்தைத் திடீரென்று அறிந்துகொண்டு தியாகம் செய்வார்கள் என்று எதிர்பார்ப்பது சரியல்ல. ராஜீய அல்லது வேறு நோக்கங்களுக்காக அவர்களை நாம் வஞ்சித்துப் பயன்படுத்திக்கொள்ளாதிருக்க வேண்டும். இந்தக் கட்டத்தில் அவர்களுக்கு நாம் செய்யக்கூடிய சிறந்த சேவை, சுய உதவி யைக் குறித்து அவர்களுக்குச் சொல்லிக்கொடுப்பதும், அவர்க ளுடைய கடமைகளையும் உரிமைகளையும் அவர்கள் அறியும்படி செய்வதும், அவர்களுடைய நியாயமான குறைகளுக்குப் பரி காரம் தேடிக்கொள்ளும் நிலைமையில் அவர்களை வைப்பதுமே ஆகும். அப்பொழுதுதான் அவர்கள் ராஜீய, தேசீய அல்லது ஜீவகாருண்ய சேவைக்குத் தயாரானவர்களாவார்களேயன்றி, அதற்கு முன்னால் அல்ல.

ஆகையால், அதற்கு முன்னால் தூண்டிவிடப்பட்டுவிடும் அனுதாப வேலை நிறுத்தங்களெல்லாம் நமது லட்சியத்திற்கு நிச்சயமாகத் தீமையாகவே முடியும். அரசாங்கத்திற்குச் சங்க டத்தை உண்டாக்கி, அதனால் எதையாவது அடைந்துவிடுவது என்பதை அகிம்சை வேலை முறையில் திட்டமாக நாம் விலக்கிவிட வேண்டும். நமது நடவடிக்கை தூய்மையானதாக இருந்து, அர சாங்கத்தின் நடவடிக்கை தூய்மையில்லாததாக இருக்குமானால், அரசாங்கமே தூய்மையை அடையாவிட்டாலும் நமது தூய்மை யினால் அது சங்கடத்தை அடைகிறது. இவ்வாறு புனிதத்திற் கான ஓர் இயக்கம் இரு தரப்பாருக்கும் நன்மையளிக்கிறது. ஆனால், அழிவை மாத்திரமே கொண்டதான ஓர் இயக்கம், அழிப் பவரைப் புனிதப்படுத்தாமல் விட்டுவிடுவதோடு அவனையும் அழிப்பவனின் மட்டத்திற்குத் தாழ்த்திவிடுகிறது.

எனவே, நமது அனுதாப வேலை நிறுத்தங்கள்கூட தாமே புனிதமடைவதற்கான வேலை நிறுத்தங்களாக, அதாவது ஒத் துழையாமையாக இருக்க வேண்டும். ஆகவே, ஒரு தவறுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்காக நாம் வேலை நிறுத்தம் செய் யும்போது, தவறில் பங்கு கொள்ளுவதை உடனே விட்டுவிடுவ தோடு தவறு செய்கிறவரை அவர் வசதிக்கே விட்டுவிடுகிறோம். அதாவது தவறைத் தொடர்ந்து செய்வதில் உள்ள தவறை அவர் காணும்படி செய்கிறோம். அத்தகைய வேலை நிறுத்தம், வேலைக் குத் திரும்புவதில்லை என்ற திட்டமான உறுதியிருக்குமானால் மாத்திரமே வெற்றியை அடையும்.

ஆகையால், வெற்றிகரமான பெரிய வேலை நிறுத்தங்களை நடத்தியவன் என்ற முறையில் நான் பேசுகிறேன். இப்பத்திரிகை யில் முன்னாலேயே கூறப்பட்டிருக்கும் கீழ்க்கண்ட கோட்பாடு களை எல்லா வேலை நிறுத்தத் தலைவர்களின் உபயோகத்திற்காக இங்கே திரும்பவும் கூறுகிறேன் :

1. உண்மையான குறைகள் இல்லாமல் வேலை நிறுத்தம் இருக்கக்கூடாது.

2. வேலை நிறுத்தத்தில் ஈடுபட வேண்டியவர்கள், தாங்கள் மீதப்படுத்தி வைத்திருப்பதைக்கொண்டோ, பஞ்சைப் பட்டை போடுவது, நூற்பது, நெய்வது போன்ற தாற்காலிகமான வேலைகளில் ஈடுபடுவதன் மூலமோ தங்கள் ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக்கொள்ளக்கூடியவர்களாக இருந்தாலன்றி வேலை நிறுத்தம் செய்யக்கூடாது. வேலை நிறுத்தம் செய்பவர்கள் பொதுஜன வசூல் உதவியையோ, பிற தருமங்களையோ நம்பியிருக்கக்கூடாது.

3. வேலை நிறுத்தம் செய்கிறவர்கள், மாற்ற முடியாத குறைந்தபட்ச கோரிக்கை இன்னது என்பதை நிர்ணயித்துவிட வேண்டும். அதை, வேலை நிறுத்தத்தை ஆரம்பிப்பதற்கு முன்னால் சொல்லிவிட வேண்டும்.

தொழிலாளரின் குறைகள் நியாயமானவைகளாக இருந்தும், எவ்வளவு காலத்திற்காயினும் உறுதியுடன் இருப்பதற்கு வேண்டிய சக்தி தொழிலாளருக்கு இருந்தும், இவர்களுக்குப் பதிலாக வேலைக்குப் போகத் தொழிலாளர் மாத்திரம் கிடைத்துவிடுவார்களானால், வேலை நிறுத்தம் தோல்வியடைந்துவிடும். ஆகையால், தனக்குப் பதிலாக ஆள் சுலபமாகக் கிடைத்துவிடும் என்பதை உணரும் ஒரு புத்திசாலி, சம்பள உயர்வுக்காகவோ, மற்றச் சௌகரியங்களுக்காகவோ வேலை நிறுத்தம் செய்யமாட்டார். ஆனால், பரோபகார சிந்தனையோ, தேசாபிமானமோ இருப்பவர், தேவைக்கு வேண்டியதைவிட ஆட்கள் அதிகமாகக் கிடைப்பார்கள் என்றிருந்தாலும், தமது அண்டை அயலாருக்காக அனுதாபப்பட்டு அவர்களுடைய கஷ்டத்தில் பங்குகொள்ள வேண்டும் என்று உணரும்போது வேலை நிறுத்தம் செய்வார். நான் விவரித்திருக்கும் சாத்விக வேலை நிறுத்தத்தில் பயமுறுத்தல், தீ வைத்தல் போன்ற ரூபத்தில் பலாத்காரத்திற்கே இடமில்லை என்பதைச் சொல்ல வேண்டியது இல்லை. ஆகையால், சமீபத்தில் சிட்டகாங்குக்கு அருகில் ரெயில் கவிழ்ந்தது, வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் செய்த விஷமத்தினாலேயே என்பதைக் கண்டு நான் மிகுந்த துக்கமே அடைய வேண்டும். நான் கூறியிருக்கும் சோதனையைக்கொண்டு பார்த்தால், தங்கள் உதவிக்குக் காங்கிரஸ் நிதி அல்லது மற்ற நிதியைக் கோரும்படி வேலை நிறுத்தக்காரர்களுக்கு அவர்களுடைய நண்பர்கள் ஆலோசனை கூறியிருக்கவே கூடாது என்பது தெளிவாகிறது. வேலை நிறுத்தக்காரர்களின் அனுதாபத்தின் மதிப்பு, அவர்கள் பெற்ற அல்லது ஏற்றுக்கொண்ட நிதி உதவியின் அளவுக்குக் குறைந்துவிட்டது. ஓர் அனுதாப வேலை நிறுத்தத்தின் மதிப்பு, அனுதாபங்கொண்டவர்கள் அனுபவித்த அசௌகரியங்கள், நஷ்டங்களையே பொறுத்திருக்கிறது.

மிரட்டல்களும், ஆசைகள் காட்டுவதும் இருந்தும், வேலை நிறுத்தக்காரர்கள் ஆண்மையுடன் உறுதியாக இருந்து வந்திருக்கிறார்கள். அவர்களுக்கும், அவர்களும் இப்பொழுது செய்ய

வேண்டியது என்ன? அவர்களில் 50 சத விகிதத்திற்கு அதிக மானவர் உறுதியுடன் நின்றிருக்கின்றனர். என்னுடைய அபிப்பி ராயம் என்ன என்பதை வங்காளக் காங்கிரஸ் கமிட்டிக்குத் தெரிவித்துவிட்டேன். அதன்படி நடந்துகொள்ளவே நான் விரும்புகிறேன். சாந்த்பூரில் அக்கிரமத்திற்கு ஆளான கூலி களுக்கு அனுதாபம் தெரிவிப்பதற்காக மாத்திரமே தங்கள் சகோதரத் தொழிலாளரைப் பயமுறுத்தாமல் வேலை நிறுத்தம் செய்திருப்பார்களாயின், அவ்வாறு செய்ய அவர்களுக்கு எல்லா தார்மிக உரிமையும் உண்டு. அவர்கள் எதிர்பாராத வகையில் தங்கள் தேச பக்தியையும் சகோதர உணர்ச்சியையும் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். அரசாங்கம் முற்றிலும் பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, கூலிகளை வெளியேற்றுவதற்காகக் கொடுத்த பணத்தையெல்லாம் சம்பந்தப்பட்டவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கும் வரையில், அவர்கள் வேலைக்குத் திரும்ப மறுத்துவிடுவார்கள் என்றே நம்புகிறேன்.

—'எங் இந்தியா' - 22—9—1921

['வேலை நிறுத்தங்களைக் குறித்து' என்ற தலைப்பில் முன்னுல் பிரசுர மானது.]

# 10

# அங்கீகாரம் பெற்ற, பெருத வேலை நிறுத்தங்கள்

**கேள்வி:** மார்ச்சு 30-ஆம் தேதி நீங்கள் எழுதியிருக்கும் தலை யங்கத்தில், 'தொழிலாளர் வேலை நிறுத்தங்களை அவசரப் பட்டு நடத்தி' சாத்விக சத்தியாக்கிரகிகள் போராட்டத்தில் தலையிடமாட்டார்கள் என்று நீங்கள் நம்புவதாகக் கூறி யிருக்கிறீர்கள். 'அவசரப்பட்டு நடத்தி' என்ற ரகசியச் சொல் அதிலிருப்பதைத் தவிர அதிகமாக அதில் எதுவும் இல்லை. முதலில் படித்தபோது அதை அவ்வளவாக நான் கவனிக்கவில்லை. ஆனல், பிறகு அதற்கு நான் எவ்வளவோ விளக்கம் சொல்லியாக வேண்டி இருந்தது. உன்னிப்பாகப் படிப்பவராகவோ, உங்கள் எண்ணத்தையும், கூறும் கருத் தையும் புரிந்துகொள்ளுவதில் பயிற்சி பெற்றவராகவோ ஒருவர் இல்லாது போனல், அவர் தவருன பொருளையே அதற்குக் கொண்டுவிடுவார். 'அவசரப்பட்டு நடத்தி' என் பதிலுள்ள பொருளை அறியத் தவறி, தொழிலாளரின் எல்லா வேலை நிறுத்தங்களையும் நீங்கள் வெறுப்பதாகப் புரிந்துகொண்டு விடுவார்.

யுத்த கால போனஸுக்காகச் சமீபத்தில் அகமதாபாத்தில் நடந்த போராட்டத்தைக் கொண்டு, தொழிலாளர் வேலை நிறுத்தம் என்பதற்கே நீங்கள் எதிரி என யாரும் கருதிவிட முடியாது. உண்மையில் அகமதாபாத் வேலை நிறுத்தம் தவிர்க்கப்பட்டு விட்டது. ஆனல், நீங்கள் அந்த வேலை நிறுத்தத்தை அங்கீகரித்தீர்கள்; தொழிலாளரும் தாங்கள் கோரியவைகளை அடைந்துவிட்டார்கள். அகமதாபாத்தில் வேலை முறைப்படி நடந்தது. தொழிலாளரின் கோரிக்கைகளை ஒழுங்குபடுத்தி அதைச் சரியாக எடுத்துக் கூறினர். மத்தியஸ்தம் என்பதும் முடிந்தது. நியாயப்படி முன் அறிவிப்பும் செய்தனர். வேலை நிறுத்தத்திற்கு லட்சம் பேரிடையே வாக்கும் எடுத்தனர். இவ்விதம் முறைப்படி எல்லாக் காரியங்களையும் செய்த பின்னர் வேலை நிறுத்தம் நேராமல் தவிர்க்க முடியவில்லை என்ருல், நீங்கள் அத்தகைய வேலை நிறுத்தத்தை அங்கீகரிப்பதோடு பலாத்காரம் இல்லை என்பதை மாத்திரம் உறுதிப்படுத்திக்கொள்ளு வீர்கள் என்று நம்புகிறேன்.

பதில் : நீங்கள் சொல்லுவது சரி. வேலை நிறுத்தங்களுக்கு ஏற்பாடுகளைச் செய்வதில் நான் நிபுணன் என்று எண்ணிக் கொள்ளுகிறேன். என்னுடைய முதல் வெற்றிகரமான முயற்சி, தென்னுப்பிரிக்காவில் அதிகக் கஷ்டமான நிலைமையில் செய்யப்பட்டது. அகமதாபாத்தில் அம்முறையில் அபிவிருத்திகளைச் செய்தேன். இதில் பூரணத்துவத்தை அடைந்துவிட்டதாக நான் சொல்லிக்கொள்ளவில்லை. வேலை நிறுத்தங்களை எதிர்க்க முடியாதவைகளாகச் செய்ய முடியும் என்பதை அறிவேன். அங்கீகாரம் பெருத வேலை நிறுத்தங்களை மாத்திரமே நான் ஆதரிப்பதில்லை. தொழிலாளர் மீது செல்வாக்கைக் காங்கிரஸ் இன்னும் அடைந்து விடவில்லை. சில காங்கிரஸ்காரர்களுக்குத் தொழிலாளரிடம் செல்வாக்கு இருக்கிறது. எல்லா வேலை நிறுத்தத் தலைவர்களுக்கும் அவரவர்களுக்கான முறைகள் இருக்கின்றன. அவர்கள் எல்லோருமே அகிம்சையை அனுசரிப்பவர்கள் அல்ல. சிலர், சுயநலனுக்காக வேலை நிறுத்தத்தை உண்டாக்குபவர்கள். மற்றும் சிலரோ, யோக்கியப் பொறுப்பில்லாதவர்கள். ஆகையால், நான் கேட்பதெல்லாம் தீவிரமான ஒத்துழைப்பு இல்லாவிட்டாலும் சாத்விக ஒத்துழைப்பையே. போராட்டத்தின் காரியத்திற்காக வேலை நிறுத்தங்கள் எனக்குத் தேவையில்லை. பொதுஜன சட்ட மறுப்பு வருமானல், அது என்ன ரூபத்தில் வரும் என்பதை நான் இப்பொழுது சொல்லிவிட முடியாது. ஆனல், அதில் எனக்கு ஏதாவது சம்பந்தம் இருக்குமானல், அது ஒரு போதும் எதைச்செய்யாது என்பதை நான் சொல்ல முடியும். இந்தியாவிலிருக்கும் எல்லாத் தொழிலாளரிடத்திலும் காங்கிரஸுக்கு அகிம்சைச் செல்வாக்கு இருக்குமானல்,

இன்று இருப்பதைவிட காங்கிரஸ் இன்னும் அதிக பல முள்ளதாக இருக்க முடியும். தொழிலாளர் விஷயத்தில் காங்கிரஸுக்கு ஒரே கொள்கை இருந்து, அதை நிறை வேற்றி வைப்பதற்குப் போதுமான ஊழியர்களும் இருப் பார்களாயின், அந்தச் செல்வாக்கு காங்கிரஸுக்கு வரும்.

—'ஹரிஜன்' - 20—4—1940

[இது முதலில் 'கேள்விப் பெட்டி' என்ற பகுதியில் வெளியானது]

# 11

# தெருக் கூட்டுவோர் வேலை நிறுத்தம்

## (1)

வேலை நிறுத்தம் தவறு என்பதற்கான சில விஷயங்களும் இருக்கின்றன: தெருக்கூட்டுவோரின் குறைகள் இந்த ரகத் தைச் சேர்ந்தவை. மற்றவைகளைப் பற்றி இங்கே சொல்லிக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. தெருக் கூட்டுவோர் வேலை நிறுத்தம் செய்யக்கூடாது என்ற என் அபிப்பிராயம், *1897*-இல் நான் டர்பனில் இருக்கும்போதிலிருந்தே எனக்கு இருந்து வரு கிறது. அங்கே ஒரு பொது வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய் யப்பட்டபோது தோட்டிகளும் அந்த வேலை நிறுத்தத்தில் சேரு வதா என்ற பிரச்னை அப்பொழுது எழுந்தது. அந்த யோசனையை எதிர்த்து என் கருத்தைத் தெரிவித்தேன். காற்றில்லாமல் மனிதன் எப்படி உயிர் வாழ முடியாதோ அதே போல, அவனு டைய வீடும் சுற்றுப்புறங்களும் சுத்தமாக இல்லாமல் அவன் நீண்ட காலம் உயிர் வாழ முடியாது. முக்கியமாக இக்காலச் சாக்கடை வேலை செய்யாது போய்விடுமாயின், ஏதாவது ஒரு தொத்து நோய் நிச்சயம் ஏற்பட்டே தீரும்.

ஆகையால், பம்பாயில் தெருக் கூட்டுவோரின் வேலை நிறுத்தத்தைக் குறித்து நான் படித்தபோது நான் அதிகக் கலக்க மடைந்தேன். அதிர்ஷ்டவசமாக அந்த வேலை நிறுத்தம் முடிந்து விட்டது. தெருக் கூட்டுவோர், ஆண்களும் பெண்களும், தங்கள் விஷயத்தை மத்தியஸ்தத்திற்குவிட மறுத்துவிட்டார்கள் என்று அறிகிறேன்.

தெருக் கூட்டுவோரிடம் எனக்கு நெருங்கிய பற்று உண்டு. அதனால், அவர்கள் நிலை சீர்ப்பட்டும் வருகிறது. என்றாலும், அவர்கள் அனுசரித்திருக்கும் நிர்ப்பந்த முறைகளை நான் கண்டித்தே ஆகவேண்டும். இதனால் நாளாவட்டத்தில் அவர் களே நஷ்டமடைவார்கள். நகர மக்களை எப்பொழுதுமே பணிந்து விடும்படி செய்துவிட முடியாது. அவர்கள் அப்படிப் பணிவ

தானல், அதனல் முனிசிபல் நிர்வாகமே முறிந்துவிடும். நிர்ப்பந்தப்படுத்துவது முடிவில் குழப்பத்தில்தான் கொண்டுபோய் விடும். தகராறுகளில் சமரச முடிவைச் செய்வதற்குப் பாரபட்சமற்ற மத்தியஸ்தர் நியமிக்கப்படுவதை எப்பொழுதும் ஏற்றுக் கொண்டாகவேண்டும். இதை ஏற்க மறுப்பது, பலவீனத்திற்குத் தான் அடையாளம். தோட்டி, ஒரு நாளைக்குக்கூட வேலை செய்யாமல் இருந்துவிடக்கூடாது. நீதியை அடைவதற்கு அவருக்கு வேறு வழிகள் எத்தனையோ இருக்கின்றன.

அதோடு நகர மக்கள், தீண்டாமை என்ற ஒன்று உண்டு என்பதையே மறந்துவிட வேண்டும். இது போன்ற நிலைமை ஏற்பட்டுவிடும்போது என்ன செய்வதென்று தெரியாமல் திகைப்பவர்களாக அவர்கள் ஆகிவிடாமல், அவசியமான, தாற்காலிகமான சேவையைச் செய்வதற்காக, தங்கள் சாக்கடையையும் நகரின் சாக்கடையையும் சுத்தம் செய்யும் கலையை அவர்கள் கற்றிருக்க வேண்டும். அவ்விதம் இருந்தால் அவர்கள் நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிவிட மாட்டார்கள். இத்தகைய அவசர நிலைமையில், இவ்வேலை தெரிந்த ராணுவத்தையும் உபயோகிக்க வேண்டுமென்ற அளவுக்கும் நான் போவேன். சுயராஜ்யம் சீக்கிரத்தில் நமக்குக் கிடைத்துவிடப்போகிறது என்றால், ராணுவத்தை நம் ராணுவம் என்றே நாம் இப்பொழுது கருதலாம். அவர்களிடமிருந்து நாம் பெறக்கூடிய ஆக்க வேலைகளையெல்லாம் நாம் பெறலாம். இதுவரையில் ராணுவம், தயவு தாட்சண்யமின்றி நம்மைச் சுடுவதற்கே பயன்படுத்தப்பட்டு வந்தது. இன்றோ, ராணுவத்தினர் வயல்களை உழ வேண்டும், கிணறுகள் வெட்ட வேண்டும், கக்கூசுகளைச் சுத்தம் செய்ய வேண்டும். தங்களால் முடிந்த மற்றெல்லா ஆக்க வேலைகளையும் செய்து அதன் மூலம் மக்களின் துவேஷத்தை அன்பாக ராணுவம் மாற்ற வேண்டும்.

இப்பொழுது ஹர்த்தால் முடிவடைந்துவிட்டது. ஆகையால், தோட்டிகளிடம் சகோதரத்துவத்தைக் காட்டிக்கொள்ள வேண்டியது ஒவ்வொருவரின் கடமை. அவர்களுக்குக் கல்வியைப் போதியுங்கள். நல்ல வீட்டு வசதிகளை அவர்களுக்குச் செய்து கொடுங்கள். மற்றவர்களைப் போலவே அவர்களும் தாங்கள் விரும்பும் இடங்களில் வசிக்க அனுமதியுங்கள். அவர்களுக்கு நியாயமான கூலி கிடைக்கும்படியும் பாருங்கள். அவர்கள் கோரிக்கொண்டிருப்பதற்கு இடம் வைக்காமல் அவர்களுக்கு நியாயம் கிடைக்கும்படி செய்யுங்கள். இந்தியா முழுவதிலும் இவ்வாறு செய்யப்படுமானல், சுயராஜ்யத்தை அடைவதற்கு நாம் தகுதியானவர்கள் என்பதை நிரூபித்துக்கொள்ளுவதோடு அதை நம்மால் காப்பாற்றிக்கொள்ளவும் முடியும்.

—'ஹரிஜன்' – 21—4—1946

## (2)

தெருக் கூட்டுவோரின் வேலை நிறுத்தத்தைப் பற்றி நான் எழுதியிருந்த கட்டுரையைக் குறித்து ஒரு ஹரிஜன நண்பர் கடுமையாகக் குறை கூறுகிறார்.

அவருடைய முதல் புகார், 'ஹரிஜன்' என்ற அழகான பெயரை நான் விட்டுவிட்டு 'பங்கி' (தோட்டிகள்) என்ற சொல்லை உபயோகித்தேன் என்பது. இதை எழுதியிருப்பவரின் உணர்ச்சி வேகத்தையே இக்குற்றச்சாட்டு காட்டுகிறது. 'ஹரிஜன்' என்ற பெயரை உபயோகிக்கலாம் என்று எனக்கு முதன் முதலில் யோசனை கூறியவர், ஒரு குஜராத்தி தீண்டாதார்! நானும் விருப்பத்தோடு அதை ஏற்றுக்கொண்டேன். என்றாலும், ஒரு சாதியினருக்குப் பழக்கத்தில் இருக்கும் பெயரை உபயோகிக்கக் கூடாது என்று அர்த்தமல்ல. நான் என்னை ஹரிஜனாகவே கருதிக்கொள்ளுகிறேன். 'பங்கி' என்று என்னைச் சொல்லிக் கொள்ளவும் நான் ஆசைப்படுகிறேன். ஏனெனில், ஹரிஜனங் களில் 'பங்கி' தான் அதிகக் கீழான சாதி. சமீபத்தில் நான் டில்லி யில் ஹரிஜன விடுதிகளில் இருந்தபோது, 'பங்கி' என்ற சொல்லை நான் உபயோகிப்பதைக் குறித்து அங்கும் ஹரிஜனங்கள் ஆட்சே பித்தார்கள். 'மேதார்' என்று சொல்லலாம் என்றார்கள். ஒரே விதமான வேலைக்கு இப்பொழுது பழக்கத்திலிருக்கும் எந்தப் பெயரை உபயோகிப்பது என்பது அவ்வளவு முக்கியம் அல்ல என்பதை அவர்கள் புரிந்துகொள்ளும்படி செய்ய முயன்றேன். இந்த வேலைதான் அதிகத் தாழ்வான வேலை என்று கருதப்பட்ட போதிலும், மக்களின் ஆரோக்கியத்தை அதுவே காப்பாற்று வதால், உண்மையில் அதுவே உயர்வான வேலை. ஆகையால், பெயரைக் குறித்து அவர்கள் கவலைப்படக் கூடாது. 'பங்கி' என்ற சொல் வந்த வரலாறு எதுவானாலும், சிவன் என்பதற்கு இது இன்னொரு பெயர் என்பது என் கருத்து. தெருக் கூட்டு பவரை 'மேதார்' என்று அழைத்தாலும், 'பங்கி' என்று அழைத் தாலும், சிவனைப் போல அவர் மனிதனுக்கு ஆரோக்கியத்தை அளிக்கிறார். 'பங்கி' வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதால் அதைச் செய்கிறார். சிவன் மனிதனின் மனத்தைச் சுத்தம் செய் கிறார்.

அவர் கூறும் இரண்டாவது குறை, இன்னும் கடுமையானது. தவறான அபிப்பிராயம் கொண்டுவிடுவதற்குத் துவேஷம்தான் காரணம். நமக்கு நியாயமாகச் சேர வேண்டியதைப் பலாத் காரத்தைக்கொண்டு நாம் எடுத்துக்கொள்ளுவோமாயின், அச் செயல் சச்சரவை உண்டாக்கிவிடக்கூடும். பலவந்தமாக எடுத் துக்கொண்டதை நாம் ஜீரணிக்கமுடியாமலும் போய்விடக்கூடும். வேலை நிறுத்தம் செய்தவர்கள் நிர்ப்பந்திப்பதன் மூலம் எதைச் செய்தார்களோ அதை அடைந்தார்கள். அதுதான் என்னுடைய நம்பிக்கை. கக்கூசுகளைச் சுத்தம் செய்வதே என்னுடைய தொழிலாக இருந்து, அந்த வேலையைச் செய்ய நான் மறுத்தால்,

நிர்ப்பந்திப்பது என்பதைத் தவிர அதை வேறு எப்படிச் சொல்ல முடியும்? கக்கூசுகளைச் சுத்தம் செய்யும் வேலையை மேற்கொள்ளவே வேண்டும் என்று நான் கடமைப்பட்டிருக்கவில்லை. அந்த வேலையை நான் செய்வதற்கு என் நிபந்தனைகள் இன்னவை என்று சொல்லுவதற்கு எனக்கு எல்லா உரிமையும் உண்டு என்று சொல்லலாம் என்பது உண்மை. ஆனால், என் கருத்துப்படி நிபந்தனை விதிப்பது என்பது பூரணமான உரிமை ஆகாது. அத்தகைய பூரணமான உரிமையை அனுமதிப்பதாகவே இருந்தாலும், சில சந்தர்ப்பங்களில் அதை உபயோகிப்பது சரியல்ல. ஆனால், இந்தக் கருத்தே நியாயம் என்ற தர்க்கத்தில் இறங்க நான் விரும்பவில்லை. நான் எழுதியிருந்த கட்டுரையில் 'பங்கி'களின் கடமையையும் நகர மக்களின் கடமையையுமே எடுத்துக் கூற முயன்றிருந்தேன். 'பங்கி'களுக்கு எல்லா வகையான அநீதிகளும் செய்யப்பட்டு வருகின்றன என்பதை நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். அவர்களுக்குச் செய்தாக வேண்டிய கடமையை நகர மக்கள் செய்துவிடவில்லை என்பதிலும் சந்தேகமில்லை. நகர மக்கள் தங்கள் கடமையை நிறைவேற்றியாக வேண்டும். ஹரிஜனங்களுக்கு நல்ல வீடுகளைக் கட்டிக் கொடுக்க வேண்டும். சுத்தம் செய்வதற்கு அவர்களுக்குக் கொடுக்கும் கருவிகள் நாகரிகமானவைகளாக இருக்க வேண்டும். அவர்கள் வேலை செய்யும் சமயத்தில் உபயோகிப்பதற்கு விசேஷ உடைகள் கொடுக்க வேண்டும். அவர்களுக்கும், அவர்கள் குழந்தைகளுக்கும் படிப்பு முதலானவைகளுக்குரிய வசதிகளைச் செய்யவேண்டும். இவற்றையும் மற்றப் பிரச்னைகளையும் காலங்கடத்தாமல் தீர்த்தாக வேண்டும். இந்த வசதிகள் இல்லை என்பதற்காகப் 'பங்கி'கள் வேலை நிறுத்தம் செய்ய மாட்டார்கள். ஆனால், நகர மக்கள் எல்லோரும் அவர்கள் சார்பாகத் தங்கள் ஆதரவை அளிக்க வேண்டும்.

தெருக் கூட்டும் வேலைக்கு ராணுவத்தை உபயோகிக்க வேண்டும் என்று நான் கூறியதைப் பற்றியும் மற்றோர் ஆட்சேபம் கூறப்பட்டிருக்கிறது. நான் சொன்னதில் தவறு எதுவும் இருப்பதாக நான் காணவில்லை. என் கட்டுரையைத் திரும்பவும் படித்துப் பார்த்தேன். அதிலிருந்து ஒரு சொல்லைக்கூட நீக்கிவிட நான் தயாராயில்லை. அப்படி எழுதியதற்காக நான் வருத்தப்படவும் இல்லை. சரியான உணர்ச்சியின் பேரில் அக்கட்டுரையைப் படித்துப் பார்க்குமாறு ஹரிஜன நண்பர்களுக்கு யோசனை கூறுகிறேன். அப்படிப் படித்துப் பார்ப்பார்களானால், அவர்களின் சார்பான என் உணர்ச்சியில் எந்த விதமான மாறுதலும் இல்லை என்பதைக் காண்பார்கள்.

—'ஹரிஜன்' – 12—5—1946

[இக்கட்டுரை முன்னால் 'ஒரு ஹரிஜனரின் கடிதம்' என்ற தலைப்பில் வெளியாயிற்று.]

# 12

# சரியான பரிகாரம்

கொள்ளையடிப்பது நியாயமாகுமா என்று கேட்கும் ஒருவர், எல்லா முயற்சிகளும் தோல்வியடைந்து விடும்போது ஏழைத் தெருக்கூட்டுவோர் என்னதான் செய்வது என்று கேட்கிறார். அவர் வெறுப்போடு வருமாறு கேட்கிறார் :

"பங்கி, அழுக்கிலும் ஆபாசத்திலும் வாழ்ந்துகொண்டு பட்டினிக் கூலியைப் பெற்றுத் தொடர்ந்து வேலைசெய்துகொண்டிருப்பதா?"

கேள்வி பொருத்தமானதுதான். இப்படிப்பட்ட நிலைமையில் இதற்குச் சரியான பரிகாரம் வேலை நிறுத்தம் செய்வது அல்ல. தெருக்கூட்டுவதற்கு ஒதுக்கப்பட்டிருப்பவர்களுக்குப் பட்டினி வாழ்க்கையும், அதில் அடங்கியவைகளுமே இருந்து வருவதால் தெருக்கூட்டும் வேலையையே தாங்கள் கைவிட்டு விடப்போவதாக பொதுவாகப் பொது ஜனங்களுக்கும், முக்கியமாகத் தங்களை அந்த வேலைக்கு அமர்த்தியிருக்கும் நகரசபைக்கும் 'பங்கி'கள் நோட்டீஸ் கொடுத்து விடுவதுதான் சரியான பரிகாரம் என்று கூறுவேன். வேலை நிறுத்தம் செய்வது என்பதற்கும், அவ்வேலை செய்வதை அடியோடு விட்டுவிடுவது (நிறுத்தி வைப்பது அல்ல) என்பதற்கும் அதிக வித்தியாசம் இருக்கிறது. வேலை நிறுத்தம், நிவாரணத்தை எதிர்பார்த்து அனுசரிக்கும் தாற்காலிகமான முறை. நிவாரணத்தை எதிர்பார்ப்பதற்கு இடமில்லாததால் அவ்வேலையைச் செய்வதை விட்டுவிடுவது என்பது, அவ்வேலை செய்வதை அடியோடு நிறுத்திவிடுவதுதான். அப்படி அவ்வேலை செய்வதை விட்டுவிடுவதாயின், ஒருபுறம் அதற்குப் போதுமான முன்னறிவிப்புச் செய்ய வேண்டும்; மற்றோர் புறம், நல்ல கூலியும், அழுக்கு, ஆபாசம் முதலியவைகளிலிருந்து விடுதலை பெறுவதற்கும் இடம் இருக்கும். இப்படிச் செய்வது, சமூகத்தை அதன் வெட்கக்கேடான தூக்கத்திலிருந்து எழுப்பிவிடும். பொதுஜன மனச்சாட்சியை மூடிக்கொண்டிருக்கும் அனாவசியமான வளர்ச்சியைப் பெருக்கித் தள்ளிச் சுத்தம் செய்வதாகும். பங்கிகள் ஒரேயடியாகத் தோட்டி வேலையைச் சிறந்த கலையாக்கிவிடுவதோடு வெகு காலத்திற்கு முன்பே அது அடைந்திருக்க வேண்டிய அந்தஸ்தையும் அதற்கு அளித்தவர்களாவார்கள்.

—'ஹரிஜன்' - 23—6—1946

[முன்னால் 'பங்கிகள் வேலை நிறுத்தங்கள்' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை ]

# 13

# பொருளாதார, ராஜீய வேலை நிறுத்தங்கள்

தபால் இலாகாவில் நடந்த வேலை நிறுத்தத்தை நான் அங்கீ கரித்திருக்கிறேன் என்று பத்திரிகைகளில் வெளிவந்திருக்கும் செய்தி உண்மை அல்ல. எனக்கு 'வந்தேமாதரம்' கூறிப் போவ தற்காக என்னிடம் தம்மை அனுமதிக்க வேண்டும் என்று ஒருநாள் ஒரு தபால்காரர் கேட்டார். என்றாலும், என்னைப் பார்க்க வந்த அவர், அப்பொழுதுதான் ஆரம்பமாகியிருந்த தபால்காரர்கள் வேலை நிறுத்தத்திற்கு என் ஆசியைக் கூற வேண்டும் என்று கேட்டார். அவர்கள் வேலை நிறுத்தம் நியாயமானதாக இருந் தால், முற்றிலும் அமைதியோடு அவர்கள் நடந்து கொண்டால், அவர்கள் வெற்றியை அடைவார்கள் என்று அவரிடம் சொன் னேன். குறிப்பிட்ட வேலை நிறுத்தத்திற்கு இது அங்கீகாரம் அன்று. ஆயினும், நான் சொன்னது ஒருபுறமிருக்க, தபால்காரர் களின் வேலை நிறுத்தம் நியாயமா, இல்லையா என்பதும் ஒருபுற மிருக்க, முற்றிலும் அமைதியையே கொண்டதான வெற்றிகர மான வேலை நிறுத்தங்களை நடத்துவதில் நான் நிபுணன் என்ற முறையில், இந்த வேலை நிறுத்தத்தை நடத்துகிறவர்களுக்கும், மற்ற வேலை நிறுத்தங்களை நடத்துவோருக்கும், பொது மக்க ளுக்கும், வெற்றிகரமான வேலை நிறுத்தத்திற்கான நிபந்தனை களைக் கூறுவதற்கும் கடமைப்பட்டிருக்கிறேன்.

நியாயமான காரணங்கள் இல்லாத வேலை நிறுத்தம் எதை யும் உண்மையில் நடத்தவே கூடாது. நியாயமில்லாத வேலை நிறுத்தம் எதுவும் வெற்றியடையாது. அத்தகைய வேலை நிறுத் தங்கள் விஷயத்தில் பொது ஜனங்கள் அனுதாபம் காட்டக் கூடாது. பொதுஜன நம்பிக்கைக்குப் பாத்திரமான பாரபட்ச மற்றவர்களின் ஆதரவு ஒருவேலை நிறுத்தத்திற்கு இருந்தாலன்றி அது நியாயமானதா, இல்லையா என்பதை அறிவதற்குப் பொது ஜனங்களுக்கு எந்த மார்க்கமும் இல்லை. சம்பந்தப்பட்டவர்கள், தங்கள் கட்சியிலுள்ள நியாயத்தைத் தாங்களே முடிவு செய்து கொண்டுவிட முடியாது. ஆகையால், சம்பந்தப்பட்ட தரப்பி னர்கள், மத்தியஸ்த முடிவுக்கோ, நீதி சபைத் தீர்ப்புக்கோ உடன்பட வேண்டும். மத்தியஸ்தத்திற்கோ, நீதி சபை முடிவுக்கோ சம்மதித்துவிடும்போது, பொதுவாக இவ்விஷயம் பொது மக்கள் முன்னால் வருவதில்லை. என்றாலும், மத்தியஸ்தத் தீர்ப்பை அகம்பாவம் கொண்ட முதலாளிகள் ஏற்று நடக்க மறுத்துவிடும்போது, தவறான வழியில் செலுத்தப்பட்டு விடும் தொழிலாளர்கள், தங்களுக்குள்ள சக்தியை உணர்ந்து கொண்டு அதே போலச் செய்து பலவந்தமாகப் பறிக்கப்

பார்க்கும் காரியங்கள் நடக்கும்போது, விஷயம் பொது ஜனங்களுக்கு முன்னல் வருவதும் உண்டு.

பொருளாதார நன்மையை அடைவதற்கு என்று நடக்கும் வேலே நிறுத்தங்களில், ராஜீய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுவது என்ற அந்தரங்க நோக்கமே இருக்கக்கூடாது. அத்தகைய கலப்பு நோக்கம் ராஜீய நோக்கத்தையும் நிறைவேற்றுவதில்லே. தபால்காரர்கள் வேலே நிறுத்தம் போன்ற பொதுஜன சௌகரியத்திற்கானவைகளில் நடத்தும் வேலே நிறுத்தத்தால் பொதுஜன வாழ்க்கைக்குக் குந்தகத்தை அவர்கள் உண்டாக்காத போதும், பொதுவாக அக்கலப்பு நோக்கம் வேலே நிறுத்தம் செய்திருப்போருக்குக் கஷ்டங்களேயே உண்டாக்கிவிடுகிறது. அரசாங்கத்திற்குச் சில அசௌகரியங்கள் அதனுல் ஏற்படலாம். ஆனுல், அரசாங்கம் ஸ்தம்பித்துவிடாது. பணக்காரர்களாக இருப்பவர்கள் அதிகச் செலவுள்ளதான தபால் போக்குவரத்து வசதிகளே உபயோகித்துக் கொள்ளுவார்கள். ஆனுல், ஏழைகளாக இருக்கும் ஏராளமான பொதுமக்களுக்கோ, பல தலேமுறைகளாக அவர்கள் பழகிப் போயிருக்கும் முக்கியமான சௌகரியத்தை இத்தகைய வேலே நிறுத்தம் பறித்துவிடும். நியாயமான மற்ற எல்லா வழிகளிலும் முயற்சி செய்து பார்த்துத் தோல்வியடைந்திருந்தால் மாத்திரமே இத்தகைய வேலே நிறுத்தங்கள் நடக்கலாம்.

இந்த விஷயத்தில், நமக்குத் தேசீய மாகாண அரசாங்கங்கள் இருக்கின்றன. வேலே நிறுத்தத்தை ஆரம்பிப்பதற்கு முன்னுல் தபால்காரர்கள் அந்த அரசாங்கங்களேக் கலந்தாலோசித்திருக்க வேண்டும். நான் அறிந்தவரையில், ஸ்ரீ பாலாசாஹிப் கேர், ஸ்ரீ மங்களதாஸ் பக்வாசா, சர்தார் வல்லபபாய் பட்டேல் ஆகியவர்கள் இதில் தலேயிட்டுப் பேசியிருக்கிருர்கள். அவர்கள் கூறிய ஆலோசனேகளேத் தபால்காரர்கள் நிராகரித்திருப்பார்களாயின், அவர்கள் மோசமான, ஆபத்தான காரியத்திலேயே இறங்கியிருக்கிருர்கள் என்றே ஆகும். பலம் பொருந்திய இந்த யூனியன்களெல்லாம் தங்கள் சொந்த அரசாங்கத்தையும், காரியக் கமிட்டி அங்கத்தினர்களேயும் மதிக்கவில்லே என்ருல், அவர்கள் காங்கிரஸையும் மதிக்க மறுக்கின்றனர். அவர்களுடைய நன்மையைக் காங்கிரஸ் விற்றுவிடுகிறது என்ருலே இவ்விதம் செய்ய அவர்களுக்கு உரிமை உண்டு.

பாதிக்கப்பட்டவர்கள், நியாயமான மற்ற எல்லா வழிகளிலும் முயன்று பார்த்துவிட்டார்கள் என்பது முதலில் நிரூபிக்கப்பட வேண்டும். அவர்கள் நன்மை சம்பந்தமாகக் காங்கிரஸ் துரோகம் செய்துவிட்டது அல்லது அலட்சியமாக இருந்துவிட்டது என்பதும் நிரூபிக்கப்பட வேண்டும். அல்லது, பிடிவாதமான, அனுதாபமே இல்லாத அதிகாரிகளிடமிருந்து நீதியைப் பெறுவதற்காக அனுதாப வேலே நிறுத்தங்களேச் செய்யும்படி

காங்கிரஸாவது அழைக்க வேண்டும். இவை ஏற்படும் வரையில் அனுதாப வேலை நிறுத்தங்களே கூடாது.

அரசாங்கம் நடக்க முடியாதபடி செய்வதற்காக நாடு முழுவதிலும் வேலை நிறுத்தங்கள் நடத்தப்படும் என்று சொல்லப்படுகிறது. அப்படி அரசாங்கம் நடக்க முடியாதபடி செய்வது என்பது, மிகப் பெரிய ராஜீய காரியம். காங்கிரஸ் போன்ற ஒரு ஸ்தாபனம்தான் அதைச் செய்யவேண்டுமேயன்றி, யூனியன்கள் எவ்வளவுதான் பலமுள்ளவைகளாயினும் அதைச் செய்யக் கூடாது. சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு மக்களின் சிறந்த கரமாக இருப்பது காங்கிரஸே என்றால், அரசாங்கம் ஸ்தம்பித்துப் போய் விடும்படி செய்யும் காரியம் காங்கிரஸ் கையில் மாத்திரமே இருந்து வர வேண்டும்.

யோசிக்கப்பட்டிருக்கும் அரசியல் நிர்ணய சபையை வெற்றிகரமானதாகச் செய்யும் வேலையில் இப்பொழுது காங்கிரஸ் ஈடுபட்டிருக்கிறது. இதில் மத்தியில் எத்தனையோ கஷ்டங்கள் இருந்துவருகின்றன. ஸ்தம்பிக்கச் செய்யும் வேலை நிறுத்தங்கள் காங்கிரஸின் வேலைகளை அதிகமாகப் பாதிக்கும்.

மேலே சொன்னவைகளிலிருந்து, ராஜீய வேலை நிறுத்தங்களை அவற்றின் தகுதிகளைக் கொண்டு கவனிக்க வேண்டும் என்றாகிறது. பொருளாதார வேலை நிறுத்தங்களுடன் அவைகளைக் கலக்கவோ, சம்பந்தப்படுத்தவோ கூடாது என்றும் ஆகிறது. அகிம்சாபூர்வமான நடவடிக்கைகளில் ராஜீய வேலை நிறுத்தங்களுக்கு ஒரு திட்டமான இடம் உண்டு. அவற்றை அரைகுறையாக மேற்கொள்ளுவதே இல்லை. அவை பகிரங்கமானவைகளாக இருக்கவேண்டும்; காலித்தனத்தால் அவற்றை நடத்தவும் கூடாது. பலாத்காரத்தில் கொண்டுபோய் விடும்படி அவை செய்யப்படுவதே இல்லை.

ஆகையால், வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் எல்லோருக்கும் என் பணிவான யோசனை இதுதான்: மத்தியஸ்தத்திற்கோ, நீதி சபை முடிவுக்கோ உடன்படத் தயார் என்று அவர்கள் பகிரங்கமாகக் கூறிவிட வேண்டும். வழி காட்டுமாறு காங்கிரஸை நாடி அதன் ஆலோசனைக்கு உட்பட வேண்டும். அரசியல் நிர்ணய சபையை வெற்றிகரமானதாக்கும் வேலையில் காங்கிரஸ் ஈடுபட்டிருக்கும்போது, மாகாணங்களில் தேசீய அரசாங்கங்கள் நடந்துவரும்போது, அனுதாப வேலை நிறுத்தங்களெல்லாம் நிறுத்தப்பட்டுவிட வேண்டும்.

—'ஹரிஜன்' – 11—8—1946

[இக்கட்டுரை முன்னால் 'வேலை நிறுத்தங்கள்' என்ற தலைப்பில் வெளிவந்தது.]

* * *

# 14

# ஜனநாயகத்தில் வேலை நிறுத்தங்களைச் சமாளிப்பது எப்படி?

"வேலை நிறுத்தங்கள் விஷயத்தில் என்ன செய்வது?" இப்பொழுது எங்கும் ஏற்பட்டுவரும் வேலை நிறுத்தங்களைக் குறித்துக் காங்கிரஸ் மாகாணங்களில் ஒன்றின் பிரதமர் ஒரு நாள் காந்திஜியுடன் விவாதித்துக்கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட வேலை நிறுத்தம் காரணமின்றி நீடித்துக்கொண்டே போகப்படு வதைக் குறித்தும் அவர் வருத்தப்பட்டார்.

"மக்களின் மீது கொண்டிருந்த பிடிப்பைக் காங்கிரஸ் இழந்து விட்டது என்பதே இதன் பொருளா?" என்று கேட்டார், காந்திஜி.

"இல்லை. ஆனால், காங்கிரஸ் ஒரே தொனியில் பேசவில்லை. இது பொதுமக்களின் மனத்தில் குழப்பத்தை உண்டாக்கி விட்டது."

"வேலை நிறுத்தம், அதன் தன்மையில் நியாயமற்றதாக இருக்குமானால், சந்தேகத்திற்கு இடமில்லாத வகையில் அதைக் கண்டிக்க வேண்டும்" என்று சொன்னார், காந்திஜி.

"யார் கண்டிப்பது?"

"காங்கிரஸ்தான்."

"காங்கிரஸ் என்று எதைச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டார், அந்த நண்பர். "காரியக் கமிட்டி கண்டித்திருக்கலாம். அது கண்டிக்கவில்லை" என்றார்.

"காங்கிரஸ் என்றால், இந்தியாவின் 40 கோடி மக்கள் காரியக் கமிட்டியின் மூலம் பேசுவது என்பதையே சொல்லு கிறேன்" என்று பதிலளித்தார், காந்திஜி.

பெண்களின் உரிமைக்காகத் தீவிரமாகப் போராடி வரும் ஒரு பெண்மணியும் அச்சமயம் உடனிருந்தார். அவர், "ஆனால் காரியக் கமிட்டி இப்பொழுது ஒரே தொனியில் பேசுவதில்லை. நீங்கள்தான் தேர்ந்தெடுத்து அதை நாட்டின்மீது திணித்திருக் கிறீர்கள். ஜனநாயகத்தை நீங்கள் முடமாக்கிவிட்டீர்கள்" என்று கூறினார்.

இப்பொழுது இருக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டி தம் இஷ்டப்படி அமைக்கப்பட்டது அல்ல என்றும், ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் காங்கிரஸ் தலைவர் நிய மித்திருப்பதே அது என்றும் காந்திஜி விளக்கிக் கூறினார். ஆட்

களைப் பற்றியோ, பழைய சம்பிரதாயங்களைக் குறித்தோ கவனிக்காமல் சுயேச்சையாகத் தம் இஷ்டப்படி தமது கமிட்டியை நியமித்துக்கொள்ளும்படி காங்கிரஸ் அக்கிராசனரை வற்புறுத்தியது தான் இதில் தாம் செய்த காரியம் என்றார், காந்திஜி. இப்பொழுது இருக்கும் காரியக் கமிட்டி, ஜனநாயக மனத்தைப் பிரதிபலிப்பதாக இல்லாதிருக்குமானால், அது ஒரு நாளைக்குக்கூட இருந்துவர முடியாது என்றார். ஜனநாயகம் மிகுந்த விழிப்புடன் இருந்து, காரியத்தைச் செய்துவர வேண்டும் என்பது ஒன்றுதான் நிபந்தனை என்றார். இதற்கு உதாரணமாக ஸ்ரீ சர்ச்சிலின் விஷயத்தைக் கூறினார். ஸ்ரீ சர்ச்சில் அடைந்திருக்கும் வெற்றிகளும் சாதனைகளும் எவ்வளவோ இருந்தும், தேச மக்களின் மனத்தை அவர் இனியும் பிரதிபலிப்பவராக இல்லை என்பதைக் கண்ட மாத்திரத்தில் பிரிட்டிஷ் மக்கள் அவரை விலக்கி வைத்துவிட்டனர் என்றார். "தொழிற் கட்சியினர் இவ்வளவு பெரும் பலத்துடன் அதிகாரத்திற்கு வந்திருப்பது, ராஜீய ஜனநாயகத்தின் சரித்திரத்தில் மிகப் பெரிய சம்பவமாகும். இந்தப் படிப்பினையை நாம் மனத்தில் கொள்ளுவது நல்லது" என்றும் காந்திஜி சொன்னார்.

எங்கும் வேலை நிறுத்த ஜுரம் பரவி வருவதற்கு, ஏதோ விஷமத்தனமான செல்வாக்கு மறைவில் இருந்து வருவதுதான் காரணமாக இருக்கக்கூடும் என்று அப்பொழுது அங்கே இருந்த இன்னொருவர் கூறினார். அந்த நோக்கம் ராஜீயமானதேயன்றிப் பொருளாதாரமானது அல்ல. அதற்கு என்ன பரிகாரம்?

"வேலை நிறுத்தக்காரர்களிடம் நீங்கள் நியாயத்தை எடுத்துக் கூற வேண்டும். ஆபத்தைக் குறித்து அவர்களுக்கு எச்சரிக்கை செய்ய வேண்டும். அவர்களோ, பொதுவாக மக்களோ, நீங்கள் சொல்லுவதைக் கேட்கவில்லை என்றால் நீங்கள் ராஜிநாமாச் செய்துவிட வேண்டும்" என்று பதில் சொன்னார் காந்திஜி.

"ஆனால், நாட்டிற்கு நாங்கள் நிறைவேற்ற வேண்டிய கடமை இருக்கிறது. மோசமான எண்ணம் கொண்டிருக்கும் சிலர், காங்கிரஸ் பதவியிலிருந்து போய்விட வேண்டும், குழப்பத்தை உண்டாக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். நாட்டை அவர்களிடம் நாங்கள் விட்டுவிட்டுப் போய்விடுவது நியாயமாகுமா?" என்றார், நண்பர்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஜனநாயகம் வேலை செய்ய வேண்டுமானால் இது ஒன்றுதான் வழி. மக்களுக்கு விஷயங்களை நான் எடுத்துக் கூறுவேன். பொதுஜன ஆதரவு இல்லாது போகுமானால், விஷமத்தனமான எண்ணம் உள்ளவர்கள் கை ஓங்க முடியாது. காங்கிரஸ் பலாத்காரத்தைக் கொண்டு தனது ஆட்சியை நடத்திக்கொண்டு போகாது என்பதை மக்கள் அறிந்துகொண்டுவிடுவார்களாயின், யோசிக்காமல் காரியங்கள் செய்வதையோ, பொறுப்பற்ற வகையில் நடந்துகொள்ளு

வதையோ மக்கள் விட்டுவிடுவார்கள். விஷமத்தனமான நோக்க முள்ளவர்களும் செயலற்றுப் போவார்கள்.''

—'ஹரிஜன்' – 18—8—1946

[முன்னல் ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடிதம்' என்ற பத்தியில் 'வேலை நிறுத்த ஜுரம்' என்ற தலைப்பில் வெளிவந்தது.]

## 15

## மறியல்

முற்றிலும் அகிம்சையோடு கூடியதாக இருக்கும்போது மாத்திரமே மறியல் ஒரு தருமமாகும். அகிம்சையில்நம்பிக்கை இல்லாதவர்கள், அதை அடியோடு கைவிட்டு விடுவதுதான் நல்லது. மறியலே இல்லாது போனுலும் அந்நியத் துணி பரவுவதைச் சமாளிப்பதற்கு வேண்டிய வழிதுறையை என்னுல் கண்டுபிடித்துக் கொள்ள முடியும். ஆனுல், பலாத்காரத்தோடு கூடிய மறியலினுல் ஏற்படும் பகிஷ்காரம் முடிவில் தோல்வியையே அடையும் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். இதை நான் அறிந்திருப்பதனுலேயே சென்ற மார்ச்சில் அந்நியத் துணிக் கடைகள் மறியல், கள்ளுக்கடை மறியல் ஆகியவைகளைப் பெண்களிடம் விட்டுவிட முடிவு செய்தேன். பெண்கள் சுபாவத்திலேயே அகிம்சையோடு கூடியவர்கள். மறியலில் பலாத்காரம் தீவிரமானதாகவும் இருக்கலாம், மறைவானதாகவும் இருக்கலாம். மறைவானதான ரகம், தீவிரமானதைவிட அதிக ஆபத்தானது. இந்த இரண்டையும் வெறுத்து விலக்கியே ஆகவேண்டும்.

—'எங் இந்தியா' – 19—2—1931

## 16

## மறியல் செய்வது எப்படி?

1. ஒரு கள்ளுக்கடையையோ, அந்நியத் துணிக் கடையையோ மறியல் செய்வதற்குக் குறைந்தது பத்துப் பெண்களாவது வேண்டும்.

2. அவற்றில் வியாபாரம் செய்து வருபவரிடம் அவர்கள் முதலில் தூது போகவேண்டும். அந்த வியாபாரம் செய்வதை நிறுத்திவிடும்படி அவரிடம் கேட்டுக்கொள்ள வேண்டும். மதுபானக் கடையானுல் அதைப் பற்றியும், அந்நியத் துணிக் கடை

யானல் அதைப் பற்றியும், உண்மை விஷயங்களையும் புள்ளி விவரங்களையும் கூறும் துண்டுப் பிரசுரங்களை அக்கடைக்காரரிடம் கொடுக்க வேண்டும். அத்துண்டுப் பிரசுரம் அந்த வியாபாரிக்குத் தெரிந்த மொழியில் இருக்க வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

3. வர்த்தகர் வியாபாரத்தை நிறுத்திவிட மறுத்துவிடுவாரானல், தொண்டர்கள் கடைக்கு முன்னல் காவலாக நின்றுகொண்டு, போய் வருகிறவர்களுக்குத் தாராளமாக வழிவிட்டு, வாங்கப் போகிறவர்களைச் சொந்த முறையில் வேண்டிக்கொள்ள வேண்டும்.

4. அந்நியத் துணிக் கடையானல், அத்துணியை வாங்க வேண்டாம் என்றும், மதுபானக் கடையானல் குடிக்க வேண்டாம் என்றும் பெரிய எழுத்துக்களில் எழுதிய அட்டைகளையோ, கொடிகளையோ தொண்டர்கள் எடுத்துச் செல்லவேண்டும்.

5. தொண்டர்கள், சாத்தியமான வரையில் தொண்டர்களுக்கான உடைகளை அணிந்திருக்க வேண்டும்.

6. தொண்டர்கள் அடிக்கடி தாங்கள் மறியல் செய்யும் பொருளைக் குறிப்பிடும் பஜனைப் பாடல்களைப் பாட வேண்டும்.

7. பலவந்தப்படுத்துவதையோ அல்லது ஆண்கள் குறுக்கிடுவதையோ தொண்டர்கள் தடுக்க வேண்டும்.

8. எக்காரணத்தைக்கொண்டும் ஆபாசமான சொற்களையும், வசை மொழிகளையும், மிரட்டலையும், முறையற்ற பாஷையையும் உபயோகிக்கக் கூடாது.

9. வேண்டிக்கொள்ளுவது, அறிவுக்கும் மனத்திற்கும்தான் இருக்க வேண்டுமேயன்றிப் பலாத்காரமும் உபயோகிக்கப்படும் என்ற பயத்தை உண்டாக்குவதாக இருக்கக் கூடாது.

10. மறியல் நடக்கும் இடத்திற்கு அருகில் ஆண்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் கூடக்கூடாது; போக்குவரத்திற்கு இடையூருக இருக்கக்கூடாது. ஆனல், பொதுவாக அந்நியத் துணியையும் குடியையும் எதிர்த்து அப்பிரதேசத்தில் பிரசாரம் செய்து வரவேண்டும். அப்பிரதேசத்தில் குடி ஒழிப்பையும் கதரையும் பரப்புவதற்காகவும் அந்நியத் துணியையும் குடியையும் பகிஷ்கரிக்க வேண்டியதன் அவசியத்தை எடுத்துச் சொல்லவும் அப்பிரதேசத்தில் பெண்களின் ஊர்வலங்களை நடத்த ஆண்கள் ஏற்பாடு செய்வதோடு உதவியும் செய்ய வேண்டும்.

11. மறியல் செய்யும் இத்தொண்டர் படைக்குப் பின்னல் தக்ளி, ராட்டையைப் பரப்புவதற்கான சரியான ஸ்தாபனம் இருப்பதோடு புதிய துண்டுப் பிரசுரங்களை வெளியிடவும், புது மாதிரியான பிரசாரம் செய்யவும் சிந்தித்து வரவேண்டும்.

*12.* பண வரவு செலவுக்கு முற்றிலும் சரியானதான கணக்கை ஒழுங்காக வைக்க வேண்டும். இக்கணக்கை அப்போதைக்கப்போது தணிக்கை செய்யவும் வேண்டும். இதையும் பெண்களின் மேற்பார்வையில் ஆண்கள் செய்து வரவேண்டும். இத்திட்டம் முழுவதிலும் ஆண்களைப் பொறுத்தவரையில் பெண்களிடம் உண்மையான மரியாதை காட்டுவதோடு அவர்கள் முன்னேற்றத்திலும் மனப்பூர்வமான ஆவல் கொண்டிருப்பது முதல் அவசியமாகும்.

—'எங் இந்தியா' – 24—4—1930

# 17

# சில மறியல் விதிகள்

அந்நியத் துணியையும் கள்ளுக்கடைகளையும் மறியல் செய்வதில் ஒரு விஷயத்தை நினைவில் வைக்க வேண்டும். குடிப்பவர், அல்லது அந்நியத் துணியை வாங்குபவரின் மனத்தை மாற்றுவது தான் மறியலின் நோக்கம். ஒழுக்க, பொருளாதாரச் சீர்திருத்தமே நமது லட்சியம். ராஜீய விளைவு, அதிலிருந்து கிடைக்கும் உபப்பொருளே. நமக்குத் துணி அனுப்புவதை லங்காஷயர் நிறுத்திவிட்டாலும், குடிப்பவனையும் அபின் தின்பவனையும் அவனுடைய தீய பழக்கத்திலிருந்து மீட்பதற்கன்றி வேறு எதற்கும் கலால் வருமானத்தை உபயோகிப்பதை அரசாங்கம் நிறுத்திவிட்டால், அப்பொழுதும் நாம் மறியல் வேலையிலும் அது சம்பந்தமான பிரசாரத்திலும் நாம் ஈடுபட்டுத்தான் இருப்போம். ஆகையாலும், கீழ்க்கண்ட விதிகளை அந்த எண்ணத்துடன் படிக்க வேண்டும்:

*1.* கடைகளை மறியல் செய்வதில் உங்கள் கவனம் முழுவதும், வாங்குபவரிடமே பதிந்திருக்க வேண்டும்.

*2.* விற்பவரிடமோ, வாங்குபவரிடமோ நீங்கள் எப்பொழுதும் மரியாதைக் குறைவாக நடந்துகொள்ளக் கூடாது.

*3.* கூட்டம் சேரும்படி செய்யக் கூடாது; வளைத்துக் கொள்ளக் கூடாது.

*4.* உங்கள் முயற்சி மௌனமான முயற்சியாக இருக்க வேண்டும்.

*5.* வாங்குபவர், விற்பவரின் மனத்தை உங்கள் கண்ணியமான நடத்தையினால் வெல்லப் பார்க்க வேண்டுமேயன்றி உங்கள் எண்ணிக்கையைக்கொண்டு அவர்களுக்குப் பயமுண்டாகும்படி செய்யக் கூடாது.

*6.* போக்குவரத்துக்கு இடைஞ்சல் செய்யக்கூடாது.

7. அவமானத்தை உண்டாக்கும் சொற்களைக் கோஷிக்கக் கூடாது.

8. வாங்குகிறவர் ஒவ்வொருவரையும், அவர் விலாசம், தொழில் ஆகியவைகளையும் நீங்கள் அறிந்து, அவர்கள் இல்லங்களிலும் உள்ளங்களிலும் நீங்கள் ஊடுருவ வேண்டும். எனவே, அதே தொண்டர்கள் தொடர்ந்து மறியல் செய்து வரவேண்டியது அவசியம் என்றாகிறது.

9. வாங்குபவர்கள், விற்பவர்களுக்கு இருக்கும் கஷ்டங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கும் நீங்கள் முயற்சி செய்ய வேண்டும். அக்கஷ்டங்களை உங்களால் நீக்க முடியாமலிருந்தால், அவற்றைக் குறித்து உங்களுக்கு மேல் இருப்பவர்களுக்கு அறிவிக்க வேண்டும்.

10. நீங்கள் அந்நியத் துணியை மறியல் செய்து வந்தால், கொஞ்சம் கதரும் உங்களிடம் இருக்க வேண்டும்; அல்லது விலைகளுடன்கூடிய மாதிரிகளைக் கொண்ட புத்தகமாவது உங்களிடம் இருக்க வேண்டும். வாங்குபவரை அழைத்துச் செல்லுவதற்குச் சமீபத்தில் எந்தக் கதர்க் கடை இருக்கிறது என்பதும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். வாங்குபவர் தமக்குக் கதர் வேண்டாம் என்றும், மில் துணிதான் வேண்டும் என்றும் பிடிவாதமாக இருப்பாரானால், அவரை உள்நாட்டு மில் ஜவுளி விற்பவரிடம் அனுப்ப வேண்டும்.

11. வாங்குகிறவர்களிடம் விநியோகிப்பதற்கான அதற்குப் பொருத்தமான பிரசுரங்கள் உங்கள் கைவசம் இருக்கவேண்டும்.

12. படக் காட்சியையும் பஜனைக் கோஷ்டிகளையும் கொண்டோ, அவை இல்லாமலோ நீங்கள் ஊர்வலங்களுக்கும் பிரசங்கங்களுக்கும் ஏற்பாடு செய்து அவற்றில் கலந்துகொள்ள வேண்டும்.

13. அன்றாடம் நீங்கள் செய்துவரும் வேலைக்குச் சரியான தினக்குறிப்பு ஒன்றை நீங்கள் எழுதி வைக்க வேண்டும்.

14. உங்கள் முயற்சி பயனளிக்கவில்லையானால் அதற்காக நீங்கள் மனச்சோர்வு அடைந்துவிடக்கூடாது. பிரபஞ்ச நியதியான காரண காரியத்தில் நீங்கள் நம்பிக்கை வைக்க வேண்டும். நல்ல எண்ணமும், நல்ல சொல்லும், நற்காரியமும் பலனில்லாது போவதில்லை என்பதில் உறுதி கொள்ள வேண்டும். ஆகவே, நல்லதை எண்ணுங்கள்; நல்லதையே பேசுவோம் என்றும் இருங்கள். இதற்கு வெகுமதி கடவுள் கையில் இருக்கிறது.

குறிப்பு: வேறு ஏதாவது விதிகள் உங்களுக்குத் தோன்றினால் அவற்றை எனக்கு அனுப்புங்கள்.

—'எங் இந்தியா' - 19 – 3 – 1931

['குறிப்புகள்' என்ற பத்தியில் முன்னால் பிரசுரமானது.]

# 18

# மேலும் சில மறியல் விதிகள்

மறியல்கள் எப்பொழுதுமே அமைதியானவைகளாக இல்லை என்று மாகாண சர்க்கார்களிடமிருந்து இந்திய அரசாங்கத்திற்குப் புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன என்பதைக் காங்கிரஸ்காரர்கள் அறிய வேண்டும். இந்தப் புகார்கள் எவ்வளவு தூரம் நியாயமானவை என்பது எனக்குத் தெரியாது. ஆனால், ஒப்பந்தத்தை அனுசரித்து நடப்பதில் அதிகாரிகளைப் பொறுத்தவரையில் அவர்கள் எவ்விதம் அதை நிறைவேற்றி வந்தாலும், நம்மைப் பொறுத்தவரையில் நாம் அதைக் கண்டிப்பாக நிறைவேற்றி வைக்காமல் இருக்க முடியாது. நாம் இதில் எவ்வளவுக்கெவ்வளவு கண்டிப்பாக நடந்துகொள்ளுகிறோமோ அவ்வளவுக்கு நமது கௌரவமும் பலமும் அதிகரிக்கும் என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். ஆகையால், முன்னால் நான் சொன்னதையே திரும்பவும் கூறுகிறேன்:

1. நேரடியாகவோ, மறைமுகமாகவோ பலவந்தப்படுத்துவது என்பதே இருக்கக்கூடாது.

2. பயமுறுத்தலைக் காட்டுவது எதுவும் இருக்கக்கூடாது. எனவே, ஓர் இடத்தில் ஒரே சமயத்தில் ஐந்து பேருக்குமேல் இருந்து வேலை செய்யக்கூடாது.

3. மரியாதையுடன் கேட்டுக்கொள்ளுவதையும், பிரசுரங்களை வினியோகிப்பதையும் தவிர வேறு எதுவும் கூடாது.

4. அந்நியத் துணி வியாபாரிகள் வாக்குறுதிகளை மீறி விடுவதற்குக் காங்கிரஸ் கமிட்டிகள் அவர்களுக்கு அபராதம் எதையும் விதிக்கக்கூடாது.

5. அந்நியத் துணியை வாங்குகிறவர்களைப் பரிகசித்துக் கூச்சலிடுவது கூடாது.

6. வாங்கப் போகிறவர்களைச் சுற்றி நின்றுகொண்டு அவர்களை வளைத்துக்கொள்ளக்கூடாது.

7. வாங்கப் போகிறவர்களையும், அந்நியத் துணியை ஏற்றிச் செல்லும் வண்டியையும் மறிப்பதற்குக் குறுக்கே வழியில் படுப்பது என்பதும் கூடாது.

இத்தகைய கட்டுத்திட்டங்களின் கீழ் மறியல் செய்வதால் ஒரு பயனுமில்லை என்று எண்ணுகிறவர்கள் யாராவது இருப்பார்களாயின், அவர்கள் கண் முன்னாலேயே அந்நியத் துணி விற்கப்படும் அபாயம் நேரிட்டாலும் சரி என்று அவர்கள் மறியலைக் கைவிட்டுவிடலாம். அந்நியத் துணி விற்பனையைத் தடுக்க

வேண்டும் என்பதற்காகச் சமரச ஒப்பந்தத்தின் விதிகளையும் உணர்ச்சியையும் மீறி நடந்துவிடுவதைவிட அந்நியத் துணி விற்கப்பட்டுவிடுவதே மேல்.

காங்கிரஸின் செய்தி மக்களிடையே பரவி கதர் உணர்ச்சி அவர்களிடையே ஊடுருவிப் பாய்ந்துவிடுமானால், அந்நியத் துணி பகிஷ்காரம் முடிவில் வெற்றி பெற்றே தீரும். பிரசாரத்திற்கும், உற்பத்திக்கும் உண்மையாக வேலை செய்ய வேண்டியது கிராமங்களிலேதான்.

அந்நியத் துணி பகிஷ்காரத்தைத் தொடர்ந்து செய்து வருவது, அதனால் ஏற்படக்கூடிய பெரிய பொருளாதார, சமூக நன்மைகளை முன்னிட்டே என்பதை நாம் நினைவில் வைக்க வேண்டும். பிரிட்டிஷ் ஜவுளியையும் நூலையும் பகிஷ்கரிப்பது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் ஜப்பானிய, இத்தாலிய ஜவுளியையும் நூலையும் பகிஷ்கரிப்பதுமாகும். உண்மையில் ஜப்பான் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டியது இன்னும் அதிக முக்கியம். ஏனெனில், ஜப்பான் துணிதான் இந்திய மில் துணிக்கும், கதருக்கும் அதிகப் போட்டியாக இருந்துவருகிறது. ஜப்பான் மீது நமக்கு எந்தத் துவேஷமும் கிடையாது. அந்நியத் துணி பகிஷ்காரம் நம் நாட்டின் பொருளாதார நிலைக்கு அவசியமானதாக இருப்பதனாலேயே அதைத் தொடர்ந்து செய்து கொண்டு வருகிறோம்.

மறியல் முறையைக் குறித்து நான் சொன்னவை மதுபானக் கடைகள் மறியல் விஷயத்திலும் பொருந்தும். அதிலும்கூட குடிகாரர்களின் இல்லங்களில் ஊடுருவி விடுவதில்தான் முடிவான வெற்றி இருக்கிறது.

—'எங் இந்தியா' – 21—5—1931

# 19

# பலாத்கார மறியலின் தீமைகள்

அந்நியத் துணி பகிஷ்காரத்தைப் பெரும்பாலும் அகிம்சையின் மூலமே அடைந்துவிட்டோம் என்ற நம்பிக்கையில் நான் அமிழ்ந்து இருந்து வருகிறேன் என்று ஒரு நண்பர் எனக்கு எழுதுகிறார். இந்தக் குற்றச்சாட்டை நான் மறுக்கவே வேண்டும். ஏனெனில், நமது மறியலில் புகுந்துவிட்ட பலாத்காரஉணர்ச்சியை நான் அறியாமல் இல்லை. பலாத்காரமான மறியலினால் ஏற்பட்ட பலன் எதுவும், இடைக்காலத்தில் மாத்திரமே இருக்கக்கூடியதாகவே இருக்கும் என்பது மாத்திரமல்ல, நாம் எல்லோரும் வருந்த வேண்டியதான விளைவுகளுக்குமே அவை கொண்டுபோய் விடும் என்பது என் அபிப்பிராயம். 'வர்த்தகத்தையும் அது

போன்றவைகளையும் பொறுத்தவைகளில் கட்டாயப்படுத்துவது என்பதே இருக்கக்கூடாது' என்பதுதான் நம் நடத்தைக் கோட்பாடு. மனவுறுதி ஏற்படுவதற்கும் மன மாற்றத்திற்கும் மறியல் அதிகப் பயனுள்ளது மாத்திரமல்ல, இன்றியமையாதது. ஆனால், மிரட்டலுக்கோ பலவந்தப்படுத்தப்படுவதற்கோ உடன்பட்டு விடுகிறவன், அதை வெறுக்கிறான். தனது பழைய வழக்கத்திற்குத் திரும்புவதற்கு எப்பொழுது சமயம் வாய்க்கும் என்று எதிர்பார்த்துக் காத்துக்கொண்டும் இருக்கிறான். பதிலுக்குப் பதில் செய்ய முடியும்போது அதையும் செய்துவிடுகிறான். பலவந்தமான ஒவ்வொரு முறையும் முடிவில் தீமையானதே. பலாத்காரம் இல்லாமல், முதலில் கஷ்டங்களை அனுபவித்ததன் மூலம், அதாவது மக்கள் விரும்பிக் கஷ்டங்களை அனுபவித்ததன் மூலம் கிடைத்த பலனை மாத்திரமே நாம் அனுபவிக்க முடியும். என்னுடைய இந்த நம்பிக்கையில் பங்கு கொள்ளுமாறு தூண்ட வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்.

—'எங் இந்தியா' – 5—3—1931

பகுதி ஆறு

# விவசாயிகளும் ஜமீன்தார்களும்

## 1

## திருத்த வேண்டுமா, ஒழிக்க வேண்டுமா?

"ஜமீன்தாரி முறையைத் திருத்த வேண்டுமா, அல்லது ஒழித்துவிட வேண்டுமா என்ற பிரச்னையைத்தான் உங்கள் கருத்தும் என் கருத்தும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அதைத் திருத்த வேண்டும் என்று நான் சொல்லுகிறேன். அதைத் திருத்த முடியாது போனல், அது தானே ஒழிந்து போய்விடும். நீங்களோ, திருத்தவே முடியாதது அது என்கிறீர்கள்.'' கல்கத்தா காங்கிரஸ்வாதிகள் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசியபோது, சோஷியலிஸ்டு மனப்போக்கு உள்ளவர்களுக்கும் சத்தியாக்கிரக மனப்போக்கு உள்ளவர்களுக்குமிடையே இருக்கும் கருத்து வேறுபாட்டை இவ்வாறு எடுத்துக் கூறினர். இவ்விஷயம் சம்பந்தமாக எழும் அநேக கேள்விகளில் இந்த அடிப்படையான வித்தியாசம் இருந்து வருகிறது. ஆகையால், இதற்குக் காந்திஜி அளித்த பதில்களில் இயல்பாகவே அவருடைய தத்துவம் பிரதிபலிக்கிறது. இவ்வாறு அநேகரைத் திகைக்கவைக்கும் கேள்விகளில் ஒன்று இது :

"ஜமீன்தார்களும் மகாராஜாக்களும் அதிகார வர்க்கத்தின் ஆயுதங்கள். எப்பொழுதும் அவர்கள் அதிகார வர்க்கத்திற்கே ஆதரவாக இருந்து வருவதோடு நமது முன்னேற்றத்திற்கும் சுதந்திரத்திற்கும் முட்டுக்கட்டைகளாகவும் இருந்துவருகிறார்கள். அப்படிப்பட்ட முட்டுக்கட்டைகளை ஏன் நீக்கிவிடக் கூடாது?"

இதற்குத் தமது தத்துவத்தை வெளிப்படுத்துவதாக இருந்த காந்திஜியின் பதில் இதுதான். "உண்மையில் அவர்கள் முற்றிலும் அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே. ஆனல், அவர்கள் அதிகார வர்க்கத்தின் கையில் வேறு கதியில்லாத ஆயுதங்களாக

இருந்து வருகிறார்கள். அவர்கள் எப்பொழுதும் அப்படியே இருந்துவர வேண்டுமா? நமக்குத் தூரத்தில் அவர்களை வைத்து விடுவதற்கான எதையும் நாம் செய்துவிடக்கூடாது. அவர்கள் தங்கள் மனப்போக்கை மாற்றிக்கொண்டு விடுவார்களானால், அவர்களுடைய சேவையை நம் நாட்டுக்கு நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். அவர்கள் மாறுதலை அடையவில்லை என்றால், இயல்பாகவே அவர்கள் செத்து ஒழிந்துவிடுவார்கள். நம்மிடம் அகிம்சை இருக்குமானால், நாம் அவர்களைப் பயமுறுத்தமாட்டோம். காங்கிரஸினிடம் அதிகாரம் இருக்கும்போது நாம் இரண்டு மடங்கு ஜாக்கிரதையோடு இருக்க வேண்டும்.''

கேள்வி : ஆனால், ஜமீன்தாரி முறை அராஜகத் தன்மையுடையது. ஆகையால், அகிம்சை முறையைக்கொண்டே அது போக வேண்டும் என்று நாங்கள் சொல்லக்கூடாதா ?

பதில் : அப்படிச் சொல்லலாம். 'சொல்லத்தான் வேண்டுமா?' என்பதுதான் கேள்வி. ஜமீன்தார்களிடம் நாம், ''இவைகளெல்லாம் தீமைகள். இவைகளிலிருந்து நீங்கள் ஏன் விலகிக் கொள்ளக்கூடாது?'' என்று ஏன் கேட்கக்கூடாது? மனித இயல்பில் நம்பிக்கை வைப்பது இதில் அடங்கியிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன்.

கே : நிரந்தர செட்டில்மெண்டு இருந்து வர வேண்டும் என்று கூறுவீர்களா?

ப : இல்லை. அது போயாக வேண்டும். விவசாயிகள் சந்தோஷமாகவும் சுபிட்சமாகவும் இருக்கும்படி செய்வதற்கு வழி, இப்பொழுது இருந்துவரும் நிலைமையின் காரணத்தை அவர்கள் அறியும்படி செய்து, அதை எப்படி மாற்றிக் கொள்ளுவது என்பதையும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதேயாகும். அகிம்சை வழியையோ அல்லது பலாத்கார வழியையோ நாம் அவர்களுக்குக் காட்டலாம். பலாத்கார வழி கவர்ச்சியானதாகக்கூடத் தோன்றும். ஆனால், அது நாளாவட்டத்தில் நிரந்தரமான அழிவிற்கான மார்க்கமாகும்.

கே : ஆனால், நிலத்தை யார் உழுகிறானோ அவனுக்குத்தான் அது சொந்தம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் அல்லவா?

ப : நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அதனால் ஜமீன்தாரை அழித்துவிட வேண்டும் என்று அர்த்தமல்ல. கையினால் உழைப்பதைப் போன்றே அறிவையும் காசையும் அளிக்கிறவனும் உழுபவனே. இப்பொழுது இவ்விரு சாராருக்குமிடையே இருந்து வரும் பயங்கரமான சமத்துவமின்மையைப் போக்கிவிடுவதே நாம் அடைய விரும்புவதும் அடைய வேண்டியதுமாகும்.

கே: ஆனல், திருத்தும் வேலையைச் செய்வதென்ருல் அதற்கு நீண்ட காலம் பிடிக்கும்.

ப: நீண்ட காலம் பிடிக்கும் முறை என்று தோன்றுவதுதான் மிகக் குறைந்த கால முறையாகவும் இருக்கிறது.

கே: நிலத்தை விவசாயிகளுக்கு ஏன் பிரித்துக் கொடுத்துவிடக் கூடாது?

ப: இது அவசரப்பட்ட எண்ணம். இன்று நிலம் அவர்கள் கையில்தான் இருக்கிறது. ஆனல், அவர்களுடைய உரிமைகள் யாவை, அவற்றை எப்படி உபயோகிப்பது என்பது அவர்களுக்குத் தெரியாது. நிலத்தை விட்டுப் போய்விட வேண்டாம், ஜமீன்தாருக்குத் தீர்வையையும் செலுத்த வேண்டாம் என்று சொல்லுகிறேம் என்று வைத்துக்கொள்ளுவோம். விவசாயிகளின் துயரங்களெல்லாம் இதனல் தீர்ந்துவிடும் என்று நினைக்கிறீர்களா ? நிச்சயமாக இன்னும் செய்ய வேண்டியவை எவ்வளவோ இருக்கும். அதைச் செய்ய இப்பொழுது ஆரம்பித்தால், இரவை அடுத்துப் பகல் வருவதைப் போல மற்றவை தானே வந்துவிடும் என்று நான் யோசனை கூறுகிறேன்.

இதிலிருந்து கிஸான் (விவசாயிகள்) சபைகள், காங்கிரஸுக்கும் அவைகளுக்குமுள்ள உறவு, அவைகளின் வேலை, அவை செய்யக்கூடியவை ஆகியவற்றைப் பற்றிய கேள்விகளெல்லாம் எழுந்தன.

காந்திஜி கூறியதாவது: ''என் வாழ்நாள் முழுவதும் நான் விவசாயிகளுடனும் தொழிலாளருடனும் வேலை செய்து வந்திருப்பதால் இதில் என்னுடைய அபிப்பிராயம் மிகத் தெளிவானது. கிஸான்கள் சபைகள் தனியாக இருந்து வேலை செய்வதைக் காங்கிரஸ் அனுமதிப்பதிலோ, சாதாரணமான வழியில் வருவார்களானல், கிஸான் சபைகளின் நிர்வாகிகள் காங்கிரஸின் நிர்வாக சபைகளில் இருக்கும்படி அனுமதிப்பதிலோ, காங்கிரஸ் அமைப்பு விதிகளைப் பொறுத்தவரையில் தவறு எதுவும் இல்லை. ஆனல், தனியான கிஸான் ஸ்தாபனங்களை நான் ஆராய்ந்து பார்த்ததிலிருந்து, காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கைப்பற்றிக்கொள்ளும் நோக்கத்துடன் அவை அமைக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி அவை விவசாயிகளின் நன்மைக்காக வேலை செய்யவில்லை என்ற முடிவுக்கே நான் வரவேண்டியவனுக இருக்கிறேன். விவசாயிகளைச் சரியான வழியில் நடத்திப் போவதன் மூலம் இதைக்கூட அவர்கள் செய்யலாம். ஆனல், அவர்களைத் தவருன வழியில் கொண்டு போகிருர்கள் என்றே அஞ்சுகிறேன். அங்கீகாரம் பெற்ற காங்கிரஸ் வேலையைத் தவிர வேறு எதையும் செய்யாமல் விவசாயிகளும் அவர்களுடைய தலைவர்களும் காங்கிரஸைக் கைப்பற்றிக்கொள்ளுவார்களானல், அதனல் தீமை எதுவும் இல்லை. ஆனல், பொய்யான அங்கத்தினர் ஜாபிதாக்கள், கூட்

டங்களில் திடீரெனப் பிரவேசிப்பது போன்றவைகளின் மூலம் அவர்கள் காங்கிரஸைக் கைப்பற்றுவார்களாயின், அது பாஸிஸத்தைப் போன்றதாகவே ஆகும்.

"ஆனால், முக்கியமான கேள்வி இதுதான்: கிஸான் சபைகள், காங்கிரஸைப் பலப்படுத்த நீங்கள் விரும்புகிறீர்களா, பலவீனப்படுத்த விரும்புகிறீர்களா? கிஸான் சபைகளைக் காங்கிரஸைக் கைப்பற்ற உபயோகிக்கப் போகிறீர்களா, விவசாயிகளுக்குச் சேவை செய்ய உபயோகிக்கப் போகிறீர்களா, வெளிக்குக் காங்கிரஸின் பெயரை வைத்துக்கொண்டு கிஸான் சபைகள் காங்கிரஸுக்குப் போட்டியான ஸ்தாபனங்களாக இருக்கப் போகின்றனவா, அல்லது காங்கிரஸ் கொள்கையையும் வேலைத் திட்டத்தையும் நிறைவேற்றிவைக்கும் ஸ்தாபனங்களாக இருக்கப் போகின்றனவா? உண்மையில் அது போட்டி ஸ்தாபனம் தான், பெயரளவில்தான் அது காங்கிரஸ் ஸ்தாபனமாக இருக்கிறது என்றால், அதன் பலமும் சக்தியும் காங்கிரஸை எதிர்ப்பதற்கே உபயோகிக்கப்படும். காங்கிரஸின் பலமும் சக்தியும் கிஸான் சபைகளை எதிர்க்க உபயோகிக்கப்படும். இந்த இரண்டுக்கும் நடுவில் ஏழை விவசாயிகள்தான் நசுங்குண்டு போவார்கள்."

—'ஹரிஜன்' – 23—4—1938

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

## 2

## ஐக்கிய மாகாண விவசாயிகள்

முந்திய போராட்டத்தின்போது, பூரண சுயராஜ்யத்தை அடைவதற்காக நடத்தப்பட்ட சட்ட மறுப்பின் ஒரு பகுதியாக, வரி கொடாமை இயக்கமும் சில ஜில்லாக்களில் நடத்தப்பட்டது. ஆனால், காங்கிரஸுக்கும் அரசாங்கத்திற்குமிடையே சமரச ஒப்பந்தம் ஏற்பட்டதன் காரணமாக சட்ட மறுப்பு நிறுத்தப்பட்டுவிட்டதால் வரி கொடா இயக்கமும் இல்லை.

ஆயினும், அப்பொழுது உங்களுக்குப் பொருளாதாரக் கஷ்டம் அதிகமாக இருந்தது. உங்கள் நிலைமை சாதாரண காலத்திலேயே மோசமாக இருந்து வந்திருப்பதால், நீங்கள் விளைவித்த பொருள்களின் விலை ஒரேயடியாகக் குறைந்துபோய்விட்டதால் உங்கள் நிலைமை இன்னும் அதிக மோசமானதாகிவிட்டது. நீங்கள் செலுத்த வேண்டிய நிலத் தீர்வையை முற்றிலும் செலுத்த முடியாதவர்களாக நீங்கள் இருந்து வருகிறீர்கள் என்று காங்கிரஸ் ஊழியர்கள் கூறுகிறார்கள். பல ஜில்லாக்களில் நூற்றுக்கணக்கான கிராமங்களில் விசாரித்-

ததில், நிலைமை எவ்வளவு படுமோசமாக இருந்து வருகிறது என்பது வெளியாகிறது. விலைகள் படுபாதாளத்திற்கு இறங்கி விட்டதால் நீங்கள் வெள்ளாமை செய்தவைகளெல்லாவற்றையும் விற்றாலும் அத்தொகை தீர்வை கொடுப்பதற்குப் போதுமான தாக இல்லை என்பது தெரிகிறது. இது சம்பந்தமாகவே கவர்னரைப் பார்ப்பதற்காக நான் நைனிதாலுக்கு வந்திருந் தேன். நான் கூறியவைகளைக் கவர்னர் பொறுமையுடன் கேட்டுக் கொண்டார். நிலைமையைக் குறித்துத் தீர விவாதித்தார். அவர் அனுதாபத்துடனேயே இருந்தார்; ஐக்கிய மாகாண அர சாங்கம் அளிப்பதாக இதுவரையில் அறிவித்திருக்கும் நிவார ணங்கள், உண்மையில் அங்கே இருந்துவரும் நிலைமைக்குப் போதுமானதாக இல்லை என்று சில காங்கிரஸ் ஊழியர்கள் என்னிடம் நிச்சயமாகக் கூறியிருக்கிறார்கள் என்பதையும் அவருக்குச் சொன்னேன். அவரிடம் சில யோசனைகளையும் கூறினேன். அவற்றைக் கவனிப்பதாக அன்புடன் வாக்குறுதி யளித்திருக்கிறார்.

இதற்கு மத்தியில், நான் செய்ய முடிந்த அளவில், உங்களுக் குச் சில புத்திமதிகளைச் சொல்லவும் நான் கடமைப்பட்டிருக் கிறேன். இந்த நிலைமையைக் குறித்து அதிகக் கவலையுடன் என் சக ஊழியர்களோடு பல மணி நேரம் விவாதித்திருக்கிறேன். பல முக்கியமான தாலுக்தார்களுடன் இதைக் குறித்து மனம் விட்டுத் தாராளமாக விவாதிக்கும் வாய்ப்பும் எனக்கு இருந்தது. என்னைப் பார்க்க வருமாறு நான் அழைத்ததற்கு இணங்கி அவர்கள் அன்புடன் வந்தார்கள். இங்கே நான் கூறப்போகும் யோசனைகளைப் பொதுவாக அவர்களும் ஏற்றுக்கொள்ளுகிறார்கள் என்பதைச் சந்தோஷத்துடன் கூறுகிறேன்.

மற்ற ஜில்லாக்களைவிட கீழ்க்கண்டவைகளில் அதிக கவனம் செலுத்தி வேலை செய்யப்பட்டிருக்கிறது: ஆக்ரா, மத்ரா, அலகாபாத், ராய் பரேலி, கோரக்பூர், கான்பூர், லக்னோ, பர்டாப்கிரா, எடாவா. இந்த ஜில்லாக்களைப் பொறுத்தவரையில், 1338 பஸலிக்கு நிலத் தீர்வை வஜா இருக்க வேண்டும் என்பது தெரிந்தது. குடிவார பாத்தியதை இல்லாத விவசாயிகளுக்கு ரூபாய்க்கு எட்டு அணாவும் குடி வார பாத்தியதையுள்ள விவசாயி களுக்கு ரூபாய்க்கு நான்கு அணாவும் தீர்வை வஜா அளிக்க வேண்டும். இந்தப் பொதுவான முறை, ஆங்காங்கு இருக்கும் நிலைமைக்கு ஏற்றவாறு மாற்றப்படும்.

சில ஜில்லாக்களில் குடியானவர்கள் இன்னும் குறைவான தீர்வை வஜாவைக் கொண்டு சமாளித்துக் கொள்ளக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள் என்று என்னிடம் கூறப்படுகிறது. சில ஜில்லாக்கள், உள்ளூரில் ஏற்பட்ட ஆபத்துக்கள் காரண மாக இன்னும் அதிகக் கஷ்டத்தை அடைந்திருக்கின்றன. இங்கே யோசனை கூறப்பட்டிருக்கும் தீர்வைக் குறைப்புக்கு அதிகமாகவே செலுத்தக்கூடிய நிலைமையிலிருக்கும் ஜில்லாக்

களுக்கு இத்தீர்வைக் குறைப்பு முறை அனுசரிக்கப்படமாட்டாது. மேலே சொன்ன ஜில்லாக்களில் இருக்கும் நிலைமையை விட இன்னும் அதிகத் தாழ்ந்த நிலையிலிருக்கும் ஜில்லாக்களுக்கும் அந்தத் தீர்வைக் குறைப்பு முறை பொருந்தாது. குறிப்பிடப்பட்டிருக்கும் ஜில்லாக்களில்கூட, அதிகமாகக் கொடுக்கக்கூடிய நிலைமையில் இருப்பவர்கள் அப்படிக் கொடுக்க வேண்டும். விவசாயிகள் தங்களால் செலுத்த முடிந்த தீர்வையைச் சாத்தியமான வரையில் சீக்கிரமாகவே செலுத்திவிட வேண்டும் என்றும் காங்கிரஸ் எதிர்பார்க்கிறது. நிலைமைக்கு ஏற்றாற் போல யாரும் 8 அணுவுக்கும் 4 அணுவுக்கும் குறைவாகச் செலுத்தக்கூடாது. ஒரே ஜில்லாவில் யோசனை கூறப்பட்டிருக்கும் தீர்வைக்கு அதிகமாகக் கொடுக்கக்கூடியவர்களும் இருப்பதைப் போலவே எட்டணுவுக்கும் 4 அணுவுக்கும் குறைவாகவே செலுத்தக்கூடியவர்களின் விஷயமும் இருக்கக்கூடும் அத்தகைய விவசாயிகளின் விஷயங்களில் ஜமீன்தார்கள் தாராளமாக நடந்துகொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

ஒவ்வொருவர் விஷயத்திலும் அவர்கள் கொடுக்கும் தீர்வையுடன் இந்த வருடத்திற்குச் செலுத்த வேண்டிய தீர்வைக் கடமை தீர்ந்ததாக அத்தாட்சி பெறுவதைக் காண்பீர்கள்.

போராட்டத்தின்போது பல விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டு விட்டனர் என்றும், அதற்குப் பிறகும் பலர் வெளியேற்றப்பட்டிருக்கிறுர்கள் என்றும் அறிகிறேன். அவர்கள் வைத்திருந்த நிலத்தை அவர்கள் திரும்ப அடையும்படி செய்யாமலிருப்பது, ஒப்பந்தத்தினல் உண்டாக்க முயன்ற சூழ்நிலைக்கே முற்றிலும் எதிரானதாகும் என்பது தெளிவானது. ஆகையால், யோசனை கூறப்பட்டிருக்கும் தீர்வை விகிதத்தை விவசாயிகள் செலுத்தியதும், மேற்கொண்டும் எந்தத் தண்டமும் செலுத்தும்படி செய்யாமல் அவர்கள் வைத்திருந்த நிலம் அவர்களுக்கே விடப்படும் என்றே நான் முழுதும் நம்புகிறேன்.

தீர்வையைச் செலுத்துவது உடனே ஆரம்பமாகும் என நம்புகிறேன். முழு எட்டணு தீர்வையையும் நீங்கள் உடனே செலுத்த முடியாமலிருக்கலாம். அந்த நிலைமையில் உங்கள் தீர்வை வசூல் நிறுத்திவைக்கப்படுவதோடு, செலுத்தாமலிருக்கும் பாக்கிக்கோ, பழைய பாக்கிக்கோ அடுத்த வெள்ளாமை வரையில் வசூலிக்க நிர்ப்பந்த முறைகள் அனுசரிக்கப்படமாட்டா என்றும் நம்புகிறேன்.

உங்களால் முழுத் தீர்வையையும் கொடுக்க முடியாததால் ஜமீன்தார்களுக்கு நஷ்டமுண்டாவதை முன்னிட்டு, அவர்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய வரியில் அதற்கு ஏற்றாற் போல அவர்களுக்கும் வரியைக் குறைக்க வேண்டும் என்று அரசாங்கத்திற்கு யோசனை கூற விரும்புகிறேன்.

கடைசியாக உங்களுக்கு ஓர் எச்சரிக்கையும் செய்கிறேன். பிறர் சொல்லும் புத்திமதிகள் எவையாவது உங்கள் செவிகளுக்கு எட்டினால் அவற்றைக் கேட்காதீர்கள். ஜமீன்தார்களுக்கு நீங்கள் தீர்வையே செலுத்த வேண்டியதில்லை என்று அவர்கள் சொல்லுவார்கள். அப்படி உங்களுக்கு யோசனை கூறுகிறவர்கள் யாராக இருந்தாலும் நீங்கள் கேட்கமாட்டீர்கள் என்று நம்பு கிறேன். காங்கிரஸ்காரர்கள் அப்படி உங்களுக்கு யோசனை கூற முடியாது. ஜமீன்தார்களுக்குக் கஷ்டம் விளைவிக்க நாம் விரும்ப வில்லை. சொத்துக்களை நாசப்படுத்த வேண்டும் என்பதும் நம் நோக்கமல்ல. அதைச் சட்ட ரீதியாக உபயோகிக்க மாத்திரமே நாம் விரும்புகிறோம்.

தீர்வை எதுவுமே கொடுக்காதீர்கள் என்று காங்கிரஸ் காரர்கள் சொன்னால் அப்பொழுது காங்கிரஸ்காரர்கள் சொல்லு வதைக் கேட்பீர்கள்; உங்கள் சக்திக்கு ஏற்றபடி தீர்வையைச் செலுத்துங்கள் என்று காங்கிரஸ்காரர்கள் சொன்னால் நீங்கள் கேட்கமாட்டீர்கள் என்று சொல்லப்படுகிறது. இந்த அவதூறு பொய்யானது என்பதை நீங்கள் நிரூபிப்பதற்கான சந்தர்ப்பம் இப்பொழுது வந்திருக்கிறது.

சில நிலச்சுவான்தார்களோ, அவர்கள் சார்பிலோ நீங்கள் கொடுமைப்படுத்தப்படுகிறீர்கள் என்று புகார் கூறுகிறீர்கள். உங்கள் புகார்களைக் குறித்தெல்லாம் விசாரிக்கக் காங்கிரஸ் முயன்று வருகிறது; முயற்சி செய்யும். அப்படிக் கொடுமைப் படுத்த வேண்டாம் என்று நிலச்சுவான்தார்களைக் காங்கிரஸ் வேண்டிக்கொள்ளும். வேறு வழியில்லை என்றிருக்கும் விஷயங் களில் சட்டப்படி பரிகாரம் தேடவும் காங்கிரஸ் ஆலோசனை கூறும். ஆனால், இன்னுமொன்றையும் ஒப்புக்கொள்ளவே வேண்டும். சில விவசாயிகள் கூட, கட்டுக்கடங்காமல் போய் தாக்கிக் கொன்றுவிடும் குற்றங்களையும் செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட காரியங்கள், விவசாயிகளின் நற்பெயரைப் பாழாக்கி, அவர்களுடைய நன்மைக்கும் தீமையை விளைவித்து, சேவைக்குக் காங்கிரஸினால் உள்ள பயனையும் கெடுத்துவிடு கின்றன. ஏனெனில், முடிவில் நீங்களும் காங்கிரஸ்காரர்களே. நீங்கள் காங்கிரஸில் அரைகுறையாகப் பிரதிநிதித்துவம் வகிக் கும் வரையில், காங்கிரஸ் பூரணத்துவமுடையதாக ஆகாது.

சத்தியத்தையும் அகிம்சையையும் கொண்டு பூரண சுய ராஜ்யத்தை அடைய காங்கிரஸ் முயன்று வருகிறது என்பதைத் தயவு செய்து ஞாபகத்தில் வையுங்கள். இந்த அடிப்படையான கொள்கைகளை அனுசரிக்க விவசாயிகள் தவறிவிடும் அளவுக்குக் காங்கிரஸும் தவறிவிடும். நீங்கள் கோடிக்கணக்கானவர்கள். கோடிக்கணக்கானவர்கள் உண்மையற்றவர்களாகவும் பலாத் காரமானவர்களாகவும் ஆகிவிட்டால், அது தம்மைத் தாமே அழித்துக்கொள்ளுவதாகும். ஆகையால், நீங்கள் பதிலுக்குப் பதில் செய்யாமல், இழைக்கப்படும் துன்பத்தைச் சகித்துக்

கொள்ள வேண்டும். பிறர் துன்பம் இழைப்பதை எதிர்ப்ப தற்குச் சரியான வழி, துன்பம் இழைப்பவருக்குத் துன்பம் இழைப்பது அல்லவே அல்ல; ஆனால் துன்பம் இழைப்பதற்கு மறுத்துவிடுவதுதான் வழி. செய்வது தவறு என்பதை நாம் அறியும்போது, அப்படி மறுப்பதனால் என்ன கஷ்டம் வந்தாலும் மறுத்துவிடவே வேண்டும்.

இங்ஙனம்,
உங்கள் நண்பனும் ஊழியனும்,
மோ. க. காந்தி

—'எங் இந்தியா' - 28—5—1931

# 3

# விவசாயிகளின் நண்பர்களாகுக

ஐக்கிய மாகாண விவசாயிகளுக்கு நான் வெளியிட்டிருக்கும் வேண்டுகோளை மற்றோரிடத்தில் காணலாம்.* ஐக்கிய மாகாண அரசாங்கம் கொடுக்கும் நிவாரணத்திற்கு அது அதிகமானதாக இருக்கிறது. ஆகையால், இது கவர்னருக்குப் பிடிக்கவில்லை என்பதை அறிவேன். ஆனால், அந்த வேண்டுகோளில் விவசாயிகளுக்குக் கூறப்பட்டிருக்கும் புத்திமதி, தீர்வையைச் செலுத்துவதற்கு அவர்களுக்குள்ள சக்தியை எடுத்துக் காட்டுவதற்கு யோக்கியமான முயற்சியாகும். ஆகையால், அந்த வேண்டுகோளில் கூறியிருக்கிறபடி விவசாயிகள் தீர்வையைச் செலுத்துவார்களானால், ஜமீன்தார்களும் மாகாண அரசாங்கமும், விவசாயிகள் தாங்கள் செலுத்த வேண்டிய முழுத் தொகையையும் செலுத்திவிட்டதாக ஏற்றுக்கொண்டு விடுவார்கள் என்று நம்புகிறேன். ஐக்கிய மாகாணத்தில் இருந்து வரும் நிலத் தீர்வை முறைப்படி, கஷ்டம் முழுவதும் முதலில் ஜமீன்தார்களின் தலையில்தான் விழும். விவசாயிகள் இன்னது கொடுப்பது என்ற முறையை ஏற்றுக்கொள்ளும் ஜமீன்தார்களுக்கு அதற்கு ஏற்றவாறு அர்சாங்கம் நிவாரணம் அளிக்கும் என்றும் நம்புகிறேன்.

என்னால் ஆராய முடிந்த அளவுக்குக் கிராமங்களின் நிலைமையை ஆராய்வதற்கு நான் முயன்றிருக்கிறேன் என்று ஜமீன்தார்களுக்கு நான் எனது வாக்குறுதியை அளிக்க முடியும். என் முன்னால் ஆதாரபூர்வமான புள்ளி விவரங்கள் இருக்கின்றன. இதைக்கொண்டு அதைவிட வேறு சிறந்த முறையைக் கூறுவது அசாத்தியமானது. விலைகளைப் பற்றிய இரு விவரங்கள் வருமாறு:

* முந்திய அத்தியாயத்தில் வெளியிடப்பட்டிருக்கும் கடிதத்தையே இங்கே காந்திஜி குறிப்பிடுகிறார்.

## விவரம் 1

முக்கியமான உணவுப் பொருள்களின் (கோதுமை, பார்லி, பயறு, உளுந்து, அரிசி, கம்பு ஆகியவைகளின்) விலைக் குறியீட்டு எண்கள், 1873-இல் 100 என்ற கணக்குப்படி:

| ஆண்டு | விலைகள் | ஆண்டு | விலைகள் |
|---|---|---|---|
| 1880 | 118 | 1906-10 | 195 |
| 1881-85 | 100 | 1911-15 | 194 |
| 1886-90 | 119 | 1916-20 | 272 |
| 1891-95 | 128 | 1921-25 | 294 |
| 1896-1900 | 166 | 1926 | 300 |
| 1901-05 | 136 | 1931 (மே) | 132 |

## விவரம் 2

| ஆண்டு | விலை, மணங்குக்கு ரூபாய் | ஆண்டு | விலை, மணங்குக்கு ரூபாய் |
|---|---|---|---|
| 1880 | 1.5 | 1906-10 | 3.56 |
| 1881-85 | 1.68 | 1911-15 | 3.31 |
| 1886-90 | 2.08 | 1916-20 | 4.63 |
| 1891-95 | 2.22 | 1921-25 | 4·73 |
| 1896-1900 | 2.75 | 1926-28 | '4.9 |
| 1901-05 | 2.34 | 1931 (மே) | 2.3 |

*1915*-இல் இருந்த விலைக்கு முக்கியமான உணவுப் பொருள்களின் விலை *50* சத விகிதம் குறைந்துவிட்டது என்பதை மேலே கண்ட புள்ளி விவரங்கள் காட்டுகின்றன. இந்த விலைகள், *1886*-இல் இருந்த விலைக்குப் போயிருக்கின்றன. அதாவது, நமக்குத் தெரிந்தவரையில் விலைகள் இவ்வளவு குறைவாக இருந்ததே இல்லை என்றாகிறது. அந்த நாளில் இருந்த நிலத் தீர்வைக்குப் போவதாக இருந்தால், நான் விடுத்த வேண்டுகோளில் கண்ட *8* அணு, *12* அணுவுக்கும் அதிகக் குறைவாகவே விவசாயிகள் இப்பொழுது தீர்வை செலுத்த வேண்டும். விவசாயிகள் நிலைமை சமீப வருடங்களில் எப்பொழுதுமே சுபிட்சமாக இருந்ததில்லை என்பதும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. உண்மையில், ஐக்கிய மாகாணத்தின் கிழக்குப் பகுதியில் முன்னூறுக்கு அதிகமான கிராமங்களில் விசாரித்ததில், இப்பொழுதுள்ள விலையில் விவசாயிகளுக்குக் கிடைக்கும் வருவாய், தீர்வை செலுத்துவதற்குக்கூடப் போதுமானதாக இல்லை என்று தெரிகிறது. சாகுபடி செலவும் கிடைப்பதில்லை. இந்த விசாரணை, நிபுணர்களைக் கொண்டு செய்யப்பட்டதல்ல என்பதை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆகையால், இது அவ்வளவு சரியானதாக இருப்பதற்கில்லை. ஆனால், இந்த விவரம் இருப்

பதைக்கொண்டு கவனித்தால், இது யாரும் கொஞ்சம் நிதானித்து யோசிக்கும்படி செய்வதாகவே இருக்கிறது.

ஸ்ரீ ஹூப்பர், ஒரு சமயம் செட்டில்மெண்டு அதிகாரியாக இருந்தவர். ஐக்கிய மாகாண விவசாயியைக் குறித்துக் கீழ்க் கண்டவாறு நிலச்சுவான்தார்களின் விளக்கத்தைக் கூறியிருப்ப தாகச் சொல்லப்படுகிறது:

"தினத்திற்கு ஒரு வேளை சாப்பாட்டோடு வாழத் தயாராக இருப்ப வனே விவசாயி. கிராம பாஷையில் சொன்னால், தன்னிடம் இருக்கும் நிலத் திற்கு அதிகப்படியானதாக இருக்கும் தீர்வையைச் செலுத்துவதற்குத் தனது மனைவி மக்களையும் அவன் விற்றுவிடுவான். நிலச்சுவான்தார் தம் இஷ்டப்படி எத்தனை செஸ் வரிகள் விதித்தாலும் உடன்படுவான். கூலியில்லாமல் நிலச்சுவான்தாருக்கு வேலை செய்யத் தயாராயிருப்பான். நிலச்சுவான்தாருக் காகக் கோர்ட்டில் சாட்சி சொல்லவும், தயாராயிருப்பான். பொதுவாகச் சொன்னால், அவனுக்குச் சொன்னதையெல்லாம் விவசாயி செய்வான்."

விவசாயியைப் பற்றிய இந்த வருணனை ஜமீன்தார்களுக்குப் பெருமை அளிக்காது. ஆனால், ஸ்ரீ ஹூப்பரின் காலத்திற்குப் பிறகு ஜமீன்தார்களின் கருத்துக்களில் புரட்சிகரமான மாறுதல் கள் ஏற்பட்டிருக்கின்றன. அவர்களில் அநேகர், தங்கள் விவசாயி களிடம் அனுதாபத்துடன் இருக்கிறார்கள். அவர்களுடைய கஷ்டங்களை அறிந்து நடந்துகொள்ள முயற்சிக்கிறார்கள். ஆனால், இந்த மாறுதல் இப்பொழுது இருப்பதைவிட இன்னும் அதிக வேகமானதாக இருக்க வேண்டும். விவசாயிகளிடையே மகத் தான விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகையால், தங்கள் கதியைக் குறித்து அவர்களுக்கு அதிருப்தி வளர்வதோடு தங்கள் உரி மையை வற்புறுத்துவதும் அதிகமாகிக்கொண்டு வரும்.

விவசாயிகளின் சரியான நிலைமையை ஜமீன்தார்கள் உணர்ந்து அதற்கு ஏற்றாற்போலத் தங்கள் புத்திப் போக்கையும் அவர்கள் மாற்றிக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். இப்பொழுதுள்ள நெருக்கடியை எப்படியோ சமாளித்துக் கொண்டு விடலாம். ஆனால், அது தீர்ந்தவுடன் தூங்கப் போய் விடுவது தவறு.

காலம் வந்துவிடுவதற்கு முன்னாலேயே ஜமீன்தார்கள் முந் திக் கொள்ளுவதுதான் நல்லது. தீர்வை வசூலிப்பவர்களாக மாத் திரம் இருந்துகொண்டிருப்பதை அவர்கள் விட்டுவிட வேண்டும். தங்கள் விவசாயிகளுக்குத் தருமகர்த்தாக்களாகவும், நம்பிக்கை யுள்ள நண்பர்களாகவும் அவர்கள் ஆக வேண்டும். தங்கள் சொந் தத்திற்குப் பணம் சம்பாதிப்பதற்கு ஒரு கட்டுத்திட்டத்தைச் செய்துகொண்டுவிட வேண்டும். கல்யாண காலங்களிலும் மற்றச் சமயங்களிலும், நிலத்தை ஒரு விவசாயியிடமிருந்து இன்னொரு விவசாயிக்கு மாற்றும்போதும், தீர்வை கொடுக்காததற்காக விவ சாயியை நிலத்திலிருந்து வெளியேற்றிய பிறகு அதே விவசாயிக்கு

நிலத்தைத் திரும்பக் கொடுக்கும்போதும் விவசாயிகளைக் கட்டா யப்படுத்தி இனும் பணம் வாங்குவது என்ற ஆட்சேபகரமான பழக்கத்தை ஜமீன்தார்கள் விட்டுவிடட்டும். நிலத்தில் திட்டமான பாத்தியதையை விவசாயிகளுக்கு அளிக்க வேண்டும். அவர்க ளுடைய நலனில் முக்கியமான சிரமத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். அவர்களுடைய குழந்தைகளுக்கு நல்ல பள்ளிக் கூடங்களுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். வயது வந்தவர் களுக்கு முதியோர் பள்ளிக்கூடங்களையும், நோயுற்றோருக்கு ஆஸ்பத்திரிகளையும், மருந்துச்சாலைகளையும் வைக்க வேண்டும். கிராமங்களின் சுகாதாரத்திலும் ஜமீன்தார்கள் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் அநேக வழிகளிலும் விவசாயிகளின் நன்மையை ஜமீன்தார்கள் கவனித்து, ஜமீன்தார்கள் தங்களுடைய உண்மையான நண் பர்கள், அவர்கள் செய்யும் அநேக சேவைகளுக்காக நிரந்தரமான தீர்வையை வாங்கிக்கொள்ளுகிறார்கள் என்று விவசாயிகள் உணரும்படியும் செய்ய வேண்டும். சுருங்கச் சொன்னால், தாங்கள் இருப்பது நியாயம் என்பதை ஜமீன்தார்கள் நிரூபிக்க வேண்டும். அவர்கள் காங்கிரஸ்காரர்களை நம்ப வேண்டும். அவர்களே காங்கிரஸ்காரர்களாகி, மக்களுக்கும் அரசாங்கத் திற்குமிடையே இணைக்கும் பாலம்போல் காங்கிரஸ் இருக்கிறது என்பதை அறிய வேண்டும். மக்களின் நலனை மனத்தில் கொண் டிருப்பவர்கள் எல்லோரும் காங்கிரஸின் சேவையைப் பயன் படுத்திக்கொள்ளலாம். ஜமீன்தார்களுக்குச் செய்ய வேண்டிய கடமையில் தவறாமல் விவசாயிகள் நடந்துகொள்ளும்படி பார்ப் பதில் காங்கிரஸ்காரர்கள் தங்களளவில் கவனித்துக்கொள்ளு வார்கள். சட்டப்படிப் பட்டிருக்கும் கடமைகளைப் பற்றி நான் சொல்லவில்லை. நியாயமானவை என்று விவசாயிகளே ஏற்றுக் கொண்டிருக்கும் கடமைகளையே கூறுகிறேன். தங்களிடம் இருக்கும் நிலம் ஜமீன்தார்களுடையதல்ல, அது தங்களுக்கே சொந்தம் என்ற தத்துவத்தை அவர்கள் நிராகரித்துவிட வேண்டும். ஓர் அவிபக்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக அவர்கள் இருக்க வேண்டும். அக்குடும்பத்திற்கு ஜமீன்தார் தலைவன்; அவர்கள் உரிமைக்குப் பங்கம் ஏற்படாதபடி காக் கிறவர் அவர் என்று கருதவேண்டும். சட்டம் எதுவாக இருந் தாலும் சரி, ஜமீன்தாரி நியாயம் என்று இருக்க வேண்டுமானால், கூட்டுக் குடும்பத்திற்குரிய நிலையை அது அடைய வேண்டும்.

ராமரையும் ஜனகரையும் உதாரணமாகக் கொள்ளவேண்டும் என்று விரும்புகிறேன். மக்களுக்குச் சொந்தமல்லா எவையும் அவர்களுக்குச் சொந்தமில்லை. அவர்களும் உள்பட எல்லாமே மக்களுக்குச் சொந்தமானவை. அவர்கள் மக்களிடையே இருந்து வாழ்ந்தார்கள்; மக்களின் நிலைக்கு மேலான நிலையில் அவர்கள் வாழவில்லை; அவர்களுடைய வாழ்க்கைக்குப் பொருத்தமான தான வாழ்க்கையே வாழ்ந்தார்கள். இவர்கள் சரித்திர பூர்வமாக இருந்தவர்கள் என்று கருதாமலிருக்கலாம். அப்படியானால், மகா

கலிபாவான உமாரின் உதாரணத்தை எடுத்துக்கொள்ளுவோம். அவர் தம்முடைய அறிவாற்றலினாலும், அற்புதமான விடாமுயற்சியினாலும் உண்டாக்கிய விசாலமான ஒரு ராஜ்யத்தின் மன்னராக இருந்தும், பரம ஏழையின் வாழ்க்கையையே அவர் வாழ்ந்தார். அவருடைய காலடியில் ஏராளமான செல்வம் கிடந்தும், அவை தமக்குச் சொந்தம் என்று அவர் எண்ணியதே இல்லை. மக்களின் பணத்தை விரயம் செய்யும் அதிகாரிகள் அவரைக் கண்டு நடுங்கிக்கொண்டிருந்தார்கள்.

—'எங் இந்தியா' – 28–5—1931

# 4

# ஐக்கிய மாகாண விவசாயிகளுக்கு அறிவிப்பு

காந்திஜி அயோத்திக்குச் சென்றிருந்தபோது, ஐக்கிய மாகாண விவசாயிகள் நடந்துகொள்ள வேண்டியதைக் குறித்து ஹிந்தியில் சில அறிவிப்புகளை வெளியிட்டார். அதன் மொழி பெயர்ப்பே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. விவசாயிகள் சபையின் தலைவர் என்ற முறையில் பண்டித மோதிலால் நேரு அதை ஆயிரக்கணக்கில்அச்சிட்டு விவசாயிகளிடையே விநியோகித்தார்.

கீழ்க்கண்ட விதிகளைக் கண்டிப்பாக அனுசரித்தாலன்றிச் சுயராஜ்யத்தை அடைவதோ, குறைகளுக்குப் பரிகாரம் தேடிக் கொள்ளுவதோ முடியாத காரியம் :

1. நாம் யாருக்கும் துன்பம் விளைவிக்கக்கூடாது. நம்மிடமிருக்கும் தடிகளை யார் மீதும் உபயோகிக்கக்கூடாது; வசை மொழிகளை உபயோகிக்கக் கூடாது. நியாயமில்லாத நிர்ப்பந்தத்தையும் கொண்டுவரக்கூடாது.

2. நாம் கடைகளைக் கொள்ளையடிக்கக்கூடாது.

3. எதிராளிகளை அன்பினாலேயே கவர வேண்டும். பலாத்காரத்தை உபயோகிப்பதனாலோ, அவர்களுக்குப் போகும் தண்ணீரை நிறுத்துவதனாலோ, வண்ணார், நாவிதரின் சேவையை மறுப்பதனாலோ அவர்கள் உடன்படும்படி செய்ய முயற்சிக்கக் கூடாது.

4. அரசாங்கத்திற்கு வரியையோ. ஜமீன்தார்களுக்குத் தீர்வையையோ கொடுக்காமல் இருக்கக்கூடாது.

5. ஜமீன்தார்கள் மீது ஏதாவது குறைகள் இருந்தால், அவற்றைப் பண்டித மோதிலால் நேருவுக்கு அறிவித்து அவர் கூறும் புத்திமதியின்படி நடக்க வேண்டும்.

*6.* ஜமீன்தார்களை நம் நண்பர்களாக்கிக்கொள்ள நாம் விரும்புகிறோம் என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

*7.* இப்பொழுது நாம் சட்ட மறுப்புச் செய்துகொண்டிருக்க வில்லை. ஆகையால், அரசாங்கத்தின் உத்தரவுகளையெல்லாம் நிறைவேற்றி வர வேண்டும்.

*8.* ரெயில் வண்டிகளை நிறுத்தக்கூடாது. பலாத்காரமாக டிக்கெட் இல்லாமல் ரெயில்களில் ஏறவும் கூடாது.

*9.* நம் தலைவர்களில் யாராவது கைது செய்யப்படுவார்களானால், அவரைக் கைது செய்வதை நாம் தடுக்கக்கூடாது. கலகம் விளைவிக்கவும் கூடாது. நம் தலைவர்களை அரசாங்கம் கைது செய்துவிடுவதனால் நம் கட்சி தோற்றுவிடாது. ஆனால், நாம் பைத்தியம் பிடித்தவர்களாகிப் பலாத்காரத்தை உபயோகிப்போமாயின் நிச்சயமாக நாம் தோல்வி அடைந்துவிடுவோம்.

*10.* போதை தரும் பானங்களைக் குடிப்பதையும், அபின் போன்றவைகளைத் தின்பதையும், மற்றத் தீய பழக்கங்களையும் நாம் விட்டுவிட வேண்டும்.

*11.* எல்லாப் பெண்களையும் தாய்மாராகவும் சகோதரிகளாகவும் பாவித்து நடத்தி, அவர்களுக்கு மரியாதை செய்து, அவர்களைப் பாதுகாக்க வேண்டும்.

*12.* ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே ஒற்றுமையை வளர்க்க வேண்டும்.

*13.* ஹிந்துக்களில் யாரையும் தாழ்ந்தவர் என்றோ, தீண்டாதவர்கள் என்றோ கருதலாகாது. எல்லோரிடத்திலும் சமத்துவ, சகோதர உணர்ச்சி நிலவ வேண்டும். இந்தியாவில் இருப்பவர்கள் எல்லோரையும் சகோதர, சகோதரிகளாகக் கருத வேண்டும்.

*14.* சூதாட்டங்களில் ஈடுபடக்கூடாது.

*15.* திருடக்கூடாது.

*16.* எந்தக் காரணத்தை முன்னிட்டும் நாம் பொய் சொல்லக் கூடாது. நாம் செய்யும் காரியங்களிலெல்லாம் உண்மையோடு நடந்துகொள்ள வேண்டும்.

*17.* ஒவ்வோர் வீட்டிலும் ராட்டை இருக்கும்படி செய்ய வேண்டும். ஆடவரும் பெண்டிரும் தங்களுக்கு இருக்கும் ஓய்வு நேரங்களில் நூற்க வேண்டும். சிறுவர், சிறுமியர் தினமும் நான்கு மணி நேரம் நூற்கும்படி ஊக்கப்படுத்த வேண்டும்.

*18.* அந்நியத் துணிகளை உபயோகிப்பதைத் தவிர்க்க வேண்டும். நாம் நூற்ற நூலை நெசவாளரைக்கொண்டு நெய்து உடுத்த வேண்டும்.

*19.* பரிகாரம் தேடி நாம் கோர்ட்டுகளுக்குப் போகக் கூடாது. ஆனல், தனிப்பட்ட மத்தியஸ்தர்களேக்கொண்டு தகராறுகளேயெல்லாம் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

கோபத்தை அடக்குவது, பலாத்காரத்தில் என்றும் இறங் காமலிருப்பது, பிறர் பலாத்காரத்தை நம்மீது உபயோகித் தாலும் அதை அனுபவித்துக்கொள்ளுவது ஆகியவை நினைவில் வைக்க வேண்டிய முக்கியமானவைகளாகும்.

— 'எங் இந்தியா' – 9—3—1921

# 5

# ஜமீன்தார்களுக்கு

தனிப்பட்டவர்கள் வைத்திருக்கும் சொத்துக்களேயெல்லாம் நியாயமான காரணம் இல்லாமல் பறித்துவிடுவது என்பதற்கு நான் உடந்தையாக இருக்கமாட்டேன் என்பதை உங்களுக்கு உறுதி கூறுகிறேன். உங்கள் சொந்த சொத்துக்களேயெல்லாம் உங்களுடைய விவசாயிகளின் தரும சொத்துக்களாக நீங்கள் வைத்துக்கொண்டிருந்து, அவற்றை அவர்களின் நலனுக்காகவே நீங்கள் உபயோகப்படுத்துபவர்களாக இருக்கும் வகையில் உங்கள் உள்ளங்களேக் கவர்ந்து, நீங்கள் மனமாற்றம்அடையும்படி செய்ய வேண்டும் என்பதுதான் என் நோக்கம். நம் கோடிக் கணக்கான மக்களிடையே யோக்கியமான, ஆட்சேபிக்கமுடியாத வாக்கு எடுக்கப்படுமானல், சொத்து வைத்திருப்போரின் ஆஸ்தி களேயெல்லாம் அப்படியே பறித்துவிடுவது என்பதற்குச் சாதகமாக அவர்கள் வோட்டுப் போடமாட்டார்கள் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். முதலாளிகள்—தொழிலாளிகள், நிலச் சுவான்தார்கள்-விவசாயிகளின் ஒத்துழைப்புக்காகவும் ஐக்கியத் திற்காகவும் நான் வேலே செய்துகொண்டிருக்கிறேன்.

ஆனல், ஓர் எச்சரிக்கையையும் நான் செய்தாக வேண்டும். மில்காரர்கள் மாத்திரம் மில்களின் சொந்தக்காரர்கள் அல்ல என்றும், அவற்றின் சொந்தக்காரர்கள் என்ற வகையில் தொழி லாளருக்கும் சமமான பங்கு உண்டு என்றும் மில் சொந்தக்காரர் களுக்கு நான் எப்பொழுதும் கூறி வருகிறேன். அதே மாதிரி, உங்கள் நிலம் உங்களுக்கு எப்படிச் சொந்தமோ அதே போல உங்கள் விவசாயிகளுக்கும் அது சொந்தம்; ஆடம்பரமான அளவுக்கு மிஞ்சிய வாழ்க்கை நடத்துவதில் உங்கள் தானி யங்களே நீங்கள் விரயப்படுத்தக்கூடாது; ஆனல், உங்கள் விவ சாயிகளின் நலனுக்காக அவற்றை நீங்கள் பயன்படுத்த வேண்டும் என்று உங்களுக்குக் கூறுவேன். உங்களோடு உறவு கொள்ளும் உணர்ச்சியை உங்கள் விவசாயிகள் ஒரு தடவை

அனுபவிக்கும்படி நீங்கள் செய்துவிடுவீர்களானல், உங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற வகையில் தங்கள் உரிமை உங்கள் கையில் பாதகம் அடைந்துவிடாது என்பதை அறியும் பாதுகாப்பு உணர்ச்சி அவர்களுக்கு இருந்துவிடுமானல், உங்களுக்கும் அவர்களுக்கும் தகராறு ஏற்படாது. வர்க்கப் போராட்டம் இருக்காது என்று நீங்கள் நிச்சயமாக இருக்க முடியும்.

உங்களுடைய பயங்களும் சந்தேகங்களும் குற்றமுள்ள நெஞ்சினுல்தான் உண்டாகின்றன. இதை உங்களுக்குச் சொல்லுவதற்கு என்னை அனுமதியுங்கள். அறிந்தோ, அறியாமலோ நீங்கள் செய்திருக்கும் அக்கிரமங்களையெல்லாம் போக்கிவிடுங்கள். அமைதியாகவும் சுதந்திரமாகவும் வாழ வேண்டும் என்பதைத் தவிர அதிகமான வேறு ஆசை எதுவும் விவசாயிகளுக்கு இல்லை. உங்கள் சொத்துக்களை நீங்கள் அவர்களுக்காக உபயோகிப்பீர்களாயின், நீங்கள் சொத்து வைத்திருப்பதைக் குறித்து அவர்கள் குறைப்படவேமாட்டார்கள்.

—'அமிர்த பஜார் பத்திரிகை' – 2–8–1934

# 6

# சுதந்திர இந்தியாவில் ஜமீன்தாரி முறை இருக்குமா?

அன்ருெரு நாள், நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியான ஒரு நண்பர் காந்திஜியைப் பார்க்க வந்திருந்தபோது, "இந்தியா சுதந்திரமடைந்து விடும்போது எங்கள் நிலை எதுவாக இருக்கும்?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "ஒரு தோட்டி எவ்வளவு சுதந்திரமாக இருப்பாரோ அதே போல நீங்களும் சுதந்திரமாக இருப்பீர்கள். ஆனுல், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் நீங்கள் அனுபவித்துக்கொண்டிருந்த சலுகைகளையெல்லாம் நீங்கள் அப்படியே வைத்துக்கொள்ள முடியுமா என்ற கேள்விக்கு நீங்களே உங்களுக்குப் பதில் சொல்லிக்கொள்ளலாம்."

"எங்களுடைய விமோசனத்தை இந்தியத் தலைவர்களிடமிருந்துதான் நாங்கள் அடைய வேண்டுமேயன்றிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்து அல்ல என்பதை நாங்கள் உணருகிருேம்" என்ருர், அந்நண்பர்.

"இன்று அதை ஒவ்வொருவரும் நம்புகிருர்கள்" என்ருர், காந்திஜி. "தன்னுடைய சொந்தக் காரியங்களை ஒழுங்குபடுத்திக் கொள்ளுவதற்கு, இந்தியாவை விட்டுவிட்டுப் போய்விட்டா

லன்றி வேறு வழியில் அதைச் செய்ய முடியாது என்பதைப் பிரிட்டிஷ் அரசாங்கம்கூட உணருகிறது.''

அந்நண்பர் மேலும் சொன்னார்: "1802-இல் ஏற்பட்ட நிரந்தர செட்டில்மெண்டின் மூலம், உரிமை, சலுகைச் சாசனத்தை அடைந்தார்கள். இது, பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் ஜமீன்தார்களுக்குமிடையே உள்ள ஓர் ஒப்பந்தத்தைப் போன்றது. ஜமீன்தார்கள் தங்களுடைய எதிர்கால உரிமைகளைக் குறித்து நாட்டின் தலைவர்களுடன் ஓர் ஒப்பந்தத்திற்கு வருவதற்குப் பேச்சு நடத்தத் தயாராக இருக்கிறார்கள்."

காந்திஜி கூறிய பதிலாவது: "நான் இயல்பாகவே அகிம்சைவாதி. ஆகையால், யாருடைய நியாயமான உரிமைகளையும் பறித்துக் கொண்டுவிட நான் பார்ப்பதற்கில்லை. ஆனால், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் அனுமதிக்கப்பட்டு வந்திருக்கும் சில விசேஷமான உரிமைகள், பறிக்கப்பட்டவற்றின் தன்மையை உடையவை. பிரிட்டிஷ் ஆட்சியின் சரித்திரமே உரிமையைப் பறித்ததன் சரித்திரம்தான். இக்காரியத்திற்காகப் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உதவி செய்தவர்களுக்கு, அச்சேவைக்குச் சன்மானமாகச் சில உரிமைகள் கிடைத்தன. இவை வேண்டும் என்று வற்புறுத்த முடியாது.''

நண்பர் மேலும் சொன்னார்: "அநேக ஜமீன்தார்கள் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்னாலிருந்தே இருந்து வருகின்றனர். நீண்ட காலமாக இருந்து வந்திருக்கும் இந்திய சமூக, பொருளாதார முறையின் பயனாகத் தங்கள் ஆதிபத்திய உரிமைகளை அனுபவித்து வந்திருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து இருந்து வருவதற்கு உரிமை உண்டு என்று தாங்கள் கருதவில்லையா? கல்வி ஸ்தாபனங்களை அமைப்பது, சமூக ஸ்தாபனங்களை ஏற்படுத்துவது ஆகியவைகளின் மூலம் தாங்கள் செய்ய வேண்டிய தரும காரியங்களை அவர்கள் நிறைவேற்ற முயன்றுகொண்டுதான் வருகிறார்கள்."

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "புராதனமானதும், ஒழுக்க சம்பந்தமான தகுதிக்குப் பொருத்தமானதுமான எதுவும் தொடர்ந்து இருந்து வர உரிமை பெற்றதே. இதற்கு மாறாக, ஒழுக்க நியதிக்குப் பொருத்தமில்லாததாக இருக்கும் எதுவும் போய்விட வேண்டியதே. தவறு எதுவும், அது நீண்ட காலமாக இருந்துகொண்டிருக்கிறது என்ற காரணத்தினால், இனியும் இருந்துகொண்டிருப்பதற்கான உரிமையைப் பெற்றுவிடாது. உங்கள் ஜமீன்தாரிகளில் இருப்பவர்கள், நீங்கள் நினைப்பது போலவே நினைக்கிறார்கள். அவர்கள் நினைப்பதைத்தான் நீங்களும் நினைக்கிறீர்கள் என்றால், யாரிடமிருந்தும் ஆபத்து வந்துவிடும் என்று நீங்கள் பயப்பட வேண்டியதில்லை."

நண்பர் மேலும் சொன்னார்: "ஒரே மாதிரியான நியாயத்தையே நாங்கள் விரும்புகிறோம். சுதந்திரமான இந்திய அர

சாங்கம், எல்லா வகையான தன்னல உரிமைகளையெல்லாம் ரத்துச் செய்துவிடுவதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. ஆனால், முக்கியமாக ஜமீன்தார்கள் விஷயத்தில் மாத்திரம் தனியாகக் காரியங்களைச் செய்வது என்பது வேண்டாம். ஒரு வர்க்கத்தினர் என்ற வகையில், நாங்கள் ஒழிக்கப்பட்டுவிடமாட்டோம், நாங்கள் இருக்க வேண்டியதன் அவசியத்தை நாங்கள் எடுத்துக்காட்ட தாராளமாகச் சந்தர்ப்பமளிக்காமல் செய்துவிடமாட்டோம் என்ற சமரசமான சமிக்ஞையை, வாக்குறுதியை மாத்திரமே நாங்கள் கேட்கிறோம்.''

காந்திஜி கூறிய பதிலாவது : ''நியாயமாக உள்ளவர் யாரும் சுதந்திர இந்தியாவினிடமிருந்து எந்த விதத்திலும் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. என்றாலும், இந்தியா நியாயமற்றவர்களின் கைக்கும் போய்விடக்கூடும். ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தெய்வப் பிறவியுமல்ல; காங்கிரஸ்காரரல்லாத ஒவ்வொருவரும் பிசாசும் அன்று. காங்கிரஸ் அதிகாரத்திற்கு வருமானால், அதிக நியாயத்துடன் நடந்துகொள்ள அது முயற்சி செய்யும் என்று நம்புவோமாக. இல்லாவிட்டால் அது செய்திருக்கக் கூடிய நல்லவைகளெல்லாம் கண்மூடிக் கண் திறப்பதற்குள் மறைந்துவிடும்.''

''எங்களில் கெட்டவர்களும் இருக்கிறார்கள் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால், எங்களை நீங்கள் திருத்தலாம். எங்களைக் கலந்தாலோசிக்காமல் எதுவும் செய்யப்பட்டுவிடாது என்பதை மாத்திரமே நாங்கள் விரும்புகிறோம்."

''இதைச் சொல்ல வேண்டியதே இல்லை" என்றார், காந்திஜி. தம்மிடம் பச்சாத்தாபம் காட்டும்படி மனுச் செய்துகொள்ளுவதைப் போன்று, பட்டுவாடா செய்யாமல் மலை போல் தம் முன்னால் வைக்கப்பட்டிருந்த காகிதங்களை அவர் அந்நண்பருக்குக் காட்டினார்.

—'ஹரிஜன்' - 28—4—1949

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'வாராந்திரக் கடித'த்திலிருந்து எடுத்தது.]

## 7

## 'பூமி முழுவதும் கடவுளுக்கே சொந்தம்'

ராம பஜனையின்போது அங்கே கூடியிருந்தவர்கள் சரியாகத் தாளம் போட்டதைக் குறித்துக் காந்திஜி அவர்களைப் பாராட்டிவிட்டு, அன்று தம்மிடம் கேட்கப்பட்ட இரு கேள்விகளுக்குப் பதில் சொன்னார் :

கேள்வி : நிலச் சொந்தக்காரர்கள் சாகுபடியாளரிடமிருந்து பெறும் பங்கைப் பாதியிலிருந்து மூன்றில் ஒரு பங்காகக் குறைக்க வேண்டும் என்ற இயக்கம் அதனளவில் நியாயமானதே என்பதை ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால், பாதிக்கப்பட்டிருப்பவர்கள் விஷயத்தில் அரசாங்கம் ஏற்பாடு செய்யும் நீண்ட காலத் திட்டத்தின் கீழ் வேறு ஏதாவது தொழிலில் அவர்கள் அமைதியாக ஈடுபடும்படி செய்யப்படும் வரையில், வங்காளத்தில் இப்பொழுது நடத்தப்பட்டு வரும் 'தேபாகா' இயக்கத்தை ஒத்திவைக்கக்கூடாதா?

சமூகத்தில் இத்தகைய தீவிரமான மாறுதலை உண்டாக்குவதற்குள்ள சரியான ஒரே வழி அகிம்சைதான் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள் என்பதை அறிவேன். ஆனால், சுயநலமுள்ளவர்கள், உங்கள் புத்திமதியின் இப்பகுதியை அறியாதவர்கள் போல் இருந்துவிட்டு, தங்கள் கோரிக்கைக்கு உங்களுடைய தார்மிக ஆதரவைப் பகிரங்கப்படுத்தி, தங்களுடைய சொந்த பலாத்கார வழியில் இயக்கத்தை நடத்திக்கொண்டு போவார்கள். ஆகவே, வங்காளத்தில் மத்தியதர வகுப்பினர் எல்லோரும் இதன் பலனாக அடியோடு நாசம் அடைந்துவிடக்கூடுமாகையால், இந்த நிலைமையில் அந்த இயக்கத்திற்குத் தங்கள் ஆதரவை அளிப்பது தவறு அல்லவா? கிராமப் பொருளாதாரத்திற்கு அவர்கள் இப்பொழுது அளித்துக்கொண்டிருக்கும் சேவைகள் சாதாரண கிராமவாசிக்கு இல்லாது போய்விடுமாகையால், கிராமவாசிகளும் இதனால் கஷ்டமடைவார்கள்.

பதில் : நான் அறிந்ததான கொள்கையை மாத்திரமே நான் கவனிக்கிறேன் என்பதை எச்சரிக்கை செய்கிறேன். இவ்விடத்திலுள்ள பிரச்னையைக்குறித்து நான் பரிசீலனை செய்யவில்லை. ஆகையால், அறியாததனால் ஏற்படக்கூடிய ஆபத்திற்குக் கேள்வி கேட்டவர் உட்படவே வேண்டும்.

கேள்வி கேட்டவர், விஷயத்தை மிகைப்படுத்திக் கூறுகிறார் என்பதையே வெளிப்படுத்திக் கொள்ளுகிறார். நிலச்சுவான்தார்களுக்கு எந்த ஆபத்தும் வரப்போவதில்லை. அவருடைய நிலத்தைப் பறிமுதல் செய்துவிடப் போவதில்லை. அவர் டிம்பக்டுவில் இருந்தாலும் அவர் தம் பங்கை எடுத்துக் கொள்ளலாம். அப்பங்கு 50 சத விகிதம் என்பது 33 சத விகிதம் என்றுதான் குறைக்கப்படும். இந்த யோசனையில் தம்மை நாசப்படுத்திவிடுவது எதுவும் இல்லை என்பதை அவர் காணலாம். வகுப்புப் பிரச்னையால் அவர் அதிகமாகப் பயமடைந்திருக்கிறார் என்றே அஞ்சுகிறேன். அந்தப் பயத்தை விட்டுவிட்டு, ஒவ்வொரு விஷயத்தையும் அதன் தராதரத்திற்கு ஏற்ற வகையில் பரிசீலனை செய்யலாம். அப்பொழுது தவறே செய்துவிட மாட்டீர்கள். ஆகையால், நிலச் சொந்தக்காரர்களின் பங்கில் குறைத்துக்கொள்ளவேண்டும்.

என்ற கோரிக்கையிலுள்ள நியாயமான கொள்கையை அவர்கள் ஏற்றுக்கொண்டு தாங்கள் வெற்றிபெறக்கூடியதான சரியான திருத்தங்களுக்காக அவர்கள் வேலே செய்யவேண்டும். நியாயமான குறைப்புக்குப் பதிலாகப் பறிமுதலே அவர்கள் எதிர்நோக்க வேண்டி நேராமலிருக்கட்டும். சென்ற அநேக ஆண்டுகளாகப் பறிமுதலேக்கொண்டே இந்தியா வாழ்ந்திருக்கிறது என்பதை அவர்கள் நினைவில் வைக்கட்டும். ஒரு கைத்தொழிலுக்குப் பின் மற்றொரு கைத்தொழிலாக அழிக்கப்பட்டு வந்திருக்கின்றன. இந்தியாவில் கைத்தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்களேயன்றி விவசாயிகளும் நாளுக்கு நாள் ஏழ்மையை அடைந்து வந்தார்கள்.

விரும்பும் மாறுதல் அகிம்சை வழியில் கொண்டுவரப்படுமானல், வர்க்கத்தினர்களின் ஆற்றல்கள் உலகத்திற்கு இல்லாமல் போகாது. ஆனல், அப்பொழுது அவ்வர்க்கத்தினர், தொழிலாளரைக் கஷ்டப்படுத்தி அந்த ஆற்றல்களை உபயோகிக்க முடியாது. வருங்கால அகிம்சை நியதியில், நிலம் அரசாங்கத்திற்குச் சொந்தமானதாக இருக்கும். ஏனெனில், ‘நிலம் எல்லாம் கடவுளுக்கே சொந்தம்’ என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி ஏற்பட்டுவிடும்போது ஆற்றல்களோ, உழைப்போ வீணுகிவிடுவது என்பதே இராது. பலாத்காரத்தைக்கொண்டு இது சாத்தியம் அல்ல. ஆகையால், பலாத்காரத்தைக்கொண்டு நிலச்சுவான்தார்களை அடியோடு நாசமாக்கிவிடுவது, முடிவில் தொழிலாளரையும் நாசப்படுத்திவிடுவதில்தான் முடியும் என்பதே உண்மையானதாகும். எனவே, நிலச் சொந்தக்காரர்கள் புத்திசாலித்தனமாக நடந்துகொள்ளுவார்களாயின் இதில் யாரும் நஷ்டப்பட வேண்டி இராது.

—‘ஹரிஜன்’ – 9—3—1947

[‘காந்திஜியின் பாதயாத்திரை நாட்குறிப்’பிலிருந்து எடுத்தது.]

## 8

## அகிம்சை நடவடிக்கை

கேள்வி: ஏழைகள் விஷயத்தில் பணக்காரர்கள் தங்கள் கடமையை உணரும்படி செய்வதில் சத்தியாக்கிரகத்திற்கு இருக்கும் இடம் என்ன?

பதில்: அந்நிய ஆட்சிக்கு எதிராகச் சத்தியாக்கிரகம் இருப்பதைப் போன்றதுதான் இது. எல்லாவற்றிற்கும் சட்ட ரீதியாக உபயோகிக்கக்கூடியது, சத்தியாக்கிரகம். குடும்பத்தி

லிருந்து அதை ஆரம்பித்து எல்லாவற்றிற்குமே அதை விஸ்த ரித்துக் கொள்ளலாம். நிலச் சொந்தக்காரர் ஒருவர் தம்மு டைய விவசாயிகளை ஏமாற்றி, விவசாயியின் உழைப்பின் பலன் முழுவதையும் அவர்களுக்குக் கொடுக்காமல் அதைத் தமது சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்திக்கொண்டு விடுகிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். விவசாயிகள் நியாயத்தை எடுத்துச் சொன்னல் அவர் கேட்கவில்லை; தன் மனைவிக்கு இவ்வளவு வேண்டும், தன் குழந்தைகளுக்கு இவ்வளவு வேண்டும் என்று ஆட்சேபங்களையெல்லாம் நிலச் சொந்தக்காரர் கூறுகிருர் என்றும் வைத்துக்கொள்ளு வோம். விவசாயிகளோ, அல்லது அவர்களின் நியாயத்தை எடுத்துக் கூறுகிறவர்களோ, அந்த நிலச் சொந்தக்காரரின் மனைவியிடம் அவர்களுக்கு ஏதாவது செல்வாக்கு இருக்கு மானல், தம் கணவரிடம் நியாயத்தை எடுத்துச் சொல்லு மாறு அவரைக் கேட்டுக்கொள்ளலாம். ஒரு வேளை அம் மனைவி, கணவன் ஏய்த்துச் சுரண்டும் பணம் தனக்குத் தேவையில்லை என்று சொல்லிவிடக்கூடும். அதே போல அவர் குழந்தைகளும், தங்களுக்குத் தேவையானதைத் தாங்களே சம்பாதித்துக் கொள்ளுவதாகச் சொல்லுவார்கள்.

நிலச் சொந்தக்காரர், யார் சொன்னலும் கேட்கவில்லை; அவர் மனைவியும், குழந்தைகளும் விவசாயிகளுக்கு எதிரா கவே ஒன்றுகூடிக் கொள்ளுகிருர்கள் என்றும் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது விவசாயிகள் பணிந்து விடக்கூடாது. நிலத்தைவிட்டு வெளியேறும்படி சொன் னல், வெளியேறிவிட வேண்டும். ஆனல், நிலத்தை யார் உழுகிருரோ அவருக்குத்தான் நிலம் சொந்தம் என்பதை விவசாயிகள் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். அந் நிலச் சொந்தக்காரரே தம் நிலத்தையெல்லாம் உழுதுவிட முடியாது, விவசாயிகளின் நியாயமான கோரிக்கைக்கு அவர் உடன்பட்டுத்தான் ஆக வேண்டும். என்ருலும், அந்த விவசாயிகளுக்குப் பதிலாக வேறு விவசாயிகளிடம் நிலம் கொடுக்கப்படுவதாக இருக்கலாம். புதிதாக வந்த விவசா யிகள் தங்கள் தவறை அறிந்து, வெளியேற்றப்படுகிறவர் களின் நியாயமே தங்களுக்கும் நியாயம் என்று வரும் வரையில் பலாத்காரமில்லாத முறையில் கிளர்ச்சி தொடர்ந்து நடந்துகொண்டே வரும். பொதுஜன அபிப் பிராயத்திற்கு உண்மை நிலையை எடுத்துக் கூறும் முறை யைக் கொண்டது, சத்தியாக்கிரகம். ஆகையால், அது சமூகத்தின் எல்லாத் துறையினரிடையேயும் வியாபிப் பதோடு முடிவில் அது தன்னை எதிர்க்க முடியாததாகவும் ஆக்கிக்கொண்டு விடுகிறது. பலாத்காரம், அபிவிருத்தி யைக் கெடுத்துவிடுகிறது; சமூக அமைப்பு முழுவதிலும் உண்மையான புரட்சி ஏற்படும்படி செய்வதற்கும் அதிக காலமாகும்படியும் செய்துவிடுகிறது.

சத்தியாக்கிரகம் வெற்றிகரமானதாவதற்கு அவசியமான நிபந்தனைகளாவன: (1) சத்தியாக்கிரகிக்கு எதிராளியிடம் எந்த விதமான துவேஷமும் இருக்கக்கூடாது. (2) மேற்கொள்ளும் விஷயம் உண்மையானதாகவும் முக்கியமானதாகவும் இருக்க வேண்டும். (3) தனது லட்சியத்திற்காகத் துன்பங்களைக் கடைசி வரையில் அனுபவிப்பதற்குச் சத்தியாக்கிரகி தயாராக இருக்க வேண்டும்.

—'ஹரிஜன்' - 21—3—1946

[ஸ்ரீ பியாரிலால் எழுதிய 'காந்திஜியின் கம்யூனிஸம்' என்பதிலிருந்து எடுத்தது.]

பகுதி ஏழு

# தொழில் தகராறில் அமைதியான புரட்சி

## 1

## தொழிலாளருக்கும் முதலாளிக்கும் நியாயம்

ராய்ப்பூர் உற்பத்திக் கம்பெனியின் ஏஜண்டு சேத் கஸ்தூரி பாயின் அழைப்பிற்கு இணங்கி, அக்கம்பெனியின் மில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களின் குழந்தைகள் வளர்ப்பு நிலையம் ஒன்றைக் காந்திஜி ஆரம்பித்து வைத்தார். சேத் கஸ்தூரிபாய் ஆரம்பத்தில் பேசுகையில், மில் தொழிலாளருக்கு மில் ஏஜண்டுகள் செய்ய வேண்டிய கடமைகளைக் கூறினர். இங்கிலாந்தில் லீவர் கம்பெனியின் போர்ட் ஸன்லைட்டைப் பார்த்த பிறகே, மில் தொழிலாளரின் நலனுக்காக ஏதாவது ஸ்தாபனத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற ஊக்கம் தமக்கு ஏற்பட்டது என்றார். அக்கட்டிடம் ரூ, 25,000 செலவில் கட்டப் பட்டது. அந்த ஸ்தாபனத்தை ஆரம்பித்து வைத்துக் காந்திஜி கூறியதாவது:

"இந்தக் குழந்தைகள் வளர்ப்பு விடுதி, நானும் ஒரு தொழிலாளி என்று கூறிக்கொள்ளும் என்னால் ஆரம்பித்து வைக்கப்படுவது மிகவும் பொருத்தமானதாக இருக்கக்கூடும். ஆயினும், இந்த அழைப்பை சேத் கஸ்தூரிபாய் என்னிடம் கொண்டு வந்தபோது தயக்கத்துடனேயே நான் அதை ஏற்றுக்கொண்டேன் என்பதையும் உங்களிடம் ஒப்புக்கொள்ளுகிறேன். அவ்விதம் தயங்கியதற்குக் காரணம், எனக்கு வேறு வேலைகள் இருந்ததனாலேயேயன்றி இதன் நோக்கத்தை நான் விரும்பவில்லை என்பதனால் அல்ல. என்னைவிட அதிகத் தகுதி வாய்ந்தவர்களைக்கொண்டு, முக்கியமாக ஒரு மில் சொந்தக்காரரைக்கொண்டு இவ்வைபவம் நடக்கும்படிச் செய்திருந்தால் அது எனக்கு மிகுந்த திருப்தியை அளித்திருக்கும். ஆனால், சேத் கஸ்தூரிபாயிடம் நான் கொண்டிருக்கும் மதிப்பின் காரணமாக நான் உடன்பட வேண்டியதாயிற்று.

‘‘என் ஆசிரமத்தை நான் அகமதாபாத்தில் ஆரம்பித்த போது, அந்த இடத்தை முக்கியமானதாக நான் கருதியதற்கு அது குஜராத்தின் தலைநகரம் என்பது மாத்திரம் காரணம் அல்ல. பெரிய வியாபார ஸ்தலம் என்று கருதியும் நான் ஆரம்பிக்கவில்லை. ஜவுளித் தொழிலுக்கு முக்கியமான இடமாக இருக்கிறது, மில் ஏஜண்டுகளிடமிருந்து நியாய மான உதவியை எதிர்பார்க்கலாம், நகருக்கு ஏதாவது சேவை செய்யலாம் என்று எண்ணித்தான் அங்கே ஆரம் பித்தேன். நான் எதிர்பார்த்தவை முற்றிலும் நிறை வேருது போய்விடவில்லை என்பதை இன்று நான் சந்தோஷத் துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மில் சொந்தக்காரர்களு டன் எனக்கு ஏற்பட்ட உறவு சம்பந்தமாக நான் நினைவுபடுத்திக் கொள்ளக்கூடிய கசப்பான அனுபவங்கள் சில உண்டு. என்ருலும், இனிமையான நினைவுகளும் பல உண்டு. அகமதாபாத் தைப் பற்றிய என் நம்பிக்கையை நான் இன்னும் இழந்துவிட வில்லை. அதனிடமிருந்து பெரிய காரியங்களை இன்னும் நான் எதிர்பார்க்கிறேன். அது செய்ய வேண்டியவை இன்னும் எவ் வளவோ இருக்கின்றன. நானும் ஒரு தொழிலாளி என்ற முறை யிலும், தொழிலாளர் வகுப்பினரின் உள் உணர்ச்சிகளைப் புகுந்து பார்க்க முயன்றவன் என்ற வகையிலும், மற்றும் அநேகவைகளில் தொழிலாளர் வகுப்பினரின் நிலைமை சீர்ப்படும்படி செய்வதில் இன்னும் எவ்வளவோ காரியங்களை அகமதாபாத் செய்ய வேண்டியிருக்கிறது என்று கூறுவேன்.

‘‘இந்த இடத்திலுள்ள தொழிலாளருடன் எனக்கு ஏற்பட்ட தொடர்பு இன்று நேற்று உண்டானது அல்ல. இந்நகருக்கு நான் முதன் முதல் வந்ததிலிருந்து ஏற்பட்டது, அது. ஆகையால், நீங்கள் உங்கள் தொழிலாளர் விஷயத்தில் செய்ய வேண்டியதை யெல்லாம் நீங்கள் இன்னும் செய்துவிடவில்லை என்பதைத் தைரியத்துடன் சொல்லுகிறேன். சில மில்கள், தொழிலாள ருக்குச் செய்ய வேண்டிய சாதாரண வாழ்க்கைச் சௌகரி யங்களைக்கூட இன்னும் செய்து கொடுக்கவில்லை. என்ருலும், எல்லோருமே அப்படி இருந்துவிடவில்லை. சில மில்காரர்கள் இவ்வழிகளில் கொஞ்சம் முயற்சி செய்திருக்கிருர்கள். இப் பொழுது இந்த ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டிருப்பது அதற்கு ஓர் உதாரணம்.

‘‘மில் தொழிலாளரின் நலனைக் குறித்துச் சேத் கஸ்தூரிபாய் இப்பொழுது உங்கள் முன்னல் தெரிவித்திருக்கும் கருத்துக்கள், அவர் மீதும், அகமதாபாத் மீதும் கௌரவத்தையே பிரதிபலிக் கிறது. சேத் கஸ்தூரிபாய், போர்ட் சன் லைட்டைக் குறித்துச் சந்தோஷமடைவது நியாயமானதே. ஆனல், போர்ட் சன் லைட்டே நமது லட்சியமாக ஆக முடியாது. லீவர் பிரதர்ஸ் கம் பெனியார், ஒரு முதலாளி தொழிலாளருக்குச் செய்ய வேண்டிய தில் குறைந்தபட்சத் தரத்தையே செய்திருக்கிருர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. குறைவானதைச் செய்திருப்பது ஒரு

கௌரவம் ஆகாது. ஆனால், அதைக்கொண்டு மாத்திரம் நாம் திருப்தியடைந்து இருந்துவிட முடியாது. நம்முடைய நாகரிகத்தைக் கொண்டு நாம் எண்ண வேண்டும். பழங்காலத்தில் நிலவிய சமூக நிலையைக் குறித்து மகாபாரதத்திலும் ராமாயணத்திலும் காட்டப்பட்டிருக்கும் காட்சி உண்மையானதே என்றால், நமது லட்சியம் போர்ட் சன்லைட்டைவிட வெகுதூரம் மேலே போவதாகவே தோன்றுகிறது. போர்ட் சன்லைட்டைக் குறித்து எத்தனையோ பிரசுரங்களைப் படித்திருக்கிறேன். தொழிலாளர் நலனுக்காக அவர்கள் செய்திருக்கும் வேலையைப் பாராட்டுகிறேன். ஆயினும், நாம் அடைய விரும்பும் லட்சியம் இன்னும் அதிக மேலானது என்றே கூறுவேன்.

‘‘மேற்கத்திய நாடுகளில், தொழிலாளருக்கும் முதலாளிக்குமிடையே பிளவு இன்னும் அதிகக் கடுமையானதாக இருந்து வருகிறது. தீண்டாமை என்னும் சாபத்தீடு இன்னும் நாட்டில் இருந்து கொண்டிருக்கும்போது, நமது லட்சியத்தைக் குறித்துப் பேசுவது அதிகப் பிரசங்கித்தனமானதே என்பதை நான் அறிவேன். என்றாலும், மிக உயர்வான லட்சியம் என்று நான் எதைக் கருதுகிறேனோ அதை உங்கள் முன்பு கூறாதுபோவேனாயின் எனக்கு நானே உண்மையில்லாதவனாவதோடு உங்களுக்கு நான் செய்ய வேண்டிய கடமையிலும், தவறியவன் ஆவேன். மில் ஏஜண்டுகளுக்கும் மில் தொழிலாளருக்குமிடையே இருக்க வேண்டிய உறவு, தந்தைக்கும் குழந்தைகளுக்கும் இருக்க வேண்டிய உறவாகவோ, உடன்பிறந்த சகோதரர்களுக்குள் இருக்கவேண்டிய உறவாகவோ இருக்க வேண்டும். அகமதாபாத் மில் முதலாளிகள் தங்களை ‘எஜமானர்கள்’ என்றும், தம் தொழிலாளரை ‘வேலைக்காரர்கள்’ என்றும் கூறுவதை அடிக்கடி கேட்டிருக்கிறேன். அகமதாபாத், மதத்தினிடம் தான் கொள்ளும் பக்தியைக் குறித்தும், அகிம்சையிடம் கொள்ளும் பக்திக்காகவும் பெருமை கொள்ளுகிறது. இத்தகையதோர் இடத்தில் இப்படியெல்லாம் பேசுவது இக்காலத்திற்கு ஏற்றதல்ல என்று இருக்க வேண்டும். நமது சக்திகளெல்லாம், நமது செல்வமெல்லாம், நமது அறிவெல்லாம், யார் தங்களுடைய அறியாமையினாலும், விஷயங்களைக் குறித்து நாம் கொண்டிருக்கும் தவறான கருத்துக்களினாலும் தொழிலாளர் என்றும், ‘வேலைக்காரர்கள்’ என்றும் அழைக்கப்படுகிறார்களோ அவர்களுடைய நலனுக்காக மாத்திரமே செலவிடப்படவேண்டும் என்று நமது லட்சியம் கூறும்போது, இப்படிப்பட்ட போக்கு அகிம்சைக்கே விரோதமானதாகும். ஆகையால், உங்களிடமிருந்து நான் எதிர்பார்ப்பதெல்லாம் இதுதான்: உங்களுக்காக யார் பாடுபட்டு உழைக்கிறார்களோ, உங்களுடைய அந்தஸ்தையும் சுபிட்சத்தையும் யாருடைய உழைப்பினாலும் விடாமுயற்சியினாலும் நீங்கள் அடைந்திருக்கிறீர்களோ, அவர்களுடைய நன்மை ஒன்றுக்காக மாத்திரமே உபயோகிப்பதற்காக உங்கள் செல்வங்களைத் தரும சொத்துக்களாக நீங்கள் வைத்திருக்க வேண்டும். உங்கள் தொழிலாளரை, உங்கள் சொத்துக்களின்

கூட்டுப் பங்காளிகளாக நீங்கள் செய்துகொள்ளவேண்டும் என்று விரும்புகிறேன். இவைகளை எல்லாம் செய்வதாக உங்களைச் சட்டப்படி நீங்கள் கட்டுப்படுத்திக்கொண்டாலன்றி தொழிலாளர் புரட்சி இருக்க வேண்டும் என்று நான் சொல்லுவதாகப் பொருளாகாது. இதன் சம்பந்தமாகச் செய்யக்கூடியது என்று நான் எண்ணக்கூடிய ஒரே காரியம், தந்தைக்கும் மகனுக்குமிடையே இருக்கவேண்டிய பரஸ்பர அன்பும் மரியாதையுமேயன்றிச் சட்டம் அல்ல. அன்பு சம்பந்தமான இந்தப் பரஸ்பரக் கடமையை மதித்து நடப்பது என்பதை ஒரு விதியாக மாத்திரம் நீங்கள் செய்துகொண்டு விடுவீர்களாயின், தொழிலாளர் தகராறுகளுக்கெல்லாம் ஒரு முடிவு ஏற்பட்டுவிடும். தொழிலாளர், சங்கங்களாக அமைந்திருக்க வேண்டியது அவசியம் என்றும் பிறகு கருதமாட்டார்கள். நான் அடைய எண்ணும் லட்சியத்தில், அனுசூயா பென்களுக்கும், சங்கரலால் பாங்கர்களுக்கும் வேலை செய்வதற்கு எதுவுமே இராது. அவர்களுக்கும் வேலை இல்லாது போய் விடும். ஆனால், தான் வேலை செய்யும் ஆலை தன்னுடையது என்று எண்ணாத தொழிலாளர் ஒருவர் இருந்துவரும் வரையில், தான் கஷ்டப்பட்டு அதிக வேலை செய்வதாகப் புகார் சொல்லிக்கொண்டிருப்பவர் ஒருவர் இருக்கும் வரையில், இதனால் தங்கள் முதலாளிகளிடம் உள்ளத்தில் கெட்ட எண்ணத்தையே வளர்த்துக் கொண்டு வரும் வரையில், நான் எண்ணும் லட்சியமெல்லாம் நிறைவேற முடியாது.

"இதில் கஷ்டம் எங்கே இருக்கிறது?

"இவைகளை எல்லாம் செய்வதனால் மில்காரர்களுக்குத் தான் நல்லது என்று எங்களுக்குச் சொல்லியிருக்கிறீர்கள்; எல்லோருமே இதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். லீவர் பிரதர்ஸ் கம்பெனியார், அவர்கள் தொழிலாளருக்குச் செய்திருப்பவைகளினால் எந்தவித நஷ்டத்தையும் அடைந்துவிடவில்லை. இதனால் அவர்கள் அதிக உற்சாகமடைந்ததோடு நேட்டாலிலும் மற்றோர் போர்ட் ஸன்லைட்டை ஆரம்பித்திருக்கிறார்கள். நம் தொழிலாளருக்கு நாம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கொடுக்கிறோமோ அவ்வளவுக்கு நாம் லாபம் அடைகிறோம் என்பதை நாளாவட்டத்தில் நமது அனுபவம் அதிகமாகவாக, மேலும் மேலும் தெளிவாக நாம் அறிய ஆரம்பித்திருக்கிறோம். மில்கள், உங்களுக்கு மாத்திரமல்ல தங்களுக்கும் சொந்தமானதே என்பதை உங்கள் தொழிலாளர்கள் தெரிந்துகொள்ள ஆரம்பித்துவிட்ட மாத்திரத்திலேயே, உங்களைத் தங்கள் உடன் பிறந்த சகோதரர்களாக எண்ண அவர்கள் ஆரம்பித்துவிடுவார்கள். பிறகு, பொதுவான நன்மைக்கு விரோதமாக அவர்கள் நடந்துகொள்ளுவார்கள் என்பதற்கே இடம் இராது. அவர்களைக் கண்காணிப்பதற்கென்று ஏராளமாக ஆட்களை வைத்திருக்க வேண்டிய அவசியமும் இருக்காது.

''பம்பாயில் இப்பொழுது தொழிலாளர் கிளர்ச்சிகள் பலமாக இருந்துவருவதைப் போல அகமதாபாத்தில் இல்லாமல் இருப்பதற்காக அப்பெருமையை நீங்கள் எனக்கு அளித்திருக்கிறீர்கள். சரி, அந்த மதிப்பை ஏற்றுக்கொள்ள நான் அடியோடு மறுத்துவிட முடியாது. ஏனெனில், ஸ்ரீமதி அனுசூயா பென்னும், ஸ்ரீ சங்கரலாலும் இங்கே செய்த வேலை மாத்திரம் இல்லாதிருக்குமானல், இங்கே நிலைமை முற்றிலும் மாருனதாக இருந்திருக்கும் என்பதை இங்குள்ளவர்கள் யாராவது சந்தேகிக்க முடியுமா? பம்பாய் மில் சொந்தக்காரர்களைவிட அகமதாபாத் மில் சொந்தக்காரர்கள் அதிக சாமர்த்தியசாலிகள் என்பதும் உண்மையாக இருக்கும். தொழிலாளர்கள் கிளர்ச்சி ஏற்படும்போது, மேற்கத்திய நாடுகளில் சில முதலாளிகள் செய்வதைப் போல, உங்கள் தொழிலாளரை நசுக்குவதற்கு நீங்கள் காலிகளை அமர்த்துவது இல்லை. தொழிலாளருடைய அபிலாஷைகளை ஒடுக்குவதற்கு அந்த ஆயுதத்தை உபயோகிப்பதை வேண்டும் என்றே நீங்கள் கைவிட்டிருக்கிறீர்கள் என்று எண்ணுகிறேன். இதெல்லாம் தவருன எண்ணம் என்றும், உங்களால் முடிந்தால் இத்தகைய ஆயுதத்தை உபயோகிக்கவும் நீங்கள் தயங்க மாட்டீர்கள் என்றும் என்னைக் குறை கூறுபவர்கள் சொல்லுகிருர்கள். அவர்கள் நினைப்பது தவறு என்று நான் நம்புகிறேன். அவர்கள் தவருக நினைக்கிருர்கள் என்பதை நீங்கள் உங்கள் நடத்தையினுல் நிரூபிக்க வேண்டும். ஸ்ரீ பாங்கரும், ஸ்ரீமதி அனுசூயா பென்னும் செய்து கொண்டு வரும் வேலையை அனுவசியமானதாக்கிவிடும் காலம் சீக்கிரத்தில் ஏற்படுவதற்கு உதவி செய்வீர்கள் என்று நம்புகிறேன். அந்தச் சமயம் வரும் வரையில் அவர்கள் செய்துவரும் வேலைகளுக்கு எல்லா ஆதரவையும் உதவியையும் நீங்கள் அளிக்க வேண்டும்.

''இங்கே நிலவி வரும் அமைதிக்கான கொஞ்ச மதிப்பை எனக்குரியதாக்கிக்கொள்ள நான் ஏன் துணிந்தேன் என்பதை இப்பொழுது ஒருவேளை நீங்கள் புரிந்துகொண்டிருக்கக்கூடும். அந்த மதிப்பு ஸ்ரீமதி அனுசூயா பென்னுக்கும் ஸ்ரீ சங்கரலாலுக்கும் உரியதேயன்றி எனக்கு உரியது அல்ல. அவர்கள் தொழிலாளருடன் வசிக்கிருர்கள்; அவர்களுடனேயே இருந்துவருகிருர்கள். அப்படிச் செய்ய என்னுல் முடியவில்லை. இந்த நண்பர்களின் முயற்சிக்கு நீங்கள் உதவி செய்வீர்களானுல், இது போன்ற குழந்தை வளர்ப்பு விடுதியைக் கட்டுவதோ, வைத்திய உதவி செய்வதோ அவசியமில்லை என்பதைக் காண்பீர்கள். இது போன்ற உங்கள் முயற்சியைக் குறைத்து மதிப்பிடுவது என் விருப்பம் அல்ல. ஆனல், பணக்காரர்கள் யாராவது தங்கள் குழந்தைகளை இது போன்ற விடுதிக்கு அனுப்ப எண்ணுவாரா என்று உங்களைக் கேட்கிறேன். ஒரு மில் தொழிலாளியின் சிசுவை, அதன் தாயிடமிருந்து பிரித்து அனுப்ப வேண்டிய அவசியமே ஏற்படாத நிலைமையையும், நம் குழந்தைகளுக்குப் படிப்பதற்கு என்ன வசதி இருக்கிறதோ அதே வசதி தொழிலாளியின்

குழந்தைகளுக்கும் இருக்கும்படி செய்வதுமே நமது முயற்சியாக இருக்க வேண்டும்.''

—'எங் இந்தியா' – 10—5—1928

['தொழிலாளரும் முதலாளிகளும்' என்ற தலைப்பில் முன்னால் வெளியானது.]

## 2

# முதலாளிகள், தொழிலாளருக்கு யோசனைகள்

அகமதாபாத் மில் தொழிலில், தொழிலாளரின் சம்பளத்தைக் குறைக்க வேண்டும் என்று முதலாளிகள் கோரியதன் பேரில் ஏற்பட்ட தகராறு இப்பொழுது தீர்ந்துவிட்டதால், அத்தொழிலில் ஸ்திரமான நிலைமை இருப்பதைக் குறித்து இப்பொழுது பரிசீலனை செய்வது நல்லதாகும். அன்போடு இவ்விஷயத்தில் உழைத்திருக்கும் மத்தியஸ்தரான ஸர் கோவிந்த ராவ் மத்காவ்கருக்கு இரு தரப்பாரும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர் விரும்பியிருந்தால், தாம் செய்த வேலைக்கு ஊதியம் தர வேண்டுமென்று கேட்டுப் பெற்றிருக்கலாம். ஆனால், அவர் எந்தவித ஊதியமும் இல்லாமல் இக்கஷ்டமான வேலையை மேற்கொண்டார் என்பது பொது மக்களுக்குத் தெரியாது. இவ்வேலையை எடுத்துக்கொண்ட அவர், எந்த விவாதமும் இல்லாமல் தமது முடிவை மாத்திரம் தெரிவித்து தமது வேலையை எளிதானதாக்கிக்கொண்டிருக்கலாம். இதற்குப் பதிலாக, தாம் கூறியிருக்கும் தீர்ப்புக்குக் காரண காரியங்களை விவரித்திருப்பதோடு, முதலாளிகள், தொழிலாளர் ஆகிய இரு தரப்பாருக்கும் அதிகப் பயனுள்ளதான ஆலோசனைகளையும் கூறியிருக்கிறார்.

மத்தியஸ்தரின் யோசனைகளை இரு தரப்பாரும் முழு மனத்துடன் ஏற்று, அவற்றின்படி நடந்து டில்லி ஒப்பந்தத்தை அமுலுக்குக் கொண்டுவருவார்கள் என்பது எதிர்பார்க்க வேண்டியதாகும். டில்லி ஒப்பந்தத்தை முற்றிலும் அமுலுக்குக்கொண்டு வந்தாலன்றிச் சம்பளக் குறைப்பு என்பதே சாத்தியமில்லை என்பதை மத்தியஸ்தர் அதிகத் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார். முன்னாள் ஹைகோர்ட்டு நீதிபதியான ஸ்ரீ பட்கரே அப்பொழுது மத்தியஸ்தர். ஆகையால், அவர் தயாரித்த டில்லி ஒப்பந்தத்தையும் மத்தியஸ்தர் தீர்ப்பாகவே கொள்ளலாம். மில் தொழில் முழுமைக்குமே சம்பளத்தை ஒரே மாதிரியானதாக நிர்ணயித்துவிடுவதோடு, சம்பளத்தில் குறைக்க வேண்டும், அதி

கரிக்க வேண்டும் என்ற கோரிக்கைகள் எழும்போதெல்லாம் தானே அவற்றைச் சரிக்கட்டிக்கொள்ளுவதான திட்டமும் அதில் இருக்க வேண்டும் என்பது டில்லி ஒப்பந்தத்தின் முக்கியமான நிபந்தனை. ஆனால், ஒரே மாதிரியான சம்பள நிர்ணயமோ, தானே சரிக்கட்டிக்கொள்ளுவது என்பதோ அனுபவசாத்திய மானது அல்ல என்று மில் சொந்தக்காரர்கள் சார்பில் சொல்லப் பட்டது. அந்த வாதத்தை ஒப்புக்கொள்ள மத்தியஸ்தர் மறுத்து விட்டார். உண்மையில் அவர் வேறு விதமாகச் செய்திருக்க முடியாது. டில்லியில் ஒப்பந்தம் செய்துகொண்டபோது, தாங்கள் செய்துகொள்ளுவது என்ன என்பதை இரு தரப்பாரும் அறிந்தே செய்து கொண்டனர். அவ்விரு விதிகளையும் நிறைவேற்றுவது சாத்தியமில்லாதது என்று எண்ணியிருந்தால், அவற்றைக் கொண்டுவந்தே இருக்கமாட்டார்கள். பொதுவான திட்டம் ஒன்றுக்கு இரு தரப்பாரும் ஒப்புக்கொண்டிருக்க முடியாது என் பது இருக்கலாம். அப்பொழுது, தங்களுக்குள் இருக்கும் அபிப் பிராய பேதத்தைச் சமரசம் செய்தவர்களுக்குத் தெரிவித்திருக்க வேண்டும். அவர்களால் முடியவில்லை என்றால், ஒரு மத்தியஸ்த ரிடம் விட்டிருக்க வேண்டும். கூலியை ஒரே மாதிரியாக நிர்ண யிப்பது என்பது சாதாரணமாகச் செய்ய வேண்டிய கணக்கு வேலை. ஒரே மாதிரியான கூலி விகிதம் எல்லா மில்களிலும் கொண்டுவரப்படுவதற்கு மத்தியில், நடுவாந்தரக் கட்டம் ஒன்று இருக்கவேண்டியிருக்கலாம். மொத்தக் கூலித் தொகை பாதிக் கப்படாவிட்டாலும், சில மில் தொழிலாளர்கள் பெறும் கூலியில் இத்திட்டத்தினால் அத்தொழிலாளருக்கு அதிகக் குறைப்பு ஏற் பட்டுவிடுமாகையால், இதை ஏற்றுக்கொள்ளும்படி அவர்களைத் தூண்டியாக வேண்டியும் இருக்கலாம். கூலியைத் தானே சரிக் கட்டிக்கொண்டுவிடுவது என்ற திட்டம் மிகச் சிக்கலானதே என் பதில் சந்தேகம் இல்லை. இத்திட்டம் பலன் தர வேண்டுமானால், இரு தரப்பிலும் பரஸ்பரம் விட்டுக்கொடுக்கும் உணர்ச்சி இருக்க வேண்டும். அத்தகைய திட்டம் எதுவும் இயல்பாகவே அப்போ தைக்கப்போது மாற்றப்படும் விதத்தில் தாற்காலிகமானதாக இருக்க வேண்டும்.

என் தீர்ப்பில் நான் கூறிய சில விதிகளை, வெறும் தத்து வங்கள் என்று கூறி ஏற்றுக்கொள்ள ஸர் கோவிந்த ராவ் மறுத்து விட்டார். நான் கூறிய விதிகளைக் கவனிக்காமல், தானே சரிக் கட்டிக்கொள்ளும் திட்டம் எதுவும் சாத்தியமில்லை. மத்தியஸ்தர் என்ற முறையில் அவற்றைப் பரிசீலனை செய்வதோ, அவற்றைக் குறித்துக் குறிப்பிடுவதும்கூட அவருடைய கடமையைச் சேர்ந்தது அல்ல என்பது உண்மையே. நான் வந்திருக்கும் முடி வுக்கு அத்தத்துவங்கள் காரணம் அல்ல என்று என்னுடைய தீர்ப்பில் நானே கூறியிருக்கிறேன். ஆனால், அவற்றைப் பற்றிக் கூறிய மத்தியஸ்தர், அவை எப்படி, ஏன் வெறும் தத்துவங்களா கவே ஆகின்றன என்பதை எடுத்துக்காட்டியிருக்கலாம்.

அவை வெறும் தத்துவங்களாகவே இருந்தாலும், இல்லா மற்போனாலும், கூலி உயர்வு, குறைப்பை தானே சரிக்கட்டிக் கொள்ளுவது என்ற திருப்திகரமான திட்டம் எதற்கும் அந்த விதிகளை அனுசரிக்காமல் வரவே முடியாது என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அளவுகோலாக இருப்பதற்கு அவை சரியாக இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். ஆனால், நடவடிக்கைக்கு அவையே அளவுகோலாக இருக்க வேண்டும். குஜராத்தியில் இருக்கும் அந்த விதிகளின் மொழிபெயர்ப்பைக் கீழே கொடுக்கிறேன் :

"16. சென்ற பதினெட்டு ஆண்டுகளாக மத்தியஸ்தர் என்ற முறையில் அத்தொழிலுடன் நான் நெருங்கிய, இடையறாத தொடர்பு கொண்டு வந்திருக்கிறேன். அதன் பலனாக, இரு தரப்பாரின் நன்மையையும் முன்னிட்டு நான் கூறி வந்திருக்கும் கொள்கையை இந்தக் கட்டத்தில் திரும்பவும் சொல்ல விரும்புகிறேன்.

(அ) மில்களுக்கு லாபமே வருவது இல்லை என்ற நிலைமை ஏற்பட்டு, மூலதனத்தைக் கொண்டு ஈடு செய்து தொழிலை நடத்திக்கொண்டு போக வேண்டி வந்தாலன்றிச் சம்பளக் குறைப்பு எதையும் செய்யக்கூடாது.

(ஆ) கொடுக்கும் கூலி, ஜீவனத்திற்குப் போதுமானது என்ற ஒரு கட்டத்திற்கு வந்துவிடும் வரையில் கூலிக் குறைப்பு எதுவும் இருக்கக்கூடாது. இத்தொழிலைத் தங்கள் சொந்தச் சொத்து என்று தொழிலாளர்கள் எண்ண ஆரம்பிக்கும் சமயம் வரும் என்று எண்ணுவதும் சாத்தியமே. அப்பொழுது தொழிலாளர்கள், தாங்கள் ஜீவிப்பதற்குக் குறைந்த பட்சம் வேண்டியதை மாத்திரம் பெற்றுக் கொண்டு, இரவு பகல் வேலை செய்து, தொழிலுக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைச் சமாளிக்கத் தயாராக இருப்பார்கள். அது, வலிய அவர்கள் ஒப்புக்கொள்ளுவதாக இருக்கும். அத்தகைய நிலைமை இப்பொழுது ஆலோசிப்பதற்குப் பொருத்தமில்லாததாகும்.

(இ) ஜீவனத்திற்குப் போதுமான ஊதியத்தை நிர்ணயிப்பதில் எதைச் சேர்க்க வேண்டும் என்பது குறித்துப் பொதுவாக இரு தரப்பாரும் வரும் முடிவும் இருக்க வேண்டும்.

(ஈ) சில தனிப்பட்ட மில்களில் சீர்கேடான நிலைமை இருந்து வருகிறது என்பது, பொதுவாக எல்லாத் தொழிலாளரின் கூலியையும் குறைக்க வேண்டும் என்பதற்கு நியாயமாகிவிடாது.

(உ) மில்களின் பங்குதாரர்களுக்குச் சமமானவர்களே தொழிலாளரும் என்று கருதுவது அத்தொழிலின் நன்மைக்கு அத்தியாவசியமானதாகும். ஆகையால், மில் செய்யும் காரியங்களைக் குறித்துச் சரியானபடி தெரிந்து கொள்ள தொழிலாளருக்கு உரிமை உண்டு.

(ஊ) இரு தரப்பாரும் வைத்துக்கொள்ளுவதற்குச் சம்மதிக்கும் மில் தொழிலாளரின் பட்டியல் ஒன்று இருக்க வேண்டும். ஜவுளித் தொழிலாளர் சங்கத்தின் மூலமல்லாமல் வேறு ஸ்தாபனங்களைக் கொண்டு தொழிலாளரை வேலைக்கு அமர்த்தும் பழக்கத்தை விட்டுவிட வேண்டும்.

17. சகோதர மத்தியஸ்தருக்கோ, மில் சொந்தக்காரர்களுக்கோ, தொழிலாளருக்கும்கூட இந்தக் கொள்கைகள் ஏற்றுக்கொள்ளக்கூடியவையாக இருக்கும் என்ற நம்பிக்கையில் இவற்றை நான் கூறவில்லை. இப்பொழுதுள்ள விஷயத்தில் என் தீர்ப்பை, இக்கொள்கையைக் கொண்டு நான் முடிவு செய்யவும் இல்லை. ஆனால், இக்கொள்கையை ஏற்றுக்கொண்டாலன்றி, அத் தொழில், அதாவது முதலாளிகளும் தொழிலாளரும், ஆபத்திலேயே இருக்கிறார்கள் என்று நான் நிச்சயமாக எண்ணுகிறேன்."

இப்பொழுது முதல் கொள்கையை எடுத்துக்கொள்ளுவோம். லாபம் வந்துகொண்டிருக்கும் வரையில், தொழிலாளரின் கூலியைக் குறைக்க வேண்டும் என்று மில்கள் விரும்புவானேன்? வயிற்றில் ஏற்பட்ட கோளாறைக் குணப்படுத்திக் கொள்ளுவதற்காக ஒருவன் தன் கால்களை வெட்டிக்கொண்டு விட விரும்புவதைப் போன்றே இது இருக்கிறது. குறிப்பிட்ட சதவிகித லாபம் நிச்சயம் வர வேண்டும் என்பதற்காக அவர்கள் யந்திரங்களைக் குறைத்துக் கொண்டு விடுகிறார்களா? உயிருள்ள யந்திரங்கள் என்று கூறப்படும் ஆண்களும் பெண்களும், உயிரில்லாத யந்திரங்களை விடக் குறைவானவர்களா? யந்திரங்களும் கட்டடங்களும் இத்தொழிலுக்கு எவ்விதம் அடிப்படையானவைகளோ அது போன்றே அதில் வேலை செய்பவர்களும் அடிப்படையானவர்களே. அப்படியிருக்க, குறைந்தபட்ச லாபம் நிச்சயமானதாக இருக்க வேண்டும் என்பதற்காக, வேலை செய்பவர்களின் கூலியைக் குறைக்கக்கூடாது என்று யோசனை கூறுவது எப்படி வெறும் தத்துவமாகிவிடும்? மில்களின் பங்குதாரர்கள் மனிதாபிமானமுள்ளவர்கள் என்றே கருதுகிறேன். மனிதாபிமானமுள்ள பங்குதாரர்களின் வோட்டு எடுக்கப்படுமானால், தங்கள் லாபம் எந்தத் தொழிலாளரைப் பொறுத்ததாக இருக்கிறதோ அந்தத் தொழிலாளரின் கூலியைவிட தங்களுடைய லாபம் முக்கியமானதாக இருக்கவேண்டும் என்னும் யோசனையை அவர்கள் உடனே நிராகரித்துவிடுவார்கள் என்று நான் துணிந்து கூறுவேன்.

முதல் கோட்பாட்டைத் தீவிரமாகக் கவனிக்கவாவது வேண்டும் என்றால், வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் என்ற இரண்டாவது கோட்பாடு தானே அதைப் பின் தொடர்ந்து வருகிறது. லாபம் இல்லாமலேயே போய்விடும் நிலைமை வந்தாலன்றித் தொழிலாளரின் கூலியில் குறைப்பு இருக்கக்கூடாது என்றால், எந்த அளவுக்கு மேல் ஊதியக் குறைப்பு போகக் கூடாது என்ற எல்லையை அறிய வேண்டியதும் அவசியம். மேலும் சொன்னால், ஜீவனத்திற்குப் போதுமான ஊதியம் என்பதிலும் ஒரு முடிவு இருக்க வேண்டும். பெயரைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. அப்படிச் சொல்லுவதுதான் இனிமையாக இருக்கிறது என்றால், குறைந்தபட்சக் கூலி என்று அதைச் சொல்லுங்கள். முறையெல்லாம் ஒன்றுதான். மேற்கொண்டும் குறைக்க முடியாததான ஊதியத்தை, வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம்

என்று சொல்லுவதுதான் சரியானது என்று எனக்குத் தோன்று கிறது.

வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் என்ற கொள்கையை ஒப்புக்கொள்ளுவதாயின், அதில் சேர்க்கப்பட வேண்டியது என்ன என்பதையும் பரிசீலனை செய்ய வேண்டியதாகிறது. குடி வகைச் செலவும் அதில் ஒரு பகுதியாக இருக்க வேண்டுமா? புகையிலையை அதில் சேர்க்க வேண்டுமா? பால், நெய், வெல்லம் போன்றவைகளை நீக்கிவிடுவதா? இவையெல்லாம் கற்பனை யானவை அல்ல. தொழிலாளரின் வாழ்வையே தொடுபவை அவை. தொழிலாளரின் திறமை, நல்ல முறையில் அவர்கள் வாழ் வதையே பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. அவர்கள் திறமை எவ்வளவுக்கெவ்வளவு அதிகரிக்கிறதோ அவ்வளவுக்கு லாபம் அதிகரிப்பதற்கான வாய்ப்பும் உண்டு.

கோட்பாடு (ஈ) தனக்குத்தானே விளங்குவதாக இருப்ப தோடு, சமரசம் செய்தவர்களும் மத்தியஸ்தரும் அதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

மில்களின் பங்குதாரர்களுடன் சம சொந்தக்காரர்களாகத் தொழிலாளர்கள் பாவிக்கப்பட வேண்டும் என்று கூறியது (கோட்பாடு-உ) நியாயம் என்பதை யார்தான் மறுக்க முடியும்? தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் தகராறைத் தவிர்க்க முடியும் என்று நான் நம்புகிறேன். அப்படித் தகராறைத் தவிர்க்க வேண்டுமானால், முதலாளிகளுக்கு இருக்கும் அதே அந்தஸ்தும் கௌரவமும் தொழிலாளருக்கும் இருக்க வேண்டும். பத்து லட்சம் ஆண்களையும் பெண்களையும் ஒன்றாக வைப்பதைவிட, பத்து லட்சம் ரூபாயை ஒன்றாக வைப்பது மாத்திரம் ஏன் பெரி தாக இருக்கவேண்டும்? அந்த உலோகம் வெள்ளையானாலும் மஞ்சளானாலும், நிச்சயமாக அவர்கள் மேலானவர்கள் அல்லவா? அல்லது தொழிலாளர் ஒன்றுபட முடியாது, உலோகத்தைப் போல ஒன்றாக வைக்க முடியாது என்று உலோகத்தை வைத் திருப்பவர்கள் எப்பொழுதும் எண்ணிக்கொள்ள வேண்டுமா? முதலாளிகளுக்கும் தொழிலாளருக்கும் இயல்பிலேயே எந்த வித மான தகராறும் இல்லை என்ற எண்ணத்தில் அகமதாபாத்தில், சென்ற பதினெட்டு ஆண்டுகளாக, அறிந்தோ அறியாமலோ, முதலாளிகளும் தொழிலாளரும் நடந்துவந்திருக்கிறார்கள். இரு தரப்பாருக்குமிடையே சமாதானம் ஆபத்தான நிலையில் இருந்து வந்திருக்கிறது என்பது உண்மை. ஆனால், அவ்வாறு இருந்து வந்ததற்குக் காரணம், நிரந்தரமான அமைதிக்கு நிபந்தனைகளான கோட்பாடுகள் அவசியம் என்பதை முற்றிலும் இரு தரப்பாரும் அறிந்துகொண்டுவிடாததுதான்.

தொழிலாளர்களும் சமமான சொந்தக்காரர்களாகிவிடுவார் களானால், மில்களின் வரவு செலவுகளைக் கவனிக்கப் பங்குதாரர் களுக்கு எவ்விதம் வாய்ப்பு இருக்கிறதோ அவ்விதமே தொழி

லாளர்களுக்கும் வாய்ப்பு இருக்கும். முக்கியமான தகவல்களை தொழிலாளருக்குச் சொல்லவில்லையென்றால், தொழிலாளரைப் பொறுத்தவரையில் எந்த நம்பிக்கையும் உண்மையில் இருப்பதாகச் சொல்லுவதற்கில்லை.

கடைசிக் கோட்பாடு, எந்தப் பலவீனத்தையும் ஒப்புக் கொள்ளவில்லை. மில் சொந்தக்காரர்களின் சங்கம் இருப்பதைப் போன்றே தொழிலாளர் சங்கமும் விரும்பத்தக்க ஸ்தாபனமே என்று கருதுவதானால், இருந்தாக வேண்டிய தீமை ஒன்று மாத்திரமே அது சகிக்கப்பட்டு வரவில்லை என்றால், வேலைக்குப் புதிதாக யாரை எடுத்துக்கொள்ளுவது என்பதற்கு இரு தரப்பாரும் சம்மதித்துத் தயாரிக்கும் பட்டியல் ஒன்று இருக்க வேண்டும் என்றும், தொழிலாளர் சங்கத்திற்கு வெளியில் யாரையும் மில்காரர்கள் அங்கீகரிக்கக் கூடாது, வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது என்றும் ஏற்படுகிறது.

இந்தக் கோட்பாடுகள் வெறும் கனவுகள் அல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், பரிசீலனை செய்ததில், ஒரு பெரிய தொழில் சரியானபடி நிலைபெற்றிருப்பதற்கும், வளர்வதற்கும் இவை முற்றிலும் அவசியமானவை என்று கண்டதனாலேயே, அத்தொழிலின் நன்மையை முன்னிட்டு இவை பணிவுடன் கூறப்பட்டன.

சமர்ப்பிக்கப்பட்ட பட்டியல் எந்த வகையிலும் முழுமையானது அல்ல என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இவ்விஷயத்தைக் குறித்துத் திரும்ப எழுத முடியும்போது மேலும் சிலவற்றையும் நான் கூறவே வேண்டும்.

—'ஹரிஜன்' - 13—2—1937

[முன்னல் 'அகமதாபாத் மில் தொழில்' என்ற தலைப்பில் வெளி வந்தது.]

3

# தொழிலாளர், முதலாளிகள் ஒற்றுமை

ஜபல்பூரில், அவ்வூர் தொழிலாளர் சங்கம் அவருக்கு வாசித்தளித்த ஓர் உபசாரப் பத்திரத்தில், தொழிலாளர் நிலைமையை முன்னேற்றும் வேலையையும் முதலாளிகளின் சுரண்டலிலிருந்து அவர்களைக் காப்பாற்றும் வேலையையும் அவர் ஏன் மேற்கொள்ளவில்லை என்று காந்திஜியைக் கேட்டார்கள். காந்திஜி தமது பிரசங்கத்தில் இவ்விஷயத்தை எடுத்துக்கொண்டார். அவர் கூறியதாவது :

"உயர்வு, தாழ்வு என்ற வித்தியாசத்தை அடியோடு ஒழித்து விடுவதில் வெற்றி பெற்றுவிட்டால், பிறகு வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் நல்ல மாறுதல் உண்டாகும். முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே இருக்கும் போராட்டம் போய், இரு தரப்பாருக்குமிடையே ஒத்துழைப்பும் சமரசமும் உண்டாகிவிடும். தீண்டாமைக்கு எதிரான இப்போராட்டத்தின் முழுப் பொருளையும் நாம் அறிந்துகொண்டிருந்தால், பிறப்பை அடிப்படையாகக் கொண்ட தீண்டாமை, அந்தச் சாபத்தீட்டின் எண்ணற்ற அம்சங்களில் ஒன்று மாத்திரமே என்பதை நாம் அறிந்துகொள்ளுவதில் எவ்விதக் கஷ்டமும் இராது. அதனால், என் உள்ளத்தில் கொண்டிருக்கும் விடுதலை, சமூக ஒற்றுமை ஆகிய லட்சியங்களுக்கு நல்ல முறையில் சேவை செய்தவர்களாவோம். இந்த இயக்கத்தில் எனக்கு நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வருகிறது. ஹிந்துக்களிடமிருந்து தீண்டாமையை ஒழித்து விடுவதில் நாம் வெற்றிபெற்றுவிடுவோமானால், எல்லா வர்க்கத்தினரிடையேயும் சமூகத்தினரிடையேயும் இன்று இந்தியாவில் நாம் காணும் சச்சரவுகள் எல்லாம் போய்விடும். ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும், முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே இருந்துவரும் விரோதங்களெல்லாம் போய் சமரசம் உண்டாகிவிடும். உள்ளங்கள் புனிதமாகிவிடும்போது, உள்ளங்கள் ஒன்றுபடுவதற்கான வழியிலுள்ள கஷ்டங்களையெல்லாம் சமாளித்து விடுவதும் எளிதாகிவிடும். நாம் இப்பொழுது சமாளித்துக்கொண்டிருக்கும் கட்டம், போராட்டம் ஏற்படும் என்பதற்கான எல்லாச் சாத்தியங்களையும் போக்கிவிடவில்லை. சமயத்தின் பெயரால் உலவி வந்திருக்கும் இது, மனிதன் மனிதனை இழிவுபடுத்துவதற்கு அதிக தூரம் உதவி செய்திருக்கிறது. தீண்டாமை பல தலைகளையுடைய பூதம். எத்தனையோ துறைகளில், எத்தனையோ ரூபங்களில் அது தோன்றுகிறது. அதன் சில ரூபங்கள், எளிதில் கண்டுகொண்டுவிட முடியாதபடி அவ்வளவு ரகசியமானதாக இருக்கின்றன என்று நான் கூறியிருக்கிறேன். தீண்டாமையில் எத்தனையோ தரங்களும் இருக்கின்றன. இப்போராட்டத்தை நான் மேற்கொண்டபோது இதை நான் அறிந்து இருந்ததோடு, என் இந்த அந்திக் காலத்தில், என் முழுச் சக்தியையும் இந்த வேலையிலேயே உபயோகிப்பது என்றும் நான் முடிவு செய்துகொண்டு விட்டேன்."

—'ஹரிஜன்' – 15—12—1933

['தொழிலாளரும் முதலாளிகளும்' என்ற தலைப்பில் ஸி. எஸ். எழுதிய 'வாராந்திரக் கடிதம்' நெ. 5-இல் முன்னால் வெளியானது.]

# 4

# மில் தொழிலாளருக்கு

[1918-இல் மில் சொந்தக்காரர்களுக்கும் மில் தொழிலாள ருக்குமிடையே ஏற்பட்ட போராட்டத்தின் இரண்டாவது வருட தினத்தின் போது அகமதாபாத் மில் தொழிலாளர் கூட்டத்தில் காந்திஜி பேசினர். அப்பிரசங்கமே கீழே மொழிபெயர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

நீதி, அமைதியான முறையில் வெற்றி பெற்றதன் இரண்டாவது வருட தினம் இது. இதை, மில் சொந்தக்காரர்கள், மில் தொழிலாளர் ஆகிய இருவருக்குமே வெற்றி என்று நான் சொல்லுகிறேன். மில் தொழிலாளரின் கோரிக்கை நியாயமானது, அதை முதலாளிகள் ஏற்றுக்கொள்ளும்படி செய்வதற்கு அவர்கள் அனுசரித்த முறை புனிதமானது என்பதனுலேயே இதை நீதியின் வெற்றி என்கிறேன். அநியாயமான முறைகளைக் கொண்டு தொழிலாளர் வெற்றி பெறுவதை நான் விரும்ப முடியாது.

சென்ற ஆண்டு சுவாமி சிரத்தானந்தஜி இவ்வருட தினத்திற்கு வந்திருந்து அருளினர். அப்போதைக்கும் இப்போதைக்கும் இடையே அநேக காரியங்கள் நடந்து, இந்தியாவின் நிலைமையில் பல முக்கியமான மாறுதல்களை உண்டாக்கியிருக்கின்றன. ஒரு புதிய உணர்ச்சி நம்முள் எழுந்திருக்கிறது. இந்திய சமூகத்தில் புதியதோர் சூழ்நிலை நிலவி வருகிறது. ஆனல், இந்தியாவில் இருந்து வரும் பொதுவான நிலைமையைக் குறித்து நான் உங்களுக்கு விவரித்துக்கொண்டிருக்கப் போவதில்லை. எனினும், சென்ற ஆண்டு ஏப்ரலில் ஏற்பட்ட சம்பவங்களின் போது மில் தொழிலாளர்கள் அதில் கொண்ட பங்கைக் குறித்துக் கூருமல் நான் விட்டுவிடுவேனுயின், உங்கள் நண்பன் என்று என்னைக் கூறிக்கொள்ளுவது சரியானதாகாததோடு நானும் உங்களைப் போலத் தொழிலாளி என்று நான் பெருமைகொள்ளுவதும் முறையல்ல என்ருகிவிடும். அந்த மாதத்தில் அரசாங்கத்தின் உத்தரவின் பேரில் என்னைக் கைது செய்தார்கள். அது பெரிய தவறு என்பதில் சந்தேகமே இல்லை. ஆனல், மில் தொழிலாளர்கள் தீயிடுவதனுலோ, ரத்தக்களரியை உண்டாக்குவதனுலோ அத்தவறைத் திருத்திவிட முடியுமா? அனுசூயா பென்னிடம் அதிக அன்பு கொண்டிருக்கிறீர்கள். அவர் உங்கள் மதிப்புக்கு உரியவர். அவர் கைது செய்யப்பட்டுவிட்டார் என்ற வதந்தியைக் கேட்டதும் நீங்கள் திகைத்துப் போனீர்கள்; ஆத்திரமடைந்தீர்கள். சிறகுகள் துண்டிக்கப்பட்டுவிட்ட பறவைகளே போல நீங்கள் ஆகிவிட்டதாக எண்ணினீர்கள். இவை யாவும் நீங்கள் அவர் மீது கொண்ட பக்திக்கு ஏற்றவைதான்.

ஆனால், மீண்டும் உங்களைக் கேட்கிறேன்: தீயிட்டுக்கொளுத்து வது, அவர் மீது நீங்கள் கொண்ட பக்தியைக் காட்டுவதற் குச் சரியான காரியமா? அல்லது, இத்தவறான காரியங்களில் மற்றவர்களும் கலந்திருந்தார்கள் என்று சொல்லுவதனால் அதன் பொறுப்பிலிருந்து நாம் தப்பிவிட முடியுமா? அகமதாபாத்தில் நடந்தவைகளைக் குறித்து அவரும் நானும் கேள்விப்பட்டபோது நாங்கள் அடைந்த அளவு கடந்த வருத்தத்தைச் சரியான பாஷையில் உங்களுக்கு எடுத்துக் கூறிவிடுவது என்பது என் னால் முடியாது. பலாத்கார முறையினால் இந்தியாவுக்கு நாசத் தைத் தவிர வேறு எதுவும் ஏற்படும் என்று நான் காணவில்லை. நாட்டின் சட்டங்களைக் குற்றமான வகையில் மறுத்து, அதன் மூலம் தங்கள் கோபத்தைத் தொழிலாளர் வெளிப்படுத்தினால், தொழிலாளர்கள் தற்கொலை செய்து கொள்ளுவதாவதோடு இந்தி யாவும் வருணிக்க இயலாத துயரங்களை அனுபவிக்கநேரும்.பலாத் காரம், எக்காரியங்களுக்கு இருக்கிறதோ அதற்கு அதுதான்பதில் என்று உங்களுக்குச் சில சமயங்களில் தோன்றிவிடுவதனாலே பலாத்காரமான காரியங்களில் நீங்கள் தவறாக இறங்கிவிடக் கூடாது என்றே நான் விரும்புகிறேன். சத்தியாக்கிரகத்தையும் சாத்விக சட்டமறுப்பையும் உபதேசிக்க நான் ஆரம்பித்தபோது, குற்றஞ்செய்வதான சட்ட மறுப்பும் அதில் சேர்ந்தது என்றுஎண் ணப்படவே இல்லை. பலாத்காரத்தைச் செய்வதன் மூலம் சத்தி யத்தை ஒரு நாளும் பரப்ப முடியாது என்பதை என் அனுபவம் எனக்குப் போதிக்கிறது. தங்கள் கட்சியில் நியாயம் இருக் கிறது என்று நம்புகிறவர்களுக்கு எல்லையற்ற பொறுமை இருக்கவேண்டும். குற்றமான சட்ட மறுப்பைச் செய்யாதவர் களும், பலாத்காரமான காரியங்களைச் செய்யாதவர்களும் மாத் திரமே சட்ட மறுப்புச் செய்வதற்குத் தகுதி பெற்றவர்கள். ஒரு மனிதன், எவ்விதம் ஒரே சமயத்தில் நிதானத்தோடும் ஆத் திரத்தோடும் இருக்க முடியாதோ அதே போல, சாத்விக சட்ட மறுப்புக்காரராகவும் குற்றம் செய்யும் சட்ட மறுப்பாளராகவும் ஒரே சமயத்தில் இருப்பது என்பதும் முடியாது. தன்னுடைய உணர்ச்சிகளையெல்லாம் அடக்க முடிந்த பிறகே ஒருவர் புல னடக்கத்தை அடைவதைப்போல, நாட்டின் சட்டங்களுக்கு முழு தும் வலியப் பணிந்து போவதில் ஒருவர் தம்மைக் கட்டுத்திட்டங் களுக்கு உட்படுத்திக்கொண்டபிறகுதான் சாத்விக சட்ட மறுப் புச் செய்வதற்கான ஆற்றலை அடைகிறார். மேலும், ஆசைகளை உண்டாக்குகிறவைகளுக் கிடையே இருந்தும், அவைகளை எதிர்த்து நிற்பதில் வெற்றி பெறுகிறவரே ஆசைகள் பற்றாதவராக ஆக முடியும். அதே போல, நாம் கோபம் அடைவதற்குப் போது மான காரணங்கள் இருந்தும் கோபத்தை அடக்கிக் கொள்ளுவ தில் நாமே வெற்றி பெற்றால்தான் நாம் கோபத்தை வென்றுவிட் டோம் என்று சொல்ல முடியும். சென்ற ஆண்டு இந்தச் சோதனையில் தவறிப் போய்விட்டோம். இந்தப் புனிதமான நாளில், சென்ற ஏப்ரலில் நீங்கள் செய்துவிட்ட தவறுகளை

யெல்லாம் எண்ணிப் பார்த்து, இனியும் திரும்ப அத்தவறுகளைச் செய்வதில்லை என்ற சிறந்த உறுதியை நீங்கள் கொள்ளவேண்டும் என்பதே நான் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளும் மனப்பூர்வமான கோரிக்கையாகும்.

## மில் தொழிலாளர் நிலை

மில் தொழிலாளரின் நிலைமைக்கு அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டியவை எவ்வளவோ இருக்கின்றன. அதைக் குறித்து இப்பொழுது சில வார்த்தைகள் கூறுகிறேன். ஊதியத்தை அதிகமாகப் பெறுவதனால் மாத்திரம் நாம் பணக்காரராகிவிட முடியாது; பணக்காரராகிவிடுவதிலும் எல்லாம் இல்லை. அனுசூயா பென், தமது வாழ்க்கையை உங்களுக்காக அர்ப்பணம் செய்திருப்பது உங்களுக்கு நல்ல ஊதியத்தைத் தேடித் தர வேண்டும் என்பதற்காக மாத்திரம் அல்ல. நீங்கள் சந்தோஷமாக இருப்பதற்குப் போதுமானதை நீங்கள் பெறவேண்டும், உண்மையான தெய்வ பக்தியுள்ளவர்களாக உங்களைச் செய்யவேண்டும், அழிவற்றதான தருமத்தைப் பின்பற்றி நீங்கள் நடக்கவேண்டும், நீங்கள் குடி, சூதாட்டம் போன்ற கெட்ட பழக்க வழக்கங்களை விட்டொழித்துவிட வேண்டும், உங்கள் வருவாயை நீங்கள் நல்ல வழிகளில் செலவு செய்யவேண்டும், நீங்கள் உங்கள் வீடுகளைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். உங்கள் குழந்தைகளுக்கும் கல்வியளிக்க வேண்டும் என்ற நோக்கத்தின் பேரிலேயே அவர் தமது வாழ்க்கையை உங்களுக்காக அர்ப்பணம் செய்திருக்கிறார்.

உங்கள் பொருளாதார நிலைமை அபிவிருத்தி அடைந்திருக்கிறது. இன்னும் அதிக அபிவிருத்தி ஏற்படுவதற்கும் இடமிருக்கிறது. மில் சொந்தக்காரர்களுடன் கலந்தாலோசிப்பது, அல்லது நியாயமற்ற வற்புறுத்தலைச் செய்வது ஆகிய இரண்டு வழிகளில் அது ஏற்படலாம். முதலில் சொன்னதுதான் உண்மையான ஒரே பரிகாரம். மேற்கத்திய நாடுகளில் முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே நிரந்தரமான போராட்டம் இருந்து வருகிறது. ஒரு தரப்பினர், இன்னொரு தரப்பாரைத் தமது இயற்கையான விரோதிகள் என்று கருதுகிறார்கள். அதே உணர்ச்சியே இந்தியாவுக்குள்ளும் புகுந்துவிட்டது என்று தோன்றுகிறது. அது நிரந்தரமாக நிலைத்துவிடுமானால், நமது தொழிலையும் நமது அமைதியையும் ஒழித்துவிடும். ஒருவரை நம்பி ஒருவர் வாழ வேண்டியவர்கள் என்பதை இரு தரப்பாரும் உணர்ந்து கொண்டு விடுவார்களானால், சச்சரவுக்கு இடமே இருக்காது.

## சட்ட ரீதியான கோரிக்கை

முதலாளிகளின் கடமைகளைக் குறித்து நான் இங்கு ஆராயப் போவதில்லை. தொழிலாளர் மாத்திரமே தங்கள் கடமைகளையும்

உரிமைகளையும் புரிந்துகொண்டு, புனிதமான முறையையே அனு சரிப்பது என்று இருந்துவிட்டால், இரு தரப்பாரும் லாப மடைந்து விடுவார்கள். ஆனல், இரண்டு காரியங்கள் அவசியம்: கோருவதும், அதை வற்புறுத்துவதற்கு உபயோகிக்கும் முறையும் நியாயமானவைகளாகவும் தெளிவானவைகளாகவும் இருக்க வேண்டும். முதலாளிகளின் நிலைமையை மாத்திரம் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளுவது என்பது, சட்ட விரோதமான கோரிக்கை. ஆனல், தனது வாழ்க்கைக்கும், தன் குழந்தைகளை நன்ருகப் படிக்க வைப்பதற்கும் போதுமான ஊதியம் வேண்டும் என்று தொழிலாளர் கேட்கும்போது, அது முற்றிலும் நியாயமான கோரிக்கையே. பலாத்காரத்தில் இறங்காமல் சமரசமாகப் பேசுவ தன் மூலம் முதலாளிகளின் நல்ல எண்ணத்திற்கு எடுத்துக் கூறு வதன் மூலம் நியாயத்தைத் தேடுவது, சட்ட ரீதியான முறை.

## தொழிற் சங்கங்களும், மத்தியஸ்தமும்

அப்பொழுது,கோருவதை நீங்கள் அடைவதற்குஉங்களுக்குச் சங்கங்கள் இருக்க வேண்டும். ஆரம்பம் இப்பொழுதே செய்யப் பட்டிருக்கிறது. ஒவ்வோர் இலாகாவையும் சேர்ந்த மில் தொழி லாளர்கள் தங்கள் சங்கங்களை அமைத்துக்கொள்ளுவதோடு, அவற்றிற்குச் செய்யப்படும் விதிகளை ஒவ்வொருவரும் தவருமல் அனுசரித்து நடப்பார்கள் என்று நம்புகிறேன். பிறகு நீங்கள் மில் சொந்தக்காரர்களை உங்கள் சங்கங்களின் மூலம் அணுகலாம். மில்காரர்கள் செய்யும் முடிவுகள் உங்களுக்குத் திருப்திகரமாக இல்லையானல், சமரசத்திற்கு விடும்படி நீங்கள் கேட்டுக்கொள்ள லாம். இரு தரப்பினரும் சமரச முடிவுக்குவிட ஒப்புக்கொள்ளுவது ஒரு திருப்தியான விஷயம். இக்கொள்கை முற்றிலும் அபிவிருத்தி செய்யப்பட்டு, வேலை நிறுத்தங்களே எப்பொழுதும் அசாத்திய மானவைகளாகிவிடும் என்று நம்புகிறேன். தொழிலாளர்கள் தங்களுக்குரியதான நியாயத்தை அடைவதற்கு வேலை நிறுத்தம் செய்வது அவர்களுக்கு இயல்பாகவுள்ள உரிமை என்பதை அறி வேன். ஆனல், சமரசத்திற்கு விட்டுத் தீர்த்துக்கொள்ளுவது என்ற கொள்கைக்கு மில் சொந்தக்காரர்கள் உடன்பட்டுவிட்ட வுடன் வேலை நிறுத்தங்களைச் செய்வது குற்றமாகக் கருதப்படும். தொழிலாளரின் ஊதியத்தில் அபிவிருத்தி ஏற்பட்டு வருகிறது. தொடர்ந்து அபிவிருத்தி அடைந்து வரும் என்பதற்கு எல்லாவித மான சாத்தியங்களும் இருந்துவருகின்றன. ஆனல், அதே போல வேலை நேரத்தைக் குறைக்க வேண்டியதும் அவசியம். மில் தொழிலாளர்கள் பன்னிரண்டு மணி நேரமும் அதற்கு அதிகமாக வும் வேலை செய்து வருகிருர்கள் என்று தெரிகிறது. இத்தனை மணி நேரம் வேலை செய்யவேண்டியிருப்போருக்கு, அறிவு, ஒழுக்க உயர்வைப் பெறுவதற்கான காரியங்களுக்கு நேரமே இருக்காது. ஆகையால், அவர்களுடைய நிலை, மிருகத்தின் நிலைக்கு வந்து விடும். இந்த ஆபத்திலிருந்து தப்ப வேண்டியது நம் கடமை. ஆனல், இதற்காக நாம் எடுத்துக்கொள்ளும் ஒவ்வொரு

நடவடிக்கை சம்பந்தமாகவும், நம் தொழிலைக் கெடுத்துவிடாம லிருப்பதற்கு நாம் உஷாராக இருக்க வேண்டும்.

மில் தொழிலாளர்கள் சோம்பேறித்தனமாக இருக்கிறார்கள், தங்கள் வேலையை முழு நேரமும் செய்வதில்லை. சிரத்தையில்லா மல் இருக்கிறார்கள் என்று மில் சொந்தக்காரர்கள் என்னிடம் கூறுகிறார்கள். தினத்திற்குப் பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்யும்படி செய்யப்படுபவர்களிடமிருந்து வேலையில் சிரத்தை யையோ, கவனத்தையோ நான் எப்படி எதிர்பார்க்க முடியும்? ஆனால், வேலை நேரம் பத்து மணி என்று குறைக்கப்பட்டு விடுமானால், தொழிலாளர்கள் பன்னிரண்டு மணி நேரத்தில் செய்த வேலையை இன்னும் நன்றாகச் செய்வார்கள் என்று நான் நிச்சயமாக நம்புவேன். வேலை நேரத்தைக் குறைத்ததால் இங்கிலாந்தில் சந்தோஷகரமான பலன் ஏற்பட்டிருக்கிறது. மில் சொந்தக்காரர்களைப் போன்றே தொழிலாளருக்கும் சிரத்தை ஏற்பட்டுவிடும்போது, அவர்கள் உயர்வார்கள். அவர்களுடன் நம் நாட்டுத் தொழில்களும் உயரும். ஆகையால், வேலை நேரத்தைப் பத்து மணி என்று குறைத்துவிட வேண்டும் என்று மில் சொந்தக் காரர்களிடம் நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுவதோடு, தொழிலாளரும் பன்னிரண்டு மணி நேரத்தில் செய்த வேலையைப் பத்து மணி நேரத்தில் முடித்துவிட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

## அதிகரித்துவரும் ஊதியத்தின் பயன்

அதிகரித்து வரும் ஊதியத்தையும், மிச்சப்படும் நேரத்தை யும் நாம் எப்படிப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதை ஆராய வேண்டிய சமயம் வந்துவிட்டது. அதிகப்படியாகக் கிடைக்கும் ஊதியத்தை மதுபானக் கடைகளில் செலவிட்டு, மிச்சமான நேரத்தைச் சூதாடி மடங்களில் கழிப்பது, நெருப்பி லிருந்து தப்பி வறுக்கும் சட்டியில் விழுந்த கதையாகவே ஆகும். கிடைத்த பணத்தை நம் குழந்தைகளின் கல்விக்குச் செலவிட வேண்டும் என்பது தெளிவானது. நமக்கு மிச்சப்பட்ட நேரத்தை, நாம் அறிவைப் பெறுவதற்குப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். இந்த இரு காரியங்களிலும் மில் சொந்தக்காரர்கள் அதிக உதவியைச் செய்ய முடியும். தொழிலாளருக்குச் சுத்த மான பாலும், கெடுதலில்லாத பலகாரங்களும், மலிவாகக் கிடைக்கக்கூடிய மலிவான சிற்றுண்டிச் சாலைகளை அவர்கள் ஆரம்பிக்கலாம். வாசகசாலைகளை அவர்களுக்காக ஆரம்பித்து அவர்களுக்குத் தீமையில்லாத விளையாட்டுக்கள், பொழுது போக்கு தமாஷாக்களையும் அமைக்கலாம். இத்தகைய நல்ல சூழ்நிலை அவர்களுக்கு இருக்கும்படிச் செய்துவிட்டால், குடிப்ப திலும் சூதாடுவதிலும் அவர்களுக்கு இருக்கும் வெறி போய்விடும். முதலாளிகளுடன் போராடிக் கொண்டிருப்பதைவிட அபிவிருத்

திக்கான காரியங்களைத் தாங்களே செய்துகொள்ளுவதில் தொழிலாளர் நன்ருக ஈடுபட்டிருப்பார்கள்.

சிறு குழந்தைகள் பள்ளிக்கூடங்களிலிருந்து நீக்கப்பட்டு சம்பாதிக்கும் வேலைகளுக்கு அனுப்பப்படுவது, தேசீய அவமானத்தின் அறிகுறியாகும். எந்த நல்ல நாடும் இவ்வாறு தனது குழந்தைகளைத் துர்வழியில் உபயோகித்துவிட முடியாது. குழந்தைகளைப் பதினாறு வயது வரையிலாவது பள்ளிக்கூடத்தில் விடவேண்டும். இதே போல் பெண்களையும் மில்களில் வேலை செய்வதிலிருந்து நாளாவட்டத்தில் அகற்றவேண்டும். ஆணும் பெண்ணும் வாழ்க்கையில் பங்குகொள்ளுகிறவர்கள் என்ருல், ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பவர்கள் எனின், உழைப்பைத் தங்களுக்குள் பிரித்துக்கொள்ளுவதன் மூலமே அவர்கள் நல்ல குடித்தனக்காரர்களாக முடியும். புத்திசாலியான தாயாருக்கு, தன் குடும்பத்தையும் குழந்தைகளையும் கவனிப்பதற்கு நாளெல்லாம் முழு வேலையும் இருக்கிறது. வெறும் ஜீவனத்திற்காக மாத்திரமே கணவனும் மனைவியும் உழைக்க வேண்டியிருக்கிறது என்ருல், நாடு கேவலமானதாகவே ஆகும். ஓட்டாண்டியாக இருப்பவன் தன்னுடைய மூலதனத்தைக்கொண்டு வாழ்வதைப் போன்றிருக்கிறது, அது.

## ஒழுக்கத் திறனை விருத்தி செய்க

கல்வியைப் பெற்று தங்கள் குழந்தைகளையும் படிக்க வைப்பதன் மூலம் தொழிலாளர்கள் தங்கள் புத்தியை விருத்தி செய்துகொள்ள வேண்டியது எப்படி அவசியமோ அதே போல தங்களுக்குள்ள ஒழுக்கத் திறனை விருத்தி செய்துகொள்ள வேண்டியதும் அவசியம். ஒழுக்கத் திறனை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்பது சமய சம்பந்தமானதேயாகும். கடவுளிடம் உண்மையான பக்தியுள்ளவர்களிடமும், மதத்தின் உண்மையான தன்மையை அறிபவர்களிடமும் உலகம் சண்டை போடுவதில்லை. அப்படியே சண்டை போட்டாலும், அவர்கள் தங்களுடைய பெருந்தன்மையினல் தங்கள் எதிராளிகளின் கோபத்தைப் போக்கி விடுகின்றனர். இங்கே சமயம் என்பது, ஒருவர் நமாஸ் செய்வதையோ, கோயிலுக்குப் போவதையோ மாத்திரம் குறிப்பிடவில்லை. தன்னைப் பற்றியும் கடவுளைக் குறித்தும் அறிந்திருப்பதே அது. நெய்யும் கலையைக் கற்றுக்கொண்டாலன்றி ஒருவர் நெசவாளராகிவிடாததைப் போன்று சில விதிகளை அனுசரித்து நடந்தாலன்றி ஒருவர் தன்னை அறிந்துகொள்ள முடியாது. இவைகளில் முக்கியமானவைகளான மூன்று விதிகள், எல்லோராலும் அனுசரிக்கப்பட வேண்டியவை. முதலாவது, உண்மையை அனுஷ்டிப்பது உண்மையைப் பேசுவது இன்னது என்பதை அறியாதவன், செல்லாக்காசைப் போன்று எந்த மதிப்புமே இல்லாதவனுவான். பிறருக்குத் துன்பம் விளைவிக்காமலிருக்க வேண்டும் என்பது இரண்டாவது விதி. பிறருக்குத் துன்பம் விளைவிப்பவன், மற்ற

வர்களைக் கண்டு பொறாமை கொள்ளுகிறவன், இந்த உலகத்தில் வசிக்கத் தகுதியற்றவன். ஏனெனில், உலகம் அவனுக்கு எதிராக இருக்கிறது; உலகத்திற்கு எப்பொழுதும் பயந்து கொண்டே அவன் வாழ வேண்டியவனாகிறான். நாம் எல்லோரும் அன்புத் தளையால் கட்டுண்டு இருக்கிறோம். ஒவ்வொன்றிலும் மையமான சக்தி ஒன்று இருக்கிறது; அது இல்லாவிட்டால் எதுவுமே இருக்க முடியாது. நாம் வசிக்கும் உலகம் அணுக்களா லானது; அந்த அணுக்களையெல்லாம் ஒன்றாக இணைக்கும் சக்தி ஒன்று இல்லாதிருக்குமாயின் உலகமே துண்டு துண்டுகளாகச் சிதறுண்டு போய் நாமும் இருக்க மாட்டோம் என்று விஞ்ஞா னிகள் நமக்குச் சொல்லுகிறார்கள். சாதாரண வஸ்துக்களிலேயே பிணைக்கும் சக்தி இருப்பதைப் போல் உயிருள்ளவைகளைப் பிணைப்பதற்கும் ஒரு சக்தி இருந்தாக வேண்டும். உயிரினங்களை அவ்வாறு இணைக்கும் சக்திக்குப் பெயர், அன்பு என்பது. தாய் தந்தைக்குமிடையே, சகோதர சகோதரிகளுக்குமிடையே, ஒரு நண்பருக்கும் மற்றோர் நண்பருக்குமிடையே இந்த அன்பைக் காண்கிறோம். ஆனால், அந்தச் சக்தியை உயிர் வாழ்வனவான எல்லாவற்றினிடமும் காட்டுவதற்கு நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அதை அப்படி உபயோகிப்பதில்தான் கடவுளைப் பற்றிய ஞானமும் இருக்கிறது. எங்கெல்லாம் அன்பு இருக் கிறதோ அங்கெல்லாம் உயிரும் இருக்கிறது. துவேஷம் நாசத் திலேயே கொண்டுபோய் விடுகிறது. அன்பைப் பற்றிய இப் பெரும் தருமத்தை நீங்கள் கற்றுக்கொள்ளுவதற்கு அனுசூயா பென் உங்களுக்கு உதவி செய்வார் என்று நம்புகிறேன். உங்களிடம் அவருக்குள்ள அன்பை நீங்கள் அறிவதானால், அதே அன்பை மனித வர்க்கம் முழுவதினிடமும் காட்டுவதன் மூலம், அந்த உணர்ச்சியை உங்களிடம் காட்டிக்கொள்ளும்படி உங் களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். நமது இச்சைகளையெல்லாம் வெல்ல வேண்டும் என்பதுதான் மூன்றாவது விதி. அதற்கு சமஸ் கிருதத்தில் பிரமச்சரியம் என்று சொல்லுவது. அதற்குச் சொல் லப்படும் குறுகிய பொருளில் இதை நான் கூறவில்லை. ஒருவர் விவாகமே செய்துகொள்ளாதவராக இருக்கலாம்; அல்லது விவாக மாகிக் கற்புடன் வாழ்பவராக இருக்கலாம். அப்படியிருந்தும் பல வகைப் புலன் நுகர்ச்சிகளிலும் அவர் திளைப்பவராக இருப்பா ராயின், அவர் பிரமச்சாரியே அல்ல. தனது இச்சைகளை யெல்லாம் யார் அடக்கிக் கட்டுப்படுத்திவிடுகிறாரோ அவரே தன்னைத் தானே அறிய முடிந்தவர். புலனடக்கத்தை, அதனு டைய விரிவானபொருளில் அனுஷ்டிப்பவரே பிரமச்சாரி; அவரே பக்திமான்; உண்மையான ஹிந்து அல்லது உண்மையான முஸ்லிம்.

ஆபாசமான பேச்சையும் பாடல்களையும் கேட்பது, பிரமச் சரியத்தை மீறிவிடுவதாகும். கடவுளின் நாமத்தை உச்சரிப்ப தற்குப் பதிலாக இழிவான சொற்களைப் பேசுவது, கட்டுத்திட்ட மின்றி மனம் போன போக்கில் நடப்பதாகும். மற்ற புலன்கள்

விஷயத்திலும் இதுவே பொருந்தும். இச்சைகளையெல்லாம் அடக்கி, முற்றிலும் புலனடக்கம் பெற்றவராகிறவரையே உண்மையான மனிதராகக் கருத வேண்டும். குதிரையைக் கட்டுப்படுத்தத் தெரியாமல் அதன் மீது சவாரி செய்பவர்கள் சீக்கிரத்தில் கீழே விழுந்துவிடுவதைப் போன்று நாம் இருக்கிறோம். ஆனால், கடிவாளத்தை நன்றாகப் பிடித்துக் குதிரையை அடக்கிச் சவாரி செய்ய முடிந்தவருக்கோ, அவர் விரும்பிய இடத்தை அடைந்து விடுவதற்கான வாய்ப்பு இருக்கிறது. அதே மாதிரிதான் தன்னுடைய இச்சைகளை அடக்கிவிடுகிறவர் லட்சியத்தை அடைந்து விடுகிறார். அப்படிப்பட்டவரே சுயராஜ்யத்திற்குத் தகுதி வாய்ந்தவர். அவரே சத்தியத்தை நாடுபவருமாகும். கடவுளை அவராலேயே அறியவும் முடியும். இவையெல்லாம் கையெழுத்துப் படிவதற்கு எழுதும் புத்தகத்தில் காணும் கோட்பாடுகள் என்று கருதி இவற்றை நீங்கள் நிராகரித்து விடக்கூடாது என்று நான் விரும்புகிறேன். இந்த உண்மைகளை அனுசரிப்பதிலுள்ள நன்மையை நாம் கற்றுக் கொண்டாலன்றி நாம் முன்னேறிப் போகவே முடியாது என்பதை நீங்கள் நம்ப வேண்டும் என்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடைய அனுபவங்களில் ஒரு சிறு பகுதியையே நான் உங்களுக்குக் கூறியிருக்கிறேன். உங்கள் மீது எனக்கு இருக்கும் அன்பினாலேயே நான் உங்களுக்குச் சேவை செய்கிறேன். கடவுள் முன்னால் நான் நியாயத்தைச் செய்வதாகக் காட்டிக்கொள்ளுவதற்காகவே உங்கள் துயரங்களில் நான் பங்கு கொள்ளுகிறேன். உங்கள் ஊதியம் நான்கு மடங்காக அதிகரித்து, உங்கள் வேலை நேரம் இப்பொழுது நீங்கள் செய்வதில் கால்வாசியாகக் குறைந்தாலும்கூட, உண்மையைப் பேசுவதில் உள்ள பலனை நீங்கள் அறியவில்லை என்றால், உங்களுக்குள் உள்ள ராட்சதன் மற்றவர்களைத் துன்புறுத்துகிறான். நீங்கள் உங்கள் இச்சைகளை அடக்கவில்லை என்றால், அதனாலெல்லாம் என்ன பயன்? நமக்கு ஊதியம் அதிகமாக வேண்டும்; வேலை நேரமும் குறைய வேண்டும். ஏனெனில், சுத்தமான வீடும், சுத்தமான உடலும், சுத்தமான மனதும், சுத்தமான ஆன்மாவும் நமக்கு வேண்டும். அதிக ஊதியமும் குறைந்த நேர வேலையும் இந்நால் வகை சுத்தங்களுக்கும் அவசியம். ஆனால், அடைய வேண்டிய நோக்கம் அது அல்ல என்றால், நல்ல ஊதியத்தையும் குறைந்த நேர வேலையையும் அடைவதற்கு முயற்சி செய்து பெறுவது பாவமாகும். இந்த லட்சியத்தை அடையும் சக்தியை உங்களுக்கும் அனுசூயாவுக்கும் ஆண்டவன் அருள்வாராக.

— 'எங் இந்தியா' – 28—4—1920

# 5

# மில் தொழிலாளருடன்

காந்திஜி, அகமதாபாத்திற்கு வந்தது, முற்றிலும் குஜராத்தி இலக்கிய மகாநாட்டிற்காகவே. ஆனல், தொழிலாளரின் ஊதியத்தில் 20 சத விகிதத்தைக் குறைத்து விடுவதென்று மில் முதலாளிகள் யோசித்திருந்ததால் ஏற்பட்ட நெருக்கடியான நிலைமையைக் குறித்து காந்திஜியுடன் பேசுவதற்குத் தொழிலாளரின் பிரதிநிதிகள் அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டார்கள். ஸ்ரீமதி அனுசூயா பென்னும், ஸ்ரீ சங்கரலால் பாங்கரும், சென்ற இருபது ஆண்டுகளாகத் தொழிலாளரின் நலனுக்காக எவ்விதம் திறமையாகப் பாடுபட்டு அநேக பயங்கரமான ஆபத்துக்களை எவ்விதம் தடுத்து வந்தார்களோ அதே சாமர்த்தியத்தோடு இப்பொழுதும் நிலைமையைச் சமாளித்துக்கொண்டு வந்தனர். தொழிலாளர்களைக் கொண்டதோர் கூட்டத்தில் காந்திஜி பேசுகையில் தமது உள்ளத்திலிருந்தவைகளைப் பொழிந்தார். தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் இருக்க வேண்டிய உறவு, தொழில் அமைதி இருப்பதற்கான நிபந்தனைகள், தொழிலாளரின் சக்தி ஆகியவைகளைக் குறித்தும் விவரமாக விளக்கினர். மில் தொழிலாளருக்கும் மில் முதலாளிகளுக்குமே அவர் சொன்னர். காந்திஜியின் கோரிக்கைகளை மனத்தில் வைத்து, ஆபத்து ஏற்பட்டுவிடச் செய்யமாட்டார்கள் என்றே எதிர்பார்க்கப்படுகிறது. அந்த அற்புதமான பிரசங்கம் முழுவதையும் இங்கே கொடுத்துவிட வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். ஆனல், சுருக்கமாகச் சில பகுதிகளைக் கொடுப்பதோடு நான் திருப்தியடைந்துவிட வேண்டியதே. தொழிலாளர் முன்னலோ, இலக்கிய மகாநாட்டிலோ காந்திஜி செய்த பிரசங்கங்களிலெல்லாம் குறிப்பிடத்தக்க முக்கியமான அம்சம், அவருடைய போக்கு முழுவதிலும் சேகான் அதிகமாக வியாபித்திருந்ததுதான். அக்கிராமத்திலிருந்து வந்துவிட்டதைக் குறித்து அவர் மனம் வருந்தாமல் இல்லை. அவர் உடல் அக்கிராமத்திலிருந்து வந்துவிட்டாலும் மனமெல்லாம் அங்கேதான் இருந்தது என்பதையும் காணலாம். காந்திஜி கூறியதாவது:

“பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னல் நீங்கள் இருபத்தோரு நாட்கள் அமைதியான வகையில் வேலை நிறுத்தத்தை நடத்தினீர்கள். அசம்பாவிதமான காரியம் எதுவுமே நிகழவில்லை. அது உங்களுக்குக் கடுமையான சோதனை. என்ருலும், அதில் நீங்கள் தேர்ந்து வெளிவந்துவிட்டீர்கள். பிறகு நீங்கள் பலவீனமடைந்துவிட்டீர்கள். பின்னல் நடந்தது என்ன என்பது உங்களுக்குத் தெரியும். ஆனல், அந்த வேலை நிறுத்தத்தின் வெற்றியெல்லாம், எந்தக் கொடியின் கீழ் நீங்களிருந்து வேலை செய்தீர்களோ அக்கொடிதான் காரணம். ‘மீற முடியாத பிர

திக்ஞை' என்பதைக் கொண்டது, அக்கொடி. ஒரு விரதத்தை மேற்கொள்ளுகிறவர்கள், அதன் விளைவுகளை நன்கு அறிந்துதான் அவ்வாறு செய்கின்றனர். தங்களுடைய சக்தி, குறைபாடுகள் ஆகியவைகளை நன்கு உணர்ந்தும் செய்கின்றனர். பக்தியுடன் மேற்கொண்ட விரதத்தை அனுசரித்து நடப்பதற்கு வேண்டிய சக்திதான் நமக்கு இருப்பதும், நமக்குத் தேவையானதுமாகும். விமானங்களிலிருந்து குண்டுகளைப் பொழியும் சக்தியோ, தடி கொண்டு சண்டை போடும் சக்தியோ நமக்கு வேண்டியதில்லை. நாம் பூமியின் குழந்தைகள். ஆகையால், ஆகாயத்தைப் பற்றிப் பேசாமல் பூமியைப் பற்றிய வகையிலேயே பேசுவோம். ஒரு பிரதிக்ஞையைக் கைவிடாமல் அனுசரிக்கும் சக்தியே உங்களுக்கு இருக்கும் பெரிய மூலதனம். அதை உங்களிடமிருந்து யாரும் பறித்துவிட முடியாது. ஆனால், அதைச் சாகும் வரையில் உறுதியாக வைத்திருந்தாக வேண்டும். அதற்கு ஒரு கோடி ரூபாய்க்கும் மேலான மதிப்பு உண்டு. அநேக லட்சாதிபதிகள் தற்கொலை செய்துகொண்டு இறந்திருக்கிறார்கள். அவர்களுடைய லட்சக் கணக்கான செல்வம், அவமானகரமான அச்சாவுகளிலிருந்து அவர்களைக் காப்பாற்றிவிடவில்லை.

''உங்கள் முன்னிருக்கும் பிரச்னை இதுதான் என்று தோன்றுகிறது: நீங்கள் அதிக பலம் பெற்றிருக்கிறீர்களா, அல்லது மில் சொந்தக்காரர்கள் அதிக பலமடைந்திருக்கிறார்களா? சமரசத்தின் மூலம் தீர்த்துக்கொள்ளுவது என்பதற்கு உடன்பட மில் முதலாளிகள் மறுத்துவிடுவார்களாயின், நீங்கள் வேலை நிறுத்தத்தை நடத்த வேண்டியிருக்கும். உங்கள் பலத்தைச் சோதித்துப் பார்க்க அவர்கள் விரும்பாமலிருக்கலாம். நீங்கள் அதிக பலம் பெற்று வருவதைக்கொண்டு மில் சொந்தக்காரர்கள் பயப்பட வேண்டியது எதுவுமில்லை என்று அவர்களுக்குச் சொல்ல வேண்டும் என்று இப்பொழுது நான் விரும்புகிறேன். அவர்கள் அதிக பலமடைந்தார்களானால், நீங்கள் பயப்படுவதற்கு எவ்வளவோ காரணங்கள் உண்டு. ஆனால், மில் சொந்தக்காரர்களுக்கும் தொழிலாளருக்குமுள்ள வித்தியாசத்தைப் பார்ப்போம். அவர்கள் பலமெல்லாம் பணம்தான். உங்கள் பலமோ, உழைப்பதற்கு உங்களுக்குள்ள சக்தி. உழைப்பில்லாமல் பணத்தினால் எதுவும் செய்துவிட முடியாது. மில்களுக்குள் போய் அங்கே வேலை செய்ய நீங்கள் இல்லையானால், எல்லா மில்களிலும் வேலையே இல்லாமல் நின்றுபோய்விடும். தங்களுக்காக வேலை செய்யும்படி அவர்கள் உங்களை நிர்ப்பந்திப்பதாக இருக்கலாம். ஆனால், தொழிலாளர்கள் இல்லாமல் அவர்களால் எதுவும் செய்ய முடியாது என்பதில் சந்தேகமில்லை. இவ்விதம் திறவுகோல் தொழிலாளரிடம்தான் இருக்கிறது. தொழிலாளரிடம் என்றுதான் நான் கூறுகிறேனேயன்றித் தொழிலாளர் சங்கத்தினிடம் என்று நான் சொல்லவில்லை.

''இன்னுமொன்றையும் இப்பொழுது பார்ப்போம். நீங்கள் எண்ணிக்கையில் பலமாக இருந்தாலும், நீங்கள் பத்து லட்சம்

பேர் இருப்பினும், ஒரு மில்லை நடத்த உங்களால் முடியாது. பத்து லட்சம் ரூபாய் உங்களிடம் இருந்தாலும் அதை உங்களால் நடத்த முடியாது. எனக்கு யாராவது பத்து லட்சம் ரூபாய் கொடுத்தாலும் ஒரு மில்லின் நிர்வாகத்தை எடுத்துக் கொள்ள நான் மறுத்துவிடுவேன். அந்த பத்து லட்சம் ரூபாயைக் கதர் வேலைக்கோ, ஹரிஜன் வேலைக்கோ சந்தோஷமாக உபயோகிப்பேன். ஆனால், மற்றவர்களுக்கு உதாரணமாக இருக்கக் கூடிய ஒரு மில்லை என்னால் நடத்த முடியாது. நீங்களும் அதே நிலைமையில்தான் இருக்கிறீர்கள் சென்ற இருபது ஆண்டுகளாக ஒன்றுபட்டு நீங்கள் வேலை செய்து வந்திருந்தும்கூட, ஒரு மில்லை நடத்தும் ஆற்றலை நீங்கள் இன்னும் அடைந்துவிடவில்லை. அடுத்த இருபது ஆண்டிலும் அந்த ஆற்றலை நீங்கள் அடைந்துவிட மாட்டீர்கள். அந்த ஆற்றல் உங்களுக்கு இருக்கிறது என்று நீங்கள் நினைப்பதானால், உங்களை நடத்திச் செல்ல உங்களுக்கு ஒரு தலைவர் அவசியமில்லை.

"என்றோ ஒரு நாள் அந்த ஆற்றலை நீங்கள் அடைந்துவிட வேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். நீங்கள் ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் ஒரு மில்லை நடத்தக்கூடிய ஆற்றலைப் பெற்றுவிடுவது நிச்சயமாகச் சாத்தியமே. அப்படியானால், உங்களில் மற்றவர்கள், நீங்கள் இன்று இருப்பதைப் போன்று அடிமைகளாக இருக்க வேண்டியதே. நீங்கள் எல்லோரும் சேர்ந்து ஒரு ஸ்தாபனமாக ஒரு மில்லை நடத்தும் ஆற்றலைக் குறிப்பிட்ட ஆண்டுகளுக்குள் அடைந்துவிட முடியாது என்றுதான் நான் கூறுகிறேன்.

"ஆனால், வர்க்க உணர்ச்சியும் வர்க்கப் போராட்டமும் வேண்டும் என்று வற்புறுத்தும் நம் நண்பர்களோ, நாம் எப்படிப் போராட வேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்களோ அவ்வாறே நாம் போராடுவோமாயின் எல்லாம் சாத்தியமானதே என்கிறார்கள். மில்காரர்களுடன் நாம் போராடலாம். ஆனால், நம் உடன்பிறந்த சகோதரர்களுடனும், உற்றார் உறவினர்களோடும் நாம் எப்படிப் போராடுவோமோ அதே அன்புடனும், மதிப்புடனும், தயக்கத்துடனும் நாம் போராட வேண்டும்.

"ஆனால் கருங்காலிகளின் விஷயம் என்ன என்று நீங்கள் கேட்கலாம். துரதிருஷ்டவசமாக கருங்காலிகள் இருந்து கொண்டுதான் இருப்பார்கள். ஆனால், அவர்களுடன் நீங்கள் போராட வேண்டாம்; அவர்களைக் கேட்டுக்கொள்ளுங்கள் என்றே உங்களுக்குச் சொல்லுவேன். அவர்கள் கொள்கை, குறுகிய மனப் போக்குடையது ; உங்களுடைய கொள்கையோ, தொழிலாளர் எல்லோருடைய நன்மைக்குமானது என்பதை அவர்களுக்கு எடுத்துக்கூற வேண்டும். நீங்கள் சொல்லுவதைக் கேட்டுக் கொள்ள அவர்கள் மறுத்துவிடவும் கூடும். அப்படி மறுத்துவிடுவார்களானால், அவர்களை நீங்கள் சகித்துக்கொள்ள வேண்டுமேயன்றி அவர்களுடன் போராடக்கூடாது.

“வர்க்கப்போராட்டத்தை வற்புறுத்தும் நண்பர்களிடமிருந்து எனக்குப் பகிரங்கக் கடிதம் ஒன்று வந்தது. அகமதாபாத்தில் இரண்டு தொழிலாளர் சங்கங்கள் இருக்கக்கூடாது என்று அவர்கள் சொல்லுகிருர்கள். இதை நானும் ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனல், வர்க்கப் போராட்டத்தை ஒப்புக்கொள்ளும் ஒரே சங்கமே இருக்க வேண்டும் என்கிருர்கள். அதாவது, அவர்கள் சங்கத்துடன் நாம் கலந்துகொள்ள வேண்டும் என் கிருர்கள். வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதது என்பதை நீங்கள் நம்பவில்லை என்ருல், அவர்கள் காட்டும் ஆசையில் நீங்கள் மயங்கிவிடாதீர்கள்.

“ஒத்துழைப்பில் உங்களுக்கும் எனக்கும் நம்பிக்கை இருக் கிறது. சில சமயங்களில் மில்காரர்களுடன் நாம் ஒத்துழையாமை செய்கிருேம் என்ருல், முடிவாக ஒத்துழைப்பை அடைவதற் காகவே அவ்வாறு செய்கிருேம். அகமதாபாத்தும், அதன் மில் தொழிலும் சுபிட்சமடைய வேண்டும் என்று நாம் விரும்புகிருேம். ஆனல், பலதரப்பட்ட அம்சங்களும் ஒன்றுபட்டதான, விசால மான அடிப்படையைக் கொண்ட சுபிட்சத்தை நான் விரும்பு கிறேன்.

“மத்தியஸ்தர்களில் நானும் ஒருவன். எனவே, வேலை நிறுத் தத்தின் பொதுவான பிரச்னையின் தன்மையைக் குறித்து நான் எதுவும் பேசுவதற்கில்லை. வேலை நிறுத்தம் அவசியமானல் என்ன செய்ய வேண்டும் என்பதை மாத்திரமே உங்களுக்குச் சொன்னேன். அது முற்றிலும் அமைதியானதாக இருக்க வேண்டும் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஒரு சமரச முடிவு ஏற் படுவதற்கான எல்லா முயற்சிகளையும் நீங்கள் செய்துபார்த்து விட வேண்டும். பொது வேலை நிறுத்தம் அவசியமானதாக ஆகாது என்றே இன்னும் நான் நம்புகிறேன். நெருக்கடி ஏற் பட்டுவிடாமலிருப்பதற்கு என்னுலான முழு முயற்சியையும் செய்து பார்ப்பேன்.

“ஆனல், ஒன்று உங்களுக்கு நினைவிருக்கட்டும். நீங்கள் போராடவே நேர்ந்தாலும், உங்கள் விரதத்தை நீங்கள் கைவிட்டு விடாமலிருப்பதற்கு உங்களுக்கு வேண்டிய சக்தி, உங்கள் வாழ்க்கையின் தூய்மையையே பொறுத்திருக்கிறது. ஒரு சூதாடியோ, குடிகாரனே, கேவலமான நடத்தை உள்ளவனே விரதத்தை அனுசரித்து நடந்துவிடவே முடியாது. உங்கள் பலத் தைக் கொண்டுதான் நீங்கள் போராட வேண்டும் என்பதும் உங்களுக்கு நினைவிருக்கட்டும். அனுசூயா பென்னையோ, சங்கர லால் பாங்கரையோ, என்னையோ நம்பிக்கொண்டிருக்காதீர்கள். உங்களுக்கு நாங்கள் வழி காட்டத்தான் முடியும். உங்கள் பலம் மாத்திரமே உங்களுக்கு வெற்றியளிக்கும். அறுந்த தந்தியைப் போன்றவனே நான். உங்கள் விஷயத்தில் நான் சிரத்தை எடுத் துக் கொள்ளுவதில்லை என்பதல்ல. ஆனல், நான் இப்பொழுது கிராமவாசியாகிவிட்டேன். சேகான் என்ற அச்சிறு கிராமத்தில்

என்னுடைய சக்திகள் சோதனையில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றன. நான் அக்கிராமத்திலேயே குடியேறிவிட்டேன். ஏனெனில், சுயராஜ்யத்திற்குத் திறவுகோல் கிராமங்களில் இருக்கிறதேயன்றி நகரங்களில் இல்லை. கிராமங்களின் ஏழ்மையை ஒழிப்பதில் நான் வெற்றி பெற்றுவிடும்போது, உங்களுக்கும், இந்தியா முழுவதுக்கும் நான் சுயராஜ்யத்தை வென்றுவிட்டவன் ஆவேன். நகரங்களில் வசிக்கும் உங்களைவிட கிராமங்களில் வசிப்பவர்கள் அதிக மோசமான நிலைமையில் இருந்து வருகிறார்கள். உங்கள் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. ஆஸ்பத்திரியும் மற்றும் அநேக சௌகரியங்களும் இருக்கின்றன. கிராமவாசிகளுக்கோ இவைகளில் எதுவுமே இல்லை. தாங்கள் இருந்துவரும் பரிதாபகரமான நிலைமையை அவர்கள் அறிந்துகொள்ளுவதுகூட இல்லை. அவர்கள் இப்பொழுது இருக்கும் நிலைமையை விடாமல் அதிலேயே இருந்து வருகிறார்கள். ஆகையால், அவர்களுடைய அபிவிருத்திக்கான திறவுகோலை நான் கண்டுகொண்டு விடுவேனாயின், சுயராஜ்யத்திற்கான திறவுகோலை கண்டுகொண்டவனாவேன். அவர்கள் விடுதலையே உங்கள் விடுதலையும்."

—'ஹரிஜன்' – 7—11—1936

[அகமதாபாத் மில் தொழிலாளருக்குச் செய்த ஒரு பிரசங்கம். இது ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் கடிதம்', என்பதில் முன்னால் வெளியானது.]

## 6

# தொழிலாளரைச் சுரண்டுவதைக் காங்கிரஸ் அனுமதிக்காது

காங்கிரஸ், தொழிலாளருக்காகவே வாழ்கிறது. முதலாளிகள், தொழிலாளரின் நலனையே முக்கியமாகக் கவனிப்பதைப் பொறுத்தவரையில், முதலாளிகளுக்காகவும் காங்கிரஸ் இருக்கிறது. ஆகையால், அந்நிய துணிப் பகிஷ்கார விஷயத்தில் மில் சொந்தக்காரர்களுடன் காங்கிரஸும் சேர்ந்திருக்கிறது. ஏனெனில், இந்தப் பகிஷ்காரம் தொழிலாளருக்கும், துணி வாங்கும் ஏராளமான பொது மக்களுக்கும் வெகு சீக்கிரத்தில் நன்மையை அளிப்பதாக இருக்கிறது. இந்தக் கூட்டு, வேண்டும் என்று விரும்பிச் செய்துகொள்ளப்பட்டிருப்பது. இதில் எத்தரப்பு விரும்பினாலும் அதை ரத்துச் செய்துகொண்டு விடலாம். இது லாபமானதல்ல என்று மில்கள் கண்டுகொண்டால் இதை அவை ரத்துச் செய்து கொண்டுவிடலாம்; ரத்துச் செய்து

கொண்டுவிடும். இது கதருக்குத் தீமை செய்யுமானல், தொழிலாளருக்குத் தீமை விளைவித்தால், அவர்களைச் சுரண்டுவதாக இருந்தால், துணி வாங்குவோரைச் சுரண்டுவதாக இருக்குமாயின், காங்கிரஸ் இதை ரத்துச் செய்துவிடும்; செய்துவிட வேண்டும். இப்பொழுது ஏற்பட்டிருப்பதைப் போல, கதரின் அபிவிருத்தி இதனல் தாற்காலிகமாகக் கொஞ்சம் நின்றிருக்கலாம். துணியை வாங்கும் மக்கள், ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு, ஆனல் அதற்கு மேல் அல்ல, அதிக விலையின் மூலம் பாதுகாப்புத் தீர்வையைக் கொடுக்க நேரலாம். ஆனல், அப்படி அதிகப்படியாகக் கொடுப்பது கட்டுப்படியாகும் வகையில் மில்கள் வேலை செய்வதற்காகவேயன்றி பங்குதாரர்களுக்கு அதிக லாபம் கொடுப்பதற்காக அன்று. ஆனல், தொழிலாளரைச் சுரண்டுவதற்கு மாத்திரம் காங்கிரஸ் ஒருபோதும் அனுமதிக்காது. அதாவது, பகிஷ்காரத்திற்கு முன்னலிருந்ததை விடத் தொழிலாளியின் நிலைமை மோசமானதாகிவிடக்கூடாது. ஆனல், மில்களுடன் காங்கிரஸ் செய்துகொண்டிருக்கும் கூட்டினல், தொழிலாளரின் நிலைமை மேலும் அபிவிருத்தியடைந்ததாக இருக்கும்படி பார்க்க வேண்டிய பெரிய கடமை காங்கிரஸுக்கு ஏற்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட ஒரு மில் காங்கிரஸுடன் ஓர் ஒப்பந்தத்திற்கு வருவதற்கு முன்னல், அந்த மில்லின் தொழிலாளர் நிலைமை எப்படி இருக்கிறது என்பதைக் காங்கிரஸ் தெரிந்து கொள்ள வேண்டும்.

விசேஷமான இந்தக் கடமையைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி அறிந்திருந்ததனல்தான் அதன் முந்திய கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானத்தைச் செய்தது :

"மில்களின், முக்கியமாகக் காங்கிரஸின் அங்கீகாரம் பெற்ற மில்களின் சொந்தக்காரர்களுக்கும் மானேஜர்களுக்கும், காரியக் கமிட்டி 1931 ஜுலை 10-ஆம் தேதி நிறைவேற்றிய தீர்மானத்தை* காங்கிரஸ் காரியக் கமிட்டி கவனத்திற்குக் கொண்டு வருகிறது. மேலும், ஜவுளித் தொழிலாளர் நடத்தப்படும் விதத்தைக் குறித்தும், அவர்களிடையே அதிருப்தி வளர்ந்துகொண்டு வருவதைக் குறித்தும், சில மில்களில் கூலியைக் குறைக்க யோசிக்கப்பட்டு வருவதைப் பற்றியும் அவர்களின் கவனத்திற்கு இக்கமிட்டி கொண்டு வருகிறது.

"அதிருப்திக்கான காரணங்களையெல்லாம் மில் சொந்தக்காரர்களும் மானேஜர்களும் நீக்குவார்கள் என்று இக்கமிட்டி நம்புகிறது. கோடிக்கணக்கான விவசாயிகளின், தொழிற்சாலைத் தொழிலாளரின் நன்மைக்கே காங்கிரஸ்

---

* காங்கிரஸ் காரியக் கமிட்டி 1931 ஜுலை 10-ஆம் தேதி செய்த தீர்மானம் வருமாறு: "ஜவுளி மில்களுக்கு விலக்கு அளிக்கும் கமிட்டி, எங்கெங்கே சாத்தியமோ, அவசியமோ அங்கெல்லாம், காங்கிரஸ் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருக்கும் மில்களில் தொழிலாளருக்குத் தண்டனையோ, வேலையிலிருந்து நீக்கம் முதலியனவோ செய்யப்படுவதைச் சமரச ஏற்பாட்டின் பேரில் தடுக்க முயற்சிக்க வேண்டும். இந்த மில்களில் தொழிலாளர் நிலைமை சீர்ப்படுவதற்கு வேண்டிய உதவியையும் செய்ய வேண்டும்."

முக்கியமாகப் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இருப்பதால், அத்தகைய புகார் களுக்கு இதற்கு முன்னல் நியாயம் இருந்த போதிலும், அத்தகைய மில்களை அங்கீகரிப்பது காங்கிரஸ் கூறிக்கொள்ளும் கொள்கைக்குப் பொருத்தமில் லாததாகும் என்றும் காங்கிரஸ் காரியக் கமிட்டி கருதுகிறது.''

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சென்ற கூட்டத்தில் காரியக் கமிட்டிக்கு அனுப்பிய தனிப்பட்டவர்களின் தீர்மானங் களில் ஒன்று, மில் தொழிலாளரைப் பற்றியதாகும். எங்தெந்த மில்கள் தொழிலாளர்களின் கூலியைக் குறைத்துவிடப் போவ தாக மிரட்டி வருகின்றனவோ அவற்றின் ஜாபிதா என் முன்னல் இருக்கிறது. இதனலேயே காரியக் கமிட்டி மேலே சொன்ன லேசான தீர்மானத்தை நிறைவேற்றியது. இவ்விஷயத்தில் தனது கொள்கையையும் கடமையையும் அது எடுத்துக் காட்டு கிறது. தொழிலாளருக்குப் பாதகமானது எதற்கும் காங்கிரஸ் உடந்தையாக இருந்துவிடாது என்பதையும் அது எடுத்துக் காட்டுகிறது. தொழிலாளர் சம்பந்தமாகக் காங்கிரஸின் கொள்கை இன்னது என்பதற்கு, மில்காரர்களுக்கு இது ஓர் அறிவிப்புமாகும். இதை எந்த வகையிலும் பயமுறுத்தல் என்று கொள்ளக்கூடாது. தொழிலாளியின் நலனைப் பாதுகாக்க வேண் டியது, காங்கிரஸின் நன்மைக்கு எவ்விதம் அவசியமோ அவ் வாறே மில் சொந்தக்காரர்களின் நன்மைக்கும் அவசியமானதாக இருக்க வேண்டும். சுயராஜ்யத்திற்கு அமைதியான வழி, எல்லா தேசீய முயற்சிகளிலும் ஒன்றுபட்டு வேலை செய்வதில்தான் இருக்கிறதேயன்றி விரோதமாகச் செய்வதில் இல்லை. ஒன்று பட்டு வேலை செய்யும் இது, வயல்களிலோ, தொழிற்சாலை களிலோ உள்ள தொழிலாளர்களின் நன்மையை நோக்கிப் போவ தாக இருக்க வேண்டும்.

## 7

# தொழிலாளர் செய்ய வேண்டியது என்ன?

இந்தியாவுக்கு இன்று இருக்கும் வழிகள் இரண்டு. 'வல்லான் வகுத்ததே சரி' என்ற மேனட்டுக் கொள்கையைப் புகுத்துவது ஒன்று. இல்லையானல், உண்மையே வெற்றி பெறும், உண்மைக்குத் தவறிவிடுவது என்பது இல்லை. வலுத்தவனுக்கே யன்றி வலுவில்லாதவனுக்கும் நீதியை அடைவதற்கு உரிமை உண்டு என்ற கீழ்நாட்டுக் கொள்கையில் உறுதியுடனிருப்பது மற்றோர் வழி. இவ்வழியைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண் டியது தொழிலாளர் வகுப்பிலிருந்துதான் ஆரம்பமாக வேண்டும்.

சாத்தியமானது என்று இருந்தாலும், தொழிலாளர் தங்கள் ஊதிய உயர்வைப் பலாத்காரத்தின் மூலம் அடைவதா? அவர்கள் கேட்பது எவ்வளவுதான் நியாயமானதாகவே இருந்தாலும், பலாத்காரம் போன்ற எதையும் அவர்கள் அனுசரிக்கக்கூடாது. உரிமைகளை அடைவதற்குப் பலாத்காரத்தை உபயோகிப்பது எளிதான வழியாகத் தோன்றலாம். ஆனால், நாளாவட்டத்தில் அது முட்கள் நிறைந்த வழியாகவே நிரூபணமாகிறது. வாளைக் கொண்டு வாழ்கிறவர்கள், வாளினாலேயே சாகிறார்கள். நீந்துகிற வர்கள் எப்பொழுதும் நீரில் மூழ்கியே மாண்டு போகிறார்கள். ஐரோப்பாவைப் பாருங்கள். யாருக்குமே அங்கே திருப்தி என் பது இல்லாததனால் யாரும் சந்தோஷமாக இருப்பதாகத் தெரிய வில்லை. தொழிலாளர்கள், முதலாளிகளை நம்புவதில்லை; முத லாளிகளுக்கோ, தொழிலாளரிடம் நம்பிக்கையே கிடையாது. இருவருக்கும் ஒரு வகையான தீரமும் பலமும் இருக்கிறது. காளை களுக்கும்கூட இது இருக்கிறது. முடிவுவரையில் அவை போராடு கின்றன. அசைவெல்லாம் அபிவிருத்தி அல்ல. ஐரோப்பாவின் மக்கள் அபிவிருத்தியடைந்து வருகின்றனர் என்று நாம் நம்புவ தற்கு எந்தக் காரணமும் இல்லை. அவர்களிடம் செல்வம் இருக் கிறது என்பதனால் அவர்களிடம் எந்த ஒழுக்க, ஆன்மிகத் தன்மையும் இருப்பதாகிவிடாது. துரியோதனன் வசம் ஏராள மான செல்வம் இருந்தது. அப்படி இருந்தும் விதுரருடனோ, சுதா மாவுடனோ ஒப்பிட்டுப் பார்த்தால், அவன் ஓட்டாண்டி என்றே சொல்ல வேண்டும். இன்று விதுரரையும் சுதாமாவையும் உலகம் போற்றுகிறது. ஆனால், துரியோதனனுடைய பெயரையோ, ஒருவர் வெறுக்க வேண்டிய தீயகுணங்களுக்கு மாறுபெயராகவே எண்ணப்படுகிறது.

அப்படியானால், நாம் செய்யவேண்டியது என்ன? பம்பாய்த் தொழிலாளர்கள் சிறந்த முறையில் உறுதியுடனிருந்தார்கள். அதைப் பற்றிய உண்மைகளை எல்லாம் அறியும் நிலைமையில் நான் இல்லை. ஆனால், அவர்கள் சிறந்த வழியில் போராட முடியும் என்று மாத்திரம் நான் சொல்ல முடியும். மில் சொந்தக் காரர்கள் முற்றிலும் தவறே செய்திருக்கலாம். தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் நடக்கும் போராட்டங்களில், பெரும்பாலும் முதலாளிகளே தவறு செய்துவிடுபவர்களாக இருக்கிறார்கள் என்று பொதுவாகச் சொல்லலாம். ஆனால், தொழிலாளர்கள் தங்களுடைய பலத்தை முற்றிலும் அறிய ஆரம்பித்துவிடும்போது, அவர்கள் முதலாளிகளைவிடக் கொடுமையானவர்களாகி விடு வார்கள் என்பதை அறிவேன். மில் சொந்தக்காரர்களுக்கு இருக்கும் புத்திசாலித்தனம் தொழிலாளருக்கும் இருந்துவிடும் போது, தொழிலாளர்கள் சொல்லுவதற்கெல்லாம் பணிந்துதான் மில்காரர்கள் நடக்கவேண்டியிருக்கும். என்றாலும், அந்தப் புத்திசாலித்தனத்தைத் தொழிலாளர் என்றுமே அடைந்துவிட முடியாது என்பது தெளிவானது. தொழிலாளர்கள் அந்தப் புத்திசாலித்தனத்தை அடைந்துவிடுவார்களானால், அதன் பிறகு

அவர்கள் தொழிலாளர்களாக இருப்பது போய் அவர்களே எஜமானர்களாகிவிடுவார்கள். முதலாளிகள் பண பலத்தைக் கொண்டு மாத்திரம் போராடி வரவில்லை. அவர்களுக்குப் புத்தி சாலித்தனமும் சாமர்த்தியமும் இருக்கின்றன.

நம் முன்பு இருக்கும் பிரச்னை இதுதான் : தொழிலாளர்கள் இப்பொழுது எப்படி இருக்கிறார்களோ அப்படியே இருக்கும் போது, விஷயத்தை அறிந்துகொள்ளுவதில் கொஞ்சம் அபிவிருத்தியை அடைவார்களானால், அவர்கள் செய்ய வேண்டியது என்ன ? தங்கள் எண்ணிக்கையின் பலத்தை, மிருக பலத்தை, அதாவது பலாத்காரத்தைத் தொழிலாளர் நம்பி இருப்பதானால் அது தற்கொலை செய்துகொள்ளுவதே ஆகும். அவ்வாறு அவர்கள் செய்வதால், நாட்டிலுள்ள தொழில்களுக்கு அவர்கள் தீங்கு செய்தவர்களாவார்கள். இதற்கு மாறாக சுத்தமான நீதியில் அவர்கள் உறுதியான நம்பிக்கை வைப்பதானால், அதை அடைவதற்காகத் துன்பத்தையும் அனுபவிப்பதாயின், எப்பொழுதுமே அவர்கள் வெற்றி பெறுவதோடல்லாமல் தங்களுடைய எஜமானர்களையும் சீர்திருத்திவிடுவார்கள். தொழில்களையும் விருத்தி செய்து, எஜமானர்களும் ஆட்களும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பார்கள். தொழிலாளரின் நிலைமை திருப்திகரமான வகையில் சீர்திருந்துவதற்கான நிபந்தனைகளில் கீழ்க்கண்டவைகளும் சேர்ந்திருக்க வேண்டும் :

1. வேலை செய்யும் நேரத்தில் தொழிலாளருக்குச் சில மணி நேரம் ஓய்வு இருக்க வேண்டும்.

2. தங்களுக்கான கூலியைப் பெறுவதற்கு அவர்களுக்கு ஓய்வு இருக்க வேண்டும்.

3. அவர்களுடைய குழந்தைகளுக்குப் பால், துணி, அவசியமான கல்வி முதலியன போதிய அளவு கிடைப்பதற்கு ஏற்பாடுகள் இருக்க வேண்டும்.

4. தொழிலாளருக்குச் சுகாதாரத்தோடு கூடிய வீட்டு வசதிகள் இருக்க வேண்டும்.

5. வயோதிக காலத்தில் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்ளுவதற்குப் போதுமானதைச் சேமித்து வைக்கும் நிலைமையிலும் அவர்கள் இருக்க வேண்டும்.

இந்த நிபந்தனைகளெல்லாம் இன்று நிறைவேற்றப்படவில்லை. இதற்கு இரு தரப்பாருமே பொறுப்பாளிகளாவர். தங்களுக்குக் கிடைக்கும் சேவையைப் பற்றிய விஷயத்தில் மாத்திரமே எஜமானர்கள் சிரத்தையுடன் இருக்கிறார்கள். தொழிலாளர் என்ன வாகிறார்கள் என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. குறைந்தபட்ச ஊதியத்தைக் கொடுத்துவிட்டு அதிகப்பட்ச சேவையைப் பெறுவது என்பதில்தான் பொதுவாக அவர்க

ளுடைய முயற்சியெல்லாம் இருந்துவருகிறது. தொழிலாளர் களோ, குறைந்தபட்ச வேலைக்கு அதிகப்பட்சமான ஊதியத்தை பெறுவதற்காக எல்லா விதமான தந்திரங்களையும் உபயோகிக்க முயன்று வருகின்றனர். இதன் பலன் என்னவென்றால், தொழி லாளருக்குச் சம்பள உயர்வு கிடைத்தாலும், அவர்கள் செய்யும் வேலையில் எந்த அபிவிருத்தியும் இல்லை. இரு தரப்பாருக்கும் உள்ள உறவும் புனிதமாகவில்லை. தொழிலாளர்கள், தங்களுக்குக் கிடைக்கும் சம்பள உயர்வைச் சரியான வழிகளில் பயன்படுத்திக் கொள்ளுவதும் இல்லை.

இந்த இரு கட்சியாருக்குமிடையில் மூன்றாவது கட்சி ஒன்று கிளம்பியிருக்கிறது. அது, தொழிலாளரின் நண்பனாகியிருக்கிறது. அத்தகையதோர் கட்சிக்கு அவசியம் உண்டு. இந்தக் கட்சி, தொழிலாளர் விஷயத்தில் சுயநலமில்லாமல் நட்புடன் இருக்கிற வரையில்தான், அது தொழிலாளருடன் நட்புடன் இருக்க முடியும்.

தொழிலாளரை அநேக வழிகளிலும் அடகுப் பொருளாக உபயோகித்துக்கொள்ளும் முயற்சிகள் செய்யப்படும் காலம் இப்பொழுது வந்திருக்கிறது. ராஜீயத்தில் ஈடுபடுகிறவர்கள், இதைக் குறித்து ஆலோசித்தாக வேண்டிய சமயம் வந்திருக் கிறது. அவர்கள் எதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவார்கள்? தங்கள் சுயநலத்தையா, தொழிலாளருக்குச் சேவை செய் வதையா, அல்லது நாட்டின் நலனையா? நண்பர்களின் உதவி தொழிலாளருக்கு முக்கியமாக வேண்டியிருக்கிறது. தலைமை இல் லாமல் அவர்கள் போய்க்கொண்டிருக்க முடியாது. எப்படிப் பட்டவர்கள் அவர்களை நடத்திச் செல்லுவது தொழிலாளரின் நிலைமையை முடிவு செய்யும்?

வேலை நிறுத்தங்கள், வேலை செய்ய மறுத்துவிடுவது, ஹர்த் தால் ஆகியவை அற்புதமான காரியங்களே என்பதில் சந்தேக மில்லை. ஆனால், அவற்றைக் கெட்ட வழியில் உபயோகித்துக் கொள்ளுவதும் கஷ்டமல்ல. தொழிலாளர்கள் தங்களுக்குள் பலமான சங்கங்களாகச் சேர்ந்துகொள்ள வேண்டும். இந்தச் சங்கங்களின் சம்மதமில்லாமல் அவர்கள் வேலை நிறுத்தம் செய் யவே கூடாது. மில் சொந்தக்காரர்களுடன் முன்கூட்டி சமரச மாகப் பேசிப் பார்க்காமல் தொழிளாளர் வேலை நிறுத்த ஆபத் தில் இறங்கிவிடக்கூடாது. மத்தியஸ்தத்திற்குவிட மில் சொந்தக் காரர்கள் முற்படுவார்களானால், பஞ்சாயத்து முறைக்கு ஒப்புக் கொள்ள வேண்டும். பஞ்சாயத்து நியமிக்கப்பட்டுவிடுமானால், அது செய்யும் முடிவு தங்களுக்குப் பிடித்தாலும் பிடிக்காது போனாலும், அதை இரு தரப்பாரும் ஏற்றுக்கொண்டாக வேண்டும்.

தொழிலாளருடைய நிலைமையை அபிவிருத்தி செய்வதில், வாசகர்களாகிய நீங்கள் சிரத்தையுள்ளவர்களாக இருந்தால்,

தொழிலாளருக்கு நண்பராயிருந்து, சேவை செய்ய நீங்கள் விரும்பினல், நீங்கள் போகக்கூடிய சிறந்த வழி ஒன்றே ஒன்றுதான் உங்கள் முன்பு இருக்கிறது என்பதை நீங்கள் காண்பீர்கள். அதாவது, இரு தரப்பாருக்குமிடையே குடும்ப உறவை உண்டாக்கி, அதன் மூலம் தொழிலாளரை மேலுக்குக் கொண்டுவருவதுதான் அந்த வழி. இதைப் பெறுவதற்குச் சத்தியத்தைத் தவிர வேறு வழி இல்லை. வெறும் சம்பள உயர்வு மாத்திரம் உங்களுக்குத் திருப்தியளித்துவிடக் கூடாது. அந்தச் சம்பள உயர்வை அவர்கள் எந்த வழியில் பெறுகிறுர்கள், அதை அவர்கள் எப்படி செலவிடுகிறுர்கள் என்பதையும் நீங்கள் கவனிக்க வேண்டும்.

—'எங் இந்தியா'-11—2—1920

[முன்னல் 'தொழிலாளர் நிலைமை' என்ற தலைப்பில் வெளியானது.]

## 8

# நியாயமான விகிதத்தைப் பெறவேண்டும்

திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பணவுதவி செய்ததில் தொழிலாளர் கொண்ட பங்கு என்ன என்பது பொதுஜனங்களுக்குத் தெரியாது. அகமதாபாத்திலிருக்கும் இருபத்தோராயிரம் தொழிலாளர்கள் அந்நிதிக்கு ரூ. 54,000 கொடுத்தார்கள். தங்கள் மாதச் சம்பளத்தில் பத்தில் ஒரு பங்கு என்ற கணக்கில் கொடுத்தார்கள். ஏழாயிரம் பேர் அங்கத்தினர்களாகியிருக்கின்றனர். இதே போல, அகமதாபாத் தொழிலாளரைப் போல அவ்வளவு சாஸ்திரோக்தமாகவும் பெருந்தொகையினராகவும் இல்லாவிட்டாலும், பம்பாய்த் தொழிலாளரும் கேட்காமலேயே தங்கள் பண முடிப்பைக் கொடுத்திருக்கிறுர்கள். காலத்தின் போக்குக்கு இது அறிகுறி. தொழிலாளர்கள் தங்களுக்குள் ஒற்றுமை அடைந்து, நாட்டையும் தங்களையும் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிடும்போது, சாமான்களை உற்பத்தி செய்வதற்குத் தாங்கள் அதிக உழைப்பை அளித்து வருவதால், விலைவாசிகள் சரியான நிலையை அடைவதற்கும் அவர்கள் போராடுவார்கள். அப்பொழுது, தொழிலாளிகளின் நன்மையையும், சாமான்களை வாங்குவோரின் நன்மையையும் கவனிக்காமல், பங்குதாரர்களுக்கு லாப விகிதத்தை அதிகமாகக் கூட்டித் தருவதற்காக மில்கள் சாமான்களுக்கு அதிக விலை வைத்து விற்பது என்பதற்கே இடமிருக்காது. பங்குதாரர்களுக்குக் கொடுக்கும் லாபம், தொழிலாளரின் ஊதியம், சாமான்களின் விலை ஆகியவைகளுக்கிடையே கௌரவமான விகிதம் இருந்தாக வேண்டும் என்ற காலம் வந்தே ஆக வேண்டும். அக்காலம் எவ்வளவு சீக்கிரத்தில் வருகிறதோ அவ்வளவும் நல்லது.

—'எங் இந்தியா'-11—8—1921

[இது முன்னல் 'தொழிலாளரின் பலம்' என்ற தலைப்பில் வெளியானது.]

# 9

# தொழிலாளருக்கு விமோசனம் அகிம்சையே

மாணவர் கோஷ்டியினர் இங்கே வந்தார்கள். இவர்கள் சர்வகலாசாலைப் பட்டம் பெற்றவர்கள். தொழிலாளர் ஸ்தாபனத்தில் அனுபவப் பயிற்சியைப் பெறுவதற்காக அகமதாபாத்திற்குச் சென்றிருந்தனர். அங்கிருந்து திரும்பும்போது இங்கே வந்து கொஞ்ச நேரம் தங்கினார்கள். இவர்கள் தொழிலாளர் நலனுக்காகத் தங்களை அர்ப்பணித்துக்கொள்ளுவது என்று முடிவு செய்துகொண்டிருந்தனர். காந்திஜி, அவர்கள் தம்மைச் சந்தித்துப் பேச அவகாசம் அளித்தார். அவர்கள் எழுப்பிய பல பிரச்னைகளைக் குறித்தும் அவர்களுடன் பேசினார். தென்னாப்பிரிக்காவில் தாம் பொதுவாழ்க்கையை ஆரம்பித்த காலத்திலிருந்து எவ்விதம் தொழிலாளருடன் தாம் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறார் என்பதை அவர்களுக்குக் காந்திஜி விளக்கிக் கூறினார். தென்னாப்பிரிக்காவில் வக்கீலாகத் தொழில் நடத்த ஆரம்பித்ததும், தமக்கு இருக்கும் ஓய்வு நேரத்தையெல்லாம் அங்கிருக்கும் இந்தியருக்குச் சேவை செய்வதில் செலவிடுவது என்று முடிவு செய்துகொண்டார். இவருடைய உதவியை முதன் முதலில் நாடி வந்தவர் ஓர் ஒப்பந்தத் தொழிலாளியே. இவர் விஷயம், அவரைத் தொழிலாளருடன் சம்பந்தம் கொள்ளும்படி செய்தது. தங்களுக்கும் தங்கள் எஜமானர்களுக்கும் இருந்த கஷ்டங்களையெல்லாம் தொழிலாளர்கள் காந்திஜியிடம் வந்து கூறினர். அதோடு தங்கள் சொந்தக் குடும்பக் கஷ்டங்களையும் அவரிடம் வந்து தெரிவித்துக்கொண்டார்கள். இதனால், அவர்களுடைய வாழ்க்கையைக் குறித்து காந்திஜி அறிய முடிந்தது. வேறு எதைக்கொண்டும் அவ்வளவு நன்றாக அவர் அறிந்திருக்க முடியாது. முதலாவது, அகிம்சையைத்தான் அவர்கள் முன்பு வைத்தார். சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஒரு நெருக்கடியான கட்டத்தில் 60,000 தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்து சிறைப்படும் அபாயத்திலிருந்தபோது, அவர்கள் அனுஷ்டிக்கப் பிரதிக்ஞை கொண்டிருந்த ஒரே காரியம் அகிம்சைதான். அவர்கள் சொல்லொணா கஷ்டங்களையெல்லாம் அனுபவித்தார்கள்; பட்டினி கிடந்தார்கள்; சிலர் மாண்டும் போயினர். அவர்கள் நிலைமை அனுபவத்தில் அதிகக் கஷ்டமானது; இங்கிருக்கும் தொழிலாளரின் நிலைமையைவிட ஒரு வகையில் மோசமானது. அவர்கள் சுதந்திரமானவர்கள் அல்ல; ஒப்பந்தப்படி வேலை செய்தாக வேண்டியவர்கள். தங்கள் எஜமானர்களிடமிருந்து நீதியைப் பெறுவதற்காக அவர்கள் போராட வேண்டியிருந்ததோடு, தங்களை அடியோடு அழித்துவிட மிரட்டி வந்த அக்கிரமமான மூன்று பவுன் வரியையும் அவர்கள் எதிர்த்தாக வேண்டி

யிருந்தது. ஆனல், சமாளித்துக்கொண்டு போக அவர்களுக்கு அகிம்சை உதவியது. காந்திஜி சம்பாரணிலும் அகமதாபாத்திலும் செய்திருக்கும் வேலை, சமீபத்திய சரித்திரம். சம்பாரணைப்பற்றிக் காந்திஜி கூறுகையில், "அங்கிருந்த விவசாயிகளின் நிலைமை அநேகமாக ஒப்பந்தக் கூலிகளின் நிலைமையைப் போன்றதாகவே இருந்தது. என்றாலும், அவர்களை ஒன்றுபடுத்துவதற்கு அகிம்சையின் இணைக்கும் சக்தி அவர்களிடம் அப்பொழுது இல்லாமலிருந்ததால் அரை நூற்றாண்டுக் காலம் அவர்கள் செய்து வந்த கிளர்ச்சிகளெல்லாம் வீணாயின. அநேகக் கலகங்கள் நடந்தன. ஆனல், வருடத்திற்கு வருடம் அவர்கள் நிலைமை மோசமாகியே வந்தது. ஆனல், அகிம்சையின் முதல் ருசி, அவர்களிடையே புது வாழ்வை உண்டாக்கியது. கொஞ்சகாலப் போராட்டத்திற்குப் பிறகு அவர்கள் நிலைமை சீர்பட்டது" என்றார்.

காந்திஜி மேலும் கூறியதாவது: "அகிம்சையின்படி இருக்க வேண்டிய கட்டுத்திட்டங்கள், அவர்களுக்கு இல்லாமலிருக்குமானல், இடைவிடாத சச்சரவுகள் அவர்களுக்கு இருந்துகொண்டிருக்கும். அவர்களுக்குச் சக்தியை அடைவதற்கு வேண்டிய பலத்தை வளர்த்துக்கொள்ளுவதற்கு அவர்கள் தயாராகவே இருக்கமாட்டார்கள். அடிப்படைக் கொள்கையான அகிம்சையை ஏற்றுக்கொண்டுவிட்டால், ஸ்தாபனம், நுட்பத்திறமை முதலியன எல்லாம் தானே வந்துவிடும். வர்க்க ஒற்றுமையுங்கூட நாளாவட்டத்தில் தொடர்ந்து ஏற்பட்டுவிடும். தொழிலாளர்கள் எண்ணிக்கையில் பலத்துடன் இருக்கிறார்கள். என்றாலும், பிறரை எதிர்பார்த்து வாழ வேண்டியிருப்பவர்களாகவே எண்ணிக்கொள்ளுகிறார்கள். தங்கள் முதலாளிகளின் தயவில் வாழ்வதாகவும் கருதிக்கொள்ளுகின்றனர். தங்களுக்கு இயல்பாகவுள்ள பலத்தை உணராமலிருப்பதுதான் இதற்குக் காரணம். இல்லையானல், தங்களுக்கிருக்கும் வசதிகளையெல்லாம் ஒருங்கு திரட்டிக்கொண்டு, இப்பொழுது முதலாளிகள் செய்துவருவதைப் போன்று நிபந்தனைகளை இவர்கள் வெளியிடுவதைத் தடுக்க வேறு என்ன இருக்கிறது? இவர்கள் அறிந்துகொள்ள வேண்டியதெல்லாம், பணத்தைப் போலவே தங்கள் உழைப்பும் மூலதனமே என்பதுதான். அகிம்சையை ஏற்றுக்கொள்ளுவதனுலேயே இதை அறிந்துகொள்ளுவது என்பது ஏற்பட முடியும்.

"அவர்கள் அதை அடைந்துவிட்ட பிறகு, அவர்கள் தங்கள் நிலையை எய்திவிட்ட பின்னர், அகிம்சை மேலெழுந்தவாரியானதாக ஆவதில்லை. அது வேண்டாம் என்று தொழிலாளர்கள் அதைக் கைவிட்டு விடுவார்களானல், அவர்களும் முதலாளிகளைப்போன்றே கெட்டவர்களாகிவிடுவதோடு தாங்களும்சுரண்டி வாழ்பவர்களாகிவிடுவார்கள். தங்கள் பலத்தைத் தொழிலாளர் உணர்ந்துகொள்ளுவதோடு அகிம்சையை அனுஷ்டிப்பதும் அவர்களிடம் சேர்ந்து இருக்குமாயின், முதலாளிகளுடன் அவர்கள் ஒத்துழைப்பது சாத்தியமாகும்படி செய்யும்; முதலாளிகளைச்

சரியான உபயோகத்திற்கு மாற்றிக்கொண்டவர்களும் ஆவார்கள்,. பிறகு முதலாளிகளைத் தங்களுக்கு விரோதமான நலனுடையவர் களாகக் கருதமாட்டார்கள். மில்களையும் யந்திரங்களையும் சுரண்டும் சாதனங்களாகவும், தங்களை நசுக்கிக்கொண்டிருப்ப வைகள் என்றும் கருதமாட்டார்கள். ஆனால், அவைகளை உற் பத்திக்கான தங்கள் சொந்த ஆயுதங்களாகக் கருதி, அதனால் அவற்றைத் தங்கள் சொந்தச் சொத்துக்களாகவே பாவிப் பார்கள். அவர்கள் நேரத்தைப் போக்கி, குறைவாக வேலை செய்யமாட்டார்கள். ஆனால், தங்களால் முடிந்தவரையில் பாடு பட்டு வேலை செய்வார்கள். உண்மையில் முதலாளிகளும் தொழி லாளரும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் தருமகர்த்தாக்களாகி, இவர்கள் தயார் செய்யும் சாமான்களை வாங்குவோரின் தரும கர்த்தாக்களாகவும் இருவரும் இருப்பார்கள். தருமகர்த்தாக் கொள்கை, ஒருதலைப்பட்சமானது அல்ல. தருமகர்த்தாவில் உயர்வை அது கொஞ்சமும் கற்பிக்கவும் இல்லை. நான் எடுத்துக் காட்டியிருப்பதைப் போன்று, அது முற்றிலும் பரஸ்பர மானது. மற்றொருவரின் நன்மையைப் பாதுகாப்பதன் மூலம் தம்முடைய சொந்த நன்மை பாதுகாக்கப்பட்டிருப்பதாக ஒவ் வொருவரும் நம்புகின்றனர். 'நீங்கள் தெய்வங்களுக்குப் பிரீதி யாக இருங்கள். தேவர்கள் உங்களிடம் பிரீதியாக இருப் பார்கள். இந்தப் பரஸ்பரப் பிரீதியினால் மிக உயர்ந்த நன் மையை நீங்கள் எய்துவீர்கள்' என்று பகவத் கீதை சொல்லு கிறது. பிரபஞ்சத்தில் தெய்வங்கள் என்ற தனி இனம் எதுவும் இல்லை. ஆனால், உற்பத்தி செய்யும் சக்தியுள்ளவர்களும், அந்தச் சக்தியை உபயோகித்துச் சமூகத்திற்கு வேலை செய்கிறவர்களு மான தொழிலாளர்களேயன்றி முதலாளிகளுமே தெய்வங்கள்.''

—'ஹரிஜன்' – 25—6—1938

[இக்கட்டுரை ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது. முன்னால் 'குறிப்புகள்' என்ற பகுதியில் 'ஒரே பாதுகாப்பு அகிம்சைதான்' என்ற தலைப்பில் வெளியாயிற்று.]

## 10

# குட்டி சுயராஜ்யம்

நானே ஒரு தொழிலாளிதான் என்பதை நீங்கள் எல்லோ ரும் அறிவீர்கள். தோட்டி, நெசவாளன், நூற்பவன், விவசாயி என்றெல்லாம் என்னைச் சொல்லிக்கொள்ளுவதில் நான் பெருமை கொள்ளுகிறேன். இந்த வேலைகளில் சில எனக்கு அரைகுறை யாகத்தான் தெரியும். அதற்காக நான் வெட்கப்படுவதும் இல்லை. தொழிலாளர் வகுப்பில் ஒருவனாக என்னைச் செய்து

கொள்ளுவது எனக்கு ஆனந்தமளிக்கிறது. ஏனெனில், உழைப்பு இல்லாமல் நாம் எதையும் செய்துவிட முடியாது. லத்தீன் மொழியில் ஓர் உயர்ந்த வாக்கு இருக்கிறது. 'உழைப்பதே பிரார்த்தனையாகும்' என்பது அதன் பொருள். ஐரோப்பாவின் மிகச் சிறந்த அறிஞர் ஒருவர், மனிதன் உழைத்தாலன்றிச் சாப்பிடுவதற்கு அவனுக்கு உரிமை இல்லை என்று கூறியிருக்கிறார். உழைப்பு என்று அவர் கூறியிருப்பது கையினால் உழைப்பதையே யன்றி மூளையினால் உழைப்பதை அல்ல. அதே கருத்துத்தான் ஹிந்து தருமம் முழுவதிலும் நிலவி நிற்கிறது. 'உழைக்காமல் சாப்பிடுகிறவன் பாபத்தையே தின்கிறான்; உண்மையில் அவன் கள்வனே'. பகவத் கீதையின் ஒரு சுலோகத்திற்குச் சரியான பொருள் இது. ஆகையால், உலகத்தின் தொழிலாளர் எல்லோருடனும் என்னை ஒன்றுபடுத்திக்கொள்ள முடிகிறது என்பதற்காக நான் பெருமைகொள்ளுகிறேன்.

இந்தியாவில், இந்தியரின் தொழில் முயற்சிகளில் மிகப் பெரியதை அல்லாவிடினும் மிகப் பெரியவைகளில் ஒன்றைப் பார்த்து அங்கே நடக்கும் வேலையின் நிலைமையை ஆராய வேண்டும் என்பது என் ஆசை. ஆனால், என் நடவடிக்கைகளில் எதுவும் ஒரே தரப்பானது அல்ல. என்னுடைய மத தருமம் சத்தியத்திலும் அகிம்சையிலும் ஆரம்பமாகி அவற்றிலேயே முடிவதைப் போன்று, தொழிலாளருடன் நான் ஒன்றாகியிருப்பது முதலாளிகளுடன் என் நட்புக்கு முரணானது அல்ல. என் முப்பத்தைந்து வருட பொது வாழ்க்கையில், முதலாளிகளுக்கு விரோதமாக இருப்பதாகத் தோன்றும் நிலையிலேயே நான் இருக்க நேர்ந்திருந்தும், முடிவில் முதலாளிகள் என்னைத் தங்கள் உண்மையான நண்பனாகவே கருதியிருக்கிறார்கள் என்பதை நம்புங்கள். இங்கே நான், முதலாளிகளின் நண்பனாக, டாட்டாக்களின் நண்பனாகவே வந்திருக்கிறேன் என்பதை முழு அடக்கத்துடனும் கூறுவேன். டாட்டாக்களுடன் எனக்கு எவ்விதம் தொடர்பு ஏற்பட்டது என்பதைப் பற்றிய சிறு கதையை நான் இங்கே சொல்லாது போனால், என்னைப் பற்றிய வரையில் அது நன்றியை மறந்த செயலாகும். தென்னாப்பிரிக்காவில் நமது சுய மரியாதையைக் காப்பாற்றிக்கொள்ளவும், நமது அந்தஸ்தை நிலை நிறுத்தவும் முயன்று இந்தியருடன் சேர்ந்து நான் போராடிக் கொண்டிருந்தபோது, முதலில் எங்களுக்கு உதவி செய்ய முன் வந்தவர் காலஞ் சென்ற ஸர் ரதன் டாட்டா ஆவார். அவர் எனக்கு மகத்தான கடிதம் ஒன்றை எழுதி, பிரமாதமான நன் கொடையாக ரூ. 25,000-க்கு ஒரு செக்கும் அனுப்பினார். அவசியமானால் மேற்கொண்டும் அனுப்புவதாகவும் வாக்குறுதியளித்தும் அக்கடிதத்தில் எழுதியிருந்தார். அது முதல் எனக்கும் டாட்டாக்களுக்கும் இருந்துவந்த உறவைப் பற்றிய தெளிவான நினைவு எனக்கு இருந்து வருகிறது. ஆகையால். உங்களுடன் இப் பொழுது நான் இருப்பது எனக்கு எவ்வளவு சந்தோஷமாகிறது என்பதை நீங்கள் யூகித்துக்கொள்ள முடியும். நாளை உங்களிட

மிருந்து நான் பிரியும்போது அதிக வருத்தத்துடனேயே நான் பிரிந்து போவேன் என்று நான் சொன்னால், அதையும் நம்புங்கள். ஏனெனில், அநேக விஷயங்களை நான் பார்க்காமல்தான் போக வேண்டியிருக்கும். இங்கே வந்து இரண்டு நாட்களானதுமே இங்கிருப்பவைகளையெல்லாம் நான் ஆராய்ந்துவிட்டேன் என்று நான் கூறிக்கொள்ளுவது என்னளவில் அகங்காரமானதேயாகும். இப்பெரிய தொழில் முயற்சியை ஆராய்ந்தறிய விரும்புகிறவருக்கு இது எவ்வளவு பெரிய காரியம் என்பதை நான் நன்றாக அறிவேன்.

இப்பெரிய இந்தியக் கம்பெனிக்கு அதற்குரியதான எல்லா சுபிட்சங்களும், இப்பெரிய தொழில் முயற்சிக்கு எல்லா வெற்றிகளும் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறேன். இப்பெரிய குடும்பத்திற்கும், அவர்கள் கண்காணிப்பால் இங்கே வேலை செய்யும் தொழிலாளருக்கும் இருக்கும் உறவுகள் மிகுந்த நட்புத் தன்மை கொண்டதாக இருக்கும் என்று நான் நம்பலாமா? அகமதாபாத்தில் முதலாளிகள், தொழிலாளர் சம்பந்தமாக நான் அதிகம் செய்ய வேண்டியிருந்தது. முதலாளிகளும் தொழிலாளரும் ஒருவருக்கொருவர் துணையாக இருந்து பரஸ்பரம் உதவி செய்துகொள்ள வேண்டும் என்பதுதான் என் லட்சியம் என்று நான் எப்பொழுதும் கூறி வந்திருக்கிறேன். ஒற்றுமையாகவும், அமைதியோடும் வாழும் பெரிய குடும்பமாக அவர்கள் இருந்து வர வேண்டும். முதலாளிகள், தங்களுக்குக் கீழிருக்கும் தொழிலாளர் வகுப்பினரின் தருமகர்த்தாக்களாக இருப்பதால், அவர்கள் தொழிலாளரின் லோகாயத நன்மையை மாத்திரமேயன்றித் தார்மிக நலனையும் கவனிக்கவேண்டும்.

இங்கே அநேக ஐரோப்பியரும் இந்தியரும் வசித்தபோதிலும், அவர்களிடையே உறவு சந்தோஷகரமானதாக இருக்கிறது என்று சொல்லக்கேட்டேன். இத்தகவல் அப்படியே உண்மை என்று நம்புகிறேன். நீங்கள் இருவரும் இப்பெரும் தொழிலில் சேர்ந்திருப்பது ஒரு பாக்கியமேயாகும். ஒற்றுமையிலும் நல்லெண்ணத்திலும் இந்தியாவுக்கு நல்ல பாடத்தைப் போதிப்பது உங்களால் முடியும். பிரமாண்டமான தொழிற்சாலையின் கூரையின் கீழே ஒருவருக்கொருவர் சிறந்த உறவோடு இருந்து வருவதோடல்லாமல் தொழிற்சாலைக்கு வெளியிலும் அத்தகைய உறவோடு இருந்து வருவீர்கள் என்றும், இதில் யாரும் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று எண்ணிக்கொள்ளாமல் சகோதர சகோதரிகளாக வாழ்ந்து வேலை செய்ய நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள் என்பதை அறிந்துகொள்ளுவீர்கள் என்றும் நம்புகிறேன். இதைச் செய்வதில் நீங்கள் வெற்றி பெறுவீர்களானால், ஒரு குட்டி சுயராஜ்யமே உங்களுக்கு இருக்கும்.

நான் ஒத்துழையாமைக்காரன் என்று சொன்னேன். சாத்விக சட்ட மறுப்பாளன் என்றும் என்னைச் சொல்லிக்கொள்ளு

கிறேன். மற்றும் பல ஆங்கிலச் சொற்களைப் போன்றே இந்த இரு சொற்களுக்கும் ஆங்கில பாஷையில் கெட்ட வாசனை ஏற்பட்டிருக்கிறது. ஆனால், ஒத்துழைக்க என்னால் முடிய வேண்டும் என்பதற்காகவே நான் ஒத்துழையாமை செய்கிறேன், இருபத்து நான்கு மாத்துத் தங்கத்திற்கு மட்டமான எதையும், அதாவது போலியான ஒத்துழையாமையைக்கொண்டு நான் திருப்தியடைந்துவிட முடியாது. ஸர் மைக்கேல் ஓட்வியர், ஜெனரல் டயர் ஆகியவர்களுடனும் கூட சிநேகமாக இருப்பதை என்னுடைய ஒத்துழையாமை தடுக்கவில்லை. இது யாருக்கும் தீங்கு செய்வதில்லை. தீமையோடும், தீமையான முறையினோடும் ஒத்துழையாமை செய்வதுதான் இதுவேயன்றித் தீமை செய்பவரிடம் ஒத்துழையாமை செய்வது அல்ல இது. தீமை செய்பவரையும் நேசிக்கும்படி என் தருமம் எனக்குப் போதிக்கிறது. என் ஒத்துழையாமை எனது அந்தத் தருமத்தின் ஒரு பகுதியேயாகும். யாருடைய காதுக்கும் இனிமையாக இருக்க வேண்டும் என்பதற்காக இவற்றையெல்லாம் நான் இங்கே கூறவில்லை. என்னுடைய வாழ்நாளில் நான் செய்ய எண்ணாத எதையும் சொல்லும் குற்றத்தை நான் செய்ததில்லை. உள்ளத்திற்குள் நேராகப் போவதுதான் என் இயல்பு. அப்படிச் செய்வதில் இப்போதைக்கு நான் அடிக்கடி தோற்றுவிட்டாலும், முடிவில் சத்தியம் எல்லோர் காதிலும் பட்டு உணரும்படி செய்தே தீரும். என் அனுபவத்தில் இது அடிக்கடி நடந்தும் இருக்கிறது. ஆகையால், உங்களுக்குள் இருக்கும் உறவு மிகுந்த நட்புடையதாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புவது, என் உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழும் ஓர் ஆசையாகும். தீமையினின்றும், அடிமைத்தனத்திலிருந்தும் இந்தியாவை விடுவிக்க நீங்கள் உதவி செய்வீர்களாகுக. வெளி உலகிற்குச் சமாதான உபதேசத்தைச் செய்ய இந்தியாவுக்கு உதவுவீர்கள் என்பதும் என் ஆழ்ந்த பிரார்த்தனை. இந்தியாவிலிருக்கும் இந்தியரும் ஐரோப்பியரும் இங்கே சந்திப்பதற்கு விசேஷ பொருள் இருக்க வேண்டும். விசேஷ பொருள் இருக்கச் செய்யவும் முடியும். உலகத்தில் சமாதானத்தையும் நல்லெண்ணத்தையும் பரப்புவதற்கு நாம் இருவரும் ஒன்றாக வாழ்வதைவிடச் சிறந்தது வேறு என்ன இருக்க முடியும்? டாட்டாக்களுக்குச் சேவை செய்வதன் மூலம் நீங்கள் இந்தியாவுக்கும் சேவை செய்வீர்கள். ஒரு தொழில் ஸ்தாபனத்தில் வேலை செய்வதைவிட இன்னும் உயர்வான காரியத்திற்காகவே நீங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் உணருவீர்களாக. இதைக் கடவுள் அருளுவாராக.

—'எங் இந்தியா' – 20—8—1925

[ஜாம்ஷெட்பூரில் இந்தியர் சங்கம் காந்திஜிக்கு அளித்த விருந்தில் காந்திஜி செய்த பிரசங்கம் இது. இதை ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதி வெளியிட்டார்.]

# 11

# ஜாம்ஷெட்பூர் விஜயம்

1917-இல் பீகாரில் காந்திஜி நீண்ட நாட்கள் தங்கிய காலம் முதற்கொண்டே ஜாம்ஷெட்பூருக்குப் போகவேண்டும் என்று அவர் ஆவலுடனிருந்தார். அது தொழில் பட்டணம். காலஞ் சென்ற ஜாம்ஷெட்ஜி டாட்டாவின் சிறந்த முயற்சியினாலும், அசாதாரணமான தொழில் திறமையினாலும் சிருஷ்டியானது அது. ஆனால், அவ்விடத்திற்கு விஜயம் செய்து, அங்குள்ள தொழிலாளரின் நலனுக்காகச் சேவை செய்யுமாறு ஸ்ரீ ஆண்டுரூஸ் தூண்டி வெற்றியும் பெற்றார். ஸ்ரீ ஆண்டுரூஸ் கேட்டுக்கொண்டதன் பேரில் தொழிலாளருக்காகச் சேவை செய்ய காந்திஜி அங்கே சென்றபோதிலும் அவர் ஸ்ரீ ஆர். டி. டாட்டாவின் விருந்தினராகவே அங்கு தங்கினார்.

அத்தொழில் முயற்சியின் சரித்திரத்தைச் சொல்லிக்கொண்டிருப்பதற்கு இது இடமன்று. அச்சரித்திரம் முழுவதுமே ருசிகரமானதோர் கதையாக அமையும். ஸ்ரீ டாட்டாவும், கம்பெனியின் மானேஜர் ஸ்ரீ அலெக்ஸாண்டரும் அன்போடு அழைத்துக் கொண்டுபோய் அத்தொழிற்சாலையைக் காட்டினர். அத்தொழிற்சாலையைப்பற்றி இங்கே நான் வர்ணிக்கப்போவதும் இல்லை. சரியானபடி சொன்னால், அத்தொழிற்சாலையின் சரித்திரமே ஒரு பெரும் புத்தகமாகும். அத்தொழிற்சாலையைச் சாதாரணமாகப் பார்ப்பதற்கும் ஒரு வாரத்திற்கு மேலாகும். அப்படி இருந்து பார்க்க காந்திஜியால் முடியவில்லை. இதைச் சொன்னாலே போதும்: இருபது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு சிறு கிராமம், புதர்களும் காடுகளுமாக இருந்த இடம் *1,05,000* பேர் வசிக்கும் அழகான பட்டணமாக மாற்றப்பட்டுவிட்டது. யுத்த காலத்தில் இந்தக் கம்பெனி அரசாங்கத்திற்கு மகத்தான சேவை செய்திருக்கிறது. இதற்குப் பதிலாகப் போதிய உதவியை அரசாங்கம் செய்யுமானால், இந்தக் கம்பெனி, இப்பொழுது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுவதற்குப் பதிலாக, இப்பொழுது இது தயாரித்து வருபவைகளுடன் இன்னும் பல இரும்பு எஃகுப் பொருள்களை இக்கம்பெனியே தயாரித்துவிடும்.

என்றாலும், இத்தொழில் விருத்தியும், பட்டணம் வளர்ந்ததும் பல பிரச்னைகளை உண்டாக்கிவிட்டன. அவற்றைக் கம்பெனி சமாளிக்க வேண்டியிருந்தது. ஒரு தொழில் பட்டணம் வளர்வதால் ஏற்படக்கூடிய கஷ்டங்களும் ஏற்பட்டன. இந் நவீன தொழில் முயற்சிக்குப் பல ஐரோப்பிய நாடுகளிலிருந்து 'நிபுணர்களான' இன்ஜினீயர்களை, 'நிபுணர்களான' தொழிலாளர்களை இறக்குமதி செய்ய வேண்டியதாயிற்று. அவர்களோ, இயல்பாகவே தங்கள் இஷ்டப்படியெல்லாம் நிபந்தனை விதித்

தார்கள். இதன் பலன் என்னவென்றால், பல இலாகாக்களில் இப்பொழுது இந்தியர் இருப்பதோடு ஐரோப்பியர்கள் என்ன வேலையைச் செய்கின்றனரோ அதே வேலையை இவர்களும் செய்து வந்தபோதிலும், சம்பளத்திலும், அவர்கள் அனுபவித்து வரும் வசதிகளிலும் இந்தியருக்கும் அவர்களுக்கும் அதிக வித்தியாசம் இருந்துவருகிறது. இந்த ஒழுங்கின்மை இப்பொழுது நன்றாகத் தெரிந்துவருகிறது. இதற்குக் காலாகாலத்தில் பரிகாரம் செய்யவில்லையானால், எதிர்காலத்தில் இத்தொழிலின் வெற்றிக்கே இதனால் பாதகம் ஏற்படும்.

இவ்வகையில் செய்திருக்கும் சரியான காரியம், ஒரு நுட்பப் பயிற்சி ஸ்தாபனத்தை ஆரம்பித்திருப்பதாகும். இந்தியாவின் எல்லா மாகாணங்களிலிருந்தும் அதற்கு 24 மாணவர்களை எடுத்துக்கொள்ளுகின்றனர். அங்கே பலதரப்பட்ட இலாகாக்களுக்கும் தேவைப்படும் உயர்ந்த நுட்பத் திறமையில் இம்மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார்கள். இப்பொழுது ஒப்பந்தத்தின் பேரில் வேலை பார்த்து வரும் ஐரோப்பியருக்குப் பதிலாக, முடிவாக இவர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுவது என்பதே நோக்கம். இக் கம்பெனி, ஒவ்வொரு மாணவருக்கும் வருடத்திற்கு இரண்டாயிரம் ரூபாய் வரை செலவு செய்து வருகிறது.

எஃகு நகரை உண்டாக்குவதென்றால் இக்காலத்திற்கு ஏற்ற பட்டணத்தையும் அமைக்க வேண்டும். தக்க வீடுகள், சாலைகள், தண்ணீர் வசதி, நல்ல சாக்கடை, வெளிச்சம் ஆகியவைகளை அமைப்பதற்கு இக்கம்பெனி பட்டணத் திட்ட நிபுணரான இன்ஜினீயரின் உதவியையும் பெற்றிருக்கிறது. இந்நகரின் சாக்கடை நீரின் பெரும் பகுதியை ஆக்டிவேடட் ஸ்லட்ஜ் முறைப்படிச் சுத்தம் செய்து, அதை முடிவாக ஓர் இடத்திற்குக் கொண்டுவந்து பக்கத்திலுள்ள சிறந்த விவசாய நிலங்களுக்குப் பாசனத்திற்கு எருவாகவும் உபயோகிக்கிறார்கள். குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. பல வைத்தியசாலைகளையும் அமைத்திருக்கிறார்கள். அவற்றில் அங்கே வேலை செய்பவர்களுக்கு மாத்திரமேயன்றி சுற்றுப்புற கிராம மக்களுக்கும் இனமாகச் சிகிச்சை செய்கின்றனர்.

கம்பெனி, என்ன செய்திருக்கிறது என்பதை இதைக் கொண்டு ஒருவாறு அறியலாம். ஆனால், இன்னும் செய்ய வேண்டியதும் அதிகம் இருக்கிறது. சம்பளத்தில் மோசமான வித்தியாசம் இருந்து வருவதோடு கொஞ்ச சம்பளம் வாங்கும் தொழிலாளரில் மிகப் பெரும்பான்மையினருக்கு அநேக குறைகள் இருந்து வருகின்றன. ஒரு குறிப்பிட்ட தொகை வீடுகள்தான் இருக்கின்றன. நான்கு அறைகளை மாத்திரமே கொண்ட வீட்டில், மூன்று, நான்கு குடும்பங்கள் சேர்ந்து குடியிருந்து வருவதையும் நான் பார்த்தேன். ஏராளமான பெண்களும் அங்கே வேலை செய்கிறார்கள். என்றாலும், அங்கே ஒரு பெண் டாக்டர்கூட

இல்லை. "சாதாரண தொழிலாளியைவிட எஜமானனின் குதிரையை ஆஸ்பத்திரியில் நன்ருகவும், அதிகத் துரிதமாகவும் கவனிக்கிருர்கள்" என்று, கஷ்டத்தை அனுபவித்திருப்பவர் ஒருவர் என்னிடம் கூறினர். புகார் ஆதாரம் இல்லாததாக இருக்கலாம். ஆனல், அதிருப்தி இருந்துவருகிறது என்று நன்ருகத் தெரிகிறது. "ஒரு கூட்டுறவு ஸ்டோர் இருக்கிறது. உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோருடைய நன்மைக்குமே அது இருக்கிறது. ஆனல், இப்பொழுது அது செல்வாக்குள்ள சிலருடைய நன்மைக்கென்றே இருந்து வருகிறது. சாராய வகைகளையும் அங்கே விற்கிருர்கள்" என்று சொல்லக் கேட்டேன். (சாராய வகைகளைக் குறித்துப் பின்னல் எழுதுகிறேன்.) அவர்களுக்கு இருக்கும் மற்றும் பல குறைகளைக் குறித்து நான் சொல்ல வேண்டியதில்லை. கம்பெனி, தொழிலாளர் நலனுக்கு என்று என்னதான் செய்து வந்தபோதிலும், அது அதன் கணக்குப்படியே செய்து வருமாகையால் பலமான தொழிலாளர் சங்கம் இருக்க வேண்டியது அவசியம் என்று அவர்கள் கூறி வருகிருர்கள். சில வருடங்களாக அங்கே தொழிலாளர் சங்கம் இருந்து வருகிறது. ஆனல், இரண்டு வருடங்களுக்கு முன்னல் அதற்கும் கம்பெனிக்கும் பலத்த தகராறு ஏற்பட்டது. அதிலிருந்து அச்சங்கத்தை அங்கீகரிக்க கம்பெனி மறுத்துவிட்டது.

ஸ்ரீ டாட்டாவுக்கும், தொழிலாளர் சங்கத்தின் தலைவரான ஸ்ரீ ஆண்டுருஸுக்கும், தமது தந்தையின் பிரதிநிதியான ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுக்குமிடையே நடந்த ஆலோசனையின் பலனுகத் திருப்திகரமான சமரச முடிவு ஏற்பட்டது என்பதைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த ஆலோசனைகளில் கலந்துகொள்ளுமாறு காந்திஜியையும் அழைத்தார்கள். 9-ந் தேதி நடந்த பெருங்கூட்டத்தில் இந்தச் சமரச முடிவை அறிவிக்குமாறும் காந்திஜியைக் கோரினர். இதன் பலனுகத் தொழிலாளர் சங்கத்தைக் கம்பெனி அங்கீகரிப்பதோடு அதை வாழ்த்தவும், அங்கத்தினர்களின் சந்தாத் தொகையை, அவசியமானல் தொழிலாளரின் சம்பளத்திலிருந்து வசூலித்துக் கொடுத்துச் சங்கத்திற்கு உதவிசெய்யவும் கம்பெனி ஒப்புக்கொண்டது. தொழிலாளர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ சேதியைத் திரும்பவும் வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஸ்ரீ ஆண்டுருஸ் கேட்டுக்கொண்டார். இதற்கு ஜெனரல் மானேஜரும் சம்மதிக்கிருர் என்பதைக் கண்ட ஸ்ரீ டாட்டா, இதைக் குறித்துக் கம்பெனியின் டைரக்டர்களுக்குச் சிபாரிசு செய்வதாக ஒப்புக்கொண்டார்.

தொழிலாளருக்குக் காந்திஜி பேசியதில் இரு விஷயங்களை நான் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அவை, ஸ்ரீ ஆண்டுருஸைக் குறித்து காந்திஜி சொன்னதும், சமரச ஏற்பாடுமாகும். காந்திஜி கூறியதாவது: "ஸ்ரீ ஆண்டுருஸ், சாத்தியமானல், எனக்கு உடன்பிறந்த சகோதரருக்கும் மேலானவர். ஆகையால், அவர்

கேட்டுக்கொள்ளுவதற்கு நான் மறுத்துவிடவே முடியாது. எனக்கும் ஸ்ரீ ஆண்டுரூஸுக்கும் இருப்பதைவிட ஆழ்ந்த உறவு யாருடனும் எனக்கு இருப்பதாகச் சொல்லிக்கொள்ள முடியும் என்று நான் எண்ணவில்லை. நாளுக்கு நாள் நாங்கள் அதிக நெருக்கமானவர்களாகிக்கொண்டிருக்கிறோம். இந்த நட்பைக்கொண்டு இதே நெருங்கிய நட்பும் சகோதரத்துவமும் இந்தியாவில் ஆங்கிலேயருக்கும் இந்தியருக்கும் ஏற்படும் நாளை எதிர்பார்க்கிறோம். இதில் நாங்கள் வெற்றி பெறுவோமா, இல்லையா என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனல், எங்கள் வாழ்க்கையின் இருபத்து நான்கு மணி நேரமும் அந்த லட்சியத்தை அடைவதற்கு மனப்பூர்வமான முயற்சியாகவே இருக்கும் என்பதை நாங்கள் அறிவோம். மனிதனுக்கு மனிதன் சச்சரவிட்டுக்கொண்டு வருவதைக் கண்டு வெறுப்படைந்துவிட்டோம். மிருக பலத்திலிருந்து மனிதனை அப்புறப்படுத்தி, தகராறுகளைத் தீர்த்துக்கொள்ளுவதற்கு ஆன்ம பலத்தை உபயோகித்துக்கொள்ளும் வகையில் மனிதரை மாற்றிவிட வேண்டும் என்பதே எங்கள் ஆசை.''

சமரச ஏற்பாட்டைக் குறித்து காந்திஜி கூறியதாவது: ''உங்கள் பலம் என்ன, உங்கள் பலவீனம் என்ன என்று நான் அறிய விரும்புவதனலேயே நானும் தொழிலாளியாகியிருக்கிறேன். நீங்கள் கம்பெனிக்கு விசுவாசத்துடன் வேலை செய்வதோடு உங்கள் சங்கத்தை நீங்கள் நடத்துவதன் மூலம், ஸ்ரீ டாடா தாராளமாக உங்களுக்கு விட்டுக்கொடுத்தது நியாயம், ஸ்ரீ ஆண்டுரூஸுக்கும் நியாயம். ஸ்ரீ ஆண்டுரூஸ், உங்களுக்குத் தலைவராக இருப்பது நியாயம் என்பதை உலகிற்கு எடுத்துக் காட்டுவீர்கள் என்று நம்புகிறேன். அவர், உங்களிடம் சம்பளம் வாங்கும் ஊழியர் அல்ல என்பதை நீங்கள் அறிவீர்கள். உங்களுக்குச் சேவை செய்யும் இன்பத்திற்காகவே அவர் சேவை செய்து வருகிறர். இன்று ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தத்திற்காகத் தாம் வருந்துவதாகப் பிறகு ஸ்ரீ டாட்டா அவரிடம் கூறும் நாள் வராமலிருக்கட்டும்...முதலாளிகள், தொழிலாளரின் நன்மைக்காகத் தங்களைத் தருமகர்த்தாக்களாகக் கருத வேண்டும். தொழிலாளருக்குச் சோறு போட்டுவிட்டுப் பிறகு அவர்கள் சாப்பிட வேண்டும் என்பதற்காகவே நான் முதலாளிகளின் நட்பை நாடுகிறேன். இன்று முதலாளிகள், தொழிலாளரைக் கண்டு பயப்படுகிறர்கள்; தொழிலாளரோ, முதலாளிகளை வெறுப்புடன் நோக்கி மிரட்டுகிறர்கள். இத்தகைய உறவைப் போக்கி அதற்குப் பதிலாகப் பரஸ்பர நம்பிக்கையும் மரியாதையும் இருக்கும்படி செய்ய நான் விரும்புகிறேன். இது ஏற்படுவதற்கு நீங்கள் எனக்கு உதவி செய்வீர்கள் என்றே நம்புகிறேன்.''

இக்கூட்டத்தில் அகில வங்காள தேசபந்து நினைவு நிதிக்கு ரூ. 5,000 கொண்ட பண முடிப்பைக் காந்திஜிக்குக் கொடுத்தார்கள். பெண்களின் கூட்டம் ஒன்றும் நடந்தது. அதிலும் சில நகைகள் உள்பட நல்ல தொகை வசூலாயிற்று. தேசீய வேலைக்கு என்று கேட்கும்போது மக்கள் மறுத்துவிடுவதில்லை என்பதை

இவைகளெல்லாம் காட்டுகின்றனவென்றாலும், அந்த இடத்தில் பொதுஜன காரியம் எதுவும் இல்லை. காந்திஜி வருவதை முன்னிட்டு கொஞ்சம் கதர் வாங்கப்பட்டது என்று சொன்னார்கள். ஆனால், அது அதிகமாகத் தென்படவில்லை. குடியின் சாபக் கேட்டைக் குறித்து ஹிந்தியில் அதிக உருக்கமாகப் பேசினார். பிறகு அவர் ஆங்கிலத்தில் பேசுகையில், குடிப் பழக்கம் இருந்து வருவதற்கு அதிகப் பொறுப்பாளிகள் பணக்கார வகுப்பினர் தான் என்று கூறியபோது, அப்படி அவர் கூறியதைக் கேட்டு பலர் சிரித்தார்கள். அது மிக முக்கியமான குற்றம் என்பது அவர்கள் அபிப்பிராயமாக இருக்கக்கூடும். கம்பெனியின் கடைகளில் மாதந்தோறும் ஆயிரக்கணக்கான ரூபாய்க்கு நாட்டு,வெளிநாட்டுச் சாராய வகைகள் விற்பனையாகின்றன என்று கேள்விப்பட்டேன். தொழிலாளரிடையே குடிப் பழக்கத்தைக் குறைப்பதற்காகவே இக்கடைகளைக் கம்பெனி எடுத்து நடத்தி வருகிறது என்ற வாதம் விசித்திரமானதே. உண்மை என்னவென்றால், நாகரிகப் பட்டணத்தின் அவசியமான வசதிகளாக இக்கடைகளை வைத்திருக்க வேண்டும் என்று கம்பெனி கருதுகிறது! சில ஆண்டுகளுக்கு முன்னால் அங்கே வந்து பார்த்த உயர்ந்த ஸ்தானத்திலிருக்கும் அதிகாரி ஒருவர், "அங்கே ஏற்றப்படும் தீ, கற்களைத் தண்டவாளங்களாக மாற்றுவதோடு, சிறந்த தொழில் எம்மக்களிடையே உண்டாக்கப்படுகிறதோ, அம்மக்களிடையே செய்வதைப் போன்று, நாகரிகத்தின் தூண்களாகவும் உத்தரங்களாகவும் மக்களை ஆக்குவதற்கும் உதவுகின்றது" என்றார். குற்றங்கள் இப்பொழுதே அங்கே மிக அதிகமாக இருக்கின்றன என்று அறிகிறேன். குடி வகைகளை வாங்குவதற்கு இருந்துவரும் வசதி, குற்றங்களை இன்னும் அதிகமாக்கும். அதோடு மக்களை நாகரிகத்தின் தூண்களாகவும் உத்தரங்களாகவும் ஆக்காமல் நாகரிகத்தை வற்றச் செய்பவர்களாகவும் சிதைத்துவிடுபவர்களாகவுமே ஆக்கும்.

இது போன்ற தொழிற் பிரதேசத்தில் காங்கிரஸ் வேலையை எப்படிச் செய்வது என்று சில நண்பர்கள் என்னிடம் கேட்டார்கள். நான் கொஞ்சமும் தயங்காமல் வருமாறு கூறினேன்: "தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்து அதைப் பலப்படுத்துங்கள். அச்சங்கத்தைக் கொண்டு காங்கிரஸ் வேலையைச் செய்யுங்கள். அதாவது, கதர் கட்டி, குடிக்காமலும் இருப்பவர்களைத் தவிர வேறு யாரும் சங்கத்தில் அங்கத்தினராக இருக்கக்கூடாது என்ற அபிப்பிராயத்தைப் பொதுஜனங்களிடையே உண்டாக்குங்கள்." இப்படித்தான் மக்கள் தங்களுக்குத் தாங்களே உதவி செய்துகொள்ள வேண்டும். ஆனால், கதருக்கு ஆதரவு அளித்து, மதுபானக் கடைகளையும் ஒழித்துவிடுவதில் கம்பெனி திட்டமான நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமானால், அது ஏழைச் சிப்பந்திகளின் நிரந்தரமான நன்றியைப் பெறும்.

— 'எங் இந்தியா' - 20—8—1925

[ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதியது.]

## 12

# இரு மில் முதலாளிகளின் துயரங்கள்

முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே கஷ்டங்கள் அதிகரித்துக்கொண்டு போவதைக் குறித்து ஒரு பரிகாரத்தைக் கூறும்படி நந்தியிலாவது யாரும் கேட்காமலிருப்பார்கள் என்று தான் யாரும் எண்ணுவார்கள். ஆனல், இரு மில் முதலாளிகள் அங்கே தங்கள் கஷ்டங்களைப் பற்றிய பரிதாபகரமான விபரங்களைக் கூறினர்: ''மில் தொழிலாளர் ஏன் அதிருப்தியடைந்திருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. எங்களுக்கு லாபம் வரவில்லை. என்ருலும், தொழிலாளருக்கு அவர்கள் போனஸை ஒழுங்காகக் கொடுத்துக்கொண்டிருக்கிரும். அவர்களுக்கு நாங்கள் செய்யாமல் விட்டுவிட்டது எதுவுமே இல்லை என்றுதான் எண்ணுகிறேன். எனினும், அவர்கள் அதிருப்தியுடனிருக்கிருர்கள். சுயநலங்கொண்டவர்கள், அவர்களைக் கிளப்பி விடுகிருர்கள் என்று காண்கிறேன்.'' இப்படியெல்லாம் அம்முதலாளிகள் கூறினர். காந்திஜி சொன்னதாவது: ''அப்பொழுதுங்கூட, அவர்களுக்குக் குறைகள் இருக்கின்றன என்றே அறிகிறேன். ஷோலாப்பூரில் தொழிலாளர் நலனுக்காக அற்புதமான வேலைகள் செய்யப்பட்டு வருகின்றன. அவர்களுக்கு நல்ல வீட்டு வசதி செய்து கொடுத்திருப்பதோடு தொழிலாளரின் சௌகரியங்களை நன்ருகக் கவனித்து வருகிருர்கள். ஆனல், அங்கேயும் மில் தொழிலாளர், அதிருப்தியோடிருப்பதோடு மேலும் வேண்டும் என்று கேட்கிருர்கள் என்ருல் யாரும் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. தொழிலாளரின் அதிருப்தியைக் கூடுமான வரையில் குறைப்பதற்கு அங்கே மானேஜர்கள் பல முறைகளை வகுத்திருக்கிருர்கள். நீங்கள் அவர்களைக் கலந்தாலோசியுங்கள்.''

''நான் கலந்தாலோசிக்கிறேன். என் ஆட்களை எந்த வழியில் திருப்தி செய்வது என்பதுதான் எனக்கு விளங்கவில்லை.''

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''நான் முதலாளியாக இருந்தால், தாங்கள் சுரண்டப்படுவதாக என்னுடைய தொழிலாளர்கள் எண்ணுவார்களாயின், தங்கள் குறைந்த தேவைகளும் சௌகரியங்களும்கூட கவனிக்கப்படவில்லை என்று கருதுவார்களானல், அதற்கு மேல் என் தொழிலை ஒரு நாளைக்குக்கூட தொடர்ந்து நடத்தமாட்டேன். ஆனல், இன்று நீங்கள் என்னை மன்னித்துவிட வேண்டும். நான் கொஞ்சம் பலமடைந்ததும் இதைக் குறித்துப் பிறகு விவரமாக விவாதிப்போம்."

பிறகு இன்னுமொரு நண்பர் வந்தார். அவர் மில் முதலாளி அல்ல. ஆனல், தொழிற்சாலைத் தொழிலாளரைச் சமாளிக்க

வேண்டியிருப்பவர். தொழிலாளர் கதரைக் கட்டினல் அது சீக்கிரம் கிழிந்துவிடுவதால் மில் துணியைவிட கதர் கட்டுவது அவர்களுக்குக் கிராக்கியானதாகிறது. ஆகையால், தொழிலாளர் கதரைக் கட்டும்படி தூண்டுவது எப்படி என்பது இந்நண்பருக்குத் தெரியவில்லை. "கதரை வாங்கி அதைத் தொழிலாளருக்குக் கொஞ்சம் மலிவான விலைக்கு விற்றுவிடுங்கள்" என்ருர், காந்திஜி. "அவர்கள் சிறந்த கதர் வேண்டும் என்று விரும்பிஞல், அவர்களுக்கு நல்ல கதர் கிடைப்பதை முன்னிட்டு அவர்கள் கொஞ்சம் நூற்கும்படி செய்யுங்கள். அந்த நூலை வாங்கி அவர்களுக்கு நீங்கள் நெய்து கொடுக்க வேண்டும். தம் தொழிலாளர்கள் சந்தோஷமாகவும் திருப்தியுடனும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறவர்கள் எத்தனையோ வழியில் அதைச் செய்யலாம். லீவர் பிரதர்ஸை உங்களுக்குத் தெரியுமா? அவர்கள் நடத்தி வரும் போர்ட் ஸன்லைட் ஒரு லட்சியக் குடியிருப்பு இடம்."

ஆனல், அந்த நண்பர் விவாதித்துவிட்டுப் போவதற்குத்தான் வந்தாரேயன்றி யோசனை கேட்டுக்கொண்டு போவதற்கு வரவில்லை. அவர் கேட்ட அடுத்த கேள்வியிலிருந்து இது தெரிந்தது: "போர்டு போன்ற ஒரு முதலாளியால் ஒரு மில் நடத்தப்படுகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அவர் தம் தொழிலாளரைச் சிறந்த நிலைமையில் வைத்திருக்கிருர். அப்போது அந்த மில் உற்பத்தி செய்யும் துணியை வாங்குவதுதான் சரியல்லவா?" இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இல்லை. ஏனெனில், நூற்க வேண்டும் என்று நாம் பிரசாரம் செய்து வருவது, மில் தொழிலாளரின் பரிதாபகரமான நிலைமையை அடிப்படையாகக்கொண்டது அன்று. பட்டினி கிடக்கும் நம் கோடிக்கணக்கான மக்களுக்கு மில்கள் வேலை கொடுத்துவிட முடியாது என்பதை அடிப்படையாகக்கொண்டது அது. அநேக மில்களை ஆரம்பித்து, என்னதான் சிறந்த முறையில் அவைகளை நடத்திஞலும் ஏழ்மைப் பிரச்னையை அவைகளால் தீர்த்துவிட முடியாது."

—'எங் இந்தியா' – 9—6—1927

[முன்னல் 'வாராந்திரக் கடித'ப் பகுதியில் 'முதலாளிகளும் தொழிலாளரும்' என்ற தலைப்பில் வெளியானது.]

## 13

# உரிமைகளா, கடமைகளா?

"இன்று சமூகத்தைப் பாதித்து வரும் ஒரு பெரிய தீமையைக் குறித்துப் பேச விரும்புகிறேன். முதலாளிகளும் ஜமீன்தார்களும் தங்கள் உரிமைகளைப் பற்றிப் பேசுகிருர்கள். தொழி

லாளர்களோ, தங்கள் உரிமைகளைப் பற்றிப் பேசுகின்றனர். சுதேச மன்னர்கள், ஆளுவதற்குத் தங்களுக்கு இருக்கும் உரிமைகளைப் பற்றிச் சொல்லுகிறார்கள். அவற்றை எதிர்ப்பதற்குத் தங்களுக்கு உரிமை இருக்கிறது என்கிறார்கள், விவசாயிகள். இவ்விதம் எல்லோரும் கடமைகளைப் பற்றிக் கூறாமல் உரிமைகளைப் பற்றி மாத்திரமே வற்புறுத்தினால், முழுக் குழப்பமும் கலவரமுமே இருந்துவரும்.

“ஒவ்வொருவரும் உரிமைகளை வற்புறுத்திக்கொண்டிருக்காமல் கடமையைச் செய்து வருவார்களானால், மனித வர்க்கத்தினிடையே உடனே ஒழுங்கு நியதி ஸ்தாபிதமாகிவிடும். மன்னர்களுக்கு ஆளுவதற்குத் தெய்வீகமான உரிமை இருக்கிறது என்பதோ, தங்கள் எஜமானர்களுக்கு மரியாதையுடன் பணிந்திருப்பதுதான் விவசாயிகளின் பணிவான கடமை என்பதோ எதுவுமே கிடையாது. பாரம்பரியமாக வந்திருக்கும் இந்தச் சமத்துவமின்மை சமூகத்தின் நன்மைக்குத் தீமை செய்வதாக இருப்பதால், இது ஒழிய வேண்டும் என்பது உண்மை. ஆனால், இதுவரையில் நசுக்கப்பட்டுக் கிடந்தவர்கள் அதிதீவிரமாகத் தங்கள் உரிமைகளை வற்புறுத்திக்கொண்டிருப்பது சமூகத்தின் நன்மைக்கு, அதிகமாக இல்லாவிடினும், அதே போலத் தீமை செய்யக்கூடியதேயாகும். இவ்விதமான நடத்தை, தெய்வீகமான அல்லது வேறு உரிமைகள் இருப்பதாகச் சொல்லிக்கொள்ளும் சிலருக்குத் தீமை செய்வதைவிட, கோடிக்கணக்கான மக்களுக்குத் தீமையை விளைவிக்கும் காரியமாகும். வீரமான அல்லது கோழைத்தனமான சாவையே அவர்கள் அடையக்கூடும். ஆனால், சாகும் இந்தச் சிலர், இன்ப மயமான திருப்தியைக்கொண்ட ஒழுங்கான வாழ்க்கையைக் கொண்டு வந்துவிட முடியாது. ஆகையால், உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் உள்ள தொடர்பைப் புரிந்துகொள்ள வேண்டும். நன்றாகச் செய்த கடமையிலிருந்து நேராகப் பொழியாத உரிமைகள், கொள்ளுவதற்கு ஏற்றவை ஆகா என்று துணிந்து கூறுவேன். அவை பறிக்கப்பட்டவைகளேயாகும். அவற்றை எவ்வளவு சீக்கிரத்தில் விட்டுவிடுகிறோமோ அவ்வளவு நல்லது. குழந்தைகள் விஷயத்தில் தாங்கள் செய்ய வேண்டிய கடமையைச் செய்யாமல் அக்குழந்தைகள் தங்களுக்குப் பணிந்து நடக்கவேண்டும் என்று மாத்திரம் எதிர்பார்க்கும் பெற்றோர், வெறுக்கத்தக்கவர்களே ஆவர். ஒழுக்கக்கேடான ஒரு கணவன், கடமை தவறாத தனது மனைவியிடமிருந்து எல்லா வகைகளிலும் உடன்பாட்டை எதிர்பார்க்கலாம் என்பது, சமய தருமத்தை மாற்றிக் கூறுவதாகும். ஆனால், தங்கள் விஷயத்தில் செய்யவேண்டிய கடமையைச் செய்யத் தயாராயிருக்கும் பெற்றோரை மதிக்க மறுக்கும் குழந்தைகள், தங்கள் பெற்றோரைவிட தங்களுக்கேதான் தீமையை விளைவித்துக்கொள்ளுகிறார்கள். கணவன் மனைவி விஷயத்திலும் இதையே சொல்லலாம். இதே சாதாரணமான, எல்லாவற்றிற்கும் பொருந்துவதான விதியை, முதலாளி

களுக்கும் தொழிலாளருக்கும், நிலச்சுவான்தார்களுக்கும் விவசாயிகளுக்கும், மன்னர்களுக்கும் அவர்கள் பிரஜைகளுக்கும், ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் அனுசரித்தால், உலகத்தின் மற்றப் பகுதிகளிலேயே அன்றி இந்தியாவில் நீங்கள் காணும் வாழ்க்கை, தொழில் சீர்கேடு எதுவும் இல்லாமல், குழப்பத்தை உண்டாக்காமல், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் சந்தோஷகரமான உறவை நீங்கள் காண்பீர்கள். கடமையை உணர்ந்து, அதிலிருந்து உரிமைகள் பிறப்பதைப் பெறுவதையே சத்தியாக்கிரகமான நியதி என்று நான் கூறுகிறேன்."

ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இருக்கும் உறவை உதாரணமாக எடுத்துக்கொண்ட காந்திஜி, உரிமைகளையும் கடமைகளையும் குறித்துத் தொடர்ந்து ஜூன் 29-ஆம் தேதி கூறியதாவது:

"பக்கத்தில் வசிக்கும் முஸ்லிம்கள் விஷயத்தில் ஹிந்துக்களின் கடமை என்ன? மனிதன் என்ற முறையில் அவருடன் நட்பாக இருப்பதும், அவருடைய சுகதுக்கங்களில் பங்கு கொண்டு அவருக்குக் கஷ்டமிருக்கும்போது உதவி செய்வதுமே அவருடைய கடமையாகும். அப்பொழுது, பக்கத்தில் வசிக்கும் முஸ்லிமிடமிருந்து அதே போலத் தாம் நடத்தப்படுவதை எதிர்பார்க்க அந்த ஹிந்துவுக்கு உரிமை இருக்கும். எதிர்பார்க்கும் இது அவருக்குக் கிடைக்கவும் கூடும். ஒரு கிராமத்தில் ஹிந்துக்கள் பெரும்பாலோராக இருக்கிறார்கள், அவர்களிடையே சில முஸ்லிம்கள் மாத்திரமே வசிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது பெரும்பான்மையினர் அந்தச் சில முஸ்லிம்கள் விஷயத்தில் செய்ய வேண்டியிருக்கும் கடமை பன்மடங்கு அதிகமாகிறது. இதனால் சிலரேயாக இருப்போர், தங்களிடத்தில் ஹிந்துக்கள் நடந்துகொள்ளும் விதத்தில் தங்களுடைய சமயம் எவ்விதமான மாறுதலையும் உண்டாக்கிவிடவில்லை என்பதை உணருவார்கள். அப்பொழுதுதான் ஹிந்துக்கள் தங்கள் உரிமையை அடைய முடியுமேயன்றி அதற்கு முன்னல் அல்ல. முஸ்லிம்கள் அவர்களுக்கு இயல்பான நண்பர்களாக இருப்பார்கள். ஆபத்து ஏற்படும்போது இரு சமூகத்தினரும் ஒன்றுபட்டு நிற்பார்கள். ஆனல், பலராக இருக்கும் ஹிந்துக்கள் ஒழுங்காக சரியானபடி நடந்துகொண்டு வந்தும், சிலராக இருக்கும் முஸ்லிம்கள் அதற்கு ஏற்றபடி சரியாக நடப்பதில்லை, ஒவ்வொரு காரியத்திலும் விரோதத்தையே காட்டி வருகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அது மனிதத் தன்மை இல்லாததற்கு அறிகுறியாகும். அப்பொழுது பலராக இருக்கும் ஹிந்துக்களின் கடமை என்ன? பலராக இருப்பதனுலுள்ள மிருக பலத்தைக் கொண்டு அவர்கள் மீது நிச்சயமாக ஆதிக்கம் செலுத்தக்கூடாது. அப்படிச் செய்வது சம்பாதிக்காத உரிமையைப் பறித்துக்கொண்டதாக ஆகும். அவர்களுடைய மனிதத் தன்மையில்லாத நடத்தையை, அதேபோல நடந்துகொள்ளும்

சொந்த உடன்பிறந்த சகோதரர்கள் விஷயத்தில் எப்படிச் சமாளித்துக்கொள்ளுவார்களோ அதே போன்று தடுப்பதுதான் ஹிந்துக்களின் கடமை. இந்த உதாரணத்தை நான் மேற்கொண்டும் விவரித்துக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. நிலைமை மாறுபட்டதாக இருக்குமானால், இதே மாதிரிதான் நடந்துகொள்ள வேண்டும் என்று மாத்திரம் கூறி இதை முடிக்கிறேன். இப்பொழுது நான் கூறியதிலிருந்து, தற்சமயம் திகைக்கும்படிச் செய்துவரும் நிலைமை முழுவதற்கும் இதே முறையை விஸ்தரித்து நன்மையை அடையலாம் என்று அறியலாம். முன்கூட்டிக் கடமையைச் சரியாக நிறைவேற்றுவதனாலேயே உரிமையை அடைவது என்ற தத்துவத்தை மக்கள் காரியத்தில் அனுசரிக்காது போனதனல் இப்பொழுது திகைக்கும்படியான நிலைமை உண்டாகியிருக்கிறது.

"இதே விதிதான் மன்னர்களுக்கும் விவசாயிகளுக்கும் பொருந்தும். மக்களின் உண்மையான சேவகர்களாக இருக்க வேண்டியது மன்னர்களின் கடமை. வெளி அதிகாரமொன்று அளித்த உரிமையைக் கொண்டோ, வாளின் உரிமையைக் கொண்டோ அவர்கள் ஆளக்கூடாது. சேவையின் உரிமையையும் உயர்ந்த ஞானத்தைக் கொண்டும் அவர்கள் ஆள வேண்டும். அப்பொழுது வலியச் செலுத்தும் வரியை வசூலிக்கவும், அதே போல வலிய அளிக்கும் சேவைகளை, தங்களுக்காக அல்ல, தங்கள் பராமரிப்பில் இருக்கும் மக்களுக்காக எதிர்பார்க்கவும் அவர்களுக்கு உரிமை ஏற்படும். இந்தச் சாதாரணமான, ஆரம்பக் கடமையைச் செய்ய மன்னர்கள் தவறிவிடுவார்களானல், பதிலுக்குச் செய்ய விவசாயிகள் கடமைப்பட்டிருக்கவில்லை என்பது மாத்திரமல்ல, மன்னரின் பறிக்கும் அதிகாரத்தை எதிர்க்க வேண்டியதும் அந்த விவசாயிகளின் கடமையாகிறது. பறிப்பதையோ, தீய ஆட்சியையோ எதிர்க்கும் உரிமை விவசாயிகளுக்கு உண்டாகிறது என்றும் சொல்லலாம். ஆனல், அந்த எதிர்ப்பு, கொலை, கொள்ளை, நாசப்படுத்துதல் போன்ற ரூபத்தை அடைந்துவிடுமானல், கடமையைப் பொறுத்த வரையில், அது மனிதனுக்கு எதிரான குற்றமாகும். கடமையைச் செய்வதனல் நியாயமாக உண்டாகும் சக்தி அகிம்சையானதாவதோடு சத்தியாக்கிரகம் உண்டாக்கும் தோல்வியே இல்லாததான சக்தியுமாகும்."

—'ஹரிஜன்' – 6—7—1947

[1947 ஜூன் 28, 29-ஆம் தேதிகளில் பிரார்த்தனைக்குப் பிறகு காந்திஜி செய்த பிரசங்கங்களிலிருந்து எடுத்தது.]

# 14

# உன்னைப்போலவே அயலாரையும் நேசி

தமது வீட்டில் காந்திஜியைச் சந்தித்துப் பேச விரும்புகிற வர்களுக்கு ஸ்ரீ திகேகார் அழைப்பு அனுப்பியிருந்தார். அதன்படி அநேகர் வந்திருந்தார்கள். தீட்டாத அரிசி, தீட்டாத கோதுமை ஆகியவைகளின் பொருளாதாரத்தையும் தத்துவத்தையும் குறித்துக் காந்திஜி அவர்களுக்கு விளக்கிச் சொன்னார். திகேகாரின் வீட்டிலேயே இவை தயாரிக்கப்படும் முறையைக் கவனிக்கும்படியும் அவர்களுக்குச் சொன்னார். ஆனால், இவை களையெல்லாம்விட தமக்கு அதிக முக்கியமானதாக இருந்த ஒரு பிரச்னை விஷயத்தில் ஒரு நண்பர் அதிக திகைப்புற் றிருந்தார். அதை விவரமாக எழுதினார். அவருக்கு இருந்த கஷ்டத்தின் சாராம்சம் இதுதான்: "கிராமத்திற்குப் போய் அங்கேயே குடியேறிக் கிராமவாசிகளைப் போலவே உழைத்துச் சாப்பிடும்படி எங்களுக்குக் கூறுகிறீர்கள். நான் அப்படியே செய்தேன். நெய்வது, கயிறு தயாரிப்பது, விறகு பிளப்பது போன்ற எல்லா வேலைகளையும் நான் செய்தேன். ஆனால், வாழ்க்கைக்குப் போதுமானதைச் சம்பாதிப்பது கஷ்ட மாக இருப்பதையே கண்டேன். நாங்கள் என்ன செய்வது? நமக்குள்ள தீமைகளுக்கெல்லாம் முதலாளித்துவம்தான் காரணம் என்று நினைக்கிறேன். முதலாளிகள் ஈவிரக்கமின்றிச் சுரண்டி வருகிறார்கள். அவர்களை நாம் ஏன் விட்டுவைக்க வேண்டும்? 'உம்மைப் போலவே அயலாரையும் நேசி' என்ற உங்கள் உப தேசத்தைத் தயவுசெய்து எனக்குச் சொல்லாதீர்கள். எனக்கு அது திருப்தியை அளிக்கவில்லை."

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "அந்த உபதேசத்தையே திரும்பவும் உங்களுக்குக் கூறவேண்டியிருக்கிறது என்று அஞ்சு கிறேன். சுயராஜ்யம் வேண்டும் என்று நீங்கள் கேட்கும்போது அது உங்களுக்கு மாத்திரம் வேண்டும் என்று நீங்கள் கேட்க வில்லை, உங்களுக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கும் வேண்டும் என்றுதான் கேட்கிறீர்கள் என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். இதிலிருக்கும் தத்துவம் புரியாமல் இருப்பதற்கு இது பெரிய விஞ்ஞானமோ, வேதாந்தமோ அல்ல. நல்ல பகுத்தறிவுதான் அது. உங்களைப் போலவே உங்கள் அயலாரையும் நீங்கள் நேசிப்பீர்களாயின், அவரும் அதே மாதிரி உங்களை நேசிப்பார்.

"ஓர் ஊழியருக்குக் கிராமங்களில் இருக்கும் கஷ்டங்களைக் குறித்து நீங்கள் கூறுவன யாவும் உண்மைதான். ஆனால், அக் கஷ்டங்கள் இல்லாதபடி நாம் செய்தாக வேண்டும். கிராமவாசி களுக்கு இருக்கும் குறைபாடுகளே இல்லாத உண்மையான கிராம வாசிகளாக நாம் இருக்க வேண்டும். நாம் அப்படி இருப்போ

மானல், யோக்கியமாக உடலை உழைத்துப் பாடுபடுகிறவர் தனது வாழ்க்கைக்குப் போதுமானதைச் சம்பாதித்துக்கொள்ளு வதில் எந்தக் கஷ்டமும் இராது என்பது நிச்சயம். ஆனால், 'எனக்குத் தாயாரும் விதந்துகளாகிவிட்ட மூன்று சகோதரிகளும் இருக்கிறார்கள். ஒரு சகோதரன் இருக்கிறான். அவன் பாரிஸ்ட ராவதற்கு அவனை இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டும். இன்னு மொரு சகோதரன் மூயிர் கல்லூரியில் படித்துக்கொண்டிருக் கிறான். மூன்றாமவனை இந்திய ராணுவக் கலாசாலைக்கு அனுப்ப வேண்டியிருக்கிறது' என்று யாரும் என்னிடம் வந்து சொல்லாம லிருக்கட்டும். அப்படிப்பட்ட 'வாழ்க்கைக்கு' வேண்டியதைக் கிராமத்தில் உழைப்பது கொடுக்காது என்பதுநிச்சயமே. ஆனால், ஒரு விவசாயியின் வீட்டிலிருக்கும் எல்லோரும் எப்படி உழைத்து வருகிறார்களோ அதே போல ஓர் ஊழியரின் குடும்பத்தைச் சேர்ந் தவர்கள் எல்லோரும் உழைப்பதாக இருந்தால், ஒருவரின் குடும் பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் நியாயமாக ஜீவிப்பதற்குப் போதுமானதைச் சம்பாதித்துவிட முடியும்.

"முதலாளிகளுக்கும் தொழிலாளருக்கும் அவரவர் நலனைப் பொறுத்த வரையில் தகராறு இருந்துவருகிறது. ஆனால், நாம் நம் கடமையைச் செய்துகொண்டு போவதன் மூலம் அத்தகரா றைப் போக்க வேண்டும். சுத்தமான ரத்தம் இருக்குமிடத்தில் எப்படி விஷக் கிருமிகள் பாதிப்பதில்லையோ அதே போலத் தொழிலாளர்கள் சுத்தமாக இருக்கும்போது அவர்களைச் சுரண்டி விட முடியாது. உழைப்பும் மூலதனமே என்பதைத் தொழி லாளர் இன்னும் அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. தொழி லாளர்கள் சரியான கல்வியைப் பெற்று, தங்களுக்குள் ஒற்றுமை அடைந்து, தங்கள் பலத்தையும் அவர்கள் அறிந்துகொண்டு விட்டவுடனே, எவ்வளவு பெரிய மூலதனமும் அவர்களை ஒடுக்கி விட முடியாது. ஒன்றுபட்டு, புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளும் தொழிலாளர், தங்கள் நிபந்தனைகளின்படி முதலாளி நடந்தாக வேண்டும் என்று வற்புறுத்த முடியும். நாம் பலவீன மாக இருப்பதனால், இன்னொருவர் மீது வஞ்சம் தீர்த்துக்கொள் ளப் பிரதிக்ஞை கொள்ளுவதில் பயனில்லை. நாம் பலமடைய வேண்டும். திடமான உள்ளமும், விஷயமறிந்த மூளையும், விரும்பி உழைக்கும் கரங்களும் என்ன கஷ்டங்கள் நேர்ந்தாலும் சமாளித்துத் தடைகளையெல்லாம் நீக்கிக்கொண்டுவிடமுடியும். 'உம்மைப் போலவே அயலாரையும் நேசி' என்பது பூரணத்துவத் திற்கு யோசனை அல்ல. முதலாளி எவ்வாறு தொழிலாளருக்கு அண்டையிலிருப்பவரோ அதே போல முதலாளிக்கும் தொழிலா ளர் அண்டையிலிருப்பவர்களாவர். ஒருவர் இன்னொருவர் விரும்பியளிக்கும் ஒத்துழைப்பை நாடிப் பெற வேண்டும். பணிந்து கிடந்து சுரண்டப்படுவதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது இக்கொள்கையின் பொருள் அல்ல. நமக்குள்

இருக்கும் பலம், எல்லா விதமான சுரண்டல்களையும் அசாத்திய மானதாக்கிவிடும்.''

—'ஹரிஜன்' – 1—3—1935

[இது ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய 'வாராந்திரக் குறிப்புகள்' என்ற பகுதியில் 'ஒரு பொது ஊழியரின் கஷ்டங்கள்' என்ற தலைப்புடன் முன்னால் வெளிவந்தது.]

# 15

# திட்டமான யோசனைகள்

“ஆண்டுருஸூம் மற்றவர்களும் அங்கே இருந்து நிலைமையைச் சமாளித்து வருகின்றனர். அவர்கள் மூலம் நான் நிலைமையை அறிந்து வருகிறேன் என்றாலும், இந்தச் சங்கடத்தைக் குறித்து நான் வேண்டுமென்றே எதுவும் சொல்லாமலிருந்து வருகிறேன். அது என்ன ஆகப் போகிறது என்பது எனக்குத் தெரியாது என்பதைச் சொல்லுவதற்காகவே அச்சங்கடத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறேன். முதலாளிகளைவிட்டுப் போய்விடும்படி தொழிலாளரைச் செய்வதற்காக என் பெயரை யாராவது உபயோகிப்பார்களானால், நான் வருத்தமே அடைவேன். அங்கே இருப்பது வெறும் தொழிலாளர் கஷ்டமே என்பது தெளிவானது. முதலாளிகள், தொழிலாளரின் சம்பளத்தைக் குறைத்து விட்டார்கள் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. இக்கஷ்டமெல்லாம் முற்றிலும் பொருளாதார சம்பந்தமானதே என்றும், கூலிகளுக்கு அதிகக் குறைகள் இருந்து வருகின்றன என்றும் ஸ்ரீ தாஸூம் ஸ்ரீ ஆண்டுருஸூம் அறிவிக்கிறார்கள். புதிய சீர்திருத்தத்தின்படி அமைந்திருக்கும் அரசாங்கம் அதைச் சமாளிக்கத் தவறிவிட்டது என்று தெரிகிறது. இந்தியாவிலிருக்கும் ஆங்கிலத் தொழில் ஸ்தாபனங்களுடன் விரோதத்தை உண்டாக்கி விடுவதற்காக இக்கஷ்டத்தை 'டைம்ஸ் ஆப் இந்தியா' மிகவும் அக்கிரமமாக உபயோகிக்கிறது என்பதைக் காண்கிறேன். ஒத்துழையாமைக்காரர் மீது துவேஷத்தைக் கிளப்பிவிடுவதே இப்பொழுது நாகரிகமாகிவிட்டது. இனத் தகராறுகளையும் கலவரங்களையும் ஒத்துழையாமையே தடுத்திருக்கிறது. மக்களின் கோபத்தைச் சரியான வழியில் திருப்பியும் விட்டிருக்கிறது என்று நான் துணிந்து கூறுவேன். ஒரு நலனையுடையவர்கள், ஓர் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக யாருக்கும் துன்பம் விளைவிப்பதில்லை என்பதுதான் ஒத்துழையாமையின் நோக்கம். ஒவ்வொரு நலனையுடையவர்களிடமிருக்கும் தீமையான, அசுத்தமான தன்மையைப் போக்குவது என்பதுதான் அதன் நோக்கம். அநீதி அல்லது இந்திய வளர்ச்சிக்கு விரோதமான மிருக பல அடிப்படையில் இருந்துவரும் ஒவ்வோர் ஆங்கில, இந்திய

நலனும் சந்தேகத்திற்கு இடமின்றி ஆபத்தில் இருந்து வரு கின்றன. மக்களின் நல்லெண்ணத்தினலல்லாமல் மிருக பலத்தைக்கொண்டு மாத்திரம் ஆதரிக்கப்பட்டு வரும் ஒவ் வொரு நலனும் ஒத்துழையாமைப் போராட்டத்தில் சாகாமல் தப்பிப் பிழைக்க முடியாது. இந்தியத் தொழிலாளரை ஏய்த்துச் சுரண்டுவதனல் அஸ்ஸாம் தோட்ட முதலாளிகள் வாழ்ந்து வரவில்லை என்ருல், அவர்கள் பயப்பட வேண்டியது எதுவும் இல்லை. மனச்சாட்சி ஒப்புக்கொள்ள முடியாத கொள்ளை லாபத்தைப் பெறும் காலம் இனி இல்லை என்ற ஒரு சமயம் வந்தே தீரும். பெரிய தொழில் ஸ்தாபனங்கள் அடையும் லாபம், தொழிலாளர்கள் பெறும் ஊதியத்திற்குப் பொருத்த மானதாக இருக்க வேண்டும். ஒத்துழையாமையைத் துப்பாக்கி முனை எதுவுமே செய்துவிட முடியாது என்பதை நான் அறிவேன். அதனலேயே இந்தத் திட்டமான யோசனைகளைக் கூறுகிறேன். ஒத்துழையாமை இந்தியரின் உள்ளத்தில் ஆழமாக நிலைபெற்று விட்டது. சமயம் வந்துவிடும்போது, என்னைப் போன்ற ஊழியர்கள் போய்விடுவார்கள். ஆனல், ஒத்துழையாமை இருந்துகொண்டிருக்கும். தொழிலாளருக்கும் முதலாளிகளுக்கும் இருக்க வேண்டிய உறவை நியாயமான அடிப்படையில் ஒழுங்கு படுத்துவதற்கு வேண்டிய ஆற்றல் இருப்பதற்கான புத்திசாலி களாக இந்தியாவின் தொழிலாளர் வர்க்கத்தினர் இன்னும் ஆகி விடவில்லை என்பதையும் நான் அறிந்தே இருக்கிறேன். ஆனல், அந்தக் காலம், நாம் எண்ணியதைவிட அதிக வேகமாக வந்து கொண்டிருக்கிறது. நம் மத்தியில் ஏற்பட்டுவரும் புதிய விழிப் பையும், புதிய சக்தியையும் முதலாளிகள், அவர்கள் இந்தியரா னலும் ஐரோப்பியரானலும், உணர்ந்து நடந்துகொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்.

—'எங் இந்தியா' – 8—6—1921

[முன்னல் 'குறிப்புகள்' என்ற பகுதியில் 'அஸ்ஸாம் கூலிகள்' என்ற தலைப்பில் வெளியானது.]

## 16

# மத்தியஸ்தரும் மிருக பலமும்

கோல்மூரி டின்பிளேட் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைக் குறித்து அபிப்பிராயம் கூறும்படி காங்கிரஸ் காரியக் கமிட்டி கேட்கப்பட்டிருக்கிறது. எனவே, இரு தரப்பின் கட்சிகளை அறிந்து ஓர் அபிப்பிராயத்திற்கு வர சௌகரியமாக இருப்பதை முன்னிட்டு முதலாளிகளுடன் கடிதப் போக்குவரத்து நடத்தி, அந்த விவரங்களை அடுத்த கூட்டத்தில் வைக்கும்படி காரியக் கமிட்டி, காரியதரிசிக்கு அறிவித்திருந்தது. பண்டித ஜவாஹர்

லால் நேரு உடனே முதலாளிகளுடன் கடிதப் போக்குவரத்து நடத்தி, இப்பொழுது விரிவான குறிப்பையும் தயாரித்திருக்கிறார். வேலை நிறுத்தம் சரியா, இல்லையா என்பது பற்றி நான் எதுவும் கூறுவதற்கில்லை. உண்மையைப் பற்றிய விஷயங்களில் கூட முதலாளிகளுக்கும், வேலை நிறுத்தத்தின் பிரதிநிதிகளாக இருப்பவர்களுக்குமிடையே முக்கியமான கருத்து வேற்றுமை இருந்து வருகிறது என்பதைக் கடிதப் போக்குவரத்திலிருந்தும் குறிப்பிலிருந்தும் காண்கிறேன். இதில் ஒரு விஷயம் மிகவும் முக்கியமானது. நாட்டின் செலவில் அதிகப் பாதுகாப்புகள் அளிக்கப்பட்டிருக்கும் ஒரு தொழிற்சாலையிலேயே இப்பொழுது தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். இத் தொழில் தேசத் தொழில், தொழிலாளர்கள் நன்றாக நடத்தப் படுகிறார்கள், அதன் தன்மையைப் பொறுத்தவரையில் இத் தொழில் ஆதரவுக்கு உரியது என்ற நம்பிக்கையின் பேரிலேயே காங்கிரஸ் மெம்பர்கள் பாதுகாப்புத் தீர்வை விதிப்பதற்கு ஆதரவளித்தார்கள். ஆகையால், இதுபோன்ற ஒரு தொழிலின் விஷயத்தில் அக்கறை கொள்ள காங்கிரஸ் கடமைப்பட்டிருக்கிறது. தொழிலாளரின் முக்கியமான கோரிக்கைகளாவன :

1. குறைகளைக் குறித்து விசாரிக்க பாரபட்சமற்ற கமிட்டி ஒன்று இருக்க வேண்டும்.

2. வேலை நிறுத்தம் செய்ததற்காக யாரையும் வேலையிலிருந்து நீக்கக்கூடாது.

3. மறியல் செய்தது போன்றவைகளுக்காக வேலை நிறுத்தக்காரர்கள் பேரில் கோர்ட்டில் நடந்துவரும் வழக்குகளை வாபஸ் வாங்கிக்கொண்டுவிட வேண்டும்.

இதுவரையில் முதலாளிகள் தங்கள் இஷ்டம் போல் காரியங்களைச் செய்து வந்திருக்கிறார்கள். பலம் பொருந்திய பர்மா ஷெல் கம்பெனியும், ஷா வாலஸ் கம்பெனியும் அம்முதலாளிகளுக்குப் பிரதிநிதிகளாக இருக்கின்றனர். எவ்வளவு நஷ்டம் வந்தாலும் தாங்கிக்கொள்ள அவர்களால் முடியும். மத்தியஸ்தத்திற்கு அவர்கள் தயாராயில்லை, பணமும் கௌரவமும் தங்களுக்கு அளிக்கக்கூடிய சக்தியையே அவர்கள் நம்பியிருக்கிறார்கள் என்பதை என் முன்னால் இருக்கும் கடிதப் போக்குவரத்து காட்டுகிறது. அசாதாரணமான இந்த வேலை நிறுத்தம் நடந்து வரும்போது பட்டாணியர் குறுக்கிட்டதும், மற்றும் அநேக காரியங்களும் இவ்விஷயத்தை அதிகச் சிக்கலானதாக்கியிருக்கின்றன. ஆகையால், இதைப் பற்றிய நுணுக்கங்களைக் குறித்துப் பொது மக்கள் கவலைப்பட்டுக்கொள்ள வேண்டியதில்லை. அவசரப்பட்டு வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள் என்பதில் மறைந்து கொண்டுவிட முதலாளிகள் பார்க்கிறார்கள். அது விதிகளைப் பற்றிய ஒரு சமாதானமேயன்றி வேறல்ல. ஆகையால், தொழிலாளர்கள் அறிவித்திருக்கும் நியாயமான கோரிக்கைகள்

விஷயத்திலேயே பொதுஜன அபிப்பிராயம் கவனம் செலுத்த வேண்டும். தங்கள் கோரிக்கைகளைப் பொது மக்கள் அப்படியே ஏற்றுக்கொண்டுவிட வேண்டும் என்று அவர்கள் சொல்லவில்லை. வேலை நிறுத்தத்திற்கு முன்னால் இருந்த நிலைமை இருந்தாக வேண்டும் என்ற வழக்கமான நிபந்தனையுடன் தங்கள் குறைகளைக் குறித்து விசாரிப்பதற்குப் பாரபட்சமற்ற விசாரணைக் கமிட்டியை நியமிக்க வேண்டும் என்பதற்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்றுதான் பொதுஜன அபிப்பிராயத்தை அவர்கள் கேட்டுக்கொள்ளுகிறார்கள். இதில் மாறுபாடான அபிப்பிராயங்கள் இருப்பதற்கில்லை. முதலாளிகளும், தொழிலாளரும் எப்பொழுதும் அமைதியோடு வாழ வேண்டுமானால், முதலாளிகளின் பலமான இணைப்பு, மத்தியஸ்த முடிவுக்கு வருவது என்ற கொள்கையை ஒப்புக்கொண்டாக வேண்டும்.

—'எங் இந்தியா' – 19—9—1929

[முன்னால் 'குறிப்புகள்' என்ற பகுதியில் வெளியானது.]

# பின்சேர்க்கைப் பகுதி



1. சோஷலிஸம் பற்றி மகாத்மாவின் கருத்துக்கள்.
2. ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுக்கும் சர்தார் பட்டேலுக்கும் மகாத்மா எழுதிய கடிதங்கள்.
3. சர்வோதயம் ['கடையனுக்கும் கதி மோட்சம்']

# சோஷலிஸம் பற்றி மகாத்மாவின் கருத்துக்கள்

(பியாரிலால் எழுதியது)

ஏழை பணக்காரன், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பேதமற்ற வர்க்கமில்லாத சமத்துவமான சமூகத்தில் திடமான நம்பிக்கையுள்ளவர் காந்திஜி. சில விஷயங்களில் அவர் வைதிக சோஷலிஸ்டுகளையும்விட இன்னும் மேலே போய்விட்டார். சமூகத்திற்குப் பயனுள்ளதான உடலுழைப்பைச் செய்யும் கடமையிலிருந்து அவர் யாருக்கும் விதிவிலக்கு அளிக்கத் தயாராயில்லை. ''ஒரு மனிதன் உழைக்கவில்லையானால் அவன் சாப்பிடவும் கூடாது'' என்றார். மேலும், எல்லா வேலைக்கும்—உடலை உழைக்கும் வேலைக்கும் மூளை வேலைக்கும்—சமமான ஊதியமே இருக்க வேண்டும் என்றும் கூறினார். ஆனால், இப்பொழுதுள்ள பிரச்னைகள் சம்பந்தமாக சோஷலிஸ்டுகள் கொண்டிருக்கும் தத்துவங்களை ஏற்றுக்கொள்ள காந்திஜி மறுத்துவிட்டார். ''யாரும் நல்லவராக இருக்க வேண்டிய அவசியமில்லாதபோது, சிறந்ததான முறைகளைக் கனவு காண்பதனால்'' மாத்திரமே சமூகத்தை மாற்றியமைத்துவிட முடியும் என்பதையும் அவர் நம்பவில்லை. ஆனால், இதற்கு மாறாக, சலுகைகளைத் தானே துறப்பதுதான் சலுகைகளை ஒழித்துவிடுவதற்குள்ள ஒரே வழி என்றும் அவர் அதிக திடமாக நம்பினார். 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூலில் கண்ட கொள்கையை அனுபவத்தில் கையாண்டதன் மூலம் பெற்றதே அவருடைய சோஷலிஸம். அவர் சோஷலிஸ்டு என்று கூறிக்கொள்ளுவதை வைதிக சோஷலிஸ்டுகள் ஆட்சேபித்தார்கள். ஆனால், அவர்களைவிடத் தாம் சிறந்த சோஷலிஸ்டு என்று காந்திஜி கூறிவந்தார். ஏழைகளுடனும் தாழ்ந்த நிலையிலிருப்போருடனும், திக்கற்றவர்களுடனும் தம்மை ஒன்றுபடுத்திக்கொண்டு, அவர்களுடைய கஷ்டங்களைத் தாமும் பகிர்ந்துகொண்டு அவர் தமது வாழ்நாள் முழுவதும் சோஷலிஸத்தை அனுபவத்தில் செய்துகாட்டி வந்தார். ஆனால், தாங்கள் சோஷலிஸ்டுகள் என்று சொல்லிக்கொண்டிருப்பவர்களோ, சோஷலிஸத்தைக் குறித்துக் கனவு காண்பதோடும் பிதற்றுவதோடும் திருப்தியடைந்து இருக்கின்றனர். 'எல்லோரும் மாற்றப்படும்வரை' என்று சொல்லித் தங்கள் பழைய சுலப வழியிலேயே வாழ்ந்துகொண்டும் இருக்கிறார்கள்.

''சோஷலிஸக் கொள்கை புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது அல்ல'' என்று காந்திஜி பீகாரில் தங்கியிருந்தபோது தமது சகாக்களில் ஒருவரிடம் கூறினர். ''அது கீதையில் காணப்படுகிறது. கண்டிப்பான நம் தேவைக்கு அதிகமானது எதையும் நாம் வைத்துக்கொள்ளக்கூடாது; ஆனால், ஜீவனத்திற்கானதைக் கடவுளின் சிருஷ்டிகள் எல்லாவற்றுடனும் சமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதுதான் அதன் பொருள். இந்த லட்சியத்தை அடைவதற்குப் பெரிய ஸ்தாபனம் எதுவும் தேவையில்லை. தனிப்பட்ட யாரும், தன்னிலிருந்தே ஆரம்பிப்பதன் மூலம் அதை அனுசரிக்க ஆரம்பிக்கலாம். கண்டிப்பாகத் தனக்கு வேண்டியதற்கு அதிகமாக எதையும் தான் வைத்துக்கொள்ளாததுதான், முதலாவதாக வேண்டிய காரியம். இதன்படி, சொந்தத்திற்குப் பாங்கில் பணம் போட்டு வைத்துக்கொள்ளுவது இக்கொள்கைக்கு விரோதமானதாகும். தன் வாழ்க்கையைக் கண்டிப்பாகவும், இடைவிடாமலும் கண்காணித்து வருவது அத்தியாவசியமான முதல் காரியம். தனிப்பட்டவர் ஒருவர் மாத்திரமே இக்கொள்கையைத் தன்னளவில் முற்றிலும் அமுலுக்குக் கொண்டுவந்து விடுவாரானல், அது சமூகம் முழுவதிலும் பரிணமிக்கும்படி செய்ய முடியும். தம்முடைய சொந்த சொத்துக்கும் ஆற்றலுக்கும் ஒருவர் தருமகர்த்தா என்பதன் உண்மையான பொருளில் தருமகர்த்தா ஆகிவிடுவதுதான் உண்மையான சோஷலிஸம். ஆனல், இன்றோ மற்றவர்களுடைய சொத்துக்களைப் பலவந்தமாகப் பறித்துக்கொண்டுவிடுவதுதான் சோஷலிஸம் என்பதன் பொருளாகக் கருதப்படுகிறது. இது உண்மையான சோஷலிஸத்திற்கே விரோதமானதாகும்'' என்றார்.

சில நாட்கள் கழித்துப் பதினைந்து மாணவர்களைக் கொண்ட ஒரு கோஷ்டியினர் காந்திஜியைப் பார்க்க வந்தார்கள். அன்று திங்கட்கிழமை; அவர் மௌன விரதத்தை அனுஷ்டித்தார். அக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் தாங்கள் சோஷலிஸ்டுகள் என்று கூறிக்கொண்டனர். அவர்கள் கேட்ட கேள்விக்குப் பதிலைக் காந்திஜி துண்டுக் காகிதங்களில் எழுதிக்கொடுத்தார். சோஷலிஸத்தை அடைவதற்குச் செய்ய வேண்டிய முதல் காரியம். உடலை உழைத்து வேலை செய்வதில் இருக்கும் சோம்பலையும் வெறுப்பையும் விட்டுவிடுவதுதான் என்று காந்திஜி எழுதிக் காட்டினர். ''உங்களில் எத்தனை பேருக்கு வீட்டில் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள் என்பதை முதலில் எனக்குச் சொல்லுங்கள்'' என்றும் கேட்டார். மொத்தத்தில் ஒவ்வொருவர் வீட்டிலும் ஒரு வேலைக்காரனாவது இருக்கிறான் என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். காந்திஜி கூறியதாவது : ''மற்றவர்களை அடிமைகளாக உங்களுக்கு வேலை செய்துவரும்படி நீங்கள் செய்துகொண்டிருக்கும்போது, நீங்கள் சோஷலிஸ்டுகள் என்று சொல்லிக்கொள்ளுகிறீர்கள்! இது விசித்திரமான சோஷலிஸம்தான். இது எனக்குப் புரியவே இல்லை என்று

தான் சொல்ல வேண்டும். நான் சொல்லுவதை நீங்கள் கேட்ப தானல் உங்களுக்கு ஒன்று சொல்லுவேன். நீங்கள் எந்த இஸத் திலும் சேராதீர்கள் என்பதுதான் நான் சொல்லக்கூடியது. ஒவ்வோர் இஸத்தையும் பற்றி ஆராயுங்கள். அவற்றைக் குறித் துச் சிந்தியுங்கள்; கிரகித்துக்கொள்ளுங்கள். அவற்றில் எது உங்களுக்குப் பிடிக்கிறதோ அதை நீங்களே நடைமுறையில் அனுஷ்டிக்கமுயற்சி செய்யுங்கள்; ஆனல், உங்களுக்குப் புண்ணிய மாகப் போகிறது, எந்த இஸத்தையும் ஸ்தாபிக்க மாத்திரம் முற்படாதீர்கள். சோஷலிஸத்தை நடைமுறையில் கொண்டு வருவதற்கு முதலில் செய்ய வேண்டிய காரியம், உங்கள் கைகளை யும் கால்களையும் உபயோகிப்பது. சமூகத்திலிருந்து பலாத் காரத்தையும் சுரண்டலையும் ஒழித்துவிடுவதற்கான ஒரே நிச்சய மான வழி அதுதான். நம்முள்ளேயும், நம்மைச் சுற்றிலும் பட்டினி யும் வேலையில்லாத் திண்டாட்டமும், உயர்வு தாழ்வு என்ற வித்தி யாசமும் இருந்து கொண்டிருக்கும் வரையில், சோஷலிஸத்தைப் பற்றிப் பேச நமக்கு உரிமையே கிடையாது."

பிறகு காந்திஜி நடைமுறையிலான சோஷலிஸத்திற்கு அடிப்படையான பாடத்தையும் அவர்களுக்குச் சொன்னர்: '(1) காலையில் நீங்கள் எழுந்ததும் உங்கள் படுக்கையை நீங்களே சுற்றி வையுங்கள். (2) காலை ஆகாரத்தைத் தயாரிப்பதற்கும், பரிமாறுவதற்கும் உதவி செய்யுங்கள். (3) வீட்டைப் பெருக்கிச் சுத்தம் செய்வதற்கு உதவுங்கள். (4) உங்கள் துணிகளை நீங்களே துவைத்துக்கொள்ளுங்கள்; (5) பாத்திரங்களைத் தேய்த்துச் சுத்தம் செய்வதற்கு உங்கள் தாய்மார்களுக்கும் சகோ தரிகளுக்கும் உதவி செய்யுங்கள். (6) உங்களுக்கு வேண்டிய துணியை நீங்களே தயாரித்துக்கொள்ளுவதற்காக நூல் நூற்று வாருங்கள். (7) உங்கள் புத்தகங்கள், காகிதங்கள் ஆகியவை களைச் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வையுங்கள் (8) ஐம்பது ரூபாய் விலையுள்ள பவுண்டன் பேனவை உபயோகிப்பதற்குப் பதிலாக இரண்டணு பேனக் கட்டையையும் நிப்பையும் உபயோ கியுங்கள்.'

பேசிக்கொண்டிருப்பதற்கும், மற்றவர்களுக்கு உபதேசித் துக்கொண்டிருப்பதற்கும் பதிலாக அவர்கள் இந்த வழியில் சோஷலிஸத்தை அனுஷ்டித்துக்கொண்டு வருவார்க ளானல், தாங்களே முதலில் அதற்கு மாறியவர்களாகி உடனடியாகப் பக்கத்திலிருப்பவர்களைக் கொண்டும் சோஷலிஸ சமூகத்தை அவர்கள் அமைக்க முடியும் என்று காந்திஜி முடிவாக அவர் களுக்குச் சொன்னர். "அப்பொழுது சோஷலிஸத்திற்கு நீங்கள் யாரையும் மாற்றவேண்டியதில்லை. நீங்கள் நடந்து காட்டும் மாதிரி ஒன்றே அதைச் செய்துவிடும். அது மாத்திரமல்ல, நீண்ட காலமாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் உங்கள் பெற்றோ ருக்கும் நல்ல கஷ்ட நிவாரணத்தை இது அளிக்கும். அவர்களுக் குச் சுமையாகவும் நீங்கள் இருந்து வரமாட்டீர்கள்."

★ ★ ★

காங்கிரஸ் சோஷலிஸ்டுகளிடம் காந்திஜிக்குப் பிரியம் உண்டு. வர்க்கமில்லாத சமூகத்தை அமைக்க வேண்டும் என்ற வேலைத் திட்டம் அவருக்கு அதிகமாகப் பிடித்திருந்தது. என்றாலும், அதை அடைவதற்கு அவர்கள் தவறான வழிகளில் போய்க்கொண்டிருக்கிறார்கள் என்று அஞ்சினார். நாட்டில் மாறுதல் அடைந்திருக்கும் நிலைமையில் அதை அடைவதற்கான முதல் வழி, வகுப்பு, தேசீய ஒற்றுமையை அடைவதற்காக எல்லோரும் பாடுபட்டு, தேசம் முழுவதற்குமான நன்மைக்காக ஒன்றுபட்டு உழைப்பதாகும். சந்தர்ப்பங்கள் மாறிவிட்டன; சந்தர்ப்பங்கள் மாறியதற்கு ஏற்றாற்போல் அவர்களுடைய முறைகளும் மாற வேண்டும். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அவர்கள் அனுஷ்டித்துக்கொண்டு வந்த நாச வேலை, வர்க்கப் போர், தடைகளை உண்டாக்குவது போன்ற பழைய, பயனில்லாத, உருப்படாத முறைகளையே பிடிவாதமாக அனுஷ்டித்துக்கொண்டிருக்கக்கூடாது.

சுதந்திரம், அதனளவில் இந்தியாவில் புதிய சுவர்க்கத்தையோ, புதிய பூமியையோ கொண்டு வந்துவிடாது என்று காந்திஜி அவர்களுக்கு எச்சரிக்கை செய்தார். என்ன தடைகளினால் நாம் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தோமோ அந்தக் கஷ்டங்களைச் சுதந்திரம் போக்கி, உண்மையான ஆக்க வேலை முயற்சிக்கு அது வழியை விடும். இந்தியாவைப் பிரிவினை செய்யும் திட்டம் வெளியாக இருந்த சமயத்தில், (1947 மே 27-ஆம் தேதி) காங்கிரஸ் சோஷலிஸ்டுகளில் ஒரு கோஷ்டியினர், காந்திஜியை டில்லியில் பார்ப்பதற்காக வந்தார்கள். சோஷலிஸ்டு சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்பதில் உண்மையிலேயே அவர்கள் சிரத்தையுள்ளவர்களாக இருந்தால், கிராமங்களுக்குப் போய்க் கிராம மக்களிடையே குடியிருந்து, அவர்கள் வாழ்வது போன்றே வாழ்ந்து, அவர்களோடு தினம் எட்டு மணி நேரம் வேலை செய்து, கிராமத்தில் உற்பத்தியாகிறவைகளை மாத்திரமே உபயோகித்துக்கொண்டு, அவர்களுடைய படிப்பின்மையையும் தீண்டாமையையும் போக்கி, தங்கள் அந்தஸ்தை உயர்த்திக்கொள்ளுவதற்குப் பெண்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று காந்திஜி அவர்களுக்குக் கூறினார். "நீங்கள் விவாகமாகாதவர்களாக இருந்து விவாகம் செய்துகொள்ள விரும்பினால், கிராமத்துப் பெண்களையே மணந்துகொள்ளுங்கள்." இவைகளையெல்லாம் அவர்கள் மனப்பூர்வமாகவும், காரியத்தில் யோக்கியமாகவும் செய்து வருவார்களானால், உதாரணமாக அவர்கள் நடந்து காட்டுவதிலிருந்து எழுவது பொதுமக்களையும் மாற்றும். இதுவே காங்கிரஸ்காரர்களுக்கும் பொருந்தும். என்றாலும், ஒரு விஷயத்தைச் சோஷலிஸ்டுகள் மறந்துவிடக்கூடாது என்றார், காந்திஜி. காங்கிரஸில் என்னதான் குறைபாடுகள் இருந்தாலும், உண்மையான தேசீயத் தன்மை வாய்ந்த ஒரே ஸ்தாபனம் காங்கிரஸ் என்றார். எந்தக் கட்சி, அல்லது கோஷ்டியுடனும் அது சேர்ந்துகொள்ளவில்லை. வெறும் காகிதத்

திட்டமாக இல்லாமல், வேலை செய்து தீருவதற்கான திட்டம் ஒன்றைக் கிராம அபிவிருத்திக்காக அவர்கள் தயாரிப்பார்களானல், காங்கிரஸ் அரசாங்கம் அவர்களுக்கு ஆதரவு அளிக்கும்; பண்டித நேருவும்கூட அவர்கள் புகழைப் பாடிக்கொண்டிருப்பார் என்ருர், காந்திஜி. என்ருலும், வகுப்புவாதம் நமக்குச் சவால் விட்டுக்கொண்டு நம் கண் முன்னல் ஆபத்தாக இருந்து வரும்போது, அதில் முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டியிருக்கையில், சோஷலிஸ்டுகள் வேலை நிறுத்தங்களைத் தூண்டிவிடுவதில்தான் முக்கியமாக ஈடுபட்டு வருகிருர்கள் என்பதையே தாம் காண்பதாகவும் கூறினர். பிரிட்டிஷாருக்கு எதிரான போராட்டத்தில் ராஜீய வேலை நிறுத்தங்களை நடத்துவது சரி; ஆனல், நம் சொந்த நாட்டினருக்கு எதிராகவே வேலை நிறுத்தங்களை நடத்துவது என்ருல், அது கொஞ்சமும் பொருத்தமில்லாதது என்ருர். அதிகாரத்திலிருப்பவர்களுடன் அதிகாரத்திற்காகப் போட்டி போடுவதாயின், அதிகாரத்திலிருப்பவர்களைவிட ஆற்றலில் தாங்கள் மேலானவர்கள், தன்னலத் தியாகத்தில் உயர்வானவர்கள், அதிகமாகச் சேவை செய்பவர்கள் என்பதை அவர்கள் நிரூபிக்க வேண்டும். இப்பொழுது இருந்துவரும் பரபரப்புகளை இன்னும் அதிகரிப்பதோ, அல்லது புதியதாக உண்டாக்குவதோ எந்த வகையிலும் கூடாது. "உங்களுக்குத் திறமை, அறிவு, சக்தி, தேசாபிமானம் ஆகியவை இருக்கின்றன. இவற்றை யெல்லாம் கிராமவாசிகளுக்கு அளியுங்கள். ஜீவனை அளிக்கும் ஆக்க வேலைகளின் மூலம் சோஷலிஸம் என்ற சொல்லின் உண்மையான பொருளில் கிராமவாசிகளுக்குப் போதியுங்கள். கிராமவாசிகள் தங்கள் இஷ்டம் போல் காரியத்தைச் செய்ய முற்பட்டுத் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்ளும் பாதையில் இறங்கிவிடுவதற்கு முன்னல் இதைச் செய்யுங்கள். அப்பாதையில் அவர்கள் போய்விடுவார்களானல், அது உங்களுடைய கடைசி நிலையையும் அவர்களுடைய கடைசி நிலையையும் முதல் நிலையைவிட அதிக மோசமானதாக்கிவிடும்" என்ருர். மேலும் கூறியதாவது: "நான் கூறும் இதை நீங்கள் இன்று புரிந்துகொள்ளாமலிருக்கலாம். ஆனல், ஒரு நாளைக்கு நான் போய்விட்ட பிறகு இதை நீங்கள் புரிந்துகொள்ளுவீர்கள். இதுவரையில் நம் மக்கள் வாயில்லாதவர்களாகவும் குருடர்களாகவும் இருந்து வந்திருக்கிருர்கள். கையைப் பிடித்துப் பிறர் இட்டுச் செல்லத் தங்களை அனுமதித்தும் வந்திருக்கின்றனர். ஆனல், சுற்றிலும் பார்க்காமல் போவீர்களானல், உங்களுடைய பிரசங்கங்களைக் கேட்க யாருமே இல்லாத சமயம் ஒன்று வந்துவிடும். வெற்று வெளிக்குத்தான் நீங்கள் பிரசங்கம் செய்துகொண்டிருக்க வேண்டியிருக்கும். ஏனெனில், தாராளமாகச் செய்யும் உபதேசங்களைக்கொண்டு சமூகம் வாழ்ந்துவிட முடியாது. வேண்டியது செயலேயன்றிப் பேச்சுக்கள் அல்ல."

காந்திஜியின் ஆக்க வேலைகள் திட்டம், சமூகத்திலுள்ள ஏற்றத் தாழ்வைப் போக்குவதற்கு உதவி செய்யும் என்பதைச்

சோஷலிஸ்டு நண்பர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஆனல், அது மக்களின் 'வாழ்க்கைத் தரத்தை' உயர்த்துவதற்கு உதவி செய்யாது என்ற காரணத்தைக் கூறி அவ் வேலைத் திட்டத்தை அவர்கள் ஆட்சேபித்தார்கள். வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்ற அவர்கள் லட்சியத்தைக் காந்திஜியும் ஒப்புக் கொண்டார். ஆனல், இதற்குச் சில எல்லைகள் உண்டு என்ருர். முதலில் ஆகவேண்டியது முதலில் வரவேண்டும். உதாரணமாக அவர் கலையை விரும்புகிறவர். எல்லாக் குழந்தைகளுக்கும் நாட்டியத்திலும் சங்கீதத்திலும் பயிற்சி அளித்துவிட வேண்டும் என்றே ஆசைப்படுகிருர். ஆனல், இவைகளெல்லாம் வாழ்க்கை யோடு இணைந்து ஒன்ருகிவிட்டனவாக இருக்கவேண்டுமேயன்றி தனியாக வெளியில் இருப்பவைகளாக இருக்கக்கூடாது. மக்களின் ஒழுக்க நிலையைப் பலவீனப்படுத்துவனவாக இருக்கும் எல்லாக் கலைகளையும், கலாசார நடவடிக்கைகள் என்று சொல் லப்படுகிறவைகளையும் தயக்கமின்றித் தடுத்துவிடுவேன் என்ருர். அதே போல, தீமை விளைவிக்கும் ஆடம்பரங்கள் வேண்டாம் என்பார். சாப்பிடுவதால் பழக்கமாகிவிடும் மருந்துகளை யெல்லாம் அதிக வரி போட்டுத் தடுத்துவிடுவார். எல்லா ஜவுளி மில்களையும், சக்தியைக்கொண்டு அரைக்கும் மாவு மில்கள், எண்ணெய் மில்கள் ஆகியவைகளையும் நிறுத்திவிடுவார். ஆனல், ஒவ்வொரு கிராமமும், அதற்கு அத்தியாவசியமாகத் தேவை யானவைகளை, அதாவது உணவு, துணி, பால், காய்கறிகள், பழங்கள் ஆகியவைகளைத் தானே உற்பத்தி செய்துகொள்ளும் படியும், இவை ஒவ்வொருவருக்கும் போதுமான அளவு கிடைக் கும்படியும் செய்வார். தனக்குத்தானே உதவி செய்துகொள்ளு வதற்கு ஊக்கமளிப்பதற்காகப் பரிசுகளையும் விருதுகளையும் தாம் வழங்குவார் என்றும், இந்த வகையில் உதாரணமாக விளங்கும் கிராமங்களுக்குச் சில வரிகளிலிருந்து விலக்கு அளிப்பார் என்றும் காந்திஜி சொன்னர்.

காந்திஜி மேலும் கூறியதாவது: "யந்திரத் தொழில் சகாப்தத்தின் போலியான வாழ்க்கை, ஆண்கள் பெண்களின் சக்தியை உறிஞ்சிவிட்டது. அதன் முன்னல், இதற்கு முன்பு என்றுமே கண்டறியாத அசாதாரணங்களை உண்டாக்கியதன் மூலம், விஞ்ஞானத்தின் பலனைப் பெரும்பாலும் வீணக்கிவிட்டது. குழந்தைப் பருவத்தைக் குறித்து எனக்கு இருக்கும் நினைவைக் கொண்டு, நான் பிறந்த மாகாணமான கத்தியவாரின் பெண்ணைக் குறித்த சித்திரத்தை நான் வரைய முடியும். அவள், சூரியன் உதயமானதும் தண்ணீர் கொண்டுவர ஆற்றுக்குப் போவாள், காலைச் சூரியனின் இளம் கதிர்கள் தனது உடலில் படுவதால் பலனை அடைவாள். பிறகு வயலுக்குப் போய் வேலை செய்து தேகாரோக்கியத்தை அடைவாள். பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டே வீட்டில் மாவைத் திரிகையில் அரைப்பாள். இது அவள் உடலுக்கும் உள்ளத்திற்கும் சக்தியை அளிக்கும். வேலை செய்வதே இன்பமாக இருந்தது. ஓய்விலும், சினிமாக்

களும் நாடகங்களும் அளிக்கும் உணர்ச்சியினுலும் நிவாரணம் அளிக்கப்பட வேண்டிய, அலுப்புத் தட்டிப் போகும் வேலைகள் அல்ல அவை. நான் இந்தியாவின் பிரதம மந்திரியாக இருந்து, என் இஷ்டம் போல் செய்யவும் முடிந்தால், நான் உங்களுக்குக் கொடுக்கக்கூடிய ஒரே நாடக, சினிமாக் கொட்டகை, நூற்பு வேலை நடக்கும் கொட்டகைதான்!'' என்று சொல்லிக் காந்திஜி சிரித்தார்.

''ஆனல், இந்தியாவின் பிரதம மந்திரியாக நீங்கள் ஆவதை யார் தடுக்கிறுர்கள்? பிரதம மந்திரியாக இருக்க நீங்கள் முன் வருவீர்களானல், உங்களை யார் எதிர்ப்பார்கள் ?'' என்று அவர்களில் ஒருவர் கேட்டார்.

காந்திஜி: ''முதலில் நீங்கள்தான் எதிர்ப்பீர்கள்!''

  

சோஷலிஸம் இல்லாத ஜனநாயகத்திற்கு அர்த்தமே இல்லை என்று சோஷலிஸ்டுகள் விவாதித்தனர். செல்வத்தைச் சமமாக விநியோகிக்க வேண்டும் என்ற லட்சியத்தில் அவர்கள் கூறியதை ஏற்றுக்கொண்ட காந்திஜி. இன்னும் ஒரு படி மேலேயும் போனர். கலப்பில்லாத அகிம்சைச் சூழ்நிலை இருந்தாலன்றி, ஜனநாயகத்தையோ, அன்றிச் சோஷலிஸத்தையோ அடைந்துவிட முடியாது என்றுர். அவர்களுடைய முறைக்கும், தரத்தைப் பற்றி மதிக்கும் அவர்கள் எண்ணத்திற்கும், இவை சம்பந்தமான தம் கருத்துக்கும் வித்தியாசம் இருக்கிறது என்பதைக் காந்திஜி மறைத்ததே இல்லை.

இத்தகைய விவாதம் ஒன்று நடந்துகொண்டிருக்கையில் ஒரு சமயம் லூயி பிஷர், ''ஆனல், நீங்கள் சோஷலிஸ்டு. அதே போலவே அவர்களும்'' என்றுர்.

அதற்குக் காந்திஜி கூறியதாவது: ''நான் சோஷலிஸ்டு. ஆனல், அவர்கள் அல்ல...அவர்கள் சோஷலிஸம் செத்துவிட்ட பிறகும் நான் கூறிக்கொள்ளும் சோஷலிஸம் உயிருடன் வாழ்ந்து வரும்.''

''உங்கள் சோஷலிஸம் என்கிறீர்களே, எதை அப்படிச் சொல்லுகிறீர்கள்?''

''குருடர்கள், செவிடர்கள், ஊமைகள் ஆகியோர் மடிந்து அவர்கள் சாம்பலின் மேலெழ நான் விரும்பவில்லை. அவர்களுடைய சோஷலிஸத்தில் இவர்களுக்கெல்லாம் இடமில்லாமலிருக்கும்...என்னுடைய சுயத்தன்மையை முற்றிலும் வெளிக்காட்டுவதற்கு வேண்டிய சுதந்திரத்தை நான் விரும்புகிறேன். ஸிரியஸுக்குப் படிக்கட்டுகளைக் கட்ட நான் விரும்பினுலும் அப்படிக் கட்டுவதற்கு எனக்குச் சுதந்திரம் வேண்டும். அவர்களுடைய

சோஷலிஸத்தில் தனிப்பட்டவரின் சுதந்திரம் என்பதே இல்லை. உங்களுக்கு எதுவும் சொந்தமல்ல. உங்கள் உடலோ, தனிப்பட்ட உங்கள் இஷ்டமோ கூட உங்களுக்குச் சொந்தம் அல்ல.''

''ஆம். ஆனால், வித்தியாசங்களும் இருக்கின்றன. எல்லாவற்றையும் தனக்குச் சொந்தமானதாக அரசாங்கம் கொண்டிருக்காது என்பதே திருத்தப்பட்ட வகையில் என்னுடைய சோஷலிஸத்தின் பொருளாகும்.''

  

முன் கூட்டியே முடிவுக்கு வந்துவிட்ட தத்துவங்களிலும், பொதுப்படையாகக் கூறுவதிலும் காந்திஜிக்கு இருந்த இதே நம்பிக்கையின்மைதான் மார்க்ஸிஸம் சம்பந்தமாக அவர் கொண்டிருந்த போக்கிலும் இருந்தது. கடைசியாக காந்திஜி புனாவில் சிறைப்பட்டிருந்தபோது மார்க்ஸிஸ நூல்களையெல்லாம் விரிவாகப் படித்த பிறகு அவர் கூறியதாவது: ''மார்க்ஸுக்கு இருந்த கல்வித் திறமை எனக்கு இல்லை. அது மாத்திரம் எனக்கு இருக்குமானால், மார்க்ஸ் தத்துவத்தைக் குறித்து மார்க்ஸைவிட இன்னும் நன்றாக நான் எழுதியிருப்பேன்.''

மார்க்ஸ் தத்துவ விளக்க நூல் ஒன்றின் உள்ளே இருந்த காகிதத்தில் காந்திஜி, ''ஒவ்வொருவருக்கும் எல்லாம்; ஒவ்வொருவரும் எல்லோருக்கும்'' என்று எழுதியிருந்தார். ''அவன் சக்திக்கு ஏற்றபடி ஒவ்வொருவரிடமிருந்தும், அவன் தேவைக்கு ஏற்றபடி ஒவ்வொருவனுக்கும்'' என்றும் எழுதினார். அவர் கருத்துப்படி இதுதான் மார்க்ஸின் உபதேசம். என்றாலும், லட்சியத்தை அடைவதற்கு மார்க்ஸின் முறை ஒரே முறையோ, சிறந்த முறையோ அல்ல.

மார்க்ஸின் தத்துவத்தில் சில அம்சங்களைக் குறித்துக் காந்திஜியின் கருத்தைத் தெரிந்துகொள்ள முயன்றேன். நான் கேட்டேன்: ''சமூக அற்புதத்தைப் புரிந்துகொள்ளுவதற்கு, சரித்திரத்திற்கும் அறிவைப் பற்றிய லோகாயதத் தத்துவத்திற்கும் மார்க்ஸ் கூறியிருக்கும் பொருளாதார வியாக்கியானம் மிகச் சிறந்த உதவியல்லவா?''

இதை மேலும் விளக்கிச் சொல்லும்படி காந்திஜி என்னைக் கேட்டார். நான் கூறியதாவது: ''நமது கொள்கைகள், ஸ்தாபனங்கள், ஒழுக்கத்தைப் பற்றிய தரங்கள், இலக்கியம், கலை, பழக்கங்கள், மதமும்கூட, நமது பொருளாதாரச் சூழ்நிலையிலிருந்து வந்தவை என்று மார்க்ஸ் நமக்குக் காட்டியிருக்கிறார்.''

காந்திஜி கூறியதாவது: ''நமது கொள்கைகள், ஒழுக்கத்தைப் பற்றிய தரங்கள், மதிப்புகள் ஆகியவை முற்றிலும் தமது லோகாயதச் சூழ்நிலையிலிருந்து வந்தவை, அதற்கு வெளியே அவற்றிற்குப் பூரணமான அடிப்படை எதுவுமே இல்லை என்பதை

நான் ஒப்புக்கொள்ளவில்லை. இதற்கு மாருக, நமது சூழ்நிலை எப்படி ஆகிறதோ அதன்படி நாம் இருக்கிறோம்.''

''காரியத்தோடுகூடிய கையின் நடவடிக்கை, நமது எண்ணத்தை உருவாக்குவதோடு நமது முழுத் தன்மையையுமே உருவாக்குகிறது என்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டே நமது அடிப்படைக் கல்வி வார்தாத் திட்டம் அமைக்கப்பட்டிருக்கிறதல்லவா? இது, மார்க்ஸ் கூறியிருக்கும் அறிவைப் பற்றிய லோகாயத தத்துவத்திற்குக் கிட்டத்தட்ட ஒத்து இருக்கிறதல்லவா?''

''ஆனல், உழைக்கும் கரத்தை அடியோடு போக்கிவிட்டு அதற்குப் பதிலாக அவ்விடத்தில் யந்திரத்தைப் புகுத்த வேண்டும் என்று மார்க்ஸின் தத்துவம் விரும்புகிறது. அவருக்குக் கை பயனில்லை. மார்க்ஸ் கூறுகிறபடி, மனித உழைப்பை நம்பி இருப்பதுதான், தொழிலாளி கதியற்றவனாகவும், அடிமையாகவும் ஆனதற்கு அறிகுறியும், மூலகாரணமும் ஆகும். இந்த நிலையிலிருந்து மனிதனை உயர்த்துவது யந்திரத்தின் வேலை. இதற்கு மாருக நானே, யந்திரம் தொழிலாளியை அடிமைப்படுத்துகிறது, கையைப் புத்திசாலித்தனமாக உபயோகிப்பதனால்தான் அவன் சுதந்திரம் அடைவதோடு சந்தோஷத்தையும் அடைய முடியும் என்கிறேன்.''

''அது உண்மையே. ஆனல்...''

காந்திஜி தொடர்ந்து கூறியதாவது: ''எண்ணத்தை மூளையின் கழிவைப் போன்றது என்று மார்க்ஸ் கருதுகிருர். மனத்தை 'லோகாயதச் சூழ்நிலையின் பிரதிபிம்பம்' என்றும் கருதுகிருர். இதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. பொருளுக்கும் மனத்திற்கும் மேலாகக் கடவுள் இருக்கிருர். ஜீவனை அந்தக் கொள்கை என்னுள் இருக்கிறது என்பதை நான் அறிந்திருக்கும் வரையில், என் மனத்தை யாரும் மாற்றிவிடவே முடியாது. உடலை அழித்துவிடலாம். ஆனல், ஆன்மா அதன் சுதந்திரத்தை முழங்கும். இது எனக்குத் தத்துவம் அல்ல; அனுபவத்தில் கண்டுகொண்டிருக்கும் உண்மை இது.''

நான் வருமாறு கேட்டேன்: ''தனிப்பட்ட ஒருவர், லோகாயதச் சூழ்நிலைக்கு அப்பாற்பட்டவராக இருக்கலாம். ஆனல், வர்க்க நடத்தைதான் முக்கியமாக அதனல் நிர்ணயிக்கப்படுகிறது என்பதை மார்க்ஸியவாதிகள் ஒப்புக்கொள்ளுகிருர்கள். பொருளாதாரச் சூழ்நிலை மாற்றப்பட்டாலன்றி அது மாற முடியாது. முதலாளியை மாற்றுவதற்கு முதலாளித்துவ முறையை அழித்தாக வேண்டும்.''

இதற்குக் காந்திஜி கூறியதாவது: ''தனிப்பட்டவரால் செய்ய முடிந்ததையே ஒரு வகுப்பு மக்கள் எல்லோருமே

செய்யும்படித் தூண்டிவிட முடியும். இதெல்லாம் சரியானதான ஒரு முறையைக் கண்டுபிடிப்பதைப் பொறுத்த விஷயம். பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினரிடையே மனமாற்றத்தை உண்டாக்கிவிடும் நோக்கத்துடன் நாம் நடத்திய அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமை இயக்கம் முழுவதுமே, இந்த நம்பிக்கையின் அடிப்படையில் உண்டானதேயாகும். வர்க்கப் போராட்டப் பிரச்னைக்கு என்னுடைய பதில், தருமகர்த்தாக் கொள்கை."

பிறகு சரித்திரத்தின் பொருளாதார நோக்கத்தைப் பற்றிய மார்க்ஸிய தத்துவத்திற்குப் போய்விட்டேன். முதலாளித்துவ முறையில் தனிப்பட்டவருக்குச் சொத்துரிமை என்பது இருப்பதன் விளைவாக யுத்தங்கள் தவிர்க்க முடியாதவைகளாக இருந்து வரும். இதில் ஒன்றைக் காந்திஜி நிராகரித்தார், மற்றொன்றை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அவர் கூறியதாவது: "இல்லை, பொருளாதார விஷயம் மாத்திரம் அன்று. சம்பவங்களின் போக்கை-அச்சம்பவங்களைச் செய்யும் மனிதரின் எண்ணங்களில்கூட-முடிவில் ஆட்சி செலுத்துவது கண்களுக்குப் புலனாகாதிருக்கும் சக்தியாகிய கடவுளேயாகும். ஹிட்லர் இன்று இறந்துவிடுகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது அச்சாவு இப்பொழுதுள்ள சரித்திர சம்பவத்தையே அடியோடு மாற்றிவிடும். அதே போல, ஒரு பூகம்பத்தினாலோ அல்லது அது போன்ற இயற்கை விளைவினாலோ முதலாளிகள் எல்லோருமே அழிந்து போய்விடுகிறார்கள். என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது சரித்திரத்திற்குப் பொருளாதார விளக்கம் கூறுகிறவர்கள் கனவுகூட கண்டறியாத வகையில், வர்க்கப் போராட்டத்தின் சரித்திரமே மாறுதல் அடைந்துவிடும். சேம்பர்லேனுக்குப் பதிலாக இன்னும் அதிக சக்தி வாய்ந்த ஒருவர் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாக இருந்திருந்தால் இப்பொழுது நடந்து வரும் யுத்தத்தின் சரித்திரமே வேறு மாதிரியாக இருந்திருக்காதா? அல்லது சேம்பர்லேன் தமக்கு ராஜீய வீரம் இல்லை என்பதைக் காட்டிக் கொள்ளாமலிருந்தால், இந்த யுத்த சரித்திரம் மாறானதாக இருந்திருக்காதா?"

குறுக்கிட்டு நான் கூறியதாவது: "யுத்தம் இல்லாதபடி செய்ய வேண்டுமானால், தனிப்பட்டவர் சொத்து இருப்பது என்ற முறையையே நாம் ஒழித்தாக வேண்டியது அவசியமாகிறது என்று மார்க்ஸியவாதிகள் கூறுகிறார்கள். அகிம்சை வாழ்க்கை வழிக்குச் சொத்து பொருத்தமில்லாதது என்று நீங்களும் எங்களுக்குப் போதித்திருக்கிறீர்கள்."

காந்திஜி: "ஓரளவுக்கு மாத்திரமே இது உண்மைதான். டிரோஜன் போருக்கு டிராயின் ஹெலன் காரணம் அல்லவா? ரஜபுத்திரர்களின் யுத்தங்கள், தனிச் சொத்துரிமை முறைக்குச் சம்பந்தமுடையவைகளா? இல்லை.

யுத்தமே இல்லாதபடி செய்துவிடுவதற்கு நாம் செய்ய வேண்டியது இன்னும் அதிகம் இருக்கிறது. உடைமையில் ஆசை, பேராசை, காம வெறி, தான் என்ற அகம்பாவம் ஆகியவைகளை நம் உள்ளங்களிலிருந்து அடியோடு போக்கி விட வேண்டும். சமூகத்திலிருந்து யுத்தத்தைத் தடுத்து விடுவதற்கு நாம் நம்முள்ளேயே போரை நடத்தவேண்டும்.''

என் வாதத்தின் போக்கை மாற்றிக்கொண்டேன். ''மார்க்ஸ் சொல்லியிருக்கும் பரிகாரங்கள் தவறானவை என்பது உண்மையே. ஆனால், பிரச்னையைச் சரியானபடி புரிந்துகொள்ளுவதற்கும், அதற்கான சரியான பரிகாரங்களைக் கண்டுபிடிப்பதற்கும்; சமூகத்தைப் பாதித்திருக்கும் இன்னதென்று விளங்காத நோய் என்ன என்பதைக் கண்டுகொள்ள மார்க்ஸ் கூறியிருப்பதை நாம் பயன்படுத்திக் கொள்ளக்கூடாதா? உதாரணமாக, படிப் படியாக மெள்ள முன்னேறுவதைப் பற்றிய அவர் கருத்தை எடுத்துக்கொள்ளுவோம். சமூகத்தில் தீவிரமான மாறுதலை உண்டாக்குவதற்குப் பார்லிமெண்டரி நடவடிக்கையால் மாத்திரம் பயனில்லை; நேரடியான நடவடிக்கை அவசியம் ஆகியவை பற்றிய அவர் கருத்தையும் பார்ப்போம். சிறுபான்மையினரின் சர்வாதிகாரம் வெறுக்கத்தக்கதேயாயினும் ஒரு வகையில் அவருடைய தத்துவத்தையுங்கூட எடுத்துக்கொள்ளுவோம். ஒரு முறையானது மொத்தத்தில் சமூகத்திற்குத் தீமையானதாக இருக்குமாயின், சிறு சீர்திருத்தம் புரட்சியைக் கொன்றுவிடு கிறது, அதற்குள்ள ஒரே பரிகாரம் ஒத்துழையாமைதான் என்று நீங்களும் எங்களுக்குப் போதித்து வந்திருக்கிறீர்கள். அதோடு முடிவாக, சரியான நடவடிக்கையின் உதவியும் இருந்தாலன்றி நியாயத்தை எடுத்துக் கூறுவது மாத்திரம் போதாது என்றும் எங்களுக்குப் போதித்திருக்கிறீர்கள். ஒவ்வொரு சீர்திருத்தக் காரரும் ஒரு வகையில் சர்வாதிகாரியாகவே இருக்க வேண்டியது அவசியமாவதோடு, ஒவ்வொரு சீர்திருத்த ஸ்தாபனமும் சர்வாதி காரம் அல்லவா? ஒரு சீர்திருத்தக்காரர், முன்னால் வழிகாட்டி நடத்திச்செல்ல வேண்டியவராக இருப்பதால், பெரும்பான்மை யோருக்கு முன்கூட்டியே அவர் போக வேண்டியிருக்கிறது. பெரும்பான்மையோரின் ஆட்சிக்கு அவர் எப்படி உடன்பட முடியும்? ஒரே ஒரு சரியான நடவடிக்கை, அதாவது பலாத் காரம்—பலம் ஒன்றுதான் மார்க்ஸுக்குத் தெரியும் என்பதுதான் நான் சொல்லுவது. அகிம்சை நடவடிக்கையை அல்லது சத்தி யாக்கிரகத்தையும் அதன் சக்திகளையும் மார்க்ஸ் அறிந்திருப்பா ரானால், பலாத்காரத்திற்குப் பதிலாக அவர் இதையே மேற் கொண்டிருப்பார். நம் காலத்திலேயே யந்திரத்தொழில் நீராவி யிலிருந்து எண்ணெய்க்கும் மின்சாரத்திற்கும் மாறிக்கொண்டு வருகிறது.''

காந்திஜி: ''ஒரு வகை சக்தியைக்கொண்டு இயங்கி வந்த யந் திரங்களை, மற்றோர் சக்தியைக்கொண்டு இயக்குவதற்கான

வகையில் மாற்றுவதைவிட அந்த யந்திரங்களையே எடுத்து விட்டுப் புது யந்திரங்களை அமைப்பதே எப்பொழுதும் அதிகச் சிக்கனமானது என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். இந்த விஷயத்தில் அகிம்சைக்கும் பலாத்காரத்திற்கும் இருக்கும் வித்தியாசம் அடிப்படையானது. மார்க்ஸின் தத்துவத்தின் வேரையே துண்டிப்பதாக இது இருக்கிறது. அஸ்திவாரத்தை நீங்கள் மாற்றுவதானல், மேலே இருக்கும் கட்டடம் முழுவதையுமே நீங்கள் மாற்றியாக வேண்டும்.''

''நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அகிம்சையை நீங்கள் கீதையிலிருந்து கிரகித்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய அகிம்சையோடு கூடிய ஒத்துழையாமைக்கு மார்க்ஸின் விளக்கத்தில் பலமான ஆதரவு இருப்பதாகக் காண்கிறேன்'' என்றேன்.

காந்திஜி: ''கீதைக்கு நான் கூறும் வியாக்கியானத்தை, அகிம்சையில் நம்பிக்கையில்லாதவர்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கிருர்கள். அகிம்சையில் நம்பிக்கை இருப்பவர்களுக்கோ, என் வியாக்கியானம் தேவை இல்லை. மார்க்ஸ் தத்துவத்திற்கே நீங்கள் கூறும் வியாக்கியானம், அத்தத்துவத்திற்கே விரோதமானது என்று தீவிர மார்க்ஸியவாதிகள் சொல்லி விடுவார்கள். நீங்கள் கூறுவது அவர்களுக்குப் பிடிக்காது.''

''லோகாயத தேவைகளைத் திருப்தி செய்துகொள்ளுவது தான் தங்களுடைய முடிவான லட்சியம் என்று மார்க்ஸியவாதிகள் எண்ணுகின்றனர். அவர்கள் விரும்பும் அந்தச் சுவர்க்கத்தை இப்பூவுலகில் அடைந்துவிடுவதாக இருந்தாலும், அதனல் மனித வர்க்கத்திற்குத் திருப்தியோ, சாந்தமோ ஏற்பட்டுவிடாது. மார்க்ஸியவாதிகளுடன் எனக்கு இருக்கும் தகராறெல்லாம் இதுதான். ஆனல், மார்க்ஸியத்திலுள்ள சிறந்தவைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு நமது சமூக நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ளுவதற்கு அவற்றை மாற்றிக்கொண்டுவிட முடியாதா என்றுதான் ஆச்சரியப்படுகிறேன்'' என்றேன்.

மேலும் சில விவாதங்களுக்குப் பிறகு காந்திஜி கூறியதாவது: ''மார்க்ஸ் தத்துவத்தின் மீது இதை உங்கள் சொந்த வியாக்கியானமாக நீங்கள் சொல்லிவரலாம். ஆன்மிகப் பயிற்சி இல்லாதவர்கள், சத்தியாக்கிரகத்தை அனுசரிப்பதற்கு ஆதாரங்களை அளிப்பதாக அது அமையவும் கூடும்.'' மார்க்ஸ் தத்துவத்தில் நல்லவைகளாக இருப்பவை, அதற்கு அசலானவையோ, தனித்தன்மை வாய்ந்தவையோ அல்ல; அதற்குத் தனித் தன்மை வாய்ந்ததாக இருப்பவை நல்லவையாகவே இருக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை என்பது காந்திஜியின் நிலை. அதிலிருந்து அவரைப் பெயர்த்துவிடவே என்னல் முடியவில்லை. சிறிது நேரம் கழித்து அவர் மேலும் கூறியதாவது: ''மார்க்ஸ், மனித வர்க்கம் முழுவதையும் ஒன்ருகக் கருதியிருக்கிருர். வர்க்கப் பிரிவினைகளுக்கெல்லாம் அப்பாற்போய் ஒடுக்

கப்பட்டுக் கிடக்கும் ஏழைகளான உலகப் பாட்டாளிகளின் கட்சியில் தம்மை ஒருமைப்படுத்திக் கொண்டிருக்கிறார். இது தான் மார்க்ஸின் உபதேசங்களை ஜீவனுள்ளவையாக்கியிருக் கிறது. ஆனால், இப்படிச் செய்திருப்பது அவர் மாத்திரம் அல்ல. அவரைப் போலவே மற்றவர்களும் அதையே தான் செய்திருக் கிறார்கள்.''

சமூகத்தின் பூரணமான சாத்திரத்தை மார்க்ஸ் கண்டு பிடித்துவிட்டார், லட்சிய பூர்வமான தகுதியுடையதும் சமூகத் தீமைகளைப் போக்குவதுமான நியதிகளை அவர் கண்டுபிடித்து விட்டார் என்பதைக் காந்திஜி ஒப்புக்கொள்ளவில்லை. சில லட்சி யங்கள் விரும்பத்தக்கவை என்று மார்க்ஸ் எண்ணினார். அந்த லட்சியங்களை அடைவதற்கு ஆயுதத்தைக் காணும் முயற்சி மாத் திரமே மார்க்ஸின் முறை.

முடிவாக காந்திஜி கூறியதாவது: ''மார்க்ஸைக் குறித்து நாம் குறை கூறலாம். ஆனால், அவர் மிகப் பெரியவர் என்பதை யார் மறுக்க முடியும்? சமூகத் தீமைகளைக் குறித்து அவர் விவ ரித்திருப்பவையும், அவற்றிற்கு அவர் கூறியிருக்கும் பரிகாரங் களும் சரியானவைகளாக இருக்கலாம். சரியானவைகளாக இல்லாமலும் இருக்கலாம். அவருடைய பொருளாதார தத்து வங்களை நான் ஒப்புக்கொள்ளவில்லை. என்றாலும், ஏழைகள் நசுக்கப்பட்டு வருகிறார்கள் என்பதை மாத்திரம் நான் அறிவேன். இவ்விஷயத்தில் ஏதாவது செய்துதான் ஆக வேண்டும். இதை மார்க்ஸ் அவர் வழியில் செய்ய முற்பட்டிருக்கிறார். அவருக்கு ஆற்றலும், படிப்பும், அறிவும் இருக்கின்றன.''

* * *

வில்லியம் மாரிஸ், கலையின் மூலம் வேலை செய்து சோஷ லிஸத்தை அடைந்தவர். சமூகத்தில் ஏற்படும் புதிய ஒழுங்கு முறையில் தனிப்பட்டவருக்குச் சுதந்திரம், மன அமைதி, தன் கருத்தை வெளிப்படுத்துவதில் உள்ளத்தின் இன்பம், ஒற்றுமை ஆகியவைகளும் அதே சமயத்தில் இருக்கும்படிச் செய்யப்பட வில்லையானால், மனிதவர்க்கம் லோகாயத சுகங்களையும் ஓய்வையும் அடைவதனால் மாத்திரம் எந்தப் பிரயோசனமும் இல்லை என்று அவர் ஆணித்தரமாக விவரித்திருக்கிறார். உடலுழைப்பு, கலையை எடுத்துக்காட்டுவதற்கு உதவியாக இருப்பதேயன்றிக் கலைக்கு எதிரானது அல்ல என்கிறார் அவர். தொழிலாளரை மனிதத் தன்மையில்லாமல் நடத்தி, அதன் மூலம் உலக இன்பப் பொருள்களை உற்பத்தி செய்வதை அவர் வெறுக்கிறார். அரசாங் கத்திற்குச் சொந்தமானதாக்கி, உற்பத்தி முறையைக் குவிய லாக்குவதன் மூலம் சுபிட்சத்தை உண்டாக்க முற்படுவதனால் மனித வர்க்கத்தின் அமைதிக்கும் சுதந்திரத்திற்கும் எவ்விதம் ஆபத்து ஏற்பட்டுவிடுகிறது என்பதைக் காணும் நுண்ணறிவும் அவருக்கு இருந்தது. அவர் எழுதியிருப்பதாவது:

"வாழ்க்கையை ஒழுங்குபடுத்தும் பிரச்னையையும், அவசியமான உழைப்பையும் அதிகாரத்தை ஓர் இடத்தில் ஏராளமாகக் குவித்து வைப்பதன் மூலம் சமாளித்துவிடலாம் என்றும், தான் பொறுப்பு என்று யாரும் எண்ணுத வகையில் ஒரு வகை மந்திர சக்தியைக்கொண்டு வேலை செய்துவிடலாம் என்றும் நினைக்காத சோஷலிஸ்டுகளும் சிலர் இருக்கிருர்கள் என்பதைக் குறிப்பிட வேண்டியது அவசியம். இதற்கு மாருக, வேலையின் ஒவ்வொரு விவரத்திற்கும் தான் பொறுப்பு என்று ஒவ்வொரு பிரஜையும் எண்ணும் வகையிலும், அதில் அவர் சிரத்தை கொள்ளும் விதத்திலும் நிர்வாக அமைப்பு சிறியதாக இருக்க வேண்டியது அவசியம். தனிப்பட்ட மனிதர்கள், வாழ்க்கையின் வேலைகளையெல்லாம், அதிகாரத்தைப் பறிப்பதாக இருக்கும் அரசாங்கம் என்ற ஒன்றின் தோள்களில் போட்டுவிட்டு இருக்க முடியாது. ஆனல், அவ்வேலைகளை மனமாற ஒருவருக்கொருவர் கலந்துதான் செய்ய வேண்டும். நிலைமை சமமானதாக இருக்கவேண்டும் என்பதைப் போன்றே வாழ்க்கையில் பல தினுசுகள் இருப்பதும் உண்மையான கம்யூனிஸத்தின் நோக்கமாகும். இந்த இரண்டும் ஒன்றுபட்டால்தான் உண்மையான சுதந்திரம் ஏற்பட முடியும். இக்கால தேசீய இனங்கள் என்பவை யெல்லாம் வர்த்தகப் போராட்டத்திற்காகச் செய்யப்பட்டிருக்கும் உண்மையல்லாத உபாயங்களாகும். அவற்றை ஒழித்துவிடவே நாம் முற்பட்டிருக்கிரும். அவையெல்லாம் அதோடு மறைந்துவிடும். கலை என்ற சொல்லின் விசாலமான, அதற்குரிய தன்மைகளுடன் கவனித்தால், சுயேச்சையான, சந்தோஷமான மனிதர்கள் இல்லாமலும் இருந்துவிடக்கூடிய வெறும் சேர்க்கை மாத்திரம் அல்ல, கலை. ஆனல், மனிதரின் இன்பத்திற்கும், அவசியமான விளக்கத்திற்கும் இன்றியமையாத கருவியாக இருப்பதே கலை."

'பூலோக சுவர்க்கம்' என்ற புத்தகத்தைக் காந்திஜி படித்ததே இல்லை. என்றுலும், சோஷலிஸம் சம்பந்தமாகக் காந்திஜியின் கருத்தைச் சரியானபடி எடுத்துக் கூறுவதற்கு மேலே கூறப்பட்டிருப்பது அதிக உதவியாக இருக்கும். காந்திஜியின் கருத்துக்கும் மாரிஸின் கருத்துக்கும் இருக்கும் ஒற்றுமை இன்னும் அதிக ஆழமானது. சோஷலிஸத்தை அடைவதற்கு யுத்தங்களை நடத்துவதையும், எல்லா வகையான பலாத்காரங்களை உபயோகிப்பதையும் காந்திஜி வெறுப்பதைப் போன்றே மாரிஸும் வெறுக்கிருர். அடைய விரும்பும் லட்சியமும் அதற்காக உபயோகிக்கும் முறையும் ஒன்றுக்கொன்று விரோதமானதாக இருப்பதால், அத்தகைய முயற்சி தோல்வியில்தான் முடிவது நிச்சயம் என்ற உண்மையை அவர் தெளிவாகக் கூறுகிருர். "எல்லா யுத்தங்கள், பலாத்காரங்களிடம் எனக்குத் தரும வெறுப்பு இருந்து வருகிறது" என்று எழுதிய காந்திஜி, "அடுத்த புரட்சி, சமூக சம்பந்தமானதாகவே இருக்கும். அதற்குப் பலாத்காரம் அவசியமானதோர் பகுதியாக இல்லாமலிருப்பதற்கான வகையில் அது தனக்குத்

தானே வேலே செய்துகொண்டு, அப்புரட்சியை உண்டாக்கிக் கொள்ளுவதற்காக நல்லெண்ணம், நீதி ஆகியவற்றின் விதையை விதைப்பதையே என் கடமையாக்கிக் கொண்டிருக்கிறேன்'' என்ருர்.

சோஷலிஸ்டுகளுடன் காந்திஜி விவாதித்ததன் பேரில், இந்திய நிலேமைக்கு ஏற்றதான சோஷலிஸத்தைக் குறித்துக் காந்திஜி தமது முடிவான கருத்தைச் சுருக்கிக் கூறுவதோடு, அதை அடைவதற்கான வழியையும் சொல்ல வேண்டும் என்று அவர்கள் கேட்டார்கள். இதைக் காந்திஜி 1947 ஜுலேயில் 'ஹரிஜ'னில் இரு கட்டுரைகளின் மூலம் விளக்கினர்.

(அக்கட்டுரைகளே இத்தொகுப்பில் 138, 152-ஆம் பக்கங்களில் காண்க.)

லட்சியத்தின் தன்மையையும், அதை அடைவதற்கான கருவிகளிடம் இருக்க வேண்டிய தகுதிகளேயும் விளக்கிய காந்திஜி, அதை அடைவதற்கான உபாயங்களேப் பற்றி விவரித்தார்: "சோஷலிஸத்தில் சத்தியமும் அகிம்சையும் இருந்து வர வேண்டும். அவர்கள் அவ்விதம் செய்வதை முன்னிட்டுச் சோஷலிஸ சேவையில் ஈடுபட்டிருப்பவருக்குக் கடவுளிடம் ஜீவ நம்பிக்கை இருக்க வேண்டும். "சத்தியத்தையும் அகிம்சையையும் யந்திரம் போல் பின்பற்றுவது என்பது, நெருக்கடியான சமயம் வரும்போது முறிந்து போய்விடும்.'' காந்திஜி மேலும் கூறியதாவது:

"இதனுலேயே சத்தியமே கடவுள் என்று கூறுகிறேன். இந்தக் கடவுள் ஜீவனுள்ள சக்தி. அச்சக்தியைக்கொண்டதே நம் வாழ்க்கை. அந்தச் சக்தி உள்ளுக்குள் இருக்கிறது; ஆனல், உடல் அல்ல அது. மகத்தான இந்தச் சக்தி இருக்கிறது என்பதை மறுக்கிறவர், என்றும் வற்ருததான இந்தச் சக்தியின் உபயோகத்தைத் தனக்கு மறுத்துக்கொள்ளுபவராவதால் செயலற்றவராக இருக்கிருர். சுக்கான் இல்லாத கப்பல் காற்றடித்த பக்கமெல்லாம் போய், முன்னேறிப் போக முடியாமல் அழிவதைப் போன்று அவரும் ஆகிவிடுகிருர், இத்தகைய சோஷலிஸம் அவர்களே எங்கும் கொண்டுபோய்ச் சேர்ப்பதில்லே. அதோடு, இப்போது அவர்கள் வாழும் சமூகத்தைக் குறித்துச் சொல்லவே வேண்டியதில்லே.''

இதிலிருந்து இரட்டைக் கேள்விகள் எழுகின்றன: "கடவுள் நம்பிக்கையுள்ள சோஷலிஸ்டுகளும் இருக்கிருர்களல்லவா? அப்படிப்பட்டவர்களும் இருக்கிருர்கள் என்ருல், சோஷலிஸத்தை ஏன் அடைந்துவிடவில்லே? இதற்கு மாருக, தெய்வ பக்தியுள்ளவர்கள் அநேகர் இதற்கு முன்னுலும் இருந்திருக்கிருர்கள். எனினும் சோஷலிஸ்டு ராஜ்யத்தை அமைப்பதில் அவர்கள் ஏன் வெற்றியடையவில்லே?''

இத்தகைய சந்தேகங்கள் முழுவதையும் போக்கிவிடுவது கஷ்டமானதே என்பதைக் காந்திஜி ஒப்புக்கொள்ளுகிறார். இதற்கு அவர் ஒரு சமாதானம் கூறுகிறார். தமது சோஷலிஸத்திற்கும் கடவுள் நம்பிக்கைக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்பது தெய்வ நம்பிக்கையுள்ள சோஷலிஸ்டுக்கு என்றுமே தோன்றாமல் இருந்திருக்கக்கூடும் என்கிறார். இதற்கு மாறாக, "தெய்வ பக்தியுள்ளவர்கள் பொதுவாக சோஷலிஸத்தைப் பொது மக்களுக்கு எடுத்துக் கூறவே இல்லை என்றும் சொல்லலாம். தெய்வ பக்தியுள்ளவர்கள் இருந்தும் உலகத்தில் மூட நம்பிக்கைகள் அதிகமாக இருந்து வரவில்லையா?"

தெய்வப் பிறவிகளாக இருக்கும் சமூகத்தில்தான் சோஷலிஸம் வெற்றி பெற முடியும்; அத்தகையதோர் சமூகம் தோன்றிவிடும்போது சோஷலிஸத்திற்கு அவசியமே இருக்காது. இக்காலத்தில் கிளம்பியிருக்கும் இத்தகைய ஒரு போலி வாதத்திற்கு வில்லியம் மாரிஸ் பதிலளிப்பதாவது: "எந்த முறையினாலும் உலகம் பாதுகாக்கப்பட்டுவிடும் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஊழல்கள் வளர்ந்து போய்விட்ட சமூகத்தைத் தாக்க வேண்டியது அவசியம் என்று மாத்திரமே நான் வற்புறுத்துகிறேன்."

தன்னைத்தானே தோல்வியுறச் செய்துகொள்ளுவதாக இருக்கும் முறைகளை அனுசரிக்காமல் இதை எப்படிச் செய்ய முடியும் என்பதற்கான வழிகளை வில்லியம் மாரிஸ் வகுத்துக் கூறவில்லை. இந்த இடத்தில் இப்பிரச்னையைக் காந்திஜி எடுத்துக்கொண்டு அதற்குப் பதில் சொல்லியிருக்கிறார்.

"சத்தியமேயான கடவுளுக்கும், மனித வர்க்கத்தின் எல்லாப் பிரச்னைகளுக்கும் ஒரே திறவுகோலான சத்தியாக்கிரகத்திற்கு, நடுவேயுள்ளதும் உள்ளே கொண்டதுமான தொடர்பிலேயே இதற்குப் பதில் அடங்கியிருக்கிறது. சத்தியாக்கிரகத்திற்கான நியதிகள் இன்னும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. அவை முற்றிலும் கண்டுபிடிக்கப்பட்டுவிடும் போது, முழு சோஷலிஸம் ஏற்படுவதும் வெறும் பிரமையாக இல்லாமல் உறுதியான உண்மையாக இருக்கும்.

"உண்மை என்னவென்றால், இந்த மகத்தான சக்தியையும் அதில் பொதிந்து கிடக்கும் அபாரமான சாத்தியங்களையும் அறிவதற்கு இப்பொழுதே தீவிரமான ஆராய்ச்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. சத்தியாக்கிரகம் கண்டுகொள்ளப்பட்டிருப்பது அந்த ஆராய்ச்சியின் விளைவாக ஏற்பட்டதுதான் என்று நான் கூறுகிறேன். என்றாலும் சத்தியாக்கிரகத்தின் எல்லா நியதிகளும் விதிக்கப்பட்டுவிட்டன, அல்லது கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன என்று சொல்லிக்கொள்ளப்படவில்லை. சத்தியாக்கிரகத்தை உபயோகிப்பதன் மூலம் எல்லாவிதமான சிறந்த காரியங்களையும் அடைய முடியும் என்று அச்சமின்றியும், உறுதியோடும்

நான் கூறுகிறேன். அது மிக உயர்வான, தோல்வியறியாத உபாயம்; மிக உயர்ந்த சக்தி. வேறு எந்த உபாயத்தைக் கொண்டும் சோஷலிஸத்தை அடைந்துவிட முடியாது. ராஜீய, பொருளாதார, ஒழுக்க சம்பந்தமான எல்லாத் தீமைகளையும் சமூகத்திலிருந்து சத்தியாக்கிரகம் போக்கிவிடும்.''

# காந்திஜி, ஜவாஹர்லால் நேரு கடிதங்கள்

பர்னகுடி, புனா,
*செப்டம்பர் 13, 1933*

*எனது அன்புள்ள ஜவாஹர்லால்,*

*முற்றிலும் மனம்விட்டு நீங்கள் எழுதியிருப்பதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். 1931 இறுதியில் நான் லண்டனிலிருந்து திரும்பி வந்தபோது, என்னிடமிருந்து நீங்கள் பறித்துக் கொண்டு போகப்பட்டுவிட்டதைக் கண்டேன். அப்பிரிவு என் மனத்திற்கு அதிகக் கஷ்டமாக இருந்தது. ஆகையால், உங்களைச் சந்தித்து, கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ள வேண்டும் என்று அதிக ஆவலோடு இருந்தேன்.*

*உங்கள் கடிதத்தில் நீங்கள் கூறியிருக்கும் பல விஷயங்களை நான் பூரணமாக ஏற்றுக்கொள்ளுகிறேன். கராச்சி காங்கிரஸுக்குப் பிறகு ஏற்பட்ட அனுபவம், முக்கியமான தீர்மான விஷயத்திலும், நீங்கள் குறிப்பிட்டிருக்கும் பொருளாதாரத் திட்டம் சம்பந்தமாகவும், சாத்தியமானல் என் நம்பிக்கையைப் பலப்படுத்திவிட்டன. 'பூரண சுதந்திரத்திற்கு'க் குறைவான எதுவும் நமது லட்சியமாக இருக்க முடியாது என்பதில் என் மனத்தில் எந்த விதமான சந்தேகமும் இல்லை. பணமும் சலுகைகளும் பெற்றிருப்பவர்கள் விஷயத்தில் உருப்படியான மாறுதலைச் செய்தாலன்றிப் பாமர மக்களின் நிலையில் அபிவிருத்தியைச் செய்யவே முடியாது என்று நீங்கள் கூறுவதையும் நான் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளுகிறேன். நீங்கள் போகும் அளவுக்கு நான் போகாவிட்டாலும், ஒன்றை நானும் நம்புகிறேன். இந்தியா, ஒன்றுபட்ட ஐக்கிய நாடாக ஆவதற்கு முன்னல் சுதேச மன்னர்கள் தாங்கள் வகித்து வரும் அதிகாரங்களில் அநேகவற்றை விட்டுவிட்டு, இன்று அவர்கள் ஆண்டு வரும் மக்களின் பொதுஜன ஆதரவைப் பெற்ற பிரதிநிதிகளாக ஆக வேண்டும். வட்ட மேஜை மகாநாட்டைக் குறித்து நீங்கள் கூறும்*

அநேக விஷயங்களை, நேரில் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கொண்டு நான் அங்கீகரித்துக் கூற முடியும். போக்குவரத்துச் சாதனங்கள் தீவிரமாக முன்னேறி, மனிதவர்க்கத்தினர் யாவரும் ஒன்று என்ற உணர்ச்சி வளர்ந்து வரும் இக்காலத்தில் முன்னேறி வரும் சர்வ தேச உணர்ச்சிக்குப் பொருத்தமில்லாத தாக நம் தேசீய உணர்ச்சி இருந்துவிடக்கூடாது என்று நீங்கள் கூறுகிறீர்கள். உங்களுடைய இக்கருத்தை ஏற்றுக்கொள்ளுவ திலும் எனக்கு எந்தவிதமான கஷ்டமும் இல்லை. உலகத்தின் மற்றப் பகுதிகளில் நடப்பவைகளைக்கொண்டு பாதிக்கப்பட்டு விடாமல் இந்தியா தனித்து ஒதுங்கி நின்றுவிட முடியாது. ஆகையால், இதில் முழு அளவுக்கும் நான் உங்களுடன் வந்து, 'உலகத்தின் முற்போக்கான சக்திகளுடன் நாம் நம்மை இணைத்துக் கொண்டுவிட வேண்டும்' என்று நானும் கூறுகிறேன். ஆனால், லட்சியங்களை எடுத்துக் கூறுவதில் உங்களுக்கும் எனக்குமிடையே அதிக ஒருமைப்பாடு இருந்தபோதிலும், நமக்குள்ளே மனோபாவத்தைப்பற்றிய வித்தியாசங்கள் இருக்கின்றன என்பதை அறிவேன். எனவே, லட்சியத்தைக் குறித்துத் தெளிவாகக் கூறிவிட வேண்டியது அவசியம் என்று நீங்கள் வற்புறுத்துகிறீர்கள். ஆனால், ஒரு முறை அதை முடிவு செய்துவிட்ட பிறகு அதைத் திரும்பக் கூறுவது முக்கியம் என்று நான் நினைக்கவே இல்லை. அந்த லட்சியத்தை அடைவதற்கான உபாயத்தை அறிந்து, அதை உபயோகித்தாலன்றி, லட்சியத்தைக் குறித்துச் சாத்தியமான அளவு தெளிவாக விளக்கம் கூறுவதும், அதைப் பாராட்டுவதும் நம்மை அதனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கத் தவறிவிடும். இதனாலேயே உபாயத்தைச் சேகரிப்பதிலும், அதை மேலும் மேலும் உபயோகித்துக்கொண்டு போவதிலும், முக்கியமாக என் கவனத்தையெல்லாம் செலுத்தி வருகிறேன். இவைகளின் விஷயத்தில் நாம் கவனமாக இருந்துவருவோமானால், நமது லட்சியத்தை நிச்சயமாக நாம் அடைந்துவிடுவோம் என்பதை அறிவேன். லட்சியத்தை அடைவதற்கு நாம் மேற்கொள்ளும் உபாயங்கள் எவ்வளவு புனிதமானவைகளாக இருக்கின்றனவோ அந்த அளவுக்கு ஏற்றாற்போலவே லட்சியத்தை நோக்கி நாம் முன்னேறுவதும் இருக்கும் என்றும் நான் எண்ணுகிறேன். நாம் உண்மையோடு இருப்பதையும், நமது அகிம்சையையும் அதிக அளவில் எல்லோரும் அறியும்படி நாம் செய்து கொண்டுவிட முடிந்தால், உங்கள் கடிதம் தாக்குவதாகத் தோன்றும் நலவுரிமையுள்ளவர்களை, நமது தேசீய லட்சியத்தைப் பற்றிய நமது அறிவிப்பு அதிக காலம் பாதித்துவிடாது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். நம்முடைய முறைகள் ஒரு பாவமும் இல்லாதவை என்பதை உறுதிப்படுத்திவிட மாத்திரம் நம்மால் முடிந்துவிட்டால், சுதேச மன்னர்களும், ஜமீன்தார்களும், பாமரமக்களைச் சுரண்டுவதைக்கொண்டே வாழ்ந்து வருபவர்களும் நம்மைக் கண்டு பயப்படுவதையும், நம்மீது அவநம்பிக்கை கொள்ளுவதையும் விட்டுவிடுவார்கள். யாரையும் நிர்ப்

பந்தப்படுத்த நாம் முற்படவில்லை. அவர்கள் மன மாற்றம் அடையும்படி செய்யவே முயற்சிக்கிறோம். இம்முறை வெகுகாலம் பிடிக்கக்கூடியது என்று தோன்றலாம்; அதிக காலமாவதாக இருக்கவும் கூடும். ஆனால், இதுதான் அதிகச் சுருக்கமானது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

ஸ்ரீ ஆனேயின் அறிவிப்பையும், அதன் மீது நான் எழுதிய குறிப்பையும் குறித்து நீங்கள் கூறும் வியாக்கியானத்தை முக்கியமாக நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். அந்த அறிவிப்புகள் வெளியிடப்படாமலிருந்தால், உள்ளுக்குள் ஏற்படும் பலவீனத்தினால் சட்ட மறுப்பு இயக்கம் முழுவதுமே சிதைந்து போயிருக்கும் என்பதை நான் தெளிவாக அறிகிறேன். ஏனெனில், அவசரச் சட்ட ஆட்சி என்பது கட்டுப்பாடான பயங்கர ஆட்சியே யாகையால், அதன் கீழ் காங்கிரஸ் கமிட்டி வேலை செய்வது என்பது அசாத்தியமானதாகிவிட்டது. எனவே, சரியான வகையில் வேறு ஸ்தாபனங்கள் நடந்து வருகின்றன, வழி காட்டும் என்று அவைகளை எதிர்பார்க்கலாம் என்ற நம்பிக்கையைக் கொள்ளும் அளவுக்குக் காங்கிரஸ்காரர்கள் மோசம் போகத் தலைப்பட்டுவிட்டார்கள். ஸ்தாபனங்கள் நடப்பது சம்பந்தமான தவறான நம்பிக்கை சட்ட விரோதமானவையாக்கிவிட்டன. பெரும்பாலும் கையாலாகாதது, சீர்கேட்டை உண்டாக்கி விட்டது. இதைத் தடுத்தாக வேண்டியதாயிற்று. சட்ட மறுப்பைச் சரியான வகையில் அனுஷ்டித்தால், அதில் சீர்கேடு அடைவது என்பதற்கே இடமில்லை. எப்படியும் 'சட்ட மறுப்பு முக்கியமாகத் தனிப்பட்டவர்களைப் பொறுத்த விஷயமே' என்று நீங்கள் சரியாகவே கூறுகிறீர்கள். நான் இன்னும் ஒரு படி மேலே போய், 'சட்ட மறுப்பாளர் ஒருவர் சட்ட மறுப்புச் செய்து வரும் வரையில் இயக்கம் செத்துவிட முடியாது, முடிவில் அது வெற்றி பெற்றே தீரும்' என்று கூறுவேன். சட்ட மறுப்புச் செய்யும் தனிப்பட்டவர்களுக்கு ஒரு ஸ்தாபனத்தின் உதவி தேவையில்லை. தனிப்பட்டவர்கள் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்பதைத் தவிர ஸ்தாபனம் என்பதில் வேறு எதுவும் இல்லை. ஆகையால், ஸ்ரீ ஆனேயின் அறிவிப்புகள் அவசரச் சட்டங்களுக்குச் சரியான பதில். அந்த அறிவிப்புகளின் அவசியத்தையும் அதனுள் அடங்கியவைகளையும் காங்கிரஸைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் உணர்ந்திருப்பார்களானால், சட்ட மறுப்பாளர்களைப் பொறுத்த வரையிலாவது அவசரச் சட்டங்களைப் பயனற்றவைகளாக்கி இருக்கலாம். அவர்களைக் கேந்திரமாகக் கொண்டு, தோற்கடித்துவிட முடியாத சட்ட மறுப்பாளர்களின் பட்டாளத்தைத் திரட்டியிருக்க முடியும்.

தனிப்பட்டவர் சட்ட மறுப்புக்கும், பொதுஜன சட்ட மறுப்புக்கும் எந்த விதமான அடிப்படையான வித்தியாசமும் இல்லை என்று எண்ணுவதைக் குறித்து உங்களுக்கு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். 'முக்கியமாக அது தனிப்பட்டவரின் விஷயமே'

என்று நீங்கள் ஒப்புக்கொள்ளுவதிலேயே அடிப்படையான வித்தியாசம் அடங்கி இருக்கிறது என்று எண்ணுகிறேன். பொதுஜன சட்ட மறுப்புக்கும் தனிப்பட்டவரின் சட்ட மறுப்புக்கும் ஒரு முக்கியமான வித்தியாசம் இருக்கிறது. தனிப்பட்டவர் சட்ட மறுப்புச் செய்வதில், ஒவ்வொருவரும் சுயேச்சையான பகுதியாகின்றனர். அவருடைய தோல்வி மற்றவர்களைப் பாதிப்பதில்லை. பொதுஜன சட்ட மறுப்பிலோ, ஒருவர் தோல்வியுற்றாலும் அது மற்றவர்களையும் பாதிக்கிறது. மேலும், பொதுஜனங்கள் சட்ட மறுப்புச் செய்யும்போது தலைவர் இருப்பது அவசியம். தனிப்பட்டவர் சட்ட மறுப்புச் செய்யும்போது, அப்படிச் செய்யும் ஒவ்வொருவரும் அவருக்குத் தலைவர். அதோடு பொதுஜன சட்ட மறுப்பில் தோல்விக்குச் சாத்தியம் உண்டு. தனிப்பட்டவர் செய்யும் சட்ட மறுப்பிலோ, தோல்வி என்பதற்குச் சாத்தியமே இல்லை. கடைசியாக, பொது ஜனங்களின் சட்ட மறுப்பை ஓர் அரசாங்கம் சமாளித்துவிடலாம். ஆனால், தனிப்பட்டவர் செய்யும் சட்ட மறுப்பைச் சமாளித்து விட முடிந்த அரசாங்கம் எதையும் இதுவரை கண்டதில்லை.

தனது பலத்தை உணரும் ஒரு ஸ்தாபனம், தனது சொந்தப் பொறுப்பின் பேரில் பொதுஜன சட்ட மறுப்பை மேற்கொள்ளலாம் என்று நான் சொன்னதைக் குறித்தும் அவ்வளவாக மிகைப்படுத்த வேண்டியதில்லை. ஒரு கருத்து என்ற வகையில் விசேஷமானது அல்ல என்றாலும், இப்பாரத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கும் ஸ்தாபனம் எதுவும் இச்சமயத்தில் இல்லை என்பதை அறிவேன். பொய்யான நம்பிக்கைகளை உண்டாக்கிவிட நான் விரும்பவில்லை.

ரகசிய முறைகளைக் குறித்து இப்பொழுது கவனிப்போம். அவைகளை ஒதுக்கியே ஆக வேண்டும் என்பதில் எப்பொழுதும் போலவே நான் உறுதியாக இருந்து வருகிறேன். இதில் எந்த விதி விலக்கும் அளிக்க நானே இயலாதவனாக இருக்கிறேன். ரகசியம் எவ்வளவோ விஷமங்களைச் செய்திருக்கிறது. அதைக் கடுமையான நடவடிக்கைகளைக்கொண்டு ஒழிக்காவிட்டால் இயக்கத்தையே அது நாசமாக்கிவிடும். ரகசிய முறைகளும் தேவைப்படும் அசாதாரணமான சந்தர்ப்பங்களும் இருக்கக்கூடும். பயமில்லாதிருப்பதைப் பாமர மக்களுக்குப் போதிக்க நாம் விரும்புகிறோமாகையால், அந்தப் பாமர மக்களை முன்னிட்டு அந்த ரகசிய முறையின் சாதகத்தை இழக்க நான் தயாராக இருப்பேன். சில சந்தர்ப்பங்களில் ரகசியமான முறைகளை அவர்கள் மேற்கொள்ளலாம் என்று அவர்கள் நினைக்கும்படிச் செய்து அவர்கள் மனத்தை நான் குழப்பிவிடமாட்டேன். ரகசியம், சட்ட மறுப்பு உணர்ச்சி வளர்வதற்கு விரோதமானது. எந்தச் சொத்தும் எந்த நேரத்திலும் பறிமுதல் செய்யப்பட்டுவிடக்கூடியதே என்பதைக் காங்கிரஸ்காரர்கள் உணர்ந்துகொள்ளுவார்களானால், சொத்துக்களிலிருந்து முற்றிலும் சுயேச்சையாக இருக்க அவர்கள் கற்றுக்கொள்ளுவார்கள்.

உங்கள் கடிதத்தில் ஒன்று விடப்பட்டிருப்பதைக் காண்கிறேன். காங்கிரஸின் பலதரப்பட்ட நிர்மாண வேலைகளைக் குறித்து நீங்கள் எதுவுமே கூறவில்லை. 1920-இல் நன்ருக விவாதித்த பிறகு தயாரித்த காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் அவை உள்ளடங்கிய ஒரு பகுதியாகிவிட்டன. சட்ட மறுப்பைப் பின்னணியாகக் கொண்டு, சமூக ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, நூற்பதை எங்கும் பரப்புவது, கதர் ஆகிய நிர்மாண வேலைகளை நாம் செய்யாமல் இருக்க முடியாது. இவற்றில் எப்பொழுதும் போலவே நான் உறுதியுடன் இருக்கிறேன். காங்கிரஸ்காரர்களைப் பல லட்சக் கணக்கில் எண்ண முடியும் என்ருலும் சிறைப்பட்ட சட்ட மறுப்பாளர்களின் தொகை ஒரு லட்சத்திற்கு மேல் போகவில்லை. மீதமிருக்கும் லட்சக்கணக்கானவர்கள் செயலற்று முடக்குவாதம் ஏற்பட்டவர்களாக இருப்பார்களானல் இதில் ஏதோ பெரிய கோளாறு இருக்கிறது என்றுதான் நான் உணருகிறேன். சட்ட மறுப்பாளர் கோஷ்டியில் சேரமுடியாததற்கு ஏதாவது காரணம் இருக்குமானல், அதை அவர்கள் பகிரங்கமாக ஒப்புக்கொண்டுவிடுவதைக் குறித்து வெட்கப்படுவதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. நான் குறிப்பிட்டிருக்கும் நிர்மாண வேலைகளிலும், இந்தப் பட்டியலில் நான் இனிச் சேர்க்கும் இதுபோன்ற வேலைகளிலும் ஈடுபட்டிருப்பவர்கள், நாட்டின் நலனுக்காகச் சேவை செய்பவர்களாவதோடு நாட்டை லட்சியத்திற்குச் சமீபத்தில் கொண்டு வருபவர்களும் ஆவார்கள். அவசரச் சட்டங்கள் இருந்தாலும் சரி, இல்லாதிருந்தாலும் சரி, தனிப்பட்ட காங்கிரஸ்காரர்கள், ஆண்களும் பெண்களும், சுதந்திரமாகிய வீட்டைக் கட்டும் வேலையில் பங்குகொள்ளும் கலையைக் கற்றுக்கொண்டுவிடுவார்களானல், தங்கள் முக்கியத்தையும் உணர்ந்துகொள்ளுவார்களாயின் அடிவானம் இருண்டிருப்பதாக நமக்குத் தோன்றியபோதிலும், மனச்சோர்வு அல்லது ஏமாற்றம் அடைந்துவிடுவதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை.

முடிவாக, தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறேன் என்று நீங்கள் குற்றம் சாட்டும் ஆபத்து இல்லாமல் நான் சொல்ல முடியும் என்ருல், ஒன்று கூறுவேன். தோல்வி என்ற உணர்ச்சி என்னுள் இல்லை; இந்த நம் நாடு அதன் லட்சியத்தை நோக்கி அதிவேகமாகப் போய்க்கொண்டிருக்கிறது என்று எனக்கு இருக்கும் நம்பிக்கை, 1920-இல் எவ்வளவு பிரகாசமாக எரிந்துகொண்டிருந்ததோ அதே பிரகாசத்துடன் இன்றும் இருந்துகொண்டிருக்கிறது என்று கூற விரும்புகிறேன். ஏனெனில் சாத்விக எதிர்ப்பின் ஆற்றலில் எனக்குத் திடமான நம்பிக்கை இருந்துவருகிறது. ஆனல், பூரணமாகவும் பிரார்த்தனையோடும் ஆலோசித்த பிறகு, எராவ்டா சிறையில் நடந்த கோர்ட்டு சென்ற ஆகஸ்டு 4-ஆம் தேதி எனக்கு விதித்த தண்டனைக் காலம் முடிவதற்கு முன்னல் போராட்டத்தில் இறங்குவதில்லை என்ற முடிவுக்கு நான் வந்தேன் என்பதை நீங்களும் அறிவீர்கள். இதைக் குறித்துத் தனியாக ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறேனுகை

யால் அதன் காரணங்களைக் குறித்து நான் இப்பொழுது கூறிக் கொண்டிருக்க வேண்டியதில்லை. என்னைப் பொறுத்தவரையில் நான் நிறுத்தி வைத்தது கொஞ்ச நேரத்திற்குத் தவறான அபிப் பிராயத்தை உண்டாக்கக்கூடுமெனினும், அது எப்படி, எப் பொழுது கடமையாக ஆகும் என்பதையும் காட்டும். அதுதான் கடமை என்றால் அதனால் லட்சியத்திற்குத் தீமை உண்டாக முடியாது.

உங்கள்,
பாபு.

## 2

# நேருஜியின் கடிதம்

ஆனந்தபவன், அலகாபாத்,
*13, ஆகஸ்டு, 1934.*

என் அன்புள்ள பாபு,

......ஆறு மாத பூரண ஏகாந்தத்திற்கும், மிகச் சொற்ப தேகாப்பியாசத்திற்கும் பிறகு, சென்ற 27 மணிநேரமாகக் கவலை யிலும் பரபரப்பிலும், அதிக வேலையிலும் மூழ்கிவிட்டதாகவே உணருகிறேன். அதிகக் களைப்பாகவும் இருக்கிறது. இக்கடி தத்தை உங்களுக்கு நடுநிசியில் எழுதுகிறேன். நாளெல்லாம் கூட்டம் கூட்டமாக மக்கள் வந்துகொண்டிருந்தார்கள். சந்தர்ப் பம் இருந்தால் தங்களுக்கு மீண்டும் எழுதுகிறேன். ஆனால், சில மாத காலம் வரையில் எழுத முடியுமா என்றே சந்தேகிக்கிறேன். ஆகையால் சென்ற ஐந்து மாத காலத்தில் பல முக்கியமான விஷயங்களில் காங்கிரஸ் செய்திருக்கும் முடிவுகள் சம்பந்தமாக எனக்கு ஏற்பட்ட எண்ணங்கள் யாவை என்பதைச் சுருக்கமாக உங்களுக்குக் குறிப்பிடப் போகிறேன். இயல்பாகவே எனக்குச் சமாசாரங்கள் தெரிவதற்கு இருந்த வசதிகள் மிகக் குறை வானவை. ஆயினும், சம்பவங்களின் போக்கைக் குறித்து பொதுவாகச் சரியான கருத்தை நான் கொள்ளுவதற்கு அவை போதுமானவை என்று எண்ணுகிறேன்.

சட்ட மறுப்பு இயக்கத்தை நீங்கள் நிறுத்திவிட்டீர்கள் என்று அறிந்தபோது எனக்கு வருத்தமாக இருந்தது. முதலில் சுருக்கமான அறிவிப்பே எனக்குக் கிடைத்தது. பிறகு பல நாட்கள் கழித்து உங்கள் அறிக்கையைப் படித்தேன். நான் என்றுமே அனுபவித்தறியாத அதிர்ச்சியை எனக்கு அது அளித்தது. சட்ட மறுப்பை வாபஸ் வாங்கிக்கொள்ளுவது சம்

பந்தமாக மனத்தைச் சமாதானப்படுத்திக்கொள்ள நான் தயா ராக இருந்தேன். ஆனால், அப்படி வாபஸ் வாங்கிக்கொண்டதற்கு நீங்கள் கூறிய காரணங்களும், இனிச் செய்ய வேண்டிய வேலை களுக்கு நீங்கள் கூறியிருந்த யோசனைகளும் என்னைத் திகைக்க வைத்துவிட்டன. திடீரென்று எனக்குத் தீவிரமான உணர்ச்சி ஏற்பட்டது. என்னுள் ஏதோ முறிந்துவிட்டது. மிகவும் மதிப்பு வாய்ந்தது என்று நான் எண்ணிக்கொண்டிருந்த பந்தம் முறிந்து விட்டது. இப்பரந்த உலகத்தில் பயங்கரமான வகையில் தன்னந் தனியனாக இருப்பதாக உணர்ந்தேன். குழந்தைப் பருவத்தி லிருந்தே கொஞ்சம் தன்னந்தனியாக இருப்பதாகவே உணர்ந்து வந்திருக்கிறேன். ஆனால், சில பந்தங்கள் என்னைப் பலப்படுத் தின; சில பலமான உதவிகள் என்னை நிலைப்படுத்தின. தன்னந் தனியே இருப்பதாகக் கொண்ட அந்த உணர்ச்சி போய்விடவே இல்லை; ஆனால், அது குறைந்தது. ஆனால், இப்பொழுதோ, பாலைவனமான ஒரு தீவின் உயரே வரட்சியுடன் முற்றிலும் தன்னந் தனியனாக விடப்பட்டுவிட்டதாக உணருகிறேன்.

நிலைமைக்கு ஏற்றவாறு மாறிக்கொள்ளுவதில் மனித வர்க் கத்தினருக்கு அபாரமான சக்தி உண்டு. எனவே, ஓரளவுக்குப் புதிய நிலைமைக்கு ஏற்றவாறு என்னையும் மாற்றிக்கொண்டேன். உடல் நோவையே உண்டாக்கிவிடும் அளவுக்கு இவ்விஷயத்தில் எனக்கு இருந்த உணர்ச்சி வேகம் போய்விட்டது; முனையும் மழுங்கிப் போயிற்று. ஆனால், அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி வந் ததும், ஒன்றன் பின் ஒன்ருக நடந்த சம்பவங்களும், அந்த முனையை அதிகக் கூர்மையானதாக்கிவிட்டன. என் மனத் திற்கோ அல்லது உணர்ச்சிக்கோ அமைதியோ, ஓய்வோ இல்லாதபடி செய்துவிட்டன. மேலும், என்னைக் கடந்து சென்ற கூட்டத்தினரோடு மாத்திரமேயன்றி எனக்கு அன்பான வர்கள் என்றும், நெருங்கிய தோழர்கள் என்றும் நான் மதித்து வந்த தோழர்களோடும் கொஞ்சமும் பொருந்தாத முழு அன்னி யனாக இருப்பதாக இருக்கும் அந்த ஆன்மிகத் தனிமையையும் உணர்ந்தேன். இத்தடவை நான் சிறையிலிருந்தது, இதற்கு முன்னால் இருந்ததையெல்லாம்விட என் உணர்ச்சிக்கு அதிக வேதனையானதாக ஆகிவிட்டது. திரும்பத் திரும்ப இந்த அதிர்ச்சிகள் எனக்கு உண்டாகிவராமல் இருப்பதை முன்னிட்டு செய்திப் பத்திரிகைகள் எல்லாம் என் கிட்டத்தில் வராமல் இருக்க வேண்டும் என்றும் விரும்பினேன்.

உடல் நிலையைப் பொறுத்தவரையில் ஒருவாறு நன்ருகவே இருந்தது; சிறையில் எப்பொழுதும் நன்ருகவே இருக்கிறேன். உடல் நன்ருக வேலை செய்து வந்தது. எவ்வளவு அவமதிப்பு களையும் சிரமங்களையும் அது சமாளித்துக்கொள்ள முடியும்? விதி என்னை இந்நாட்டுடன் பிணைத்துவிட்டது. இந்நாட்டில் நான் கொஞ்சம் உருப்படியான வேலை செய்ய முடியும் என்று எண்ணிக்கொள்ளும் கர்வம் எனக்கு இருந்ததால் உடலை ஒழுங் காகவே கவனித்துக் கொண்டேன்.

ஆனல், வட்டமான துவாரத்திற்குப் பொருந்தாத சதுரமான ஆப்பு அல்லவா நான்! என்னைக் கடையும் ஒரு சமுத்திரத்தின் மீது அங்குமிங்கும் வீசப்படும் கர்வ நீர்க்குமிழியல்லவா நான் என்று அடிக்கடி நான் ஆச்சரியப்பட்டுக் கொள்ளுவது உண்டு. ஆனல், அகந்தையும் வீண் எண்ணங்களும் வெற்றி பெற்றன. என்னுள் வேலை செய்துவரும் அறிவு யந்திரம், தோல்வியை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. என்னைக் காரியத்தில் இறங்கும்படி ஊக்குவித்த, புயல்களின் நடுவிலும் நான் நிலையாக நிற்கும்படிச் செய்த கருத்துக்கள் சரியானவையே என்ருல், அவை சரியானவையே என்ற உறுதி என் உள்ளத்தில் வளர்ந்து கொண்டே வருகின்றன—அதன் வெற்றியைக் காண என் தலைமுறை உயிரோடில்லாது போயினும் அது வெற்றி பெற்றே தீரும்.

ஆனல், இந்த ஆண்டின் கஷ்டமான இம்மாதங்களில் என்னுடைய திக்கற்ற நிலைமையைக் குறித்து நான் குமுறிக்கொண்டு மௌனமாகத் தூரத்திலிருந்து கவனிப்பவனுக இருந்தபோது, அந்த லட்சியங்களின் கதி என்னவாயிற்று? எல்லாப் பெரிய போராட்டங்களிலும் அபிவிருத்தி தடைப்படுவதும், தாற்காலிகத் தோல்விகள் ஏற்படுவதும் சகஜம். அவர்கள் வருத்தப்படுகிருர்கள்; ஆனல், சீக்கிரத்தில் பலத்தை அடைந்துவிடுகிருர்கள். லட்சியங்களின் ஜோதி மங்கிப் போய்விட அனுமதிக்காதவர்கள், கொள்கைகளின் நங்கூரத்தைப் பலமாகப் போட்டிருப்பவர்கள் சீக்கிரத்தில் பழைய பலத்தை அடைந்துவிடுகின்றனர். ஆனல், நான் கண்டது முன்னேற்றத் தடையோ, தோல்வியோ அல்ல. எனினும், அந்த ஆன்மிகத் தோல்வி மற்றெல்லா தோல்விகளையும் விட அதிகப் பயங்கரமானது, சட்டசபைப் பிரவேச விஷயத்தைக் கூறுகிறேன் என்று யூகித்துக்கொண்டுவிட வேண்டாம். அதை அவ்வளவு முக்கியமானதாக நான் கருதவில்லை. சில சந்தர்ப்பங்களில் நானே சட்டசபைக்குப் போவது என்றுகூட எண்ணுவேன். ஆனல், நான் சட்டசபைக்கு உள்ளே வேலை செய்தாலும், வெளியே வேலை செய்தாலும் புரட்சிக்காரனுகவே வேலை செய்வேன். அதாவது ராஜீயத்திலும் சமூகத்திலும் அடிப்படையான, புரட்சிகரமான மாறுதல்களுக்காக வேலை செய்பவனுக இருப்பேன். ஏனெனில், வேறு எந்த மாறுதல்களும் இந்தியாவுக்கும் உலகத்திற்கும் சமாதானத்தையோ, திருப்தியையோ அளிக்க முடியாது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

ஆகவே, நான் எண்ணலானேன். வெளியில் வேலை செய்து கொண்டிருந்த தலைவர்கள் அப்படிச் செய்ததாகத் தெரியவில்லை. ஒத்துழையாமை, சட்ட மறுப்பு ஆகியவற்றின் போதை நம் மூளைக்கு ஏறிவிடுவதற்கு முன்னிருந்த காலத்தின் பாஷையிலேயே அவர்கள் பேச ஆரம்பித்தார்கள். சில சமயங்களில் அதே சொற்களையும் சொற்றொடர்களையும் உபயோகித்தார்கள். ஆனல், அவை உயிரோ, உண்மையான பொருளோ இல்லாத செத்துப் போன சொற்கள். நமக்கு முட்டுக்கட்டை போட்டவர்கள், நாம்

முன்னேறுதப்படி தடுத்து நிறுத்தியவர்கள், போராட்டத்தில் கலந்துகொள்ளாமல் ஒதுங்கி இருந்தவர்கள், நமக்கு அதிகத் தேவையாக இருந்த சமயத்தில் எதிர்க்கட்சியினருடன் ஒத்துழைத்தவர்களும்கூட, திடீரென்று காங்கிரஸில் முக்கியமானவர்களாகிவிட்டார்கள். இவர்கள் நம் சுதந்திரக் கோயிலின் பூசாரிகளாகிவிட்டார்கள். போராட்டத்தின் கஷ்ட நஷ்ட பாரத்தையெல்லாம் சுமக்க நேர்ந்த வீரப் போர்வீரர்கூட அக் கோயிலுக்குள் அனுமதிக்கப்படவில்லை. அவரும், அவரைப் போன்ற மற்றும் பலரும் தீண்டாதவர்களாகவும், நெருங்கத் தகாதவர்களாகவும் ஆகிவிட்டனர். இப்புதிய பூசாரிகளை ஆட்சேபித்துக் குறைகூற அவர் முற்பட்டுவிட்டாலோ, கூச்சல் போட்டு அவர் அடக்கப்பட்டுவிடுகிறார். தெய்வ சன்னிதானத்தின் அமைதியை அவர் குலைத்துவிட்டார் என்று கூறி, லட்சியத்திற்கு அவர் துரோகி என்றும் சொல்லிவிடுகிறார்கள்.

ஆகவே, இந்தியாவின் சுதந்திரக் கொடி, நமது தேசீயப் போராட்டம் உச்சநிலையில் இருந்தபோதும், எதிரியின் ஆக்ஞையின் பேரில் உண்மையில் யார் அதைத் தாழ்த்திவிட்டார்களோ அவர்களுடைய கையிலேயே எல்லாவிதமான படாடோபங்களுடனும் சந்தர்ப்பங்களுடனும் ஒப்படைக்கப்பட்டது. ராஜீயம் பத்திரமானதாக இல்லாதிருக்கவே தாங்கள் ராஜீயத்தைக் கைவிட்டுவிட்டதாகக் கூரை மீது இருந்துகொண்டு முழங்கியவர்களே இவர்கள். ஆனால், இப்பொழுது ராஜீயம் பத்திரமானதாகிவிடவே இவர்கள் ராஜீயத்தில் முன்னணியில் வந்து குதித்தார்கள்.

காங்கிரஸின் சார்பிலும் நாட்டு மக்களின் சார்பிலும் பேசுவதாகச் சொல்லிக்கொண்ட இவர்கள், தங்களுக்கு முன்னால் வைத்துக்கொண்ட லட்சியங்கள் என்னவாயின? பரிதாபகரமான கலப்படமான இவர்கள், உண்மைப் பிரச்னையைத் தட்டிக் கழித்தார்கள். காங்கிரஸின் ராஜீய நோக்கத்தைக்கூட, தங்களுக்குத் துணிவு இருந்த மட்டும், குறைத்துச் சொன்னார்கள். பணம், அதிகாரச் சுயநலங்கள் ஆகிய ஒவ்வொன்றுக்கும் திருப்தியுண்டாக்கும் அன்பு வார்த்தைகளைச் சொன்னார்கள். சுதந்திரத்தின் பகிரங்கமான எதிரிகள் அநேகருக்கு அடி பணிந்தார்கள். ஆனால், காங்கிரஸின் முற்போக்கான போர் வீரர்கள் விஷயத்திலோ, கொடூரமான கோபத்தையும் தைரியத்தையும் காட்டினர். சென்ற சில ஆண்டுகளில் கல்கத்தா கார்ப்பொரேஷனைப் போன்ற இன்னும் பெரும் அளவில் வெட்கக்கேடான காட்சியாக வெகு வேகமாக மாறிவிடவில்லையா? வங்கக் காங்கிரஸின் முக்கியமான பகுதியை, "ஸ்ரீ நளினி ரஞ்சன் சர்க்காரின் முன்னேற்றத்திற்காகவுள்ள சங்கம்" என்று சொல்லிவிடக்கூடாதா? இந்தக் கனவான் யார்? நம்மில் அநேகர் சிறையில் இருந்து வந்தபோது, சட்டமறுப்பு தீவிரமாக நடந்து வந்தது என்று கருதப்பட்ட சமயத்தில் இவர், அரசாங்க அதிகாரிகளுக்கும்,

உள்நாட்டு மந்திரி போன்றவர்களுக்கும் விருந்துகள் வைத்துக் கொண்டிருந்தவரே இவரல்லவா? மற்ருேர் பகுதியும் அதே போன்ற புகழத்தக்க நோக்கத்திற்காக வேலே செய்த சங்கமாக இருந்திருக்கக்கூடுமல்லவா? ஆனல், இத்தவறு வங்காளத்தி னிடம் மாத்திரம் இருந்துவிடவில்லே. அநேகமாக எல்லா இடங்களிலுமே இதே போன்ற மனப்போக்குதான் இருந்தது. காங்கிரஸ், தலேயிலிருந்து கீழே வரையில், தேர்தல் வேலே செய்யும் கூட்டமாக இருப்பதோடு சந்தர்ப்ப வாதம் வெற்றியும் பெறுகிறது.

இப்படிப்பட்ட நிலேமை இருந்து வருவதற்குக் காரியக் கமிட்டி நேரடியாகப் பொறுப்பாளி ஆகாது. என்ருலும், காரியக் கமிட்டி பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும். தலே வர்களும் அவர்களுடைய கொள்கைகளுமே பின்பற்றுவோரின் நடவடிக்கைகளே உருவாக்குகின்றன. பின்பற்றுவோர் மீது பழி போட்டுவிடுவது நல்லதோ, நியாயமோ ஆகாது. வேலே செய்யத் தெரியாதவனே ஆயுதங்களின் பேரில் குற்றஞ் சொல்லுவான் என்ற பழமொழி எல்லா மொழிகளிலுமே இருந்து வருகிறது. நமது லட்சியத்தையும் நோக்கங்களேயும் கூறுவதில் தெளிவில்லாமல் இருப்பதைக் கமிட்டி வேண்டு மென்றே ஆதரித்து வந்திருக்கிறது. இதனல் நிச்சயம் குழப்பம் ஏற்படுவதோடு பிற்போக்கான சமயங்களில் நிலேக் குலேவும் உண்டாகிவிடும். பொது ஜனங்களேத் தவருன வழியில் திருப்பி விடும் தலேவர்களும், பிற்போக்காளர்களும் கிளம்பிவிடுவார்கள்.

காங்கிரஸின் விசேஷ அலுவல்களான ராஜீய நோக்கங் களேக் குறித்தே முக்கியமாகக் குறிப்பிடுகிறேன். சமூக,பொருளா தாரப் பிரச்னேகளில் காங்கிரஸ் தெளிவாகச் சிந்தித்தாக வேண் டிய சமயம் வெகு காலத்திற்கு முன்னலே வந்திருக்கவேண்டும். ஆனல், இப்பிரச்னேகளில் எல்லோரும் விஷயங்களே அறியும்படி செய்வதற்குக் காலமாகும், இவற்றில் காங்கிரஸ் எவ்வளவு தூரம் போக வேண்டும் என்று நான் நினேக்கிறேனே அவ்வளவு தூரத் திற்கு மொத்தத்தில் காங்கிரஸ் போக இப்பொழுது முடியாது என்பதை நான் அறிகிறேன். ஆனல், இவ்விஷயத்தைக் குறித்துக் காங்கிரஸ் ஏதாவது அறிந்திருந்தாலும், அறியாமலிருந் தாலும், இவ்விஷயத்தைக் குறித்து விசேஷமாக ஆராய்ந்து அவற்றின் மீது சில அபிப்பிராயங்களேக் கொண்டிருப்பவர்களேக் காங்கிரஸ் உதறித் தள்ளிவிடவோ, பிரஷ்டம் செய்து வைத்து விடவோ தயாராக இருக்கிறது என்றே தோன்றுகிறது. இக் கருத்துக்களேயே உலகத்தில் மிகத் திறமை வாய்ந்தவர்களும், தன்னலத் தியாகஞ் செய்திருப்பவர்களுமான அநேகர் கொண் டிருக்கிருர்கள் என்பது பிரபலமானதாக இருந்தும், இக்கருத்துக் களேப் புரிந்துகொள்ள எந்தவித முயற்சியும் செய்யப்படவில்லே. இந்தக் கருத்துக்கள் சரியாக இருக்கலாம், தவருகவும் இருக்கலாம். ஆனல், இவற்றைக் கண்டிக்கக் காரியக் கமிட்டி

புறப்படுவதற்கு முன்னுல் இதைப் புரிந்துகொள்ளவாவது அது பார்க்க வேண்டும். உருக்கமான கோரிக்கைகளே வெளியிடு வதோ, அல்லது இந்தியாவின் நிலே வேருனதால் மற்ற இடங் களில் இயங்கும் பொருளாதார நியதிகள் நம் நாட்டுக்குப் பொருந்தா என்று சாதாரணமாகக் கூறிவிடுவதோ நியாய மான வாதத்திற்கு உகந்தது ஆகாது. இது சம்பந்தமாகக் காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்திருக்கும் தீர்மானம், சோஷ லிஸத்தைக் குறித்து அதிசயிக்கத்தக்க வகையில் அதற்குள்ள அறியாமையையே காட்டுகிறது. அதைப் படிப்பதும், இந்தியா வுக்கு வெளியில் அது படிக்கப்படுமே என்பதை உணர்வதும் வேதனேயாக இருக்கின்றன. அர்த்தமில்லாததைப் பேசும் அபாயம் இருந்தாலும் சரி, பல தரப்பட்ட தன்னலக்காரர் களுக்கும் எப்படியாவது உறுதியளித்தால் போதும் என்பதில் கமிட்டிக்கு அளவுக்கு மிஞ்சிய ஆர்வம் இருக்கிறது என்றே தோன்றுகிறது.

சோஷலிஸம் என்ற சொல்லுக்கு ஆங்கில மொழியில் திட்டமான பொருள் இருந்தும், முற்றிலும் மாருன வகையில் அதைக் கூறுவது, சோஷலிஸம் என்ற விஷயத்தை விசித்திர மான வகையில் சமாளிப்பதாகும். ஏனெனில், தனிப்பட்ட வர்கள், தங்களுக்கே தனியானதான கருத்தில் சொற்களே உபயோகிப்பது, கருத்துக்களேப் பரிமாறிக்கொள்ளுவதில் உதவி யானதாக ஆகாது. தான் இன்ஜின் டிரைவர் என்று சொல்லிக் கொள்ளுகிறவர், பிறகு தன் இன்ஜின் மரத்திஞலானது என்றும், அது மாட்டிஞல் இழுக்கப்படுகிறது என்றும் சொல்லுவாராயின், இன்ஜின் டிரைவர் என்ற சொல்லே அவர் தவருக உபயோகிப்ப வரே ஆவார்.

நான் எதிர்பார்த்ததைவிட இக்கடிதம் நீண்டுவிட்டது. இரவும் அநேகமாகக் கழிந்துவிட்டது. என் மூளே களேப் படைந்திருப்பதால் குழப்பமான, சரியாக இல்லாத வகையில் நான் ஒரு வேளே எழுதியிருக்கக்கூடும். என்றுலும், அப்பொழு தும் என் மனத்தில் உள்ளதை அது கொஞ்சம் காட்டிவிடும். சென்ற சில மாதங்கள் எனக்கு அதிக வேதனேயானவைகளாக இருந்தன. மற்றும் பலருக்கும் அவ்வாறே இருந்திருக்கும் என நினேக்கிறேன். மற்றவர்களின் பணப் பைகளில் கை வைத்து விடுவதைவிட சிலருடைய உள்ளங்களேப் பிளந்துவிடுவதற்கே இக்கால உலகில், ஒரு வேளே பழங்கால உலகில்கூட, தயாராக இருந்துவிடுகின்றனர் என்று சில சமயங்களில் எண்ணுகிறேன். உள்ளங்கள், மூளேகள், உடல்கள், மனித நீதி ஆகியவைகளின் கௌரவத்தைவிட உண்மையில் பணப் பைகள் அதிக மதிப்பு வாய்ந்தவை; அவையே அதிகமாகக் கௌரவிக்கப்படுபவை.

நான் குறிப்பிட விரும்பும் மற்ருேர் விஷயமும் இருக்கிறது. சுயராஜ்ய பவனத்தின் டிரஸ்டைப் பற்றியது அது. சுயராஜ்ய பவனின் பராமரிப்பைக் குறித்துக் காரியக் கமிட்டி சமீபத்தில்

ஆலோசித்தது என்றும், அதற்குத் தான் பொறுப்பு அல்ல என்ற முடிவுக்கு வந்தது என்றும் அறிகிறேன். என்ருலும், இதற்கென்று காரியக் கமிட்டி மூன்று வருடங்களுக்கு முன்னுலேயே தொகையை அனுமதித்திருந்தும், அதன் பேரில் செலவுகள் செய்யப்பட்டிருந்தும், அத்தொகை இன்னும் கொடுக்கப்படாததால் புதிதாகத் தொகை அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அநேகமாக இத்தொகை சில மாதங்களுக்குப் போதுமானதாக இருக்கலாம். வரும் காலத்தைப் பற்றிய வரையில் வீட்டையும் தோட்டத்தையும் பராமரித்து வரும் பாரத்தை ஏற்றுக்கொண்டு விடக்கூடாது என்பதில் காரியக் கமிட்டி ஆவலுடன் இருக்கிறது என்று தெரிகிறது. இந்தப் பளு, மாதத்திற்கு ரூ. 100. வரிகள் முதலியனவும் சேர்ந்தே அத்தொகை. இச்சுமையைக் குறித்துத் தருமகர்த்தாக்களும் பயந்து போயிருக்கின்றனர் என்றே அறிகிறேன். அவ்வீட்டின் சில பகுதிகளை வாடகைக்கு விட்டு, அப்பணத்தைக்கொண்டு வீட்டைப் பராமரித்து வரலாம் என்று அவர்கள் யோசனை கூறியிருக்கிருர்கள். இக்காரியத்திற்காகத் தோட்டத்தின் ஒரு பகுதியை விற்றுவிடலாம் என்றும் மற்ருெரு யோசனை கூறப்பட்டிருக்கிறது. இந்த யோசனைகளில் சில, அக்கட்டடம் பற்றிச் செய்யப்பட்டிருக்கும் தரும சாஸனத்திற்கே மாருனதாக இருப்பதோடு அந்த யோசனைகள் எல்லாமே அத்தருமத்தின் எண்ணத்திற்கு மாறுபட்டதாகவும் இருப்பதால், இந்த யோசனைகளைக் குறித்து நான் ஆச்சரியப்படுகிறேன். தனிப்பட்ட டிரஸ்டி என்ற முறையில் இவ்விஷயத்தில் எனக்கு ஒரே ஒரு வோட்டுதான் இருக்கிறது. என்ருலும், தரும சொத்தைத் தவருக உபயோகிக்கும் விஷயத்தில் எனக்குக் கடுமையான ஆட்சேபங்கள் இருக்கின்றன என்பதைச் சொல்ல விரும்புகிறேன். என் தந்தையாரின் விருப்பங்கள் இந்த விதமாக மீறப்படுகின்றன என்ற கருத்து என்னுல் சகிக்க முடியாததாகும். அவர் விருப்பப்படி இது தரும சொத்தாக்கப்பட்டிருக்கிறது என்பது மாத்திரம் அல்ல, சிறிய அளவில் அது அவருக்கு ஞாபகார்த்தமும் ஆகும். மாதத்திற்கு ஒரு நூறு ரூபாய் செலவாகும் என்பதைவிட அவருடைய விருப்பங்களும் அவர் ஞாபகார்த்தமும் எனக்கு மிகவும் அருமையானவை. ஆகையால், அதைப் பராமரிப்பதற்குப் பணம் தேவைப்படுகிறது என்பதைக் குறித்துக் காரியக் கமிட்டியோ, டிரஸ்டிகளோ கவலைப்படவேண்டியதில்லை என்று உறுதி கூற விரும்புகிறேன். இப்பொழுது காரியக் கமிட்டி சில மாதங்களுக்கென்று அனுமதித்திருக்கும் தொகை தீர்ந்து போனதும், அக்கட்டடத்தைப் பராமரிக்கும் பொறுப்பை நானே ஏற்றுக்கொள்ளுகிறேன். மேற்கொண்டு காரியக் கமிட்டி பணம் அனுமதிக்க வேண்டியதில்லை. இவ்விஷயத்தில் எனக்கு இருக்கும் உணர்ச்சியை மதித்து அச்சொத்தில் பிரித்து விற்காமலோ, வாடகைக்கு விட வேண்டும் என்பதற்காக வாடகைக்கு விடாமலோ இருக்கும்படி டிரஸ்டிகளை வேண்டிக்கொள்ளுகிறேன். சுயராஜ்ய பவனம் சிறந்த காரியத்

திற்கு உபயோகிக்கப்படும் சமயம் வரும் வரையில் அதைப் பரா மரித்து வர நான் பாடுபடுவேன்.

கணக்கு என்னிடம் இல்லை. என்றாலும், இதுவரை சுய ராஜ்ய பவனம் எந்த வகையிலும் காரியக் கமிட்டிக்குப் பண நஷ்டமாக இருந்துவிடவில்லை என்றே நம்புகிறேன். காரியக் கமிட்டி அனுமதித்திருக்கும் தொகை, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அலுவலகம் அதில் இருந்துவருவதற்கு நியாயமாகக் கொடுக்கக்கூடிய வாடகைக்கு அதிகமாகவே இருக்காது. இன்னும் சிறிய, மலிவான இடத்தில் இருந்து வருவதால் இந்த வாடகைச் செலவைக் குறைத்திருக்கலாம். அதே சமயத்தில், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சென்னையில் மேல் மாடியில் மாத்திரம் இருந்துவந்ததற்கு மாதம் ரூ. 150 வாடகை கொடுத் திருக்கிறது.

இக்கடிதத்தின் சில பகுதிகள் ஒரு வேளை உங்களுக்கு மனக் கஷ்டத்தை உண்டாக்கலாம். ஆனால், என் உள்ளத்தில் உள்ளதை உங்களுக்கு நான் மறைத்துவிட விரும்பமாட்டீர்கள்.

தங்கள் அன்புள்ள,

ஜவாஹர்.

# 3

# காந்திஜியின் பதில்

வார்தா,

17, ஆகஸ்டு, 1934,

எனது அன்புள்ள ஜவாஹர்லால்,

உணர்ச்சி வேகத்தோடு கூடிய, உருக்கமான உங்கள் கடி தத்திற்கு, எனக்கிருக்கும் பலம் அனுமதிப்பதற்கும் அதிக நீள மான பதிலையே நான் எழுத வேண்டும்.

முழு கண்யத்தையும் அரசாங்கத்தினிடமிருந்து நான் எதிர்பார்த்தேன். என்றாலும், நீங்கள் பக்கத்தில் இருப்பது கமலாவுக்கும், அதனால் மாமாவுக்கும், மருந்துகளோ, வைத்தி யர்களோ செய்ய முடியாத நன்மைகளைச் செய்திருக்கிறது. நீங்கள் எதிர்பார்க்கும் மிகச் சொற்ப நாட்களுக்கு அதிகமாக நீங்கள் அங்கே இருந்து வர அனுமதிக்கப்படுவீர்கள் என்று நம்புகிறேன்.

உங்களுக்கு இருக்கும் ஆழ்ந்த வருத்தம் எனக்குப் புரிகிறது. உங்கள் உணர்ச்சிகள் முழுவதையும் தாராளமாக நீங்கள் எடுத்

துக் கூறியிருப்பது மிகவும் சரியானதே. ஆனால், எழுத்திலிருக்கும் சொல்லை, நமது பொதுவான கருத்தைக்கொண்டு நன்ருக ஆய்ந்து பார்த்தால், நீங்கள் உணர்ந்திருக்கும் வருத்தத்திற்கோ, ஏமாற்றத்திற்கோ போதுமான காரணம் இல்லை என்பதை அச் சொல் காட்டும். என் விஷயத்தில் ஒரு தோழனை நீங்கள் இழந்து விடவில்லை என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். *1917*-இலும் அதற்குப் பிறகும் நீங்கள் என்னை அறிந்த மாதிரியிலேயே நான் இருந்து வருகிறேன். பொது நன்மை பற்றிய விஷயத்தில் எனக் குள்ள ஆர்வத்தைப் பற்றி நீங்கள் என்ன அறிவீர்களோ அதே ஆர் வமே எனக்கு இருந்து வருகிறது. பூரண சுதந்திரம் என்பதற்கு ஆங்கிலத்தில் என்ன பொருள் உண்டோ அது முற்றிலும் என் நாட் டிற்கு வேண்டும் என்று நான் விரும்புகிறேன். எந்தத் தீர்மானம் உங்கள் மனத்தை வேதனைப்படுத்தியிருக்கிறதோ அது, அந்த லட்சியத்தைக் கருத்தில் கொண்டே தயாரிக்கப்பட்டிருக்கிறது. தீர்மானங்களுக்கும், அவற்றைச் சூழ்ந்துள்ள கருத்துக்களுக்கும் முழுப் பொறுப்பையும் நான் ஏற்றுக்கொள்ளவே வேண்டும்.

ஆனல், காலத்தின் அவசியத்தை அறியும் சாமர்த்தியம் எனக்கு இருக்கிறது என்று நான் எண்ணிக்கொள்ளுகிறேன். அதைக் கொண்டு வந்தவையே தீர்மானங்கள். எனக்கு, லட்சி யத்தைப் போன்றே அதை அடைவதற்கான உபாயமும் முக்கிய மானது. அந்த முறைகளை நிர்வகிக்கும் அதிகாரம் நமக்கு இருக்கவேண்டும் என்பதில், ஒருவகையில் முறைகள் அதிக முக் கியம். முறைகளைச் சரியாக நிர்வகிக்கத் தவறிவிடுவோமானல் லட்சியத்தில் நிர்வகிக்கும் அதிகாரம் எதுவுமே இருக்காது. எனவே, முறைகள் அல்லது உபாயங்களை நாம் வற்புறுத்துவதில் இங்கேதான் நமக்குள் அபிப்பிராய பேதம் வருகிறது.

''ஆதாரமில்லாத பேச்சை''ப் பற்றிய தீர்மானத்தை விருப்பு வெறுப்பின்றி படியுங்கள். பிறகு அதில் சோஷலிஸத்தைக் குறித்து ஒருவார்த்தைகூட இல்லை என்பதைக் காண்பீர்கள். சோஷலிஸ்டு களுக்கு முழு மதிப்பும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களில் சிலரை நான் நெருக்கமாக அறிவேன். அவர்களுடைய தியாகம் எனக்குத் தெரியாதா? ஆனல், அவர்கள் மொத்தத்தில் அவ சரப்படுகிறவர்கள் என்பதைக் காண்கிறேன். அவர்கள் அப்படி ஏன் இருக்கக்கூடாது? அவ்வளவு வேகத்தில் அவர்களுடன் என்னல் போக முடியாவிட்டால், என்னையும் அவர்களுடன் சேர்த்து அழைத்துப் போவதற்கு நிற்கும்படி நான் அவர்களைச் சொல்லவே வேண்டும். என் போக்கு அதுதான். சோஷலிஸம் என்பதற்கு அர்த்தத்தை அகராதியில் பார்த்தேன். அந்த அர்த் தம், நான் முன்னல் இருந்த நிலைக்கு மேலே என்னைக் கொண்டு போகவில்லை. அதற்குக் கூறப்படும் விளக்கத்தைப் படித்தேன். முழுப்பொருளையும் அறிய நான் எதைப் படிக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள்? மாஸானி எனக்குக் கொடுத்த புத்தகங்களில் ஒன்றைப் படித்துவிட்டேன். நரேந்திர தேவர் சிபார்சு செய்த

புத்தகத்தைப் படிப்பதில் என் ஒழிந்த நேரத்தையெல்லாம் செலவிட்டு வருகிறேன்.

காரியக் கமிட்டி உறுப்பினர்கள் விஷயத்தில் நீங்கள் கடுமையாக இருக்கிறீர்கள். அவர்களும் நமது சகாக்களே. நாம் சுயேச்சையான ஸ்தாபனம்தானே. அவர்கள் நம்பிக்கைக்கு உரியவர்கள் அல்ல என்றால், அவர்களுக்குப் பதிலாக வேறு ஆட்களை வைத்துவிட வேண்டும். ஆனால், மற்றுஞ் சிலர் அனுபவித்து விட்ட கஷ்டங்களை அனுபவிக்க அவர்களால் இயலவில்லை என்பதற்காக அவர்களைக் குறை கூறக்கூடாது.

வெடித்துப் போய்விட்ட பிறகு ஆக்கவேலையை நான் விரும்புகிறேன். ஆகவே, நாம் சந்திக்காதிருந்தாலும், நான் என்ன செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்கள், உங்கள் கருத்தை எடுத்துக் கூற சரியான பிரதிநிதி என்று யாரை நினைக்கிறீர்கள் என்பதை எனக்குச் சொல்லுங்கள்.

டிரஸ்டு கூட்டத்தைப் பொறுத்தவரையில் அதற்கு நான் போகவில்லை. வல்லபபாய் போயிருந்தார். உங்கள் போக்கு உங்கள் கோபத்தைக் காட்டிவிட்டது. டிரஸ்டிகள் தங்கள் கடமையைச் செய்வார்கள் என்று நீங்கள் நம்ப வேண்டும். தவறு எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. வேறு வேலைகளினால் நான் அதில் கவனஞ் செலுத்த முடியவில்லை. இப்பொழுது அது சம்பந்தமான காகிதங்களையும் மற்றவைகளையும் படிக்கிறேன். உண்மையில் உங்கள் உணர்ச்சி மற்ற டிரஸ்டிகளால் முற்றிலும் கௌரவிக்கப்படும். நான் இந்த வாக்குறுதியை உங்களுக்கு அளிப்பதால், நீங்கள் எடுத்துக் கொண்டிருப்பதைப் போன்று இதை உங்களைப் பற்றிய சொந்த விஷயமாக எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். உங்கள் தந்தையாரின் ஞாபகார்த்தத்தில் நீங்கள் எவ்வளவு மதிப்பு வைக்கிறீர்களோ அதே மதிப்பு உங்கள் சக ஊழியர்களுக்கும் இருக்கிறது என்று கொள்ளுவது உங்கள் தாராளமான சுபாவத்திற்கு மிகவும் ஏற்றது. தேச மக்களில் நீங்களும் ஒருவரே யாகையால் தந்தையாரின் ஞாபகார்த்தத்திற்குத் தேச மக்களே பராமரிப்பாளராகுக.

அன்பு,

**பாபு.**

# 4

# சர்தார் பட்டேலுக்குக் கடிதம்

*செப்டம்பர், 1934.*

அன்புள்ள வல்லபபாய்,

சமீபத்தில் வார்தாவுக்கு வந்த நண்பர்களுடன் அதிகமாக விவாதித்து, தீர யோசித்த பிறகு நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். காங்கிரஸிலிருந்து, அங்கத்தினனுக இருப்பது உள்பட எல்லா உத்தியோக அல்லது சரீர தொடர்புகளையெல்லாம் நான் ரத்துச் செய்துகொண்டுவிடுவது, காங்கிரஸிற்கும் நாட்டிற்கும் அதிக நன்மை பயக்குவதாக இருக்கும் என்பதே அந்த என் முடிவு. இந்த ஸ்தாபனத்துடன் 1920-இல் இருந்து நான் நெருங்கிய தொடர்பு கொண்டு இருந்திருக்கிறேன். என் வாலிபப் பருவத்திலிருந்து அதைப் போற்றியும் வந்திருக்கிறேன். எனவே, இப்பொழுது தொடர்பை ரத்துச் செய்துகொண்டுவிடுவது என்பது, அந்த ஸ்தாபன சம்பந்தமாக எந்தச் சிரத்தையுமே எடுத்துக்கொள்ளமாட்டேன் என்பது அல்ல. காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஊழல்கள் புகுந்துவிட்டன என்று சமீபத்தில் நான் கூறியிருந்த போதிலும், அது அதிக சக்தி வாய்ந்த, தேச மக்களுக்கு அதிகப் பிரதிநிதித்துவம் பெற்ற ஸ்தாபனமாக இன்னும் இருந்து வருகிறது என்பதுதான் என் அபிப்பிராயம். அது ஆரம்பமானதிலிருந்து இடையருத உயர்ந்த சேவையையும் தியாகங்களையும் செய்து வந்திருக்கிறது என்பதற்கு, அதற்குச் சரித்திரமே உண்டு. அது தடையின்றி நிதானமாக முன்னேறிக் கொண்டும் வந்திருக்கிறது. நாட்டில் வேறு எந்த ஸ்தாபனமும் செய்தறியாத வகையில் அது பெரும் புயல்களையும் சமாளித்து நின்றிருக்கிறது. எந்த நாடும் பெருமைப்படும் வகையில் மிகப் பெரும் அளவில் தியாகங்களையும் அது செய்திருக்கிறது. குற்றஞ் சொல்ல முடியாத ஒழுக்கமும் தன்னலத் தியாகமும் கொண்ட ஆண்களும் பெண்களும் அதில் இன்று அநேகர் இருக்கிருர்கள்.

நான் இந்த ஸ்தாபனத்திலிருந்து சந்தோஷத்துடன் விலகவில்லை. ஆனுல், நான் மேற்கொண்டும் அதில் இருந்து வருவதால் நன்மையைவிட தீமையே அதிகமாகும் என்று உணர்கிறேன். வெகு சீக்கிரத்தில் இந்த ஸ்தாபனத்தின் நியாயமான தலைமையில் இருக்க வேண்டியவரான ஜவாஹர்லாலின் தொடர்பும் ஆலோசனையும் இச்சமயம் எனக்குக் கிடைக்கவில்லை. எனவே, அவருடைய மகத்தான உணர்ச்சியையே என் முன்னுல் கொண்டிருக்கிறேன். என் மீது அவருக்கு இருக்கும் அன்பு என்னைக் காங்கிரஸுக்குள் வைத்திருக்கவே விரும்பும். என்றுலும், அவருடைய பகுத்தறிவு, நான் செய்திருக்கும் முடிவை அங்கீகரிக்கும் என்று எண்ணுகிறேன். பெரிய ஸ்தாபனம் திட்டமான பகுத்

தறிவின் மீது நடக்க வேண்டுமேயன்றிப் பிரியத்தைக்கொண்டு நடக்கக்கூடாது. ஆகையால், பகுத்தறிவு முழுமையாக இயங்குவதை, நான் அதில் இருந்து வருவது தடைப்படுத்துவதாக இருக்கும்போது, அத்துறையிலிருந்து நான் விலகிவிடுவதுதான் நல்லது. எனவே, இந்த ஸ்தாபனத்திலிருந்து நான் விலகும்போது, ஒரு தோழனைவிட எனக்கு இன்னும் அதிக முக்கியமானதும், ராஜீய அபிப்பிராய பேதங்கள் எவ்வளவுதான் இருந்தபோதும் என்னை அதனிடமிருந்து பிரித்துவிட முடியாததுமான ஒன்றை, நான் எந்த விதத்திலும் கைவிட்டுவிடவில்லை என்று உணருகிறேன்.

வரும் காங்கிரஸுக்கு ராஜேந்திரப் பிரஸாதே அநேகமாக தலைவராக இருப்பார். ஜவாஹர்லாலைப் போல் அல்லாமல், என்னுடைய கருத்துக்கள் அநேகவற்றை ஒப்புக்கொள்ளுபவர் இவர். நாட்டிற்காக அவர் செய்திருக்கும் தியாகம், அளவைக் கொண்டும் தன்மையைக்கொண்டும் பார்த்தால், இணையில்லாத தாகும். இந்த நெருக்கடியான சமயத்தில் நான் விலகுவது, ராஜேந்திரப் பிரஸாதிடம் நான் உண்மையில்லாமலிருப்பதாகவும் ஆகாது.

பிறகு, காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு விஷயம் வேறு இருக்கிறது. அது அமைக்கப்படுவதை நான் முழு மனத்துடன் உற்சாகப்படுத்தி இருக்காவிட்டால் ஒரு வேளை அது அமைந்தே இராது. தீவிரமான, உண்மையான காங்கிரஸ்காரர்கள் உணர்ந்த தேவையை அது பூர்த்தி செய்கிறது. ஆகையால், அச்சபையை அமைக்க வேண்டியது அவசியமாயிற்று. இப்பொழுது இருந்துவரும் சட்டசபைகளுக்குள் காங்கிரஸ்காரர்கள் பிரவேசிப்பதற்கு ஆட்சேபணையில்லாத எல்லா காங்கிரஸ்காரர்களின் ஆதரவும் அதற்கு வேண்டும். நான் விலகிக்கொண்டு விட்டதால் இந்தப் போர்டு ஒரு வாக்கை இழந்துவிட்டாலும் நான் வருத்தமடைவேன்.

என் நிலை எனக்குத் தெரியுமாகையால், சில நண்பர்கள் பயப்படுவதைப் போன்று, விளைவுகளைப் பற்றிய பயம் எதுவும் எனக்கு இல்லை. நன்ருகப் பழுத்த பழம் உதிர்ந்துவிடுவதால் மரம் பாதகமடைந்து விடுவதில்லை. அதே போல, நான் காங்கிரஸிலிருந்து போய்விடுவதனல் காங்கிரஸ் பாதகம் அடைந்துவிடாது. முற்றிலும் பழுத்துவிட்ட பிறகும் பழம் உதிர்ந்துவிடாமலிருந்தால் அப்புறம் மரத்திற்கு அது உண்மையில் வீண் சுமைதான். அதே போல இப்பொழுது காங்கிரஸுக்கு நான் வீண் சுமையே என்று உணருகிறேன்.

அநேக காங்கிரஸ்காரர்களுக்கும் எனக்குமிடையே மனப் போக்கில் முக்கியமான வித்தியாசங்கள் இருப்பதோடு, அவை வளர்ந்தும் வருகின்றன. நான் அதில் இருந்து வருவது, படித்த வகுப்பினர் காங்கிரஸிலிருந்து மேலும் மேலும் வேறு விதமான கருத்துக்கொள்ளும்படி செய்து வருகிறது. இது ஆச்சரியமாகவே

தோன்றலாம், எனினும், என்னுடைய கொள்கைகள், சரி என்று அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யத் தவறிவிட்டன என்று உணருகிறேன். என் பகுத்தறிவு ஏற்றுக்கொள்ளாத எதையும் நான் செய்வது இல்லை. ஆனால், காங்கிரஸில் அதிக அறிவாளிகளாக இருப்பவர்கள், என்னிடம் கொண்டிருக்கும் இணையில்லாத பக்தி தடுக்காமலிருந்தால், சந்தோஷமாகவும் உற்சாகத்தோடும் என்ன போக்கை மேற்கொண்டிருப்பார்களோ அதற்கு நேரிடையான திக்கில் என் பகுத்தறிவு என்னைக் கொண்டு போகிறது. காங்கிரஸ் முன்பு நான் கொண்டு வந்த கொள்கைகள் விஷயத்தில்,அறிவு மனோபாவமுள்ள காங்கிரஸ்காரர்கள் ஆட்சேபித்துத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்திருந்தபோதிலும், அவர்களிடமிருந்து நான் பெற்றுவந்ததைவிட அதிக விசுவாசத்தையும் பக்தியையும் வேறு தலைவர் யாரும் எதிர்பார்க்கவே முடியாது. இந்த விசுவாசத்தையும் பக்தியையும் நான் மேற்கொண்டும் உபயோகித்துக்கொள்ளப் பார்ப்பது, அவர்களுக்குக் கஷ்டத்தை உண்டாக்குவதாகும் என்று எண்ணுகிறேன். என்னுடைய முறையைப் பலமாக ஆட்சேபிப்பவர்கள், என்னை எதிர்த்துத் தோற்கடித்து, விலகிவிடும்படி என்னைக் கட்டாயப்படுத்த வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். அந்த நிலைமையை அடைவதற்காக முயன்றேன். ஆனால், இதில் தோல்வியே அடைந்தேன். கடைசி வரையில் அவர்கள் என்னைப் பற்றிக்கொண்டே இருப்பார்கள். இந்த விசுவாசத்திற்கு நான் பதிலுக்குச் செய்வதற்குள்ள ஒரே வழி, நானே விலகிக்கொண்டு விடுவது தான். காங்கிரஸில் படித்தவர்களாக இருப்பவர்களுக்கும் எனக்குமிடையே அடிப்படையான அபிப்பிராய பேதங்கள் இருக்கும்போது, எதிர்த்து நான் வேலை செய்ய முடியாது. நான் பொது வாழ்க்கையில் ஈடுபட்டதிலிருந்து அந்த வகையில் நான் நடந்ததே இல்லை.

பின்னர், சோஷலிஸ்டுகளின் கோஷ்டியும் வளர்ந்து கொண்டு வருகிறது. ஜவாஹர்லால், அவர்களுடைய ஆட்சேபணையற்ற தலைவர். அவர் என்ன விரும்புகிறார், எதை வற்புறுத்துகிறார் என்பதை நான் நன்றாக அறிவேன். ஒவ்வொன்றையும் விஞ்ஞான உணர்ச்சியுடன் ஆராய்வதாகச் சொல்லுகிறார். தைரியமே உருவானவர் அவர். அவர் இன்னும் அநேக ஆண்டுகள் சேவை செய்ய வேண்டியவர். அவருடைய லட்சியத்தில் அவருக்குத் திடமான நம்பிக்கை இருக்கிறது; சோஷலிஸ்டு கோஷ்டியினர், தங்கள் கருத்தை நிறைவேற்றி வைப்பதற்குக் கொள்ளும் முறை அவருடைய முறையாக இல்லாமலிருந்தாலும் அநேகமாக அவருடைய கருத்தையே கொண்டிருக்கின்றனர். செல்வாக்கிலும், முக்கியத்திலும் அந்தக் கோஷ்டி வளர்ந்தே தீரும். அக்கோஷ்டியை நான் வரவேற்றிருக்கிறேன். அவர்களில் அநேகர், மதிப்பிற்குரிய, தன்னலத் தியாகிகளான என் சக ஊழியர்கள். இவ்வளவு இருந்தும், அதிகாரபூர்வமாக அவர்கள் வெளியிட்டிருக்கும் பிரசுரங்களில் கூறப்பட்டிருக்கும் வேலைத்

திட்டத்திற்கும் எனக்கும் அடிப்படையான வித்தியாசம் இருந்து வருகிறது. ஆனால், என்னால் செய்ய முடிவதான தார்மிகச் செல்வாக்கைக்கொண்டு, அவர்கள் பிரசுரங்களில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கள் பரவுவதை நான் தடுக்கமாட்டேன். இந்தக் கருத்துக்களில் சில எனக்குப் பிடிக்காதவைகளாக இருந்த போதிலும், அவற்றை அவர்கள் தாராளமாகக் கூறி வருவதில் நான் குறுக்கிடவும் மாட்டேன்...

இந்த அடிப்படையான அபிப்பிராய பேதங்கள் எனக்கு இருந்தபோதிலும்,காங்கிரஸில் நான் ஆதிக்கம் வகிப்பதுஎன்பது, பலாத்கார ரகத்தைச் சேர்ந்ததே ஆகும். அதை நான் செய்யாதிருக்க வேண்டும். எப்படியானாலும் சரி, அவர்களின் பகுத்தறிவு சுயேச்சையாக இருக்க விட்டுவிட வேண்டும். ஆட்சேபிக்க முடியாத இந்த உண்மையைக் கண்டுகொண்டு விட்ட பிறகு, என்னுடைய மதிப்பை இழக்கும் ஆபத்து நேர்ந்தாலும் சரி என்று நான் காங்கிரஸை விட்டுப் போகாமல் இருப்பேனாயின், நான் காங்கிரஸினிடம் விசுவாசமில்லாதவன் ஆவேன்.

எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் இன்னும் மேலாக காங்கிரஸுக்குச் சேவை செய்வதற்காக மாத்திரமே நான் அதிலிருந்து விலகுவதாயிருந்தால், என் கௌரவத்திற்கோ, காங்கிரஸின் கௌரவத்திற்கோ எந்த ஆபத்தும் இல்லை. கோபத்திலோ, விரோதத்திலோ, அல்லது ஏமாற்றமடைந்து விட்டதனாலோ நான் விலகவில்லை. எனக்கு எந்த ஏமாற்றமும் இல்லை. நாட்டிற்குப் பிரகாசமான எதிர்காலத்தை என் முன்னால் காண்கிறேன். நமக்கு நாம் உண்மையாக நடந்துகொண்டால் எல்லாம் சரியாக நடக்கும். இன்று நாட்டின் முன்பு இருக்கும் காங்கிரஸ் வேலைத் திட்டத்தைத் தவிர வேறு எந்த வேலைத் திட்டமும் என் முன்பு இல்லை......

இதிலும், இன்னும் பல வழிகளிலும் என்னுடைய அடக்கமான வழியில் காங்கிரஸுக்குச் சேவை செய்யவே ஆசைப்படுவேன். இவ்வாறு முற்றிலும் விலகி இருப்பதனால் நான் காங்கிரஸுக்கு அதிக நெருக்கத்தில் வருவேன் என்று நம்புகிறேன். அப்பொழுது காங்கிரஸ்காரர்கள், சங்கடப்படாமல், ஒடுக்கப்படாமல் என் சேவையை ஏற்றுக்கொள்ளுவார்கள்.

பொதுவான லட்சியத்தை நாடிப் போவதில், எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் தங்கள் முழு மனத்தோடு கூடிய பக்தியை என்னிடம் செலுத்தி வந்தவர்களுக்கு ஒரு வார்த்தை. என்னைப் பொறுத்தவரையில் நான் காங்கிரஸிலிருந்து விலகிக் கொள்ளுவது, அவர்களையும் விலகும்படி அழைப்பதாகும் என்று அவர்கள் கருதிவிடக்கூடாது. காங்கிரஸுக்கு அவர்கள் தேவைப்படும் வரையில் அவர்கள் காங்கிரஸுக்குள் இருந்து, அவர்கள் அறிந்து கொண்டிருக்கும் பொதுவான லட்சியங்களுக்காக அவர்கள் வேலை செய்து வருவார்கள்.

உங்கள்,

**பாபு.**

# ‘கடையனுக்கும் கதி மோட்சம்’

[சர்வோதயம்]

மகாத்மா காந்தியின் ‘சுய சரிதை’யில், நான்காம் பாகத்தில், ‘ஒரு நூலின் மந்திர சக்தி’ என்ற தலைப்புள்ள 18-ஆம் அத்தியாயத்தில், ரஸ்கின் எழுதிய ‘கடையனுக்கும் கதி மோட்சம்’ என்ற புத்தகத்தைக் குறிப்பிடுகிறார். அவர், ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து டர்பனுக்கு ரெயிலில் இருபத்து நான்கு மணி நேரம் பிரயாணம் செய்தபோது அப்புத்தகத்தை தாம் படித்ததைப் பற்றிக் கூறுகிறார்: “ரெயில் அங்கே மாலையில் போய்ச் சேர்ந்தது. அன்றிரவு என்னால் தூங்க முடியவில்லை. அந்நூலில் கண்ட லட்சியங்களுக்கு ஏற்ற வகையில் என் வாழ்க்கையை மாற்றிக்கொண்டு விடுவது என்று தீர்மானித்தேன். ரஸ்கினின் நூல்களில் நான் படித்த முதல் நூல் இதுவே. நான் பள்ளிக்கூடத்தில் படித்து வந்த காலத்தில் பாடப் புத்தகங்களைத் தவிர அநேகமாக வேறு புத்தகங்களை நான் படித்ததில்லை எனலாம். சேவை வாழ்க்கையில் இறங்கிவிட்ட பிறகு படிப்பதற்கு எனக்கு நேரமே இல்லை. ஆகையால், நூல்களைப் படித்த அறிவு எனக்கு உண்டென்று சொல்லிக் கொள்வதற்கு இல்லை. என்றாலும், இந்தக் கட்டாயமான தடையால் நான் அதிகமாக நஷ்டமடைந்துவிடவில்லை என்றே கருதுகிறேன். ஆனால், இதற்கு மாறாக, நான் கொஞ்சமாகப் படித்தது, நான் படித்ததையெல்லாம் அப்படியே கிரகித்துக்கொண்டு விடுவதற்கு உதவியாக இருந்தது. அத்தகைய நூல்களில் என் வாழ்க்கையில் உடனேயே நடைமுறையான மாறுதலை உண்டாக்கிய நூல், ‘கடையனுக்கும் கதி மோட்சம்’ என்ற நூலாகும். பின்னர் அதை குஜராத்தியில் மொழிபெயர்த்து, ‘சர்வோதயம்’ (சர்வ ஜன நலம்) என்ற பெயருடன் வெளியிட்டேன்.”

காந்திஜி எழுதிய அந்த ‘சர்வோதயம்’ என்ற மொழிபெயர்ப்பே இங்கே கொடுக்கப்படுகிறது.

# முன்னுரை

மனித வர்க்கத்தில் பெரும்பான்மையோரின் இன்பத்தை வளர்ப்பதே மனிதனுடைய முழுக் கடமை என்று பொதுவாக மேலை நாட்டு மக்களால் கருதப்படுகிறது. உடலின்பமும் பொருளாதார சுபிட்சமுமே அந்த இன்பம் என்று எண்ணுகிறார்கள். இந்த இன்பத்தை அடையப் பார்ப்பதில் ஒழுக்க நியதிகள் மீறப்பட்டு விடுமானாலும், அதை அவ்வளவாக அவர்கள் பொருட்படுத்துவது இல்லை. மேலும், பெரும்பான்மையினர் இன்பம் பெறுவதை அடையவே இவர்கள் முற்படுவதால், சிறுபான்மையினரைத் தியாகம் செய்து விட்டே இதை அடைய முடிவதானாலும் இதில் எந்தத் தீமையும் இருப்பதாக மேனாட்டினர் எண்ணுவதில்லை. இத்தகைய எண்ணத்தின் விளைவுகளை மேற்கத்திய நாடுகள் எல்லாவற்றிலும் நாம் காண்கிறோம்.

ஒழுக்கத்தைக் குறித்துக் கொஞ்சமும் கவலைப்படாமல், உடலின்பத்தையும் பொருளாதாரச் சுபிட்சத்தையும் மாத்திரமே தேடி அலைவது, மேற்கு நாட்டு அறிஞர்கள் சிலர் எடுத்துக்காட்டியிருப்பதுபோன்று, ஆண்டவனின் தருமத்திற்கு விரோதமானது. அவ்விதம் கூறுகிறவர்களில் ஒருவர் ஜான் ரஸ்கின். ஒழுக்க தருமங்களுக்குப் பணிந்து நடந்தால் மாத்திரமே மனிதர் ஆனந்தமாக வாழ முடியும் என்று அவர், 'கடையனுக்கும் கதிமோட்சம்' (Unto this Last) என்ற நூலில் கூறுகிறார்.

இந்தியர்களாகிய நாம், மேற்கத்திய நாட்டினரைப் போல அதிகமாக நடித்துக் கொண்டு வருகிறோம். மேற்கத்திய நாட்டினரிடமிருக்கும் நற்காரியங்களைப் பின்பற்றி நாம் நடக்க வேண்டியது அவசியமே. ஆனால், அவர்களுடைய தரம் மோசமானது என்பதில் சந்தேகமே இல்லை. தீய காரியங்கள் எல்லாவற்றையும் நாம் தவிர்க்க வேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுவார்கள்.

தென்னாப்பிரிக்காவிலிருக்கும் இந்தியர் துக்ககரமான நிலைக்கு இழிந்துவிட்டார்கள். பணம் சம்பாதிப்பதற்காக நாம் வெளிநாடுகளுக்குப் போகிறோம். சீக்கிரத்தில் பணக்காரர்களாகிவிடச் செய்யும் முயற்சியில் ஒழுக்கம் என்பதையே நாம் கவனிப்பதில்லை. நாம் செய்யும் காரியங்களில் நன்மை, தீமைகளுக்குக் கடவுள் தீர்ப்பளிப்பார் என்பதையும் மறந்துவிடுகிறோம். நமது சக்திகளையெல்லாம் சுயநலம் ஆட்கொண்டுவிடுகிறது. நல்லது இன்னது, தீயது இன்னது என்பதை நாம் பகுத்தறிய அதனால் முடியாது போகிறது. இதன் பலனாக, வெளிநாடுகளில் நாம் தங்கியிருப்பதால் நாம் லாபமடைவதற்குப் பதிலாக அதிகமாக இழந்துவிட்டவர்களாகவே ஆகிறோம். அதன் முழுப் பயனையும் அடைய முடியாதவர்களாகவாவது ஆகிவிடுகிறோம்.

உலகத்திலுள்ள எல்லா சமயங்களிலும் அத்தியாவசியமான அம்சமாக இருப்பது, ஒழுக்கம். ஆனால், சமயம் ஒருபுறமிருக்க, ஒழுக்க தருமத்தை அனுசரிக்க வேண்டியதன் அவசியத்தை நம் பகுத்தறிவும் சுட்டிக் காட்டுகிறது. பின்வரும் பக்கங்களில் ரஸ்கின் எடுத்துக்காட்டுவது போன்று, ஒழுக்க தருமத்தை அனுசரிப்பதனல் நாம் இன்புற்றிருக்க முடியும்.

பிளாட்டோவின் 'அபாலஜி' (மன்னிப்பு)* என்பதில் சாக்ரடீஸ், மனிதர்கள் என்ற வகையில் நமக்குள்ள கடமைகளைக் குறித்து நமக்கு சில விஷயங்களைக் கூறுகிறார். தாம் சொல்லுகிறபடி நடக்கிறவர் அவர். சாக்ரடீஸின் கருத்துக்களை விரிவுபடுத்தியிருப்பதே ரஸ்கினின் 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்று கருதுகிறேன். இக்கருத்துக்களை நடைமுறையில் அனுசரிக்க வேண்டுமானல், பல தரப்பட்ட வாழ்க்கைத் துறைகளிலும் இருப்பவர்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை அவர் நமக்குக் கூறுகிறார். பின்னல் கொடுக்கப்பட்டிருப்பது 'கடையனுக்கும் கதி மோட்சம்' என்ற நூலின் மொழிபெயர்ப்பு அல்ல. மொழிபெயர்ப்பு 'இந்தியன் ஒபீனியன்' வாசகர்களுக்கு அனுபவத்தில் பயனுள்ளதாக இராததால், அதைத் தழுவியே இதை எழுதியிருக்கிறேன். அந்நூலின் பெயரையும் மொழிபெயர்க்கவில்லை. இப்புத்தகத்தை எழுதியதில் எல்லோருடைய நலனையுமே ரஸ்கின் தமது நோக்கமாகக் கொண்டிருந்திருக்கிறாராகையால், அந்தத் தலைப்பைத் தழுவி இதற்குச் 'சர்வோதயம்' என்று பெயர் கொடுத்திருக்கிறேன்.

கட்டுரை 1

# உண்மையின் வேர்கள்

மனித வர்க்கத்தைப் பல தரப்பட்ட காலங்களிலும் பல தவருன அபிப்பிராயங்கள் பாதித்திருக்கின்றன. சமூகத்திற்கு ஏற்படக்கூடிய தீமைகளைப் பொருட்படுத்தாமல், சாதகமான செயல் தருமத்தை நிர்ணயித்துக்கொள்ளலாம் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும் இக்காலப் பொருளாதாரமே அத்தகைய அபிப்பிராயங்களிலெல்லாம் மிகப் பெரியதும், அதிகக் கேவலமானதுமாகும்.

மற்ற தவருன அபிப்பிராயங்களில் இருப்பதைப் போன்றே ராஜீய பொருளாதாரமும் அதன் வேரில் நியாயமான ஒரு கருத்தையும் கொண்டிருக்கிறது என்பது உண்மை. பொருளாதாரப் பண்டிதர் வருமாறு கூறுகிறார்: "சமூகத்தினிடம் அன்பு

* காந்திஜி இந்த 'அபாலஜி' என்ற நூலின் சாராம்சத்தையும், 'சர்வோதய'த்தை எழுதுவதற்கு முன்னல் 'இந்தியன் ஒபீனியன்' பத்திரிகையில் எழுதினர்.

என்பது மனித இயற்கையில் தற்செயலாக ஏற்படும் நிலை குலைக்கும் அம்சமாகும். ஆனால், பொருளில் பேராசையும், முன்னேற்றத்தில் விருப்பமும் நிரந்தரமான அம்சங்கள். நிலையற்றவைகளாக இருப்பவைகளை நீக்கிவிடுவோம். பணம் சம்பாதிக்கும் யந்திரமே மனிதன் என்பதைக் கவனிக்க வேண்டும். இதைக் கொண்டு மிக அதிக அளவு பணத்தைச் சேர்ப்பதற்கு உழைப்பு, பொருள்களை வாங்குவது, விற்பது ஆகியவைகளில் எந்த வகையான முறைகளை அனுசரிக்கலாம் என்பதை ஆராய வேண்டும். இந்த விதிகளை ஒரு முறை நிர்ணயித்துவிட்டால், பிறகு அன்பைக் குலைக்கும் அம்சத்தை எந்த அளவுக்குப் புகுத்திக்கொள்ளுவது என்பது அவரவர்களின் இஷ்டத்தைப் பொறுத்ததாக இருக்கும்.''

பின்னால் புகுத்தப்படும் தற்செயலானவை, முதலில் ஆராய்ந்த சக்திகளைப் போன்ற தன்மையுடையவைகளாகவே இருப்பின், இதுவே விளக்கத்தின் நியாயமான முறையாக இருக்கும். சலனத்திலிருக்கும் உடல், நிரந்தரமானதும், நிரந்தரமானதல்லாததுமான சக்தியைக்கொண்டு அப்படி இயங்குகிறது என்று வைத்துக்கொண்டால், அதன் போக்கை ஆராய்வதற்கு எளிதான ஒரு வழி உண்டு. முதலில் அதன் தொடர்ந்த நிலையில் ஆராய்ந்து, அதன் பிறகு மாறுபடுவதன் காரணங்களைப் புகுத்துவதே அவ்வழி. ஆனால், சமூகப் பிரச்னையில் உள்ள நிலை குலைக்கும் அம்சங்கள், நிரந்தரமானவைகளைப் போன்று அதே விதமான தன்மைகளை உடையன அல்ல. இவற்றைச் சேர்த்தவுடனே, பரிசீலனையிலிருக்கும் மனித வர்க்கத்தின் முக்கியாம்சத்தையே அவை மாற்றிவிடுகின்றன. அவை ரசாயன ரீதியில் இயங்குகின்றனவே யன்றி கணிதப்படி இயங்கவில்லை. இதனால் ஏற்படும் நிலைமை, இதற்கு முன்னால் நாம் அடைந்திருக்கும் அறிவையெல்லாம் பயன்படாதபடி செய்துவிடுகிறது,

இந்தச் சாத்திரத்தின் விதிகளை ஒப்புக்கொண்டுவிட்டால், அதனால் ஏற்படும் முடிவுகளை நான் சந்தேகிக்கவில்லை. மனிதருக்கு எலும்புகள் என்பதே கிடையாது என்று சொல்லிவிடும் உடற்பயிற்சி சாத்திரத்தில் நான் எப்படி சிரத்தைகொள்ள முடியாதோ அதே போல, அந்த விதிகளிலும் எனக்குக் கொஞ்சமும் சிரத்தை இல்லை. எலும்பே இல்லாத வெறும் சதைதான் மனிதன் என்று வைத்துக்கொண்டு, மாணவர்களைப் பந்தாக உருட்டிவிடுவதற்கோ, அடையாகத் தட்டிவிடுவதற்கோ, அல்லது கம்பியாக நீட்டிவிடுவதற்கோ இது சௌகரியமானதாக இருக்கும் என்று காட்டலாம், இக்காரியங்களெல்லாம் செய்யப்பட்டுவிட்ட பிறகு, அவர்களின் உடம்பில் இருக்கும் பல அசௌகரியங்களுக்குத் தக்கபடி அவற்றில் எலும்புக்கூட்டைப் புகுத்திவிடலாம் என்று சொல்லப்படலாம். காரணங்கள் அற்புதமானவைகளாக இருக்கலாம்; முடிவுகளும் உண்மையாக இருக்கலாம். ஆனால், இந்தச் சாத்திரம், அனுசரிப்பதில்தான் முடியாததாக

இருக்கும். இக்கால ராஜீய பொருளாதாரமும் அதே போன்ற நிலைமையில்தான் இருக்கிறது. மனிதனுக்கு உடல்தான் உண்டே யன்றி ஆன்மா இல்லை என்று அது எண்ணுகிறது. எனவே, ஆன்மாவைப்பற்றிய சிந்தனையே இல்லாமல், அதற்கு ஏற்ற வகையில் சட்டங்களை வகுக்கிறது. ஆனால், மனிதனிடத்தில் ஆன்மாவே மிகப் பிரதானமான அம்சமாக இருக்கும்போது அப்படிப்பட்ட சட்டங்களெல்லாம் மனிதனுக்கு எப்படிப் பொருந்தும்?

ராஜீய பொருளாதாரம், ஒரு சாத்திரமே அல்ல. தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்துவிடும்போது அது எவ்வளவு திக்கற்ற கதியில் இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். அவ்விஷயத்தில் எஜமானர்கள் ஒரு வகையாக எண்ணுகிறார்கள். தொழிலாளர் வேறுவிதமாக நினைக்கிறார்கள். இரு தரப்பினரும் ஒரேவிதமாக எண்ணும்படி எந்த ராஜீய பொருளாதாரமும் செய்துவிடவில்லை. எஜமானர்களின் நலன், தொழிலாளரின் நலனுக்கு விரோதமானதல்ல என்பதைக் காட்டுவதற்காக, ஆட்சேபிக்கிறவர்களில் ஒருவர் பின் மற்றொருவராக வீணில் முயற்சி செய்கின்றனர். நலன்கள் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கின்றன என்பதனால், மனிதர்கள் ஒருவருக்கொருவர் உண்மையில் விரோதமானவர்களாக இருக்க வேண்டும் என்பதில்லை. வீட்டில் ஒரு சிறு ரொட்டித் துண்டுதான் இருக்கிறது. தாயும் குழந்தைகளும் பட்டினியாக இருக்கிறார்கள் என்றால், தாயின் நலனும், குழந்தைகளின் நலனும் ஒன்றே அல்ல. அவை வெவ்வேறானவை. அந்த ரொட்டியைத் தாய் தின்றுவிட்டால், அந்த ரொட்டி குழந்தைகளுக்கு இல்லாது போகும். குழந்தைகள் அதைத் தின்றுவிட்டால், தாய் பட்டினியோடுதான் வேலைக்குப் போகவேண்டி வரும். என்றாலும், இதனால் தாய்க்கும் குழந்தைகளுக்குமிடையே விரோதம் இருக்கிறது என்றாகாது. ரொட்டிக்காக இவர்கள் சண்டை போட்டுக்கொள்ளுவார்கள், தாய்க்கே அதிக பலம் இருப்பதால் அந்த ரொட்டியை அவள் பறித்துத் தின்றுவிடுவாள் என்று சொல்ல முடியாது. அதேபோல, நலன்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டதாக இருக்கின்றன என்பதனால் மனிதர் ஒருவருக்கொருவர் விரோதமாகக் கருதிக்கொண்டு, சாதகத்தை அடைவதற்காகப் பலாத்காரத்தையும் தந்திரத்தையும் உபயோகிக்கக் கூடாது.

எலிகளுக்கும் பன்றிகளுக்கும் இருக்கும் உணர்ச்சிக்கு அதிகமாக மனிதர் வேறு எந்த ஒழுக்க உணர்ச்சியுடனும் காரியங்களைச் செய்வதில்லை என்று நாம் எண்ணுவதாக இருந்தாலும், எஜமானனுக்கும் தொழிலாளிக்கும் உள்ள நலன்கள் ஒரே மாதிரியானவை என்றோ, அல்லது அவை ஒன்றுக்கொன்று விரோதமானவை என்றோ பொதுவாக எப்பொழுதுமே காட்டிவிட முடியாது. ஏனெனில், சந்தர்ப்பத்தையொட்டி அவை இரண்டு விதமாகவும் இருக்கக்கூடும். வேலை சரியாக நடந்து, அதற்குச் சரியான விலை கிடைக்க வேண்டும் என்பது உண்மையில் இரு

தரப்பாரின் நன்மைக்குமானதாகும். ஆனால், லாபங்களை பங்கு போடுவதில், ஒருவருக்கு லாபமாக இருப்பது இன்னொருவருக்கு நஷ்டமாகவும் ஆகலாம்; அப்படி ஆகாமலும் இருக்கலாம். தொழிலாளர் சீக்காளிகளாகவும் உற்சாகமில்லாதவர்களாகவும் ஆகிவிடும் வகையில் அவருக்கு அதிகக் குறைவான கூலியைக் கொடுத்து வருவது, எஜமானனின் நலனுக்கு நல்லது அல்ல. எஜமானனுக்குக் கிடைக்கும் மிகக் குறைந்த லாபம், அத் தொழிலை நல்ல, தாராளமான வகையில் நடத்துவதற்கு இடையூறாகிவிடும்போது, தொழிலாளிக்கு அதிகக் கூலி கொடுக்க வேண்டும் என்பது, தொழிலாளியின் நலனுக்கும் நல்லது அல்ல. யந்திரத்தைப் பழுது பார்த்து ஓடும்படிச் செய்யக்கூட பண மில்லாத நிலைமையில் ஒரு கம்பெனி இருக்கும்போது, அந்த யந்திரத்திற்குக் கரி போடுகிறவர் அதிகக் கூலி வேண்டும் என்று விரும்பக்கூடாது.

ஆகையால், சுயநல லாபத்திலிருந்தே செயல் முறைகளை யெல்லாம் வகுப்பது என்று செய்யப்படும் முயற்சிகளெல்லாம் வீணானவையே; வீணானவைகளாக இருப்பதற்கானவையே அவை. ஏனெனில், மனிதனைப் படைத்த கடவுளின் நோக்கம், அம்மனிதனின் செயல்கள் நீதியின் பலனை அனுசரித்து இருக்க வேண்டும் என்பதே யன்றிச் சுயநலத்தின் பலனை அனுசரித்ததாக இருக்க வேண்டும் என்பது அல்ல. ஆகையால், சுயநலத்தைக் கொண்டு நிர்ணயிக்கப் பார்க்கும் முயற்சிகளெல்லாம் என்றுமே வீணாகும்படி செய்திருக்கிறார். ஒரு வழியில் ஒரு காரியத்தைச் செய்வதனால் தனக்கோ அல்லது மற்றவர்களுக்கோ என்ன உண்டாகும் என்பதை எந்த மனிதனும் அறிய முடியாது. ஆனால், நியாயமான காரியம் எது, அநியாயமான காரியம் எது என்பதை ஒவ்வொருவரும் அறியலாம்; நம்மில் அநேகருக்கு அது தெரியும். சிறந்தது எது என்றோ, அது எப்படி ஏற்படக்கூடும் என்றோ நாம் கூறமுடியாமல் இருக்கலாம். என்றாலும், நீதியின் விளைவு சாத்தியமானவரையில் முடிவாக மற்றவர்களுக்கும் நமக்கும் சிறந்த நன்மையாகவே இருக்கும் என்பதை நாம் எல்லோரும் அறிய முடியும்.

நீதி என்பதில் அன்பு என்பதும் கலந்து இருக்க வேண்டும் என்பதே என் கருத்து. அத்தகைய அன்பு, ஒரு மனிதன் இன்னொருவருக்குக் கடன்பட்டதாக இருக்க வேண்டும். எஜமானனுக்கும் தொழிலாளிக்கும் இருக்க வேண்டிய சரியான எல்லா உறவுகளும் முடிவில் இதைப் பொறுத்ததாகவே இருக்கின்றன.

இதற்கு ஓர் உதாரணமாக, வீட்டு வேலைக்காரர்களின் நிலைமையைக் கவனிப்போம்.

ஒரு வீட்டு எஜமானன், தான் கொடுக்கும் கூலியின் விகிதத்தை அனுசரித்து, தன்னால் வேலைக்காரனிடமிருந்து எவ்வளவு வேலை வாங்க முடியுமோ அவ்வளவு வேலையை வாங்குகிறான்

என்று வைத்துக்கொள்ளுவோம். வேலைக்காரர்கள் சோம்பேறித்தனமாக இருந்துவிட அவன் அனுமதிப்பதே இல்லை. அவர்கள் சகித்துக்கொள்ளக்கூடிய மட்டும் அவர்களுக்குக் கொஞ்சமாகச் சோறு போட்டு, இருக்க மோசமான இடம் தருகிறான். எஜமானன் இப்படிச் செய்வதனால், பொதுவாக. 'நீதி' என்று சொல்லப்படுவதை அவன் மீறி நடந்துவிடவில்லை. முழு நேரத்திற்கும், சேவைக்கும் கொடுப்பதற்குச் சம்மதித்தே அவர்களை வேலைக்கு ஏற்றுக்கொள்ளுகிறான். அவர்களை எந்த அளவுக்குக் கடுமையாக நடத்தலாம் என்பது, அக்கம் பக்கத்திலிருக்கும் எஜமானர்களின் பழக்கத்தைக்கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. வேலைக்காரனுக்கு இதைவிட நல்ல இடம் கிடைத்தால், அந்த வேலைக்கு அவன் தாராளமாகப் போகலாம்.

இதுதான் பொருளாதார சாஸ்திரத்தின் பண்டிதர்கள் இவ்விஷயத்தைப் பற்றிக்கொள்ளும் ராஜீய-பொருளாதாரக் கருத்தாகும். இந்த முறையினால், வேலைக்காரனிடமிருந்து மிக அதிகமான சராசரி வேலையை வாங்க முடியும் என்கிறார்கள். ஆகவே, அதனால் சமூகத்திற்கு மிக அதிக நன்மையும், சமூகத்தின் மூலம் அந்த வேலைக்காரனுக்கும் அதிக நன்மையும் உண்டாகும் என்றும் அப்பண்டிதர்கள் கூறுகின்றனர்.

என்றாலும், உண்மையில் அது அப்படி அல்ல. வேலைக்காரன் ஒரு யந்திரமாக இருந்து, நீராவியோ, காந்த சக்தியோ, அல்லது அத்தகைய கணக்கிடக்கூடியதான வேறு எந்தச் சக்தியைக் கொண்டோ அவன் இயங்குவதாக இருந்தால், பொருளாதாரப் பண்டிதர்கள் சொல்லுவது சரியாக இருக்கும். ஆனால், வேலைக்காரனோ, ஆன்மா என்ற ஓர் இயக்கும் சக்தியைக்கொண்டவன். பொருளாதாரப் பண்டிதருக்கும் தெரியாமலேயே ஆன்ம சக்தி அவர் போடும் கணக்குகளுக்குள் புகுந்து, அதன் பலன்கள் ஒவ்வொன்றையும் பொய்யாக்கிவிடுகின்றது. இந்த விசித்திரமான யந்திரம், கூலிக்காகவோ, நிர்ப்பந்தத்திற்காகவோ அதிக அளவு வேலையைச் செய்துவிடாது. ஆனால், அதை இயக்கும் சக்தி, அதாவது படைத்தவனின் இஷ்டம் அல்லது உணர்ச்சி, சரியான அதற்குரிய எரி பொருளை, அதாவது அன்புகளைப் பெற்று, அதை அதிக பலத்திற்குக்கொண்டு வரும்போதுதான், மனித யந்திரம் அதிகப்படியான வேலையைச் செய்யும்படி செய்ய முடியும்.

எஜமானன், புத்திசாலித்தனமும் சக்தியும்உள்ளவனாக இருந்தால், வேலையாளை அதிக நிர்ப்பந்தப்படுத்தி அதன் மூலம் அதிக வேலை வாங்கிவிடுவது நடந்தே வருகிறது. எஜமானன் சிரத்தையில்லாதவனாகவும் பலவீனமானவனாகவும் இருக்கும்போது, மிகக் குறைந்த வேலையை, அதுவும் மோசமான வேலையையே வேலைக்காரன் செய்கிறான் என்பதும் நடந்துதான் வருகிறது. ஆனால், இவ்விஷயத்தில் எல்லோருக்கும் பொருந்துவதான ஒரு விதி உண்டு. எஜமானனுக்கும் வேலைக்காரனுக்கும் ஒரு

குறிப்பிட்ட அளவு சக்தியும் புத்திசாலித்தனமும் இருந்து, அவைகளால் அடையும் மிகுந்த பலன், இவர்கள் ஒருவருக் கொருவர் கொள்ளும் அன்பினுல் ஏற்படுவதாக இருக்குமேயன்றி ஒருவருக்கொருவர் கொள்ளும் விரோதத்தினுல் அடைவதாக இராது.

தாராளமாக நடந்துகொள்ளுவது எப்பொழுதும் தவருக உபயோகித்துக் கொள்ளப்பட்டுவிடும், அன்பு காட்டினுல் நன்றி யில்லாமல் இருப்பதுதான் ஏற்படும் என்பதும் இவ்விஷயத்தில் உண்மையல்ல. ஏனெனில், கண்ணியமாக நடத்தப்படும் வேலைக்காரன் நன்றியில்லாதவனுக இருப்பான் என்ருல், கண்ணியமாக நடத்தப்படாதவன் வஞ்சந் தீர்க்கும் மனே பாவத்தில் இருப்பான். தாராளமாக நடந்துகொள்ளும் எஜமான னிடம் அயோக்கியனுக இருப்பவன், நியாயமில்லாதவனுக்குத் தீமை செய்பவனுகவே இருப்பான்.

சுயநலமற்று நடத்துவது, எந்த விஷயத்திலும், யார் விஷயத் திலும், அதிக நன்மையான பலனையே உண்டாக்கும். அன்பு முழு வதையுமே நான் இங்கே இயக்கும் சக்தியாகவே கவனிக்கிறேன். அவைகளில் இருப்பவை விரும்பத்தக்கவை, உயர்வானவை என்பதைக்கொண்டு மாத்திரம் கவனிக்கவில்லை. சாதாரணமான பொருளாதாரப் பண்டிதரின் ஒவ்வொரு கணக்கையும் பயனற்ற தாகச் செய்துவிடும் ஓர் அசாதாரணமான சக்தி அது என்றவகை யிலேயே அதைப் பார்க்கிறேன். மற்றெல்லா நோக்கங்களையும், பொருளாதார நிலைமையையும் அவை அலட்சியம் செய்துவிடும் போதுதான் அன்புகள் உண்மையான இயக்கும் சக்தியாக ஆகின்றன. வேலைக்காரனின் நன்றியைப் பெற வேண்டும் என்பதற்காக அவனை அன்பாக நடத்துங்கள். அப்பொழுது உங்களுக்கு நன்றியறிதலோ, அல்லது உங்கள் அன்பிற்கான மதிப்போ உங்களுக்குக் கிடைக்காது. ஆனுல், அவனைப் பொரு ளாதார நோக்கம் எதுவும் இல்லாமல் அன்பாக நடத்துங்கள். அப்பொழுது எல்லாப் பொருளாதார லாபங்களும் ஏற்படும். மற்றவைகளைப் போன்றே இதிலும், யார் தன் உயிரைக் காப்பாற் றிக் கொள்ளுகிருனே அதை அவன் இழந்து விடுவான்; அதை யார் இழக்கிருனே அவன் அதைக் காண்பான்.

எஜமானனுக்கும் வேலைக்காரனுக்குமிடையே இருக்கும் உற வைப் பற்றிய அடுத்த மிகச் சாதாரணமான உதாரணம், ஒரு படையின் தளபதிக்கும் அதன் சிப்பாய்களுக்கும் இருக்கும் உறவுதான்.

அந்தத் தளபதி, தன்னளவில் எந்தச் சிரமமும் எடுத்துக் கொள்ளாமல்,சிப்பாய்கள் கட்டுத்திட்டங்களுக்கு அடங்கிசரியாக வேலை செய்ய வேண்டும் என்று மாத்திரம் விரும்புகிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது, அந்தப் பட்டாளம் சரியானபடி பயன்படும்படிச் செய்ய அவரால் முடியாது. இந்தச்

சுயநலக் கொள்கையின் பேரில் தமது சிப்பந்திகள் முழுப் பலத்துடன் முன்னேறும்படி செய்யவும் அவரால் ஆகாது. ஆனல், அந்தத் தளபதி தமது சிப்பாய்களுடன் அதிக நெருக்கமான உறவு வைத்துக் கொள்ளுவாரானல், அவர்களுடைய நலனில் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ளுவாராயின், அவர்கள் தங்கள் தளபதியினிடம் கொள்ளும் அன்பினலும், அவருடைய நடத்தையில் அவர்கள் கொள்ளும் நம்பிக்கையினலும், வேறு எந்தவிதமான முறையினலும் அடைய முடியாத வகையில் அந்தச் சிப்பாய்கள் பயனுள்ள வகையில் நல்ல பலத்துடன் விளங்கும்படி செய்துவிட முடியும். சம்பந்தப்பட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாகும்போது முக்கியமாக இதுவே பொருத்தமானதாக இருக்கும். சிப்பாய்கள் தங்கள் அதிகாரிகளை வெறுக்கும் சமயத்திலும் அவர்கள் நடத்தும் ஒரு தாக்குதல் வெற்றியானதாக இருக்கலாம். ஆனல், தளபதியினிடம் சிப்பாய்கள் அன்புடன் இருந்தாலன்றி எந்த ஒரு போரும் வெற்றியில் முடிந்துவிடுவதில்லை.

பண்டைக் காலத்தில் மலைப் பிரதேச வகுப்பார் கொள்ளைக் கூட்டம் வைத்திருந்திருக்கிறார்கள். கொள்ளையடிப்பதற்கென்று சேர்ந்திருக்கும் அத்தகைய ஒரு கூட்டத்திலிருக்கும் ஒவ்வொருவருக்கும் அக்கூட்டத் தலைவனிடம் நிறைந்த அன்பு இருக்க வேண்டும். தலைவன் உயிருக்காகத் தங்கள் உயிரை விட ஒவ்வொருவனும் தயாராக இருக்க வேண்டும். அப்படியே இருந்தும் வருகிறார்கள். ஆனல், சட்ட ரீதியான வகையில் உற்பத்தியைச் செய்யச் சேர்ந்திருப்பவர்களிடையேயோ, அத்தகைய அன்பு உணர்ச்சி இல்லை. இவர்களில் யாரும் தன் தலைவனுக்காக உயிரைக் கொடுக்கத் தயாராக இல்லை. ஏனெனில் ஒரு வேலைக்காரனே, சிப்பாயோ, ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்வதற்கென்று திட்டமான ஒரு கூலிக்கு நியமித்துக் கொள்ளப்படுகிறான். ஆனல், ஒரு தொழிலாளிக்குக் கொடுக்கச் சம்மதிக்கும் கூலி, கூலிக்கு ஆள் கிடைக்கும் கிராக்கியைப் பொறுத்து ஏறவும் இறங்கவும் கூடியதாக இருக்கிறது. அதோடு அத்தொழிலுக்கு ஏற்படும் நிலைமையைப் பொறுத்து எந்தச் சமயத்திலும் வேலையை இழந்துவிடக்கூடிய ஆபத்தும் தொழிலாளிக்கு இருக்கிறது. ஆகையால், இத்தகைய நிலைமையில் அன்பினல் ஏற்படக்கூடிய காரியம் 'எதுவும் நிகழ்வதற்கில்லை. ஆனல், அன்பின்மையால் திடீரென்று ஏற்பட்டுவிடக்கூடிய செயல்களே இதில் இருக்கின்றன. இவ்விஷயத்தில் இரண்டு விஷயங்களைக் கவனிக்க வேண்டியதாகிறது.

1. தொழிலாளருக்கு இருக்கும் கிராக்கியைப் பொறுத்துத் தொழிலாளியின் கூலி ஏறி, இறங்கிக் கொண்டிருக்காமல் அந்த ஊதியத்தை எந்த அளவுக்கு ஒழுங்குபடுத்த முடியும்.

2. ஒரு தொழிலின் நிலைமை எதுவாக இருந்தாலும், தொழிலாளரின் தொகையை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ

செய்யாமல், புராதனமான குடும்பத்திலிருக்கும் ஒரு வீட்டு வேலைக்காரனையோ அல்லது ஒரு சிறு பட்டாளத்திலிருக்கும் சிப்பாய்களையோ போல, தொழிலாளர் எந்தத் தொழிலில் ஈடு பட்டிருக்கிறார்களோ அத்தொழிலில் அவர்களுக்கு நலவுரிமை இருக்கும் வகையில், ஒரு தொழிலாளர் தொகையை நியமித்து, நிரந்தரமான ஊதியத்தில் அவர்களை எந்த அளவுக்கு வைத்துக் கொண்டிருக்க முடியும் என்பது.

இனி முதல் விஷயத்தை ஆராய்வோம்:

இது விஷயத்தில், மனிதனின் தவறு சம்பந்தமான சரித்திரத்தில் ஒரு விசித்திரமான உண்மை உண்டு. தொழிலாளிக்கு இருக்கும் கிராக்கியைப் பொறுத்து அவனுடைய கூலி ஏறி, இறங்காமலிருக்கும் வகையில் கூலியை ஒழுங்குபடுத்துவது சாத்தியம் என்பதைப் பொருளாதாரப் பண்டிதர்கள் மறுத்திருப் பதுதான் அந்த விசித்திரமான உண்மை.

குறைந்த ஊதியத்திற்கு யார் கிடைப்பார் என்பதற்காக ஏலத்தில் விட்டு நாம் நம் பிரதம மந்திரிப் பதவியை விற்பதில்லை. நாம் நோயுற்று விட்டால், குறைவாக எந்த வைத்தியர் பணம் வாங்குவார் என்று பார்த்து நாம் அவரிடம் வைத்தியம் செய்து கொள்ளப் போவதில்லை. வழக்குத் தொடர நேர்ந்ததால், வக்கீல் கட்டணத்தைக் குறைத்துக் கொடுக்க நாம் எண்ணுவ தில்லை. மழையில் நாம் சிக்கிக்கொண்டு விடும்போது, குறைந்த வாடகைக்கு வரும் வண்டிக்காரரைத் தேடித் தரும்படி வண்டிக் காரர்களை நாம் கேட்டுக் கொண்டிருப்பதில்லை.

சிறந்த தொழிலாளிக்கு, எல்லாத் தொழிலாளருக்கும் கொடுக்க வேண்டியதைப் போன்று, மாறுபாடில்லாத வகை யிலேயே ஊதியம் கொடுக்கப்பட்டிருக்கிறது; கொடுக்க வேண்டும்.

'என்ன? நல்ல வேலைக்காரருக்கும், மோசமான வேலைக்கார ருக்கும் ஒரே மாதிரி கூலி கொடுப்பதா?' என்று வாசகர் ஒரு வேளை ஆச்சரியத்துடன் கேட்கலாம்.

நிச்சயமாக அப்படித்தான் கொடுக்க வேண்டும். உங்கள் ஆன்மாவின் மீது வேலை செய்பவரான மதப் பிரசாரகருக்கு, அவர் நல்ல பிரசாரகராயினும் மோசமான பிரசாரகராயினும், ஒரே மாதிரியான ஊதியத்தைத்தான் அவருக்குத் திருப்தியுடன் கொடுக்கிறீர்கள். உடலின் மீது வேலை செய்பவரான வைத்திய ருக்கு, அவர் நல்ல வைத்தியரா யிருந்தாலும் மோசமான வைத் தியராக இருந்தாலும், ஒரே மாதிரியான கட்டணம்தான் திருப்தி யுடன் கொடுக்கிறீர்கள். உங்கள் வீட்டில் வேலை செய்கிறவருக் கும், அவர் நல்ல வேலைக்காரராக இருந்தாலும் மோசமான வேலைக்காரராக இருந்தாலும், ஒரே மாதிரியான கூலியை இன் னும் அதிக திருப்தியுடன் நீங்கள் கொடுக்கலாம்.

'அப்படியல்ல. எனக்கு வைத்தியம் செய்ய வைத்தியரை, வைத்தியர்களின் தரத்தைக் குறித்து நான் கொண்டிருக்கும் அறிவைக் கொண்டு நான் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறேன்' என்று நீங்கள் சொல்லலாம். அதே போலவே, உங்களுக்கு வேண்டிய கொத்தரையும் நீங்கள் உங்கள் இஷ்டம்போல் தேர்ந் தெடுத்துக் கொள்ளுங்கள். அப்படி 'தேர்ந்தெடுத்துக்கொள்ளப் படும்' நல்ல தொழிலாளிக்கு அதுவே சரியான சன்மானமாகும். எல்லாத் தொழிலாளருக்கும் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் ஊதி யம் கொடுக்க வேண்டும். ஆனுல், நல்ல தொழிலாளியை வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும், மோசமான தொழிலா ளிக்கு வேலையில்லாமல் இருக்க வேண்டும். தொழிலாளர் சம்பந்த மான சரியான முறை இதுதான். ஆனுல், மோசமாக வேலை செய்யும் ஒரு தொழிலாளி, தன் வேலையைப் பாதி விலைக்கு விற்க அனுமதிப்பதோ, நல்ல தொழிலாளிக்குப் பதிலாக இவன் வேலை செய்ய விடுவதோ, அல்லது இவனுடைய போட்டியினுல் நல்ல தொழிலாளி பற்ருததான தொகைக்கு வேலை செய்யப் பார்ப் பதோ தவருன முறையாகும்.

இனி இரண்டாவது விஷயத்தைக் கவனிப்போம். ஊதியம் ஒரே மாதிரியானதாக இருப்பதற்கான வழியைக் கண்டாக வேண்டியது முதல் நோக்கம். தொழிலாளர் உற்பத்தி செய்யும் பொருளுக்குத் தற்செயலாக ஏற்படும் தேவை நிலைமை எதுவாக இருந்தாலும், தொழிலாளர் நிரந்தரமான தொகையினர் எப் பொழுதும் வேலை செய்து வரும்படி பார்ப்பது நமது இரண்டா வது நோக்கம்.

வேலை நிச்சயமானதாகவும், தொடர்ந்து இருந்து வருவதா கவும் உள்ள வேலையிலிருப்பவர் வாங்கும் ஊதியத்தைவிட, வேலை மத்தியில் போய்விடும் என்று இருக்கும் வேலையிலிருப்பவர் வாழ்வதற்குப் போதுமானதாகப் பெற வேண்டிய கூலி அவசிய மாக அதிகமாகவே இருக்க வேண்டும். நிச்சயமானதாகவும், தொடர்ந்தும் வேலையில் இருப்பவர், நிர்ணயமான சம்பளம் என்ற வகையில் குறைந்த ஊதியத்தை வாங்கிக்கொள்ளுவார். தொழிலாளிக்கு ஒழுங்காகத் தொடர்ந்து வேலை இருந்து வருவது தொழிலாளிக்கு நல்லது. எஜமானன், அப்பொழுது அதிக லாபம் சம்பாதிக்கவோ, துணிந்து எதையும் செய்து பார்க்கவோ, சூதாட் டத்தில் ஈடுபட்டிருக்கவோ முடியாவிட்டாலும் இது நாளாவட் டத்தில் எஜமானனுக்கும் நல்லது.

தனது தளபதிக்காகத் தன் உயிரையும் கொடுப்பதற்கு ஒரு சிப்பாய் தயாராக இருக்கிருன். ஆகையால், ஒரு சாதாரண தொழிலாளியைவிட ஒரு சிப்பாய் அதிக கௌரவமாக மதிக்கப் படுகிருன். உண்மையைச் சொன்னுல், மற்றவர்களைப் பாதுகாப் பதற்காகத் தான் கொல்லப்படவும் தயாராயிருப்பதுதான் ஒரு சிப்பாயின் தொழிலே அன்றிப் பிறரைக் கொல்லுவது அல்ல.

ராஜ்யத்தின் சேவைக்காக அவன் உயிரை வைத்திருக்கிறான். அதனால்தான் உலகம் சிப்பாயைக் கௌரவிக்கிறது.

முடிவாக, தன்னலத் தியாகம் செய்பவர்களாக இருக்கும் வக்கீல்கள், வைத்தியர்கள், மதப் பிரசாரகர்கள் ஆகியவர்களுக்கு நாம் செலுத்தும் மரியாதை, சிப்பாய்க்குச் செலுத்தும் மரியாதையைவிட எந்த விதத்திலும் குறைந்தது அல்ல. ஒரு நீதிபதியின் ஸ்தானத்தில் ஒரு வக்கீலை வைத்துவிட்டால், என்ன வந்தாலும் சரி என்று அவர் நியாயமாகத் தீர்ப்புக் கூறவே பாடுபடுவார். எவ்வளவுதான் கஷ்டம் இருந்தாலும் சரி, ஒரு வைத்தியர் தனது நோயாளிக்குச் சிரத்தையுடனேயே வைத்தியம் செய்வார். அதேபோல, மதப் பிரசாரகரும், தம் பிரசங்கத்தைக் கேட்க வந்திருப்பவருக்கு உபதேசம் செய்து, நல்ல வழியில் நடக்குமாறு கேட்டுக்கொள்ளுவார்.

அறிவாளிகள் செய்யும் தொழில்கள் என்று கருதப்படும் இத்தொழில்களில் அதிகத் திறமைசாலிகளாக இருப்பவர்களைப் பொதுஜனங்கள் எப்பொழுதும் கௌரவமாகவே மதிக்கிறார்கள். ஒரு வர்த்தக ஸ்தாபனத்தின் தலைவரைவிட இவர்களைக் கௌரவமாக எண்ணுகிறார்கள். ஏனெனில், வியாபாரி எப்பொழுதும் சுயநலத்துடன்தான் நடந்துகொள்ளுகிறான் என்று கருதப்படுகிறது. வர்த்தகர் செய்யும் வேலை சமூகத்திற்கு மிகவும் அவசியமானதாக இருக்கலாம். ஆனால், அவர் வேலையின் நோக்கம் முற்றிலும் சொந்த நலனைக் கருதியது என்று உணரப்படுகிறது. வியாபாரி செய்யும் காரியங்களிலெல்லாம் அவருடைய முதல் நோக்கம், முடிந்த அளவு தனக்கென்று தேடிக்கொண்டு, எவ்வளவு குறைவானது சாத்தியமோ அதை வாங்குவோருக்கு விட்டு வைப்பது என்பதுதான் என்று பொதுஜனங்கள் நம்புகிறார்கள். வியாபாரியின் நடத்தைக்கு இதுதான் அவசியமான கொள்கை என்ற வகையில் ராஜீய சட்டங்களைச் செய்து இவை அவர்கள் மீது அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. இக்கொள்கை அவர்களுக்குச் சிபார்சு செய்யப்படுகிறது. அவர்களும் இதை ஏற்று அதன்படி செய்தும் வருகிறார்கள். மலிவாக்குவது வாங்குவோரின் வேலை, ஏமாற்றுவது விற்பவரின் வேலை என்பதே பிரபஞ்சம் முழுவதிலுமுள்ள சட்டம் என்றும் அவர்கள் பிரகடனம் செய்து வருகிறார்கள். என்றாலும், பொது ஜனங்களோ, வியாபாரிகளின் கூற்றுப்படியே அவர்கள் நடந்தும் வருவதைக் குறித்து அவர்களைக் கண்டித்து வருகிறார்கள். மனிதரில் மிகவும் மட்டமான தரத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள் என்று எப்பொழுதும் அவர்களுக்கு முத்திரையிட்டும் விடுகிறார்கள்.

இதைச் செய்வதை அவர்கள் விட்டுவிட வேண்டும். முற்றிலும் சுயநலம்தான் என்று இல்லாததான வர்த்தக முறை ஒன்றை அவர்கள் கண்டுபிடித்தாக வேண்டும். இல்லாவிட்டால் வேறுவிதமான வர்த்தக முறை இருந்ததே இல்லை, இருக்கவும் முடியாது என்பதையாவது அவர்கள் கண்டுபிடிக்க வேண்டும்.

வர்த்தகம் என்று அவர்கள் சொல்லி வந்தது, ஏமாற்றுவதேயல் லாமல் வியாபாரமே அல்ல என்பதையாவது அவர்கள் கண்டு கொள்ள வேண்டும். உண்மையான மதப் பிரசாரத்திலோ, உண் மையான போராட்டத்திலோ இருப்பதைப் போன்று உண்மை யான வர்த்தகத்திலும், சில சமயங்களில் தானே நஷ்டம் அடை வதும் இருக்கும் என்ற கருத்தை ஒப்புக்கொள்ள வேண்டியது அவசியம். அதாவது, கடமை என்பதற்காகப் பணத்திற்கு மாத் திரமேயன்றி உயிர்களுக்கும் நஷ்டத்தை விளைவித்துக்கொள்ள வேண்டி வரும். மதப் பிரசாரஞ் செய்வதில் உயிர்த் தியாகமும் செய்யவேண்டி நேருவதைப் போன்றே மார்க்கெட்டுகளும் தியாகஞ் செய்ய வேண்டி இருக்கும். வர்த்தகத்திற்காகப் போர் இருப்பதே போன்று அதற்கு வீரமும் இருக்க வேண்டும்.

நாகரிகமடைந்த ஒவ்வொரு நாட்டு மக்களிடத்திலும் அறி வைக்கொண்டதான பெரிய தொழில்கள் ஐந்து இருக்கின்றன:

சிப்பாயின் தொழில், நாட்டைப் பாதுகாப்பது.

மதப் பிரசாரகரின் தொழில், மக்களுக்கு உபதேசிப்பது.

நாட்டு மக்கள் நல்ல ஆரோக்கியத்துடன் இருந்து வரப் பார்த்துக்கொள்ள வேண்டியது வைத்தியரின் தொழில்.

நாட்டு மக்களிடையே நீதியை வற்புறுத்த வேண்டியது வக்கீலின் தொழில்.

நாட்டுக்கு வேண்டிய பொருள்கள் கிடைக்கும்படி பார்க்க வேண்டியது வியாபாரியின் தொழில். சமயம் வந்தால் நாட்டின் நன்மைக்காகச் சாகவும் தயாராக இருப்பது இவர்கள் எல்லோ ருடைய கடமையாகும். ஏனெனில், எப்பொழுது தன் உயிரை யும் கொடுக்க வேண்டும் என்பதை அறியாதவன், எப்படி வாழ வேண்டும் என்பதையும் அறியாதவனாகிறான்.

நாட்டுக்குத் தேவையானவை கிடைக்கும்படி செய்வதுதான் வியாபாரியின் வேலை என்பதைக் கவனிக்க வேண்டும். தன் உதவிக்குப் பணத்தைப் பெற்றுக்கொண்டிருப்பது எப்படி ஒரு மதப் பிரசாரகனின் வேலையாகிவிடாதோ அதே போல, நாட்டுக் குத் தேவையானவை கிடைக்கும்படி செய்வதற்காகத் தனக்கு லாபத்தைத் தேடிக்கொள்ளுவது என்பது வியாபாரியின் வேலை யும் அல்ல. பணவுதவி என்பதும் அவசியம்தான். ஆனால், பாதிரி உண்மையான மதப் பிரசாரகராக இருந்தால், பண சகா யத்தைப் பெறுவது என்பதையே அவர் தமது வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டிருக்கக்கூடாது. அதேபோலவே வைத் தியம் செய்வதற்குப் பெறும் கட்டணமே வைத்தியருக்கு அவரு டைய வாழ்க்கையின் நோக்கமாக இருக்கக்கூடாது. அவ் விதமே வர்த்தகருக்கும் தாம் பெறும் பணம் அவருடைய வாழ்க் கையின் லட்சியமாக இருக்கக்கூடாது. இந்த மூவரும் உண்மை

யான வகையில் நடந்துகொள்ளுபவராக இருந்தால், ஊதியம் கிடைத்தாலும் கிடைக்காது போனாலும், அவர்கள் செய்ய வேண்டிய வேலையைச் செய்தாக வேண்டும். எப்படியும், ஊதியத் திற்கு மாறான வகையில்கூட அவர்கள் செய்ய வேண்டிய வேலை யைச் செய்தாக வேண்டும். உபதேசம் செய்வது, மதப் பிரசா ரகரின் வேலை. நோயைக் குணப்படுத்துவது, வைத்தியனின் வேலை. மக்களுக்கு வேண்டியதைத் தேடித் தருவது வர்த்தகனின் வேலை. ஆகவே, இவ்வேலைகளை இவர்கள் ஊதியத்தைக் கவனிக் காமல் செய்தாக வேண்டும். அதாவது வியாபாரி, எந்தப் பொருளை வியாபாரம் செய்கிறாரோ அப்பொருள் நல்லதாக இருக்கும் முறையில் அதைத் தயாரிப்பதற்குத் தனது சாமர்த் தியத்தையும் சக்தியையும் உபயோகிக்க வேண்டும். அப்பொருள் களுக்குத் தேவை எங்கே அதிகமாக இருக்கிறதோ அங்கே அவைகளைச் சாத்தியமானவரை மலிவான விலைக்கு வினியோகிக் கவும் வேண்டும்.

எந்தப் பொருள்களையும் தயாரிப்பதற்குப் பலரும், பல ருடைய உழைப்பும் வேண்டியிருப்பதால் வியாபாரி, தமது வர்த் தகத்தினிடையே அநேகருக்கு எஜமானனாகவும், அவர்களை நிர்வ கிப்பவராகவும் ஆகிவிடுகிறார், ராணுவ அதிகாரியையோ அல்லது மதப் பிரசாரகரையோவிட அம்மனிதர்களுடன் இன்னும் நெருங்கிய தொடர்பு கொண்டவராகவும் வியாபாரி ஆகிவிடுகிறார். அம்மனிதர்கள் நடத்தும் வாழ்க்கைக்கு வியாபா ரிகள் பெருமளவில் பொறுப்பு வாய்ந்தவர்களாகவும் ஆகிவிடு கின்றனர். பொருள்களைச் சுத்தமானவைகளாகவும் மலிவான வைகளாகவும் உற்பத்தி செய்வதோடு, இந்த உற்பத்தியைச் செய்வதிலுள்ள பல தொழில்களும் இவற்றிற்கென்று நியமிக்கப் படும் ஆட்களின் நன்மைக்கு ஏற்றவைகளாகச் செய்ய வேண் டியதும் வியாபாரியின் கடமையாகிறது.

இந்த இரண்டு காரியத்திற்கும் வர்த்தகர், அதிக புத்தி சாலித்தனத்தையேயன்றிப் பொறுமையையும், அன்பையும், சாமர்த்தியத்தையும் சரியான வழியில் உபயோகிக்க வேண்டி யிருக்கிறது. இவற்றில் வியாபாரி தனது கடமையை நியாய மான வழியில் நிறைவேற்றுவதற்கு, ஒரு சிப்பாயோ, வைத்தி யரோ அவசியமானால் எப்படி உயிரையும் கொடுக்க வேண் டுமோ அதே போலவே வர்த்தகரும் அவசியம் ஏற்படும்போது உயிரையும் கொடுக்க முன்வர வேண்டும்.

வியாபாரி, இரு முக்கியமான காரியங்களைச் செய்து வர வேண்டும். முதலாவது, அவருக்குள்ள வேலையை அவர் நிறை வேற்றி வருவது. இரண்டாவது, அவர் கொடுக்கும் பொருள்கள் சிறந்தவைகளாகவும் சுத்தமானவைகளாகவும் இருக்கவேண்டும். அவருக்குள்ள வேலையில் அவர் தவறினாலோ, தாம் கொடுக்கும் பொருள்களில் தரக் குறைவோ, கலப்படமோ, அக்கிரமமான

விலேயோ ஏற்படாமலோ, இவை ஏற்படாமல் ஒழுங்காக எல்லாம் இருந்து வரும்படிப் பார்த்துக்கொள்ளுவதால் ஏற்படும் எந்தக் கஷ்ட நஷ்டங்களேயும், ஏழ்மையையும், உழைப்பையும் தைரியமாக ஏற்றுக்கொள்ளவோ அவர் கடமைப்பட்டிருக்கிருர்.

மேலும், அவர் பலரை வேலேக்கு அமர்த்திக்கொண்டிருக்கிருர் அல்லவா? அந்த ஆட்களே நிர்வகிப்பவர் என்ற முறையில் அந்த வியாபாரிக்கு, அந்த ஆட்களின் விஷயத்தில் ஒரு தந்தைக்குரிய அதிகாரப் பொறுப்பும் இருந்து வருகிறது. ஒரு வர்த்தக ஸ்தாபனத்தில் ஒரு வாலிபன் வேலேக்குப் போனதும், அவன் மீது அவன் வீட்டுச் செல்வாக்கு என்பது அடியோடு இல்லாது போய் விடுகிறது. அவனுடைய எஜமானனே அவனுக்குத் தந்தையாகிருன். இதைத் தவிர அவனுக்கு நடைமுறையில் எப்பொழுதும் உதவி செய்யக் கிட்டத்தில் தந்தையாரும் இல்லே. ஆகையால், தன்னிடம் வேலேக்கு இருக்கும் ஆட்களிடம் தான் நியாயமாக நடந்துகொண்டு வருகிருரா என்பதை அறிவதற்கு எஜமானனுக்கு இருக்கும் ஒரே உபாயம் இதுதான்: சந்தர்ப்பத்தின் காரணமாகத் தன் மகனே அதே வேலேயில் தாம் வைத்திருந்தால், அந்த மகன் விஷயத்தில் எப்படித் தாம் நடந்துகொள்ளுவாரோ அதே போலத் தமது சிப்பந்திகளிடம் தாம் நடந்துகொண்டு வருகிருரா என்று எஜமானன் தன்னேத்தானே கேட்டுக்கொள்ள வேண்டும்.

ஒரு போர்க் கப்பல் தலேவன், தன் சொந்த மகனே ஒரு சாதாரண கடற்படை சிப்பாயாக நியமிக்க வேண்டியதாகிவிட்டது என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது, அக்கப்பல் தலேவன் தன் மகனே எப்படி நடத்துகிருனே அப்படியே தனக்குக் கீழ் வேலே செய்யும் எல்லோரையும் நடத்தக் கடமைப்பட்டிருக்கிருன். அதே போன்று ஒரு தொழிற்சாலேயின் எஜமானன், தன் சொந்த மகனே ஒரு சாதாரண தொழிலாளியாக நியமிக்க நேர்ந்தது என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது அந்த எஜமானன் தன் மகனே எப்படி நடத்துகிருனே அப்படியே தன்னிடம் வேலே செய்கிறவர்கள் எல்லோரையும் எப்பொழுதும் நடத்தக் கடமைப்பட்டிருக்கிருன். பொருளாதாரத்தைப் பற்றிய இந்த விஷயத்தில், சரியானபடியும், உண்மையாகவும் அனுபவ சாத்தியமாகவும் சொல்லக்கூடிய ஒரே விதி இதுதான்.

கப்பல் கவிழ்ந்துவிடும்போது, மற்றவர்கள் யெல்லாருக்கும் பிறகு கடைசியில் இறங்கக் கடமைப்பட்டிருப்பவன் அக்கப்பல் தலேவன். கப்பலில் உணவுப் பஞ்சம் வந்துவிட்டால், அக்கப்பல் தலேவன் தன்னிடமிருக்கும் கடைசி ரொட்டித் துண்டையும் மற்ற மாலுமிகளுடன் பகிர்ந்துகொண்டாக வேண்டும். அதே போல, ஒரு தொழிற்சாலேக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு விடும்போது, அதன் முதலாளி, அக்கஷ்டத்தைத் தன்னுடனிருக்கும் ஆட்களுடன் தானும் சேர்ந்து அனுபவிக்கக் கடமைப்

பட்டிருக்கிறுன். தன் ஆட்கள் அனுபவிக்க அந்த எஜமானன் அனுமதிக்கும் கஷ்டத்தைவிட அதிகமான கஷ்டத்தைத் தானே ஏற்றுக்கொள்ள வேண்டும். ஒரு தந்தை, பஞ்சம் ஏற்பட்ட சமயத்திலும், கப்பல் கவிழ்ந்த போதும், போர்க்களத்திலும் எவ்வாறு தன் மகனுக்காகத் தன்னையே தியாகம் செய்வானே அதே போல தொழிற்சாலையின் எஜமானன் தன் ஆட்களுக்காகத் தன்னையே தியாகம் செய்யவேண்டும்.

இவையெல்லாம் விசித்திரமானவையாகவே தோன்றும். என்றுலும், இவ்விஷயத்தில் உண்மையான விசித்திரம் என்னவென்றுல், இது இவ்விதம் விசித்திரமாகத் தோன்றுவதுதான். ஏனெனில், இவையெல்லாம் என்றும் நிரந்தரமாக இருக்கக்கூடியதும், அனுபவ சாத்தியமானதுமான உண்மை. இதைத் தவிர மற்றத் தத்துவங்களெல்லாம் அனுபவத்தில் சாத்தியமில்லாதவைகளாவதோடு தேசீய வாழ்க்கையின் முன்னேற்ற நிலைமைக்குப் பொருத்தமில்லாதவைகளுமாகும். நமது மக்களுக்குப் போதிக்கப்படும் பொருளாதாரக் கொள்கைகள், அவற்றை அனுசரித்த அளவில், தேசீய நாசத்திற்கே கொண்டு போகின்றன. ஒரு நாட்டு மக்கள் என்ற வகையில் நமக்கு இன்று இருந்துவரும் வாழ்வெல்லாம், திடசித்தமுள்ள சிலரும், விசுவாசமுள்ள உள்ளத்தினரும் அப்பொருளாதாரக் கொள்கைகளை மறுத்துக்காட்டி வருவதில்தான் இருந்து வருகிறது. அப்பொருளாதாரக் கொள்கைகள், எந்தத் தன்மையிலும் முறையிலும் நாசத்திற்குக்கொண்டு போகின்றன என்பதை இனி வரும் கட்டுரையில் காரணங்களுடன் எடுத்துக்காட்டலாம் என்றிருக்கிறேன்.

### கட்டுரை—2

# செல்வத்தின் ரத்தக் குழாய்

முந்திய கட்டுரையில் கூறப்பட்டவைகளுக்கு எந்தச் சாதாரண பொருளாதாரப் பண்டிதரும் கூறும் பதில், சில வார்த்தைகளில் சொல்லுவதானுல் இதுதான்:

''சமூகத்தினிடம் கொள்ளும் அன்பை விருத்தி செய்து கொள்ளுவதனுல், பொதுப்படையான சில நன்மைகளை அடைய முடியும் என்பது உண்மையே. ஆனுல், பொருளாதாரப் பண்டிதர்கள் அத்தகைய நன்மைகளையெல்லாம் அவ்வளவு முக்கியமானவையாகக் கருதுவதே இல்லை. பணக்காரர்கள் ஆகிவிடுவதற்கான சாத்திரம் மாத்திரமே நம் சாத்திரம். தவறுன அபிப்பிராயத்தை உண்டாக்கும் வாதம் அல்ல இது என்பதோடல்லாமல், இதுவே நடைமுறையில் சரியானதாகவும் இருக்கிறது என்பது

அனுபவத்திலும் காணப்பட்டிருக்கிறது. இதன் தத்துவங்களை அனுசரித்து அதன்படி நடக்கிறவர்கள் பணக்காரர் ஆகிறார்கள்; அவற்றிற்கு மீறி நடக்கிறவர்கள் ஏழைகளாகிவிடுகின்றனர். ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொரு முதலாளியும், நமது சாத்திரத்தின் விதிகளை அனுசரித்துத்தான் பணம் திரட்டியிருக்கிறார்கள். அனுபவத்தில் நடந்திருக்கும் உண்மையின் சக்திக்கு எதிராகத் தர்க்க வாத விந்தைகளையெல்லாம் கொண்டு வருவது வீணாதாகும். பணம் எப்படி சம்பாதிக்கப்படுகிறது, பணம் எப்படி நஷ்டமாகிவிடுகிறது என்பது வியாபாரத்திலிருக்கும் ஒவ்வொருவருக்கும் தெரியும்.''

என்னை மன்னிக்க வேண்டும். வியாபாரிகள் நிச்சயமாகப் பணம் சம்பாதிக்கிறார்கள். ஆனால், அப்பணத்தை நியாயமான வழியில் சம்பாதிக்கிறார்களா, அல்லது தாங்கள் அப்படிப் பணம் சம்பாதிப்பது தேசத்தின் நலனுக்கு உதவி செய்வதாக இருக்கிறதா என்பது அவர்களுக்குத் தெரியாது. 'செல்வம்' என்ற சொல்லின் பொருள் அவர்களுக்குத் தெரியவே தெரியாது. இது கொஞ்சமாவது அவர்களுக்குத் தெரிந்திருந்தாலும், 'வடக்கு' என்றால் அதற்கு எதிரிடையாக 'தெற்கு' என்பதும் இருப்பதைப்போல, 'செல்வம்' என்ற சொல்லுக்குச் சம்பந்தமுடைய எதிரான 'ஏழ்மை' என்பதும் உண்டு என்ற உண்மையை அவர்கள் அறிந்துகொள்ளுவதில்லை. சில பொருளாதாரத் தத்துவங்களை அனுசரித்து நடந்துவிட்டால் எல்லோரும் பணக்காரராகிவிட முடியும் என்பதைப் போல எழுதுகிறார்கள். ஆனால், செல்வங்களோ மின் சக்தியைப் போன்ற ஒரு சக்தி. சமத்துவமின்மை அல்லது தன்னைத் தானே மறுத்துக் கொள்ளுவதனால் மாத்திரமே இது இயங்கி வருகிறது. உங்கள் மடியில் இருக்கும் ஒரு ரூபாய்க்கு உள்ள சக்தி, அதே ஒரு ரூபாய் உங்கள் பக்கத்து வீட்டுக்காரரின் மடியில் இல்லாததைப் பொறுத்துத்தான் இருக்கிறது. உங்களிடமிருக்கும் அந்த ஒரு ரூபாய் பக்கத்து வீட்டுக்காரருக்கு வேண்டியதில்லை என்றால், அந்த ரூபாய் உங்களுக்கும் பயனற்றது. ஆகையால், அந்த ரூபாய்க்கு எந்த அளவுக்குச் சக்தி இருக்கிறது என்பது, பக்கத்து வீட்டுக்காரருக்கு எந்த அளவுக்கு அந்த ரூபாயின் தேவை இருக்கிறது என்பதைப் பொறுத்தே இருக்கிறது. எனவே, உங்களை நீங்கள் பணக்காரராக்கிக் கொள்ளுவதில் உங்களுக்குள்ள ஆற்றல், சாதாரண வர்த்தகப் பொருளாதாரப் பண்டிதரின் கருத்தில் சொன்னால், உங்கள் பக்கத்தில் இருப்பவரை ஏழையாக வைத்திருப்பதையே அவசியமாகப் பொறுத்திருக்கிறது.

'ராஜீயம்', 'வர்த்தகம்' என்ற அடைமொழிகள் சேர்க்கப்படும் இரண்டு பொருளாதாரங்களுக்குமிடையே இருக்கும் பேதங்களை வாசகர் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

பயனுள்ள, இன்பமான பொருள்களை, தக்க சமயத்திலும் இடத்திலும் உற்பத்தி செய்து, பத்திரப்படுத்தி வைத்து, விநியோகிப்பதுதான் ராஜீய பொருளாதாரத்தில் இருப்பவை. விவசாயி, தக்க பருவத்தில் புல்லை வெட்டிக் காயவைத்து மழைக் காலத்திற்குக் கால்நடைகளுக்குத் தீவனமாக வைக்கிறான். வீடு கட்டுகிறவன், நல்ல காளவாய் போட்டுச் சுட்டு நல்ல செங்கற்களைச் சேகரித்து வைக்கிறான். குடித்தனப் பெண்ணோ, வீட்டிலிருக்கும் தட்டுமுட்டுச் சாமான்களெல்லாம் கெட்டுப் போகாமல் பாதுகாப்பதோடு சமைப்பதில் எதுவும் வீணாகிவிடாமல் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுகிறாள். உண்மையான, முடிவான கருத்தில், இவர்களெல்லோரும் ராஜீய பொருளாதாரப் பண்டிதர்களே. இவர்களெல்லாம் எந்த நாட்டினரோ அந்த நாட்டின் நலனுக்கும் செல்வத்திற்கும் இவர்கள் தொடர்ந்து உதவி செய்து வருகிறார்கள்.

ஆனால், வர்த்தகப் பொருளாதாரம் என்பது, தனிப்பட்டவர்களிடம் செல்வம் குவிந்திருப்பதை முக்கியமாகக் கொண்டது. மற்றவர்களின் உழைப்பின் மீது அந்தத் தனிப்பட்டவர்களுக்கு இருக்கும் சக்தியும், கொண்டாடும் பாத்தியதையும் முக்கியமாகக் கொண்டது இந்தப் பொருளாதாரம். இவ்விதம் கொண்டாடப்படும் ஒவ்வோர் பாத்தியதையும், செல்வத்தையோ உரிமையையோ ஒரு பக்கத்தில் எப்படிக் குவிக்கிறதோ அதே போல இன்னொரு பக்கத்தில் ஏழ்மையை அல்லது கடனைச் சேர்க்கிறது.

இத்தகைய வர்த்தகச் செல்வத்தைத்தான் நாகரிக நாடுகளிலுள்ள சுறுசுறுப்பானவர்கள் செல்வம் என்று கருதுகின்றனர். அவர்கள் தங்களிடம் இருக்கும் பணத்தைக் கொண்டு எத்தனை குதிரைகள் வாங்கலாம், எவ்வளவு நிலம் வாங்கலாம் என்று கணக்குப் போடுவதில்லை. அதற்குப் பதிலாக, தங்களிடமிருக்கும் குதிரைகளையும் நிலங்களையும் விற்றால் எவ்வளவு பணம் வரும் என்பதைக் கொண்டு குதிரைகள், நிலங்களின் மதிப்பைக் கணக்குப் போடுகிறார்கள்.

சொத்துடன் தொழிலாளர்மீது வர்த்தக அதிகாரமும் ஒருவருக்கு இருந்தாலன்றி அந்தச் சொத்தை வைத்திருப்பவருக்கு அச்சொத்தினால் மாத்திரம் எந்தப் பயனும் இல்லை. ஒருவருக்கு நல்ல பலனளிக்கும் நிலம் ஏராளமாக இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அந்த நிலத்திற்கு அடியில் தங்கம் இருக்கும், கற்களும் இருக்கின்றன. வீடுகள், தோட்டங்கள், தானியக் களஞ்சியங்கள் எல்லாம் இருக்கின்றன. என்றாலும் அவருக்கும் வேலைக்காரர்கள் யாருமே கிடைக்கவில்லை என்றும் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது நிலைமை என்ன? அவருக்கு வேலைக்காரர் அகப்படுவதற்கு, அவருக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர் யாராவது ஏழையாகவோ, இவருடைய தங்கமோ, தானியங்களோ தேவைப்படுகிறவராகவோ இருக்க வேண்டும். இவருடைய தங்கமும் தானியங்களும் யாருக்கும் தேவையில்லை.

வேலைக்காரனும் கிடைக்கவில்லை என்று வைத்துக் கொள்ளு வோம். அப்பொழுது அவர், தன் சாப்பாட்டைத் தானே தான் சமைத்துக் கொள்ள வேண்டும். தன் துணிகளை அவர் தானே துவைத்துக் கொள்ள வேண்டும். அவர், தன் நிலத்தை தானே உழுது கொள்ளுவதோடு தன் ஆடு மாடுகளைத் தானே தான் மேய்த்துக் கட்ட வேண்டும். அவரிடம் இருக்கும் மற்ற மஞ்சள் கற்களினால் அவருக்கு என்ன பயனுண்டோ அந்தப் பயன் தான் அவரிடமிருக்கும் தங்கத்தினாலும் அவருக்கு உண்டு. அவருடைய களஞ்சியத்திலிருக்கும் தானியங்களையெல்லாம் அவரே தின்று விட முடியாதாகையால் அவை மக்கிப் பாழாகிவிடும். இன் னொருவர் சாப்பிடுவதற்கு அதிகமாக அவரால் சாப்பிடமுடியாது; இன்னொருவர் உடுத்தும் துணிக்கு அதிகமாகவும் அவரால் உடுத்த முடியாது. சாதாரண வசதிகளைச் செய்து கொள்ளுவதற்குக் கூட, சாதாரண தொழிலாளியின் கஷ்டமான வாழ்க்கையே அவர் நடத்த வேண்டியிருக்கும்.

இன்னுமொருவரின் சொத்தை அடைவதில் பெரும் பேராசை கொண்டவன் கூட, இந்த விதமான செல்வத்தை இந்த முறை யின் கீழ், கொஞ்சமும் உற்சாகமில்லாமல் தான் ஏற்றுக்கொள்ளு வான் என்று நான் எண்ணுகிறேன். செல்வம் என்ற பெயரில் உண்மையில் விரும்பப்படுவதெல்லாம், முக்கியமாக ஆட்கள் மீது அதிகாரத்தைத்தான். எளிதான பொருளில் சொல்லுவ தானால், வேலைக்காரன், தொழிலாளி, சித்திரிகன் ஆகியவர் களின் உழைப்பை நமது சொந்த சௌகரியத்திற்கு அடைய வேண்டும் என்பதுதான். இந்த அதிகாரம் யார் மீது செலுத் தப்படுகிறதோ அவர்களுக்கு இருக்கும் ஏழ்மையைப் பொறுத்து உண்மையில் இச்செல்வத்தின் சக்தி அதிகமாகவோ, குறை வாகவோ இருக்கிறது. அதோடு நம்மைப் போன்று பணக்காரர் களாக இருப்பவர்களின் தொகையையும் அது பொறுத்திருக் கிறது. ஏனெனில், கிடைக்கும் சரக்கு ஓர் அளவோடு இருக்கும் போது, அதற்கு அதே விலை கொடுக்க அதிகம் பேர் வருவார்களா னால் அந்தச் செல்வத்தின் சக்தி குறைந்து விடுகிறது. ஒரு சங்கீத வித்வான் ஏழையாக இருந்து, அவருக்குப் பணம் கொடுக்கக் கூடியவர் ஒருவரே இருக்கிறார் என்றால், அவர் கொஞ்ச பணத்தை வாங்கிக்கொண்டு பாடிவிடுவார். பணம் கொடுத்து அவருடைய கச்சேரியை வைக்கத் தயாராயிருப்பவர்கள் இரண்டு, மூன்று பேர்கள் இருந்தால், யார் தனக்கு அதிகப் பணம் கொடுக் கிறாரோ அவருக்குத்தான் சங்கீத வித்துவான் பாடுவார். ஆகவே பகுத்தறிவைக் கொண்டு பார்த்தால், பணக்காரராகும் வித்தை, நமக்கென்று அதிகப் பணத்தைத் திரட்டிக்கொண்டு விடுவதில் மாத்திரம் இல்லை என்பது தெரியும். நமக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்களிடம் பணம் குறைவாக இருக்கும்படிச் செய்வதிலும் இருக்கிறது அந்த வித்தை. சரியான முறையில் அதைச் சொன் னால், 'நமக்குச் சாதகமான வகையில் அதிக அளவு சமமின் மையை உண்டாக்கிவிடும் வித்தை'யே அது.

இத்தகைய ஏற்றத் தாழ்வுகள் இருப்பது அவசியமான சாதகங்களே என்று அவசரப்பட்டும், ஆபாசமாகவும் கருதப் பட்டு வருகிறது. பொருளாதாரத்தைப் பொறுத்த வரையில் எல் லோரிடமும் இருந்து வரும் தவறுன அபிப்பிராயங்கள்தான் இத் தகைய கருத்துக்கு மூல காரணம். ஏனெனில், சமமான நிலே இல்லாமலிருப்பதில் நன்மை இருக்கிறது என்பது, முதலாவதாக, அந்த நன்மை எந்த விதத்தில் அடையப்படுகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. இரண்டாவது, அது எந்தக் காரியத்திற் காக உபயோகிக்கப்படுகிறது என்பதையும் பொறுத்திருக்கிறது. அக்கிரமமாக உண்டாக்கப்பட்டிருக்கும் சமநிலேயில்லாத செல் வம், அது எந்த நாட்டு மக்களிடையே இருக்கிறதோ அந்நாட்டு மக்களுக்கு, அது உண்டாக்கப்பட்ட சமயத்தில் நிச்சயமாகத் தீமையையே உண்டாக்கியிருக்கிறது. அச்செல்வச் சமநிலே இன்மை அக்கிரமமான வழியில் செலுத்தப்படும்போது, அந்த நிலேமை இருந்துகொண்டிருக்கும் சமயத்தில், அந்நாட்டு மக்க ளுக்கு இன்னும் அதிகத் தீமையைச் செய்கிறது. ஆனல், செல்வ நிலேயில் சமத்துவமின்மை நியாயமான வழியில் உண்டாக்கப் படும்போது, அது உண்டாக்கப்படும் சமயத்தில் நாட்டு மக்க ளுக்கு நன்மையையே செய்கிறது. அதை உயர்ந்த வழியில் உப யோகித்தால், அந்த நிலேமை இருந்து வரும்போதும் அதனல் மக்களுக்கு அதிக நன்மையே ஏற்படுகிறது.

இவ்விதம் ஒரு நாட்டு மக்களிடையே செல்வம் பரவுவது இயற்கையான உடலில் ரத்தம் பரவுவதை ஒத்திருக்கிறது. குதூகலமான உற்சாகமோ, ஆரோக்கியமான தேகப் பயிற் சியோ இருக்கும்போது, ரத்த ஓட்டம் வேகமானதாக இருக் கிறது. இன்னெரு நிலே, வெட்கப்பட வேண்டி நேரும் போதோ அல்லது ஜுரம் இருக்கும் போதோ ஏற்படுவது. நல்ல உற்சாக மும் சுகமும் இருக்கும் உடம்பு நன்ருகப் பிரகாசமாய் இருக் கிறது. வேறு விதமாக இருந்தால், உடம்பு மோசமான நிலேயை அடைந்துவிடுகிறது.

மேலும், உடலின் ஒரு பகுதியில் நோயுண்டாகி ரத்தம் கெட் டுப்போய் விடுமானல் உடலின் பொதுவான சுகமே குன்றிப்போய் விடுவதைப் போலவே, செல்வங்கள் ஆங்காங்கு மோசமான வழி யில் உபயோகிக்கப்படுவதால் பொது மக்களின் வசதிகள் பல வீனப்பட்டு விடுவதிலேயே போய் முடிவதைக் காணலாம்.

இரண்டு கப்பலோட்டிகள், கப்பல் கவிழ்ந்து விட்டதால், வேறு மனித சஞ்சாரமே இல்லாத ஒரு கடற்கரைக்குப் போய்ச் சேர்ந்து விடுகிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவர்கள் அங்கே உயிர் வாழ்வதற்கு அநேக வருட காலம் அவர் களே உழைத்தாக வேண்டி வருகிறது.

இவர்கள் இருவரும் தேகாரோக்கியத்துடன் இருந்து, ஒழுங் காகவும், ஒருவருக்கொருவர் ஒற்றுமையோடும் வேலே செய்து

வந்தால், அவர்கள் தங்களுக்கு ஒரு வீட்டைக் கட்டிக் கொள்ளலாம். விவசாயம் செய்வதற்குக் கொஞ்சம் நிலத்தையும் செப்பனிட்டுக் கொள்ளலாம், இருவருக்கும் பின்னல் உபயோகித்துக் கொள்ளுவதற்குத் தானியம் முதலியனவும் சேமிப்பில் இருக்கும். இவைகளெல்லாம் உண்மையான செல்வங்களாக அல்லது சொத்தாக இருக்கும். இருவருமே கஷ்டப்பட்டுத்தான் வேலை செய்ய வேண்டி இருந்தது என்ருல், அந்தச் சொத்திலும், அதை உபயோகித்துக் கொள்ளுவதிலும் இந்த இருவருக்கும் சமமான பங்கு உண்டு. கவனமாகப் பாதுகாத்து வைப்பது, தங்களிடமிருப்பதை நியாயமாகப் பகிர்ந்துகொள்ளுவது என்பதை மாத்திரம் கொண்டதுதான் இவர்களுடைய ராஜீய பொருளாதாரம்.

ஆனல், கொஞ்ச காலத்திற்குப் பிறகு இவர்களில் யாரோ ஒருவருக்கு, சேர்ந்து பொதுவாகச் சாகுபடி செய்வதன் பலனில் அதிருப்தி ஏற்பட்டு விடுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அதன் காரணமாக அவர்கள், அவரவர்கள் நிலத்தில் அவரவர்கள் சாகுபடி செய்து கொண்டு அதைக் கொண்டு அவரவர்கள் வாழ்வதற்காக நிலத்தைச்சமமாகப் பங்கிட்டுக்கொள்ளுகிருர்கள். ஆனல், இந்த ஏற்பாட்டைச் செய்துவிட்ட பிறகு, அவர்களில் ஒருவர் நோயுற்று விடுகிருர். நெருக்கடியான சமயத்தில், அதாவது விதைப்புச் சமயத்திலோ, அறுவடைக் காலத்திலோ, அவரால் வேலைசெய்ய முடியவில்லை என்றும் வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது அவர், தனக்காக விதைக்கும்படியோ, அறுவடை செய்யும்படியோ இயல்பாகவே இன்னெருவரைக் கேட்டுக் கொள்ளுவார்.

அப்பொழுது அவருடைய தோழன் வருமாறு சொல்லக் கூடும்: 'இந்த அதிகப்படியான வேலையை உனக்காக நான் செய்கிறேன். ஆனல், இன்னெரு சமயத்தில் எனக்காக நீ இந்த வேலையைச் செய்யவேண்டும் என்ற வாக்குறுதியின் பேரிலேயே இதைச் செய்கிறேன். உன் நிலத்தில் எத்தனை மணி நேரம் நான் வேலை செய்கிறேன் என்பதைக் கணக்கிட்டுக் கொள்ளுவேன். உன் உதவி எனக்குத் தேவைப்படும்போது, அவ்வேலையைச் செய்ய உன்னல் முடியும்போது, அந்த வேலையை நீ செய்வதாக எழுத்து மூலம் எனக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும்'. அப்படி அவர் கேட்டதும் நியாயமே ஆகும்.

நோயுற்றவரின் வியாதி தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அநேக சந்தர்ப்பங்களில், அநேக ஆண்டுகளுக்கு மற்ருெருவரின் உதவி அவருக்குத் தேவைப்படுகிறது. தன் சகா தனக்காக எத்தனை மணி நேரம் வேலை செய்கிருரோ அத்தனை மணி நேரமும் தன் உடம்பு குணமானதும், தன் சகா விரும்பும்போது செய்வதாக ஒவ்வொரு சமயமும் அந்த நோயாளி எழுத்து மூலம் வாக்குறுதி அளிக்கிருன்.

நோயுற்றிருந்தவர் குணமடைந்து திரும்பவும் வேலை செய்யும் பலத்தை அடைந்துவிடும்போது, அந்த இருவரின் நிலைமை எப்படி இருக்கும்?

அவர்களுடைய நிலைமையைக் கவனித்தால், வேறு நிலையில் அவர்கள் எப்படி இருந்திருப்பார்களோ அதைவிட ஏழைகளாகவே இருப்பார்கள். இதற்கு மத்தியில் நோயுற்றவரின் உழைப்பினுல் என்ன உற்பத்தியாகியிருக்குமோ அந்த அளவுக்கு இவர்கள் ஏழையாகி இருப்பார்கள். அதிகமாகிவிட்ட தேவையை முன்னிட்டு அவர் நண்பன் அதிக பலத்துடன் வேலை செய்திருக்கக்கூடும். ஆனுல், இவ்வளவு காலம் தன் நிலத்தைத் தான் நன்ருக கவனிக்காமலிருந்துவிட்டதால் அந்நிலம் முடிவாகக் கெட்டுத் தான் இருக்கும். இருவரும் ஆரோக்கியத்துடன் இருந்து, இருவரும் வேலை செய்திருந்தால், இருவரையும் சேர்ந்ததான சொத்து, இருக்க வேண்டியதை விட இப்பொழுது அது குறைவாகவே இருக்கும்.

ஆனுல், இந்த இருவருக்குமிடையே இருக்கும் உறவும் அதிக தூரம் மாறுபட்டுப் போயிருக்கிறது; நோயுற்றுவிட்டவர் தன் உழைப்பை மற்ருெருவருக்குச் சில வருடங்களுக்கு அடகு வைத்துவிட்டதோடல்லாமல் தான் சேமித்து வைத்திருந்தவைகளையெல்லாம் சாப்பிட்டுவிட்டார். இதனுல் கொஞ்ச காலத்திற்குச் சாப்பாட்டிற்கு மற்றவரையே அவர் நம்பியிருக்க வேண்டியதாகிறது. இந்த உணவு உதவிக்கு அவர் தன்னுடைய உழைப்பை மேலும் அதிகமாக அடகு வைக்கவே வேண்டி வருகிறது.

எழுத்து மூலம் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகளை மற்றவர் நிறைவேற்ற ஆரம்பிக்கிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். இருவருக்குமாகச் சேர்த்து இதுவரை வேலை செய்து வந்திருப்பவர், தாம் விரும்பினுல், இப்பொழுது முழு ஓய்வு எடுத்துக்கொண்டு தனது காலத்தைச் சோம்பியே கழிக்கக் கூடும். தனது சகாவை, அவர் முன்னுல் கொடுத்திருந்த வாக்குறுதிகளுக்காக வேலை செய்யும்படியும் இவர் கட்டாயப்படுத்தலாம். அதோடு, நோயுற்றிருந்து இப்பொழுது குணமடைந்திருப்பவருக்கு உணவையும் தாம் கொடுக்க வேண்டியிருப்பதால் அந்த உணவுக்காகத் தான் விரும்பும் தொகைக்கு மேற்கொண்டும் வேலை செய்ய வேண்டும் என்று புதிதாக வாக்குறுதிகளையும் இவர் வாங்கவும் கூடும்.

இப்படி செய்ய முடியும் என்ற வாதத்தில் கொஞ்சங்கூட சட்ட விரோதமானது (அந்தச் சொல்லின் சாதாரண பொருளில்) எதுவுமே கிடையாது. ஆனுல், இவர்களுடைய ராஜீய பொருளாதாரம் இந்த விதமாக அதிக தூரம் மாறிப்போயிருக்கும் நிலையில் அக்கடற்கரைக்கு இன்னுமொருவர் புதிதாக வந்து சேருகிருர் என்று வைத்துக்கொள்ளுவோம். முன்னுல் அங்கே இருந்த இருவரில் ஒருவர் வர்த்தக ரீதியில் பணக்காரராகவும், இன்னெருவர்

ஏழையாகவும் இருப்பதையே புதிதாக வந்தவர் காண்பார். இன்னும் ஒன்றையும் பார்த்து அவர் ஆச்சரியப்படுவார். முன்னல் அங்கே இருந்தவர்களில் ஒருவர் சோம்பேறித்தனத்தில் தமது காலத்தைக் கழித்து வருவதையும், மற்ரெருவர் வயிற்றுக்குப் போதாத சாப்பாட்டோடு இருவருக்கும் சேர்த்து உழைத்துக் கொண்டிருப்பதையும், என்ரே ஒரு நாளைக்குத் தாம் சுதந்திரத் தைத் திரும்ப அடைய முடியும் என்ற நம்பிக்கையில் அவர் வாழ்வதையும் புதியவர் காண்பார்.

இதில் முக்கியமான ஒரு விஷயத்தை வாசகர் கவனிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். உழைப்பின் பேரில் பாத்தி யதை கொண்டாடுவதைக் கொண்டது வர்த்தகச் செல்வம். அந்தச் செல்வத்தை உண்டாக்குவதால், நல்ல சொத்தில் அடங் கியதான உண்மையான செல்வம் எல்லோருக்கும் குறைவதில் தான் முடிந்துவிடுகிறது. இதையே கவனிக்க வேண்டும்.

வர்த்தக காரியங்களில் சாதாரணமாக நடப்பவைகளுக்குப் பொருத்தமானதான இன்னுமோர் உதாரணத்தையும் கவனிப் போம். இருவருக்குப் பதிலாக மூன்று பேர், யாருமே இல்லாத இடத்திற்குப் போய் அங்கே ஒரு சிறு குடியரசை ஆரம்பிக் கிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். ஒன்றுக்கொன்று கொஞ்சம் தூரத்திலுள்ள நிலங்களைச் சாகுபடி செய்வதற்காக அவர்கள் தனித்தனியாக வசிக்க வேண்டியிருக்கிறது. இவர்களு டைய நிலம் ஒவ்வொன்றிலும் வெவ்வேறு விதமான பொருள்கள் உற்பத்தியாகின்றன. இவர்களில் ஒவ்வொருவருக்கும் மற்ற இருவர் உற்பத்தி செய்யும் பொருள்கள் தேவைப்படுகின்றன. இப்படி ஒருவரிடம் இருக்கும் பொருளை மற்றவர் போய் வாங்கிக் கொண்டு வருவதில் காலம் வீணுவானேன் என்பதற்காக அவர் களில் மூன்ருவது ஆள் ஒரு காரியத்தைச் செய்கிருர். ஒருவர் நிலத்திலிருந்து இன்னெருவர் நிலத்திற்குச் சாமான்களைக் கொண்டுபோகும் வேலையை இவரே நிர்வகிக்கிருர். இச்சிரமத்தை மேற்கொள்ளுவதற்காக, அப்படி கொண்டுபோகப்படும் ஒவ் வொரு மூட்டைப் பொருளுக்கும் தனக்கு இன்ன பங்கு கொடுக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்துகொள்ளுகிருர்.

இவ்வாறு சரக்குகளை ஒரு பண்ணையிலிருந்து இன்னெரு பண்ணைக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பது, முக்கியமாக என்ன சரக்கு தேவைப்படுகிறதோ அது நல்ல சமயத்தில் போய்ச் சேரு வதாக இருந்தால், மற்ற இருவரின் விவசாய வேலை சுபிட்ச மடையும். இதனல் உற்பத்தியிலோ அல்லது செல்வத்திலோ இச்சிறு சமூகம் சாத்தியமான அளவு அதிக நன்மையையும் அடையும். ஆனல், இப்படி ஒருவருக்கொருவர் சாமான்களைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் பிரயாண ஏஜண்டின் மூலமல்லாமல் வேறு தொடர்பே இந்த விவசாயிகளுக்கிடையே இல்லை என்று வைத்துக்கொள்ளுவோம். கொஞ்ச காலத்திற்குப் பிறகு இந்த ஏஜண்டு, மற்ற பண்ணைகளுக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்

காகத் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட பொருள்களை அங்கே கொண்டுபோகாமல் தம்மிடமே வைத்துவிடுகிறார். இதில் ஏதாவது ஒரு பக்கத்தினருக்குத் தேவை அதிகக் கடுமையான தாக ஆகிவிடும் வரையில் அந்தச் சரக்கை ஏஜண்டு வைத்துக் கொண்டுவிடுகிறார். பிறகு அவர், அதிக முடையில் இருப்பவ ரிடம் அந்தச் சரக்கைக் கொடுப்பதற்கு அவரிடமிருக்கும் பொருள்களைத் தமக்குப் பங்காகக் கொடுத்தாக வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார். இதனால் ஏற்படக் கூடிய ஒரு நிலைமையை எளிதாகக் காணமுடியும். ஏஜண்டு அதிக சாமர்த் தியமாகத் தமக்கு எப்பொழுது வாய்ப்புக் கிடைக்கும் என்று கவனித்துக்கொண்டே இருப்பார். மற்ற இரு பண்ணைகளிலும் உற்பத்தியாகும் பொருள்களில் அதிகப்படியாக இருப்பவை களில் பெரும் பகுதி இவர் கையில் இருந்துவரும். கடைசியாக விளைவு நன்றாக இல்லாது போய்விடும் வருடத்தில் மற்ற இருவர் நிலங்களையும் இவரே வாங்கிக்கொண்டு விடுவார். பின்னர், முன்னால் நிலச் சொந்தக்காரர்களாக இருந்த இருவரையும் தொழிலாளராகவும் வேலைக்காரர்களாகவும் இவரே நியமித்துக் கொண்டுவிடுவார்.

இக்கால ராஜீய பொருளாதாரக் கொள்கைகளை சரியான வழியில் உபயோகித்துக்கொண்டு பொருளாதாரச் செல்வத்தை அடைவதற்கு இது ஓர் உதாரணமாக இருக்கிறது. ஆனால், இந்த உதாரணத்திலும் கூட ஒரு விஷயம் தெளிவாகிறது. அந்த வியாபாரி நியாயமான லாபத்தோடு திருப்தியடைந்திருப்பா ரானால், ராஜ்யத்திற்கு அல்லது ஒரு சமூகம் என்று கருதப்படும் அந்த மூவருக்கு என்ன சொத்து நியாயமாக இருந்திருக்குமோ அதைவிட இப்பொழுது அவர்களுக்குக் கூட்டாக இருக்கும் சொத்து குறைவாகவே இருக்கிறது. இரு விவசாயிகளின் சாகு படி வேலை அடியோடு முடக்கப்பட்டுவிட்டது. நெருக்கடியான சம யங்களில் அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய பொருள்கள் கிடைப்பதும் கஷ்டமாகிவிட்டது. அதோடு வாழ்க்கையை நடத் திக் கொண்டு போவதற்கே போராடிக்கொண்டிருக்க வேண்டி யிருந்ததால் தைரியமும் அவர்களுக்கு இல்லாது போய்விட்டது. அவர்களுடைய உழைப்பினால் ஏற்பட்டிருக்க வேண்டிய பலனும் குறைந்துபோய் விட்டது. வியாபாரி தன் கிடங்கில் பொருள் களைச் சேர்த்து வைத்திருந்தான் என்பது சரி. ஆனால், அந்த வியாபாரி யோக்கியமாக நடந்திருந்தால், அவ்விரு விவசாயி களின் களஞ்சியங்களிலும் இருந்திருக்கக்கூடிய பொருள்களின் மதிப்புக்கு இப்பொழுது இந்த வியாபாரியிடமிருக்கும் பொருளின் மதிப்பு சமமாக இருக்காது.

ஆகையால், சாதகத்தைப் பற்றிய விஷயம் மாத்திரம் அன்று, தேசீய செல்வத்தின் அளவைப் பொறுத்த விஷயமும் கூட, அப்பட்டமான நீதியைப் பொறுத்ததாகவே முடிவாக ஆகிறது. கணக்குப் போடுவதில் மொத்தம் இன்னது! என்ப

தைக் காட்டுவதற்கு பீஜ கணித அடையாளங்கள் அத்துடன் சேர்க்கப்படுகின்றன. அதேபோல, சேர்க்கும் செல்வத்தின் உண்மையான மதிப்பு, அதனுடன் சேர்ந்ததான ஒழுக்க அடையாளத்தையே முக்கியமாகப் பொறுத்திருக்கிறது.ஒரு குறிப்பிட்ட அளவு வர்த்தகச் செல்வம் சேர்ந்திருக்கிறது என்பது. விசுவாசமுள்ள உழைப்பு, முன்னேற்றமான சக்திகள், உற்பத்தித் திறமை ஆகியவைகளை ஒரு பக்கத்தில் காட்டுவதாக இருக்கலாம். ஆனல், மற்ருேர் பக்கத்திலோ, சாவுகளை உண்டாக்கும் ஆடம்பரம், இரக்கமற்ற கொடுமை, நாசமாக்கும் கேவலமான சூழ்ச்சிகள் ஆகியவற்றையும் அச்செல்வம் காட்டும்.

இவைகளெல்லாம் செல்வங்களுக்குப் பெருமை அளிப்பன அல்ல. எனவே, செல்வத்தை அடைய விரும்புகிறவர், அவர் இஷ்டப்பட்டால், இக்காரியங்களையெல்லாம் வெறுத்துத் தள்ளிவிடலாம். உண்மையில் இவைகளெல்லாம் செல்வங்களின் லோகாயத இயல்புகளாகும். இவ்விஷயத்தில் அவை பணத்தின் அழிவான, அல்லது உயர்வான முக்கியத்தைக் காட்டுகின்றன. ஒரு பணக்குவியல், அதை உண்டாக்கியிருக்கும் செயலின் விளைவு. இன்னுமொரு வகையிலோ, அச்செல்வத்தைத் திரட்டுவதில் அச்செயல் பத்து மடங்குக்கும் அதிகமாகவே அழித்தலையும் செய்திருக்கிறது என்றும் ஆகும்.

ஆகையால், ஒழுக்கக் காரணத்தைப் பற்றிக் கொஞ்சமேனும் கவலைப்படாமல் செல்வத்தைச் சம்பாதிப்பதற்கான வழிகளைச் சொல்லலாம் என்ற கருத்து, மனிதரை அக்கிரமங்களின் மூலம் ஏமாற்றியிருக்கும் காரியங்களிலெல்லாம் அதிக மோசமான வீண் காரியம் ஆகும். ‘மலிவாக இருக்கும் இடங்களில் வாங்கி, கிராக்கியாக இருக்கும் இடங்களில் விற்க வேண்டும்’ என்பது, தேசீயப் பொருளாதாரத்திற்கு ஏற்ற கொள்கை, வர்த்தக தருமம் என்பது இக்காலத்தில் இருந்து வரும் கருத்து. இக் கருத்தைப் போல மனிதனின் அறிவுக்கு மானக்கேடானது வேறு எதுவும், நான் அறிந்தவரையில், சரித்திரத்தில் இருந்ததே இல்லை. மலிவாக இருக்கும் மார்க்கெட்டில் வாங்குவதா? சரி, அப்படியே வாங்குவோம். ஆனல், அந்த மார்க்கெட்டை மலிவானதாகச் செய்தது எது? வீடு தீப்பிடித்து எரிந்து போய்விட்ட பிறகு அவ்வீட்டிலிருந்த மரங்களின் எரிந்த கரி மலிவாகக் கிடைக்கலாம். பூகம்பம் ஏற்பட்ட பின்னர், இடிந்து போய்விட்ட வீடுகளின் செங்கற்கள் தெருவிலேயே மலிவாகக் கிடைக்கும். இதனல் தீயும், பூகம்பமும் தேசீய நன்மைக்கானவைகளாகிவிட மாட்டா. கிராக்கி அதிகமாக இருக்கும் இடத்தில் விற்றுவிடுவதா? சரி, உண்மைதான். ஆனல், உங்கள் மார்க்கெட்டைக் கிராக்கியானதாக ஆக்கியது எது? உங்கள் ரொட்டியை இன்று நல்ல விலைக்குத்தான் விற்றீர்கள், அப்படி நீங்கள் விற்றது யாருக்கு? செத்துக்கொண்டிருக்கும் மனிதன், தன்னிடமிருந்த கடைசிக் காசையும் உங்களிடம் கொடுத்துவிட்டு, என்றுமே

ரொட்டி தேவைப்படாதவனுகிவிட்டானே, அவனுக்கா? அல்லது நீங்கள் விற்றது, நாளைக்கே உங்கள் நிலங்களை வாங்கிவிட சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறனே அந்தப் பணக்காரனுக்கா? அல்லது நீங்கள் விற்றது, நீங்கள் எந்தப் பாங்கில் உங்கள் ஆஸ்தியைப் போட்டு வைத்திருக்கிறீர்களோ அந்தப் பாங்கியைச் சூறையாடப் போய்க்கொண்டிருக்கிறனே, அந்தச் சிப்பாய்க்கா?

இவற்றில் எதுவுமே உங்களுக்குத் தெரிய முடியாது. ஒரே ஒரு விஷயம்தான் உங்களுக்குத் தெரிய முடியும். அதாவது, இதில் நீங்கள் செய்த காரியம் நியாயமானதா, விசுவாசமானதா என்பதைத்தான் நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டும். இவ் விஷயத்தில் நீங்கள் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டியதெல்லாம் அவ்வளவுதான். உலகத்தில் சூறையாடலையோ, சாவுகளையோ உண்டாக்கிவிடாத ஒரு நிலையை முடிவாகக்கொண்டு வருவதற்கு நீங்கள் செய்ய வேண்டியதை அப்பொழுது நிச்சயமாக, நீங்கள் செய்தவர்களாவீர்கள்.

மனிதர் மீது சக்தியைக் கொண்டிருப்பதில்தான் பணத்தின் முக்கியமான மதிப்பு இருக்கிறது என்று காட்டப்படுகிறது. இந்தச் சக்தி இல்லையானல், பெரும் சொத்துக்களை வைத்துக் கொண்டிருப்பதில் ஒரு பயனுமில்லை என்றும், அத்தகைய சக்தியைப் பெற்றிருப்பவனுக்குச் சொத்து அவசியமில்லை என்றும் காட்டப்படுகிறது. ஆனல், மனிதர் மீது வகிக்கும் சக்தி, பணத்தைத் தவிர மற்ற முறைகளைக்கொண்டு அடையக் கூடியதாகும்.

இந்த ஒழுக்க சக்தியில் ஒருவித பண மதிப்பும் இருக்கிறது. ஏராளமான பண நோட்டுக்களில் இருப்பதைப் போன்றே இதற்கும் உண்மையான மதிப்பு இருக்கிறது. ஒரு மனிதனின் கையில் கண்ணுக்குத் தெரியாத வகையில் தங்கம் நிறைந்து இருக்கலாம். இன்னொருவரின் கையைவிட இக்கை, இதை அசைத்தாலோ அல்லது பற்றினலோ அதிகமாகத் தங்கத்தைச் சொரிந்துவிடும்.

ஆனல், இன்னும் கொஞ்சம் மேலே போய்ப் பார்ப்போம். செல்வத்தின் சாரமெல்லாம், மனிதர் மீது அதற்கு இருக்கும் அதிகாரத்தில்தான் இருக்கிறதல்லவா? கண்ணுக்குத் தெரியும் செல்வத்திற்கு இந்தச் சக்தி இல்லாது போய்விட்டதென்றால், பிறகு அது செல்வமாகவே இல்லாது போகிறது. மனிதர் மீது நமக்கு இருக்கும் அதிகாரம் பூரணமானது என்று இப்பொழுது இங்கிலாந்தில் தோன்றக் காணேம்.

முடிவாக, மனிதர் மீது வகிக்கும் சக்தியே செல்வத்தின் சாரமாக இருப்பதால், அந்தச் செல்வம் யார் மீது அதிகாரம் வகிக்கிறதோ அவர்கள் உயர்வானவர்களாகவும், அதிகத் தொகையினராகவும் இருந்தால், அப்பொழுது அச்செல்வம் அதிக

மானதாகிறதல்லவா? இன்னும் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால், மனிதர்களேதான் செல்வமேயன்றித் தங்கமோ, வெள்ளியோ அல்ல என்பதும் தோன்றும். செல்வத்தின் ரத்தக் குழாய்கள் சிகப்பாகவே இருக்கின்றன. அவை சதையில்தான் இருக்கின்றனவேயன்றிப் பாறையில் இல்லை. நல்ல திடகாத்திரத்தோடு கூடிய, பிரகாசமான கண்களையுடைய, சந்தோஷமான மனத்தோடிருக்கும் மனிதரைச் சாத்தியமானவரை எவ்வளவு அதிகமாக முடியுமோ அவ்வளவு அதிகமாக உற்பத்தி செய்வதில்தான் எல்லாச் செல்வங்களின் முடிவான உபயோகமும் இருக்கிறது. ஏதோ தொலை தூரமான காலத்தில், கனவிலும் கண்டறியாத ஒரு சமயத்தில் இங்கிலாந்து எப்படி இருக்கும் என்பதை நான் கற்பனை செய்துகொள்ள முடிகிறது. அப்பொழுது இங்கிலாந்து தன்னுடைய லோகாயதச் செல்வத்தை எல்லோருக்கும் காட்டிக்கொள்ளுவதற்காகக் கோல்கொண்டாவிலிருந்து கொண்டுவந்த வைரங்களைத் தனது அடிமைகளின் முண்டாசுகளில் வைத்து அலங்கரிக்காது. ஆனால், ஒரு கிறிஸ்தவத் தாய் என்ற முறையில் இங்கிலாந்து, கடைசியாக, கிறிஸ்தவத்தைச் சேராத ஒரு தாயின் நற்குணங்களையும் பொக்கிஷங்களையும் அடைந்து, தன்னுடைய குழந்தைகளை, ‘இவையே என் ரத்தினங்கள்’ என்று சொல்லி இட்டுச் செல்ல முடியும்.

கட்டுரை - 3

# ஒரே விதமான நீதி

கிறிஸ்தவ சகாப்தம் ஆரம்பமாவதற்குச் சில நூற்றுண்டுகளுக்கு முன்னல், ஒரு யூத வர்த்தகர், அவர் காலத்தில் மிகப் பிரமாதமானது என்று சொல்லும் வகையில் ஏராளமான செல்வங்களைத் திரட்டினர். அனுபவ ஞானமும் அவருக்கு அதிகம் உண்டு என்ற கீர்த்தியும் அவருக்கு இருந்தது. அவர் தமது கணக்குப் புத்தகங்களுடன் சில பொதுவான புத்திமதிகளையும் எழுதி வைத்துவிட்டுப் போனர். அவற்றை நம் காலம் வரையும் போற்றிப் பாதுகாத்து வந்தார்கள். அவற்றிற்கு வினீஷியர்கள் அதிக மரியாதை செலுத்தி வந்தனர். அந்தக் கிழ யூதரின் சிலை ஒன்றையும் தங்கள் பிரதான கட்டடத்தின் முன்னல் வைத்தார்கள். சமீப காலத்தில் அந்த எழுத்துக்களுக்கு மதிப்பே இல்லாமல் போய்விட்டது. இக்கால வியாபாரத்தின் போக்குக்கு அது விரோதமானதாகவும் ஆகிவிட்டது.

உதாரணமாக ஓர் இடத்தில் அவர் வருமாறு கூறுகிறர்: ‘பொய் சொல்லும் நாவைக்கொண்டு திரவியங்களைப் பெறுவது, அவற்றை அங்குமிங்கும் அலைக்கழித்துச் சாவைத் தேடிக்

கொள்ளும் அகந்தையேயாகும்'. இன்னுமொன்றில் அதே பொருளுடன் கூறுவதாவது ; 'கெட்ட காரியங்களைச் செய்து தேடிய பணத்தினுல் எந்தப் பயனுமே இல்லை. ஆனுல், சத்தியமே சாவிலிருந்து காக்கும்'. அக்கிரமமான முறையில் பணத்தைத் திரட்டுவதனுல் அடையக்கூடிய முடிவும், ஒரே உண்மையான பிரச்னையும் சாவுதான் என்பதை அவ்விரு வாக்கியங்களும் வற்புறுத்திக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அந்த வாக்கியத்தில் 'பொய் பேசும் நாக்கு' என்று இருப்பதற்குப் பதிலாக, 'பொய் சொல்லும் முத்திரைகள், பெயர்கள், பாசாங்குகள் அல்லது விளம்பரங்கள்' என்று படித்தால், அந்த வார்த்தைகள் இக்கால வர்த்தகத்திற்கு எவ்வளவு பொருத்தமானவை என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

அந்த ஞானி மேலும் சொல்லுகிருர்: 'தன்னுடைய செல்வங்களைப் பெருக்கிக்கொள்ளுவதற்காக ஏழைகளைக் கஷ்டப்படுத்துகிறவன், நிச்சயமாக ஏழ்மையையே அடைவான்.' அவர் இன்னும் பலமாக வருமாறு கூறுகிருர் : 'ஏழையாக இருக்கிருன் என்பதற்காக ஏழையிடம் திருடாதே. உடலினுலும் மனத்தினுலும் துன்பப்பட்டுக்கொண்டிருப்பவர்களை, வியாபாரம் செய்யும் இடத்தில் உன் சக்தியைக் கொண்டு நசுக்கிவிடாதே. ஏனெனில், அவர்களைக் கெடுத்தவர்களின் ஆன்மாக்களைக் கடவுள் கெடுத்துவிடுவார்.'

'ஏழையாக இருக்கிருன் என்பதனுல் ஏழையைத் திருடுவது' என்ற இது, முக்கியமாகத் திருட்டின் வியாபார ரூபமாகும். ஒருவனுக்கு இருக்கும் தேவையைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு, அவனுடைய உழைப்பையோ சொத்தையோ குறைந்த விலைக்கு வாங்கிக்கொண்டுவிடுவதுதான் இது. சாதாரண வழிப்பறிக் கொள்ளைக்காரன், பணக்காரர்களிடம் திருடுகிருன்; ஆனுல், வியாபாரியோ, ஏழைகளிடம் திருடிவிடுகிருன்.

ஆனுல், கீழ்வருவன இரு அற்புதமான கூற்றுக்கள் :

'பணக்காரரும் ஏழையும் சந்தித்துவிட்டனர்.
அவர்களைப் படைத்தவர் கடவுளே.'
'பணக்காரரும் ஏழையும் சந்தித்துவிட்டனர்.
கடவுளே அவர்களுக்கு வெளிச்சம்.'

அவர்கள் 'சந்தித்துவிட்டனர்'. அதாவது, உலகம் இருக்கும் வரையில் செல்வத்தின், ஏழ்மையின் செயலும் எதிர்ச் செயலும், கடலை நோக்கியே நதிகள் செல்வதுபோல, உலகத்தின் நீதியாக வகுக்கப்பட்டவாறே இருக்கும். 'அவர்களைப் படைத்தவர் கடவுளே.' ஆனுல், இச்செயல் கண்ணியமானதாகவும் நியாயமானதாகவும் இருக்கலாம்; ஆவேசமானதாகவும் அழிக்கக் கூடியதாகவும் இருக்கலாம். அது எல்லாவற்றையும் விழுங்கிவிடும் பிரவாகத்தின் கோபாவேசமாகவும் இருக்கலாம். அல்லது

பயனுள்ளதான அலைகள் இல்லாது போவதன் மூலமும் இருக்கலாம். இவற்றில் எதுவாக அது இருக்க வேண்டும் என்பது, பணக்காரரும் ஏழையும் கடவுளே தங்கள் ஒளி என்பதை அறிவதைப் பொறுத்திருக்கிறது.

நதியின் போக்கு, ஒரு வகையில், செல்வத்தின் செயலின் சரியான ரூபமாக இருந்து வருகிறது. எங்கே பள்ளம் இருக்கிறதோ அங்கே நீர் பாய்கிறது. அதே போல செல்வம், அது எங்கே தேவைப்படுகிறதோ அங்கே போக வேண்டும். ஆனல், நதிகளின் போக்கையும், அவற்றை நிர்வகிப்பதையும் மனிதனின் முன்யோசனையினல் மாற்றிவிட முடியும். ஒரு நதி, சாபக் கேடாகிவிடுவதோ, அல்லது வாழ்வுறச் செய்வதாக இருப்பதோ மனிதனின் உழைப்பையும் புத்திசாலித்தனமாக நடப்பதையும் பொறுத்திருக்கிறது. உலகத்தில் செழிப்பான பூமியும், நல்ல சீதோஷ்ண நிலைமையும் இருக்கும் பகுதிகள், அவற்றிலிருக்கும் நதிகளின் கோபாவேசத்தினலேயே அநேக நூற்ருண்டுகளாகப் பாலைவனங்களாக ஆகியிருக்கின்றன. பாலைவனமாக மாத்திரமல்ல, நோய்கள் மலிந்த இடங்களாகவும் ஆகியிருக்கின்றன. நதி, சரியான வழியில் திருப்பிவிடப்பட்டிருக்குமானல், அதன் நீர் வயல்தோறும் மென்மையாகப் பாய்ந்திருக்கும். காற்றையும் சுத்தப்படுத்தி இருக்கும். மனிதனுக்கும் மிருகங்களுக்கும் உணவளித்திருக்கும். அவர்களுடைய சுமைகளை அவர்களுக்காக அந்நதியே சுமந்துகொண்டு போய்ச் சேர்த்திருக்கும். சமவெளியைப் பாழாக்கிக் காற்றையும் விஷமாக்கி, விஷத்தையே மூச்சுவிடுவதோடு பஞ்சத்தையும் உண்டாக்கி வந்த நதியை இப்படியெல்லாம் பயன்படுத்திக்கொள்ளலாம். அதே போல மனிதர் செய்யும் சட்டங்களும் செல்வத்தின் ஓட்டத்தை நல்வழிப்படுத்தலாம். பாயும் கால்வாயும், கட்டுப்படுத்தும் பாறையுமான இது, வாழ்வுக்கான நீராகும்படியும் முற்றிலும் செய்துவிடலாம். அதுவே ஞானமாகிய கையின் செல்வம். இதற்கு மாருக, இந்நதி கண்டபடியெல்லாம் ஓடிக் கொண்டிருக்க விட்டுவிட்டால், அதை மக்களுக்குக் கடைசியான, சாவை உண்டாக்குவதான தேசத் தொத்து நோயாகவும் செய்து விடலாம். அதன் நீர் எல்லாத் தீமைகளின் வேர்களிலும் பாய்ந்து அவற்றை வளர்ப்பதாகிவிடும்.

விநியோகத்திற்கோ அல்லது கட்டுத்திட்டங்களுக்கோ அவசியமான இந்தச் சட்டங்களை, சாதாரண பொருளாதார பண்டிதர்கள் தங்களுடைய சொந்த 'சாத்திர'த்திற்குக் கூறும் விளக்கத்தில் விசித்திரமான வகையில் அலட்சியமாகக் கருதி விட்டு விட்டார்கள். அந்தச் சாத்திரத்தைப் 'பணக்காரர்களாவதற்கான சாத்திரம்' என்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஆனல், பணக்காரர்களாவதற்கு இதேபோல எத்தனையோ சாத்திரங்களும் கலைகளும் இருக்கின்றன. பெரிய சமூகங்களில் ஆட்களை விஷம் கொடுத்துக் கொன்றுவிடுவது, மத்திய காலத்தில் பெரும்

பாலும் அனுசரிக்கப்பட்டு வந்திருக்கும் ஒரு முறை. சின்ன சமூகங்களில் உணவில் கலப்படம் செய்வது இக்காலத்தில் பெரும் அளவில் அனுசரிக்கப்படும் முறை. இவைகள் எல்லாமே, பணக்காரராவதற்கான சாத்திரங்கள், அல்லது கலைகள் என்ற தலைப்பின் கீழேயே வருகின்றன.

ஆகவே, தன்னுடைய சாத்திரத்தைப் பணக்காரராவதற்கான சாத்திரம் என்று கூறிக்கொள்ளும் பொருளாதாரப் பண்டிதர், அதன் தன்மையில் சில கட்டுத்திட்டங்கள் இருக்கும் கருத்தையும் அதனுடன் சேர்க்க வேண்டும். அவர் தன்னுடைய சாத்திரம், 'சட்ட ரீதியான அல்லது நியாயமான முறைகளைக்கொண்டு பணக்காரராவதற்கான சாத்திரம்' என்றுதான் கருதுகிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். இந்த விளக்கத்தில் 'நியாயமான அல்லது சட்டரீதியான' என்ற சொற்கள் முடிவாக நிலைத்திருப்பனவா? ஏனெனில், நடவடிக்கை சட்ட சம்பந்தமானதாக இருந்தாலும் அது நியாயம் இல்லாததாகவும் இருந்துவிடக்கூடும். ஆகையால், நமது விளக்கத்தின் அந்த இடத்தில் 'நியாயமான' என்ற சொல்லை மாத்திரமே கடைசியாக நாம் விட்டுவைப்பதானால், சாத்ரீக வழியில் பணக்காரர்களாவதற்கு நியாயமான வகையில் நாம் பணத்தைப் பெருக்கவேண்டும் என்றாகிறது. எனவே, நியாயமானது என்பது என்ன என்பதை அறியுங்கள். தேவையையும் கிடைப்பதையும் பற்றிய நியதிகளைக்கொண்டு வாழ்வது மீன்களின் உரிமையாக இருப்பதைப் போன்றே எலிகள், ஓநாய்கள் ஆகியவைகளின் உரிமையும். ஆனால், உரிமைகளைப் பற்றியவைகளைக் கொண்டு வாழ்வது என்பது, மனிதவர்க்கத்திற்கு இருக்கும் தனி விசேஷம்.

உழைப்புக்கு ஊதியம் கொடுப்பது சம்பந்தமாக நீதியான சட்டங்கள் யாவை என்பதை நாம் ஆராய வேண்டும்.

ஊதியத்திற்குப் பணத்தைக் கொடுப்பது என்பதைப் பற்றி என் முந்திய கட்டுரையில் கூறியிருக்கிறேன். நமக்காக ஒருவன் வேலை செய்கிறான். இன்று நம் வேலைக்கு அவன் செலவிடும் நேரம், உழைப்பு ஆகியவைகளுக்கு நாம் கொடுப்போம். அல்லது அவன் செலவழித்த அதே நேரத்தையும் உழைப்பையும், அவன் கேட்கும்போது அவன் சேவைக்கு நாம் திருப்பிச் செய்துவிடுவதாக அவனுக்குச் சேர்த்துவைக்கிறோம்.

அவன் நமக்கு அளித்திருக்கும் உழைப்பிற்குக் குறைவான உழைப்பை நாம் அவனுக்குத் திருப்பிக் கொடுத்தால், அப்பொழுது அவனுக்குரியதைக் குறைத்துக் கொடுக்கிறோம் என்றாகும். அவன் அளித்த உழைப்புக்கு மேல் அதிகமாக நாம் கொடுப்பதாக வாக்களிப்போமானால், அவனுக்கு உரியதைவிட நாம் அதிகமாகக் கொடுக்கிறோம் என்றாகும்.

அனுபவத்தில் நடப்பது என்ன? அந்த வேலையைச் செய்ய இரண்டு பேர் தயாராக இருக்கும்போது, அதில் ஒருவன் மாத்

திரமே அந்த வேலையைச் செய்துவிட விரும்பும்போது, அவர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு குறைந்த ஊதியத்திற்கு வருவதாகச் சொல்லுகிறார்கள். இவர்களில் வேலையைச் செய்ய நியமிக்கப்பட்டு விடும் ஒருவன், குறைந்த ஊதியம் கொடுக்கப்படுகிறான். ஆனால், ஒரு வேலையைச் செய்ய இருவர் வேண்டியிருக்கிறது. அதைச் செய்ய ஒருவர் மாத்திரமே தயாராக இருக்கிறார் என்றால், அவ்வேலையைச் செய்வதற்கு வேண்டிய இரு ஆட்களும் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு அதிக ஊதியம் வேண்டும் எனக் கேட்கிறார்கள். அப்பொழுது தொழிலாளி அதிக ஊதியம் கொடுக்கப்படுகிறான். நியாயமான அல்லது நீதியான ஊதியம் கொடுப்பது என்பதன் கேந்திரமான கொள்கை, அநீதியான இந்த இரண்டு விஷயங்களுக்கிடையேதான் இருக்கிறது.

விதை, பழம் தருவதாக இருப்பதைப் போன்று உழைப்பும் நல்ல பயனைத் தருவதாக இருப்பதால், முதலில் அளிக்கப்பட்ட அல்லது 'அளிக்க முன் வந்த' உழைப்பின் பலனையும் (அல்லது அது சொல்லப்படுவது போல் 'வட்டி'யையும்) கணக்கில் வைத்துக் கொள்ள வேண்டும். பின்னால் அந்த உழைப்பைத் திருப்பிக் கொடுக்கும்போது, அதில் அதிகப்படியான ஓரளவு உழைப்பும் சேர்ந்திருக்க வேண்டும். ஆகையால், இந்தப் பேரத்தின் சரியான முறை இப்படி இருக்கும்: இன்று எனக்காக நீ ஒரு மணி நேரம் உழைத்தால், பிறகு நீ கேட்கும்போது ஒரு மணி ஐந்து நிமிஷ உழைப்பைத் திருப்பிக் கொடுக்கிறேன். இன்றைக்கு எனக்கு ஒரு பவுண்டு ரொட்டி கொடுத்தால், நீ விரும்பும்போது பதினேழு அவுன்ஸ் ரொட்டியை உனக்குத் திருப்பிக் கொடுக்கிறேன். இந்தப் பேரம் இது போல் இருக்க வேண்டும்.

இப்பொழுது, அந்த வேலையைச் செய்ய இருவர் தயாராக இருக்கிறார்கள்; ஆனால், பாதி ஊதியத்திற்கு வேலை செய்ய ஒப்புக் கொள்ளும் ஒருவனை நான் நியமிக்கிறேன் என்றால், அவன் அரைப் பட்டினியாக இருக்க வேண்டி வரும். மற்றவனோ, வேலையில்லாமல் கஷ்டப்படுவான். வேலைக்கு நான் எடுத்துக்கொண்ட தொழிலாளிக்கு உரிய ஊதியத்தை நான் கொடுத்து விட்டாலும், இன்னொருவன் வேலையில்லாமல்தான் இருந்து வருவான். ஆனால், அப்பொழுது என் தொழிலாளி பட்டினி கிடக்க வேண்டி இருக்காது; என் பணத்தை நியாயமான வழியில் உபயோகித்துக் கொண்டவனும் ஆவேன். என் ஆளுக்கு உரிய ஊதியத்தை நான் அவனுக்குக் கொடுப்பேனாயின், அவசியமான செல்வத்தைத் திரட்ட என்னால் முடியாது. அனாவசியமான ஆடம்பரங்களில் பணத்தை வீணாக்கவோ என்னால் ஆகாது. உலகத்திலிருக்கும் பெரும் ஏழ்மையில் மேற்கொண்டும் நான் சேர்த்துவிடமாட்டேன். என்னிடமிருந்து உரிய ஊதியத்தைப் பெற்று வரும் தொழிலாளி தனக்குக் கீழிருப்பவர்களிடம் நியாயமாக நடந்துகொள்ளுவான். இவ்வாறு நீதியின் ஆறு வற்றிவிடாது. அதுஓடிக்கொண்டிருக்கும் போதே புதிதாகப் பலத்தையும் பெற்றுக் கொள்ளும். இத்த

கைய நீதியின் உணர்ச்சியுள்ள நாட்டு மக்கள் சந்தோஷமாகவும் சுபிட்சமாகவும் இருப்பார்கள்.

இவ்விதப் போட்டி ஒரு நாட்டு மக்களுக்கு நல்லது என்று பொருளாதாரப் பண்டிதர்கள் நினைப்பது தவறு என்பதைக் காண்கிறோம். உழைப்பை வாங்குகிறவர்,அதை அக்கிரமமாக, மலிவாக வாங்குவதற்குத்தான் போட்டி உதவி செய்கிறது. இதன் பலனாக, பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகின்றனர்;ஏழைகள் மேலும் பரம ஏழைகளாகிறார்கள். நாளாவட்டத்தில் இது ஒரு நாட்டு மக்களை நாசத்தில்தான் கொண்டு போய்விடும். ஒரு தொழிலாளி, அவனுடைய திறமைக்கு ஏற்றபடி நியாயமான ஊதியத்தைப் பெற வேண்டும். அப்பொழுதும்கூட ஒரு வகை போட்டி இருந்தே வரும். ஆனால், மக்கள் சந்தோஷமாகவும் திறமை வாய்ந்தவர்களாகவும் இருப்பார்கள். ஏனெனில், ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு அவர்கள் குறைந்த கூலிக்குப் போக வேண்டி இராது. ஆனால், தங்களுக்கு வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காகப் புதிய ஆற்றல்களைப் பெறுவதில் போட்டி போடுவார்கள். அரசாங்க உத்தியோகங்களுக்குப் போக வேண்டும் என்பதில் கவர்ச்சி அதிகமாக இருப்பதன் ரகசியம் இதுதான். அங்கே படிப்படியாக உத்தியோகங்களுக்குச் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த உத்தியோகத்தை நாடிப் போகிறவர், போட்டி போட்டுக்கொண்டு குறைந்த சம்பளத்திற்கு வருவதாகச் சொல்லுவதில்லை. உத்தியோகத்திற்குத் தன்னுடன் போட்டி போடுகிறவர்களை விட தான் திறமைசாலி என்றுதான் சொல்லுகிறார். ராணுவத்திலும் கடற்படையிலும் இதே நிலைமைதான். அங்கே லஞ்ச ஊழல் அவ்வளவாக இல்லை. ஆனால், வர்த்தகத்திலும் உற்பத்தியிலும் ஆட்களை நசுக்கும் வகையில் போட்டி இருந்து வருகிறது. இதன் பலனாக மோசடி, ஏமாற்றுவது, திருட்டு ஆகியவைகளெல்லாம் அங்கே இருக்கின்றன. படுமோசமான சரக்குகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. உற்பத்தி செய்கிறவர், தொழிலாளி, சாமான்களை வாங்குகிறவர் ஆகியவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் சொந்த நலனில்தான் சிரத்தையுடனிருக்கிறார்கள். இது மனித உறவு எல்லாவற்றையுமே விஷமாக்கிவிடுகிறது. தொழிலாளர் பட்டினி கிடக்கிறார்கள்; வேலை நிறுத்தம் செய்கின்றனர். உற்பத்தியாளர்களோ, அயோக்கியர்களாகி விடுகின்றனர். சாமான்களை வாங்கி உபயோகிப்பவர்களோ, தங்கள் நடத்தையிலிருக்க வேண்டிய தரும அம்சத்தையே அலட்சியம் செய்து விடுகின்றனர். ஓர் அநீதி பல அநீதிகளில் போய் முடிந்து விடுகிறது. முடிவில் முதலாளி, தொழிலாளி, சாமான்களை வாங்குவோர் ஆகிய எல்லோரும் சந்தோஷமற்றவர்களாகி, இழிந்து நாசத்தையே அடைகின்றனர். மக்களின் செல்வமே அவர்களுக்குச் சாபக்கேடாக அவர்களிடையே வேலை செய்கிறது.

பொருளாதாரப் பண்டிதர்களின் சாதாரணப் பொருளாதாரத் தத்துவங்களைச் சாத்திரம் என்று நம்மிடையே ஒப்புக்கொள்

ளப்பட்டிருப்பதைப் போல மனித அறிவுக்கு மானக் கேடான காரியம் சரித்திரத்தில் வேறு எதுவுமே இல்லை. தமது தருமம் என்று ஒரு நாட்டு மக்கள் கூறிக்கொள்ளுவதன் முதல் கொள் கைகளையே கட்டுப்பாடாக இப்பொழுது மீறி வருவதைப் போன்ற ஒரு சம்பவம் இதற்கு முன்னல் சரித்திரத்தில் இருந் திருப்பதாகவும் நான் அறியவில்லை.

தெய்வீகமானவை என்று நாம் மதிக்கும் வேதங்கள், பண ஆசை தீமைக்குப் பிறப்பிடம் என்று கூறிக் கண்டிக்கின்றன. பணதேவதையைப் பூசிப்பது, கடவுளைப் பூசிப்பதற்கு எதிரானது என்று சொல்லுகின்றன. முழுமையான செல்வத்தைக் குறித் தும், முழுமையான ஏழ்மையைக் குறித்தும் வேதங்கள் கூறும் போதெல்லாம், பணக்காரர்கள் ஒழிக, ஏழைகள் வாழ்க என்று தான் கூறுகின்றன.

நீதியின் பொருளாதாரமே உண்மையான பொருளாதாரம். நீதியையும் நியாயமானதையும் செய்ய மக்கள் கற்றுக்கொண்ட வரையில் அவர்கள் ஆனந்தமாக இருப்பார்கள். மற்றவைக ளெல்லாம் வீணனவை என்பது மாத்திரமல்ல, அவை நேரே நாசத் திற்குக் கொண்டு போகிறவை. எந்த விதத்திலாவது பணக்காரர் களாகி விட வேண்டும் என்று மக்களுக்குப் போதிப்பது, அவர் களுக்கு மிக அதிகமான அக்கிரமத்தைச் செய்வதாகும்.

கட்டுரை-4

# மதிப்பிற்குச் சமமானது

ராஜீய பொருளாதாரம் எந்தக் கருத்துக்களை அடிப்படை யாக கொண்டிருக்கின்றனவோ அவை தவருன வழியில்கொண்டு போகிறவைகளாக இருக்கின்றன என்பதைப் பார்த்தோம். அக் கருத்துக்களை நடைமுறையில் அனுசரித்தால். தனிப்பட்டவர் களையும் நாட்டு மக்களையும் சந்தோஷமற்றவர்களாகவே அவை செய்யும். அவை, ஏழைகளை இன்னும் அதிக ஏழைகளாக்கு கின்றன: பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாக்குகின்றன. இதனல் சந்தோஷமாக இருப்பவர் யாருமே இல்லை.

மனிதனுடைய நடத்தை முக்கியம் என்பதைக் குறித்துப் பொருளாதாரப் பண்டிதர்கள் கவனிப்பதே இல்லை. ஆனல், பணத்தைச் சேர்த்துவிட்டால் அதுவே சுபிட்சத்திற்கு அறிகுறி என்கிருர்கள். ஒரு நாட்டு மக்களின் இன்பமெல்லாம் அவர்கள் குவித்திருக்கும் செல்வத்தை மாத்திரமே பொறுத்திருக்கிறது என்றும் சொல்லுகிருர்கள். எவ்வளவுக்கெவ்வளவு தொழிற் சாலைகள் அதிகமாகின்றனவோ அவ்வளவுக்கு அம்மக்கள் சந்

தோஷமாக இருப்பார்கள் என்கின்றனர். இவ்விதமாக மனிதர், இன்பமான வசந்த காற்ருேடுகூடிய கிராம விவசாய நிலங்களை விட்டுவிட்டு நகரங்களுக்கு வருகிருர்கள். கூச்சலினிடையே இழிந்த வாழ்க்கை வாழ்கிருர்கள். இருளில் கிடந்து, பயங்கரமான சோர்வை அடைந்து வாழ்க்கை நடத்துகிருர்கள். இதனுல் தேச மக்களின் உடல் நலனே சீர்கேடு அடைந்துவிடுகிறது. பேராசையும் ஒழுக்கக் கேடான செய்கைகளும் அதிகமாகின்றன. கெட்ட பழக்க வழக்கங்களையெல்லாம் போக்குவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று யாராவது சொன்னுல், ஏழைகளுக்குப் படிப்பு கிடைக்க வேண்டும் என்பதிலெல்லாம் ஒரு பயனும் இல்லை என்றும், அவர்கள் எப்படி இருக்கிருர்களோ அப்படியே இருந்து வர விட்டுவிடுவதுதான் நல்லது என்றும் அறிவாளிகள் என்று சொல்லப்படுகிறவர்கள் சொல்லி விடுவார்கள். ஆனுல், ஏழைகளின் ஒழுக்கக்கேடான நிலைக்குப் பணக்காரர்கள்தான் பொறுப்பாளிகள் என்பதை அவர்கள் மறந்துவிடுகின்றனர். பணக்காரர்களின் ஆடம்பர வாழ்க்கைக்கு வேண்டியதையெல்லாம் அளிப்பதற்காக ஏழைகள் அடிமைகளாக வேலை செய்து வருகிருர்கள். தங்களுடைய மேம்பாட்டைக் கவனித்துக்கொள்ளுவதற்கு அவர்களுக்கு ஒரு கண நேரம்கூட ஓய்வு என்பதே இல்லை. பணக்காரர்களைக் கண்டு பொருமைப் படும் ஏழைகள், தாங்களும் பணக்காரர்கள் ஆகிவிட முயற்சி செய்கிருர்கள். இம்முயற்சியில் அவர்கள் வெற்றி பெருது போகும்போது, கோபமடைகின்றனர். அப்பொழுது அவர்கள் நிதானத்தையெல்லாம் இழந்துவிட்டு பலாத்காரத்தைக் கொண்டோ, மோசடியினுலோ பணம் சேர்த்துவிட முயற்சி செய்கின்றனர். இவ்விதம் செல்வம், உழைப்பு ஆகிய இரண்டும் எந்த விதமான பலனையும் அளிக்காததாகிவிடுகிறது; அல்லது அவை மோசடியான காரியங்களுக்கு உபயோகிக்கப்படுகின்றன.

பயனுள்ளதான பொருள்களை உற்பத்தி செய்வதுதான், தொழில் என்பது அதற்குரிய உண்மையான பொருளில் இருக்கக்கூடியதாகும். உணவு, துணிகள், அல்லது வீடுகள் போன்று மனித வாழ்க்கைக்கு உதவியாக இருப்பவையே பயனுள்ள பொருள்களாகும். இப்படி உற்பத்தி செய்யப்படும் பயனுள்ள பொருள்கள், மனிதரின் சொந்த வாழ்க்கையை அதிக அளவுக்கு ஒழுங்குபடுத்திக்கொள்ளுவதற்கு உதவுகிறவைகளாக இருக்க வேண்டும். மற்றவர்களின் வாழ்க்கைகளிலும் உதவிகரமான காரியங்களைச் செய்யக்கூடியனவாகவும் அப்பொருள்கள் இருக்க வேண்டும். பணத்தைத் திரட்டுவது என்ற நோக்கத்தின் பேரில் பெரிய தொழிற்சாலைகளை அமைப்பது, ஒருவரைப் பாவம் செய்யும்படிச் செய்வதில்தான் கொண்டுபோய் விடும். அநேகர் பணத்தைச் சேர்த்துவிடுகிருர்கள்; ஆனுல். அதை நல்வழியில் பயன்படுத்துகிறவர்களோ மிகச் சிலரே ஆவர். குவித்த பணம் ஒரு நாட்டு மக்களின் அழிவுக்குத்தான் கொண்டு போகிறது என்ருல், அதனுல் ஒரு பயனுமே இல்லை.

அக்கிரமமான யுத்தங்கள் எங்கும் இருந்து வருவதற்கு இக்கால முதலாளிகள்தான் பொறுப்பாளிகள். மனிதனின் பேராசையினுலேயே யுத்தங்கள் ஏற்படுகின்றன.

பாமர மக்களின் நிலைமையை மேம்படுத்தும் வகையில் அவர்களுக்கு அறிவு ஏற்படும்படி செய்வது சாத்தியமானதே அல்ல என்று சிலர் சொல்லுகிருர்கள். ஆகையால், எது சரி என்று தோன்றுகிறதோ அப்படியே வாழ்ந்து பணத்தைச் சம்பாதிப்போம் என்றும் கூறுகிருர்கள். ஆனல், இது ஒழுக்கக் கேடான போக்கு. தரும விதிகளை அனுசரித்து நடந்து, பேராசைக்கு இடம் கொடுத்துவிடாமல் இருப்பவருக்கும், ஒரு நல்ல மனிதருக்கும் கட்டுத்திட்டத்தோடுகூடிய மனம் இருக்கும். அவர் நேரிய வழியிலிருந்து தவறிப் போய் விடுவதில்லை. தம்முடைய செய்கையினுல் அவர் மற்றவர்களையும் திருத்துபவராகிருர். தனிப்பட்டவர்களைக்கொண்டதுதான் ஒரு தேசத்தின் சமூகம். எனவே, தனிப்பட்டவர்கள் ஒழுக்கங்கெட்டவர்களாக இருந்தால் தேச மக்கள் எல்லோரும் ஒழுக்கம் கெட்டவர்களாகவே இருப்பார்கள். நம் இஷ்டம் போல் நாம் வாழ்க்கையை நடத்தி வந்து, அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் தவருக நடப்பதற்காக மாத்திரம் அவர்களை நாம் கண்டித்தால், அதன் பலன் ஏமாற்றத்தைத் தருவதாகவே இருக்கும்.

இவ்விதம் பணம் ஒரு வெறும் கருவியே என்பதைப் பார்க்கிரும். அது, துயரத்தையும் அளிக்கும், இன்பத்தையும் உண்டாக்கும். அப்பணம் நல்லவர் கையில் இருந்தால், நிலத்தைச் சாகுபடி செய்து நல்ல விளைவை உண்டாக்குவதற்கு அது உதவும். ஒரு பாவமும் அறியாத திருப்தியில் விவசாயிகள் உழைக்கிருர்கள். அதனுல் நாட்டு மக்கள் இன்பமடைகிருர்கள். ஆனல், அப்பணம் கெட்டவன் கையில் இருந்துவிட்டாலோ, உதாரணமாக, துப்பாக்கி மருந்தைச் செய்யத்தான் அது உபயோகமாகும். அது, உற்பத்தி செய்கிறவர்களுக்கே அன்றி அதனுல் பாதிக்கப்படுகிறவர்களுக்கும் நாசத்தையே உண்டாக்குகிறது. ஆகையால், வாழ்க்கைதான் இருக்கிறதேயன்றிப் பணம் இல்லை. உயர்வான, சந்தோஷமான மனிதரை எவ்வளவுக்கு அதிகமாக ஒரு நாடு கொண்டிருக்கிறதோ அவ்வளவுக்குத்தான் அந்த நாடு அதிகச் செல்வமுடையதாகும். யார் ஒருவர் தம்முடைய வாழ்க்கையை முற்றிலும் ஒழுங்குபடுத்திக்கொண்டு, தன்னுலும் தன்னுடைய சொத்துக்களினுலும் மற்றவர்களின் வாழ்க்கையில் மாறுதல்களை உண்டாக்குவதற்கு அதிக அளவு உதவி செய்பவராகவும் வாழ்ந்து வருகிருரோ அவரே அதிகச் செல்வம் படைத்தவராகும்.

தனக்குத் தானே சுகானுபவங்களை அனுபவித்துக்கொண்டு இருந்துவிடும் சமயம் அல்ல இது. ஆனல், நாம் ஒவ்வொருவரும் நம் சக்திக்கு ஏற்ற வகையில் உழைக்க வேண்டும். ஒருவன்

வேலே செய்யாமல் சோம்பேறியாக இருந்துவிட்டால், இன்னெருவன் இரண்டு மடங்கு வேலே செய்ய வேண்டியிருக்கும். இங்கிலாந்தில் ஏழைகள் துன்பத்தில் இருந்து வருவதற்கு மூல காரணம் இதுதான். ரத்தினங்களைப் பட்டை தீர்ப்பதிலோ, அழிவை உண்டாக்கும் யுத்தங்களிலோ ஈடுபடுத்தும் உழைப்பு எனப்படுபவை வீணுக்கான உழைப்பாகும். இந்த உழைப்பு, தேசத்தின் செல்வம் குன்றிவிடுவதில்தான் கொண்டு போய்விடுகிறது. இந்த உழைப்பினல் அவ்வுழைப்பை அளிப்பவருக்கும் நன்மை இல்லே. மனிதனுக்கு வேலே கொடுப்பதாகத் தோற்றமளித்தாலும் உண்மையில் அவர்கள் வேலேயில்லாமல்தான் இருந்து வருகின்றனர். செல்வங்களைத் தவருன வழிகளில் உபயோகித்துப் பணக்காரர்கள் ஏழைகளே ஒடுக்குகின்றனர். முதலாளிகளும் தொழிலாளரும் ஒருவருக்கொருவர் வாளே உருவிக்கொண்டு சண்டைக்குத் தயாராக இருக்கிருர்கள். மனிதர்கள், மிருகங்களின் நிலேக்குக் கொண்டு வரப்பட்டுவிட்டனர்.

# முடிவுரை

ரஸ்கினின் புத்தகத்தைத் தழுவி இதுவரை எழுதி வந்தேன். அவர் இந்நூலே முக்கியமாக ஆங்கிலேயருக்குத்தான் எழுதியிருக்கிருர். என்ருலும், இந்தியருக்கும் இதில் நல்ல புத்திமதிகள் இருக்கின்றன. இந்தியாவில் இப்பொழுது புதிய கருத்துக்கள் தோன்றியிருக்கின்றன. மேற்கத்திய நாட்டின் கல்வியைப் பெற்றிருக்கும் நம் இளைஞர்கள், முழு உணர்ச்சி வேகத்துடன் இருந்து வருகிருர்கள். இந்த உணர்ச்சி வேகத்தை நல்ல வழிகளில் திருப்பிவிட்டாக வேண்டும். இல்லேயானல், நமக்குத் தீமைதான் உண்டாகும். ‘நமக்குச் சுயராஜ்யம் வேண்டும்’ என்பது இளைஞர்களின் ஒரு கோஷம். ‘நம் நாட்டை யந்திரத் தொழில் மயமாக்குவோம்’ என்றும் கோஷிக்கிருர்கள்.

ஆனல், சுயராஜ்யம் என்பது என்ன என்பதை நாம் புரிந்துகொள்ளவே இல்லே. ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். நேட்டால் சுயராஜ்யத்தை அனுபவித்து வருகிறது. ஆனல், அதன் சுயராஜ்யம் நாற்றமெடுத்த சுயராஜ்யமாகவே இருக்கிறது. ஏனெனில், அது நீக்ரோக்களே நசுக்கி ஒடுக்குகிறது; இந்தியருக்குத் தீமை விளைவிக்கிறது. ஏதோ ஒரு சந்தர்ப்பத்தை முன்னிட்டு நீக்ரோக்களும் இந்தியரும் நேட்டாலே விட்டுப் போய்விடுகிருர்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது நேட்டாலில் இருக்கும் வெள்ளேயர், தங்களுக்குள் அடித்துக்கொண்டு தங்களுக்கே நாசத்தை விளைவித்துக்கொள்ளுவார்கள்.

நேட்டாலேப் போன்ற சுயராஜ்யம் நமக்கு வேண்டாம் என்ருல், டிரான்ஸ்வாலில் இருப்பதைப் போன்ற சுயராஜ்யம் நமக்கு

வேண்டும் என்போமா? டிரான்ஸ்வாலின் தலைவர்களில் ஒருவர் ஜெனரல் ஸ்மட்ஸ். அவரோ, தாம் அளித்த வாக்குறுதிகளையே மீறி நடக்கிறார். சொல்வது ஒன்று, செய்வது வேறாக நடக்கிறார். போலீஸிலிருந்து ஆங்கிலேயர்களை யெல்லாம் அனுப்பிவிட்டு அவர்களுக்குப் பதிலாக ஆப்பிரிக்காண்டர்களை நியமித்திருக் கிறார். அந்நாட்டிலிருக்கும் இரு தேசீய இனத்தினருக்கும் நாளா வட்டத்தில் இதனால் நன்மை ஏற்படும் என்று நான் நினைக்க வில்லை. கொள்ளையடிப்பதற்கு 'வெளியார்' யாரும் இல்லாது போய்விடும்போது, சுயநலக்காரர்கள் தங்கள் சொந்த மனி தரையே கொள்ளையடிப்பார்கள்.

இவ்விதம் ஒரு நாட்டு மக்கள் சந்தோஷமாக வாழ்வதற்குச் சுயராஜ்யம் மாத்திரம் போதாது. திருடர் கூட்டம் ஒன்றுக்குச் சுயராஜ்யம் கொடுக்கப்பட்டுவிடுமானால், அதனால் என்ன பயன் ஏற்படும்? தானும் திருடனாயில்லாத ஒரு நல்ல மனிதனின் நிர் வாகத்தின் கீழ் அவர்கள் இருந்தால்தான் அவர்கள் சுகமாக இருப்பார்கள். உதாரணமாக அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகள் பலம் பொருந்திய நாடுகள். என்றாலும், அங்குள்ள மக்கள் சந்தோஷமாக இருக்கிறார்கள் என்று எண்ணு வதற்கு எந்தக் காரணமும் இல்லை.

சுயராஜ்யம் என்பதற்கு, தன்னைத்தானே கட்டுத்திட்டங் களுக்கு உட்படுத்திக்கொள்ளுவது என்பதுதான் உண்மையான பொருள். யார் ஒருவர் ஒழுக்க விதிகளை அனுசரித்து நடக் கிறாரோ, ஏமாற்றாமலும் உண்மையைக் கைவிடாமலும் இருக் கிறாரோ, தனது பெற்றோர்கள், மனைவி, குழந்தைகள், வேலைக் காரர்கள், அக்கம் பக்கத்தில் இருப்போர் ஆகியவர்களுக்குத் தன் கடமையைச் செய்துவருகிறாரோ அவரே கட்டுத் திட்டங் களுக்கு உட்பட்டு நடக்க முடிந்தவராகும். அவர் எங்கே வசிப்ப தாக இருந்தாலும் அவரே சுயராஜ்யத்தை அனுபவித்து வரு பவராவார். அத்தகைய நல்ல மனிதர்கள் ஒரு நாட்டில் ஏராளமாக இருந்தால்தான் அந்த நாடு சுயராஜ்யத்தை அனுபவிக்கிறது என்றாகும்.

ஒரு நாட்டு மக்கள் இன்னொரு நாட்டை ஆளுவது என்பதே நியாயம் அல்ல. இந்தியாவில் இருந்துவரும் பிரிட்டிஷ் ஆட்சி ஒரு தீமையாகும். ஆனால், பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போய்விட்டால் எல்லாம் சரியாகப் போய்விடும் என்று நாம் நினைத்துக்கொண்டுவிடக் கூடாது.

நம்முடைய ஒற்றுமையின்மை, ஒழுக்கக் கேடு, அறியாமை ஆகியவைகளினால்தான் பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் இருந்து வருகிறது. நம்மிடமிருக்கும் இக்குறைபாடுகளையெல்லாம் நாம் போக்கிக்கொண்டு விடுவோமாயின், ஒரு துப்பாக்கி வேட்டு கூட வெடிக்காமல் பிரிட்டிஷார் இந்தியாவிலிருந்து போய்விடுவ

தோடு நாமும் உண்மையான சுயராஜ்யத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவர்களாவோம்.

இந்தியரில் முட்டாள்களான சிலர், வெடிகுண்டுகளை வீசுவதில் ஆனந்தப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்தியாவிலிருக்கும் ஆங்கிலேயர் எல்லோரும் இவ்விதம் வெடிகுண்டுகளை வீசிக் கொல்லப்பட்டுவிடுவார்களானால், அப்படி யார் கொல்லுகிறார்களோ அவர்களே இந்தியாவை ஆட்சி புரிகிறவர்களாகிவிடுவார்கள். அப்பொழுது இந்தியருக்கு எஜமானர் மாற்றம் மாத்திரமே இருந்துவரும். இன்று பிரிட்டிஷார் மீது எந்தக் குண்டுகள் வீசப்படுகின்றனவோ அதே குண்டுகள், இந்தியாவில் வெள்ளையர் மேலும் இல்லாது போய்விடும்போது, இந்தியர் மீதே வீசப்படும். பிரெஞ்சுக் குடியரசின் தலைவரைக் கொன்றவன் பிரெஞ்சுக்காரனே. ஜனாதிபதி கிளீவ்லாந்தைக் கொன்றவனும் ஒரு அமெரிக்கனே. ஆகையால், மேற்கத்திய நாட்டு மக்களை நாம் கண்மூடித்தனமாகப் பின்பற்றாமல் இருப்போமாக.

ஆங்கிலேயரைக் கொல்லும் பாவத்தினால் நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியாது என்றால், பிரமாண்டமான யந்திரத் தொழிற்சாலைகளை அமைப்பதனாலும் சுயராஜ்யத்தை நாம் அடைந்துவிட முடியாது. தங்கத்தையும் வெள்ளியையும் தேடிக் குவித்துவிடலாம். ஆனால், அவையெல்லாம் சுயராஜ்யம் அமைந்துவிடும்படி செய்துவிட மாட்டா. இதைச் சந்தேகத்திற்கு இடமில்லாத வகையில் ரஸ்கின் நிரூபித்துக் காட்டியிருக்கிறார். மேற்கத்திய நாகரிகம் இப்பொழுது சிசுப் பிராயத்தில் தான் இருந்து வருகிறது. ஒரு நூறு வருடம் அல்லது ஐம்பது வருட வயதுதான் அதற்கு ஆகிறது. என்றாலும், இதற்குள்ளேயே அது ஐரோப்பாவை துக்ககரமான நிலைமைக்குக் கொண்டுவந்துவிட்டது. ஐரோப்பாவுக்கு ஏற்பட்டிருக்கும் கதி நமக்கு ஏற்படாமலிருக்க வேண்டும் என்று பிரார்த்திப்போமாக. அங்கே, ஒரு நாடு மற்றொரு நாட்டைத் தாக்குவதற்குத் தயாராகிக்கொண்டு வருகிறது. யுத்த தளவாடங்களை ஒவ்வொரு நாடும் குவித்துவைத்துக் கொண்டிருப்பதனால்தான் அவை சும்மா இருந்து வருகின்றன. ஒரு நாளைக்குத் திடீரென்று வெடித்து யுத்தம் உண்டாகிவிடும். அப்பொழுது ஐரோப்பா, உலகத்தில் மிக பயங்கரமான ஒரு நரகமாகவே இருக்கும். வெள்ளையரல்லாதவர்கள் தங்கள் சூறைக்கு ஏற்றவர்கள் என்று ஒவ்வொரு ஐரோப்பிய நாடும் எண்ணி வருகிறது. மனிதர்களின் உள்ளத்தில், பிறரிடமிருந்து அபகரிக்க வேண்டும் என்பதே நிறைந்திருப்பவர்களிடமிருந்து நாம் வேறு என்ன எதிர்பார்க்க முடியும்? ஒரு மாமிசத் துண்டின்மீது காக்கை எப்படிப் பாய்ந்து கவ்விக்கொள்ளுகிறதோ அதே போல ஐரோப்பிய நாடுகள் புதிய பிரதேசங்களைக் கவ்விக்கொள்ளுகின்றன. ஏராளமான பொருள்களைச் செய்து குவித்துவிடும் தொழிற்சாலைகள் அவர்களிடம்

இருப்பதுதான் இதற்கெல்லாம் காரணம் என்று நான் எண்ணுகிறேன்.

இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வேண்டும் என்பது உண்மை. ஆனால், நியாயமான வழிகளைக்கொண்டு இந்தியா சுயராஜ்யத்தை அடைய வேண்டும். நமது சுயராஜ்யம் உண்மையான சுயராஜ்யமாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட சுயராஜ்யத்தைப் பலாத்காரத்தைக் கொண்டோ, யந்திரத் தொழில்களைப் பெருக்கிவிடுவதனாலோ அடைந்துவிட முடியாது. இந்தியா ஒரு சமயத்தில் பொன்னான நாடாக இருந்தது. ஏனெனில், அப்பொழுது இந்தியருக்குத் தங்கமான மனது இருந்தது. நாடு அப்படியேதான் இருக்கிறது. ஆனால், நாம் கெட்டுவிட்டதால் அது பாலைவனமாக இருக்கிறது. இப்பொழுது இருந்துவரும் நமது தேசீய ஒழுக்கத்தின் மூல உலோகத்தைத் தங்கமாகச் செய்துகொண்டால்தான் நம் நாடு திரும்பவும் பொன்னான நாடாக ஆக முடியும். இந்த மாறுதலை* உண்டாக்கக்கூடியதான தத்துவ ஞானிகளின் மந்திரக் கல், சத்தியம் என்ற சிறிய சொல் தான். ஒவ்வோர் இந்தியரும் சத்தியத்தைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து நடந்தால், சுயராஜ்யம் நமக்குத் தானே வந்து விடும்.

---

* ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் வருமாறு கூறுகிறார்: "ஒழுக்கத்தைப் பொறுத்தே இருக்கின்றன, ஸ்தாபனங்கள். மேலெழுந்தவாரியான அம்சங்களில் என்னதான் மாறுதலை அடைந்தாலும், ஒழுக்கம் அடையும் மாறுதலைவிட அதிக வேகமாக முக்கியமான இயல்புகளில் மாறுதல் ஏற்பட்டுவிடாது."

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண் - பக்கத்தைக் குறிக்கும்)

**பொருளாதார சமத்துவம் – 211:**



**தருமகர்த்தா தத்துவம்**



**கவராமை**

வறுமை

